# கிராதம் - 1

## பகுதி ஒன்று : கரிபிளந்தெழல்

### [ 1 ]

நீர் நிறைந்த மண்கலத்தின் கரிய பரப்பு பனித்து துளித்து திரள்வதுபோல காட்டை மூடியிருந்த இருளிலிருந்து எழுந்துவந்த பிச்சாண்டவர் ஒவ்வொரு அடிக்கும் தன் உருத்திரட்டி அணுகினார். கீற்றுநிலவொளியில் அவர் தலைக்குமேல் எழுந்த சடைமகுடத்தின் மயிர்ப்பிசிர்கள் சுடர்கொண்டன. சிதைவெண்சாம்பல் மூடிய ஓங்கிய கரிய உடல். நரம்போடிய நெடுங்கைகள். இடையில் தோற்சரடில் கட்டப்பட்ட எலித்தோல் கோவணம். சடைத்திரிகள் பரவிய திண்டிரள் தோள்கள்.

வலக்கையில் மண்டையோட்டு வெண்கப்பரை ஏந்தியிருந்தார். இடக்கையில் தலைக்குமேல் எழுந்த முப்புரிவேல். நெற்றியில் செஞ்சுடர் வடிவில் தீட்டப்பட்ட அறிவிழிக்குறிக்குக் கீழே சிவமூலிப்புகை வெறி எரிந்த செவ்விழிகள். அவர் எடுத்து ஊன்றிய சூலத்தில் கட்டப்பட்டிருந்த எலும்புமணிகள் மெல்ல குலுங்கி ஓசையிட்டன. கால்கள் மண்ணில் பதிந்தனவா என்று ஐயுறவைக்கும் புலிநடை.

அருகணைந்ததும் யானை உறுமுவது போன்ற குரலில் “சிவமேயாம்!” என்றார். கைகூப்பியபடி நின்றிருந்த வைசம்பாயனன் அவர் அடிபதிந்த நிலம்தொட்டு புழுதித்துளி எடுத்து தன் தலைமேல் வைத்து “அடிபணிகிறேன், பிச்சாண்டவரே” என்றான். “அருள்க சிவம்!” என்று பிச்சாண்டவர்

சொன்னார். அவருடைய சிவந்த விழிகள் அவன் முகத்தை நோக்கி ஒருகணம் நிலைத்தன.

அவன் அவரை புரிந்துகொண்டு “விசும்ப குலத்தில் வந்தவன். என் பெயர் என வைசம்பாயனன் என்பதை கொண்டிருக்கிறேன்” என்றான். அவர் அவனை கூர்ந்து நோக்கிக்கொண்டு அசையாமல் நின்றார். முன்பு அறிந்து மறந்த ஒருவனை மீண்டும் நினைவுகூர்பவர் போல. பணிந்தவனாக அவன் அவரே பேசட்டும் என காத்து நின்றான்.

அவர் விழிகளை விலக்கி அப்பால் தெரிந்த இருண்ட காட்டுக்குள் இருளசைவெனத் தெரிந்த மரங்களை நோக்கி அசைவற்று நின்றார். அவன் மெல்ல “விசும்ப குருமரபு முன்பு கிருஷ்ணயஜுர்வேதத்தை கோத்தது. என் மூதாதையான வைசம்பாயன மாமுனிவர் தைத்ரிய சம்ஹிதையை செவ்வமைத்தார். எந்தை கிருஷ்ண சாம்யகர் தைத்ரியக் காட்டின் தலைவராக இருந்தார். சொல்முதிர்ந்து அங்கிருந்து எழுந்து வடமலை சேர்ந்தார்” என்றான்.

“நீ எங்கு செல்கிறாய்?” என்றார் பிச்சாண்டவர். “ஆசிரியரைத் தேடி” என்றான் வைசம்பாயனன். அவர் “ம்” என உறுமியபின் முன்னால் நடக்க அவன் அவருடைய சொல்லற்ற ஆணையை தலைக்கொண்டு அவரைத் தொடர்ந்து சென்றான். அவர் அவனை திரும்பிப்பார்க்கவில்லை என்றாலும் அவர் அசைவுகளில் அவனை அவர் உணர்ந்துகொண்டிருப்பது தெரிந்தது. அந்தக் காட்டுப்பாதையின் ஓரத்தில் நின்றிருந்த ஆலமரத்தடியில் சென்று வேர்ப்புடைப்பு ஒன்றில் அமர்ந்தார். அவன் தொழுதபடி அருகே நின்றான்.

அவர் குனிந்து நிலம்நோக்கி சற்றுநேரம் அமர்ந்திருந்தார். சடைக்கற்றைகள் முகம் மறைக்க விழுந்து ஆடின. அவர் எண்ணம் கலைய தசைகள் நெகிழ்ந்தன. முழவுக்குள் ஒலிக்கும் ஓசையென மெல்லிய ஆழ்குரலில் "சொல்க!" என்றார். அவன் எங்கிருந்து தொடங்குவதென்று அறியாமல் தயங்கி பின்னர் "தங்கள் அடிகளை சென்னி சூடுகிறேன். குருவென அமைந்து சொல்லருளவேண்டும்" என்றான். அவர் "அது உன் சொற்களுக்குப் பின்னரே" என்றார்.

"நான் தங்களுக்காகவே இங்கு காத்திருந்தேன் என தங்களைக் கண்ட கணமே உணர்ந்தேன்" என்றான். அதன்பின் அவன் சொற்கள் எழுந்தன. "பிச்சாண்டவரே, நான் செல்லவேண்டிய திசையென்ன என்று அறிந்திலேன். என் உள்ளம் கொண்ட எழுச்சியால் தைத்ரியம் விட்டு கிளம்பினேன். என் கால்களில் இருக்கும் தன்னுணர்வால் நடந்துகொண்டிருக்கிறேன்" என்றான். "இக்காட்டில் காலோய்ந்து அமர்ந்தபோது அந்த விசை முற்றிலும் அவிந்திருப்பதை உணர்ந்தேன். உணவும் நீருமின்றி மூன்றுநாட்களாக இந்தக் காட்டுப்பாதையின் ஓரத்தில் ஆலமரத்து வேர்க்குவையில் அமர்ந்திருக்கிறேன்."

இனி ஒரு தூண்டுதலின்றி இங்கிருந்து எழுவதில்லை என்று உறுதிகொண்டேன். என்னை எல்லாத் திசைகளிலுமிருந்து உட்புகுந்து கூர்ந்து ஆராய்ந்தேன். விடையென ஒன்று எழுவதில்லை என்றால் இங்கு இறந்து மட்குவதே என் ஊழ் என எனக்கு சொல்லிக்கொண்டேன். உற்றும் கற்றும் நான் கொண்ட சொற்கள் கொந்தளித்து சித்தத்தை நிறைத்தன. பின்னர் அவை ஒன்றோடொன்று இணைந்து வெறும் ஓசையென்றாயின. அவை எடைகொண்டு படிந்து அமைதியடைந்தபோது நான் வெறுமையால் நிறைந்தேன். இனி

எனக்கான சொல் வெளியே இருந்துதான் வரவேண்டுமென தெளிந்தேன்.

மாநெறியினரே, உட்புகுந்து தன்னை அறிவதென்பது எத்தனை இடர்மிக்கதென்று நான் இந்த மூன்றுநாட்களும் ஒவ்வொரு சொற்பெருக்கின் தன்னிலை மீட்சியின்போதும் உணர்ந்துகொண்டிருந்தேன். எதை நம்பி கிளம்பினேன் என்றுதான் மீளமீள கேட்டுக்கொண்டேன். மெய்மை என்றும் இறுதிவிடை என்றும் மீட்பு என்றும் என்னுள் எழுந்த ஒவ்வொரு சொல்லையும் விலக்கி நான் கண்டடைந்தது ஒன்றே, நான் கிளம்பியது வளர்ந்து பேருருக் கொள்வதற்காக மட்டுமே.

நான் வைசம்பாயனன் என என்னை அழைத்துக்கொண்டது ஏன்? நுண்சொல் தொட்டுக் கோத்து கிருஷ்ணயஜுர்வேதத்தை அமைத்த என் முன்னோனின் பெயர் அது. நான் அங்கிருந்து தொடங்க விழைந்திருக்கிறேன். அவனைக் கடந்துசெல்ல எண்ணியிருக்கிறேன். நான் என எழுந்து காலத்தின் முன் நிற்பது மட்டுமே என் கனவு. நான் இருந்த இடம் விதைபுதைந்த மண். கீறி எழுந்து வானோக்கவேண்டும். அதற்காகவே கிளம்பினேன்.

அந்தத் தன்னுணர்வு என்ன என்றுதான் இறுதிநாளாக இன்று இங்கு அமர்ந்து எண்ணிக்கொண்டிருந்தேன். ஒவ்வொரு இளைஞனுக்குள்ளும் முற்றா இளமையில் பேராணவத்தை நிறைப்பது எது? நான் நான் என்றே அவன் ஒவ்வொரு கணமும் சொல்லிக்கொண்டிருக்கிறான். உலகுக்கு முன் எழுந்து தன்னை முன்வைப்பது குறித்து நூறாயிரம் கோணங்களில் கனவு காண்கிறான். அவன் வேறுபட்டவன், அவன் மேலானவன்,

அவன் ஊழால் தெரிவுசெய்யப்பட்டவன். அதை அன்றி அவன் எண்ணுவதே இல்லை.

எப்போது இவ்வெண்ணம் என்னுள் புகுந்தது? நானும் பிற சிறுமைந்தரைப்போல கானாடுவதும் நீராடுவதும் சொல்லாடுவதுமே இன்பம் என்று எண்ணியிருந்தவனே. என்னை என்று உணரத்தொடங்கினேன்? அருநெறியினரே, இங்கு அமர்ந்து எண்ணிக்கொண்டிருந்தபோது துழாவிச்சென்ற எண்ணம் ஒன்று அத்தருணத்தை தொட்டுவிட்டது.

நான் எந்தை எனக்களித்த வேதச்சொற்களை உள்ளார்ந்து உசாவும் தன்மைகொண்டிருந்தேன். ஒருமுறை காட்டில் நீரோடை ஒன்றை தாவிக்கடக்கையில் என் காலடிக்குக் கீழே சூரியனை கண்டேன். அக்கணம் யஜுர்வேதச்சொல் ஒன்று என் எண்ணத்தில் எழுந்தது. **அவன் அனலால் தவத்தை**, மொழியால் பிரம்மத்தை, ஒளியால் உருவை, இந்திரனால் தேவர்களை, காற்றால் உயிர்ப்பை, சூரியனால் ஒளியை, சந்திரனால் விண்மீன்களை, யமனால் மூதாதையரை, அரசனால் குடிகளை ஆள்கிறான்.** உடல் மெய்ப்பு கொள்ள அங்கேயே நின்றுவிட்டேன். நெடுநேரம். கொடுநோன்பாளரே, அக்கணத்தில் அந்த நீண்ட வேதச்சொல்லடுக்கின் முழுப்பொருளையும் நான் உணர்ந்துவிட்டேன்.

அங்கு நின்று அழுதேன். விண்ணை நோக்கி அங்கு சுடர்கொண்டிருந்த சூரியனை விழிநிறைத்து நான் நான் என்று சொல்லிக்கொண்டேன். எனக்கும் திறந்துவிட்டது அந்தப் பொன்வாயில். வேதமுனிவர் தலைகளை கிளைநுனிகளாக்கி வந்தமைந்த அப்பறவையை நானும் ஏந்தியிருக்கிறேன். அறிதலென்பது ஒரு கணம். முன்பிருந்த அனைத்தும் பிறிதொன்றாக மாறும் திகிரிச்சுழி. அனலால் தவத்தை,

மொழியால் பிரம்மத்தை ஆளுதல். அனலும் மொழியும். அனல்மொழி! மொழியனல்!

அச்சொல்லில் இருந்து எழுந்து மீண்டும் மீண்டும் நிகழ்ந்துகொண்டே இருந்தேன். பின்னர் உறுதிகொண்டேன், என் தவம் மொழியை அனலாக்கி அடைதல் மட்டுமே. அதன்பின்னரே காவியங்களை நோக்கி செல்லத் தொடங்கினேன். எந்தைக்கு அது உவப்பளிக்கவில்லை. இது வேதச்சொல் எழும் காடு, தைத்ரியமரபு எப்போதும் காவியங்களுக்கு இடமளித்ததில்லை என்றார். அப்படியென்றால் நான் பிருஹதாரண்யகத்திற்கே செல்கிறேன் என்றேன். எந்தை என்னை விழியோடு விழி நோக்கி ஒருகணம் அமைந்தார். பின் அவர் என்னிடம் ஒரு சொல்லும் உரைக்கவில்லை.

சிவப்படிவரே, ஒடுங்குதல் யோகத்தின் வழி. விரிதலே கவிதைக்குரியது. நான் விரியத்தொடங்கியதுமே என் குருநிலையின் நாற்றிசை வேலிகளை என் கைகள் தொட்டுவிட்டன. அங்கிருக்கமுடியாமல் ஆனேன். என் இடம் எங்கோ காத்திருக்கிறது என்று உணர்ந்தேன். வடதிசை வேதம் பெருகிய மண் என்பதனால் தென்திசை தேர்ந்தேன் என உணர்கிறேன். குளிர்விழைபவன் நெருப்பை விட்டு விலகுவதுபோல.

நான் கிளம்பி ஒன்பது மாதங்களாகின்றன. அவந்தியையும் உஜ்ஜயினியையும் கடந்தேன். விந்தியனை ஏறிக் கவிந்து தண்டகாரண்யம் சேர்ந்தேன். இன்னும் இன்னும் என்று சென்றுகொண்டிருக்கிறது தெற்கு. அங்கு எனக்கெனக் காத்திருப்பது எது என்றறியேன். ஏதோ ஒன்று காத்திருக்கிறது

என ஏன் எண்ணுகிறேன் என உசாவிக்கொண்டபோது எழுந்து நின்றது என் வெற்றாணவம்தான்.

நான் ஊழால் இலக்குநோக்கி தொடுக்கப்பட்டவன் என்பதற்கு என்ன சான்று? கோடி கோடி உயிர்கள் மண்ணில் பிறந்து மடிகின்றன. இந்த மரத்தடியில் ஒரு குயிலின் சிற்றுடல் பாதி மட்கிக்கிடப்பதை கண்டேன். அதன் பாடலை ஒரு செவியேனும் கேட்டிருக்குமா என்று தோன்றியது. அதுவும் தன்னை ஊழ் தொடுத்த அம்பென்று எண்ணித்தான் சிறகடித்துக்கொண்டிருந்ததா என்று எண்ணியதுமே சோர்ந்து இங்கே அமர்ந்துவிட்டேன்.

காலம் இறுகி கொடும்பிரி கொள்ளும்தோறும் ஓர் எண்ணம் வந்து நின்றது. அடுத்த நோக்கென என் முன் வரும் மனிதர் எனக்கு வழிகாட்டும் ஆசிரியரே என்று. வேடனோ வைதிகனோ வணிகனோ வழிப்போக்காளனோ எவராயினும் எனக்கான விடையுடனேயே வருவார்கள். அவர்கள் சொல்லலாம், உணர்த்தலாம். நான் ஊழின் பணியாளன் என்றால் அவர்கள் எனக்கெனவே வருவார்கள் என்று உறுதிகொண்டேன்.

“நீ என்னை எதிர்பார்த்தாயா?” என்றார் பிச்சாண்டவர். வைசம்பாயனன் ஒருகணம் தயங்கி “இல்லை, நான் என் அறியா இளமையினால் இனிய கனவொன்றையே கொண்டிருந்தேன். பனிவெண்தாடியும் குழலும் கனிந்த கண்களும் கொண்ட முதுகவிஞர் ஒருவரையே எதிர்நோக்கியிருந்தேன்” என்றான். பிச்சாண்டவர் “ம்” என்று முனகினார். பின்னர் “சிவமாகுக!” என்று தனக்குள் என சொல்லிக்கொண்டார்.

**[ 2 ]**

இருள் விலகத்தொடங்கும் பொழுதில் இருவரும் காட்டின் விளிம்பை வந்தடைந்தனர். அங்கே நீர் சுழித்தோடிய ஓடை ஒன்றில் முழங்காலளவு நின்று வைசம்பாயனன் தன் பொழுதிணைவு வணக்கத்தை செய்தான். அப்பால் இருந்த பாறைமேல் கால்மடித்து அமர்ந்து மார்பில் கைகளை கட்டிக்கொண்டு சூரியனை நோக்கிக்கொண்டிருந்தார் பிச்சாண்டவர். அவன் வணங்கி முடித்து எழுந்து காட்டுக்குள் புகுந்து இலைக்குறியும் வேர்க்குறியும் தேர்ந்து காய்களையும் கனிகளையும் சேர்த்து கொடிக்கூடையில் எடுத்துக்கொண்டு மீண்டபோது என்னவென்று அறிவதற்குள்ளாகவே அவன் உடல் துடிக்கத் தொடங்கியது. அவர் நெருப்பு மூட்டி சுள்ளிகளை எரித்து அதில் பெருச்சாளி ஒன்றை சுட்டுக்கொண்டிருந்தார். அவ்வூன்வாடை நீலப்புகையுடன் எழுந்து அங்கிருந்த இலைகளை எல்லாம் தழுவியிருந்தது.

அவன் உடல்கூசி புதருக்கு அப்பால் நின்றுவிட்டான். எலியின் தோல் மயிர்கருக அனலில் வெந்து வழண்டு அதிலிருந்து கொழுப்பு தீயில் விழுந்து நீலத்துளிகளாக வெடித்தது. நீண்ட பச்சைக்குச்சியில் குத்தப்பட்டிருந்த அதன் உடலில் வால் பொசுங்கி எரிய முகம் அனல்படாமல் விழிகளுடன் எஞ்சியிருந்தது. திறந்த வாய்க்குள் வெண்பற்களுடன் அது புன்னகையுடன் நெருப்பை ஆடையென அணிந்திருப்பதாகத் தோன்றியது.

அவனை திரும்பி நோக்கிய பிச்சாண்டவர் “வருக!” என தலையசைத்தார். அவன் அப்போதும் அசையாமல் அங்கேயே நின்றிருந்தான். அவர் பெருச்சாளியை புரட்டிப்புரட்டி சுட்டார். வெந்த ஊனின் மணம் அவனுக்கு வேள்வியை நினைவூட்டியது. அவன் ஒரே ஒருமுறைதான் பூதவேள்வியில்

பங்குகொண்டிருந்தான். அதில் கரடித்தோலணிந்த ஹோதாக்கள் வெள்ளாட்டை வெட்டி பலியிட்டதைக் கண்டு அஞ்சி கண்களை மூடிக்கொண்டான். அருகே அமர்ந்திருந்த அவனது மூத்தவனாகிய அசலன் அவன் தொடையை தன் கையால் கிள்ளி விழிதிறக்கச் செய்தான். தந்தை திரும்பி விழிகளால் அவனை அதட்டி நிமிர்ந்து அமரச்செய்தார். வேதம் அவனைச் சூழ்ந்து ஒலித்துக்கொண்டிருந்தது. நூறு பசிகொண்ட ஓநாய்கள் முரலுதல் போல சந்தம் கொண்ட அதர்வம்.

கழுத்துக்குழாய் அறுபட்ட வெள்ளாட்டின் கால்கள் துடித்துக்கொண்டிருந்தன. அதன் வெட்டுண்ட தலையை அப்பால் இருந்த பீடத்தில் வைத்துவிட்டு கழுத்திலிருந்து பீரிட்ட குருதியை அனலில் பாய்ச்சினர். கூடவே நெய்யும் ஊற்றப்பட்டபோது தழல் உண்டு நாவெழுந்தது. அப்பமும் மலரும் தேனும் நெய்யும் கலந்து விழுங்கி தங்கள் மூவெரிக்கூடத்தில் எழுந்தாடும் அதே அனல்தான் அது என எண்ணவே நெஞ்சு முரண்கொண்டது.

ஊன் துண்டுகளை வெட்டி இடும்தோறும் அனலின் மணம் வேறுபட்டபடியே வந்தது. குளம்புகளும் மயிர்வாலும் எரியும்போது குமட்டல் கொண்டு அவன் வயிறு அதிர்ந்தது. அங்கே மயங்கி விழுந்துவிடலாகாது என்பதை மட்டுமே எண்ணத்தில் நிலைக்கவிட்டு எதிரே நின்றிருந்த வேதத்தூணை மட்டுமே நோக்கிக் கொண்டிருந்தான். ஆனால் அவன் உடலே அந்த நாற்றக்குவையை உணர்ந்துகொண்டிருந்தது. நோயுற்ற பசு என அவ்வப்போது அவன் உடலதிர்ந்தான்.

வேள்விநிறைவில் ஊன்கலந்த அன்னம் பரிமாறப்பட்டபோது அவன் தந்தை அதில் ஒரு பருக்கையை எடுத்து தன் வாயிலிட்டு கைகூப்பி “பிரம்மமாகுக! பிரம்மம் வளர்க!

பிரம்மம் எஞ்சுக!" என்றார். அசலன் ஒரு பருக்கையை எடுத்து அவ்வண்ணமே சொல்லி வாயிலிட்டான். அவனால் நிற்கவே முடியவில்லை. நினைத்து நினைத்து உந்தியும் உடலெழவில்லை. "உம்!" என்றார் தந்தை. அவன் ஒரு பருக்கையை எடுத்துக்கொண்டான். அதை நாபடாமல் வைத்து திருப்பி எடுத்துக்கொண்டான். எவருமறியாமல் அதை கீழே உதிர்த்தபோது மெல்ல உடல் இளகியது. பெருமூச்சுவிட்டபோது கண்களில் நீர் இருப்பதை உணர்ந்தான்.

அதன்பின் எந்த வேள்வியிலும் ஏதோ ஒரு தருணத்தில் அவன் ஊன்பொசுங்கும் மணத்தை அடைந்தான். சிலவகை அரக்குமரங்கள் எலும்பென எரிந்தன. ஊன் என உருகின சிலவகை காய்கள். பட்டு எப்போதுமே முடியெனப் பொசுங்கியது. நெய்யில் குருதி எரிந்தது. வேள்விக்கென அமரும்போதே அவன் அந்த கெடுமணத்திற்காக காத்திருக்கலானான். நாளடைவில் வேள்வியே அவனுக்கு உளவிலக்களித்தது. சாலைக்குப் பிந்தினான். வேதநிரையில் பின்னால் அமர்ந்தான். தந்தை உசாவியதற்கெல்லாம் புறச்சொற்களில் மறுமொழி சொன்னான். ஒருநாள் அவர் விழிநோக்கி சொன்னான் "எந்தையே, நான் இனி வேள்விக்கு அமர்வதில்லை என்றிருக்கிறேன்".

திகைத்து அவர் "என்ன சொல்கிறாய்?" என்றார். "இது நாமறியாத தொல்காலத்தில் நன்றுதீது திரியாத எளிய மானுடர் எவரோ ஆற்றிய சடங்கு. வழிவழி வந்தது என்பதனாலேயே இதை இன்னமும் ஆற்றிக்கொண்டிருக்கிறோம். இதன் பொருளென்ன என்று அறியோம். இதன் விளைவென்ன என்றும் உணர்ந்திலோம். இதன் துன்பங்களையும் இது அளிக்கும் பழிகளையும் மட்டும்

சூடிக்கொண்டிருக்கிறோம்” என்றான். “இதுவன்று வேதம். அது காலையொளி சூடும் பனிமலைமுடிகளைப்போல தூயது. நாவில் விழும் மழைத்துளிபோல வானை மட்டுமே அறிந்தது. அதையே நான் நாடுகிறேன்.”

அவனருகே நின்றிருந்த அசலன் திகைத்து மூச்செறிந்தான். தந்தை “தொன்மையானவை அனைத்தும் நம்மிடம் நீடிப்பதில்லை, மைந்தா. இது வழிவழி வந்திருப்பதனாலேயே வாழும்தகுதி கொண்டதாகிறது” என்றார். துடுக்குடன் “அதுவன்றி பிறிதெதையும் சொல்வதற்கில்லையா தங்களுக்கு?” என்றான் வைசம்பாயனன் அவர் விழிகளை நோக்கி. “இல்லை மைந்தா, வேள்வியும் வேதமும் பொருள்கொண்டு அடையப்பெறுவன அல்ல” என்றார் தந்தை. “நான் பொருளெனக் கொள்ளாத ஒன்றை இனிமேல் ஆற்றப்போவதில்லை” என்றான் வைசம்பாயனன்.

அவர் சிலகணங்களுக்குப்பின் “நன்று. உன் வழி அதுவென்றால் அதன் விளைவுகள் அனைத்தும் உன்னுடையதே ஆகுக!” என்றபின் திரும்பிச்சென்றார். அசலன் “என்ன சொன்னாய் மூடா!” என தாழ்ந்த குரலில் சொன்னான். “இது ஊனுண்ணும் வேடர்களின் தொல்சடங்கு...” என்றான் வைசம்பாயனன். “நாம் ஊன்பலி இடுவதில்லை” என்றான் அசலன். “நாம் இடுவதும் ஊனே. கொல்லப்படாததனால் நெய் ஊன் அல்ல என்றாகிவிடாது” என்றான் வைசம்பாயனன். “நீ முரண்பட முடிவுசெய்திருக்கிறாய். வேதம் மீது எழுந்துவிட்டதாக எண்ணிக்கொண்டிருக்கிறாய். கருதுக, அவ்வாறு எண்ணிய அசுரர் அனைவருமே அழிக்கப்பட்டிருக்கிறார்கள்” என்றபின் அவன் தந்தையைத் தொடர்ந்து சென்றான்.

பிச்சாண்டவர் பெருச்சாளியை அருகிலிருந்த பாறைமேல் போட்டு மும்முறை தட்டி அதன் சாம்பலை உதிர்த்தார். அதன் வால் நீல ஒளியுடன் நெய்யுருகும் மணத்துடன் எரிந்துகொண்டிருந்தது. அதை குச்சியால் அடித்து அணைத்தார். பச்சைக்கோலின் நுனியிலும் அனல் எரிந்தது. அதை தீயில் வீசிவிட்டு தன் சூலத்தால் பெருச்சாளியின் குடல் அகற்றப்பட்ட அடிவயிற்றை இரண்டாகப் பிளந்தார். நெஞ்சக்கூடு உடைந்து பிரிய அது இருபக்கமும் கால்கள் விரிய அகன்றது. வெண்ணிற அடுக்குகளாக தசை வெந்து படிந்திருந்தது. அதன் சிறிய கூர்முகத்தில் கண்கள் வெந்து அடங்கி துயில்வதுபோலிருந்தது.

அவர் ஓவியம் வரைவதுபோன்ற திறன் மிக்க மெல்லிய அசைவுகளுடன் அதன் வெந்து சுருண்ட தோலை இருபக்கமும் விலக்கினார். வெள்ளெலும்புகளுடன் வெந்த ஊன் மட்டும் நெஞ்செனத் திறந்திருந்தது. மூவேலின் கூர்முனையால் அவர் அதை மட்டும் வெட்டி எடுத்தார். நான்கு பொசுங்கிய கால்கள் நடுவே ஊன் பெயர்ந்த குழியுடன் எலி பாறைமேல் மல்லாந்து கிடந்தது. அந்த ஊனை அருகில் விரித்திருந்த இலைமேல் வைத்தபின் அவனை நோக்கி அவர் திரும்பியபோது அவன் அஞ்சி மேலும் பின்னடைந்தான்.

பிச்சாண்டவர் அருகே கிடந்த தட்டைக்கல் ஒன்றை எடுத்து சிறிய பாறைமேல் வைத்தார். “சிவம்! சிவம்! சிவம்!” எனக் கூவியபடி பிறிதொரு உருளைக்கல்லை அதன்மேல் வைத்து கைகூப்பினார். கையெட்டும் தொலைவிலிருந்து மூன்று சிறிய மலர்களைப் பறித்து அதற்குச் சூட்டி “பணிக சிவம்!” என மும்முறை கூவினார். பெருச்சாளியின் ஊனை எடுத்து அதன் அருகே வைத்து படையல் கொள்க என வலக்கை

மூன்றுவிரலால் செய்கை காட்டினார். நெற்றி மண்பட உடல் வளைத்து மும்முறை வணங்கி “சிவமேநாம்!” என்று கூவினார்.

அங்கிருந்து ஓடிவிடவேண்டும் என்றுதான் அவன் உள்ளம் திமிறிக்கொண்டிருந்தது. ஆனால் அவன் கால்கள் உயிரற்றவை போலிருந்தன. தன் விழிநோக்கு ஒரு வடமென ஆகி அக்காட்சியில் தன்னை கட்டியிருப்பதாக உணர்ந்தான். அவர் இரு இலைகளை விரித்து அந்த ஊனை இருபங்காகப் பிரித்து அவற்றில் வைத்தார். ஒன்றின் அருகே கால்மடித்து அமர்ந்தபின் திரும்பி அவனிடம் “வருக!” என்றார்.

அக்கணம் அந்தச் சரடு அறுபட்டதுபோல அவன் பின்னால் சரிந்து கையிலிருந்த கூடையை கீழேபோட்டுவிட்டு திரும்பி ஓடத்தொடங்கினான். அவர் பின்னால் ஓடிவருவதுபோல தோன்றிக்கொண்டிருந்தது. பின்னர் அத்தனை மரங்களும் கால்முளைத்து தன்னைத் தொடர்வதுபோலிருந்தது. காடே ஒரு பெரும்பெருக்கென அவனுக்குப் பின்னால் கொந்தளித்து வந்தது. மூச்சுநிறைந்து விலாவெலும்புகள் வெடிக்குமென்றானபோது அவன் நின்றான். உந்திவந்த விசை எஞ்சியிருக்க முன்னால் விழுந்து கையூன்றி அமர்ந்தான்.

அங்கேயே அமர்ந்து மூச்சிளைத்தான். மூச்சு தளரத்தொடங்கியதும் உள்ளம் கரைந்து அழத்தொடங்கினான். நெடுநேரம் அழுது பின் ஓய்ந்து எழுந்தபோது இனிய களைப்புடன் உடற்தசைகள் நெகிழலாயின. அங்கேயே புற்பரப்பில் மல்லாந்து வானை நோக்கியபடி படுத்தான். வானம் ஒளிகொள்ளத் தொடங்கியிருந்தது. கண்கள் கூசி காதுநோக்கி நீர்க்கோடு வழிந்தது. மூச்சு சீரடைய நெஞ்சு எழுந்தமைய அவன் துயிலில் ஆழ்ந்தான்.

அவன் கண்களுக்குள் ஒளி வந்துகொண்டிருந்தது. அது எண்ணங்களையும் உதிரிக்கனவுகளையும் ஒளிபெறச்செய்தது. அவன் வேள்விச்சாலை ஒன்றில் அமர்ந்திருந்தான். நடுவே எரிகுளத்தில் நின்ற நெருப்பு வெண்ணிறமாக இருந்தது. அவன் வேதமுறைத்தபடி தன் கால்விரல்களை வெட்டி அதிலிட்டான். இரு கால்களையும் வெட்டி அவியிட்டான். இடக்கையால் வலக்கையை வெட்டி அனலூட்டினான். பின் எழுந்து அனல் நோக்கி நடந்தான். ஊன் எரியும் இன்மணம் மூக்கை நிறைத்தது.

திடுக்கிட்டு விழித்துக்கொண்டான். தன் நெஞ்சிலிருந்த வரி ஒன்றை என்ன இது என்பதுபோல புரட்டிப்புரட்டி பார்த்தான். "மென்மையான சொற்களை கலைமகள் சுவைத்து உண்கிறாள். அழகிய மலர்களை அலைமகள் விரும்பி உண்கிறாள். இனியவர்களே, அனலை அருந்துகிறாள் கொற்றவை." எவருடைய வரிகள் இவை?

"காலத்தை உண்கிறான் பிரம்மன். வெளியை உண்கிறான் விண்ணோன். இனியவர்களே, ஊழிப்பெருக்கை உண்பவனோ உருத்திரன்." அந்த வரிகளைத்தான் அவன் தன் கனவில் வேதமெனச் சொல்லி அவியூட்டினான். "வேதத்தை சுவைக்கின்றனர் தேவர்கள். மெய்மையை சுவைக்கின்றனர் தெய்வங்கள். இனியவர்களே, தன்னையே சுவைக்கிறது பிரம்மம்." எங்கோ வாசித்தவை. முற்றிலும் மறந்து எங்கோ கிடந்தவை.

அவன் எழுந்து களைப்புடன் நின்றான். உள்ளம் அம்முடிவை எடுப்பதற்குள்ளாகவே கால்கள் திரும்பி நடக்கத் தொடங்கின. அவன் சென்றபோது அந்த இடத்திலேயே அப்படியே பிச்சாண்டவர் அமர்ந்திருந்தார். கைகழுவச்சென்ற அவன்

மீள்வதைக் காத்திருப்பவர் போல. அவர் முன் இரு இலைகளிலும் ஊன் ஆறிப்போய் இருந்தது. அவன் அவர் அருகே சென்று நின்றான். அவர் அவனை வெறுமனே நோக்கினார். குருதிபடர்ந்த நோக்கு இரு கூர்கள் என அவனைத் தொட்டு நின்றது.

அவன் அவர் அருகே அமர்ந்து அந்த ஊனை அள்ளி "பிரம்மத்திற்குக் கொடை" என மும்முறை சொல்லி வாயிலிட்டு மென்று உண்டான். அவர் "சிவம் கொள்க!" என்று உரைத்தபின் உண்ணலானார். ஊன் மென்மையாக உருகியநெய்யுடன் இருந்தது. நெடுநாட்களுக்கு முன்னரே அவன் அதை உண்டிருந்தான் என அறிந்தான்.

# கிராதம் - 2

**[ 3 ]**

பிச்சாண்டவருடன் நடப்பது எளிதல்ல என்று வைசம்பாயனன் கண்டுகொண்டான். மலைப்பாதைகளின் சுழலேற்ற வழியில் அவர் பருந்தென ஏறிச்சென்றார். பாறைகளில் விட்டில்போல தாவித்தாவி அமர்ந்தார். அவர் இளைப்படைவதை பார்க்கமுடியவில்லை. அவனுக்காகவே அவர் அவ்வப்போது நின்றார். அவன் மூச்சிரைக்க அவரை அணுகி நின்றபோது அவர் இயல்பாக தொலைவை நோக்கியபடி சிலைத்துக் காத்திருந்தார். அவர் உடலில் மூச்சோடுவதே தெரியவில்லை.

அன்று முழுக்க அவன் அவருடன் பயணம்செய்தும் ஒரு சொல்லேனும் அவரிடமிருந்து எழவில்லை. அவருடைய முப்புரிவேலின் எலும்புமணிகளின் ஓசை அவர் குரலென

ஒலித்து அவனை அழைத்துச்சென்றது. நீரோடையில் அவர் கையள்ளிக் குடிக்கும்போது பக்கவாட்டில் அவரது முகத்தை நோக்கினான். சடைத்திரிகளாகத் தொங்கிய தாடியில் ஒட்டாமல் உருண்ட நீர்மணிகளை தலையை உதறி தெறிக்கவைத்தபோது காட்டுவிலங்கு போலிருந்தார். விலங்கு என்பதை அவன் கற்ற குருநிலைகளில் தன்னை அறியாதது, எனவே பிரம்மம் என்பதை உணரவியலாதது என்றே சொல்லியிருந்தனர். புலன்களில் விடுதலையின்றி விலங்கிடப்பட்டது. முற்றிருளே அதன் முதற்குணம்.

ஆனால் அவரைப் பார்த்தபின் எதிரே வரும் விலங்குகளை நோக்கியபோது அவை முழு விடுதலைகொண்டவை என்று தோன்றியது. காற்றுக்கு தன்னை ஒப்புக்கொடுத்துவிட்ட மென்பஞ்சுத்துகள்கள் போலிருந்தன அவை. தானென்று உணரும் ஒன்றை அவை சுமந்தலையவில்லை. எனவே திசைதேடித் தவிக்கவில்லை. தானற்ற ஒன்றை கணம்தோறும் உணர்ந்து திகைத்து நெஞ்சழியவில்லை. விலங்கென்று ஆவதே விடுதலை போலும். கற்றுக்கற்று சென்றடையும் இடம் அதுவே என்றால் சொல்லென அமைந்து சுழற்றிக் கொண்டுசெல்லும் இம்மாயப்பெருக்கின் நோக்கம்தான் என்ன?

அச்சொல்லின்மையே இயல்பென்று
தோன்றியது. சொல்லெடுக்கத் தொடங்கினால் விலங்கு உருகி பிறிதுருக்கொண்டு மானுடனாகிறது. மானுடன் அவனுக்குச் சொல்வதற்கு ஏதுமில்லை. அவன் கற்றவற்றுக்கும் தேர்ந்தவற்றுக்கும் அப்பால் சொல் என ஏதுமில்லை. அவன் அறியவேண்டியது சொற்களைத் திறக்கும் முறை. சொல்லின்மையில் இருந்து சொல்லெழும் வகை.

அவரது காலடிகளை அவன் புழுதியில் நோக்கிக்கொண்டு தொடர்ந்தான். அவை மண்ணில் சீராகப் பதிந்திருந்தன. ஓவியன் இட்ட தடங்கள் போல. அதன்பின் தன் கால்தடத்தை நோக்கினான். அவற்றில் வலக்கால் அழுத்தம் மிகுந்திருந்தது. சற்றே பக்கவாட்டில் விலகியிருந்தது இடக்கால். அத்தனை மானுடரும் அப்படித்தான் நடக்கிறார்கள் என அப்போது உணர்ந்தான். உடலின் எடைக்கும் நிலைக்கும் ஏற்ப கால்களை விலக்கியமைத்து நடப்பது மானுட இயல்பு. அவன் காலடிகளில் அவன் உள்ளம் தெரிந்தது. மேலே மேலே எனத்தாவி எழும் முதற்கால். அதற்கு நிலையமைத்து அளித்துத் தொடரும் இடக்கால். மானுடர் அனைவரும் காலடிகளால் மண்ணில் தங்களை எழுதிக்கொண்டிருக்கிறார்கள்.

தன் காலடிகளில் பதிந்திருந்த உளவிசையைக் கண்டதுமே அதனுடன் இணைந்த தயக்கத்தையும் கண்டுவிட்டான். அவரது காலடிச்சுவடுத் தொடரை அணுகியும் விலகியும் அது உடன் சென்றது. முற்றிலும் நிகரான இரு தடங்கள் முற்றிலும் இணையாகப் பதிந்து முன் சென்றன. நிகர்நிலை கொண்ட உடல். தலையில் நெய்க்குடம் தளும்பாது செல்லும் ஆய்ச்சியின் இயல்பான சீரசைவுகள். அப்போது அவன் அந்தப் புலியை பார்த்தான். அவர்களின் காலடியோசையைக் கேட்டு அது காற்றுபட்ட தழலென சற்றே வளைந்து எழுந்தது. வாய்திறந்து வெண்கோட்டுப் பற்கள் தெரிய ஓசையின்றி சீறியது. சுண்ணக்கூழாங்கற்கள் போன்ற விழிகள் நோக்கற்ற வெறிப்பு காட்ட சுருட்டுப்புழு என சுருண்டு பின்னால் எழுந்து முன்னங்காலை சற்று தூக்கி ஆட்டியது.

அவன் நின்று அதை நோக்க அவர் இயல்பாக கடந்துசென்றார். அது ஓசையில்லாது தாவி நீண்டு சரிந்திருந்த மூங்கில்கழை ஒன்றில் ஏறி அதன்மேல் தூக்கி வளைந்த வாலுடன் நடந்துசென்றது. ஒவ்வொரு காலடியும் ஒற்றைக்கோட்டில் ஒற்றி ஒற்றி விழ அதற்கேற்ப இடை நெளிந்தசைய அது மூங்கில்நுனிக்குச் சென்று வால்சுழல மறுபக்கம் புதருக்குள் பாய்ந்து மூழ்கி மறைந்தது. அதன் விழிப்பாவை எஞ்சியிருக்கையிலேயே அது அங்கிருந்ததா என வியந்தது நெஞ்சம்.



அவர் முன்னால் சென்றுவிட்டிருப்பதைக் கண்டான். பாய்ந்து அவரைத் தொடர்ந்தோடி அணுகினான். அவர் அவன் நின்றதையும் வந்ததையும் உணர்ந்ததாகவே தெரியவில்லை. எந்நிலையில் எங்குள்ளது அவர் உள்ளம் என்பதை அவரைத் தொடர்கையில் அறியக்கூடவில்லை. அவர் தன்னை எங்கு அழைத்துச்செல்கிறார் என்பதை அவன் அவ்வப்போது எண்ணிக்கொண்டான். ஆனால் அவர் அதை அறிவார் என்பதை உள்ளம் நன்குணர்ந்திருந்தது.

அன்று மாலைவரை அவர்கள் நடந்தனர். வெயில் மயங்கத்தொடங்கியபோது அவர்கள் ஒரு சிறுகுன்றின் சரிவை அடைந்திருந்தனர். அதன் மேல் இரு பெரும் விரல்களால் எடுத்து வைக்கப்பட்ட கழற்சிக்காய் என ஒற்றைக்கரும்பாறை அமைந்திருந்தது. அவர் குன்றில் ஏறத்தொடங்கியதும் அவனும் தொடர்ந்தான். அப்பாறையை ஒட்டி நின்றிருந்த ஆலமரத்தின் பொருத்துக்களில் கால்வைத்து ஏறி அவர் மேலே சென்றார். அவன் மேலேற முடியாமல் மரக்கிளைநுனியில் தவித்தபோது அவனைத் திரும்பிப்பார்க்கவில்லை.

கைகளை விட்டுவிட்டு அவன் மழுங்கலான பாறைப்பரப்பை நோக்கி ஓணானைப்போல குதித்தான். மார்புக்கூடு அறைபட விழுந்து சறுக்கியிறங்குவதை அவர் நோக்கிக்கொண்டு நின்றார். அவன் கைவிரல்களாலும் கால்விரல்களாலும் கவ்விக்கொண்டு தொற்றிநின்றான். ஒரு விரிசலில் வலக்கால் கட்டைவிரல் பொருந்தியதும் விழுந்துவிடமாட்டோம் என உள்ளே உலைந்த தன்னிலை உணர்ந்தது. நிலைப்படுத்திக்கொண்டபின் உடலை மேலே தூக்கி தவழ்ந்து ஏறினான்.

எழுந்து நின்றபோது மார்பும் வயிறும் சிராய்த்து அனல்பட்டதுபோல் எரிந்தன. அவர் பாறைமேல் நின்று மேற்கே விழத்தொடங்கியிருந்த சூரியனை நோக்கினார். அவன் அவர் அருகே நின்று செங்கதிர் பழுத்துக்கொண்டிருப்பதை பார்த்தான். கீழே காட்டில் குரங்குகள் எக்காளமிட்டன. போர்க்களமொன்றிலிருந்து எழும் அம்புகள் போல பறவைகள் பீரிட்டெழுந்து சுழன்றிறங்கின. காடு மெல்ல இருண்டு அடங்கியது. பறவைக்குரல்களால் ஆனதாக மாறியது. எரியும்

காட்டிலிருந்து சருகுக்கரிகள் போல பறந்து அமைந்தன சிறுகருங்குருவிகள்.

இறுதிப்பறவை எழுந்து விழுந்ததும் சூரியவட்டம் முற்றணைந்தது. எஞ்சிய ஒளியில் பிச்சாண்டவர் ஊன்றிய சூலமும் கையில் கப்பரையுமாக நிழலுருவெனத் தெரிந்தார். பாறைப்பரப்பில் அமர்ந்து அவனிடம் செய்கையால் ஆடைகளைக் கழற்றும்படி சொன்னார். அவன் தன் மேலாடையையும் இடையிலணிந்திருந்த பருத்தியாடையையும் கழற்றி அவரிடம் அளித்தான். அவர் அவன் அணிகலன்களை விழிசுட்ட கழுத்திலணிந்த ஒற்றைமணி மாலையையும் கையிலிருந்த சிற்றாழியையும் காதிலிருந்த ஒற்றைமலர் கடுக்கன்களையும் கழற்றி துணிக்குமேல் போட்டான்.

முழுவெற்றுடலுடன் அவர் முன் நின்றபோது முன்னரே அவ்வாறுதான் நின்றிருந்தான் என்றே உணர்ந்தான். அவர் அருகே ஓடிய கருகிய மாணைக்கொடியை இழுத்துப்பறித்து சுருட்டி துணிகளுடன் வைத்தார். இரு கற்களை உரசி பொறி எழுப்பி அதை பற்றவைத்தார். தயங்கி எழுந்த தழல் துணியை பொசுங்கவைத்து ஊறிப்பரவி நாவெழுந்தது. அதன் அழலாட்டம் எழுந்ததும் அவர் அவனிடம் “அமர்க!” என்றார். அவர் குரலையே அவன் மறந்துவிட்டிருந்தான் என அப்போது உணர்ந்தான்.

அவன் கால்கோட்டி அமர்ந்ததும் உரத்த குரலில் “ஓம்!” என்றார். அவன் எதிர்முரலல் என அதை மீட்டொலித்தான். “ஓம்! ஓம்! ஓம்!” என அவர் முழங்கிக்கொண்டிருந்தார். அவ்வொலி எழுந்து கார்வைகொண்டு சூழ்ந்தது. இயல்பாகத் திரிபுகொண்டு “சிவம்!” என்று ஆயிற்று. “சிவமேயாம்!” என்று முற்றியது. “ஆம்! ஆம்!

ஆம்!” என ஆகி அமைந்தது. அவனைச் சூழ்ந்திருந்த இருளில் அந்த ஒலியின் கார்வை நிறைந்திருந்தது.

அவர் அவனருகே கிடந்த ஒரு தட்டைக் கல்லைச் சுட்டி அதை எடுத்து தன் முன்னால் வைக்கும்படி செய்கையால் சொன்னார். அவன் அதை எடுத்து வைத்ததும் பிறிதொரு உருளைக்கல்லைச் சுட்டி அதை எடுத்துவைக்கும்படி விழிகளால் ஆணையிட்டார். அவன் கல்மேல் கல்வைத்து சிவத்தை நிறுவினான். எரிந்த அனல் முற்றவிந்துவிட்டிருந்தது. அவர் அதில் ஒரு சிட்டிகை அள்ளி சிவக்குறிமேல் பூசினார். எஞ்சியதை அவன் நெற்றியிலிட்டு “சிவமாகுக!” என்றார். அவன் கைகூப்பி “ஓம்” என்றான். அவர் தன் முப்புரிவேலை அவன் தலைமேல் வைத்து “சிவமேயாம்” என்றார். அவன் கண்களை மூடி அச்சொல்லை தன்னுள் நிறைத்துக்கொண்டான்.

**[ 4 ]**

அன்று கருநிலவு. கதுப்புகொண்ட இருளில் பிச்சாண்டவரின் அருகே வைசம்பாயனன் அமர்ந்திருந்தான். அவர்களின் தலைக்குமேல் ஒவ்வொன்றாக விண்மீன்கள் எழுந்து வந்து செறிந்துகொண்டிருந்தன. சற்றுநேரத்தில் கீழே இருந்த காட்டின் கிளைவளைவுகளைக்கூட பார்க்கும்வகையில் விழிகள் ஒளியடைந்தன. காட்டிலிருந்து இலைவெம்மையும் தழைமணமும் கொண்ட காற்றும் ஒலிகள் இணைந்து உருவான மீட்டலும் எழுந்து வந்துகொண்டிருந்தன.

“அங்கு தெரியும் அந்த விண்மீன்களை வேதச் சொற்கள் என்க! இங்கு வந்துகொண்டிருக்கும் அந்த ஓசையை வேதம் எனக்கொள்க! வானை அவை அறிவுறுத்துகின்றன. காட்டை அவை கொண்டுவந்து அளிக்கின்றன. அக்குறிகளை

தொட்டுத்தேர்ந்து வழியமைப்பவன் வானை அறிகிறான். காட்டை அடைந்து அமைகிறான்” என்றார் பிச்சாண்டவர். “வேதமென்பது ஓர் அழைப்பு. பிறிதொன்றுமில்லை. ஓர் அறைகூவல். பிறிதொன்றுமில்லை. ஒரு கனவு. ஒரு தொடுகை. ஒரு முன்நினைவெழல். பிறிதொன்றுமில்லை.”

“இன்று இங்கிருக்கும் எளிய மாந்தர் முன்பு எங்கோ முழுநிலை கொண்டிருக்கக்கூடும் என்பர் முன்னோர். அங்கு அவர்கள் இழந்து இங்கு போந்ததையே வந்து நினைவூட்டுகிறதுபோலும் வேதம். வேதச்சொல் கேட்டவர் எங்குமுள்ளனர். எக்குடிக்கும் எவ்வுயிர்க்கும் வேதம் மறுக்கப்பட்டதில்லை. மெய்வேதமென்று ஒன்றில்லை. வேதமெய்மை என்பதே உள்ளது. மெய்யுணர்ந்தோர் இங்குள சொல்லெல்லாம் வேதம் முளைத்த காடென்றுணர்வர். எச்சொல்லில் இருந்தும் அங்குள உண்மையையே சென்றடைவர். வேதப்பூசலிடுபவர் அறிய ஒண்ணாத மெய்மையால் கோக்கப்பட்டுள்ளது வேதம். வேதமறியாதவரிடம் இரையிடம் புலி என விளையாடுகிறது வேதம்.”

“சருகினை எரியென தழுவிக்கொள்வதே வேதம் என்றுணர்க!. எஞ்சுவதே நீறு. நீறாவது சிவம்” என்றார் பிச்சாண்டவர். “முன்பு பனிமலையுச்சியில் எங்கோ, படர்ந்த காட்டின் ஆழத்தில் எங்கோ எவரோ உணர்ந்த வேதச்சொல் ஒன்று அரக்குமரக்காட்டில் அனலென விழுந்தது. அம்முதற்சொல் சிவம். அதிலிருந்து முளைத்தன சைவப்பெருநெறிகள் பல. உண்மை ஒன்றே, உணர்வோர் கொள்வதே வேறுபடுகிறது. அன்னம் ஒன்றுதான், வயிற்றுக்கும் சுவைக்குமென அது சமைக்கப்படுகிறது.”

அம்முதற்சொல்லைப் பெற்றவன் எவன் என்று சிந்தைநீட்டி தேடிச் செல்வது எவராலும் இயலாது. அவன் முற்றிலும் தனித்தவனாக இருந்திருக்கவேண்டும். முழுமையாக தன்னை திறந்திருக்கவேண்டும். எரிவிண்மீன் இறங்கிய குளமென அவன் அகம் கொந்தளித்திருக்கவேண்டும். அடைந்தபின் அவன் இங்கு எஞ்சிய தருணத்தில் அச்சொல்லை நாச்செவி வடிவுக்கு நமக்கு அளித்திருக்கவேண்டும். சிவம்! முற்றிலும் பொருளற்ற ஒலி. அவ்வொலிக்கு நாம் அளிக்கும் அத்தனை பொருள்களும் அது எழுந்தபின் சென்றணைந்தவையே. தூயது, அருள்வது, எஞ்சுவது, தொடர்வது, துணைப்பது, சிவந்தது, எரிவது, சினப்பது, வெல்வது, விளைவது, வினையாவது, ஆவது, அழிப்பது. அவ்வண்ணம் சொல்லிச்சென்றால் எஞ்சிய அத்தனை சொற்களும் அவ்வொரு சொல்லின் பொருளென்றே ஆகும்.

இன்றுள சிவநெறிகள் எவையெல்லாம் என ஒருவன் இந்நிலம் முழுக்க அலைந்தாலும் முற்றறிந்துவிடமுடியாது. அச்சொல் இங்குள அனைத்தையும் எரித்து தடம் பதித்தபடி சென்றபின் பல்லாயிரம் தலைமுறைகள் பிறந்திறந்துவிட்டன. மொழி பல்லாயிரம் முறை அலையிளகி அமைந்துவிட்டது. நூறாயிரம் தெய்வங்கள் உரு சூடியிருக்கும், உடை களைந்திருக்கும். இங்கே வடதிசையில் நாமறிந்தவை ஆறு பெருநெறிகள். பாசுபதம், காபாலிகம், காளாமுகம், வாமம், மாவிரதம், பைரவம். பிற ஐந்தும் முதலொன்று பிரிந்து உருவானவை என்பார்கள். இருநிலை என்றும் ஒருநிலை என்றும் மேலும் அவை பிரிந்து விரிந்து சென்றுகொண்டிருக்கின்றன.

காலப்பேருருவன் என அச்சொல்லை விரித்தவர் பைரவர். தன்னை ஒறுத்து எஞ்சுவதே அது எனக் கொண்டவர் மாவிரதர். இங்குள அனைத்தும் அன்றி பிறிதே அது என உணர்ந்தவர்

வாமர். இருளுருவெனக் கண்டவர் காளாமுகர். இறப்புருவென எண்ணுபவர் காபாலிகர். இப்பசுவை ஆளும் பதி என முன்னுணர்ந்தவர் பாசுபதர். அறுவகை அறிதலாக நின்றுள்ளது அது. அறிதற்கரியது அவ்வண்ணம் இங்கு ஆனது. அறிந்து உணர்ந்து கடந்து ஆகி அதை அடைந்தவர் தூயர். அவர்களின் சொல்விழுந்த காற்றில் கால்விழுந்த மண்ணில் நாம் நடந்துகொண்டிருக்கிறோம்.

விண்மீன்கள் நீண்ட இருள்சரடுகளில் சிலந்திகள்போல தொற்றிச் சறுக்கி இறங்கி அருகே வந்து அவர்களைச் சூழ்ந்து நின்றன. கைநீட்டி அவற்றைத் தொட்டு ஆட்டிவிடமுடியும் என்று தோன்றியது. ஊதினால் அவை அசையும் என்று. மெல்ல மின்னி மின்னி அவை உரையாட முயல்கின்றன என்று. பிச்சாண்டவர் தாழ்ந்த தனிக்குரலில் சொன்னார் "முன்பொருநாளில் திரிகர்த்தநாட்டில் ஏகவீரன் என்னும் அரசன் ஆண்டுவந்தான். தன் கோல்கொள்ளும் மைந்தனுக்காக ஏழாண்டுகாலம் அவனும் தேவியும் தவம் செய்தனர். அவ்வேட்டல் விளைந்து பிறந்த மைந்தனை நெஞ்சோடணைத்து சத்ருஞ்சயன் என்று பெயரிட்டனர்."

கட்டற்ற உளவல்லமையால் ஆனவனாக இருந்தான் சத்ருஞ்சயன். மூன்று மலைப்பள்ளங்களால் ஆன அந்நிலத்தை இளமையிலேயே புரவியேறிப் பாய்ந்து கடந்தான். ஆறுநெறிகளையும் கற்றுக்கடந்தான். அறிவென்பது ஆணவமே என்று சூடியிருந்தான். அவனை அன்னையர் தொட்டு வழிபட்டனர். மூத்தவர் எண்ணி பெருமிதம் கொண்டனர். கன்னியர் காதல் கொண்டனர். இளையோர் வாழ்த்தி பின்தொடர்ந்தனர். ஆணவம் எளியோருக்குமேல் இறுதிவெற்றியை அளிக்கிறது. வெற்றி மேலும் ஆணவமாக

ஆகிறது. ஊழ்வல்லமை இல்லாதவர் அந்த வலையில் இருந்து வெளிவருதல் இயலாது.

சத்ருஞ்சயனுக்கு அதற்கு அருளிருந்தது. ஒருமுறை அவன் மலைச்சாரலில் சென்றுகொண்டிருக்கையில் அங்கு பாறையடியில் உடலெங்கும் சாம்பல் பூசிய சடைமுனிவர் ஒருவர் சருகில் அனலிட்டு ஊன்சுட்டுக்கொண்டிருப்பதை கண்டான். புரவியிலிருந்து இறங்கி அது என்ன என்று பார்த்தான். சேற்றால் பொதியப்பட்ட எலி அது. உடல் உலுக்கி எழுந்த ஒவ்வாமையுடன் "இழிமகனே, என்ன செய்கிறாய் நீ? மானுடர் உண்ணுதற்குரியதா அது?" என்று கூவினான். பாய்ந்துசென்று காலால் அதை உதைத்து அப்பால் தள்ளியபின் நின்று மூச்சிரைத்தான்.

அவர் திரும்பி நோக்கி கரியபற்களைக் காட்டி புன்னகை செய்து "அதை உண்பதற்கு முன் சிவத்தில் மும்முறை கழுவுவேன்" என்றார். அவன் குமட்டலில் உடல் அதிர முகம் சுளித்து "உண்ணற்குரிய உணவில்லை என்றால் இறப்பதே மேல்..." என்றான். "இங்குள்ள அனைத்தும் உண்ணற்குரியவையே. ஏனென்றால் உண்பதும் உணவே" என்றபடி எழுந்தார். அவனை நோக்கிச் சிரித்து "ஊன் அனைத்தும் ஒன்றே, மைந்தா" என்றார். தன்னை அவர் சீண்டுவதாகவே அவன் எண்ணி உளம் கொதித்தான். அவர் முப்புரிவேலை எடுத்துக்கொண்டு "நீ செல்க! நான் இன்னொரு எலியை இங்கேயே பிடிக்கமுடியும்" என்றார்.

அவனுள் அக்கணம் என்ன நிகழ்ந்ததென்று அவன் அறியவில்லை. வாளை உருவி அவர் காதைச் சீவி நிலத்தில் இட்டான். சிப்பிபோல புழுதியில் விழுந்து கிடந்தது அது. குமட்டலைக் காறித்துப்பி, "ஊனெல்லாம் உணவே என்றால்

இதைச் சுட்டு உண், கீழ்மகனே. இதுவும் ஊனே” என்றான். அவர் தோள்களில் குருதி சொட்டி வழிந்தது. குனிந்து அதை நோக்கி “ஆம், அதுவும் ஊனே” என்றார். அவனை நோக்கி புன்னகைத்து அதை எடுத்து எலியைச் சுட்டுக்கொண்டிருந்த குச்சியில் கொளுத்தி எரிநெருப்பில் காட்டலானார். அதன் மயிர்கள் பொசுங்குவதைக் கண்டதும் அவன் குமட்டி வாயுமிழ்ந்தான். நின்றிருக்கமுடியாமல் புரவியை பற்றிக்கொண்டான். கூசி நடுங்கிக்கொண்டிருக்கும் உடலுடன் திரும்பி ஓடினான்.

காட்டில் சற்றுத்தொலைவு சென்றபின் நின்று தன் தலையை கைகளால் ஓங்கி ஓங்கி அறைந்துகொண்டான். பற்கள் கிட்டித்து கழுத்துத்தசைகள் இழுபட்டு இறுகியிருப்பதை உணர்ந்தான். கண்கள் எரிந்து கலங்கியிருந்தன. “விளையாடுகிறானா? விளையாடுகிறானா?” என்று தனக்குள் உறுமிக்கொண்டான். இல்லை என்னை ஏமாற்றுகிறான். அது மானுடரால் முடியாது. எந்த விலங்காலும் முடியாது. ஆனால் அவனுள் ஏதோ ஒன்று அறிந்திருந்தது. மீண்டும் புரவியில் ஏறி திரும்பி விரைந்தான். தொலைவிலேயே அவன் ஊன்மணத்தை அறிந்தான். ஒரே கணத்தில் உடலை இழுத்துக்கட்டிய நரம்புகள் அனைத்தும் தளர குதிரைமேல் சடலமென அமர்ந்திருந்தான்.

அகல வருகையிலேயே அவன் கண்டுவிட்டான். அவர் அந்தக் காதை சுட்டு இலையில் பரப்பி வேலால் வெட்டிக்கிழித்து வாயிலிட்டு மென்று உண்டுகொண்டிருந்தார். அவர் காதிருந்த புண் குருதி திரிந்து சலமாகி சொட்டிக்கொண்டிருந்தது. தன்னுடலுக்குள் பிறிதொன்று புரள்வதை உணர்ந்தான். பற்கள் ஒன்றுடன் ஒன்று உரசிக்கொள்ளும் ஒலி மண்டைக்குள் ஒலித்தது. குதிரை அவர் அருகே சென்று நிற்க அவன்

அதன்மேல் விழித்தபடி அமர்ந்திருந்தான். வாயிலிட்டு மென்ற ஊனுடன் அவர் “சிவமேயாம்!” என்றார்.

அவன் பரிமேலிருந்து உதிர்பவனைப்போல அவர் காலடியில் விழுந்தான். மண்புழு மண் துளைத்து உட்புக முயல்வதுபோல புழுதித்தரையில் தலையை அழுத்திப் புதைத்தபடி நெளிந்தான். பின்னர் நினைவிழந்தான். விழித்தபோது அவனை நோக்கியபடி குனிந்திருந்தார். அவர் விழிகள் குழந்தைகளுக்குரிய தெளிவுகொண்டிருந்தன. “சிவம்நாம்” என்று அவர் சொன்னார். அவன் விசும்பியழுதபடி கைநீட்டி அவர் கால்களை பற்றிக்கொண்டான். சிறியவன் நான் என்று அவன் சொல்ல விழைந்தான். அவர் மீண்டும் “சிவம்நாம்” என்றார்.

வெடிப்போசையுடன் அச்சொல் திறந்துகொண்டது. அவன் உடல் அதைத் தாளாமல் வலிப்பு கொண்டது. அவன் அதிர்ந்த விழிகளுக்கு மேல் காடு நீர்ப்பாவை என அலையடித்தது. தன் இதழ்களை அவன் இறுகக் கடித்திருந்தான். குருதி ஊறி வாயை நிறைத்தது. சூடானது. உப்புச்சுவை கொண்டது. குழவியென அறிந்த முலைப்பாலின் இன்மணம் கொண்டது. தன்னிலை மீண்டபோது அவன் அதை சுவைத்து உள்ளூறிஞ்சி உண்டான்.

அவர் அவன் தோளைப்பற்றி எழுந்து அமரச்செய்தார். அவர் கையில் அந்த ஊனின் எச்சம் அப்போதும் எஞ்சியிருந்தது. அதை அவனிடம் நீட்டி “உண்க!” என்றார். அவன் அதை வாங்கி தன் வாயிலிட்டு மென்று உண்டான். அவன் நன்கறிந்திருந்த சுவை. அவன் கனவுகளை நிறைத்திருந்த சுவை. அவர் அவன் நெற்றியில் தன் முப்புரிவேலால் தொட்டு “சிவம்யாம்” என்றார்.

“அவன் அங்கிருந்தே அவருடன் சென்றான். அவர் ஒடுங்கிய இடத்திலிருந்து மேலும் நடந்தான். அவன் திரும்ப இடமில்லை. செல்ல முடிவிலி இருந்தது” என்றார் பிச்சாண்டவர். “மூன்று பெரும்பள்ளங்களை அவன் கடந்தான். விலக்கம், ஐயம், அருவருப்பு என மூன்றுருக்கொண்டது அச்சமே. இளையோனே, அச்சமென்பது என்ன? மானுடன் முடிவிலியை அஞ்சுகிறான். முடிவிலி நோக்கி எழும் இறப்பை அஞ்சுகிறான். இறப்பென்றாகும் நோயை அஞ்சுகிறான். நோய்கொள்ளும் உடலை அஞ்சுகிறான். உடலென்றான தன்னை அஞ்சுகிறான். அச்சத்தை அளவையாக்கி அவன் இப்புவியை அறிகிறான். எனவே அவன் அறிவதெல்லாம் அச்சம் ஒன்றையே.”

“அச்சத்தை அறுத்தவனுக்கு அறிவு இனிதாகிறது. அகம் இனிதாகிறது. அனைத்தும் இனிதாகின்றன. இனிக்கின்றது எல்லையின்மை. இனிப்பிலிருந்து தொடங்குக! சுவையாகி வருக சிவம்!” பிச்சாண்டவர் சொன்னார். “இனியவனே, அன்னம் இனிது. அன்னத்தை உண்ணும் அன்னம் அறிவது அவ்வினிமை. அறிக, தன் குட்டியை மென்று உண்ணும் அன்னைஓநாயின் கண்கள் சொக்கும் சுவையை. தன் அன்னை உடலை உண்டு வளரும் குஞ்சுநண்டுகளின் கால்கள் கொள்ளும் துள்ளலை. தான் வாழும் இல்லத்தை உண்டு திளைக்கும் மலப்புழுக்களின் களியாடலை. சிவமாகுக அன்னம்!”

மீண்டும் இருளின் கறங்கொலி மட்டும் அவர்களைச் சூழ்ந்திருந்தது. வைசம்பாயனன் விண்மீன்களை நோக்கியபடி அமர்ந்திருந்தான். தன் உள்ளம் கொண்ட ஐயங்களை அவரிடம் கேட்கவேண்டுமென்று விழைந்தான். உரிய சொற்களைக் கோக்க முயன்று சலித்து அமைந்து நீள்மூச்சுவிட்டான். அந்த

இயலாமையை நோக்கிக்கொண்டிருந்தபோது அது ஆணவமே என்று உணர்ந்தான். உரியசொற்கள் என்பவை என்ன? அவ்வுணர்வு வெளிப்படுமென்றால் அழுகையோ தேம்பலோ கூட அதற்குரியவை அல்லவா? சொல்லி அவரை வெல்ல முயல்கிறேன். அவர் முன் சொல்லத்தெரிந்தவன் என நின்றிருக்க விழைகிறேன்.

தன்னை இழுத்து அவர் முன் பணியவைத்தான். எந்தத் திட்டமும் இல்லாமல் நாகொண்ட சொற்களை அவ்வண்ணமே சொல்லலானான். “ஆசிரியரே, நான் கற்றவற்றில் இழந்தது என்ன? ஒவ்வொன்றையும் பிறிதொன்றை இழந்தே பெறுகிறோம் என்றால் கல்வி என்பது தொடரிழப்பும் அல்லவா? வேதம்நிறைந்த தொல்காடுகள் அனைத்திலும் இருந்து ஒவ்வொரு நாளும் உதிர்ந்துகொண்டிருப்பது என்ன? வேதச்சொல் சூடி, வேதமெய்ப்பொருள் உசாவி அங்கு தவமொன்றே வாழ்வெனக் கொண்டு இருந்து மறைந்த என் முன்னோர் தோற்ற இடமென்பது என்ன?”

அச்சொற்கள் எழுந்ததுமே அவையே உகந்தவை என அவன் உணர்ந்தான். அக்கணம் வரை அவன் அவற்றை உணர்ந்ததில்லை. ஆனால் எங்கோ அடிப்பாறைவெடிப்புக்குள் ஊறிய நீர் என அவை இருந்திருக்கின்றன. அவர் சொல்லப்போகும் சொற்களுக்காக அவன் காத்திருந்தான். இக்கணம் நான் காத்திருந்தது. நான் கற்ற ஒவ்வொன்றாக உதிர்த்து உள்ளம் ஒழிந்து வந்து அமர்ந்திருந்தது இதற்காகவே.

“உங்கள் குருநிலைகளை நான் கண்டிருக்கிறேன்” என்றார் பிச்சாண்டவர். “அவை காட்டுக்குள் உள்ளன. ஆனால் காட்டைச் செதுக்கி வெளியாக்கி அவற்றை அமைத்துள்ளனர். அங்கு அக்காட்டிலிருந்தே விதைகொண்டுசென்று நிழல்மரங்களை

நட்டு வளர்த்திருக்கின்றனர். செடிகளைப் பேணி மலர்த்தோட்டமிட்டுள்ளனர். காட்டுப்பசுக்களை மெருக்கி பாலூற்றுகளாக்கியிருக்கின்றனர். அங்குள்ள மான்கள் வேதச்சந்தத்தில் கத்துகின்றன. அங்குள்ள குடில்களின்மேல் அமர்ந்து கிளிகள் வேதச்சொற்களை கூவுகின்றன. அக்குருநிலைகள் வேலியிடப்பட்டு காட்டிலிருந்து பிரிக்கப்பட்டுள்ளன. இளையோனே, அவை இழப்பது சூழ்ந்திருக்கும் பசும்பெருங்காட்டைத்தான்."

"நாளும் பலர் அக்குருநிலைகளை விட்டு கிளம்புகிறார்கள். அவர்களில் பெரும்பாலானவர்கள் அங்கு வந்த பாதையை மீண்டும் தேர்ந்து இன்னொரு குருநிலை நோக்கி செல்கிறார்கள். ஒற்றைச்சிலந்திவலையில் சிக்கியிருக்கும் சிறுபூச்சிகளே அத்தனை குருநிலைகளும் என்று அறிக!" பிச்சாண்டவர் சொன்னார். "அவர்களில் எவரோ சிலர் காட்டுக்குள் செல்கிறார்கள். சொல்வளர்காட்டைச் சூழ்ந்திருக்கும் ஒலிதளர்பெருங்காட்டை காண்கிறார்கள். அவர்களுக்கு முன்பு அவ்வழி சென்றவர்களின் காலடிச்சுவடுகளால் ஆன பாதையைத் தேர்பவர்கள் பிறிதொரு குருநிலையை சென்றடைவார்கள். இளையோனே, பாதையின்மையையே காடு என்கிறோம்."

"அக்காட்டுக்குள் செல்பவனுக்கு கண்களில் வாழும் வானம் உதவாது. கால்களில் குடிகொள்ளும் திசைகளும் உதவாது. உடலறிந்த ஒன்றும் உடன்வராது. கருவறைப் புகுவதற்கு முன் கொண்ட கருத்து ஒன்றே கூடவரும். விலக்கி விலக்கி முன்செல்வதே காட்டைக் கடக்கும் ஒரே வழி. அங்கு அவனை வழிமறிப்பவை அவன் அஞ்சுவன அனைத்தும்தான். அச்சம் அழிந்து அவன் நின்றிருக்கையில்தான் மூவிழியும் வெண்நீறும்

புலியுரியும் பிறைநிலவும் உடுக்கும் சடையும்
கொண்டு கொலைதேர் கொடுஞ்சினக் காட்டாளன் ஒருவன் அவனை எதிர்கொள்கிறான்.” அவர் பெருமூச்சென “சிவமேயாம்” என்றார்.

# கிராதம் - 3

**[ 5 ]**

இமயப்பனிமலையின் அடியில் அமைந்திருந்த தேவதாருக்காடு சௌகந்திகம் என்று தேவர்களால் அழைக்கப்பட்டது.
அங்கிருந்து எழுந்த நறுமணம் முகில்களில் பரவி அவற்றை வெண்மலரிதழ்கள் என ஆக்கியது. தொல்பழங்காலத்தில் நிலம்விட்டு மலைநாடி எழுந்து வந்த அத்ரி மாமுனிவர் அங்கே சுகந்தவாகினி என்னும் சிற்றோடையின் கரையில் தனிக்குடில் கட்டி வாழ்ந்தார். நாளும் தேவதாருச் சமிதையால் அவர் அனலோம்பினார். அப்புகையை ஒற்றி உறிஞ்சி வானில் விளங்கிய முகில்கொழுந்துகளை கந்தர்வர்களும் கின்னரர்களும் தேவர்களும் எடுத்துச்சென்று கிழித்துப் பங்கிட்டு தங்கள் முகம் விளக்குவதற்காக வைத்துக்கொண்டனர்.

அத்ரி மாமுனிவரின் கொடிவழியில் வந்த நூற்றெட்டாவது அத்ரி சௌகந்திகத்தில் குருநிலை அமைத்து மாணவர்களுடன் வேதச்சொல் ஓம்பினார். அவரது அறத்துணைவி அனசூயை அவரைப் பேணினாள். பசுங்கோபுரங்களென எழுந்த தேவதாருக்களால் குளிர்ந்த அக்காட்டில் அத்ரி விளைவித்த மெய்மையை நாடி முனிவர்கள் வந்து குடிலமைத்துக்கொண்டே இருந்தனர். நிகரற்ற அறிவர்களாகிய நூற்றெட்டு முனிவர்களால் அக்காடு பொலிந்தது.

அவர்களும் மாணவர்களும் ஓதும் வேதச்சொல் இரவும் பகலும் ஒருகணமும் ஒழியாதொலிக்கவே அங்கு தீயதென்று ஒன்று தங்காதாயிற்று. வேதம் கேட்டு வளர்ந்த தேவதாருக்கள் பிறிதெங்கும் இல்லாத நறுமணம் கொண்டிருந்தன. அங்கு முளைத்த பிறசெடிகளின் வேர்களும் தேவதாருக்களுடன் பின்னி சாறு உறிஞ்சி நல்மணம் கொண்டன. அவற்றின் கனியுண்ட கிளிகளின் சிறகுகளிலும் மணம் கமழ்ந்தது. அனைத்து ஒலிகளும் வேதமென்றே எழுந்த அக்காட்டை வேதவனம் என்றனர் முனிவர்.

வேதம் கனிந்த சித்தம் கொண்டிருந்த அத்ரி முனிவர் அரணிக்கட்டைகள் இன்றி தன் சொல்லினாலேயே அனலெழுப்பும் வழக்கம் கொண்டிருந்தார். அவர் சொற்கள் நுண்ணொலி நிறைந்த விண்கனிந்து நேராக எழுபவை என்றனர் அறிஞர். வேதச்சொல்லவை ஒன்றில் அவர் ஒப்புமை சொல்லும்போது *பறக்கும் முதலைகளின் சிறகுகள்* என்று ஒரு வரி வந்தது. அங்கிருந்த அவைமுனிவர் எழுவர் அக்கணமே எழுந்து “முதலைகள் பறப்பதில்லை, அவற்றுக்கு சிறகுமில்லை” என்றனர். திகைத்த அத்ரி தான் சொன்னதென்ன என்று அருகமைந்த மாணவர்களிடம் கேட்டார். அவர்கள் அதைச் சொன்னதும் திகைத்து அமர்ந்தார்.

தன்னுள் தானறியாது கரந்தமைந்த ஆணவமே சொல்லென நாநழுவி விழுந்தது என்று உணர்ந்தார் அத்ரி. ஆனால் அந்த அவையில் தலைதாழ்த்தி சொல்லெனும் முடிவிலிக்கு முன் சித்தம் கொண்டாகவேண்டிய அடக்கத்தைச் சொல்ல அவரால் இயலவில்லை. “நான் சொன்னது உண்மை, பறக்கும் முதலை இங்குள்ளது” என்றார். “எனில் அதைக் காட்டுக எங்களுக்கு. அதுவரை உங்கள் சொல்லில் எழுந்த மெய்மை அனைத்தும்

ஐயத்தால் தடுத்துவைக்கப்படட்டும்” என்றனர் முனிவர். “அவ்வாறே ஆகுக!” என்று அத்ரி எழுந்துகொண்டார்.

நிலையழிந்து குடில்மீண்ட அவரிடம் “ஆணவமற்ற அறிவை தாங்கள் அடைவதற்கான தருணம் இதுவென்றே கொள்க!” என்று அனசூயை சொன்னாள். “ஆணவம் கொள்பவர் புவியனைத்துக்கும் எதிராக எழுகிறார். தெய்வங்கள் அனைத்தையும் அறைகூவுகிறார். மும்முதல்தெய்வங்களேயானாலும் ஆணவம் வென்றதே இல்லை.” அத்ரி அவளை தன் கையால் விலக்கி “நான் கற்றவை என் நாவில் எழவில்லை என்றால் அந்நாவை அறுத்தெறிவேன். நான் வெல்கையில் வென்றவை வேதங்கள். அவைமுன் நாணுகையில் நாணுபவையும் அவையே” என்றார்.

இரவெல்லாம் அவர் தன் குடிலுக்குள் தனக்குள் பேசியபடி உலவிக்கொண்டிருந்தார். உடலுள் எழுந்த புண் என வலித்தது உள்ளம். விடிகையில் முடிவுகொண்டிருந்தார். அன்றே வேள்விக்கூடத்தில் புகுந்து எரியெழுப்பினார். ஐவகை அவியும் நெய்யும் அளித்து வேதச்சொல்கொண்டு தென்றிசையில் வாழும் மேதாதேவியை அழைத்தார். “வாலறிவையே, இங்கு எழுக! இந்த அவைமுன் வந்து என் சொல்லுக்கு பொருளென்றாகுக!” என்றார்.

பிரம்மனின் மைந்தர் தட்சப் பிரஜாபதிக்கு பிரசூதி என்னும் துணைவியில் பிறந்தவள் மேதை. அவள் தென்னிசை ஆளும் தர்மதேவனை மணந்தாள். சொல்லில் எழும் மெய்மைக்குக் காவலென அமைந்தவள். எட்டு கைகளில் மலரும் மின்கதிரும் அமுதும் விழிமணிமாலையும் ஏடும் எழுத்தாணியும் அஞ்சலும் அருளலுமென அமர்ந்தவள். அவர் உள்விழிமுன் தோன்றி “முனிவரே, முடிவற்ற நெளிவுகொண்ட

நாவே சொல்லுக்கு முதல் எதிரி என்றுணர்க! பொருள்கடந்து மொழிகடந்து முடிவிலா ஆழம்வரை செல்வது நாவென அமைந்த நாகம். அதை பணிக! அவையொன்றில் தலைவணங்குவதனால் எவரும் பெருமையிழப்பதில்லை. பணிந்த அவைகள் வழியாகவே வென்று செல்கின்றது அறிவு" என்றாள்.

சினந்து சிவந்த அத்ரி தன் இடக்கையால் தர்ப்பையை எடுத்து வலக்கையை நீட்டி அவியெடுத்து தன் முன் எரிந்த வேள்வித்தீ நோக்கி நீட்டியபடி சொன்னார். "நானறிந்த வேதமெல்லாம் இங்கு திரள்க! என் சொல் பொய்யாகுமென்றால் வேதம் பிழைபடுக!" அனலில் அவியிட்டு அவர் ஆணையிட்டார். "மேதாதேவியே, என் அவியை உண்க! என் வேதச்சொல் கொள்க! நால்வேதம் அறிந்தவனாக இங்கமர்ந்து ஆணையிடுகிறேன். என் சொல்லுக்கு அரணாக எழுந்துவருக!"

அவர் முன் நின்று மேதாதேவி பதைத்தாள். "பிழைக்கு ஆணையென்று தெய்வம் வந்து நிற்கமுடியாது. அது பொய்மையை நிலைநிறுத்துவதென்றே ஆகும்."
அத்ரி "வேதத்தின் ஆணைக்கு தெய்வங்கள் கட்டுப்பட்டாகவேண்டும். இயலாதென்றால் சொல்க! என் சொல்லனைத்தையும் உதறி இந்த அவைவிட்டு எழுந்து செல்கிறேன்" என்றார். "முனிவரே அறிக, கலைமகளைக் கூடி எந்தை பிரம்மன் படைத்த இப்புவியில் இல்லை உங்கள் சொல்லில் எழுந்த உயிர்" என்றாள் மேதை.

"அவ்வாறென்றால் என் சொல்லில் உறையும் மெய்மையாகிய உன்னைப் புணர்ந்து பிரம்மன் படைக்கட்டும் அதை" என்றார் அத்ரி. "என்ன சொல்கிறீர்கள், முனிவரே? அவர் என் தந்தைக்குத் தந்தை. நான் அவள் மகள்" என்று அவள் கூவினாள். "நான்

எதையும் அறியவேண்டியதில்லை. பிழைத்த சொல் சூடி இந்த அவை விட்டு எழமாட்டேன்” என்று கூவினார் அத்ரி.

தன் முன் எழுந்த அனலில் நெய்யும் அவியும் சொரிந்து வேள்வி செய்தார். தன் மூலாதாரத்திலிருந்து வேதச்சொல் எடுத்து அனலோம்பினார். நீலச்சுடர் எழுந்து நாவாடியது. சுவாதிஷ்டானத்திலிருந்து எழுந்த சொல் செஞ்சுடர் கொண்டது. மணிபூரகத்தின் சுடர் மஞ்சளாக பெருகி எழுந்தது. அனாகதத்தின் சுடர் பச்சையொளி கொண்டிருந்தது. விசுத்தியின் சுடர் பொன்னிறம் பெற்றிருந்தது. ஆக்ஞையின் சுடர் வெண்ணிறமாக அசைவற்று நின்றது. சகஸ்ரத்தின் சுடரை எழுப்ப அவர் தன் நெற்றிமேல் தர்ப்பையை வைத்தபோது அனலில் எழுந்த பிரம்மன் “ஆகுக!” என்று சொல்லளித்தார்.

ககனப்பெருவெளியில் மேதையைப் புணர்ந்து பிரம்மன் நிகருலகு ஒன்றைப் படைத்தார். அவருள் இருந்து ஆழ்கனவுகளை எழுப்பினாள் மேதை. அவை பருவுருக்கொண்ட உலகில் பல்லிகள் பேருருக்கொண்டு நிலமதிர நடந்தன. கழுகுக்கால்களும் புலிமுகமும் கொண்ட வௌவால்கள் கூவியபடி வானில் மிதந்தன. தந்தம் வளைந்த பேருருவ யானைகள் வெண்கரடித்தோல் கொண்டிருந்தன. கால்பெற்று நடந்தன நாகங்கள். ஆமைகள் இடியோசை எழுப்பி வேட்டையாடின. சிறகு கொண்டன முதலைகள். அவற்றிலொன்று மரக்கூட்டத்திலிருந்து சிறுகிளை வழியாக இறங்கி சௌகந்திகக் காட்டுக்குள் வந்து இளவெயில் காய்ந்து கண்சொக்கி அமர்ந்திருந்தது.

அதை முதலில் கண்டவன் அவரை எதிர்த்து எழுந்த முனிவர்களில் முதலாமவராகிய கருணரின் மாணவன். அவன்

ஓடிச்சென்று தன் ஆசிரியரிடம் சொல்ல அவர் திகைத்தபடி ஓடி வெளியே வந்தார். அங்கே அதற்குள் முனிவர்களும் மாணவர்களும் கூடியிருந்தார்கள். கருணர் அருகே சென்று அந்த முதலையைப் பார்த்தார். நான்கடி நீள உடலும் நீண்ட செதில்வாலும் முட்புதர்ச்செடியின் வேரடிபோல மண்ணில் பதிந்த கால்களும் கொண்ட முதலை இளம்பனையின் ஓலைபோன்ற தோல்சிறகுகளை விரித்து வெயில் ஊடுருவவிட்டு பற்கள் நிரைவகுத்த வாயைத் திறந்து அசையாது அமர்ந்திருந்தது.

அது விழிமயக்கா ஏதேனும் சூழ்ச்சியா என்று கருணர் ஐயம் கொண்டார். ஆனால் அதை அணுகும் துணிவும் அவருக்கு எழவில்லை. செய்தியறிந்து அங்கே வந்த அத்ரி முதலையை நோக்கிச்சென்று அதன் தலையைத் தொட்டு "எழுந்து செல்க!" என்றார். அது செதில்கள் சிலிர்த்தெழ விழிப்புகொண்டு எழுந்து விழிகளை மூடிய தோலிமைகளை தாழ்த்தியது. முரசுத்தோலில் கோலிழுபட்டதுபோல பெருங்குரலில் கரைந்தபடி சிறகடுக்கை விரித்து அடித்து வாலை ஊன்றி காற்றில் எழுந்தது. அதன் சிறகடிப்போசை முறங்களை ஓங்கி வீசியதுபோல் ஒலித்தது. அக்காற்றேற்று சிறுவர்களின் முடியிழைகள் பறந்தன. காற்றில் ஏறி அருகிருந்த மரக்கூட்டங்களுக்குள் புகுந்து மறைந்தது.

கருணர் திரும்பி இரு கைகளையும் தலைக்குமேல் விரித்து "எந்தையே, ஆசிரியரே!" என்று கூவியபடி அத்ரியின் காலடிகளில் விழுந்தார். அவரைத் தொடர்ந்து ஐயம்கொண்ட அத்தனை முனிவர்களும் அவர் முன் விழுந்து கண்ணீருடன் மாப்பிரந்தனர். அவர்களின் தலைக்குமேல் தன் கைகளை

வைத்து “வேதச்சொல் என்றும் மாற்றில்லாதது” என்றார் அத்ரி. பின்னர் தன் குடில்நோக்கி நடந்தார்.

குடிலில் அவருக்கு கால்கழுவ நீர் கொண்டுவந்த அனசூயையிடம் பெருமிதம் எழ “என் சொல்லில் இருந்து எழுந்து வந்தது அந்தப் பறக்கும் முதலை” என்றார். அவள் அவர் விழிகளை நேர்நோக்கி “பிழைபட்ட சொல்லுக்காக தன்னை பிழையாக்கிக்கொண்டிருக்கிறது புவி” என்றாள். சினத்துடன் அவளை ஏறிட்டு நோக்கிய அத்ரி ஏதோ சொல்ல நாவெடுத்தபின் அதை அடக்கி தலைகுனிந்து கடந்து சென்றார்.

**[ 6 ]**

கலைமகளைப் புணர்ந்து பிரம்மன் படைத்த புவியில் இல்லாத விந்தைகள் நிறைந்திருந்தன மேதையைப் புணர்ந்து அவன் படைத்த பிறபுவியின் படைப்புகளில். கட்டற்று எழுந்த அவன் கற்பனையால் உருவங்கள் ஒன்றுகலந்தன. குன்றுகளும் யானைகளும் ஒன்றாகி எழுந்தன பேருருவ விலங்குகள். மரங்களும் எருதுகளும் ஊடாடி கொம்புகள் கொண்டன. சிறகுகொண்டன சிம்மங்கள். சிம்ம முகம் கொண்டன நாகங்கள். நாக உடல்கொண்டு நெளிந்தன புலிகள். நடந்தன மீன்கள்.

தன் படைப்புப்பெருக்கை நோக்க நோக்க பிரம்மன் பெருமிதம் கொண்டான். மேலும் மேலுமென படைப்புவெறி பெருக பிற அனைத்தையும் மறந்து அதிலேயே மூழ்கிக்கிடந்தான். அவன் நாவில் சொல்லாகவும் கைவிரல்களில் உருவாகவும் நின்றிருந்தாள் மேதாதேவி. அவர்கள் படைத்த நிகருலகு விரிந்து சென்று விண்ணுலகையும் பாதாளத்தையும் தொட்டது. அங்கு இறப்பென்பதே இருக்கவில்லை. எனவே அதன் எடை

ஏழுலகங்களையும் அழுத்தியது. அதன் விரிவு திசைகளை நெளியச் செய்தது.

இறப்பின்றிப் பெருகிய அவ்வுலகின் எடையால் தர்மதேவனின் துலாத்தட்டு நிகரிழந்தது. எருமை ஏறிய தேவன் விண்ணுலகுக்குச் சென்று கலைமகளைக் கண்டு வணங்கி சொன்னான் “அன்னையே, ஆக்கப்பட்டவற்றை அழித்து நிகர்நிலையை நிறுத்துவதே என் தொழில். அறம் வாழ்வது என் துலாக்கோலினால்தான் என்பது தெய்வங்களின் ஆணை. இன்று பெருகிச்செல்லும் அவ்வுலகை அழிக்கும் வழியறியாது திகைக்கிறேன். உருக்கொண்ட ஒவ்வொன்றையும் மொழிசென்று தொட்டாகவேண்டும். பெயர்கொண்ட ஒன்றையே என் பாசவடம் கொண்டு நான் பற்றமுடியும். அங்குள்ள எதையும் இன்னும் மொழியின் பெருவெளி அறியவில்லை. தாங்களே அருளல்வேண்டும்.”

அன்னை தன் தவம் விட்டு எழுந்து சென்று நோக்கியபோது கட்டின்றிப்பெருகி பின்னி முயங்கி தானே தன்னை மேலும் பெருக்கிச் சென்றுகொண்டிருந்த அவ்வுலகின் கனவுக்கொந்தளிப்பைக் கண்டு திகைத்து நின்றாள். கைநீட்டி விலங்குகளைப் பற்றி சுழற்றித் தூக்கி உண்டன பெருமரங்கள். கண்கள் கொண்டிருந்தன மலைப்பாறைகள். யானைகளை தூக்கிச்சென்றன கருவண்டுகள். நண்டுக்கால்களுடன் நிலத்திலறைந்து ஓசையிட்டு நடந்தன பேருருவ எறும்புகள். வகைப்பாடும் தொகைப்பாடும் ஒப்புமையும் வேற்றுமையும் அழிந்தமையால் மொழியை சிதறடித்துவிட்டிருந்தன அவை.

கனவிலென களிவெறியிலென நடமிட்டுக்கொண்டிருந்த தன் கொழுநன் கைபற்றி “நிறுத்துங்கள்! என்ன செய்துகொண்டிருக்கிறீர்கள்?” என்று அன்னை

கூச்சலிட்டாள். போதையில் விழிமயங்கியிருந்த அவன் அவளை கேட்கவில்லை. அவனை உலுக்கி அவள் மேலும் கூவினாள். “விழித்தெழுங்கள்! கனவுமீளுங்கள்!” விழிப்பு கொண்ட பிரம்மன் அவளை நோக்கி “யார் நீ?” என்றான். “உங்கள் சொல்லென அமைந்து உலகங்களை யாப்பவள். உங்கள் துணைவி” என்றாள் சுனைகளின் அரசி.

ஏளனத்துடன் சிரித்து “நீயா? உன் சொல் தவழும், நடக்கும் இடங்களில் பறப்பது இவள் கற்பனை. இனி இவளே என் துணைவி” என்று சொல்லி தன் கைகளை அசைத்துக்காட்டினான் பிரம்மன். அவனருகே களிவெறியில் சிவந்த விழிகளுடன் எங்கிருக்கிறோமென்றறியாது ஆடிக்கொண்டிருந்த மேதாதேவியை நோக்கி “நில்... இழிமகளே நில்!” என்று சொல்லன்னை கூவினாள். அவள் அக்குரலை கேட்கவேயில்லை. அவள் குழல்பற்றிச் சுழற்றி நிறுத்தி “கீழ்மகளே, இது நெறியல்ல என்று அறியமாட்டாயா நீ?” என்றாள் கலையரசி.

“நெறியிருக்கும் இடத்தில் களியாட்டமில்லை. களியாட்டில்லாது படைப்பெழுச்சியும் இல்லை” என்றாள் மேதை. “இவை எங்கள் ஆக்கங்கள். நிகரற்றவை, அழிவற்றவை.” அவள் தள்ளாடியபடி பிரம்மனை பற்றிக்கொண்டு “நாம் ஏன் வீண்சொல்லாடி பொழுது களைகிறோம்? இது நம் ஆடல்... வருக!” என்றாள். “ஆம், இதுவே நாம் தெய்வமாகும் தருணம்” என்ற பிரம்மன் திரும்பி தன் துணைவியிடம் “அகல்க! தன் உச்சத்தைக் கண்ட எவரும் மீண்டு வருவதில்லை. பறக்கத் தொடங்கியபின் கால்கள் சிறுக்கின்றன பறவைகளுக்கு. விலகிச்செல்! இப்படைப்புக் களியாட்டத்திற்கு முன் பிறிதென்று ஏதுமில்லை” என்றான்.

“அறிந்துதான் பேசுகிறீர்களா? ஆக்கல் புரத்தல் அழித்தல் என்றாகி நின்ற மூன்று பெருநிலைகளில் தொடக்கம் மட்டுமே நீங்கள். மூன்று விசைகளால் முற்றிலும் நிகர்செய்யப்பட்டது இப்பிரபஞ்சம்” என்றாள் வெண்மலரில் அமர்ந்தவள். “இப்படைப்புகளை அழிக்க எவராலும் இயலாது. இவை தங்களைத் தாங்களே புரப்பவை. எனவே இங்கு முழுமுதலோன் நான் மட்டுமே. அவர்கள் அங்குள்ள எல்லைகொண்ட சிற்றுலகங்களை ஆள்க! நான் ஆள்வது கட்டற்ற இப்படைப்புப் பெருவெளியை” என்றான் பிரம்மன்.

துயருற்றவளாக அன்னை கயிலை முடியேறிச் சென்றாள். அவளை யமனும் தொடர்ந்தான். அங்கே வெள்ளிப்பனிமலை முடி என வடிவுகொண்டு ஊழ்கத்திலிருந்த முதற்பெரும்சிவத்தின் முன்சென்று நின்று கைகூப்பி விழிநீர் விட்டாள். “உலகு காக்க எழுக, இறைவா!” என்று முறையிட்டாள். “அழிப்பவனே, அறம்புரக்க விழிசூடுக!” என்றான் யமன். பனிப்பரப்பு உருகி உடைந்து பேரோசையுடன் சரிவுகளில் அலைசுருண்டு இறங்கிச்சென்றது. பலநூறு பனிச்சரிவுகளால் மலைமடிப்புகள் இடியென முழங்கின. பொன்னுருகும் ஒளியுடன் அவன் முகம் வானிலெழுந்தது.

அன்னையும் காலனும் நிகழ்ந்ததை சொன்னார்கள். “இக்கணமே பிரம்மனை இங்கு அழைத்து வருக!” என்று செந்தழல்வண்ணன் ஆணையிட்டான். அவ்வாணையை ஏற்று நந்திதேவர் சென்று பிரம்மனை அழைத்து வீணே மீண்டார். “இறையுருவே, யார் அச்சிவன் என்று கேட்கிறார் பிரம்மன். அவர் திளைக்கும் அவ்வுலகில் தெய்வம் பிறிதில்லை என்கிறார்” என்றார். சினம் கொண்டபோது அவன் எரிசூடிய பெருமலையென்றானான். அனல்கொண்டு சிவந்த அவன் உடலில் இருந்து உருகிய

பனிப்பாளங்கள் பேராறுகளாகச் சரிவிறங்கி பல்லாயிரம் அருவிகளென்றாகின. அவை சென்றடைந்தபோது ஏழ்கடல்களும் அலைகொண்டு கொந்தளித்தன.

எரிகொண்ட அவன் உடலில் இருந்து நீராவி பெருகிஎழுந்து முகில்களாகி வெண்குடையெனக் கவிந்தது. நெற்றிவிழி திறந்தது. அதிலிருந்து உருகிய செம்பாறைக்குழம்பெழுந்து பெருகியது. அவ்வனல்துளியிலிருந்து உருக்கொண்டு எழுந்தான் காலபைரவன். அனல் குளிர்ந்து கரியுடல் கொண்ட அவன் விழிகளிரண்டும் சுடரென எரிந்தன. அவனைத் தொடர்ந்து வந்தது கரிய நாய். அதன் விழிகள் எரிமீன்களென புகையின் இருளில் தெரிந்தன.

“ஆணையிடுக!” என்றது பைரவசிவம். “அழைத்து வருக படைப்போனை!” என்றது முதற்சிவம். இடியோசைகளும் மின்னல்களும் தொடர பைரவசிவம் பிரம்ம உலகுக்குச் சென்றது. அங்கு வெறிகொண்டாடி நின்றிருந்த பிரம்மனை நோக்கி “முழுமுதல் படைப்போன் விழியிலிருந்து எழுந்த அவன் வடிவோன் வந்துள்ளேன். நோக்குக!” என முழங்கியது. பிரம்மன் நோக்கிழந்து மயங்கிய விழியும் உதடுகளில் பெருகிய நகையுமாக மேதாதேவியுடன் நடமிட்டுக்கொண்டிருந்தான். அவன் தோளைப்பற்றி “நில், வா என்னுடன்! இது படைப்பிறைவனின் ஆணை!” என்ற பைரவனிடம் கால்தள்ளாட நின்று “யார் படைப்போன்? இங்கு நானன்றி பிறனில்லை” என்றான் பிரம்மன்.




இடியோசை என முகில்களில் முழங்கிய உறுமலுடன் பைரவசிவம் தன் வலக்கையின் சுட்டுவிரலை நீட்டியது. அங்கொரு அனல்பெருந்தூண் அடியிலி திறந்து எழுந்து விண் கடந்து சென்றது. அதன் வெங்கனலில் அக்கணமே பிரம்மன் உருவாக்கிய பிறவுலகு எரிந்து சாம்பலாகியது. அடுத்த கணம்

வீசிய பெரும்புயல்காற்றில் அச்சாம்பலும் பறந்தகல கனவென மறைந்தன அங்கிருந்தவை அனைத்தும். அவை அமைந்திருந்த காலமும் அலைநெளிந்து மறைந்தது.

திடுக்கிட்டு விழித்து அண்ணாந்து நோக்கிய பிரம்மன் மாபெரும் குடையென புகைசூடி நின்ற அனல்தூணைக் கண்டு அஞ்சி அலறியபடி உடலொடுக்கி அமர்ந்தான். "நெறியிலியே, நீ மீறியவை மீண்டும் மீறப்படக்கூடாதவை" என்று கூவியபடி பைரவசிவம் தன் சுட்டுவிரலையும் கட்டைவிரலையும் குவித்து நகமுனையால் மலர்கொய்வதுபோல பிரம்மனின் தலைகொய்து மீண்டது.

தன் கணவன் தலையுடன் மீண்ட பைரவசிவத்தைக் கண்டு அலறியபடி ஓடிவந்த கலைமகள் நெஞ்சிலறைந்து அழுதாள். "இறைவா, படைப்பென்று இல்லையேல் புவனம் அழியும். அருள்க!" என்றாள். "தேவி, படைக்கப்பட்டவை அனைத்தும் மொழியிலுள்ளன. அப்படைப்பிலுள்ளான் படைத்தவன். உன்னிலிருந்து அவனை மீட்டுக்கொள்க!" என்றது முதற்பெரும்சிவம். தேவி கண்மூடி தன்னுள் நிறைந்த கலையில் இருந்து வெண்ணிற ஒளியாக பிரம்மனை மீட்டெடுத்தாள்.

நான்முகமும் அறிவிழியும் அமுதும் மின்னலும் ஏடும் மலரும் கொண்டு தோன்றிய பிரம்மன் வணங்கி "என்ன நிகழ்ந்ததென்றே அறிகிலேன், அண்ணலே. என்னை மீறிச்சென்று பிறிதொன்றாகி நின்றேன்" என்றான். "ஆம், படைப்பென்பதே ஒரு பிழைபாடுதான். பிழைக்குள் பிழையென சில நிகழ்வதுண்டு. தன்னை தான் மீறாது படைப்பு உயிர்கொள்வதில்லை. நிகழ்ந்தவை நினைவாக நீடிக்கட்டும்.

அவை இனிவரும் படைப்புக்குள் நுண்வடிவில் குடிகொள்வதாக!” என்றது சிவம்.

நிழலுருவாகத் தொடர்ந்துவந்த மேதாதேவி கண்ணீருடன் கைகூப்பி நின்றாள். “நான் வேதச்சொல்லுக்கு கட்டுப்பட்டவள். வேதமே என் செயலுக்குப் பொறுப்பாகவேண்டும்” என்றாள். “ஆம், நெறியுடன் இயையா பேரறிவென்பது வெறும் பித்தே. இனி என்றும் நீ அவ்வாறே ஆகுக!” என்றது சிவம். கைகூப்பி வணங்கி அவள் தன் இடம் மீண்டாள்.

அனைவரும் சென்றபின் முதற்சிவத்தின் முன் பேருருக்கொண்டு நின்றது பைரவசிவம். அதன் நிழல் வெண்ணிறமாக நீண்டு மடிந்து கிடந்தது. வெருண்டு நாய் முரல பைரவசிவம் திரும்பி நோக்கியபோது துயர்மிக்க விழிகளுடன் பெண்ணுருவம் கொண்டு எழுந்து கைகூப்பி நின்றதைக் கண்டது. “நான் நீங்களியற்றிய கொலையின் பழி. விடாது தொடரும் நெறிகொண்டவள்” என்றாள் அவள். “உங்கள் கையில் இருக்கும் அந்த மண்டை உதிருமிடத்தில் நிலைகொள்வேன்.”

திகைப்புடன் தன் கையிலிருந்த பிரம்மகபாலத்தை நோக்கி அதை கீழே வீச முயன்றது பைரவசிவம். அது விழாமல் கையுடன் ஒட்டிக்கொண்டிருப்பதைக் கண்டது. கையை உதறியும் வீசியும் முயன்று தோற்றபின் அண்ணாந்து “இறையே, இக்கபாலத்துடன் நான் என்ன செய்வேன்?” என்று கூவியது.

“நீ செய்ய மறந்தது ஒன்றுண்டு. பிரம்மனின் தலைகொய்யும்போது அவனிருந்த பெருநிலை என்னவென்று அறிந்திருக்கவேண்டும்” என்றது சிவம். “தெய்வங்களை,

பிரம்மத்தின் ஆணையை விலக்கும்படி அவனைப் பித்தெடுக்க வைத்த அப்பெருங்களியாட்டுதான் என்ன என்று நீ உற்றிருக்கவேண்டும்." திகைப்புடன் "ஆம், அவ்விழிகளைத்தான் நான் எண்ணிக்கொண்டிருந்தேன். அதிலிருந்த பேருவகையை எங்கும் நான் கண்டதில்லை" என்றது பைரவசிவம்.

"உண்ணும்போதும் புணரும்போதும் கொல்லலாகாதென்றனர். அவ்விரண்டைவிடவும் மேலானதொன்றில் இருந்தவனை நீ கொன்றாய்" என்றது சிவம். "அவ்விரண்டும் ஆகி அவற்றைக் கடந்தும் அமைந்த பெருநிலை அது. அதில் ஒரு துளியையேனும் அறியாது தீராது உன் பழி." பைரவசிவம் துயர்கொண்டு தலைகுலுக்கி "ஆம், இன்றுணர்கிறேன். இறையே, நான் செய்த பிழையை அறிகிறேன். சொல்க, நான் மீளும் வழியென்ன?" என்றது.

"பிரம்மனின் தலைகொய்கையில் இருவிரல் நகங்களை மட்டும் பயன்படுத்தினாய். அதிலிருந்தது உன் ஆணவம். தெய்வமே என்றாலும் ஆணவம் இழிவே. அது அழியும் காலம் உன் கபாலம் கழன்றுதிரும்" என்றது சிவம். "அது உதிர்கையில் நீ அறிவாய், பிரம்மன் இருந்த பொங்குநிலையை. அதிலாடுகையில் நீ மீள்வாய்." உடல்வீங்க விம்மி "எங்கு? நான் என்ன செய்யவேண்டும் அதற்கு?" என்றது பைரவசிவம். "மண்டை என்பது இரப்பதற்கே. இரந்துண்டு நிறையட்டும் உன் வயிறு. நீ நிறைவுகொள்ளும் இடத்தில் இது உதிர்வதாக!" என்றது தொல்சிவம்.

இரந்துண்டு பசிநிறைய இரவலன் உருவில் எழுந்தது பைரவசிவம். கரியநாய் தொடர்ந்துவர நோயில் ஒடுங்கிய உடலும் சூம்பிக்கூம்பிய கைகளும் ஒளிமங்கிய விழிகளுமாக பார்ப்புக்கொலைப் பேய் பெண்ணுருவில் உடன் வர

உடும்புத்தோல் கங்காளத்தை மீட்டியபடி தேவர் வாழும் வீதிகளில் திரிந்தது. கந்தர்வர்களும் கின்னரர்களும் கிம்புருடர்களும் மானுடரும் வாழும் ஏழுலகங்களிலும் இல்லம்தோறும் இரந்துண்டது. சுவைகோடி அறிந்து, உணவுக்குவை கோடி தீர்ந்தபின்னும் அழியாத பெரும்பசியுடன் அலைந்தது. அதன் கங்காளத்தின் ஓசை இடித்தொடர் என முகிலடுக்குகளில் பெருங்காலமாக முழங்கிக்கொண்டிருந்தது.

இருநீர் பெருநதி கங்கை வளைந்தொழுகிய காசித்துறைக்கு அது வந்தது. வரணாவும் அஸியும் வந்தணைந்த பிறைவடிவப் படித்துறையில் மூதாதையரை நீரூற்றி வானேற்றும்பொருட்டு அன்னம் அளிக்க அமர்ந்திருந்த ஒவ்வொருவரிடமாகச் சென்று இரந்தது. கரியபேருடலும் சூலமும் கப்பரையும் கொண்டு கங்காளம் மீட்டிவந்த காட்டுருவனை அருவருத்தும் அஞ்சியும் விலகினர் மானுடர். அவர்கள் இட்ட உணவை அக்கணமே உண்டு கடந்த அவன் அழல்கண்டு திகைத்தனர். அவன் உடல் அணுகியபோது கொதிக்கும் தணல் என காற்று வெம்மைகொண்டதை உணர்ந்தனர். அவன் சென்றவழியில் கல்லுருகி தடம் பதிவதைக் கண்டு மருண்டனர்.

“அவன் யார்? விண்ணுருவன் வடிவாக முடிமன்னர் இருந்தாலும் இந்நகரில் எப்படி வந்தான்?” என்றனர். அவனை நிழல் எனத் தொடர்ந்த நாயை, நோயுருக்கொண்ட பெண்ணைக் கண்டு முகம் சுளித்தனர். அங்கே நீர்க்கரைநோக்கி அமைந்திருந்த சிற்றாலயத்திற்குள் ஆழியும் வெண்சங்கும் ஏந்தி அமர்ந்திருந்த விண்ணவன் அவன் வருகையைக் கண்டான். ஆலயமுகப்பில் வந்து நின்று கங்காளத்தை முழக்கிய பைரவசிவத்தைக் கண்டு சினந்தெழுந்த

விஸ்வக்சேனன் தன் தண்டுப்படையை ஓங்கியபடி தாக்கவந்தான். அக்கணமே தன் இடக்கை முப்புரிவேலால் அவன் தலையறுத்து நிலத்திட்டது பைரவசிவம்.

படிக்கட்டில் அமர்ந்திருந்தவர்கள் கூவியபடி எழுந்தனர். தலையற்ற உடல்கிடந்து துடிக்க செங்குருதி வழிந்து படியிறங்கியது. அமர்ந்திருந்த பீடத்திலிருந்து புன்னகையுடன் எழுந்த விண்ணவன் தன் படையாழியை எடுத்து வீச அது பைரவசிவத்தின் கழுத்துப்பெருநரம்பை வெட்டியது. துளையூற்றென சீறிப்பெருகிய குருதி அவன் ஏந்திய கப்பரையில் நிறைந்தது. செவ்விழிகளால் அதை ஒருகணம் நோக்கியபின் ஏந்தி இதழ்சேர்த்து அருந்தினான் இரவலன். அருந்தும்தோறும் விடாய் மேலிட்டு மீண்டும் மீண்டும் உறிஞ்சினான். சுவையறிந்து அவன் உடலே நாவாகித் திளைத்தது.

ஊறி உண்டு மேலும் ஊற மேலும் உண்டு அவன் மேனி ஒளிகொண்டது. கங்காளநாதத்திற்கு இசைய அவன் கால் வைத்து நடமிடலானான். களிவெறி எழுந்து அவன் இடம்நிலை மறந்தான். விழிகளும் கைகளும் கால்களும் தாளத்தில் இசைய அவன் ஆடுவதை அங்கிருந்தோர் அஞ்சி கூடிநின்று நோக்கினர். அவன் கையிலிருந்த கபாலம் நிலத்தில் உதிர்ந்தது. முழந்தாளிட்டு மடிந்தமர்ந்த பார்ப்புக்கொலைப் பேய் படிக்கட்டில் பழந்துணியெனப் படிந்தமைந்தது. அவன் கைக்குவிகைகளில் விரல்மலர்கைகளில் ஆக்கமும் அழிவும் புரத்தலும் புரிதலும் எழுந்தமைந்தன. அவன் அருகே கையில் சிறிய வெள்ளித்தட்டுடன் நின்றிருந்த அழகிய முனிவன் புன்னகையுடன் “ஆம்!” என்றான்.

வெண்முரசு விவாதங்கள்

# கிராதம் - 4

**[ 7 ]**

அத்ரி முனிவரின் சௌகந்திகக் காட்டின் அழகிய காலையொன்றில் தொலைவில் மரம்செறிந்த காட்டுக்குள் ஒரு கங்காளத்தின் ஒலி கேட்கத் தொடங்கியது. அப்போது அங்கு வைதிகர் நீராடி எழுந்து புலரிக்கு நீரளித்து வணங்கிக்கொண்டிருந்தனர். பெண்டிர் அவர்களுக்கான உணவு சமைக்க அடுமனையில் அனலெழுப்பிக்கொண்டிருந்தனர். தொழுவத்தில் பால்கறந்தனர் முதிய பெண்கள். சிலர் கலங்களில் மத்தோட்டினர். அருகே வெண்ணைக்காக அமர்ந்திருந்தனர் இளமைந்தர். முற்றத்தில் ஆடினர் சிறுவர். மலர்கொய்து வந்தனர் சிறுமியர். இளையோர் சிலர் விறகு பிளந்தனர். சிலர் ஓலைகளில் நூல்களைப் பொறித்தனர்.

தூயது சௌகந்திகத்தின் காலை. தூய்மையில் விளைவதே மெய்மை என்று அத்ரி முனிவர் அவர்களுக்கு கற்பித்தார். விலக்குவதன் வழியாக விளைவதே தூய்மை. மூவேளை நீராடி உடலழுக்கு களைதல். அனலோம்பி மூச்சை நெறிப்படுத்தல். வேதமோதி அகத்தை ஒளிகொள்ளச்செய்தல். சௌகந்திகம் சூழ்ந்திருந்த பெருங்காட்டை முற்றாக விலக்கி வேலியிட்டு தன்னைக் காத்தது. வேதச்சொல் கொண்டு தன்னைச் செதுக்கி கூர்மையாக்குக என்றார் அத்ரி. வாழைப்பூ என தன்னை உரித்து உரித்து தேன்மலர் கொள்க என்றார்.

இனிய புலரியை அதிரச்செய்த கங்காள ஒலியைக் கேட்டு அவர்கள் திகைப்புகொண்டனர். முதலில் அது

உக்கில்பறவையின் உப்பலோசை என்று தோன்றியது. சீரான தாளத்தால் அது மரங்கொத்தியோ என ஐயுற்றனர் மாணவர். தொலைதேரும் கருங்குரங்கின் எச்சரிக்கையோசை என்றனர் சில மாணவர். இளையோன் ஒருவன் “அது கங்காளத்தின் ஓசை” என்றான்.

அவர்கள் அதை முன்பு கேட்டிருக்கவில்லை. அவனைச் சூழ்ந்துகொண்டு “அது என்ன?” என்றனர். “மலைவேடர் கையிலிருக்கும் சிறுதோல்கருவி அது. விரல்போன்ற சிறுகழியால் அதை இழும் இழுமென மீட்டி ஒலியெழுப்புவர். கங்காளம் என்பது அதன் பெயர். அவர்களின் கையிலமைந்த நாவு அது என்பார்கள் என் குலத்தவர். கதைகளையே அவர்களால் அவ்வொலியால் சொல்லிக்கொள்ள முடியும்” என்று அவன் சொன்னான். “அது விம்மும். ஏங்கும். அறுவுறுத்தும். அறைகூவும்.”

“எங்கள் மலையடிவாரத்து ஊரில் கங்காளத்தின் திரளொலி எழுந்தால் அனைவரும் அஞ்சி ஓடிச்சென்று ஒளிந்துகொள்வர். கரிய திண்ணுடலுடன் மலையிறங்கிவரும் வேட்டுவர்கள் ஊர்புகுந்து சாவடியில் நிலைகொண்டால் ஊர்ப்பெரியோர் கூடி அரிசியும் பொன்பணமும் பிறபொருட்களுமாகச் சென்று பணிந்து மலைக்கப்பம் கொடுத்து வணங்குவார்கள். அவர்கள் அதைப் பெற்றுக்கொண்டு ஊரை வாழ்த்தி வெளியேறுகையில் ஊர்முகப்பில் நின்றிருக்கும் மரத்தின் பட்டையில் தங்கள் குலக்குறியை பொறித்துச்செல்வார்கள்.”

“தனிவேட்டுவர் மலையிறங்கும் ஒலி ஆறுதலளிப்பது. அவர்களை எதிர்கொண்டு வரவேற்று அழைத்துச்சென்று எங்கள் கன்றுகளை காட்டுவோம். அவற்றின் வாய்கட்டி வைத்திருக்கும் மலைத்தெய்வங்களை விடுவித்து மீண்டும்

புல்கடிக்கச் செய்ய அவர்களால் முடியும். அணங்குகொண்டு அமர்ந்திருக்கும் கன்னியரை புன்னகை மீளச்செய்யவும் நோய் கொண்டு நொய்ந்த குழவியரை பால்குடிக்க உதடுகுவியச் செய்யவும் அவர்களால் முடியும்.”

அங்கு அதுவரை கங்காளர் எவரும் வந்ததில்லை. “இது வைதிகர் குருகுலம். இங்கு எவருக்கும் கொடையளிப்பதில்லை. இத்திசையில் எங்கும் வேட்டுவர் இல்லங்களும் இல்லை” என்றார் கனகர். ”வேதம்நாடி வரும் படிவரும் வைதிகருமன்றி பிறர் இதனுள் புக ஒப்புதலுமில்லை.” பிரபவர் ”அவன் எதன்பொருட்டு வருகின்றான் என நாம் எப்படி அறிவோம்?” என்றார். தசமர் “அயலது எதுவும் தீங்கே” என்றார்.

“அவனுடன் நாய் ஒன்றும் வருகிறது” என்றான் ஓர் இளையோன். “எப்படி நீ அறிவாய்?” என்றனர் அவனைச் சூழ்ந்து நின்ற பெண்கள். “புள்ளொலி தேரும் கலையறிந்தவன் நான்” என்று அவன் சொன்னான். “அவனுடன் இன்னொருவரும் வருகிறார். அது பெண் என்கின்றது புள்” என்றான். ”காட்டை ஒலியால் அறிந்துகொண்டிருக்கிறாய். நோயும் கொலையும் வாழும் இக்காடு அவ்வொலியால் உன்னையும் வந்தடைகிறது. காடுவாழும் உள்ளத்தில் வேதம் நிற்பதில்லை” என்றார் அவன் ஆசிரியரான கனகர்.

அவர்கள் குடில்தொகையின் வாயிலென அமைந்த மூங்கில்தூண்களின் அருகே காத்து நின்றனர். இளையோர் இருவர் முன்சென்று அவனை எதிர்கொள்ள விழைந்தனர். மூத்தோர் அவர்களை தடுத்தனர். “கொல்வேல் வேட்டுவன் அவன் என்றால் எதிரிகளென உங்களை நினைக்கலாம். அந்தணரையும் அறவோரையும் அறியும் திறனற்றவனாகவே அவன் இருப்பான்” என்றார் சூத்ரகர். அச்சமும் ஆவலும்

கொண்டு ஒருவர் கைகளை ஒருவர் பற்றியபடி அங்கே காத்து நின்றிருந்தனர்.

கங்காளத்தின் ஓசை வலுத்து வந்தணைந்தது. மரக்கூட்டங்களிலிருந்து பறவைகள் எழுந்து கலைந்து பறந்தன. கொல்லையில் நின்றிருந்த பசுக்கள் குரலெழுப்பலாயின. அவன் மரக்கூட்டங்களுக்கு நடுவே தோன்றியதும் இளையோர் அஞ்சிக் கூச்சலிட்டபடி பின்னடைந்தனர். கரிய நெடிய உடலில் ஆடையின்றி வெண்சாம்பல்பொடி பூசி அவன் வந்தான். அவன் இடைக்குக் கீழே ஆண்குறி சிறுதுளை வாய்கொண்ட செந்நிறத் தலைபுடைத்து விரைத்து நின்றது. அதில் வேர்நரம்புப் பின்னல்கள் எழுந்திருந்தன. சினம் கொண்ட சுட்டு விரல் போல. சீறிச் சொடுக்கிய நாகம் போல. யானைகுட்டியின் துதிமுனை போல. நிலம் கீறி எழுந்த வாழைக்கன்றின் குருத்துபோல.

சடைத்திரிகள் தோள்நிறைத்து தொங்கின. வேர்புடைத்த அடிமரம்போன்ற கால்கள் மண்ணில் தொட்டுத் தாவுவதுபோல் நடந்தன. வலத்தோளில் தோல்வாரில் மாட்டப்பட்ட முப்புரிவேல் தலைக்குமேல் எழுந்து நின்றிருந்தது. இடக்கையில் மண்டைக்கப்பரை வெண்பல் சிரிப்புடன் இருக்க இடைதொட்டுத் தொங்கிய கங்காளத்தை வலக்கையின் சிறுகழியால் மீட்டியபடி நடந்து வந்தான். அவனுக்குப் பின்னால் நிலம் முகர்ந்தும், காற்றுநோக்கி மூக்கு நீட்டியும், விழிசிவந்த கரியநாய் வால் விடைக்க தொடர்ந்து வந்தது. அப்பால் வெண்ணிற ஆடையில் உடல் ஒடுக்கி நீண்ட கூந்தல் தோளில் விரிந்திருக்க நிலம்நோக்கி தலைதாழ்த்தி நோயுற்ற முதியவள் சிற்றடி எடுத்துவைத்து வந்தாள்.

பதறி ஓடி உள்ளே வந்து அவன் உள்ளே புகாதபடி மூங்கில்படலை இழுத்துமூடினர் இளையோர். அவன் மூடிய வாயிலருகே செஞ்சடைவழிந்த தலை ஓங்கித்தெரிய வந்து நின்று "பிச்சாண்டி வந்துள்ளேன். நிறையா கப்பரையும் அணையா வயிறும் கொண்டுள்ளேன்" என்றான். கங்காளம் குரலானது போலிருந்தது அவ்வோசை. "இரவலனுக்கு முன் மூடலாகாது நம் வாயில். திறவுங்கள்!" என்றார் முதியவராகிய சாம்பர். "அவன் காட்டாளன். இது வைதிகர் வாழும் வேதநிலை" என்றார் கனகர். "அவன் கொலைவலன் என்றால் என்ன செய்வது?" என்றார் சூத்ரகர். "எவராயினும் இரவலன் என்றபின் வாயில் திறந்தாகவேண்டும் என்பதே முறை" என்றார் சாம்பர். தயங்கிச்சென்ற இளையோன் ஒருவன் வாயில் திறக்க அவன் நீள்காலடி எடுத்துவைத்து உள்ளே புகுந்தான்.

அத்தனை விழிகளும் அவனையே நோக்கி நிலைத்திருந்தன. அத்தனை சித்தங்களிலும் எழுந்த முதல் எண்ணம் 'எத்தனை அழுக்கானவன்! எவ்வளவு அழகற்றவன்!' என்பதே. தோல்வாடையும் ஊன்வாடையும் மண்மணமும் இலைமணமும் கலந்து காட்டுக்கரடிபோல் அவன் மூக்குக்கு தெரிந்தான். கங்காளத்தின் ஓசை குடில்சுவர்களைத் தொட்டு எதிரொலித்து சௌகந்திகக்காட்டுக்குள் பரவியது. நோயுற்றவள் சுகந்தவாகினிக்கு அப்பால் தரையில் குனிந்தமர்ந்தாள். நாய் அவளருகே கால்மடித்து செவிகோட்டி மூக்குநீட்டி கூர்கொண்ட முகத்துடன் அமர்ந்தது.

அவன் உள்ளே நுழைந்தபோது தேவதாருக்காட்டுக்குள் நிறைந்திருந்த நறுமணத்தை ஊடுருவியது மதம்கொண்ட காட்டுவிலங்கின் நாற்றம். தொழுவத்துப் பசுக்கள் கன்றுகளைக் கண்டவைபோல குளம்புகள் கல்தரையில் மிதிபட,

கொம்புகளால் தூண்களையும் அழிகளையும் தட்டி நிலையழிந்து, முலைகனத்து குரலெழுப்பின. கூரையேறிய சேவலொன்று தலைசொடுக்கி சிறகடித்துக் கூவியது. வளர்ப்புக்கிளிகள் 'அவனேதான்! அவனேதான்!' என்று கூவிச்சிறகடித்து உட்கூரையில் சிறகுகள் உரச சுற்றிப்பறந்தன.

அவ்வோசைகள் சூழ அவன் நடந்து முதல் இல்லத்தின் முன் சென்றுநின்றான். கங்காளத்தின் தாளத்துடன் இயைய "பசித்துவந்த இரவலன், அன்னையே. உணவிட்டருள்க, இல்லத்தவளே!" என்று கூவினான்.

அவனை சாளர இடுக்குகளினூடாக பெண்கள் நோக்கிக்கொண்டிருந்தனர். அவன் குரல்கேட்டு பதுங்கியிருக்கும் விலங்கின் உடலென அக்குடில் அதிர்வுகொண்டது. அதன் மூடிய கதவுகளின் இடுக்குகள் விதும்பின. அவன் மும்முறை குரலெழுப்பியதும் கதவு மெல்லத்திறக்க மேலாடைகொண்டு மூடிய தோளை ஒடுக்கி கால்கள் நடுங்க முனிவர்மனைவி முறத்தில் அரிசியுடன் வெளியே வந்தாள். தலைகுனிந்து நிலம்நோக்கி சிற்றடி வைத்து வந்து படிகளில் நின்று முறத்தை நீட்டினாள். அவன் தன் கப்பரையை அவளை நோக்கி நீட்டி புன்னகையுடன் நின்றான்.

அவளுடைய குனிந்த பார்வை திடுக்கிட்டு நிமிர்ந்தது. அவன் விழிகளை சந்தித்ததும் அவள் கைகள் பதற முறம் சரிந்து அரிசி சிந்தலாயிற்று. தன் கப்பரையாலேயே அவ்வரிசியை முறத்துடன் அவன் தாங்கிக்கொண்டான். கப்பரை விளிம்பால் முறத்தை மெல்லச்சரித்து அரிசியை அதனுள் பெய்தபோது அவன் விழிகள் அவள் உடலிலேயே ஊன்றியிருந்தன. விழி தழைத்திருந்தாலும் முழுதுடலாலும் அவனை நோக்கிய அவள்

மெய்ப்புகொண்டு அதிர்ந்தாள். சுண்டிச்சிவந்த முகத்தில் கண்கள் கசிந்து வழிய, சிவந்து கனிந்த இதழ்கள் நீர்மையொளி கொள்ள, உயிர்ப்பின் அலைக்கழிப்பில் கழுத்துக்குழிகள் அழுந்தி எழ, முலைக்குவைகள் எழுந்து கூர்கொண்டு நிற்க எங்கிருக்கிறோம் என்றறியாதவள் போலிருந்தாள்.

“நலம் திகழ்க இல்லாளே! உன் குலம் பெருகுக! கன்றுடன் செல்வம் தழைக்க! சொல்கொண்டு பெருகுக உன் கொடிவழி!” என்று சொல்லி கங்காளன் திரும்பியபோது கனவிலென காலெடுத்து வைத்து அவளும் அவனைத் தொடர்ந்துசென்றாள். அவள் இல்லத்திலிருந்து கைநீட்டியபடி வெளியே வந்த இன்னொருத்தி “என்ன செய்கிறாய், வாமாக்ஷி? எங்கு செல்கிறாய்?” என்று கூவ அவன் திரும்பி நோக்கி மெல்ல நகைத்தான். வெறிகலந்த விழிகள். பித்தெழுந்த சிரிப்பு. அவள் மேலாடை நழுவ பெருமுலைகள் இறுகி மாந்தளிர்நிற காம்புகள் சுட்டுவிரல்களென எழுந்து நின்றன. விம்மி நெஞ்சோடு கைவைத்து அழுத்தி ஒருகணம் நிலைமறந்தபின் அவளும் உடனிறங்கி அவனுடன் சென்றாள்.

அவன் கங்காளத்தை மீட்டியபடி இல்லங்கள்தோறும் சென்றான். அவன் செல்வதற்குள்ளாகவே ஆடை நெகிழ்ந்துருவிச் சரிய, விழிகளில் காமப்பெருக்கு செம்மைகொள்ள, விம்மும் முலைகளை தோள்குறுக்கி ஒடுக்கியும், கைகொண்டு இறுக்கியும், தொடைசேர்த்து உடல் ஒல்கியும் முனித்துணைவியர் அன்னத்துடன் திண்ணைகளுக்கு வந்தனர். உறவுத்திளைப்பிலென குறுவியர்வை கொண்ட நெற்றிகள். பருக்கள் சிவந்து துடித்த கன்னங்கள். கனிவு கொண்டு சிவந்த இதழ்கள். மூச்சு அனல்கொள்ள விரிந்தமைந்த மூக்குத்துளைகள். சுருங்கி அதிர்ந்த

இமைகளுக்குள் பால்மாறா பைதல்நோக்குபோல் ஒளியிழந்து தன்னுள் மயங்கிய விழிகள்.

குடிலுக்குள் இருந்து அஸ்வக முனிவர் ஓடிவந்து “என்ன செய்கிறாய், மாயாவியே? நீ யார்?” என்று கூவினார். கிருபர் “தடுத்து நிறுத்துங்கள் அவனை! நம் குலக்கொடிகளை மயக்கி கொண்டுசெல்கிறான் அவன்” என்றார். அவன் கங்காளத்தின் தாளம் மாறுபட்டது. குடில்களில் இருந்து குழந்தைகள் கூவிச்சிரித்தும் துள்ளியார்த்தும் அவனுக்குப்பின் திரண்டுசென்றன. அவனை நோக்கி மலர்களைப் பறித்து வீசின. அவனுடன் செல்ல முண்டியடித்தன. கங்காளம் அழைக்க வேதம் பயின்ற இளையோர் தங்கள் கையிலேந்திய பணிக்கருவிகளை அங்கேயே உதறி அவனைத் தொடர்ந்தனர். சுவடிகளை உதறி கல்விநிலைகளில் இருந்து எழுந்து அவன் பின்னால் ஏகினர்.

வேள்விச்சாலைக்குள் பன்னிரு முனிவர் சூழ அமர்ந்து வேதமோதி அவியிட்டுக்கொண்டிருந்த அத்ரியின் முன் சென்று நின்ற கருணர் மூச்சிரைத்தபடி “முனிமுதல்வரே, எண்ணவும் இயலாதது நிகழ்கிறது. எங்கிருந்தோ வந்த கிராதன் இதோ நம் இல்லப்பெண்களையும் மாணாக்கர்களையும் இழுத்துக்கொண்டு செல்கிறான். முடிவற்ற மாயம் கொண்டிருக்கிறான்... எழுந்து வருக! நம் குருநிலையை காப்பாற்றுக!” என்று கூவினார். “இங்கிருந்தே வெல்வேன் அவன் மாயத்தை” என்று கூவியபடி அவியிலிட தர்ப்பை ஒன்றைக் கையிலெடுத்த அத்ரி அது பொசுங்கி எரிந்து தழலாவதைக் கண்டார்.

சினத்தால் உடல் அதிர எழுந்து அவர் வெளியே சென்று நோக்கியபோது கரிய திண்ணுடலில் தசைத்திரள் அதிர கங்காளம் மீட்டியபடி குடில்நிரை நடுவே கடந்துசென்ற

காட்டாளனைக் கண்டார். “யாரவன்?” என்று கூவினார். “முன்பு இவன் இங்கு வந்துள்ளான். இவன் காலடிகளை நான் முன்பும் எங்கோ கண்டுள்ளேன். இவ்வோசையையும் நான் அறிவேன்.” கர்த்தமர் “அடர்காட்டின் இருளில் இருந்து வந்தான். வெண்சாம்பல் அணிந்த காலன். அவன் நாயும் துணைவந்த நோயும் அங்கே அமர்ந்துள்ளன” என்றார்.

கையிலிருந்த வேள்விக் கரண்டியைத் தூக்கியபடி “நில்! நில்!” என்று கூவினார் அத்ரி. அவன் திரும்பி அரைக்கணம் நோக்கியபோது அவ்வெறிச்சிரிப்பின் துளியைக் கண்டு திகைத்து பின்னடைந்தார். சௌகந்திகக் காடே அவன் சூர்மணத்தை சூடிக்கொண்டிருந்தது. ஈரமண் மணம், பழைய வியர்வையின் மணம், புதிய விந்துவின் மணம். “யார் இவன்? யார் இவன்?” என்று கூவியபடி அவனைத் தொடர்ந்தோடினார். “நிறுத்துங்கள் அவனை... வாயிலை மூடுங்கள்!” என்றபடி கீழே கிடந்த கழியொன்றை எடுத்துக்கொண்டு முன்னால் பாய்ந்தார்.

கங்காளம் கதிமாற கட்டுப்பசுக்கள் வடங்களை அவிழ்த்துக்கொண்டு குளம்புகள் மண்மிதித்து ஒலிக்க, வால்சுழல, நாக்குநீட்டி கரிய மூக்கைத் துழாவியபடி கூவி அவனைத் தொடரலாயின. வேள்விச்சாலைக்குள் நால்வேதங்களாக உருவகித்து நிறுத்தப்பட்டிருந்த வெண்ணிறமும் செந்நிறமும் சாம்பல்நிறமும் கருநிறமும் கொண்ட பசுக்கள் நான்கும் கட்டறுத்துக் கூவியபடி நடையில் உலைந்த பெருமுலைகளின் நான்கு காம்புகளிலும் பால்துளிகள் ஊறிநின்று துளித்தாடி புழுதியில் சொட்ட, திரள்வயிறு அதிர, வால்சுழல அவனைத் தொடர்ந்தோடின.

அவனை முந்திச்சென்று மறித்த அத்ரி “நில் இழிமகனே, இக்கணமே நில்! என் வேதப்பேராற்றலால் உன்னையும் உன்

குடியையும் பொசுக்கியழிப்பேன்...” என்று கூச்சலிட்டார். அவர் கையில் இருந்து நடுங்கியது விறகுக்கழி. “என் குடிப்பெண்களை இழுத்துச்செல்லும் நீ யார்? எதன்பொருட்டு இங்கு வந்தாய்?” அவன் புன்னகையுடன் “நான் இரவலன். பசிக்கு அன்னமும் என் குடிக்கு பொருளும் இரந்துபெற வந்தேன். எனக்களிக்கப்படும் அனைத்தையும் பெறும் உரிமை கொண்டவன். இவர்கள் எவரையும் நான் அழைக்கவில்லை. எதையும் கவரவுமில்லை. எனக்களிக்கப்பட்டவை இவை. என்னைத் தொடர்பவர் இவர்கள்” என்றான்.

“இது மாயை. இது கீழ்மையால் வல்லமை கொண்ட காட்டாளனின் நுண்சொல் வித்தை... இதை என் தூயவேதத்தால் வெல்வேன்” என்று அத்ரி தன் கையைத் தூக்கினார். அதர்வவேத மந்திரத்தைச் சொல்லி அவன் மேல் தீச்சொல்லிட்டார். அவன் புன்னகையுடன் அவரை நோக்கி “வேதங்கள் இதோ என் பின் வந்து நின்றிருக்கின்றன, முனிவரே” என நான்கு பசுக்களை சுட்டிக்காட்டினான். அவர் திகைத்து மெல்ல கை தழைத்தார்.

அவன் புன்னகையுடன் “தூயவை மட்டும் நிறைந்த உங்கள் வேதக்காட்டில் இப்போது எஞ்சியிருப்பது என்ன, முனிவரே?” என்றான். அவர் தழைந்து கண்ணீர் நனைந்த குரலில் “இது மாயம்... இது வெறும் மாயம்” என்றார். “சரி, மாயத்தை அவிழ்க்கிறேன்” என்று தன் கையறியாது மீட்டிக்கொண்டிருந்த கங்காள ஒலியை நிறுத்தினான். அவனைச் சூழ்ந்திருந்த பெண்கள் நிலைமீண்டு அஞ்சியும் நாணியும் கூவியபடி ஆடைகளை அள்ளி தங்கள் உடல் மறைத்தனர். ஆடையற்றவர் தோள்குறுக்கி நிலத்தில் கூடி அமர்ந்தனர். இளையோர் விழிப்பு

கொண்டு ஒருவரை ஒருவர் நோக்கி வியக்க பசுக்கள் கன்றுகளை நோக்கி குரலெழுப்பின.

“இப்பெண்களில் காட்டாளனைப் புணராத ஒருவரேனும் உளரேல் அழைத்துச்செல்க!” என்றான் அவன். அத்ரி தனக்குப் பின்னால் வந்து கூடிய முனிவர்களை விழிநோக்கி தயங்கி நின்றார். “இவ்விளையோரில் காட்டாளனாக ஒருகணமேனும் ஆகாத ஒருவன் உளன் என்றால் கூட்டிக்கொள்க!” என்று அவன் புன்னகையுடன் சொன்னான். அத்ரியின் உதடுகள் சொற்களின்றி அசைந்தன. “காட்டை நினைத்து அசைபோடாத ஒரு பசுவையேனும் அழைத்துச்சென்றால் நீங்கள் அமுதுகொள்ளலாம்” என்று அவன் மேலும் சொன்னான்.

அத்ரி சினத்துடன் “நீ வேதமுனிவரை இழிவுசெய்கிறாய், கீழ்மகனே” என்று கூவினார். “காட்டாளத்தியாகி உங்கள் மனைவியர் அளித்த கொடையை காட்டாளனாக மாறி நுகராதவர்கள் உங்களில் எவர்? முனிவரே, உங்கள் கையில் இருக்கும் அவ்விறகுக் கட்டையை காட்டாளன் அல்லவா ஏந்தியிருக்கிறான்!” என்று அவன் வெண்பல்நிரை காட்டிச் சிரித்தான். அத்ரி தன் கையிலிருந்த கழியை அப்போதுதான் உணர்ந்தார். அதை கீழே வீசிவிட்டு “ஆம், மானுடராக நாங்கள் மாசுள்ளவர்களே. ஆனால் மாசற்றது எங்கள் சொல்லென நின்றிருக்கும் வேதம். அதுவே எங்கள் அரணும் அரசும் தெய்வமும் ஆகும்” என்றார்.

“காட்டாளன் அறியாத வேதம் இந்நான்கில் ஏதேனும் உள்ளதென்றால் அழைத்துச்செல்க!” என்று அவன் பசுக்களை சுட்டிக்காட்டினான். அத்ரி முன்னால் நின்ற அதர்வம் என்னும் கரிய பசுவை தொடையில் தட்டி அழைத்தார். அது சீறி மூக்கு விடைத்து விழியுருட்டி தன் கொம்புகளைச் சாய்த்தது. அவர்

அஞ்சி பின்னடைந்து சாம்பல்நிறமான சாமம் என்னும் பசுவின் திமிலைத் தொட்டு “என் அன்னையல்லவா?” என்றார். அது கொம்புகளைச் சரித்து குளம்பெடுத்து முன்னால் வைத்தது. செந்நிறப்பசுவான யஜுர் அவரை நோக்கி விழிசரித்து காதுகளை அடித்துக்கொண்டது. வெண்பசுவான ரிக்கை நோக்கி கைகூப்பி “என் தெய்வமே, என்னுடன் வருக!” என்றார் அத்ரி. அது அவரை அறியவே இல்லை.

கண்ணீருடன் “தோற்றேன். இன்றுவரை வென்றேன் என நின்று தருக்கிய அனைத்தையும் முற்றிழந்தேன். இனி நான் உயிர்வாழ்வதற்குப் பொருளில்லை” என்று கூவியபடி அவர் தன் இடையாடையை அவிழ்த்து வடக்குநோக்கித் திரும்ப அவன் அவர் தோள்களில் கையை வைத்தான். “வெங்குருதியையும் விழிநீரையும் அறியாமல் எவரும் வேதத்தை அறிவதில்லை, முனிவரே” என்றான். “நீ யார்? நீ யார்?” என்று அவர் உடல் நடுங்க கூவினார். “காட்டுச்சுனையிலிருந்து காட்டை விலக்குவது எப்படி?” என்றான் அவன் மேலும். “நீ காட்டாளன் அல்ல... நீ காட்டாளன் அல்ல” என்று அவர் கூச்சலிட்டார்.

அவன் விலகிச்செல்ல அவர் அவனைப்பற்றி இழுத்து “சொல், நீ யார்? நீ யார்?” என்றார். “இங்கு ஒருவர் மட்டிலுமே என்னை உண்மையுருவில் கண்டவர். உங்கள் அறத்துணைவி. அவரிடம் கேளுங்கள்” என்றபின் அவன் திரும்பிச் சென்று சுகந்தவாகினியை கடந்தான். அவன் கால்பட்டு ஒரு உருளைக்கல் பெயர்ந்து உருண்டது. நாய் எழுந்து வால்குழைத்து முனகியது. அவன் நடந்துசெல்ல அவனைத் தொடர்ந்து நோயும் சென்றது. அவர்கள் கங்காள ஒலியுடன் நடந்து மரக்கூட்டங்களுக்கிடையே மறைந்தனர்.

அத்ரி திரும்பி தன் குடிலுக்குள் ஓடினார். அங்கே வெளியே நிகழ்ந்தவை எவற்றையும் அறியாமல் அடுமனையில் துவையல் அரைத்துக்கொண்டிருந்த அனசூயையிடம் "சொல், நீ கண்டது என்ன? சொல்!" என்று கூவினார். "என்ன கண்டேன்? எதைக் கேட்கிறீர்கள்?" என்றாள் அவள். "சற்றுமுன் நீ கொண்டுசென்று கொடுத்த பிச்சையை ஏற்ற இரவலன் யார்? சொல்!" என்றார் அவர். "நான் கண்டவன் ஒரு இளஞ்சிறுவன். காட்டுக்குலத்தவன். ஆடையற்ற சிற்றுடலில் சாம்பல் பூசியிருந்தான். இடக்கையில் கப்பரையும் வலக்கையில் கழியும் ஏந்தி இடையமைந்த கங்காளத்தை மீட்டிக்கொண்டிருந்தான். மாசற்ற வெண்பல் சிரிப்பு கொண்ட அவனைக் கண்டதும் என் முலைக்கண்களில் பாலூறியது. இக்கணம்வரை அவனைத்தான் எண்ணிக்கொண்டிருந்தேன்."

அவர் திகைத்து நின்றிருக்க அவள் தொடர்ந்தாள் “அவன் தோள்களில் மானும் மழுவும் பச்சைகுத்தப்பட்டிருந்தன. நெற்றியில் அறிவிழி ஒன்று பொட்டெனத் திறந்திருந்தது. செஞ்சடைக்கற்றையில் பிறைநிலவென வெண்பல் ஒன்றைச் சூடியிருந்தான். அவனுக்கு இருபக்கமும் காலைச்சூரியனும் அணையாத சந்திரனும் நின்றிருக்கக் கண்டேன்.”

அம்பு விடுபட்ட வில் என நாண் அதிர நிலையழிந்து துவண்ட அத்ரி மீண்டெழுந்து “எந்தையே!” என்று கூவியபடி வெளியே ஓடினார். நெஞ்சில் அறைந்தபடி “வந்தவன் அவன். ஆடல்வல்லான் ஆடிச்சென்ற களம் இது. முனிவரே, துணைவரே, நாமறியாத வேதப்பொருளுரைக்க எழுந்தருளியவன் பசுபதி. கபாலன். காரிமுகன், பைரவன், மாவிரதன். அவன் நின்ற மண் இது. அவன் சொல்கேட்ட செவி இது” என்று ஆர்ப்பரித்தார்.

அழுதபடியும் சிரித்தபடியும் ஓடிச்சென்று அவர் அந்த உருளைக்கல்லை எடுத்து அந்த இடத்திலேயே சிவக்குறியாக நிறுவினார். “இது கிராதசிவம்!” என்றார். நால்வேதப்பசுக்களை நான்கு திசையிலும் நிறுத்தி அவற்றின் பால்கறந்து அதில் ஊற்றி முழுக்காட்டினார். “சிவமாகுக! ஓம் சிவமாகுக!” எனக் கூவியபடி கைகூப்பினார்.

வெண்முரசு விவாதங்கள்

நிகழ்காவியம்

# கிராதம் - 5

[ 8 ]

அந்தியிருளத் தொடங்கிய வேளையில் தண்டகாரண்யத்தின் நடுவே ஓடிய மதுவாகினி என்னும் சிற்றோடையின் கரையில் உருண்ட மலைப்பாறை ஒன்றின்மேல் அமர்ந்திருந்த பிச்சாண்டவர் தன்னருகே ஈச்ச ஓலை பின்னிய தழையாடையை இடையில் அணிந்து தரையில் கைகட்டி அமர்ந்திருந்த வைசம்பாயனனிடம் சொன்னார்.

"வடக்கே இன்று அந்த குருநிலை தாருகவனம் என்றழைக்கப்படுகிறது. அதில் அத்ரிமுனிவர் நிறுவிய கிராதமூர்த்தியின் சிவக்குறியைச் சூழ்ந்து கல்லால் ஆன ஆலயம் ஒன்று எழுந்துள்ளது. அறுவகை சைவநெறியினருக்கும் அவ்விடம் முதன்மையானது. அதனருகே ஓடும் சுகந்தவாகினியில் நீராடி எழுந்து எருக்கமலர் தொடுத்துச்சூட்டி கள்ளும் ஊனும் படைத்து கிராததேவனை வழிபட்டு வெண்சாம்பல் பூசி புதிய கப்பரை ஏந்தி வடக்கே உயர்ந்தெழுந்த பனிமலைகளை நோக்கிச் செல்வது அறுவருக்கும் தொல்மரபாக அறியப்பட்டுள்ளது."

"நான் அங்கிருந்து மலையிறங்கி கங்கைப்பெருக்கினூடாக வந்தேன். அறுவகை சமயங்களுடனும் சொற்போரிட்டேன். பன்னிரு நாடுகளில் பிச்சையெடுத்து உண்டேன். என் துணையோருடன் காசிப்பெருநகர் அடைந்தேன். அங்கு இரு பெரும் சுடலைத்துறைகளில் இரவும் பகலும் எரிதாழாது சிதைகள் எரிகின்றன. அத்தழல்களுக்கு நடுவே கையில் முப்புரிவேலும் உடுக்கையும் கொண்டு வெற்றுடல் கோலமாக காலபைரவன் நின்றிருக்கும் ஆலயம் உள்ளது. அவன் கையிலிருந்து உதிர்ந்த கப்பரை குருதி உலராத பலிபீடமாக ஆலய முகப்பில் அமைந்துள்ளது. நாளும் பல்லாயிரவர் பலியும் படையலும் கொண்டு அங்கே வருகின்றனர்.

அவ்வாலயத்தின் முகப்பில் கட்டப்பட்டுள்ள நுழைவுமணி ஓய்ந்து ஒலியடங்கும் கணமே இல்லை.”

“ஆலயத்திற்கு தென்மேற்கே படித்துறையருகில் பார்ப்புக்கொலைப் பேய் தொழுத கையுடன் மூதாட்டி வடிவில் அமர்ந்திருக்கிறாள். கங்கையில் நீராடுவதற்கு முன் அவள் முன்னிலையில் பழைய ஆடைகளை நீக்குவது மரபு. கொண்ட நோய்களையும் பீடைகளையும் அங்கு ஒழித்து புதிதாகப் பிறந்தெழுந்து காலவடிவனை வணங்குகின்றனர். இறந்தோர் ஆடைகளும் அங்கு குவிக்கப்பட்டு எரியூட்டப்படுகின்றன. அக்கரி படிந்த அவள் முகம் சென்றது எதையோ எண்ணியதுபோல தன்னுள் தொலைந்து தோளுக்குள் புதைந்திருக்கும்.”

“காசியிலிருந்து கிளம்பி நான் தென்திசை செல்கிறேன். தென்னகத்தில் ஆதிசிவமென அமைந்த மலை என மாகேந்திரம் சொல்லப்படுகிறது. நஞ்சு சூடிய மாநாகர்களால் ஆளப்படுவது அது. அவர்களால் ஏற்கப்படுபவர்கள் மட்டுமே அதில் ஏறி அம்மலையின் உச்சியில் குவைக்கல் வடிவில் குடிகொள்ளும் சிவத்தை தொட்டுவணங்கமுடியும். அடுத்த சொல் கேட்பதற்கு முன்னர் சென்று அதை வணங்கி மீளும்படி என் ஆசிரியரின் ஆணை. அதைத் தலைக்கொண்டு நான் கிளம்பினேன்” என்றார்.

வைசம்பாயனன் அவர் கால்களையே நோக்கிக்கொண்டிருந்தான். அவை நகங்கள் மண்செறிந்து விரல்கள் காய்ப்பேறி எலும்புக்கணுக்கொண்டு பாலைநிலத்து முள்மரங்களின் வேர்த்தூர் போலிருந்தன. அவை செல்லும் தொலைவை அவன் எண்ணிநோக்கினான். உடல் சரியும் கணம் வரை அவை சென்றுகொண்டுதான் இருக்கும்போலும்.

உடல்சரிந்த பின்னரும் உள்ளம் தான் கொண்ட விசை தீராது மேலும் செல்லும். அங்கே காத்திருப்பது எது?

அவன் எண்ணத்தை உணர்ந்ததுபோல அவர் உரக்க நகைத்து "எது எது என்று தேடிச்செல்பவன் இல்லை இல்லை என்று மறுத்துமறுத்துச் செல்கிறான். அவன் அறியும் பேரிருள் இப்புடவியை ஏழுமுறை மூடியிருக்கிறது. விழியறியும் இருள் சிறுதிரை. உணர்வறியும் இருள் பெருந்திரை. எண்ணம் அறியும் இருள் இயலாத்திரை. இருளுக்கு இருளாவது யோகம் அறியும் இருள்" என்றார். அவன் உள்ளம் நடுங்கத் தொடங்கியது. கைகளை மார்புடன் நன்கு கட்டி இறுக்கிக்கொண்டான்.

"அஞ்சுகிறாயா?" என்று அவர் கேட்டார். "இப்புவியே அஞ்சுபவர் அஞ்சாதோர் என இருவகைப்பட்ட மானுடருக்கானது. தனித்தனிப்பாதைகள்." இருளுக்குள் அவருடைய பற்கள் சிரிப்பில் மின்னி அணைந்தன. "அஞ்சுதல் உன்னை குடும்பத்தவன் ஆக்கும். விழைவுகளால் நிறைக்கும். அள்ளி அள்ளி குவிக்கவைக்கும். அடைந்ததை அறியமுடியாது அகவிழிகளை மூடும். அஞ்சாமை உன்னை யோகியாக்கும். அறியுந்தோறும் அடைவதற்கில்லை என்றாகும்."

மலைப்பாறையில் கால்களை நீட்டிக்கொண்டு அவர் படுத்தார். உடலை ஒவ்வொரு உறுப்பாக எளிதாக்கி பரப்பிக்கொண்டார். விண்மீன்கள் செறிந்த வானை நோக்கி "சிவம்யாம்" என்றார். "ஆம், சிவமேயாம்" என்று மீண்டும் சொன்னார். அவருடைய விழிகள் மூடிக்கொள்வதை அவன் கண்டான். அருகே அவர் கால்களைப் பற்றி அமுக்கியபடி அமர்ந்திருந்தான். அவர் உறுப்புகள் துயிலில் விடுபட்டுச் சரிவதை காணமுடிந்தது.

“ஆசிரியரே...” என அவன் மெல்லிய குரலில் அழைத்தான். “சொல்க!” என்றார் அவர். “சொல்லுங்கள், நான் செல்லும் இடம் என்ன?” அவர் விழிமூடியபடியே புன்னகைத்தார். “நீ வேதம் கற்றுக் கடந்து காவியத்திற்குள் நுழைந்துள்ளாய். காவியம் கடந்து எதில் நுழைவாய்?” என்றார். அவன் அவர் சொற்களுக்காக காத்திருந்தான். “அக்காவியத்தில் நீ தேடுவது என்ன? பொய்யெனும் இனிப்பையா மெய்யெனும் கசப்பையா?” அவன் சீற்றத்துடன் “உண்மையை. அதை மட்டுமே. பிறிதெதையும் இல்லை” என்றான். அவர் உடல் குலுங்க நகைத்தார். “அதைத் தேடிச்சென்ற உன் மூதாதையொருவன் சொன்னான், இல்லை இது இல்லை என. பலமரம் கண்ட தச்சன் அவன். ஒருமரமும் கொள்ளாமல் மீண்டான். நேதி! நேதி! நேதி!”

அடக்கமுடியாத சினம் எழுந்து அவன் உடலை பதறச்செய்தது. அவன் கைகள் வழியாகவே அதை உணர்ந்தவர்போல அவர் மேலும் நகைத்து “எவர் மேல் சினம்? நீ செய்யப்போவது என்ன? யோகியென இங்கிருப்போர் விலக்கி விலக்கி அறிவதை நீ தொகுத்துத் தொகுத்து அறியப்போகிறாய். வேறென்ன?” என்றார். அவர் மீண்டும் நகைத்து “ஒரே இருளை அறிய ஓராயிரம் வழிகள். சிவநடனம். சிவமாயை. சிவப்பேதைமை. அறிவென்றும் அறியாமை என்றும் ஆகி நின்றாடல். அனலொரு கையில் புனலொரு கையிலென பொன்றாப் பேராடல். சிவமேயாம்! சிவமேயாம்!” என்றார். அவன் சினத்துடன் “நான் அறியப்போவது இருளை மட்டும் அல்ல. இவ்வாழ்க்கையை. இதிலுள்ள அனைத்தையும்” என்றான். “அனைத்தையும் ஒன்றெனக் கலந்தால் இருளன்றி வேறேது வரும்? மேலே அவ்விண்மீன்களை தன் மடியில் பரப்பி அமர்ந்திருக்கும் இருள்.”

அவர் துயில்வதுவரை அவன் நோக்கி அமர்ந்திருந்தான். பின்னர் எழுந்து விண்மீன்களை நோக்கினான். அவை இருண்ட சதுப்புக்குள் திகைத்துத்துடித்து புதைந்துகொண்டிருந்தன. திசைதேர் கலையை நன்றாகப் பயின்றிருந்தும்கூட அவனால் விண்மீன்களை கணிக்க முடியவில்லை. அறியாமொழியின் எழுத்துக்கள் என அவை வானில் சிதறிக்கிடந்தன. மீண்டும் மீண்டும் அந்த அலகின்மையை அள்ளமுயன்று தோற்றுச் சலித்தபின் கால்தூக்கி வைத்து திரும்பி காட்டுக்குள் புகுந்தான்.

சீவிடுகளின் ஒலியால் தொகுக்கப்பட்ட இருள்குவைகளும் நிழலுருக்களும் காற்றசைவுகளும் சருகொலிகளும் காலடியோசையும் எதிரொலியுமாக சூழ்ந்திருந்தது தண்டகப்பெருங்காடு. வடபுலக்காடுகள் போல இரவில் அது குளிர்ந்து விரைத்திருக்கவில்லை. அடுமனைக்கூடம் போல மூச்சடைக்கவைக்கும் நீராவி நிறைந்திருந்தது காற்றில். ஆனால் உடல்தொட்ட இலைப்பரப்புகள் குளிர்ந்த ஈரம் கொண்டிருந்தன. எங்கோ ஏதோ உயிர்கள் ஒலிகளென உருமாறி அடர்ந்திருந்தன. இருளே குழைந்து அடிமரங்களாக கிளைகளாக இலைகளாக மாறி உருவென்றும் அருவென்றுமாகி சூழ்ந்திருந்தது. அவன் நடந்தபோது அசைவில் கலைந்து எழுந்தன கொசுப்படைகள். சற்றுநேரத்தில் அவனை மென்துகில்படலமெனச் சூழ்ந்து அவை ரீங்கரித்தன. சேற்றில் பதிந்த காலடியில் இருந்து சிறு தவளைகள் எழுந்து பறந்தன.

அவ்விருளில் நெடுந்தொலைவு செல்லமுடியாதென்று தோன்றியது. எங்காவது மரக்கிளையிலோ பாறையிலோ அமர்ந்து துயில்வதொன்றே வழி. ஆனால் அவன் மிகக்குறைந்த தொலைவே விலகி வந்திருந்தான்.

விழித்தெழுந்ததும் அவர் இயல்பாக அவனை கண்டடைந்துவிடமுடியும். சேற்றில் அவன் காலடித்தடம் பதிந்திருக்கும். அதைக் கண்டு அவன் விலகிச்செல்ல விழைகிறான் என அவர் புரிந்துகொள்ளக்கூடும். இல்லை, வேறெதன்பொருட்டோ சென்றிருக்கிறான் என எண்ணினால் தொடர்ந்து வருவார். மீண்டும் அவர் முகத்தை நோக்க அவனால் இயலாது.

ஆனால் அவர் எதற்கும் தயங்குபவர் அல்ல. தன் மூவேலால் அவன் தலையை அறைந்து பிளக்கலாம். அதன் கூர்முனையை அவன் நெஞ்சில் வைத்து வா என்னுடன் என ஆணையிடலாம். அல்லது அறியாதவர் போல கடந்தும் செல்லலாம். ஆனால் மீண்டும் அவர் அவன் வாழ்க்கையில் வரவேண்டியதில்லை. அவன் வாழ்ந்த உலகம் வேறு. அவன் அங்கு மீண்டு செல்லவிரும்பினான். பொருள் கொண்ட சொற்களின் உலகம். பொருள்கோடலுக்கான வாய்ப்புகள் அனைத்தையும் முன்னரே தன்னுடன் வைத்துக்கொண்ட சொற்களின் உலகம்.

சொற்களின் உலகம்போல உகந்தது எது? சொற்களென வந்தவை அனைத்தும் பல்லாயிரம் முறை முன்னோரால் கையாளப்பட்டவை. அவர்களின் கைவிழுக்கும் மணமும் படிந்தவை. அங்கு புதியதென ஏதுமில்லை. புதியவை என்பவை பழையவற்றின் உடைமாற்றம் மட்டுமே. ஆனால் இக்காடு நேற்று முளைத்தெழுந்தது. இதோ என்னைச் சூழ்ந்திருக்கும் இலைகள் இதுவரை மானுடனைப் பாராதவை. இக்கொசுக்கள் முதல்முறையாக அருந்துகின்றன மானுடக்குருதி. மறுகணம் இவை எவையென்று நான் அறியவே முடியாது.

சொல்கோத்து சொல்கோட்டி சொல்சிதைத்து சொல்மறைத்து மானுடன் உருவாக்கிக்கொள்வதுதான் என்ன?

அறியமுடியாமையின் பெருவெளிக்குள் அறியப்படும் ஒரு சிற்றுலகைத்தானா? அறியப்படாத நூல்கள் உண்டா? இருந்தாலும் அவை அறியத்தக்கவையே என்னும் வாய்ப்பை கொண்டுள்ளவை. எங்கோ எவராலும் ஒருமுறையேனும் வாசிக்கப்படாத நூல் ஒன்று இருக்கலாகுமா? அப்போதும் அது வாசிப்பதற்கென்றே எழுதப்பட்டதாகையால் வாசிக்கத் தக்கதே.

எல்லா சொல்லும் பிறசொல் குறித்ததே. எல்லா சொல்லும் பொருள் குறிப்பது அவ்வாறே. சொல் என்பது ஓர் ஓடை. சொற்றொடர்களின் ஓடை. நூல்களின் ஓடை. அறிதலின் ஓடை. ஒன்று பிறிதை ஆக்கி ஒன்று பிறிதில் ஊறி ஒன்றென்று ஓடும் பெருக்கு. இங்குள்ளவை ஒவ்வொன்றும் தனித்தவை. இந்த இலை அதை அறியாது. இக்கொசு பிறிதை எண்ணாது. இவற்றைக் கோத்திருக்கும் அறியமுடியாமை என்னும் பெருக்கு இருண்டு மேலும் இருண்டு குளிர்ந்து மேலும் குளிர்ந்து அடங்கி மேலும் அடங்கி தன்னுள் தானை முடிவிலாது சுருட்டிக்கொண்டு சூழ்ந்திருக்கையில் இவை என்ன செய்தாலும் எஞ்சுவது பொருளின்மையே.

அவன் நாகத்தின் ஒலியைக் கேட்டான். அதைக் கேட்பதற்கு ஒரு கணம் முன்னரே அவன் உட்புலன் அதை அறிந்து உடல் மயிர்ப்பு கொண்டது. சிலகணங்கள் எங்கிருக்கிறோம் என்பதையே அவன் உணரவில்லை. பின்பு கைகால்கள் அனைத்துத் திசைகளிலும் உதறிக்கொள்ள நின்ற இடத்திலேயே உடல் ததும்பினான். அதன் பின்னரே அது யானை என்றறிந்தான். அவன் முன் பிறைநிலவின் நீர்ப்பாவை என ஒரு வெண்வளைவாக ஒற்றைத் தந்தம் மட்டும் தெரிந்தது. மறுகணம் இருளில் மின்னும் நீர்த்துளி என கண்கள்.

விழிகளால் அன்றி அச்சத்தால் அதன் நீண்டு தரைதொட்டுத் துழாவிய துதிக்கையையும் கண்டுவிட்டான்.

ஆழுள்ளத்தில் கரந்த எண்ணமொன்று அசைவதுபோல அவன் மிகமெல்ல தன் வலக்காலைத் தூக்கி பின்னால் வைத்தான். அடுத்த காலை எடுக்கையில் தன் உடலால் அசைக்கப்பட்ட காற்றின் ஒலியையே அவன் கேட்பதுபோல் உணர்ந்தான். நிறுத்தி நெஞ்சில் செறிக்கப்பட்ட மூச்சு எடைகொண்டு குளிர்நீரென கற்பாறையென ஆயிற்று. மீண்டுமொரு கால் எடுத்துவைத்தபோது விலகிவிடமுடியுமென நம்பிக்கை எழுந்தது. மீண்டுமொரு காலில் விலகிவிட்டோமென்றே எண்ணம் பிறந்தது. மீண்டுமொரு கால் வைத்தபோது விழிகள் கூர்மைகொண்டன. யானையின் செவிகள் இருளை துழாவிக்கொண்டிருந்தன. செவிகளிலும் மத்தகத்திலும் செம்பூக்கள் இல்லை. முற்றுக்கரியுருவம். அதன் உடல் இருள்வெளி கனிந்து திரண்ட சொட்டு என நின்று ததும்பியது.

மீண்டும் இரு அடிகள் எடுத்துவைத்து அப்படியே பின்னால் பாய்ந்து ஓடத்தொடங்கலாமா என அவன் எண்ணினான். யானை துரத்திவருமென்றால் புதர்களில் ஓடுவது அறிவுடைமை அல்ல. பெருமரத்தில் தொற்றி ஏறவேண்டும். அல்லது உருள்பாறை ஒன்றில். அல்லது செங்குத்துப்பள்ளத்தில். அல்லது அதன் முகக்கை எட்டாத மேட்டில். ஒரு கணத்திற்குள் அவன் உள்ளம் அக்காட்டில் அவன் கண்ட அனைத்தையும் தொட்டு தேடிச்சென்று பெரும்பலா மரம் ஒன்றை கண்டுகொண்டது. அதன் கீழ்க்கணு அவன் கையெட்டும் உயரத்தில்தான் இருந்தது. முதற்கிளை யானைமத்தகத்திற்கும் மேலே. இரண்டாம் கிளை அதன் கைமூக்கின் நுனிக்கும் மேலே. அதுதான்.

உடல் ஓடத்தொடங்கி கால்கிளம்புவதற்கு முந்தைய கணத்தில் அவன் அடுத்த சீறலை கேட்டான். விழிதிருப்பி தனக்குப் பின்னால் நின்றிருந்த கரிய யானையை கண்டான். மறுகணமே வலப்பக்கமும் இடப்பக்கமும் யானைகளை கண்டுவிட்டான். மேலுமிரண்டு. மேலுமிரண்டு. எட்டு. எட்டுத்திசையானைகள். எட்டு இருள்மத்தகங்கள். எழுந்த பதினாறு வெண்தந்தங்கள். ஓசையின்றி பெருகி அவை சூழ்ந்தபின்னரே அவன் முதல் யானையை கண்டிருக்கிறான். எண்பெருங்கரியின் நடுநுண்புள்ளி. தன் கால்கள் திகிரியென ஆகி உடல்சுழல்கின்றதா? சூழ்ந்த இருள் சுழல்கின்றதா? எட்டுத்திசையும் ஒற்றைப்பெருவட்டமென்றாகின்றனவா?

அவன் விழித்துக்கொண்டபோது விழிகளுக்குள் காலையொளி புகுந்து கூசவைத்தது. நிழலாட்டத்தை உணர்ந்து திடுக்கிட்டு எழுந்தமர்ந்த பின்னர்தான் யானைகளை நினைவுகூர்ந்தான். அவன் மேல் குனிந்தபடி பிச்சாண்டவர் நின்றிருந்தார். “உயிருடன் இருக்கிறாய்” என்று அவர் சொன்னார். “தொலைவில் உன்னை பார்த்தபோதே தெரிந்துகொண்டேன்.” அவிழ்ந்த தழையாடை அப்பால் கிடந்தது. அவன் உருண்டு அதை கைநீட்டி எடுத்து இடையில் சுற்றிக்கொண்டு எழுந்து நின்று சுற்றிலும் பார்த்தான். திகைப்புடன் “யானைகள்!” என்றான்.

“என்ன?” என்றார் அவர். “எட்டு யானைகள்! அவை என்னை சூழ்ந்துகொண்டன.” அவர் புன்னகையுடன் “வா” என்று அழைத்துச்சென்றார். அவன் இரவில் செறிந்த காடென நினைத்த இடம் சேறுமண்டிய புதர்ப்பரப்பாக இருந்தது. “இதோ நீ நின்றிருந்த இடம்” என அவர் காட்டிய இடத்தில் அவன் காலடித்தடம் இருந்தது. அவர் முன்னால் சென்று “இங்கு

களிறு ஒன்று நின்றிருக்கிறது. பிண்டம் கிடக்கிறது. காலடிகள் உள்ளன. தழை ஒடித்து தின்றிருக்கிறது” என்றார். அவன் ஓடிச்சென்று அந்தத் தடங்களை பார்த்தான். “நான் எட்டு யானைகளை பார்த்தேன்… என் விழிகளால் பார்த்தேன்.” அவர் புன்னகையுடன் “ஆம், அதற்கு வாய்ப்பிருக்கிறது” என்றார்.

“நான் பார்த்தேன்… உண்மையாகவே பார்த்தேன்” என்று கூவியபடி அவன் பாய்ந்து புதர்களுக்குள் ஓடினான். அவன் விழுந்து கிடந்த இடத்தை புதர்கள் வழியாக சுற்றிவந்தான். யானைக்காலடிகளை காணாமல் மீண்டும் மீண்டும் விழிதுழாவி சலித்தான். திரும்பி வந்து மூச்சிரைக்க நின்று “நான் பார்த்தேன்!” என்றான். அவர் “பார்த்திருக்கக்கூடும் என்றுதானே நானும் சொன்னேன்” என்றபின் கனிவுடன் புன்னகைத்து அவன் தோளைத்தொட்டு “வருக!” என்றார்.

**[ 9 ]**

சௌகந்திகத்திற்கு வந்த கிராதன் அங்கிருந்து சென்றபின்னரும் அவன் சூர் அங்கே எஞ்சியிருந்தது. தேவதாரு மரங்களின் காற்று சுழன்று வீசும் ஒரு கணத்தில் அதை மூக்கு உணர்ந்தது. வேள்விப்புகையின் இன்மணத்தின் உள்ளே அது மறைந்திருந்தது. முனிவர்கள் காமத்தின் ஆழ்தருணத்தில் தங்கள் மனைவியரின் உடலில் அதை உணர்ந்தனர். அதை அறிந்ததுமே அனைத்தும் மறைந்து அவன் நினைவு மட்டும் எழுந்து கண்முன் நின்றது. மெய்ப்பு கொண்டு எழுந்து திசைகளை நோக்கி பதைத்தனர். “இங்குள்ள அனைத்திலும் அவன் எப்படி ஊடுருவ முடியும்?” என்றார் கனகர். “அத்தனை வேள்விகளும் மகாருத்ரம் ஆனது எப்படி? அனைத்து வேதச்சொற்களும் ருத்ரமாக ஒலிப்பது எப்படி?”

“நாம் காட்டாளர்கள் அல்ல” என்று சூத்ரகர் சொன்னார். “காட்டின் வேர்களை உண்கின்றன பன்றிகள். தண்டை உண்கின்றன யானைகள். இலைகளை மான்கள். கனிகளை குரங்குகள். நாம் மலரில் ஊறிய தேனை உண்பவர்கள். ஆம், காட்டின் உப்பும் சூரும் கொண்டதே அதுவும். அதுவே காட்டின் சாரம். தோழரே, வண்ணத்துப்பூச்சிகளே காட்டை அறிந்தவை. அவற்றின் சிறகிலேறிப் பறக்கிறது காடு. நாம் வேதநுண்சொல்லை மட்டுமே அறியவேண்டியவர்கள். இந்தக் கொடுஞ்சூரால் அதை நாம் இழக்கிறோம்.” குருநிலையின் எட்டு முதன்மை முனிவர்கள் தங்களுக்குள் ஒன்றாகி அதைப்பற்றி பேசிக்கொண்டனர். பேசப்பேச சினமும் துயரும் கொண்டு ஒன்றுதிரண்டனர்.

அவர்கள் அதை அத்ரியிடம் சொன்னார்கள். அவர் விழிசொக்கும் பெரும்போதையிலென இருந்தார். “ஆம், நானும் அறிகிறேன் அந்த மணத்தை. கருக்குழந்தையின் குருதி போல, புதிய கிழங்கில் மண் போல, மழைநீரில் முகில்போல அது மணக்கிறது. அதன் ஊர்திகளே இவையனைத்தும்” என்றார். அவர்கள் சோர்ந்த முகத்துடன் எழுந்தனர். “இவரிடம் சொல்லிப்பயனில்லை. தன்னை இழந்துவிட்டார்” என்றார் கருணர். “அவர் அறிந்த ஒன்றை நாம் அறியவில்லை என்று பொருளா இதற்கு?” என்றார் கனகர். “தன்னை இழந்தபின் அறிந்தாலென்ன அறியாவிட்டாலென்ன?” என்றார் கர்த்தமர்.

“வந்தவன் யார்?” என்றார் கனகர். “நாம் அவனை நேரில் கண்டோம். இரந்துண்ணும் காட்டாளன். அவனிடம் காடுகள் தங்கள் இருளுக்குள் தேக்கிவைத்துள்ள மாயம் ஒன்றிருந்தது. சற்றுநேரம் நம் கண்களைக் கட்ட அவனால் முடிந்தது. பிறிதென்ன?” சூத்ரகர் “தன் காட்டுத்தெய்வத்தை நம்

ஆசிரியரின் நெஞ்சில் நிறுத்திவிட்டுச் சென்றான். இதோ நம் குருநிலை வாயிலில் கல்லுருவாக நின்று பூசெய்கை கொள்கிறது அது" என்றார். "அவன் நம் மீது ஏவப்பட்டவன், ஐயமே இல்லை" என்றார் அஸ்வகர்.

"சூழ்ந்திருக்கிறது காடு. நோயும் கொலையும் குடிகொள்ளும் வன்னிலம் அது. அதை விலக்கியே இவ்வேலியை நம் குருநிலைக்குச் சுற்றிலும் அமைத்தனர் முன்னோர். அந்த வேலியை நாமே திறந்தோம். அவனை உள்ளே விட்டதே பெரும்பிழை" என்றார் கனகர். "அவன் இரவலன்" என்றார் சூத்ரகர். "ஆம், ஆனால் காட்டாளர் நம் எதிரிகள். இரவலராகவும் இங்கொரு வேதமறிந்த அந்தணன் மட்டுமே உட்புக முடியும் என்று நெறியிருந்தது அல்லவா? அதை எப்போது மீறினோம்?" அவர்கள் அமைதியடைந்தனர். "என்றோ ஒரு இடத்தில் நாம் நம்மை நம் முன்னோரைவிடப் பெரியவர்களாக எண்ணிக்கொண்டோமா? அதன் விளைவைத்தான் சுமக்கிறோமா?"

"ஆயிரம் ஆண்டுகாலம் வேதச்சொல் கேட்டு தூயமணம் கொண்டு நின்றிருந்த தேவதாருக்களில் மலநாற்றம் கலந்துவிட்டிருக்கிறது. வேதச்சொல் கொண்டு கூவிய பசுக்களின் அகிடுகளில் குருதிச்சுவை கலந்த பால் சுரக்கிறது" என்றார் கனகர். "நாம் நம்மை இழந்துவிட்டோம். இந்தக் காட்டாளரின் கல்தெய்வத்திற்குப் பூசைசெய்யவா தேவதாருக்கள் மணம் கொள்கின்றன? இதன் மேல் ஊற்றவா நம் பசுக்கள் அமுதூறுகின்றன? இதை வழுத்தவா வேதச்சொல் எடுக்கிறோம்?"

நாளுக்குநாள் அவர்களின் அச்சமும் விலக்கமும் கூடிவந்தன. முதலில் மாறிமாறி அதைப் பேசிக்கொண்டிருந்தவர்கள்

சொல்தேய்ந்து அமைதியடைந்தார்கள். சொல்லப்படாதபோது அவர்கள் ஒவ்வொருவரின் உள்ளத்திலும் அது பேருருக்கொண்டு வளர்ந்தது. அதை எதிர்கொண்டு நோக்கவே அவர்கள் அஞ்சினர். எனவே அதன்மேல் எண்ணங்களையும் செயல்களையும் அள்ளிப்போட்டு மூடி அழுத்தினர். உள்ளூறி வளர்ந்து அவர்களின் குருதியில் கலந்தது. அவர்களின் விரல்நுனிகளில் துடித்தது. அவர்களின் காலடிச்சுவடுகளில் பதிந்துகிடந்தது. அவர்கள் ஒவ்வொருவரும் பிறர் காலடிகளை உடனே அடையாளம் கண்டுகொண்டனர்.

ஒருநாள் தாருகக்காட்டுக்கு கூன்விழுந்து ஒடுங்கிய சிற்றுடலும் வெண்ணிற விழிகளும் உடைந்து பரவிய கரிய பற்களும் கொண்ட வைதிகர் ஒருவர் தன் இரு மாணவர்களுடன் வந்தார். தொலைவில் வரும்போதே நடையின் அசைவால் அவரை வேறுபடுத்தி நோக்கி நின்று கூர்ந்தனர். அருகணைந்ததும் அவருடைய முதன்மை மாணவனாகிய கரிய நெடிய இளைஞன் “எங்கள் ஆசிரியர் அதர்வத்தைக் கைப்பற்றிய பெருவைதிகர். இவ்வழி செல்லும்போது இக்குருநிலையைப்பற்றி அறிந்தோம். ஓய்வுகொண்டு செல்ல விழைகிறோம். அவரை அடிபணிந்து அருள்பெறும் நல்வாய்ப்பை உங்களுக்கு அளிக்கிறோம்” என்றான்.

அவர்கள் திகைப்புகொண்டாலும் அச்சொல்லில் இருந்த முனைப்பே அதை ஏற்கச்செய்தது. கனகர் “எங்கள் குருநிலைக்கு வருக, அதர்வ வைதிகரே!” என்றார். வெளிறிய குறிய உடல்கொண்டிருந்த இரண்டாவது மாணவன் “இக்குருநிலையின் தலைவரே வாயிலில் வந்து எங்கள் ஆசிரியரை வரவேற்கவேண்டுமென்பது மரபு” என்றான். “அவ்வண்ணமே” என்று அஸ்வகர் திரும்பி உள்ளே ஓடினார். அத்ரிமுனிவர் தன் இரு மாணவர்களுடன் வந்து வாயிலில் நின்று வரவேற்று அதர்வ வைதிகரை உள்ளே அழைத்துச்சென்றார்.

மகாகாளர் என்று பெயர்கொண்டிருந்த அவர் வந்த முதல்நாள் முதலே அங்குள்ள அனைவராலும் வெறுக்கப்பட்டார். வெறுக்கப்படுவதற்கென்றே ஒவ்வொன்றையும் செய்பவர் போலிருந்தார். எப்போதும் மூக்கையும் காதையும் குடைந்து முகர்ந்து நோக்கினார். அக்குள்களை சொறிந்தார். அனைத்துப் பெண்களையும் அவர்களின் முலைகளிலும் இடைக்கீழும் நேர்நோக்கில் உற்றுநோக்கினார். அவர்கள் திகைத்து அவர் விழிகளை நோக்கினால் கண்கள் சுருங்க இளித்தார். உணவை இடக்கையால் அள்ளி வாயிலிட்டு நாய்போல் ஓசையெழ தின்றார். அவ்விரல்களை ஒவ்வொன்றாக நக்கியபின் இலையையும் வழித்து நக்கினார்.

உணவுண்ணும் இடத்திலேயே காலைத்தூக்கி வயிற்றுவளி வெளியிட்டார். அவ்வோசைக்கு அவரே மகிழ்ந்து மாணவர்களை நோக்கி சிரித்தார். அடிக்கடி ஏப்பம் விட்டு வயிற்றைத்தடவி முகம்சுளித்து மாணவர்களை கீழ்ச்சொற்களால் வசைபாடினார். அவர் இருக்குமிடத்திற்கே எவரும் செல்லாமலானார்கள். அவர் அங்கிருப்பதையே

எண்ணவும் தவிர்த்தனர். குருநிலையின் வேள்விக்கூடத்திற்கும் சொல்கூடும் அவைக்கும் அவர் வந்தமரும்போது அவர் அமரக்கூடும் இடத்தை முன்னரே உய்த்தறிந்து அங்கிருந்தோர் விரல்தொடுமிடத்தில் சுனைமீன்கூட்டம் போல விலகிக்கொண்டனர்.

ஒருநாள் சுகந்தவாகினியில் நீராடி எழுந்த கனகர் மரவுரியை உதறும்போது எழுந்த எண்ணம் ஒன்றால் திகைத்து அசையாமல் நின்றார். உள்ளத்தின் படபடப்பு ஓய்ந்ததும் தன் தோழர்களிடம் திரும்பி “ஒருவேளை இவர்தான் நமக்காக வந்தவரோ?” என்றார். “யார்?” என்றார் அஸ்வகர். “இந்த அதர்வர். இவர் அபிசாரவேள்வி செய்யக்கற்றவர். நாம் எண்ணியது ஈடேற இவரை அனுப்பியதோ ஊழ்?” அவர் சொல்லிச்செல்வதற்குள்ளாகவே அவர்கள் அங்கு சென்றுவிட்டிருந்தனர். ஆனால் அவ்வெண்ணத்தை அவர்களே தங்களுக்குள் மறுத்துக்கொண்டார்கள். ஒன்றும் சொல்லாமல் ஒருவரை ஒருவர் நோக்கினர்.

கருணர் “ஆனால் இவர் இழிகுணத்தவர். இவரிடம் என்ன ஆற்றல் இருக்கக்கூடும்?” என்றார். அதன் மறுமொழியை அவரே அறிந்திருந்தார். கனகர் அந்த எதிர்ப்பால் ஆற்றல்கொண்டு “நமக்குத் தேவை இழிவின் ஆற்றல்தான். அந்த கல்லாக் காட்டாளன் முன் நம் சிறப்புகள் செயலற்றதைத்தான் கண்டோமே! அவனை வெல்ல இவரால்தான் இயலும்” என்றார். “இவர் கற்றது நாமறிந்த நால்வேதம் அல்ல. கிருஷ்ணசாகையுடன் அதர்வம் நம் எண்ணத்திற்கெல்லாம் அப்பாற்பட்டது. அது கீழ்மையின் உச்சம் என்கிறார்கள். அதன் சொற்கள் எழுந்தால் பாதாளநாகங்கள் விழியொளியும் மூச்சொலியுமாக எழுந்து வந்து நெளியும்.

ஆழுலக இருள்மூர்த்திகள் சிறகுகொண்டு வந்து சூழ்வார்கள். இவர் அவர்களின் உலகில் வாழ்கிறார்."

"ஆம், இவரே" என்றார் சூத்ரகர். "இவரைக் கண்டதுமே நான் அதைத்தான் நினைத்தேன்." கர்த்தமர் "இல்லையேல் இவரே நம்மைத்தேடி வரவேண்டியதில்லை" என்றார். மிகவிரைவிலேயே அவர்கள் கருத்தொருமித்தனர். "ஆம், இவரிடமே பேசுவோம். இவர் விழைவதை நாம் அளிப்போம்" என்றார் அஸ்வகர். "நாம் என்ன விழைகிறோம்?" என்றார் சூத்ரகர். அதை அவர்கள் அதுவரை எண்ணவில்லை என்பதனால் சற்று தயங்கினர். "நாம் விழைவது வெற்றியை" என்றார் கனகர். "அந்தக் காட்டாளனை முழுதும் வென்றடக்கவேண்டும். அவன் இங்கு அடைந்துசென்ற வெற்றியின் கெடுமணமே நம்மைச் சூழ்ந்துள்ளது. தோற்று அவன் ஆணவம் மடங்குகையில் இந்த நாற்றமும் அகலும்."

"அவனை வேதமே வெல்லவேண்டும்" என்று அஸ்வகர் கூவியபடி கனகரின் அருகே வந்தார். "வேதமென்பது மலர்மட்டுமல்ல, சேற்றை உண்ணும் வேரும்கூடத்தான் என அந்தக் கிராதன் அறியட்டும்." கனகர் "ஆம், அதர்வம் காட்டாளர்களின் சொல்லில் இருந்து அள்ளப்பட்டது. ஆயிரம் மடங்கு ஆற்றல் ஏற்றப்பட்டது. காட்டுக்கீழ்மையால் உறைகுத்தப்பட்ட பாற்கடல் அது என்கின்றது பிர஁ப்பவசூத்ரம். அந்த நஞ்சை அவன் எதிர்கொள்ளட்டும்" என்றார்.

அத்தனை விசையுடன் சொல்லப்பட்டதும் அவர்கள் அதன் வீச்சை உள்ளத்தால் உணர்ந்து அமைதிகொண்டார்கள். ஒருவரை ஒருவர் நோக்காமல் முற்றிலும் தனித்து நின்றிருந்தார்கள். கனகர் தன் மரவுரியை மீண்டும் உதறிவிட்டு "உங்களுக்கு ஒப்புதலென்றால் நானே அவரிடம் சென்று

பேசுகிறேன்” என்றார். “ஆம், தாங்களே பேசுங்கள்” என்றார் சூத்ரகர். பிறர் தலையாட்டினர்.

[வெண்முரசு விவாதங்கள்]

[நிகழ்காவியம்]

# கிராதம் - 6

**[ 10 ]**

முனிவர்கள் கூடிவந்து தன்னிடம் சொன்னதைக் கேட்டு மகாகாளர் மூக்கிலிட்ட கையை குடைந்தபடி தலைகுனிந்து அமர்ந்திருந்தார். அவர் அருகே நின்ற முதல் மாணவன் உரத்தகுரலில் “நாங்கள் நேற்றே கிளம்புவதாக இருந்தோம். எங்கள் ஆசிரியர் மகதமன்னரைக் காணச் செல்லவேண்டியிருக்கிறது. இங்கு நாங்கள் தங்குவது இயலாதது” என்றான். “மேலும் நாங்கள் பெற்றுக்கொள்வது பொன்னும் மணியும் மட்டுமே. அதை அளிக்க வைதிகரால் இயலாது” என்றான் இரண்டாவது மாணவன். மகாகாளர் தன் மூக்கிலிருந்து உருட்டி எடுத்த அழுக்கை முகர்ந்தபின் “செய்துவிடலாம்” என்றார். அவர்கள் திகைத்து அவரைப் பார்த்தனர்.

அவர் “அவனை நான் அறிவேன்” என்றார். “யார்?” என்றார் கனகர். “இந்த குருநிலையை அழிக்கும்பொருட்டு அனுப்பப்பட்ட மாயாவிதானே?” என்றார் மகாகாளர். புன்னகையுடன் “அவன் அழிப்பவன். அதற்குமேல் அவனுக்கு இலக்கு என ஏதுமில்லை” என்றார். அவர்கள் ஒருவரோடொருவர் விழிகளால் பேசிக்கொண்டபின் கனகர் “நாங்கள் இப்போது பொன்னென

ஏதும் அளிக்கவியலாது. ஆனால் எங்களில் ஒருவர் பாரதவர்ஷத்தின் ஏதேனும் பெருமன்னருக்கு வேள்வி செய்யச் செல்வோம். கிடைக்கும் பொன் அனைத்தையும் உங்களுக்கே அளிப்போம்" என்றார்.

"எனக்கு காணிக்கை என ஏதும் தேவையில்லை" என்று மகாகாளர் சொன்னார். "நான் இதை என் பொருட்டே செய்யலாமென எண்ணுகிறேன்." அவர்கள் மீண்டும் ஒருவரை ஒருவர் நோக்கிக்கொண்டார்கள். "அதைவிட நான் அறிந்தாகவேண்டிய ஒன்று அவனிடம் உள்ளது. அதை அவனைச் சூழ்ந்து சிறைப்பிடிக்காமல் நான் அறியவும் முடியாது." கருணர் "அவனை முன்னரும் எதிர்கொண்டிருக்கிறீர்களா?" என்றார். "அவனை எதிர்கொண்டபடியேதான் இருக்கிறேன்" என்றார் மகாகாளர்.

அவர்கள் நினைத்தது ஈடேறுமென்ற எண்ணத்தை அடைந்தனர். ஆனால் அவ்வெண்ணம் ஆறுதல் அளிக்கவில்லை. அவர்களின் நெஞ்சங்களை பதறச்செய்தது. பின்வாங்கிவிடலாமா என ஒவ்வொருவரும் ஆழத்தில் எண்ணி பிறரை எண்ணி அதை கைவிட்டார்கள். "இருளைக்கொண்டு ஆடுகிறான். அவனுள்ளும் இருக்கும் அவ்விருள். அதையே அவனுக்கு அனுப்புகிறேன். அதை என்ன செய்வான்?" என்றார் மகாகாளர். அவர் என்ன சொல்கிறார் என்று புரியாமல் முனிவர்கள் மாணவர்களை பார்த்தனர். அவர்களும் ஒன்றும் புரியாமல்தான் நின்றுகொண்டிருந்தனர்.

"அபிசார வேள்வியை நடத்த இடம் வேண்டும் அல்லவா? இங்கு நடத்தமுடியாது..." என்றார் கனகர். "அதற்குரிய பொருட்கள் என்னென்ன என்று சொல்லிவிட்டீர்கள் என்றால் இன்றே சேர்த்துக்கொள்ளத் தொடங்குவோம்" என்றார் கருணர்.

“இக்காட்டினுள் ஒரு மலைப்பாறை போதும். எளிய வேள்விக்குரிய நெய்யும் விறகும் தர்ப்பையும் தோலிருக்கைகளும் போதும். பிறிதொன்றும் தேவையில்லை” என்றார் மகாகாளர்.

அவர்கள் திகைப்புடன் நோக்கிக்கொண்டபின் “அபிசாரம் என்றால்....” என்று சொல்லத்தொடங்க “மண்ணிலுள்ள இழிபொருட்களை அளித்து அது செய்யப்படுகிறது. காய்ந்தமலம் முதல் காக்கைச்சிறகுவரை ஆயிரத்தெட்டு பொருட்கள் அதற்குத் தேவையாகின்றன. ஆனால் நான் விண்ணிலுள்ள இழிபொருள் ஒன்றையே அவியாக்கவிருக்கிறேன்” என்றார் மகாகாளர்.

“இது ஒரு தருணம். ஒருவேளை நான் இங்கு வந்ததே அதன்பொருட்டாகவிருக்கலாம்” என்றபின் எழுந்துகொண்டு “நாள் கடந்து நாள் இரவு கருநிலவு. அந்நிசி உகந்தது” என்றார். அவர் நடந்துசென்றபோது திகைத்து நின்றிருந்த அவரது மாணவர்களும் உடன் சென்றனர். “என்ன சொல்கிறார்?” என்றார் சூத்ரகர். “நாமறியாதது. ஆனால் அவரால் முடியும் என நினைக்கிறேன்” என்றார் கனகர். “எப்படி?” என்றார் சூத்ரகர். “அதை சொல்லத்தெரியவில்லை. ஆனால் ஆற்றலை மட்டும் நம்மால் எளிதில் புரிந்துகொள்ளமுடிகிறது” என்றார் கனகர். “நம் அச்சத்தால் அதை அறிகிறோம்.”

கருநிலவுநாளில் அந்தியில் குருநிலையில் அனைத்து வேள்விச்சடங்குகளும் முடிந்தபின் முனிவர் பதினெண்மரும் உணவருந்தாமல் துயிலச்சென்றனர். அனைவரும் துயின்றபின்னர் எழுந்து வெளியே நடந்து இருளுக்குள் ஒன்றுகூடினர். இருள்வழியாகவே சென்று காட்டுக்குள் இருந்த சிறிய பாறையடுக்கு ஒன்றை அடைந்தனர். அதன்மேல்

வெண்ணிற ஆடையாக மகாகாளர் நின்றிருப்பது தெரிந்தது. கனகர் ஒருகணம் உளச்சோர்வுகொண்டார். அதை அவர் உடலசைவு வழியாகவே பிறர் அறிந்து நின்றனர்.

கனகர் “இப்போதுகூட நாம் திரும்பிச்சென்றுவிடமுடியும்” என்றார். பிறர் ஒன்றும் சொல்லவில்லை. இருளுக்குள் அவர்களின் விழிவெண்மைகள் மட்டும் தெரிந்தன. “நாம் எப்போது வேண்டுமானாலும் திரும்பியிருக்கலாமே?” என்று பின்னால் நின்றிருந்த அஸ்வகர் கேட்டார். அவர் முதலில் இருந்தே அஞ்சியவர் போலிருந்தார் என்பதை கனகர் உணர்ந்தார். “இதுவரை வந்துவிட்டோம். இதனாலேயே பாதிப்பங்கு செயலை ஆற்றிவிட்டோம். திரும்பிச்சென்றால் எஞ்சியதை கற்பனையில் ஆற்றியபடி மீதி வாழ்வை வீணாக்குவோம். சென்று செய்து விளைவை எதிர்கொள்வதே நாம் செய்வதற்குகந்தது.”

அது முற்றிலும் உண்மை என அனைவரும் உணர்ந்தனர். ஒன்றும் சொல்லாமல் மேலே சென்றனர். அவர்களை வரவேற்புச்சொல் ஏதுமின்றி மகாகாளர் எதிரேற்றார். அங்கே எளிய நிகர்சதுர வேள்விக்குளம் அமைக்கப்பட்டிருந்தது. அதன் கிழக்கே மேற்குநோக்கி மகாகாளர் அமர்வதற்கான புலித்தோல் இருக்கை. மகாகாளர் அமர்ந்ததும் இரு மாணவர்களும் அவருக்கு இருபக்கமும் பின்னால் அமர்ந்து வேள்விக்கு உதவிசெய்தனர். மகாகாளர் எந்த முகமனும் இல்லாமல் அனலேற்றி நெய்யூற்றி அவியிட்டு வேள்வியைத் தொடங்கினார். அதர்வம் ஒலிக்கத்தொடங்கியது.

மூன்று வேதங்களும் முற்றொதுக்கியவற்றால் ஆன நான்காம் வேதம். கனகர் அதை முன்னரே ஒலியெனக் கேட்டதே இல்லை. அதன் ஒலி ஒத்திசைவற்று இருப்பதாக முதலில்

தோன்றியது. எருதுகள் செல்லும் காலடியோசைபோல. எருதுகளைக் கண்டபின்னர் அவற்றின் ஒசை ஒன்றென்றாகியது. பின்னர் அவர் அந்த ஓசையால் முற்றாக ஈர்க்கப்பட்டார். கல் அலைத்து ஒழுகிய பேரருவியென அது அவர்களை இட்டுச்சென்றது. மலைச்சரிவுகளில் சென்று அடியிலி நோக்கி பொழிந்தது.

எரிகுளத்தில் கதிர் எழுந்து நின்றாடியது. எந்த ஒலியையும் தான் ஏற்று நடிக்கத்தெரிந்தது தழல். அனைத்தையும் நிழல்கொண்டு தன்னுடன் ஆடவைக்கும் மாயம் அறிந்தது. தன்னிலிருந்து எழுந்து பேருருக்கொண்டு தலைமேல் எழுந்து நின்றாடும் அந்நிழலை அவர் நன்கறிந்திருந்தார். அது அவரை அறியாததுபோல் வெறிகொண்டு ஆடியது. காற்று நிழலை அசைத்தது. மரக்கூட்டங்களை நிழல் அசைத்தது.

அனலை மட்டுமே நோக்கியிருந்த மகாகாளரின் விழிகளுக்குள்ளும் அனலெரிந்தது. அவர் கை அவியளிப்பதை நிறுத்தி ஓங்கியபடி காற்றில் நின்றபோது அவர்கள் தம் எண்ணங்கள் அறுந்து அவரை நோக்கினர். அவர் உரத்த குரலில் "இருளெழுக! இருளென எழுக! இருண்டெழுக!" என்று கூவினார். பின்னர் அனலில் கையிலிருந்த இறுதி விறகை எறிந்து "எழுக! எங்குமுள்ளதே எஞ்சுவதே எழுக! எரிவதே அணைவதே எழுக! திகழ்வதே தெரிவதே மறைவதே எழுக! சூழ்க! சூழ்க! சூழ்க!" என்றார்.

கீழே பாறைக்கு அடியில் செறிந்திருந்த மரக்கூட்டங்களுக்கு நடுவே இருள் செறிந்து உருண்டு உருவானதுபோல் ஓர் அசைவை கனகர் கண்டார். அவர் விழிதிரும்பியதுமே தாங்களும் திரும்பிய பிறமுனிவரும் அதைக் கண்டனர்.

[ 11 ]

“தாருகக் காட்டின் எட்டு முனிவர்களால் எட்டுத் திசைகளிலிருந்தும் எட்டு யானைகள் எழுப்பப்பட்டன என்கின்றன தொல்கதைகள்” என்றார் பிச்சாண்டவர். இருள் சூழ்ந்திருந்த இரவில் குளிர்ந்த இருள் எனக் குவிந்தெழுந்த பாறை ஒன்றின் மேல் அவர்கள் அமர்ந்திருந்தனர். “அவை எட்டுத் திசையானைகளாகச் செறிந்த கடுவெளியின் இருளே. அதர்வச்சொல் ஒவ்வொன்றுக்கும் நடுவே நிறைந்திருப்பது அவ்விருளே. இருளைக்கொண்டு இருளை ஏவினார் மகாகாளர். இருள்வேழங்கள் துதிக்கை தூக்கி பிளிறியபடி வந்து அந்த வேள்விக்குண்டத்தை எட்டுத் திசைகளிலும் சூழ்ந்து செவியாட்டி இருளை ஊசலாட்டியபடி நின்றன.”

“மகாகாளர் தன் கையிலிருந்த கங்காளத்தை மீட்டினார். விம்மலென எழுந்த அந்த ஓசையை செவிகோட்டி அவை கூர்ந்தன. அவற்றின் விழிகளென அமைந்த இருட்துளிகள் மின்கொண்டன. அந்தக் கங்காளத்தை அவர் சுழற்றி காட்டில் எறிந்தபோது அவை கொலைப்பிளிறலுடன் காட்டுக்குள் பாய்ந்தன. காட்டுக்குள் நிறைந்திருந்த கங்காளத்தின் ஒலியை அவை கேட்டன. செவிகோட்டி ஒலிதேர்ந்தும் துதிநீட்டி மணம்கொண்டும் அவை காட்டுக்குள் ஊடுருவிச் சென்றன.”

“இருளென இருளில் கரைந்து, இருளிலிருந்து இருட்குவையென பிதுங்கி எழுந்து அவை சென்றன. பிளிறும் பேரிருருள். கங்காளம் மீட்டிச்சென்றுகொண்டிருந்த கிராதனைக் கண்டதும் எட்டும் இணைந்து ஓருருக்கொண்டன. கரியமலைபோல பேருடல் கொண்டு அவனை மறித்தன.”

பிச்சாண்டவர் வைசம்பாயனனை நோக்கி “அக்கரியுரித்தல் நிகழ்ந்த இடமென பன்னிரு இடங்களை நானே கண்டுள்ளேன். பாண்டவர்களை எரித்துக்கொல்ல கௌரவர்கள் முயன்ற வாரணவதம் அதிலொன்று” என்றார். “ஆனால் அது நிகழ்ந்திருக்குமென நான் எண்ணும் ஓர் இடத்தை பின்னர் கண்டேன். இமயமலைச்சரிவில் திரிகர்த்தநாட்டின் மறு எல்லையில் கின்னரர் நாடு தொடங்குமிடத்திலுள்ளது அது. கஜசர்மம் என்று அந்த மலை அழைக்கப்படுகிறது. அதனுள் ஆயிரம்பேர் நின்றிருக்கும் அளவுக்கு பெரிய குகை ஒன்றுள்ளது.”

இளவயதில் நான் எங்கள் எல்லை கடந்து சென்று வேட்டையாடுவதில் விருப்பம் கொண்டிருந்தேன். காட்டெருது ஒன்றை துரத்திச்சென்று வழிதவறி வழிகண்டுபிடிப்பதில் தோற்று மீண்டும் வழிதவறி நான் கஜசர்மத்தை சென்றடைந்தேன். நெடுந்தொலைவிலேயே யானை மத்தகம் போன்ற அந்த மலைப்பாறையைக் கண்டேன். அதன் மேல் மரங்கள் நின்றிருந்தன. அப்படியென்றால் அதற்கருகே நீர்நிலை இருக்கும் என உய்த்து எரியும் விடாயுடன் அதனருகே சென்றேன்.

நீர்நிலை மான்விழிபோல கிடந்தது. நீரள்ளி அருந்தியபோது என் மேல் அம்புகள் குறிவைக்கப்படுவதை கண்டேன். ஒன்றும் செய்வதற்கில்லை என்பதனால் நீரை அள்ளி அருந்தி முடித்து மண்ணில் முகம் பதிய குப்புற விழுந்துகிடந்தேன். அவர்கள் என்னை சூழ்ந்துகொண்டனர். என்னை பிடித்துத் தூக்கி நாரால் கைகளைக் கட்டி இழுத்துச் சென்றனர். அவர்களின் மொழியிலிருந்தும் தோற்றத்திலிருந்தும் என்னைக் கொல்லமாட்டார்கள் என என் ஆழம் உய்த்தறிந்தது. ஆகவே

நான் என்னை முற்றாக அவர்களுக்கு ஒப்படைத்துக்கொண்டேன்.

அவர்கள் அங்குள்ள பதினெட்டு குகைகளிலாக வாழும் தொல்குடி. தங்களை அவர்கள் காலர்கள் என அழைத்துக்கொண்டார்கள். என்னை அங்குள்ள சிறுகுகை ஒன்றில் அடைத்து வைத்தனர். அவர்களின் குடிப்பூசகர் புலித்தோலாடை அணிந்து உடலெங்கும் சாம்பல்பூசி சடைமுடிமேல் பன்றிப்பல்லால் ஆன பிறைநிலவு சூடி கழுத்தில் நாகத்தை மாலையென அணிந்திருந்தார். அவர்கள் அவரை சிவம் என்றனர்.

முழுநிலவுநாள் வரை அங்கேயே என்னை அடைத்து வைத்திருந்தனர். முழுநிலவு எழும்போது அவர் உடலில் எழுந்த சிவம் என்னை அயலான் அல்ல என்று அறிவுறுத்தியதும் என்னை அவர்களில் ஒருவராக சேர்த்துக்கொண்டனர். அவர்களை அறிந்தபின்னர் அங்கிருந்து செல்லலாம் என எண்ணி நான் நான்குமாதகாலம் அவர்களுடன் வாழ்ந்தேன். அவர்களில் ஒரு பெண்ணையும் மணந்துகொண்டேன்.

குடிப்பூசகரான சிவம் முதல்முறை சூர்கொண்டபோது என்னை சிவந்த விழிகளால் நோக்கி “கையிலுள்ளது மண்டை. மண்டையை கையிலேந்தியவன். மண்டை உதிரும் இடமொன்று உண்டு. தேடுக! தேடிச்செல்க!” என்றது. அதன்பொருள் அன்று எனக்குப் புரியவில்லை. நான் அவர்களில் ஒருவராக ஆனபின் ஒவ்வொரு முழுநிலவிலும் என்னை நோக்கி அதையே சொன்னது. “மண்டையைக் கையிலேந்தும் ஊழ்கொண்டவர் சிலரே. ஊழ் கனிக! இருள்பழுத்து சாறு எழுக!”

நான் கிளம்புவதற்கு முந்தைய முழுநிலவில் “ஏழுலகைப் பெய்தாலும் நிறையாதது மண்டை. முடிவுள்ளதொன்றாலும் நிறையாத கலம். முடிவிலி நிறைக்கட்டும் அதை. முடிவிலா கடுவெளி நிறைக்கட்டும் அக்கலத்தை. பெரும்பாழே அதை நிறைக்கட்டும்” என்றது. அன்றுதான் அச்சொற்கள் நான் உணராத பெரும்பொருள் கொண்டவை என்று உணர்ந்தேன். அவரிடம் மறுநாள் அதைப்பற்றி கேட்டேன்.

ஆனால் அவருக்கு அவர் சொன்னது என்னவென்று புரியவில்லை. “நான் ஒன்று காட்டுகிறேன். நான் சொன்னதன் பொருள் அதிலிருந்ததென்றால் நீயே உணர்க!” என்று சொல்லி என்னை மட்டும் உச்சிமலைக்கு அழைத்துச் சென்றார். அங்கு மிக அணுகி ஒரு மலைப்பாறையை சுற்றிவந்த பின்னர்தான் ஒரு குகைவாயில் இருப்பது தெரிந்தது. அதற்குள் சுளுந்தொளியை ஏந்தியபடி என்னை அழைத்துச் சென்றார்.

விந்தையானதொரு கனவென என்னுள் நிறைந்திருக்கும் ஓவியத்தொகையை அங்கே கண்டேன். கருமைபடிந்த கற்சுவர்வளைவில் மின்னும் கருமையால் வரையப்பட்டவை அவ்வோவியங்கள். மெல்ல முதல் யானையை விழி அடையாளம் கண்டதும் யானைகள் தெரியலாயின. பின்னர் மேலும் மேலும் யானைகள். இறுதியில் அவ்விருளே யானைகளாலானதென்று தோன்றியது.

அந்த இருள்பரப்பால் முற்றிலும் சூழப்பட்ட மக்களைக் கண்டேன். அவர்கள் கடுங்குளிரில் என ஒருவரோடொருவர் ஒண்டிக்கொண்டு ஒற்றையுடலாக பாறையொன்றின் அடியில் கூடியிருந்தனர். வானில் இரு மெல்லிய அரைவட்டங்களாக இரு நிலவுகள் வரையப்பட்டிருந்தன. ஒன்று சூரியன் பிறிதொன்று சந்திரன் எனத் தெளிந்தேன்.

கூர்ந்துநோக்கியபோது மரங்கள் இலைகளை இழந்து கிளைகளில் வழிந்து உறைந்து தொங்கிய பனியுடன் நின்றிருக்கக் கண்டேன். இருளுக்குள் இருளாக பனியை வரைந்திருந்தனர். நோக்க நோக்க அச்சூழலே பனிமூடி உறைந்திருப்பதை அறியமுடிந்தது.

அக்கூட்டத்தில் ஒருவன் கரிய வெற்றுடலும் பிடரிமேல் படர்ந்த சடையுமாக எழுந்து முதலில் வந்த பெருவேழத்தை எதிர்கொண்டான். அதன் இரு கொம்புகளைப்பற்றி நடுவே தன் வேலைச் செலுத்தினான். அதைக் கொன்று பிளந்தான். அதன் ஊனை வெட்டியெடுத்து உண்டது அவன் குடி. அவ்வூன்கொழுப்பை எரித்து அனலாக்கி அதைச் சூழ்ந்து அமர்ந்து வெம்மை கொண்டன. அதன் தோலை உரித்து விரித்து அதைப் போர்த்தியபடி உடல்கூட்டி அமர்ந்திருந்தன.

அப்பால் யானைத்தோலை இழுத்துப் போர்த்தியபடி நின்றிருக்கும் அக்குலமூத்தானின் உருவத்தைக் கண்டேன். அதன் மத்தகத்தின் மேல் வலக்கால் ஊன்றி இடக்காலால் அதன் முன்வலக்காலை உதைத்து விலக்கி தலைக்குமேல் எழுந்த இரு கைகளால் அதன் பின்னங்கால்களை பற்றித்தூக்கி அத்தோலை தன்னைச்சூழ அமைத்து விழிகள் வானை நோக்க இதழ்களில் குறுநகையுடன் அவன் நின்றிருந்தான். அவன் காலடியில் வலப்பக்கம் சூரியநிலவும் இடப்பக்கம் சந்திரநிலவும் நின்றிருந்தன. அவன் உடல் செந்நிறத்தழலுருவாக வரையப்பட்டிருந்தது.

சிவம் என்னிடம் “மண்வடிவான அன்னை மகியின் ஆணைப்படி சூரியன் முற்றணைந்த காலம் ஒன்றிருந்தது. அன்று பகல் இருக்கவில்லை. முடிவடையாத இரவொன்றே திகழ்ந்தது. அன்று எங்கள் குலம் அழியாதபடி காக்க

விண்ணிலிருந்து இறங்கி வந்த தெய்வம் இது. இதையே முதற்சிவம் என்கிறோம்” என்றார். நான் அந்த ஓவியத்தையே நோக்கிக்கொண்டிருந்தேன். அம்மூதாதையையே விடியல்கதிரவன் என வரைந்திருக்கிறார்கள் என்று தோன்றியது.

அவன் காலடியின் சிவந்த அழலை செம்பாறைக்குழம்பால் வரைந்திருந்தனர். அச்செம்மை அவன் உடலில் கீழிருந்து மேல் நோக்கி வீசியது. நோக்க நோக்க அனல் வெம்மையை அறியமுடிவதுபோலிருந்தது. அந்த எரியொளி வட்டத்திற்கு அப்பால் இருள். யானைகளாகச் செறிந்து குகைவிளிம்புவரை சென்று மெய்யிருளுடன் முற்றாகக் கலந்தது அது. என்னைச் சூழ்ந்திருக்கும் மதவேழங்களை உடலால் உணர்ந்தேன். செவியசையும் காற்றை. துதிக்கை மூச்சை. அதன் ஈர ஊன்மணத்தை. மரப்பட்டைபோன்ற உடல்கள் உரசிக்கொள்ளும் ஒலியை.

“நெடுநாட்கள் அக்காட்சி என் நினைவுக்குள் இருந்தது. பின் அது கனவுக்குள் சென்று வளர்ந்தது. நான் ஒருபோதும் அதிலிருந்து விடுபட்டதே இல்லை” என்றார் பிச்சாண்டவர். “இந்த நிறையாக் கபாலம் என் கைக்கு வந்தபின் அதை மீண்டும் கண்டேன். நாம் நம் விலங்கியல்பால் சென்றுகொண்டிருக்கும் பாதையில் பெருநிழலென தொடர்ந்து வருகிறது. நனவின் இடைவெளியில் அதை நாம் ஓர் எச்சரிக்கை உணர்வு என அறியக்கூடும். கனவுகளில் அச்சமென காணவும் கூடும். ஆனால் மெய்மை விழைந்து திரும்பி நடக்கத் தொடங்கும்போது நேர் எதிரில் காண்கிறோம்.”

“நான் அதை எதிரில் கண்டநாளை நினைவுறுகிறேன்” என்று பிச்சாண்டவர் தொடர்ந்தார். “அஞ்சிக் கூச்சலிட்டபடி எழுந்து

நின்றேன். என் உடலில் இருந்து நீரும் மலமும் வெளியேறிக்கொண்டிருந்த வெம்மையை உணர்ந்தேன். தடுக்கி விழுந்து எழுந்து ஓடி என் ஆசிரியர் காலடியில் விழுந்தேன். யானை யானை என்று கூவினேன். 'மரத்தை மறைக்கும் மாமதம்' என அவர் புன்னகை செய்தார். என்னை எழுப்பி அவர் அருகே அமரச்செய்து என் ஆயிரமிதழ்த் தாமரையின் மையத்தை தன் சுட்டுவிரலால் தொட்டார். நான் அந்த யானையை என் முன் மிக அருகே கண்டேன்."

"இரு நிலவுகள் எழும் யோகப்பெருநிலை" என்று பிச்சாண்டவர் சொன்னார். "அதைப் பிளந்தெழவேண்டுமென்பதே இலக்கு. கரியுரித்தெழும் கனலால் விடியும் காலை அது. நீளிருள் நீங்கும் தருணம்." வைசம்பாயனன் அவரை நோக்கியபடி கனவிலென அமர்ந்திருந்தான். "எண்கரியை நீ கண்டுவிட்டாய். நன்று. அவை ஒன்றெனத் திரண்டு உன்முன் எழுக!" என்றபின் அவர் தன் சுட்டுவிரலை நீட்டி அவன் நெற்றிப்பொட்டை தொட்டார். அவன் விழிகள் எடைகொண்டவைபோல சரிந்தன. என்ன நிகழ்கிறது என அவன் உள்ளம் விழிப்புகொள்ள முயலும்தோறும் சித்தம் சரிந்து மறைந்தது. விழிகளுக்குள் இருள் ஊறி நிறைந்து மூடியது.

இருளின் மெல்லிய அசைவை அவன் மிக அருகெனக் கண்டான். அது ஒரு தோல்சிலிர்ப்பு. இருளில் விரிசல்கோடுகள் என வரிகள். யானைத்தோல். மூக்கு தொடுமளவுக்கு அண்மையில் அதை நோக்கிக்கொண்டு நின்றான். பின்னர் அகன்று அகன்று அதை முழுமையாகக் கண்டான். மிகப்பெரிய மத்தகம். இரு பேருருளைகள். கீழே அவன் ஒரு வெண்தந்தத்தைக் கண்டான். அது நீரில் பிறையென அலையடித்தது.

“சிவோஹம்” என்னும் ஒலி கேட்டு விழித்துக்கொண்டான். அவர் அவன் விழிகளைக் கூர்ந்து நோக்கி “என்ன கண்டாய்?” என்றார். “யானை” என்றான். அவர் “சொல்!” என்றார். “ஒற்றைப் பெருந்தந்தம்” என்றான். “ஒன்றா?” என்றார். “ஆம், அது நீர்ப்பாவையென்றாடியது.” அவர் சிலகணங்கள் அவனைக் கூர்ந்து நோக்கியபடி “வானில் நிலவு இருக்கவில்லையா?” என்றார். “இல்லை” என்றான் “அதன் பாவை மட்டுமே.”

அவர் எழுந்துகொண்டு “நீ செல்லும் திசை வேறு” என்றார். “ஆசிரியரே...” என அவன் எழுந்துகொண்டான். “நீ கனவுகளினூடாக அங்கு சென்றடைபவன். சொல்லை அளைபவன். உன் ஆசிரியன் ஒற்றைநிலவில் விழிதிறந்திருக்கும் ஒருவன்.” அவர் தன் சூலத்தை ஊன்றியபோது எலும்புமணிகள் குலுங்கின. “ஆசிரியரே, என்னை கைவிடாதீர்கள்... என்னை அழைத்துச்செல்லுங்கள்” என்று அவன் கூவியபடி அவர் கால்களைப் பற்றினான்.

அவர் தன்னை விடுவித்துக்கொண்டு நடந்து இருளுக்குள் சென்று மறைந்தார். அவரை உள்ளிழுத்துக்கொண்டு இருள் நலுங்காமல் நிறைந்து சூழ்ந்திருந்தது. தன் ஆடைக்குள் இருந்து பாவையொன்றை எடுத்துக்காட்டி மறைத்துக்கொண்ட அன்னை. அவன் அதையே நோக்கிக்கொண்டிருந்தான். நீள்மூச்சுகளாக விட்டுக்கொண்டு நெடுநேரம் அமர்ந்து பின் களைத்து படுத்துக்கொண்டான். அவ்வண்ணமே விழிமயங்கித் துயில்கொண்டான்.

பறவைக்குரல் கேட்டு அவன் விழித்துக்கொண்டான். வாயைத் துடைத்தபடி எழுந்தமர்ந்தபோது அவன் உடலில் இருந்து எழுந்து பறந்தது கொசுப்படலம். செந்நிறத் தீற்றலாகத் தெரிந்த கீழ்வான் சரிவை நோக்கியபடி எழுந்து நின்றான். குளிருக்கு

கைகளை கட்டிக்கொண்டான். முதற்பறவைகளின் தனிக்குரல்கள் இருளில் ஒலித்துக்கொண்டிருந்தன. சாம்பல்வானப் பின்னணியில் எழுந்து சுழன்று மீண்டும் இறங்கிய சிறிய பறவைகளைக் கண்டான்.



வான்சிவப்பு அடர்ந்து விரிந்தது. ஓடைகளாக செவ்வொளி வழிந்து பரவியது. இருண்டபரப்பை கிழித்துப் போர்த்தியபடி எழுந்த செவ்வுருவை அவன் கண்டான். அதன் தெற்கு

மூலையில் மெலிந்த வெண்பிறை வெள்ளிக்கம்பி போல வளைந்து நின்றிருந்தது.

[வெண்முரசு விவாதங்கள்]

[நிகழ்காவியம்]

# கிராதம் - 7

## பகுதி இரண்டு : திசைசூழ் செலவு

### [ 1 ]

உஜ்ஜயினி நகரின் தெற்குபுறக் கோட்டைக்கு வெளியே முதல் அன்னசாலை அமைந்திருந்தது. தாழ்வான பழைய கோட்டையில் இருந்து கிளம்பி தெற்கே விரிந்திருக்கும் தண்டகாரண்யம் நோக்கிச் செல்லும் பெருஞ்சாலை இரவுக்காற்றால் தடங்கள் அழிக்கப்பட்டு அன்று புதிதெனப் பிறந்திருந்தது. இருமருங்கும் அரண் அமைத்திருந்த பெருமரங்கள் காலைக்காற்றில் இருளுக்குள் சலசலத்தன. அன்னசாலைக்குள் எரிந்த விளக்கொளி அதன் அழிச்சாளரங்கள் வழியாக செந்நிறப்பட்டு விரிப்பு போல முற்றத்தில் நீள்சதுர வடிவில் விழுந்து கிடந்தது.

அன்னசாலையின் சரிந்த மரப்பட்டைக்கூரையின் இடுக்குகள் வழியாக எழுந்த விளக்கொளியில் அடுமனைப்புகை அசைந்தது. அங்கு அமர்ந்து உண்பவர்களுக்கு புலரிக்கு பின்னரே உணவளிக்கப்பட்டது. முதற்காலையிலேயே கோட்டையிலிருந்து வெளியேறிச் செல்பவர்களுக்குரிய உலர்உணவுதான் அப்போது அளிக்கப்பட்டது. கோட்டையின்

விளிம்பை ஒட்டிச்சென்று அகழியில் பொழிந்த இரு நீரோடைகளில் நீராடிய வணிகர்கள் மெல்லிய குரலில் பேசிக்கொண்டபடி அன்னசாலை நோக்கிச் சென்று கூடினர்.

முகப்பிலிருந்த பெருமுற்றத்தில் கோட்டை மூடிய பின்னர் வந்து சேரும் வணிகர்களின் ஏவலரும் விலங்குகளும் தங்குவதற்கான அகன்ற வெளி இருந்தது. அங்கே நூற்றுக்கணக்கான வண்டிகளும் குதிரைகளும் அத்திரிகளும் காளைகளும் அவிழ்க்கப்பட்டு வண்டிச்சக்கரங்களிலும் தறிகளிலும் கட்டப்பட்டிருந்தன. காலைச் சந்தடியில் விழித்துக்கொண்டு எழுந்த விலங்குகள் வால்சுழற்றி சாணியிட்டு நீர்பெய்தபின் இரவில் மென்று மிச்சமிருந்த வைக்கோலை கடிக்கத் தொடங்கின. கழுத்துமணியோசைகள் களமெங்கும் ஒலித்தன. பழைய மரவுரிகளால் உடலை முற்றிலும் மூடி மூட்டைகள் போல ஒடுங்கித் துயின்றுகொண்டிருந்த பணியாட்கள் அவ்வொலிக்கு மேலும் உடலை குறுக்கிக் கொண்டார்கள்.

முற்றத்தின் இருபக்கங்களிலும் நண்டுக்கொடுக்குபோல நீண்ட கொட்டகைநிரையில் வரிசையாக இடப்பட்ட நார்க்கட்டில்களில் தலையருகே பணப்பொதிகளுடன் அயல்வணிகர்கள் துயின்றுகொண்டிருந்தனர். அவர்களின் உடைமைகளைக் காக்கும் காவலர் கைகளில் உருவிய வாள்களுடன் தலைமாட்டில் உறங்காமல் அமர்ந்திருந்தனர். காலையில் கிளம்பிச்செல்லும் வணிகர்கள் சிலர் கோட்டைக்குள் இருந்து திட்டிவாயிலினூடாக தங்கள் பொதிகளுடன் வெளிவந்துகொண்டிருந்தனர்.

அன்னசாலையின் மையப்பெருங்கூடத்தில் பலவண்ண உடையணிந்த வணிகர்கள் ஈரக்குழலின் நீர் ஆடைகளில்

சொட்ட, இளங்குளிருக்கு உடல்குறுக்கி நடுங்கியபடி நின்றிருந்தார்கள். கண் தெளியத்தொடங்காத காலையில் வெண்குதிரைகளும் வெளிர்நிற ஆடைகளும் மட்டுமே துலக்கமாகத் தெரிந்தன. உலோகப்பரப்புகள் மட்டும் விண்ணிலிருந்து ஒளியை அள்ளித்தேக்கியிருந்தன. உணவின் மணம் எங்கும் நிறைந்திருந்தது. ஊடாக வடகிழக்கு மூலையில் அமர்ந்திருந்த உருளைப்பிள்ளையாருக்கு முன் காலையில் நடந்து முடிந்திருந்த வேள்விக்கொடையின் எரிநெய் மணமும் எண்ணைக்காரலும் கலந்து வீசியது.

பருப்புடன் சேர்த்து வறுத்துப்பொடித்து நெய்யுடன் உருட்டிய கோதுமை உருளைகளும் வேகவைத்து உலரவைக்கப்பட்ட கிழங்குகளும் வெல்லத்துடன் பொடித்து உருட்டப்பட்ட கொள்ளும் அவலும் வணிகர்களுக்கு வழங்கப்பட்டன. அவற்றை கரியிலைகளில் நன்றாகச் சுற்றிக்கட்டி மேலே பாளைப்பொதியால் மூடி நீர்புகாத பொதிகளாக அளித்தனர். பெற்றுக்கொண்ட வணிகர்கள் அங்கிருந்த வெண்கலக்குடங்களில் தங்கள் நாணயங்களை போட்டுவிட்டு வெளியே சென்றார்கள்.

இசைச்சூதரும் வழிப்போக்கரும் தனிநிரையில் நின்றிருந்தனர். அவர்களுக்குரிய உணவில் உலரச்செய்யப்பட்ட ஊனும் மீனும் வறுத்து இடித்துச் சேர்க்கப்பட்டிருந்தது. அவற்றை நீரும் காற்றும் புகாவண்ணம் கட்டி அளித்தனர். பொதிசூத்திரர்களுக்கு பிறிதொரு இடத்தில் அதே உணவு அளிக்கப்பட்டது. அவர்கள் கோருமளவுக்கு உணவளிக்கவேண்டுமென்று நெறியிருந்தது. அடுத்த அன்னசாலையைக் கணக்கிட்டு அவர்கள் உணவு பெற்றுக்கொண்டார்கள்.

அந்தணருக்கும் முனிவர்களுக்குமுரிய நிரைகளில் அவ்வேளையில் அயல்பயணம் செல்லும் அந்தணர் ஓரிருவரே நின்றிருந்தனர். முனிவர்களென எவருமில்லை. அவர்களுக்கு நெறிநின்று அந்தணர் சமைக்கும் எளிய நோன்புணவு அளிக்கப்பட்டது. வெல்லமோ உப்போ சேர்த்து வறுத்து உருட்டப்பட்ட கோதுமையும் அரிசியும். நெல்லிக்காயும் உப்பும் கலந்த பொடி. அவற்றை வாங்கி அளிப்பவனையும் அரசனையும் வாழ்த்தி அவர்கள் முற்றத்தை அடைந்தனர். நகர்நோக்கித் திரும்பி அந்த மக்களை மும்முறை வாழ்த்திவிட்டு தங்கள் வழிதேர்ந்தனர்.

கையில் வாங்கிய நான்கு பொதிகளையும் கொடிபின்னி அமைத்த தொங்குகூடைக்குள் போட்டு தோளில் இட்டபின் பைலன் திரும்பி நகரை நோக்கினான். அந்நகருக்குள் நுழைந்தோமா என்றே அவனுக்கு ஐயமாக இருந்தது. பன்னிரு நாட்களுக்கு முன்னர்தான் அவன் வடக்கு வாயில் வழியாக உள்ளே நுழைந்தான். அந்நகரின் வேதநிலைகள் நான்கில் தங்கியிருந்தான். மூன்று வேள்விகளில் கலந்துகொண்டான். நான்கு வேதச்சொல்லவைகளில் அமர்ந்தான். பன்னிருநாளும் சொற்களங்களில் ஈடுபட்டிருந்தான். ஆனால் அங்குள்ள எந்தப் பொருளையும் எம்மனிதரையும் தொடாமல் விலகி வெளிச்செல்வதாகத் தோன்றியது.

“அருள், பொருள், புகழ் மூன்றும் திகழ்க! என்றும் நூலோர் நாவில் விளைக! நீடுசெல் கொடிவழிகள் நினைப்பில் பொலிக! ஆம், அவ்வாறே ஆகுக!” என அவன் அந்நகரை வாழ்த்தினான். பின்னர் திரும்பி தெற்குநோக்கிய சாலையில் நடக்கத்தொடங்கினான். சாலையெங்கும் வணிகர்களின் தலைப்பாகைகளின் வண்ணங்களும் வண்டிச் சகடங்களின்

இரும்புப்பட்டைகளும் உலோகக்குமிழ்களும் ஒளிகொண்டு அசைந்தன. மணியோசைகளும் ஆழியரவங்களும் குளம்படிகளும் காலடிகளும் அச்சுரசல்களும் அணிகுலுக்கங்களும் ஆடைச்சரசரப்பும் கலந்து சாலையிருளை நிறைத்துப் பெருகிச் சென்றுகொண்டிருந்தன.

இரவில் அவன் நன்கு துயின்றிருக்கவில்லை. எனவே தலை சுழன்று மெல்லிய குமட்டல் இருந்தது. கால்களும் உறுதியுடன் மண்ணில் படியவில்லை. அந்நகரிலிருந்து கிளம்பும் முடிவையே பின்னிரவில்தான் எடுத்தான். அம்முடிவை நோக்கி அவன் வந்துகொண்டிருப்பதை அவன் அறியவில்லை. எண்ணி உழன்று சலித்து மீண்டும் எழும் எண்ணத்துளி கண்டு அதைச் சென்று தொட்டு அது வளர்ந்து நீண்டு உலகை வளைக்கத் துழாவி ஓய்ந்து சுருள்கையில் மீண்டும் சலித்து புரண்டுபுரண்டு படுத்துக்கொண்டிருந்த ஒருகணம் ஏன் இன்னமும் இங்கிருக்கிறேன் என்ற எண்ணம் எழுந்தது.

ஆம், அங்கு ஏன் இருக்கவேண்டும்? அங்கு என்ன எஞ்சியிருக்கிறது? ஒழிந்த கலம். அல்லது பறவைகள் எழுந்து சென்ற மரம். மிச்சில்கள், எச்சங்கள். வெறும் வாசனைகள். அவன் அக்கணமே எழுந்து தன் ஆடைப்பொதியை எடுத்துக்கொண்டு நுனிக்காலில் நடந்து குடிலின் கதவுப்படலைத் திறந்து வெளியே தேங்கியிருந்த இருட்டுக்குள் இறங்கி அதன் குளிரை உடலெங்கும் ஏற்று நடக்கலானான். எங்கு செல்வதென்று அவன் எண்ணியிருக்கவில்லை. அவன் வந்தது வடக்கிலிருந்து என்பதனால் செல்வது தெற்காகவே இருக்கமுடியுமென கால்கள் முடிவெடுத்தன.

வேதச்சொல்லவையில் அவன் ஆசிரியராக பீடத்தில் அமர்ந்திருந்த பெருவைதிகரான பார்க்கவரிடம் கேட்டான்

“வேதங்கள் விழைவை நிறைவுசெய்கின்றன என்கிறீர்கள், ஆசிரியரே. விழைவை அறிய அவை உதவுகின்றனவா?” அவர் அவனை புருவம் சுளிக்கக் கூர்ந்து நோக்கி “நீ கேட்பது என்னவென்று உணர்கிறாயா?” என்றார். “விடாய்க்கு நீரே நிறைவளிக்கும். விழைவுக்கு விழைபொருளே விடையாகும். தத்துவம் அல்ல.” அவருடைய மாணவர்கள் சிலர் சிரித்தனர்.

“வடக்கே கிருஹ்யபாதம் என்னும் ஓர் ஊரில் வைக்கோற்போர்களும் கூரைகளும் விளைநிலங்களும் தீப்பற்றி எரிந்துகொண்டே இருந்தன, ஆசிரியரே. அங்குள்ளவர்கள் நீரும் மண்ணும் இட்டு அதை அணைத்தனர். அதை அணைப்பதற்கென ஓர் இளைஞர் படையையே உருவாக்கினர். அங்கு சண்டகர் என்னும் முனிவர் சென்றார். மூடர்களே, எதனால் நெருப்பெழுகிறதென்று உணராமல் அதை எத்தனை காலம்தான் அணைத்துக்கொண்டிருப்பீர்கள் என்று கேட்டார். மறுமுறை எரிகோள் நிகழ்கையில் அது எப்படி எங்கிருந்து வருகிறது என நோக்கும்படி ஆணையிட்டார்.”

“அதன்பின் அவர்கள் கண்டடைந்தனர், அவ்வூரின் அருகே காட்டின் விளிம்பில் இருக்கும் கரும்பாறை ஒன்றன் குழியில் அனல் ஊறி அது கொதித்துக் கொண்டிருந்தது. அதன்மேல் விழும் சருகுகள் அனலாயின. அவை பறந்து விழுந்து ஊர் எரிந்தது. அந்த அனல்குழிக்குச் சுற்றும் பாறைகளால் வேலியமைத்துக் காத்தனர். அனலிடர் இல்லாமலாயிற்று” என்று பைலன் சொன்னான். “விழைவின் ஊற்றை அறியாமல் விழைவை வெல்ல முடியாது.”

“ஏன் வெல்லவேண்டும்?” என்று பார்க்கவர் கேட்டார். “பசியும் விடாயும் காமமும் போல விழைவும் மானுடனின் முதலியல்பு. அவனை ஆக்கிய விசைகள் அதில்

தொழிற்படுகின்றன. அதை அடைவதே இன்பம். இன்பம் மானுடருக்கு தெய்வங்களின் கொடை. அவ்வின்பமே மானுடவாழ்க்கையின் பொருள்.”

“விழைவு நிறைவேறுமென்று உறுதியிருக்கும் என்றால் மட்டுமே நீங்கள் சொல்வது மெய். விழைவுகள் அனலென தொட்டவற்றை எல்லாம் உண்டு பெருகுபவை. மாமன்னர்களுக்குக் கூட அவற்றில் சிறுதுளியேனும் நிறைவுறுவதில்லை. நிறைவுறாத விழைவே துயரம். அத்துயரத்தால் மூழ்கடிக்கப்பட்டுள்ளனர் மானுடர். எங்கும் நான் காண்பது அத்துயர் நின்று ததும்பும் முகங்களை மட்டுமே. அத்துயரை வெல்லாமல் மானுடனுக்கு மீட்பில்லை” என்றான் பைலன்.

பார்க்கவர் “வேதவேள்வி அனைத்து விழைவுகளையும் நிறைவுசெய்யும் என்கின்றன முன்னோர் சொற்கள்” என்றார். பைலன் “விழைவுகளை நிறைவுசெய்ய எவற்றாலும் இயலாது, ஆசிரியரே. அவை மூன்று தெய்வங்களுக்கும் மேலே எழுந்து நிற்கும் ஆணவத்தை பீடமாகக் கொண்டவை” என்றான். “இது வேதமறுப்பு. இவ்வேதநிலையில் இத்தகைய சொல்லெழ இடமில்லை” என்று பார்க்கவர் சினத்துடன் சொன்னார்.

பைலன் “அறிந்துக் கடக்காமல் துயரை வெல்ல முடியாது, ஆசிரியரே. மானுடம் துயர் சுமந்து கூன்கொண்டிருக்கிறது. அதற்கு மீட்பென வருவது மெய்யறிவாகவே இருக்க முடியும். அனல்மேல் நெய்பெய்து அணைக்கவியலாது” என்றான். “உன் வயதென்ன?” என்றார் பார்க்கவர். “ஒன்பது” என்றான். “ரிக்வேதத்தை முழுதறிந்த மாவைதிகரான வசு என் தந்தை. அவரிடம் நான் வேதங்களைக் கற்றேன்.” பார்க்கவர்

இகழ்ச்சியுடன் "ஆனால் வாழ்க்கையைக் கற்றுத்தேர்ந்ததுபோலப் பேசுகிறாய்" என்றார்.

"ஆம், வாழ்க்கையையும் கற்றேன். வாழ்க்கையின் அடர்சுருக்கமே காவியங்கள். நான் இரண்டாண்டுகாலம் காவியங்களில் ஆழ்ந்திருந்தேன்" என்றான். பார்க்கவர் "அக்காவியங்களின் மையப்பொருள் வேதமே என்றறியாமல் நீ கற்றதுதான் என்ன?" என்றார். பைலன் சலிப்புடன் தலையை அசைத்து "நான் வேதத்தை மறுக்கவில்லை. வேதத்தால் பயன்கொள்வதெப்படி என்றே வினவுகிறேன். வழிபட்டு இறையெழுப்பி அருள்கொள்ளவேண்டிய தெய்வச்சிலைகளை நீங்கள் வயல்கொல்லையில் காவல்பாவைகளாக நிறுத்திக்கொள்கிறீர்களோ என்று ஐயம் கொள்கிறேன்" என்றான்.

சொல்மீறிவிட்டதை அக்கணமே அவன் உணர்ந்தான். பார்க்கவரின் விழிகள் சுருங்கின. "நீ இங்கிருந்து செல்லலாம்" என்று அவர் இறுகிய குரலில் சொன்னார். "ஆயிரம் தலைமுறைகளாக வேதம் நாவிலிருந்து நாவுக்கென பற்றிப்படர்ந்து எரிந்து ஒளியாகி இங்கு நம் வரை வந்து சேர்ந்துள்ளது. மருந்தை அருந்துபவன் அதை முற்றறிந்துவிட்டு உட்கொள்வதில்லை. மருந்து உள்ளே என்ன செய்கிறதென்பதை மருத்துவனும் சொல்லிவிடமுடியாது. வேதமே சொல்லில் எழுந்த மருந்து. பிறவிப் பெருந்துயர் அழிக்கும் அமுது. அதைப் பேணுவதும் கொள்வதுமே நம் கடன். ஆராய்வதற்கு நாம் வேதம் வந்தமைந்த முனிவர்கள் அல்ல, எளிய மானுடர்."

அதே சலிப்புடன் பைலன் அமர்ந்துகொண்டான். "இன்று ஓர் அலையென எழுந்துள்ளது இவ்வாணவம். வேதப்பொருள்கொள்ள தங்கள் சிறுமதியை புன்வாழ்வை கீழ்விழைவை மட்டுமே அளவீடாகக் கொள்கிறார்கள்.

சொல்விளக்கம் அளிக்கிறார்கள். பொருள்நீட்டிச் செல்கிறார்கள். அவர்கள் அடைவது வேதத்தை அல்ல, வேதமென மாயைகாட்டி வரும் தங்கள் ஆணவத்தை மட்டுமே. நீராடும் ஆற்றுக்கு உடலை அளிப்பவனே விண்ணிழிந்து மலைதழுவி மண்விரிந்து பெருகும் ஆற்றை அறிகிறான். தன் சிறு கொப்பரையில் அதை அள்ளி வருபவன் கையிலிருப்பது ஆறல்ல. அவன் சிறுமை மட்டுமே. அதை அவன் ஆறென காட்டத் தொடங்குகையில் வேதமறுப்பெனும் பெரும்பழி சூழ்கிறது அவனை."

அவன் பெருமூச்சுடன் உடல்தளர்த்திக்கொண்டான். கண்களை மூடி அவர் பேசுவதை கேட்டுக்கொண்டிருந்தான். "அளந்தமைந்த ஒலியே வேதம். அது கவணில் அமைந்த கல். அதன் இழுவிசையில் எடையில் வளைவில் முன்னரே அமைந்துவிட்டது இலக்கு. அதை அடைவதற்குரிய பயிற்சியே வேள்வி எனக்கொள்க!" அவை முடிந்ததும் அவன் பெருமூச்சுடன் எழுந்து தனியாக நடந்தான். அவனைச் சூழ்ந்து வந்த வேதமாணவர்கள் சிறுசொற்களில் எள்ளலும் இளிவரலுமாக பேசிக்கொண்டனர்.

அவன் இருளில் படுத்துக்கொண்டு தன்னைப்பற்றியே எண்ணிக்கொண்டான். ஆணவமே தானா? ஆனால் இப்புவியை இவ்வானை இவ்வூழை அறிவேன் என எழும் ஆணவமில்லாது அறிவென்பது ஏது? அவ்வாணவத்தை தெய்வங்கள் விரும்பாதா என்ன? கொள்ளவும் வெல்லவும் அல்ல, அறிந்து அளித்துச் செல்ல எழும் விசை அல்லவா இது? இதை இழந்தபின் நான் என்னவாக ஆவேன்? இந்த வேதமாணவர்களைப்போல தர்ப்பை ஏந்தி காணிக்கை கோரி அலையும் எளிய உயிராக. அதைவிடத் தூயதல்லவா இந்த ஆணவம்?



காலையில் கருக்கிருட்டில் இறங்கியபோது அறியாமணம் கேட்டு அன்னையிடமிருந்து கிளம்பும் நாய்க்குட்டி என தன்னை உணர்ந்தான். குளிரில் இருண்டுகிடந்த நகர்ச்சாலைகளில் கொழுப்பெரியும் பெருவிளக்குகளின் ஒளி சிந்திக்கிடந்த வட்டங்களில் எரிந்தெழுந்தும் இருளில் அணைந்தமைந்தும் நடந்துகொண்டிருந்தான். திட்டிவாயில் வழியாக வெளியே சென்றபோது “மீண்டுமொரு கூடு.

உதிர்ப்பவை என்னில் எஞ்சாமலாகுக! வருபவற்றுக்கு நான் திறந்திருப்பேனாக!" என்று சொல்லிக்கொண்டான்.

[ 2 ]

பின்னுச்சிப் பொழுதில் வெயிலாறத் தொடங்குவதுவரை பைலன் நடந்துகொண்டிருந்தான். வழியில் ஒரு சிற்றோடைக்கரையை அடைந்ததும் அமர்ந்து தன் கூடையை இறக்கி பொதியைப் பிரித்து உணவுருளைகளில் ஒன்றை எடுத்து விரியிலை ஒன்றில் வைத்து ஓடைநீரை அதில் ஊற்றி ஊறவைத்தான். அது நீரை வாங்கி பெருக்கத் தொடங்கி பின் விண்டு விழுந்ததும் இலைத்தொன்னையில் குடிக்க நீர் மொண்டு அருகே வைத்தபின் உண்ணலானான்.

தனிமையில் தலைக்குமேல் எழுந்த பறவைக்குரல்களை கேட்டுக்கொண்டே அவ்வாறு உண்ணும்போது உளநிறைவொன்றை உணர்ந்தான். குருநிலைகளில் வேதசாலைகளில் எப்போதுமிருக்கும் அமைதியின்மையை அக்காட்டில் உணரமுடியவில்லை. பறவைக்குரல்களும் பசுமையும் சூழ அமர்ந்திருக்கையில் தன்னிடமிருந்து சிறகடித்தெழுந்து வானில் அலையும் அனைத்தும் மீளவந்து கூடணைந்து அமைதிகொள்வதாகத் தோன்றியது. நகரங்களல்ல, காடே தன் இடம் என்னும் எண்ணம் எழுந்தது.

அவன் கைகழுவச் செல்கையில் எதிர்ப்புறம் நீரொழுக்கின் மேல் பகுதியில் சூதன் ஒருவன் புதர்களுக்குள் இருந்து எழுந்து வந்து கைகழுவும்பொருட்டு குனிந்தான். அவனைக் கண்டதும் நிமிர்ந்து நின்று "நீங்கள் கைகழுவிக்கொள்ளுங்கள் உத்தமரே, நான் ஊன் தின்ற கையன்" என்றான். அவனை வெறுமனே நோக்கிவிட்டு பைலன் கைகழுவக் குனிந்தபோது "ஆனால்

எனக்குப் பின்னால் விழிக்குத் தெரியாத பலநூறு சூதர்கள் அட்டவூன் படிந்த கைகளை கழுவுகிறார்கள். அதற்குமப்பால் பலநூறு வேடர்கள் பச்சையூன் படிந்த கைகளை கழுவிக்கொண்டிருக்கிறார்கள்” என்றான்.

பைலன் திகைப்புடன் எழுந்துகொண்டான். வெடித்துச் சிரித்தபடி சூதன் “அறிவிலாப் பெருக்கு. தேர்விலாதது. அளிப்பவை அனைத்தையும் ஏற்றுக்கொள்ளும் ஒன்றுக்கு தூய்மையென ஏதுள்ளது?” என்றான். அவன் கண்களை நோக்கி ஒருகணம் நின்றபின் பைலன் குனிந்து தன் கைகளை கழுவத்தொடங்கினான். அவனும் கைகளைக் கழுவியபடி “அந்தணருக்குரிய வேதமெய்மையைத் தேடிக் கிளம்பியவர் நீங்கள் என எண்ணுகிறேன், உத்தமரே” என்றான்.

எரிந்தெழுந்த சினத்துடன் பைலன் அவனை ஏறிட்டு நோக்கினான். “தாங்கள் மெய்யுசாவிய அந்தச் சொல்லவைக்கு வெளியே நான் அமர்ந்திருந்தேன்” என்றான் சூதன். “என் பெயர் சண்டன்.” பைலன் “அங்கு ஏன் வந்தீர்?” என்றான். “வேதநிலைக்கு ஏன் வருவார்கள் சூதர்கள்? உணவுக்காகத்தான்” என்றபின் “இங்கே தங்களைப் பார்ப்பேன் என எண்ணவில்லை. ஆனால் பார்த்தபின் தாங்கள் கிளம்பியது இயல்பே என்று தோன்றியது” என்றான்.

“ஏன்?” என்று பைலன் கேட்டான். அவனுடைய இயல்பான புன்னகை அவன் தயக்கத்தை அகற்றியது. “தலைமைவைதிகர் தங்களை கிளம்பும்படிதானே ஆணையிட்டார்?” என்றான் சண்டன். பைலன் சிரித்துவிட்டான். கைகளை உதறியபடி “அவர் எளிய வேதியர்” என்றான். “வேதியர்களே எளியவர்கள் அல்லவா?” என்றான் சண்டன். “ஏன்?” என்றான் பைலன்

புன்னகையுடன். “செயல்கள் அனைத்துக்கும் இங்கேயே நிகரான விளைவுண்டு என நம்புபவர்கள் எளியவர்களன்றி எவர்?”

“ஏன், செயலுக்கு எதிர்விளைவு இல்லையா என்ன?” என்றான் பைலன். “உண்டு, ஆனால் இங்கு என எவர் சொன்னது? பாதாளத்தில் விளைவெழக்கூடாதா? தேவருலகில் எழலாகாதா? ஊழ் பணம் கொடுத்தால் தராசைத் தூக்கும் வணிகனா என்ன? அது கள்ளுண்ட குரங்கு அல்லவா?” என்று சண்டன் சொன்னான். “நல்லவேளையாக நீங்கள் தப்பினீர்கள். நீங்கள் செல்வதற்கு ஏராளமான இடங்கள் உள்ளன.”

“எங்கு?” என்றான் பைலன். “எங்கும். செல்லவேண்டும் என முடிவெடுப்பதே தேவை. செல்லவேண்டிய இடங்கள் முடிவற்றவை.” அவன் தன் மரவுரி மூட்டையை தோளில் மாட்டிக்கொண்டான். மறுதோளில் முழவை அணிந்தான். கைத்தடியை எடுத்துக்கொண்டு “நான் செல்லலாமென எண்ணுகிறேன்” என்றான். “நானும் வருகிறேன். எனக்கு வழிநடைச் சொல் கேட்கவேண்டுமெனத் தோன்றுகிறது.”

“சூதர் பணியே வழிநடை மொழிவுதான்” என்று சண்டன் சொன்னான். “வழிகளில் மட்டுமே அவை பொருள்படுகின்றன போலும். இல்லங்களில் எங்களுக்கு சொல் வாய்ப்பே அளிக்கப்படுவதில்லை.” பைலன் தன் பொதிக்கூடையை எடுத்து அணிந்துகொண்டு கிளம்பினான். “வழிகளில் செல்பவர் மூவர். அந்தணர், சூதர், வணிகர். அந்தணர் எங்கோ சென்றுகொண்டிருக்கிறார்கள். சூதர் எங்கிருந்தோ வந்துகொண்டிருக்கிறார்கள். வணிகர் வழிகளிலேயே இருந்துகொண்டிருக்கிறார்கள்” என்றான் சண்டன்.

“நீர் எங்கிருந்து வருகிறீர்?” என்று பைலன் கேட்டான். “அவந்தியிலிருந்து நான் உஜ்ஜயினியின் சாந்தீபனி குருநிலைக்குத்தான் வந்தேன். அங்கே வேதநிறைவுக்கொள்கையின் மேல் அமர்ந்து சௌரஃப்யர் தன் மாணவர்களுடன் சொல்லாடி மகிழ்ந்திருக்கிறார். அவர் அவையில் அமர்ந்திருந்தேன். சாந்தீபனி குருநிலையில் முளைத்து இளைய யாதவன் சொல்லாக எழுந்த வேதநிறைவு மெய்மையின் சொல் சொல்லென எடுத்து வைத்து ஆராய்ந்தார். வேதங்களை அவர் செம்மறியாடுகள் என எண்ணிக்கொண்டிருக்கிறார். உணவூட்டிப் பேணி வளர்த்து ஆண்டுதோறும் மயிர்வெட்டி கம்பளியாக்கி போர்த்திக்கொள்கிறார்.”

வாசலுக்கு இப்பால் நின்று நான் உரக்கக் கூவிச் சொன்னேன் “முனிவரே, நீங்கள் சொல்லிக்கொண்டிருப்பதை வேதநிறைவு என்கிறீர்கள். நான் அதை வேதத்தின் மயிர் என்றே சொல்வேன்.” அவர் என்னை “வெளியே போ, இழிமகனே” என்றார். “நன்று, இதை நீங்கள் எனக்கு உணவிட்டபின் சொல்வதே முறை” என்றேன். அவர் “நீ தத்துவங்களைக் களியாடும் தகுதிகொண்டவனா? மூடா!” என்றார். “நான் களியாடவில்லை முனிவரே, மயிர்கள் செம்மறியின் உயிரிலிருந்து முளைப்பவை அல்லவா? தன்னை பெருக்கிக்கொள்ளவும் போர்த்திக்கொள்ளவும்தானே அது மயிர்கொள்கிறது?” என்றேன்.

சொல்லச்சொல்ல எனக்கு அந்த ஒப்புமையின் கூர்மை வியப்பளித்தது. “நோக்குக, செம்மறியின் உயிரும் உள்ளமும் மயிரில்தான் வெளிப்படுகிறது. அது சினக்கையிலும் மகிழ்கையிலும் மயிர்நிரை சிலிர்க்கிறது. இளம் ஆடுகளை அது

தன் மயிரழகால் அல்லவா கவர்கிறது?” என்றேன். தன்னை அறியாமல் சற்றே செவிகொடுத்த சௌரஃப்யர் எழுந்து “அவனை வெளியே துரத்துங்கள்!” என்று கூச்சலிட்டார். “நானே என்னை வெளியே துரத்திக்கொள்கிறேன். அதற்கான ஊதியத்தையும் எனக்கே அளியுங்கள்” என்றேன்.

அவர்கள் அளித்த உணவுக்குப் பின்னர்தான் உங்கள் குருநிலைக்கு வந்தேன். இவர்கள் தூயஅளவைவாதிகள். இவர்களுக்கு வேதநிறைவு பேசுபவர்மேல் வெறுப்பு. அவர்களைக் களியாடி சில செய்யுட்களைப் பாடி இவர்களிடம் பொருள்கொள்ளலாம் என்று எண்ணினேன். நீங்கள் சொல்லாடி எழுந்துசென்றபின் பார்க்கவர் துயருடன் சென்று தன் குடிலில் அமர்ந்தபோது சென்று இந்த செம்மறியாட்டின் கதையைப் பாடினேன். சிரித்துவிட்டார்.

“இவர்களை என்ன சொன்னீர்?” என்று சிரித்தபடி பைலன் கேட்டான். “இவர்கள் எனக்குப் பரிசு அளித்தபின்னர்தான் வாழ்த்தினேன். ஏனென்றால் வாழ்த்துவது என் தொழில். வைதிகர்களே, அடுமனையில் எரிவதும் அனலே என்றுணர்வது மெய்மை. அடுமனையிலேயே அனலெரியவேண்டும் என எண்ணுவது உலகியல் உண்மை. அனலென்பது அடுமனையே என்பது நடைமுறை அறிவு. பிரம்மத்தில் இருந்து தெய்வங்கள் எழுவது போல மெய்மை உலகியலுண்மை ஆகிறது. தெய்வங்களிலிருந்து வைதிகர் தோன்றுவதுபோல உலகியலுண்மை நடைமுறை அறிவாக ஆகிறது. அது வாழ்க என்றேன்.”

“அவர்கள் என்ன சொன்னார்கள்?” என்று பைலன் சிரிப்பை அடக்கியபடி கேட்டான். “அவர்கள் அதற்கும் எனக்குப் பரிசளித்தார்கள். நுண்மையான சொல்லறிவு கொண்டவர்கள்.

அதைப் பெற்றுக்கொண்டு நான் உடனே கிளம்பிவிட்டேன்.” பைலன் “ஏன்?” என்றான். “நான் சொன்னதை அங்கே மூங்கில்மேல் ஒரு கிளி அமர்ந்து கேட்டுக்கொண்டிருந்தது. அது சற்றுக்கழித்து நான் சொன்னதில் ஏதேனும் தீய உட்பொருளைக் கண்டடைந்து அவர்களுக்கு சொல்லிவிடக்கூடும்.”

பைலன் சிரிக்கத் தொடங்கினான். “அந்தக் கிளி அவர்களின் வேதநிலைக்கு வெளியேதான் பெரும்பாலும் அமர்ந்திருக்கிறது. அதற்கு அவர்கள் உணவளிக்கிறார்கள். அவர்கள் ஓதும் வேதச்சொல்லைக் கேட்டு அது திருப்பிச் சொல்கிறது. ஆனால் அதன் அலகுகளால் சொல்லப்படும்போது வேதச்சொற்கள் திரிந்து வசைச்சொற்களாக ஆகிவிடுகின்றன. முதலில் நான் அதைக்கேட்டு திகைத்தேன். அதன்பின்னர்தான் அவை வேதச்சொற்கள் என்று புரிந்துகொண்டேன். வெளியே வருவது எதுவாக இருந்தாலும் உள்ளே செல்வது வேதம் அல்லவா?”

பைலன் சிரித்துக்கொண்டே இருந்தான். “முன்பொருமுறை நான் காட்டுமரத்தின்மேல் அமர்ந்து தூங்கிவிட்டேன். விழித்துக்கொண்டு சப்புக்கொட்டியபடி எச்சில் துப்பினேன். கீழே அவ்வேளையில் இரு அந்தணர்கள் வந்து அமர்ந்திருப்பார்கள் என யார் கண்டது? அவர்கள் தங்கள் மூட்டையைப் பிரித்துவைத்து பலநாள் பசியுடன் விரைந்து வேதச்சொல்லுரைத்து அள்ளி உண்பதற்காக கையெடுத்த வேளை. தீச்சொல்லிட்டுவிடுவார்கள் என்று திகில்கொண்டதும் நான் கிளிபோல ஓசையிட்டுக்கொண்டு மேலே ஒடுங்கிக்கொண்டேன். மூத்த அந்தணன் ‘தாழ்வில்லை, அது கிளியின் எச்சமே’ என்றான். இளையவன் ‘இருந்தாலும்

எச்சமல்லவா?' என்றான். மூத்தவன் 'அக்கிளி உண்ட உயர்வான கனிகளை எண்ணுக' என்றான். இளையவனுக்கு உளநிறைவு."

பைலன் சிரித்தபடி தலையை அசைத்து "நீர் அதை வேண்டுமென்றே கூட செய்திருப்பீர்" என்றான். "இல்லை என்று சொல்லமுடியாது. அவர்களும் என்னைப் பார்க்கவில்லை என்றும் சொல்லமுடியாது. ஏனென்றால் தூய்மையிழக்கும் அந்தணன் மெய்மையடைகிறான் என்பது எவ்வளவு உண்மையோ அதைப்போன்ற உண்மை தூய்மையிழக்கும் உணவைத் துறந்தால் அதைவிட கீழான உணவே அடுத்தவேளைக்குக் கிடைக்கும் என்பது" என்றான் சண்டன். "அவ்விருவரும் வேதநிறைவுக்கொள்கையை கற்றறிந்தவர்கள் என்று எனக்குத் தோன்றியது. அவர்கள் அக்கிளி உண்ட கனியை விளைவித்த மரம் உண்ட சேற்றைத்தான் உண்டுகொண்டிருந்தார்கள்."

பைலன் ஒருகணம் கழித்து வெடித்துச் சிரித்தபடி "எல்லை கடக்கிறீர் சூதரே... இதற்காகவே இளைய யாதவரின் படையாழியால் தலைகொய்யத் தகுதியானவர் ஆகிறீர்" என்றான். "நான் சென்று பார்த்தனின் கால்களைப் பணிவேன். அவர் என்னை காப்பார்" என்றான் சூதன். "ஏன்?" என்று பைலன் கேட்டான். "நஞ்சுக்கு நஞ்சே மருந்து என்கிறது சனகநூல்" என்றான் சூதன்.

# கிராதம் - 8

**[ 3 ]**

முன்பு தேவரும் அசுரரும் வாசுகியை நாணாக்கி மந்தரமலையை மத்தாக்கி பாலாழியைக் கடைந்தபோது

எழுந்தவர் இரு தேவியர். இருளோரும் ஒளியோரும் இருபுறமும் நின்றிழுக்க மந்தரமலை சுழன்று பாற்கடலில் நுரையெழுந்தபோது அதன் அடியாழத்தில் ஓவியங்களென்றும் எழுத்துக்களென்றும் பொறிக்கப்பட்டு காலமின்மையில் துயின்றிருந்த தெய்வங்கள் ஒவ்வொன்றாக கண்விழித்தெழுந்தன.

பால்வண்ணப் பேரேட்டில் ஆமென்றும் அல்லவென்றும் குறிக்கும் ஓமென்ற எழுத்தால் எழுதப்பட்டிருந்த பிரக்ஞாதேவி என்னும் அன்னை எட்டு கைகளுடன் விழித்தெழுந்தாள். அவள் முன்பக்கம் பொன்னிறமும் பின்பக்கம் கருநிறமும் என இருபுறமும் முகமும் முலைகளும் இடையும் கொண்டிருந்தாள். பேரழகும் நுண்ணறிவும் தண்ணளியும் கொண்டு மலர்ந்திருந்தது ஒரு முகம். மறுபக்கம் எழுந்த முகம் கொடுமையும் மடமையும் கீழ்மறமும் என சுளித்திருந்தது.

சுழன்று சுழன்று ஒன்றுபிறிதெனக் காட்டி மேலெழுந்தாள் பிரக்ஞை. அவளை நோக்க பாலாழியின் பலகோடி மீன்கள் விழிகளாக எழுந்து சூழ்ந்தன. “இவள்! ஆம், இவள்!” என்று வியந்தன அவை. அவள் அசைவில் எழுந்த குமிழிகள் சொற்களென்றாகி ஒளிகொண்டன. பாலாழியின் மேல்விளிம்பை அடைவதற்கு முற்கணம் தேவர்கள் “எங்களுள் அழியாதிருப்பவளே, எழுக!” என்று கூவிய ஒலி கேட்டதும் தேவியின் கொடுமுகம் மறுமுகத்தை இடக்காலால் உதைத்து உந்தி விலக்கி தான் மேலெழுந்து வந்தது.

அவள் தோற்றத்தைக் கண்டு திகைத்த தேவர்கள் தங்கள் பிடியை நழுவவிட்டு அஞ்சிக் கூவியபடி பின்னகர்ந்தனர். இளித்த வாயும் வெறித்த விழிகளுமாக அவள் தேவர்களை நோக்கி பேருருக்கொண்டு விண்நிறைத்து

மிதந்துசென்றாள். நாகவடம் நழுவ அதை இழுத்தோடியபடி கூவிக் களியாடிய அசுரர் “எங்களுள் விடாயென இருப்பவளே, எழுக!” என்று கூவியபோது தேவியின் இன்முகம் புன்னகையும் அருளுமாக எழுந்து, பொன்னொளி விரிய அவர்களை நோக்கி சென்றது. திகைத்து விழிகூட மேலே நோக்கி சொல்லவிந்தனர் அசுரர். அவர்கள் கைநழுவி நோக்கித் திகைத்த கணத்தில் தேவர்கள் தாங்கள் இழந்த நீளத்தை மீட்டெடுத்தனர்.

இரு அன்னையரும் எழுந்து விண்ணில் நின்றிருக்க இருண்டும் குளிர்ந்துமிருந்தது வானத்தில் பாதி. ஒளிர்ந்து வெம்மைகொண்டிருந்தது மறுபாதி. முனிவர்களின் மெய்மை அவரைவிதையென இரண்டாகியது. அவர்களில் ஒருபாதி கைகூப்பியபடி எழுந்து “விண்ணளந்தோனே, நீங்களே காக்க வேண்டும்! இத்தெய்வங்களை வென்றருளவேண்டும்” என்றது. மறுபாதி ஓடிச்சென்று முழந்தாளிட்டு “அனலுருவோனே, இத்தெய்வங்களை நீங்களே கொண்டருள்க!” என்று கூவியது.

விஷ்ணு பொன்னுருவ அன்னையைச் சுட்டி “இன்முகம் கொண்ட இவள் என் நெஞ்சமர்ந்தோளின் மாற்றுருவென்றிருக்கிறாள். இவள் என் துணைவியென்றமைக! எங்கெல்லாம் பதினாறு செல்வங்களும் எட்டு மங்கலங்களும் பொலிகின்றனவோ அங்கெல்லாம் இவள் வழிபடப்படுக!” என்றார். மூன்று கைவல்லிகளில் தாமரை மலரும் வெண்சங்கும் சுடரும் ஏந்தி வலக்கை அருளி நின்றிருக்க அன்னப்பறவைக் கொடியுடன் வெண்யானை மேல் எழுந்த அன்னை அவர் வலக்கையின் செந்நிற வரியோடிய குழிவில் சென்று குடிகொண்டாள்.

மூன்று கைகளில் பாசமும் அங்குசமும் துடைப்பமும் ஏந்தி, அருட்குறி அமைந்த இடக்கையுடன், நாகமாலையை கழுத்தில்

சூடி, காகக்கொடி பறக்க, கழுதைமேல் எழுந்து கோரைப்பல்காட்டி உறுமிய அன்னையை ஆதிசிவன் தன் மகளெனக் கொண்டார். அவள் சென்று அவர் காலடியில் பணிந்துநிற்க இடக்கால் தூக்கி அவள் மடியில் வைத்து அருளளித்தார். "துயர்கொண்ட உள்ளங்களில் நீ குடிகொள்க! இருளும் அழுக்கும் கெடுமணமும் உன் இயல்பாகுக! உண்மையென்பது உன் வடிவும் ஆகுக!" என்று செம்மேனியன் அருள்புரிந்தார்.

சிவமகளை வருணன் மணந்தான். மூத்தவளும் இளையவளும் வடக்கிலும் தெற்கிலுமென குடிகொண்டனர். இரு அன்னையரில் ஒருவரை வழிபடுபவர் பிறிதொருவரின் சினத்திற்காளாவார்கள் என்றனர் முனிவர். நூல்நெறிப்படி அமைந்த ஆலயங்களில் முதுகொடு முதுகொட்டி இருபுறமும் நோக்கி அவர்கள் அமர்ந்திருந்தனர். இருவகை உலகத்தியல்பு அறிந்த முனிவர் இருவரையும் நிகரென வணங்கி அருள்பெற்றனர். அவர்கள் நெஞ்சில் மீண்டும் ஓருருக்கொண்டு இணைந்து அவள் பிரக்ஞாதேவி என்றானாள். அவளை அவர்கள் ஊழ்கத்தில் முகம் கண்டு புன்னகைத்தனர். அப்புன்னகை தெரிந்த மானுடரை முனிவர் என்றனர் கவிஞர்.

[ 4 ]

காம்யக வனத்திற்குத் தெற்கே இருந்த காளிகம் என்னும் குறுங்காட்டுக்குள் முன்பு ரகுகுலத்து ராமனும் அவன் இளையோனும் வழிபட்ட பேராலயமொன்றிருந்தது. அங்கு குளிரும் இருளும் நிறையவே முனிவர் அவ்விடம் நீங்க அது கைவிடப்பட்டு காட்டுப்பெருக்கால் உண்ணப்பட்டது. வேர்களுக்குள் கிளைகளுக்கு அடியில் இரு கல்லுருவங்களாக மூத்தவளும் இளையவளும் மூழ்கிக்கிடந்தனர்.

அவர்களுக்குமேல் எழுந்து பச்சைகொண்ட மரங்களில் நறுந்தேன் சூடிய மலர்கள் விரிந்து வானொளிகொண்டு நின்றன.

சாந்தீபனி குருநிலையில் இருந்து தன் தோழனைத் தவிர்த்து தனியாகத் திரும்பிய இளைய யாதவர் தன் எண்ணச்சிதறலால் வழிதவறி கால் கொண்டுசென்ற போக்கில் அக்காட்டுக்குள் நுழைந்தார். உலகில் கொள்வனவற்றையும் சூழ்வனவற்றையும் எண்ணி எண்ணி அலமலந்த உள்ளம் கொண்டிருந்தமையால் வழியை அவர் அறியவில்லை. வழியறிந்தபோது விடாய் கொண்டு உடலெரிவதை உணர்ந்தார். மலர்பூத்த மரம் மீது பறவைகளின் ஒலி கேட்டு அங்கு வேர் அருகே நீரோடை இருப்பதை உய்த்தறிந்தார்.

தன் காலடிகள் தன்னை தொடர்ந்தொலிக்க அந்த மலர்மரத்தடியில் வந்து நீரோடையைக் கண்டு அள்ளி அருந்தியபின் இளைப்பாற வேர்ப்பற்றில் அமர்ந்தார். எண்ணம் எழுந்து சூழ உடல்தளர்ந்து விழிமூடி மயங்கியபோது அவர் பெண்குரல் விசும்பியழும் ஒலியை கேட்டார். தன்னுள் எழுந்ததோ அவ்விசும்பல் என்று திகைத்தார். பின் விழித்தெழுந்து நோக்கியபோது கருநிறமும் கெடுமுகமும் கொண்ட பெண் ஒருத்தி உடல்குவித்து அமர்ந்து அழுவதைக் கண்டார்.

அவளை அணுகி "பெண்ணே, நீ யார்?" என்று அவர் கேட்டார். "என்னை மூத்தவள் என்பார்கள். இக்காட்டில் நான் கோயில்கொண்டிருக்கிறேன்" என்றாள். "நீ அழுவது எதனால்?" என்றார். "தனித்து கைவிடப்பட்டவர்கள் அழுவதே இயல்பு" என்று அவள் சொன்னாள். "நீ கைவிடப்பட்டது ஏன்?" என்றார். அவள் தன் கையை நீட்டிக்காட்டினாள். அதில் இருந்து ஒளிவிட்ட அருமணியைக் கண்டு அவர் அருகணைந்தார். அவள் "என் விழிநீர்த்துளியால் உருவானது இது. இவ்வரிய மணியை நிகிலம் என்றழைக்கிறார்கள். இதை என்னிடமிருந்து பெற்றுச் சூடாமல் எவரும் மெய்மையை அறிவதில்லை" என்றாள்.

"இங்கு வாழ்ந்த ஒவ்வொரு முனிவருக்கும் இதை நான் நீட்டியிருக்கிறேன். எவரும் இதை பெற்றுக்கொண்டதில்லை. எவரும் ஏற்காத இந்த அருமணி என் கைகளை அனல் என எரிக்கிறது. அதன் துயர்தாளாது நான் அழுகிறேன்." அவர் அதை நோக்கியபடி "இவ்வருமணியின் சிறப்பென்ன?" என்றார். அது ஒரு விழிமணி போலிருந்தது. "யாதவனே, நீ நோக்கியறிந்த ஒவ்வொன்றிலும் மறைந்துள்ள பிறிதொன்றுள்ளது. அதை இது

காட்டும்” என்றபடி அவள் புன்னகைத்தாள். “இதன் ஒளியில் ஒவ்வொன்றும் நிலைமாறும். உன்னைச் சூழ்ந்துள்ள இப்புடவி முற்றிலும் திரிந்து உருமாறும்.”

அவள் கண்களை நோக்கியபடி அவர் திகைத்து நின்றார். “ஆம், இது எளியவர்களுக்கு உகந்தது அல்ல. அறிக, கோழைகளுக்குரியதல்ல மெய்மை! தன்னை உரித்து தான்போர்த்தி நின்றாடுபவர்களுக்குரியது அப்பாதை. தன்னைக் கொன்று தானுண்டு செரித்து மேலேறும் மாவீரர்களுக்குரியது அம்மலைமுடி. தன்னை நீறாக்கி தானணிபவர்களின் வானம் அது. சொல்க, நீ அவர்களில் ஒருவனா?”

அவர் மூச்சடைக்கும் அச்சத்துடன், விழிவிலக்கவொண்ணா பேரார்வத்துடன் அவளை நோக்கி நின்றார். “அறிதலென்பது நீ அறியத்தொடங்கிய நாளிலிருந்தே இனிதென்றே உன்னை வந்தடைந்திருக்கும். உண்ணும் புணரும் தழுவும் வெல்லும் கொள்ளும் இன்பங்களை சிறு திவலைகளென்றாக்கும் பேரின்பமே அறிதலென்பது.” அவள் விழிகள் நாகவிழிகளின் ஒளிரும் வெறிப்பு கொண்டிருந்தன. “ஆனால் அறிக, உவகையினூடாக அறிவது அறிவின் ஒருபக்கம் மட்டுமே. கடுந்துயரும் கசப்பும் வலியும் கொண்டு கணம் கணமென வதைபட்டு அறியும் அறிவும் ஒன்றுண்டு. அவ்வறிவாலும் இவையனைத்தையும் அறிந்தவனே மெய்யறிவன்.”

அவள் நுண்சொல் ஓதும் பூசகிபோல காதருகே காற்றசைவென பேசினாள். “அவன் அறியும் வேதம் வேறு. அவன் அடையும் வேதநிறைவும் மற்றொன்று. இருமையென அறிந்து ஒருமையென்றாக்கி அறிவதே மெய்மை.” அவர் தோள்களில் அவள் தன் கைகளை வைத்தாள். அவள் வாயிலிருந்து மட்கிய ஊன்நாற்றம் வீசியது. பீளைபடிந்த பழுத்த விழிகள்

நோக்கிழந்த இரு துளைகளென்று தோன்றின. "உலர்ந்த குருதியில் மட்கும் பிணங்களில் எரியும் மயிரில் எழும் சொற்களின் வேதம். சீழில் சளியில் மலத்தில் அழுகலில் எழும் வேதம். கண்ணீரில் கதறலில் வசைகளில் சாவில் எழும் வேதம். அதைக் கல்லாது நீ அறிவதுதான் என்ன?"

அவர் பெருமூச்சுடன் மெல்ல தளர்ந்து "ஆம், உண்மை" என்றார். "நானறிந்த வேதம் குறைபட்டதென்பதை ஒவ்வொரு சொல்லும் எனக்கு உணர்த்துகிறது. நான் கொண்ட பெருஞ்சோர்வு அதன்பொருட்டே." "நீ அவ்விழிகளால் அதைப் பார்க்க முடியாது. அந்த மெய்மையை அறியும் ஒளிவிழி இதுவே" என அவள் அந்த அருமணியை அவர் கண்களுக்கு முன் காட்டினாள். "கொள்க! இனியவனே, இதைக் கொள்க! உனக்கென்றே இன்று என் கையில் பூத்துள்ளது இது."

அவள் கறைப்பற்கள் நடுவே சிறியவெண்புழுக்கள் நெளிந்தன. கரியநாக்கு பெரிய புழுவென துழாவியது. காம்பு கூம்பித் தொங்கிய வறுமுலைகள் அவர் மார்பின் மேல் படிந்தன. எலும்பெழுந்த கைகள் அவர் தோளை வளைத்து அவர் முகத்தை தன் முகம் நோக்கி இறுக்கின. அவள் மூச்சில் புண்சலம் நாறியது. "நீ வீரன். வென்று செல்பவன். யுகங்களுக்கொருமுறை மண்ணில் எழும் மாமானுடன். மெய்மையை மணிமுடியெனச் சூடி காலத்தைக் கடந்து நின்றிருப்பது உன் முகம். வெற்று அச்சத்தால் நீ அதை இழந்துசெல்வாயா என்ன?"

அவர் உடல் உதறிக்கொண்டே இருந்தது. "அஞ்சுகிறாய், இளையோனே. எதை அஞ்சுகிறாய் என்று எண்ணிப் பார். ஏன் அஞ்சுகிறாய் என்று ஆராய்ந்து பார். அஞ்சுவது என்னையா? உன்னுள் இருந்து எழுந்து வந்து இங்கு நான் நின்றிருக்கிறேன்.

உன் மலக்குடலில், குதத்தில் வாழ்கிறேன். நீ உண்ணும் இன்னுணவெல்லாம் எனக்களிக்கும் படையல். உன் மூச்சில் நானும் கலந்துள்ளேன். உன் விந்துவில் ஊறி உன் தேவியர் வயிற்றில் முளைத்து உன் மைந்தரென முகம் கொண்டு நின்றிருக்கிறேன்."

அவர் "நான் என்ன செய்யவேண்டும்?" என்றார். "என்னைத் தழுவுக! என்னைச் சூடுக! ஏழாண்டுகாலம் என்னை உடன்கொள்க!" அவள் தன் இதழ்களை அவர் வாயருகே கொண்டுவந்தாள். மட்கிய ஊன்போன்று கரியவை. அழுகிக்கிழிந்து தொங்கியவை. அவர் அறியாது அவளை சற்று உந்தி விலக்கினார். "மண்ணிலெழும் மாமனிதரில் கணமேனும் என் கையின் இந்த மணி கொள்ளாதோர் எவருமில்லை. விண்வேதம் கொய்தெடுத்த மாமுனிவர் ஒவ்வொருவர் மடியிலும் ஏழாண்டுகாலம் அமர்ந்தவள் நான். நீ அவர்களில் ஒருவனல்லவா? அவர்கள் அறிந்ததை நீ அறியவேண்டாமா?"

அவர் பெருமூச்சுவிட்டார். கண்களை இறுகமூடி "ஆம்" என்றார். "எதற்கு அஞ்சுகிறாய்? நீ அறிந்ததில்லையா என்னை? உன் மைந்தரின் மலத்தை அருவருத்தாயா? அவர் எச்சிலை நீ அமுதென்று எண்ணவில்லையா? அவர்மேல் கொண்ட அக்காதலை எனக்கும் அளி. என்னைப் புல்கு. முதல் உறவுக்குப்பின் நான் இனியவள் என உணர்வாய். என்னை பேரழகி என்று உன் விழிகள் அறியும். என் அருகிருப்பதை மட்டுமே விழைவாய். ஏழரையாண்டுகாலம் என்னுடன் நீ இருந்து நிறையும்போது இவ்வருமணியை உனக்களித்து நான் மீள்வேன். இது முழுமை. இது சமன். இதுவே பிறிதொன்றிலாமை..."

அவர் மேலும் ஒருமுறை பெருமூச்சுவிட்டார். “நான் பைநாகப் படமணிந்தவனின் மகள். அவன் சூடிய சுடலைப்பொடி நாறும் உடல்கொண்டவள். நிணமொழுகும் தலைமாலை சூடிய காலபைரவனின் தமக்கை. உக்ரசண்டிகை என்றும் அகோரிகை என்றும் காளபயங்கரி என்றும் பவஹாரிணி என்றும் என்னை வழிபடுகிறார்கள் முனிவர்கள்.” அவர் “ஆம்” என்றார். “அழகனே, கொள்க இவ்வொளியை!” என்றாள். எப்பொருளும் இல்லாமல் “ஆம்” என்று அவர் சொன்னார்.

ஒருகணம் மெல்லப்புரள, முன்பெங்கோ முடிவான மறுகணத்தில் அவர் அவளை அள்ளி அணைத்து உடலுடன் சேர்த்து இறுக்கி இதழ்களில் முத்தமிட்டார். காமம் கொண்டு முனகியபடி அவள் அவர் உடலுடன் தன்னைப் பொருத்திப் புல்கி ஒன்றானாள். “நீ இனியவன். நீ எனக்குரியவன்” என்று விழிசொக்கப் புலம்பினாள். அவள் உடலில் ஊறிவழிந்த மதநீர் எரிமணம் கொண்டிருந்தது.

அக்காட்டின் பசிய இருளுக்குள் அவளை அவர் புணர்ந்தார். கிளறப்பட்ட சதுப்பென கெடுமணங்கள் குமிழியிட்டெழுந்தன அவளிலிருந்து. சிதையென அவரை ஏற்று எரித்தாள். சேறென அவரைச் சூழ்ந்து மட்கவைத்தாள். சிம்மமென அவரை நக்கி உண்டாள். அவர் விழித்தெழுந்தபோது அவள் அங்கிருக்கவில்லை. அவள் ஒரு கெடுமணமாக தன் உடலில் படர்ந்துவிட்டிருப்பதை உணர்ந்தார்.

**[ 5 ]**

காளிகக் காட்டிலிருந்து வெளிவந்த இளைய யாதவரின் நடையும் நோக்கும் மாறிவிட்டிருந்தன. புல்தெறித்துச் செல்லும் வெட்டுக்கிளி என நடந்துகொண்டிருந்தவர் நிலம் அதிர ஆண்

எருமையென கால் எடுத்து வைத்தார். சுவைதேர்ந்து இன்கனியும் மெல்லூனும் தேனும் நறுநீரும் உண்டவர் கிழங்கைப்பிடுங்கி மண்ணுடன் மென்றார். சேற்றுடன் உழன்ற பன்றியைக் கொன்று குருதி வேகாது தின்றார். கலங்கல் நீரை அள்ளி அருந்தி ஈரச்சேற்றிலும் இருண்ட குகையிலும் படுத்துறங்கினார்.

எட்டு நாட்களுக்குப்பின் அவர் சியாமளபதம் என்னும் சிற்றூரைச் சென்றடைந்தபோது அவ்வூரார் அவரை காடுவிட்டெழுந்து வந்த காளாமுகன் என்று எண்ணினர். அவர் வருவதை அகலே எழுந்த நாய்க்குரைப்பிலேயே அறிந்த ஊர்மூத்தார் உணவும் நீரும் ஏந்தி ஊருக்கு வெளியே காத்து நின்று "கொள்க, கபாலரே! எங்கள் ஊர்செழிக்க வாழ்த்துக!" என்றனர். அவர் ஊருக்குள் நுழையாதபடி வேலிப்படல்களை முன்னரே மூடிவிட்டிருந்தனர். பெண்கள் குழந்தைகளைத் தழுவியபடி உள்ளறைக்குள் ஒடுங்க கன்றுகளை எண்ணி பசுக்கள் குரல்கொடுத்துக்கொண்டிருந்தன.

சப்தஃபலம் என்னும் யாதவச்சிற்றூரை அவர் சென்றடைந்தபோது அங்கிருந்த யாதவப்படைத்தலைவன் சதமன் அவரை அடையாளம் காணவில்லை. கபாலமும் சூலமும் உடுக்கும் இன்றி வந்த காளாமுகரை நோக்கி வியந்த அவன் அருகிருந்த முதிய யாதவவீரராகிய கலிகரை நோக்கி "யாரவர்? யாதவர் நிலத்திற்குள் கொடுஞ்சைவர் நுழைவதில்லையே?" என்றான். கண்களுக்குமேல் கைகளை வைத்து நோக்கிய கலிகர் "யார்?" என்றார். மெல்லிய நடுக்கம் ஓடிய உடலுடன் "எந்தையரே, யார் அவர்?" என்றார். மேலும் உரக்க "இல்லை, இருக்கவியலாது" என்று கூவினார்.

மறுகணமே சதமன் கண்டுகொண்டான். "ஆ! அவரேதான்! அரசர்" என்றான். அக்கணத்திலேயே அத்தனை வீரர்களும் அவரை அடையாளம் கண்டுகொண்டனர். காவல்மேடையிலிருந்து மரப்படிகளில் உடல்முட்டி நெரிந்திறங்கி ஓடி அவர்களை அணுகிவந்த இளைய யாதவரை நெருங்கி "அரசே!" என்று கூவினர். அவர் உடலில் சேறும் ஊனும் மலமும் நாறியது. அவர் விழிகள் சிவமூலிக் களிகொண்டவனைப்போல அலைபாய்ந்தன.

"அரசே, தாங்களா? என்ன ஆயிற்று?" என்று கலிகர் கூவினார். சதமன் அப்படியே அவர் கால்களில் சரிந்து அழத்தொடங்கினான். "அரசே! அரசே!" என யாதவ வீரர் அவரைச் சூழ்ந்துகொண்டு கூவினர். அவர் மெல்லிய கூர்குரலில் "இந்நகரில் நான் சிலநாட்கள் இருப்பேன். இங்கு நான் எவரையும் காண விழையவில்லை" என்றார். "ஆம், ஆணை" என்றார் கலிகர்.

அவர்கள் எவரையும் நோக்காமல் நடந்து அச்சிற்றூரின் நடுவே அமைந்திருந்த அரசமாளிகையை அடைந்தார். அவருக்காக நீராட்டுப்பணியாளர்களும் சமையர்களும் அங்கே காத்து நின்றிருந்தனர். அவர் அவர்களை ஏறிட்டும் நோக்கவில்லை. முகமன்கள் எவையும் அவரை சென்றடையவில்லை. செல்லும்வழியில் தூண்மடிப்பில் விழுந்துகிடந்த மாடப்புறாவின் எச்சத்தை அவர் கைதொட்டு எடுத்து மூக்கில் வைத்து முகர்ந்து முகம் மலர்ந்ததைக் கண்டு அவர்கள் திகைத்தனர்.

அடுமனைக்குள் புகுந்து அதன் கொல்லைப்பக்கம் கரிபடிந்த மூலையில் குவித்திட்ட குப்பைக்குமேல் அமர்ந்துகொண்டு உணவு கொண்டுவரும்படி சொன்னார். அவர்கள் திகைத்து

முகமும் முகமும் நோக்க முதிய அடுமனையாளன் “அரசாணை எனில் அவ்வாறே” என்று மெல்லிய குரலில் சொன்னார். அவர்கள் அளித்த உணவை இருகைகளாலும் அள்ளி உண்டார். உண்ணும்போதே சொறிந்துகொண்டார். உரத்த ஒலியுடன் ஏப்பம் விட்டார்.

அவர்கள் இல்லம் புகுந்த பேயை என அவரை பார்த்துக்கொண்டிருந்தனர். எழுந்துசென்று கையைக் கழுவாது உதறிவிட்டு இருளுக்குள் நடந்தார். அவருக்கான நீராட்டும் மஞ்சத்தறையும் ஒருக்கியிருப்பதைச் சொல்ல பின்னால் சென்ற ஏவலர் அவர் அரண்மனைக்கு வெளியே சென்று அங்கு நின்றிருந்த இலைமூடி தழைந்த வாகைமரத்தின் அடியில் புழுதியிலேயே உடல்சுருட்டிப் படுத்து துயிலத் தொடங்கியது கண்டு அஞ்சி அப்பால் நின்றனர். அவரை எழுப்புவதா என்று மெல்ல முதிய குடித்தலைவரிடம் ஏவலன் ஒருவன் கேட்டான். “அவரில் வாழும் தெய்வமேது என்று அறியோம். காத்திருப்போம்” என்று அவர் சொன்னார்.

அன்றிரவு முழுக்க அவர்கள் இருளுக்குள் அவருக்காக காவல் நின்றனர். மறுநாள் விழித்தெழுந்த அவர் மீண்டும் வந்து அடுமனைக்குப்பின் அமர்ந்து உணவுகொண்டார். அரண்மனையை ஒட்டிய குறுங்காட்டுக்குள் சென்று அந்தி இறங்கிய பின்பு மீண்டார். நாட்கள் செல்லச் செல்ல அவர் விழிகள் அவ்விடத்தை அறியலாயின. அரண்மனையின் அறையில் துயிலவும் ஏவலர் விழிநோக்கவும் தொடங்கினார்.

ஆனால் அழுக்கும் இருளும் கெடுமணமும் அவரைச் சூழ்ந்திருந்தன. அவர் அசைவுகள் காற்றில் பிரியும் புகைபோல ஓய்ந்திருந்தன. சொற்கள் அவரைச் சென்றடைய நெடுந்தொலைவு பயணம் செய்யவேண்டியிருந்தது. வெறித்த

விழிகளுடன் அவர் தன்னுடன் பேசுபவர்களை நோக்கிக் கொண்டிருந்தார். கண்முன் அகல்சுடர் சரிந்துவிழுந்து திரைச்சீலை பற்றி எரிந்து தன் ஆடையை தொடவரும்போதும் வேறெங்கோ இருந்து அதை நோக்கிக் கொண்டிருந்தார்.

தன் இருளாழத்திலிருந்து விழித்தெழுந்தால் அவர் பெருஞ்சினம் கொண்டார். கொலைத்தெய்வம் போன்று வெறிகொண்டு சுளித்த முகத்துடன் கைநீட்டி அடிக்க வந்தார். "ஈன்ற பூனைபோலிருக்கிறார். அவரை அணுகாதொழியுங்கள்" என்று ஏவலர்தலைவன் இளையோரிடம் சொன்னான். தனிமையில் நாளெல்லாம் அமர்ந்திருந்தார். நீள்மூச்சு விட்டு அவர் அசைந்தமர்கையில் "அவர் எண்ணி ஏங்குவதுதான் எதை? இளையோரே, எந்தை கொள்ளும் துயர் எதன்பொருட்டு?" என்று அமைச்சர்கள் புலம்பினர். முதுபூசகர் "அவர் துயரில் மகிழ்ந்தாடுகிறார். அவரைச் சூடிய பேய் அதில் திளைக்கிறது" என்றார்.

அங்கு அவர் வந்துசேர்ந்த செய்தி துவாரகைக்கு அனுப்பப்பட்டது. அரசர் ஆட்சிச்செயல்கள் அனைத்திலும் இருந்து விலக விழைவதாக ஆணை சென்றபோது அக்ரூரர் திகைத்து என்ன நிகழ்ந்தது என்று வினவி செய்தியனுப்பினார். என்ன நிகழ்ந்தது அரசருக்கு என குடித்தலைவருக்கும் நிமித்திகருக்கும் புரியவில்லை. குடிமூத்தார் குடிப்பூசகர் மூவரைக் கூட்டி உசாவினார். அரசருக்கு அகோரசிவம் உளம்கூடிவிட்டிருக்கிறது என்றனர் அவர்கள். அச்செய்தியையே துவாரகைக்கு அனுப்பினர்.

அக்ரூரர் உடனே கிளம்பி சப்தஃபலத்திற்குச் செல்ல விழைந்தார். "என்ன நிகழ்ந்துள்ளதென்று உணரமுடிகிறது, அரசி. மூத்தவர் பிரிந்து சென்றதும், யாதவர் உளத்திரிபு கொண்டதும்

அரசரின் உள்ளத்தை உலைத்துவிட்டிருந்தன. அவர் தன் தோழரை காணச்சென்றதே அதன்பொருட்டுதான். அவர் உள்ளம் நிலையழிந்துள்ளது” என்றார். “இத்தருணத்தில் அவருடன் நான் இருந்தாகவேண்டும்... அது என் கடன் என்றே உணர்கிறேன்.”

சத்யபாமை அதை தடுத்துவிட்டாள். “நாம் அறியாத பலர் நாளும் கடந்துசெல்லும் ஒரு வாயில் போன்றவர் அவர். நாம் அறிந்தவர்களைக்கொண்டு அதை மதிப்பிடலாகாது. அக்ரூரரே, நம் தலைக்குமேல் எழுந்து நின்றாலும் இந்நகரின் அணிப்பெருவாயிலை நாம் எவரும் காண்பதே இல்லை. அதைக் காண நாம் கடலில் ஊர்ந்து விலகிச்செல்லவேண்டும். அவர் எவரென்று அறிய நாம் காலத்தில் பறந்தகலவேண்டும். பிறிதொரு யுகத்தில் நாம் அவரை ஒன்றென நோக்கமுடியும். முடிவிலா முகங்களினூடாக தன்னை தான் நோக்கிக்கொண்ட அந்த முழுமுகத்தை. அதுவரை அவர் ஆணைகளை தலைக்கொள்வதே நாம் செய்யக்கூடுவது.” அக்ரூரர் பெருமூச்சுடன் “ஆம், தேவி” என்றார்.

# கிராதம் - 9

**[ 6 ]**

முந்நூறாண்டுகளுக்கு முன்பு விருஷ்ணிகுலத்தின் ஒரு பிரிவாகிய கோகிருதம் என்னும் தன் தொல்குடியிடமிருந்து ஏழு பசுக்களையும் மூன்று காளைகளையும் பங்குச்செல்வமாக பெற்றுக்கொண்டு மதனர் என்னும் யாதவர் வடக்காகக் கிளம்பினார். அப்போது அவருக்கு இருபத்தெட்டு வயது. அவர் மணந்த சுதமைக்கு இருபத்தொன்பது. அவர்களுக்கு ஏழு

குழந்தைகள் இருந்தன. அவர்கள் நோக்கிய நிலமெல்லாம் முன்னரே குடியேறிய யாதவர்களுக்குரியவை என மரங்களில் இலச்சினை பொறிக்கப்பட்டிருந்தது. இன்னும் இன்னும் என விலக்கி இருக்கும் இருக்கும் என நம்பி அவர்கள் சென்றுகொண்டிருந்தனர்.

யாதவகுடிகள் விரிந்து கன்று பெருகிய காலம் அது. மேய்ச்சல்நிலங்களுக்கான பூசல்கள் தொடங்கிவிட்டிருந்தன. கோகிருதத்தின் குடியவை கூடி அவர்களுக்குரியதென அமைந்த காட்டில் எங்கு எவர் தங்கள் கன்றுகளை மேய்க்கவேண்டும் என்று நெறியமைத்தது. கன்றுகளின் காதில் அவற்றின் உரிமையாளர்கள் மணிகோத்து அடையாளம் பொறிக்கவும் முறைவைத்து காடுகளை மாற்றிக்கொண்டு எல்லைக்குள் மட்டுமே மேய்க்கவும் ஆணையிட்டது.

மதனர் வளர்த்த காராம்பசு ஒன்று கட்டவிழ்த்துக்கொண்டு அவர் உடன்பிறந்த மூத்தவரின் பசுக்களுக்காக வகுக்கப்பட்டிருந்த புல்வெளியில் புகுந்தது. அது அங்கு மேய்வதைக்கண்ட மூத்தவர் அதை பிடித்திழுத்துச்சென்று பெருமரம் ஒன்றில் கழுத்து இறுகக் கட்டினார். பகலெல்லாம் பசுவைக் காணாது அலைந்த மதனர் அந்தியில் அதை கண்டுகொண்டார். நீரும் புல்லுமின்றி குரலெழுப்ப இயலாது கழுத்திறுகித் தொங்கி நின்ற பசுவைக் கண்டதும் அழுதபடி ஓடிச்சென்று கட்டை அவிழ்த்து பசுவை விடுவித்தார். அதன் கண்களில் வழிந்திருந்த கண்ணீரின்தடம் அவர் நெஞ்சை கொந்தளிக்கச் செய்தது.

சினத்தால் நடுங்கும் உடலுடன் அவர் சென்று தன் தமையன் முன் நின்று “இது முறையா? குலம்புரக்கும் அன்னை உணவும் நீருமின்றி நிற்கச்செய்ய நமக்கு என்ன உரிமை?” என்றார்.

அவ்வுணர்வை புறக்கணித்து “என் எல்லைக்குள் வந்தது உன் பசு” என்று தமையன் சொன்னார். “பசு எவருக்கும் உரிமையல்ல. யாதவர்கள்தான் பசுக்களுக்கு உரிமையானவர். மூத்தவரே, நிலத்தை நாம் பகுக்கலாம், பசுவுக்கு அது ஒற்றைப்பெருவெளியே” என்றார். “நான் என்ன செய்யவேண்டும் என நினைக்கிறாய்?” என்றார் மூத்தவர். “எழுந்து என் பசு முன் தலைவணங்கி பொறுத்தருளும்படி கோருக! பசுவின் பழிகொண்ட குலம் வாழ்வதில்லை” என்றார் மதனர்.

சினம் கொண்ட மூத்தவர் “விலகிச்செல் அறிவிலியே, நீ எனக்கு அறிவுரை சொல்கிறாயா?” என்று கூவியபடி இளையவனை கையால் பிடித்துத் தள்ளினார். மல்லாந்து விழுந்த மதனர் சினம் தலைமீற அருகிருந்த கல்லை எடுத்து தமையன் தலைமேல் ஓங்கி அறைந்தார். அதன்பின்னரே தான் செய்ததென்ன என்று அறிந்து அழுதபடி தமையன் காலில் விழ முன்னால் சென்றார். அவரை உதைத்து உதறிவிட்டு “தந்தைப்பழி கொண்டவனே, நீ இனி இங்கிருக்கலாகாது” என்று தமையன் கூவினார்.

குருதி வழிய தமையன் ஓடிச்சென்று குலமூத்தார் கூடிய அவையில் நின்று கதறி முறையிட்டார். நிலம் வகுத்த எல்லையை மீறியதும் அதைத் தடுத்த தமையனை தாக்கியதும் பெரும்பிழை என அவை வகுத்தது. பங்குச்செல்வத்தைப் பெற்று குலம்விட்டு விலகிச்செல்லும்படி மதனருக்கு ஆணையிட்டது. அவருக்கு தந்தையின் செல்வமெனக் கிடைத்தது பதினேழு பசுக்கள். அவற்றில் பத்து பசுக்களை அடிபட்ட தமையனுக்கு பிழையீடாக அளித்துவிட்டு எஞ்சியவற்றுடன் இரவெழுவதற்குள் குடிநீங்கும்படி சொன்னார்கள் மூத்தார்.

பதினேழு நாட்கள் ஊர்கள் வழியாகவும் குறுங்காடுகள் வழியாகவும் தனக்கென நிலம் தேடி நடந்து களைத்த மதனர் ஒருநாள் மாலையில் ஓர் அத்திமரத்தின் அடியில் தங்கினார். இளமழை சொரிந்த குளிர்மிக்க அவ்விரவில் பாளைக்குடிலை தலைக்குமேல் அமைத்து மரவுரிகளைப் போர்த்தியபடி மனைவியை அணைத்துக்கொண்டு துயின்றார். அவரைச் சூழ்ந்து அவர் அழைத்துச்சென்ற பசுக்கள் நின்றன. அவற்றைச் சூழ்ந்து எருதுகள் நின்றன. காட்டுவிலங்குகள் அணுகாதிருக்க தறியறைந்து மணிகோத்துக் கட்டிய சரடு அவர்களை சூழ்ந்திருந்தது.

காலையில் அவர் கண்விழித்தபோது அவரைச் சூழ்ந்து ஏழு கனிந்த அத்திப்பழங்கள் விழுந்துகிடக்கக் கண்டார். அவ்விடம் திருமகள் உறையும் நிலம் என அவர் உணர்ந்தார். அங்கேயே குடில் ஒன்று கட்டி குடியிருக்கலானார். ஏழு கனிகள் விழுந்த இடத்தில் கல் ஒன்று நாட்டி திருமகளை நிறுத்தி வணங்கினார். மங்கலமஞ்சளும் மலரும் கொண்டு அவளை வழிபட்டாள் அவர் குலமகள். “இது இளையவள் அருளிய இடம். இங்கு அமைவோம். இங்கு தழைக்கும் நம் குடி” என அவர் அவளிடம் சொன்னார்.

அந்நிலத்தில் திருமகள் பொலிந்தாள். கன்றுகள் பெற்றுப்பெருக குடி எழுந்துபரந்தது. சப்தஃபல கன்னிகை என்றே அத்திருமகள் அழைக்கப்படலானாள். அவ்வூரும் சப்தஃபலம் என்று பெயர்கொண்டது. நூற்றெட்டு தலைமுறைகளாக அங்கே ஆபுரந்து அறம்வளர்த்த அத்தொல்குடி மாதனிகர் என்று அழைக்கப்பட்டது. விருஷ்ணிகுலத்தின் அவைகளில் அத்திமரத்தின் இலையை தலைப்பாகையில் சூடியமர்ந்திருக்கும் உரிமை கொண்டிருந்தது.

சப்தஃபலத்தின் தென்மேற்குமூலையில் இருந்த சிற்றாலயத்தில் சிறிய கற்சிலையாக கைகளில் மலரும் அமுதகலமும் சுடரும் கொண்டு அருட்கை மலர்ந்து அமந்திருருந்த சப்தஃபலகன்னிகையே அவ்வூரில் வாழ்ந்த மூன்று கொடிவழிகளுக்கும் பொதுவான குடித்தெய்வம். அன்னைக்கு ஒவ்வொருநாளும் அன்றலர்ந்த புதுமலர்களால் பூசனை செய்யப்பட்டது. புத்தரிசிச்சோறும் மஞ்சள்குழம்பும் படைக்கப்பட்டது. கருவுற்றாலும் ஈன்றாலும் அங்குவந்து வழிபட்டனர். புதுப்பாலை அன்னைக்குப் படைத்தனர். அவர்களின் ஆநிரை காப்பவள் அவள் என்று தொழுதனர்.

முதற்புலரியில் ஊரெழுவதற்கு முன்னர் சப்தஃபலத்தின் இளையவள் எழுந்துவிடுவாள். குறுங்காட்டிலிருந்து நீராவி கலந்த குளிர்காற்றில் பசுந்தழை மணம் மொண்டு ஊர்மேல் நிறைப்பாள். இல்லங்களின் முற்றங்களில் இரவில் பூத்த மலர்களை உதிர்த்துப்பரப்புவாள். காற்று அலைபரவிய புதுப்புழுதித் தெருவில் அவள் காலடித்தடம் தெரியும். இல்லத்துப்பெண்கள் காலையெழுந்து கதவுதிறக்கும்போது மங்கல இளம்வெளிச்சமாக அவள் முற்றத்தை நிறைத்திருப்பாள். அவர்கள் பச்சரிசி மாவால் பசுஞ்சாணிப்பரப்பில் அவள் கால்தடங்களை கோலமாக வரைந்து வைப்பார்கள்.

அன்று இளையவள் தன் கோயிலில் இருந்து எழுந்து வெளிவந்தபோது எதிரே இருண்ட சாலையில் கலைந்த குழலும் தளர்ந்துலைந்த நடையுமாக இளையோன் ஒருவன் வருவதைக் கண்டாள். விடியொளி விழிதுலக்கத் தொடங்கியிருந்தபோதும் அவனைச் சுற்றியிருந்தது அடரிருள் ஒன்று. அவனைத் தொடர்ந்து எலிகள் வந்துகொண்டிருந்தன.

தலைக்குமேல் வௌவால்கள் அவனைச் சூழ்ந்து சிறகடித்தன. அவன் வருவதற்குள்ளாகவே கெடுமணம் கொண்டு காற்று வந்தது.

அன்னை அவன் முன்னால் புன்னகையுடன் நின்று “மைந்தா” என்றாள். அவன் அவளை அலையும் விழிகளுடன் நோக்கி ஒருகணம் நின்று பின் தன் அழுக்கான கையை நீட்டி “விலகு” என ஒதுக்கிவிட்டு கடந்துசென்றான். அவள் “நான் யாரென்று அறிவாயா?” என்றபடி அவன் பின்னால் செல்ல அவன் இயல்பாக காறித்துப்பிய எச்சில் அவள் முகத்தில் விழுந்தது. திகைத்து அவள் அங்கேயே நின்றுவிட்டாள். அவன் திரும்பி நோக்காமல் நடந்து மறைந்தான்.

நின்றிருக்கவே அவள் உடல் கருமைகொண்டது. அவள் வலத்தோள்மேல் காகம் ஒன்று வந்தமர்ந்தது. அவள் இனிய புன்னகை மறைந்து கரிய கோரைப்பற்கள் எழுந்தன. கனைத்தபடி கழுதையொன்று அவளருகே வந்து நிற்க அவள் அதன் மேல் ஏறியமர்ந்தாள். கையில் அவள் கொண்டிருந்த வெண்தாமரை மலர் துடைப்பமாக மாறியது. அவள் உடலெங்கும் பரவியிருந்த ஒளி மெல்ல இருண்டு ஒட்டடைப்படர்வாகியது.

**[ 7 ]**

கசியபப் பிரஜாபதிக்கு அரிஷ்டையெனும் துணைவியில் பிறந்த பதினாறாயிரம் கந்தர்வர்களில் மூத்த நூற்றெண்மரில் ஒருவனாகிய சித்ரசேனன் தன் காதல் மனைவியாகிய சந்தியையுடன் விண்முகில் ஒன்றில் யாழுடன் அமர்ந்து காதலாடினான். அந்தியெழும் வேளையில் காற்றில் பனித்துளியென விண்ணில் பொன்னிறத்தில் திரண்டு வரும்

பேரழகி அவள். அந்தி இருண்டு விண்ணின் விழிகள் திறக்கும்போது அவனை மொழியால் சூழ்ந்து, மேனியால் தழுவி, காமத்தால் புதைத்து அவள் மகிழ்விப்பாள். மழைக்கால மலைகளைப்போல அவனிலிருந்து குளிரருவிகள் ஒளியுடன் எழும். அத்திமரம் கனிகொண்டதுபோல அவன் வேரும் தடியும் கிளையும் இனிமைகொண்டு நிறைவான்.

ஆனால் முதற்சூரியக் கதிர் எழுவதற்குள் அவள் உடல்கரைந்து உருமாறத்தொடங்குவாள். அவள் உடலின் தோலில் சுருக்கங்களும் மடிப்புகளும் உருவாகும். முகமெங்கும் வரி படரும். உடல்கூன கண்கள் பஞ்சடைய கூந்தல் நரைத்துக்குறுக முதுமகளாக ஆவாள். அவளுக்கு அப்போது வலிகை என்று பெயர். இருவுருக்கொண்ட ஒருமகள் அவள் என்று சித்ரசேனன் அறிந்திருக்கவில்லை. இரவில் ஒருமுகமும் பகலில் மறுமுகமும் கொண்ட அவளுடைய எழில் முகத்தை மட்டுமே அவன் கண்டான்.

முன்பு அந்திப்பொழுதில் முகிலில் கனிந்த மழைத்துளி ஒன்று செவ்வொளிபட்டு பொன்னென்றாகியது. அவ்வழி விண்ணில் கடந்துசென்ற பிரம்மன் புன்னகைத்து அவளை ஒரு கன்னியென்றாக்கினான். கைகூப்பி நின்றிருந்த கன்னியிடம் “பிந்துமதி என்று எழுந்தவள் நீ. இசைகொண்டு உன்னை மீட்டும் கந்தர்வன் ஒருவனுக்கு காதலியாகுக!” என்று வாழ்த்தினான். விண்ணில் ஒளிவிட்டு நின்றிருந்த அவளை இரு தேவியர் அணுகி இருகைகளையும் பற்றிக்கொண்டனர். வலக்கையைப் பற்றியவள் திருமகள். “நான் இளையோள். உன்னில் எழிலையும் மங்கலத்தையும் நிறைப்பவள்” என்றாள். இடக்கையைப் பற்றியவள் இருள்மகள். “நான் தமக்கை.

உன்னை நீ மட்டுமே அறியும் பேராற்றல் கொண்டவளாக ஆக்குவேன்" என்றாள்.

இருவரில் ஒருவரைத் தெரிவுசெய்ய முடியாது பிந்துமதி திகைத்தாள். இருவரும் இரு கைபற்றி இழுக்க அவள் இரண்டாகப் பிரிந்தாள். ஒருத்தி பேரழகுகொண்ட சந்தியை. பிறிதொருத்தி முதுமைகொண்டு சுருங்கிய வலிகை. அந்தியில் எழுந்தவள் சூரியனை அறியவே இல்லை. பகலில் உழன்றவள் விண்மீன்களை பார்த்ததே இல்லை. ஆனால் சந்தியையைக் கூடும் காமத்தின் ஆழத்தில் சித்ரசேனன் வலிகையைக் கண்டான். அழகைப் பிளந்தெழுந்த ஆற்றலை உணர்ந்தான்.

அன்றும் அவளுடன் காமத்தில் திளைக்கையில் ஆழத்து அலைகளில் ஆயிரம் கைகளும் பல்லாயிரம் கண்களும் கொண்டெழுந்த வலிகையின் விழைவின் பேராற்றலை உணர்ந்து திகைத்துத் திணறிக் கொண்டாடி மூழ்கி எழுந்து மீண்டு வந்து மல்லாந்து படுத்து அன்று அவனுடன் உரையாட எழுந்த விண்மீனை நோக்கிக் கொண்டிருந்தான். அவனருகே புரண்டுபடுத்த சந்தியை "நீங்கள் என்னுடன் இருக்கையில் பிறிதொருவரிடம் செல்கிறது உங்கள் உள்ளம். என் கைகளுக்குச் சிக்கிய உடலுக்குள் உள்ளம் இல்லை என்பதை ஒருகணம் உணர்ந்தேன்" என்றாள்.

"ஆம், ஆழத்தில் நீ பிறிதொருத்தியாக ஆகிறாய். அந்த ஆற்றலை எதிர்கொள்கையிலேயே என்னுள்ளும் ஆற்றல் எழுகிறது" என்றான் சித்ரசேனன். "அது நானல்ல" என்று அவள் சீறினாள். "அதுவும் நீயே. நீயென்று நீ நிகழ்த்துவது மட்டும் அல்ல நீ" என்று அவன் நகைத்தான். அவள் சினத்துடன் அவனை நோக்கிக்கொண்டு அமர்ந்திருந்தாள். அவன் முகத்தின் உவகைக்குறி அவளை எரியச்செய்தது. பின்னர் குனிந்து அவன்

செவிகளுக்குள் “நான் அவளென்று ஆனால் உங்களுக்கு பிடித்திருக்குமா?” என்றாள். அவள் வினாவை நன்குணராத சித்ரசேனன் “ஆம்” என்றான். அவள் மூச்சில் முலைகள் எழுந்தமைய அவனையே நோக்கிக்கொண்டிருந்தாள்.

முதற்கரிச்சான் குரலெழுப்புவதற்குள் விழித்துக்கொண்டு அவன் இதழ்களை முத்தமிட்டு எழுப்பி விடைகொண்டு அகல்வது அவள் வழக்கம். அன்று அவள் வஞ்சமெழுந்த விழிகளால் அவனை நோக்கிக்கொண்டு அமர்ந்திருந்தாள். கீழ்த்திசையில் முதல்புள் காலை என்றது. முகில்குவையின் நுனிகளில் செம்மை படரத் தொடங்கியது. அவள் புறங்கைகளில் நரம்புகள் புடைத்தெழுந்தன. கண்களுக்குக் கீழே தோல்வளையங்கள் கருகியிறங்கின. முகவாயில் ஆழ்ந்த வாய்வரிகள் விரிசல்போல் ஓடின. நெற்றியில் கோடுகள் படிந்தன.

அவனை முத்தமிட்டு “எழுக!” என அவள் சொன்னபோது அவள் வலிகையென்றாகிவிட்டிருந்தாள். அவன் விழித்து கையூன்றி எழுந்து அவளை நோக்கி “யார் நீ?” என்று கூவினான். “நான் மூத்தவளாகிய வலிகை. சந்தியையின் மறுமுகம்” என்றாள். “இல்லை, நீ எவரோ. நான் உன்னை அறியேன்” என்று அவன் கூவியபடி எழுந்தான். அவள் அவன் ஆடைபற்றி நிறுத்தி “நீ என்னை அறிவாய்” என்றாள். அவள் விழிகளில் எரிந்த விழைவைக் கண்டதுமே அவன் அறிந்துகொண்டான். “ஆம்” என்றான். அவனிலும் அவ்விழைவு பற்றிக்கொண்டது.

அவளுடன் அவன் காமத்திலாடினான். எரி எரியை ஏற்று எழுவதுபோன்ற காமம். கீழே சித்ரகூடமெனும் காடு புள்ளொலியும் சுனைகளில் மணியொளியும் என நிழல்கரைந்து விடிந்துகொண்டிருந்தது. காதலில் கொண்டிருந்த எல்லா

நுண்மைகளையும் அழகுகளையும் அவன் துறந்தான். இன்சொற்களும் நெகிழுணர்வுகளும் அகன்றன. வன்விழைவே இயல்பென்றான விலங்கென மாறினான். கூடி முயங்கி மூச்சிரைக்க திளைத்த பொழுதில் அவள் வாயிலிட்டு அளித்த வெற்றிலைச்சாற்றை தன் வாயில் வாங்கி மென்று திரும்பி நீட்டி நிலத்துமிழ்ந்தான்.

[ 8 ]

கௌசிக குலத்தில் பிறந்தவரும் விசுவாமித்திர மாமுனிவரின் கொடிவழி வந்தவருமாகிய காலவ முனிவர் கின்னரநாட்டின் மேல்விளிம்பில் அமைந்த சித்ரகூடம் என்னும் பசுங்காட்டின் நடுவே குடில் அமைத்து தன் பதினெட்டு மாணவர்களுடன் தவமியற்றி வந்தார். ஆறாக்கடுஞ்சினம் கொண்ட முதல்முனிவரின் அவ்வியல்பையே தானும் கொண்டவர் என்று அவர் அறியப்பட்டிருந்தார்.

ஆவணி மாதக் காலை ஒன்றில் காலவர் தன் முதல் மாணவர் மூவருடன் அக்காட்டின் நடுவே ஓடும் சித்ரவாகினி என்னும் ஆற்றின் கரைக்கு கதிர்வணக்கத்திற்காக சென்றார். நீராடி, சடைமுடிக் கற்றைகளை தோளில் பரப்பி, கிழக்கு நோக்கி இடைவரை நீரில் நின்று, எழுசுடர் கொண்டிருந்த செம்மையை தன் முகத்தில் வாங்கி, சூரியனை வழுத்தும் வேதச்சொல்லை ஓதி, நீரள்ளி கதிருக்கு நீட்டி கை மலர்ந்தபோது அதில் உமிழப்பட்ட வெற்றிலைச்சாறு வந்து விழுந்தது.

பறவை எச்சம் போலும் என்று எண்ணி அதை நோக்கிய காலவர் அறிந்து அருவருத்து கையை உதறி அதை நீரில் விட்டார். கைகளை மும்முறை கழுவியபடி தலை நிமிர்ந்து வானைப் பார்த்தபோது கடந்து சென்ற முகில் ஒன்றின் மேல்

அரைமயக்கில் படுத்திருந்த கந்தர்வனின் கழலணிந்த காலை கண்டார். அப்பால் அக்காலுடன் பிணைந்ததென கந்தர்வப் பெண்ணொருத்தியின் கால் தெரிந்தது.



நிகழ்ந்ததென்ன என்று அக்கணமே உணர்ந்த காலவர் குனிந்து நீரில் ஒரு பிடி அள்ளி வான் நோக்கி நீட்டி “நீ எவராயினும் ஆகுக! என் தவத்தூய்மை மேல் உமிழ்ந்த உன்னை இன்று நாற்பத்தொரு நாள் நிறைவுறுவதற்கு முன் எரித்தழிப்பேன்.

உன் பிடி சாம்பலை அள்ளி நீறென உடலணிந்து இங்கு மீண்டு என் தவம் தொடர்வேன். ஆணை! ஆணை! ஆணை!” என்றார். அவருடைய மூன்று மாணவரும் குனிந்து நிலம் தொட்டு “புவி சான்றாகுக! நிலை சான்றாகுக! வேர் சான்றாகுக!” என்றனர்.

சினம் எரிந்த உடலுடன் காலவர் சென்ற வழியெல்லாம் தளிரிலைகள் கருகின. புட்கூட்டம் அஞ்சிக் கூவி வானிலெழுந்தது. தன் குடில் மீண்ட காலவர் தனியறைக்குள் சென்று புலித்தோல் விரித்து அதன் மேல் அமர்ந்து விழிமூடி ஊழ்கத்தில் ஆழ்ந்தார். அவர் அறைக்கு வெளியே மாணவர்கள் கைகூப்பி காத்து நின்றனர். ஊழ்கத்தில் தன் இதழ்களை ஒவ்வொன்றாக விரித்து மூதாதையர் அளித்த முதற்சொல்லை மீட்டார். அதன் சரடு வழியாகச் சென்று அங்கு அடைந்து உச்சிநின்று கூவினார். “என் தவத்தை இழிவு செய்தவன் எவன்? தெய்வங்களே இங்கெழுந்து அவனை காட்டுங்கள்!”

தன்னுள் எஞ்சிய இறுதி வேதச்சொல்லெடுத்து ஆணையிட்டார். “இங்கு எழுக என் கையின் அவிகொண்ட எரி!” அவர்முன் அகல் சுடரிலிருந்து எழுந்து திரைச்சீலையை பற்றிக்கொண்டு நின்றெழுந்த அனலவன் “முனிவரே, அவன் பெயர் சித்ரசேனன். விண்ணில் தன் துணைவியுடன் காதல்கொண்டிருக்கையில் நிலைமறந்தான்” என்றான். காலவர் சீற்றத்துடன் “எப்போதும் நிலைமாறாதவனே விண்ணூரும் தகுதிகொண்டவன். அவன் கால்கீழே வேதச்சொல் ஓதும் முனிவர் வாழ்வதை அவன் அறிந்திருக்கவேண்டும்” என்றார்.

அனலோன் “ஆம், ஆனால் காதலென்பது கட்டற்றது அல்லவா?” என்றான். “காலவரே, இக்காடு விண்ணில் அவன் கொண்ட காதலின் பொருட்டு மண்ணில் அவனால் உருவாக்கப்பட்டது. ஆயிரமாண்டுகாலம் தன் யாழை மீட்டி அதன் சுதியின்

அலைகளிலிருந்து இப்பசுமரப் பெருவெளியை அவன் படைத்தான். இங்கு மரங்களை சமைத்து, சுனைகளையும் குளிர்ந்த பாறைகளையும் உருவாக்கினான். விழிமின்னும் மான்களும் தோகை விரிக்கும் மயில்களும் பாடும் குயில்களும் அவனால் உருவாக்கப்பட்டதே. இங்கு ஆண்டு முழுக்க வெண்குடையென நின்று கனிந்து மழை பெய்து கொண்டிருக்கும் முகில் அவன் இல்லம். தன் நூற்றியெட்டு தேவியருடன் அவன் இங்கு வசிக்கிறான். வெல்லற்கரியவன். விண் துளிகளுக்கு நிகரான அம்பு பெய்யும் ஆற்றல் கொண்டவன்."

காலவர் சினம் மேலும் கொழுந்துவிட கூவினார் "என் சொல் மாறாது. இவன் செயலால் என் தவம் கொண்ட இழிவு இவன் அழியாமல் அணையாது. அவனை நான் வென்றாக வேண்டும்." எரியன் "முனிவரே! அவனுடைய காட்டில் குடியேறியிருப்பது தாங்கள்தான். தன் இன்பத்தை பெருக்கிக்கொள்ளும் பொருட்டு குயிலுக்கு காகத்தையும் மயிலுக்குக் கோழியையும் மானுக்குப் புலியையும் குளிரோடைக்குக் காட்டெரியையும் அவனே உருவாக்கினான். தன் காமத்திற்கு மாற்றாக இங்கு உங்களை அவன் குடியேற்றினான். முற்றும் துறந்து தவம் செய்யும் பொருட்டு வெற்றுடலுடன் நீங்கள் இக்காட்டின் எல்லைக்கு வந்தபோது இவ்வழியே என்று கூவும் வழிகாட்டிப் பறவையாக உங்கள் முன் தோன்றி இங்கு அழைத்துவந்தவன் அவன்தான்" என்றான்.

"இக்காடல்ல நான் குடியிருக்கும் இடம். என் உள்ளத்தில் எழுந்த வேதச்சொல் விளையும் வெளியில் அமர்ந்திருக்கிறேன். பிறிதொன்றும் எனக்கொரு பொருட்டல்ல" என்று காலவர் சொன்னார். "பொறுத்தருள்க, முனிவரே! அவனை இங்கு

அழைத்து வருகிறேன். உங்கள் வேள்விக்காவலன் என்று நின்றிருப்பான். உங்கள் தாள் பணிந்து பிழை பொறுக்குமாறு அவன் கோருவான்” என்றான் அனலோன். “இல்லை, நான் விழைவது அவன் எரிநீறு மட்டுமே” என்று காலவர் சொன்னார்.

“ஆம், அவன் அறியாமல் இப்பிழை ஆற்றப்பட்டிருக்கலாம். ஆனால் அவன் உமிழ்ந்த மிச்சில் என் மீதல்ல, நான் கொண்ட தவம் மீது மட்டுமல்ல, எந்தையின் மீதும்கூட. என் முதுமூதாதை விசுவாமித்திரர் மீது விழுந்த வாய்நீர் அது. அனலோனே, மானுடர்க்கரிய அருந்தவம் இயற்றி படைப்பவனுக்கு நிகரென பேருரு கொண்டபோதும் அந்தணர் அல்ல என்பதனால் ஆயிரம் அவைகளில் இழிவுபட்டவர் என் மூதாதை விசுவாமித்திரர். இன்றும் அவ்விழிவின் ஒரு துளி சூடியே நானும் என் குலத்தோரும் இம்மண்ணில் வாழ்கிறோம்.”

“என் கையில் விழுந்த அவ்வெச்சில் இங்கு நாளை வேதியரால் இளிவரலாக விரியுமென்பதை நான் அறிவேன். அது சூதர் சொல்லில் எப்படி வளரும் என்றும் நானறிவேன். அவனைப் பொசுக்கிய சாம்பல் ஒன்றே அதற்குரிய மறுமொழியாகும். கௌசிககுலத்தின் தவத்திற்குச் சான்றென அது நின்றிருக்கட்டும் கதைகளில்” என்று காலவர் சொன்னார். “இனி சொல்லாடவேண்டியதில்லை. நீ செல்லலாம்” என்றார்.

அனலோன் “அவ்வண்ணமெனில் உங்கள் சொல்வல்லமையால் அவனுடன் போர்புரிக! முனிவரே, மண்ணில் எவரும் அவனை வெல்ல முடியாதென்று அறிவீர்” என்றான். காலவர் “விண்ணில் ஒருவன் அவனை வெல்ல முடியுமென்றால் மண்ணிலும் ஒருவன் அவனை வெல்ல முடியும். யாரெனக் காண்கிறேன்” என்று சூளுரைத்தார். “அவன் படைக்கருவி யாழில் அவன்

இசைக்கும் இசை. வில் செல்லாத தொலைவுக்கு சொல் எட்டா சேய்மைக்கு செல்லும் ஆற்றல் கொண்டது இசை... அவனை வெல்லமுடியாது" என்றபடி அனலவன் அணைந்து கரியென எஞ்சினான்.

அன்றாட அறச்செயல்களை நிறுத்தி, நீரன்றி உணவுகொள்ளாது அவ்வறைக்குள் அமர்ந்து தன்னுள் நிறைந்து புடவிப்பேரோவியத்தை விரித்து விரித்து பறந்து புள் என தேடி ஏழுநாட்கள் அமர்ந்திருந்த காலவர் இளைய யாதவரை கண்டடைந்தார். அவரை முழுவடிவில் கண்டதுமே வானிலிருந்து அறுந்து மண்ணறைந்து விழுந்தவர்போல் அதிர்ந்து அலறினார். விழிதிறந்து உவகையுடன் "ஆம்!" என்று கூவியபடி எழுந்தோடி கதவைத் திறந்து வெளிவந்தார். தன் மாணவர்களிடம் "அவனே... ஆம், அவனே!" என்று கூச்சலிட்டார்.

அவர்கள் அவரை சூழ்ந்துகொண்டனர். "அவனே வெல்வான். அவனை வெல்லல் மூன்று இறைவருக்கும் அரிது" என்று காலவர் கொந்தளித்தார். "இப்புவியில் விண்ணின் துளியென வந்துதிர்ந்தவன். மண்ணையும் முழுதும் வெல்லும் பேராற்றல் கொண்டவன். அவனே அக்கந்தர்வனையும் வெல்ல முடியும்" என்றார். முதல் மாணவனாகிய சலஃபன் "அவர் யாதவ அரசரல்லவா?" என்றான். "அவன் யாரென நான் அறிவேன். அவனால் என்ன இயலுமென அவனும் அறிவான். கிளம்புங்கள்" என்று சொல்லி காலவர் அங்கிருந்து புறப்பட்டார்.

# கிராதம் - 10

[ 9 ]

இளைய யாதவரைப் பார்ப்பதற்காக தன் பன்னிரு மாணவர்களுடன் காலவர் காட்டிலிருந்து கிளம்பினார். உசிநாரத்தைக் கடந்து திரிகர்த்தத்துக்குள் நுழைந்து வாரணவதம் சென்று ஏழு சிந்துப்பெருக்குகளைத் தாண்டி யாதவ நிலத்திற்குள் நுழைந்தார். சப்தஃபலம் என்னும் யாதவச் சிற்றூரில் இளைய யாதவர் தங்கியிருப்பதை அறிந்து அங்கு சென்றார்.

செல்லும் வழியிலேயே இளைய யாதவரைப் பற்றிய செய்திகளை கேட்டறிந்தார். தமையனுடன் கொண்ட பூசலாலும் யாதவ குடிப்போர்கள் அளித்த கசப்பாலும் உளம் நைந்த இளைய யாதவர் அங்கு கராளசிவத்தை பூசனை செய்து தனிமையில் வாழ்வதாகவும் எவரையும் சந்திப்பதில்லை என்றும் வழிப்போக்கனாக சந்தித்த சூதன் சொன்னான்.

சப்தஃபலத்தின் வாயிலில் அவரைத் தடுத்த காவலர்தலைவன் சதமன் “எவரும் தன்னை சந்திக்க வேண்டியதில்லை என்று இளைய யாதவரின் ஆணை, முனிவரே” என்றான். காலவர் தன்னை அவ்வாறு ஒரு காவலன் தடுப்பான் என்று எதிர்பார்க்கவில்லை. அவருடைய முதல்மாணவன் சலஃபன் முன்னால் சென்று “கௌசிககுலத்து காலவ முனிவரை அறிந்துகொள்க! யாதவ அரசருக்கு அருள்புரியும்பொருட்டு இங்கு வந்துள்ளார்” என்றான். “எவராயினும் உள்ளே செல்ல ஒப்புதலில்லை” என்று சதமன் சொன்னான். “நீங்கள் தேடிவந்த இளைய யாதவர் உள்ளே இல்லை என்று மட்டும் அறிக!”

“நான் சந்திப்பதற்கு பிறிதொருவரும் இல்லை. அதன்பொருட்டே வந்தேன், சந்தித்த பின்பே மீள்வேன்” என்றார் காலவர். சதமன் “எனக்களிக்கப்பட்ட ஆணைகளை நான் மீறலாகாது, முனிவரே. என்மீது நீங்கள் முனிந்தாலும் நன்றே”

என்றான். “சிறிதோ பெரிதோ தவமே என் வழி” என புன்னகையுடன் சொன்ன காலவர் அக்காவல் நிலைக்கு வெளியே முற்றத்தில் தன் மாணவர்களுடன் அமர்ந்தார். “இதனால் பயனில்லை, முனிவரே” என்றான் சதமன். “தவத்திற்கு கொடுந்தெய்வங்களும் இரங்கியாகவேண்டும்” என்றார் காலவர்.

முதிய காவலரான கலிகர் வந்து பணிந்து “புரிந்து கொள்ளுங்கள், முனிவரே. தமையனுடன் கொண்ட உளப்பிரிவால் நிலையழிந்திருக்கிறார் அரசர். இங்கு முழுத் தனிமையில் புற்றுசூழ்ந்த தவநெறியர்போல் அமர்ந்திருக்கிறார். அமைச்சரோ சுற்றமோ அவரை அணுகுவதில்லை. தேவியருக்கும் அவரைப் பார்க்க ஒப்புதல் அளிக்கப்படவில்லை. இங்கிருப்பவர் காலமுகம் கொண்ட கடுஞ்சைவரைப்போல இங்குள அனைத்திற்கும் புறம் காட்டியவர்” என்றார்.

“எவ்வுருக்கொண்டாலும் இப்புவியில் எனக்கென இருப்பவன் அவன் ஒருவனே” என்றார் காலவர். கண்களை மூடி மடியில் கைவைத்து அமர்ந்தார். நீரும் உணவுமின்றி மூன்று நாட்கள் அக்காவல் முற்றத்தில் அவரும் மாணவர்களும் காத்திருந்தனர். அஞ்சியும் பதறியும் சப்தஃபலத்தின் யாதவர் அவர்களை வந்து பார்த்துச்சென்றனர். “அரசரிடம் சென்று சொல்வதா?” என்றான் சதமன். “அவருக்கு இன்று செவிகளே இல்லை” என்றார் கலிகர். “தவத்தோர் முனிந்து சொல்லேவினால் இச்சிற்றூர் அழியும். அவர் எரிசினத்துக்குப் புகழ்பெற்ற விஸ்வாமித்திரரின் சொல்மைந்தர்” என்றான் சதமன். “அவர் தன் தவத்தால் அரசரை அவர் வாழும் இருளுக்குள் இருந்து எழுப்பினால் அது நன்றே” என்றார் கலிகர்.

மூன்றாவது நாள் காலையிருளுக்குள் இலைகள் சூடிய பனித்துளிகள் உதிரும் ஒலி மட்டும் எழுந்துகொண்டிருந்த வேளையில் நுண்அழைப்பு ஒன்றால் இழுத்துவரப்பட்டவர் போல திறந்து கிடந்த கோட்டைக்கதவு வழியாக நகருக்குள் இருந்து கரிய உடலுடன் தளர்ந்த நடையுடன் இளைய யாதவர் வெளியே வந்தார். முன்னரே கண்டிராதபோதும் தொலைவிலேயே அவர் யாரென உணர்ந்து காலவர் எழுந்து கைகூப்பினார். அதன்பின்னரே அவரைக் கண்ட காவலர் காலைத்துயில் கலைந்து எழுந்து நின்று தலைவணங்கினர்.

எலும்புகள் புடைத்து கரியும் அழுக்கும் படிந்த தோலுக்குள் அசைந்தன. தேம்பிய தோள்களில் பரவிய குழலில் சருகுப்பொடியும் புழுதியும் படிந்திருந்தன. ஒட்டடைபோன்ற தாடி முகத்தை மூடியிருந்தது. தளர்ந்து நனைந்த இமைகளுக்குள் கண்கள் நிலம் நோக்கி சரிந்திருந்தன. அவரை அங்கே எதிர்பார்க்கவில்லை என்பது தெரிந்தது. காலவர் "யாதவர்க்கரசே, நீ எவரென உணர்ந்தபின்னரே வந்தேன்" என்றார்.

"இங்கு நான் அரசு துறந்து அமைகிறேன். யாதவ மன்னனாக தங்களுக்கு நான் அளிக்கும் எதுவும் இல்லை. துவாரகையை ஆள்பவள் யாதவப் பேரரசி சத்யபாமை" என்றார் இளைய யாதவர். அவர் திரும்பிச் செல்லும்படி கைகாட்டிவிட்டு திரும்பினார். காலவர் "நான் பார்க்க விழைந்தது யாதவனை அல்ல" என்றார். இருவரும் ஒருகணம் ஒருவரை ஒருவர் நோக்கிக் கொண்டனர். அவர் நெஞ்சு திடுக்கிட்டது. "நான் காண விழைந்தது பெருங்காலத் தோற்றம் கொண்டெழும் விராடனையே" என்று அவர் சொன்னார். "உம்" என இளைய யாதவர் உறுமினார்.

பந்த ஒளியில் அவர் நிழல் நீண்டு விழுந்து கிடப்பதை அப்போதுதான் காலவர் கண்டார். அவர் விழிகள் விரிந்தன. திரும்பி அவர் முகத்தை நோக்கி கைகூப்பி “எனக்கு அருள்க, இருளே! என் பழி நீக்குக, பேராற்றலே!” என்றார். அவர் விழிகள் மெல்ல காலவரை ஏற்றுக்கொண்டன. “உம்” என மீண்டும் உறுமியபடி அவர் தலையை அசைத்தார். “சொல்க!” என்றார். அவரை அஞ்சி காலவரின் மாணவர்கள் விலகி நின்றனர். எழுந்த காற்றில் பந்தச்சுடர் ஒன்று நீண்டுபறக்க எதிர்த்திசையில் எழுந்த பெருநிழலைக் கண்டு ஒருவன் அஞ்சி “ஆ!” என்றான்.

காலவர் “என் மூதாதையின் பெயர் கொண்ட இழிவை நீ அறிந்திருப்பாய். ஷத்ரியக்குருதி என்று இன்றும் வேதச்சொல்லவைகளில் நாங்கள் இரண்டாம் நிரையில் அமரவைக்கப்படுகிறோம். அச்சொல்லை வளர்க்கும் செயலொன்று நிகழ்ந்தது. அப்பழியை தீர்க்க வேண்டுமென்று கோருகிறேன்” என்றார். அவர் “உம்” என முனகினார். நிகழ்ந்ததை காலவர் சொன்னார். “அவன் செய்தது ஏனென்று நானறியேன். என் குலக்குறையின் பொருட்டே நான் இழிவு படுத்தப்பட்டேன் என்று உணர்கிறேன்.”

கருகிய இதழ்கள் பல்காட்டி விரிய இளைய யாதவர் புன்னகைத்தார். “நான் அறிவேன்” என்றார். காலவர் “எப்படி?” என்றார். “நான் அதை நிகழ்த்தினேன்” என்று அவர் சொன்னார். அவர் உதடு அசையவில்லை என்று அவர் விழிமயங்கியது. அவர் பின்னமர்ந்து பிறிதொருவர் பேசியதுபோலத் தோன்றியது. “என் இரு கைகளையும் விரித்து சூரியனுக்கு நான் அளித்த நீர்மேல் காறி உமிழ்ந்தான் அவன். அவனைக்

கொன்று எரித்து அச்சாம்பலைச் சூடாது இனி நான் தவம் இயற்றுவதில்லை என்று உறுதி கொண்டேன்."

"இளையோனே, முனிவரின் தவம் பேணுதல் அரசரின் கடமை என்று நீ அறிந்திருப்பாய். என் தவக்காவலனாக உன்னைத் தெரிவு செய்தேன்" என்றார் காலவர். "ஆம்" என்று அவர் நீள்மூச்சுடன் சொன்னார். அவர் விழிகளை நோக்குவதையே தவிர்த்தார். உடலெங்கும் பிறிதொன்று நின்று தவிப்பதுபோல் ஒரு அசைவு ஓட எழுந்துகொண்டார். "உன் சொல் தேடுகிறேன், யாதவனே" என்றார் காலவர். "அவனை எரித்தழிப்பேன். உங்களுக்கு நீறளிப்பேன்" என்று அவருக்குப் பின்னாலென ஒரு குரலெழுந்தது.

இளைய யாதவர் திகைத்தவர் போல காலவரை நோக்கி "என்ன?" என்றார். "அவனை எரித்தழிப்பதாக சொல்லளித்தாய்" என்றார் காலவர். விழிகள் சற்று சுருங்க தலை நடுநடுங்க கூர்ந்து நோக்கிய இளைய யாதவர் "அவன் யார்?" என்றார். வியப்புடன் ஒருகணம் எண்ணி பின் எழுந்து காலவர் "சித்ரசேனன் என்று பெயர் கொண்ட கந்தர்வன். விண்முகிலில் வாழ்பவன். அங்கு தன் இரு தேவியருடன் குலாவி அமைந்து விழித்தெழுந்தபோது என் மேல் எச்சில் உமிழ்ந்தான்" என்று புதியவனிடம் என மீண்டும் சொன்னார்.

"நன்று" என்றார் இளைய யாதவர். அவர் விழிகள் நிலையற்று உருண்டு கொண்டிருந்தன. விரல்கள் அறியாத எதையோ தொட்டுத்தொட்டு மீட்டுவன போல் அசைந்து கொண்டிருந்தன. "தங்கள் ஆணையை சென்னி சூடுகிறேன். அவனைக் கொன்று அனலூட்டும் பொறுப்பை நான் ஏற்கிறேன். இது என் வஞ்சினம்" என்றார். காலவர் அங்கிருந்து கிளம்பிச்

சென்றுவிடவேண்டுமென்னும் உணர்வையே அடைந்தார். “உன் சொற்களை நிலம் சான்றாக்கி ஏற்கிறேன்” என்றார்.

அவர் திரும்பிச்செல்லும்போது காலவர் ஓர் அடி முன்னால் வைத்து “இன்று பதினேழாவது நாள். நாற்பத்தொரு நாள் முடிவில் அவனை எரித்த சாம்பலை என் உடல் அணியவேண்டும். இல்லையேல் நான் எரிபுகுந்து மறைவேன்” என்றார். இளைய யாதவர் திரும்பாமல் ”அது என் வஞ்சினமும் கூட” என்றார். தலைவணங்கி “என் குரு மரபும் சொல் மரபும் உனக்குத் துணை நிற்கும், யாதவனே. ஆம், அவ்வாறே ஆகுக!” என்றார் காலவர்.

தலைவணங்கி அவ்வாழ்த்தை ஏற்காது, திரும்பி ஒரு சொல்லும் பேசாது அவர் திரும்பிச் சென்றார். அருகே நின்றிருந்த முதல் மாணவன் சலஃபன் “அவரால் வெல்ல முடியுமா?” என்றான். “அவனால் மட்டுமே வெல்ல முடியும்” என்றார் காலவர். “ஆசிரியரே, தாங்கள் சொன்னதை அவர் சரியாகக் கேட்கவில்லை என்றே நினைக்கிறேன். தன்னுள் உழலும் ஒன்றுக்குள் சிக்கி உழன்று கொண்டிருந்தவர் தாங்கள் சொல்லி முடிப்பதற்குள்ளேயே சொல்லளித்து எழுந்துவிட்டார்” என்று சலஃபன் தயங்கியபடி சொன்னான்.

“ஆம், தான் அளித்த வாக்கு என்ன என்று இன்னும் அவன் அறிந்திருக்கவில்லை. வாக்களித்தது அவனல்ல” என்றார் காலவர். “சித்ரசேனன் எவர் என்று அறிந்த பின்னரே அவன் முழுதுணர்வான். ஆனால் அவன் சொல் நின்றிருக்கும்.” புன்னகையுடன் சலஃபனின் தோளில் கை வைத்து “ஒருவேளை அதுவும் நன்றென்றே ஆகலாம். இன்று அவன் இருக்கும் செயலற்ற நிலையிலிருந்து மீள்வதற்கு இப்போர் ஒரு வழியாக ஆகக் கூடும். யாரறிவார்? இவையனைத்தும் அதன் பொருட்டே

என்றிருக்கவும்கூடும். செயலும் விளைவும் மறுசெயலும் என பின்னிச் செல்லும் இப்பெரு வலையில் ஒரு கண்ணியை உணர அனைத்தையும் உணர்ந்தாக வேண்டும் என்பர்" என்றார்.

அன்றே தன் மாணவர்களுடன் சித்ரகூடத்திற்கு திரும்பிச்சென்றார் காலவர். தன் முன் அனலவனை எழுப்பி "இங்கு திகழ்க, எரியே! என் வஞ்சினம் நிறைவேற்றும் மானுடனை கண்டுகொண்டேன். துவாரகையின் இளையோன் சொல்பெற்று மீண்டுள்ளேன். என் குடிமேல் விழுந்த எச்சிலின் பொருட்டு விண்ணாளும் கந்தர்வனை எரித்தேன். அச்சாம்பலைச் சூடி எழுந்தேன். இனி வேள்விக்களங்களில் எல்லாம் இந்நிகழ்வுக்கு நீயே சான்று" என்றார்.

"ஒருவேளை என் சொல் திகழவில்லை என்றால் வெஞ்சாம்பலாக ஆகி மறைபவன் நான். என் ஊனுடலை உனக்கு அவியாக்குவேன். எரிந்தெழுந்து என் மூதாதையர் வாழும் உலகுக்கு என்னை கொண்டுசெல்க!" என்றபின் புலித்தோலை விரித்து அதன்மேல் மலரமர்வில் உடல் நிறுத்தி அமர்ந்து விழிமூடினார்.

**[ 10 ]**

மாலைக்கதிர் கடலில் பெய்து அணைந்ததும் தன் மென்முகில் சேக்கையில் சித்ரசேனன் துயிலெழுந்தான். முன்னரே எழுந்த அவன் தேவி சந்தியை பூத்த காட்டில் பரவி மலர்மணத்தையும் மகரந்தங்களையும் அள்ளிக்கொண்டு வந்து அவனுக்குச் சுற்றும் பரப்பி அவன் துயிலுக்குள் இளம் இனிய கனவுகளை எழுப்பியிருந்தாள். புன்னகையுடன் எழுந்து அமர்ந்து கைதூக்கி சோம்பல்முறித்தபடி தோன்றி ஒளி கொள்ளத் தொடங்கியிருந்த முழுநிலவைப் பார்த்தான்.

சந்தியை கந்தர்வநாளின் புலரிவேள்விக்கென அனைத்தும் அமைத்து காத்திருந்தாள். பனித்துளி எடுத்து நீராடி, நிலவொளி தொட்ட வெண்முகில் கீற்றொன்றை ஆடையாய் புனைந்து வேள்விக் குளத்தருகே வந்தமர்ந்தான். தன் அச்சங்களையும் ஐயங்களையும் வஞ்சங்களையும் விறகென எரிகுளத்தில் அடுக்கி விழைவை அதில் நெய்யாக்கினான். இரு கைகளின் சுட்டுவிரல் தொட்டு மின்கதிர் எழுப்பி வேள்விக்குளத்தில் அனலூட்ட முயன்றான்.

பன்னிருமுறை முயன்றும் அனலெழாமை கண்டு குழப்பத்துடன் தன் தேவியை நோக்கினான். அவளுக்கும் நிகழ்வதென்னவென்று புரியவில்லை. மீண்டும் ஒரு முறை முயன்றதும் அனலோன் தன்னை தவிர்க்கிறான் என்று புரிந்துகொண்டான். தன் நெஞ்சில் கைவைத்து "என்னிலூறும் இசையின் முதல் துளியை சான்றாக்கி ஆணையிடுகிறேன். எழுக, அனலவனே!" என்றான்.

அனல் மூலையிலிருந்து எரியின் குரல் எழுந்தது. "என்னை பொறுத்தருள்க, கந்தர்வனே! இன்று உன் வேள்விக்குளத்தில் நான் தோன்ற மாட்டேன். ஏனென்றால் இன்னும் சில நாட்களுக்குள் உன்னை எரித்தழிக்கும் ஆணையை பெறப்போகிறேன். இதுநாள்வரை உன் வேள்விக்குளத்தில் தோன்றி நீ அளித்த அவியும் வேதச்சொல்லும் பெற்று விண்ணவருக்கும் திசை தெய்வங்களுக்கும் அளித்தவன் நான். அந்த நன்றிக்கடன் இதை உன்னிடம் சொல்லச் செய்கிறது. இனி உன்னிடம் இருந்து அவி பெறுவது முறையல்ல."

"யார்? நீயா என்னை எரித்தழிப்பது? ஏன்?" என்றான் சித்ரசேனன். "நானல்ல. அணைகட்ட முடியாத ஆற்றல் கொண்ட ஒருவன் உன்னை எரித்தழிப்பதாக வஞ்சினம் உரைத்திருக்கிறான்"

என்றான் கனலோன். "யார் அவர்? புடவியாளும் மூவரா? தேவருக்குத் தலைவரா? திசை நால்வரா?" என்றான் கந்தர்வன். "இல்லை, இவன் மண்ணில் வாழும் ஓர் அரசன். துவாரகையின் யாதவன்" என்றான் அனலோன்.

திகைப்புடன் "அவனுக்கேது அவ்வாற்றல்?" என்றான் கந்தர்வன். "மண்ணில் வாழ்பவருக்கு ஆற்றல் அளிப்பது வேதம். நான்கு வேதங்களும் கொண்ட மெய்ப்பொருளை ஒற்றைச் சொல்லென ஆக்கி தன் நாவில் சூடியவன் அவன். அவன் உன்னிடம் போருக்கெழுந்தால் நீ அரைக்கணமும் எதிர் நிற்க முடியாது என்றறிக!"

"நான் என்ன செய்ய வேண்டுமென்று அறியேன். என்ன பிழை செய்தேன்?" என்றான் சித்ரசேனன். "நீ காமமயக்கில் உமிழ்ந்த எச்சில் காலைத்தவம் செய்யக் கைநீட்டிய காலவரின் உள்ளங்கை குழியில் விழுந்தது. அது தன் குலத்தின் மீதான எள்ளலே என்று அவர் எண்ணிக்கொண்டார். அவருடைய ஆறாச்சினமே இளைய யாதவனின் வஞ்சினமாக மாறியது" என்றான் அக்னி. "அது நான் அறியாது செய்த பிழை. அன்று என்னுள் கூடியதென்ன என்று நான் இன்றும் அறியேன். தெரியாப்பேய் ஒன்று என் சேக்கையை வென்றது என்றே உணர்கிறேன்" என்று சித்ரசேனன் சொன்னான்.

"பேய்கள் எழுவது உள்ளமெனும் இருளுக்குள் இருந்தே" என்று அனலோன் சொன்னான். "நான் செய்யவேண்டியது என்ன?" என்று சித்ரசேனன் கேட்டான். "இனி நீ செய்வதற்கு ஒன்றுமில்லை என்றே எனக்குத் தோன்றுகிறது. உரைத்த வஞ்சினங்கள் அனைத்தையும் நிறைவேற்றி முடித்த ஒருவனின் சொல் இது. அது உரைக்கப்பட்டபோதே அச்செயல் முடிந்துவிட்டதென்று நான் கொண்டேன்" என்றான் எரியன்.

“நான் காலவரை அணுகி அவர் கால்களில் பணிந்து பொறுத்தருளும்படி கோருவேன். அவர் ஆணையிடும் அனைத்தையும் செய்து முடிப்பேன். ஆயிரமாண்டுகாலம் அவர் வேள்விக்கு காவலனாக நின்றிருப்பேன்” என்றான் சித்ரசேனன். “இவை அனைத்தும் அவர் அவ்வஞ்சினத்தை இளைய யாதவனிடமிருந்து பெறுவதற்கு முன் செய்திருக்க வேண்டியவை. இன்று நீ செய்வதற்கொன்றே உள்ளது. நிகர் வல்லமை கொண்ட பிறிதொருவரிடம் சரண் அடைக! அவன் படைக்கலத்தால் காக்கப்படுவாய்.”

“ஆம், நான் மூன்று தெய்வங்களிடம் செல்வேன். தேவர் கோமகனிடம் செல்வேன்” என்றான் சித்ரசேனன். “அவர்கள் எவரும் அவ்விளைய யாதவனிடம் நின்று போரிட முடியாது. வேதச்சொல்லை வல்லமை என்று கொண்ட மானுடன் அவன். வேதக்காட்டை விதையென்றாக்கும் ஊழ்நெறி கொண்டு வந்தவன்” என்று எரியன் சொன்னான். “தன் எதிர்நிற்பவனிடம் அவனே கருணை கொண்டால் மட்டுமே அவனை தடுக்க முடியும். ஒவ்வொரு அம்புக்கும் ஒருதுளி அருளையும் அவன் எவனுக்கு அளிப்பானோ அவன் மட்டுமே இளைய யாதவன் முன் நிற்க முடியும்.”

“யாரவன்? அவன் மூத்தோனா? நான் பலராமனிடம் சென்று அடிபணிவேன்” என்றான் கந்தர்வன். “இல்லை சுபத்திரையா? வசுதேவனா? அவன் மைந்தர்களா? எவராயினும் இதோ செல்கிறேன்.” அனலோன் புன்னகைத்து “இல்லை. குருதியென்பது உறவல்ல என்பதை இளைய யாதவனே உணர்ந்துகொண்டிருக்கும் தருணமிது. அது கடமை மட்டுமே என்று அறிந்ததன் சுமையால் அவன் சித்தம் இருண்டுள்ளது. மண்ணில் பிறந்த ஒவ்வொருவரும் வாழ்வின் ஒரு கணத்தில்

உணரும் அக்கசந்த உண்மையே பேயுருக் கொண்டு அவனை ஆள்கிறது இன்று” என்றான்.

“பின்பு யார் அவனுடன் எதிர்நிற்கும் ஆற்றல் கொண்டவன்?” என்றான் சித்ரசேனன். “இளைய பாண்டவன் பார்த்தன். ஊழால் இணைக்கப்பட்டவர்கள் அவர்கள். அவர்கள் சொல் கைமாறிப் பிரிந்து சில நாட்களே ஆகின்றன. இளைய யாதவன் வஞ்சினம் உரைத்ததை இளைய பாண்டவன் அறிவதற்குள்ளாகவே சென்று தாள் பணிக! அவனிடமிருந்து அடைக்கலம் பெறுக!” என்றான் அக்னி.

“ஆம், இக்கணமே” என்று எழுந்தான் கந்தர்வன். அக்னி “அதற்கு நீ செல்வதைவிட உன் துணைவி மட்டும் செல்வதே உகந்தது” என்று அறிவுறுத்தினான். “பார்த்தன் இன்றிருப்பது யக்ஷவனத்தில். அவன் தமையன் அளித்துச்சென்ற அறத்தின் கோல்சூடி அமர்ந்திருக்கிறான். அவனை வெல்ல அறமெனும் சொல்லே வழியாகும். உன் துணைவி திருமிகுக் கோலத்தில் செல்லட்டும்.”

**[ 11 ]**

யுதிஷ்டிரர் கந்தமாதன மலையேறிச் சென்றபின்னர் யக்ஷவனத்தின் தனித்த தவக்குடிலில் பாண்டவர் நால்வரும் காத்திருந்தனர். அர்ஜுனன் பகலும் இரவும் அங்கிருந்த கூம்புமரக்காட்டுக்குள் வில்லம்புடன் உலவினான். உள்ளைக் குவிக்க வெளிக்குறி ஒன்றை தேர்வதே அவன் வழியென்றாகியிருந்தது. விடுபட்ட அம்புடன் எழுந்து பறந்து இலக்கைத் தொட்டதும் அவன் உள்ளம் ஒரு வட்டத்தை முழுமை செய்தது. முற்றிலும் தனித்தவனாக அலைவதற்கு

காடே உரியதென்று அறிந்த விடுதலை அவன் உடலில் திகழ்ந்தது.

மாலை சிவந்து விண்முகில்கள் எரிசூடத் தொடங்கிய பொழுதில் விண்ணில் சுழன்று சென்ற இறகுப் பிசிர் ஒன்றை தன் அம்பில் கோத்து குறி நோக்கிக்கொண்டிருந்த அர்ஜுனன் பெண்குரல் அழுகை ஒலி கேட்டு வில் தாழ்த்தி திரும்பிப் பார்த்தான். அங்கே மலர் உதிர்த்து மேடையிட்டு அதன்மேல் நின்றிருந்த மரம் ஒன்றின் அடியில் பொன்னிற உடல்கொண்ட அழகியொருத்தியை கண்டான். மங்கலக்குரல் எழுப்பிக்கொண்டிருந்தது அவள் தலைக்குமேல் எழுந்த கிளையில் அமர்ந்த பறவை. அவள் தனித்து வந்திருப்பதை உணர்ந்தபின் அருகே வந்து "யார் நீ?" என்று அவன் கேட்டான்.

இளமுலைகள் மேல் விழிநீர் வழிய அவள் அவன் முன் வந்து நின்றாள். "வீரரே, எடுத்த வீரர் எவராயினும் தங்கள் அம்பின் எல்லைக்குள் அவர் அரசரே என்கின்றன நூல்கள். செல்வதறியாது அழுதுகொண்டு இக்காட்டுக்குள் நுழைந்தேன். உங்கள் நாணொலி கேட்டு அடைக்கலம் வேண்டி வந்திருக்கிறேன். என் துயருக்கு நீங்களே காப்பு" என்றாள்.

"சொல்க!" என்றான் அர்ஜுனன். "விண்வாழும் கந்தர்வனாகிய சித்ரசேனனின் துணைவி நான். இசையன்றி படைக்கலம் ஏதுமில்லாதவன் என் கொழுநன். கருதாப்பிழை ஒன்றுக்காக எம் கணவனை எரித்து அழிப்பதாக அரசனொருவன் வஞ்சினம் உரைத்திருக்கிறான். அவன் எரிந்தழிவான் என்றால் அச்சிதையிலேயே நானும் அழிவேன். என் மங்கலநாணுக்கு நீங்களே காவல். என் கற்பின் மீது ஆணை" என்றாள்.

“என்ன பிழை?” என்று அர்ஜுனன் கேட்டான். “காதலின் மயக்கில் அவன் வெற்றிலைச்சாற்றை உமிழ்ந்தான். அது மண்ணில் நின்றிருந்த முனிவர் ஒருவர் மேல் விழுந்தது. தன் குலம் மீதான இழிவென அவர் அதைக் கொண்டார்” என்றாள் அவள். அர்ஜுனன் “அவன் காதலாடுகையில் உடனிருந்த துணைவி யார்?” என்றான். “நானே. மங்கலம் அன்றி பிறிதெதையும் சூடாதவள் நான்” என்று அவள் சொன்னாள்.

அவளை ஒருகணம் நோக்கியபின் “தேவி, உடனிருந்தவர் தாங்கள் என்றால் அவர் அறிந்தொரு அமங்கலம் செய்திருக்க வாய்ப்பில்லை. அக்கருதாப்பிழைக்காக உங்கள் கொழுநனை எவரும் கொன்று அழிக்க நான் ஒப்பேன்” என்றான். “இளவரசே, புவிதொட்டு அவ்வாணையை எனக்கு அளியுங்கள்” என்றாள் சந்தியை. குனிந்து மண் தொட்டு “ஆணை” என்றான் அர்ஜுனன்.

அவள் கைகூப்பி “உங்கள் வில்லை நம்பி மீள்கிறேன்” என்றாள். புன்னகையுடன் விழிநீர் ஒப்பியபடி திரும்பியவளிடம் “வஞ்சினம் உரைத்த அரசன் யார்?” என்றான் அர்ஜுனன். “துவாரகையை ஆளும் இளைய யாதவன்” என்றாள் சந்தியை. திகைத்து “அவரா? ஏன்?” என்றான் அர்ஜுனன். சந்தியை “சூதுச்சொல் வழியாக அம்முனிவரால் அவரது வஞ்சினம் பெறப்பட்டது” என்றாள்.

அர்ஜுனன் “அவ்வண்ணமெனில் அஞ்ச வேண்டியதில்லை. இப்புவியில் என் சொல்லே இறுதியென எண்ணுபவர் அவர். அவரிடம் உண்மை என்ன என்று நானே உரைக்கிறேன். உங்கள் கணவரை அவ்வஞ்சினத்திலிருந்து விடுதலை செய்கிறேன்” என்றான்.

# கிராதம் - 11

**[ 12 ]**

யக்ஷவனத்திலிருந்து வில்லுடன் கிளம்பிய அர்ஜுனன் எங்கும் நில்லாமல் புரவிகளிலும் படகுகளிலுமாக பயணம்செய்து மூன்றாம்நாளே சப்தஃபலத்தை சென்றடைந்தான். அச்சிற்றூரைச்சுற்றி மண்குவித்து எழுப்பப்பட்டிருந்த சிறியகோட்டைவாயிலில் அவனை காவலர்தலைவன் சதமன் தடுத்தான். சதமனை நன்கறிந்திருந்த அர்ஜுனன் திகைப்புடன் "என்ன செய்கிறீர்? நீர் என்னை அறியமாட்டீரா?" என்றான். "எவராயினும் நிறுத்துக என்று எனக்கு ஆணை, பாண்டவரே" என விழிதிருப்பி சதமன் சொன்னான்.

சினத்தை அடக்கியபடி "நான் இளைய யாதவரை பார்த்தாகவேண்டும், இப்போதே" என்று அர்ஜுனன் சொன்னான். "அவர் எவரையும் சந்திக்கவிரும்பவில்லை என்பது மாறா ஆணை. தேவியருக்கும் படைத்துணைவருக்கும் ஒற்றருக்கும்கூட முகம் மறுக்கப்படுகிறது" என்றான் சதமன். "மறுக்கவே முடியாத முகம் என்னுடையது, மூடா" என்று அர்ஜுனன் சீறினான். "விலகு, நான் அவரைச் சந்திக்கும் உலகில் பிறமானுடர் இல்லை" என்று சொல்லி வாயில் கடக்கப்போனான்.

சதமன் வாளை உருவி குறுக்கே நின்று "என் தலையறுத்திட்டபின்னரே நீங்கள் உள்ளே நுழைய முடியும், பாண்டவரே" என்றான். "அரசரின் ஆணைக்காக உயிர்கொடுப்பதே இப்போது என் கடன்." அர்ஜுனன் திகைத்து நின்று அவனைக் கூர்ந்து நோக்கியபின் "என்ன இது? இதுபோல்

ஒருநாளும் நிகழ்ந்ததில்லை” என்றான். அப்பாலிருந்து வந்த முதிய யாதவ வீரராகிய கலிகர் “மூத்தவர் பிரிந்துசென்றபின் அரசர் தன்னிலையில் இல்லை, பாண்டவரே. உடலுக்குள் அவர் அகம் மாறிவிட்டிருக்கிறது” என்றார்.

“நான் அறியாத அகம் ஒன்று அவரிடமில்லை. எனக்கு அதில் ஐயமே இல்லை. சென்று சொல்லுங்கள், நான் வந்திருக்கிறேன் என்று” என்று அர்ஜுனன் கூவினான். “அவரின்றி நான் இல்லை என்பதனாலேயே நானின்றி அவரும் இருக்கலாகாது. சென்று சொல்லுங்கள் நான் வந்துள்ளேன் என்று.” கலிகன் “எச்செய்தியும் தன்னருகே வரலாகாதென்றே அரசாணை உள்ளது. அதை நாங்கள் மீறமுடியாது” என்றான். “என் வருகையை அறிவிக்கவில்லை என்றால் உங்கள் அனைவருக்கும் அவர் அளிக்கும் தண்டனை எழும்” என்றான் அர்ஜுனன்.

“ஆணையை நிறைவேற்றுவதே எங்கள் பணி. அரசரின் சொல்லெண்ணி ஆய்ந்து நோக்குவதல்ல” என்றான் சதமன். அர்ஜுனன் பற்களை கடித்துக்கொண்டு “நான் கடந்துசெல்கிறேன். யாதவநாட்டில் எனக்கு எல்லைகளில்லை என்று அவன் சொன்ன சொல் என் செவிகளில் உள்ளது” என்றான். அவன் அவர்களைக் கடந்துசெல்ல முயல வாளை உருவிய கலிகன் “தங்களை எதிர்கொண்டுநிற்க என்னாலோ யாதவப்படைகளாலோ இயலாது, பாண்டவரே. ஆனால் உங்கள் முன் தலையற்று விழ எங்களால் முடியும்” என்றான்.

அர்ஜுனன் தயங்க குரல் தழைத்து அவன் சொன்னான் “இளவயதில் உங்கள் வேட்டைத்துணைவனாக வந்தவன் நான். இதுவே நம் உறவின் முடிவென்றால் அவ்வண்ணமே ஆகுக!” .அர்ஜுனன் தளர்ந்த குரலில் “நான் என்ன செய்யவேண்டும்

இப்போது?” என்றான். சதமன் பேசாமல் நின்றான். “என் பொருட்டு ஒன்றை மட்டும் செய்யுங்கள். நான் வந்திருக்கும் செய்தியை மட்டும் அவருக்கு அறிவியுங்கள்…” என்றான் அர்ஜுனன்.

கலிகரின் விழிகள் மெல்ல கனிந்தன. “அதுவே ஆணைமீறலாகும். ஆயினும் தங்களுக்காக அதைச்செய்து அதற்குரிய தண்டனையை அடைய நான் சித்தமே” என்றார். அர்ஜுனன் பெருமூச்சுவிட்டான். கலிகர் கோட்டைக்குள் செல்ல அர்ஜுனன் வெளியே நிலையற்ற உடலுடன் காத்து நின்றான். அந்தச் சிறுகோட்டையும் சூழ்ந்துள்ள மரங்களுமெல்லாம் இருளால் மூடப்பட்டுள்ளதாகத் தோன்றியது. கரிப்புகை படிந்த சுவரோவியம்போல. அது என்ன விழிமயக்கு என எண்ணிக்கொண்டான். மழைமூட்டமிருக்கிறதா என வானைநோக்கினான். கண்கூசவைக்கும் வெயிலே வானில் வளைந்திருந்தது.

இருநாழிகை கடந்தபின் கலிகர் திரும்பி வருவதை அவன் கண்டான். நெடுதொலைவிலேயே என்ன விடை எனத் தெரிந்துவிட்டது. அவன் அறிந்துவிட்டதை உணர்ந்த கலிகரின் நடையும் மாறுபட்டது. அருகே வந்ததும் கலிகர் அர்ஜுனின் வளைந்த புருவத்தின் முன் தலைவணங்கி “பொறுத்தருள்க பாண்டவரே, எவரையும் சந்திக்கும் நிலையில் இல்லை யாதவ மாமன்னர்” என்றார். “நான் வந்துள்ளேன் என்று சொன்னீரா?” என்றான் அர்ஜுனன், அவ்வினாவின் பொருளின்மையை உணர்ந்தபடியே.

“ஆம், அவர் காட்டிலிருந்தார். நான் அருகே சென்று பின்னால் நின்று தலைவணங்கி ‘அரசே, தங்கள் தோழர் இளையபாண்டவர் முகம்காட்ட விழைவுகொண்டு வந்து

நின்றிருக்கிறார்' என்றேன். சீறித்திரும்பி 'யார் நீ? உன்னிடம் ஆணையிட்டிருக்கிறேன் அல்லவா, எச்செய்தியும் என்னிடம் வரலாகாதென்று? ஆணையை மீற எப்படி துணிவுகொண்டாய்?' என்று கூவினார். நான் பணிந்து 'ஆம், ஆணையை மீறியமைக்கான தண்டம் என் தலைமேல் விழுக! இளைய பாண்டவர் என்பதனால்தான் நான் வந்தேன். அவர் தங்களில் ஒருபாதி என்று அறிந்த முதியவன் என்பதனால்' என்றேன்."

"இளையவர் குரலை அவ்வண்ணம் நான் கேட்டதேயில்லை, பாண்டவரே. ஒவ்வொருநாளும் அவர் உடலும் குரலும் விழிகளும் மாறிக்கொண்டிருக்கின்றன. 'என்னுடன் எவரும் இல்லை. அவன் எவனாயினும் கிளம்பிச்செல்லும்படி சொல். ஆணை!' என்றார். மீண்டும் ஒரு சொல்லெடுக்க எனக்கு துணிவிருக்கவில்லை. ஆயினும் என் உள்ளம் பொறாது 'அன்னையைத்தேடும் கன்றென வந்துள்ளார் பாண்டவர். அவர் கண்களின் துயர்கண்டே வந்தேன்' என்றேன். 'இங்குள்ள எம்மானுடருடனும் எனக்கு உறவில்லை. செல்... இக்கணமே செல்லவில்லை என்றால் உன் தலையை வெட்டி உருட்டுவேன்' என்று கூவினார்."

"அவர் முகம் வெறுப்பிலென சுளித்திருந்தது. கண்களில் பித்தெழுந்திருந்தது. உடல் நோய்கொண்டதென நடுங்கியது. தலைவணங்கி நான் மீண்டேன்" என்றார் கலிகர். அர்ஜுனன் நம்பாதவன் போல அச்சொற்களை கேட்டுநின்றான். பின் அவர் சொன்ன அனைத்தையும் ஒற்றைக்கணத்தில் தன்னுள் மீட்டெடுத்தான். "அவருக்கு என்ன ஆயிற்று?" என்றான். "அவரில் கூடிய தெய்வங்களே அதை அறியும்" என்றார் கலிகர். நீள்மூச்சுடன் "நான் திரும்பிச்சென்றேன் என்று அவரிடம் சொல்க!" என்றான் அர்ஜுனன். அவர்கள் மெல்ல தளர்ந்தனர்.

அர்ஜுனன் திரும்பிநடக்க கலிகர் “இளவரசே…” என்று பின்னால் நின்று அழைத்தார். திரும்பிய அர்ஜுனனிடம் “பொறுத்திருங்கள். அனைத்து மானுடர் வழியாகவும் அறியாத்தெய்வங்கள் கடந்துசெல்கின்றன. விண்பறப்பவரும் இருளூர்பவரும்…” என்றார். அர்ஜுனன் தலையசைத்தான். “இது ஒரு பருவம். இது கடந்துசெல்லும்.” அர்ஜுனன் “நான் வந்தது உடனடியாக அவர் போருக்குச் செல்லவிருக்கிறாரா என்று அறிவதற்கே” என்றான். “அறியேன். அவர் உள்ளம் செல்லும் வழியென்ன என்று எவராலும் உணரமுடியவில்லை” என்றார் கலிகர். “காலவர் வந்துசென்றபின்னரும் அவர் எதுவும் சொல்லவில்லை.”

அன்றிரவு மாற்றுருக்கொண்டு இருளுக்குள் காகமென அக்கோட்டைவாயிலை அர்ஜுனன் கடந்துசென்றான். நூறு புற்கூரைவீடுகள் மட்டும் கொண்ட அச்சிற்றூரின் தெருக்களினூடாக இருளிலும் நிழலிலும் கரந்து சென்று ஊரின் மையமாக அமைந்த மரப்பட்டைக்கூரையிட்ட மாளிகையை அடைந்தான். அதனுள் புகுவது அவனுக்கு மிக எளிதாக இருந்தது. அங்கே விளக்கெரிந்த மாடியறையே யாதவருக்குரியது என உய்த்து படிகளைத் தவிர்த்து உத்தரச் சட்டங்களில் தொற்றி அங்கே சென்றான்.

அறை வாயிலருகே நின்றிருந்த காவலனை ஒலிகாட்டி திரும்பச்செய்து அவன் விழிசலித்த கணத்தில் உள்ளே நுழைந்தான். அவன் காலடியோசை கேட்டு இளைய யாதவர் திடுக்கிட்டு திரும்பிப்பார்த்தார். அவர் அமர்ந்திருந்த மஞ்சமெங்கும் ஏடுகள் சிதறிக்கிடந்தன. எழுந்தபோது அவை தரையில் விழுந்து பரவின. இளைய யாதவரின் உடல் நடுங்கிக்கொண்டிருக்க கண்கள் நிலையற்று உருள்வதைக்

கண்ட அர்ஜுனன் “இளையவரே, நான்... தங்கள் தோழன்” என்று தணிந்த குரலில் சொன்னான். “எவர் உன்னை உள்ளே விட்டார்கள்? எப்படி வந்தாய்? யாரது?” என்று இளைய யாதவர் பதறினார்.

திகைப்புடன் அவருடைய அழுக்குடலையும் சிக்குகொண்ட கூந்தலையும் மெலிந்த தோள்களையும் தாடிபடர்ந்த முகத்தையும் நோக்கிய அர்ஜுனன் “இளையவரே, தங்களை சந்திப்பதற்காக வந்தேன்” என்றான். “நான் எவரையும் சந்திப்பதாக இல்லை. என்னை தனிமையில் விடுக! செல்...” என்று அவர் வெளியே கைசுட்டி சொன்னார். “நீங்கள் இருக்கும் நிலை புரிகிறது, இளையவரே. உங்கள் உள்ளம் இருள்கொண்டிருக்கிறது. நானும் கடந்துசென்ற இருள்தான் அது... ஆனால் ஒளியிலும் இருளிலும் நான் உங்களுடன் இருந்தாகவேண்டும்..” என்றான் அர்ஜுனன்.

“வெளியே போ... வெளியே போ” என்று கைசுட்டி பித்தன்போல இளைய யாதவர் கூச்சலிட்டார். “யாரங்கே? இவனை உள்ளே விட்டது யார்? யாரது?” வாயிலில் வந்து நின்ற காவலன் அர்ஜுனனைக்கண்டு திகைத்து வெளியே சென்று கூவி தோழர்களை அழைத்தான். அர்ஜுனன் மேலும் அமைதிகொண்டு “என்ன நிகழ்கிறதென புரிகிறது, யாதவரே. தனிமையை விழைந்தால் அதிலிருங்கள் சின்னாள். நான் பின்னர் வந்து பார்க்கிறேன். ஆனால் இத்தருணத்தில் பெருமுடிவுகள் ஏதும் தேவையில்லை” என்றான்.

அவன் அருகே செல்ல இளைய யாதவர் பற்களைக் கடித்தபடி பின்னால் சென்றார். “அரசே, கந்தர்வன் ஒருவனைக் கொல்ல நீங்கள் வஞ்சினம் உரைத்தீர்கள் என்று அறிந்தேன். ஆராயாது எடுத்த முடிவு அது. வேண்டாம். அவன் பிழையேதும்

செய்யவில்லை. அது காலவ முனிவர் கொண்ட பிழைப்புரிதல். அதை அவரிடமே நான் பேசுகிறேன். அவன் அவர் கால்தொட்டு சென்னிசூடி மன்னிப்பு கோருவான்...” என்றான்.

“நீ எதற்கு இதைப்பேசுகிறாய்? நீ யார் இதைச் சொல்ல?” என்றார் இளைய யாதவர். “அவன்தேவி என்னை வந்து கண்டு அடைக்கலம் கோரினாள். அவன்பால் பிழையில்லை என்று கண்டு நான் அவளுக்கு சொல்லளித்தேன்.” பற்கள் தெரிய இளிப்பதுபோல் சீறியபடி “எது பிழை என்று முற்றறிந்துவிட்டாயா? உன் புல்லறிவை எனக்கு அளிக்கும்பொருட்டு வந்தாயா?” என்றார் இளைய யாதவர். படீரென தன் நெஞ்சை ஓங்கியறைந்தபடி உரத்த குரலில் “துவாரகையின் அரசன் உன் சொல்கேட்டுத்தான் மெய்யும் பொய்யும் அறியவேண்டுமா?”

அர்ஜுனன் என்ன நிகழ்கிறதென்றே அறியாதவனாய் தவித்தபடி “இல்லை, அவ்வாறில்லை. யாதவரே, என்னை நீங்கள் அறியமாட்டீர்களா? இதை நாம் பேசி முடிவுசெய்வோம். தாங்கள் முந்தி படையாழி கைக்கொள்ளவேண்டியதில்லை” என்றான். “கைக்கொண்டால் நீ என்ன செய்வாய்?” என்றபடி இளைய யாதவர் அருகே வந்தார். வெறிச்சிரிப்பு போல சினம் கொண்ட முகம் சுளித்திருந்தது. “என்னை நீ என்ன செய்வாய்? அவ்விழிமகனுக்கு அடைக்கலம் கொடுக்கையில் நீ அறிந்தாயல்லவா அவனை நான் கொல்வேன் என வஞ்சினம் உரைத்தேன் என்று?”

அர்ஜுனன் கைநீட்டி அவர் கைகளை பற்றப்போனான். “இல்லை இளையவரே, உண்மையிலேயே எனக்குத்தெரியாது தாங்கள் அவ்வாறு வஞ்சினம் உரைத்தீர்கள் என்று. அறத்தைச் சொல்லி அவர்கள் கோரியமையால் மட்டுமே வாக்களித்தேன். மங்கலம்

நிறைந்த பெண்ணின் முகம் கண்டு அவ்வறத்தை நான் உறுதிசெய்துகொண்டேன்” என்றான்.

அவன் கையைத் தவிர்த்து “எப்படி அந்த வாக்கை அளித்தாய் நீ? இழிமகனே சொல், எப்படி அளித்தாய் அந்த வாக்கை? அவனைக் கொல்வதாக வஞ்சினம் உரைத்தவர் எவரென அறியாமல் அவ்வாக்கை அளிக்கும் துணிவை எப்படி கைக்கொண்டாய்?” என்றார் இளைய யாதவர். அவன் கண்கள் விரிந்து அதற்குள் விழிகள் உருண்டன. “இப்புவியில் எவர் வந்தாலும் எதிர்நிற்கமுடியும் என நினைத்தாய் அல்லவா? நீ இப்புவியின் அறமனைத்தையும் காக்கப்பிறந்தவன் என்று எண்ணினாய் அல்லவா? சிறுமதியனே, நீ யார்? அஸ்தினபுரி என்னும் சிற்றரசின் இளவரசன். அதையும் இழந்து காடுசேர்ந்து இரந்துவாழும் கோழை. எப்படி அந்த உறுதியை அவளுக்களித்தாய்? உனக்குமேல் இப்புவியில் எவருமில்லை என்று எண்ணினாயா?”

அர்ஜுனன் பற்களைக் கடித்து ஒருகணம் தன்னை இறுக்கி கட்டுப்படுத்திக்கொண்டு பின் பெருமூச்சுடன் மெல்ல தளர்ந்தான். “இவை ஏன் நிகழ்கின்றன என்று நானறியேன். எங்கோ எதுவோ பிழைபட்டுவிட்டது. இச்சொற்கள் உங்களுக்குரியவை அல்ல” என்றான். திரும்பிச்செல்ல அவன் உடல் அசைந்ததும் அவன் தோளைத்தொட்டு திருப்பி தன் முகத்தை அவன் முகமருகே கொண்டுவந்து உற்றுநோக்கி இளைய யாதவர் சொன்னார் “அஞ்சி ஓடாதே. நீ ஆண்மகனுக்குப்பிறந்தவன் என்றால் அஞ்சி பின் திரும்பாதே. அடைக்கலம் கொடுக்கையில் நீ அறிந்திருக்கவில்லை நானென்று. இன்று என் ஆழி எதிர்எழுகிறதென அறிந்ததும் என்னிடம் வந்து மன்றாடுகிறாய்.”

“நான் எவரையும் அஞ்சவில்லை” என்றான் அர்ஜுனன். “ஆம் நீ அஞ்சமாட்டாய். ஏனென்றால் நீ மாவீரனான பாண்டுவின் மைந்தன் அல்லவா? ஆண்மையின் உச்சத்தில் நின்று அவன் பெற்ற மைந்தன் அல்லவா?” என்று வெறுப்புடன் இளைய யாதவர் நகைத்தார். உடல்நடுங்க அவர் கைகளைப்பற்றியபடி “இளையவரே, வேண்டாம். இதற்குமேல் சொல்லெடுக்கவேண்டாம்” என்றான். அக்கைகளை வீசியடித்து உரக்க “சொல்லெடுத்தால் என்ன செய்வாய்? வில்லெடுத்து என் தலைகொய்வாயா? முடிந்தால் அதைச்செய். செய் பார்ப்போம்” என்று கூவினார் இளைய யாதவர்.

அர்ஜுனனின் உடல் நடுங்கிக்கொண்டிருந்தது. அவ்விழிகளில் இருந்த வன்மையை அவனால் விழிதொட்டு நோக்கமுடியவில்லை. “அறிவுடையவன் என்றால் ஆய்ந்து முடிவெடுக்கவேண்டும். ஆணென்றால் எடுத்த முடிவுக்காக உயிர்துறக்கவேண்டும். நீ பேடு. உன் தந்தைக்கு சிறந்த மைந்தன்தான். போ, போய் பெண்ணுருக்கொண்டு பெண்களுடன் புனலாடு. பெண்டிரின் ஆடை அணிந்து அரங்கேறி நடனமாடு. போ!”

ஒருகணம் அது இளைய யாதவரேதான் எனத் தோன்றிவிட்டது. உயிருடன் உறவுகொண்ட நண்பனே அப்படி உட்புகுந்து அறியமுடியும். உயிர்துடிக்கும்படி நரம்புமுடிச்சில் கைவைத்து கொல்லமுடியும். அப்படியென்றால் தோள்தழுவிக் களியாடுகையிலும் ஒரு உளமூலை இவற்றையெல்லாம் அள்ளி எண்ணிச் சேர்த்துக்கொண்டிருக்கிறது. சிரிப்புக்கும் கனிவுக்கும் அப்பால் படைக்கலம் கூர்கொண்டபடியே இருந்திருக்கிறது. இவரும் இவ்வாறென்றால் இப்புவியில்

எஞ்சுவதுதான் என்ன? நெஞ்சுவிம்ம விழிநீர்திரள அவன் முற்றிலும் தளர்ந்து விழுபவன் போலானான்.

“என்ன சொன்னாய், பெண்ணுக்கு சொல்லளித்தாயா? அவைநடுவே தன் தேவியை இழிவடையவிட்டு நோக்கி நின்ற புல்லன். நீயா பிறிதொரு பெண்ணைக் காக்க உயிர்கொடுக்கப்போகிறாய்?” அர்ஜுனன் “இளையவரே, வேண்டாம். அளிகூருங்கள்... வேண்டாம்” என்று உடைந்த குரலில் சொன்னான். “ஆ! ஏன் நீ நின்றாய் என்று அறியாதவனா நான்? அவள் உளம்நிறைந்த கர்ணன் அவளை இழிவுபடுத்தட்டும் என்று காத்து நின்றாய். அவள் பீமனைக் கடந்து உன் காலில் வந்து விழுந்து அடைக்கலம் கோரட்டும் என்று நோக்கி நின்றாய். அன்பும் அறமும் எங்கே? உன்னுள் மலமெனப் புளித்து நாறுவது ஆண்மையின் வெற்றாணவம் அல்லவா?”

அவன் இளைய யாதவரின் விழிகளையே பதைப்புடன் நோக்கினான். அவனறிந்த எவரும் அங்கில்லை. அவை ஒருகணமும் நிலைகொள்ளாமல் உருண்டன. காட்சியென எதையும் அள்ளமுடியாதவை போல. அவன் பற்களை இறுகக் கடித்து கைமுட்டிகளை முறுக்கி கண்களின் மென்நரம்புகள் வழியாக குருதி சூடாகப் பெருகிச்செல்ல நின்றான். “சொல், உன் குரல் எங்கு போயிற்று?” என்றார் இளைய யாதவர். அவன் இதழ்கள் மட்டும் வலியுடன் அசைந்தன. “நான் சொல்லவா? அவைநடுவே ஆடைகளையப்பட்டது உன் அன்னை. அவையமர்ந்து நோக்கி நின்றிருந்தவர் விதுரர்...” இளைய யாதவர் தன் தொடையில் ஓங்கி அறைந்தபடி வெடித்துச் சிரித்தார்.

“போதும்!” என்று அர்ஜுனன் கூவினான். “போதும், இனி சொல்லில்லை” என்றான். “ஆம், சொல் இல்லை. சொல்லே வேண்டியதில்லை. செல். ஆணென்றால் வில்லுடன் வா” என்றார் இளைய யாதவர். அர்ஜுனன் பற்களை கடித்துக்கொண்டு முகம்தூக்கி “வருகிறேன். சித்ரசேனன் என் காவலில் இருப்பான். எவரும் அவனை தொடப்போவதில்லை. எதிர்வரும் எவரும் என் எதிரிகளே. வில்லுண்டு, காண்டீபம் அதன் பெயர்” என்றபின் அர்ஜுனன் திரும்பி வாயிலில் நின்ற காவலரை விலக்கி அறையை விட்டு வெளியே சென்றான்.

அவனுக்குப்பின்னால் காலடிகள் ஒலிக்க ஓடிவந்த இளைய யாதவர் “நான் என் படையாழியுடன் வருகிறேன். முடிந்தால் அவனைக் காப்பாற்று. எதிரே நீ நின்றால் உன் தலையறுத்து உருட்டிவிட்டு அவனைக் கொன்று எரிப்பேன். அந்நீறை என் நெஞ்சிலும் நெற்றியிலும் சூடி நின்றாடுவேன். ஒரு பேடியை வென்று நிற்க என் படையாழிக்கு அரைக்கணமே போதும்” என்றான். உரக்க நகைத்தபடி “உன்னைக் கொல்லும்போதே நான் என் இறுதி முடிச்சையும் அவிழ்க்கிறேன். இங்கு என்னை கட்டிவைக்கும் ஏதுமில்லை பின்னர்” என்றார்.

திரும்பிப்பார்க்காமல் அர்ஜுனன் படிகளில் இறங்கினான். வழியெங்கும் அவன் சந்தித்த அத்தனை யாதவர்விழிகளும் திகைப்புகொண்டிருந்தன. அரண்மனையைவிட்டு வெளியே வந்து இருண்ட முற்றத்தில் பந்தங்களின் செவ்வொளி சூழ்ந்த வெறுமையில் இறங்கி நின்றபோது அனைத்தும் கனவெனத் தோன்றியது. மறுகணமே நகைப்பும் எழுந்தது.

**[ 13 ]**

அர்ஜுனன் யக்ஷவனத்திற்குத் திரும்பியபோது அவனிடம் ஏற்பட்டிருந்த மாறுதலை சகதேவன் மட்டுமே உணர்ந்தான். பீமனும் அர்ஜுனனும் பிறரிடமிருந்து தனித்தலையும் வழக்கம் கொண்டவர்கள் என்பதனால் அவர்களின் துயரம் எப்போதுமே சொல்லில் பகிரப்படுவதில்லை. ஆயினும் மூத்தவர்களின் ஓரிரு அசைவுகளிலேயே அவர்களின் உள்ளறியும் ஆற்றல் சகதேவனுக்கு இருந்தது.

அர்ஜுனன் சென்றது எங்கு என அவன் அறியவில்லை. ஆனால் வந்து சேர்ந்த முதல்நாள் உணவருந்த கைகழுவி வந்து அமர்ந்தபோதே அவன் தமையனின் உள்ளத்துயரை உணர்ந்துகொண்டான்.

அன்றிரவு அர்ஜுனன் தன் வில்லுடன் காட்டுக்குள் சென்றபோது சற்றுதொலைவில் சகதேவனும் தொடர்ந்து சென்றான். நெடுந்தொலைவுவரை இளையவன் வருவதை அர்ஜுனன் உணரவில்லை. நீர்நிலையொன்றின் அருகே அவன் நின்றபோதுதான் விழிப்புகொண்டு பறவைக்குரல்களை அறிந்தான். வில்லுடன் திரும்பியபோது சகதேவன் அருகணைவதைக் கண்டு புருவம் சுருக்கி காத்து நின்றான்.

அவனை நெருங்கி வணங்கிய சகதேவன் “தாங்கள் தனிமையில் செல்வதால் உடன் வந்தேன், மூத்தவரே” என்றான்.

“நான் எப்போதும் தனிமையில்தான் செல்கிறேன்” என்றான் அர்ஜுனன். “இல்லை, எப்போதும் இளைய யாதவர் உடனிருக்கிறார்” என்று சகதேவன் சொன்னான். “ஆகவேதான் தங்களுடன் பிற எவரும் அருகணைய முடியாமலிருக்கிறது. உடன்பிறந்தோர் நால்வரும். மணந்த தேவியரும் மைந்தரும்கூட.” அர்ஜுனன் பெருமூச்சுடன் “ஆம்” என்றான். பின்னர் “நீ எளிதில் தொட்டுவிடுகிறாய், இளையோனே. இன்று நீயே எந்தையின் வடிவாக எங்களுள் இருக்கிறாய். உன்னிடம் நான் சொல்லியாகவேண்டும்” என்றான். சகதேவன் புன்னகைத்தான்.

“நான் இளைய யாதவரை இழந்துவிட்டேன்” என்று அர்ஜுனன் தரைநோக்கியபடி சொன்னான். சகதேவன் எம்மறுமொழியும் சொல்லாமை கண்டு விழிதூக்கி நோக்கினான். அவன் புன்னகையுடன் “அவ்வாறு இழக்கப்படும் உறவல்ல அது, மூத்தவரே” என்றான். அர்ஜுனன் “உறவுகளில் அப்படி ஏதேனும் உண்டா என்ன? அவர் இங்குவருகையில் தமையனை இழந்த துயரை சுமந்துவந்தார். காவடியின் மறுஎடையாக என்னை இழந்த துயரை வைக்க விழைகிறார் போலும்” என்றான்.

“அது வெறும் குருதியுறவு” என்றான் சகதேவன். “குருதியுறவென்பது ஒரு தொடக்கம் மட்டுமே. மண்ணில் வாழ்க்கை குருதித்தொடர்புகளால் நிகழவில்லை. இங்கு நிகழும் லீலையை கர்மஜாலா என்கின்றனர் நூலோர். எனவே உறவுகளனைத்தும் கர்மபந்தங்கள் மட்டுமே.” அர்ஜுனன் அவன் சொல்வதை நோக்கிக்கொண்டிருந்தான். உரிய சொற்களை மட்டுமே எடுத்துக்கோக்க அவனால் எப்படி முடிகிறது?

ஏனென்றால் அவன் உணர்வுகளை அவற்றுடன் இணைத்துக்கொள்வதில்லை.

“செயல்வலையில் சிக்கிய மானுடருக்கு செயலுறவே மெய். நீங்கள் அவ்வாறு இணைக்கப்பட்டவர்கள்” என்று அவன் மீண்டும் சொன்னான். “இப்போது நிகழ்வதென்ன என்று நீ அறியமாட்டாய், இளையோனே. நானும் அவரும் களம்குறித்துவிட்டோம். இருவரில் ஒருவரே எஞ்சுவோம்” என்றான் அர்ஜுனன். அவன் சொல்வதை கூர்ந்து நோக்கியபின் சகதேவன் மீண்டும் புன்னகைத்தான்.

“சொல், இவற்றுக்கெல்லாம் என்ன பொருள்?” என்று அர்ஜுனன் கேட்டான். “அபஹாரம் என்று இதை நிமித்திகமெய்நூல் சொல்கிறது, மூத்தவரே. மானுட வாழ்க்கை என்பது இப்புவியை ஆளும் பெருவல்லமைகளினால் ஆட்கொள்ளப்படுவதே. வெற்றியால் புகழால் செல்வத்தால் காதலால் வஞ்சத்தால் அச்சத்தால் சிறுமையால் ஆட்கொள்ளப்பட்டுத்தான் இங்கு அத்தனை மானுடரும் வாழ்ந்துகொண்டிருக்கிறார்கள். அவருடைய ஆட்கொள்ளல் என்ன என்று என்னால் அறியமுடியவில்லை. ஆனால் அதுவும் இயல்பென்றே நூலறிந்த நெஞ்சால் உணர்கிறேன்.”

“என்னை அச்சுறுத்துகிறது அந்த வஞ்சம்” என்று அர்ஜுனன் சொன்னான். “பிற எவரும் என்னை இப்படி வெறுக்க இயலாது. பிறிதெவ்வகையிலும் என் மேல் இப்படி நச்சுமிழமுடியாது.” சகதேவன் சிரித்து “ஆம், அவர் ஒருவரே உங்களை உட்கடந்து கொத்த முடியும். நீங்கள் அவரையும் அவ்வண்ணம் செய்யலாம்” என்றான். “நானா, அவரையா? நீ அவ்வாறு நிகழுமென எண்ணுகிறாயா?” சகதேவன் “இது நிகழுமென முன்நாள் வரை எண்ணியிருந்தோமா?” என்றான்.

“ஒருநாளுமில்லை. என் நெஞ்சில் அன்னையூட்டிய முலைப்பால் எஞ்சியிருக்கும் வரை அது நிகழாது” என்றான்.

சகதேவன் மறுமொழி சொல்லவில்லை. அர்ஜுனன் சட்டென்று இளையோனின் கைகளை பற்றிக்கொண்டான். “இளையோனே, எனக்கு அச்சமாக உள்ளது. உண்மையிலேயே அது நிகழவும் கூடும். என்னை ஆள்வது எந்த தெய்வமென்று நான் அறியேன்” என்றான். அக்கைகளை நெரித்தபடி “அவ்வாறு நிகழுமென்றால் அதற்கு முன்னரே நான் இறக்கவேண்டும். அதைநான் செய்தேன் என்று என்னை நோக்கி நான் இழிவுகொள்ளலாகாது... நான் அஞ்சுகிறேன், இளையோனே” என்றான்.

“அது நிகழட்டும்” என்று சகதேவன் சொன்னான். “அணுக்கங்கள் அப்படி ஓர் எல்லையில் முட்டிக்கொண்டாகவேண்டும். குருதியும் சீழுமெழ மீண்டும் தழுவிக்கொண்டாகவேண்டும்.” அர்ஜுனன் “என்ன சொல்கிறாய்?” என்றான். “நட்பின் கெடுமணம் இது, மூத்தவரே” அர்ஜுனன் தளர்ந்து கைகளை விட்டுவிட்டு இருளை நோக்கி திரும்பிக்கொண்டான். “இனித்தினித்து அறிந்தீர்கள். இனி கசந்து கசந்து அறிவீர்கள். அறிதல் அணுக்கத்தையே உருவாக்கும்” என்றான் சகதேவன்.

“எல்லா உறவுகளிலும் இத்தகைய ஒரு தருணம் நிகழும் என்று எண்ணுகிறாயா?” என்றான் அர்ஜுனன். “நிகழுமென்றால் ஒரு புதியஆழம் வெளிப்படுகிறது” என்றான் சகதேவன். நெடுநேரம் தன்னுள் ஆழ்ந்து தனித்து நின்றபின் மீண்ட அர்ஜுனன் “எத்தனை பெரிய ஆடல்” என்றான். “ஆம்” என்று சகதேவன் சொன்னான் “நிமித்திகக் கலை அதன் நுனியை அறிய முழுவேதத்தையும் எடுத்தாள்கிறது.”

“இளையோனே, இப்போர் நிகழுமென்றால் என்ன ஆகும்?” என்றான் அர்ஜுனன். “நீ உன் நிமித்திகநூலைக்கொண்டு சொல்!” சகதேவன் “ஒவ்வொரு செயலுக்கும் நிமித்திகநூலை அணுகுபவர் மூடர். உங்கள் பிறவிக்கணக்கை நான் நோக்கிவிட்டேன். நன்றே நிகழும்” என்றான். “நான் என்ன செய்வது?” என்றான் அர்ஜுனன். “மூத்தவரே, உங்களிருவரையும் சுழற்றிச்செல்லும் அப்பெருக்குக்கு உங்களை ஒப்படையுங்கள்.” அர்ஜுனன் சிலகணங்கள் எண்ணியபின் “ஆம், வேறுவழியில்லை” என்றான்.

# கிராதம் - 12

**[ 14 ]**

யக்ஷவனத்திலிருந்து பதினெட்டுகாதம் தொலைவிலிருந்த அஸ்வபக்ஷம் என்னும் சோலை நடுவே நீர் நிறைந்திருந்த அஸ்வபாதம் என்னும் சுனைக்கு புலரியெழும் வேளையில் அர்ஜுனன் வந்தான். தனது வில்லையும் அம்புகளையும் அங்கிருந்த பாறை மேல் வைத்துவிட்டு சேறு வழுக்கிய சுனை ஓரம் மெல்ல நடந்து நீர்நுனி அலையும் விளிம்பை அடைந்து குனிந்து அள்ளி முகம் கழுவிவிட்டு அருந்துவதற்காக மீண்டும் ஒருமுறை நீரை அள்ளியபோது சுனைநீர் கொப்பளித்து அலையெழுந்து வந்து அவன் கால்களை நனைத்தது.

வியந்து அவன் விழிதூக்க நீருக்குள்ளிருந்து கூப்பிய கைகளுடன் சித்ரசேனன் எழுந்து நின்றான். அவனருகே அவன் தேவி சந்தியை பொன்னிறவடிவில் நின்றாள். கந்தர்வன் “இளைய பாண்டவரே, உங்களால் அடைக்கலம் அளிக்கப்பட்ட கந்தர்வனாகிய சித்ரசேனன் நான். என்னைக் கொன்றழிக்க

இளைய யாதவர் படையாழியுடன் வந்துவிட்டார். உயிரஞ்சி உங்கள் வில்நிழல் தேடி வந்துள்ளேன்” என்றான். அர்ஜுனன் “நன்று, என் சொல் அவ்வண்ணமே உள்ளது” என்றான். “நீங்கள் இளைய யாதவரின் துணைவர் அல்லவா?” என்றாள் சந்தியை. “நான் தனியன்” என்று அவன் சொன்னான்.

“இச்சுனைக்குள் மறைந்திருங்கள், கந்தர்வரே. உங்கள் தேவியும் உடனிருக்கட்டும். இக்காட்டை என் வில்லால் அரணமைத்துக் காப்பேன். என்னைக் கடந்து இதற்குள் எவரும் நுழைய முடியாது என்று உறுதி கொள்ளுங்கள்” என்றான். அவனை வணங்கி மீண்டும் நீருக்குள் புகுந்து நிழலென அசைந்து மறைந்தான் சித்ரசேனன். சுனையின் நீர்வாயில்கள் மூடின. அது வானை தன்மேல் பரப்பிக்கொண்டது.

அர்ஜுனன் தன் அம்புத்தூளியைத் தோளிலிட்டு வில்லை ஏந்தியபடி வந்து அஸ்வபக்ஷத்தின் முகப்பில் இருந்த பாறை ஒன்றின்மீது ஏறி கீழ்த்திசையை நோக்கியபடி இளைய யாதவரின் வரவுக்காக காத்திருந்தான். அவன் குழலை காற்று அசைத்தது. அவன்மேல் காலைவெயில் ஒளிமாறிக் கடந்துசென்றது. அசையா மரமென அவன் தொலைவில் நின்று நோக்குகையில் தோன்றினான். அவனருகே காண்டீபம் துணைவன் என நின்றிருந்தது. அதில் அவன் கைபட்ட இடம் தேய்ந்து தழும்பாகி ஒளிகொண்டிருந்தது.

மரங்களின் நிழல்கள் காலடியில் தேங்கிக்கிடந்த உச்சிப்பொழுதில் மலைச்சரிவில் இளைய யாதவர் புதர்ச்செறிவிலிருந்து வெளிவருவதை அர்ஜுனன் கண்டான். வெயிலுக்கு மயங்கி சோலைகளுக்குள் ஒண்டியிருந்த பறவைகள் எழுந்து சிறகடித்து வானில் சுழன்றன. ஒரு காட்டுநாய் ஊளையிட அதன் தோழர்கள் ஏற்றுப்பாடின. அவர்

கால்பட்டு உருண்ட பாறைகள் கீழே மலைப்பள்ளத்தில் விழும் ஒலிகள் கேட்டன.

குரல் எட்டும் தொலைவு வரை இளைய யாதவர் வருவதற்காக காத்தபின் தன் வில் தூக்கி நாணொலி எழுப்பி உரத்த குரலில் அர்ஜுனன் சொன்னான் “இளைய யாதவரே, நீங்கள் தேடி வரும் கந்தர்வன் இக்காட்டுக்குள் எனது பாதுகாப்பில் உள்ளான். அடைக்கலம் கோரியவருக்காக உயிரும் இழப்பது மறவனின் அறம். இது போர் எச்சரிக்கை, திரும்பிச்செல்க!”

இளைய யாதவர் அக்குரலைக் கேட்டதாகத் தெரியவில்லை. சீரான காலடிகளுடன் அவர் வந்துகொண்டிருந்தார். அப்பால் காட்டுப்புதருக்குள் காலவரும் அவர் மாணவர்களும் வருவதை அவன் கண்டான். நாணொலியை மீண்டும் எழுப்பி “யாதவரே, அதோ அந்த இரட்டைப்பாறை எனது எல்லை. அதைக் கடந்து இதற்குள் வரும் எவரும் என்னால் கொல்லப்படுவார்கள். திரும்புக! இப்புவியில் என்னை வெல்ல எவரும் இல்லை” என்று அர்ஜுனன் கூவினான்.

இளைய யாதவர் அழுக்குபடிந்த தோலாடை அணிந்திருந்தார். புழுதி சூடி திரிகளாக ஆன குழலை நாரால் முடிந்து பின்பக்கம் விட்டிருந்தார். அவர் தலையில் என்றும் விழிதிறந்திருக்கும் பீலி அன்று இருக்கவில்லை. இடையில் எப்போதும் அவர் சூடியிருக்கும் குழலும் இல்லை. வலக்கையில் கதையும் இடக்கையில் படையாழியும் ஏந்திய கரிய உடல் புழுதியும் அழுக்கும் கொண்டு ஒளி அணைந்திருந்தது.

அணுகிக்கொண்டிருந்த இளைய யாதவரை நோக்கி சினமெழுந்த பெருங்குரலில் அர்ஜுனன் கூவினான் “யாதவரே! மீண்டும் சொல்கிறேன். நேற்றுவரை உங்கள் மேல் நான்

கொண்டிருந்த அனைத்து அன்பையும் முற்றறுத்து இங்கு வந்து நின்றுள்ளேன். களம் புகுந்தபின் குருதியோ நட்போ பொருட்டென ஆகக்கூடாது என்று கற்ற போர்வீரன் நான். நமது போரால் இருவரும் அழிவோம் என்றே கொள்க... தங்கள் இலக்கு நான் எனறால் மட்டுமே அணுகுக!"

ஒருகணமும் தயங்காத காலடிகளுடன் இளைய யாதவர் அணுகி வந்தார். அவர் விழிகள் தன்மேல் பதிந்திருப்பதை அர்ஜுனன் உணர்ந்தான். அவர் இரு கைகளும் இரு சிறகுகள்போல காற்றில் வீசின. கால்கள் உருண்டபாறைகள் மேல் எடையுடன் பதிந்து மேலேறின. இரைநோக்கி இறங்கிவரும் பருந்தின் அலகென கூர்ந்திருந்தது அவர் முகம்.

அர்ஜுனன் தன் நாணை முற்றிறுக்கி இழுத்து விம்மலொலியெழுப்ப மரக்கூட்டங்களிலிருந்து பறவைகள் கூச்சலிட்டபடி எழுந்து பறந்தன. வில்லை வளைத்து அவன் அம்பு தொடுப்பதற்குள் கண்தொடா விரைவுகொண்ட கையால் ஏவப்பட்ட இளைய யாதவரின் படையாழி ஒளிக்கதிரென அவனை நோக்கி வந்தது. உடல்சரித்து அதை தவிர்த்தான். அருகிருந்த மரம் அலறலுடன் முறிந்து கிளையோசையுடன் மண்ணில் சரிந்தது.

துடித்தெழுந்து அதிர்வோசையுடன் திரும்பிச் சென்ற படையாழியுடன் இணைந்து சென்றது அவன் தொடுத்த அம்பு. அதை உடலொசிந்து இளைய யாதவர் தவிர்த்தார். மறுகணம் சுழன்றெழுந்து மீள வந்தது அவர் படையாழி. விழிமின்னி வண்டென ஒலித்துக் கடந்துசென்று அவர் அருகே நின்ற மரக்கிளையை முறித்தது பாண்டவனின் பிறையம்பு. அவனருகே ஒரு பாறை ஓசையுடன் பிளந்து விழ துள்ளித் துடித்தபடி திரும்பச்சென்றது படையாழி.

எய்தும் தவிர்த்தும் அவர்கள் நின்றாடினர். சூழ்ந்திருந்த மரங்கள் முறிந்து விழுந்தன. பாறைகள் பொறியனல் சீறி பொடி உதிர்ந்தபடி வெடித்தன. காற்று கிழிபட்டு கிழிபட்டு அதிர்ந்தது. ஊடே பறந்த பறவைகள் அறுபட்டு விழுந்து துடித்தன. அனல் உமிழ்ந்த இளைய பாண்டவனின் அம்பு பட்டு பசுமரம் ஒன்று பற்றிக்கொண்டது. படையாழி வந்து சீவிச் சென்ற பொறிதட்டி பைம்புற்கள் அனல் கொள்ள அர்ஜுனனைச் சூழ்ந்திருந்த காடு நெருப்பாகியது.

ஒருதழலை மறுதழல் தழுவ அவர்களைச் சூழ்ந்தது பேரனல். மேலே எரிந்து சுழன்றது அனலாழி. ஐந்து நெருப்புகள் சூழ அவர்கள் போரிட்டனர். சோமக்கணையால் இளைய யாதவரைத் தாக்கி அவரை பித்தெழச் செய்தான். காற்றுக்கணையால் இலைச்சுழல் எழுப்பினான். இந்திரக்கணையால் முகில் பிளந்து மின்னெழச் செய்தான்.

ஒருவரை ஒருவர் முற்றறிந்திருந்தனர் இருவரும். அர்ஜுனன் கையெடுப்பதற்குள் அவன் எண்ணிய அம்பை இளைய யாதவர் அறிந்தார். அவர் விழி திரும்புவதற்குள் அங்கே அர்ஜுனன் நோக்கினான். ஒவ்வொரு இலக்கையும் ஒவ்வொரு எண்ணத்தையும் அவர்கள் ஒன்றென அறிந்தனர். ஒற்றைப்பெருஞ்சினம். ஓருருவாகிய ஆணவம். ஒன்றென்றே ஆன தன்னிலை. பார்த்தனாகி நின்று இளைய யாதவர் தன்னுடன் போரிட்டார். கிருஷ்ணனாக மாறி அர்ஜுனன் தன்னை தாக்கினான்.

இருபாதியெனப் பிரிந்து தங்களுக்குள் போரிட்டனர். ஒருகணத்தின் ஒருகோடியின் ஒருதுளியில் அவர்களின் போர் இதோ இதோ என முன்னகர்ந்தது. அனலாகி கரியாகி காடு அவர்களைச் சூழ்ந்து புகைந்தது. வெம்மை உமிழ்ந்த பாறைகள்

மணியோசையுடன் வெடித்துருண்டன. வானிலெழுந்த பறவைகள் கூச்சலிட்டு தவித்தன. கொன்றும் வென்றும் கடந்தும் மீண்டும் ஒரு கொடுங்கனவில் நின்று களியாடினர்.

பின் ஒரு கணத்திரும்பலில் அர்ஜுனன் அறிந்தான், அங்கெழுந்து அறியா முகம் சூடிநின்ற பிறிதொரு இளைய யாதவரை. அவன் உள்ளம் திடுக்கிட அம்பெடுத்த கை தளர்ந்தது. அணுக்கத்தின் எல்லைக்கும் அப்பால் அங்கு அறியாது கரந்திருந்தவன் எவன்? முகம் சூடி ஆடியது எம்முகம்? அத்தனை நாள் ஒன்றே காலமென, உடலென்று பிறிதிலாததுபோல வாழ்ந்தபோதே அது அங்கிருந்ததா?

சிறுதுளி. இன்மையை விட சற்றே பெரிது. ஆனால் கணம்கணமென அது பேருருக்கொண்டது. ஆயிரம் பல்லாயிரம் கைகள் முளைக்க, ஒன்றன்மேல் ஒன்றென விழிகள் வெறிக்க, முகம் மீதேறிய முகங்கள். நகைக்கும் ஒரு வாயும், சினந்து பிளந்ததொரு வாயும், அறைகூவுமொரு வாயும், வசைபாடி வெறுக்குமொரு வாயுமென திசை சூழ்ந்தது. அவனறியாத பேருருவத்தைக் கண்டு அஞ்சியும் அதிர்ந்தும் அவன் எய்த அம்புகள் இலக்கழிந்தன. ஆழி வந்து அவனை நக்கி குருதி உண்டு மீண்டது. சுவைகண்டு வெறிகொண்டு விம்மி மீண்டும் வந்தது.

குருதி தெறிக்க அவன் பின்னால் விழுந்து கையூன்றி எழுந்து கால் வைத்து பின்னடைந்தான். அவன் முன் வந்து விழுந்து நிலத்தை ஓங்கியறைந்து மண்கிளறிச் சுழன்றெழுந்தது கொலைத்திகிரி. அர்ஜுனன் திரும்பி ஓடினான். முழங்கியபடி அவனை காற்றில் துரத்திவந்தது அது. எழுக என் அம்புகள். உயிர்கொள்க நான் கற்ற நுண்சொற்கோவைகள். இதோ என்

படைக்கலங்கள். இதோ என் தவத்தின் கனிகள். என்னை நானென உணரவைத்த என் அறிதல்கள்.

ஆனால் அவையனைத்தையும் முன்னரே அவன் இளைய யாதவர் மேல் ஏவியிருந்தான். இல்லத்து நாய்க்குட்டிகள் என அவரை அணுகி குலவிக்குழைந்து உதிர்ந்தன அவை. அவர் அறியாத ஒன்று எழுக! அவர் அறியாதது என்றால் தானும் அறியாதது. அறியாது கரந்து ஆழத்திலிருக்கும் ஒன்று. வெறிக்கூச்சலுடன் அவன் நின்றான். தன் இருளுக்குள் இருந்து அந்தச் சொல்லை எடுத்து அம்பில் ஏற்றி திரும்பி நின்று எய்தான். நச்சுமிழ்ந்தபடி சென்று அவர் நெஞ்சில் தைத்தது அது.

அவர் திகைத்து கையோய்ந்து நிற்பதைக் கண்டான். தன்னுள் எழுந்த பெருங்களிப்பின் ஊற்றென்ன என அக்கணத்திலும் உள்வியந்தான். "யாதவனே, கொள்க! இது நீயறியா பார்த்தன். இதோ நீ காணா நஞ்சு. நீ அணுகாத ஆழத்து இருளில் ஊறியது" என்று கூவியபடி அம்புகளை எய்துகொண்டு அணுகினான். காலெடுத்து காலெடுத்து பின்வாங்கிய இளைய யாதவர் நின்று பேரலறலுடன் வானுருக்கொண்டெழுந்தார். அவர் கையில் இருந்தது காண்டீபம். அவர் தோளெழுந்தது அவன் சூடிய அம்புத்தூளி. அவர் இடப்பக்கம் நின்றிருந்தாள் அவள்.

"நீ?" என்று அவன் திகைத்தான். வெறியுடன் நகைத்தபடி அவள் அவர் பின்னால் மறைந்தாள். விழியுமிழ்ந்த நஞ்சு. நகைப்பில் நிறைந்த நஞ்சு. அவள்தான். என் நெஞ்சுதுளைக்கும் வாளியின் கூர்முனையென அமைவது அவள் நஞ்சேதான். இளைய யாதவர் கையிலெழுந்த காண்டீபம் உறுமியபடி அர்ஜுனன்

மேல் அம்புக்குமேல் அம்பெனத் தொடுத்தது. அது அவனை நன்கறிந்திருந்தது.

அம்பு ஒன்று அர்ஜுனன் தொடையை தைக்க அவன் சரிந்து மண்ணில் விழுந்தான். அவன் உருண்டு சென்ற நிலமெங்கும் அம்புகள் வந்து நட்டுச் செறிந்து வயலென நின்றன. அவன் நன்கறிந்த குரல்களை கேட்டான். அன்னையென குருதியென காதலென கடமையென அவனைச் சூழ்ந்திருந்த விழிகளெல்லாம் அம்புமுனைகளென ஒளிகொண்டெழுந்து விம்மி வந்து தைத்து நின்று நடுங்கின.

பெருவஞ்சத்துடன் கையூன்றி எழுந்து அவன் கைநீட்டியபோது சுட்டுவிரலில் இருந்தது யாதவரின் படையாழி. “செலுத்துக! செலுத்துக என்னை!” எனத் துடித்தது அது. “இது என் வஞ்சம்! ஆம், என் வஞ்சம் இது” என்றது. “படைநின்ற தெய்வம் கொண்ட வஞ்சம் இது. செலுத்துக என்னை!” அவனே ஒருகணம் அதன் வெறிகண்டு திகைத்தான். அவன் அதை விடுவதற்குள்ளாகவே எழுந்து பறந்து சென்றது. அதிலிருந்து குருதித்துளிகள் வீசப்பட்ட செம்மொட்டுமாலையெனத் தெறித்தன.

உடலெங்கும் எழுந்த வெறியால் உலைந்தாடி கைவீசி நகைத்து “கம்சரின் பொருட்டு. யாதவனே, இதோ கம்சரின் பொருட்டு!” என்று அர்ஜுனன் கூவினான். திகைத்து கையோய்ந்து நின்ற இளைய யாதவரின் தலையறுக்கச் சென்று இறுதிக்கணத்தில் அவர் தலைசரிக்க அவர் முடித்திரளை வெட்டிவீசி மீண்டது.

“நில் நில்!” என அவர் கூவ மீண்டும் சீறி அவரை அணுகியது. வஞ்சமெழுந்த விழியென இளைய யாதவர் அதை கண்டார். “நீயா?” என்று கூவியபடி பின்னால் திரும்பி ஓடினார். அவரைத் தொடர்ந்து வந்து குதிகாலை வெட்டியது நற்காட்சி. குருதியுடன் மண்ணில் விழுந்த அவர்மேல் வந்து சுழன்று இழைவெளியில் புரண்டகன்ற அவர் தோள்தசையைச் சீவி திரும்பிச்சென்றது. குருதிசுவைத்த அதன் நாக்கு மின்னொளி சிதற காட்டில் சுழன்றது. “சிசுபாலனுக்காக! சிசுபாலனுக்காக!” என்று அர்ஜுனன் கூவினான்.

எரிபுகை எழுந்து இருண்ட வானுக்குக் கீழே அவர்கள் மட்டுமே இருந்தனர். விழிகள் மயங்கி மறைய உடலறிந்த காட்சியில் ஒருவரை ஒருவர் கண்டு போரிட்டனர். ஆயிரம் முறை ஆரத்தழுவிய தோள்கள், அன்புகொண்டு பின்னியாடிய

விரல்கள் ஒன்று பிறிதை தான் என அறிந்தன. ஒன்று புண்பட்டபோது பிறிதும் வலிகொண்டது. அவ்வலியால் வெறிகொண்டு மேலும் எழுந்தது. மேலும் குருதி என கொந்தளித்தது. தன் குருதி உண்டதுபோல் சுவையறிந்து திளைத்தது.

எரிந்த காட்டுக்குள் நிகழ்ந்த போர் இருளுக்குள் எதிராடிப்பாவைத் தொடர்பெருக்கு என எழுந்தது. தொலைகாடுகளில் இடியெனப் பிளிறி தலைகுலுக்கி ஓடிவந்து மத்தகம் அறைந்தன இணைக்களிறுகள். கொம்புகள் மோதின எருதுகள். சீறி வளைந்து தாவி அறைந்து கைபின்னிப் புரண்டன வேங்கைகள். கவ்விக்கிழித்து தசைதெறிக்க குருதிசீற ஒன்றையொன்று கடித்துண்டன ஓநாய்கள். வானில் சுழன்று கொத்தி சிறகுதிர்த்து தசைத்துண்டுகள் என மண்ணில் விழுந்து துள்ளித்தாவின சிட்டுகள். நீள்கழுத்து பின்னி அறைந்து சிறகடித்து எழுந்து விழுந்து நீர்சிதறப் போரிட்டன அன்னங்கள். ஒன்றை ஒன்று விழுங்கின நாகங்கள். போர்வெளியாகியது உலகம். குருதிச் சாந்தணிந்தாள் மண்மகள்.

உடலெங்கும் செங்குருதி வழிய மண்ணில்புரண்டு தன்னைச் சூழ்ந்து அதிர்ந்த படையாழிச் சுழற்பெருக்கைக் கடந்து எழுந்த அர்ஜுனன் இளைய யாதவரின் அருகே நிழல் சுருண்டசைவதை கண்டான். பெண்ணுருக்கொண்ட பெருநிழல் நான்கு கைகளும் நீண்டுபறக்கும் குழலும் கொண்டு எழுந்தது. அஞ்சி அவன் எழுவதற்குள் அவன் காண்டீபத்தை வெட்டி எறிந்தது ஆழி. அவன் அருகிருந்த பாறையை எடுத்தபடி எழுந்ததும் அவனை அணுகி ஓங்கி அறைந்து தெறிக்கச்செய்தது கதை.

அவன் முழுவிசையாலும் பாய்ந்து அவர் மேல் முட்டி பின்னால் சரிந்தான். இருவரும் உடல்தழுவி மலைச்சரிவில் உருண்டனர். அவர்கள் உடல்பட்டு எழுந்த பாறைகள் உருண்டு முட்டி மலையாழத்தில் பொழிந்தன. அவர் கையமர்ந்த படையாழியை அவன் உதைத்து வீசினான். கதையைப் பற்றியபடி சுழன்று எழுந்து அறைந்து தெறிக்கச்செய்தான். அவர் தோளை கடித்தான். உடலை கைநகங்களால் கிழித்தான்.

இரு உடல்களும் தழுவியறிந்தன முன்பு தழுவியபோது அறியாத அனைத்தையும். வழிந்த இரு குருதிகளும் கலந்து ஒன்றென மணத்தன. ஒன்றென வாயில் சுவைத்தன. தசையிறுகப் பற்றி இறுகி அசைவிழந்து நின்ற கணத்தில் இளைய யாதவரின் விழித்த கண்களை அருகே கண்டான். அவை நோக்கிழந்து பிறிதொரு கனவில் இருந்தன.

“யாதவரே” என்று அவன் அழைத்த ஒலி அவனுள் புகுந்து மூலாதாரத்தை அடைந்தது. அவன் உடல் தசைவிதிர்த்து நடுங்கிக்கொண்டிருந்தது. அவன் கைகளைப்பற்றி நிறுத்தி கால்களால் தொடையை அழுத்தி நெஞ்சில் தோளூன்றி மேலெழுந்தார் இளைய யாதவர். பிறிதெங்கோ எழுந்த கொலைநகைப்பு ஒன்றை அவன் கேட்டான். அனல் சூழ்ந்த வான்வெளியில் என அம்முகத்தை கண்டான். அனைத்து எண்ணங்களும் மறைய விழிமட்டுமேயாகி கிடந்தான்.

அக்கணத்தில் நீருக்குள் இருந்து சித்ரசேனன் கைகூப்பியபடி எழுந்தான். “யாதவரே, என்னைக் காக்கவந்த வீரர் அவர். அவர்மேல் அளிகொள்க! இதோ நான் வந்து நிற்கிறேன். என்னைக் கொன்று முனிவரின் வஞ்சினம் நிறைவுறச் செய்க!” என்று கூவியபடி ஓடிவந்தான். “நான் இனி உங்கள்

அடைக்கலம் அல்ல, பாண்டவரே. இனி எனக்கு கடன்பட்டவரல்ல நீங்கள்" என்று அலறினான்.

மறுஎல்லையில் இருந்து காலவர் தன் மாணவர் சூழ கூவியபடி ஓடிவந்தார். "யாதவரே, வேண்டாம்! என் வஞ்சினத்தில் இருந்து விலகுக. சொல்பேணி நான் எரிபுகுகிறேன். எனக்கென இப்பேரழிவு நிகழவேண்டியதில்லை." உறுமியபடி திரும்பிநோக்கியது சிம்மம். அவர் திகைத்து நின்று "நானறிந்திலேன்! யாதவரே, நான் அறியாது பிழையிழைத்தேன்" என்று கைகூப்பினார்.

மறுபுறம் ஓடிவந்த சித்ரசேனன் "கொல்க என்னை... என் பொருட்டெழுந்த இவ்வீரனுக்காக இறக்கிறேன்" என்றபடி அணுக நுதல்விழி சீற நோக்கியது பைரவம். அவன் கைகூப்பி நிற்க அவன் துணைவி உருவழிந்து வரிகொண்ட வலிகையாக ஆகி மண்ணில் படிந்தாள்.

"எங்கள் பகை அழிந்தது. நிறுத்துங்கள் போரை" என சித்ரசேனனும் காலவரும் இணைந்து குரலெழுப்பினர். அர்ஜுனன் மீதிருந்து எழுந்த இளைய யாதவர் உடலெங்கும் குருதி வழிய வெற்றுடலுடன் அக்கணம் கருவறைக்குள் இருந்து வந்தவர் போலிருந்தார். கால்கள் நிலைகொள்ளாது அசைய கண்களை மூடி தன்னை திரட்டினார். பின்னர் வாயிலூறிய குருதியை ஓங்கி துப்பினார். மூச்சில் சிதறின குருதிமணிகள்.

"யாதவரே, குளிர்க... நிறுத்துக போரை!" என்றார் காலவர். குருதிச்சரடு தெறிக்க அவர் தன் கைகளை உதறிக்கொண்டார். அவர்களை எவரென்பதுபோல நோக்கியபின் தளர்ந்த நடையுடன் திரும்பிச்சென்றார். அவர் செல்வதை சொல்லற்று

நோக்கி நின்றபின் இருவரும் அர்ஜுனனை நோக்கி ஓடிச்சென்றனர்.

கிழித்துண்ண முயன்ற பருந்தின் உகிரலகில் இருந்து நழுவி விழுந்த பறவைக்குஞ்சு போல அர்ஜுனன் அங்கே கிடந்தான். சித்ரசேனன் “எழுக, இளையவரே! என் பொருட்டு நீங்கள் அளித்தவற்றுக்காக என் குலம் கடன்பட்டிருக்கிறது” என்றான். காலவர் “இளையவரே, வென்றவர் நீங்கள். இது என்ன ஆடலென்று இப்போது அறியமாட்டீர்” என்றார்.

**[ 15 ]**

எரிதழலில் அவியிட்டு விண்ணுலாவியாகிய நாரதரை அழைத்து தான் செய்யவேண்டியதென்ன என்று காலவர் கேட்டார். செய்த பிழைக்காக சித்ரசேனன் தன் நாவரிந்து இடட்டும் என்றார் நாரதர். தன் சொல்பேணுவதற்காக அந்நாவை எரித்து அச்சாம்பலைப் பூசட்டும் காலவர் என வகுத்தார். இருவரும் அதை ஏற்றனர். “என் விரல்கள் யாழைத் தொடுகையில் நாவாகின்றன. இந்நாவால் நான் அடைவதொன்றுமில்லை” என்றான் சித்ரசேனன். அதை எரித்த சாம்பலை தன் நெற்றியிலிட்டு நீராடி எழுந்து மீண்டும் தவம்புகுந்தார் காலவர்.

“அர்ஜுனன் மட்டும் அதிலிருந்து மீளவில்லை” என்றான் சண்டன். அவர்கள் தண்டகாரண்யத்தின் நடுவே ஓடிய பிரபாவதி என்னும் சிற்றோடையின் கரையிலிருந்த பாறைமேல் அமர்ந்திருந்தனர். “ஏன்?” என்றான் பைலன். “அஸ்வபக்ஷத்தில் இருந்து திரும்பிய அர்ஜுனன் இருளிலேயே தன் குடிலுக்குள் சென்று படுத்துக்கொண்டான். அவன் உடலெங்குமிருந்த புண்களை மறுநாள்தான் சகதேவன்

கண்டான். நகுலனை அழைத்து அவற்றுக்கு மருந்திடும்படி கோரினான்.”

திகைப்புடன் “மூத்தவரை இப்படி உடல்நைந்து குருதிவழியச் செய்யும்படி வென்றவர் எவர்?” என்று நகுலன் கேட்டான். “பிறிதெவர்?” என்றான் சகதேவன். நகுலன் பிறகேதும் சொல்லவில்லை. அர்ஜுனன் உடல்தேறி மீண்டெழ நாற்பத்தொரு நாட்களாயின. அவன் உடல் ஒளி மீண்டது. ஆனால் அவன் விழிகள் முற்றிலும் மாறிவிட்டிருந்தன. பிறிதெங்கோ நோக்கி அவை அலைபாய்ந்துகொண்டிருந்தன. யுதிஷ்டிரர் மலையிறங்கி வருவதுவரை அவன் அங்கிருந்தான். அதன் பின் தன் உடன்பிறந்தாரிடம் சொல்லிவிட்டு கிளம்பமுற்பட்டான்.

யக்ஷவனத்திலிருந்து அவர்கள் கிளம்பும் தருணம் அது. அர்ஜுனன் அவன் கிளம்பிச் செல்லவிருப்பதை தமையனிடம் சொன்னபோது பீமன் திடுக்கிட்டு “தனியாகவா? எங்கே?” என்றான். “அறியேன். ஆனால் நான் சென்று அடையவேண்டியவை பல உள்ளன. அவை நான் மட்டுமே செல்லக்கூடிய இடங்கள்” என்றான் அர்ஜுனன். “மீண்டும் ஒருவர் தனித்துச் செல்வதை ஒப்பமுடியாது…” என்று பீமன் உரக்க சொன்னான். “செல்பவருக்கு ஒன்றுமில்லை. இங்கிருப்பவர்கள் சென்றவரை ஒவ்வொரு கணமும் எண்ணி துயர்கொள்ளவேண்டியிருக்கிறது.”

“இளையவனே, நீ செல்வது எதை அடைவதற்காக?” என்றார் யுதிஷ்டிரர். “அம்புகளை” என்று அவன் சொன்னான். “நாம் போரிடப்போவதில்லை, இளையோனே. போரிடுவதென்றால் நம் உடன்பிறந்தவரை எதிர்கொள்ளவேண்டும். நான் அதற்கு ஒருபோதும் ஒப்பமாட்டேன்” என்றார் யுதிஷ்டிரர்.

அர்ஜுனன் “வில்வீரன் அம்புகளைத் தேடுவது தன்னை நிறைத்துக்கொள்வதற்காக மட்டுமே” என்றான். சினத்துடன் கைகளைத் தட்டியபடி அருகே வந்த பீமன் “வீண்சொற்கள் வேண்டாம். நீ அம்புகள் தேடுவது எதற்காக? இளைய யாதவருக்கு எதிராகவா?” என்றான். அவன் விழிகளை ஏறிட்டு நோக்கி “ஆம்” என்றான் அர்ஜுனன். பீமன் கடும் சினத்துடன் அறையும்பொருட்டு கையோங்கி அணுகி “மூடா, இன்று இப்புவியில் நமக்கு நண்பர் என பிறரில்லை” என்றான்.

யுதிஷ்டிரர் கைநீட்டி அவனை தடுத்தபின் அர்ஜுனனிடம் “பார்த்தா, நீ அவருக்கு எதிராக படைநிற்கப்போவதில்லை. இது என் ஆணை!” என்றார். “நாம் அவர் கருவிகள். நம் பிறவிப்பெருநோக்கம் அதுமட்டுமே.” சகதேவன் “ஆம், மூத்தவரே நம் ஊழ் அவருடன் பிணைந்தது” என்றான்.

அர்ஜுனன் “என்றும் நான் அவர் நண்பனே. அதை நன்கறிவேன்” என்றான். “ஆனால் அடிமை அல்ல. பணியாள் அல்ல. மாணவனும் அல்ல. இணையானவனே நண்பனாக அமைய முடியும். நண்பனாக அமைந்தால் மட்டுமே அவர் எனக்கு ஆசிரியராக நிற்கவும் இயலும்” என்றான். பீமன் இகழ்ச்சியுடன் நகைத்து “அவருடன் போரிட்டுத் தோற்ற சிறுமை உன்னை எரியவைக்கிறது” என்றான்.

அர்ஜுனன் “இல்லை மூத்தவரே, நான் அவரிடம் தோற்கவில்லை” என்றான். “அக்கணத்தில் அவரால் என்னை வெல்லமுடிந்தது, கடக்கமுடியவில்லை என்று அறிந்தேன். அங்குதான் என் உள்ளம் சிறுமைகொண்டு சுருங்கியது.” அவன் சொல்வதென்ன என்று அறியாமல் அவர்கள் நோக்கினர். தானே அதை தெளிவுற உணராதவன் போல அர்ஜுனன் தலையை குலுக்கிக்கொண்டான்.

“முதல்வனாக அன்றி நின்றிருக்கமுடியாத ஆணவம் இது. பார்த்தா, இவ்வாறு தருக்கிய எவரும் முழுவெற்றி அடைந்ததில்லை” என்றான் பீமன். அர்ஜுனன் நிலைமாறாத மொழியில் “மூத்தவரே, நீங்கள் இதை புரிந்துகொள்ளமுடியாது. ஆழியும் பணிலமும் ஏந்திய அண்ணலின் கதைகளிலேகூட அவன் முன் நிகரென எழுந்து நின்றவர்களே அவனருளுக்கு உரியவர்களானார்கள். தென்னிலங்கைக் கோமகனோ இரணியனோ எவராயினும் அதுவே வீரர்களின் வழி” என்றான்.

பீமன் அலுப்புடன் தலையை அசைத்து “நீ முடிவுசெய்துவிட்டாய். ஆணவம் கொண்டவர்களிடம் பேசிப் பயனில்லை. நூறுகோணங்களில் சிந்தனைசெய்து அனைத்து விடைகளையும் கண்டடைந்திருப்பாய்” என்றான். “ஆம், என் ஆணவம் அடிபட்டது, இல்லையென்று மறுக்கவில்லை. ஆனால் அது நான் அவர் முன் தோற்றதனால் அல்ல. நானறியாத ஒன்று அவரில் பேருருக்கொண்டு எழுந்ததைக் கண்டேன். அதனெதிர் நிகரென ஒன்று என்னுள்ளும் எழுவதைக் கண்டேன். அதனால்தான்” என்றான் அர்ஜுனன்.

“அந்த ஆழுலகை அறியாது இனி இங்கிருக்க என்னால் இயலாது. மூத்தவரே, அம்பு என்பது ஒரு சொல் மட்டுமே. இப்புடவி கொண்டுள்ள ஆழ்மெய்மை ஒன்றே அம்பென உருக்கொண்டு என்னை வந்தடைகிறது. நான் அறிந்து அதை கைக்கொண்டாகவேண்டும். மறுமுறை அவர்முன் சென்று நின்றிருக்கையில் என் அம்புத்தூளியில் அது இருந்தாகவேண்டும்.”

யுதிஷ்டிரர் பெருமூச்சுடன் “அவன் சென்றுமீளட்டும், மந்தா. நாம் தடைசொல்ல வேண்டியதில்லை” என்றார். பீமன் “ஆம், நாம் சொல்வதற்கொன்றும் இல்லை” என்றான். யுதிஷ்டிரர்

அர்ஜுனனிடம் “இளையோனே, நாம் நோக்காது ஒழிந்த காட்சிகளாலானது இப்புவி நின்றிருக்கும் பீடம். நாம் கேளாது ஒளிந்துகொள்ளும் ஒலிகளாலானது நமைச் சூழ்ந்த வானம். ஒளிந்திருப்பவற்றை தேடிச்செல்பவன் விரிந்து விரிந்து சூழும் பேரிருளை மட்டுமே அறியமுடியும் என்கின்றன நூல்கள்” என்றார்.

அர்ஜுனன் “ஆம் மூத்தவரே, நான் அதை அறிவேன்” என்றான். “நான் தேடிச்செல்வது முழுமையை அல்ல, என்வயமாகி என்னில் அடங்கும் அதிலொரு துளியை மட்டுமே.” யுதிஷ்டிரர் “கரியிருள் சூழும் என்கிறார்கள். அதன் தோலுரித்து எழும் ஒளிக்கு நீ உகந்தவனாக ஆகுக!” என்று வாழ்த்தினார். அர்ஜுனன் அவர் காலடிகளைத் தொட்டு சென்னி சூடினான்.

யுதிஷ்டிரர் திரும்பி இளையவனாகிய சகதேவனிடம் “நன்று சூழுமா, இளையோனே?” என்றார். “நிகரென நின்று மட்டுமே அறியும் சொல் ஒன்று அவருக்காகக் காத்துள்ளது, மூத்தவரே” என்றான் சகதேவன்.

“அர்ஜுனன் தன் உடன்பிறந்தார் நால்வரிடமும் விடைபெற்றான். விழிநோக்காது திரௌபதியிடம் சொல்கொண்டான். யக்ஷவனத்திலிருந்து காண்டீபத்தை மட்டும் கையில் கொண்டு திரும்பிநோக்காமல் நடந்து வடக்குத்திசையேகினான். அவன் காலடிகள் பட்டு வளைந்த புல்நுனிகள் மெல்ல நிமிர்வதை உடன்பிறந்தார் நோக்கி நின்றனர்” என்றான் சண்டன்.

“அவன் பயணத்தை அயோத்திநாட்டுக் கவிஞராகிய சம்விரதர் அர்ஜுனேந்திரம் என்னும் காவியமாகப் படைத்தார். அதை இன்று சூதர் பாடியலைகின்றனர். அர்ஜுனன் கதை நன்று. அது

எப்போதும் பெண்களிடமிருந்து அரிசியும் நெய்யும் பெற்றுத்தருவது. இளம்பெண்கள் மட்டும் தனித்தமர்ந்து கேட்பார்களென்றால் மெல்ல அவர்களின் கைவளைகளையோ குழைகளையோகூட கழற்றி வாங்கிக்கொள்ள முடியும்." அவன் தன் மடிச்சீலையை அவிழ்த்து ஒரு பொன்வளையையும் ஒற்றைக்காதணியையும் காட்டினான். பைலன் புன்னகைத்தான்.

# கிராதம் - 13

**[ 16 ]**

இளமழைச்சாரல் புதரிலைகளின் மீது ஓசையின்றி இறங்கிக்கொண்டிருந்த முன்னுச்சிவேளையில் முழவைத் தோளிலேந்தி சிறிய தாவல்களாக மலைச்சரிவுப்பாதையில் ஏறிச்சென்ற சண்டனுடன் நெஞ்சுக்கூடு உடையத்தெறிக்கும்படி மூச்சுவாங்கி நடந்து வந்த பைலன் தொலைவிலேயே காற்றில் படபடத்த அந்த செந்நிறக் கொடியை பார்த்தான். சண்டன் "அதுதான்…" என்றான். "அருகநெறியர்களின் அன்னசாலைகள் பொதுவாக வெற்றுப்பாறைகளின் மடிப்பிலுள்ள குகைகளிலேயே அமையும். அவர்கள் படைக்கலம் பயில்வதில்லை என்பதனால் ஊனுண்ணிகள் உலவும் காடுகளை ஒழிவது அவர்களின் மரபு. ஆயினும் இங்கு அவர்களின் அன்னசாலை அமைந்துள்ளது நமது நல்லூழ்."

பைலன் முழங்கால்கள் மேல் கைகளை ஊன்றி கண்களுக்குள் ஒளி அலையடிக்க விழிமூடி நின்றான். உடலெங்கும் குருதி கொப்பளித்தது. காதுகளில் உள்ளனல் வெம்மைபூசியது. இழுமூச்சின் விசையால் தொண்டை வரண்டு உடல் தவித்தது. சண்டன் "அங்கு அணையாது எரியும் அடுமனை

நெருப்பாலேயே ஊனுண்ணிகளை அவர்கள் விலக்குகிறார்கள்” என்றான். பைலன் நிமிர்ந்து மீண்டும் தசை இறுகி அசைவற்றதென ஆகிவிட்டிருந்த கால்களை தூக்கி வைத்து அவனைத் தொடர்ந்தான்.

அவர்கள் இருவரும் பசித்து விழியொளி மயங்கும் நிலையை காலையிலேயே அடைந்துவிட்டிருந்தனர். பைலனால் தொடர்ந்து பத்து காலடிகளைக்கூட வைக்க முடியவில்லை. “என்னால் முடியாது… என் உடல் முற்றிலும் அனலணைந்துவிட்டது” என்று அவன் பின்காலையிலேயே சொன்னான். “இன்னும் சற்று தொலைவுதான்… எனக்கு அப்படித்தான் சொல்லப்பட்டது” என்று சண்டன் அவனை அழைத்து வந்தான். முற்றாக உடல் தளர்ந்து நின்று, நின்றிருக்கமுடியாதென்பதை உணர்ந்து மீண்டும் எஞ்சிய துளி ஆற்றலை தேடித் திரட்டிக் குவித்து உடல்செலுத்தி முன் சென்றனர்.

துளித்தூறல் என்றாலும் ஒழியாது பெய்தமையால் பைலன் அணிந்திருந்த மரவுரி ஈரத்தில் ஊறி குருதியும் நிணமுமாக உரித்தெடுக்கப்பட்ட ஊன்படிந்த தோல்போல எடை கொண்டிருந்தது. தோலுறைக்குள் வைக்கப்பட்டிருந்த சண்டனின் முழவின் தோற்பரப்பும் நைந்திருந்தது. மரத்தடி கிடைத்ததும் அவன் அதை எடுத்து தொட்டு வருடி “தளர்ந்துவிட்டது” என்றான். “தாளம் எழாதா?” என்றான் பைலன். “தளர்தாளம் எழும்” என்றான் சண்டன்.

“என்னால் முடியவில்லை… விழுந்துவிடுவேன்” என்றான் பைலன் ஒரு மரத்தைப் பற்றிக்கொண்டு குனிந்து நின்றபடி. “இன்னும் சற்று தொலைவுதான்” என்று சண்டன் சொன்னான். “அதோ தெரிகிறதே கொடி… இனி என்ன?” ஆனால் அவர்கள்

நடக்க நடக்க அந்தக் கொடி மாறாது அங்கேயே இருந்து கொண்டிருந்தது.

புதர்களுக்குள் அது மறைந்து மீண்டும் தோன்றியபோது “அது நம்முடன் விளையாடுகிறது என்று தோன்றுகிறது. பிளவுப்பாறைக்கு அடியிலிருந்து கிளம்பியபோதிருந்து அதை நோக்கிக் கொண்டிருக்கிறோம் என்று தோன்றுகிறது” என்றான் பைலன் சலிப்புடன். “இன்னும் சற்று தொலைவுதான்” என்றான் சண்டன். “கடந்து வந்த தொலைவுடன் ஒப்பிட்டால் மிக அண்மை.” பைலன் மூச்சை ஊதி வெளியிட்டு “காடேகுதல் இத்தனை கடினம் என்று நான் எண்ணியிருக்கவில்லை. ஊரில் பாண்டவர்களின் காடேகுதல் கதைகளைக் கேட்டபோது என்றேனும் ஒருநாள் நானும் பிறவிநகர் துறந்து அறியாக் காடேகுவேன் என்று கனவு கண்டேன்” என்றான்.



“அந்தக் காடு இனியது. நான் அறிந்த அனைத்துக்கும் இனிய மாற்று. மகவென நானறிந்த அனைத்துடனும் அன்னையின் அங்கல்ல, அதுவல்ல, அதுவரை என்னும் சொற்கள் இணைந்திருந்தன. அச்சொல் இல்லாத சூழ்பெருக்கு என்று நான் காட்டை நினைத்திருந்தேன். ஆனால் இக்காடு நம்மைச் சூழும் இருள் எனத் தோன்றுகிறது. நாம் சரிவதை எதிர்நோக்கிக் காத்திருக்கும் பசித்த விலங்கு. நம் எல்லைகள்

அனைத்தையும் முன்னரே அறிந்த ஆழுலகத் தெய்வம்” என்றான் பைலன்.

“காடு நம் உப்பை விரும்புகிறது” என்றான் சண்டன். “பழைய ஒன்றின் உப்பு புது முளைக்கும் தளிருக்கும் உரிய உணவு என்றே அது நினைக்கிறது. நாம் விழுந்தால் காடு நம்மை அள்ளிப்பற்றி வேர்கவ்வி உறிஞ்சி உண்ணத்தொடங்கிவிடும்.” பைலனுக்கு அச்சொற்கள் உள்நடுக்கை உருவாக்கின. சூழ்ந்திருந்த காட்டின் ஒவ்வொரு இலையும் நாவென ஒவ்வொரு மலரும் விழியென மாறியது. “காட்டை நாம் உண்கிறோம். அது காட்டால் உண்ணப்பட்ட நம் முன்னோடிகளே” என்றான் பாணன். “இங்கே விழுந்து மறைந்தால் நமது உப்பை உண்டு இவை தளிரும் மலருமாக பொலியும். தொலைவிலிருந்து நோக்கி கவிதை எழுதும் பாணர்கள் மகிழ்வார்கள். அவர்களின் சொல் வலையென நகர்கள்மேல் படியும். அங்கிருந்து மேலும் இளைஞர்கள் காடேக கிளம்பிவிடுவார்கள்.”

பைலன் அவ்வேளையில் அந்த இடக்கை விரும்பும் மனநிலையில் இல்லை. “இனி என்னால் ஓரடிகூட எடுத்து வைக்க முடியாது, சண்டரே. நீர் செல்க! மீண்டால் எனக்கு கைப்பிடி உணவுடன் திரும்பி வருக!” என்றான். “அண்மையில்தான்... இதோ கொடியின் முக்குடை முத்திரையே தெரியத்தொடங்கியிருக்கிறது” என்று அப்பால் நின்றபடி சண்டன் சொன்னான். “நெடுந்தூரம் கடந்துவிட்டோம். எஞ்சியிருப்பவை சில அடிகள் மட்டுமே.” அடிமரத்தில் உடல்சாய்த்து “என்னால் இயலும் என்று தோன்றவில்லை” என்றான் பைலன். “எப்போதும் எழும் மாயை இது, உத்தமரே. இலக்கை நெருங்கும் இந்த இறுதித் தருணத்தின்

குறுகியதொலைவின் எதிரழுத்தத்தை நின்று நேர்கொள்ளும் வல்லமையை அடைந்தவரே வென்றவர். வீழ்பவர் அனைவரும் இலக்குக்கு சற்று முன்னால் உளம் தளர்பவர்கள்தான்.”

“இல்லை... சென்று வாருங்கள்” என்றபடி மெல்ல கைகளை ஊன்றி மண்ணில் கால்மடித்து பைலன் அமர்ந்தான். காற்று கடந்த சென்றபோது அவன் தலைக்கு மேல் நின்ற மரக்கிளை ஒசிந்து அவனுக்கென பெருநீர்த் துளிமழை ஒன்று பெய்தது. உடல் சிலிர்த்துக் குலுங்கி மெய் கூசியது. “என் எல்லை இதுதான்” என்றான். “உங்கள் எல்லை இதுதான். ஆனால் தன் எல்லை கடந்து ஓரடியேனும் வைக்காமல் அரியதென எதையும் எவரும் அடைவதில்லை” என்றான் சண்டன். “இன்சொற்கள்” என்று பைலன் தனக்குள் என சொன்னான். “இத்தருணத்தில் எத்தனையோ சொற்களை உளம் உருவாக்கிக்கொள்ளும். உடல்வரை அவற்றை கொண்டுசெல்ல முடியாது.”

“நன்று, முடிவெடுக்கவேண்டியவர் தாங்களே. அந்தணரே, இலக்கை விழிகளால் தொட்டுவிட்டீர். சித்தம் அறிந்த ஒன்றை செயல் சென்று தொடுவது அரிதல்ல. கடக்க வேண்டியது உங்களைக் குறித்த உங்கள் கணிப்புகளையும் ஐயங்களையும்தான்” என்றபின் சண்டன் திரும்பி நடந்தான். அவன் திரும்பிப்பார்ப்பான் என பைலன் எதிர்பார்த்தான். அவன் போய்மறைந்த காட்டுத்தழைப்பு சொல் முடிந்த வாய் என மூடிக்கொண்டதும் அவன் திரும்பிப்பாராததே இயல்பு என உணர்ந்து நீள்மூச்சுவிட்டான்.

சூழ்ந்திருந்த காட்டின் நோக்கை மீண்டும் உணரத் தொடங்கினான். பசுமை இருளாக ஆகியது. இருள் மத்தகம்

கொண்டது. காதசைவு கொண்டது. உடலூசல் ஆகியது. பைலன் எண்ணியிரா ஒரு கணத்தில் உளம் கலங்கி அழத்தொடங்கினான். குளிர்மழை வழிவிற்குள் கண்ணீரின் வெம்மையை கன்னங்களில் உணர்ந்ததுமே அதுவரை உணர்ந்திராத நாணம் ஒன்றை அவன் அடைந்தான். முழு ஆற்றலையும் திரட்டி கைகளை ஊன்றி உடலை உந்தி எழுந்து முன்னால் விழுபவனைப்போல காலெடுத்து வைத்து விரைந்தான். எடை மிக்க மூச்சின் அழுத்தத்தால் உடற்தசைகள் ஒன்றொன்றாக விடுபட்டு அவிழ்ந்து விழுந்தன. நெஞ்சு ஒலிக்க சண்டனைக் கடந்து சென்று அங்கே நின்றிருந்த சிறிய மரமொன்றைப் பிடித்தபடி நின்று குனிந்து வாயால் மூச்சுவிட்டான்.

அவன் தொங்கிய குழலில் இருந்து மழைத்துளிகள் மண்ணில் உதிர்ந்தன. அவன் அருகே வந்த சண்டன் ஒரு சொல்லும் சொல்லாமல் கடந்து சென்றான். மீண்டும் கைகளால் மரத்தை உந்தி மூச்சுவிட்டு திசையில் விழுந்து எழுந்து உடலெங்கும் குருதி நின்று துடிக்க சண்டனைக் கடந்து சென்றான். சண்டன் அவனை அறியாதவன்போல் கடந்து சென்றான். மீண்டும் ஒருமுறை சென்றபோது மிக அருகிலென எதிரில் அன்னசாலை தெரிந்தது. பைலன் அக்காட்சியைக் கண்டதுமே மீண்டும் உளம் கரைந்து அழத்தொடங்கினான்.

அவன் அருகே வந்த சண்டன் “திரும்பிப் பாருங்கள், உத்தமரே! நீங்கள் வந்த தொலைவு இவ்வளவுதான்” என்றான். பிடித்திருந்த மரக்கிளையை விட்டுவிட்டு வலி தெறித்த இடையில் கைவைத்து பைலன் உடல் திருப்பி அவன் வந்த தொலைவைப் பார்த்தான். பத்து எட்டுகளில் அங்கு சென்றுவிடமுடியும் என்று தோன்றியது. ஏறி வருகையில்

வானிலிருந்து தொங்கும் திரையில் வரையப்பட்ட ஓவியப்பாதை எனத் தோன்றியது அப்போது மிகச்சீரான வளைவெனத் தெரிந்தது. “அது ஒரு தெய்வம். அவள் பெயர் விஷாதை” என்று சண்டன் சொன்னான். “மானுடரின் வெற்றிக் கணங்களுக்கு முன்பு அவள் அமர்ந்திருக்கிறாள். அவன் அணுகுவதைக் கண்டதும் வஞ்சப் புன்னகையுடன் தன் கைகளை விரித்து குறுக்கே நிற்கிறாள். உச்சிமலைப்பாறையைப் பற்றி ஏறுபவனின் நெஞ்சில் கைவைத்து ஓங்கி தள்ளுகிறாள். நுனிவிளிம்பை தொற்றிக்கொள்பவனின் தலையில் மிதிக்கிறாள். அவளைக் கடந்துசென்ற பின் திரும்பிப்பார்த்தால் அவள் நம்மை வாழ்த்துவது தெரியும்.”

“நாம் செல்வோம்” என்று புன்னகையுடன் பைலன் சொன்னான். சண்டன் நடந்து அன்னசாலையின் அருகே சென்றான். அவன்பின் சென்ற பைலன் நின்று அன்னசாலையை அறிவிக்கும் முக்குடையும் பீலியும் பொறிக்கப்பட்ட குத்துக்கல்லை நோக்கினான். அங்கிருந்து அன்னசாலை வரை செல்வது ஒரு எண்ணம் அளவுக்கே எளிதாக இருந்தது. பறந்துசென்றுவிடமுடியும் என்பதுபோல. அவன் புன்னகையுடன் மிகமெல்ல கால்வைத்து நடந்தான். சேற்றில் அவன் காலடிகள் விழும் ஒலியையே அவனால் கேட்கமுடிந்தது.

காட்டுமரத்தால் தூண்நாட்டப்பட்டு மரப்பட்டைக் கூரையிடப்பட்ட அன்னசாலையின் வலப்பக்கம் சரிந்தெழுந்த கற்பாறையில் அருகர்களின் சிற்றாலயம் ஒன்று குடையப்பட்டிருந்தது. இருபக்கமும் சாமரங்கள் சூடி காவல் யட்சர்கள் நின்றிருந்தனர். உள்ளே முழுதுடல் நிமிர்த்தி

விழிகள் ஊழ்கமயக்கில் பாதிமூடியிருக்க முதல்அருகர் ஐவர் நின்றிருந்தனர். அவர்களின் காலடியில் வைக்கப்பட்டிருந்த கல்லகலில் ஒளிமுத்துக்கள் அசையாது நின்றிருந்தன. பைலன் அருகே சென்று முழந்தாளிட்டு அருகர்களின் கால்களைத் தொட்டு சென்னி சூடினான். “வழித்துணையாக அமைக, மலர்மிசை ஏகியவர்களே! சொற்றுணையாக அமைக, வாலறிவர்களே! ஆசிரியர்களாகுக, அறிவிலமைந்தவர்களே!” என்று வேண்டிக்கொண்டான்.

அப்பால் தன் மூட்டையை தோள் மாற்றியபடி ஆலயத்தை பார்க்காததுபோல உடல் திருப்பி சண்டன் நின்றிருந்தான். பைலன் எழுந்து வந்து “தாங்கள் அருகர்களை வணங்குவதில்லையா?” என்றான். “நான் எந்த தெய்வத்தையும் வணங்குவதில்லை.” “ஏன்?” என்று பைலன் கேட்டான். “ஏனெனில், நான் ஒரு தெய்வம். தெய்வம் ஒன்று தன்னை வணங்குவதை தெய்வங்கள் விரும்புவதில்லை” என்றான். “மேலும் நான் ஊனுண்ணித்தெய்வம். அவர்களோ விகாலஉணவுண்டு சுவைமறந்த கூடுதேய்ந்த தெய்வங்கள். என் மேல் அவர்களுக்கு பொறாமை இருக்கக்கூடும்.”

பைலன் சிரித்து “ஆணவத்திற்கு ஓர் அளவுண்டு” என்றான். “அடுத்த வேளை உணவுக்கும் அன்றிரவு துயிலுக்கும் வழியற்றவன் மட்டும் கொள்ளும் ஆணவம் ஒன்றுண்டு, உத்தமரே. அவ்வாணவத்தால் நான் தெய்வம்” என்றான் சண்டன். உள்ளிருந்து வெண்ணிற ஆடை அணிந்து வாய்மறைத்த அருகநெறியர் ஒருவர் கைகூப்பியபடி வெளிவந்து “அமுது கொண்டு இளைப்பாறுக, விருந்தினரே! அருகனருள் உங்கள்மேல் பொழிக!” என்றார். பைலன் அருகே

சென்று அவர் காலடியைத் தொட்டு சென்னிசூடி “நற்பேறால் இங்குற்றோம், தூயவரே” என்றான்.

**[ 17 ]**

உணவுச்சாலையில் இருந்து வெளிவந்தபோது பைலனின் விழிகள் சொக்கத் தொடங்கின. உணவுக்கூடத்திற்கு வெளியே அப்போதுதான் வணிகர்களின் குழு ஒன்று வந்திறங்கியது. அவர்களின் உரத்த குரல்கள் அத்திரிகளும் கழுதைகளும் எழுப்பிய கனைப்பொலிகளுடன் கலந்து கேட்டன. அன்னசாலையின் அருகநெறியினர் இருவர் வெளியே சென்று கைகூப்பி முகமன் உரைத்து அவர்களை உணவுண்ணும்படி அழைத்தனர். அவர்கள் வணக்கமுரைத்து அடிதொழுது அருகே ஓடிய நீரோடைகளை நோக்கி சென்றனர். அடுமனைக்குமேல் நீலப்புகை இலைதழைத்த மரம்போல எழுந்து வான்பரவி நின்றது. இளஞ்சாரல் அதை கரைக்கவில்லை.

துயில்கொட்டகைகளை நோக்கி காலடிகள் எடுத்து வைப்பதே கடினம் என்று பைலனுக்குத் தோன்றியது. உண்ட உணவு பலமடங்கு எடை கொண்டுவிட்டது. அதன் சாறு ஊறி எண்ணங்கள் அனைத்திலும் படிந்து ஒவ்வொரு சொல்லையும் இரும்பாலானவை என ஆக்கி விட்டது. சண்டன் கொட்டகையை அடைந்ததுமே தோல் உறையைப் பிரித்து உள்ளிருந்து முழவை எடுத்து காற்றில் காயவைத்தான். “அதை ஏன் உடனே செய்யவேண்டும்?” என்றான் பைலன் களைப்புடன். “அது தளர்கையில் என் சொல்லும் தளர்கிறது” என்றபடி அவன் முழவின் தோலை துடைத்தான்.

அவன் அருகே சென்று நின்ற பைலன் “தோலுறைக்குள் எப்படி நனைந்தது?” என்றான். “துளை விழுந்திருக்கும். துளை விழுந்த

பகுதிதான் மேலே இருக்கும். ஏனெனில் அது மேலே இருப்பதனால் துளை விழுகிறது" என்றான் சண்டன். "சொல்லும் அனைத்தையும் தத்துவமென ஆக்கவேண்டியதில்லை, சூதரே" என்று சொன்னபடி பைலன் அங்கு இருந்த மூங்கில் அடுக்கிலிருந்து தூய்மைசெய்யப்பட்ட பாய் ஒன்றை எடுத்து உதறி கீழே விரித்து ஈரமான மரவுரியுடன் அப்படியே அதில் படுத்தான்.

"ஆடை மாற்றிக்கொள்ளுங்கள், உத்தமரே" என்றான் சண்டன். "மாற்றாடை என்னிடம் இல்லை. அதைக் கேட்டு வாங்கும் அளவுக்கு என்னுடலில் ஆற்றலும் இல்லை" என்றான் பைலன். சண்டன் எழுந்து தன் மூட்டையின் உள்ளிருந்து புலித்தோல் ஆடை ஒன்றை எடுத்து உதறி அவனிடம் "இதை அணிந்து கொள்ளுங்கள்" என்றான். பைலன் "இதையா?" என்றான். "ஆம், இதையணிந்தோர் கனவில் தலைமேல் வெண்பிறையும் குளிர்நதியும் எழக்காண்பார்கள்" என்றான் சூதன். "வேண்டாம்" என்றான் பைலன். "தாழ்வில்லை. நான் அளிப்பதனால் நீங்கள் இதை அணியலாம்" என்றான் சூதன். "ஏன்?" என்றான் பைலன். "சிவமேயாம்!" என்று அருட்கை காட்டி அவன் உரக்க நகைத்தான்.

பைலன் சிரித்துக்கொண்டு "நன்று. ஆனால் அதை அணியும் பொருட்டு பாயிலிருந்து எழுவதற்கு அலுப்பாக இருக்கிறது" என்றான். "இலக்கை அடைந்தபின் வரும் அலுப்பு அது. அங்கே இரண்டாவது தேவதை குடியிருக்கிறாள். எய்திவிட்டோம் என்று எண்ணியதுமே அவள் வந்து தழுவிக்கொள்கிறாள். பின்பு மெல்லிய புதைசேற்றிலென இழுத்து வைத்துக் கொள்கிறாள்" என்றான் சண்டன். "அழகியவள். தேன்கதுப்பு போன்றவள். நீ நீ

நீ என நம்மிடம் பேசிக்கொண்டே இருப்பதனால் அவளுக்கு சுஃபாஷிணி என்று பெயர்.”

“இன்னும் ஒரு நாள் உம்முடன் இருந்தால் தத்துவம் பேசுபவர்களின் சங்கைக் கடித்து குருதியுண்ணத் தொடங்கிவிடுவேன்” என்றான் பைலன். கையூன்றி உடற்தசைகள் இழுபட்டு வலிக்க எலும்புகள் சொடக்குவிட்டு விலக எழுந்து தன் இடைமரவுரியைக் கழற்றி காயவைத்தபின் தோலாடையை அணிந்து பாயில் அமர்ந்தான். சண்டன் திரும்பிநோக்கி “சொல்லெல்லாம் பித்தென ஆகும். புலித்தோல் அணிந்துவிட்டீர்” என்றான். கண்கள் சரிய பைலன் படுத்துக் கொண்டான்.

சண்டன் தனது முழவில் தோல் பரப்பை தட்டிப்பார்த்தான். நீருக்குள் பெரிய மீன் ஒன்று வாலை அடிப்பது போன்ற ஓசை எழுந்தது. மென்மணலில் என அந்த தாழைப்பாயில் அவன் புதைந்து சென்றுகொண்டே இருந்தான். மிக ஆழத்தில் அவன் ஏதோ ஒன்று கிடப்பதைப்போல் உணர்ந்தான். வெள்ளியால் ஆன ஒரு நாணயம்போல் இருந்தது. மீண்டும் உடலை அழுத்தி அமிழச்செய்தான். அது பொன்னெனத் தெரிந்தது. பின்பு அது மணியென ஆயிற்று. பின்பு அடிப்பரப்பைத் துளைத்து அப்பால் இருக்கும் முடிவுலகுக்குள் செல்லும் துளையெனத் தோன்றியது.

அதை நோக்கி செல்லச் செல்ல அடியில் அழுத்தம் பைலனை மேலே தள்ளியது. இன்னும் ஒரு அடி இன்னும் ஒரு அடி என்று தன் உடலை உந்தி உந்திச் சென்றான். அத்துளையில் எழுந்த ஒளிக்கொப்புளம் ஒன்று அவனை அறைந்து மேலே தூக்கியது. மீண்டும் சரிந்து நீருக்குள் தன்னை அமிழ்த்தினான். அவன் உடல் கரையத்தொடங்கியது. கைகளும் கால்களும்

மறைந்தன. நீரென்றே ஆனபோது அந்த அழுத்தம் மறைந்தது. அவன் புலித்தோலாடை மட்டும் கீழே சென்றுகொண்டே இருந்தது. அவிழ்ந்த ஆடையாக அல்ல. அவன் அணிந்த வடிவில். அவ்வடிவில் அவன் அதில் இருந்தான்.

அவன் விழித்துக்கொண்டபோது அந்தக் கொட்டகை முழுக்க மெல்லிய குரல்முழக்கமும் உடல்எழுப்பும் நீராவியும் பரவியிருந்தது. பெரும்பாலானவர்கள் ஈர ஆடைகளை காயவைத்து மாற்றுடை அணிந்து நாரிழுத்துக் கட்டப்பட்ட கட்டில்களில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தனர். பல மொழிகள் ஒரே சமயம் ஒன்று கலந்து ஒலித்த முழக்கம் கொட்டகையை நிரப்பியது. அவன் அந்த ஓசையை முதலில் அலைகளாக கண்களால் பார்த்தான். பின்னர்தான் புலன்கள் திரண்டு அவனென்றாயின. அவன் எழுந்துகொண்டான். தன் உடல் முழுக்க தசைகள் வலி கொண்டிருப்பதை அறிந்தான். ஆனால் களைப்பு அகன்று உள்ளம் தெளிந்திருந்தது. விழிகள் ஒளி கொண்டிருந்தன. அங்கிருந்த ஒவ்வொருவரையும் அவன் உள்ளம் சென்று தழுவி மீண்டது.

பாயைச் சுருட்டி வைத்துவிட்டு வெளியே வந்து முற்றத்தைப் பார்த்தான். மழைத் திரைக்குள் பொழுது விரைவிலேயே இருண்டு கொண்டிருந்தது. வண்ணங்கள் தங்கள் ஒளியை இழந்து கருமையை நோக்கி சென்றுகொண்டிருந்தன. இலைப்பரப்புகள் முன்னரே ஈரமான இருளொளியாக ஆகிவிட்டிருந்தன. மலர்களும் செம்மண் தரையும் மரப்பட்டைச் சுவர்களின் வண்ணங்களும் மட்டுமே வண்ணமென எஞ்சியிருந்தன.

உடல் முழுக்க தேங்கி நின்ற இனிய சோர்வில் அவன் திண்ணையில் அமர்ந்து அம்முற்றத்தை

நோக்கிக்கொண்டிருந்தான். நீரூறிய சதுப்பில் பல்லாயிரம் கால்தடங்கள். குளம்புத்தடங்கள். ஒவ்வொன்றிலும் வான்துளி. அடுமனையிலிருந்து வெண்ணிற ஆடையுடன் வந்த அருகநெறியினர் அவனை நோக்கி புன்னகைத்து "அடுமனைக்கு வருக, உத்தமரே!" என்றார். மறுமொழி சொல்ல எண்ணியும் அச்சொல் நாவில் எழாமல் அவன் புன்னகைத்தான்.

அவர் கொட்டகைக்குள் நுழைந்து உரக்க அருகர் வாழ்த்தைக் கூறியதும் ஓசைகள் அவிந்தன. வணிகர்கள் அனைவரும் உரையாடலை நிறுத்திவிட்டு அவரை திரும்பி நோக்கினர். "அருகனருள் சூடுபவர்களே, அருகமுறைப்படி அந்தி எழுந்தபின் இங்கு உணவளிக்கப்படுவதில்லை. ஆகவே சமைத்த உணவை உண்ண விரும்புவோர் இப்போதே அடுமனை புகுந்து உண்ணும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். இருளெழுந்த பின் வருபவர்களுக்கு அனலும் அரிசியும் கலமும் மட்டுமே அளிக்கப்படும் என்பது இங்குள்ள முறைமை" என்றார்.

"ஆம், உணவுண்பதே நல்லது! உண்கிறோம்! உண்போம்!" என்று வெவ்வேறு குரல்கள் எழுந்தன. வணிகர்கள் சிறுகூட்டங்களாக ஆடைகள் ஒலிக்க அணிகள் குலுங்க அடுமனை நோக்கி சென்றனர். பைலன் எழுந்து உள்ளே சென்று வெறுந்தரையில் மல்லாந்து வாய்திறந்து துயில்கொண்டிருந்த சண்டனின் தோளைத்தொட்டு "சண்டரே" என்று எழுப்பினான். அவன் கையூன்றி எழுந்து "விடிந்துவிட்டதா?" என்றான். "இருளப்போகிறது" என்றான் பைலன். "அடுமனையில் இன்னும் சற்று நேரத்தில் உணவு அளிப்பதை நிறுத்திவிடுவார்கள். இரவில் இங்கு உணவளிக்கப்படுவதில்லை" என்றான்.

"ஆம், நான் படுக்கும்போதே அதை எண்ணினேன்" என்றபடி சண்டன் எழுந்து ஆடையை சீரமைத்தபடி வெளியே சென்றான்.

பைலன் “முகம் கழுவிக்கொண்டாவது உணவுகொள்ளலாம்...” என்றபடி தொடர்ந்தான். அவர்கள் வெளியே சென்றபோது களைத்த காலடிகளுடன் ஒரு சிறுவன் முற்றத்தில் நுழைவதைக் கண்டனர். அவன் உடல் மழைநீர் வழிந்து நடுங்கிக்கொண்டிருந்தது. “வழிநடையர். உங்களைப்போலவே சிறுவர், அந்தணர்” என்றான் சண்டன். “களைத்திருக்கிறார்... உணவுண்ண அழைக்கலாம்” என்றபின் பைலன் இளஞ்சாரலில் இறங்கி அவனருகே சென்றான்.

அவன் கைகூப்பி “வணங்குகிறேன், உத்தமரே. சாமவேத மரபின் ஜைமின்ய குருவழியைச் சேர்ந்த என்பெயர் சத்வன்” என்றான். “வணங்குகிறேன், உத்தமரே” என பைலன் தன்னை அறிமுகம் செய்துகொண்டான். “களைத்து வந்திருக்கிறீர்கள். பெரும்பசி தெரிகிறது. இங்கு இன்னும் சற்று நேரத்தில் உணவளித்தலை நிறுத்திவிடுவார்கள்” என்றான் பைலன். அவனுக்கு தன்னைவிட ஓரிரு அகவை மூப்பிருக்கலாம் என்று தோன்றியது. அவனால் பேசமுடியவில்லை. பலமுறை உதடுகளை அசைத்தபின் நாவால் ஈரப்படுத்திக்கொண்டு “நான் பொழுதிணைவு வணக்கம் செய்யாமல் உணவருந்துவதில்லை” என்று மிக மெல்லிய குரலில் சொன்னான்.

“அதற்கு நேரமில்லை. அந்திக்குப்பின் இங்கே இவர்கள் சமைத்த உணவை அளிப்பதில்லை. இந்த மழையில் உணவை சமைப்பதும் எளிதல்ல” என்று பைலன் சொன்னான். “நான் என் முறைமைகளை எந்நிலையிலும் மீறுவதில்லை” என்றான் அவன். சண்டன் “அவர் தூய அளவைவாதி என நினைக்கிறேன். அவர்களுக்கு முறைமைதான் முக்கியம். முறைமை மீறுவதற்குரிய முறைமை ஏதேனும் இருந்தால் அதைக் கடைப்பிடிப்பார்கள்” என்றான். பைலன் அவனை திரும்பிநோக்கி

சீற்றத்துடன் ஏதோ சொல்ல வாயெடுக்க “நான் உணவருந்தச் செல்கிறேன். நீங்கள் வருகிறீர்களா இல்லையா?” என்றான் சண்டன். “இல்லை, இவரை நான் தனியாக விடமுடியாது. நீர் செல்லலாம்” என்றான் பைலன்.

“நன்று” என்றபின் சண்டன் திரும்பி நடந்து அடுமனைக்குள் நுழைந்தான். அவன் செல்வதை நோக்கியபின் பைலன் “அவர் கட்டற்றவர்” என்றான். “ஆம், சூதர்கள் எரியிலெழும் பொறிகள். எரியின் வெம்மையால் அலைக்கழிக்கப்படுபவர்கள். எரியை அணுகவும் முடியாதவர்” என்றான் சத்வன். பைலன் புன்னகைத்தான். சத்வன் “நான் என் முறைமைகளை முடிக்க நெடுநேரமாகும். அதன்பின் உணவு சமைத்து உண்பதென்றால் இரவாகிவிடும்” என்றான். பைலன் “ஆகட்டும், நான் உங்களை தனியாக விடமுடியாது” என்றான். “வருக, நீராட்டுக்கு நானும் வருகிறேன்” என்றான்.

அவர்கள் செல்லும்போது “நீங்கள் பொழுதிணைவு வணக்கங்களை செய்துவிட்டீர்களா?” என்றான் சத்வன். “இல்லை, நான் முப்போதும் தவறாது செய்பவன் அல்ல.” சத்வன் புரியாமல் “எப்போது செய்வதில்லை?” என்றான். “என் உள்ளத்தில் கனவு நிறைந்திருக்கையில்” என்றான் பைலன். அவன் சொன்னதென்ன என்று சத்வனுக்கு புரியவில்லை. “நீங்கள் புலித்தோலாடை அணிந்திருக்கையிலேயே எண்ணினேன். ருத்ரமரபினர் போலும்” என்றான். பைலன் குனிந்து தன் ஆடையை நோக்கிவிட்டு ஒருகணம் தயங்கி “ஆம்” என்றான்.

“ருத்ரமரபினருக்கு வேதமுழுமை கைப்படுவதில்லை. அவர்கள் ஒளியிருக்க இருள்வழியே செல்ல விழைபவர்கள். நெறிகளை மீறுபவர்களுக்கு இலக்குகள் எய்தப்படுவதில்லை” என்றான்

ஜைமினி. பைலன் “அளவை வைதிகருக்கு ருத்ரம் மீதிருக்கும் விலக்கை அறிவேன்” என்றான். ஜைமினி “ஆம், நான் முதல் ஜைமினி முனிவர் அமைத்த அளவைமரபின் வழிவந்தவன். சடங்குநெறிகளை ஒருபோதும் மீறலாகாது என்று எந்தையரிடமிருந்தும் ஆசிரியர்களிடமிருந்தும் கற்றவன். இதுவரை ஒருமுறையேனும் கடந்தவன் அல்ல” என்றான்.

“நான் நெறிகளை கனவுகளால் கடக்கிறேன்” என்றான் பைலன். “இளையவரே, நெறியில்லையேல் இங்கு எதுவுமில்லை. இந்த மரங்கள் தங்களுக்குள் நெறிகளை பேணுவதனாலேயே இவை காடாகி நின்றுள்ளன. நாம் பேசும் ஒலிகள் சந்தஸும் வியாகரணமுமாக நெறிசூழ்வதாலேயே மொழியென்றாகின்றன” என்றான் சத்வன். “ஜைமின்யரே, ஒலியமைவையும் பொருளமைவையும் கடக்கும்போதே சொல் அனல்கொள்கிறது. கனவு சுமக்கையில் கவிதையாகிறது. மெய்மையெனக் கனிந்து வேதமாகிறது” என்றான் பைலன். “பெருவழிச்செல்லும் சொற்களால் அரசமுறைமையையும் உலகியல் வழமைகளையும் மட்டுமே கையாளமுடியும். எழுந்துபறக்கும் உயிர்களுக்குரியது வானம்”

அவன் சொன்னதென்ன என்று புரியாத திகைப்பு தெரிந்த விழிகளுடன் “வேதமென்பது ஒலியாலும் பொருளாலும் கரை கட்டப்பட்ட பெருக்கு” என்றான் ஜைமினி. “முகிலென்றிருக்கையில் அது கரைகளற்றது. ஆனால் நதியாக அதை ஆக்குவது கரைகளே.” . பைலன் “ஆம், ஆனால் கரையைக்கொண்டு நாம் நதியை பொருள்கொள்ளலாகாது. முகிலைக்கொண்டே பொருள்கொள்ளவேண்டும்” என்றான். “நாம் இணையப்போவதில்லை” என்றான் ஜைமினி. “வருக,

நீராடியபடியே பேசலாம்... நாம் பேச நிறைய இருக்கும் போலிருக்கிறது” என்று பைலன் சொன்னான்.

# கிராதம் - 14

**[ 18 ]**

இரவுணவுக்குப் பின்னர் கொட்டகையில் வணிகர்களும் வைதிகர்களுமாக நாற்பத்தெட்டுபேர் கூடினர். மென்மழைச்சாரலிருந்தமையால் கதிரொளி முன்மாலையிலேயே மறைந்துவிட்டிருந்தது. ஆனால் நீர்ச்சரடுகள் வழியாக வானொளி மண்மேல் ஊறி இறங்கிக்கொண்டிருந்தது. தேங்கிய நீரின் படலங்கள் ஒளியுடன் கசங்கி அதிர்ந்து கொண்டிருந்தன. சாரல் கலந்த காற்றின் குளிருக்கு மரவுரிகளைப் போர்த்தியபடி கட்டில்கள் மேல் கால்மடித்து அமர்ந்துகொண்டு இயல்பாக எழுந்த நினைவுகளையும் வேடிக்கை நிகழ்வுகளையும் பற்றி பேசிக்கொண்டிருந்தனர்.

சண்டன் தன் முழவை எடுத்து அதன் தோல்வட்டம் காய்ந்துவிட்டதா என மெல்ல தட்டிப்பார்த்ததும் அத்தனை தலைகளும் திரும்பின. “சூதரே, வருக! அமர்ந்து பாடுக! இன்றிரவு நீண்டது” என்றார் ஒரு பெருவணிகர். சண்டன் “என் முழவுத்தோல் இன்னமும் காயவில்லை” என்றான். “தாளமில்லாது பாடும்...” என்றார் ஒரு வயதான வைதிகர். “மழைத்துளித்தாளம் போதாதா?” என்று ஒரு வைதிக இளைஞன் சிரித்துக்கொண்டே கேட்டான்.

சண்டன் எழுந்து சென்று அவர்கள் நடுவே நின்று தன் குழல்புரிகளை அள்ளி பின்னாலிட்டு “நானும் பாடவே

விழைகிறேன். நன்கு துயின்றுவிட்டேன். இனி விழியயர நெடுநேரமாகும்" என்றான். "பாடுக... இங்கு கள் கிடைக்காத துயரை அகற்றுக!" என்று ஒரு வணிகன் சொல்ல இளையோர் சிரித்தனர். "வணிகர்கள் சென்றகாலக் கதைகளைக் கேட்க விழைகிறார்கள். ஏனென்றால் அதில் அவர்களுக்கு இடமே இல்லை" என்றார் ஒரு வைதிகர். "ஆகவே இழப்பும் இல்லை. பதற்றமில்லாது கேட்கலாமே" என்றார் முதிய வணிகர்.

"இளைய பாண்டவர் குறித்து பாடும்" என்றான் சிறியதலைமேல் கொண்டையாக குழலைக் கட்டிவைத்திருந்த வணிக இளைஞன். முதிய வைதிகர் "பாண்டவரின் கானேகலைப்பற்றிய காவியங்கள்தான் எங்கும் பாடப்படுகின்றன. யுதிஷ்டிரனின் எரிபுகுந்தெழல் குறித்து கிருஷ்ணபாகம் நாகசேனர் என்னும் கவிஞர் பாடிய கந்தமாதனவிஜயம் என்னும் காவியத்தை நாங்கள் வரும் வழியில் ஒரு சூதர் பாடினார். எரிபுகுந்து அறச்செல்வர் எழும் காட்சியில் நான் அழுதுவிட்டேன்" என்றார். "எங்கோ கேட்டிருக்கிறேன், இருமுறை பிறந்தவன் சாவதில்லை."

கொண்டைமுடிந்த இளையவன் "நான் அர்ஜுனரைப் பற்றித்தான் கேட்க விழைகிறேன்" என்றான். "அவர் வெல்வதுதான் உண்மையான வெற்றி" என்றான். "ஏன்?" என்றான் பிறிதொருவன். "நினைத்ததைச் செய்ய ஆற்றலுடையவனைப்பற்றி மட்டும் நாம் பேசினால் போதும்" என்றான் அவன். "ஆம்! உண்மை!" என்றன குரல்கள். ஒருவன் "விழைவில் உச்சம் கண்டவனே அதை வெல்லவும் முடியும்" என்றான்.

கைகளைத் தூக்கி குரல்களை அவித்து "வைதிகர்களே, வணிகர்களே, அயோத்திநாட்டுக் கவிஞர் கௌண்டின்ய

பெருங்குலத்து சம்விரதர் யாத்த அர்ஜுனேந்திரம் என்னும் காவியத்தை நான் பாட முடியும்” என்று சண்டன் சொன்னான். “ஆம், பாடுக!” என்று குரல்கள் எழுந்தன. “அர்ஜுனவிஜயம் என்று ஒரு காவியம் உண்டு அல்லவா?” என்றது ஒரு குரல். “அது அர்ஜுனனின் திசைசூழ் செலவு குறித்த நூல். அவர் நான்கு துணைவியரை வென்றதைப்பற்றியது” என்றான் சண்டன். “இது அவர் மெய்மை தேடிச்சென்றதைப் பற்றிய நூல்.”

பைலனின் அருகே கட்டிலில் கால்களை மலரமைவாக அமைத்து ஜைமினி அமர்ந்திருந்தான். அவர்களுக்கு நேர்பின்னால் தூணின்மேல் ஏழு நெய்த்திரிகள் எரிந்த சிப்பிவிளக்கு எரிந்துகொண்டிருந்தது. சுடர்களுக்குப் பின்னாலிருந்த முத்துச்சிப்பிகள் ஒளியை அள்ளிப் பெருக்கி அறைக்குள் பரப்பின. ஜைமினி மிகவும் களைத்திருந்தமையால் அடிக்கடி விழிகள் மயங்கி சரிந்துகொண்டிருந்தன.

வெளியே இருந்து கைகளைக் கூப்பியபடி அருகநெறியர் எழுவர் உள்ளே வந்தனர். பிறர் எழமுயல அவர்களை கையமர்த்தியபின் தரையிலேயே கால்மடித்து அமர்ந்து சண்டனின் சொற்களை கேட்க செவிகூர்ந்தனர். “இது செல்வர் நிறைந்த அவை என்பது எனக்கு நிறைவளிக்கிறது. திருமகளின் அவையிலேயே சொல்லெடுக்கவேண்டும் என்பது நூல்நெறி. ஏனென்றால் அங்கே கலைமகள் இருக்கமாட்டாள். நம் சொல்லில் அவள் எழும்போது அவளை அஞ்சி பொன் நாணயங்களை எடுத்து அவள் மீது எறிந்து துரத்துவார்கள்” என்றான் சண்டன். வணிகர் சிலர் சிரித்தனர். கைகளிலேயே தாளமிட்டபடி அவன் காவியத்தின் வணக்கங்கள்,

புகழ்தொடக்கம், பெறுபயன் ஆகியவற்றை பாடினான். அர்ஜுனனின் புகழ்பாடும் பாடலை பாடி நிறுத்தினான்.

“கிளம்பிச் செல்வதென்பது எப்போதுமே அர்ஜுனனுக்கு இனிதானது. வீரர்கள் அனைவருக்கும் அது உவகை அளிப்பது. கிளம்பிச்செல்லும் வீரன் தன் முதல் காலடி முதல் வளரத்தொடங்குகிறான். முதல் மூச்சை இழுத்து நெஞ்சுள் நிறைக்கையில் அவன் அறியும் ஓர் உண்மை உண்டு, வீரன் என்பவன் கடந்துசெல்பவன். வீரன் கடந்துசெல்வது தன்னைத்தான். தன் கடந்தகாலம் மீது மிதித்து அவன் மேலேறுகிறான். அவனை அழைத்துச்செல்லும் இலக்கு எப்போதும் அடிவானில் ஒளியுடன் நின்றிருக்கிறது. அது அவனை வளர்க்கிறது. அவனை அள்ளி தன்னுடன் சேர்த்துக்கொள்கிறது.”

மெல்ல அவன் குரலில் இசைவு எழுந்து அது நீள்பாடலாக ஆகியது. “எரியுமிழும் கந்தமாதன மலைக்கு அப்பாலிருந்தன ஏழு மலைகள். குளிர்ந்துறைந்த சுஃப்ரமுகி, முகில்கள் அமையும் ஜ்வாலாசிரஸ், வானில் மறைந்திருக்கும் சூசிசிருங்கம், கந்தர்வர்கள் வந்திறங்கும் கனகசீர்ஷம், அதற்குமேல் எழுந்த பூர்வசிரஸ், அதற்கும் அப்பால் புகைவடிவெனத் தெரியும் நீலாக்ரம். அதற்குமப்பால் இருந்தது எப்போதும் ஏழுவண்ன மழைவில் சூடியமைந்திருக்கும் இந்திரகீலம். ஆறு மலைகளையும் ஏறிக்கடந்து ஏழாம் மலையை அடைபவன் மண்ணுடலுடன் விண்ணொளியை அடைந்தவனாவான் என்கின்றன நூல்கள்.”

தன்னந்தனிமையில் மலைகளை அடைந்த அர்ஜுனன் சுஃப்ரமுகியை ஒரு மாதத்தில் கடந்தான். ஜ்வாலாசிரஸை இரண்டு மாதங்களில் ஏறிச்சென்றான். சூசிசிருங்கத்தைக் கடக்க

நான்கு மாதங்களாயின. கனகசீர்ஷத்தை எட்டு மாதங்களில் ஏறி முடிதொட்டு மறுபக்கம் சென்றான். பதினாறு மாதங்களில் பூர்வசிரஸை அடைந்து முன்சென்றான். முப்பத்திரண்டு மாதங்களில் நீலாக்ரத்தை அடைந்து, இந்திரகீல மாமலை அதுவரை வந்த தொலைவை கூட்டினாலும் ஏழுமடங்கு வரும் உயரத்துடன் எழுந்து வான் புகுந்து நிற்பதைக் கண்டான்.

அதன் மேல் முகில்கள் செறிந்திருந்தன. அவை மழையாகப் பெய்து அருவியென வழிந்து கீழே இறங்கி மறைந்தன. அந்நீர்ப்புகை மேலெழுந்து பாறைகளை கனிந்துருகி வழியச் செய்தது. அதன் அடிப்பகுதியில் தேவதாருக்கள் செறிந்திருந்தன. அதற்குமேல் பசும்புதர்கள். அதற்குமேல் மென்பச்சைப்பாசி எனத்தெரிந்த புல்வெளிகள். அதற்கும் மேல் கரிய உருளைக்கற்கள் நீர்வழிய தவமிருந்தன. அதற்கும் மேல் முகில்களுக்கும் அப்பால் எழுந்து ஒளிகொண்டிருந்தன பனிக்குவைகள்.

இந்திரகீல மலையை மானுடர் எவரும் ஏறி உச்சி கண்டதில்லை என்று அவன் அறிந்திருந்தான். ஏறலாகுமா என்று எண்ணிய கணமே இயலாது என்று அவன் அகம் ஆணையிட்டுக் கூவியது. அவன் உள்ளம் ஒவ்வொரு கணமும் நுரைக்குமிழிகள் உடைந்து மறைவதுபோலச் சுருங்கி இன்மையென்றாகியது. அவ்வெறுமையில் அணுவளவாகச் சுருங்கி அலைக்கழிந்தான். தன்னை உணர்ந்து நீள்மூச்செறிந்து அவன் எண்ணம் திரும்பியபோதும் உடல் திரும்பவில்லை.

“ஆனால் மானுடரில் ஒருவன் இதை ஏறியாகவேண்டும்” என்னும் எண்ணம் அவன் உள்ளத்தில் எழுந்ததுமே உடல் பெருகி பேருருவம் கொண்டவனைப்போல் உணர்ந்தான். “ஏறுதல் என்னும் செயலை மானுட உடலுக்கு அமைத்தளித்த

வல்லமைகளின் ஆணை அது. ஏறுக, மேலும் ஏறுக என்பதே அவர்களின் மொழி. அவர்கள் நிகழ்த்தட்டும் இதை. இவ்வுடல் அவர்களின் கருவி. இதில் ஊறும் ஆன்மா அவர்களின் பிறிதுவடிவம்."

அவனுள் சொற்கள் பெருகிக்கொண்டிருந்தன. உள்ளத்தாலன்றி கால்களால் கைகளால் நெஞ்சால் தோள்களால் தலையால் அச்சொற்களை அவன் எண்ணுவதாகத் தோன்றியது. முதற்காலடியை எடுத்து வைத்ததும் மலைமடிப்புக்குக் கீழிருந்து பெருகி எழுந்துவந்த குளிர்காற்று அவனைச் சூழ்ந்து வீசியது. அவனை அதன் பெருஞ்சுழி அள்ளிக்கொண்டு சென்று திசைவெளியில் வீசிவிடும் என்பதுபோல. அதனுடன் இணைந்துகொண்டது பனிமழை. திசைகள் எட்டும் இடியென முழங்கின.

ஒரு கணமும் தயங்காமல் அறுபத்துநான்கு காலடிகளை வைத்து அவன் நின்றபோது வெண்பனி சூழ்ந்த இந்திரகீல மலையின் உச்சியில் இருந்தான். திகைப்புடன் திரும்பிப்பார்த்து அது எவ்விடம் என மீண்டும் மீண்டும் உறுதிசெய்துகொண்டான். கீழே மிக ஆழத்தில் பள்ளத்தாக்கின் எளிய மண்குவியல்களென பிற ஆறு மலைகளும் தெரிந்தன. அவற்றின் நடுவே ஓடிய ஆறுகள் வெள்ளிநூல் என மின்னி வளைந்தன. தேவதாருக்கூட்டங்களில் காற்று கடந்துசெல்வது புல்மேல் அலை எனத் தெரிந்தது.

அங்கே பனிப்பாளங்கள் மேலிருந்து விழுந்த பனியின் எடையால் அடித்தளம் நொறுங்கி உறுமலோசையுடன் மெல்ல சரிந்திறங்கிக்கொண்டிருந்தன. பிளந்து முழக்கமிட்டபடி சரிவுகளில் விழுந்து மேலும் மேலும் பனியடுக்குகளை நொறுக்கி சேர்த்துக்கொண்டு வெண்பேரருவி என இறங்கிச்

சென்று வெண்புகையென மாறிப் பொழிந்து கீழே மறைந்தன. நீலாக்ரத்திற்கு வரும் வழியில் கொன்றுரித்த காட்டெருதின் தோல் போர்த்தியபடி அவன் அங்கே நின்றான். கடுங்குளிரில் அவன் உடல் உயிரிழந்ததென ஆயிற்று.

வலக்காதில் அவன் வெம்மையை உணர்ந்தான். அவ்வழியே செல்லச்செல்ல வெம்மை ஏறி ஏறிவந்தது. ஒரு பனிப்பாறைஅடுக்குக்கு அப்பாலிருந்து நீர் ஊறி கொப்பளித்து வருவதைக் கண்டான். அந்த நீரோடையில் வெம்மையின் ஆவி எழுந்தது. அதன் விளிம்புகளில் பனி உருகி பளிங்குக்கல் என உடைந்திருந்தது. அவன் அதிலிறங்கியதும் கால்கள் வழியாக உடலே வெம்மையை அள்ளி உண்டது. விழிப்பரப்பிலேயே வெம்மை பரவுவதை உணர்ந்தான்.

அடுமனைப் பெருங்கல் என வெந்நீர் கொப்பளித்துக்கொண்டிருந்த ஊற்று ஒன்றை அவன் சென்றடைந்தான். அவ்வூற்றின் அடிப்பாறைகள் வெம்மைகொண்டிருக்க சூழ்ந்திருந்த பனி அதில்பட்டு உருகி குமிழியிட்டு மிகைகொண்டு ஓடையாகி பாய்ந்துசென்றது. நீராவி எழுந்து மேலே சென்று பனிப்பாறைகளை உருகி உடைந்து அதன்மேல் விழச்செய்தது. அதற்கப்பால் சிறிய குகை ஒன்று விழியெனத் திறந்திருந்தது. அவன் அதற்குள் நுழைந்ததுமே இனிய வெம்மையை உணர்ந்தான். அங்குள்ள பாறைகளில் வெம்மை படர்ந்திருந்தது.

இருநாட்களுக்கொருமுறை விழிதிறந்து அந்த ஓடைநீர் தேங்கிய பன்னிரு சுனைகளில் திளைத்த சிறிய மீன்களைப் பிடித்து உண்டபடி அவன் அக்குகைக்குள் ஊழ்கத்தில் அமர்ந்தான். விழிமூடியதுமே கீழே விட்டுவந்த ஒவ்வொன்றும் மிதந்து வந்து அவனுடன் இணைந்துகொண்டது. அன்னையும் உடன்பிறந்தாரும் துணைவியரும் மைந்தரும் பகைவரும் குடிகளும் நகரும் காடுகளும் முழுதுருக் கொண்டன. அவை வெளியே இருப்பவை அல்ல என்று அவன் அறிந்தான்.

அவையனைத்தையும் அள்ளி அந்த உயரம்வரை கொண்டுவந்த தன் உள்ளம் எனும் மாயத்தை எண்ணி வியந்தான்.

வலையிழை சிக்கு நீக்கும் மீனவன்போல ஒவ்வொன்றாக தொட்டுப்பிரித்து அடுக்கி சீரமைத்தான். சீரமைந்ததுமே அவை அச்சம் அளிக்காதவை ஆயின. அச்சம் மறைந்ததுமே அவை ஆர்வமளிப்பதையும் தவிர்த்தன. எளிய பொருளற்ற நிகழ்வுகளும் காட்சிகளுமாக நின்றன. புகைப்படலம்போல அவற்றைத் தொட்டு கலையவைக்க முடிந்தது. ஒவ்வொன்றாக உதிர்ந்து மறைய அவன் முழுவெறுமைக்குள் அங்கு அமர்ந்திருந்தான். நீர்த்துளி சொட்டும் ஒலி ஒன்று மட்டுமே எஞ்சியிருந்தது. அது ஒரு சொல்லாக இருந்தது. அச்சொல் அவன் விழைவை மட்டுமே பேசிக்கொண்டிருந்தது.

“ஊழ்கமென்பது தன் உண்மையான விழைவென்ன என்று ஒருவன் அறிந்துகொள்வது மட்டுமே. அதை உண்மையில் தான் யார் என அறிந்துகொள்வதென்று விளக்குகிறார்கள். அறிவர்களே, வைதிகர்களே, வணிகர்களே, தன்னை அறிந்துகொள்ள ஒருவன் தன்னை ஆக்கியவர்களை அறிந்துகொள்ளவேண்டும். அவர்களை அவன் அறியமுடியாதென்பதனால் அவர்களை முழுமையாக புறக்கணிக்கக் கற்றுக்கொள்ளவேண்டும்” என்றான் சண்டன்.

**[ 19 ]**

எவரோ நடந்துவரும் ஒலியை அர்ஜுனன் கேட்டான். அது நீர்த்துளி சொட்டும் ஒலியென உருமாறியது. தொலைவில் பனிப்புயலின் ஓலம் எழுந்தும் அமைந்தும் ஒலித்துக்கொண்டிருந்தது. தாடியும் குழலும் நீண்டு சடைக்கற்றைகளாக மாறி தொங்க பித்து பழுத்த கண்களுடன்

குகைக்குள் அவன் அமர்ந்திருந்தான். மெலிந்த உடலில் சுனைநீர்ப்பரப்புமேல் இளங்காற்று என மூச்சு மட்டும் ஓடிக்கொண்டிருந்தது.

அங்கு அமர்ந்த நூற்றெட்டாவது நாள் முதல் அவன் அதுவரை அறியாதவர்கள் அங்கு வரத்தொடங்கினர். முதலில் வந்தவன் ஒரு கந்தர்வன். அவன் தன்மேல் நோக்கை உணர்ந்து விழிதிறந்தபோது கந்தர்வனை பார்த்தான். பெரிய வெண்பனிப்புகைச் சிறகுகளுடன் மின்னும் நீலக்கண்களுடன் அவன் குனிந்து அவனை பார்த்துக்கொண்டிருந்தான். "நீ யார்?" என்று அவனிடம் கேட்டான். "நான் அஸ்தினபுரியின் பாண்டுவின் மகன். என் பெயர் அர்ஜுனன்." கந்தர்வன் அவனருகே மேலும் குனிந்து "இங்கு ஏன் வந்தாய்?" என்றான். "இங்கு மானுடர் வரமுடியாது. நான் காணும் முதல் மானுடன் நீ. நான் இப்பனிக்குகையின் காவலனாகிய பிரபாஹாசன்."

"நான் இந்த மலைமேல் குடிகொள்ளும் எந்தை இந்திரனைத் தேடிவந்தேன்" என்று அர்ஜுனன் சொன்னான். "ஆம், இது தேவர்க்கரசரின் மலையே. ஆனால் அவர் பன்னிரு நிலவுகளுக்கு ஒருமுறைதான் இங்கு வருகிறார். மானுடருக்கு அது பல்லாயிரமாண்டுகாலம். அவரை நீ இங்கு பார்க்கமுடியாது." அர்ஜுனன் "நான் இங்கு திகழும் காலத்திலேயே இருக்கிறேன். நெடுந்தொலைவில் உள்ளன மானுடகாலங்கள்" என்றான்.

"நீ அவரை எதன்பொருட்டு பார்க்கவேண்டும்?" என்று கந்தர்வன் கேட்டான். "படைக்கலங்களுக்காக. மண்ணில் எவருக்கும் நிகரென நான் நின்றிருக்கவேண்டும்." கந்தர்வன் புன்னகைத்து "படைக்கலங்களில் வல்லமைகொண்டது சொல். சொல்லிச்சொல்லி வல்லமை ஏற்றப்பட்ட சொல்

கொலைக்கருவி. சொல்லாமலேயே திரட்டப்பட்ட சொல்லோ புவியைப் பிளக்கும் வல்லமைகொண்டது” என்றான். “ஆம், அனைத்து அம்புகளும் சொற்களால் ஆனவையே” என்றான் அர்ஜுனன்.

“நீ என் விருந்தினன். நானோ உன் தந்தை இந்திரனுக்கு உரியவன். நான் உனக்கு நீ விரும்பும் அம்புகளை அளிக்கிறேன்” என்றான் கந்தர்வன். “நீ அளிக்கும் அம்புகளை வாங்கிக்கொள்கிறேன். நான் விழைவது எந்தையின் அருளை மட்டுமே” என்றான் அர்ஜுனன். “யாழ்நரம்பென வில்நாணை மாற்றும் ஒரு நுண்சொல்லைச் சொல்கிறேன் உனக்கு. அது உன் அம்புகளை இசையதிர்வுகளென ஆக்கும். உன்னால் மலர்களின் புல்லிவட்டங்களைக்கூட இரண்டாகப்பிளக்க முடியும். எதிர்நிற்பவர்களின் நரம்புகளைத் தொட்டு அவர்களை பித்தர்களாக ஆக்கமுடியும்.”

அர்ஜுனன் “வணங்குகிறேன்” என்றான். அவன் கைவிரல்நுனிகளைத் தொட்டு கந்தர்வன் அச்சொல்லை அவனுக்களித்தான். “வண்டுகள் அறியும் ஒலி இது” என்றான். அர்ஜுனன் “வணங்குகிறேன், கந்தர்வரே” என்றான். “நீ இங்கே விழைவதென்ன?” என்றான். “அழகிய மாளிகையை இங்கே உனக்களிக்கிறேன். இளநங்கையரும் மதுவும் இசையும் களியாட்டுமென நீ இங்கிருக்கமுடியும்.” அர்ஜுனன் “இல்லை, நான் அவற்றைக் கடந்துவிட்டேன்” என்றான். “நீ விரும்புவதென்ன என்று உன்னுள் நுழைந்து காண்கிறேன். அதை உனக்களிக்கிறேன்” என்றான் கந்தர்வன்.

அர்ஜுனன் தன்னை உணர்ந்தபோது சதசிருங்கத்தில் இருந்தான். பாண்டுவின் கைகளைப் பற்றிக்கொண்டு மலைக்காற்று வீசும் பாதையில் ஏரியின் ஒளியை இலைகளுக்கு நடுவே பார்த்தபடி

நடந்தான். “தந்தையே, ஒளியை எய்வது எந்த வில்?” பாண்டு விழிகள் நகைக்கக் குனிந்து “தொடுவான் வளைவு” என்றார். அவர் தோள்களில் நகுலனும் சகதேவனும் அமர்ந்திருந்தனர். “தந்தையே, விண்ணில் பறக்கும் பறவைகளை ஏவும் வில் எது?” பாண்டு “மரக்கிளைகள்” என்றார்.

பல்லாண்டுகளுக்குப் பின் அவன் விழிதிறந்தபோது அவனருகே கந்தர்வன் சிரித்துக்கொண்டு நின்றான். “நீங்கள் விழையும் பிறிதொரு உலகத்தை அளிக்கிறேன், இளவரசே” என்றான். அவன் பதைப்புடன் மறுசொல் எடுப்பதற்குள் பசுந்தழை செறிந்த சோலை ஒன்றில் இளைய யாதவருடன் இருந்தான். அன்று முழுநிலவு. அவர்கள் பகலெல்லாம் வழக்கம்போல அக்காட்டுக்குள் உலவிக்கொண்டிருந்தனர். இருவரின் காலடிகள் சொற்களென்றாகி உரையாடிக்கொண்டிருந்தன. இருவரின் உடல்களும் விழிகளென்றாகி நோக்கிக்கொண்டிருந்தன.

அர்ஜுனன் மீண்டும் மீண்டும் அம்புக்குறி தேர்ந்துகொண்டிருந்தான். நுண்மை நுண்மை என செல்லும்தோறும் வெளியிலக்கை கூர்ந்து கூர்ந்து செல்லும் தன் உள்ளத்தின் முடிவின்மையை உணர்ந்தான். செதுக்கும்தோறும் முனைகூரும் ஓர் அம்பு. அம்புகூரும்தோறும் தன்னைக்காட்டும் புதிய இலக்குகள். வென்று செல்லும் கணத்தில் தன் பெருமையை அறிந்து எழுந்தும் மறுகணமே இன்னொரு இலக்கைத் தேடும்போது தன் சிறுமையை உணர்ந்து விழுந்தும் முடிவிலா ஊசலில் ஆடிக்கொண்டிருந்தான்.

யாதவர் சொற்களில் அந்நுண்மையை தேடிக்கொண்டிருந்தார். சொல்லும் ஒலிகள் மறைக்கும் பொருள் கொள்வது எவ்வாறு? மறைத்தலே சொல்வதென ஆவது எவ்வாறு?

சொல்லப்பட்டவற்றை உதறிக் கடந்துசெல்லும் மானுடம் மறைக்கப்பட்டவற்றை நோக்கி முடிவிலாது சென்றுகொண்டிருப்பதுதான் என்ன? சொல்லில் அமையாதது சொல்லப்படாததில் வந்தமையும் விந்தைதான் என்ன?

“அழியாச்சொல் என்று வேதத்தை நிலைநிறுத்தியவர் யார், பார்த்தா?” என்றார் இளைய யாதவர். அம்பு எடுத்து பறக்கும் இறகொன்றை கூர்ந்த அர்ஜுனன் வில் தாழ்த்தி அவரை வெறுமனே நோக்கினான். அப்போது அவன் தனுர்வேதத்தைப்பற்றி எண்ணிக்கொண்டிருந்தான். அதை அழியாச்சொல் என பாரதவர்ஷத்தின் பல்லாயிரம் படைப்பயிற்சிக் களங்களில் நிலைநிறுத்தியவர் யார் என்று.

“அதன் பொருளின்மை கண்டு அஞ்சியவர்கள்” என்ற இளைய யாதவர் தொடர்ந்து “இப்புவிநிகழ்வுகள் அனைத்தையும் போல, இருள்பெருகிய கடுவெளி போல அவையும் பொருளெனக் காட்டி மருளென எஞ்சி முடிவிலாது விரிபவை. மயலே வேதமென்க! மறைந்திருக்கையிலேயே அது முகம் காட்டலாகும்” என்றார்.

அர்ஜுனன் “ஆம், பிரசேதஸின் முதற்பெரும் தனுர்வேதநூலின் ஆயிரத்துநாநூறு நுண்சொற்கோவைகளில் நாநூறு மட்டுமே குருநிலைகளில் கற்பிக்கப்படுகின்றன. ஆயிரம் அறிந்தமையால் துரோணர் மாவில்லவர். அவரைவிட சில கூடுதலாக பீஷ்மருக்கு தெரிந்திருக்கலாம். பரசுராமர் மேலும் சில அறிந்திருக்கலாம். ராகவராமன் இன்னும் சற்று கடந்துசென்றிருக்கலாம் முற்றறிந்தோரில் மானுடர் எவருமில்லை என்கின்றன நூல்கள்” என்றான். “உள்ளேசெல்லும்தோறும் பொருள்செறிந்து பொருளின்மைகொண்டு இன்மையென்றே ஆகி வெறுமையில்

நிறுத்தி மீளும் தொன்மையான சொற்சேர்க்கைகளால் ஆனது அது.”

“வேதத்தின் கலைவடிவங்களே உபவேதங்கள்” என்றார் இளைய யாதவர். “சொல்லியும் உணர்ந்தும் கடந்தும் துறந்தும் அமைந்தும் முனிவர் வேதமென அறிந்தவற்றை பன்னிருகளங்களில் கண்டனர் நிமித்தவேதியர். சூரியரின் காரண்யோபவேதம் அவ்வறிதலின் பெருந்தொகை. ஏழுசுரங்களில் அதை உணர்ந்தவர் நாரதர். அவருடைய ஸ்வரானுவாதம் அதன் மொழிவடிவம். முக்குணங்களில் அதை உசாவிய சனகரும் சனாதனரும் ஆயுர்வேதத்தை அமைத்தனர். ஐம்புலன்களில் அதை வகுத்தார் காமநூல் கண்ட குணாதர். அம்பிலும் வில்லிலும் உணர்ந்தனர் வில்வேதியர். பிரசேதஸின் பெருநூல் அதன் செறிவே.”

“உபவேதங்கள் வேதங்களின் ஆடிப்பாவைகள். முதலுருவம் கொண்ட முடிவின்மையை தாங்களும் சூடிக்கொண்டிருக்கின்றன அவை” என்று அவர் தொடர்ந்தார். “இவ்வழிகளில் எதைத் தொட்டுத்தொடர்ந்தாலும் வேதமெய்மையை சென்றடைந்துவிடலாம் என்பதே நூலோர் கூற்று.” அர்ஜுனன் “ஆம், நான் வில்தொட்டு எடுத்த முதல்நாளில் எனக்கு அதுதான் சொல்லப்பட்டது. வேதப்பசு ஈன்ற இளம்பசுக்கள் அனைத்தும் கறப்பது ஒரே அமுதைத்தான்” என்றான். இளைய யாதவர் சிரித்து “சொல்வேதாந்தம் பாதுகாப்பானது. செயலின்மை கொண்டால் அவைநடுவே நெடுமரம். வில்வேதாந்தம் அப்படி அல்ல. சிதையிலெரியவேண்டியிருக்கும்” என்றார். அர்ஜுனன் வாய்விட்டு சிரித்தான்.

மீண்டும் இளைய யாதவர் முகம் கனவுகொண்டது. “அறியமுடியாமையைக் கறந்து அறிபடும் ஒன்றை எடுப்பது எப்படி? பார்த்தா, வேதம் விளங்க இன்று எழுந்தாக வேண்டிய நூல் ஒன்று உண்டு. அது முற்றிலும் தெளிவானது. சொல்லெண்ணிப் பயிலவும் உகந்தது. கடலில் திசைமானி போலவும் பாலையில் நீர் போலவும் கொண்டுசெல்ல ஏற்றது.”

அவர் சுட்டுவிரலைத் தூக்கி தன் முன் எழுந்த பெருங்கூட்டத்திடமென சொன்னார் “முடிவிலி எழும் சில சொற்கள். இமயமலைத்தொடர்களின் திசைநிறைக்கும் அலகின்மையை உள்ளங்கையில் அமைந்த சிறு வைரக்கல் தன்னுள் சுருட்டி வைத்திருப்பது போன்றது. பெருமலையின் கல்லெடுத்து சிவக்குறியென ஆலயக்கருவறையில் நாட்டுவதுபோன்றது. ஆம், ஒருசிறு நூல்...”

அவர் தன் உளஎழுச்சியால் அர்ஜுனனின் கைகளை பற்றிக்கொண்டார். “அது ஒரு கூற்றாக அறிவுறுத்தலாக ஆற்றுப்படையாக இருக்கவியலாது. அது பாடல். ஆம், யாழும் குழலும் இயையும் மெய்மை அது.” அவர் கைகள் வெம்மைகொண்டிருப்பதை அர்ஜுனன் உணர்ந்தான். “சிலசமயம் அதை மிகத்தெளிவாக கேட்கிறேன். துயில்கையில் செவியருகே வந்து அன்னை சொல்லும் அன்புமொழி போல. உளம் எழுந்து உவகைகொண்டு அதை மேலும் கேட்கப்போனால் வாடைக்காற்றில் வந்த குயில்பாடல்போல.”

இளைய யாதவரின் உடல் ஒளிகொண்டிருப்பதை அர்ஜுனன் கண்டான். தன் கைகளை தூக்கிப் பார்த்தான். அதுவும் இளநீல ஒளிகொண்டிருந்தது. இல்லை பச்சையா? வெறும் விழிமயக்குதானா? இல்லை, இது ஒளிரும்காடு. இக்காட்டிலிருந்துதான் இக்குருநிலைக்கே சாந்தீபனி என்று

பெயர் வந்தது. இளைய யாதவர் தன் கைகளைத் தூக்கி நோக்கி "நிலவெழத்தொடங்கிவிட்டது. காடு ஒளிகொள்கிறது" என்றார். அர்ஜுனன் "ஆம்" என்றான்.

"வேதங்கள் ஏன் பொருளின்மையைச் சென்று தொடுகின்றன என்று நான் முன்பு என் ஆசிரியரிடம் கேட்டேன்" என்று இளைய யாதவர் சொன்னார். "அவை கொண்டிருக்கும் பொருளின்மை நம் அறியமுடியாமையினாலேயே என்று அவர் சொன்னார். அவை இன்றில் தொட்டிருக்கும் ஒரு புள்ளியையே நாம் காண்கிறோம். நாளையென்னும் முடிவிலியில் சென்று மறையும் கடுந்தொலைவை அறியமுடியாமல் திகைக்கிறது நம் சித்தம் என்றார். உண்மை எனறு நானும் உணர்கிறேன். நாளை நாளை என்று எழும் காலத்தில் பொருள்மேல் பொருளெனக் கொண்டபின்னரும் அவற்றில் பொருள்சுட்டாச் சொல் மிச்சமிருக்கக்கூடும்."

"இளைய பாண்டவனே, வேதப்பெருக்கில்தான் அத்தனை முடிவின்மை அமையமுடியுமா என்ன? அது வேதத்தின் இயல்பென்றால் வேதச்சொல் ஒவ்வொன்றிலும் அம்முடிவின்மை எழவேண்டாமா? இல்லையேல் அது வேதத்தின் இயல்பல்ல, அந்தத் தொகைமுறையின் தன்மை என்றல்லவா பொருள்?" என்று அவர் சொன்னார். "ஒரு சொல்லில் வந்தமைக முடிவிலி! ஒவ்வொரு சொல்லிலும் முடிவிலி வந்தமைக! முடிவிலியெனத் திறக்கும் சொற்களால் ஆன ஒரு வேதம். கையளவே ஆன கடல்..."

"அது எழுதப்பட்டுவிட்டது, மொழிவழிப்படவில்லை" என்று அவர் தனக்குள் என சொன்னார். மறுகணமே அவனை நோக்கி திரும்பி "ஆம், அதை நான் முழுமையாகவே காண்கிறேன். சொல்லென ஆகாத நூல் எத்தனை கூரியது!" என்றார். அவர்

என்ன சொல்கிறார் என்று அறியாமல் பார்த்தன் நோக்கி நின்றான். “இங்கிருந்து நீங்கள் நாளை கிளம்பவிருக்கிறீர்கள் என்றார் யுதிஷ்டிரர்” என இளைய யாதவர் உடனே மீண்டுவந்து நிலத்தமைந்தார். “ஆம்” என்றான் அர்ஜுனன்.

“எங்கு செல்லவிருக்கிறீர்கள்?” என்றார் இளைய யாதவர். “அறியேன். இங்கிருந்து கிளம்புவதைப்பற்றி மட்டுமே அவர் பேசினார். இப்பயணத்தில் கிளம்பிச்சென்ற பிறகே இலக்குகளை தெரிவுசெய்கிறோம்” என்றான் அர்ஜுனன். “நன்று. அனைத்தையும் பிணைக்கும் இடத்திலிருந்து அனைத்தையும் தொகுக்கும் இடத்திற்கு நீங்கள் செல்லக்கூடும்” என்றார் இளைய யாதவர். “இளைய பாண்டவனே, அது உன் மூத்தவரின் பயணம்தான். உன் வழிகள் வேறு.” அர்ஜுனன் “ஆம், அதை உணர்ந்தபடியே இருக்கிறேன்” என்றான்.

“உன் வழியை நீ தெரிவுசெய்துகொள்க!” என்றார் இளைய யாதவர். “என் வழி உங்களுடன் அமைவதே” என்றான் அர்ஜுனன். “இல்லை, நான் என் வழியை இன்னமும் முற்றும் தேரவில்லை. இங்கு வந்தபோதிருந்த உள்ள அலைக்கழிப்பு இப்போதில்லை. ஆனால் இங்கிருந்து நான் திரும்ப துவாரகைக்கு செல்லப்போவதில்லை.” அர்ஜுனன் “ஏன்?” என்றான். “என்னை அங்கு ஆயிரம் முகங்களாகப் பரப்பி வைத்திருக்கிறேன். அவையனைத்தையும் கடந்து முகமின்மை ஒன்றைச் சூடி நான் அடையவேண்டிய சொல் ஒன்று உள்ளது.”

அவன் விழிதிறந்தபோது எதிரே விதுரர் அவனை நோக்கிக் கொண்டிருந்தார். “அமைச்சரே, தாங்களா?” என்றபடி அர்ஜுனன் எழப்போனான். உடலுக்கும் உள்ளத்துக்கும் தொடர்பே இருக்கவில்லை. “மூடா, நீ உளமயக்கில் இருக்கிறாய்” என்று அவர் சொன்னார். “இக்குகைக்குள் முளைத்துச்செறிந்துள்ள

காளான்கள் எழுப்பும் நச்சுப்புகையை உள்ளிழுக்கிறாய். இவையனைத்தும் உன் கலைந்த சித்தம் அளிக்கும் சித்திரங்கள் அன்றி வேறல்ல.”

“ஆம், இந்தப் பனிக்குகையும் நீர்சொட்டும் ஒலியும் அந்த வெண்புகையும்... அவை வெறும் சித்திரங்கள்” என்று அவன் சொன்னான். விதுரர் பல்லைக் கடித்தபடி வந்து அவன் தலையில் ஓங்கி அறைந்தார். “தந்தையே” என்று கூவியபடி அவன் பின்னால் சரிந்து விழுந்தான். “உன்னை நான் அஞ்சினேன். உன் விழிகளை நான் தவிர்த்தேன். அதுதான் நான் செய்த பிழை. தந்தையால் அஞ்சப்படும் மைந்தர் நிலையழிந்து சிதறுண்டு மறைகிறார்கள்.”

அவன் கைகளை ஊன்றி எழுந்து அமர்ந்து அவர் காலடிகளை நோக்கிக்கொண்டிருந்தான். அவர் சினத்துடன் நடந்து வெளியே சென்று மறைந்தார். “வா வெளியே, கிளம்புவோம்” என்று அவரது குரல் கேட்டது. “இல்லை தந்தையே, நான் இங்கே மடிகிறேன்.” அவர் மீண்டும் குகைவாயிலில் தோன்றி “என்ன எண்ணிக்கொண்டிருக்கிறாய், அறிவிலியே? அங்கே உன் அன்னை காத்திருக்கிறாள் உன்னை” என்றார். “ஆம், ஆனால் எந்தையின் அருளின்றி நான் எழப்போவதில்லை” என்றான்.

“இந்திரன் அல்ல உன் தந்தை. உன் குருதித்தந்தை வில்லேந்திய முனிவர் ஒருவர். அதை நீயே அறிவாய்.” அவன் “நான் இந்திரனின் மைந்தன்” என்றான். “மண்ணில் இந்திரன் கொண்டிருந்த ஆற்றலை எல்லாம் அவன் அழித்துவிட்டான். உன் தோழன்” என்றார் விதுரர். “ஆனால் அவள் இந்திரனைத்தான் உளம் மணந்துள்ளாள்” என்றான் அர்ஜுனன்.

சற்றுநேரம் நோக்கி நின்றபின் விதுரர் “உன் ஊழ் அதுவென்றால் அவ்வாறே” என்று திரும்பிச்சென்றார். அவன் அவரது காலடிகள் அகல்வதை பலநூறாண்டுகாலம் கேட்டுக்கொண்டே அமர்ந்திருந்தான். “இல்லை இல்லை இல்லை” என்றன அவை. “இரு இரு இரு” என்றன பின்னர். “இனி இனி இனி” என உருமாறின. அவன் அவ்வொலிகளை சிவந்த தாமரைமலர்கள் என பார்த்தான். தித்திப்பான சிவப்பு. உடலை வாள்முனை என வருடிச்செல்லும் நறுமணம். அவன் சிரித்தான். குகையின் பல்லாயிரம் முகங்கள் அவனுடன் சேர்ந்து சிரித்தன.

# கிராதம் - 15

**[ 20 ]**

வெண்சுண்ணத்தால் ஆனது அர்ஜுனன் தவம் செய்துகொண்டிருந்த குகை. அதன் மேல்வளைவிலிருந்து பன்றியின் முலைக்கொத்துபோல் தொங்கிய சுண்ணக் குவைகளில் நீர் ஊறித்துளித்து சொட்டிக் கொண்டிருந்தது. குகையின் ஊழ்கநுண்சொல் என அது தாளம் கொண்டிருந்தது. அர்ஜுனன் சாய்ந்து அமர்ந்திருந்த சுண்ணக்கல் பீடத்திற்கு நேர்முன்னால் குத்தி உருவி எடுத்த கத்தி நுனியிலிருந்து சொட்டும் கொழுங்குருதி போல நீர் உதிர்வதை அவன் பல்லாயிரம் வருடங்களாக நோக்கிக் கொண்டிருந்தான்.

நகரங்கள் எழுந்து பொலிந்து போரிட்டு புழுதியாகி மறைந்தன. மக்கள்திரள்கள் பிறந்து குடிதிரட்டி முறைமையாகி வழக்கமாகி சொல்லாகி நூலாகி நூல்நிறை சொல்லை மட்டுமே எஞ்சவிட்டு நினைவாகி அழிந்தன. துளி ஒவ்வொன்றும் ஒரு

புவி. ஒவ்வொன்றும் ஒரு கணம். கணங்களைக் கோத்து உருவாக்கப்பட்ட விழிமணிமாலை. கோக்கும் சரடென்பது அவை ஒன்றை ஒன்று ஈர்த்திருக்கும் விசை. சென்றுகொண்டிருந்தது விழிகளின் காலம். அறிவிழிகள். அறியாமின்கள். நுண்சொற்கள். அமைதிச்செறிவுகள். விண்மீன்களின் நீள்சரடு என ஆகிய வானம். ஒன்றிலிருந்து பிறிதொன்றுக்கு சென்றுகொண்டிருந்த பொருளின்மை. ஒன்று மற்றொன்றிடம் கொள்ளும் பொருள்.

ஒளி கொண்டு நுண்மின் கொண்டு நலுங்கிய நீள்குவை நுனித்துளி உதிராது நடுங்குவதை அவன் கண்டான். அவ்வொளி மேலும் சுடர்கொண்டு சுண்ணக்குவை நீட்சியை மென்மையாக மின்ன வைத்தது. நோக்கி இருக்கையிலேயே குகையின் சுண்ண நெகிழ்வுகள் அனைத்தும் மிளிரலாயின. குகைக்குள் ஆழத்தில் ஓடிக்கொண்டிருந்த சிறிய ஓடை ஒன்று நீரொளி கொண்டது. காற்று ஒளியால் நனைந்தது. அதற்கு எதிர்வினையென அவன் உள்ளம் மலர்வடைந்தது.

புன்னகைக்கும் முகத்துடன் திரும்பி குகைவாயிலை நோக்கியபோது அங்கு நின்றிருந்த நெடிய உருவை அவன் கண்டான். உவகையுடன் முகமனுரைத்து எழ முயன்றாலும் நெடுங்காலத்துக்கு முன்னரே முற்றிலும் மறந்துவிட்டிருந்த மொழி நாவை வந்தடைவதற்காக அவனுள் எங்கோ நின்று தவித்தது. விழிகளில் மட்டும் உணர்வுகள் கூர் கொண்டெழ அவன் உடல் அசையாமல் அமர்ந்திருந்தது.

நீண்ட கால்களை சுண்ணப்பரப்பின்மீது எடுத்து வைத்து அவர் அவனருகே வந்து நின்றார். அவருடன் தொற்றிக்கொண்டதென வெளியிலிருந்து உள்ளே வந்த வெண்ணிற ஒளி

குகையறையை நிறைத்து ஒவ்வொரு நீர்த்துளியையும் வெண்சுடராக்கியது. “அருகன் அடி வாழ்க!” என்று இனிய மென்குரலில் அவர் சொன்னார். “அருகர் சொல் வாழ்க!”

எண்ணியிராத கணத்தில் தடையுடைத்து நாவிலிருந்து தெறித்தது அவன் மொழி. “தூயவரே! தாங்களா…? தங்களை நான் இங்கு எதிர்பார்க்கவில்லை” என்று அவன் சொன்னான். நேமிநாதர் புன்னகையுடன் “நீ இங்கிருப்பதை அறிந்தேன். நாம் மீண்டும் சந்திக்கவேண்டிய இடம் இது” என்று சொன்னார்.

அவன் “எத்தனை காலமாக இங்கிருக்கிறேன் என்று தெரியவில்லை. இங்கு வந்தது எதற்கென்பதை இப்போது மறந்துவிட்டேன். இங்கிருக்கும் இக்கணத்திலேயே திளைத்துக் கொண்டிருக்கிறேன்” என்றான். “ஆம், அது அவ்வாறுதான். ஊழ்கமென்பது பல்லாயிரம் மடங்கு களிஎழும் மயக்கு” என்று அவர் சிரித்தபோது வெண்பற்கள் பளீரிட்டன.

மயிர் அகற்றப்பட்ட வெண்ணிறத்தலை ஒளிபட்டு நீலநரம்புகளுடன் மண்டையோட்டு வளைவுகளுடன் வெண்பளிங்கு உருள்கல்போல தெரிந்தது. வடித்து நீட்டப்பட்ட காது தோள் தொட்டு தழைந்தது. கூர்கொண்ட நீள்மூக்கு. செவ்விதழ் குமிண் உதடு. இறுகிய பெருந்தோள்கள். தாள்தொட நீண்டிறங்கிய கைகள். குறுகிய இடை அகன்று நீண்டு நிலம் தொட்டு நின்றிருந்த நெடுங்கால்கள். அருகர்களுக்குரிய உடல். அவ்வுடலிலேயே அவர்கள் நிகழமுடியும்.

“தங்களை ரைவத மலையில் பார்த்து மீண்டபோது இருந்த அதே தோற்றத்தில் இருக்கிறீர்கள்” என்று அர்ஜுனன் சொன்னான். “இது நான் வீடுபேறடைந்தபோது இருந்த தோற்றம். விழையும்போது இத்தோற்றத்துக்குள் நான்

புகுந்துகொள்ள முடியும்” என்றார் நேமிநாதர். “தாங்கள் எங்கிருக்கிறீர்கள் இப்போது?” என்று அர்ஜுனன் கேட்டான். “கால இடத்தில் இருந்த எல்லை உதிர்த்து இப்புடவி முழுக்க பரவி எங்குமிலாதிருக்கிறேன். எங்குமிருக்கும் ஒன்றாகவும் இருக்கிறேன். இது என் வானத்தோற்றம். என்னில் எழுந்தது துளி வானம்” என்று அவர் சொன்னார்.

அர்ஜுனன் கைகூப்பினான். அவர் அர்ஜுனனின் அருகில் அமர்ந்தார். “இங்கு நீ வந்திருப்பது படைக்கலம் பெறுவதற்காக. இளைய பாண்டவனே, இந்திரகீலம் என்னும் இம்மலையைப்பற்றி நீ அறிந்திருக்கிறாயா? மண்ணில் இருந்து நெடுந்தொலைவில் இரண்டின்மை பெருகிப்பரந்த விண்ணுக்கருகே அமைந்துள்ளது இம்மலைமுடி. இதை அத்வைதகம் என்பார்கள். இங்கு ஒரு கை ஓசை மட்டுமே எழும். எவ்வொலிக்கும் எதிரொலி இல்லா உச்சம் இது.”

அப்போதுதான் அதை அர்ஜுனன் உணர்ந்தான். “ஆம், இங்கு வந்தது முதல் அவ்வேறுபாட்டை நான் உணர்ந்துகொண்டிருந்தேன். இப்போதுதான் தெளிந்தேன்” என்றான். “ஊடும் பாவுமென பின்னி கீழே புடவிப்பெருக்கை நெய்துள்ளன விசையிருமைகள். இருளும் ஒளியும், கருணையும் கொலையும், நன்றும் தீதும், அறமும் மறமும், இருத்தலும் இன்மையுமென இருபால் திரிபால் ஆனது அப்புவி. இங்கு அவற்றில் ஒன்று மட்டுமே உள்ளது. ஒளி, கருணை, நன்று, அறம், அன்பு ஆதல். இங்கு நீ எதையும் வெல்வதற்கும் கொள்வதற்கும் இல்லை. இங்கு உனக்கு எதிர்நிலையே இல்லை.”

“இம்முழுமையை வந்தடைந்தபின் திரும்பிப்பார்த்தால் அங்குள்ள வாழ்க்கை வீண் கனவென்று தெரியும். வருக!”

என்றார். அர்ஜுனன் “நான் எந்தையைப் பார்க்கும்பொருட்டு இங்கு வந்தேன்” என்றான். “ஆம், இது இந்திரனின் நிலம். ஆனால் இங்கு எழுந்தருளும் இந்திரன் விழைவின் தெய்வம். இங்கு இவ்வாறு அமைவதனால்தான் அங்கு அவ்வாறு அமைகிறான்” என்றார் நேமிநாதர். “என்னுடன் வருக! கீழே என்ன நிகழ்ந்துகொண்டிருக்கிறது என்று நான் உனக்குக் காட்டுகிறேன்” என்றார். அர்ஜுனன் தயங்க அவர் தன் கைகளை நீட்டி அவனைப் பற்றினார். “எழுக!” என்றார். அவன் எழுந்துகொண்டான்.

“நீ இங்கு வந்தது நன்று. ஏழு பிறவிகளில் எய்திய நிலைகளின் உச்சம் இது. நீ இங்கு வருவது முன்பு ரைவத மலைக்கு வந்தபோதே முன்குறிக்கப்பட்டுவிட்டது. பாண்டவனே, விற்தொழில் கற்று கடந்து அதன் எல்லையை அன்றே நீ அறிந்திருந்தாய். தன் படைக்கலம் பொருளற்றதாக ஆவதை ஒரு கணத்தில் உணர்ந்த பின்னரே பெருவீரன் பிறக்கிறான்.”

அர்ஜுனன் “ஆம், அன்று அறிந்தேன். கொல்லாமை என்பதே கொலைத்தொழிலின் உச்சம் என்று. அன்று தொடங்கியது இப்பயணம்” என்றான். “முதற்காலடி ரைவதத்திலிருந்து எடுத்து வைத்தாய். இறுதிக்காலடியை இங்கு வைத்திருக்கிறாய். வருக, அங்கு உனக்காக காத்திருக்கிறார்கள்.” “எவர்?” என்று அவன் நடுங்கும் குரலில் கேட்டான். “வருக!” என்றபின் மீண்டும் புன்னகைத்தார்.

அவரது கைப்பிடிக்குள் அடங்கியது அவன் கை. அவன் எழுந்து நடந்தான். நீர் ஓடி தசைப்பரப்பென வெம்மையும் வழுவழுப்பும் கொண்டிருந்த சுண்ணப்பாறைகளினூடாக அவன் நடந்தான். நீராவி நிறைந்திருந்த குகைக்குள்ளிருந்து வெளியே சென்று நீராவி குளிர்ந்து புகையென்றாகிச் சூழ்ந்த ஊற்று விளிம்பைக்

கடந்ததும் இந்திரகீலத்தின் மீது வளைந்து நின்றிருந்த ஏழுவண்ண விண்வில்லை பார்த்தான்.

“எந்தையின் வில்” என்று சொல்லி இரு கைகளையும் விரித்தான் அர்ஜுனன். உவகையில் விழிநீர் துளிர்த்தது. “எந்தையின் பேருருவம்” என்றான். “வருக!” என்று அவனைத் தொட்டு அழைத்தார் நேமிநாதர். பன்னிரு முறை காலெடுத்து வைத்ததும் அவ்வானவில் மலையடுக்குக் கீழே மாபெரும் வட்டமாக மாறிவிட்டிருப்பதை கண்டான். திகைத்து சொல்மறந்து நின்றான். கைகள் சோர்ந்து விழுந்தன.

“இந்திரனின் முற்றுருவம் இது. முடிவிலா ஆழிச்சுழற்சி. தன் விழைவுத் தோற்றத்தை துறவுத்தோற்றத்தால் முழுமை செய்து கொண்டிருக்கிறான்” என்றார் நேமிநாதர். அவர்களுக்கு இருபுறமும் ஒளிகொண்டு நின்றிருந்த வெண்முகில்திரைகளுக்கு அப்பாலிருந்து ஒவ்வொருவராக வரத் தொடங்கினர்.

உவகையும் பதற்றமும் நிலைகொள்ளாமையுமாக அவன் அம்முகங்களை மாறிமாறி நோக்கினான். “இங்கிருக்கிறார்களா இவர்கள் அனைவரும்...?” என்றான். அவர் புன்னகைத்து “எங்குமிருக்க அவர்களால் இயலும். இங்கிருப்பதும் அவ்வாறே” என்றார். ஒளிமிக்க முகங்கள். கருணை மலர்ந்த விழிகள். கைகூப்பி “எந்தையரே” என்றான். “நீ வந்திருக்கும் இடம் இனியது. உன்னுள் எஞ்சியிருக்கும் அனைத்து படைக்கலங்களையும் கைவிடு. அந்த ஒளிரும் ஆழியை ஏந்தி முழுமை கொள்” என்று நேமிநாதர் சொன்னார்.

அவன் உடல் நடுங்கிக்கொண்டிருந்தது. அந்த முகங்களை மாறிமாறி நோக்கியபடி பலமுறை சொல்லெடுக்க முயன்றான்.

“துறந்து தணிந்து மறைந்து அருகர்கள் அடைவதை அடைந்து வென்று நின்று நீ எய்தினாய். கடந்தவனையே மாவீரன் என்கின்றனர்” என்றார் நேமிநாதர். “இங்கு அமைவது மண் எழுந்து மலைமுடியாவதுபோல.”

அவன் உள்ளத்தில் நால்வரும் கடந்துசென்றனர். அதை அறிந்தவர்போல “இங்கு வருக! இங்கிருந்து மூன்றடி தொலைவு அந்த பொன்னிறவரிக்கு. முதலடியில் உன் படைக்கலங்களை கைவிடுக! இரண்டாவது அடியில் அப்படைக்கலங்களை தக்கவைத்திருக்கும் அச்சத்தை கைவிடுக! மூன்றாவது காலடியில் அவ்வச்சமென தன்னை காட்டிக் கொண்டிருக்கும் ஆணவத்தை கைவிடுக! அங்கு கீழே என்ன நிகழ்ந்து கொண்டிருக்கிறதென்று உனக்குக் காட்டுகிறேன்” என்று அவன் தோளில் அவர் கையை வைத்தார். “திரும்புக, நோக்குக!”

அறியாது தலைதிருப்பி அதற்கு முந்தைய கணமே திரும்பிக்கொண்டு “இல்லை” என்று அர்ஜுனன் சொன்னான். “ஏன்?” என்று அவர் கேட்டார். “நான் அங்கு நோக்க விழையவில்லை.” அவர் “நீ வாழ்ந்த உலகு அது. அங்கிருந்து எழுந்துள்ளாய்” என்றார். “நான் அங்கு மீளவே விழைகிறேன். அது பொருளிழப்பதை விரும்பவில்லை.” நேமிநாதர் “இனியவனே, இங்கிருந்து மீண்டு அங்கு செல்வதென்பது மடமை” என்றார்.

அர்ஜுனன் “ஆம், இங்கிருந்து திரும்புவது பெரும் வீழ்ச்சி. ஆனால் சில தருணங்களில் நாம் சிறியவற்றையே தெரிவுசெய்கிறோம்” என்றான். நேமிநாதர் “அங்கு உன்னை கவர்வதென்ன? இவையனைத்தையும் துறந்து அங்கு நீ சென்று மகிழப்போவதுதான் எது?” என்றார்.

“அங்கு என் தோழர் இருக்கிறார்” என்று அவன் சொன்னான். நேமிநாதர் புன்னகையில் அவன் நன்கு அறிந்த ஓர் ஒளி கடந்துசென்றது. “இப்பெருநிலையையும் நான் அவருக்காக உதறவே விரும்புகிறேன்.” அவர் “அவன் உழலும் ஆழிச்சுழற்சியை நீ அறியமாட்டாய். அங்கு எய்துவதென்பது ஏதுமில்லை. இழத்தல் என்பதே அவன் ஊழென்று முன்னரே வகுக்கப்பட்டுவிட்டது” என்றார்.

“நான் அவருடன் இருக்கவும் இழக்கவுமே விழைகிறேன்” என்று அர்ஜுனன் சொன்னான். கனிந்த கண்களுடன் விண்ணிலிருந்து என நேமிநாதர் அவன் மேல் குனிந்து கேட்டார் “நீ இழக்கவிருப்பது என்னவென்றறிவாயா?” அர்ஜுனன் “ஆம், இழப்பு என்பது ஒரு தொடக்கமே. ஓர் இழப்பு பிறிதொன்றை கொண்டு வருகிறது, நீர் நீருக்கு வழியமைப்பதுபோல. நான் அனைத்தையும் இழப்பேன் என்று அறிகிறேன்” என்றான்.

அவர் கண்கள் மேலும் கனிந்தன. “ஆம், அவன் முற்றிலும் இழப்பான். அவன் இழப்புக்கு இணையானதே உனக்கும் நிகழும்.” அர்ஜுனன் “அவருக்கு இணையாக எனக்கும் நிகழவேண்டுமென்பதே என் விழைவு” என்று சொன்னான். அவர் பெருமூச்சுடன் திரும்பிக்கொண்டார். “அருள்க, அருகரே!” என்றான் அர்ஜுனன். “நான் இங்கு வந்ததே அவருக்கு நிகரானவனாக ஆகும்பொருட்டுதான்.”

இங்கு நீ கொள்ள வந்த படைக்கலம் எது?” என்று அவர் கேட்டார். “எப்படைக்கலம் அவருக்கு இணையாக என்னை நிறுத்துமோ அது. ஒருகணமேனும் அவர் முன் என்னை தணியச் செய்யாத ஆற்றலுள்ளது” என்றான். அவர் புன்னகைத்து “அது உனக்கு அமைவதாக!” என்றார். அர்ஜுனன்

கைகூப்ப ஒளிரும் விழிகளுடன் அவர்கள் அவனை வாழ்த்தினர்.

“விடைகொடுங்கள்! நான் இங்கிருந்து கிளம்ப வேண்டும்” என்று குனிந்து அவர் கால்களைத் தொட்டு சென்னி சூடினான். அவன் தலைமேல் கைவைத்து “நன்று! படைக்கலங்களில் முதன்மையானது இன்று உன்னால் அடையப்பட்டது. அது படைக்கலங்களில் இறுதியாகவே எடுக்கப்படவேண்டும்” என்றார். அர்ஜுனன் “ஆணை” என்றான். “ஆம், அவ்வாறே ஆகுக!” என்றபின் திரும்பி வெம்மை கொண்டு நின்ற சுண்ணப்பாறைகள் மேல் கால்வைத்து தாவி நடந்து முகில் திரைக்குள் மறைந்தார். முகிலொளிக்குள் அவர்கள் ஒவ்வொருவராக கரைந்தழிந்தனர்.

அவர் காலடி பட்ட பாறைகளில் பதிந்த ஈரம் விழிமுன் உலர்ந்து மறைவதை அவன் கண்டான். அது முன்னரே கண்ட பாதத்தடமென எண்ணி அவன் உள்ளம் துணுக்குற்றது. பின்பு வழுக்கும் பாறைகளில் கால் வைத்து தடுமாறி ஓரிரு முறை முழங்கால் அடிபட விழுந்து எழுந்து மீண்டும் அக்குகைக்குள்ளேயே சென்றான். கருவறைக்குள் மீளப்புகுந்தது போல் அவன் உள்ளம் இளைப்பாறல் கொண்டது. விழி சொக்கும் துயில் வந்து மேலே படிந்தது. உடலின் அனைத்து தசைகளும் விசையழிந்தன.

கைகளை ஊன்றியபடி விலங்குபோல் நடந்து தன் பீடத்தை அடைந்தான். அமர்ந்தமர்ந்து அவன் உடல்வடிவில் பள்ளம் கொண்டிருந்தது. அவன் எழுந்து சென்றதும் அவ்வின்மையை தன்னில் வைத்திருந்தது. அதை அவன் உடல் நிறைத்ததும் வெண்பஞ்சுச் சேக்கையென குழைந்து அவனை வாங்கிக்கொண்டது. கால்களை நீட்டி கைகளை மடியில்

வைத்து உடலை மெல்லத் தளர்த்தியபோது இமைகள் தளர்ந்து மூடிக் கொண்டன.

மெல்ல துயில் வந்து மேலே மென்மையான எடையுடன் விழுந்துகொண்டே இருந்தது. அவன் அருகே கந்தர்வனின் குரல் கேட்டது. “இங்கு அவரே இந்திரனென வருகிறார்.” அவன் விழி திறந்தான். “யார்?” என்றான். பிரபாஹாசன் “அவர் சற்றுமுன் தன்னை அவ்வாறு காட்டி மீண்டார்” என்றான்.

அவன் கந்தர்வனின் முகத்தையே நோக்கிக் கொண்டிருந்தான். “நீங்கள் இங்கிருந்து கிளம்பலாம், இளைய பாண்டவரே. உங்கள் படைக்கலங்கள் நான்கு திசைகளிலும் கனிந்துள்ளன. சென்று அவற்றை கொள்க! நிலத்தமைவதையெல்லாம் வெல்க!” என்றான் கந்தர்வன்.

**[ 21 ]**

கந்தர்வனாகிய பிரபாஹாசனால் நாரை வடிவில் வழிகாட்டப்பட்டு இந்திரகீல மலையிலிருந்து அர்ஜுனன் கீழிறங்கி வந்தான். இறகென உதிர்வதுபோலவும் நீர்த்துளியென மண் நோக்கி தொடுக்கப்பட்டிருப்பதாகவும் உணர்ந்தான். அவன் தன்னை அறிந்தபோது நீலாக்ரத்தின் உச்சியில் நின்றுகொண்டிருந்தான். வாழ்த்துரைக்கும் ஒற்றைச்சொல்லுடன் வானில் அவனைக் கடந்து சென்றான் நாரை வடிவ கந்தர்வன்.

உச்சித் தலையை குளிர் ஒன்று முட்டி விதிர்க்கவைக்க தான் இருக்கும் இடத்தை உணர்ந்து எதிரே எழுந்து முன்பக்கமிருந்த இந்திரகீலத்தை பார்த்தான். அங்கு நிகழ்ந்தவை அனைத்தும்

கனவுக் காட்சிகள் என ஒன்றன்மேல் ஒன்று படிந்து நீர்ப்பாவைகள் போல் குழைந்து சுழியாகி புள்ளியாகி ஒளிந்தணைந்தன. ஆம் என்றது சித்தச்சொல். ஆம் ஆம் ஆம் என்றது அதன் அடியிலிருந்த ஆழம்.

மலைகளிலிருந்து இறங்கி மண்ணுக்கு வந்தான். நிலம் தொட்டபோது அவன் ஏறிய ஆறு மலைகளும் வெறும் உளமயக்கோ என பின்னால் அலை எழுந்து வான் வருடி நின்றன. இடையில் கைவைத்து அந்த மலைகளை நோக்கினான். நீலமலைகள். காற்றில் அலைபாயும் திரைகள். புயல்பட்டால் சுருண்டெழுந்து பறந்துவிடக்கூடியவை. மாபெரும் நீலமலர் ஒன்றின் இதழ்கள்.

மலைகளை ஏறி உச்சி செல்லும்படி தன்னை உந்தியது எது என்று வினவிக்கொண்டான். தொலைவில் எங்கிருந்தோ விழவு ஒன்றின் ஓசைகள் கேட்டுக்கொண்டிருந்தன. முழவோசையும் அணியும் கலந்த இசைமேல் துடித்தன குரல்கள். வாழ்வின் ஓசை. அதிலிருந்து தப்பிச்சென்றிருக்கிறேன். இங்குளவற்றின் மெய்மை அங்குள்ளது என்று எவர் சொன்னது? இங்கு அது கலந்து பின்னி சிக்கி அறியவொண்ணாமை கொண்டுள்ளது. எனவே அங்கு அது தூயதென இருக்கவேண்டும் என எண்ணுகிறது போலும் மானுடம். இங்கு பெருநதியாவது அங்கே சிறு ஊற்றாக இருப்பது போல. வானில் கிளைவிரிவாவது மண்ணுக்குள் விதைத்துளியாவதுபோல.

ஒவ்வொரு அடியையும் வாழ்வைத் துறந்து துறந்து வைத்து மண்ணை அறியாத அவ்வுச்சிக்கு சென்று நின்றேன். அங்கிருந்த தேவனிடம் மண்ணைத் துறக்கமாட்டேன் என்று வஞ்சினம் உரைத்து மீண்டிருக்கிறேன். எண்ணியிராத கணத்தில் அவன் வெடித்து நகைக்கத் தொடங்கினான்.

அந்நகைப்பொலி சூழ்ந்திருந்த பாறைகளில் பட்டு எதிரொலித்து அவனைச் சூழ்ந்தபோது மேலும் மேலும் நகைப்பு பொங்கி எழுந்தது.

அவனே அதைக்கேட்டு துணுக்குற்றபோதிலும்கூட அவனால் அதை நிறுத்த முடியவில்லை. கைகளால் தொடையையும் அருகிருந்த மரத்தையும் அறைந்து வயிற்றை பற்றிக்கொண்டு குனிந்தும் நிமிர்ந்தும் உரக்க நகைத்தான். தளர்ந்து கையூன்றி நிலத்தில் அமர்ந்து வானை நோக்கியபடி சிரித்து உடல் அதிர்ந்தான். மூச்சு ஒழிந்தபோது நகைப்பை நிறுத்தி மெல்ல எழுந்து மீண்டும் நகைப்பெழ ஓசையின்றி உடல் குலுங்கினான்.

ஓய்ந்து தளர்ந்து அவ்வூர் நோக்கி செல்கையில் அவ்வப்போது எழுந்த சிரிப்பை தன்னுடலில் இருந்து எழுந்ததென அறியாதவன்போல் திகைப்புடன் அவனே பார்த்தான். சிரிப்பது எதற்காக? அவ்வாறு எண்ணியதுமே அவ்வெண்ணமே சிரிப்பாக வெளிப்படுவது எவ்வாறு?

ஊரிலிருந்து மலைகளை நோக்கி வந்த ஒற்றையடிப்பாதையில் அருகே காட்டுக்குள் கனிந்திருந்த பழங்களையும் மரக்கிளையில் எருமையகிடெனத் தொங்கிய தேன் கூடொன்றையும் கொய்து உண்டபடி அவன் நடந்தான். எதிரே இளமுனிவனொருவன் நடந்து வருவதைக் கண்டான். அவன் நடையிலிருந்த துடிப்பும் முகத்தில் தெரிந்த துறவின் இறுக்கமும் அவன் செல்வதெங்கு என்று காட்டியது. சற்று ஓய்ந்திருந்த சிரிப்பு வெளிப்படத்தொடங்கியது.

மீண்டும் மீண்டும் என சிரிப்பு அவன் உடலை உலுக்கியது. அவன் சிரிப்பொலியை தொலைவிலேயே கேட்ட இளமுனிவன் நடை தாழ்த்தாமல் விழிவிலக்கி அணுகி வந்தான். குரல்

தொடும் தொலைவுக்கு அவன் வந்ததும் “உத்தமரே, தாங்கள் மலைகளுக்கா செல்கிறீர்கள்?” என்று அர்ஜுனன் கேட்டான். அவன் கடந்து செல்ல அவன் முதுகை நோக்கி “மலைகளில் மெய்மை கனிந்திருக்கிறது. குறவர்கள் அதை மலைத்தேன் என்கிறார்கள். கரடிகள் அதை இனிமை என்கின்றன. முனிவர்கள் அதன் கீழ் கால்மடித்து அமர்ந்து கைகுவித்து அது உதிர்க்காத தேனை அருந்துகிறார்கள்” என்றான்.

இளமுனிவன் நடை தளர்வதை அர்ஜுனன் கண்டான். “ஏழு மலைகள், உத்தமரே. ஏழாவது மலைமேல் உள்ளது மாற்றில்லாத மெய்மை. மாற்றில்லாத மெய்மையால் மெய்மையை அறியமுடியாதென்பதனால் அதுவே முழுமை என்றறிக!” முனிவனின் கால் சற்று தடுக்கியதுபோல் தெரிந்தது. வெடித்துச் சிரித்தபடி அர்ஜுனன் அங்கேயே நின்று கையாட்டி “வென்று வருக, முனிவரே! அங்கு பிரபாஹாசன் என்னும் கந்தர்வன் இருக்கிறான். இந்திரனின் தோழன். அங்கு உங்களுக்கு வேண்டிய ஒருவராக மாற்றுருக்கொண்டு இந்திரன் எழுகிறான். உங்கள் தந்தையாக இருக்கக்கூடும் அது. இறங்கி ஊருக்குச் சென்று மணம் செய்துகொண்டு மனைவாழ்வு நாடு மூடா என்று அவர் சொல்வதே மெய்மை என்று உணர்க!” என்றான்.

முனிவன் ஒலிவட்டத்தைக் கடந்து அப்பால் சென்று மறைவது வரை குனிந்து அவன் சிரித்துக் கொண்டிருந்தான். பின்பு தள்ளாடும் நடையுடன் களைத்த உடலுடன் மலையடிவாரத்தில் தேவதாருக்கள் சூழ அமைந்திருந்த ஹிமவாகம் என்னும் சிற்றூரை சென்றடைந்தான். அங்கு ஒரு திருமண விழா நடந்து கொண்டிருந்தது. எடைமிக்க மயிராடையையும்

தோல்காலுறைகளையும் அணிந்த
இளையோர் முழவுகளையும் கொம்புகளையும் இசைத்தபடி
ஊர்ச் சதுக்கத்தில் நடனமிட்டுக் கொண்டிருந்தனர்.

வட்டவடிவ முற்றம் அது. அதைச் சூழ்ந்திருந்தன வட்டக்கூம்பு
வடிவிலான அவர்களின் குடில்கள். அவற்றின் மையத்து
உச்சியில் செந்நிறமும் வெண்ணிறமும்கொண்ட கொடிகள்
காற்றில் படபடத்தன. கால்கள் சீராக அமைய சுற்றிவந்து
ஆடுபவர்களுக்கு நடுவே மரத்தாலான பீடத்தில் மணமகனும்
மணமகளும் செம்மயிர்த் தோலாடையும்
வெண்மயிர்த்தொப்பியும் பெரிய காலுறைகளும் அணிந்து
அமர்ந்திருந்தனர். அவர்களின் தலையணியில் பெரிய
மலைப்பூக்கள் சூட்டப்பட்டிருந்தன.

அவ்வூரைச் சுற்றி தேவதாரு மரங்களை முட்கொடிகளால்
இணைத்துக் கட்டப்பட்ட வேலி இருந்தது. அர்ஜுனன் அதன்
மூங்கில் வாயில்படலைப் பற்றியபடி நின்று உள்ளே
பார்த்தான். அப்பால் காட்டெருது ஒன்றை தோலுரித்து
முக்காலியில் தலைகீழாகக் கட்டி எழாதெரிந்த அனலில்
சுட்டுக்கொண்டிருந்தனர். எருதின் உடலை திருப்பித் திருப்பி
காட்டி அனலில் ஊன் பொசுங்க வேகவைத்தனர். அருகே
அமர்ந்திருந்த நாய்கள் அர்ஜுனனின் நாற்றம் அறிந்து
குரைத்தபடி ஓடிவந்தன.

மரக்குடுவைகளில் நுரை புளித்து மேலெழுந்த கள்ளை
கொண்டுவந்து பரப்பிக் கொண்டிருந்தவர்கள் அவனை
நோக்கினர். ஓரமாக மென்மயிர்க் குவைகளென மயிராடை
அணிந்து அமர்ந்திருந்த குழந்தைகளும் முதியவர்களும் எழுந்து
நோக்கினர். கையில் ஊன்றிய நீண்ட கழிகளில் கட்டிய
சலங்கைகளுடன் ஆடிக் கொண்டிருந்தவர்களில் ஒருவன்

திரும்பி அர்ஜுனனை நோக்கி “பிச்சாடனன்” என்று உரக்க கூவினான். “கிராதன்!” என்றான் இன்னொருவன்.

அர்ஜுனன் இரு கைகளையும் தூக்கி உரக்க “நான் காலபைரவன்! இந்திரகீலத்திலிருந்து இறங்கி வருகிறேன். உங்களுக்கொரு செய்தியுடன் வந்துள்ளேன்!” என்றான். நடனமாடியவர்கள் முகம் கூர்ந்து நின்றனர். முழவும் மணியும் கொம்பும் ஓய்ந்தன. “யார்?” என்று கேட்டபடி அவர்களின் குலத்தலைவன் அருகே வந்தான். மென்மயிர்த்தொப்பியில் மலைக்கழுகின் இறகுகளை அணிந்து தோள்களில் கரடித்தோல் போர்த்தியிருந்தான். கையிலிருந்த நீண்ட கழி மீது அவன் கொன்ற புலியின் தலையோடு கோரைப்பற்களுடன் விழிகளென அமைந்த வெண்மணிகளுடன் சீறித்தெரிந்தது.

“யார் நீங்கள்?” என்றான் தலைவன். “செய்தி சொல்ல வந்த காலபைரவன்” என்றான் அர்ஜுனன். அர்ஜுனனின் தலையிலிருந்து சடைத்திரிகள் இடைவரைக்கும் தொங்கின. மண்ணும் சாம்பலும் கலந்த உடல் சிதையிலிருந்து எழுந்து வந்ததுபோல் இருந்தது. இடையில் அணிந்திருந்த புலித்தோல் கிழிந்து நைந்து திரிகளென தொங்கியது.

“உள்ளே வருக, காலபைரவரே” என்றான் ஊர்த்தலைவன். இருவர் ஓடி வந்து வாயிலைத் திறந்தனர். அவன் உள்ளே சென்றதும் ஊர்த்தலைவன் அவன் கால்களைத் தொட்டு சென்னி சூடி “இன்று எங்கள் குல மைந்தன் மணம்கொள்ளும் நாள். தங்கள் வாழ்த்து அவனுக்கு அமையவேண்டும்” என்றான்.

ஊர்மன்று நடுவே வந்து நின்ற அர்ஜுனன் கையை நீட்டி “ஊன்…” என்றான். அவர்களில் ஒருவன் வெந்து கொண்டிருந்த எருதின் தொடையிலிருந்து தசைப்பகுதியை சிறு கோடரியால்

வெட்டி எடுத்தபடி ஓடிவந்து அவனிடம் கொடுத்தான். மறுகையை நீட்டி “கள்” என்றான். மரக்குடுவைகளில் இருந்து மூங்கில் குவளைகளில் ஊற்றி அளிக்கப்பட்டது.

பசித்த வேங்கை என உறுமியபடி ஊனை உண்டு கள்ளை அருந்தியபின் கைகளை விரித்து பெருங்குரலில் “மண்ணவரே” என்று அவன் முழங்கினான். “மானுடரே, கேளுங்கள். உண்ணுங்கள், குடியுங்கள், புணருங்கள், கொல்லுங்கள், வென்று மேற்செல்லுங்கள். வாழ்வதற்கு அப்பால் வாழும் தெய்வமில்லை. இருப்பதற்கு அப்பால் இருப்பென்று ஒன்றுமில்லை. மகிழ்வதன்றி எய்துவது ஏதுமில்லை. இது தெய்வங்களின் ஆணை. இன்பம் ஒன்றே விழுப்பொருள். இதுவே நீலமலைகளின் செய்தி.”

கூடிநின்ற மலை மக்கள் தங்கள் குரலை உயர்த்தி “ஆம், அவ்வாறே” என்று கூச்சலிட்டனர். “முழவுகள் முழங்கட்டும்!” என்று கையை உயர்த்தி அவன் கூவினான். “கொம்புகள் பிளிறட்டும்...” துடித்தெழுந்த தாளத்துடன் இயல்பாக இணைந்துகொண்டு அவன் தாண்டவம் செய்யலானான்.

# கிராதம் - 16

**[ 22 ]**

மலைகளிலிருந்து இறங்கி சீர்நிலத்திற்கு வரும் வழியிலேயே அர்ஜுனன் அவன் மேலே செல்லும்போது விட்டுச்சென்ற ஒவ்வொன்றையும் திரும்ப பெற்றுக்கொண்டான். அவன் கைவிட்டுச் சென்ற இடங்களிலேயே அவை அவனுக்காக கல்லென உறைந்து தவம் செய்தன. நெடுந்தொலைவிலேயே அவன் காலடி ஓசை கேட்டு விழியொளி கொண்டு உடலில் உவகை அசைவுகளுடன் எழுந்தன. அவனைக் கண்டதும் கைவிரித்தோடி வந்து பற்றிக் கொண்டன.

முதலில் வந்தவள் ஓநாயின் முகம் கொண்டவளாகிய ஜடரை. மெல்லிய முனகல் ஓசையுடன் எழுந்து காற்றென வந்து அவன் உடலைத் தழுவி அவனை முத்தமிடத்தொடங்கினாள். குளிர்ந்த மூக்கின் முத்தங்களால் அவன் உடல் சிலிர்த்துக் கூசியது. அவள் வாயிலிருந்து வெம்மைகலந்த மூச்சு ஊன் மணத்துடன் எழுந்தது. அனலென அவன் வாய்க்குள் புகுந்து வயிற்றில் குடிகொண்டாள். அவன் முன்னால் நடந்தபோது உடலெங்கும் அவள் எரிவதை உணர்ந்தான்.

மூவேளை பசியென அவன் உடலில் அவள் எழுந்தாள். அவன் வாழ்ந்தகாலத்தை மூன்றென பகுத்தாள். அவன் உடலை

எரிவதும் அணைவதுமென இரு செயல் கொண்டதாக ஆக்கினாள். அவன் நோக்கிய அனைத்தையும் உண்ணத்தக்கதும் அல்லதுமாக பிரித்துக்காட்டினாள். அவன் கால்களில் ஆற்றலாகவும் கைகளில் விசையாகவும் எண்ணங்களில் ஒளியாகவும் ஆனாள்.

ஓநாயின் மங்கிய சிப்பிவிழிகள் கொண்டவள். இளநீல நீள்கூந்தல் பறக்கும் செந்நிற உடல்கொண்டவள். அவள் கொண்ட விழிகளை நோக்கி அவன் சொன்னான் "உன்னை விட்டுச்செல்லல் அரிது." அவள் சிரித்து "ஆம், இளையோனே! நானே இங்குள பருப்பொருள் அனைத்திற்கும் விழுப்பொருள் அளிக்கிறேன். பொருள் ஒவ்வொன்றும் சுவையென்றே முதன்முதலாக மனித நரம்புகளில் உணரப்படுகின்றன. அதன்படியே நன்று தீது அழகு அல்லது என ஆகின்றன. நானே முதலறிவை" என்றாள்.

"அன்னம் உடலென்றாகும்போது அதிலெழும் முதல் உணர்வு நானே. உடல் அன்னமென்றாகும்போது இறுதியாக மறைபவளும் நானே" என்றாள். "தேவி! நீ என்னுடன் இரு. இவ்வுலகனைத்தையும் சுவையென சமைத்து எனக்குப் பரிமாறு" என்றான் அர்ஜுனன். அவள் கனிந்த சிரிப்புடன் அவன் தலையை வருடி "நீ என்றும் எனக்கு இனிய மைந்தன்" என்றாள். "உன் நாவில் அஸ்தினபுரியின் மண்ணும் தேனும் கலந்த வடிவில் வந்து தொட்டு இனித்தபோதே நான் உணர்ந்தேன், உன்னை நான் கைவிடப்போவதில்லை என்று."

பிறகு வந்தவள் காமினி. அன்று மாலையில் ஒரு மரத்தடியில் சருகு மெத்தையில் அவன் துயின்று கொண்டிருந்தபோது அவள் மெல்ல வந்து அவன் அருகே அமர்ந்தாள். உடலின் மெல்லிய வெம்மையையும்

தோல்மணத்தையும் அவன் புலன்களுக்குள் வாழும் நுண்புலன் ஒன்று உணர்ந்தது. நன்கு உணர்ந்திருந்த அருகமைவு. ஆழ்குரலில் “நீயா?” என்று அவளிடம் கேட்டான். கையூன்றி அவள் அவன் மேல் மெல்ல குனிந்தாள். அவள் கருங்குழல்கற்றை அவன் முகத்தின்மீது சரிந்தது. “நான் தளர்ந்திருக்கிறேன்” என்று அவன் சொன்னான்.

“உயிர்கொண்ட அனைத்திலும் எரிய என்னால் இயலும்” என்று அவள் சொன்னாள். அவளுடைய திரண்ட முலைக்குவைகள் அவன் முகத்தில் இரு வெம்மலர்மொட்டுகள் என அழுந்தின. குழந்தைவிரல்கள் போல முலைக்காம்புகள் அவன் இதழ்களை வருடின. காமம் கொண்ட உடலின் வெம்மணம். காமத்தில் உருகும் தசைகளின் ஊன் மணம். அவள் உடல்வளைவுகள் அவன் மேல் பதிந்து அவன் உடல் இறுக்கத்தை அடைந்து குழைவுகொண்டன. நெளிந்துபரவிய கைகள் பதைப்புடனும் தவிப்புடனும் தேடித்தேடி அவனை வருடிச் சென்றன. பிறிதிலாதாகவேண்டுமென வெம்பல்கொண்ட கால்கள் அவன் கால்களை வளைத்துக் கொண்டன.

முதுமரம் முளைப்பசுமை சூடுவதுபோல தன் உடல் உயிர் கொள்வதை அவன் உணர்ந்தான். “நெடுநாளைக்குப் பின்…” என்று அவன் அவள் காதில் சொன்னான். “ஆம், நீண்ட நாளாகிறது. ஆனால் பெருமழை பெய்து குளிர்ந்து அணைந்த காட்டிலும் எங்கோ ஒரு மூங்கிலுக்குள் அனல் ஒளிந்திருக்கிறது” என அவள் அவன் செவிகடந்து நேராக சித்தத்துடன் உரையாடினாள். “ஆம்” என்று அவள் நெஞ்சிடம் முணுமுணுத்தான். அவள் முலைக்குவைக்குள் அழுந்திய உதடுகளின் அசைவு முத்தமென்றும் ஆகியது. முத்தத்தால் அவளிடம் பேசிக்கொண்டிருந்தான்.

அவள் கைகள் அவன் உடலில் சீற்றம்கொண்ட இரு நாகங்கள் போல முத்தமிட்டுச் சென்றன. அவை தொட்ட இடத்தில் எல்லாம் அவன் உடல் தளிர்த்து அனலிதழ்கள் எழுந்தன. “உயிர்” என்றான். “என்ன?” என்றாள். “உயிரை இப்படி உணர்ந்ததே இல்லை.” அவள் சிரித்து “உடலை அது மீட்டெடுக்கிறது” என்றாள். “ஆம், அருவிபெய்வதுபோல வந்திறங்குகிறது...” என்றான். “வானிலிருந்து” என்றாள். அவன் “ஆம்” என முனகினான். முனை கொண்டது அவன் உடல். அங்கு சித்தம் சென்று குவிந்தது. பின் அவன் உடலே அம்முனையென ஆகியது. உள்ளம் ஒற்றைச் செயலென ஆயிற்று. அவளை உடலுடன் இறுக்கி, தான் என்றாக்கி அப்பெருக்கில் திளைக்கத் தொடங்கினான்.

அவளை உண்ண விழைபவன்போல இதழ்களை கன்னங்களை நீள்கழுத்தை தோள்களை முலைக்குவைகளை கவ்வினான். “நீ உண்ணத்தக்கவள் என்று என் உடல் ஏன் அறிகிறது?” என்றான். “நான் ஜடரையின் தங்கை” என்று அவள் சொன்னாள். வியப்புடன் “நான் அறிந்ததில்லை” என்றான். “அவளை அறிந்த இதழ்கள் என்னையும் கண்டுகொள்கின்றன” என்று அவள் கூறினாள். மயங்கிச் சொல்லிழந்து சென்றுகொண்டே இருக்கும் அமிழ்வில் நெகிழ்ந்த குரலில் “இனியவளே, என்னுடன் இரு” என்று அர்ஜுனன் சொன்னான். “உடலணைவது வரை நரம்புகளில் வாழ்வேன். அங்கிருந்து மூலாதாரத்திற்குச் சென்று அனல்துளியென எஞ்சுவேன். தன்னுணர்வு இருக்கும் வரை உன்னை நான் விட்டுச் செல்வதில்லை” என்று அவள் சொன்னாள்.

பிறகு வந்தவள் வாக்தேவி. தொலைவில் எழுந்த அடுமனைப்புகையால் ஊர் ஒன்றின் அணுக்கத்தை உணர்ந்து

அவன் அதை நோக்கி சென்றான். எதிரே நீராடி ஈர உடையுடன் கையில் நீர்க்குடுவைகளுடன் இருவர் சொல்லாடிச் சென்றதை கேட்டுக்கொண்டே அவன் கடந்தான். அவர்கள் அங்கிருக்கும் குருநிலை எதிலோ கல்வி கற்கும் இளையவர். கற்றவற்றை தன்வயப்படுத்திக் கொள்வதற்கென மிகையாகப் பேசும் அகவை. ஒருவர் சொல்வதை மறுக்காவிடில் தன் இருப்பு நிறுவப்படுவதில்லை என்னும் வளர்நிலைக் காலம். அவர்கள் அவனை காணவில்லை, அவர்கள் உலகில் எவரும் சொல்லாகவே நுழையமுடிந்தது.

“வேதச் சொல் அழியாததென்று சொல்லும் நூல்களை ஐயுறுகிறேன். அதை அழிவற்றதென உணர்வது அழியும் மானுடரின் தன்னிருப்பே” என்றான் ஒருவன். “மானுடன் பிறந்திறக்கிறான். இப்புவி பிறந்திறக்கிறது. ஆதித்யர்கள் பிறந்திறக்கிறார்கள். விண்ணகமே பிறந்தழிகிறது. அழியாததென்று ஒன்று எங்கேனும் எவ்வண்ணம் இங்கிருக்க முடியும்?” இன்னொருவன் “இவை அனைத்தும் அழிந்து மீண்டும் பிறப்பதே அவ்வழிவிற்கும் மறுபிறப்பிற்கும் நடுவே மாறாது ஒன்று உள்ளதென்பதற்கு சான்று. அதுவே பிரம்மம்” என்றான். “பிரம்மத்தின் ஒலியென்பது வேதம். பிரம்மம் அழிவற்றது என்றால் வேதமும் அழிவற்றதே.”

“அழிவற்றது இருக்கலாம் இல்லையென்றுமிருக்கலாம். அது அதற்கே தெரியாதென்கின்றன வேதங்கள். இளையோரே, அழிவின்மையை நாடும் மானுட உள்ளத்தின் தேவைதான் என்ன? தீமையிலிருந்து நன்மைக்கு இருளிலிருந்து ஒளிக்கு என ஏங்கும் உள்ளம் ஏன் இறப்பிலிருந்து அழிவின்மை நோக்கி எழுகிறது?” என்று அர்ஜுனன் கேட்டான். “முதலிரண்டும்

உலகியல். மூன்றாவது எவ்வுலகுக்கான ஏக்கம்? அந்த மூன்றாம் வேண்டுதலுக்கான விடையென எழுந்ததா வேதம்?”

அவனை பித்தனென்று எண்ணியவர்கள்போல் விழி திருப்பாது அவர்கள் கடந்து சென்றனர். அர்ஜுனன் வியப்புடன் திரும்பி அவர்களைப் பார்த்தான். அவன் அவர்களிடம் குரல்கொண்டு பேசவே இல்லை. சொல்லுக்கு எதிர்ச்சொல்லென எழுந்தது அவன் சித்தச்சுழிப்பே. அழிவென்பது ஒவ்வொரு கணமும் தன்னில் இருந்தும் சூழ்ந்த பிறவற்றில் இருந்தும் வந்தடைவதனாலா மானுடன் அழிவின்மையை எண்ணிக் கொண்டான்? கடையப்படுகிறது பாற்கடல். அதில் கரைந்துள்ளது அமுதம். இங்கு ஒவ்வொன்றிலும் இருக்கும் உவகைப்பெருக்கு.

எத்தனை சொற்கள்! பொருளாக ஆகும் பொருட்டல்ல, பிறந்து குமிழியிட்டு கொப்பளிப்பதன் பேரின்பத்திற்காகவே இச்சொற்கள். பிறந்து வாடும் மலருக்குள் மலரென்று ஒன்று அழியாதிருக்கலாகும். சுருங்கி விரியும் காலப்பெருக்குக்குள் காலமென்று தன்னை நிகழ்த்தும் ஒன்று அழியாதிருக்கலாம். பொருள் கொண்டு பொருள் அளித்து பிறந்து இறக்கும் சொல்லுக்குள் சொல்லென்று வாழும் தெய்வம் என்றுமிருக்கலாம். ஒரு கையில் மின்னல். மறு கையில் மாமலர். இரு கைகளில் இசையாழ். ஏடும் ஆணியும். விழிமணிமாலை எனும் காலப்பெருக்கு.

எண்ணியதுமே அருகிலிருந்த வெண்மலரில் இருந்து அவள் எழுந்து அவன் அருகே வந்தாள். வெண்கலையாடை அணிந்தவள். “வணங்குகிறேன், தேவி” என்று அவன் சொன்னான். “உன் சித்தப்பெருக்கை மீண்டும் கண்டடைந்தேன். அது இறுதியாக அணைந்தபோது நீ விட்டுச்சென்ற சொல் அமுது” என்றாள். “அச்சொல்லை ஏந்தியபடி இங்கு நான்

உனக்காகக் காத்திருந்தேன்.” அவன் நினைவுகூர்ந்து “ஆம், அமுது” என்றான். அமுது அமுது என உள்ளம் சொல்லோட்டமாக மாறியது.

பிறந்த குழவி மண்படிந்து, வாய்குவித்து காற்றை உண்டு, தான் என அறிந்ததுமே வாய்திறந்து கூவி அழைப்பது அமுதுக்காக. அழிவின்மை அன்னையின் இருமுலைகளில் இருந்து ஊறி அதன் வாய்க்குள் சொட்டுகிறது. ஒவ்வொரு கணமும் என அழிவை அது உந்தி முன்னகர்த்துகிறது. ஆம், அதையே எண்ணிக் கொண்டிருந்தேன். அவ்வெண்ணத்துடன் இங்கொரு கல்லில் கால் தடுக்கி நிலைதடுமாறினேன். மீண்டபோது என்னிடம் சொற்சுழி இருக்கவில்லை. சொல்லிருந்த இடமெல்லாம் வெற்றுத் திசைவெளியே சூழ்ந்திருந்தது.

“அங்கிருந்து தொடங்குக!” என்று அவள் புன்னகைத்தாள். அர்ஜுனன் “அன்னையே, கைகால் நீள்கையில் தாய்முலைப்பால் நின்றுவிடுகிறது. பின்னர் உன் முலைப்பாலை மானுடன் அருந்தத் தொடங்குகிறான். உன் இரு ஊற்றுகளும் வற்றும்போதுதான் அழிவு வந்து அவனைத் தொடுகிறது. உள்ளத்தில் மூலையில் இருந்து இருள் எழுந்து தன்னுணர்வின் மேல் ஆணவத்தின் மேல் அறிவின் மேல் மெய்மையின் மேல் படரத்தொடங்குகிறது. அவன் விழிகள் ஒளி மங்குகின்றன. சொற்கள் கூரிழக்கின்றன. உடல் உள்ளத்தின் எடை தாளாது தளர்கிறது” என்றான் அர்ஜுனன். “முதிய மனிதர்களை பார்க்கிறேன். அவர்கள் சுமந்து செல்லும் எடை என்பது என்ன? தசைகளில் குடிகொண்ட இறப்பா? நனைந்து எடைமிகுந்த நினைவுகளா? வாழ்ந்து திரிந்த காலங்களில் சேர்த்த சொற்களின் பொருளின்மையா?

அன்னையே! உன் ஒழியாத முலைப்பாலை வாழ்வெல்லாம் உண்டுகொண்டிருப்பவன் இறப்பை வெல்லலாம் அல்லவா?"

"உன் சொற்சுழலுக்குள் மீண்டு வந்துவிட்டாய்" என்று அவள் சிரித்தபடி சொன்னாள். "இனி நீ செல்லும் தொலைவு அதிகம்." அவன் பெருமூச்சுடன் "சொல்க, உன் முலைப்பால் வற்றுவது எப்போது? உன் காம்புகளில் வேப்பம்சாற்றை நீ தடவிக் கொள்வது எப்போது? நாவூற அருகணையும் மைந்தரைப் பற்றி மெல்ல விலக்கி நீ முகம் சுளிக்கத் தொடங்குவது எந்த வயதில்?" என்றான்.

அவள் "ஒருபோதும் இல்லை" என்றாள். "ஆனால் அருந்த அருந்த என் முலைப்பால் கொழுமை கொள்ளும். எலிப்பாலென நீர்மை கொண்டு இளமைந்தனின் நாவைத் தொடுவது யானைப்பாலென செறிவடைகிறது. உண்ட பால் செரிக்காமல் மறுபாலுக்கு பசியெழுவதில்லை. இளையவனே, பசியின்மையால் என்னை விட்டு விலகுகிறார்கள் மானுடர்." அர்ஜுனன் "அன்னையே, என்னுடன் இரு! நானென என் சித்தம் உணரும் தருணம் வரை சொல்லென துணை வருக!" என்றான். அவள் அவன் நெற்றிமேல் வருடி "உன்னுடன் இருப்பேன். உன்னை நீ இழக்கும் கணத்திற்கு முன்பு வரை உன் நாவில் எழுவேன்" என்று சொன்னாள்.

பின்னர் எழுந்து வந்தாள் ஐஸ்வர்யை. அது சித்திரை மாதம். அச்சிற்றூரின் முகப்பிலேயே சரக்கொன்றை வடிவில் கிளிச்சிறைப்பொன் சூடி அவள் நின்றிருந்தாள். அச்சிற்றூரை அவன் கடந்து சென்றபோது கையில் வைத்திருந்த சிறுகொம்பை அங்கு வீசினான். அதன் கணுவொன்றிலிருந்து அவள் வேர் கொண்டாள். தொலைவிலேயே அவள் பூத்த

மஞ்சள் ஒளியை அவன் கண்டான். முகம் மலர்ந்து விழிவிலக்காது நோக்கியபடி அவளை நோக்கி சென்றான்.

நாணச்சிரிப்புடன் அவள் எழுந்து அவனை நோக்கி தளர்நடையிட்டு வந்தாள். பொன்னிற ஆடை உலைந்தது. விழிகள் நிலம் நோக்க இதழ்களில் எழுந்த புன்னகையை அடக்கியபடி "வருக, இளையவரே!" என்றாள். "எப்படி உன்னை மறந்திருந்தேன்?" என்று அவன் கேட்டான். "வாழ விழைவுகொண்ட எவரும் என்னை மறப்பதில்லை" என்று அவள் சொன்னாள். "மனை துறந்து பொன் விலக்கி காடேகுபவர்களுக்குக்கூட அங்கே பசுமையென்றும் மலர்வண்ணமென்றும் முகிலொளி என்றும் காட்சியளித்து சூழ்ந்துகொள்வேன்."

அவன் கைநீட்டி அவளுடைய மெல்விரல்களை தொட்டான். விரல்கள் பின்னியதும் அவள் உடல் விதிர்ப்பு கொண்டது. அவள் விழிதூக்கி அவன் விழிகளை சந்தித்தாள். "ஆண்டுதோறும் மலர்கொண்டு ஒவ்வொரு மலராக உதிர்த்து வெறுமை ஈட்டி மீண்டும் தவமிருந்தேன்" என்றபோது அவள் கண்களில் நீர்மை படர்ந்தது. முகம் சிவந்து கழுத்திலும் தோளிலும் நீல நரம்புகள் துடித்தன. முலைக்கூம்புகள் எழுந்தமைய "கனிந்தபின் காத்திருப்பது பெருந்துயரம்" என்றாள்.

"இனி எப்போதும் என்னுடன் இரு" என்று அவன் சொன்னான். அவள் கண்ணீருடன் புன்னகைத்து முகம் தூக்கி "ஆம் இளவரசே, உங்களுக்காகக் காத்திருக்கின்றன அணிநகர்கள், நிறைகருவூலங்கள், மணிமுடிகள், குருதி தோய்ந்த வெற்றிக் கொடிகள். என்றும் உங்களுடன் இருப்பேன்" என்றாள். அவளை இடை வளைத்து அணைத்து தன் நெஞ்சுடன் பொருத்திக்கொண்டான். குனிந்து அவள் சிறிய

இதழ்க்குமிழ்களில் முத்தமிட்டான். கை வளைத்து அவன் கழுத்தைத் தழுவி அவன் உடலுக்குள் புகுந்துவிடுபவள்போல ஒட்டிக்கொண்டாள். அவள் இதயத்துடிப்பை, உடலெங்கும் பரவிய குருதிக் குழாய்களின் அதிர்வை தன் உடலில் என அவன் உணர்ந்தான். அவளுள் ஓடும் ஒவ்வொரு சொல்லையும் அறிந்தான்.

"ஏழழகு என்று உன்னை ஏன் சொல்கிறார்கள் என்று இன்று அறிந்தேன்" என்றான். "ஏன்?" என்று சிரிப்புதெறித்த விழிகளுடன் அவள் கேட்டாள். "நீ சொல்! ஏன் உனக்கு ஏழு அழகு?" அவள் நாணத்துடன் "நான் அறியேன். கவிஞர் என்னை நிலமகள், நீர்மகள், பொன்மகள், மலர்மகள், வெற்றிமகள், கூலமகள், புலரிமகள் என கொண்டாடுகிறார்கள்" என்று அவள் சொன்னாள். அவன் "ஏழுமுறையும் நீ வெற்றித்திருமகள். வெற்றி அன்றி மங்கலம் பிறிதொன்றில்லை" என்றான்.

சிரித்தபடி "இதை உணர அந்த மலை அனைத்தையும் ஏறியாகவேண்டுமா?" என்றாள். "அரிதொன்றை உணர அதை ஒரு முறை முற்றும் துறந்து பார்ப்பது உகந்தது" என்று அவன் சொன்னான். சிரித்தபடி அவன் தோளை அறைந்து "துறந்து சென்றீர்கள். அது பிறருக்கு அளிக்கும் துயரை ஒரு கணமேனும் எண்ணினீர்களா?" என்றாள். "அதுவும் நன்றெனத் தோன்றுகிறது. துயரால் நீ கனிந்திருப்பாய், பிரிவு நம்மை அகற்றி இணைக்கிறது" என்றான்.

அச்சிற்றூரிலேயே அன்றிரவு தங்கினான். நீராடி உணவருந்தி ஓய்வுகொண்டான். நள்ளிரவில் அவன் குடிலுக்கு வெளியே மெல்லிய பெண்குரல் விம்மலோசையை அவன் கேட்டான். எழுந்து கதவைத் திறந்து வெளியே வந்தபோது இடப்பக்கம் சுவர் ஓரமாக ஒண்டி உடல்குறுக்கி அமர்ந்திருந்த

பெண்ணைப் பார்த்தான். கரிய உடையணிந்து கருங்குழல் மண்ணில் பரவி வேர்வலைபோல கிடக்க விழிகளின் மின்னால் தன்னைக் காட்டினாள். “யார் நீ?” என்றான். “தெற்கிலிருந்து வருபவள். உங்களுக்கு அணுக்கமானவள். என் பெயர் கிராதை” என்றாள்.

“நான் உன்னை அறிந்ததில்லை” என்றான் அர்ஜுனன். “இளையவரே, நூறுநூறு தருணங்களில் உங்கள் அருகணைந்து நின்றவள் நான்” என்றாள். “என்னை அறியாது எவரும் இப்புவியில் வாழமுடியாது.” அவன் “உன் முகத்தை நான் கண்டதில்லை” என்றான். “என்னை முகமெடுத்து முகம்நோக்குபவர் மிக அரிது. விழிமூடி உங்கள் உடலின் இடப்பகுதியிடம் கேளுங்கள், என்னை அது அறிகிறதா என?” என்றாள்.

அவன் விழிமூடி தன் இடப்பகுதியை கூர்ந்தான். நன்கறிந்த ஒருத்தி என்றது தோள். திகைப்புடன் திறந்து “ஆம், அறிந்திருக்கிறேன்” என்றான். “எதை எண்ணினீர்கள்?” என்றாள். “ஒரு போர்த்தருணம்” என்று சொன்னபோது அவன் குரல் தணிந்திருந்தது. “சொல்க!” என்றாள். “நான் துருபதனை வென்று சிறுமைசெய்த தருணம்” என்றான். அவள் சிரித்தபடி எழுந்து “பேராற்றலை தோளில் அறிந்தது அப்போது அல்லவா? எந்த எல்லையையும் கடக்கமுடியுமென உங்களை உணர்ந்தீர்கள். அங்கிருந்தல்லவா தொடக்கம்? உங்கள் கையில் வில்லெழும்போதெல்லாம் அத்தருணம் உள்ளத்தில் மின்னிச்செல்வதுண்டு அல்லவா?” என்றாள்.

“ஆம்” என்றான். “அன்று உங்களை தழுவிக்கொண்டேன். உங்கள் விழிகளுக்கும் தோன்றினேன்.” அவள் மெல்ல முன்னகர்ந்தபோது சாளரம் வழியாக வந்த விளக்கொளி

அவள்மேல் விழ அவள் முகத்தை நன்கு கண்டான். “ஆம், நான் மறக்காத முகம்” என்றான். “நீங்கள் அறிந்த முதல்பெண் நான் அல்லவா?” அவன் தலைகுனிந்து உடல்கூச “ஆம்” என்றான். “நான் பரத்தையர் தெருவில் அந்தச் சிற்றில்லத்தின் முன்னால் நின்று உங்களை அழைத்தேன். என் விழிகளை சந்தித்த கணம் உங்கள் உள்ளம் கூசியது. ஆனால் உடல் காமம் கொண்டு எழுந்தது. தடுமாறும் கால்களுடன் என் இல்லத்திற்குள் நுழைந்தீர்கள்.”

“போதும்” என்று அவன் சொன்னான். அவள் அதை கேட்காததுபோல் தொடர்ந்தாள் “என்னை தொடத் தயங்கி நின்றிருந்தீர்கள். நீங்கள் மிக இளையவர் அன்று. உங்களை அணுகி அன்னையென விழி கனிந்து உங்கள் தலையைத் தொட்டு குழலை வருடினேன். வேண்டாம் என்பதுபோல தலையை அசைத்தீர்கள். உங்கள் தோள்களை தழுவினேன். என் பெருத்தமுலைகளால் உங்கள் மார்பை அழுத்தினேன். உங்கள் தவிப்பு சினமென்றாகியது. ஆனால் உடல் காமம்கொண்டெழுந்தது.” அர்ஜுனன் “வேண்டாம்…” என்றான். “என்னைப் புணர்பவர்கள் தாளாவெறுப்பின் உச்சத்தில் அதை காமம் என ஆக்கிக்கொண்டவர்கள். ஆகவே ஆற்றல் மிக்கவர்கள்.” அவன் மேலும் குரலிறங்க “என்ன வேண்டும் உனக்கு?” என்றான்.

“நான் உங்களைத் தேடி காத்திருந்தேன். என்னை இங்கு விட்டுச்சென்றீர்கள்.” அவன் “இங்கா?” என்றான். “ஆம், இந்தச் சிற்றூர் வரும் வழியில் நின்று அங்கு பால்குடம் ஏந்திச்சென்ற ஆய்ச்சியிடம் பால் அளிக்கும்படி ஆணையிட்டீர்கள். அவள் அஞ்சி குடத்தை வைத்தாள்” அவள் சொன்னாள். “அந்த

இடத்திலிருந்து நான் இவ்வூருக்குள் புகுந்துகொண்டேன். என்னால் மானுடருள்ள இடத்திலேயே வாழமுடியும்.”

அவன் அவளை நோக்கியபடி நின்றான். கொழுவிய கன்னங்கள், சிறிய கூர்விழிகள், குவிந்த உதடுகள், உருண்டபெருமுலைகளுடன் பருத்த தோள்கள். பசுபோன்ற பெண். அத்தனை ஆண்டுகளுக்குப்பின் அதே மாறாத்தோற்றத்துடன். “அவள் என்ன ஆனாள்?” என்றான். “இருக்கிறாள். முதுபரத்தையருக்குரிய வாழ்க்கை” என்றாள். “அன்றே அரசியின் படைகளால் அவள் அஸ்தினபுரியில் இருந்து துரத்தப்பட்டாள். அவளுக்கு அளிக்கப்பட்ட செல்வத்தை அணுக்கர் பிடுங்கிக்கொண்டனர். சிந்துவைக் கடந்து கூர்ஜரம் சென்றாள். அங்கு பரத்தைமையில் உழன்றாள். முதுமைகொண்டாள். நோயுற்றாள்.”

“அவளை அழகியெனக் காட்டியது என் மாயம். அது இன்று அவளை புண் என சீழ் என சிக்கு என அழுகல் என கெடுமணம் என சூழ்ந்திருக்கிறது. அங்கு ஒரு அழுக்கோடை அருகே மட்கிய மரவுரியில் படுத்திருக்கிறாள். அவளுக்கு அருகிருக்கும் சண்டிகை ஆலயத்திலிருந்து உணவளிக்கிறார்கள்.” அவன் “போதும்!” என்றான். “அவள் உடலில் இருந்து சலமும் நீரும் வழிந்தோடுகின்றன. நீ மகிழ்ந்த அவள் முலைகள் அழுகி கிழிந்துள்ளன.” அவன் உரக்க “போதும்!” என்றான்.

“நீ தவிர்ப்பவற்றால் ஆனவள் நான்” என்றாள். “ஆனால் நான் இல்லாது உனக்கு போர்வெற்றிகள் இல்லை. இளையவனே, நானே ஆற்றல். என்னை அருகமைப்பவர்களே தங்கள் உள்ளமும் இப்புவியின் நெறிகளும் அமைக்கும் எல்லைகளை கடக்கமுடியும். வென்று தலைநிமிர்ந்து புதிய நெறிகளை

அமைக்கமுடியும். அவர்களையே தெய்வமென்று வழிபடுகிறது மானுடம்.” அர்ஜுனன் தலையை இல்லை என அசைத்தான்.

“பிற நால்வரையும் நீ அடையவேண்டுமென்றால் நான் உன்னுடன் இருந்தாகவேண்டும்” என்றாள் அவள். அவன் கைகள் ஓய்ந்து கிடக்க தோள்கள் தொய்ந்து நின்றிருந்தான். “சொல், தெரிவு உன்னுடையது” என்றாள் அவள். அவன் பெருமூச்சுவிட்டான். “முடிவு கொள்!” என்றாள். அவன் விழிகளைத் தாழ்த்தியபடி பதுமையென கைநீட்டி அவள் கைகளை பற்றிக்கொண்டான்.

# கிராதம் - 17

**[ 23 ]**

முந்தையநாள் அந்தியில் தோளில் புரண்ட புழுதிபடிந்த திரிசடைகளும் செம்பித்து சடைக்கத்தொடங்கிய நீண்ட தாடியும் தன்னுள் ஆழ்ந்து நோக்கிழந்தவை போலிருந்த விழிகளும் சற்றே தளர்ந்த நடையுமாக தூமக்கிரகம் என்னும் அச்சிற்றூரின் முள்மரக்கோட்டை வாயிலில் வந்து நின்று “அயலவன் நான். ஒருநாள் தங்க ஒப்புதல் கோருகிறேன்” என்று கூறி நின்ற அர்ஜுனனுக்கும் அவர்கள் அளித்த எல்லைச்சிறுகுடிலில் காலையில் எழுந்து வெளிவந்த அர்ஜுனனுக்கும் இருந்த வேறுபாட்டை அவனைக் கண்ட ஒவ்வொருவரும் உணர்ந்தனர்.

தருக்கி நிமிர்ந்த தலையும் எதிரே வருபவரை நோக்காமலேயே அளவிடும் பார்வையும் மறுத்துரை கேட்க விழையாத கூரிய சொற்களுமாக அவன் குருதிமேல் நடந்து அரியணை அமர்ந்து ஆளும் அரசன் போலிருந்தான். காலையில் அவனுக்கு

இன்நீருடன் வந்த அச்சிற்றூரின் ஊர்ப்பணியாளனை தாழ்ந்த முழவொலிக் குரலால் அருகழைத்து "நான் நீராடி முடிசீரமைக்க வேண்டும். நறுமண நீரும் முடிதிருத்துபவனும் சித்தமாக இருக்கட்டும்" என்று ஆணையிட்டான்.

ஆணைகளை இயல்பாக இடுபவர் அதற்குரிய குரலை அடைந்துவிட்டவர். அக்குரலே பணியாளனை உடல் வளைத்து "ஆணை" என்று சொல்லவைத்தது. "விரைக!" என்று அர்ஜுனன் சொன்னான். இன்நீரை அருகே வைத்துவிட்டு அவன் பாய்ந்து ஊர்த்தலைவரிடம் சென்று "நீராட நறுமணநீரும் முடிதிருத்துபவனும் சித்தமாக இருக்க ஆணையிட்டிருக்கிறார்" என்றான். ஊர்த்தலைவர் "யார்?" என்றார். "நேற்று வந்தவர். அவர் அரசர்" என்றான் பணியாளன். "எப்படி தெரியும் உனக்கு?" என்றபடி ஊர்த்தலைவர் எழுந்தார்.

ஊர்மன்றில் அவருடன் சொல்லாடிக் கொண்டிருந்த குலமூத்தவர்கள் மூவரும் உடன் எழுந்தனர். "ஐயமே இல்லை, அவர் பேரரசர். படைகளை சொற்களால் நடத்தக்கற்றவர்" என்றான் பணியாள். "நீ இதற்கு முன் பேரரசரை பார்த்திருக்கிறாயா?" என்றார் ஒருவர். "பார்த்ததில்லை. ஆனால் தன்னை குடிமகனாக உணரும் ஒவ்வொருவரும் பேரரசர்களை புரிந்துகொள்ள முடியும்" என்றான் பணியாளன். "சிம்மத்தின் குரலை மான்கள் அறியும் என்று ஒரு பழமொழி உண்டு" என்றார் ஒரு குலமூத்தார்.

ஊர்த்தலைவர் நீராட்டுக்கும் முடிதிருத்துவதற்கும் ஏற்பாடுசெய்ய தன் இளையோருக்கு ஆணையிட்ட பின் "அவருக்கு காலை உணவென எது?" என்று கேட்டார். பணியாள் "அறியேன். எதுவாயினும் அது அரசர்களுக்குரிய உணவு" என்று சொல்லி வெளியேறி கொல்லைநோக்கி ஓடிச்சென்றான்.

“நாமே சென்று பார்த்துவிடுவோம். யார் என்று அவரிடமே கேட்போம்” என்றார் குலமூத்தார் ஒருவர்.

அவர்கள் விருந்தினர்குடிலை அடைந்தபோது அங்கு நின்றிருந்த மூங்கில் ஒன்றை வெட்டி கூர்த்து அம்புகளை செய்துகொண்டிருந்த அர்ஜுனனைக் கண்டு தயங்கினர். அருகே ஒரு மரத்தில் மாட்டப்பட்டிருந்தது காண்டீபம். மெல்லிய குரலில் “நேற்று அவரைப் பார்த்தபோதே இந்த வில் அரிதானது என்று எண்ணினேன்” என்றார் குலத்தலைவர் ஒருவர். “எப்படி?” என்று இன்னொருவர் கேட்டார். “பார்வைக்கு பழைய மூங்கிலால் செய்யப்பட்ட எளிய வில் என்று தோன்றுகிறது. எந்த வேடனும் கைக்கொள்ளத்தக்கது. ஆனால் அதன் கணுக்களை பாருங்கள்! மும்மடங்கு பெரிதாக இழுத்து நீட்டுவதற்குரியது அது. மூங்கிலால் ஆனதல்ல. அரியதோர் உலோகத்தால் ஆனது.”

“இடக்கையில் எளிதாக அவர் அதை வைத்திருப்பதைப் பார்க்கையில் எடையற்றதென்று தோன்றியது. ஆனால் ஒருமுறை அதை மண்ணில் ஊன்றி அவர் எடுத்தபோது விழுந்த தடத்தைப் பார்த்தேன். நம்மால் இருகைகளாலும் தூக்கமுடியாத அளவுக்கு எடைகொண்டது.” அச்சத்துடன் “யார் அவர்?” என்றார் இன்னொருவர். “எனது எண்ணம் பிழையற்றதென்றால் காடுபுகுந்த பாண்டவர்களில் இளையவர்.”

பிற அனைவரும் அவரை நோக்கி திரும்பி “அர்ஜுனரா?” என்றனர். “ஆம்” என்றார். “அவரா நம் சிற்றூருக்கு வந்திருக்கிறார்?” என்று ஒருவர் வியந்தார். “மெல்ல” என்றார் இன்னொருவர். “நான் அவ்வாறு சொல்லவில்லை. ஒருவேளை அவர் அஸ்வத்தாமனாக இருக்கலாம். ஜயத்ரதனாகக்கூட

இருக்கலாம். கர்ணன் அல்ல. அவர் மிக உயரமானவர் என்று கேட்டிருக்கிறேன்.”

“அர்ஜுனர்தான்” என்றார் குலத்தலைவர். “எப்படி தெரியும்?” என்று ஒருவர் கேட்டார். “நேற்று அவரை முதற்கணம் பார்த்தபோதே என் உள்ளத்தில் அவ்வெண்ணம் வந்து சென்றது. அது எவ்வாறு இயலும் என்று அதை அப்போது விலக்கித் தள்ளினேன். இப்போது உறுதியாயிற்று.” அவர்கள் இணைந்து பெருமூச்சு விட்டனர். “அவர் அர்ஜுனர் என்றால் நம் ஊர் இனி எவரையும் அஞ்சுவதற்கில்லை. வில்லவர்கோன் கால் பட்ட மண்ணை பிறர் எண்ணவும் அஞ்சுவர்” என்றார் ஊர்த்தலைவர். “ஆம்” என்றனர் அவர்கள்.

அவர்கள் வணங்கியபடி அணுக அர்ஜுனன் திரும்பி “நான் இன்றே இச்சிற்றூரிலிருந்து கிளம்புகிறேன், மூத்தவர்களே. இங்கு எனக்கு அளிக்கப்பட்ட ஏற்புக்கு நன்றி” என்றான். “அது எங்கள் நல்லூழ்” என்றார் குலத்தலைவர். “பாண்டவகுலத்து இளவரசர் இச்சிற்றூரில் ஒருநாள் தங்கினார் என்பதை எங்கள் தலைமுறைகள் நினைவில் நிறுத்தும். இனி இந்தச் சிறுகுடில் எங்கள் ஆலயங்களில் ஒன்று.”

அர்ஜுனன் விழிகளில் எந்த மாற்றமும் தென்படவில்லை. அம்புகளை கூர் செதுக்கி அம்புத்தூளி நோக்கி எறிந்தபடி “ஆம். நான் இங்கு வர நேர்ந்தது” என்றான். “இங்கிருந்து தாங்கள் செல்ல விழையும் இடம் எதுவோ? அதற்கு நாங்கள் என்ன செய்ய வேண்டும்? அதை செய்கிறோம்” என்றார் குலத்தலைவர். “எங்கு செல்ல வேண்டுமென்று நான் இன்னும் முடிவெடுக்கவில்லை. நான்கு திசைகளும் என்னைச் சுற்றி திறந்துள்ளன. நான்கையும் நான் வென்றாக வேண்டும். முதல் திசை எதுவென்று எண்ணிக் கொண்டிருக்கிறேன்” என்றான்.

ஒருவர் “அதிலென்ன ஐயம்? தங்கள் தந்தையின் திசையாகிய கிழக்கு” என்றார். அர்ஜுனன் அவரை பொருளில்லா நோக்குடன் திரும்பி நோக்கிவிட்டு பிறிதொரு அம்பை கூர் தீட்டினான். இரண்டு இளைஞர்கள் வந்து வணங்கி “அரசே, இளவெந்நீர் காத்திருக்கிறது. நீராட்டுக்குரிய அனைத்தையும் எடுத்து வைத்துவிட்டோம். முடிதிருத்துபவன் காத்திருக்கிறான்” என்றனர். “நன்று” என்றபடி அர்ஜுனன் திரும்பி நடந்தான்.

குலமூத்தாரில் ஒருவர் “அந்த வில்லை ஒருமுறை தொட்டுப்பார்க்கவேண்டும் என்று என் விருப்பம்” என்றார். “எடுத்துப்பாருங்கள்! அதற்கென்ன?” என்றார் இன்னொருவர். “பிழையாக ஆகிவிடாதல்லவா?” என்றார் மூன்றாமவர். குலத்தலைவர் “மரத்திலிருந்து சரிந்தது என்று சொல்வோம். எடுத்துப்பாருங்கள், நாமும் அதை தொட்டோம் என்பதே நாளை நம் இளையோருக்கு கதையாக சொல்லத் தக்கதல்லவா?” என்றார்.

அவர்கள் ஆர்வமும் பதற்றமுமாக ஒருவரை ஒருவர் நோக்கிக்கொண்டனர். “அது ஒரு தெய்வம். இப்பாரதவர்ஷத்தை வென்று திசைதிருப்புவதற்கென்று மண்ணிலெழுந்தது என்கின்றனர் சூதர்.” ஒருவர் சென்று மரத்தில் தொங்கவிடப்பட்டிருந்த அந்த வில்லைப்பற்றி தூக்க முயன்றார். அவர் கைகளிலும் கழுத்திலும் தசைநார்கள் இழுபட்டன. “என்ன?” என்றார் இன்னொருவர். “எடை, இத்தனை எடையிருக்கும் என்று எண்ணவேயில்லை” என்றார்.

“அது வேண்டுமென்றே தன் எடையை கூட்டிக் கொள்கிறதா?” என்று இன்னொருவர் சென்று அவருக்கு உதவினார். “எடை மாறிக்கொண்டே இருக்கிறதா?” இருவரும் அதைத் தூக்கி அருகே வைத்தனர். நடன மங்கையென உடல் வளைத்து

சிறுவிம்மலோசையுடன் அது நிமிர பிடித்திருந்த இருவரும் இருதிசைகளிலாக நிலைதடுமாறி விழுந்தனர். அவர்கள் மேல் சரிந்து விழுந்து அவ்விசையிலேயே துள்ளிப் புரண்டு அப்பால் சென்றது.

கையூன்றி எழுந்து “இது உயிருள்ளது” என்றார் ஒருவர். “இளம்புரவியென துள்ளுகிறது” என்றார் மற்றவர். “அதற்குள் நாமறியா தெய்வங்கள் குடிகொள்கின்றன” என்று குலத்தலைவர் சொல்ல ஒருவர் பின்னடைந்தபடி அஞ்சிய விழிகளுடன் “அது நம் சொற்களை கேட்டுக்கொண்டிருக்கிறது” என்றார்.

“அதில் வாழும் தெய்வங்கள் நாம் தொடுவதை விரும்பவில்லை போலும்” என்றார் ஊர்த்தலைவர். இளையவனொருவன் “அது கலிங்கச் சிற்பிகளின் நுண் பொறி. அதற்குள் நாமறியாத இழுவிற்கள் உள்ளன. அவற்றை அறியாதவர் அவ்வில்லை ஏந்த முடியாது” என்றான். “இதை யார் எடுத்து திரும்ப வைப்பது? நாம் அதைத் தொட்டதை அவர் அறிந்தால் சினம் கொள்வார்” என்றார்.

“அது விழுந்துவிட்டதென்றே இருக்கட்டும்” என்று ஒரு முதியவர் சொன்னார். “அவர் நீராடி வரட்டும். உணவருந்தட்டும். கிளம்புகையில் தலைவணங்கி விடைகொடுப்போம்” என்றார். பின் நிரையில் எவரோ “அவர் இன்றே கிளம்புகிறார் என்பது நன்று” என்றார். அனைவரும் அவரை நோக்கி திரும்பினர். “நான் அவர் விழிகளைப் பார்த்தபின் சொல்கிறேன். கொல்லவரும் புலியின் நோக்கு அவற்றில் உள்ளது. நம்மை அது அறிந்திருக்கும் என்று தெரியும். ஆனால் அவ்விழிகள் நம்மை நோக்காது” என்றார் அவர்.

அங்கிருந்த அனைவரிடமும் மெல்லிய அமைதியின்மை ஒன்று பரவியது. “நாம் இம்மலைக்காட்டுக்குள் ஒளிந்திருக்கும் ஒரு சிற்றூர்மாந்தர். பெரியவை எவற்றையும் நாம் அறிந்ததில்லை. நமது தெய்வங்களும் சிறியவையே. அஞ்சுவது ஒன்றே நாம் அறிந்தது. நாம் எதற்கு இதைப்பற்றியெல்லாம் பேசவேண்டும்?” என்று குலமுதியவர் ஒருவர் சொன்னார். “யானை கடந்து சென்றால் நாணல்கள் சரிவதில்லை.” பெருமூச்சுடன் “ஆம்” என்றார் ஊர்த்தலைவர்.

அர்ஜுனன் சடைகளை வெட்டி அகற்றி, தாடி திருத்தி, மீசையை மெழுகிட்டு கூர்மைப்படுத்தி நீராடி புதிய மான் தோலாடை இடையில் அணிந்து ஊர்மன்றுக்கு வந்தபோது அங்கு அச்சிற்றூரின் மக்கள் அனைவரும் கூடியிருந்தனர். குழந்தைகளை இடையிலேந்திய பெண்கள் உடல் நெருக்கி கைகளால் ஒருவரை ஒருவர் பற்றிக் கொண்டு ஒற்றை உடலென நின்றனர். அவர்களின் உள்ளமும் ஒற்றைப்பெருக்கென சென்றது.

அவன் உள்ளே நுழைந்ததுமே அத்தனை விழிகளும் சென்று அவன் உடல்மேல் பதிந்தன. உடல்கள் முறுக்கப்பட்டவைபோல அசைய பெருமூச்சுகள் ஒலித்தன. அவன் நடந்து மன்றுக்கு வந்து அங்கு போடப்பட்டிருந்த புதிய மரவுரி விரிக்கப்பட்ட இருக்கையில் அமர்ந்ததும் ஒற்றை நீள்மூச்சு எழுந்து மெல்ல உடல் தளர்ந்தனர் பெண்டிர்.

அன்னையரின் உள்ளத்தை எவ்வண்ணமோ உணர்ந்து அவர்கள் இடையிலிருந்த ஆண் குழவிகள் ஓசையிட்டன. அன்னையரின் கன்னங்களைப் பிடித்து தங்களிடம் திருப்ப முயன்றன. இடைகளில் கால்களை உதைத்து எம்பிக் குதித்தன. அர்ஜுனனை நோக்கி கைநீட்டி நாதிருந்தாக் குரல் எழுப்பின.

அன்னையர் அவற்றை மெல்ல அடித்தும் இறுக்கிப் பிடித்தும் “ஓசையின்றி இரு” “அமைதி கொள்” என்று ஆழ்குரலில் அடக்கினர். அச்சொல்லிலும் தொடுகையிலும் இருந்த அயல்தன்மையால் குழந்தைகள் மேலும் சினம் கொண்டு ஓசையிட்டன. அன்னையர் அவற்றை அதட்டுவதும் கன்னியர் திரும்பி விழியுருட்டி அடக்குவதும் கலந்து பெண்கள் நிரையே கலைந்து ஒலித்தது.

குலமூத்தார் ஒருவர் திரும்பி “என்ன அங்கு ஓசை? அமைதி” என்றார். அனைவரும் குழவிகளை அவரை நோக்கித் திருப்பி “பார், தாத்தா உன்னை திட்டப்போகிறார்” என்று மிரட்டினர். குழந்தைகள் அவரை அரைக்கணம் நம்பிக்கையின்மையுடன் நோக்கியபின் மீண்டும் அர்ஜுனனையே பார்த்தன. அப்போதுதான் விழிஒளி கொண்ட குழந்தைக்குக் கூட அங்கு எவரை நோக்க வேண்டுமென்று தெரிந்திருந்தது.

அர்ஜுனனுக்கு இருபக்கமும் ஊரின் குலமூத்தார் நிரை வகுக்க அப்பால் இளைஞர்கள் கைகள் கட்டி நின்றனர். அர்ஜுனன் முன் உயரமற்ற பீடத்தில் மரவுரி விரிக்கப்பட்டிருந்தது. ஊர்த்தலைவர் “இன்னுணவு கொள்க, அரசே!” என்றார். அவன் தலையசைத்ததும் தட்டில் சுட்ட கிழங்கும் தேனும் எண்ணையில் பொரித்த ஊனும் இலையில் பொதிந்து ஆவியில் வேகவைக்கப்பட்ட அப்பங்களும் மூங்கில் குவளை நிறைய மஞ்சளிட்டு கொதிக்க வைக்கப்பட்ட பாலும் பரிமாறப்பட்டது.

“அருந்துங்கள், அரசே! எங்கள் இச்சிற்றூரில் பேரரசர்களுக்குகூட இவ்வெளிய உணவையே அளிக்க முடியும்” என்றார் ஊர்த்தலைவர். அர்ஜுனன் மறுமுகமன் சொல்லாமல் அதை உண்டான். அவன் உணவுண்பதை நோக்கியபடி அவர்கள்

அசைவற்று நின்றனர். அவ்வப்போது வளையொலியும் ஆடையொலியும் மூச்சுக்கசங்கலும் மென்குரல் முனகல்களும் எழுந்துகொண்டிருந்தன.

ஒவ்வொருவர் உள்ளத்திலும் ஒற்றை எண்ணமே ஓடிக்கொண்டிருந்தது. இவன் இளைய பாண்டவன் அர்ஜுனன். இளமை நாள் முதல் அவர்கள் கதைகளில் கேட்டறிந்தவன். சிம்மத்துடன் ஆடிய பரதனுக்கும் ரகுகுல ராமனுக்கும் அனல்குலத்து பரசுராமனுக்கும் துவாரகையின் இளைய யாதவனுக்கும் உரிய உலகில் வாழ்பவன். ராவணனும் இரணியனும் இவனுடன் வாழ்பவர்கள்.

அப்படியென்றால் கதைகளில் வாழ்பவர்கள் அனைவரும் உடல் கொண்டவர்களே! கால் கொண்டு நடந்து கை கொண்டு செயலாற்றி கண்முன் வந்து அமரத்தக்கவர்களே! அவை பொய்யல்ல, அவர்கள் ஆற்றிய
குருதிப்பெருக்கெழும் பெரும்போர்கள், விண்ணும் மண்ணும் வென்று கடந்துசெல்லும் மாயப்பயணங்கள் அனைத்தும் உண்மை. அவர்களின் எரியெழும் உளக்குமுறல்கள், வஞ்சங்கள், அழியாத்துயர்கள் அனைத்தும் நிகழத்தக்கவையே. தேவர்களும் அசுரர்களும் மூன்று தெய்வங்களும் அனைத்தும் அந்த ஊர்மன்று போல் அங்கிட்ட பீடம் போல் உண்மையானவை.

அவற்றின் மேல் அமர்ந்திருக்கும் அந்த மனிதன் இருகைகளையும் விரித்துச் சிறகாக்கி விண்ணில் எழக்கூடும். வெண்புகையென காற்றில் பரவிச் செல்லக்கூடும். வெறுமொரு சொல்லென எண்ணமென ஆகி அங்கு எஞ்சவும் கூடும். தொல்கதைகளில் இருந்து ஊறிச்சொட்டி வந்து விழுந்திருக்கும் ஒரு துளி. இங்கிருந்து வளர்ந்து தொல்கதைகளுக்கு அது மீளும். எத்தனை நோக்கியும் அவன் எனும் விந்தை

அழியவில்லை. எத்தனை விழிசிமிட்டிய பின்னரும் அவன் அங்குதான் இருந்தான்.

அவர்கள் அவனை தொட்டுப்பார்க்க விழைந்தனர். அவன் செல்லும்போது உடன் சென்றால் இளமையின் ஒளி பரவிய அத்தொல்கதைகளுக்குள் சென்றுவிடமுடியுமென்று எண்ணிக் கொண்டனர். அவன் வெற்றிகளை நினைவுகூர்ந்தனர் இளையோர். அவன் கொண்ட காதலிகளை நினைத்துப்பார்த்தனர் பெண்டிர். மெய்நாடி அவன் சென்ற பயணங்களில் எல்லாம் அலைந்து கொண்டிருந்தனர் முதியோர்.

பின்னர் அவர்கள் மெல்லிய ஏமாற்றம் ஒன்றை அடைந்தனர். இவன் மனிதன், அந்தக் கதைகளில் வாழும் சொற்தலைவர்களைப்போல் அல்ல, வெறும் மனிதன். அப்படியென்றால் இளைய யாதவரும் மனிதனே. ரகுராமனும் பரசுராமனும் மனிதனே. இந்திரனும் எமனும் இவர்களை போன்றவர்களே. மூன்று தெய்வங்களும்கூட மானுடத்தன்மை கொண்டவர்கள்தான்.

கதைகளை சொல்லிச் சொல்லி தாங்கள் களைந்திட்டது மானுடத்தன்மையை என்று அவர்கள் உணர்ந்தனர். அம்மானுடத்தன்மையே ஆகி வந்து அமர்ந்திருக்கும் அவனை மீண்டும் கதைகளுக்குள் செலுத்த விழைந்தனர். அங்கிருந்து அவன் காற்றின் திரை விலக்கி உள்ளே சென்று மறைந்துவிடவேண்டும். விண்ணிலிருந்து ஒளிச்சிறகுகளுடன் கந்தர்வர்கள் வந்து அவனை தூக்கிச் செல்லவேண்டும். அவனைச் சுமந்து செல்ல பொன்னிற வாருடன் புரவி வந்து நிற்க வேண்டும்.

உணவருந்தி அவன் எழுந்தவுடன் ஊர்த்தலைவர் “எங்கள் இளையோரை வாழ்த்துக. அரசே! தங்கள் வில்திறன் சற்றேனும் இங்கு திகழ்க!” என்றார். “ஆம்” என்றான் அர்ஜுனன். “குழந்தைகளை கொண்டுவாருங்கள்” என்று முதியவர் பெண்களை நோக்கி சொன்னவுடன் அவர்கள் கால் தளர்ந்து நெஞ்சு படபடக்க பின்னடைந்தனர். “என்ன அங்கே? விரைந்து வாருங்கள். அவர் கிளம்பவிருக்கிறார்” என்றார் முதியவர்.

“செல்லடி” என்று ஒருத்தி இன்னொருத்தியை தள்ளினாள். “ஐயோ!” என்று அவள் பின்னடைந்தாள். “போடி” என்று இன்னொருத்தி முன்னால் வந்தாள். “என்னால் முடியாது” என்ற அவள் இருவரை ஊடுருவி பின்னால் சென்று ஒளிந்துகொண்டாள். ஒருவரோடொருவர் முட்டி மோதியபடி அவர்கள் அங்கேயே நின்று ததும்பினர். உள்ளங்கால் வியர்த்து வழுக்கிவிழுந்துவிடுவோம் என அஞ்சினர்.

இளம்பெண்ணொருத்தி அருகிருந்த இன்னொருத்தி வைத்திருந்த குழந்தையைப் பிடுங்கி தன் இடையில் எடுத்துக்கொண்டு உறுதியுடன் காலடி வைத்து முன்னால் சென்று அர்ஜுனன் முன் நின்றாள். “இது யார் குழந்தை?” என்றார் குலத்தலைவர் புருவங்களை சுருக்கியபடி. முந்தானையால் வியர்த்த முகம் துடைத்து உரத்த குரலில் “என் அக்காள் குழந்தை. எனவே என் குழந்தையேதான்” என்று அவள் சொன்னாள். அவளுடைய நிமிர்வையும் துடுக்கையும் கண்டு பிற பெண்கள் கூசி சிலிர்த்து தங்களுக்குள் சிரித்தனர். அவளாகி அங்கே அவர்களே நடித்தனர்.

அர்ஜுனன் அவள் கையிலிருந்து அம்மைந்தனை வாங்கி அவன் வலது கையை விரித்து அதில் தன் வலது கையை வைத்து

“வில் சிறக்கட்டும்” என்று வாழ்த்தினான். குழவியை திருப்பி அளித்தபோது அவன் விரல்கள் அப்பெண்ணின் விரல்களை தொட்டன. அதுவரை அவள் நடித்துக் கொண்டிருந்த நிமிர்வும் துடுக்கும் அகல கால் தளர்ந்து மெய்குழைந்து அவள் தலைகுனிந்தாள். “செல்க, அடுத்த குழந்தை வரட்டும்” என்றார் ஊர் முதியவர்.

அவள் அவனைப் பார்த்தபடியே கால்களை பின்னெடுத்து வைத்து நின்றாள். மூக்கு நுனியும் மேலுதடும் வேர்க்க கழுத்து ஈரம் குளிர்ந்து பளபளக்க மூச்சில் முலைகள் எழுந்து அமர அங்கேயே நின்றாள். அவள் நிலையை தன் உடலால், உள்ளமைந்த ஆணெனும் சிறுதுளியால் உணர்ந்த குழவி இருகைகளால் அவளை முகத்தில் அடித்து கால்களை உதறி சிணுங்கியது. உடல் திருப்பி தன் அன்னையை நோக்கி கைநீட்டி “அம்மா! அம்மா!” என்றது. அவள் அங்கு நின்றே கைகளை நீட்டி “வா!” என்று அதை அழைக்க தாவியபடி அம்மா என்று வீறிட்டது. “செல்லடி! அடுத்தவர் வரட்டும்” என்றார் குலமுதியவர்.

அவள் தலைகுனிந்து கனவிலென மெல்ல நடந்து கூட்டத்திற்கு திரும்பினாள். குழவியை அதன் அன்னை அள்ளி எடுத்துக் கொண்டாள். சினத்துடன் திரும்பி தங்கையிடம் “என்ன துடுக்கு உனக்கு? உன்னைப்பற்றி இங்குள்ளவர்கள் என்ன நினைப்பார்கள்?” என்றாள். அவள் அச்சொற்களை கேட்டதாகத் தெரியவில்லை. பெருமூச்சு விட்டபடி சிவந்த கண்களுடன் வெம்மை தளதளத்த உதடுகளுடன் சற்றே திரும்பி அர்ஜுனனுக்கு தோள்காட்டி தொலைவை நோக்கி நின்றாள்.

அதன்பின் ஒவ்வொரு பெண்ணும் குழந்தையுடன் ஒருவரையொருவர் முந்தியும் தங்களுக்குள் ஒட்டியும்

அர்ஜுனனை நோக்கி சென்றனர். அவன் ஒவ்வொரு குழந்தையாக எடுத்து அவற்றின் வலக்கையில் தன் கையை வைத்து “வில் சூடுக!” என்று வாழ்த்தினான். குழந்தைகள் கையில் இல்லாத பெண்கள் குழந்தை ஏந்திய பெண்களின் தோளை அணைத்தபடி உடன் சென்றனர். அர்ஜுனன் முன் சென்று நின்று அவன் உடலை தங்கள் விழிகளால் முழுதும் தொட்டு நோக்கினர். அவன் உடலில் இருந்த வடுக்கள் பாலுறுப்பு என அவர்களை கிளரச் செய்தன.

பெண்கள் நிரை முடிந்ததும் இளையோரிடம் சென்று “படைக்கலம் கொள்க!” என்றார் குலமுதியவர். ஒரு கூடை நிறைய அம்புகளும் குறுவாட்களும் கொண்டுவந்து வைக்கப்பட்டன. அக்குலத்து இளையோர் சென்று அர்ஜுனன் முன் பணிந்து அவன் கால்களைத் தொட்டு சென்னி சூடினர். அவன் அம்பையோ குறுவாளையோ எடுத்து அவர்களிடம் கொடுத்து “வெற்றி திகழ்க!” என்று வாழ்த்தினான். அவன் கையில் இருந்து வாள் பெற்றவர்கள் அது எடை மிக்கது என்பது போல் தசை அதிரப் பெற்றனர். சிலர் உளம் பொங்கி விழிநீர் மல்கினர். சிலர் மீண்டும் ஒரு முறை குனிந்து அவன் கால்களைத் தொட்டு வணங்கினர். அவன் கைகள் தங்கள் கைகளில் பட்டபோது மெய்விதிர்ப்பு கொண்டனர்.

வாழ்த்துக்கள் முடிந்ததும் அர்ஜுனன் கைகூப்பி “நன்று திகழ்க! இச்சிற்றூரில் ஒருநாள் உணவருந்தியிருக்கிறேன். நானும் எங்கள் குலமும் உங்கள் ஊருக்கு கடன்பட்டவர்கள். நான் செல்கையில் இச்சிற்றூரின் வெளியே நிற்கும் கொன்றை மரத்தில் என் இலச்சினையை பொறித்துவிட்டுச் செல்வேன். இச்சிற்றூருக்குள் நுழையும் யாரும் இது எனது மண் என உணரவேண்டும். இனி இச்சிற்றூர் எவ்வரசுக்கும் திறை

அளிக்கலாகாது. எனது ஆணை கொண்டு இங்கு அமர்ந்திருக்கும் இவ்வூர்த்தலைவரை மீறி இச்சிற்றூருக்குள் நுழைபவன் எவராயினும், இவர் விரும்பாததைச் செய்பவன் யாராயினும், இந்திரப்பிரஸ்தத்தின் பகைமையை ஈட்டிக்கொள்கிறான். அவனை வென்று குலமறுக்கும் என் சொல். என் குலத்தின் இறுதி மைந்தன் இருக்கும்வரை என் சொல் வாழும்" என்றான்.

குலத்தலைவர் இருகைகளையும் தலைக்குமேல் தூக்கி அடைத்த குரலில் "வெல்க! வெல்க பார்த்தன் புகழ்!" என்றார். உடனே உளம் உடைந்து தேம்பி அழத்தொடங்கினார். "எங்கள் குடி இனி வென்று பெருகும். தெய்வங்களே, இதற்குமேல் நாங்கள் ஈட்டுவதற்கேதுமில்லை. எங்கள் மூதாதையர் செய்த நல்லூழால் இது எய்தப்பெற்றது" என்றார் ஒருவர். முதியவர்களும் பெண்களும் விழிநீர் பெருக நெஞ்சில் கைவைத்து நின்றனர்.

அர்ஜுனன் மன்றிலிருந்து இறங்கி முற்றத்திற்கு வந்தபோது அவன்முன் முதலில் வந்துநின்ற பெண் கைதூக்கி உரத்த குரலில் "தென்றிசைக்குச் செல்க!" என்றாள். அவன் திரும்பி நோக்க அவள் விழிகள் உருள கைகள் விரைத்து உடலுடன் ஒட்டியிருக்க "தென்றிசையினை வெல்க!" என்றாள். அவள் கருவிழிகள் மேலேறியிருக்க கண்கள் வெண்ணிறப்புள்ளிகளாகத் தெரிந்தன.

"ராதை, என்ன இது?" என அவள் அன்னை அருகே கைநீட்டியபடி செல்ல அவள் "உம்" என்றாள். அவ்வொலியில் அன்னை திகைத்து பின்னடைந்தாள். அவளைச் சூழ்ந்து நின்ற அனைவரும் விலகி வழிவிட்டார்கள். அவள் இறுகிய கால்களுடன் படியிறங்கி வந்தாள். "மூதாதையரை

வெல்லாதவனுக்கு புதிய வழிகள் இல்லை. குலம்பழிக்க வாழ்பவர்களுக்குரியது தெய்வங்களின் படைக்கலம்” என்றாள்.

அர்ஜுனன் அவளை நோக்கி நின்றான். அவள் சென்று காண்டீபத்தை இடக்கையால் எடுத்துவந்து அவனிடம் நீட்டி “கொள்க!” என்றாள். அவன் தலைவணங்கி அதை இருகைகளாலும் பெற்றுக்கொண்டான்.

[பிரயாகை 13](#)

[பிரயாகை 14](#)

# கிராதம் - 18

**[ 24 ]**

அர்ஜுனன் மலைகள் இடப்பக்கம் நிரைவகுத்த பாதையில் தென்திசை நோக்கி சென்றுகொண்டிருந்தபோது அவனுக்குப் பின்னால் ஓடிவந்த முதிய அந்தணன் ஒருவன் உரத்த குரலில் “இளைய பாண்டவரே, தங்களை நாடி வந்தேன். தங்களுக்காகவே வந்தேன்” என்றான். அர்ஜுனன் நின்று “யார் நீங்கள்?” என்றான். மூச்சிரைக்க அணுகி “என் பெயர் ஜாதவேதன். வேதம் புரக்கும் தொல்குடியில் பிறந்தவன். என் ஒன்பதாவது மைந்தனை தென்றிசையரசனுக்கு பறிகொடுத்துவிட்டு வாழ்வை முடிக்கக் கிளம்பியவன்” என்றான். “நான் உங்கள் வில்லுக்கு அடைக்கலம். என்னை துறக்காதீர், பாண்டவரே.”

அர்ஜுனன் “உம்” என்றபடி காண்டீபத்தை கைமாற்றிக்கொண்டான். “இனி வாழ்வில்லை என

மலையேறும்பொருட்டு இவ்வழி சென்றேன். இங்கு நீங்கள் இருப்பதை அவ்வூர் இளையோன் ஒருவன் கூவியதிலிருந்து அறிந்தேன். அங்கு சென்றபோது நீங்கள் ஊர் நீங்கிவிட்டீர்கள். உயிரைச் சுமந்து பின்னால் ஓடிவந்தேன்" என்று அவன் சொன்னான். "என் நல்லூழ், நான் விழைந்தவரை கண்டுவிட்டேன். தெய்வங்கள் என்னுடன் உள்ளன."

சொல்லும்படி அர்ஜுனன் கையசைத்தான். அவன் "நான் வாழவேண்டுமா என்பது தங்கள் கையிலேயே உள்ளது, இளவரசே" என்றான். "என்ன நிகழ்ந்தது?" என்று அர்ஜுனன் கேட்டான். "சாண்டில்ய குலக்குழுவைச்சேர்ந்த சாமவைதிகன் நான். உத்தர கூர்ஜரத்தில் வறண்ட மலைநிலத்தில் பீதாக்ரம் என்னும் சிற்றூரில் வாழ்ந்த எந்தை வேதமொன்றே முதலறம் எனக்கொண்டிருந்தார். நூறு மாணவர்கள் அவரிடம் அழியாச்சொல் கற்றனர். வைரங்களின் கூர்மையுடன் அவரில் வேதச்சொல் விளங்கியமையால் வஜ்ரகண்டன் என்று அழைக்கப்பட்டார். வேதமன்றி பிறதெய்வமறியாது வாழ்ந்தார்."

நூறு பசுக்களைப் பேணி நெய்யும் பாலும் கொண்டு வேதச்சொல்லை எரியாக்கியவர் எந்தை. பெரும்பஞ்சம் எழுந்து நூறுபசுக்களும் பசித்து நோய்கொண்டு இறந்தன. எஞ்சியது ஒரு வெண்பசு. அதற்கு கற்றாழையை வெயிலில் வாட்டி உணவளித்தனர். மானுடர் கொட்டிக்கிழங்கை புளிச்செடி இலையுடன் சேர்த்து வேகச்செய்து ஒருநாள் விட்டு ஒருநாள் உண்டு உயிர்வாழ்ந்தனர். ஆயினும் பால்கொண்டு வேள்வி செய்வதை நிறுத்தவில்லை. வேள்விக்குளத்தில் துளி நெய்யேனும் விடாது எரியணைய ஒப்பவில்லை.

ஒருநாள் எந்தை வேள்விக்கு பால் கொள்ள பசுவை அணுகினார். அதன் அகிடில் ஐந்துபிடிப் பால் மட்டுமே

இருந்தது. புல்லின்றி பசித்துத் தளர்ந்திருந்தது பசு. பாலில் ஊறிய கற்றாழை நச்சால் நோயுற்று விழுந்துவிட்டிருந்தது அதன் கன்று. தொழுவக்காவலன் கைகூப்பி "அந்தணரே, இத்தருணத்தில் கன்றுக்குப் பால்விடுவதே முறை என்று சொன்னான். கன்று பிழைக்காதென்பது உறுதி என்றாலும் அது இறுதியாக விழையும் பால்சுவையை அதற்களிக்கவேண்டியதே அறம்" என்றான்.

எந்தை ஐயமற்ற உள்ளம் கொண்டவர். வேதமறிந்தது முதல் ஒருநாளும் வேள்விச்செயலுக்கு பிந்தாதவர். அவ்வூரில் பிறிதெங்கும் பால் இல்லை என்னும் நிலையை அறிந்திருந்தார். வேள்விக்கு பசுவை பலிகொடுப்பதும் இருந்தது முன்பு. வேள்வியே முதன்மையானது, என் கடன் அதுவே என்று உரைத்து அப்பாலைக் கறந்து கொடுக்கச்சொல்லி பெற்றுக்கொண்டு சென்று தன் வேள்விச்செயலை நிறைவேற்றினார்.

கன்று விழிகள் வழிய தலைசாய்த்துக் கிடந்து மூச்சிழுத்தது. நாக்கு நீண்டு வெளியே சரிய வால் குழைந்து புரள வயிறு விம்மி விம்மி அமைய இறுதியாக 'அன்னையே' என்று அழைத்து உயிர்விட்டது. கன்றின் இறப்பைக் கண்டு அன்னை பெருமூச்சு விட்டபடி தலை தாழ்த்தி நின்றது. அதன் கண் பழுத்து நீர் வழிந்தது. உணவும் நீரும் மறுத்து மூன்றுநாள் நின்று நான்காம் நாள் விழுந்து மூச்சிளைத்து விழிவறண்டு இறந்தது. இறப்பதற்கு முந்தைய கணம் அதன் அகிடுகளிலிருந்து பால் சுரந்து வழிந்தது. அது செங்குருதித்துளியாகி சொட்டி நின்று உறைந்தது.

அன்று வேள்வியில் கையில் அனல்கரண்டியுடன் இருந்த எந்தையின் முன் அழலுக்குள் இருந்து எமன் எழுந்து வந்தான்.

கரிய உடலும் நீலமணிவிழிகளும் கொண்டிருந்த அவனை அறிந்து எந்தை கைகூப்பினார். "வைதிகனே, அன்பில்லாச் சடங்கு என்பது தெய்வங்களுக்கு எதிரானது என்று நீ உணர்ந்திருக்கவில்லை. மைந்தர்துயர் என்ன என்று நீயும் உன் குடியினரும் அறிவீர்கள்" என்று தீச்சொல்லிட்டு அமைந்தான். எந்தை அஞ்சி எழுந்து ஓடிவந்து தன் ஏழு மைந்தரை அள்ளி மார்போடணைத்தபடி கதறி அழுதார்.

எந்தை தன் வேததெய்வங்களை அழைத்து கூவினார். அவர் முன் காற்றில் எழுந்த அனலோன் “நீ ஆற்றியது இழிசெயலே. அச்செயலால் இறப்பிற்கிறைவனின் சொல்லுக்கு பொருள் அளித்தாய். நான் செய்வதற்கொன்றுமில்லை” என்றான். “நான் என் வேள்விச்செயலில் ஒரு பிழையும் ஆற்றவில்லை” என்றார் எந்தை. “பிழையற்றது உயிரற்றது. உயிர்கள் உகந்தபடி பிழைகொள்ளவே உருக்கொண்டு வந்துள்ளன. அளியின்பொருட்டும் அறத்தின்பொருட்டும் வளையாதவன் மானுடன் அல்ல” என்றான் அனலோன்.

எந்தையின் ஏழு மைந்தரில் அறுவரும் அவ்வருடமே நோய்கொண்டும் நாகம் கடித்தும் மலையிலிருந்து விழுந்தும் யானையால் முட்டப்பட்டும் உயிரிழந்தனர். நான் ஒருவனே எஞ்சினேன். ஒவ்வொரு இறப்புக்கும் எந்தை துயர் இரட்டிப்பாகி நைந்து உளமுடைந்து பித்தனாகி கற்ற சொல்லனைத்தும் மறந்து மைந்தர் பெயரை மட்டும் சொல்லிச் சொல்லி கண்ணீர்விட்டபடி இறந்தார். அவருக்கு நீர்க்கடன் செய்தபின் மைந்தர்துயரை அஞ்சி எனக்கு மணவுறவே இல்லை என்று நான் முடிவுசெய்தேன்.

ஏழாண்டுகாலம் தனியனாக வேள்விச்செயலாற்றி வாழ்ந்தேன். ஒருமுறை நான் அரசனொருவனுக்காக மைந்தர்விழைவு வேள்வி இயற்ற அரணிக்கட்டையை உரசியபோது நெருப்பெழவில்லை. பன்னிரண்டு முறையும் நெருப்பெழாமையால் என்னை பழியன் என்று எழுந்து விலகும்படி ஆணையிட்டார் வேள்வித்தலைவர். நான் பழிநிகர் செய்து மீளும்படி என் குலம் கூறியது.

நிமித்திகரை அழைத்து குறிச்சொல் கேட்டேன். எந்தையர் நிரை என் மேல் முனிந்திருப்பதைச் சொன்னார்கள். அவர்களுக்கு

என் வாழ்க்கைக்குப்பின் நீரும் அன்னமும் அளிக்கப்படாதென அவர்கள் அஞ்சுவதாக அறிந்தேன். மைந்தரின் முதற்கடன் நீத்தாருக்கே. அதைச் செய்யாதவன் தெய்வம் விருந்து உறவு தான் என பிற நால்வருக்கும் நன்னயம் செய்ய ஒண்ணாதான் என்றனர் நிமித்திகர். நான் கைகூப்பி தந்தையரே, உங்களுக்காக அப்பெருந்துயரை நான் ஏற்கிறேன் என்று சொன்னேன்.

அதன்பின் நான் மணம்கொண்டேன். கௌண்டின்ய குலக்குழுவின் மகளாகிய என் மனைவியிடம் என் குலத்தின் மீதுள்ள தீச்சொல்லை நான் சொல்லவில்லை. முதல் மைந்தன் பொற்துளி என வந்து என் கைகளில் விழுந்தபோது கடுந்துயரில் என் நெஞ்சு குழைந்தது. என் விழிநீர் அவன் மேல் விழுந்தது. என்ன என்ன என்று என் மனைவி கேட்டாள். உவகை என்று நான் சொன்னேன். ஆம் ஆம் என அவள் கண்ணீர்விட்டாள். அழுதபடி நான் பேற்றறை விட்டு வெளியே ஓடினேன்.

பன்னிரண்டாம் நாளில் பால் விக்கி என் மகன் இறந்தான். கன்றிழந்த பசுவின் துயரை அன்று கண்டேன். என் மனைவியின் முலைகளிலிருந்து பால் ஊறி வழிந்துகொண்டே இருந்தது. மண்ணில் அவள் அதை பீய்ச்சிவிட்டபோது உடன் விழித்துளிகளும் உதிர்ந்தன. மண்ணில் நூறு வாய்கள் திறந்து புதைக்கப்பட்ட மைந்தர்கள் அந்த அமுதை உண்பதாகத் தோன்றியது. பித்துப்பிடித்தவன்போல நான் அலைந்தேன். தெய்வங்கள் முன் சென்று நின்று நெஞ்சில் அறைந்து அழுதேன். விழுந்து தலையால் மண்ணில் அடித்து மன்றாடினேன்.

பிறிதொரு மைந்தன் தேவையில்லை என்பது என் எண்ணமாக இருந்தது. ஆனால் மெலிந்து உருக்குலைந்த என்

மனைவியைக் கண்டதும் இன்னொரு குழவியால் மட்டுமே அவளை மீட்கமுடியும் என்று உணர்ந்தேன். எனக்கும் அந்த விழைவு உள்ளில் எழுந்து வளர்ந்தது. முதற்குழவியே மாற்றுருக்கொண்டு மீண்டுவரும் என நினைத்தேன். மெல்ல அவ்வெண்ணம் வலுப்பெற்றது. அது மீண்டால் போதும் அனைத்தையும் மறந்துவிடுவேன் என எண்ணினேன். போதிய மைந்தர்துயரை அடைந்துவிட்டேன். என் தெய்வங்கள் என்னை கைவிடமாட்டார்கள்.

அவள் மீண்டும் கருவுற்றாள். ஒவ்வொருநாளும் உவகை வளர்ந்தது. அதன் நிழல் என பலமடங்கு நீளத்துடன் அச்சம் உடன் எழுந்தது. அந்த அலைக்கழிப்பு முன்பிருந்த பெருந்துயரைவிட மும்மடங்கு பெரிய கொடுமை. என் மனைவி மெல்ல மலர்ந்து உவகையில் எழுந்து கொழுந்துவிட்டு ஆடக்கண்டேன். அவளைப் பார்க்கையில் என் உள்ளம் அழிந்தது. பெரும்பிழை ஆற்றியிருக்கிறேன் என்று எண்ணி எண்ணி கலுழ்ந்தேன்.

மைந்தன் அதே முகத்துடன் அதே துடிப்புடன் பிறந்தான். அவனை கையால் தொடவும் என்னால் முடியவில்லை. “நம் மைந்தன். நம்மை விட்டுச்சென்றவன். நம் பிழைபொறுத்து மீண்டு வந்துவிட்டான்” என்று என் மனைவி கண்ணீருடன் கூவினாள். நான் அழுதபடியே சென்று என் குடித்தெய்வத்தின் காலடியில் படுத்துவிட்டேன்.

என் மனைவி பித்துகொண்டவளாக ஆனாள். குழவியை கையிலிருந்து இறக்கவே மறுத்தாள். “கையிலேயே வைத்திருக்கக்கூடாது, அன்னையே. குழந்தை உடல் தேம்பிப்போய்விடும்” என்றாள் மருத்துவச்சி. கீழே வைத்தால் எவரோ குழவியை கொண்டுசென்றுவிடுவார்கள் என்று அவள்

அஞ்சியதுபோல் தோன்றியது. தன் உடலுடன் இணைந்த ஒன்றாகவே அவள் அதைச் சூடியிருந்தாள்.

மூன்றாம் மாதம் ஒரு காய்ச்சலில் குழந்தை மறைந்தது. தொட்டிலில் குழந்தையைத் துயிலவிட்டு அருகே அவள் துயின்றாள். இரவில் ஒரு கரிய குழல் பறக்கும் பெண்மணி உள்ளே வந்து குழந்தையை எடுப்பதுபோல கனவுகண்டாள். அவளை நோக்கி அலறியபடி கைநீட்டி எழுந்தபோது அவள் விழிகள் அனலென எரியக்கண்டாள். எழுந்தமர்ந்து குழந்தையை நோக்கியபோது அது மேலிருந்து விழுந்ததுபோல கிடந்தது. எடுத்து நோக்கியபோது அதன் தலை முன்பக்கம் சரிந்தது.

என் மனைவி பல மாதங்கள் எங்கிருக்கிறாள் என்றே தெரியாமலிருந்தாள். நான் என் வீட்டிலிருந்த அத்தனை தெய்வங்களையும் உடைத்து வீசினேன். ஆலயக்கருவறைகளில் வெறித்து அமர்ந்திருந்த வீண்சிலைகளை நோக்கி கற்களை எடுத்து எறிந்தேன். என்னை பித்தன் என எண்ணி பல இடங்களில் பிடித்து கட்டிவைத்து அடித்தனர்.

மீண்டும் சில மாதங்களில் மைந்தனுக்கான விழைவு கூடியது. வெளியூர் நிமித்திகர் ஒருவர் என் முகம்நோக்கி குறித்து நான் மைந்தரைப் பெற்றாகவேண்டும் என்றார். மறுமுறை நீண்ட வாழ்வுள்ள மைந்தன் பிறப்பான் என்று நம்பிக்கையும் அளித்தார். அவர் சொன்ன வேள்விச்செயல்களை இயற்றினேன். அவர் அளித்த நுண்சொல்லை பன்னிரண்டு லட்சம் முறை உருவிட்டேன்.

ஆனால் என் மனைவி மைந்தரைப் பெற மறுத்துவிட்டாள். “இனி இல்லை, இனி பெற்று மறலிக்கு கொடுப்பதில்லை. பிறந்து உலகறியாது இறக்கும் மைந்தரின் பழியெல்லாம் என் விழைவினால்தான்” என்றாள். அவளிடம் பேசி மன்றாடினேன். அழுது புலம்பினேன். அவள் இளகவில்லை. “இனியில்லை... இனியில்லை” என்றே சொல்லிக்கொண்டிருந்தாள்.

ஆனால் அவளுக்குள் இருந்து கனவொன்று முளைத்தது. அதில் வந்த இளமைந்தன் தவழ்ந்து ஒரு படியிலிருந்து கீழிறங்கத் தவித்தான். விழித்துக்கொண்டு அவள் சிரிப்பும் அழுகையுமாக என்னை நோக்கி ஓடிவந்தாள். “நம் மைந்தன்... நான் இப்போது கண்டேன். அவன் மண்ணுக்கு கிளம்பிவிட்டான். இறக்கிவிடுவதொன்றே நம் பணி. அது நம் கடன்” என்றாள்.

அம்மைந்தன் பிறந்து ஒரு வயதுவரை வாழ்ந்தான். கண்தெளிந்து முகம்நோக்கி சிரித்தான். வாய்வழிய அம்மா என்று குதலைச்சொல் சொன்னான். எப்போதும் வாய்குவித்து பாலருந்த விழைந்தான். பசி கண்டதுமே கைகளை அறைந்து முட்டிசுருட்டி அசைத்து முகம் சிவந்து கதறி அழுதான். அவன் பால்குடிக்கையில் அவ்வொலி கேட்டு பதைப்புடன் அமர்ந்திருப்பேன். உலகை உண்ணுகிறான். அப்பெரும்பசி வாழ்வாசை அல்லவா? அந்த விழைவு அவனை வாழச்செய்யாதா?

அவன் கவிழ்ந்தான். கையால் தரையை தட்டியபடி தவழத்துடித்தான். காலம் முந்தியே தவழலானான். ஒரு கையை ஊன்றி வாயில் எச்சில் வழிந்து மார்பை நனைக்க ஊ ஊ ஊ என ஓசையிட்டபடி அரைமணி ஒலிக்க தண்டை இழுபட்டோசையிட இல்லத்தை சுற்றிவந்தான். காகத்தை

கைசுட்டி கா என்றான். பூனையைச் சுட்டி ஞா என்றான். என் காலடியோசை கேட்டதுமே கைவீசி ந்தை ந்தை என்று குதித்தான்.

ஒவ்வொரு கணமும் அவன் மேல் ஒளிவிழியும் உளவிழியும் தொடுத்து உடனிருந்தாள் அவன் அன்னை. ஒருநாள் அடுப்பிலிட்ட அன்னத்தை எடுக்க அவள் அடுமனைக்குள் நுழைந்த கணம் அவன் எம்பி குடிநீர் பிடித்து வைத்திருந்த கலத்திற்குள் குப்புற விழுந்தான். அவள் திரும்பி வந்தபோது மைந்தனைக் காணவில்லை. இயல்பாக எழுந்த அச்சத்தால் அவள் வெளியே ஓடிச்சென்று முற்றத்திலும் சாலையிலும் தேடினாள். திரும்பி வந்து உள்ளே நுழைந்தபோதுதான் கலத்திற்குமேல் இரு கால்களைக் கண்டாள்.

மிகச் சிறிய கலம் அது. அதில் ஒரு குழந்தை விழுந்து இறந்தது என்றால் எவரும் நம்பமுடியாது. அக்கலம் சற்று சரிந்திருந்தால் அவன் கால்களை மேலும் உதைத்திருந்தால் வாழ்ந்திருப்பான். நான் அவனுடைய விரைத்த உடலையே நோக்கிக்கொண்டு அமர்ந்திருந்தேன். மாற்றமில்லா நெறி என இப்புடவியைச் சூழ்ந்திருப்பது மறலியின் சரடு ஒன்றே என்று அன்று அறிந்தேன்.

விழிநீர் ஓய்ந்து என் மனைவி சொல்லெடுக்கத் தொடங்கியபோது அவளிடம் சொன்னேன், என் குடிமேல் விழுந்த தீச்சொல் அது என. "இனி நமக்கு மைந்தர் தேவையில்லை. என்னுடன் எழுக! காடுசேர்ந்து தவம்செய்து இப்பிறவியை நிறைவுசெய்வோம்" என்றேன். "என் பழிக்கு உன் மடியை இழுக்கடையச்செய்தவன் நான். என்னை நீ என்ன முனிந்தாலும் தகும்" என்று அழுதேன்.

நான் எண்ணியதற்கு மாறாக அவள் கடும்சினத்துடன் கண்களில் விழிநீர் எரிய எழுந்தாள். “அன்னைமடி நோக்கி தீச்சொல்லிட்ட தெய்வம் எது? அந்த தெய்வத்தின் முகத்தில் உமிழ்கிறேன்” என்று கூவினாள். தன் வயிற்றை ஓங்கி அறைந்தபடி “இதோ உள்ளது என் வயிறு. இம்மண்ணில் கருவறைகொண்டு பிறந்தவள் என்பதனாலேயே பெற்றுக்குவிக்க வேண்டியவள் நான். அனைத்தையும் மறலி கொண்டுசென்றாலும் சரி என் வயிறு ஒழியும்வரை பெற்றிடுவேன்” என்றாள்.

“என்ன சொல்கிறாய் நீ? சித்தம் கலங்கிவிட்டதா உனக்கு?” என்றேன். “நூறு மைந்தரைப் பெற்று இங்கு பரப்புகிறேன். தின்று நிறையட்டும் தென்றிசைத்தெய்வம். என் குருதி வற்றி சேறாகட்டும். உடல் மட்கி அழியட்டும். நான் இருக்கும்வரை பெற்றுக்கொண்டுதான் இருப்பேன்” என்று கூவினாள். அவளை எதிர்கொண்டு நோக்கவே என்னால் இயலவில்லை. மானுடரில் வாழும் தெய்வம் மானுடத்தைக் கிழித்து வெளிவந்து நின்றாடும் சில தருணங்களுண்டு என அப்போது அறிந்தேன்.

அதன்பின் அவள் பெற்றுக்கொண்டே இருந்தாள். ஒவ்வொரு குழந்தை பிறக்கும்போதும் நான் எண்ணி எண்ணி ஏங்கினேன். ஒவ்வொரு இறப்பின்போதும் உளமுடைந்து அழிந்தேன். மீண்டும் நம்பிக்கை முளைத்தெழ மைந்தனுக்காக காத்திருந்தேன். அந்த ஏக்கத்திலிருந்து என்னால் விடுபடவே முடியாதென்று அறிந்து அதன்பொருட்டே உளமுருகி அழுதேன்.

ஆனால் அவள் அவ்வுணர்ச்சிகளை கடந்துவிட்டிருந்தாள். அவள் கண்களை நோக்கும் எவரும் விழிதாழ்த்தி அஞ்சி விலகிவிடுவர். அவள் சொல்லெடுப்பதையே நிறுத்திவிட்டாள்.

அவள் குரலையே நான் மறந்தேன். வெறியாட்டெழுந்த தெய்வமென உடல்மீறிய ஆற்றலுடன் இல்லப்பணிகளை ஆற்றுவாள். எஞ்சியபொழுதில் தொடுவான் நோக்கியபடி ஊன்சிலை என அமர்ந்திருப்பாள்.

அவள் கருவறை ஆணையிடும் நாளில் இரவில் பசித்த ஓநாய் இரைதேடிவருவதுபோல் என்னிடம் கைகளையும் கால்களையும் ஊன்றி புரண்டு வருவாள். என் உடலை ஆட்கொண்டு கருவைப்பெற்று மீள்வாள். அப்போதும் பேசுவதில்லை. ஆணையிடும் உறுமல்கள். அடைந்தபின் மீண்டுமொரு உறுமல். என் உயிர் உண்டு செல்லும் கொலைத்தெய்வம் போலிருந்தாள்.

ஒவ்வொரு முறை மைந்தன் எழுகையிலும் பேராவலுடன் கண்ணீர் வார சென்று கையிலெடுப்பேன். அருகே அவள் வெறித்த பேய்விழிப் பார்வையுடன் படுத்திருப்பாள். “நம் மைந்தன்… இவன் வாழ்வான்… இவன் வாழ்வான். தெய்வங்கள் இம்முறை கனியும்” என்பேன். சொல் அவளைச் சென்று சேர்வதே இல்லை. குழந்தையை கையிலெடுப்பதில்லை. கொஞ்சி முத்தமிடுவதுமில்லை. ஆனால் முலைப்பால் பெருகிக்கொண்டிருந்தது. குழந்தையின் வாய் நிறைத்து முகம் நனைத்து சேக்கைப்பரப்பில் நனைந்து பரவும் ஊற்றுப்பெருக்கு அது.

குழவியர் இறக்கையிலும் அவள் அதே வெறிவிழிகளுடன் அப்பால் இருந்தாள். ஊன் துண்டென குளிர்ந்துகிடக்கும் மகவை தாதியர் கொண்டுசெல்கையில் விழிதிருப்பி நோக்குவதுமில்லை. ஆனால் அன்றே முலை வறண்டுவிடும். அடுத்த கருநிலவுநாளிலேயே அவள் பிறப்பறை அழைப்பு கொள்ளும்.

எட்டாவது மைந்தன் இறந்தபோது நான் உடலோய்ந்திருந்தேன். நடைப்பிணமென்று வேள்வித்தொழிலுக்குச் சென்று மீண்டேன். பரத்வாஜ குருநிலையில் பெருவேள்வி ஒன்றுக்கு சென்றிருந்தேன். வேள்விக்குப்பின் அன்னம் பகிர்கையில் எனக்கும் அளித்த பரத்வாஜர் "நன்மைந்தர் பெற்று நிறைவு கொள்வதற்காக!" என்றார். நான் கையை இழுத்துக்கொண்டேன். "என்ன?" என்று அவர் விழிசுருக்கி கேட்டார். "தங்கள் சொல் பொய்க்கலாகாது. ஊழின்நெறிப்படி என் மைந்தர் வாழ்வதில்லை" என்றேன்.

மறுசொல் கேட்காமல் அவர் சொன்னார் "நான் உளம்நிறைந்து சொல்லும் வாழ்த்து. வேதம் ஓதிக் கனிந்த நாவால் உரைக்கப்படுவது. வேதம் மெய்யே. உண்ணுக இந்த அவியுணவை! உன் மைந்தன் பிறந்து நூறாண்டு வாழ்வான்." நான் அதை வாங்கி உண்டேன். அதன்பின்னரே என் கதையை சொன்னேன். "ஆம், ஆவின் பழி பெரும்பழியே. ஆனால் தன்னலம் மறந்து வேதமோதிய அந்தணன் மூன்று தெய்வங்களுக்கும் ஆணையிட முடியும். இது என் ஆணை" என்று அவர் சொன்னார்.

அம்முறை என் மைந்தன் வாழ்வான் என்றே எண்ணினேன். மைந்தர் பிறந்து என் கையில் நெளிந்தபோதெல்லாம் அவ்வுயிர்நெளிவை என் உடல் அச்சத்துடன் ஏற்று அகவிதிர்ப்பு கொள்வதுண்டு. அம்முறை அவன் அசைவுகள் என்னில் உவகைப்பெருக்கை நிறைத்தன. எந்தையரின் உடலில் ஓடிய உயிர். என் உடலாகி நின்றிருப்பது. என்னிலிருந்து எரிந்து இதில் பற்றிக்கொண்டுவிட்டிருக்கிறது. இது காலத்தைக் கடந்துசெல்லும். நான் எண்ணியிருக்கவும் இயலாத

எதிர்காலத்தில் என் முகம்கொண்ட மைந்தரில் எண்ணமென உணர்வென மெய்மையென நின்றிருக்கும்.

அன்று நான் அடைந்த உளநெகிழ்வே என் வாழ்வின் உச்சம். கண்ணீர்வழிந்து குழவிமேல் சொட்டிக்கொண்டே இருந்தது. விம்மி விம்மி அழுதபடி குழவியின் செந்நிறக்கால்களில் முத்தமிட்டுக்கொண்டே இருந்தேன். அப்பால் என் மனைவி சிலைச்செதுக்கு போன்ற விழிகளுடன் என்னை நோக்கிக்கிடந்தாள். அவள் முலைகளிலிருந்து வெண்ணிறநூல்கள் போல முலைப்பால் ஊறி பீரிட்டு வளைந்து சொட்டியது. அதன் இனிய ஊன்மணம் அப்பேற்றறையை நிறைத்திருந்தது.

ஏழு மாதம் அம்மைந்தனை நெஞ்சிலிட்டு வளர்த்தேன். அச்சமோ பதற்றமோ இல்லாமல் ஒரு மைந்தனை கையிலெடுப்பதன் கொண்டாட்டத்தில் நாள் என குடியென குலமென ஊர் என ஏதுமில்லாதிருந்தேன். அன்றுவரை நான் மைந்தரை தொட்டதே இல்லையென்று அப்போதுதான் அறிந்தேன். நான் முன்பு அறிந்ததெல்லாம் என் அச்சத்தை மட்டுமே. அச்சத்தால் அவனை என் உடலின் உறுப்பென்றே உணர்ந்தேன். அச்சமின்மையால் அவன் பிறிதொரு உடலென உயிரென ஆத்மா என இருந்தான். கையளவே இருந்த சின்னஞ்சிறு உடலுக்குள் ஒரு முழுமானுடனை உணர்வதென்பதே குழந்தையை கொஞ்சியறிதல்.

ஏழாம் மாதம் அவனுக்கு காய்ச்சல் ஒன்று வந்தது. முன்பெல்லாம் எளிய நீர்க்கோள் என்றாலும் பதறி மருத்துவரிடம் செல்வேன். இரவுபகல் விழித்து அருகமர்ந்திருப்பேன். அவன் வாழ்வான் என்பதில் ஐயமே தோன்றவில்லை. தேனில் மருந்து கரைத்து நாவில் கொடுத்து

அவன் சற்று களைத்து துயில்கொண்டபோது நானும் விழியயர்ந்தேன்.

ஓர் எருமையின் முக்காரி கேட்டு கண்விழித்தேன். அறைக்குள் ஒருவன் நின்றிருக்கக் கண்டேன். கரியபேருருவம். கையிலொரு வடச்சுருள். அவன் என் மைந்தனை குனிந்து நோக்கிக்கொண்டிருந்தான். நான் வெறுமனே எவருடையதோ நிகழ்வு என நோக்கி படுத்திருந்தேன். அவன் வெளியே சென்று மறைந்தான். நாய் ஒன்றின் ஊளை எழுந்தது. தொடர்ந்து நாய்கள் ஊளையிட்டன. பறவைகள் கலைந்து பறந்தன.

நான் எழுந்து கைகால்கள் உதறித்தவிக்க என் மைந்தனை நோக்கி ஓடினேன். அவன் முகம் துயில்வதுபோலத்தான் இருந்தது, ஆனால் உயிரில்லை என நோக்கிலேயே தெரிந்தது. நான் உயிரற்ற குழந்தைகளைக் கண்டு பழகிவிட்டிருந்தேன். என் மேல் நோக்கை உணர்ந்து திரும்பி மனைவியை நோக்கினேன். அவள் என் மேல் விழிநட்டுக் கிடந்தாள்.

சிலகணங்கள் எங்கிருந்தேன் என்ன நிகழ்ந்ததென்று என்னால் சொல்லமுடியவில்லை. நினைவறிந்தபோது தெருவிலிறங்கி ஓடிக்கொண்டிருந்தேன். பரத்வாஜ குருநிலையில் சென்று நின்றேன். மூச்சிரைக்க நெஞ்சில் அறைந்தபடி கதறினேன். “ஆசிரியரே, வேதம் பிழைத்தது. என் மைந்தனை மறன் கொண்டுசென்றான்…”

பரத்வாஜர் வெளியே வந்து என்னை நோக்கினார். அழுதபடி அவர் கால்களில் சென்று விழுந்தேன். “என் மகன் மறைந்தான். வேதம் அழிந்தது. இனி நான் பற்ற கொழுகொம்பு இங்கில்லை, ஆசிரியரே” என்றேன். அவர் முகம் உறுதிகொண்டது. “அவன் இறக்கலாகாது. இறந்தால் வேதம் அழிந்தது என்றே பொருள்.

செல், அவனை மறனுலகிலிருந்து மீட்டுக்கொண்டுவரும் வீரன் ஒருவனை தேடிக் கண்டடை. நாற்பத்தொரு நாட்கள். அவன் உடலை நான் பேணுகிறேன். ஒரு காலச்சுழி அது. அதற்குள் உயிர் மீளமுடியும் என்கின்றன நூல்கள். உன் மைந்தனை வேதம் மீட்டுக்கொண்டுவரும்.”

“அவ்வண்ணம் கொண்டுவரவில்லை என்றால் நான் நாவில் சூடிய வேதம் பொய் என்றே பொருள். அதன் பின் நான் உயிர்வாழமாட்டேன். நாற்பத்தொன்றாம் நாள் நான் சிதைமேல் அமர்வேன். அறிக தெய்வங்கள். ஆம், அவ்வாறே ஆகுக!” என்றார். நான் எழுந்து கண்ணீரைத் துடைத்தபின் அவர் முகத்தை நோக்கினேன். அதிலிருந்த உறுதி எனக்கு நம்பிக்கையளித்தது. அங்கிருந்து இறங்கி ஓடினேன்.

காலனை வெல்பவன் என்று நானறிந்தவர் ஒருவரே. அவரை தேடிச் சென்றேன். நல்லூழாக என் இல்லத்தருகே சப்தஃபலமென்னும் யாதவச்சிற்றூரில்தான் அவர் வாழ்கிறார் என்று அறிந்தேன். அவரது அணுக்கர்கள் நான் அவரைப் பார்க்க ஒப்பவில்லை. அவர் கோட்டைவாயிலில் மூன்றுநாள் நீரும் உணவுமின்றி அமர்ந்தேன். என்னை உள்ளே அழைத்துச்சென்றனர்.

நான் அரண்மனைக்கூடம் ஒன்றுக்கு அழைத்துச்செல்லப்படுவேன் என்றே எண்ணினேன். என்னை புழக்கடையில் இருந்த மரத்தடி ஒன்றுக்கு கொண்டுசென்றனர். அங்கே புழுதியும் சருகும் குவித்திட்டு அதன்மேல் அமர்ந்திருந்தவர் இளைய யாதவர் என்று முதலில் என்னால் உணரக்கூடவில்லை. உணர்ந்ததும் திகைத்து கைகூப்பி நின்றுவிட்டேன். சடைமுடியும் மண்படிந்த மேனியும் வெறிவிழிகளும் கொண்டு சிவப்பித்தரெனத் தெரிந்தார்.

“என்ன?” என்று பன்றி உறுமும் ஒலியில் அவர் கேட்டார். நான் சொல்லத்தொடங்கும்போதே கைநீட்டி “அதற்கு நான் என்ன செய்யவேண்டும்?” என்றார். “என் மைந்தனை உயிர்ப்பிக்கவேண்டும். தாங்கள் தென்றிசைத்தலைவன் நகருக்குச் சென்று அவனை மீட்டுக் கொண்டுவரவேண்டும்” என்றேன். முகம் சுளித்து வெறுப்புடன் “நீர் வேதம் கற்றவர்தானே? வீண்கதை கேட்டு மயங்கிய மூடரைப்போல் பேசுகிறீர். மாண்டவர் மீள்வதா? எங்காவது முன்பு கேட்டிருக்கிறீரா?” என்று சீறினார்.

“ஆம், அரிதே அது. ஆனால் தன்னலமற்ற மாவீரர் ஊழையும் மறலியையும் வெல்லலாகும் என்றே நூல்கள் சொல்கின்றன” என்றேன். “அது சூதர்களின் கதை. இறந்தவர் மீளமுடியாது. மீளலாகாது. சென்று உன் மைந்தன் உடலை சிதையேற்று. நீராடி நினைப்பொழிந்து மறுசெயல் ஆற்று” என்றார். “என் குடிமேல் விழுந்த தீச்சொல் இது, யாதவரே” என்று சொன்னபோது கண்கலங்கி குரல் உடைய அழுதுவிட்டேன்

“அவ்வண்ணமென்றால் பெற்றுப் பெற்று மறலிக்கு ஊட்டு. காட்டுப்பன்றிகள் அதைத்தான் செய்கின்றன. செல்!” என்றபடி அவர் உரக்க நகைத்தார். “செத்தவர்க்காக அழுகிறாயா? வாழ்வதற்காக அழுகிறாயா? ஊருக்கு முன் உன் அழுகையைக் காட்டி என்ன பயன்? நீயும் செத்து எமனுக்குக் காட்டு அக்கண்ணீரை.” மீண்டும் அந்த வெறிநகைப்பு. உடனே சினமெழ “செல்... இங்கு உன் இழிமுகத்துடன் நின்றால் உன் தலையை அடித்து உடைப்பேன். அடேய், இவனை இழுத்து வெளியே வீசு...” என்றார்.

ஏவலன் அருகே வந்து செல்லும்படி விழிகாட்டினான். “இவன் இடையாடையைக் களைந்து இழுத்துச்செல். ஒன்பது

முளைஎழுந்த வேரை ஊரார் காணட்டும்...” தொடையில் அறைந்து நகைத்த அச்சிறுமகனை நோக்கி தீச்சொல்லிட எழுந்த என் நாவை அடக்கினேன். அவரில் அமர்ந்து அச்சொல்லிடும் தெய்வமேதென்று அறிந்திலேன் என சொல்லிக்கொண்டேன்.

அங்கிருந்து கிளம்பும்போது இனி புவியில் எனக்கென படைக்கலமேந்தும் வீரன் என எவருமில்லை என்று எண்ணிக்கொண்டேன். தளர்ந்த காலடிகளுடன் வெளியே நடந்து தெருவுக்கு வந்தேன். மண்சாலையில் அச்சிற்றூரை விட்டு நீங்கினேன். அப்போது சாலையோரத்து வயலொன்றில் புல்லறுத்துக்கொண்டிருந்த முதுமகள் ஒருத்தி நிமிர்ந்து என்னை நோக்கினாள்.

என் அழுகையை அவள் கண்டாள். “ஏன் அழுகிறாய்?” என்றாள். “நான் அடைக்கலமென்று யாதவப் பேரரசரை தேடி வந்தவன். அவரோ புகைசூழ் சுடரென இருண்டிருக்கிறார், அன்னையே” என்றேன். “அவர் இல்லையென்றால் அடுத்துச் செல்லவேண்டிய இடம் பாண்டவக் குடியின் இளையவன் அல்லவா? அங்கு செல்க! அவன் வில் உனக்குத் துணைவரும்” என்றாள்.

“அச்சொற்களை நான் நம்பினேன். ஏன் என்று அறியேன், அது தெய்வக்குரலென்றே என் நெஞ்சு சொன்னது. அங்கிருந்து கிளம்பினேன். உங்களை எங்கு தேடிக் கண்டடைவதென்று அறியாமல் தவித்து காடுகளில் அலைந்து இங்கு வந்தேன். ஆணையிட்ட அந்த தெய்வமே உங்களை என் முன் கொண்டுவந்து நிறுத்தியிருக்கிறதென்று உணர்கிறேன்” என்றான் அந்தணன். அர்ஜுனன் “ஆம்” என்றான்.

# கிராதம் - 19

**[ 25 ]**

“நான் உறுதியளிக்கிறேன். காலபுரி புகுந்து உம் மைந்தனை மீட்டுத் திரும்புவேன்” என்று அந்தணனின் கைதொட்டு ஆணையிட்டு அர்ஜுனன் கிளம்பினான். தெற்குநோக்கி நான்கு நாட்கள் நடந்துசென்ற அவன் எதிரே சடைமகுடத்தில் பன்றிப்பல் பிறைசூடி புலித்தோல் உடுத்து நீறாடி சிவப்புகை இழுத்து பித்துகொண்டு ஆடிவந்த இருளெதிர்வரை கண்டான். “நில்லும்!” என்று தன் காண்டீபத்தைக் காட்டி ஆணையிட்டான். “சொல்லும், நான் தென்றிசையாளும் தலைவனைச் சென்று காண விழைகிறேன். அவனை அடையும் வழி எது?”

“நன்று நன்று” என அவர் நகைத்தார். “வாழும் வழிதான் மானுடருக்கு தெரிவதில்லை என்று இதுகாறும் எண்ணினேன். நீத்துச்செல்லும் வழியுமா தெரியாமலாகிவிட்டது? அந்தப் பள்ளத்தில் குதி. அதோ, அந்த நாகத்தின் முன் கைநீட்டு. அந்த நச்சுச்செடியை உண். எத்தனை வழிகள்!” அர்ஜுனன் “நான் அவனை காலரூபனாக கண்முன் காணவிழைகிறேன்” என்றான். அவர் கண்கள் இமைப்பதை நிறுத்தின. “ஏன்?” என்றார்.

“அவனை வென்று ஓர் இளமைந்தனை மீட்டுக்கொண்டுவர விழைகிறேன்.” அவர் கண்களில் புன்னகையின் ஒளி எழுந்தது. “நன்று, அவ்வாறு மானுடர் கிளம்பியாகவேண்டும். நன்று!” என்றார். “வீரனே, காலனை வெல்ல ஒரே வழி மகாகாலனை வழிபடுவதே. மார்க்கண்டன் கண்ட முறை அது. இதோ, அவன் மூச்சென மணக்கும் புகை. இழு. இருத்தலும் இன்மையும்

மறையும். காலன் வந்து திகைத்து அங்கே நின்றுவிடுவான்" என்று சிவப்புகை சிலும்பியை நீட்டினார்.

"நான் கேட்டது அவனை அணுகும் வழி. அதை நீங்கள் அறிவீர்கள். ஒருமுறை இறந்துபிறக்காமல் எவரும் இருளெதிர்வர் ஆகமுடியாதென்று அறிந்திருக்கிறேன். நீர் இறந்தது எப்படி? மீண்டது எப்படி?" என்றான். அவர் "காளாமுக மெய்மையை பிறர் அறியமுடியாது, மூடா!" என்றார். செல்க என கையசைத்தபடி முன்னால் நடந்தார். "சொல்க, நான் செல்லும் வழி எது?" என்றான் அர்ஜுனன். "செல், மூடா!" என அவர் தன் கையிலிருந்த முப்புரிவேலை ஓங்கி அவனை அடித்தார்.

அவன் அதை தன் கையால் பற்றித்தடுத்தான். அவர் எழுவதற்குள் அவர் கால்களை அடித்து நிலையழியச்செய்து தன் தோள்மேல் சுழற்றி வீசி நிலத்திலறைந்தான். அவர் அவனை அறைந்து திமிற முயல சற்றுநேரத்திலேயே அவரை அடக்கி மார்பின் மேல் காலூனின்றி அமர்ந்து "சொல்க..." என்றான். அவர் தன் இடக்கையைத் தூக்கி "என் கையிலுள்ள சிதைச்சாம்பலால் உன்னை அழிக்கமுடியும்" என்றார். "நான் அழிவதற்கு அஞ்சவில்லை" என்றான் அர்ஜுனன்.

"நீ யார்?" என்று அவர் கேட்டார். "என் பெயர் அர்ஜுனன். பாண்டவன்" என்றான். அவர் விழிகள் மாறுபட்டன. "ஆம், நீ என எனக்கு ஒருகணம் தோன்றியது. பிறர் என்னை வெல்லமுடியாது. என்னை அஞ்சாது விழிநோக்கவும் முடியாது." அர்ஜுனன் "சொல்க!" என்றான். "நன்று, காலனை தேடிச்செல்பவர் இருளெதிர்வர் காணும் காலகாலனைக் கண்டே அடங்குவர். அச்சமில்லாதவர் செல்லும் பாதை அது" என்றார் அவர்.

“நான் சென்ற பாதையை மட்டும் சொல்கிறேன்” என்றார் காளாமுகர். அர்ஜுனன் காலை எடுக்க அவர் எழுந்தார். “நான் பிறப்பால் அசுரன். சர்மாவதி ஓடும் சாம்பபுரம் என்னும் ஊரைச் சேர்ந்தவன். எந்தை அந்நிலத்தின் அரசர். நான் அவர் நோற்றுப்பெற்ற மைந்தன். என் குருதியின் இயல்பால் அச்சமற்றவனாக இருந்தேன். அச்சமின்மை என்பது கட்டின்மையே. அச்சமே மானுடன் எனும் ஒழுக்கின் கரை. பகையை, பழியை, இறப்பை, ஊழை அஞ்சாதவன் அறத்தையும் அஞ்சாதவனே.”

நான் ஆற்றியவை அனைத்தும் மானுடமீறல்களே. குலத்தின், நிலத்தின் எல்லைகளை மீறிச்சென்றேன். ஒவ்வொரு மீறலுக்குப் பின்னரும் புதியவற்றை நோக்கி விழிதூக்கினேன். உண்டு கொண்டு புணர்ந்து கொன்று அடையும் அனைத்து உவகைகளையும் அடைந்தபின் வெறுமை எஞ்சுவதைக் கண்டு மேலும் வெறிகொண்டேன்.

அன்றொருநாள் தனியாக புரவியில் யமுனைக்கரையினூடாகச் சென்றேன். இருள்பரவி விண்மீன் ஒளியில் கரிய ஆறு மின்னிக்கொண்டிருந்தது. மீன் ஒன்று செல்லும் ஒலி கேட்டது. அது ஒரு தோணி எனத் தெளிந்தேன். ஓர் இளம்பெண் தனியாகச் செல்வதைக் கண்டேன். இளங்கருமை கொண்டிருந்த வானப்பின்புலத்தில் அவள் உடல்கோடு பேரழகி என அவளைக் காட்டியது. என்னில் காமம் எழுந்தது. காமம் கொண்ட மறுகணமே அப்பெண்ணை அடைவது அன்று என் வழக்கம்.

நீரில் பாய்ந்து நீந்தி அவளை அணுகினேன். அவள் அஞ்சி எழுந்து கூவுவாள் என எண்ணினேன். ஆனால் எட்டு கை எழுந்த கொற்றவைபோல் படகில் அவள் நின்று என்னை துடுப்பால் அடித்தாள். என் மண்டையோடு உடையும் ஒலியை

உள்ளே கேட்டேன். விழிகளுக்குள் ஒளி சிதறியது. குருதி வழிந்து என் வாய்க்குள் சுவைத்தது. ஆனால் அவள் சினம்கண்டு மேலும் வெறிகொண்டேன்.

கையூன்றி அத்தோணியில் ஏறிக் குதித்து குருதிவழிய அவளை பற்றிக்கொண்டேன். அவள் என்னைத் தூக்கிச் சுழற்றி அறைந்தாள். ஆனால் என் வெறி எனக்கு மேலும் மேலும் வல்லமையை அளித்தது. அவளை வென்று கீழ்ப்படுத்தி மேலே பரவி அவள் முகத்தை அணுக்கமாகக் கண்டேன்.

அத்தருணத்தில் எனக்குப் பின்னால் ஒரு சிறு தோணியை கண்டேன். அதில் முழுதுடலுடன் அமர்ந்திருந்தவள் நான் கண்டவரிலேயே பேரழகி. கன்னங்கரிய நிறம். கொழுங்கன்னங்களில், ஏந்திய இளமுலைகள் மேல் ஒளி வளைந்து வழிந்திருந்தது. ஒவ்வொன்றும் முழுமைகொண்டிருந்த உடல். அவளை நோக்கி திகைத்து நின்ற என்னை கையசைத்து அழைத்தாள். அந்தத் தோணிமேல் தாவி ஏறி அவளை பற்றிக்கொண்டேன்.

ஆனால் அக்கணமே தோணி விசைகொள்ளத் தொடங்கியது. கரைப்பச்சை வண்ணப்பெருக்காகி கண்ணிலிருந்தே மறைந்தது. அவ்விரைவு இயல்பானதல்ல என்று அறிந்திருந்தேன் என்றாலும் அச்சமின்மையாலேயே அவளை அள்ளி அணைக்க முயன்றேன். அவள் சிரித்து என்னை சுழற்றியடித்தாள். அவள் உடல்தொட்டபோது நான் மேலும் வெறிகொண்டேன். அள்ள அள்ள மீனென நழுவியது அவள் உடல். மானுட உடலுக்குரிய வெம்மை அதில் இல்லை. மீன்குளிர். அவள் விழிகளை அப்போது கண்டேன். மீனென இமைப்பற்ற மணிக்கண்கள். அவள் வாயின் பற்களைக் கண்டேன். மீனின் கூர்முள்வெண்மை.

“யார் நீ?” என்றேன். “என் பெயர் யமி. சூரியனுக்கு சம்க்ஞை என்னும் கன்னியில் பிறந்தவள். விஸ்வகர்மன் என் மூதாதை” என்றாள். என் கையிலிருந்து நழுவி நீரிலெழுந்த பெருஞ்சுழியின் மையத்தில் குதித்தாள். அவளைச் சூழ்ந்து நீர் பறந்தது. என்னை நோக்கி கை நீட்டி அழைத்தாள். பிறிதொன்றும் எண்ணாமல் நான் அவளைத் தொடர்ந்து குதித்தேன்.

நீர்க்கதவுகள் திறந்தன. நீர்த்திரைகள் விலகின. நீர்ப்பாதைகள் நீண்டெழுந்தன. அங்கே அவளை மீண்டும் கண்டேன். விடாது அவளைத் தொடர்ந்து சென்றேன். மீன் என்றும் மங்கையென்றும் என்னை அவள் அழைத்துச்சென்றாள். ஆழ்ந்து மேலும் ஆழ்ந்து நீளிருங்குகைப் பாதையொன்றினூடாக ஏழு அடுக்குகளாக அமைந்த ஆழுலகை கடந்து சென்றோம்.

“அங்கே நான் யமனைக் கண்டேன்” என்றார் காளாமுகர். “சினம்கொண்ட விழிகளுடன் என்னை நோக்கி எழுந்தது காலப்பெருந்தோற்றம். கைப்பெருக்கு கால்பெருக்கு விழிப்பெருக்கு இருளலைப்பெரும்பெருக்கு. நான் அதன் முன் விழியிமைக்காமல் நின்றேன். அச்சமின்மை கண்டு கனிந்தது இறப்பு. என் அருகே வந்து நான் விழைவதைக் கேட்டது.”

“நான் கேட்டதென்ன அவர் அளித்ததென்ன என்று உனக்கு சொல்லமாட்டேன். நான் கண்டதும் பிறிதொருவரிடம் சொல்லிவிடமுடியாதது. உணர்வு மீண்டெழுந்து இருளுக்குமேல் வந்தபோது யமுனையின் கரையில் கிடந்தேன். என் உடலெங்கும் நீர்ப்பாசி படிந்திருந்தது. என் தோல் மீன் போல மின்னியது. என்னைக் கண்ட செம்படவர் அஞ்சி விலகி ஓடினர். எழுந்து முழுதுடலுடன் நடந்தேன்.

மீண்டு ஊர்செல்லவில்லை. என் வழி சிவமொழுகும் ஆறென்றாகியது.”

“ஆம், யமுனை என உருக்கொண்டு மண்ணில் ஓடுபவள் ஆழிருளின் தெய்வமான யமியே என்று தொல்கதைகள் சொல்கின்றன” என்று அர்ஜுனன் சொன்னான். அவர் “ஆம், கதைகளை நான் பின்னர் அறிந்துகொண்டேன்” என்றார். “பரம்பொருளில் இருந்து பிறந்த பிரம்மனின் மைந்தர் மரீசி. அவரது மைந்தர் காசியபப் பிரஜாபதி. காசியபருக்கு அதிதியில் பிறந்தவன் சூரியன்.”

“சூரியனின் மனைவியர் இருவர். சம்க்ஞை மூத்தவள். சாயை இளையவள். நோக்கும் விழிகளால் ஒளிகொள்பவள் மூத்தவள். ஒளிகொள்பவை அனைத்தையும் தொடர்பவள் இளையோள். ஒளிர்நிறம் கொண்ட சம்க்ஞையின் கருமைவடிவம் சாயை. ஓசையற்றவள். விழியொளி சூடியவள். சூரியனுக்கு சம்க்ஞையில் பிறந்தவர் மூவர். மனு, யமன், யமி. மூத்தவனாகிய மனு மானுடரை படைத்தான். யமன் அவர்களின் உயிர்கவர்ந்தான். யமி இறப்பின் தோழியானாள்.”

“பேரொளிகொண்ட விண்ணுலாவிக்கு மூத்தவளைவிட இளையவளே இனியவள் என்பது தொல்கதையின் கூற்று. இளையவளுக்கு சூரியனின் குருதியில் ஆறு மைந்தர் பிறந்தனர். அவர்களில் ஒருத்தியான ஃபயை அச்சத்தின் தேவி. அவளை ஹேதி என்னும் இருளரக்கன் மணந்தான். அவனே நோய்களுக்கு முதல்வன். அவன் உடன்பிறந்தாரான அஸ்வினிதேவர்களே அந்நோய்களுக்கு மருந்தாகி வருபவர்கள்.”

“ஃபயை யமியின் முதன்மைத்தோழி.” என்றார் இருளெதிர்வர். “அவளை அஞ்சாதவர் முன்பு மட்டுமே யமி தோன்றுவாள். தனக்கு உகந்தவர்களை தன் மூத்தவரிடம் அழைத்துச்செல்வாள்.” அர்ஜுனன் “நான் அவளை காண்கிறேன்” என்றான். “நன்று சூழ்க!” என்றார். அவன் அவர் கால்களைத் தொட்டு வணங்கினான்.

“இளையவனே, ஃபயைக்கு தனக்குரிய வடிவமென ஏதுமில்லை. உன்னுள் ஆழத்தில் உறையும் அச்சத்தின் முகத்தையே அவள் தானும் கொண்டு வருவாள்” என்றார். “உங்கள் முன் எழுந்த முகம் எது, இருளெதிர்வரே?” என்றான் அர்ஜுனன். “நான் எண்ணியிராதது” என்றபின் அவர் புன்னகைத்தார்.

**[ 26 ]**

யமுனை மீது சென்ற படகில் அர்ஜுனன் தனித்து அமர்ந்திருந்தான். அவன் கையிலிருந்த துடுப்பில் இருளென ஓடிய நீர்ப்பரப்பு நெளிந்து ஒளிகொண்டது. தொலைவில் பெருவிழியென எழுந்த அந்தச் சுழியை கண்டான். அவன் சென்ற படகை அச்சுழியின் எதிரலை வந்து பின்னுக்குத் தள்ளியது. சுழி அளிக்கும் இறுதி வாய்ப்பு அது என எண்ணிக்கொண்டான். உந்தி படகை அச்சுழியின் விளிம்பில் பொருத்திக்கொண்டான்.

அவன் படகை அள்ளித் தூக்கிச் சுழற்றிக்கொண்டது சுழி. வானும் கரைகளும் அழிந்தன. நீரே இன்மையென்றாகியது. சுழிமையமென நின்றிருந்த கருமையொளிர்புள்ளி மட்டும் அசையாதிருந்தது. அவன் அதை நோக்கி சென்றுகொண்டிருந்தான். அதன் விழிமணிக்குள் மின்னிய நுண்கருமைத் துளிக்குள் ஒரு சிறு வாயில். அதனுள் குளிர்ந்து

செறிந்து நுழைந்து அவன் இருளுக்குள் விழுந்தான். இருளுக்குள் வெளிக்காலமிருக்கவில்லை. எனவே தொலைவும் இருக்கவில்லை. சித்தமிருந்தது. அது அறிந்த அகக்காலம் முடிவிலியென சென்றுகொண்டிருந்தது.

அவன் இடச்செவியில் ஒரு சிரிப்பொலி கேட்டது. புருவமையத்தில் ஒரு ஒளிப்புள்ளி என வெடித்தது அந்தச் சிரிப்பு. ஒளி வெடித்து துளிகளாகச் சிதறிப் பரவி இருண்டு பிறிதொரு துளி. தோல் எரியும் மணம். சீழ்மணம். தீப்பற்றிக் கருகும் உலர்மலம். முடிகருகும் வாடை. பெருமுரசின் தோல்கிழியும் ஒலி. வாள் ஒன்று வாளைக்கிழிக்கும் ஓசை. உடல் விதிர்த்து பற்கள் கிட்டித்து கைவிரல்கள் மரத்து அவன் விழுந்துகொண்டிருந்தான். அதிர்ந்து அதிர்ந்து அடங்கிய அவன் உடலுக்குள் இருந்து குமிழிகள் வெடித்து வெளியேறிக்கொண்டிருந்தன.

மெல்லிய பெண்குரலொன்று அவன் காதில் “வருக!” என்றது. “யார்?” என்றான். “வருக!” என்றது குரல். எரியும் தீயின் ஓசை. பெருமரம் பிளந்துவிழும் ஓசை. பாறைமேல் கொப்பரையை உரசும் ஓசை. பளிங்கில் துடிக்கும் ஒரு புழு. வலையில் சிக்கி அதிரும் பூச்சி. மெல்லமெல்ல கிழிபட்டுக்கொண்டிருந்தான். மென்மையாக. குருதி இனிதாக வழிந்து வழிந்து அகல கிழிந்து இரண்டானான். இரு பக்கமும் தசைக்கிழிசல்கள் கைநீட்டித் தவித்தன. நரம்புமுனைகள் புழுக்களென நெளிந்தன. இரு விழிகளும் ஒன்றை ஒன்று நோக்கின. வருக வருக வருக என காலம் ஒலித்துக்கொண்டிருந்தது. “யார்?” என்றான். வருக வருக வருக!

“யார்?” என அவன் கூவினான். “நான் ஃபயை. உன் அச்சம்” என்றது பெண் குரல். “எழுக... என் முன் எழுக!” அவள் நகைத்து

“அஞ்சுவது அஞ்சுக, இளவரசே!” என்றாள். “வருக!” என்று அவன் கூவினான். “வருக வருக வருக” என்று கூவிக்கொண்டிருந்தான். இரண்டு பேர். ஒருவன் இன்னொருவனை நக்கி நக்கி குருதியுண்டான். சுவையில் சொக்கியிருந்தது ஒற்றைவிழி. “வருக! என் முன் வருக!”

அவன் முன் அவள் வந்து நின்றாள். ஆழிவெண்சங்கு ஏந்தியிருந்தாள். நீலமணியுடல் மிளிர, விழிகள் நீண்டு ஒளி சூடியிருக்க, இதழ்களில் புன்னகையுடன் ஒசிந்து நின்றாள். அவன் அவளை விழித்து நோக்கி மிதந்தான். “தெரிகிறதா?” என்றாள். அவன் கனவிலென “மோகினி” என்றான். அவன் மேல் குனிந்து மாலினி சொன்னாள் “என்ன சொல்கிறீர்கள், இளவரசே?” அவன் மீண்டும் “மோகினி” என்றான். மாலினி சிரிப்புடன் “முளைவிடும் செடியிலேயே கனிமணம் இருக்கும்” என்றாள். யாரோ நகைத்தனர்.

அவள் அவனருகே வந்து கையைப் பிடித்து “வருக!” என்றாள். அவன் நீள்மூச்சுடன் “நீ யார்?” என்றான். “ஃபயை. என் தோழி உங்களுக்காக அங்கே காத்திருக்கிறாள்.” அவள் கைகள் குளிர்ந்திருந்தன. அவன் அவளுடன் நடந்தபோது காலடிகளின் ஒலி எழவில்லை. ஆனால் சூழ்ந்திருந்த இருட்டின் நீர்மை அதிர்வுகொண்டது.

வெளியே ஒரு தேர் நின்றிருந்தது. இருளுருகியமைந்த மெல்லிய மின் கொண்டது. அதனருகே நின்றிருந்தவள் அவனை நோக்கி வந்தாள். அவள் புன்னகையின் வெண்மையும் விழிகளின் ஒளியும் அணுகி வந்தன. “வருக!” என்றாள். “என் தமையனின் நகருக்குள் உங்களை அழைத்துச்செல்லவிருக்கிறேன்.”

அர்ஜுனன் அந்தத் தேரில் ஏறிக்கொண்டான். அது காற்றின்மேல் என சென்றது. இருள் கிழிந்து கிழிந்து வழி கொடுத்தது. ஒளியால் நோக்கிய விழிகள் இருளால் உருவறியும்படி ஆகிவிட்டிருக்கின்றனவா என்ன? இருபக்கமும் இருண்டு எழுந்து நின்றிருந்தன பெரும்பாறை அடுக்குகள். கூர்ந்து நோக்கியபோது அவை முகங்களாயின. ஊழ்கத்தில் இருந்தன. புன்னகைத்தன. கூர்ந்து நோக்கின. சொல்லெடுக்கும் கணத்தில் நின்றன. நோக்க நோக்க விழி தெளிந்து வருந்தோறும் முகங்கள் முகங்களென சூழல் விரிந்தது.

பின்னர் அவன் தரையை பார்த்தான். மண்டையோடுகள் உருளைப்பாறைகளாக பரவியிருந்தன. அப்பாதை சென்று இணைந்த கோட்டை முகங்களைக்கொண்டு கட்டப்பட்டிருந்தது. அதன் திறந்தவாயிலுக்கு இருபக்கமும் பனிநிலவுகள் என முரசுத் தோற்பரப்புகள் தெரிந்தன. “அவைமுதல்வனையும் படைமுதல்வனையும் அவரே சென்று அழைத்துவரவேண்டுமென்பது நெறி. அவர் உருவினள் என்பதனால் நானே வந்தேன்” என்றாள் யமி.

காலபுரியின் கோட்டைமேல் காகக்கொடி பறந்துகொண்டிருந்தது. அதற்கு கதவுகள் இருக்கவில்லை. அவர்கள் நெருங்கியதும் முரசுகள் ஒலிக்கத் தொடங்கின. உள்ளே இருந்து நால்வர் விழிகள் மின்னும் கரிய எருமைகள் மேல் ஏறி அருகணைந்தனர். பன்றித்தலைகொண்ட முதல்வன் “நான் சண்டாமிருகன். யமபுரியின் முதன்மைக் காவலன். இழிகுணம் கொண்டவர்களை அழைத்துவரும் பொறுப்பு கொண்டவன். எங்கள் நகருக்கு வருக!” என்றான்.



சிங்கத்தலைகொண்ட இரண்டாமவன் “என்பெயர் சார்த்தூலன். களம் நின்று சமராடும் வீரரை அழைத்துவருபவன். தங்கள் வருகைக்கு மகிழ்கிறேன்” என்றான். கழுதைத்தலை கொண்டிருந்த மூன்றாமவன் “என் பெயர் ஔதும்பரன். பொருள் சுமந்து வாழ்ந்து அமைந்தவருக்கு இறுதிசொல்லச் செல்பவன்... வருக, பாண்டவரே” என்றான். மானின் தலைகொண்டிருந்த நான்காமவன் “என் பெயர் சம்பரன். அறிவிலமைந்தவரின் இறுதித்துணை நான். தங்களை வாழ்த்துகிறேன்” என்றான்.

அவர்கள் அந்தத் தேரைச் சூழ்ந்து கருமுகிலெருமைமேல் மிதந்துவந்தனர். நகரின் இல்லங்கள் அனைத்தும் மண்டையோட்டுக் கற்களால் கட்டப்பட்டிருந்தன. நின்ற உடல்கள் தூண்களாயின. கிடந்தவை படிகள். தாங்கப்பட்டவை உத்தரங்கள். மணிகளென ஒளிவிட்டுக்கொண்டிருந்தன விழிகளும் பற்களும். மூச்சுக்காற்றால் அறைகளின் திரைச்சீலைகள் அசைந்தன.

“ஆயிரம் கோடி யமகணங்களின் வசிப்பிடம் இது” என்றாள் யமி. “அவை ஓசையற்றவை. காற்றிலேறிச்செல்லும் கால்கள் கொண்டவை.” அவன் அங்கு இருளுக்குள் நிழல்களென அசைந்த யமகணங்களை நோக்கிக்கொண்டு சென்றான். அவை ஒன்றன் மேல் ஒன்றென இறகிறகாக அடுக்கப்பட்டு ஒற்றைப்பறவையாக மாறி விண்ணில் பறந்தெழுந்தன. கால்களாகி செவிகளாகி தலையாகி வாலாகி எருதாகி நடந்தன. கரைந்து நீண்டு உருகி வழிந்து உருக்கொண்டு எழுந்து புன்னகைத்து நோக்கின.

“இவர்களை நான் கண்டிருக்கிறேன்” என்றான். “ஆம், வில்லேந்திய எவரும் கொலைக்களத்திலாடி குருதிகழுவி மதுவுண்டு துயில்கையில் இவர்களையே காண்கிறார்கள்” என்றாள் யமி. “உடல் தைக்காது மண்ணில் உதிர்ந்த அம்புகளை எடுத்து இவர்கள் வீசி விளையாடுகிறார்கள். தசையில் விழாத வாள்வெட்டுகளை கைகளால் பற்றிக்கொண்டு சிரிக்கிறார்கள். களம்புகுந்து களியாடுவதையே இவர்கள் விரும்புகிறார்கள்.”

அர்ஜுனன் அவர்களை நோக்கிக்கொண்டு சென்றான். “அரசர்களின் கனவுகளுக்குள் புகுந்து பலிகொடு என்று மன்றாடுவார்கள். நிமித்திகர் சோழிகளுக்கு நடுவே புகுந்து

ஊழின் திசைமாற்றவும் இவர்களால் முடியும். முதியோர் விழிகளை மங்கச்செய்கிறார்கள். நோய்கொண்டவர் நெஞ்சை குளிர்க்கரங்களால் வருடி வருக என்று அழைப்பார்கள்." அர்ஜுனன் "ஆம், இந்நகரில் நான் கேட்கும் ஒலியெல்லாம் வருக வருக என்றே உள்ளது" என்றான்.

"வீரரே, இங்குள்ள யமகணங்கள் அனைத்தும் சொல்வது அந்த ஒற்றைச் சொல்லையே. பாறைகளென சுவர்களென எழுந்த முகங்களின் உதடுகள் அதையே சொல்லிக்கொண்டிருக்கின்றன. இந்நகரின் சொல் என்பது அதுவே. ஈரேழு உலகங்களிலும் கனிந்து கைநீட்டி அருகழைப்பது இதுமட்டுமே."

அவன் அந்நிழலுருக்களை நோக்கி "அச்சுறுத்தும் இருளலைகள்" என்றான். "ஆம், ஆனால் உற்றாரின் இறப்புக்குப்பின் எஞ்சுபவர்களுக்கு இவர்களே தோழர்கள். துயர்சலித்து அவர்கள் மயங்கும்போது இறந்தகால ஒளிர்நினைவுகளை அள்ளிக்கொண்டுவந்து கனவுகளில் பரப்புபவர்கள். உற்றவர்களின் முகங்களாக எழுந்து வாழ்வது இனிது என்பவர்கள். மைந்தரை இழந்த அன்னையின் முலைப்பாலை உறிஞ்சி உண்டு அவை உருமீள வைப்பவர்கள். அன்னையை இழந்த குழவியின் கட்டைவிரலை முலைக்காம்பாக ஆக்குபவர்கள்."

"இழப்புகளை நினைவுகளாக சமைப்பவர்கள். நினைவுகள் கனிந்து இனிக்கச் செய்பவர்கள். இவர்கள் இல்லையேல் உயிர்கள் வாழமுடியாதென்று அறிக!" என்றாள் யமி. "இவர்கள் ஏன் இங்கு சொல்லின்றி இருக்கிறார்கள் என்றால் உயிர்கள் வாழும் அவ்வுலகில் புழங்கும் அத்தனை சொற்களும் அவர்களுக்குரியவையே. அவையனைத்தையும் கொண்டு

மூடியும் உருமாற்றியும் எரித்தும் செரித்துமே இறப்பை கடக்கின்றனர் மானுடர்.”

நகர்நடுவே எழுந்தது நூறடுக்கு மாளிகை. அதன் அனைத்துச் சாளரங்களும் விழிகளென ஒளிகொண்டிருந்தன. அவர்களின் தேர் சென்று அதன் வட்டமான முற்றத்தில் நின்றதும் உள்ளிருந்து வெளிர்நிறத்தில் மிதந்தெழுவதுபோல வந்த அந்தணன் “வருக!” என்றார். “இவர் சித்ரபுத்திரர். இந்த நகரின் அமைச்சர்” என்றாள். அர்ஜுனன் தேரில் இருந்து இறங்கி அவருடன் நடந்தான்.

இருபுறமும் எழுந்து வந்த தூண்களாக நின்றிருந்த உடல்கள் உயிர்ப்பும் உடலுணர்வும் கொண்டிருந்தன. கொடித்தோரணங்கள் என செவிகளும் கைவிரல்களும் ஆடின. மலர்மாலைகளாக தொடுக்கப்பட்டிருந்தன இமைகளும் நாவுகளும். மணிமாலைகளென நகங்களும் பற்களும். காலடியில் அழுந்தியது வாழும் தசை.

“உயிருள்ளவை” என்று அவன் சொன்னான். “இளவரசே” என அவன் அருகே மூச்சுவெம்மையுடன் குனிந்து தலையைத் தொட்டு மாலினி அழைத்தாள். “விழி திறவுங்கள்... இளவரசே!” வேறு ஒரு முதியகுரல் “வெம்மை இறங்க நாளை காலையாகும். மருந்து உடலில் ஊறவேண்டும்” என்றது. “இரவெல்லாம் நெற்றியை குளிரவைத்துக்கொண்டிருங்கள்.” அவன் “வாழ்பவை...” என்றான். அவன் நெற்றியில் ஈரப்பஞ்சு குளிராகத் தொட்டது.

எதிரே சுவரென அமைந்த உயிர்த்தோல்பரப்பில் வரையப்பட்ட ஓவியத்தை தலைதூக்கி நோக்கி அவன் நின்றான். வலக்கையில் வாளும் இடக்கையில் கலமும் தோளில்

விழிமணி மாலையுமாக புன்னகைக்கும் முகத்துடன் வேதாளத்தின்மேல் அமர்ந்திருந்தான் அந்த தேவன். தலையில் மலர்முடி. அவன் காலடியில் ஒரு நாய் படுத்திருந்தது. அவன் ஆண்குறி எழுந்து நீண்டிருந்தது.

அவன் முகத்தை அடையாளம் கண்டதுமே அவன் திரும்பிப்பார்த்தான். யமி புன்னகைத்து "என் முகம்" என்றாள். "இவர்தானா?" என்றான். "இவர் மனு. எங்கள் முதல்மூத்தவர்" என்றாள். "மானுடரைப் படைத்த விதை." நேர் எதிரில் அதேமுகம் கொண்ட பிறிதொரு தேவன் துயர்முகத்துடன் அமர்ந்திருந்தான். "அவர் எதிர்மனு. எங்கள் தந்தைக்கு சாயையில் பிறந்தவர். மனுதேவரின் நிழலுரு" என்றாள் அவள்.

நீலப்புகையாலான வாயிலைத் திறந்து இரு காவலர் தலைவணங்கினர். "வருக இளவரசே, அரசர் தங்களுக்காக காத்திருக்கிறார்" என்றார் சித்ரபுத்திரர். அவன் காலெடுத்து வைத்து உள்ளே சென்றான்.

# கிராதம் - 20

**[ 27 ]**

காலத்தின் இருள் தேங்கிய கரிய அரண்மனையின் அறைகளினூடாக விதிர்ப்புகொண்டு அசைந்த உயிர்த்தசைகளினாலான தரைமேல் கால்வைத்து உயிர்ப்புக் காற்றின் அலைகளால் குழலும் ஆடையும் அசைய அர்ஜுனன் நடந்தான். சித்ரபுத்திரர் அவனுக்கு வழிகாட்ட யமி துணைவர பின்னால் ஔதும்பரனும் சண்டாமிருகனும் சம்பரனும் சார்த்தூலனும் உடன்வர இருளில் புதைந்து புதைந்து

அவ்வறைகளைக் கடந்து அரசமண்டபத்தின் முகப்புக்கு வந்து நின்றான்.

அங்கிருந்த காவலர் அவனை வணங்கி வாயில் திறந்து உள்ளே கொண்டு சென்றனர். பெருந்திரளென எழுந்து குவிந்து வளைந்து கூரையாகி சூழ்ந்திருந்த மானுட உடல்களால் ஆன மண்டபத்திற்கு நடுவே விண்ணிலென நின்றது ஒரு துலா. அதன் நடுவே முள் என அசையாதிருந்தது கூரிய வாள். அதன் கீழே அமைந்த அரசமேடையில் தன் தேவி தூமார்ணை இடம் அமர்ந்திருக்க முகங்கள் விழிதிறந்து இதழ்களில் நுண்சொல் உறைந்திருக்க பதிந்த ஏழடுக்கு மணிமுடி சூடி காலதேவன் அரியணை வீற்றிருந்தான்.

அனல் ஒளிரும் விழிகளும், எருமைக்கொம்பு போன்ற மீசையும் , புலிவிழிகளும் மான்விழிகளும் கொண்டு கோத்த இளநீலமணியாரங்கள் பரவிய மார்பும், பல்கோத்து அமைத்த வெண்மணியாரம் சுற்றிய பெருங்கைகளும், இருள்நெய்த ஆடையும், குருதியொளி கொண்டிருந்த கழல்கள் வளைத்த கால்களும் கொண்ட காலதேவன் அவனை கூர்ந்து நோக்கிக்கொண்டிருந்தான். அவனுக்குக் கீழே நிழலுருவ கணதேவர்கள் தரையில் படிந்தும் சுவரில் மடிந்தும் நின்றிருந்தனர். அவன் விழிதிரும்பியதும் உடல்கொண்டெழுந்து வணங்கி ஏவல் காத்தனர்.

அர்ஜுனன் அவன் முன் சென்று வணங்கினான். “அஸ்தினபுரியின் குருகுலத்து பாண்டுவின் மைந்தன் அர்ஜுனன் நான். தென்திசை ஆளும் அரசனை பார்க்க வந்துள்ளேன்” என்றான். மீசையை நீவியபடி விழிகளில் புன்னகையுடன் காலன் கேட்டான் “நான் பிறிதொரு அரசன் என்கின்றீர் அல்லவா?” அவன் விழிகளை சந்தித்து அர்ஜுனன்

சொன்னான் “ஆம்.” “நன்று, அவ்வெண்ணம் போற்றற்குரியது” என்றபின் திரும்பி “அவருக்கொரு பீடம் அளியுங்கள், அமைச்சரே” என்று சித்ரபுத்திரரிடம் சொன்னான்.

அவர் ஒருகணம் தயங்க “ஆம், இங்கு இதற்கு முன் ஒருவர் என் முன் பீடத்தில் அமர்ந்ததில்லை. ஆனால் இவர் அதை கோரிப்பெற்றிருக்கிறார்” என்றான். கணத்தோர் இருவர் நிழல் புடைத்து எழுந்து அமைத்துச் சென்ற பீடம் மழலைக் குழந்தைகளை கைகளையும் கால்களையும் ஒன்றுடன் ஒன்று பின்னி முடைந்து அமைத்ததாக இருந்தது. இளமார்புகள் மூச்சில் எழுந்தமைந்தன. குழைந்த வயிறுகள். தொப்புள்கள். பால்திரை மாறா கண்கள். சுவைதேடும் சிற்றுதடுகள். அர்ஜுனன் கையால் தொட்டு அவற்றின் மென்மையை உணர்ந்தபின் அமர்ந்து கைகளை பக்கவாட்டில் வைத்து நன்கு சாய்ந்து கொண்டான்.

“அவர்கள் உங்கள் குலத்தில் வாழ்வு முற்றாதிறந்த மைந்தர்கள்” என்றான் காலன். அர்ஜுனன் “இவ்வுடல்கள் அல்ல அவர்கள்” என்றான். காலன் “இவ்வுடல்களில் அவர்கள் தங்கியிருக்கிறார்கள்” என்றான். “அவர்கள் உதிர்த்துச் சென்ற பொருட்கள் இவை. இவற்றில் எஞ்சியிருப்பது எதுவென்றாலும் அவர்களுக்கு உகந்ததல்ல என்றே கொள்வேன். என் மூதாதையர் அறம் பிழைக்காத கோல் கொண்ட அரசர்கள் அளித்த அன்னத்தாலும் நீராலும் விண்ணில் நிலை நிறுத்தப்படுகிறார்கள். அவர்கள் அங்கு அறமீறல் ஒன்றுக்காகவே துயர்கொள்வார்கள்.”

காலன் அவனை நோக்கி சில கணங்கள் அமர்ந்திருந்தபின் “இன்நீர் அருந்துக!” என்றான். “ஆகுக!” என்றான் அர்ஜுனன். ஒரு கணத்தவன் கொண்டுவந்த தாலத்தில் இருந்த தலையைப்

பார்த்து அர்ஜுனன் விழி சுருக்கினான். யுதிஷ்டிரரின் விழிகள் அவனை துயருடன் நோக்கிக்கொண்டிருந்தன. அவர் இதழ்கள் அசைந்தன. வெட்டி வைக்கப்பட்ட அந்தத் தலையைத் தூக்கி கீழே ஒழுகிய குருதியை பொன்னாலான கிண்ணத்தில் ஊற்றி அவனிடம் நீட்டினான் கணத்தான். “பார்த்தா, அது என் துயர்” என்றார் யுதிஷ்டிரர்.

காலன் நகைத்து “அது விழிமயக்கல்ல. இங்கு நாங்கள் உண்பது கீழே வாழ்பவர்களின் குருதியைத்தான். மானுட உடல்களில் கணம் ஒழியாது ஊறும் குருதி எங்கு செல்கிறதென்று எண்ணுகிறீர்?” என்றான். “ஆம், அவற்றை காலம் உண்கின்றது என்றே உயிர்வேதம் சொல்கிறது” என்றபடி அவன் அக்குவளையை எடுத்தான். யுதிஷ்டிரர் “பார்த்தா, அது என் தனிமை” என்றார். அவன் அதை அருந்தியதுமே சோர்வெல்லாம் மறைந்து புத்துணர்வடைந்தான். “சுவையானது” என்றான் யமன். “ஆம், என் சுவை” என்றான் அர்ஜுனன்.

“சொல்க, நீர் வந்த நோக்கம் எது?” என்று எமன் கேட்டான். “அதை முன்னரே அறிந்திருப்பீர்கள், காலரே. மண்ணில் ஒன்பது மைந்தர்களை பறிகொடுத்த ஜாதவேதன் என்னும் அந்தணனுக்கு சொல்லுறுதி அளித்துவிட்டு இங்கு வந்திருக்கிறேன். அவன் இறுதி மைந்தனை உயிருடன் பெற்ற பின்னரே மீள்வேன்” என்றான் அர்ஜுனன். “அது இன்றுவரை புவியில் நடந்ததில்லை என்று அறிய மாட்டீரா? பிறப்பும் இறப்பும் நிகர் செய்யப்பட்ட அவ்வுலகில் ஒரு துளி சொட்டி நீர் உதிர்வதன் நெறியும் முன்னரே வகுக்கப்பட்டுவிட்ட ஒன்று. நானல்ல, பிற திசைத்தேவர்கள் அல்ல, மூன்று முதல்வர்கள் அல்ல, முழுமுதல் பிரம்மமே எண்ணினாலும் அதை மாற்றமுடியாது” என்றான் காலன்.

“ஆம், அவ்வாறே எனக்கு சொல்லப்பட்டது. ஆனாலும் வாக்களித்த ஒன்றின் பொருட்டு தன்னை முழுதளிப்பது வீரனின் கடமை” என்றான் அர்ஜுனன். காலன் தொடைதட்டி உரக்க நகைத்து “நீர் முன்னரே உயிர் துறந்துவிட்டீர், பாரும்” என்று இடப்பக்கம் கை நீட்டினான். அங்கு தன் உடல் ஒரு பீடமென போடப்பட்டிருப்பதை அர்ஜுனன் கண்டான். இரு கைகளையும் கால்களையும் ஊன்றி மல்லாந்து வளைந்து வயிறு மேலே பரந்திருக்க நின்றிருந்த அவன் உடல்மேல் தூமக்கலம் இருந்து புகைந்துகொண்டிருந்தது. “யமுனைக்கரையின் புதர்க்காடு ஒன்றுக்குள் உம் சடலத்தின் மீது காகங்கள் அமர்ந்திருக்கின்றன” என்று அறத்தோன் சொன்னான். “அவை என்னை உண்ணட்டும்” என்றான் அர்ஜுனன்.

“இறப்புக்கு என்றே எழுந்தேன். இறந்து இங்கு வந்திருக்கிறேன். இங்கு ஏதேனும் நான் இழப்பதற்கு இருந்தால் அதையும் கூறுக! இழந்து இழந்து சென்று எல்லையில் பெற்றுக்கொள்கிறேன் நான் விழைவதை” என்றான் அர்ஜுனன். “ஒரு சொல்லின்பொருட்டு வந்துள்ளேன். அது ஒன்றே நான் நிலைகொள்வது.” யமன் “இங்கு நீர் இழப்பது மறத்தால் அறத்தால் அளியால் நீர் ஈட்டிய விண்ணுலகங்களைத்தான். இந்நற்செயலுக்கென உமக்கு வந்தமையும் அருட்கொடையையும் நீர் இழப்பீர். உம் மைந்தர் அளிக்கும் அன்னமும் நீரும் இங்கு வந்து சேர்வதில்லை. முடிவிலி வரை இங்கு ஒளி எழுவதில்லை” என்றான்.

“இளைய பாண்டவரே, முடிவிலியில் வாழ்வதென்பதே நரகம். அங்கு செல்வதற்கு மட்டுமே பாதை உள்ளது” என்று யமன் தொடர்ந்தான். “நரர்களினால் ஆனது அது. நீர் வெறுப்பவர்கள்

மட்டுமே சூழ்ந்திருக்கும் முடிவிலா இருள்வெளி." அர்ஜுனன் விழிமாறாது "அவ்வாறே ஆகுக!" என்றான். "நான் கடந்து வரவேண்டிய இடங்கள் அவை என்றே கொள்கிறேன். என் எல்லை எதுவென அறியும் வாய்ப்பு இது. எழுந்துவரும் ஒவ்வொரு எல்லையையும் கடக்கிறேன். கடக்க முடியாத எல்லையில் அழிகிறேன். எங்கும் நின்றிருக்க மாட்டேன்."

"நீர் அஞ்சவில்லையா?" என்றான் யமன். "நான் எனக்கென என்றும் அஞ்சியதில்லை" என்று அர்ஜுனன் சொன்னான். "என் சொல்லை நெஞ்சில் அணிந்து அங்கொரு அந்தணன் எனக்காகக் காத்திருக்கிறான். இங்கு நான் தோற்பேன் என்றால் உங்களில் ஒரு கணத்தோன் சென்று அவனிடம் சொல்லட்டும், வீழ்ந்தான் இளைய பாண்டவன் என்று." காலன் திகைப்புடன் அவனை நோக்கிக்கொண்டிருந்தான் அவனைச் சூழ்ந்து பல்லாயிரம் திகைத்த விழிகளாக நரகம் அவனை நோக்கியிருந்தது.

"இளையவரே, எதன் பொருட்டு இங்கு நீர் வந்தீர்? மண்ணில் நிகரற்ற வீரன் என்ற சொல்லை நிலை நிறுத்தவா? அதன்பொருட்டா இந்நரகங்களை எதிர்கொள்கிறீர்?" என்றான் காலன். "இல்லை. காலம் என்பது சித்தம் சென்றுதொடாப் பெருக்கு. இன்று இவ்வுலகில் நிகரற்றவனாக இருந்தென்ன பொருள்? நாளை எழும் காலத்தின் அலைகளில் எத்தனையோ மாவீரர்கள் எழுவார்கள். அவர்களில் ஒருவனாகவே நான் நின்றிருப்பேன். எனவே ஒருபோதும் அச்சொல் என்னை தருக்கி நிமிரவைத்ததில்லை" என்றான் அர்ஜுனன்.

"பிறகென்ன? உம் தோழனால் அவ்வந்தணன் புறக்கணிக்கப்பட்டான் என்பதனாலா? அவனுக்கெதிராகவா இங்கு கிளம்பி வந்தீர்?" என்றான் யமன். "ஆம்" என்று

அர்ஜுனன் சொன்னான். “அவனில் கூடியிருக்கும் தெய்வமேதென்று அறியேன். அது இறங்கியபின் அவ்வந்தணனைப் பழித்து துரத்தியமைக்காக அவன் நாணக்கூடும். அன்று அவன் காலடியில் அமர்ந்து அவன் தவறியவற்றை ஆற்றும் பொறுப்பில் நான் இருந்தேன் என்று அப்போது அவனிடம் சொல்லவேண்டும்” என்று அர்ஜுனன் சொன்னான். “காலத்திற்கிறையே, அவனை வென்று செல்வதற்காக அல்ல, அவன் விட்டுச் சென்றதை நிறைவேற்றவே வந்தேன்.”

அரியணைவிட்டு எழுந்து ஓர் அடி வைத்து முன்னால் வந்து குனிந்து விழிகூர்ந்து நோக்கி யமன் கேட்டான் “காலத்தின் மறுமுனையையும் காண விழிகொண்டவன் நான். ஒருநாள் அவனை நீர் மறுதலிப்பீர். உம் நாவால் அவனைப் பழிப்பீர். உளம் வெறுத்து அவனிடமிருந்து விலகிச் செல்வீர். அதை அறிவீரா?” சித்ரபுத்திரர் நீள்மூச்செறிந்தார்.

“ஆம், அறிவேன்” என்று அர்ஜுனன் சொன்னான். “தன் முழு விடுதலையை தன்னந்தனியாகவே எவரும் ஏறிக்கடந்து அடையவேண்டும். அத்தனிமையில் கற்றதும் உற்றதும் முற்பிறப்பில் பெற்றதும் உடனிருக்காதென்று நூல்கள் சொல்கின்றன.” காலன் பெருமூச்சுடன் திரும்பி அமர்ந்துகொண்டான். “இன்று நீர் வெல்ல வந்தது எவற்றை என்றறிவீரா? இருபத்தியெட்டு நரகங்களால் ஆனது இவ்வுலகம். ஒன்றிலிருந்து பிறிதொன்றுக்கு ததும்பிச் சொட்டும் மானுடர்கள் இறுதி ஆழத்தில் இருக்கும் இருளுலகில் சென்றமைகிறார்கள். அவ்வுலகங்களை வென்று வருபவன் இறப்பை வென்று நின்று சொல்கோர முடியும்.”

“இக்கணமே எழுகிறேன். நான் வந்தது அதற்காகவே” என்றான் அர்ஜுனன். பெருமூச்சுடன் கால்களைத் தளர்த்தி அமர்ந்து “இன்றுவரை இப்படி நிகழ்ந்ததில்லை. எனவே நிகழப்போவது என்னவென்று நான் அறியேன். உமக்கென என் உள்ளம் துயர்கொள்கிறது” என்றான் காலதேவன்.

**[ 28 ]**

அறத்துக்கிறைவனின் நான்கு உதவியாளர்களும் வந்து அர்ஜுனனின் அருகே நின்றனர். சித்ரபுத்திரர் தலைவணங்கி “வருக, இளைய பாண்டவரே! தங்கள் வழியை காட்டுகிறேன்” என்றார். அவன் திரும்பியதும் யமி அவன் கையைப் பற்றி “வேண்டாம், இளையவரே. அது மீளமுடியாத பாதை” என்றாள். அர்ஜுனன் “அனைத்துப் பாதைகளும் மீளமுடியாதவைதான், இளையவளே. மீளுதலென்பது ஒரு நம்பிக்கையன்றி வேறல்ல” என்றான். அவள் விழிநீருடன் “எதற்காக இது?” என்றாள். “நான் வீரன் என்பதற்காக. என் உள்ளிருக்கும் பிறப்பியல்பு இதைச் சொல்கிறது என்பதற்காக” என்றபின் புன்னகையுடன் அவள் தோளைத் தொட்டுவிட்டு திரும்பி நடந்தான்.

“இளையவரே...” என அவள் அழைத்தாள். அவன் அக்குரல் கேட்டு திடுக்கிட்டுத் திரும்பி நோக்கினான். “நான்தான்” என்றாள் கரிய பேரழகி. அவன் உளம் விம்ம திரும்பி அவளை நோக்கி நடந்தான். அவள் பின்னால் விலகவில்லை என்றாலும் நடுவே இருந்த தொலைவு குறையவில்லை. “நான்தான்” என அவள் சொன்னபோது கரிய ஒளிகொண்ட முலைக்குவைகள் எழுந்தமைந்தன. அவற்றின் கூர்காம்புகளில் விழிநோக்கிருந்தது. “நான்தான். என்றும் உங்கள் காமம் நின்றிருந்தது என்மீதுதான்.”

“நீ என்னை விரும்பியதில்லை” என்று அவன் சொன்னான். “உன்னை அணுகும்போதெல்லாம் குறையாத இடைவெளியையே உணர்ந்தேன்.” அவள் புன்னகைத்து “மண்ணிலுள்ள எவருடனும் அவ்விடைவெளி எனக்கு உள்ளது” என்றாள். அவன் மேலும் முன்னகர அவள் அதே தொலைவுக்கு அப்பால் ஒரு குளிர்ந்த நீர்த்துளி என இருளின் ஒளி சூடி நின்றாள். “நான் அளிக்க விழைந்தேன். வெல்லப்படுவதை அல்ல” என்றாள். “வெல்லாது ஒன்றைக் கொள்வது எனக்குப் பழக்கமில்லை.” அவள் நீள்மூச்சுடன் “ஆம், இரு ஊசல்களில் நாம் ஆடிக்கொண்டிருந்தோம். தொட்டுத் தொட்டு விலகினோம்” என்றாள்.

“நீ என்னை விலக்கினாய். அணுக்கத்தின் உச்சத்தில் ஆண்மட்டுமே உணரத்தக்க ஒரு விலக்கம் அது” என்றான் அர்ஜுனன். “அவ்விலக்கத்தை நீ பிறருக்கு அளித்தாயா? உண்மையைச் சொல்!” அவள் விழிதிருப்பி “இல்லை” என்றாள். அவன் நெஞ்சு எழுந்தமைந்தது. “ஒருவருடன் என் கல்வி கலந்தது. பிறிதொருவரிடம் என் உடல் கலந்தது. இருவரிடம் இருமுலைகள். அவற்றுக்குத் தடைகள் இல்லை.” அவள் நெஞ்சக்குமிழிகள் விம்மித்தளர்ந்து மீண்டும் விம்முவதை அவன் நோக்கிக்கொண்டிருந்தான்.

“உங்கள் முன் வந்து நின்றது என் இருத்தல். ஆணவமென்றும் உணர்வுக்குழம்பல் என்றும் மாற்றுருக்கொண்டு ஆடியது அது. அறிவீர் இளையவரே, இருத்தலை அறிதல் எவருக்கும் இயலாது. அறிதல் என்பது ஆதல், கடந்துசெல்லல். அமைதலே இருத்தல். பாறையை காற்று அறியமுடியாது.” அவள் குரல் தழைந்தது. “நான் கொந்தளித்துக்கொண்டிருந்தேன், இளையவரே. அணுக்கத்தில் அகற்றியும் அகன்றபின் எண்ணி

ஏங்கியும். அரசியென்றும் தேவியென்றும். வாளென்றும் வெண்பட்டென்றும் ஒளி மாறிக்கொண்டிருந்தேன்.”

அவன் பெருமூச்சு விட்டு “ஆம், அதை நானும் எங்கோ உணர்ந்திருந்தேன்” என்றான். “கரியநதி யமுனை. அது இந்திரன் நகரைச் சூழ்ந்தோடுகிறது. அதற்குமேல் நான் சொல்வதற்கேதுமில்லை.” அவன் அவளை நோக்கி மீண்டும் ஓர் அடி வைத்தான். சித்ரபுத்திரர் அவன் தோளைத் தொட்டு “திரும்புகிறீர்களா, பாண்டவரே?” என்றார். “இல்லை, நான் திரும்புவதில்லை” என்றபின் அவன் அவள் விழிகளை விலக்கி முன்னால் சென்றான்.

உகிரெழுந்த கால்களுடன் ஆடி நடந்த சிம்மமுகம் கொண்ட சார்த்தூலன் திரும்பி “களம்பட்டு நீங்கள் விழுந்தால் மண் உங்களை அணைக்கையில் உயிர்கொண்டு செல்ல வரவேண்டியவன் நான். நூறு களங்களில் உங்களுக்கு வலப்பக்கம் நின்றிருக்கிறேன். உங்கள் கைத்திறனும் விழித்திறனும் உளக்கூர்மையும் நன்கறிந்தவன். வேண்டாம், பாண்டவரே! இருபத்தெட்டு பெரு நரகங்களைக் கடந்து வருவது எவருக்கும் இயலாது. ஏனெனில் ஒன்றிலிருந்து பிறிதொன்றுக்கு நழுவி கீழே மட்டுமே செல்ல முடியும். அம்முடிவிலி ஆழத்திலிருந்து மேலே வரும் பாதையென ஏதுமில்லை. இப்புடவி அமைக்கப்பட்டபோதே அவ்வாறுதான் உருவாகியுள்ளது” என்றான். அவனை நோக்கி புன்னகை செய்து “நான் ஒற்றை இலக்கை மட்டுமே எப்போதும் நோக்கக் கற்றவன்” என்றான் அர்ஜுனன்.

மான்தலையுடன் அவன் அருகே வந்த சம்பரன் விழிகளில் ஈரம் மின்ன “உங்களுக்கு வில்தொட்டு அளித்த ஆசிரியர்களை

விண்ணேற்றம் செய்ய கடமை கொண்டவன் நான். இது துரோணரின் சொல்லெனக் கொள்க! இது ஒழியாப்பெருநரகம். விண்ணுளோர் கொண்ட மாட்சிக்கெல்லாம் நிகரான கீழ்மைவெளி. என் மன்றாட்டு இது. பாண்டவரே, இக்கணமே மீள்க!" என்றான். "துரோணர் இச்சொல்லை ஒருபோதும் சொல்லமாட்டார். இலக்கு என்பது எப்போதும் ஒன்றே என்று கற்பித்தவர் அவர்" என்றான் அர்ஜுனன்.

அவனுக்குப் பின்னால் வந்த ஔதும்பரன் "எண்ணித்துணிக, பாண்டவரே. சொல்லளிக்கையில் இவற்றை நீங்கள் எண்ணியிருக்கவில்லை போலும்" என்றான். "இதனால் நீங்கள் அடைவதென்ன? இப்பெருந்துயருக்கு நிகராக ஏழு விண்ணுலகங்களை ஏழு முறை அளித்தாலும் துலாக்கோல் நிகர் காட்டுமா என்ன? இப்புடவியில் அனைத்தும் நிகர்கொண்டவை. அளித்துப் பெறப்படாதவை எங்கோ நின்று தவிக்கின்றன. நம்மை அவை வந்தடையாது இச்சுழல் முடிவுறுவதில்லை."

"இது வணிகமல்ல, ஔதும்பரரே. வீரத்தில் கணக்குகளில்லை" என்றான் அர்ஜுனன். "விளைவெண்ணிப் போரிடுபவன் வில்லெடுத்து ஓர் அம்புகூட எய்வதில்லை." ஔதும்பரன் "கணிக்கப்படாது கடந்துசெல்லும் ஒரு காலத்துளியும் இல்லை, பாண்டவரே" என்றான். "ஆம், ஆனால் துலாக்கோல் அல்ல வில். இதன் கணிப்புகள் வேறு" என்றான் அர்ஜுனன்.

சண்டாமிருகன் கழுதைத்தலையுடன் அணுகி அவன் தோளைத் தொட்டு சிறிய விழிகளால் நோக்கி "பிறருக்காக வாழ்பவன் கையகப்படுவது ஏதுமில்லை. அந்த அந்தணன் எவருடைய படைக்கலம் என்று அறிவீர்களா? உங்களை இவ்விருள் உலகுக்கு அனுப்பி புவியை வெல்ல துரியோதனன் செய்த

சூதல்ல அது என்று சொல்லலாகுமா? இல்லை, துவாரகையின் தலைவன் பொருட்டு வந்த வஞ்சகனல்ல அவன் என்று உறுதி கொள்வீரா?” என்றான்.

“ஐயம் கொள்பவன் வீரனல்ல. அரசுசூழ்பவன் களம் நிற்க முடியாது” என்றான் அர்ஜுனன். “வீரர்கள் ஆடற்களத்தில் வீரத்தையே முன்வைக்கிறார்கள். சிறுமதியை அல்ல. பெருவழியே அவர்களின் பாதை. விலகுக!” “ஆனால் வஞ்சத்தால் வீழ்ந்த வீரர் பலர் உண்டு” என்றான் சண்டாமிருகன். “ஆம், ஆனால் அவர்களுக்கே புகழுலுகுக்கான எளிய வழி அமைகிறது. அவர்களை விண்ணேற்ற தேவர்கள் வருகிறார்கள்” என்றான் அர்ஜுனன்.

அவர்கள் இருபத்தெட்டு வாயில்கள் கொண்ட பெரிய அறை ஒன்றை வந்தடைந்தனர். அவ்வாயில்கள் அனைத்தும் உள்ளிருந்து உந்தப்பட்டவைபோல விம்மி அதிர்ந்துகொண்டிருந்தன. சித்ரபுத்திரர் புன்னகைத்து “இருபத்தெட்டு நரகங்களுக்கும் இங்கிருந்து வழியுள்ளது. இதன் பெயர் பரிச்சேதம். ஒன்றிலிருந்து இன்னொன்றுக்கு அதை வென்றுகடந்து மட்டுமே செல்லமுடியும். இங்கு நீங்கள் உங்கள் வழியை தெரிவுசெய்யலாம்” என்றார்.

மூடிய அந்த வாயில்களின் தாழ்கள் பொன்னாலானதாக இருந்தன. அர்ஜுனன் அதை நோக்குவதைக் கண்ட சித்ரபுத்திரர் “நரகங்களின் தாழ்கள் அனைத்துமே பொன்தான்” என்றார். “வாயில்களைத் தெரிவுசெய்யும் உரிமை நரகு செல்பவர்களுக்கு அளிக்கப்பட்டுள்ளது. இதோ, உங்களுக்காக இருபத்தெட்டு வழிகள்.”

ஏழு அடிக்கு அப்பால் இருந்தன அவ்வாயில்கள் அனைத்தும். “ஏழுமுறை எண்ண உங்களுக்கு வாய்ப்பிருக்கிறது, இளைய பாண்டவரே. உங்கள் தொல்குலத்தை, உடன்பிறந்தவரை, மைந்தரை, நற்பெயரை, வரும்புகழை, மூதாதையரை, விண்ணுலகை ஒவ்வொரு அடிக்கும் எண்ணிக் கொள்ளுங்கள். ஒன்று தடுத்தால்கூட பின்னடி எடுத்து வைக்க வாய்ப்புள்ளது” என்றார் சித்ரபுத்திரர். “எண்ணத்தால் ஓர் அடி பின்னால் வைத்தால்கூட அங்கே யமுனைக்கரை நாணல்கள் நடுவே விழித்தெழுவீர்கள்.”

அர்ஜுனன் அவற்றில் ஒரு வாயிலை நோக்கி கால்களை எடுத்து வைத்து “என் குலத்தை இதோ கடக்கிறேன். என் உடன்பிறந்தாரை மிதித்து இதோ கடக்கிறேன். என் மைந்தரை இதோ கடந்து செல்கிறேன். என் நற்பெயரை இதோ உதறுகிறேன் என் வருபுகழை வீசுகிறேன். என் மூதாதையரை மறுப்புரைக்கிறேன். இதோ, விண்ணகங்கள் அனைத்தையும் விலக்குகிறேன்” என்று அணுகி பொற்தாழில் கைவைத்து அதைத் திறந்தான்.

ஊன் உண்ணும் விலங்கொன்றின் வாய் திறந்ததுபோல் கெடுநாற்றம் எழுந்து கணத்தோரையே மூக்கு பொத்தி முகம் சுளிக்க வைத்தது. “அது தாமிஸ்ரம் என்னும் உலகு” என்றார் சித்ரபுத்திரர். “ஒவ்வொருவரும் தங்கள் உள்ளாழத்தில் தங்களுக்குரியதை அறிந்திருப்பார்கள். எண்ணிக் குழம்பியோ எண்ணாது முந்தியோ அவர்கள் தெரிவுசெய்வதே அவர்களுக்கு உரியதாக முன்னரே இங்கு வகுக்கப்பட்டிருக்கும்.”



“தாமிஸ்ரம் பிறர் குழந்தையை கொன்றவர்களுக்குரியது” என்றார் சித்ரபுத்திரர். “கொன்ற மைந்தரை எண்ணுக! அவர்களின் அன்னையர் விழிநீர் சொரிந்து சொன்ன தீச்சொற்கள் நிறைந்தது அவ்விருள்வெளி.” இருளுக்கு அப்பால் நோக்கிய அர்ஜுனன் பல்லாயிரம் எலிகள் முட்டி மோதும் ஓர் ஆழத்தைக் கண்டான். “எலிகள்!” அவன்மேல் குனிந்து முத்தமிட்டது மாலினியின் மூச்சு. “துயில்க இளவரசே, அது வெறும் கனவு.” அவன் இருமுறை விதும்பி “மிகப்பெரியவை.

மின்னும் கண்கள்” என்றான். “நினைப்பொழிக! அது கனவு. காலையில் விழித்துக்கொள்வீர்கள்.” நினைப்பளவும் தயங்காமல் அதற்குள் பாய்ந்தான்.

# கிராதம் - 21

**[ 29 ]**

இருள் நூற்றுக்கணக்கான கைகளாக அர்ஜுனனை ஏந்தி நழுவவிட்டு கீழே செலுத்தியது. கருங்குவியலென கூடி மொய்த்து எழுந்தமைந்த எலிகளின் அலை விரிந்து சிதற அவன் உள்ளே விழுந்தான். அவனைப் புதைத்து மூடி கொப்பளித்தது எலிப்பரப்பு. விலக்கி எழுந்து விழுந்து மூழ்கி மீண்டும் எழுந்து நீந்திச் செல்லும்போது அவன் முகங்களை கண்டான். ஒவ்வொரு முகமும் அவனை உடல் விதிர்க்கச் செய்தது. ‘இவரா? இவரா?’ என்று பதைத்து மூழ்கி எழுந்தான். ‘இவர்கள் இங்கென்றால்?’ என்று கொந்தளித்தான்.

எலிகள் கிழித்துண்ட உடலின் தசைகள் தொங்க பெருவலியால் சுளித்த முகத்துடன் கம்சன் தன் படைவீரர்களுடன் ஓர் எலியலைமேல் ஏறி அவன் முன் எழுந்து வந்தான். “இளைய பாண்டவரே, கை! ஒருகை அளியுங்கள்” என்று கூவினான். “அடைந்தவை போதும். உங்கள் அறத்தில் ஒரு துளியால் என்னை மீட்டெடுங்கள்.” அவன் கைகளை உதறித்தள்ளி அர்ஜுனன் நீந்திக்கடந்து அப்பெருக்கின் மறு எல்லையாகத் தெரிந்த பொற்தாழிட்ட வாசலை நோக்கி சென்றான்.

அவன் பின் குரலெழுந்தது. பீஷ்மர் “மைந்தா!” என்று நெஞ்சுடையக் கதறினார். “மைந்தா... என்னை மீட்டெடு. மைந்தா, இத்தருணத்திற்காக இருள்யுகங்களை கடந்து

வந்துள்ளேன்.” “யார் நீங்கள்?” என்றான் அர்ஜுனன். “நான் சந்தனு. காமத்தின்பொருட்டு மைந்தரைக் கொல்ல ஒப்புக்கொண்டு விழிமூடிப் படுத்திருந்தவன்.” அவர் எம்பி அர்ஜுனனின் கால்களை பற்றிக்கொண்டார். அவன் அவர் கைகளை காலால் உதைத்துத் தள்ளிவிட்டு எம்பி அந்தப் படிகளின் விளிம்பைப்பற்றி மேலேறினான்.

யானைத்தோலால் ஆன வாயிலை ஓங்கித் திறந்து மறுபக்கம் பார்த்தான். கரிய வண்டுகள் கொப்பளிக்கும் ஆழம் தெரிந்தது. பிறிதொன்று எண்ணாமல் அதில் குதித்தான். வண்டுகளின் நீர்மை அவனை சூழ்ந்துகொண்டது. வஞ்சகர்களுக்கான அந்ததாம்த்ஸ்ரம். வண்டுச்சிறகுகளின் ரீங்காரம் இணைந்த பெருமுழக்கத்துடன் உடல்கள் அரித்தரித்து உண்ணப்பட்டுக்கொண்டிருந்தன. தசைகளில் புகுந்து நரம்புகளைக் கடித்து இழுத்தன. செவிகளுக்குள் புகுந்து விழிகளினூடாக வெளிவந்தன. குடல்களில் ஓடி தோல்கிழித்துத் தோன்றின.

கண்ணீருடன் எழுந்து கைகூப்பியவள் தேவயானி. ஒளிரும் மணிமுடி சூடியிருந்தாள். “மைந்தா, நான் உன் மூதன்னை” என்று அவள் சொன்னாள். அவள் முகம் அவன் அறிந்தது. அவள் குருதியின் துளிகூட புவியிலில்லை. எப்படி முகம் மட்டும் எஞ்சியது? எவர் முகம்? முகமல்ல, அசைவு. தசையல்ல, உணர்வு. அவளாகி அவனறிந்த எவர்? “மைந்தா, நான் உன் கால்களை பற்றுகிறேன். இதோ, வண்டுகளால் உண்ணப்பட்டு அழிகிறேன். மாற்றில்லாத பெருவலியில் துடிக்கிறேன், அளிகூர்க!”

தன் தலையை ஓங்கி ஓங்கி அறைந்தாள். “வண்டுகள்... வண்டுகள் உண்கின்றன என் மூளையை.” வண்டுத்

தொகையாகிவிட்டிருந்தது அவள் உடல். “இளமைந்தே, என் குலத்து தலைவன் நீ. மீட்டேன் என்று ஒரு சொல் சொல். உன் அறம் என்னை மேலே கொண்டுசெல்லும்” என்றாள். “விலகு!” என்றான் அர்ஜுனன். அவள் அவன் கைகளை அள்ளிப்பற்றினாள். அதை உதறி வண்டுகளின் மேல் விழுந்து நீந்தி அதற்கப்பால் தெரிந்த இருண்ட வாயிலை நோக்கி சென்றான்.

இனி எவர், இனி எவர் என்றே அவன் நெஞ்சு பதைத்தது. நச்சுப்பாம்புகள் பின்னி நெளிந்த ரௌரவத்தில் விழுந்தான். கொன்று மகிழ்ந்தவரின் நரகத்தில் அவனறிந்த முகங்களாக பெருகிக்கிடந்தனர் படைவீரர். அவர்களை இறுக்கி நெரித்தன மல்லர்கைகளைப்போன்ற பாம்புகள். பிதுங்கி மூச்சினூடாக குடல் வழிய வாயில் நாக்கு வெளிவந்து நெளிந்தாட அவர்கள் கூவினர். புவி ஆண்டு திளைத்த அரசர்கள். குருதியெழ பலிகொண்டு கூத்தாடியவர்கள். “நான் பரதன்!” “நான் மாவலி!” “நான் ஹிரண்யன்!” முகங்களின் அலைகளுக்கு அப்பால் மேலும் முகங்கள் கார்த்தவீரியன், ராவணன்... எவர் முகங்கள் இவை?

பெருநாகங்கள் வேர்க்குவைகள் போலிருந்தது மகாரௌரவம். “நான் கொன்றதில்லை, பாண்டவரே. கொல்ல விழைந்து வாழ்ந்தமையால் இங்கு வந்தேன்.” முனிவர், அந்தணர், அன்னையர். வேதச்சொல் விளங்கிய நாவுகள் எப்படி இங்கே வந்தமைந்தன? புழுக்கள் நெளிந்த கும்பீபாகம். அங்கே புழுக்களென மக்கள். புழுக்களை உண்டன புழுக்கள். புழுக்களைக் கிழித்து வெளிவந்தன புழுக்கள். உண்டுகொழுத்த அந்தணர்கள் அரசர்கள், வணிகர். “பிறர் பசித்திருக்க உண்டோம். பிறிதொன்றும் அறிந்திலோம்.” உண்டவை அனைத்தும்

வந்தடையும் பெருங்குடல்பரப்பு இது. உண்ணப்படாதவை புழுக்கின்றன. உண்ணப்படாதவையென உண்டவை ஆவது எப்போது?

நஞ்சூட்டியவர்களின் காலசூத்ரம் எனும் நரகம். "வேதம் புரப்பதாக மயங்கினோம், பாண்டவரே. உணவைப் பகுக்காமல் உண்ட அவிமிச்சமே அமுதல்ல நஞ்சென்று இங்கு கண்டோம்." அசிபத்ரத்தில் குலம்பிழைத்தவர் எரிந்து உருகினர். அரசமுறை பிழைத்தவர்களுக்கான சூகரமுகத்தில் அவன் கேட்டறிந்த பேரரசர்கள் அனைவரையும் கண்டான். எரிகந்தகத்தில் விழுந்து வழன்ற உடல்கள். முட்களால் கிழிக்கப்பட்டு நார்களெனத் தொங்கின தசைகள். உதிர்ந்த நகங்கள் மிதிபட்டன.

அந்தணர்க்கு பிழையிழைத்தவர்களுக்கான அந்தகூபத்தில் பொங்கி எழுந்து கைநீட்டி அலறி அமைந்தனர் மக்கள். அதைவிட மும்மடங்கு முறைமீறிய அந்தணர்களை வழிபட்டவர்களுக்கான கிருமிபோஜனத்தில் வதைபட்டனர். தப்தமூர்த்தியில், சால்மலியில், வஜ்ரகுண்டகசாலியில் முகங்களென அவன் கண்டவர்களுக்கு அப்பால் முகங்களே இல்லையோ என்று அவன் சித்தம் பேதலித்தது. முன்னோர்கள், அறவோர்கள், நூலோர்கள், வைதிகர்கள், அன்னையர் அனைவரும் இங்கென்றால் மண்ணுலகென்பது இங்கு வந்தடைவதற்கான பெருவழி மட்டும்தானா?

எரிதல், தழல்தல், புகைதல், உருகுதல். குருதியும் சலமும் வழிய அழுகி உதிர்தல். தசைகளை அடித்துக் கிழித்தனர் நிழலுருவர். கொக்கிகளில் தொங்கவிட்டனர். இருநுனியிலும் பற்றிக் கிழித்தனர். பற்களைப் பிடுங்கினர். கண்களை ஊசிகளால் துளைத்தனர். முட்பந்துகளை வாயில் திணித்து ஊட்டினர்.

கொக்கிகளை உள்ளே செலுத்தி குதம்வழியாக குடலை உருவி எடுத்தனர்.

உடலென்பதே வலியுருவாக்கும்பொருட்டு படைக்கப்பட்ட ஒன்றா? இவ்வுடல்சூடி இங்கு வராதிருந்தால் உயிர்கள் வலியென்று எதையும் அறிந்திராதா? உடலென்பது இன்பம் வந்தடையும் வழியென்று நம்பியிருக்கிறது பேதைஉயிர். நரம்புகளில் மட்டும் கொட்டும் பூச்சிகள் நிறைந்த பிராணரோதம். தோல் உரிந்து அகலும் விசசனம். எரிதழலையே ஆடையாக அணியவேண்டிய சாரமேயாசனம்.

மலம் அழுகி நொதித்த பூயோதகம். அதில் புழுக்களென நெளிந்தனர் கீழ்மக்கள். உறவுகொண்டு அறம்வழுவியோர். அங்கு நெளிந்தனர் தன்னை அறியாது பிறனென்று உணர்ந்து சிறுமைகொண்டோர். சிறுநீரும் சீழும் பெருகிய அயஃபானம். உடலென்பது கழிவுப்பெருக்காகியது. உடலை உண்டு உடலில் வாழும் புழுக்களின் உலகு. நெடுநாள்புண் என க்ஷாரகர்த்தமம். அழுகிய ஊன் மண்டிய ரக்ஷோபக்ஷம். குருதி அழுகி நொதித்த சூலப்ரோதம். எண்ணங்கள் உணர்வுகள் கொதித்த குருதி. கனவுகள் கரைந்த குருதி. குலமூத்தாரின் சொல்வாழும் குருதி. பலிமிருகத்தின் உடலில் ஓடும் தூய்மை. தெய்வங்களின் நல்லுணவு. திரிந்து நஞ்சென்றாகிய எரிவு.

புளித்து நாறி பெருந்துயரெனச் சூழும் இவையனைத்தும் உடலின் இருளுலகுகள். எரியும் முடியாலான அவீசி. பல்லழுகிய வாய் என நாறும் தந்தசூகம். அமிலவாந்தியாலான வடரோதம். அழுகிய உணவாலான பர்யாவர்த்தனகம். கீழ்மை அனைத்தும் எழும் மையம் இவ்வுடல். அக்கணம் அவன் ஒன்றை அறிந்தான், அங்கு புதியன எவையுமில்லை.

அனைத்தையும் அவன் முன்பே அறிந்திருந்தான். அவன் வாழ்ந்த மண்ணிலேயே. நரகங்களையும் நூல்களென்றாக்கி ஊடுபாவென ஓட்டி நெய்யப்பட்டது அவ்வுலகம். அங்கு கண்டபோது அரைக்கணம்கூட கண்நிலைக்காமல் கடந்துவந்த அனைத்தாலும் ஆனவை இவை.

செம்பட்டுத்திரை மூடிய நுழைவாயிலுக்கு அப்பால் ஒளியிருந்தது. இனிய நறுமணம் எழுந்தது. மென்மயிர்ப்பரப்புபோல புல் பரவிய தரை. பூத்த மலர்மரங்கள். இன்குரல் கொண்ட பறவைகள். இளந்தென்றல். இளவேனில் நின்ற நகரத்தெருக்களினூடாக அவன் நடந்தான். முழுதுடல்கொண்ட கன்னியர் விழிதீட்டி இதழ்ச்செம்மைகூட்டி சிலம்புகள் ஒலிக்க மேகலைகள் நெகிழ ஆடைகள் எழுந்தமைந்து பறக்க ஒல்கி உடலசைய நடந்தனர். சிரிப்பில் ஒளிவிட்டன பற்கள். சிலம்பின வெள்ளிமணிகள். விழிமுனைகள் வந்து அவனை தொட்டுச்சென்றன.

“மைந்தா, நான் யயாதி” என்றது முதுமூதாதையின் குரல். “அளிகூர்க, இங்கிருந்து என்னை மீட்டுக் கொண்டுசெல்க! நான் உன் தந்தையரின் தந்தை.” நரைத்த தலைமுடியும் தாடியுமாக உலைந்தாடிய உடலுடன் அவனை நோக்கி வந்த அவரை பற்றிக்கொண்டனர் ஈரப்பொன்னுடல் கொண்ட இரு மகளிர். “இது எந்த இடம்?” என்று அவன் கேட்டான். “காமம் அணையாது உயிர்நீத்தவர்களின் நரகம். இதை லாலாபக்ஷம் என்கிறார்கள்” என்றார் அருகே ஓடிவந்து நின்ற ஒருவர். நீண்ட தாடிகொண்ட முதியவர். “நான் ரகுகுலத்து தசரதன்” என்றார்.

“மைந்தா, இங்கு அணையாது காமத்தை எழுப்பும் அனைத்தும் உண்டு. ஒரு துளியும் அதை நுகர முடியாது

வெறுமைகொண்டிருக்கும் நம் உடல்” என்று யயாதி சொன்னார். “இது துயரம். துயர்களில் இதுவே உச்சம்.” அவரை அவர்கள் கொண்டுசென்றனர். எதிரே வந்த கௌதமமுனிவர் கூவினார் “விரைந்தகல்க! ஒரு கணம் ஒரு பெண்ணில் உன் காமம் எழுந்தாலும் நீ இப்பாதையை கடக்கவியலாதென்றறிக!”

குறிவிரைத்த முனிவர்கள் உடல் தளர்ந்து விழுந்துகிடந்த தெருக்கள். ததும்பும் முலைகள், எழுந்து குலுங்கும் பின்னெழுச்சிகள், இளந்தோள்கள். மான்குளம்புகள், ஞமலிநாவுகள், அரவுப்படங்கள், அகல்சுடர்கள், எழுந்த மீன்கள், நின்றவிழிகள். கடந்துசெல். கடந்துசெல். அழைப்புகள். பெண்ணுடலென்பதே அழைப்புதானா? குறிப்புகள். உணர்த்தல்கள். பெண்ணென வந்தது எதன் குறிப்பு? “மைந்தா…” ஒரு கணம் அவன் நெஞ்சு உருகியது. அது என் குருதியிலுள்ள தவிப்பின் ஊற்று அல்லவா? அக்கணமே அதைவெட்டி அவன் எல்லைகடந்து சென்றான்.

அவன் சென்றுநின்ற நதிக்கரையில் பன்றிமயிர்களே நாணல் என எலிமயிர்கள் புல் என வௌவால் மயிர்கள் பூசணம் என செறிந்திருந்தன. உடல் அதிரும் கெடுமணம் எழுந்து அவனைச் சூழ்ந்தது. சிறுநீர், சலநீர், மலம், கெடுகுருதி பெருகி நீரென அதில் ஓடிக்கொண்டிருந்தது. முடி பாசியாக நகங்கள் சிப்பிகளாக எலும்புகள் தக்கைகளாக மிதந்துசென்றன. அழுகிய ஊனும் கொழுப்பும் சேறென படர்ந்திருந்தன.

அதன் கரையில் அவன் உடல் ஓய்ந்து நின்றான். “கடந்துசெல்க… இனி ஓர் உலகம் மட்டுமே எஞ்சியிருக்கிறது” என்றது அங்கு அமர்ந்திருந்த தவளை. அவன் குனிந்து அதை நோக்கினான். “இதன் பெயர் வைதரணி. தன்னலம் பேணிய அரசர்களுக்குரியது இது. இதைக் கடக்காமல் அவர்களுக்கு

மீட்பில்லை. இதைக் கடந்தவர் எவருமில்லை.” அவன் “நீங்கள் யார்?” என்றான். “என்னை உன் முன்னோன் என்பார்கள். என் பெயர் துஷ்யந்தன்.”

“நீங்கள் இதை நீந்திக் கடக்கலாகாதா?” என்றான் அர்ஜுன்ன். “காலத்தொலைவில் நான் இதில் குதித்தேன். ஆனால் இப்பெருக்கின் இனிமையில் திளைக்கலானேன். மெல்ல ஒரு நீர்த்தவளை உருக்கொண்டு இங்கு அமர்ந்திருக்கிறேன். இதைக் கடக்க நான் விழையவில்லை. இதற்கு அப்பால் ஓர் இனிமை வேறில்லை என்பதில் ஐயம்கொள்ளவில்லை நான்.”

அவன் ஏறிட்டு நோக்கிவிட்டு குமட்டலுடன் குனிந்து “இங்கா?” என்றான். “இதுவேதான். உன் உடல் இனிதென்றால் இதுவும் இனிதே. மூடா, மைந்தன் என்று அள்ளிக்கொஞ்சுகையில் மனைவி என முகர்ந்து மகிழ்கையில் எத்தனை மகிழ்வளிக்கிறது மலமும்நீரும் சீழும்பீளையும் கொண்ட உடல்?” அவன் குமட்டியபடி விலகினான். “குமட்டுவதெல்லாம் ஒருநாள் இனித்ததுதான்” என இளித்தது தவளை.

மறுசொல்லின்றி அவன் மலப்பெருக்கில் பாய்ந்தான். கை ஓய நீந்தி கடக்கமுயன்றபோது பின்னால் மூச்சிளைக்கும் குரலுடன் எழுந்தார்கள் அவன் அறிந்த பேரரசர்கள். “மைந்தா!” என்று கூவினர். “இதோ, யுகங்களாக நான் இக்கழிவில் நீந்துகிறேன். ஒரு கை என்னைப்பிடி...” என்றார் ஒருவர். “யார் நீங்கள்?” என்று அவன் கேட்டான். “நான் உபரிசிரவஸு... உன் குலமூதாதை.” அவன் அவரை உந்தி மேலெழுந்து நீந்தினான். அவர் அவன் கால்களை அள்ளிப்பற்ற மூழ்கி அந்நீருக்குள் சென்றான்.

பலகோடி மீன்கள். அவை அச்சீழ்நீரை அள்ளி அள்ளி உண்டு வால்திளைக்க செதில் வீசி மகிழ்ந்தாடிக்கொண்டிருந்தன.

அவற்றின் விழிகள் அனைத்தையும் அவன் அறிந்திருந்தான். “இது ஹஸ்தி. இது பிரதீபன். இவன் குரு.” அவன் அவர்களை கைகளால் அள்ளிவிலக்கி மேலெழுந்தான். தொலைவில் நின்றாடியது மறுகரை. எது அறம்? தன்னலம் என்பது அறத்திற்கு எதிரானதென்றால் அறம்பேணுவதனால் அடையப்படுவதுதான் என்ன? அரசர்கள் அனைவரும் அங்கிருந்து இங்கு வருவதில்லை, இங்கிருந்து அங்கு செல்கிறார்கள்.

மறுகரையில் அவன் ஏறி நின்று நடுங்கியபோது காவலர் மூவர் வந்து அவன் முன் நின்றனர். “வருக” என்று அவனிடம் சொன்னார் பிரார்த்தர். “இது எந்த இடம்?” என்று அவன் கேட்டான். “இதன் பெயர் சூசீமுகம்” என்றார் சஞ்சிதர். “தன் நெஞ்சுரைக்கும் சொல் விலக்கி அறம் உசாவி உளம் குழம்பி செயல்முனையில் நின்று தவித்து வாழ்ந்தவர்களுக்குரியது” என்றார் ஆகாமியர். அவன் அதை நோக்கி சென்றான். இருண்டவானில் அங்கிருந்த பல்லாயிரம் கூர்முனை வேல்கள் விழிகளென மின்னிக்கொண்டிருந்தன. அவற்றில் உடல்குத்தி அமர்ந்து சுழன்றனர் முனிவரும் அறிஞரும் அரசரும்.

அவன் நோக்கி நின்றான். அங்கே அமர்ந்திருந்த ஒருவர் திரும்பி அவனை நோக்கினார். அவன் திகைப்புடன் கால்களை எடுத்துவைத்து அவரை அணுக அவர் திரும்பிக்கொண்டார். “நானா?” என்றான். “அவர் சரத்வான். வில்தேர்முனிவர்” என்றான் ஒரு காவலன். பிறிதொருவரைக் கண்டு அவன் மீண்டும் திகைத்தான். உரத்த குரலில் “மூத்தவர்!” என்றான். “ஆம், தேவாபி என்று அவரை அழைக்கிறார்கள்” என்றார் சஞ்சிதர். “இம்முள்முனைகளில் கால்வைத்து கடந்துசெல்க!”

அவை நதிக்கரை நாணல்கள் என ஆடின. “செல்க!” என்று தேவாபி திரும்பி நின்று கூவினார். “நீ வந்தவற்றில் கெடுநரகமென்பது இதுவே. கடக்கவியலாதது இது. நோக்குக, இவை ஒருபோதும் நிலைகொள்வதில்லை!” அவன் குனிந்து பார்த்தபோது அந்த வேல்முனைகள் அனைத்தும் இருதட்டுகள்கொண்ட துலாவின் நடுமுட்கள் என்று கண்டான். “இங்கு காத்திருக்கிறோம், அவை நின்று காட்டும் என. யுகயுகங்கள். காலப்பெருக்கு.”

அக்கணமே தாவி ஆடும் முள்முனைகள்மேல் கால்வைத்துப் பாய்ந்து கடந்தான். மறுஎல்லையில் இருந்த பெருந்துலாவின் நடுமுள் ஊசலாடிக்கொண்டிருந்தது. அவன் ஒரு கணமும் எண்ணாமல் அதன் மேல் குதித்து உடல்குத்தி சுழன்று கீழிறங்கினான்.



இதுவே இறுதிப்புள்ளி என்றது சித்தம். சோர்ந்து இறுதி விசையும் அழிய அவன் கீழிறங்கியபடி சென்றான். அக்கரையில் எழுந்த அன்னைமுகத்தை அவன் அதுவரை கண்டிருக்கவில்லை. கன்னங்கரிய பேருடல். காதுகள் வடிந்து நீண்டிருந்தன. கோரைப்பல்லும் கொடுமூக்கும் கூர்விழியும் கொண்டிருந்தாள். உடலெங்கும் முலைகனத்து வேர்ப்பலாவின் முதுமரம்போலிருந்தாள். அவள் ஆடையெங்கும் சிற்றுயிர்கள் என நுண்குழந்தைகள் அள்ளிப்பற்றி செறிந்திருந்தன.

“அன்னையே…” என்று அவன் அழைத்தான். அவள் கையைநீட்டி அவனைப் பற்றி இழுத்து மேலெடுத்தாள்.

முள்ளில் சிக்கிய ஆடையிலிருந்து உடலை மீட்பதுபோல கழுவேறிய அவ்வுடலில் இருந்து தன்னை விடுவித்து எழுந்தான். “அன்னையே…” என்று அலறியபடி அவள் காலடியில் சரிந்து விழுந்து வணங்கினான். “வருக!” என்று அவள் சொன்னாள். அவனை இடக்கையில் இழுத்துக்கொண்டு அப்பால் தெரிந்த பெருவாயில் நோக்கி சென்றாள்.

**[ 30 ]**

கீழ்மையின் கெடுகனவு முடிந்ததென அவன் விழித்தெழுந்தான். எதிரே யமபுரியின் இருண்ட பாதைகளின் பின்னலை கண்டான். அங்கே உயிர்க்கும் உடல்தூண்கள், விதிர்க்கும் தசைச்சுவர்கள், அதிரும் தோல்தரைப்பரப்பில் சிலிர்த்த மென்மயிர்ப்புற்கள். “அன்னையே” என்று அவன் திரும்பி அவளை நோக்கி கைகூப்பினான். “என்னை மீட்டுக் காத்தீர்கள். என்றும் உடனிருங்கள்.”

அவள் புன்னகைத்தபோது வெண்பற்கள் ஒளிர முகம் பேரழகு கொண்டது. “நீ என்றும் எனக்கு உகந்தவன், மைந்தா” என்றாள். “அத்துமீறும் மைந்தரின் குறும்புகளில் அன்னையர் மகிழ்கிறார்கள். ஆண்மைகொண்டெழும் இளையோரை விரும்புவதென்பது அன்னையரின் கருவியல்பு. உன்மேல் நான்கொண்ட பேரன்பையே உனைச் சூழ்ந்த பெண்டிரில் நீ கண்டாய்.”

அவன் அவளை நோக்கி “நான் உங்களை அறிந்ததில்லையே?” என்றான். “என்னை திருணமூலி என்பார்கள். என்னை முழுதும்

காண நீயும் முழுமையடையவேண்டும். அறிக, மண்ணுறங்கும் புல்வேர்களில் வாழ்பவள் நான்!” அவள் அவன் தலையை தொட்டாள். “செல்க, நீ வெல்ல இன்னும் ஒரு களம் உள்ளது!”

அவன் “இனி எக்களத்திலும் நானே வெல்வேன், அதை உங்கள் அருகே நின்றிருக்கையில் உணர்கிறேன்” என்றான். அவள் தன் முலைகளில் ஒன்றைப் பற்றிப்பிடுங்கி “இதைக் கொள்க, இது உன் படைக்கலமாகுக!” என்றாள். அவன் அதைப் பெற்றுக்கொண்டதும் அது ஒரு தண்டாயுதமாக ஆகியது. அவள் கால்தொட்டு சென்னி சூடி அவன் யமபுரியின் மண்ணில் இறங்கினான்.

அவனை நோக்கி சித்ரபுத்திரர் ஔதும்பரனும் சம்பரனும் சார்த்தூலனும் சண்டாமிருகனும் சூழ புன்னகையுடன் வந்தார். “வருக இளையவரே, உங்களுக்காக காத்திருந்தோம்” என்றார். “நான் வருவேன் என நினைத்தீர்களா?” என்று அர்ஜுனன் கேட்டான். “இல்லை, ஆனால் காத்திருப்பது எங்கள் பணி” என்றார் சித்ரபுத்திரர். “மீண்டுவந்த முதல் மானுடர் நீங்கள்.”

காலப்பேரரசனின் அரண்மனை மண்டபத்தில் வலப்பக்கம் யமி நிற்க இடப்பக்கம் தூமார்ணை அமர்ந்திருக்க அவன் அரியணை வீற்றிருந்தான். அவனைக் கண்டதும் சினத்துடன் எழுந்து படியிறங்கி கீழே வந்தான். “இன்றுவரை இது நிகழ்ந்ததில்லை. இவ்வுலகின் நெறிகளனைத்தும் இன்று சீர்கெட்டன” என்றான். அர்ஜுனன் “பிறிதொன்று எண்ணா பெருவீரன் எவனும் இங்கு வந்ததில்லை போலும்” என்றான்.

“இளையவரே, அறிக! இவ்வுலகின் நெறிகள் எதையும் நான் மீறலாகாது. எதன்பொருட்டும் இறந்தவனை திருப்பி

அனுப்பவும் கூடாது” என்று யமன் சொன்னான். “முடிவிலியிலிருந்து நீட்டி நின்றிருக்கும் இலைநுனி ஒன்றுண்டு. அதில் துளித்துச் சொட்டிக்கொண்டே இருக்கின்றனர் யமதேவன்கள். நான் அதிலொருவனே. எனக்கென இயல்பொன்றுமில்லை.”

“நான் உங்களால் அளிக்கப்பட்டு அவ்வுயிரை மீட்டுச்செல்ல விரும்பவில்லை. உங்களை நான் வென்றுசெல்வேன் என்றால் உங்கள் நெறியை நீங்கள் மீறவில்லை என்றே பொருள்.” யமன் கையசைத்து “வீண்சொல். என்னை மண்ணில் எவரும் வெல்லமுடியாது” என்றான். “ஏனென்றால் இறப்புக்கு இறைவன் நான். மண்ணில் கடக்கப்படாதது அதுவே.”

அர்ஜுனன் “வீரர்கள் தெரிவுசெய்வது வெல்லற்குரிய போர்களை அல்ல. நிகழ்த்தற்குரிய போர்களையே. வருக!” என்று கூவியபடி தன் கையிலிருந்த தண்டத்தை சுழற்றிக்கொண்டு யமன் மேல் பாய்ந்தான். தன் கதாயுதத்தை வீசி அதைத் தடுத்தபடி யமன் அவனை எதிர்கொண்டான். இருள் அலைத்த அப்பெருங்கூடத்தில் அவர்களின் விசைமிகுந்த போர் நிகழ்ந்தது. அடிக்கும் ஒலியில் அதிர்ந்தன தூண்கள். இமைப்பழிந்து நோக்கி நின்றன அம்மண்டபத்தின் கண்கள்.

காலுக்குக் காலசைய கைகளுக்குக் கைகள் அசைய நோக்குடன் நோக்கு கோக்க மூச்சுக்கு மூச்சு எதிர்நிற்க நடந்தது பெரும்போர். கதையும் தண்டமும் மோதி அனலுமிழ்ந்தன. யமியும் தூமார்ணையும் எழுந்து அருகணைந்தனர். போர்கண்டு மகிழ்ந்த அவர்களின் முகங்கள் மெல்ல அச்சம் கொண்டன. பதற்றத்தில் கைகள் பின்னி நிலையழியலாயின. யமபுரியின் காவலர் நெருங்கி வந்தனர்.

சித்ரபுத்திரரை நோக்கி போதும் போதும் என உதடுகளை அசைத்து தூமார்ணை மன்றாடினாள். ஔதும்பரனும் சம்பரனும் தவிக்கலாயினர். சண்டாமிருகனும் சார்த்தூலனும் நிலையழிந்து கை நீட்டி தடுக்கச்சென்றனர். அவர்கள் தோள்தொட்டு தடுத்தார் சித்ரபுத்திரர்.

நிகர்நிலையில் நின்று கணம் கணமெனச் சென்ற அப்போரின் ஒரு கணம் முன்னெழ அர்ஜுனன் தன் தண்டாயுதத்தால் அறைந்து யமனின் கதாயுதத்தை தெறிக்கச்செய்தான். திகைத்துச் செயலிழந்து அவன் நின்ற அக்கணத்தில் பாய்ந்து அவன் நெஞ்சை அறைந்து வீழ்த்தி மார்பை மிதித்து "வென்றேன், காலரே. இதோ, அக்குழந்தையை மீட்டுச்செல்கிறேன்" என்றான். சொல்லின்றி அங்கே கிடந்தான் அறத்தோன்.

திரும்பி சித்ரபுத்திரரிடம் "அக்குழவியின் வினைக்கணக்கை அழியுங்கள். அவனை இக்கணமே என்னிடம் கொண்டுவாருங்கள்" என்று அர்ஜுனன் ஆணையிட்டான். காலன் "இளையவனே, உனக்கு நான் நீ விழையும் அனைத்தையும் அளிப்பேன். பொன்றாப்புகழும், மண்ணில் எவரும் அணுகாத வீரமும், நிகரற்ற செல்வமும். இறப்பின் நெறிகளை மீறாதே" என்றான். "இலக்கு ஒன்றே என்பதே என் வேதம்" என்றான் அர்ஜுனன்.

"சித்ரபுத்திரரே, அரசநெறிப்படி இன்று இப்புரியின் தலைவன் நானே. கொண்டுவருக!" என்றான். அவர் யமனை நோக்கி விழிகளால் ஆணைபெற்று திரும்பி "அவனிருக்கும் அறை அது... அங்கு சென்று அவனைக் கொள்க!" என்றார். அர்ஜுனன் அந்த அறைநோக்கி ஓடி அணுகியதும் திகைத்து நின்றான். அங்கே அறைக்கதவென நின்றிருந்தது யமகணம் ஒன்று.

தளர்ந்த விழிகளுடன் “இளையோனே” என்று அவனை அழைத்தார் யுதிஷ்டிரர். “ஆம், நானேதான். இது என் உலகு.”

மறுகணமே அர்ஜுனன் தண்டத்தால் அவரை அறைந்து சிதறடித்தான். துண்டுகளாகச் சிதறி குருதியுடன் விழுந்து துடித்த உடலில் இருந்து விழிகள் மீன்கள் என துள்ளித்துள்ளி விழுந்தன. உதடுகள் “இளையோனே, நான் உன் மூத்தவன்” என்றன. கால்களால் அவற்றை மிதித்து உள்ளே துலாத்தட்டு ஒன்றில் கிடந்த இளமைந்தனை நோக்கி அவன் சென்றான்.

சுவரென அங்கிருந்த முகம் மட்டுமேயான கால பூதம் ஒன்று இளித்து “அவனை எடுக்கும் இடத்தில் நிகரென ஒன்றை வை” என்றது. “என் குருதி, என் ஊன்” என்று கூவியபடி அர்ஜுனன் அக்குழந்தையை எடுத்தான். அது இருந்த இடத்தில் அவன் மைந்தனின் முகம் கொண்ட குழவி ஒன்று படுத்திருக்கக் கண்டான். பேரோசையுடன் நகைத்தது பூதம். “ஆம், அதுவே நெறி” என்றது. “அவ்வாறே ஆகுக!” என்று கூறி அவன் வெளியே பாய்ந்தான்.

எதிரே இரும்புக்கவசங்கள் அணிந்து நான்கு கைகளில் தண்டமும் பாசமும் குடாரமும் சுரிகையும் கொண்டு எருமைமேல் அமர்ந்து தோன்றிய யமன் புன்னகையுடன் “இளையவனே, நீ தெற்கை வென்றாய்! உன் அறம் என்றும் உடனிருக்கட்டும்” என்றான். “என்னை வென்றது அம்முலைப்பால். இறப்பை வெல்லும் அமுதத்தையே படைக்கலமாகக் கொண்டாய். அதுவே உன் கையில் இனி ஒரு அம்பெனத் திகழட்டும்” என்றான்.

# கிராதம் - 22

[ 31 ]

செல்லுந்தோறும் சிறகுகொண்டது தண்டகாரண்யப் பெருங்காடு. அதன் வடபுலச்சரிவில் இலை வெளுத்து, கிளைதேம்பி தனித்து சோர்ந்து நின்றிருந்த மரங்கள் மறையலாயின. வேர்கள் மண்கவ்வி நரம்புகள் என கொடிகள் பின்னிப்புடைத்த அடிமரங்கள் எழுந்து கிளை பருத்து விரிந்து தழைத்து வான்மூடி பறவைக்குரல் சூடி நின்றிருந்த பெருமரங்களின் காடு வரலாயிற்று. கீழிருந்து பாறையில் படரும் செந்நிறக் கொடி என மலைச்சரிவில் பற்றி வளைந்து மேலேறிய பாதை இலைத்தழைப்புக்குள் புகுந்து குகை வழியென ஆயிற்று.



அதன் மறுமுனையில் ஒளி தெரியாமல் ஆனபோது பைலனின் கையை பற்றிக்கொண்டு ஜைமினி “அடர்காடு. இங்கு கொடு விலங்குகள் உண்டா?” என்றான். “விலங்குகள் எங்குமுள்ளன” என்றான் பைலன். “விலங்கில்லாத காடு இமயமலையின் உச்சியில் கூட இல்லை என்கிறார்கள். நான் இருமுறை யானைகளை எதிர்கொண்டிருக்கிறேன்” என்று ஜைமினி சொன்னான். “கண்களை மூடிநின்று வேதச்சொல் எடுத்து ஓதினேன். அவை விலகிச் சென்றுவிட்டன.”

முன்னால் சென்றுகொண்டிருந்த சண்டன் திரும்பி “அவை ஊனுண்ணிகள் அல்ல. பசித்த புலி ஒருவேளை எவற்றையும் சுவைத்து உண்ணக்கூடும்.” என்றான். ஜைமினியின் முகம் சுருங்கியது. தன் கைகளால் காற்றில் தாளமிட்டபடி உடலில் மெல்லிய நடனத்துடன் முன்னால் சென்ற சூதனை நோக்கி திரும்பி பைலனிடம் மெல்லிய குரலில் “நான் இவனை வெறுக்கிறேன். இவ்வுலகில் இவனுக்கு அனைத்துமே நகைப்புக்குரியதாகத் தெரிகிறது” என்றான்.

“ஆம்” என்று பைலன் சொன்னான். “ஆம், அது ஒரு தத்துவம். தொல்காலம் முதலே அதையும் நம் எண்ணமுறைமையில் ஒன்றெனப் பயின்று வருகிறார்கள்.” ஜைமினி “அந்த இளிவரலுடன் இவன் எங்கு அமரமுடியும்? எதை ஏற்க முடியும்? எதை சூடி நின்றிருக்க முடியும்?”
என்றான். புன்னகையுடன் “அவர் அமர்ந்திருப்பவர் அல்ல. சென்று கொண்டிருப்பவர்” என்றான் பைலன்.

ஜைமினி எரிச்சலுடன் “இச்சொற்கள் எனக்கு சலிப்பூட்டுகின்றன. மானுடர் அனைவரும் தங்கள் பிறவி ஏணியில் ஏறிக்கொண்டிருக்கிறார்கள். விண்புகும் வழியொன்றே அவர்கள் தேடுவது” என்றான். “அவர் விழையும் விண் சொல்லுக்குள் உள்ளது. அதற்குள் செல்லும் ஏணி ஒன்றும் அவரிடம் உள்ளது. யாரறிவார்? நானும் நீங்களும் அழிந்த பின்னரும் மானுடத்தின் சொல்வெளியில் அவர் வாழக்கூடும்.”

“இவ்வெளிய சூதனின் பெயர் வரலாற்றில் வாழுமா என்ன?” என்றான் ஜைமினி. “விண்மீன்கள் செறிந்த வான்பரப்புபோல மொழி நம்மை சூழ்ந்திருக்கிறது. அறிந்த விண்மீன்கள் சில, அறியாதவை கோடி. நாம் அவற்றைப் பார்க்காதபோது அவை ஒவ்வொன்றும் நம்மை பார்த்துக்கொண்டிருக்கின்றன” என்று

பைலன் சொன்னான். “அவர் இருப்பார். அவர்கள் என்றும் வாழும் ஒரு பெருக்கு.”

ஜைமினி “நீர் சொல்வதை என்னால் உணரமுடியவில்லை. உண்மையில் நீங்கள் இருவரும் பேசிக்கொள்வதில் பெரும்பகுதி எனக்கு புரியவில்லை. பொருளுறுத்துவதைவிட களியாடுவதற்கே சொற்களை கையாள்கிறீர்கள். உங்கள் நடுவே பகடைகளென உருண்டுகொண்டிருக்கும் சொற்கள் வேதத்திலிருந்து எழுந்து வந்தவை என்று உணர உணர என் உள்ளம் சினம் கொள்கிறது” என்றான். சொன்னபோது எழுந்த அந்த உணர்வு வளர்ந்து “உங்கள் இருவரையும் நோக்கி கூச்சலிட்டு வசைபாடவேண்டும் என்று தோன்றுகிறது” என சேர்த்துக்கொண்டான்.

“அவ்வசைபாடும் சொல்லும் வேதத்திலிருந்து எழுந்ததல்லவா?” என்று முன்னால் நின்று இடையில் கைவைத்து சூதன் கேட்டான். ஜைமினி விழிகளை திருப்பிக்கொண்டு நிற்க பைலன் நகைத்தான். “வசைவேதம் என்று ஒன்றை நாம் உருவாக்குவோம், அந்தணரே. அது வேதநிழலெனத் தொடரட்டும்” என்றபின் சண்டன் கைகளை வீசி வேதத்தின் அனுஷ்டுப்பு சந்தத்தில் இழிவசைகளால் ஆன பாடலொன்றைப் பாடியபடி முன்னால் சென்றான். பைலன் நகைக்க முற்பட்டு ஜைமினியின் விழிகளை கண்டபின் அடக்கிக்கொண்டான்.

“நாம் பேசுவது இவனுக்கு கேட்டுக்கொண்டிருக்கிறதா?” என்று ஜைமினி பைலனின் காதில் கேட்டான். “அவர் கேட்காத ஒன்றுமில்லை. வேண்டாதபோது காதுகளை மூடிக் கொள்ளவும் கற்றிருக்கிறார்” என்று பைலன் சிரித்தபடி சொன்னான். “எப்படி நாம் பேசிக்கொள்வது?” என்றான் ஜைமினி. “நீர் அவர் நம்முடன் இருக்கிறார் என்று எண்ண

வேண்டியதில்லை. நினைப்பெழுந்ததை பேசலாம். அவர் எச்சொல்லாலும் துயரோ சினமோ உறப்போவதில்லை. சொல் அனைத்தும் மகிழ்வூட்டுவதே என்று எண்ணும் சூதர் அவர்” என்றான் பைலன்.

அவர்கள் பசுமை இருள் சற்று விலகி வெற்றுப்பாறை ஒன்று தெரியும் இடத்தை கண்டனர். “சொல்லின் இடைவெளி. காவியத்தின் தெய்வங்கள் இளைப்பாறுவதற்கான இடம்” என்றபடி சண்டன் அதை நோக்கி சென்றான். பாறை இடுக்கில் எழுந்த அரச மரம் ஒன்று பசுமைக்குடை என நின்றது. அதன் கீழ் இருந்த பாறையில் சென்று அமர்ந்தபடி “உணவருந்துவதற்கு உகந்தது. உணவு இருந்தால் மேலும் இனிமைகொள்ளக்கூடும்” என்றான்.

பைலனும் ஜைமினியும் கால் சோர்ந்து வந்து அவனுக்கருகே அமர்ந்தனர். ஜைமினி சூதன் அமர்ந்த பாறையில் தொற்றி ஏறி சூதனுக்கு மேல் தன் கால் அமையும்படி அமர்ந்துகொண்டான். சூதனின் காலடியில் அமர்ந்த பைலன் விழிதூக்கி ஜைமினியை நோக்கியபின் சூதனின் கண்களை சந்தித்து புன்னகைத்தான்.

“அந்தணரே, தங்களிடம் உணவு இருக்கிறதா?” என்றான் சண்டன். எரிச்சலுடன் “அந்தணரை உத்தமரே என்றுதான் கீழ்க்குலத்தோர் அழைக்கவேண்டும் என்கிறது கர்த்தம ஸ்மிருதி” என்றான் ஜைமினி. “உணவுக்காக எவரையும் எப்படியும் அழைக்கலாம் என்பது சூத ஸ்மிருதி. உணவிருக்கிறதா, உத்தமரே?” ஜைமினி சினத்துடன் தன்னிடமிருந்த உலருணவுப் பொதியை எடுத்து முன்னால் இட்டான். சண்டன் “அதை எடுத்து சூதன் உண்ணப்போவதால் அதில் தூய்மையற்றிருக்கும் பகுதியை எனக்கு அளிக்கலாமே” என்று பைலனிடம் சொன்னான்.

பைலன் சிரித்துக்கொண்டே அந்தப் பொதியை எடுத்து பகிர்ந்து பாதியை சண்டனுக்கு அளித்தான். ஜைமினி இன்னொரு சிறிய பொதியை எடுத்து பிரித்து தான் உண்ணத்தொடங்கினான். "உத்தமரை இப்போது ஒரு புலி வந்து அடித்து உண்ணும் என்றால் அது நோன்புணவை உண்ணுவதன் நலன்களைப் பெறும் அல்லவா?" என்று சூதன் கேட்டான். ஜைமினி உண்பதை நிறுத்திவிட்டு முறைத்தான். பைலன் சிரித்துக்கொண்டு "அந்தப் புலியை அது இறந்தபின் உண்ணும் புழுக்களும் நோன்புணவை அருந்தும் பயன்களைப் பெறுகின்றன" என்றான்.

ஜைமினி எழுந்து அப்பால் சென்றான். சூதன் அதை அறியாதவன்போல "இப்புவியிலுள்ள அனைத்தையும் உண்கின்றன புழுக்கள். காலத்தின் வடிவம் அவை" என்றான். பைலன் "சமண அன்னநிலையில் நீங்கள் பாடிய அந்தக் காவியம் முடிவுறவில்லை, சூதரே" என்றான். "ஆம், அது மேலும் பல பகுதிகள் கொண்டது" என்றான் சண்டன். "நான்கு திசைகளையும் வென்றெழுந்த பெருவில்லவனின் கதை அது. நான்காவது திசை வென்றதை இரண்டாம் பகுதியாகவே ஆசிரியர் எழுதியிருக்கிறார்."

ஆர்வத்துடன் அங்கிருந்தே "இரண்டாவது திசை எது?" என்று ஜைமினி கேட்டான். சூதன் திரும்பி நோக்க மேலும் அணுகியபடி "கிழக்கா மேற்கா?" என்றான். "வடக்கு" என்று சண்டன் சொன்னான். "அதெப்படி தெற்கிலிருந்து கிழக்கு அல்லது மேற்குக்குத்தானே செல்ல முடியும்?" என்று ஜைமினி அவனருகே வந்து நின்றபடி கேட்டான். "அது தொட்டுத் தொடரும் பாதை. இது ஊசலின் மறு எல்லை. இப்பயணம் இவ்வாறே அமைய முடியும்" என்றான் சூதன்.

“வடக்கின் அரசன் குபேரன் அல்லவா?” என்று ஜைமினி கேட்டான். “ஆம், குபேரனிடமிருந்து அர்ஜுனன் பெற்றுக்கொண்ட மெய்மையை சொல்லும் பகுதியைச் சொல்கிறது சம்விரதர் சொல்கோத்து அமைத்த அர்ஜுனேந்திரம் என்னும் காவியத்தின் மறுபகுதி” என்றான் சண்டன். ஜைமினி சிரித்தபடி “அர்ஜுனன் பெருஞ்செல்வன் ஆகிவிட்டானா?” என்றான். “பெறுபவன் எப்படி செல்வனாக ஆகமுடியும்?” என்றான் சண்டன்.

**[ 32 ]**

யமபுரியிலிருந்து மீட்டெடுத்த இளமைந்தனின் உடலுடன் அர்ஜுனன் யமுனைக்கரையில் எழுந்தான். விழிதிறந்த அம்மைந்தன் பசித்து கைகால் உதறி அழத்தொடங்கினான். தன் சுட்டு விரலை அவன் இதழ்களில் கொடுத்து உளம் கனிந்து “நிறைக!” என்று அர்ஜுனன் சொன்னபோது அதில் பாலூறியது. மைந்தன் உடல் எம்பி எழுந்து துள்ளும் சிறு கைகளை விரல் சுருட்டி ஆட்டி, உள்ளங்கால்கள் உட்சுருங்கி விரிய இதழோசையுடன் அவ்வமுதை சப்பி உண்டான். அவன் இதழ்க்கோடியில் பால்நுரை மெல்ல எழுந்து வந்து கன்னவளைவில் வழிந்து மென்கழுத்தை நனைப்பதை அர்ஜுனன் குனிந்து பார்த்தான்.

ஜாதவேதனின் இல்லத்திற்கு அவன் சென்று சேர்ந்தபோது அர்ஜுனனின் உடலெங்கும் அமுது நிறைந்திருந்தது. விரல் நுனிகள் அனைத்தும் பால் நிறைந்த முலைக்காம்புகள் என தரிப்பு கொண்டன. தித்திப்பில் திளைக்கும் நாவென ஆகிவிட்டிருந்தது அவன் உடல். எண்ணங்கள் அனைத்தும் தேனில் புழுவென நெளிந்து

வழுக்கிக்கொண்டிருந்தன. மைந்தன் அவனுடன் இணைந்து அன்னையென அவனை எண்ணத்தொடங்கிவிட்டிருந்தான்.

இல்லத்து முற்றத்தில் மைந்தனுடன் அவன் கால் வைத்ததுமே திண்ணையில் அமர்ந்திருந்த ஜாதவேதன் எழுந்து இரு கைகளையும் விரித்து கூவி அழுதபடி அவனை நோக்கி ஓடி வந்தான். அவ்விரைவிலேயே கால்தடுக்கி முகம் அறைபட மண்ணில் விழுந்து இரு கைகளையும் நீட்டி அர்ஜுனனின் கால்களை பற்றிக்கொண்டான். "எந்தையே! என் குலதெய்வமே!" என்று கதறி அழுதான். சொல் விக்கி அவன் உடல் வலிப்புகொண்டது. குருதியும் கண்ணீரும் புழுதியுடன் கலந்து அவன் முகத்தில் வழிந்தன.

அவனை தோள் தழுவி எழுப்பி அமரச்செய்து அவன் மடியில் மைந்தனை படுக்கவைத்து "இதோ உன் மூதாதையர் மீண்டு வந்திருக்கின்றனர்" என்று அர்ஜுனன் சொன்னான். "ஆம். நான் இறந்து மீண்டு வந்திருக்கிறேன். இனி எனக்கு இறப்பில்லை. அமுது நிறைந்துள்ளது என் மடியில்! ஆராவமுது!" என்று கூவி அள்ளி மைந்தனை உடல் சேர்த்து வெறி கொண்டு முத்தமிட்டான். முத்தமிட்டு முத்தமிட்டு ஆற்றாமல் மூச்சிரைத்து நெஞ்சு விம்மினான். அவனாக மாறி அம்முத்தங்களை தானுமிட்டு நின்றான் அர்ஜுனன்.

"இனி இவன் பெயர் அமிர்தன். இறப்பற்றவன். அமிர்தன்! ஆம் அமிர்தன்!" என்று சொல்லி அவனை தூக்கி வானோக்கி நீட்டி "எந்தையரே, இனி மகிழுங்கள். இனி நிறைவடையுங்கள். என் குருதி இனி வாழும்" என்று கூவினான். அப்படியே மயங்கி பின்னால் சரிந்தான். அவன் கைகால்கள் மீண்டும் வலிப்பு கொண்டன. அவன் மடியில் குழந்தை அள்ளிப்பற்றியபடி அமர்ந்திருந்தது. தந்தையின் மணத்தை அது

அறிந்துவிட்டிருந்தது. அவன் ஆடையை கைபற்றிச்சுருட்டி வாயில் வைத்து கவ்வியபடி கால்சுழித்தது.

ஓசை கேட்டு இல்லத்தின் இருளுக்குள்ளிருந்து பரல் மீனென வெளிறிய அவன் மனைவி தோன்றினாள். நெடுநாள் ஒளிகாணாதவள்போல அவள் கண்கள் சுருங்கின. வெறித்த நோக்குடன் அங்கு என்ன நிகழ்கிறது என்பதை பார்த்திருந்தாள். அக்காட்சி அவள் உள்ளத்தைச் சென்றடைய நெடுநேரமாயிற்று. எண்ணியிரா கணம் ஒன்றில் எண்ணத்தில் அனல் பற்றிக்கொண்டு விலங்குபோல அலறியபடி பாய்ந்து வந்து ஜாதவேதனின் மடியில் நெளிந்த மைந்தனை அள்ளிச்சுழற்றி மார்போடணைத்தாள். பெருங்கூச்சலுடன் பாய்ந்து இல்லத்திற்குள் ஓடினாள்.

அர்ஜுனன் அந்தணனை மெல்ல தூக்கி அழைத்துச்சென்று இல்லத்துக்கு முன் கால்கழுவ வைத்திருந்த கலத்துநீரை அள்ளி அவன் முகத்தில் அறைந்து நினைவு மீளச்செய்தான். ஜாதவேதன் "என் மைந்தன் என் மைந்தன்" என்று கைகள் பதைக்க நீட்டியபடி கூவினான். மைந்தனை மீண்டும் பறிகொடுத்துவிட்டோமா என அஞ்சி எழுந்து "என் மைந்தன் எங்கே? என் மைந்தனை எவர் கொண்டுசென்றார்கள்?" என்றான். அனைத்தும் உளமயக்கோ என்று தோன்ற "பாண்டவரே! பாண்டவரே" என்று கூவினான்.

"நலமாயிருக்கிறான் குழந்தை. உங்கள் மனைவியிடம் இருக்கிறான்" என்று அர்ஜுனன் கூறினான். ஜாதவேதன் பெருமூச்சுகளும் விம்மல்களுமாக மெல்ல அடங்கினான். கண்களை துடைத்துக்கொண்டு "வருக இளவரசே, என் இல்லத்தில் ஒருவாய் நீர் உண்டு என் குலத்தை வாழ்த்துக!" என்று கண்ணீருடன் அர்ஜுனன் கைகளை பற்றினான்.

அச்சிறு புல்வீட்டிற்குள் நுழைந்து ஜாதவேதன் இட்ட தோலிருக்கையில் அர்ஜுனன் அமர்ந்தான். ஜாதவேதன் அடுமனைக்குள் சென்று என்ன இருக்கிறது என்று அறியாமல் அனைத்துக் கலங்களையும் துழாவி ஒரு மூங்கில் குவளையில் ஆறிய பாலுடன் வந்து "இது ஒன்றே எனக்கு அளிப்பதற்கென்று இருக்கிறது. ஏழை நான். உணவென்றாகி வந்த வேதத்தையும் இத்தனைநாள் மறந்துவிட்டிருந்தேன். சற்று பொறுங்கள், அரசே! நான் உணவாக்குவேன்" என்றான்.

"ஆகட்டும்" என்று அர்ஜுனன் சொன்னான். மீண்டும் ஓர் அலையென நினைப்பெழ "எங்கே என் மைந்தன்?" என்று கூவியபடி ஜாதவேதன் உள்ளே சென்றான். இல்லத்தின் சிற்றறைக்குள் மைந்தனுடன் புகுந்து கதவை உள்ளிருந்து மூடிவிட்டிருந்தாள். "பாரதி, என்ன செய்கிறாய்? கதவைத் திற" என்று அவன் கூவினான். கதவை ஓங்கித் தட்டியபடி "என்ன செய்கிறாய் என் மைந்தனை? பிச்சி, பேதை, திற கதவை!" என்று கூச்சலிட்டான்.

உள்ளிருந்து உறுமல்களும் சிரிப்பொலிகளும் எழுந்தன. அவன் செவிகூர்ந்துவிட்டு அஞ்சி அர்ஜுனனிடம் ஓடிவந்து "பாண்டவரே, கதவை திறந்து கொடுங்கள். அவள் பிச்சி. என் குழந்தையை அவள் கொன்றுவிடுவாள்" என்றான். "எந்தப் பிச்சியும் தன் குழந்தையை கொல்வதில்லை" என்று அர்ஜுனன் சிரித்தான். அறைக்குள் இருந்து நெஞ்சில் அறைந்து அழும் பேரொலி கேட்டது. "அழுகிறாள். குழந்தை இறந்துவிட்டதென்று தோன்றுகிறது. அழுகிறாள்" என்று ஜாதவேதன் கண்ணீருடன் அர்ஜுனனின் கைகளைப்பற்றி இழுத்தபடி கூறினான்.

“நாம் அவ்வுணர்வை புரிந்துகொள்ள முடியாது, அந்தணரே. இளமைந்தர் நமக்குரியவர்கள் அல்லர். அவர்கள் ஒருவரோடு ஒருவர் இணையட்டும்” என்று அர்ஜுனன் அமர்ந்தபடியே சொன்னான். “அஞ்சுகிறேன், பாண்டவரே. அவளை நான் அறிவேன். ஊனுண்ணி விலங்கென என்னை உறிஞ்சி உண்ட பிடாரி அவள்” என்று கூறியபடி மூடிய கதவின் வாயிலின் முன்னாலேயே ஜாதவேதன் அமர்ந்து அழுதான்.

அன்று முழுக்க அன்னையும் மைந்தனும் அச்சிற்றறையின் இருளுக்குள் இருந்தனர். வாயிலுக்கு வெளியே தந்தை தலையில் அறைந்து அழுதபடியும் தவித்தபடி எழுந்து அமர்ந்தும் சோர்ந்து மீண்டும் விழுந்தும் காத்திருந்தான். மறுநாள் புலரியில் அறைக்கதவு திறந்து அன்னை தன் மைந்தனுடன் வெளிவந்தாள். சோர்ந்து விழிமயங்கி இருந்த ஜாதவேதன் அவ்வோசை கேட்டு துடித்து எழுந்து நோக்கியபோது அவன் முன்பென்றோ கண்டு மறந்திருந்த அவள் கன்னிமுகத்தை கண்டான். சொல் மறந்து இரு கைகளையும் கூப்பினான்.

அவள் இடையில் இருந்த மைந்தன் ஒரு முலை பற்றி அருந்த மறுமுலையில் இருந்து பால் ஊறி பீறிட்டு நிலத்தில் சொட்டிக்கொண்டிருந்தது. ஓசை நிறைந்த காலடிகளுடன் எவரையும் பார்க்காதவள்போல நடந்து அவள் வெளியே சென்றாள். ஜாதவேதன் எழுந்து அர்ஜுனனிடம் ஓடிவந்து “மீண்டும் அவள் முலை ஊறியிருக்கிறது. இது எவ்வண்ணம் என்று தெரிந்திலேன்” என்றான். “மண் செழிக்க மழையை அனுப்பும் பெருநெறியின் ஆணை அது” என்று அர்ஜுனன் சொன்னான். “தங்களை மறந்துவிட்டேன், பாண்டவரே.

உணவருந்துங்கள்” என்று அடுமனை நோக்கி ஓடினான் ஜாதவேதன்.

அவ்வில்லத்தில் அர்ஜுனன் ஆறு நாட்கள் தங்கியிருந்தான். ஒவ்வொரு நாளும் பகல் முழுக்க அக்குழவியை மாறி மாறி முலையூட்டியபடி அன்னை இல்லத்தைச் சுற்றிய குறுங்காட்டில் அலைந்தாள். மானுட விழிகள் எதையும் அவள் விழிகள் சந்திக்கவில்லை. இரவில் மீண்டு வந்து அடுமனைக்குள் அமர்ந்து மாதப்பசி கொண்ட ஓநாய் என அனைத்து உணவையும் அள்ளி விழுங்கினாள். மைந்தனை தன் முலைகளுக்கு நடுவே அணைத்தபடி விழுந்து துயின்றாள். அவன் ஒவ்வொருமுறை அசையும்போதும் விழித்தெழுந்து உறுமியும் முத்தமிட்டும் தழுவியும் ஆற்றுப்படுத்தினாள்.

ஜாதவேதன் அர்ஜுனனுக்கும் அவளுக்கும் உணவு சமைத்தான். பித்து எழுந்தவன்போல அவன் பேசிக்கொண்டே இருந்தான். பிறந்து மறைந்த அத்தனை பிள்ளைகளையும் அவன் ஒவ்வொரு நாளென கணமென காட்சியென நினைவில் மீட்டுக்கொண்டுவந்தான். அத்தனைபேரும் ஒரு மைந்தன் என வந்து தன் முன் நின்றிருப்பதுபோல. அவன் மனைவியோ அனைத்து மைந்தர்களையும் மறந்து முதல் குழவியை ஈன்றவள் போலிருந்தாள்.

ஏழாவது நாள் அவள் மெல்ல மீண்டு வந்தாள். தோட்டத்திலிருந்து அவள் வருகையில் வில்லுடன் எதிரே சென்ற அர்ஜுனனை நோக்கி கைகளைக் கூப்பி விழிதாழ்த்தி நின்றாள். அர்ஜுனன் அருகே நின்று புன்னகை செய்து “உன் மைந்தன் மீண்டுவிட்டான், அன்னையே” என்றான். “ஆம், இனி இப்புவியில் நானடைவதற்கொன்றுமில்லை” என்று அவள் சொன்னாள். “நான் இன்னும் ஏழு பிறவி எடுத்து தங்கள்

தேருக்குப் புரவியாக வேண்டும். அது ஒன்றே என் வேண்டுதல்" என்றபின் எழுந்த அழுகையை அடக்கியபடி மைந்தனை அணைத்து இல்லத்திற்குள் புகுந்தாள்.

மறுநாள் ஜாதவேதன் அர்ஜுனனிடம் வந்து "அவள் மீண்டுவிட்டாள். இன்று என்னிடம் சொல்லாடினாள். இளவரசே, அவளிடம் இயல்பாக சொல்லுரைத்து எத்தனையோ நாளாகிறது. இத்தனை காலம் அவளில் இருந்த கொலைத்தெய்வத்தின் முகம் விலகி சில கணங்களிலேயே அவள் இயல்முகம் மீண்டு வந்ததை எண்ணி வியக்கிறேன். அவளுக்குள் இருந்திருக்கிறதா அது?" என்றான். உவகையுடன் நிலைகொள்ளாமல் அங்குமிங்கும் திரிந்தான். "அதைவிட அந்த வெறிமுகத்தை எப்படி இத்தனை விரைவில் நான் முற்றிலும் மறந்தேன் என்று எண்ணுகையில் விந்தையால் என் உள்ளம் திகைக்கிறது" என்றான்.

"மானுடர் தங்கள் விழைவால் உருவாக்கிக்கொண்ட உலகம் இது" என்று அர்ஜுனன் புன்னகை செய்தான். பின்னர் குரல் தழைந்து முகம் திருப்பி "இத்தனை நாள் நான் இங்கிருந்ததே மீண்டும் அம்மைந்தன் என் கைக்கு வரவேண்டும் என்பதற்காகத்தான். அவனைத் தழுவி முத்தமிட்டு வாழ்த்தி மீள்கிறேன். என் உடல்நிறைந்திருக்கும் அமுதை அவனுக்களிக்காமல் இங்கிருந்து நான் செல்ல முடியாது" என்றான்.

"அவ்வண்ணமே" என்று சொல்லி உள்ளே சென்று மனைவியுடன் மைந்தனை அழைத்து வந்தான் ஜாதவேதன். அவள் அருகே வந்து மண்டியிட்டு அர்ஜுனனின் மடியில் தன் மைந்தனை வைத்தாள். ஓயாது முலையுண்டதனால் உடல் ஒளிபெற்று விழிகள் கூர்கொண்டிருந்த மைந்தன் "ந்தை" என்ற

ஒலியெழுப்பி காலுதைத்து மெல்ல புரண்டு அர்ஜுனனின் மார்பிலிருந்த ஆடையை பற்றிக்கொண்டான்.

குனிந்து அவன் நெற்றியில் கன்னங்களில் இளந்தோள்களில் முத்தமிட்ட அர்ஜுனன் அவனைத் தூக்கி அண்ணாந்து மென்வயிற்றில் தன் மூக்கையும் வாயையும் புதைத்து அசைத்தான். கைகால்கள் நெளிய துள்ளிக் குதித்து மைந்தன் நகைத்தான். இரு கைகளையும் கூப்பி அன்னை அமர்ந்திருந்தாள்.

மைந்தனை அன்னையிடம் அளித்து அர்ஜுனன் எழுந்தான். "இது முடியாத சுழல் என்றுணர்ந்தேன், அன்னையே. என்னுள் நிறைந்த அமுதனைத்தையும் இவனுக்கு அளித்து இங்கிருந்து கிளம்பலாம் என்று திட்டமிட்டிருந்தேன். ஒரு துளி அளிக்க ஓராயிரம் துளி பெருகும் ஊற்று அது என்று அறிந்தேன். இவ்வொரு மைந்தனை அமுதூட்டியே இப்பிறப்பை இங்கு கழித்துவிடுவேன். என் கடன்கள் என்னை அழைக்கின்றன. செல்லும் தொலைவு காத்திருக்கின்றது. வழி அளிக்கவேண்டும்" என்றான்.

ஜாதவேதன் "இன்னும் ஒரு வாரம் இங்கிருக்க வேண்டும், பாண்டவரே. இக்குடில் தாங்கள் தங்குமிடமல்ல என்றறிவேன். என்றாலும் என் மைந்தனுக்கு இடையணி அணிவித்து பெயர் சூட்டும் விழா ஒன்று ஒருக்கியிருக்கிறேன். வரும் முழுநிலவுநாளில் அவனுக்கு மெய்ஆசிரியனாக தாங்கள் அமர்ந்து அச்சடங்கை செய்ய வேண்டும். அருள வேண்டும்" என்றான்.

அச்சொல்லுக்கு முன்னரே தன்னால் உடனே கிளம்பமுடியாதென்று அர்ஜுனன் அறிந்திருந்தான். அது ஒரு நிமித்தம் என அமைய “ஆம், அவ்வாறே” என்றுரைத்தான்.

# கிராதம் - 23

### பகுதி மூன்று : பொருள்கோள் பாதை

**[ 1 ]**

வளர்பிறைக்காலம் முடிவுவரை அர்ஜுனன் ஜாதவேதனுடன்அவன் குடியில் வாழ்ந்தான்.. மைந்தனுடன் விளையாடி தன் உள்ளுருகி எழுந்த அமுது அனைத்தையும் அவனுக்கு ஊட்டி அவ்வின்பத்தில் கணம் கணம் என நிறைந்து திளைத்தான். ஒன்றுபிறிதொன்றைக் கண்டடைந்து நிறைத்து தானழிவதே உயிர்களுக்கு விண்ணென்றானது வகுத்தளித்த பேரின்பம் என்று அறிந்தான்.

ஜாதவேதன் தன் மைந்தன் உயிர்மீண்ட செய்தியை தன் நூற்குலத்தையும் குடியையும் சேர்ந்த நூற்றெட்டு அந்தணர்களுக்கு நேரில் சென்று அறிவித்தான். அவனுக்கு அமிர்தன் என்று பெயர் சூட்டுவதைச்சொல்லி இடையணிநாளில் நிகழவிருக்கும் வேள்விக்கும் விருந்துக்கும் அழைப்பு விடுத்தான். “நம் வாழ்வில் முதன்மை நாள் அது. நாம் அமுதத்தால் வாழ்த்தப்பட்டவர்கள் என்பதை அனைவரும் அறியட்டும்” என்று அவன் தன் மனைவியிடம் சொன்னான். “ஒன்றும் குறையலாகாது. ஒரு கணமும் முழுமையின்றி கடந்துசெல்லலாகாது.”

“ஆம், நாம் வாழ்ந்ததே இந்நாளுக்காகத்தான்” என்றாள் அன்னை. “அழைக்கப்படவேண்டியவர்களில் எவரும் விடுபடக்கூடாது.” அவர்கள் அமர்ந்து எண்ணி எண்ணி அழைப்புக்குரியவர்களை சேர்த்துக்கொண்டனர். அந்நாளுக்குரிய அனைத்தையும் ஒருக்குவதில் ஈடுபட்டு மெல்ல மெல்ல அதில் மூழ்கினாள். வேடர்களைச் சென்று கண்டு தேனுக்கும் தினைக்கும் சொல்லி வந்தாள். வேட்டுவப் பெண்களிடம் விறகுக்கு சொன்னாள். ஆயர்குடிகளில் நெய்யும் பாலும் குறித்துவைத்தாள்.

இல்லத்துப் பின்கட்டில் மண்ணில் புதைத்திருந்த கலங்களிலிருந்து எஞ்சிய கூலம் அனைத்தையும் எடுத்து உலர்த்திப் புடைத்து சேர்த்து வைத்தாள். முன்பு இல்லமெங்கும் புதைத்திட்டு மறந்த பொன் முழுக்க எடுத்துச் சேர்த்து ஒவ்வொருவருக்கும் அளித்தாள். நினைவுகூர்ந்து நினைவுகூர்ந்து பொன்னை எடுக்க எடுக்க உவகை கொண்டாள். கனவிலும் மண்ணைத்தோண்டி பொன்னெடுத்துக்கொண்டிருந்தாள். நினைவொன்றை சித்தம் தொட்டெடுக்கையில், மண்ணைத் தோண்டுகையில் எண்ணியிராத ஒரு பொன் கிடைக்கையில் கூவிச்சிரித்தபடி எழுந்து கைவீசி ஆடினாள்.

பின் மண்மட்டுமே எஞ்சியபோது அவளுக்குள் ஏமாற்றம் தோன்றலாயிற்று. தோண்டித் தோண்டி சலித்தபின்னரும் மண்கெல்லி நோக்குவதை நிறுத்தமுடியவில்லை. வேள்விக்குரிய அவிப்பொருள் சேர்த்துவர புலரிமுதல் அந்தி வரை அலைந்த ஜாதவேதன் அவளை பின்னர்தான் கூர்ந்தான். “என்ன செய்கிறாய்? மண்ணில் நட்டால் முளைப்பதல்ல பொன். நிறுத்து!” என்று கடிந்தான். “எங்கோ இன்னுமிருக்கிறது பொன். நான் கனவில் கண்டேன்” என்றாள் அவள். “பொன் இருப்பது

வெளியே. வேதத்தை வலையாக்கி அதை நான் சேர்த்துக்கொண்டுவருகிறேன். இது நம் மைந்தனின் நாள்” என்றான் ஜாதவேதன்.

நாளும் அந்திக்குப்பின் அந்தணனும் மனைவியும் தனித்தமர்ந்து தங்கள் கையிலிருப்பதையும் மிஞ்சி தேவைப்படுவதையும் பற்றி பேசினர். நாள் செல்ல நாள் செல்ல இருப்பது குறைய வேண்டுவது வளர்ந்தது. பின்னர் இடைப்பட்ட கணக்கு பேருருக்கொண்டு அவர்கள் முன் நின்றது. அவர்களின் பதற்றம் மிகுந்தது. தன்னிரக்கமும் எரிச்சலும் மேலெழுந்தது. ‘இன்னும் சற்று… இன்னும் சில…’ என்று சொல்லிச்சொல்லி கணக்கிட்டவர்கள் ‘இன்னும் எவ்வளவு? இன்னும் எதுவரை?’ என ஏங்கலாயினர்.

“என் தகுதிக்கு மீறி அழைத்துவிட்டேன், பாண்டவரே” என்றான் ஜாதவேதன். “நூற்றெட்டு அந்தணர் அமர்ந்து செய்யும் வேள்விக்கு உரிய நெய் என நான் எண்ணியதைவிட பன்னிருமடங்கு அதிகம் தேவைப்படுகிறது. அத்தனை பெரிய வேள்விக்கு வரும் விருந்தினர் உண்பதற்கு உரிய அன்னமும் இன்னும் ஒருக்கப்படவில்லை. வேள்வி முடிந்து அவர்கள் எழும்போது அளிக்கப்படும் நற்கொடையும் சேரவில்லை. அவர்கள் அணிவதற்கு பட்டு, அவர்கள் துணைவியருக்கு ஆடை, அவர்களின் இளமைந்தருக்கு பரிசுகள் என இருந்தால் மட்டுமே அது வேள்வியென்றாகும்.”

“அளிக்கப்பட்டதை மறந்து பெறப்படாததை எண்ணிக் கணக்கிட்டுச் சொல்லி நிலைநிறுத்துபவர்கள் அந்தணர். நானும் அவ்வாறுதான் இருந்தேன். அதை எண்ணும்போது என் நெஞ்சு பதைக்கிறது” என்றான். நிலைகொள்ளாமல் கைகளை அசைத்து “உள்ளம் சென்ற தொலைவுக்கு என் செல்வம் செல்ல

மறுக்கிறது. நான் என்ன செய்வேன்?” என்றான். வான்நோக்கி ஏங்கி “தெய்வங்களே, என்னை ஏன் கைவிட்டீர்கள்?” எனக் கூவினான்.

அறைக்குள் இருந்து எட்டி நோக்கிய அவன் துணைவி “களஞ்சியம் நிறைந்திருக்கும் இல்லத்தில் பிறக்கவேண்டிய மைந்தன் வெறும் சொல் மட்டும் நிறைந்திருக்கும் இல்லத்தில் பிறந்துவிட்டான்” என்றாள். சினம்கொண்ட ஜாதவேதன் “அது என் பிழை அல்ல. களஞ்சியம் நிறைந்த இல்லம் கொண்டவனுக்கு நீ அவனை பெற்றிருக்கவேண்டும்” என்றான். “களஞ்சியத்தை நிறைக்கவேண்டியது உங்கள் பொறுப்பு...” என்றாள் அவள். “ஏழை அந்தணன் என்றுதானே வந்தாய்?” என்று அவன் கூவ “ஆம், ஆனால் செயலற்றவன் என அறிந்திருக்கவில்லை” என்று அவள் திருப்பிக் கூவினாள்.

அர்ஜுனன் அவர்களைத் தடுத்து “அஞ்சவேண்டியதில்லை, அந்தணரே. என்னால் ஆவதை நான் சேர்த்து அளிக்கிறேன்” என்றான். “தாங்கள் பாண்டவர் என்றறிவேன். ஒரு சொல் ஓலையில் எழுதி அளியுங்கள், இங்கிருக்கும் குடித்தலைவர் இல்லத்திற்குச் சென்று வேண்டிய அனைத்தையும் பெற்றுவிடுவேன்” என்று ஜாதவேதன் சொன்னான். “இல்லை அந்தணரே, நான் நகர் புகுவதில்லை என்ற நெறி கொண்டவன். கான்புகுவதற்காக உடன்பிறந்தாருடன் அஸ்தினபுரிவிட்டு நீங்கியவன். நான் அதைச் செய்வது முறையல்ல” என்றான்.

ஜாதவேதனின் முகம் சற்று சுருங்கியது. “தாங்கள் இரவும் பகலும் தோளில் வைத்து கொஞ்சி அலையும் மைந்தனுக்காக இச்சிறு செயலை செய்வீர்கள் என்று எண்ணினேன், பாண்டவரே. நன்று, மைந்தனைவிட நெறியே உங்களுக்கு

முதன்மையானது என்றுரைக்கிறீர்கள். அதுவும் அவ்வாறே ஆகுக!" என்று சொல்லி திரும்பி நடந்தான். அவன் மனைவி "நமக்கு நம் மைந்தன் முதன்மையானவன். அனைவருக்கும் அப்படியா?" என்றாள்.

அர்ஜுனன் அவள் விழிகளை சந்தித்ததும் நெஞ்சதிர்ந்து விழிதிருப்பிக்கொண்டான். ஜாதவேதன் உடலசைவுகளில் தெரிந்த எரிச்சலை நோக்கியதும் அந்தணனும் மனைவியும் இளமைந்தனை தங்கள் கையிலெடுத்தே நாட்களாகின்றன என்பதை உணர்ந்தான். தவழ்ந்து அவன் அவர்கள் அருகே செல்லும் போதுகூட எரிச்சலுடன் "அருகே வராதே, எண்ணை கொப்பரையை கவிழ்த்துவிடுவாய்" என்று ஜாதவேதன் சொன்னான். அடுமனைக்குள் சென்று அன்னையின் ஆடையை அவன் பற்றினால் "விலகிச் செல்! அடுப்பில் எரிகொள்ளி இருப்பதை அறியமாட்டாயா, மூடா?" என்று அவள் சினந்தாள்.

அவர்கள் விலக்கம் கொள்ள கொள்ள மைந்தன் மேலும் மேலும் அர்ஜுனனை அணுகினான். எப்போதும் அஞ்சியவன்போல அவன் ஆடைகளை பற்றிக்கொண்டான். நாளெல்லாம் அவன் தோள்களில் அமர்ந்திருந்தான். ஒரு கணமும் கீழிறங்க மறுத்தான். மைந்தனை தூக்கிக்கொண்டே காட்டிற்குச் சென்று பெருங்கலம் நிறைய மலைத்தேன் எடுத்து வந்தான் அர்ஜுனன். ஜாதவேதனிடம் அதை அளித்து "நறுமலைத்தேன் இது. ஊர்த்தலைவரிடம் கொண்டு சென்று உரிய விலை பெற்று வருக!" என்றான்.

ஜாதவேதன் விழிகளை விலக்கி "தேனுக்கு இப்போது மதிப்பொன்றுமில்லை, பாண்டவரே. ஊர்த்தலைவர் இதை பொருட்டென எண்ணமாட்டார். ஊர்மன்றிலும் சந்தையிலும் நூறு வேடர்கள் கலம் நிறைய தேனுடன் கொள்வாரின்றி

அமர்ந்திருக்கிறார்கள். நானோ அந்தணன். வணிகம் செய்யக் கற்றவனுமல்ல” என்றான்.

“மலைப்பொருள் எதுவென்றாலும் கொண்டுவருகிறேன். வேள்வி சிறக்கட்டும்” என்று அர்ஜுனன் சொன்னான். “எனக்குத் தேவை வேள்விச்செல்வம். மலைப்பொருளை விற்று நான் நினைக்கும் பணத்தை ஈட்ட முடியாது” என்றான் ஜாதவேதன். “நீங்கள் அறிந்திருக்க வாய்ப்பில்லை, மலைப்பொருளுக்கு ஓர் இயல்பு உண்டு. மிகுதியாகக் கிடைக்கும்தோறும் அதன் விலை இறங்கிவிடும்.”

அர்ஜுனன் சில கணங்கள் அவனை நோக்கி நின்றபின் மைந்தனை தூக்கிக்கொண்டு விளையாடச்சென்றான். “தேன்! தேன்!” என்று மைந்தன் துள்ள தன் கையிலிருந்த எஞ்சிய தேனடையைப் பிழிந்து அவன் வாயில் விட்டான். முகம் நிறைந்து உடலில் வழிய அமிர்தன் தேனை உண்டான். தேன் தட்டை வீசியபின் அவனுடலில் படிந்திருந்த இனிமையை தன் நாக்கால் தொட்டு அர்ஜுனன் உண்டான்.

வேள்வி நாள் நெருங்கிக்கொண்டிருந்தது. அந்தணனும் மனைவியும் அர்ஜுனன் இருப்பதையும் மறந்தனர். அவனுக்கு உணவளிக்க நினைவு கொள்ளவில்லை. அவனோ உணவை எண்ணவும் இல்லை. காடுகளில் அலைந்து சந்தனமும் பலாசமும் கொண்டு வந்து சேர்த்தான். கஸ்தூரியும் புனுகும் சவ்வாதும் கொண்டு வந்து வேள்விக்கு அளித்தான். அவை ஒருபொருட்டல்ல என்னும் நோக்குடன் ஜாதவேதன் அவற்றை பெற்றுக்கொண்டான்.

மைந்தனை உடல்கழுவ கொண்டுசெல்கையில் கொல்லைப்பக்கம் நீரோடைக்கரையில் அந்தணன் துணைவி

தனித்திருந்து கண்ணீர்மல்க தனக்குள் பேசிக்கொள்வதைக் கண்ட அர்ஜுனன் “அன்னையே, இன்னும் என்ன துயர்? மைந்தன் முழுநலத்துடன் இருக்கிறானே?” என்றான். அவள் சினத்துடன் திரும்பி “இருந்தென்ன பயன்? இவன் வளர்ந்து எப்போது எங்களுக்கு உணவளிக்கப்போகிறான்? அதுவரை இவ்வாறு உழைத்து தேய்ந்து மடியவேண்டுமென்பது எங்கள் ஊழ்” என்றாள்.

திகைத்த அர்ஜுனன் ஏதோ சொல்லெடுப்பதற்குள் கழுவிக்கொண்டிருந்த கலன்களை கையிலெடுத்தபடி அவள் நிமிர்ந்து “வேதம் நன்குணர்ந்த அந்தணர்கள் அரசர்களுக்கு எரிசெயல் ஓம்பி பொன் பெற்று வந்து மாளிகை கட்டுகிறார்கள். எனக்கு வாய்த்தவனோ ஊக்கமில்லா மூடன். இப்பிறப்பெல்லாம் சிறுகுடிலில் கரிபடிந்த கலன்களைக் கழுவி, புகையூதி கண்கலங்கி, மிச்சில் உணவை உண்டு, கந்தல் அணிந்து வாழ்ந்து மறைய வேண்டுமென்பது என் ஊழ் போலும். முற்பிறப்பில் செய்த பிழை இவ்வாறு வந்து சூழ்ந்திருக்கிறது. பிறகென்ன சொல்ல?” என்றாள்.

“தங்கள் குறை என்ன, அன்னையே?” என்று அர்ஜுனன் கேட்டான். பேசியபடியே அடுமனைக்குள் சென்ற அவள் உளவிசையுடன் ஆடையைச் சுழற்றி இடையில் செருகியபடி வெளியே வந்து “என் குறை இதுதான். நூற்றெட்டு அந்தணர்களுக்கும் மைந்தர் இருக்கிறார்கள். அவர்களின் காதணிவிழாவும் சொல்லணிவிழாவும் நிகழ்ந்ததெவ்வாறு என்று அறிவேன். இங்கு நான் எண்ணி எண்ணி வைத்திருக்கிறேன் அரிசிமணிகளை. அவர்களின் பெண்டிர் இங்கு வந்தமரும்போது எதை சமைத்து பரிமாறுவேன் என்று தெரியவில்லை. அவர்களின் இதழ்களில் விரியும்

கெடுநகைப்பை இப்போதே காண்கிறேன். ஒவ்வொரு முகத்திற்கு முன்னும் ஒருமுறை இறந்து எழப்போகிறேன். அதைக் காணாமல் இப்போதே செத்தழியவேண்டும். அதுதான் என் விழைவு... போதுமா?” என்றாள்.

சீற்றத்துடன் திரும்பி, அர்ஜுனன் கையிலிருந்து இறங்கி எச்சில் வழிய நகைத்தபடி தவழ்ந்துசென்று எழுந்து அவள் ஆடையைப் பற்றி இழுத்த மைந்தனின் முதுகில் ஓங்கி அறைந்து “இவன் மீண்டு வரவில்லை என்றால் இந்தத் துயர் இருந்திருக்காது. பிறக்கவில்லை என்றே இருந்திருப்பேன். எந்த தீக்கணத்தில் அதை விரும்பினேன்? ஏதோ கொடுந்தெய்வம் இந்தப் பொறியில் என்னை சிக்க வைத்தது!” என்றாள்.

அடிபட்டு அமர்ந்து வாய்திறந்து கண்ணீர் உதிர கதறி அழுத மைந்தனைத் தூக்கி தன் தோளில் அமர்த்தி அர்ஜுனன் வெளியே சென்றான். அன்று முழுக்க நிலையற்றவனாக காடுகளில் அலைந்துகொண்டிருந்தான். அவனுள் எழுந்த வினாக்களை எதிர்கொள்ள அவனே அஞ்சினான். குழந்தையை கொஞ்சிக்கொஞ்சி அவற்றை அப்பால் துரத்தினான்.

மாலையில் திரும்பி அந்தணனின் இல்லத்திற்கு வந்தபோது அவன் முற்றம் முழுக்க கலங்கள் ததும்ப நெய்யும் தேனும் வந்து நிறைந்திருப்பதை கண்டான். மூட்டைகளில் அரிசியும் கோதுமையும் அடுக்கப்பட்டிருந்தன. அடுமனையாளர்கள் கொல்லைப்பக்கம் கொட்டகை கட்டி வெண்கல உருளிகளை உருட்டி அடுப்பிலேற்றிக் கொண்டிருந்தனர். பணியாட்கள் இல்லத்துக்கு முன் கட்டப்பட்ட பெரிய பந்தலில் தோரணங்களை அமைத்துக்கொண்டிருந்தனர். வைதிகர் அமர்ந்து வேள்விக்களத்திற்கு வாஸ்து வரையக் கோடுகள் வரைந்து கொண்டிருந்தனர்.

அவன் வருவதைக் கண்டதும் வைதிகர் மதிப்புடன் எழுந்து நின்றனர். வீரர்கள் உரத்த குரலில் “இளைய பாண்டவர் வாழ்க! அஸ்தினபுரியின் இறைவர் வாழ்க!” என்று குரல்கள் எழுப்பினர். திகைத்து நின்ற அர்ஜுனன் திரும்பி ஜாதவேதனை நோக்க அவன் அஞ்சாது அவன் கண்களை நோக்கி “ஆம், நான் சென்று ஊர்த்தலைவரிடம் சொன்னேன். சான்றுக்கு தாங்கள் அணிந்து கழற்றி வைத்த கணையாழி ஒன்றையும் கொண்டு சென்று காட்டினேன். அவரே தங்களைத் தேடி சற்று கழித்து இங்கு வருவார்” என்றான்.

கட்டற்று எழுந்த பெருஞ்சினத்துடன் கை ஓங்கியபடி அர்ஜுனன் காலடி எடுத்து முன்னால் வந்தான். “நான் ஆணையிட்டிருந்தேன். உமக்கு நான் ஆணையிட்டிருந்தேன்” என்று கூவினான். ஜாதவேதன் வெறுப்பில் வெறித்த விழிகளுடன் கைவிரித்து “அந்தணனை அடிக்க கையோங்குகிறீர்களா? அவ்வாறே ஆகுக!” என்றான். அர்ஜுனன் கை தழைத்து “உத்தமரே, வேதம் அறிந்த தாங்கள் இதை செய்யலாமா? அறத்துக்கு உகந்ததா இது?” என்றான்.

“இதுவே எனக்கு உகந்தது. இன்று எனக்குத் தேவை பொருள். என் மைந்தனை குடியவை முன் தகுந்த முறையில் நிறுத்த அதுவன்றி வழியில்லை. அதன் பொருட்டே இதைச் செய்தேன். எனக்கு இதில் பிழையென ஏதுமில்லை” என்றான் ஜாதவேதன். “மைந்தனை மீட்க விழைகையில் பொருளை நீர் எண்ணவில்லை” என்றான் அர்ஜுனன். ஜாதவேதன் உரக்க “ஆம், மைந்தன் உயிர் பெரிதே எனக்கு. ஆனால் அவன் நோயின்றி உயிர்கொண்டு நிற்கும்போது அவனைவிடப் பெரிது பொருள்தான். இதில் என்ன ஐயம்?” என்றான்.

திகைத்து அங்கு நின்ற அனைவரையும் நோக்கி சொல்லெடுக்க பலமுறை வாயசைத்த பின் திரும்பி நடந்தான். அவன் பின்னால் வந்த ஜாதவேதன் “இளைய பாண்டவரே, தங்களை வருத்துவதற்காக இதை நான் சொல்லவில்லை. எந்நூலிலும் நோக்குக! எந்த அறிஞனிடம் வேண்டுமானாலும் உசாவுக! தென்திசைத் தலைவனே உயிருக்கு முதல்வன். ஆனால் வாழ்வுக்கு முதல்வன் குபேரனே. அவனைவிட ஒருபடி மேலானவன் வடதிசை ஆள்பவனே” என்றான்.

ஒரு முதியவைதிகர் தொலைவில் நின்றபடி “உலகியலோருக்கு உகந்தவன் செல்வத்துக்கு இறைவனே. காலனை வழுத்துபவர்கள் இருக்கிறார்கள். குபேரன் அருளியவர்களே மெய்யாக வாழ்கிறார்கள்” என்றார். அர்ஜுனன் திரும்பி நோக்க வைதிகர் தலைவர் “ஆம், இளைய பாண்டவரே! இப்புவியில் நோயும் இறப்பும் அணுகும்போது மட்டுமே அறத்திற்கிறைவன் எண்ணப்படுகிறான். அல்லும் பகலும் வாழ்த்தப்படுபவன் வடதிசை அண்ணலே” என்றார். தலையசைத்து “நன்று” என்றபின் அர்ஜுனன் திரும்பி நடந்தான்.

**[ 2 ]**

ஊழித்தொடக்கத்தில் விளையாடும் இளமைந்தன்போல தன் சுட்டுவிரலை காற்றில் அசைத்தசைத்து பன்னிரண்டாயிரம்கோடி பெருமலைத் தொடர்களைப் படைத்தபின் பிரம்மன் அவ்விரலை கட்டைவிரலில் தொட்டு மெல்ல சுண்டியபோது மிகச்சிறிய விதை ஒன்று பறந்து விழுந்தது. அதை சுட்டுவிரலால் தொட்டெடுத்து இடக்கை உள்ளங்கையில் வைத்து முகம் முன்னால் தூக்கி நோக்கி புன்னகைத்தார். விழி விலக்கி தன் முன் திசைகளை நிரப்பி எழுந்தெழுந்தமைந்துசென்ற மலையலைகளைப் பார்த்தபடி

அவ்விதையிடம் “உன் பெயர் திருணபிந்து. நீயும் இம்மலைகளுக்கு நிகரென ஆகுக!” என்றார்.

அதை மெல்ல ஊதி கீழே விரிந்துகிடந்த மண்பரப்பில் விழச்செய்தார். மண் தொட்ட அவ்விதை கைகூப்பி முனிவரென எழுந்தது. திருணபிந்து மண்ணில் புதைந்து உயிர்பெருக்கி எழுந்தது. மண்ணை உண்டு உருப்பெருக்கி பரவி பன்னிரண்டாயிரம் கோடி மலைகளையும் முழுக்க மூடியது. புவியெங்கும் ஒருகணமும் ஓயாது நிகழ்ந்து கொண்டிருந்தது அவரது வேள்வி. பெருந்தழல் எழுந்து அவிகொண்டது. பசுமை விளைந்து அவியாகியது.

தன் அவியிலிருந்து அவர் ஈன்றெடுத்த மகள் ஹவிர்ஃபு எனப்பட்டாள். பேரழகியென அவள் வளர்ந்து நின்றபோது பிரம்மனிடம் “எந்தையே, என் மகளுக்குரிய கணவன் யார்?” என்றார் திருணபிந்து. சுட்டுவிரலால் காற்றில் ஒரு முகம் வரைந்து பிரம்மன் புலஸ்தியர் என்னும் பிரஜாபதியை படைத்தார். “குன்றாத பிறப்பாற்றல் கொண்டவர் இவர். பெருகிநிறைபவளான உன் மகளே இவருக்குரிய துணைவி” என்றார்.

புலஸ்தியர் ஹவிர்ஃபுவை மணந்தார். கணந்தோறும் என பல்லாயிரம் கோடி மைந்தரைப் பெற்று விண்ணில் மிதந்தலைந்த உலகங்களை முழுதும் நிரப்பினர் அவர்களிருவரும். ஹவிர்ஃபு புலஸ்தியருக்கு ஈன்ற முதல் மைந்தர் விஸ்ரவஸ் என்று அழைக்கப்பட்டார். அழியாச்சொல் என எழுந்து சொல் பெருக்கி விரிந்து சித்தம் நிறைத்த விஸ்ரவஸ் பரத்வாஜ முனிவரின் மகளாகிய தேவவர்ணினியை மணந்தார். அந்திமஞ்சள் நிறம் கொண்டிருந்த தேவவர்ணினி கணவருடன் கூடி மகிழ்ந்த

இரவொன்றில் உடலோய்ந்து உளம் நிறைந்து துயிலில் படுத்திருக்கையில் கனவில் பொன்னிறமான புல்தளிர் ஒன்றைக் கண்டு புன்னகைத்தாள். விழித்துக்கொண்டு எழுந்து தன் அருகே படுத்திருந்த விஸ்ரவஸின் தோளை உலுக்கி சொன்னாள் “தளிரொன்றின் ஒளியை நான் கண்டேன். பிறிதெங்கும் இல்லாது தன்னுள்ளிருந்தே எடுத்து தான் சூடி நின்ற ஒளி அது.”

விஸ்ரவஸ் அவள் தோள்மேல் கைவைத்து காதில் குழையை வருடி கழுத்தின் மென்வரிகளில் விரலோட்டியபடி “தன்னுள்ளிருந்து ஒளியெழச்செய்யும் ஆற்றல் கொண்டவை இரண்டே. விண்ணில் ஆதித்யர்கள், மண்ணில் மெய்யெழும் சொல்” என்றார். “பிறிதொன்றும் உள்ளது. அதை சற்று முன்தான் கனவில் கண்டேன்” என்றாள் தேவவர்ணினி. “அவ்வண்ணம் ஒன்று இப்புவியில் இல்லை. அதில் எனக்கு ஐயமே இல்லை” என்றார் விஸ்ரவஸ். “அது உன் விழைவு மட்டுமே. துயில்க!” என அவள் தலையை வருடி முத்தமிட்டார்.

அவள் “இல்லை, நானறிவேன். அது கனவு மட்டும் அல்ல” என்றாள். “மலர் விரிவதற்கு முந்தைய மணமெழலே கனவு. இனிய ஒன்று நிகழவிருக்கிறது.” அவர் புன்னகையுடன் அவள் கன்னத்தை வருடி “நான் என்ன செய்யவேண்டும்? சொல்” என்றார். “தங்கள் மூதாதையாகிய படைத்தோனை அழைத்து கேளுங்கள். இன்று நான் கனவில் கண்டதென்ன என்று” என்றாள் அவள்.

சற்றே சினம் கொண்டபோதிலும் அவர் எழுந்து அறையில் இருந்த அகல் அருகே சென்று அழியாச்சொல்லை ஆகுதியாக்கி அதை வேள்வித்தீயாக மாற்றினார். “எந்தையே, சொல்க!

ஆதித்யர்களுக்கும் வேதப்பொருள் சுமந்த சொற்களுக்கும் அப்பால் தன்னொளி கொண்ட பிறிதேது உள்ளது இப்புவியில்?” புன்னகைத்து பிரம்மன் சொன்னார் “உயிர்.” விஸ்ரவஸ் வியப்புடன் “உயிர் ஒளிர்வதை நான் கண்டதில்லை” என்றார். “ஒளிரும்” என்றார் பிரம்மன். “இளந்தளிரில் உயிரின் ஒளி வெளிப்படுகிறது. தளிர் முதிரும்போது மூவகை வினைகளும் வந்து அதை சூழ்கின்றன. பின்பு அது தன்னை மூடி நிற்பதையே தானெனக் காட்டுகிறது.”

“ஏதோ ஒரு தருணத்தில் சில நொடிகளில் மட்டுமே உயிரின் ஒளி வெளிப்படுகிறது. காதலின் கனிவில், தாய்மையின் நெகிழ்வில், ஊழ்கத்தின் முழுமையில், பெரும் கருணையில், பேரறத்தில்” என்று பிரம்மன் சொன்னார். “அவள் தன் கனவில் கண்டது அது. ஒரு புல்லிதழின் மென்தளிர். தளிரெல்லாம் பொன்னே. காலையில் எழுவது விண்ணுலாவியான ஆதித்யனின் செந்தளிர். மாலையில் பழுத்து மீண்டும் அத்தளிரென்றாகி அவன் மறைவதே வாழ்வின் நெறி. குலமூதாதையாகிய திருணபிந்துவையே அவள் கண்டாள். அவள் வாழ்க!”

பிரம்மன் மறைந்ததும் விஸ்ரவஸ் திகைப்புடன் “உன்னில் எழுந்தது உயிரின் ஒளி. புவியின் முதல் தளிர் அது” என்றார். அவள் அவரை அணைத்து “எனக்கு அவ்வொளி கொண்ட மைந்தன் ஒருவனை தருக!” என்றாள். “அவர் சொல்லிச் சென்றதை நீயும் கேட்டாயல்லவா? அது தளிரின் ஒளி. தளிரென்பது நோக்கியிருக்கவே முதிர்ந்து இலையாவது. விழியறியாது நிறம் மாறும் இளங்கதிர் போன்றது” என்றார் விஸ்ரவஸ்.

“வளராத தளிரொன்றை எனக்கு அருள்க!” என்றாள். “வளராது இருக்கையில் அது தளிரே அல்ல” என்றார் விஸ்ரவஸ். “உயிர்கள் அனைத்தும் மாறுபவை. மாறுதலுக்குப் பெயரே உயிர்.” அவள் இளமைக்குரிய வீம்புடன் “நானறியேன். எனக்கு குன்றாத் தளிரொளி கொண்ட மைந்தன் தேவை. பிறிதொரு குழவியை நான் ஏற்க மாட்டேன்” என்றாள். “வளரா மைந்தனா? அறிவில்லையா உனக்கு?” என்று அவர் சினக்க அழுதபடி அவள் எழுந்து சென்றாள்.

அவர் உளம் பொறுக்காது அவள் பின்னால் சென்று “நீ பேசுவதென்ன என்று அறிவாயா? தளிரொளி கொண்டு காலமுடிவு வரை மாறாதிருப்பது இயல்வதாகுமா?” என்றார். “நானறியேன். என் கனவில் வந்ததனாலேயே அது ஒன்றைத் தவிர பிறிதெதையும் நான் ஏற்கக்கூடாது என்பதே என் உள்ளம் கொள்ளும் கூற்று. ஒரு விழைவு எழுவதென்பது தற்செயல் அல்ல. அது எழவேண்டுமென்று எங்கோ ஒன்று எண்ணுகிறது. இவ்விழைவு எழுந்தமையாலேயே இது நிகழ்ந்தாகவேண்டும்” என்றாள்.

“இது நிகழ இயலாது, சிறுமியென பேசாதே!” என்றார் விஸ்ரவஸ். “இல்லையேல் எனக்கு மைந்தனே தேவையில்லை” என்றாள் அவள். கடும் சினம் கொண்டு, பின் அவள்மேல் கொண்ட பேரன்பினால் மெல்ல கனிந்து துயர் மிக்கவரானார் விஸ்ரவஸ். செய்வதென்ன என்று அறியாமல் நிலைகுலைந்து இருந்தபின் தெளிந்து தன் தந்தையாகிய புலஸ்தியரிடம் சென்றார். அவர் தவச்சாலைக்குள் சென்று தாள் பணிந்து முகமன் உரைத்தபின் கேட்டார். “தந்தையே, அழியாத் தளிர் ஒன்றை விழைகிறாள் என் துணைவி. நான் என்ன செய்வேன்?”

புன்னகைத்து “அது பெண்களின் பேதைமை. ஆனால் பிள்ளையும் பெண்களும் கொள்ளும் பேதைமைக்குப் பின் இருப்பது சொல்தொட்டு அறியமுடியாத நுண்மை ஒன்று. அதை பேணுக!” என்றார் புலஸ்திய முனிவர். “அறிக, மைந்தா! புவியில் என்றும் அழியாதிருக்கும் பொருட்களே உலோகமெனப்படுகின்றன. அழியும் அழகுகளை அழியாது நிறுத்துவதற்கென்றே பிரம்மனால் படைக்கப்பட்டவை அவை. நீரின் ஒளியை இரும்பில் நிறுத்தலாம். அனலை செம்பின் சிவப்பில். வெயிலொளியை வெள்ளியில். புவியெங்கும் எழுந்து மறையும் புதுத்தளிரின் ஒளியை வைப்பதற்கு என்றே ஓர் உலோகம் மண்ணில் உள்ளது. அதன் பெயர் பொன். அதுவாகுக உன் மைந்தனின் உடல்” என்றார்.

ஆலிலையின் தளிர், மூங்கில்குருத்து, கொன்றைமலர், வேம்பின் முளை என வண்ணங்களைக் கலந்து எடுத்த வண்ணத்தில் மண்ணிலிருந்து பொன்னை எடுத்தார் விஸ்ரவஸ். “இப்பொன்னிறத்தில் எனக்கு ஒரு மைந்தனைத் தருக!” என்று அகிலம் படைத்த முதல்வனை எண்ணி வேண்டினார். பொன்னுருகிச் சொட்டியது அவர் மனைவியின் வயிற்றுக்குள். பொன் பெருகி வளர்ந்தது. அவ்வொளி கொண்டு அவள் உடல் அனல்சூடிய அகல்விளக்கு போல மிளிரத்தொடங்கியது.

கருவுற்றிருந்த அவளைக் காண வந்த நாரதர் சொன்னார் “இறைவி, உன்னில் எழுந்திருப்பவன் ஒரு தேவன். பொன்னுருக் கொண்டவன். பொன்னே உலோகங்களில் முதன்மையானது. பொன்னில் எழுவது உலோகங்களின் கொழுந்துப்பருவம். குன்றா இளமை கொண்டவனாக இருப்பான் உன் மைந்தன். இப்புவியில் இனிவரும் பொருளனைத்தும்

பொன்னாலேயே மதிப்பிடப்படும். பொருள்கள் அனைத்திற்கும் மதிப்புசொல்லும் பொருள் என்று அதுவே அமைந்திருக்கும். அப்பொருளின் தலைவனாக அவன் என்றுமிருப்பான்."



அவ்வாறு பிறந்தெழுந்தான் குபேரன். என்றும் மாறாத குழந்தை உடல் கொண்டிருந்தான். குறுகிய கைகால்களும் கொழுவிய முகமும் தொந்தியும் கொண்ட பொன்மைந்தனை அள்ளி நெஞ்சோடணைத்து தேவவர்ணினி விழிநீர் உகுத்தாள்.

# கிராதம் - 24

**[ 3 ]**

பொன்னொளிர் குழந்தை வளர்ந்து ஆண்மகன் என்றாகியது. ஆயினும் அதன் உடல் நடைதிருந்தாக் குழவிபோன்றே இருந்தது. அன்னை அதை பேருருவ மகவென்றே எண்ணினாள். நெஞ்சுகுழைந்து அமுதூட்டினாள். குழல் அள்ளிக்கட்டி மலர்சூட்டிக் கொஞ்சினாள். தூக்கி தோளில் வைத்து விண்ணகப் பாதைகளில் நடந்து ஆறுதிசை காட்டி மகிழ்வித்தாள். முகில் அள்ளிக் களித்தும் விண்மீன்களை வாரிச் சிதறடித்தும் விளையாடியது அது. தான் ஓர் இளைஞன் என்றே அது அறிந்திருக்கவில்லை.

ஒருநாள் விண்வழி ஒன்றில் அது ஆடிக்கொண்டிருக்கையில் அவ்வழியே காசியப முனிவர் சென்றார். அவர் அணிந்திருந்த சடைமகுடத்தைக் கண்டு நகைத்த குழந்தை விண்மீன்களை அள்ளி அவர்மேல் எறிந்தது. தன் மேல் வழிந்தொளிர்ந்து விழுந்த விண்மீன்களைக் கண்டு சினந்து திரும்பிய முனிவர் குழவியுடல் கொண்ட இளைஞனைக் கண்டு “நீ யார்?” என்றார்.

“தேவவர்ணினியின் மைந்தன். விஸ்ரவஸுக்குப் பிறந்தவன். பிரம்மனின் கொடிவழி வந்த தேவன்” என்றான் குபேரன். “நன்று! பொன்னுடல் கொண்டிருக்கிறாய். அன்னையால் இன்னமும் குலவப்படுகிறாய் என்று எண்ணுகிறேன். என்று எழுந்து கைகால் கொண்டு ஆண்மகனாகப்போகிறாய்?” என்றார் காசியபர். “ஆண்மகனாவது எதற்கு?” என்றான் குபேரன்.

“இளைஞனே, குழவிப்பருவத்திற்கும் மானுடனுக்குமான வேறுபாடென்ன என்று அறிவாயா?” என்று முனிவர் கேட்டார்.

“அறியேன்” என்றான் குபேரன். “குழவி பிறிதொருவர் ஆட்சியின் கீழ் இருக்கிறது. கொஞ்சப்படினும் கொண்டாடப்படினும் அது அடிமையே. மானுடன் பிறர் மேல் ஆட்சி செய்கிறான். எப்பருவத்திலாயினும் பிறர் ஆட்சிக்குக் கீழ் இருப்பவர்களுக்கு முழு வளர்ச்சி கிடையாது. எத்தகையவராய் இருப்பினும் அவர்கள் குழந்தைகளே” என்றபின் அவர் நடந்து சென்றார்.

அவ்வெண்ணம் கணம்தோறும் எடைகொள்ள தன் அன்னையிடம் மீண்டு வந்த குபேரன் தனித்திருந்து நெஞ்சுலைந்தான். அன்னை அவன் உள்ளத்திலமைந்தது என்ன என்று நூறுமுறை கேட்டும் அவனால் மறுமொழி சொல்லமுடியவில்லை. ஏழிரு நாட்கள் தன்னுள் இருண்டு அமர்ந்திருந்த பின் எழுந்து வந்து அன்னையிடம் “அன்னையே, இன்னும் எத்தனை நாள் உங்களுக்கு குழந்தையாக இருப்பேன்?” என்று கேட்டான்.

“வாடாத் தளிருடல் உனக்கு வேண்டுமென்று எண்ணினேன். அதன்பொருட்டே உன்னை குழவியெனப் பெற்றேன். என்றும் நீ எனக்குக் குழவிதான்” என்றாள் அன்னை. “ஆம். உங்கள் நோக்கில் மட்டும் என்றும் குழந்தையாக இருக்கிறேன். ஆனால் இப்புடவியை நான் ஆளவேண்டும். அதற்கு என்ன செய்ய வேண்டும் என்று சொல்லுங்கள்” என்றான்.

அன்னை திகைத்தாள். “புடவியை ஆள்வதென்பது எளிதல்ல மைந்தா, ஆள்பவன் ஒவ்வொரு நாளும் இழந்துகொண்டிருப்பவன்” என்றாள். “அவ்வாறென்றால் இழப்பதுதான் ஆள்வதற்கான வழியா?” என்றான் மைந்தன். அவன் என்ன புரிந்துகொள்கிறான் என்றுணராமல் “ஆம், தன்னை முற்றிழப்பவன் முற்றதிகாரத்தைப் பெறுகிறான்”

என்றாள் அன்னை. “அவ்வண்ணமே” என்று எழுந்து குபேரன் தென்திசைக் கடல் நோக்கி சென்றான்.

கடல் ஆழத்தில் மூழ்கி இறங்கி பல்லாயிரம் ஆண்டுகள் கடுந்தவம் செய்தான். கடல்மேல் சென்ற கலங்கள் இருண்ட ஆழத்தில் ஒளிர்ந்த பொன்னைக் கண்டன. மீன்கள் அதை அணுகி பொன்னொளி பெற்று திரும்பி வந்தன. கடல் ஆழத்தில் குடிகொள்ளும் அந்தப் பொன் தப்தகாஞ்சனம் எனப்பட்டது. அதைப்பற்றிய கனவுகள் மண்ணில் பரவின.

தவம் முதிர்ந்து கனிந்தபோது குபேரன் பொன்னலையென உருகி பரவி கடலாழத்தில் ஒளிவிட்டுக் கொண்டிருந்தான். அவன் தவம் கண்டு மூதாதை பிரம்மன் இரங்கினார். அவன் முன் தோன்றி கைதொட்டு சுட்டுவிரலில் ஒரு பொன்னிறப்பொட்டு என மேலெடுத்தார். “என்ன வேண்டும்? கேள், இளமைந்தா!” என்றார். “இப்புடவியை நான் ஆளவேண்டும், எந்தையே” என்றான் குபேரன். “நீ பொன்னுக்கு இறைவன். புவி அனைத்தும் செல்வத்தால் ஆனது, செல்வமனைத்தையும் நீயே ஆள்க!” என்றார் பிரம்மன்.

“தனியொன்றை ஆள நான் விரும்பவில்லை. புடவியின் அனைத்தையும் ஆளும் ஆற்றலையே நான் கோருகிறேன். பிறிதொன்றும் எனக்குத் தேவையில்லை…” என்றான் குபேரன். “சிறுமைந்தர் போல பேசாதே. இது வாழ்வறிந்தவனின் விழைவு அன்று” என்றார் பிரம்மன். “எனக்கு திசைநான்கும் வேண்டும். வானும் மண்ணும் வேண்டும்…” என்று குபேரன் கைகளை உதறி காலால் நிலத்தை உதைத்தான். “மைந்தா புரிந்துகொள், நீ செல்வத்தின் தெய்வம். புடவியின் அனைத்தையும் ஆள செல்வத்தை அமைப்பதென்பது பேரழிவை விளைப்பது” என்றார் பிரம்மன்.

“எனக்கு வேண்டும்… எனக்கு வேண்டும்” என்று குபேரன் சிணுங்கினான். “நான்கு இழைகளால் நெய்யப்பட்டது இப்புவி வாழ்க்கை. நான்கு திசைகளென அவை அமைந்துள்ளன. தென் திசையை இறப்பு ஆள்கிறது. வடதிசையை நீ ஆள்க! இறப்பும் செல்வமும் துலாவின் இரு தட்டையும் நிகர் செய்க!” என்றார் பிரம்மன்.

“இப்புவியை ஆளும் வல்லமை பெறும்வரை இக்கடல்விட்டு நான் வெளிவருவதில்லை” என்றான் குபேரன். “மைந்தா, ஒருபோதும் நிகழாததற்கு விழைவு கொள்கிறாய்” என்று பிரம்மன் திரும்பினார். “அவ்வண்ணமெனில் இன்னும் பல்லாயிரம்கோடி வருடங்கள் இன்பதுன்பம் இருத்தல் இன்மையென அனைத்தையும் துறந்து வாழ்கிறேன். நன்று” என்றபடி அவன் நீர் புகுந்தான்.

உளம் கேளாது எட்டி அவனைப்பற்றி இழுத்து நெஞ்சோடணைத்து பிரம்மன் சொன்னார் “உன்னை அவ்வண்ணம் விட உன் முதுதந்தையின் உள்ளம் ஒப்பவில்லை. ஒன்று சொல்கிறேன். புவியை ஆளும் தேவர்கள் பலர் இருக்கலாம். அவர்கள் அனைவரையும்விட மேலாக நீயே வழிபடப்படுவாய். எளிய மாந்தர் உன்னையே அவர்கள் என காண்பார்கள். உன் பொன்னொளியை மீறிச்செல்லும் அகவிழி கொண்டவர் மட்டுமே பிறரை காண்பார்கள். இப்புவியில் பிறந்திறந்து மாயும் பலகோடி மாந்தரில் மிகச்சிலரே நீயன்றி பிறரைக் காண்பார். நீயே இப்புடவியை ஆள்வதற்கு நிகர் அது.”

முகம் மலர்ந்த குபேரன் “ஆம், அது போதும்” என்றான். “நீ வடதிசையில் அமர்க! உன் நகர் அங்கு அமைக!” என்று சொல்லி பிரம்மன் மறைந்தார். வெற்றிக் களிப்புடன் குதித்துக் கும்மாளமிட்டபடி அன்னையிடம் ஓடிவந்தான் குபேரன். நானே

அனைத்தையும் ஆள்வேன். நானே ஆள்வேன்” என்று கூச்சலிட்டான். அவளை அள்ளித்தூக்கிச் சுழற்றி நடனமாடினான்.

குபேரன் வடக்கு திசையில் அமைத்த நகரம் அளகாபுரி என்று அழைக்கப்பட்டது. இரும்பாலானது அதன் புறக்கோட்டை வட்டம். செம்பால் ஆனது உட்கோட்டை. வெள்ளியாலான நகர்க்கோட்டைக்குள் சந்திரனின் வெண்குளிர் ஒளி எப்போதும் நிறைந்த வானம் கவிந்திருந்தது. வெண்பட்டு என மெல்லிய தரை அங்கிருந்தது. நகரக்கட்டடங்கள் அனைத்தும் ஆடகப்பொன்னால் ஆனவை. பொற்சுவர்கள். பொற்கட்டிகளால் ஆன படிகள். பொற்தூண்கள். பொற்பாளக் கதவுகள். கிளிச்சிறைப்பொன்னால் ஆனவை இல்லங்களின் உட்பகுதிகள். மாடமுகடுகள் சாதரூபப் பொன்னுருக்கிச் செய்தவை. மணிகள் மணல் பெருக்கென இறைந்து கிடந்தன.

அங்கே மரங்களும் செடிகளும் பொன்னே. மலர்களும் தளிர்களும் பொன்னே. வண்ணத்துப்பூச்சிகளும் பறவைகளும் பொன்னால் அமைக்கப்பட்டு மரங்களில் பதிக்கப்பட்டிருந்தன. குபேரபுரியின் காவலரும் ஏவலரும் தவிர அங்கு உயிரசைவென ஏதுமில்லை. பொன்னே ஒளியென்று நிறைந்திருந்தது. பொன்னே நறுமணமாக வீசியது. பொன்னே இன்னிசையாக சூழ்ந்திருந்தது. விழிகளுக்குள் புகுந்து சித்தமாக ஆனதும் பொன்னே.

குபேரனின் கருவூலங்கள் பதினாறாயிரத்தெட்டு. அவற்றில் அருமணி முதல் அனைத்து செல்வங்களும் நிறைந்திருந்தன. அள்ளப்படுவது அக்கணமே ஊறிநிறையும் தன்மைகொண்டிருந்தது அது. அங்கு உலவியவர்களின்

நிழல்களும் பொன் நிறத்தில் விழுந்தன. அங்குள்ள இருட்டும் அடர்பொன்னிறமே.

பொன் விழைந்து இறந்தவர்கள் அங்கு வந்தனர். ஊழிக்காலம் அங்கு பொன்னை உண்டு பொன்னில் படுத்து பொன்னை உயிர்த்து பொன்னில் எண்ணம்கொண்டு பொற்கனவுகளில் ஆடினர். பொன் திகட்டி பொன்னை வெறுத்து அங்கு ஒருகணமும் வாழமுடியாமலாகி கால்வைக்கக் கூசி எண்ணஎண்ண துயர்கொண்டு கண்ணீர் உதிர்த்து அழுது மேலும் ஒரு ஊழிக்காலம் அங்கே தவம் செய்தபின்னர் மண்ணில் மீண்டும் பிறந்தார்கள். அவர்களுக்கு கலையோ கவிதையோ ஊழ்கமோ முதன்மையாக இருந்தது. பொன்னை பொன்னின் பொருட்டே அவர்கள் வெறுத்தார்கள்.

குபேரனுக்கு அளகதளம் என்னும் மணியாலான சிம்மாசனம் இருந்தது. அவன் மணிமுடி சுவர்ணஜ்வாலா எனப்பட்டது. அவன் செங்கோல் காஞ்சனகீர்த்தி. அவன் கொடி சோனஜிஹ்வா. அவன் அரியணையை பொன்னிற ஆமைகள் தாங்கியமர்ந்திருந்தன. அவன் இலச்சினை வெள்ளி உடலும் பொன்னாலான கொம்புகளும் கொண்ட வெள்ளாடு. அவன் அரண்மனை பொன்னில் எழுந்த நுரை என பன்னிரண்டாயிரம் பொற்கும்மட்டங்களும் பொற்கோபுரங்களும் கொண்டிருந்தது. அதனுள் பதினாறாயிரத்தெட்டு பொற்தூண்களால் ஆன ஆட்சிமண்டபத்தின் நடுவே அரியணையில் கையில் பொன்நிற கதாயுதத்துடன் அமர்ந்து அவன் இப்புவியாளும் பெருவிழைவுகளை அளந்தான்.

ஒவ்வொருவர் கனவிலும் வந்து பொன் காட்டி உயிர்ப்பை எழுப்பி மறைந்தான். பொன் பொன் என விழைந்த மானுடர் துழாவித்தவித்து அலைக்கும் கைகளுக்கு அப்பால் எட்டி

எட்டிச் சென்று நகைத்தான். தெய்வங்களுக்காக புவி மானுடர் வணங்கி அள்ளியிட்ட மலர்களில் பெரும்பகுதியை அவனே பெற்றுக்கொண்டான். அவர்களின் வாழ்த்துரைகள் ஓரிரு சொல்லன்றி பிற அனைத்தும் அவனையே சென்றடைந்தன. அவர்கள் முன் திசைத்தேவர்களாக மும்முதல்வர்களாக அன்னையராக தேவியராக உருக்கொண்டு அவனே தோன்றினான். வேள்விகளில் தேவர்கள் அனைவரின் உருவமும் தானேகொண்டு வந்து அவிபெற்று மீண்டவன் அவனே.

எனினும் அருள் புரியும் கனிவு அவனில் கூடவில்லை. பொன்மேல் அமர்ந்து பொன்னென ஆகிய அவன் உள்ளம் மலர் மென்மையை அறியவே இல்லை. அடம்பிடிக்கும் குழந்தையாக, அனைத்தையும் விழைபவனாக, பெற்றுக்கொள்ளமட்டுமே எண்ணுபவனாக அவன் இருந்தான். அள்ளக்குறையாது பொருள் நிறைந்திருந்தபோதும் ஒரு துளியை இழந்தால் அதையே எண்ணி அவன் ஏங்கினான். ஒற்றைப்பொன்னின் ஒலியையே அவன் செவி இசையென எண்ணியது. செல்வமென்பது செல்லக்கூடியதென்றே அவனுக்கு பொருள் பட்டது. அளிப்பதென்பது இழப்பதென்றே அவன் உணர்ந்தான்.

அவனிடமிருந்து அருள் பெற்றவர்கள் அவனை வணங்கியவர்கள் அல்ல. அவனைக் கடந்து பிற தெய்வங்களை வணங்கி அவர்களிடமிருந்து அருள் பெற்று அவனிடம் வந்வர்களே. அத்தெய்வங்களின் ஆணையை மீறமுடியாமல் மட்டுமே தன் உறுதி இறங்கி அவன் தன் கருவூலத்தை திறந்தான். அள்ளி பொருள் கொடுக்கையில் ஒவ்வொரு மணிக்கும் நாணயத்திற்கும் தன்னுள் கணக்கு வைத்தான்.

அளித்தவற்றை எண்ணி எண்ணி சினந்து ஏங்கினான். அளித்த பொருள் உள்ளத்துள் பெருக பெற்றவர்களால் தான் ஒவ்வொரு முறையும் தோற்கடிக்கப்படுவதாக எண்ணினான்.

[ 4 ]

ஜாதவேதனின் இல்லத்திலிருந்து கிளம்பிய அர்ஜுனன் உளம் தளர்ந்திருந்தான். வடக்கு நோக்கி செல்லவேண்டும் என்னும் ஆணையை அவனறியாமலேயே சித்தத்திலிருந்து கால்கள் பெற்றுக்கொண்டன. வழியை அவன் விழிகள் நோக்கவில்லை. செவி அறியவில்லை. கான் வாழ்க்கையின் நெடும்பழக்கத்தால் ஊர்களுக்குள் செல்லும் வணிகப்பாதைகளைத் தவிர்த்து காட்டுக்குள் ஊடுருவிச்செல்லும் மேய்ச்சல்பாதையை அவன் தேர்ந்தான். அவனை ஊர்களும் ஆயர்மன்றுகளும் ஓசையின்றி நழுவவிட்டுக்கொண்டிருந்தன.

மூன்று நாட்கள் சென்றபின்னரே தான் செல்ல வேண்டிய இடம் என்னவென்று அவன் சித்தத்தில் வினா எழுந்தது. அதன் பின்னர் அவன் குபேரனைப்பற்றி என்ணலானான். அந்நிகழ்வுகளுக்கோர் ஒழுங்கும் இலக்கும் இருப்பதை அப்போது உணர்ந்தான். ஊர்ப்பெரியவர் ஒருவரிடம் “குபேரனுக்கான ஆலயம் எங்குள்ளது?” என்றான். “குபேரனுக்கு ஆலயம் கட்டுவதில்லை, வீரரே. அனைத்து ஆலயங்களும் குபேரனுக்குரியவையே” என்றார் அவர் நகைத்தபடி. “வேளாண்மூத்தோரிடம் குபேரனைப்பற்றி கேட்கலாமா? வணிகர்களிடம் கேளுங்கள்.”

ஊர்பாதை ஒன்றின் முனம்பில் தன் ஏவலர் எழுவருடனும் காவலர் மூவருடனும் பொதிவிலங்குகளை அவிழ்த்து நீர் அருந்தவிட்டு, தோல்விரிப்பைப் பரப்பி பஞ்சுத் தலையணை

இட்டு குடபண்டி எழுந்திருக்க கொழுவிய கன்னங்கள் தொங்க அரைத்துயிலில் என விழிகள் புதைந்து படுத்திருந்த பெருவணிகன் ஒருவனை அர்ஜுனன் கண்டான். அவனை அணுகி வணங்கி "தங்கள் சொல்லிலிருந்து செல்வழி பெற வந்தவன். அயலூர் வழிப்போக்கன். என் பெயர் சரபன். வில்லறிந்த ஷத்ரியன்" என்றான். "சொல்க!" என்றான் வணிகன்.

"தாங்கள் இப்பெருநிதியை பெற்றது குபேரனின் அருளால் என்று எண்ணுகிறேன். குபேரனை காணும் வழி எது? எங்கேனும் எவ்வண்ணமேனும் தாங்கள் அவனை அறிந்துளீரா?" என்றான் அர்ஜுனன். கண்கள் சிரிப்பில் விரிய "அமர்க, வீரரே!" என்றான் பெருவணிகனாகிய மித்ரன். அர்ஜுனன் அமர்ந்ததும் இன்னீரும் உணவும் கொண்டுவர ஆணையிட்டான். தன்னைப்பற்றி சொன்னான்.

நான் உஜ்ஜயினியை சேர்ந்தவன், ஷத்ரியரே. இளமையில் நான் அறிந்தது வறுமையை மட்டுமே. ஒருவேளை உணவுக்காக, மழையில் கூரைக்காக, ஆண்டிற்கொருமுறை கிடைக்கும் ஆடைக்காக பிறிதொரு வணிகனின் கடையாளாக இருந்தேன். அவன் கைகளால் நாளும் அடிவாங்கினேன். அவன் உறவினர்களால் சிறுமை செய்யப்பட்டேன். நான் எனக்குரிய நற்பொழுது எழும் என்பதை நம்பினேன். ஒவ்வொரு நாளும் அதை கனவு கண்டுகொண்டிருந்தேன்.

ஒரு நாள் முன்புலரியில் ஆற்றில் இருட்டிலேயே நீராடி கடை திறப்பதற்கு முன்பே அங்கு செல்லும்பொருட்டு வந்துகொண்டிருந்தபோது தரையில் ஒரு வெள்ளி நாணயம் கிடப்பதை பார்த்தேன். இரவில் ஆற்றுநீரில் பரல்மீன் மின்னுவதுபோல அது சாலையில் கிடந்தது. அகம் படபடக்க அதை எடுத்து என் கண்ணில் வைத்து நெஞ்சோடு

அணைத்துக்கொண்டேன். அதை என் ஆடையில் பதுக்கியபடி அவ்வணிகனின் கடை முன் சென்று நின்றேன்.

அதைக்கொண்டு மூவேளை உணவருந்தலாம். புதிய ஆடை ஒன்றை வாங்கிக் கொள்ளலாம். இனிய கனவுகள் ஒவ்வொன்றாக என்னுள் எழுந்தன. அதை என் ஆடைக்குள் மேலும் மேலும் பொதிந்து ஒளித்து வைத்தபடி கடையருகே ஒரு சிறு பொந்துக்குள் உடலொதுக்கி படுத்துத் துயின்றேன். என் கனவில் நான் அந்த ஒரு நாணயத்தை முடிவில்லாமல் செலவழித்துக்கொண்டே இருந்தேன். உலகையே அதைக்கொண்டு வாங்கினேன். விழித்துக்கொண்டதும் தெரிந்தது, அந்நாணயம் என்னிடம் இருப்பதுவரை மட்டுமே அந்தக் கனவுகளுக்கு பொருளுண்டு என. எந்நிலையிலும் அதை இழக்கலாகாதென்று முடிவுசெய்தேன். அதை அதைவிடப் பெரிய நாணயத்தால் மட்டுமே ஈடுவைக்கவேண்டும் என உறுதிகொண்டேன்.

அந்த நாணயம் விழுந்தகிடந்த இடம் என் நினைவில் மீண்டும் எழுந்தது. மிதித்து பதிந்துசென்ற காலடி ஒன்றில் கிடந்தது அந்த நாணயம் என்று அப்போதுதான் தெளிந்தேன். அக்காலடிகளை மீண்டும் மீண்டும் என் நினைவில் ஓட்டிக்கொண்டிருந்தேன். கனவுகளில் மீளமீளக் கண்டேன். நெடுநாட்ளுக்குப்பின் ஒரு புலரிக்கனவில் அதைத் தொடர்ந்து சென்றபோதுதான் பொன்னிறமான இரு கால்கள் புழுதியை மிதித்துச் செல்வதை கண்டேன். வளர்ந்தும் குழந்தையென உடல் கொண்ட ஒருவன்.

வீரரே, அவனை குபேரன் என்று நான் உணர்ந்தது மேலும் நெடுங்காலம் கழித்துதான். அன்று முதல்நாள் விழித்தெழுந்ததும் நான் செய்ய வேண்டியதென்ன என்று

தெரிந்தது. அந்த வெள்ளி நாணயத்தைக்கொண்டு எளிய தின்பண்டங்களை வாங்கிக்கொண்டேன். படைவீரர்கள் இடங்கள்தோறும் சென்று அவற்றை விற்றேன். அன்று மாலை என் எளிய வயிற்றுப்பசிக்கு மட்டும் எடுத்துவிட்டு எஞ்சியதை சேர்த்தேன். என் நாணயம் அப்படியே கையில் இருப்பதை கண்டேன். செல்வம் என்பது தீ போல படர்ந்து பெருகுவது என உணர்ந்தேன்.

இங்குள்ள எளிய மக்கள் செல்வமென்றால் பொருட்குவை என்று எண்ணுகிறார்கள். கருவூலம் என்கிறார்கள் அரசர்கள். தெய்வத்திடம் அது உள்ளது என்று சொல்கிறார்கள் வைதிகர்கள். அல்ல, செல்வமென்பது நம் கையில் உள்ள ஒற்றைக் காசுதான். ஒற்றைக் காசின் மடங்குகள்தான் இப்புவியிலுள்ள அனைத்துச் செல்வமும். அதை அறிந்ததே என் வெற்றி. நான் கண்ட குபேரன் அவனே.

“ஆனால் அது வணிகர்களின் குபேரன். அரசர்களின் குபேரன் அவன் அல்ல” என்றான் வழியில் அவன் சந்தித்த ஒரு சூதன். “வீரரே, சூத்திரரும் அந்தணரும் குபேரனை அறியாதவர்கள். வணிகர்களிடம் அவ்வண்ணம் தோன்றிய குபேரன் அரசர்களிடம் வேறுமுகம் காட்டியிருக்கக்கூடும் அல்லவா?” உணவுநிலையில் அவனிடம் பேசிக்கொண்டிருந்த அர்ஜுனன் ஆம் என தலையசைத்தபடி கையிலிருந்த ஒழிந்த தொன்னையை வீசிவிட்டு எழுந்தான்.

“இங்கே கமலதலம் என்னும் சிற்றூரில் ஊர்த்தலைவன் ஒருவன் குபேரனை கண்டுவிட்டான் என்கிறார்கள். அவன் இன்று ஒரு சிற்றரசனாக வளர்ந்துவிட்டிருக்கிறான். அவன் வழித்தோன்றல்கள் அரசனும் ஆகக்கூடும்” என்றான் சூதன். அவனிடம் விடைபெற்று கிளம்பிய அர்ஜுனன் கமலதலம்

என்னும் ஊர் நடுவே புதிதாக எழுந்துவந்த ஏழுநிலை மாளிகை ஒன்றில் இருந்த ஊர்த்தலைவனை அணுகினான். அவன் ஷத்ரியன் என்று அறிந்ததும் உள்ளே செல்ல ஒப்பு அளித்தனர்.

வெள்ளியாலான பெரிய பீடத்தில் அமர்ந்திருந்த வியாஹ்ரதந்தன் என்னும் அந்த ஊர்த்தலைவன் அவனை வரவேற்று அமரச்செய்தான். “என்னிடம் நீங்கள் காவல்பணியாற்ற விழைந்தால் மகிழ்வேன், வீரரே. நான் வில்லவர்களையே நாடுகிறேன். நீங்கள் பெருவில்லவர் என்பதற்கு உங்கள் கைகளே சான்று” என்றான். “நான் பயணமொன்றில் இருக்கிறேன். நீங்கள் குபேரனைப் பார்த்தவர் என்றறிகிறேன். அவனை நானும் காணவிழைகிறேன்” என்றான் அர்ஜுனன்.

“நான் குபேரனை முழுமையாக பார்த்ததில்லை, வீரரே” என்றான் வியாஹ்ரதந்தன். “இச்சிற்றூரில் பிறரைப் போலவே எளிய வாழ்வை வாழ்ந்தேன். ஏவலரை அனுப்பி ஒவ்வொரு நாளும் இம்மலையிலிருந்து மலைப்பொருட்களைத் திரட்டி காவலர் துணையுடன் அருகிருக்கும் சந்தைகளுக்குக் கொண்டுசென்று விற்பதே என் தொழில். ஒருமுறை என் கையில் இருந்த கொம்பரக்குடன் சந்தையில் அமர்ந்திருந்தேன். அதை விற்று பணம் கொண்டுவந்தால் ஒழிய அன்று என் சிற்றூரே பட்டினியாகிவிடும் என்னும் நிலை. பட்டும் ஆடையும் அணிந்து என்னை அணுகிய வணிகனொருவன் என் கொம்பரக்குக்கு மூன்று பணம் அளிப்பதாக சொன்னான். என் தேவையும் அதுதான். பொருளைத் தருவதாக தலையசைக்கப்போகும் கணம் அவன் தலைக்கு மேல் ஒரு பொன்னிறப் பறவை கூவியபடி பறந்து செல்வதை கண்டேன்.”

அதற்கென நான் விழி தூக்கியபோது அவ்வணிகனின் கண்களை கண்டேன். அவன் நெஞ்சில் எண்ணியது ஐந்து பணம், சொல்லென எடுத்தது நான்கு பணம், நாவில் ஒலித்தது மூன்று பணம் என்று உணர்ந்தேன். “பத்து பணத்திற்கு ஒரு நாணயம் குறையாது” என்றேன். திகைத்து அவன் புருவம் விலக்கினான். “இதற்கா? இது என்ன பொன்னா வெள்ளியா?” என்றான். “கொம்பரக்கு. என் பொருளுக்கான மதிப்பை நான் அறிவேன்” என்றேன். ஏளன நகைப்புடன் கடந்து சென்றான். பிறிதொருவன் என்னை அணுகி “பத்து பணத்திற்கு கொம்பரக்கு என்றால் உனக்கு என்ன விலை சொல்வாய், மூடா?” என்றான். “இது பத்து பணம் மட்டுமே. என் மதிப்பை நான் அறிவேன்” என்றேன். என் விழிகளில் இருந்த உறுதியைக் கண்டு திகைத்து கடந்துசென்றான்.

நான் என்ன சொல்கிறேன் என என் ஏவலருக்கு புரியவில்லை. என் முன் இருந்த பொருளை கூர்ந்து நோக்கினேன். பத்து பணம் பத்து பணம் என்று அதை நோக்கி மீளமீள சொல்லிக்கொண்டேன். ஆம், இதன் மதிப்பு பத்து பணம். இதை நான் முடிவுசெய்கிறேன், நானே முடிவுசெய்வேன். பிறிதொருவன் கேட்டபோது என் குரலில் இருந்த உறுதியைக் கண்டு “ஏழு பணம், என்ன சொல்கிறாய்?” என்றான். “பத்து பணம். சற்றும் குறையாது” என்றேன்.

அந்திப்பொழுது வந்து கொண்டிருந்தது. என்னுடன் வந்த அனைவரும் சோர்ந்துவிட்டனர். என் உறுதியை அவர்கள் தங்களுக்குள் வசைபாடினர். சில பெண்கள் அழவும் தொடங்கிவிட்டனர். இளமைந்தர் பசித்தழுவதை கேட்டுக்கொண்டிருந்தேன். நான் நடுங்கும் கைகளுடன் குளிரில் உடல் குறுக்கி அங்கு அமர்ந்திருந்தேன்.

பிறிதொருவன் அணுகி "எட்டு பணம். கொம்பரக்கை கொடுத்துவிடு. இவ்விலை இதுவரை இங்கு அளிக்கப்பட்டதில்லை" என்றான். "பத்து பணம் அன்றி விற்பதில்லை. பொருளுடன் திரும்ப என் ஊருக்குச் செல்லவும் தயக்கமில்லை" என்றேன். மூன்று பணம் என முதலில் விலை சொன்ன அவ்வணிகனே வந்தான். "ஒரு பணம் குறைத்து ஒன்பது" என்றான். அக்கணமே "இதோ, உனக்காக" என்று அவனிடம் அப்பொருளைக் கொடுத்து பணம் பெற்று திரும்பினேன்.

அன்றைய செலவுக்கான மூன்று பணத்தை எடுத்து வைத்த பின் எஞ்சிய ஆறு பணத்தை கையில் வைத்து நோக்கியபடி என் ஊர்வரை நடந்தேன். நான் அடைந்தது என்ன என்று என்னிடமே கேட்டுக் கொண்டேன். மானுடனின் விழைவை! பேருருக் கொண்டு இப்புவியை மூடியிருப்பது அதுதான். குபேரனின் பொன்னொளிர் தோற்றம் என்பது அதுவே. நான் வணிகம் செய்யவேண்டியது அவ்விழைவுடன்தான். என் கையில் இருப்பதென்ன? இது நான் எனக்களித்த விலை. என் விலையை பிறர் முடிவு செய்யலாகாது. ஆம், அதுவே குபேரனின் ஆணை. வீரரே, அந்த இரு அறிதல்களிலிருந்து எழுந்ததே இப்பெருஞ்செல்வம்.

"குபேரனை முழுமையாகக் கண்ட எவரேனும் உள்ளனரா என்று நானறியேன். செல்வத்தை அடைந்தவர் அனைவரும் குபேரனை தங்கள் சிற்றறிவுகொண்டு சற்றே கண்டறிந்தவர்களே" என்றான் வியாஹ்ரதந்தன். "வீரரே, உங்கள் மேல் பொன்மழை பெய்ய அந்தச் சிறுதோற்றமே போதும்." அர்ஜுனன் "நான் விழைவது செல்வத்தை அல்ல.

செல்வத்தின் இறைவனை மட்டுமே” என்றபடி எழுந்துகொண்டான்.

# கிராதம் - 25

**[ 5 ]**

தன் வடபுலப்பயணத்தில் பெருஞ்செல்வர் பன்னிருவரை அர்ஜுனன் சென்று கண்டான். ஒவ்வொருவரும் குபேரனை உணர்ந்திருந்தனர். அவனை குறைபடக் கண்டிருந்தனர். முழுமையாக எவரும் கண்டிருக்கவில்லை. “முழுமையாக அவன் தன்னுருவை திருமகளுக்கு மட்டுமே காட்டுவான் என்கிறார்கள். பிறர் அவன் முழுவுருவைக்காணும் திறனற்ற உள்ளம் கொண்டவர்கள். செல்வம் சித்தம் மயக்குவது. பெருஞ்செல்வம் பித்தாக்குவது” என்றார் முதிய வைதிகர் ஒருவர். “செல்வமென குபேரன் கொண்டிருப்பதெல்லாம் திருமகளின் வலக்கையின் மலர்வரிகளுக்குள் அடங்கும்” என்றார்.

குபேரனின் ஒரு நிழலசைவைக் கண்டவர்கூட அக்கணத்திலிருந்து தொடங்கி நுரை பெருகுவதுபோல் பெருகி பேருருவம் கொண்டு நின்றிருந்தனர். ஒவ்வொரு கணமும் அவனையே எண்ணிக்கொண்டிருந்தனர். வடதிசையில் அவன் பெருநகர் உள்ளது என்பதற்கப்பால் அவர் எவரும் அவனை கண்டதில்லை. பசித்து துயில்பவனின் கனவில் உணவுக்குவையென, இளம் கன்னியின் கனவில் பொற்குவியலென, இல்லறத்தான் கனவில் ஏழடுக்கு மாளிகையென, அரசனின் கனவில் நிறைகருவூலம் என

தன்னை உருமாற்றிக் காட்டிக்கொண்டே இருக்கும் மாயன் அவன் என்றனர்.

தேடி அலைந்து சலித்து வடதிசை நோக்கி சென்றுகொண்டிருந்தபோது ஒரு நாள் ஒரு சிற்றோடைக்கரையில் தன் கையால் மூங்கில் வெட்டிக் கட்டிய சிறு குடிலுக்குள் வாழ்ந்து கொண்டிருந்த முதிய அந்தணரை அவன் கண்டான். அவன் களைத்திருந்தான். இரவு தங்குவதற்குரிய மரத்தடியை தேடிக்கொண்டிருந்தான். அக்குடில் அவனை முகம் மலரச்செய்தது. அருகணைந்து குடில்முன் அமர்ந்து மாலைவெயிலணைவதை நோக்கி நின்றிருந்த அவருக்கு வணக்கம் சொன்னான். “வருக!” என்று அவர் புன்னகையுடன் அழைத்தார்.

“களைத்துளேன். நெடுந்தொலைவு பயணம் செய்து வந்த வழிப்போக்கன். போர்க்குலத்தான்” என்று அர்ஜுனன் தன்னை அறிமுகம் செய்து கொண்டான். “இன்று இரவுணவுக்கென அமுது சமைத்துள்ளேன். அதை இரண்டென பகுத்து நாம் உண்போம். விருந்தால் அது இனிமைகொள்ளவேண்டும் என இன்றைய நெறிவகுத்தோன் எனக்கு அருளியிருக்கிறான்” என்று சொல்லி அந்தணர் தன் இல்லத்திற்குள் சென்று உணவை கொண்டுவந்து அவன் முன் வைத்தார். அதைப்பகிர்ந்து இருவரும் உண்டனர்.

“என் பெயர் சௌம்யன். இக்குடிலில் தனிமையில் வேதம் ஓதி ஊழ்கம் பயின்று வாழ்கிறேன்” என அவர் தன்னை அறிமுகம் செய்துகொண்டார். “நிலவு எழும் நாள் இன்று. காடு கனவு கொள்ளத்தொடங்கும் பொழுது. சொல்லாடிக் களித்திருக்க ஓர் அயலவன் வந்திருப்பது நல்லூழே” என்றார் அந்தணர். “வராதிருந்தால்....?” என்று அர்ஜுனன் குறும்பாகக்

கேட்டான். “தனிமை அதற்கிணையாகவே இனிது” என்றார் அந்தணர் நகைத்தபடி.

உணவுண்டபின் குடில் முற்றத்தில் ஈச்சை ஓலைப்பாயை விரித்து நிலவு நோக்கி இருவரும் படுத்திருந்தனர். “தாங்கள் இங்கு வேறு என்ன செய்கிறீர்கள்?” என்றான் அர்ஜுனன். “ஒன்றும் செய்வதில்லை. உவகை மட்டுமே கொண்ட ஒரு வாழ்க்கையைத் தேடி இங்கு வந்தேன். இவ்வோடைக்கரையில் இக்குறுங்காட்டைக் கண்டதும் இதுவே அவ்விடம் என்று தெளிந்து இங்கு குடில்கட்டி தங்கினேன். இங்கு வந்து நாற்பதாண்டுகள் ஆகின்றன. ஒருநாள் சேர்த்ததை மறுநாளுக்கு கொண்டு செல்வதில்லை. உணவும் நினைவும்” என்றார் சௌம்யர்.

“ஒவ்வொரு நாளும் அன்று புதிதெனப் பிறந்தெழுகிறேன். என்னுடன் சூரியனும் எழுகிறான். விலங்குகள் பறவைகள் புட்கள் பூச்சிகள் ஒவ்வொன்றும் என்னைப்போல் பிறவிகொள்கின்றன. எங்களுக்குரிய அனைத்தும் இக்காட்டில் நிறைந்துள்ளன. நாளில் கொண்ட எதுவும் நினைவில் எஞ்சாது இங்கு வந்து படுக்கிறேன். தலைக்கு மேல் விண்மீன்களென விரிந்துள்ளது பெருவெளி. என் கையில் எதுவும் இல்லை என்பதனால் அவ்விரிவு என்னுடையதாகிறது” என்றார்.

அர்ஜுனன் நீள்மூச்சுடன் “ஆம், விடுபடுவதே பேரின்பம். அதை என்னால் உணரமுடிகிறது” என்றான். “தாங்கள் எங்கு செல்கிறீர்கள்?” என்று சௌம்யர் கேட்டார். “குபேரனைத்தேடி” என்று அர்ஜுனன் சொன்னான். தன் கதையை சொல்லிவிட்டு ”அந்தணரே, தாங்கள் குபேரனை முழுதுறக் கண்ட எவரையேனும் அறிந்துளீரா?” என்றான். சௌம்யர் இயல்பாக “அவனை முழு வடிவில் நான் கண்டுள்ளேன்” என்றார்.

அர்ஜுனன் திகைப்புடன் “தாங்களா…?” என்றான். “ஆம். அயோத்திநாட்டில் அஸ்வினிபுரம் என்னும் நகரில் வாழ்ந்திருந்த பெருவைதிகனின் மைந்தனாக நான் பிறந்தேன். எந்தை வேள்விச்செயல் தேர்ந்தவர். அரசர்களுக்கு உலகியல்நலன் நாடும் பெருவேள்விகளை நிகழ்த்தி வைப்பவர். ஆநிரையும் பொற்கிழிகளும் கூலக்குவைகளுமாக இல்லம்திரும்பும் தந்தையையே நான் இளமைமுதல் கண்டு வளர்ந்தேன். நான் பிறந்தது செல்வத்தின் நடுவே. பொன்னளைந்து வளர்ந்தேன். பொன்னை அறிந்தவன் பொன்னை மட்டுமே அறிந்திருப்பான். பிற அனைத்தும்

பொன்னாலேயே அவனுக்குப் பொருள்படும். நானும் அவ்வண்ணமே இருந்தேன்."

வேதம் என்பது சொல்லுக்கு நூறு பொன்னின் எடை கொண்டது என்று எந்தை என்னிடம் சொன்னார். அதுவே எனை வேதம் கற்கத்தூண்டியது. கற்கக் கற்க வேதம் விரிந்தது. பொன்குவிகிறது என்றே என் உள்ளம் மகிழ்ந்தது. பொன்னென்பதனால் நான் ஒருதுளியையும் வீணாக்கவில்லை. பிறிதெதையும் பொருட்படுத்தவுமில்லை. இளமை முதிர்வதற்குள் நான் வேதம் முழுதறிந்து நால்வகைக்கூற்றும் தேர்ந்தவனாக ஆனேன்.

எந்தை மறைந்தபின் நானும் என் வைதிகர்குலத்தின் முதல் வைதிகனானேன். வேள்விச் சாலைகளிலிருந்து வேள்விச்சாலைகளுக்கு சென்றேன். ஈட்டிக் குவித்து என் இல்லத்தை பொன்னால் நிறைத்து வைத்திருந்தேன். பொன் அளையும் நாகொண்டவன் என ஆணவம் கொண்டிருந்தேன். என்னைக் காணவருபவர்களிடமெல்லாம் நான் சொல்வதுண்டு, பொன்கறக்கும் பசுவே என் வேதம் என்று.

அன்றொரு நாள் பெருவேள்வி ஒன்றில் முதன்மை தலைவனாக அமர்ந்தேன். வேதச் சொல்லெடுத்து எரியோம்பிக்கொண்டிருக்கையில் அதில் ஒரு சொல் என் நாவில் எழவில்லை என்பதை அறிந்தேன். உடனோதியவர்கள் அச்சொல்லை ஓதி முன் சென்றுவிட்டிருந்தனர். நான் அச்சொல்லையே மீண்டும் அச்சத்துடன் எதிர்நோக்கிக்கொண்டிருந்தேன். அவ்வரி வந்தது, அச்சொல் என் நாவிலெழாது நழுவிச்சென்றது. என் உளவியளையாட்டா அது? நான் அஞ்சுவதனால் அப்படி நிகழ்கிறதா? நான் அதை கூர்வதனால் உள்ளம் என்னுடன் ஆடி மாயம் காட்டுகிறதா?

அவ்வரி வந்தது, அச்சொல்லுக்கு முந்தைய சொல் துல்லியமான ஓசையுடன் நிகழ்ந்தது. அச்சொல் இல்லையென நடித்து அதற்கு மறுசொல் என் நாவில் ஒலித்துச்சென்றது. அந்தவேள்வியில் நூறுமுறை அச்சொல் வந்தது, ஒருமுறைகூட என் நாவில் அது அமரவில்லை. வேள்விமுடிந்து எழுந்து சென்றபோது நான் பித்தனைப்போலிருந்தேன். பிறர் என் உள்ளம் கொண்ட குழப்பத்தை அறியவில்லை. நான் மட்டுமே அறிந்த ஒன்று அது என்பது முதலில் என்னை ஆறுதல்கொள்ளச் செய்தது. பின்னர் அதுவே என்னை பதற்றத்துக்குள்ளாக்கியது.

அச்சொல்லை மட்டுமே என் சித்தம் தொட்டு அளைந்துகொண்டிருந்தது. அச்சொல்லை என் உள்ளத்தால் பற்ற முடிந்தது. புரட்டிப்புரட்டி அதன் அத்தனை ஒலியமைவையும் பொருளமைவையும் காணமுடிந்தது. வேண்டுமென்றே அதை சொல்ல முயன்றேன். அச்சொல் மட்டும் நாவில் வந்தது. வேதவரியென சொல்கையில் மட்டும் அது நாவில் நிகழவில்லை.

மிகமிக அஞ்சிவிட்டேன். அது ஏதோ தேவனின் தீச்சொல். அல்லது உளநோயின் தொடக்கம். அதை எண்ணவேண்டாம், அதை விட்டு விலகிச்செல்வதே நன்று. ஆனால் விலகமுயலும்தோறும் அணுகினேன். அச்சொல்லை அன்றி வேறெதையும் எண்ணாதவனாக ஆனேன். அச்சொல் அறியாப்பேய்த்தெய்வம் போல அச்சமூட்டும் பேருருக்கொண்டு என்னைச்சூழ்ந்தது. இரவுகளில் துயிலிழந்தேன். பகலில் முற்றிலும் தனித்திருந்தேன்.

என் விழிகள் மாறுபட்டன. முகம் கொந்தளித்துக்கொண்டே இருந்தது. என் மனையாட்டி என்னிடம் மீளமீளக் கேட்டாள்

“என்ன ஆயிற்று? ஏன் இப்படி இருக்கிறீர்கள்? எதையாவது அஞ்சுகிறீர்களா? எதையேனும் எண்ணி வருந்துகிறீர்களா?” ஓசையற்ற அசைவாக என் உதடுகளில் அச்சொல் நிகழ்ந்துகொண்டே இருந்தது. எனக்கு பீடைகூடிவிட்டது என்றனர் முதியவர். உள்ளச்சிதைவு என்றனர் தோழர். என் மனைவி கதறி அழுதபடி “என்ன ஆயிற்று உங்களுக்கு? மீண்டுவாருங்கள். நம் குழந்தைகளை எண்ணுங்கள்” என்று என்னை உலுக்கினாள்.

என் செல்வம் துணைநின்றது. முதுவைதிகர் எழுவர் என்னை நடுவே இருத்தி வேள்விசெய்து அவியும் பலியும் அளித்து என்னில் கூடிய தெய்வத்தை விரட்டமுயன்றனர். புறக்காட்டிலிருந்து பூசகனை வரவழைத்து வெறியாட்டு நிகழ்த்தினர். குறவப்பூசகன் வந்து தீயாட்டும் தெய்யாட்டும் நிகழ்த்தினான். மருத்துவர் பலர் வந்து நெல்லிக்காய் தளமும் வில்வதளமும் வைத்து என் சித்தத்தை குளிர்விக்க முயன்றனர். ஒவ்வொன்றும் பிறிதெங்கோ நிகழ அச்சொல்லில் அமைந்திருந்தது என் சித்தம்.

நான் என்னை நோக்கிக்கொண்டிருந்தேன். கற்ற அனைத்தும் முழுமையாக நினைவிலிருந்தன. அவ்வொரு சொல் மட்டும்தான் நாவை அறியவில்லை. ஏன்? ஏன்? ஏன்? யார் விளையாடுவது என்னுடன்? அது ஓர் அறைகூவல். ஒரு இளிவரல். என் முன் அமர்ந்து முதிய நிமித்திகர் ஒருவர் சோழிபரப்பி வினாக்களம் அமைத்து உசாவிக்கொண்டிருந்தார். கையை ஓங்கி அறைந்தபடி நான் எழுந்தேன். “போதும்!” என்று கூவினேன். என்னைத்தடுத்த அனைவரையும் பிடித்துத் தள்ளிவிட்டு என் ஊரிலிருந்து வெளியேறினேன்.

செல்லும்வழியிலேயே என் ஆடைகளை அணிகலன்களை அடையாளங்களை களைந்தேன். என் உள்ளக் கொந்தளிப்பு அமைய ஏழுநாட்களாயின. அப்போது கங்கைக்கரைக்கு வந்துவிட்டிருந்தேன். அங்கிருந்து மேலும் வடக்காக கிளம்பிச்சென்றேன். எதைத் தேடி கிளம்பினேன் எங்கு செல்கிறேன் என்றெல்லாம் நான் அறிந்திருக்கவில்லை. சிலதருணங்களில் நம்மிடமிருந்து விலக நாம் நாமறிந்த அனைத்திலிருந்தும் தப்பி ஓடுகிறோம்.

வீரரே, உண்மையில் அது மிகச்சிறந்த ஒருவழி. நாம் என்பது நம்மைச்சூழ்ந்திருப்பவையே. ஊர், குலம், உறவு, மனை, செல்வம், ஆடைகள், அணிகள், பெயர்... அவற்றிலிருந்து நம்மை உருவி வெளியே எடுக்கும்போது நாம் அறிகிறோம் நாம் அவை அல்ல என்று. அந்த விடுதலையை அடைய துறந்தேகுவதைப்போல சிறந்த வழி பிறிதில்லை.

நூறுநாட்கள் வடதிசைநோக்கி சென்றேன். ஒரு அன்னசாலையில் 'குபேரன்' என்னும் சொல் காதில் விழுந்ததும் என் அகம் கொப்பளித்தெழுந்தது. என் உள்ளம் அனைத்தையும் உதறித்தெளிந்து அடுத்த அடியெடுத்துவைக்க உதவும் சொல்லுக்காக காத்திருந்தமையால் அச்சொல் அப்படி பொருள்கொண்டது. நான் உசாவவேண்டியது அவனிடம்தான். அவனைத்தான் அதுகாறும் நான் வழிபட்டிருந்தேன். வேதச்சொல்லை எனக்கு மீட்டளிக்கவேண்டியவன் அவன். வேதமாகி என்னுள் நிறைந்தவன்.

குபேரதீர்த்தம் என்னும் சுனையைப்பற்றி சொன்னார்கள் அவ்வழிப்போக்கர்கள். அப்படி ஒரு சுனை உண்மையில் உண்டா அது சூதர்களின் தொல்கதை மட்டும்தானா என்பதுதான் அவர்களின் சொல்லாடலாக இருந்தது. அது

வடபுலத்தில் எங்கோ மலைமடிப்புக்குள் உள்ளது. அதில் பொன்னே நீரென ஊறும். அதைச்சூழ்ந்து பொன்மலைகள் அமைந்திருக்கும். பொன்னாலான கூழாங்கற்களும் சேறும் சூழ்ந்த அச்சுனைக்கு சுற்றிலும் செழித்திருப்பதும் பொன்நாணலும் பொற்செடிகளும்தான். பொற்பாறைகளில் படிந்திருப்பதும் பொற்பாசியே.

உரக்கநகைத்து ஒருவன் சொன்னான் "காசில்லாமல் பசித்திருந்த எவனோ ஒருவனின் கனவில் வந்த இடம் அது." ஆனால் நான் அப்படி ஓர் இடமுள்ளது என உறுதிகொண்டேன். அவர்களிடம் ஒன்றும் சொல்லாமல் அவர்கள் தொல்கதைகளில் இருந்து சொன்ன வழியடையாளங்களை உளம்கொண்டு மேலே நடக்கலானேன். முந்நூறுநாட்கள் ஒவ்வொரு வழிக்குறியாகத் தேடிக் கண்டடைந்து சென்றேன்.

குபேரதீர்த்தத்திற்கு தவமுனிவர் அன்றி பிறர் செல்லமுடியாதென்றே இறுதியாக எனக்கு வழி சொன்ன முனிவர் சொன்னார். "நான் செல்வதே ஒரு தவம். சென்றடையாது உயிர்வாழமாட்டேன்" என்று அவரிடம் சொன்னேன். என் உடல் நலிந்தது. சடை அடர்ந்து கண்களில் பித்து நிறைந்தது. பிறிதொரு எண்ணமும் அற்றவனாக சென்றுகொண்டே இருந்தேன். இறுதியில் அந்த சுனையை சென்றடைந்தேன்.

பொன்மயமான அதன் கரையிலமர்ந்து தவம்செய்தேன். பதினெட்டுநாள் பிறிதொன்றிலாது என்னுள் மூழ்கினேன். என்னுள் இருந்து ஒவ்வொரு சொல்லாக உதிர்த்தேன். அந்த ஒற்றைச் சொல் மட்டும் எஞ்சியிருக்க அதுவே நான் என்றாகி அமர்ந்திருந்தேன். அச்சொல் முதலில் ஒரு வினாவாக

இருந்தது. அதன்மேல் மோதிமோதி என் சித்தம் அதை ஒரு விடையென ஆக்கிக்கொண்டது.

விழிக்குள் பொன்னொளி சூழக்கண்டு இமைதிறந்தேன். பொன்னுடல் ஒளிவிடத் தோன்றிய குபேரனை முழுமையாகக் கண்டேன். பொன்னுடல் கொண்ட மானுடன் ஒருவனை அவன் ஊர்தியாக்கியிருந்தான். வீரரே, அந்த மானுடன் நான். என் இளமைத்தோற்றம் அது. குபேரனின் ஊர்தி மானுடனே என அறிந்திருப்பீர். ஒவ்வொருவரும் தங்கள் வடிவில் காணும் மானுடன் அவன்.

குழந்தையின் கொழுத்த குற்றுடல். இடுங்கிய சிறுகண்கள். பொற்கதாயுதம். மறுகையில் பொன்னூறும் கலம். கீழ்க்கையில் தாமரை. “என்ன விழைகிறாய்?” என்று திருந்தாக்கிளவியில் கேட்டான். “எந்தையே, நான் வேதச்சொல் ஒன்றை மறந்தேன். அது என் நாவிலெழவேண்டும்” என்றேன். “என்னிடம் செல்வத்தையே கோருவார்கள். வேதச்சொல்லை எவரும் கேட்டதில்லை” என்று அவன் சொன்னான். தந்தைக்கு விடைசொல்லும் மைந்தன்போல தடுமாறினான்.

“எனக்கு வேதமே செல்வம். வேதம் அழிந்தால் நான் முற்றழிவேன். அந்த ஒற்றைவேதச்சொல் அழியும் என்றால் முழுவேதத்தையும் நான் இழக்கலாகும். அந்த வேதச்சொல்லை மட்டுமே வேண்டுகிறேன்” என்றேன். “நான் அச்சொல்லை மீட்டளிக்க இயலாது” என்று அவன் சொன்னான். சீற்றத்துடன் “பிறிதொன்றும் வேண்டேன். நீ எழுந்தருளியும் எனக்குக் கனிய உனக்கு ஆற்றலில்லை என்றே கொள்கிறேன்” என்று நான் சொன்னேன்.

அவன் “என்னிடம் உள்ளது அளவிலாச் செல்வம். ஆனால் செல்வம் மட்டுமே உள்ளது” என்றான். “அச்செல்வத்தில் இச்சொல்லுக்கு நிகரானதை அளித்து அதை மீட்டு எனக்கு அளி” என்றேன். “அச்செல்வத்தைப்பெற்று அமைக!” என்றான். “செல்வத்தைப் பெரிதென எண்ணியிருந்தால் நான் கிளம்பியிருக்கவே மாட்டேன். உன் செல்வத்தைக்கொண்டு அச்சொல்லை மீட்டெடுத்த வாக்தேவியிடமிருந்து வாங்கி எனக்கு அளி” என்றேன்.

“ஆம், அதைச்செய்கிறேன்” என்று அவன் விழிமூடினான். அவனருகே அவனைப்போன்றே தோன்றிய மூன்று குபேரபுரியின் ஏவலர் தோன்றினர் “வாக்தேவியை அணுகி என் செல்வத்தில் அச்சொல்லுக்கு நிகரானதை அளித்து அதை மீட்டுவருக!” என்றான். அதன்பின் என்னை நோக்கி புன்னகைத்து “என்னிடம் உள்ளது குன்றாப்பெருஞ்செல்வம். இப்புடவியையே நான் வாங்கமுடியும்” என்றான். குழந்தைமை பேதைமையாக ஆகும் சிரிப்பு அது என எனக்குப்பட்டது.

அவர்கள் வரக்காணாதபோது “எங்கு சென்றார்கள்?” என நிலையழிந்தான். “எங்கே சென்றீர்கள்?” என இரைச்சலிட்டான். அவர்கள் வரக்கண்டு “அதோ வருகிறார்கள்” என்றான். “வாங்கிவந்துவிட்டார்கள்” என்று சிரித்தான். அவர்கள் அருகணைந்து தலைவணங்கி “அரசே, சொல்லரசி அச்சொல்லை ஒரு துலாவின் தட்டில் வைத்தாள். மறுதட்டில் இணையான செல்வத்தை வைத்து எடுத்துச்செல்லுங்கள் என்றாள். நாங்கள் பொற்குவை ஒன்றை வைத்தோம். பொன்மலை ஒன்றை வைத்தோம். பொன்மலைகளை அள்ளி அள்ளி வைத்தோம்” என்றான் ஒருவன்.

“அரசே, நம் கருவூலத்தையே வைத்தோம். நம் நகரை நம் உலகையே வைத்தோம். அச்சொல் அசையவே இல்லை. வாக்தேவி நகைத்து மூடர்களே உங்கள் அரசனும் நீங்களும் அமர்ந்தாலும்கூட நிகராகாது என்றாள்” என்றான் இன்னொருவன். குபேரன் திகைத்து என்னை நோக்கி “நீ யார்? ஏன் என்னை இந்த இடரில் சிக்க வைத்தாய்?” என்று சீறினான். “அரசே, வேதச்சொல்லுக்கு இணையாகும் ஏதும் நம்மிடம் இல்லை என்று அவ்வன்னை சொன்ன போது வானம் இடிசூழ்ந்து ஆம் ஆம் என்றது” என்றான் மூன்றாமவன். ”நான் அன்னையிடம் சொல்வேன்... அன்னையிடம் சொல்லிவிடுவேன்” என குபேரன் அழுதான்.

நான் திகைப்புடன் நோக்க அவன் நிலத்தில் விழுந்து கைகால்களை உதைத்தபடி “நான் அழுவேன்... நான் அழுவேன்... அவளை அடிப்பேன்...” என்று கதறத் தொடங்கினான். அவர்கள் அவனை இழுத்துச்சென்றார்கள். அவன் ஊர்தியாகிய என் வடிவன் என்னை நோக்கி சிரித்தபடி உடன் சென்றான்.

என்ன அதெல்லாம் என்று எனக்குப்புரியவில்லை. குபேரதீர்த்தத்தில் இருந்து நான் திரும்பினேன். திரும்பும் வழியில் என் எண்ண அலைகள் ஓய்ந்திருப்பதை, நான் எடையற்றவனாக இருப்பதை உணர்ந்தேன். சிரிக்கத் தொடங்கினேன். சிரித்து சிரித்து மண்ணில் விழுந்து எழுந்து மீண்டும் சிரித்தேன். சிரிப்புடன் சிற்றூர்களை கடந்து சென்றேன். என்னைக் கண்டவர்கள் அனைவரும் அவர்களை அறியாமல் சிரிக்கலாயினர்.

அச்சிரிப்பினூடாக என் நா மறந்த அச்சொல் மீண்டு வந்தது. அவ்வேதவரியை சொன்னேன். சொல் அமைந்திருந்தது. உண்மையா என நானே வியந்து மீண்டும் மீண்டும்

சொன்னேன். அச்சொல் அங்குதான் இருந்தது. ஒன்றுமே நிகழாததுபோல. அனைத்தும் என் உளமயக்கென்பதுபோல. அதை மீண்டும் மீண்டும் சொன்னபடி நான் அழுதேன்.

“அங்கிருந்து இங்கு வந்து அமர்ந்தேன். வேதத்தின் அச்சொல்லை மட்டுமே இங்கு நான் ஓதிக்கொண்டிருக்கிறேன். அச்சொல்லாக நிறைந்துள்ளது இக்காடு” என்றார் சௌம்யர். அர்ஜுனன் நீள்மூச்சுடன் உடல் எளிதாக்கி புரண்டு படுத்தான். அவன்மேல் பனிக்கால நிலவு செம்பொன்னொளியுடன் நின்றது. “அச்சொல் எது?” என்று அவன் கேட்டான். “ஹிரண்ய” என்றார் சௌம்யர். “பொன் எனும் சொல். வேதம் பிரம்மத்தையும் கூழாங்கல்லையும் அனலையும் இளந்தளிரையும் அதைக்கொண்டே குறிக்கிறது.”

**[ 6 ]**

அர்ஜுனன் நூறு நாட்கள் நடந்து குபேரதீர்த்தத்தை சென்றடைந்தான். ஏழுமலைமுடிகள் சூழ்ந்த ஒற்றையடிப்பாதை முதல் வழிக்குறி. சிம்மவாய் எனத் திறந்த குகை என்பது அடுத்தது. முதலைமுதுகுபோன்ற பாறைநிரை பிறகு. பூதங்களின் பாலம் தொடர்ந்து வந்தது. நெருப்பாக நீர் வழியும் பேரருவி பின்னர். சிரிக்கும் மலை அதற்கு அப்பால். வெண்பனி உருகி வழியும் முடி பின்னர். அதன்பின் அவன் குபேரதீர்த்தத்தை தொலைவிலேயே கண்டான்.

பனிமலை முடிகள் சூழ்ந்த சிறிய தாழ்வரை அது. மஞ்சு உருகிய நீர் வந்து சேர்ந்து உருவான நீள்வட்ட வடிவான சுனை. நீலநிறத்தில் நீர் தேங்கி வான் தளும்பக் கிடந்தது. அதனருகே வெண்ணிறச் சேற்றுப்பரப்பில் ஒரே ஒரு காலடிமட்டும் சென்று திரும்பிய தடம் உலர்ந்து

பளிங்குப்பாறையில் செதுக்கிய சிற்பம் போலாகி தெரிந்தது. அது சௌம்யரின் காலடி என அவன் உய்த்துக்கொண்டான்.

மண் உதிர்ந்த சரிவில் தொற்றி அந்தச் சுனையைநோக்கி இறங்கிச் சென்றான். இருமுறை பிடியுடன் மண் விரிசலிட்டு வர விழுந்து அடுத்த மண்மேட்டைப் பற்றிக்கொண்டு நின்றான். மூச்சிரைக்க இறங்கி அச்சுனை அருகே சென்று நின்றபோது அங்கே முன்னரே வந்திருப்பதாக ஓர் உணர்வுதான் ஏற்பட்டது. அந்த மண் வெண்சுண்ணத்தாலானது. மெல்லிய கந்தகம் கலந்த நீர் எடைகொண்டதாக இருந்தது. அதில் மீன்களோ பிற சிற்றுயிர்களோ இருக்கவில்லை.

அருகே சென்று குனிந்து நோக்கியபோது அச்சுனையின் ஆழம் அச்சுறுத்தியது. அடியிலி என்றே அவன் விழி மயங்கியது. அது ஒரு பெரும் குகையின் வாய். அக்குகை எங்கு செல்லக்கூடும்? மலையிறங்கி ஆழத்திற்கு என்றால் அங்கே நீர் எப்படி நிற்கிறது? மலைஏறிச்சென்றால் அது அங்குள்ள பனிமுடிகளில் ஒன்றில் சென்று முடியலாம். அல்லது விண் நோக்கி வாய்திறந்திருக்கலாம். வெறும் வெளியை அள்ளி அள்ளி குடித்துக்கொண்டிருக்கலாம்.

அவன் அதனருகே ஒரு பாறையில் அமர்ந்தான். மடியில் கைகளை வைத்து கண்களைத் திறந்து ஊழ்கத்தில் ஆழ்ந்தான். மேற்கே சரியத்தொடங்கிய சூரியக்கதிர் கசிந்து பரவி நீரொளி கொண்டிருந்தது வானம். முகில்கள் வெண்நுரைக் குவைகளாக அசைவற்று நின்றன. தொலைவில் மலைமுடிகள் சூடிய பனிப்பாளங்கள் மெல்ல அண்மை கொண்டு விழிகூசும்படி வந்து விரிந்தன. மயங்கிய விழிகளுக்கு முகில்களும் பனிமுடிகளும் ஒன்றெனக் கலந்து காட்சியளித்தன.

அவன் உள்ளம் மெல்ல ஏமாற்றம் கொள்ளத் தொடங்கியது. இது வெறுமொரு சுனைதான். அவன் அதுவரை கண்டிருந்த பல்நூறு சுனைகளில் ஒன்று மட்டுமே. இமயமலைகளுக்குள் அப்படி பல்லாயிரம் பனிச்சுனைகள் உள்ளன. அங்கே செல்வது அரிதென்பதனாலேயே அவை அரிதாகத் தோன்றுகின்றன. அரியவற்றை மேலும் அரிதாக்க எழுகின்றன தொல்கதைகள். விண்ணளாவும் நம்பிக்கைகள். ஆம். எழவேண்டியதுதான். மீள்வதே முறை. ஆனால் அவன் உள்ளம் கொண்டிருருந்த இனிய சோர்வு அவனை அங்கேயே அமரச்செய்தது.

அவன் சற்று துயில்கொண்டிருக்கவேண்டும். விழிப்பு வந்தபோது அந்தி ஆகிவிட்டிருந்தது. தன்னைச்சூழ்ந்த பொன்னொளியைக் கண்டு திகைத்தபடி எழுந்தான். சூழ்ந்திருந்த அத்தனை மலைகளும் பொற்கூம்புகளாக ஒளிவிட்டன. முகில்கள் பொற்சுடர்களாக எரிந்தன. அவன் நின்றிருந்த மண்ணும் அருகிருந்த சேறும் கூழாங்கற்களும் பொன்னென்றாகிவிட்டிருந்தன. அவன் மெல்ல நடந்து அச்சுனையை அணுகினான். அது பொன்னுருகி ததும்பியது.

அவன் அதனருகே நின்று குனிந்து நோக்கினான். உள்ளே பொன்மலைகள் எழுந்த ஒரு வெளி தெரிந்தது. அதை ஊடுருவிச்சென்றது பொன்னாலான பாதை ஒன்று. அவன் கால்கள் நடுங்கின. தன் கட்டுப்பாட்டை இழந்து உள்ளே குதித்துவிடுவோம் என அவன் அஞ்சினான். ஆனால் பின்னகரக்கூடவில்லை. பொன் அவன் சித்தத்தை நிறைத்தது. அனைத்து எண்ணங்களும் பொன்னென்றாயின.

அவன் விழிகளை மூடித்திறந்தான். நீரில் எழுந்த அவன் பாவை அவனை விழி மூடாது நோக்கியது. “விலகு… நான் உன்பாவை” என்றது. “தன் பாவைகளால்தான் ஒவ்வொருவரும்

ஆழங்களுக்குள் கவரப்படுகிறார்கள்.” அர்ஜுனன் பெருமூச்சுவிட்டான். “பொன்னொளிர் பாவை! இதுநாள் வரை எங்கிருந்தது இது?” அது சிரித்தது. “நான் நீ....” அவன் பின்னகர விரும்பினான். ஆனால் அப்புன்னகை அவனை கவ்வி வைத்திருந்தது. “நீ விலகு என்கிறாய். ஆனால் என்னை ஈர்க்கிறாய்.” அது நகைத்தது. “ஆடிப்பாவைகள் அனைத்துமே அப்படித்தான்.”

அவன் இருமுறை தள்ளாடினான். விலகு விலகு. இதுவே தருணம். விலகிவிடு. அவ்வெச்சரிக்கை ஒலியே அவனைச் சீண்டி முன் செலுத்தியது. எம்பி அந்நீரில் பாய்ந்தான். நீர் என அவனை அள்ளி அணைத்து குளிரக்குளிர இறுக்கி உள்ளிழுத்துக்கொண்டது அது. பின்னர் அவன் இருபக்கமும் பொன்னிற அலைகளாக மலைகளை காணத்தொடங்கினான். எரிந்தபடி பொன்முகில்கள் நெளிந்தன. பொன்னாலான பாதை சுருளவிழ்ந்து நீண்டு அவனை கொண்டுசென்றது.

# கிராதம் - 26

**[ 7 ]**

தன்னுணர்வு கொண்டு விழியொளி பெற்றபோது அர்ஜுனன் வளைந்து மேலேறிச்சென்ற அவ்வெண்ணிறப் பாதையின் மறு எல்லையில் இருள் குழைத்துக் கட்டப்பட்டதுபோல வளைவுகளில் ஒளிமின்ன நின்றிருந்த இரும்புக் கோட்டையை பார்த்தான். எடையற்றவனாக தன்னை உணர்ந்து அதில் நடந்து சென்றபோது முன்பொருமுறையும் எவரும் கால் தொட்டிராதது அப்பாதை என்னும் எண்ணமெழுந்தது.

செல்லச் செல்ல அகல்வது போல விழிமாயம் காட்டி நின்றிருந்தது அக்கோட்டை. பின்பு எப்போதோ ஒரு புள்ளியில் பேருருக்கொண்டு அணுகத்தொடங்கியது. குளிர்ந்த முகில்நிரைபோல அது எழுந்து வந்து சூழ்ந்தது. நெருங்கிச் செல்லும்தோறும் அதன் சுவர் திசையாக மாறியது. அதன் பெயர் அயத்வாரம் என்று அவன் அறிந்திருந்தான். அதன்மேல் எழுந்த கொடிகள் கரிய பறவைகள் போல சிறகடித்தன.

அதன் மூடிய பெருவாயில் முன் நின்றபோது குமிழ்களும் முழைகளும் சட்டங்களும் கொண்ட அந்தக் கதவின் கீழ்ச் சட்டத்தின் அளவுக்கே அவன் உயரம் இருந்தது. பொன்னாலான அதன் தாழ் அவன் தலைக்குமேல் வானில் தொங்கியதுபோல் நின்றிருந்தது. கதவைத் தொட்டு அதன் தண்மையை உணர்ந்து சில கணங்கள் நெஞ்சு கூர்ந்து தன்னை தொகுத்துக் கொண்டான்.

கையை ஓங்கி அவ்விரும்புச் சட்டத்தில் தட்டி "யாரங்கே? வாசல் திறவுங்கள்! வாசல் திறவுங்கள்!" என்று கூவினான். உருக்கிரும்பாலான சட்டம் அவன் கையை உணர்ந்ததாகவே தெரியவில்லை. முழு உடலாலும் அதன்மேல் உந்தியும் மலை என அசைவற்றிருந்தது. மீண்டும் மீண்டும் கைகளாலும் கால்களாலும் அதை உதைத்தான். அவன் செயல்களுக்கு மிக அப்பால் தன் காலமின்மையில் அது நிலைகொண்டிருந்தது.

உள்ளே எழுந்த சினஎழுச்சியுடன் அவன் நூறு காலடி எடுத்து பின்னால் வந்தான். முழு விரைவுடன் ஓடி தன் தலையால் அவ்விரும்புக் கதவை முட்டினான். அவன் தலையை ஒரு குளிர்நீர்ப்பரப்புதான் எதிர்கொண்டது. அலையெழுந்து விலகி அவனை உள்ளிழுத்துக்கொண்டது அது. சுருண்டு விழுந்து கையூன்றி எழுந்தபோது அவன் முன் பேருருவ பூதம் ஒன்றின்

இரு கால்களை கண்டான். அவன் தலை அதன் கணுக்கால் முழை அளவுக்கே இருந்தது.

விழிதூக்கிப் பார்த்தபோது பூதத்தின் முழங்கால் உருளைகள் மட்டும் வான்தொலைவில் தெரிந்தன. அதற்கப்பால் செறிந்திருந்த இருளிலிருந்து இடியென அதன் குரல் ஒலித்தது. "யார் நீ?" அர்ஜுனன் தலைதூக்கி "குபேரனைப் பார்க்க வந்தவன், என் பெயர் அர்ஜுனன். குருகுலத்து ஷத்ரியன்" என்றான்.

"மானுடர் இவ்வழி வந்ததே இல்லை" என்றது பூதம். "இவ்வாயிலை அஞ்சாது தட்டி அழைத்தமையால் உன்னை பாராட்டுகிறேன்." அர்ஜுனன் "வாயில் ஒன்று அமைவதே தட்டி திறப்பதற்காகத்தான்" என்றான். "என்றும் நான் அஞ்சியதில்லை. என்னை அஞ்சி நீர்தான் பேருருக்கொண்டிருக்கிறீர்." பூதம் சினத்துடன் "எனக்கா? அச்சமா?" என்றது. "அஞ்சிய முட்பன்றிதான் முடிசிலிர்த்துப் பெரிதாகும்" என்று அர்ஜுனன் சொன்னான்.

"போதும்" என்றபடி தன் உடல் குறுக்கி அவன் முன் தோன்றியது பூதம். அதன் பெருத்த வயிறு அவன் முகத்திற்கு முன்னால் நின்றது. இரு கரிய கைகளையும் அவனுக்கு இருபுறமும் ஊன்றி மூச்சுக்காற்று அவன் மேல் மூடும்படி தலையைக் குனித்து அது சொன்னது "என்னைக் கடந்து எவரும் செல்லலாகாது என்பது நெறி. இவ்வாயிலுக்கு அப்பால் நீ செல்ல முடியாது."

"நான் வாயில்களை கடப்பவன். ஐயம் தேவையில்லை பேருருவரே, இவ்வழிகளைக் கடப்பேன். இதற்கப்பால் உள்ள அனைத்து வாயில்களையும் கடப்பேன்"

என்றான் அர்ஜுனன். அந்தத் துணிவை எதிர்பாராத பூதம் தன் இரு விலாவையும் சொறிந்துகொண்டு முனகியது. பின்னர் "அதெப்படி கடப்பாய்?" என்றது. "அரிதான ஒரு பாதை அரிதான ஒருவன் மட்டுமே கடப்பதற்கென்று அமைக்கப்பட்டது. இதைக்கூட அறியாதவரா நீர்?" என்றான் அர்ஜுனன்.

பூதம் "அப்படியா?" என்றது. தலையைத் தடவியபடி எண்ணங்களில் சிக்கி பின் விடுவித்துக்கொண்டு "என் பணியை நான் செய்வேன்" என்றது. அர்ஜுனன் அண்ணாந்து பார்த்தபோது இருளில் பூதத்தின் இரு விழிகளும் வெண்பற்களும் மட்டும் தெரிந்தன. அது குழம்பியிருப்பதை அந்த விழியசைவே காட்டியது.

"என்னுடன் போர் புரிக! வென்றால் கடந்து செல்க!" என்று பூதம் சொன்னது. "எங்கும் எவருடனும் போர் புரிவேன். களம்காண ஒரு கணமும் தயங்கியவனல்ல. உமது படைக்கலங்களை எடும்!" என்றான் அர்ஜுனன். உரக்க நகைத்தபடி பூதம் அவன் முன் அமர்ந்தது. "பிழை கணித்துவிட்டாய், வீரனே! இது குபேரனின் கோட்டை. இங்கு போர்களும் பூசல்களும் அனைத்தும் பொருளின் பொருட்டே. நாம் ஒரு பொருளாடல் நிகழ்த்துவோம். என்னை இவ்வணிகத்தில் நீ வென்றால் கடந்து செல்லலாம்."

"ஆம்" என்றான் அர்ஜுனன். அதன் முன் கால்மடித்து அமர்ந்தான். "நீ கொண்டுள்ள வில்வேதம் உதவாது பொருளாடலுக்கு" என்றது பூதம். "பேருருவரே, வில்வேதம் இலக்குக்கும் நம் திறனுக்குமான நிகர்ப்பாட்டைக் கற்பிக்கும் கலை. அனைத்து கலைகளும் அதுவே" என்றான் அர்ஜுனன்.

பூதம் தன் சுட்டுவிரலால் தரையில் ஒரு களம் வரைந்தது. “இக்களத்தில் நான் வைக்கும் பொருளுக்கு நிகரான ஒன்றை நீ வைக்கவேண்டும். எவரிடம் செல்வம் மிகுதி என்று பார்ப்போம்” என்றது. அர்ஜுனன் புன்னகைத்தான். “என்ன புன்னகை?” என்றது பூதம். “செல்வம் காப்பவர் அனைவரும் இந்த ஒரே ஆடலை அன்றி பிற எதையுமே அறிந்திருப்பதில்லை” என்றான் அர்ஜுனன். “அப்படியா?” என பூதம் தன் தலையை தடவிக்கொண்டது.

“ஆடுக!” என்றான் அர்ஜுனன். பூதம் தன் கையை நீட்டி அதில் பூனை விழியென சுடர் கொண்டிருந்த அருமணி ஒன்றை எடுத்து முதற்களத்தில் வைத்தது. “உனது மண்ணில் நூறு பேரரசுகளை விலைக்கு வாங்கும் வல்லமை கொண்டது இந்த மணி. நிகரானதொன்றை உன் களத்தில் வை” என்றது.

அர்ஜுனன் திரும்பி தன் அருகே கிடந்த கூழாங்கல் ஒன்றை எடுத்து ஆடையால் துடைத்து தன் களத்தில் வைத்தான். “இதுவா அருமணிக்கு நிகரானது?” என்று பூதம் வியப்புடன் கேட்டது. “ஆம். உமது மணிக்கு நீர் அளிப்பதே மதிப்பு. எதைக் கொடுத்தால் நீர் அதை கொடுப்பீர் என்பதல்லவா அதன் விலையாகிறது? நான் என் கல்லுக்கு அதே மதிப்பை அளிக்கிறேன்” என்றான் அர்ஜுனன்.

“அக்கல்லை நான் மதிக்கவில்லை” என்று பூதம் கூவியது. “அந்த மணியை நானும் மதிக்கவில்லை என்று சொல்கிறேன்” என்றான் அர்ஜுனன். பூதம் தன் தலையை தட்டிக்கொண்டு முனகி அசைந்து அமர்ந்தது. “பேருருவரே, அந்த மணி அளவுக்கே என் கல்லும் மதிப்புடையது என்றுதானே நான் இக்களத்தில் அதை வைத்துள்ளேன். அப்போதே அம்மதிப்பு உருவாகிவிட்டது அல்லவா?” என்றான் அர்ஜுனன்.

“எப்படி?” என்றது பூதம் குழப்பமாக தலையை அசைத்தபடி. “பொருளுக்கா மதிப்பு? அதற்குப்பின் அம்மதிப்பை உருவாக்குவதாக இருப்பதென்ன என்பதல்லவா? இக்கூழாங்கல்லுக்குப்பின் இருப்பவன் நான். அந்த அருமணியையோ நிகரானதையோ அளிக்காமல் இக்கூழாங்கல்லை எவரும் பெறமுடியாது. அவர்கள் அக்கணமே என் வில்லால் கொல்லப்படுவார்கள்” என்றான் அர்ஜுனன்.

பூதம் திகைத்து கைகளால் தரையை துழாவியது. பின்பு எழுந்து நின்று “இது வணிகமல்ல. இது ஏதோ பிழை விளையாட்டு” என்று கூவியது. “விடை சொல்ல எவரையேனும் வரவழையும்” என்றான் அர்ஜுனன். பூதம் திரும்பி அவனை தவிர்த்தபடி “இங்கு மதிப்புகாட்டும் துலா ஒன்று உள்ளது” என்றது. “அதில் வைத்து நோக்குவோம்... வருக!” என்றான் அர்ஜுனன்.

இருவரும் சென்று கோட்டைச்சுவர் மேல் பதிந்து நின்றிருந்த கந்தர்வனின் சிலையின் கையில் தொங்கிய ஒரு துலாவின் இரு தட்டுகளிலும் அந்த மணியையும் கல்லையும் வைத்தனர். நிகர் எடைகாட்டி முள் நிலைத்தது. பூதம் உறுமியது. தன் தலையையும் இடையையும் சொறிந்துகொண்டு முனகியது. “நிகர்” என்றான் அர்ஜுனன். சினந்து நிலையழிந்து கால்களை உதைத்தபடி சுற்றி வந்தது பூதம்.

“துலாவேந்திய தேவனே, மறுமொழி சொல்க! இக்கூழாங்கல்லின் மதிப்பென்ன?” என்று அர்ஜுனன் கேட்டான். “குபேரபுரியின் நெறிகளின்படி ஒன்று எவ்வண்ணம் விற்கப்படுகிறதோ , அல்லது விற்கப்பட இயலுமோ அதுவே அதன் மதிப்பு. இங்கிருப்போர் இருவரே. எனவே

அந்தக்கூழாங்கல்லின் மதிப்பு அந்த அருமணிக்கு நிகர்” என்றான் துலாவை ஆண்ட கந்தர்வன்.

பூதம் எண்ணியிரா கணத்தில் அர்ஜுனன் கைநீட்டி அந்த அருமணியை எடுத்து அப்பால் வீசினான். “அது வெறும் கூழாங்கல்” என்றான். பூதம் பதறி நோக்க தன் கூழாங்கல்லை எடுத்து இணையாக வீசினான். “அம்மதிப்பே இதற்கும்” என்றபின் எழுந்து “விலகும் பேருருவரே, ஆட்டம் முடிந்துவிட்டது” என்றான்.

பூதம் விலகி திகைப்புடன் நோக்கி நிற்க “திறவுங்கள் இந்தக் கோட்டைக் கதவை!” என்றான். பொற்தாழை விலக்கி பேரோசையுடன் இரும்புக்கதவை திறந்தது பூதம். அவன் அதனூடாக நடந்து மறுபக்கம் சென்றான்.



இரும்புக்கோட்டைக்குள் இருந்த தாம்ரவலயம் என்னும் செம்புக்கோட்டையை நோக்கிச் சென்ற பாதையில் வளைவுகளை மிதித்து மேலேறி அதன் வாயிலை அர்ஜுனன் அணுகினான். தொலைவிலேயே அதன் முன் வழிமறித்ததுபோல் கால்களைப் பரப்பி கைகளைக் கட்டி நின்ற அனல் வண்ண கந்தர்வனை அவன் கண்டான். அவன் விழிகளின் பச்சைநிற ஒளி அங்கிருந்த செவ்விருளில் மின்னித் தெரிந்தது.

தளரா நடையுடன் சென்று அவன் முன் நின்று “வழி விடுக, கந்தர்வரே! என் பெயர் அர்ஜுனன். குருகுலத்தவன். குபேரனைக் கண்டு வென்று திரும்பும் பொருட்டு வந்துள்ளேன்” என்றான். கந்தர்வன் “ஆம், நீர் இரும்புக்கோட்டையைக் கடந்ததை நான் அறிந்தேன். ஒவ்வொரு முறையும் தன் எல்லையை தானே கடக்கும் ஆற்றல் கொண்டவர் நீர்” என்றான். “இவ்வாயிலைக் காப்பவன் நான். என் பெயர் அக்னிவர்ணன். என்னுடன் வணிகமாடி இதைக் கடந்து செல்க!” என்றான்.

“சொல்லும்” என்று சொல்லி அர்ஜுனன் நின்றான். தன் இடையில் இருந்த ஒரு ஓலையை எடுத்து அர்ஜுனனிடம் காட்டி “வீரரே, இச்செம்புக்கோட்டைக்கு அப்பால் பாதையின் இருமருங்கும் ஆழ்கலவறைகளில் பெருஞ்செல்வத்தை குவித்து வைத்துள்ளேன். அச்செல்வமனைத்தையும் இவ்வோலையினூடாக தங்களுக்கு அளிப்பேன். அதற்கு நிகரான விலை ஒன்றை எனக்களித்து இதைப் பெற்றுச் செல்லும்” என்றான்.

அர்ஜுனன் புன்னகையுடன் “நிகர் என்பதே செல்வத்தின் மறுபெயர்” என்றான். தன் கையில் இருந்த குருகுல முத்திரை கொண்ட கங்கணத்தைக் கழற்றி அவனிடம் நீட்டி “அச்செல்வத்தை நான் பெற்றதும் அவையனைத்தையும் உங்களுக்கே மீட்டளிப்பேன் என்று இக்கங்கணத்தால் உறுதி கூறுகிறேன். இதை பெற்றுக் கொள்க!” என்றான்.

ஒரு கணம் திகைத்தபின் கந்தர்வன் வாய்விட்டு நகைத்து “ஆம், இது வணிக முறைமையே” என்றான். “இரண்டும் நிகரானவை. பெற்றுக் கொண்டு வாயிலைத் திறவுங்கள், கந்தர்வரே” என்றான் அர்ஜுனன். கந்தர்வன் பறந்து எழுந்து

சென்று அச்செம்பு வாயிலின் இருபுறத்திலுமிருந்த சக்கரங்களை தொட்டான். அவை சுழன்று கதவை ஓசையின்றித் திறந்து அர்ஜுனனை உள்ளே விட்டன.

மிகத் தொலைவில் ஒரு பேராறு உச்சிப்போதின் வெயில்பட்டு அலையிளகிக் கொந்தளிப்பதுபோல வெள்ளியாலான ரஜதவியூகம் என்னும் கோட்டை தெரிந்தது. அர்ஜுனன் கைகளால் கண்களை மூடியபடி அதை நோக்கி சென்றான். ஒளிபெய்து நிறைந்த விழிகள் நீர் பெருகி வழிந்தன.

அவன் அருகணைந்தபோது வெள்ளிக்கோட்டை முழுமையாகவே கண்களிலிருந்து மறைந்துவிட்டிருந்தது. அவன் தன் முடிக்கற்றைகளை எடுத்து முகத்தின்மேல் அடர்த்தியாகப் பரப்பி அதனூடாக அக்கோட்டையை பார்த்தான். உப்புக்குவியல் என, பனிமலைகளை வெட்டி அடுக்கியதென அது தோன்றியது.

அதன் வெள்ளிப்பெருங்கதவத்தை அணுகி நின்றான். நுணுக்கமான மலர்ச்செதுக்குகள் கொண்ட வாயிலின் தாழ் செம்பாலானதென்று தெரிந்தது. அதன் இருபக்கமும் சுடர்முடி சூடி கைகளில் செண்டாயுதத்துடன் நின்றிருந்த இரு இளஞ்சிறுவர்களின் வெள்ளிச்சிலைகளை அவன் நிமிர்ந்து நோக்கினான். அவர்களின் ஆடையின் கீழ்வளைவுகளின் அலைகளுக்குக் கீழே அவன் தலை இருந்தது.

இடப்பக்கச் சிலையின் கை தொலைவைச் சுட்டி "அணுகாதே" என்றது. வலப்பக்கச் சிலையின் கை வெளிப்பக்கமாகச் சுட்டி "விலகிச்செல்" என்று சொன்னது. அர்ஜுனன் பின்னால் நகர்ந்து அவர்களின் விழிகளை நோக்கினான். அவை உறுத்து விழித்தன. உதடுகள் குவிந்து "அகல்க!" என ஆணையிட்டன.

மேலும் கூர்ந்து நோக்கியபோது அவை “அணுகுக!” என்றன. திடுக்கிட்டு அக்கைகளை நோக்கினான். இடச்சிலை “வருக!” என்றது. வலச்சிலை “அருகணைக!” என்றது.

அவன் அச்சிலை விழிகளை நோக்கிக்கொண்டு நின்றான். அவற்றில் ஒன்றில் மெல்ல நோக்கு திரண்டது. அவன் விழிகளை அவை சந்தித்தன. அவற்றில் ஒருவன் விழிவிலக்கிக்கொண்டான். பிறிதொருவன் விழிக்குள் மெல்லிய ஒளியென புன்னகை எழுந்தது. அர்ஜுனன் புன்னகையுடன் நோக்கி நின்றான். அவர்கள் இருவரும் ஒரே தருணத்தில் விழிதிருப்பி அவனை நோக்கினர். இருவர் முகத்திலும் சிரிப்பெழுந்தது.

சிரிப்பொலி வானிலென எழுந்தது. அர்ஜுனன் சிரித்தபடியே “வருக, இளையோரே! போதும் விளையாட்டு” என்றான். இருவரும் குதித்துக் கீழிறங்கி அவனை நோக்கி உருசுருக்கி அணுகினர். வெள்ளிக்குழம்பில் மூழ்கி எழுந்த இரு மைந்தர். இருவெள்ளி வண்டுகள் போலிருந்தனர். ஒருவன் “என் பெயர் சு◌ஃப்ரன், இவன் தவளன். இந்த வாயிலின் காவலர். இதற்கப்பால் எவரையும் அனுப்ப எங்களுக்கு ஆணையில்லை” என்றான். “எங்களை மீறிச்செல்ல முயன்றவர்களை இச்செண்டாயுதத்தால் மெல்ல தட்டுவோம். அவர்கள் குளிர்ந்து அசைவிழந்து இச்சுவரில் ஒரு சிற்பமெனப் படிவார்கள்.”

அர்ஜுனன் அந்த வெள்ளிச்சுவரெங்கும் விழிகள் உயிர்கொண்டு பதிந்து நின்றிருந்த பல்லாயிரம் கந்தர்வர்களையும் தேவர்களையும் கண்டான். “மானுடர் எவரும் இல்லை. அவர்களால் முதல் வாயிலையே கடக்கமுடியாது” என்றான் தவளன். “தேவர்களுக்கு எதற்கு செல்வம்?” என்றான் அர்ஜுனன்.

“வீரரே, கந்தர்வ உலகிலும் தேவருலகிலும் அழகுகளும் இனிமைகளும் மதிப்புகளும் சிறப்புகளும் அளவில்லாது நிறைந்துள்ளன. ஆனால் அவை எவருக்கும் உரிமையானதல்ல. எனவே அவை செல்வங்கள் அல்ல. செல்வமென்பது எவருக்கேனும் உரிமையானது. அச்செல்வத்திற்கு மட்டுமே எந்தை குபேரன் உடைமையாளர்” என்றான் சுஃப்ரன்.

“கந்தர்வர்களிலும் தேவர்களிலும் தானென்னும் உணர்வை அடைபவர் கோடியில் ஒருவர். அவர்களில் கோடியில் ஒருவர் தனக்கென்றே ஏதேனும் செல்வத்தை விழைகிறார்கள். இங்கு வருபவர்கள் அவர்களே” என்றான் தவளன். “அவர்கள் விழைவதே அவர்களுக்கு அளிக்கப்படுகிறது. பெருஞ்செல்வக்குவையில் ஒட்டி ஒன்றாகி அமர்ந்திருக்கிறார்கள்.” அர்ஜுனன் அவர்களின் விழிகளை நோக்கினான். எவற்றிலும் துயர் இல்லை. இனிய கனவு ஒன்றின் மயக்குதான் தெரிந்தது.

“மாயை!” என்று அர்ஜுனன் சொன்னான். “அழியாச்சிறை. மீளமுடியாத தளை.” தவளன் “அவர்கள் எவரும் மீள விரும்பவுமில்லை” என்றான். “செல்வத்தை விழைபவர் எவரும் சென்றடையும் இடம் வேறேது?” என்றான் சுஃப்ரன். “அவர்கள் செல்வத்தின் மேல் அமைந்திருக்க முடியும். செல்வமே ஆக முடியும். அந்தக் களிமயக்கில் காலத்தை கடக்க முடியும். வேறேது தேவை அவர்களுக்கு?” என்றான் தவளன்.

அர்ஜுனன் “ஆனால் அவர்கள் செயலற்றுவிட்டார்கள். அவர்களால் எதையும் நுகர முடியாது” என்றான். தவளன் குழப்பத்துடன் “அவர்கள் நுகர விழைகிறார்களா என்ன? அவ்வாறு விழைந்தால் இன்பத்தின் தெய்வங்களை நாடி அல்லவா சென்றிருப்பார்கள்? இங்கு ஏன் வருகிறார்கள்?”

என்றான். திரும்பி சுஃப்ரனிடம் “அப்படியா அவர்கள் கோரினார்கள்? குழப்பமாக இருக்கிறதே?” என்றான்.

சுஃப்ரன் “ஆம், இங்கு வந்த எவரும் அவர்கள் விழைந்தது இன்பத்தை என்று சொன்னதில்லை. செல்வத்தைத்தான் கோரியிருக்கிறார்கள்” என்றான். தவளன் சிரித்தபடி “ஆம், உண்மை” என்றபின் திரும்பி “நீங்கள்தான் குழம்பியிருக்கிறீர்கள், இளைய பாண்டவரே. எங்களை குழப்பவேண்டாம்” என்றான். “நாங்கள் குழம்பினால் மிகவும் குழம்பிவிடுவோம். மீண்டு வர நெடுங்காலமாகும்” என்றான் சுஃப்ரன்.

“நான் செல்வத்தின்பொருட்டு வரவில்லை. குபேரனை கண்டுசெல்லவே வந்தேன்” என்றான் அர்ஜுனன். “எதன்பொருட்டு காணவேண்டும்?” என்று சுஃப்ரன் கேட்டான். “அவரிடம் கேட்கவேண்டிய அனைத்தையும் என்னிடம் கேட்கலாம் நீங்கள்.” அர்ஜுனன் “நான் அவரை வென்றுசெல்ல வந்துள்ளேன். எதையும் வெல்வது மட்டுமே என் விழைவு. என் ஆசிரியனிடமிருந்து அன்றி நான் கொள்வதற்கென ஏதுமில்லை” என்றான்.

“அப்படியென்றால் முதலில் என்னை வென்று செல்க!” என்றான் சுஃப்ரன். தவளன் அவனைப் பிடித்து பின்னால் இழுத்து “என்னை வென்று செல்க... என்னை” என்றான். “என்னை என்னை” என்று சுஃப்ரன் முண்டியடித்தான். “சரி, இருவரையும்... இருவரையும்” என்றான் அர்ஜுனன். “என்ன ஆட்டம்? இங்குள்ள ஆட்டமெல்லாம் செல்வத்தால் அல்லவா?”

இருவரும் ஒருவரை ஒருவர் நோக்கிக்கொண்டனர். “ஆமாம், என்ன ஆட்டம்?” என்றான் சுஃப்ரன். “வழக்கமாக

வருபவர்களிடம் இதோ இச்செல்வத்தில் உங்களுக்குத் தேவையானவற்றை எடுத்துக்கொள்ளுங்கள், எஞ்சியவற்றை குபேரனிடம் பெற்றுக்கொள்ளுங்கள் என்போம். ஓடிப்போய் இக்கோட்டையை தொடுவார்கள். பசையில் ஈ என ஒட்டிக்கொள்வார்கள். நீங்கள் இதை விரும்பவில்லை.” தவளன் “இருங்கள்… நாங்களே யோசித்துவிட்டு வருகிறோம்” என்றான்.

இருவரும் அப்பால் சென்று நின்று அவனை நோக்கியபடி மாறி மாறி பேசிக்கொண்டனர். சிறு பூசல் ஒன்று நிகழ்ந்து ஒருவரை ஒருவர் பிடித்து தள்ளிக்கொண்டனர். பின்னர் இருவரும் தோள் ஒட்டி நடந்து அவன் அருகே வந்தனர். “எங்களுக்குத் தேவை ஒரு செல்வம்” என்றான் சுஃப்ரன். “எங்களுக்கு குன்றாத ஆர்வமளிக்கும் செல்வமாக அது இருக்கவேண்டும். நாங்கள் அதை பேரார்வத்துடன் ஏற்கவேண்டும். எங்கள் ஆர்வம் ஒரு கணம் குறையுமென்றால் அப்போதே நீர் இச்சுவரில் சிற்பமெனப் பதிவீர்.”

“இங்கு இல்லாத செல்வம் இல்லை. ஆகவே நீங்கள் எதையளித்தாலும் எங்களுக்கு ஆர்வமில்லை என்று சொல்லிவிடுவோம்” என சொல்லி தவளன் கிளுகிளுத்து சிரித்தான். “பேசாதே, மூடா!” என அவனை சுஃப்ரன் கிள்ள “கிள்ளாதே” என்று தவளன் சீறினான். “எங்கே உங்கள் செல்வம்? எங்களையே கட்டிப்போடும் செல்வம்?” என்றான் சுஃப்ரன்.

“நீங்கள் இதுவரை அறியாத பெருஞ்செல்வம் ஒன்று உங்களிடமிருக்கிறது” என்றான் அர்ஜுனன். “கந்தர்வர்களே, நீங்கள் அழிவற்றவர்கள். ஆகவே முடிவிலாக் காலம் கொண்டவர்கள். அந்தக் காலம் ஒரு பெரும்செல்வம் அல்லவா?” சுஃப்ரன் தவளனை நோக்கிவிட்டு “காலமா? அதெப்படி செல்வமாகும்?” என்றான். தவளன் “எங்களை

ஏமாற்றமுடியாது” என்றான். ஆர்வத்துடன் அருகே வந்து “எப்படி காலம் செல்வமாக ஆகும்?” என்றான்.

“செல்வம் என்பது என்ன? பிறிதொன்றுக்கு நிகர்வைக்கப்படும் ஒரு பொருள் அல்லவா அது? இன்பத்துக்கு, ஆற்றலுக்கு, மதிப்புக்கு பொன்னையோ
வெள்ளியையோ நிகர்வைக்கிறோம். மண்முத்திரைகளை, எழுதப்பட்ட ஓலைகளை நிகர்வைக்கிறோம். இளையோரே, வெறும் சோழிகளைக்கூட நிகர்வைப்பதுண்டு.” சுஃப்ரன் “ஆம், அதன் பெயர் பணம்” என்றான். தவளன் “செல்வத்தை அது ஓர் அடையாளமாக ஆக்கிவிடுகிறது. ஒரு சொல்லாக மாற்றி சுருக்கிவிடுகிறது” என்றான்.

“அதேபோல நீங்கள் காலத்துக்கு பொருளை நிகர்வைத்தால் எத்தனை பெருஞ்செல்வத்திற்கு உடைமையாகிறீர்கள் என்று அறிவீர்களா?” என்றான் அர்ஜுனன். “எனக்கு இரு வெள்ளி நாணயங்களை கடனாகக் கொடுங்கள். நீங்கள் கேட்கும் கணம் அவற்றை திருப்பியளிப்பேன்” என்றான். அவர்கள் ஒருவரை ஒருவர் நோக்கிக்கொண்டு “இதோ” என இரு நாணயங்களை அவனிடம் அளித்தனர்.

அவன் அவற்றில் ஒன்றை சுஃப்ரனிடம் அளித்தான். “சுஃப்ரரே, இப்போது உங்களிடமிருக்கும் இந்த நாணயம் இக்கணத்திற்கு நிகரானது. இக்கணம் பெருகும்போது இதுவும் பெருகுகிறது எனக்கொள்வோம்” என்றான். சுஃப்ரன்
புரியாமல் தலையசைத்தான். “இதை நீங்கள் இவருக்கு கடனாக அளிக்கிறீர்கள். இவர் இதை திருப்பியளிக்கையில் இதன் காலத்தின் மதிப்பையும் சேர்த்து அளிக்கவேண்டும்” என்றான். தவளன் “ஆம்” என்றான்.

“இதோ, இது இரு நாணயங்களின் மதிப்பை பெற்றுவிட்டது. நான்கு நாணயங்களாக ஆகிறது. எட்டு நாணயங்களாக பெருகிக்கொண்டே இருக்கிறது” என்றான் அர்ஜுனன். சுஃப்ரன் விழிகள் மின்ன “ஆம்” என்றான். “என்னால் அதை உணரமுடிகிறது.” அர்ஜுனன் “உங்கள் முடிவிலாக் காலம் அவரால்தான் பிளக்கப்பட்டு அடுக்கி எண்ணப்பட்டு அளவைக்காலமாக உருவாக்கப்படுகிறது என்பதை மறக்கவேண்டாம். அவர் அளிப்பதே அதன் காலமதிப்பு. அந்த நாணயத்தை நீங்கள் உங்களிடம் வைத்திருந்தீர்கள் என்றால் அளவைக்காலம் நின்றுவிடுகிறது. நாணயம் தன் மதிப்பை இழந்துவிடுகிறது” என்றான்.

இன்னொரு நாணயத்தை தவளனிடம் கொடுத்தான். “இதோ, இந்நாணயம் உங்கள் காலம். அது அவரிடமிருக்கையில் மட்டும் வளர்வதாகும்”. தவளன் சுட்டுப்பழுத்த உலோகத்தை என அதை உடனே சுஃப்ரனிடம் கொடுத்தான். “என் செல்வம் அது…” என்று கைசுட்டிக் கூவினான். “எண்ணிக்கொண்டிருங்கள். உங்கள் செல்வம் ஒன்றின் மடங்குகளெனப் பெருகுவதை பார்ப்பீர்கள். நிகரற்ற பெருஞ்செல்வம் என்பது இதுவே. குபேரனின் செல்வத்திற்கு எல்லை உண்டு. இது காலம், முடிவிலி.”

சுஃப்ரன் “என்றேனும் நான் போதும், என் செல்வத்தை திருப்பிக்கொடு என கேட்டால் இவன் எப்படி அந்நாணயத்தின் பெருகிய மதிப்பை எனக்கு அளிப்பான்?” என்றான். அர்ஜுனன் “அவர் செல்வம் உங்களிடமிருக்கிறதல்லவா? இரு மதிப்பும் நிகரல்லவா? கைமாற்றிக்கொள்ளலாமே!” என்றான். அவன் அதை ஆராயத் தொடங்குவதற்குள் “ஆனால் காலம் முடிவிலாதது. அதை பாதியில் நிறுத்துவீர்களா என்ன?”

என்றான். “மாட்டேன்” என்றான் தவளன் உரக்க. சு.:.ப்ரன் “கடினம்தான்” என்றான்.

“நான் பெற்றுக்கொண்ட நாணயத்தை திருப்பியளிக்கவேண்டும்” என்றான் அர்ஜுனன். “ஆட்டத்தை நிறுத்தி அந்த நாணயங்களை நீங்கள் எனக்கு திருப்பி அளிக்கையில் நான் கடனை அடைத்துவிடுகிறேன்.” சு.:.ப்ரன் “தேவையில்லை, நாங்கள் அளித்ததைத்தானே பெற்றுக்கொண்டோம்? கடன் நிகராயிற்று” என்றான். தவளன் “ஆம், ஆனால் அந்த நாணயம் வளர்ந்துவிட்டிருக்கிறது. அதில் உமக்கு பங்கில்லை” என்றான்.

“நன்று. நான் பங்கு கோரவில்லை. இவ்வாயிலைக் கடந்துசெல்ல விழைகிறேன். வழி அளிக்கவேண்டும்” என்றான். “அங்கே சென்று நின்று இவை வெறும் ஒளியின் அலைகளே, நான் அறிவேன் என்று மட்டும் சொல்லுங்கள். வாயில் திறக்கும்” என்றான் சு.:.ப்ரன். அவன் விழிகள் தவளனின் கையில் இருந்த நாணயத்தை நோக்கிக்கொண்டிருந்தன. தவளன் விழி நீக்காமல் சு.:.ப்ரனின் கையில் இருந்த தன் நாணயத்தை நோக்கியபடி “ஆம், நம்பி உறுதியுடன் சொன்னால் அலைகளாக மாறி வழிவிட்டாகவேண்டும் இக்கோட்டை” என்றான்.

அர்ஜுனன் “நன்றி, இளையோரே. நல்ல ஆடல் நிகழ்வதாக!” என்றபின் சென்று அக்கோட்டைவாயில் முன் நின்றான். “ஒளியலைகள் மட்டுமே” என்றான். ஒளியலையாக மாறிய அக்கதவினூடாக நடந்து அப்பால் சென்றான்.

# கிராதம் - 27

**[ 8 ]**

பொன்னகரின் தெரு வழியாக அர்ஜுனன் நடந்துசென்றான். அங்கு மாளிகைகள், காவல்மாடங்கள் அனைத்தும் பொன்னென மின்னின. செடிகளும் மரங்களும் பொன்னென்றிருந்தன. முகில்கள் பொன். அவற்றை எதிரொளித்த சுனைநீர்ப்பரப்பும் பொன். அங்கே மிதந்தலைந்த கந்தர்வரும் கின்னரரும் தேவரும் பொன்னுருவர். அளகாபுரியின் காவல் வீரரும் ஏவலாளரும் பொன்னுடல்கொண்டிருந்தனர். பொன்னென்றாகியது தன் விழியோ என்று அவன் ஐயுற்றான்.

நகரின் எவ்விழிகளும் அவன் உள்நுழைந்ததையும் ஊடுருவி கடந்து செல்வதையும் உணர்ந்ததாகத் தெரியவில்லை. ஒவ்வொருவர் விழிகளையும் அவன் உற்று நோக்குகையில் அறியாத உணர்வொன்றால் அவர்கள் இமை சுருங்குவதையும் சிலர் உடல் சிலிர்த்து புது எண்ணம் ஒன்று எழ அருகில் நிற்பவரை திரும்பி நோக்குவதையும் கண்டான். அவர்கள் கொண்ட தடுமாற்றம் அவனை மலர்ந்து நகைக்கவைத்தது.

விந்தையான களியாட்ட உணர்வொன்றெழ தன் முன்னால் சென்றுகொண்டிருந்த கந்தர்வப் பெண்ணொருத்தியின் தோள்களை மெல்ல தொட்டான். திடுக்கிட்டுத் திரும்பி நோக்கி அருகே வந்துகொண்டிருந்த கந்தர்வனை அவள் பொய்ச்சினத்துடன் மெல்ல அடித்தாள். அது அவனுக்கு உளக்கொண்டாட்டத்தை அளித்தது. அவள் பின்குழைவை பற்றினான். அவள் படபடப்புடன் திரும்பி அந்த கந்தர்வனை நோக்க அவன் திகைத்து “என்ன?” என்றான். அவள் முகம் சிவந்து நோக்கை விலக்கிக்கொண்டாள்.

அந்நகரின் தெருக்களினூடாக பொன்வடிவ கந்தர்வர்களின் கால்களுக்கு நடுவே தன் கால்களைப் புகுத்தி நடை இடற வைத்தான். கன்னியரின் கூந்தலைப்பற்றி இழுத்து அவர்களை

சினந்து திரும்ப வைத்தான். சிறு குழந்தைகள் முன் சென்று அவர்களின் விழிகளுக்குள் உற்று நோக்கி அஞ்சி அழவைத்தான். ஓடிவந்து எடுத்து இடுப்பில் வைத்துக்கொண்டு சுற்றும் நோக்கிய அன்னையர் குழந்தைகளை முத்தமிட்டு ஆறுதல் உரைத்து அணைத்து கொண்டு சென்றனர்.

நகர் நடுவே கடற்பாறையில் சிப்பிகள் அடர்ந்திருப்பதுபோல பல்லாயிரம் உப்பரிகைகளுடன் ஓங்கி நின்றிருந்த அரண்மனை அமைந்திருந்த உள்கோட்டையை நோக்கி அவன் சென்றான். பொன்னாலான பெருஞ்சுவர் சூழ்ந்த அவ்வளாகத்தின் முகப்பில் இருந்த ஒற்றை வாயிலொன்றே உள்நுழைவதற்கும் வெளிவருவதற்கும் உரியதாக இருந்தது. இறுக மூடப்பட்டு மின்னும் கரிய இரும்பால் தாழிடப்பட்டிருந்தது.

அந்தத் தாழுக்கு இருபுறமும் பொன்னுடல்கொண்ட இரு காவலர் பொன்னாலான படைக்கலங்களுடன் நின்றிருந்தனர். அர்ஜுனன் அவர்களை நெருங்குகையில் அவன் வருவதை அவர்களும் பார்த்துவிட்டிருந்தனர். ஒருவன் சினத்துடன் தன் கைவேலை நீட்டியபடி முன்னால் வந்து “யார் நீ? மானுடனா? எங்ஙனம் இதற்குள் நுழைந்தாய்?” என்றான். பிறிதொருவன் “மானுடர் இதற்குள் நுழையும் வழியே இல்லை. நீ மானுட வடிவுகொண்டு வந்த அரக்கன்” என்றான்.

அர்ஜுனன் “நான் குருகுலத்து இளவல், பாண்டவன். என் பெயர் பார்த்தன். உங்கள் அரசரைக் கண்டு பொருள்விளையாடி வென்றுசெல்ல வந்தவன்” என்றான். இருவரும் திகைத்து ஒருவரை ஒருவர் நோக்கிக் கொண்டனர். “வென்று செல்வதற்கென்று நீயே முடிவு கட்டிவிட்டாயா?” என்று ஒருவன் மீசையை நீவியபடி சினத்துடன் கேட்டான். “ஆம். வெல்லும்பொருட்டே எச்சமரிலும் இறங்குவது என் வழக்கம்.

இதுவரைக்கும் எக்களத்திலும் தோற்றதில்லை. தோற்றபின் வாழும் எண்ணமுமில்லை” என்றான்.

இன்னொருவன் “இக்கோட்டைக்குள் கந்தர்வர்களோ கின்னர கிம்புருடர்களோ வித்யாதரர்களோ தேவர்களோ இதுவரை நுழைய ஒப்பளிக்கப்பட்டதில்லை. மானுடன் நுழைவதை எண்ணியும் பார்க்க முடியாது” என்றான். “இங்கு ஒரு மானுடன் வந்து நின்று உங்கள் அரசனை சொல்லாடவும் பொருளாடவும் அறைகூவுகிறான் என்று அவனிடம் சென்று சொல்லுங்கள்” என்றான் அர்ஜுனன்.

“எச்செயலையும் நாங்களேதான் செய்ய வேண்டும்” என்றான் காவலன். “நாங்கள் உள்ளே என்ன நிகழ்கிறதென்று அறிவதே இல்லை.” அர்ஜுனன் “எப்படியாயினும் இவ்வரணைக் கடந்து மறுபக்கம் நான் செல்வது உறுதி. சென்றபின் நீங்கள் வரவறிவிக்கவில்லை என்று உங்கள் அரசரிடம் சொல்வேன். அது பிழையென்றால் நீங்கள் தண்டிக்கப்படுவீர்கள்” என்றான்.

இருவரும் குழப்பத்துடன் ஒருவரை ஒருவர் நோக்கிக்கொண்டனர். பின்னர் ஒருவன் “வீரரே! இவ்வாயிலை வெளியிலிருந்து எவரும் திறக்க முடியாது. இத்தாழின் திறவி என ஏதுமில்லை. பலநூறு முறை கந்தர்வர்கள் இதை திறக்க முயன்றிருக்கிறார்கள். அங்ஙனம் முயன்ற அனைவருமே நிழலுருக்களாக மாறி இப்பொன்னெயில் செதுக்குகளின் வளைவுகளில் படிந்து மறைந்துவிட்டார்கள். முடிந்தால் நீர் இதைத் திறந்து உள்ளே செல்லலாம்” என்றான்.

அர்ஜுனன் அந்தக் கதவை அணுகி தன் பொன்னுருவம் அதில் தெளிந்தெழுவதை ஒருகணம் நோக்கி நின்றான். அதிலிருந்த சித்திரச் செதுக்குகளால் அவ்வுரு சிதறிப்பரந்தும் உருவழிந்து

நெளிந்தும் தோன்றியது. மலர்களும் தளிர்களும் கொடிகளுடன் பின்னிப் பிணைந்து உருவாகியிருந்த அதன் நுண்ணிய சிற்பச் செதுக்குகளுக்குள் பல்லாயிரம் கந்தர்வர்களும் கின்னரர்களும் முனிவரும் அரசரும் பெருவணிகரும் தெளிந்தும் மறைந்தும் முகம் காட்டினர். நோக்க நோக்க அவ்விழிகள் அனைத்தும் உயிர் கொண்டன. அறியா பெருங்களிப்பொன்றில் மூழ்கி அவை அமைந்திருந்தன. யோகத்தில் அமர்ந்த முனிவர்களுக்கு நிகர் என்று அவன் எண்ணிக்கொண்டான்.

அர்ஜுனன் திரும்பி காவலனிடம் "பூட்டு என்றால் அதற்கொரு திறவுகோல் இருந்தாகவேண்டும்" என்றான். "நாங்கள் இங்கு இக்கோட்டை உருவான முதற்கணம் முதல் காவல் இருக்கிறோம். எங்களுக்கு காலம் மடிப்புறுவதில்லை. இக்கணம் வரை இதற்கு ஒரு திறவி உண்டென்று அறிந்ததில்லை" என்றான். இன்னொருவன் "உள்நுழைய விரும்பும் ஒவ்வொருவரும் இதை வந்து நோக்கி இதன் திறவுமுறையை கணித்து திறவி செய்து கொண்டு வருகிறார்கள். இப்பூட்டு இதுவரை எதையும் ஏற்றுக்கொண்டதில்லை" என்றான்.

அர்ஜுனன் கல்லிரும்பு உருக்கி செய்யப்பட்ட அப்பெருந்தாழை கைகளால் தொட்டுப்பார்த்தான். அதன் பூட்டு ஒற்றை வாய் திறந்திருக்க எடை கொண்டு இரும்பு வளையத்தில் தொங்கியது. அப்பூட்டின் வளையத்திற்குள் கைவிட்டு காலால் கதவை உதைத்து இழுத்தான். "என்ன செய்கிறீர்?" என்று ஒருவன் கேட்டான். "அதை அகற்ற முயல்கிறீர்களா? அப்பெருந்தாழையா?" என்றான் இன்னொருவன். "மூடரே அதைச் செய்வர். அது பேரெடை கொண்ட இரும்புத்தாழ்."

ஆனால் இரும்புத்தாழ் பொற்கதவிலிருந்து மெல்ல நெகிழ்ந்து ஆணிகள் பிழுதுகொண்டு பெயர்ந்து வந்தது. “வருகிறது” என்றான் ஒருவன் திகைப்புடன். இன்னொருவன் அருகே வந்து “தனியொருவனாகவா? நீர் யார்?” என்றான்.

முழு உடலும் நரம்புகள் புடைக்க தசைநார்கள் விம்மி விசைகொண்டு இறுகி நிற்க பற்களைக் கடித்து மூச்சனைத்தையும் திரட்டி இழுத்து அசைத்து அத்தாழைப் பிழுது கையிலெடுத்த அர்ஜுனன் அதன் எடை தாளாமல் சுழன்று மல்லாந்து கீழே விழுந்தான். எடையின் ஓசையுடன் செம்பொன்நிற மண்ணில் விழுந்து பாதி புதைந்தன தாழும் பூட்டும்.

அர்ஜுனன் கையூன்றி எழுந்து நின்று மூச்சிரைத்தபடி “இரும்புத்தாழை செம்பொன் தாளாது” என்றான். அவர்கள் ஒருவரை ஒருவர் நோக்கிக் கொண்டனர். “தூய பொன் மெழுகு போல் மென்மையானது, வீரர்களே” என்றபடி அக்கதவை ஓங்கி உதைத்துத் திறந்தான். ஓசையின்றி அது விலகித் திறக்க உள்ளே நிறைந்திருந்த ஒளிமிக்க பொன்நிற வெளியில் புதைபவன்போல் எழுந்து நடந்து சென்றான்.

குபேரனின் அரண்மனை வாயிலில் நின்ற பொன்னிழலுருவ வாயிற்காவலர் அவனைக்கண்டு திகைத்து விழிவிரித்தனர். அஞ்சியவர்கள் போல பின்னடைந்து பின் கூச்சலிட்டபடி பதறும் காலடிகளுடன் படைக்கலம் தூக்கி முன்னெட்டுவைத்தனர். சற்றும் அஞ்சாது அவன் அணுகியதும் சிலர் செய்தி சொல்ல உள்ளே ஓடினர். சிலர் அவனை நோக்கி ஓடிவந்து படைக்கலங்களைத் தூக்கி தாக்க முயன்றனர். “மூடர்களே, இத்தனை தடைகளைக் கடந்து வந்தவனால்

உங்களையா வெல்ல முடியாது?” என்றான் அர்ஜுனன் கடுஞ்சினத்தோற்றத்துடன்.

உளம் தளர்ந்து அவர்களில் பலர் நின்றுவிட்டனர். படைக்கலங்கள் தாழ்ந்து நிலம் முட்டி ஒலியெழுப்பின. ஊக்கத்தின்பொருட்டு அவர்கள் ஒருவரை ஒருவர் நோக்க அவர்களில் சற்றேனும் துணிவுடையவர் எனத் தோன்றியவர்களை நோக்கி “மானுடனிடம் தோற்றபின் தெய்வகணங்களுக்கு மீட்பே இல்லை என்றறிக! விலகினால் தோல்வி தவிர்க்கப்படும்...” என்றான். அவர்கள் விழி தாழ்த்தி முகம் திருப்பிக்கொண்டனர்.

மேலும் எதிரே வந்தவர்களிடம் அவன் உரக்க “என்னை உள்ளே விடுபவர்களுக்கு அவர்கள் எண்ணியிராத பரிசுகள் அளிக்கப்படும்” என்றான். “அப்பரிசுகளை அவர்களுக்கு பிறர் அறியாமல் அளிக்கவும் நான் சித்தமே” என்று மெல்லிய குரலில் சொன்னான். விழிகள் நிலைகொள்ளாமல் உருள ஒருவரை ஒருவர் நோக்கியபடி அவர்கள் படைக்கலம் தாழ்த்தி தயங்கினர். “உங்கள் விழைவுகளுக்கேற்ப பரிசளிப்பேன்... இங்குள்ள பெருமதிப்புப் பொருட்கள். இங்கில்லாதவை...” என்றபடி அர்ஜுனன் அவர்களை நெருங்கி அந்தப் படைக்கலங்களை கைகளால் விலக்கி அப்பால் சென்றான்.

இடைநாழியில் அவன் காலடி வைத்ததும் அந்த மாளிகை எங்கும் பலநூறு எச்சரிக்கை மணிகள் ஒலிக்கலாயின. பொன்னாலானவை என்பதனால் அவை ஆழ்ந்த ஓசை எழுப்பவில்லை. அரண்மனையின் அறைகள், வழிகள், படிக்கட்டுகள் எங்கும் பொற்கலங்களும் மணிநிறைந்த பெட்டகங்களும் பிற அரும்பொருட்களும் குவிக்கப்பட்டிருந்தன. அவற்றினூடாக ஒற்றையடி வைத்து உடல்நெளித்துச்

செல்லவே இடமிருந்தது. அவனை அஞ்சிய ஏவல்கணங்கள் அப்பால் நின்று கூச்சலிட்டன. துணிவுகொண்டு அணுக முயன்ற காவல்கணங்களை நோக்கி அவன் பொற்கலங்களை காலால் உதைத்து உருட்டிவிட்டான். அவை அச்செல்வத்தை மிதிப்பதற்கு அஞ்சி துள்ளிக்குதித்து விலகி ஓடின.

கதவுகளைத் திறந்து திறந்து சென்ற அர்ஜுனன் அரசவையில் கொலுவிருந்து செல்வப்பேருலகின் செய்திகளை கேட்டுக்கொண்டிருந்த குபேரனின் முன் சென்று நின்றான். பொற்தூண்கள் சூழ்ந்து நின்ற நீள்வட்ட வடிவ அரசவையில் ஏழுலகத்திலும் உள்ள செல்வங்களை ஆளும் தெய்வங்களும் தேவர்களும் அமர்ந்திருந்தனர். குபேரனின் இருபக்கத்திலும் அவன் தேவியரான ரீதியும் நிதியும் அமர்ந்திருக்க அவனுக்கு மேல் இளஞ்சூரியன் என அரசக்குடை எழுந்திருந்தது.

அரியணையின் இருபக்கங்களிலும் பொன்னிற சிம்மங்கள் வாய்திறந்து விழிஉருட்டி நின்றிருந்தன. அவன் ஊர்தியான வைரக்கொம்புகள் கொண்ட வெள்ளாடு வலப்பக்கம் நின்றிருந்தது. அர்ஜுனனின் வருகையை முதலில் உணர்ந்த வெள்ளாடு வெருண்டு செவிதூக்கி ஓசையிட்டது. சிம்மங்கள் திரும்பி அறைதலோசை எழுப்ப அவை திரும்பி நோக்கியது.

அர்ஜுனன் அத்துமீறலை அங்கே காவலர் அறிவித்துக்கொண்டிருந்தனர். ஆனால் செல்வத்தை அளாவிக்கொண்டிருந்த அவர்களின் நெஞ்சங்கள் அச்சொற்களை பொருள்கொள்ளவில்லை. குபேரனின் மைந்தர்களான நளகூபரனும் மணிக்கிரீவனும் அவனைக் கண்டபின்னரே காவலர் சொன்னதென்ன என்று உணர்ந்தனர். “பிடியுங்கள் அவனை... அவனை தடுத்து நிறுத்துங்கள்!” என்று

கூவியபடி அவர்கள் வாள்களை உருவி கையில் எடுத்தபடி பின்னால் ஓடி தூண்களுக்குப்பின் ஒளிந்துகொண்டனர்.

அவையில் அமர்ந்திருந்தவர்கள் எழுந்து ஒருவரோடொருவர் முட்டிமோதி கூச்சலிட்டபடி ததும்பினர். சிலர் கால்தடுக்கி கீழே விழுந்தனர். தூண்களுக்குப் பின்னால் ஒளிந்துகொண்டு “பிடியுங்கள்... விடாதீர்கள்!” எனக் கூவினர். பலர் கைகளில் செல்வக்கிழிகள் இருந்தன. அவற்றை அவர்கள் அள்ளி எடுத்து உடலோடு அணைத்தபடி ஓடியமையால் கால்பின்னி பிறர்மேல் முட்டி நிலையழிந்தனர்.

அந்தக் குழப்பமே அர்ஜுனனுக்கு காப்பாக அமைந்தது. அவன் உரத்த குரலில் “எவரும் அஞ்சவேண்டாம்... எவரையும் நான் ஒன்றும் செய்யப்போவதில்லை” என்றான். அது அவர்களை மேலும் அச்சுறுத்தியது. குபேரனின் முடிக்குறியை தன் தலையணியில் சூடியிருந்த மணிக்கிரீவன் “நீ எப்படி உள்ளே வந்தாய்? எங்கே காவலர்கள்?” என்றான். “இளவரசே, பொன்னுக்குப் பணியாற்றுபவர்கள் எங்கும் போர்புரிவதில்லை” என்றான் அர்ஜுனன் அருகே வந்தபடி. “அணுகாதே... விலகு! கொன்றுவிடுவேன்” என்று நளகூபரன் அச்சத்தால் உடைந்த குரலில் கூவினான்.

“அவர்கள் நாள்தோறும் செல்வத்தை கண்டுகொண்டிருக்கிறார்கள். அதுவன்றி பிற ஏதும் அவர்களுக்கு பொருட்டல்ல. சிலர் அஞ்சினர். எஞ்சியவர்களுக்கு கையூட்டளித்தேன்” என்றான் அர்ஜுனன். திகைத்து முகம் காட்டி “கையூட்டா? எங்கள் காவலர்களா?” என்றான் நளகூபரன். “கருவூலக்காவலர் கையூட்டு பெறாத இடம் என ஒன்று இருக்க வாய்ப்பே இல்லை” என்றபடி அர்ஜுனன் அவை நடுவே வந்து நின்றான். “மூத்தவரே,

அவரிடம் படைக்கலங்கள் இல்லை” என மணிக்கிரீவன் கூவ “வாயை மூடு, மூடா!” என்று நளகூபரன் கடிந்தான்.

அர்ஜுனன் “மேலும் உங்கள் வீரர் வைத்திருப்பவை அனைத்தும் பொன்னாலான படைக்கலங்கள். பொன் உலோகங்களில் தளிர் என்பார்கள். அது எவரையும் கொல்லாது” என்றான். மணிக்கிரீவன் “பொன்னே முதன்மையானது” என்றான். “பிற ஏதேனும் ஒன்றுக்கு நிகர்கொள்கையில் மட்டுமே அதற்கு மதிப்பு. தான்மட்டுமே இருக்கையில் பொன் பொருளற்ற மஞ்சள் ஒளி...” என்றான் அர்ஜுனன். “பொன்மட்டுமே உள்ள இப்பெருநகர் ஒரு நுரைக்குமிழி அளவுக்கே நொய்மையானது, இளவரசே!”

அவன் அவைநின்று நிமிர்ந்து நோக்கியபோது குபேரனின் அரியணை ஒழிந்து கிடந்தது. அவன் இரு தேவியரும் எழுந்து நின்றிருந்தனர். அரியணைக்குப் பின்னாலிருந்து குபேரன் மெல்ல எழுந்து நோக்குவதை அர்ஜுனன் கண்டான். அவன் நோக்கியதும் குபேரனின் மணிமுடி மறைந்தது. “அஞ்சவேண்டாம் என்று தங்கள் தந்தையிடம் சொல்லுங்கள், இளவரசே” என்றான் அர்ஜுனன்.

அருகே முதிரா இளைஞனாகிய இளவரசன் மாயூரகன் கவிழ்ந்த பீடங்கள் நடுவே ஒன்றில் அமர்ந்து தேம்பி அழுதுகொண்டிருந்தான். அர்ஜுனன் அவனை நோக்கியதும் அவன் அஞ்சி கால்களை பீடம்மேல் எடுத்து வைத்துக்கொண்டு உடலைக் குறுக்கினான். “அஞ்சவேண்டாம், இளவரசே” என்று அர்ஜுனன் சொன்னதும் அவன் மேலும் கதறினான். மணிக்கிரீவன் “அழாதே, மூடா!” என்று அதட்டியதும் அலறியபடி எழுந்து தாயை நோக்கி ஓடினான்.

அரியணை அருகே உள்ளிருந்து வந்து நின்ற இளவரசி மீனாட்சி “நீங்கள் இளைய பாண்டவர் பார்த்தர் அல்லவா?” என்றாள். அர்ஜுனன் “ஆம், நீங்கள் குபேரன் மகள் என நினைக்கிறேன்” என்றபடி அவளை நோக்கி சென்றான். “இளைய பாண்டவரை வணங்குகிறேன். நீங்கள் எப்படி குபேரபுரிக்குள் நுழைந்தீர்கள் என்று நான் உசாவப்போவதில்லை. நீங்கள் கடந்த எல்லைகளை நான் நன்கறிவேன்” என்றாள். “எப்படி?” என்றான் அர்ஜுனன். “எல்லா பெண்களையும்போல நானும் அஸ்தினபுரியின் விஜயனின் புகழ் கேட்டே வளர்ந்தேன்” என அவள் புன்னகைத்தாள்.

“அவனுக்கு என்ன வேண்டும்? கேள்! எவ்வளவு பொன் வேண்டுமென்று கேள்” என்று அரியணைக்கு அப்பால் அமர்ந்திருந்த குபேரன் சொன்னான். அர்ஜுனன் “உங்கள் செல்வத்தில் ஒருதுளிகூட எனக்குத் தேவையில்லை, வடதிசைக்காவலரே. நான் உங்களை வெற்றிகொள்ளவே வந்தேன்” என்றான். “வெற்றி என்றால்? என்னை சிறைப்பிடிக்கப்போகிறாயா? மைந்தர்களே...” என்று குபேரன் கூவினான்.

“இல்லை, ஆடலையும் களத்தையும் நீங்களே முடிவு செய்யலாம். உங்களை வென்று உங்கள் அருள்கொண்டு மீள விரும்புகிறேன்.” குபேரன் எழுந்து “ஏன் என்னை வெல்லவேண்டும் நீ? திறன்கொண்டு எழும் ஒவ்வொருவரும் என்னை வெல்லக் கிளம்புவது ஏன்?” என்றான். அழுகை கலந்த குரலில் “அசுரரும் தேவருமாக என்னை வென்றவர்கள் ஒவ்வொருவரையும் நினைவுகூர்கிறேன். ஏன் எனக்கு இந்தத் துயர்?” என்றான். அர்ஜுனன் “பொருட்செல்வத்தைக் கடக்காமல் அருட்செல்வத்தை அடையமுடியாது அல்லவா?” என்றான்.

ஆடைகளை நீவி, முடியை சீரமைத்தபடி குபேரன் எழுந்து வந்து அரியணையில் அமர்ந்து “நீ என்னை சிறைப்பிடித்து இழுத்துச்செல்ல எண்ணவில்லை அல்லவா? முன்பு இரணியன் என்னை அவன் அரண்மனையில் கட்டிவைத்திருந்தான்” என்றான். “இல்லை, நான் உங்கள் தோழராகிய இந்திரனை முதற்றாதையாகக் கொண்டவன்” என்றான் அர்ஜுனன்.

“பாண்டவரே, தந்தை அறிந்த ஆடல் என்பது ஒன்றே. பொன்னும் மணியும் வைத்து நாற்களமாடுதல்… அதில் நீங்கள் அமரலாம். அவையொருக்க ஆணையிடுகிறேன்” என்றாள் மீனாட்சி. “நன்று… அவர் அக்களத்தில் அவரது அனைத்துச் செல்வங்களையும் வைத்தாடவேண்டும்” என்று அர்ஜுனன் சொன்னான். மீனாட்சி “ஆம், அதுவே நெறி” என்றாள்.

மணிக்கிரீவன் “ஆடலுக்கு வந்தமையால் நீ திரும்பிச்செல்கிறாய். படைகொண்டு வந்திருந்தால் எங்கள் படைக்கலங்களை சந்தித்திருப்பாய்” என்றான். நளகூபரன் “அசுரர்களுக்கு அஞ்சி அளகாபுரியை அமைத்தார் எந்தை. நாங்கள் இன்று அதை நூறுமடங்கு ஆற்றல்கொண்டதாக ஆக்கிவிட்டோம்” என்றான். கண்ணீர் வழிந்து ஈரமான முகத்துடன் மாயூரகன் அன்னையின் ஆடைக்கு அப்பாலிருந்து எழுந்து வந்து அர்ஜுனனை நோக்கி புன்னகை செய்தான்.

**[ 9 ]**

குபேரனின் அணிமண்டபத்தில் அவன் அவைமுதல்வர் சூழ்ந்திருக்க நடுவே அமைந்திருந்தது ஆட்டமேடை. அதன் வலப்பக்கம் குபேரனின் மைந்தர்களும் இடப்பக்கம் அவன் தேவியரும் மகளும் அமர்ந்திருந்தனர். அர்ஜுனன் அவைக்குள்

நுழைந்ததும் அனைவரும் எழுந்து முகமன் உரைத்தனர். அவன் ஆட்டகளத்தில் இடப்பட்ட பொற்பீடத்தில் அமர்ந்தான்.

முரசம் குபேரனின் வருகையை அறிவித்தது. கொம்புகளும் குழல்களும் வாழ்த்தொலிகளும் சூழ கந்தர்வப்பெண்கள் மங்கலத்தாலங்களுடன் முன்னால் வர பொற்குடைக்கீழ் குபேரன் நடந்துவந்தான். அரசணிக்கோலத்தில் பொன்வண்டுபோல அவன் ஒளிவிட்டான். வாழ்த்தொலிகளைக் கேட்டு முதன்முறையாக அவற்றை செவியுறுபவன்போல மகிழ்ந்து பற்கள் தெரிய சிரித்து தலையாட்டினான். வணங்கியவர்களுக்கு கைதூக்கி வாழ்த்தளித்தான்.

குபேரன் வந்து அரியணை அமர்ந்ததும் அவை அவனுக்கு வாழ்த்துரைத்து அமர்ந்தது. நளகூபரன் எழுந்து அங்கு நிகழப்போகும் ஆடலை அறிவித்தான். நிகர்வைக்கும் ஆட்டம் என்ற சொல் செவியில் விழுந்ததும் அர்ஜுனன் மீனாட்சியின் விழிகளை நோக்க அவள் சிரிப்புடன் உதடுகளை மெல்ல அசைத்து “அதேதான்” என உச்சரித்தாள். மணிக்கிரீவன் குபேரனை அவனே வெல்லக்கூடிய ஆட்டத்திற்கு எழுந்தருளும்படி அழைத்தான்.

அவைநிறைத்து அமர்ந்திருந்த அவையினரை மணிக்கிரீவன் அர்ஜுனனுக்கு அறிமுகம் செய்தான். புதுத்தளிர்களின் தேவனாகிய கோமளன், புதுக்குழவிகளின் தேவனாகிய தருணன், மண்ணில் புதைந்துள்ள பொன்னின் அரசனாகிய கனகன், ஒளிவிடும் நகைகளின் தெய்வமாகிய சுவர்ணன், கருவூலங்களை ஆளும் தேவனாகிய காஞ்சனன், செம்முகில்களின் தேவனாகிய ஹிரண்யன், முலைப்பால்களை ஆளும் சுரபன், ஒன்பது மணிகளின் அரசனாகிய நவமுகன்,

விழிமணிகளை ஆளும் நேத்ரன் என ஆயிரத்தெட்டு தேவர்கள் அங்கிருந்தனர்.

குபேரனின் அருகே இருபக்கமும் அவனுடைய அழியா பெருஞ்செல்வத்தின் தெய்வங்களான பத்மை, மகாபத்மை, மகரை, கச்சபை, குமுதை, நந்தை, நீலை, பத்மினி, சங்கை ஆகியோர் வந்து அமர்ந்தனர். நளகூபரன் கைகாட்ட ஏவலர் இருவர் மூன்று களங்கள் கொண்ட ஆட்டப்பலகையை கொண்டுவந்து வைத்தனர். ஆடுகளம் நடுவே முள்மட்டுமே கொண்ட துலா நிறுவப்பட்டது.

முதற்களம் குபேரனுக்கும் அதற்கு எதிர்க்களம் அர்ஜுனனுக்கும் அளிக்கப்பட்டது. மூன்றாவது களம் ஊழுக்குரியது. “வீரரே, செல்வத்தைக்கொண்டு ஆடப்படும் எதிலும் கண்ணுக்குத் தெரியாத ஆட்டப்பங்காளியாக அமைந்துள்ளது ஊழ். மூவர் ஆடும் ஆடலில் எவர் வெல்லவேண்டும் என்பதை முடிவுசெய்வது ஊழே. இருவரும் ஒருவரை ஒருவர் வெல்வதற்காக ஆடுக! வெல்லப்படவேண்டியது ஊழே” என்றான் நளகூபரன். மணிக்கிரீவன் ஆட்டநெறிகளை முறைப்படி அறிவித்தான்.

அர்ஜுனன் “நிகர்வைக்கும் இவ்வாட்டத்தில் வைக்கும்பொருட்டு நான் ஒன்றையும் கொண்டுவரவில்லை. குபேரபுரிக்கு செல்வத்துடன் வருவது அறிவின்மை. குபேரனே எனக்கு ஒரு செல்வத்தை அருளட்டும். அதைக்கொண்டு ஆடுகிறேன்” என்றான். குனிந்து ஆட்டக்களத்தை நோக்கிக்கொண்டிருந்த குபேரன் அதைக் கேட்டு முகம் மலர்ந்து “ஆம், அளிக்கிறேன்” என்றான். “எனக்கு உங்கள் வலக்கை சுட்டுவிரல் கணையாழியை அளியுங்கள்” என்றான் அர்ஜுனன். “அவ்வாறே”

என்று சொல்லி அக்கணையாழியை கழற்றி குபேரன் அவனுக்கு அளித்தான்.

அதை கண்ணில் ஒற்றி முதல் ஆட்டச்செயலாக களத்தில் வைத்தான் அர்ஜுனன். “நிகர்வையுங்கள், செல்வத்துக்கரசே” என்றான். குபேரன் அந்தக் கணையாழியை நோக்கி உருண்ட விழிகள் துருத்தி நிற்க சிலகணங்கள் எண்ணத்திலாடினான். குழம்பி தன் தேவியை நோக்கிவிட்டு தன் கைவிரல்களில் இருந்த கணையாழிகளை நோக்கினான். இடக்கை ஆழிவிரல் கணையாழியை தொட்டு அதைத் தவிர்த்து ஒவ்வொரு விரலாகக் கடந்து இடக்கை சிறுவிரல் கணையாழியை உருவி களத்தில் வைத்தான்.

துலாமுள் அர்ஜுனனை நோக்கி சாய்ந்தது. குபேரன் திகைத்து வாய் திறந்து ரீதியை பார்த்தான். அவள் புன்னகையுடன் நோக்கி நின்றாள். அவன் நிதியைப் பார்க்க அவள் “உங்களிடம் வைத்தாட முடிவிலாச் செல்வம் உள்ளது, அரசே. அஞ்சற்க!” என்றாள். “அந்தக் கணையாழியை நான் இழந்துவிட்டேனா?” என்றான் குபேரன் துயரத்துடன். “ஆம், ஆனால் நீங்கள் வென்றால் அதை மீட்டெடுக்கலாம்” என்றான் நளகூபரன். “ஆம், இதோ மீட்டெடுக்கிறேன்” என்று சினத்துடன் சொல்லி அர்ஜுனனிடம் “ஆடுக!” என கைகாட்டினான்.

அர்ஜுனன் இரு கணையாழிகளையும் களத்தில் வைத்தான். இரண்டையும் நோக்கியபின் அர்ஜுனனை வியப்புடன் ஏறிட்ட குபேரன் தன் கைவிரல்களை தொட்டுத்தொட்டுக் குழம்பி இடக்கை ஆழிவிரலில் இருந்தும் வலக்கை சிறுவிரலில் இருந்தும் கணையாழிகளை கழற்றி வைத்தான். துலாமுள் அர்ஜுனனை நோக்கி சாய்ந்தது.

“இவற்றையும் இழந்துவிட்டேனா?” என குபேரன் பெருந்துயருடன் கேட்டான். “ஆடி வெல்க, அரசே!” என்றாள் நிதி. “உங்கள் உள்ளத்தியல்பால் எடுக்கையில் குறைந்துவிடுகிறது, அரசே. மிகையாக எடுத்து வையுங்கள்” என்றாள் ரீதி. குபேரன் “நான் கணக்கிட்டே எடுக்கிறேன். நிகருக்கு மேலாக சென்றுவிடலாகாதென்று எச்சரிக்கை கொள்கிறேன்” என்றான். “உங்கள் கைவிரல்கள் குறுகியவை” என்றாள் ரீதி. “அதை நான் அறிவேன். நீ வாயை மூடு!” என்று குபேரன் சீறினான்.

அர்ஜுனன் தான் வென்ற அனைத்தையும் மீண்டும் மீண்டும் வைத்தாடினான். குபேரன் ஒவ்வொரு முறையும் அணுவிடைகுறைவாகவே நிகர்வைத்தான். “இவ்வாட்டத்தில் ஏதோ பிழை உள்ளது. அனைத்தும் எப்படி நிகர்பிறழக்கூடும்?” என்று குபேரன் கூவினான். “அரசே, ஆட்டமென்பது பொருள்களை முன்வைப்பதல்ல. நீங்கள் இருவருமே உங்களைத்தான் முன்வைக்கிறீர்கள். அவர் எல்லைகளை கடப்பவர். நீங்கள் புறத்தை அஞ்சி இந்நகரின் எல்லைகளுக்குள் அமர்ந்திருந்தவர்” என்றாள் மீனாட்சி.

“நான் அஞ்சுகிறேனா? நானா?” என்றான் குபேரன். “நீங்கள் அஞ்சுவது தோல்வியை அல்ல, பொருளிழப்பை. பொருள்பற்று கொண்டிருக்கும்வரை அவ்வச்சத்திலிருந்து மீளமுடியாது” என்றாள் மீனாட்சி. குபேரன் “இதோ நான் என் பெருநிதியை நிகர்க்களத்தில் வைக்கிறேன்... எனக்கு அச்சமில்லை. இவன் அதற்கு நிகரென எதையேனும் வைக்கட்டும்” என்றபடி சங்கினியை களத்தில் வைத்தான்.

அர்ஜுனன் சங்கினியை நோக்கி ஒருகணம் எண்ணத்திலாழ்ந்தபின் முதற்கணையாழியை எடுத்து களத்தில் வைத்தான். துலாமுள் அவன் பக்கம் சாய்ந்ததும் “இது

எவ்வாறு? இது எம்முறை?” என குபேரன் கூவியபடி எழுந்துவிட்டான். “அரசே, அவர் வைத்தது கணையாழி. அதை ஓர் ஆண்மகன் அளித்ததும் இவள் நெஞ்சு அவனை ஏற்றுக்கொண்டுவிட்டது. அக்கணையாழி இவளுக்கு நிகர்மிகை” என்றாள் மீனாட்சி.

“இது ஊழின் ஆடல், தந்தையே. நீங்கள் ஆடலை முடித்துக்கொள்ளலாம்” என்றான் மணிக்கிரீவன். “முடித்துக்கொண்டால் நான் இழந்தவை இவனுக்குரியன ஆகிவிடும். மாட்டேன், என் பொருள் எதையும் இழக்கமாட்டேன், அனைத்தையும் வென்றமைவேன்” என்றபடி அவன் பிற செல்விகளை களத்தில் வைத்தான். அனைவரையும் அர்ஜுனன் வென்றெடுத்தான். “அவர்கள் ஒன்றின் ஒன்பது முகங்கள், தந்தையே. ஒன்று சென்றால் பிறிதும் தொடரும்” என்றாள் மீனாட்சி. “இது பொய்மை. இது ஏமாற்று” என்று குபேரன் கூவினான். கால்களை உதைத்து “அன்னையிடம் சொல்வேன்... அன்னையிடம் சொல்லிவிடுவேன்” என அழுதான்.

“போதும் தந்தையே, உங்களால் இவ்வாட்டத்தை வெல்லமுடியாது” என்றான் நளகூபரன். மீனாட்சி “ஆம். உங்களிடமிருக்கும் செல்வத்தைவிட இல்லாத செல்வம் பெரியதென்று எண்ணுகிறது உங்கள் உள்ளம்... அது செல்வர்களின் இயல்பு” என்றாள். “நான் ஆடுவேன்... நான் ஆடுவேன்...” என்று குபேரன் கதறி அழுதான். “இவன் என் செல்வங்களை கொண்டுசெல்ல விடமாட்டேன். நான் அன்னையிடம் சொல்வேன். எந்தையிடம் போய் சொல்வேன்.”

“சரி, ஆடுக!” என அர்ஜுனன் சொன்னான். ஒவ்வொன்றாக இழந்துகொண்டிருந்தான் குபேரன். இழக்க இழக்க

வெறிகொண்டு மேலும் மேலுமென செல்வத்தை களம்வைத்தான். செல்வத்தை வைக்க வைக்க உளம்சுருங்கினான். அவன் இழந்தவை பெரிதென்றாயின. அவ்வெண்ணத்தால் அவன் மீண்டும் மீண்டும் தோற்றுக்கொண்டிருந்தான். முழுமையாகவே தோற்றபோது அவன் கனவில் என விழி வெறிக்க அமர்ந்திருந்தான்.

“அரசே, மேலும் ஆட பொருள் இருக்கிறதா?” என்றான் அர்ஜுனன். “நான் ஆடுவேன்... நான் ஆடுவேன்” என்றான் குபேரன் பித்தனைப்போல தலையாட்டியபடி. “இனி ஆடுவதற்கு உங்களிடம் பொருள் இல்லை, தந்தையே” என்றாள் மீனாட்சி. குபேரன் அவர்களை மாறிமாறி பொருளில்லாது நோக்கினான். பின்னர் வீரிட்டழுதபடி அங்கேயே படுத்து உடலைச் சுருட்டிக்கொண்டு அழத்தொடங்கினான்.

“அரசே, தங்கள் செல்வம் எனக்குத் தேவையில்லை. அனைத்தையும் திரும்ப அளித்துவிடுகிறேன்” என்றான் அர்ஜுனன். திகைத்து எழுந்தமர்ந்து “அனைத்துமா? திரும்பவும் எனக்கா?” என்றான். “ஆம், திரும்ப உங்களுக்கே. நீங்கள் அரிதென எண்ணும் ஓர் அறிதலை எனக்கு அளியுங்கள். அதுபோதும்” என்றான் அர்ஜுனன். குபேரன் எழுந்தமர்ந்து “வெறும் அறிதலா?” என்றான். “அனைத்து அறிதல்களும் படைக்கலன்களே” என்றான் அர்ஜுனன்.

“வீரனே, நானறிந்த பிறர் அறியாத அறிதல் ஒன்றே. செல்வத்தை முழுக்க இழந்துவிட்டதாக கனவுகண்டு விழித்தெழுந்து செல்வம் சூழ்ந்திருப்பதை உணர்ந்தபின் ஆறுதலுடன் மீண்டும் விழிமயங்குவது போல இனிய துயில் பிறிதில்லை. அச்செல்வத்தை முழுக்க கள்வர் கொள்ளையடித்துச் சென்றாலும் அத்துயில் கலைவதில்லை”

என்று குபேரன் சொன்னான். “இப்புடவியை ஆளும் செல்வத்தின் தெய்வங்கள் அனைத்தும் அத்துயிலால் வெல்லப்படத்தக்கவை. மண்ணிலுள்ள அரசர்கள் அனைவரும் அத்துயிலில் முற்றாழ்பவர்கள்.”

“அத்துயிலுக்குரிய தெய்வத்தை நான் என் இடக்கால் சிறுவிரலில் இரும்பாலான கணையாழியாக அணிந்திருக்கிறேன். அதை பிறர் காணாதபடி பொன்னணிகளால் மூடியிருக்கிறேன். பொருள்காத்து அமர்ந்திருக்கும் இவ்வாழ்வில் எனக்கு துயிலின் இன்பம் இல்லை. என்றேனும் அதை உணர்ந்து துயர்கொண்டால் அவளை எழுப்பி என் தலைமேல் சூடுவேன்” என்று குபேரன் தன் இடக்கால் சிறுவிரலை நீட்டி அதிலிருந்த இரும்பு ஆழியை எடுத்தான்.

அது ஒரு கருமுகில்நிறப் பெண்ணாக மாறி அவன் முன் நின்றது. அவளுக்கு முகத்தில் விழிகளோ வாயோ மூக்கோ இருக்கவில்லை. கரிய குழல் கால்வரை விழுந்து அலையடித்தது. நீண்ட கைகள் மெல்லிய விரல்களை கொண்டிருந்தன. அவளிடமிருந்து குளிரலை வீசி அவன் உடலை சிலிர்க்கவைத்தது.

“மிருத்யூ தேவிக்கும், நித்ரா தேவிக்கும், வியாதி தேவிக்கும் இளையவள் இவள். ஜேஷ்டை இவள் தோழி. சிதைச்சாம்பலில் விழுந்த பிரம்மனின் நிழலில் இருந்து உருவானவள். இவளை அந்தர்த்தானை என்று அழைக்கிறார்கள். இனியவள். விழியிமைகளை மெல்லத்தொட்டு ஆழ்துயில் அளிப்பவள்” என்றான் குபேரன். “என் அறிதலின் வடிவாக இவளை உனக்களிக்கிறேன். இவள் உன் துணையென்றாகுக!”

அர்ஜுனன் தலைவணங்கி குபேரன் அளித்த அந்த இரும்பாழியை வாங்கிக்கொண்டான். “உன் அம்புகளில் ஒன்றில் இவளை அணிந்துகொள்க! இவள் உன் படைக்கலமும் ஆகுக!” என்றான் குபேரன். அர்ஜுனன் குபேரனின் கால்தொட்டு சென்னிசூடி வாழ்த்துபெற்றான்.

# கிராதம் - 28

**பகுதி நான்கு : மகாவாருணம்**

**[ 1 ]**

“அதன்பின்னரும் பத்து படலங்கள் உள்ளன காவியத்தில்” என்றான் சண்டன். “உண்மையில் இதுவரையிலான படலங்களை சற்று வயதுமுதிர்ந்தவர்கள்தான் கூர்ந்து கேட்பார்கள். இதன்பின் வருபவை அகத்துறை சார்ந்தவை. அர்ஜுனன் ஒன்பது செல்வியரை மணந்து காதலாடியவை நவநிதி சர்க்கங்கள் என ஒற்றை பாதமாக அமைந்துள்ளன. அர்ஜுனனுக்கும் மீனாட்சிக்குமான காதல் ஏழு உட்பகுதிகள் கொண்ட ஒரு படலம். அவை உங்களைப்போன்ற சிற்றிளையோர் கேட்கத்தக்கவை அல்ல.”

“குபேரபுரியில் அர்ஜுனன் நூற்றெட்டு ஆண்டுகாலம் மகளிருடன் மகிழ்ந்து வாழ்ந்தான்” என்றான் சண்டன். “காமம் முடிந்ததும் காமம் எழுந்தமையால் அவனால் சித்தம் மீளவே முடியவில்லை. ஒருநாள் பத்து துணைவியருடன் அளகாபுரியிலுள்ள பிரமோதம் என்னும் வேனில்காட்டில் மலர்மரங்களுக்கு நடுவே விளையாடிக்கொண்டிருந்தபோது அங்கிருந்த சிறிய நீர்க்குட்டை ஒன்றில் பொறத்துகள்போல ஓர் எறும்பு நீந்திக்கொண்டிருப்பதை கண்டான். குனிந்து அந்த எறும்பை சுட்டுவிரலால் தள்ளி கரையேற்ற முயல்கையில் அவன் காதில் அவ்வெறும்பு வேண்டிக்கொண்ட ஓசை விழுந்தது.”

இருகைகளையும் கூப்பி எறும்பு கூவியது “பேராழிகளின் தலைவனாகிய வருணனே, இக்கடலை நான் கடக்க எனக்கு உதவுக!” திகைப்புடன் அவன் சுட்டுவிரலால் ஒற்றி அந்த எறும்பை மேலெடுத்தான். அதன் விழிகளை தன் விழிகளால் தொட்டு “நீ சென்றுகொண்டிருந்தது கடலென எவர் சொன்னது?” என்றான். “என் மூதாதையரின் அறிதல், என் விழிகளின் காட்சி இரண்டையும் என் நுண்ணறிவின் வழியாக இணைத்துக்கொண்டேன்” என்று எறும்பு சொன்னது. “அலையடிப்பது, திசைகள் அற்ற எல்லைகொண்டது, சென்றடையமுடியாத ஆழம் கொண்டது.”

அர்ஜுனன் அவ்வெறும்பை கீழே விட்டுவிட்டு எண்ணத்திலாழ்ந்தான். அவனருகே சிரித்தபடி ஓடிவந்து அமர்ந்து மூச்சிரைத்த மீனாட்சி அவன் முகம் மாறிவிட்டிருப்பதைக் கண்டு “என்ன?” என்றாள். “நான் செல்லவேண்டிய திசை ஒன்று எஞ்சியுள்ளது” என்றான். அவள் விழிகள் மாறுபட்டன. “செல்கிறீர்களா?” என்றாள். “நான்

சென்றாகவேண்டியவன் என்று நீ அறிவாய்” என்றான். “ஆம், ஆயினும் உள்ளம் மாயைகளையே விழைகிறது” என்றாள்.

அவளைத் துரத்தி ஓடிவந்த ஒன்பது கன்னியரும் கூட்டுச்சிரிப்போசையுடன் அருகே அமர்ந்தனர். பதுமை “நெடுந்தூரம் ஓடிமீண்டோம் இன்று” என்றாள். சங்கினி “ஆம், மறு எல்லையில் அந்தப் பொன்முகில்வரை” என்றாள். அவர்கள் இருவரும் இருந்த நிலையைக் கண்டு பிறர் சிரிப்பழிந்தனர். நந்தை “என்ன ஆயிற்று?” என்றாள். “கிளம்புகிறார்” என்றாள் மீனாட்சி. அனைவர் முகங்களும் வாட விழிகள் நீரொளி கொண்டன.

“நான் வருணனை வென்றாகவேண்டும்” என்றான் அர்ஜுனன். “இங்கிருந்து நான் செல்லவேண்டிய திசை அதுவே.” அவர்கள் விழிதாழ்த்தி துயரெடை கொண்டனர். “கடந்துசென்றுகொண்டே இருப்பவன் நான், என் இயல்பை நீங்கள் முன்னரே அறிந்திருப்பீர்கள். என் மேல் சினம்கொள்ளவேண்டாம்” என்றான் அர்ஜுனன். “ஆண்களுக்கு கடந்துசெல்லலையும் பெண்களுக்கு நிலைகொள்ளலையும் வகுத்த நெறியை அன்றி எதையும் குறைசொல்ல விழையவில்லை” என்றாள் மீனாட்சி.

“நாளை காலை நான் இங்கிருந்து மீள்கிறேன்” என்றான் அர்ஜுனன். “வீரரே, இங்கு நீங்கள் வந்து மானுட ஆண்டு நூற்றெட்டு கடந்துவிட்டது. ஆனால் உங்களை நீங்கள் இவ்வுலகுக்குள் புகுந்தகணத்தின் மறுகணத்தில் கொண்டு சென்று அமர்த்துகிறேன்” என்று மீனாட்சி சொன்னாள். “இங்கிருந்து நீங்கள் விழையும் செல்வம் அனைத்தையும் கொண்டு செல்லலாம்” என்றாள் நந்தை. “வடக்கின் அரசன் அளித்த அம்பு அன்றி வேறேதும் கொண்டுசெல்லப்போவதில்லை” என்றான் அர்ஜுனன்.

“வீரரே, நீரின் தலைவனை வென்றுகடக்கும்பொருட்டு கிளம்புகிறீர்கள். நீரின் உண்மை இரண்டு. ஒளிப்பரப்பாக அலையடிக்கும் மேல்தளம் அதன் முகம். இருண்டு இருண்டு செல்லும் அசைவற்ற ஆழம் அதன் அகம்” என்றாள் மீனாட்சி. “நீர்முகத்தில் மலர்ந்திருக்கும் தாமரைகளின் தேவி பதுமை. நீராழத்தில் படிந்திருக்கும் சங்குகளின் அரசி சங்கினி. சங்கு ஆழத்து வெண்தாமரை. வெண்தாமரை அலைமேல் மலர்ந்த சங்கு.”

“சங்கும் தாமரையும் ஏந்திய வருணன்” என்றாள் மீனாட்சி. “அவனை மூன்று முதல்தெய்வங்களன்றி எவரும் முழுமையாகக் கண்டதில்லை. கதிரவனுக்குரிய ஒளிமலரென அவனைக் கண்டவர்கள் சங்கிலமர்ந்து குளிர்ந்த அவனை கண்டதில்லை. சங்கிலெழும் ஆழிப்பேரோசையாக அவனை அறிந்தவர்கள் ஓசையற்ற மலர்வென அவனை உணர்ந்ததில்லை. மலர்நாடி வருபவருக்கு ஆழத்தையும் சங்கென எண்ணுபவர்களுக்கு மலர்ந்த வெண்நகைப்பையும் அளிப்பது அவன் ஆடல்.”

“இவர்கள் இருவரும் உங்களுடன் வரட்டும்” என்றாள் மீனாட்சி. “உங்கள் இரு கைகளின் கட்டைவிரல்களிலும் மலர் வடிவிலும் சங்குவடிவிலும் வரிச்சுழியாக அமைந்திருப்பார்கள். தேவையானபோது உங்கள் அருகே எழுந்து வழிகாட்டுவார்கள்.” அர்ஜுனன் அவர்களிடம் விடைபெற்றுக்கொண்டான். அங்குள்ள சுனை ஒன்றில் அவர்கள் அவனை இறங்கிச்செல்லும்படி சொன்னார்கள். நீரில் மூழ்கிய அவன் அலைகளுக்கு அப்பால் அவர்களின் உருவங்கள் வண்ணங்களாகி நெளிந்து கரைவதைக் கண்டான்.

“விழித்தெழுந்தபோது அவன் குபேரதீர்த்தத்தின் அருகே இருந்தான். எழுந்து அமர்ந்து எண்ணிநோக்கியபோது அனைத்தும் கனவென்றே இருந்தது. நினைவுகூர்ந்து அருகே கிடந்த தன் ஆவநாழியை எடுத்து நோக்கினான். அதில் இரும்புவளையம் கொண்ட அம்பு ஒன்று இருப்பதைக் கண்டான். அதைத் தடவிநோக்கியபடி நீள்மூச்சுவிட்டான்” என்றான் சண்டன்.

அவர்கள் தண்டகாரண்யத்தின் காட்டுப்பாதையில் சென்றுகொண்டிருந்தார்கள். பைலன் “குபேரனின் படைக்கலம் அர்ஜுனனுக்கு உதவக்கூடும். அந்தர்த்தானையைவிட பெரிய துயில்தெய்வம் ஒன்றுண்டு. வேள்விகளில் துயிலும் வைதிகரிடம் கேட்டு அவரது எதிரிகள் பெற்றுக்கொண்டு விடக்கூடும்…” என்றான். சண்டன் உரக்க நகைத்தான். ஜைமினி “இது வீண் கேலி. வேள்விகளில் எவர் துயிலமுடியும்?” என்றான். “ஆம், புகை ஒரு பெரிய தொல்லையே” என்றான் பைலன்.

“பைலரே, இது அத்துமீறல். வேள்விக்களத்தில் அவிபெறும்பொருட்டு தெய்வங்கள் வந்து சூழ்ந்துள்ளன. அவற்றின் அருகே அமர்ந்திருக்கும் வைதிகர் அனலெழும் காட்டில் நாணல்கள் போன்றவர்கள்…” என்றான் ஜைமினி. பைலன் “அப்படியென்றால் அவி கொள்ளும்பொருட்டு அந்தர்த்தானையும் நித்ரையும் வந்திருக்கக்கூடுமோ?” என்றான். ஜைமினியின் கண்கள் நனைந்தன. தொண்டை ஏறி இறங்கியது. அவன் “நான் தனித்துச்செல்கிறேன்…” என்று முன்னகர்ந்தான்.

“சரி, இல்லை. சினம் கொள்ளாதீர்” என்று அவன் கையை எட்டிப்பற்றினான் பைலன். “இதற்கெல்லாம் சினம் கொள்ளக்கூடுமா? இது எளிய சொல்லாடல் அல்லவா?”

ஜைமினி “எனக்கு வேதம் எளிய சொல் அல்ல” என்றான். “ஆம், அது புகையின் எடைகொண்டது” என்றான் சண்டன். “சண்டரே, போதும்” என்றான் பைலன். ஜைமினி தலைகுனிந்து நடந்தான்.

அவர்கள் பிறகு நெடுநேரம் பேசிக்கொள்ளவில்லை. அவ்வப்போது சண்டன் பைலனின் கண்களை சந்தித்தபோது அவற்றில் புன்னகையின் ஒளி இருந்தது. ஜைமினி நின்று “நீர்” என்றான். சண்டன் தன் குடுவையை எடுத்து தலைகீழாகக் காட்டி “தீர்ந்துவிட்டது” என்றான். ஜைமினி பதற்றத்துடன் “இந்நிலம் வறண்டிருக்கிறது. குரங்குக்குரல்களும் குறைந்திருக்கின்றன. நீர்மரங்களும் கண்ணுக்குப்படவில்லை” என்றான். “ஆம், இன்னும் நெடுந்தொலைவுக்கு நீரூற்று என ஏதுமிருக்க வாய்ப்பில்லை” என்றான் சண்டன். “என்ன செய்வது?” என்று ஜைமினி பதறியபடி கேட்டான். “அந்தணரே, நீங்கள் வருணனை வேதம்கூவி அழைத்து நீர்பொழியக் கோரலாமே?” என்றான் சண்டன்.

“தன்னலத்திற்காக வேதம் ஓதுபவன் கீழ்மகன்” என்றான் ஜைமினி. “நான் இக்காட்டில் நீரில்லாது விடாய்கொண்டு இறப்பதாக இருந்தாலும் இறுதித்தருணம் வரை எனக்கென வருணனை வேண்டமாட்டேன்.” அவன் உறுதியைக் கண்ட சண்டன் புன்னகைத்து “நன்று. தொல்வேதகாலத்தின் அதே உணர்வுடன் அந்தணர் சிலர் இன்னுமிருப்பதனால் வருணன் மானுடருக்கு கட்டுப்பட்டவனே” என்றான்.

பைலன் “மானுடருக்கு தேவர்கள் எப்படி கட்டுப்படமுடியும்?” என்றான். ஜைமினி “தேவர்களில் மானுடனின் ஆணைக்கேற்ப அமையவேண்டிய பொறுப்புள்ளவன் வருணனே. முனிவர், வேதியர், கற்புடைப்பெண்டிர், சொல்தூய்மைகொண்ட கவிதை, இலக்கண முழுமைகொண்ட இசை ஆகிய ஐந்து அழைப்புக்கும்

அவன் வந்தாகவேண்டும். மழைக்குருவி, வேழாம்பல், தவளை ஆகிய மூன்றின் அழைப்பையும் ஏற்றாகவேண்டும். வருணன் சொல்லுக்குக் கட்டுப்பட்டிருக்கும் வரைதான் இங்கே வாழ்க்கை. அவன் தன் விடுதலையை அடைந்தானென்றால் மண் வறண்டு உயிர்கள் அழியும்" என்றான்.

அவன் ஊக்கம்கொண்டு மேலே சொல்லிக்கொண்டே சென்றான். "அறிந்திருப்பீர் பைலரே, எங்கள் ஜைமினிய குருமுறை மிகமிகத் தொன்மையானது. வேதங்கள் எழுந்து செறிந்த காலகட்டத்தை மூன்றென வகுப்பதுண்டு. முதல் கட்டத்தில் வருணனே முழுமுதற்தெய்வம். பின்னர் இந்திரன் தெய்வமானான். இன்று பிற தெய்வங்கள் முதன்மைகொண்டு எழுந்து வருகின்றன. எங்கள் குடி வாருணவேதம் இங்கு திகழ்ந்த அக்காலத்திலேயே வேதமுதன்மைகொண்டிருந்தது."

அவன் விழிகளை பைலன் நோக்கிக்கொண்டிருந்தான். அவை சிறுவருடையவை என பளபளத்தன. "அன்று இருந்த வாருணவேதத்தின் ஒரு கைப்பிடி அளவே நாலென வகுக்கப்பட்ட வேதத்தில் உள்ளது என்பார்கள் எங்கள் குலமூதாதையர். அன்று தந்தை தன் மடியில் மைந்தனை வைத்திருப்பதுபோல வருணன் தன் நீரால் மண்ணை வளைத்து அருள்செய்திருந்தான். வருணனுக்கான பாடல்களை மட்டும் ஜைமினிய குருமுறைமையில் தனியாகத் தொகுத்து வைத்திருக்கிறோம். அவற்றை நாங்கள் பாடி மழை வரவழைப்பதுண்டு."

"மேற்கே சோனகநாட்டு பெருமணல்உலகை நோக்கிச் செல்லும் வழிகளினூடாகச் சென்றால் வறண்ட மலையடுக்குகள் வரத்தொடங்குகின்றன. கூர்முட்களையே இலைகளாகக்கொண்ட குட்டைப்புதர்களும் எலிகளும் கீரிகளும்

மட்டும் வாழும் அம்மலைகளில் தொன்மையான வாருணக்குடிகள் வாழ்கின்றனர். அனல்சுட்ட கல் என செந்நிற மக்கள். குழல் செந்நிறம். விழிகள் பச்சைக்கற்கள்போன்றவை. அவர்களின் ஆலயங்களில் தவளைகள் சூழ வருணன் அமர்ந்து அருள்புரிகிறான்" என்றான் சண்டன்.

"புழுதியின் நிலம். பெருங்காற்றுகளின் நிலம். செடிகளுக்கு கசப்பும் விலங்குகளுக்கு நஞ்சும் மானுடருக்கு சினமும் மிகுதி அங்கு. அணுகமுடியாத முட்புதர்கள் என அம்மக்களைச் சுட்டுவர் வணிகர். ஆண்டுக்கு மூன்று மழை என்பதே அங்குள்ள கணக்கு. பன்னிரு மாதங்களும் அந்த நீர்த்துளிகளைக்கொண்டே அவர்கள் வாழவேண்டும். அவர்களின் பாடல்கள் அனைத்தும் வான் நோக்கிய மன்றாட்டுகளே" என்று சண்டன் சொன்னான். "தொல்வேதம் வாருணத்தை அவர்களிடமிருந்தே பெற்றுக்கொண்டது."

ஜைமினி சினத்துடன் "வேதம் அந்த அசுரகுடிகளிடமிருந்து எழுந்ததா? என்ன சொல்கிறீர்?" என்று சீறினான். "அந்தணரே, தொல்வேதத்தின் தெய்வங்கள் அனைத்தும் அசுரர்களிடமிருந்து பிறந்தவர்களே. குபேரன் ஓர் அசுரன் என்றே சொல்கின்றன நூல்கள். இலங்கையாண்ட ராவணனும் உடன்பிறந்தாரும் அவன் இணைக்குருதியினர். வருணனும் அசுரபிறப்பு கொண்டவன் என்று வேதம் சொல்கிறது. வேதம்கேட்டும் அவிகொண்டும் அவன் தேவர்களுக்கு தெய்வமாக ஆனான் என்கின்றன. நீர் வேதம் கற்றிருக்கிறீர், முழுதாக அல்ல."

அந்தக் குரலில் இருந்த கூர்மை ஜைமினியை சொல்லமையச் செய்தது. அவன் விழிகளில் சீற்றம் தெரிந்தது. அதுவரை இருந்த எள்ளல்முகம் மறைய சண்டனின் குரல் மன்றமர்ந்து மெய்யுசாவும் ஆசிரியனுக்குரியதாக மாறியது. "வருணன்

அசுரன் என்று கூறும் ரிக்வேதப்பாடல்கள் பல உள்ளன. அசுரர்களின் தலைவன், அசுரருக்கு அருளும் தெய்வம். விருத்திரனை அழிக்க இந்திரன் எழுந்தபோது இந்திரனுக்குத் துணைநின்றமையால் வருணன் தேவர்களுக்கும் தெய்வமாக ஆனான்.”

ஜைமினி நெடுநேரம் தலைகுனிந்து ஒன்றும் சொல்லாமல் வந்தான். பின்பு தொண்டையைச் செருமியபடி “வருணனும், மித்ரனும், அர்யமானும், பகனும், அம்சனும் அதிதிதேவிக்கு பிறந்தவர்கள். அவர்களை ஆதித்யர்கள் என்று கொள்வது வேதமரபு. வேதங்களில் பகனுக்கும் அம்சனுக்கும் வாழ்த்தும் இறைஞ்சலும் இல்லை. மித்ரனும் வருணனும் இணைந்தே தெய்வங்களாக சொல்லப்படுகிறார்கள். அவ்வப்போது அர்யமானும் சேர்த்துக்கொள்ளப்படுவதுண்டு” என்றான்.

அவன் தான் கற்றவற்றை சொல்ல விழைகிறான் என உணர்ந்த பைலன் சண்டனை நோக்கினான். புதியதாக கேட்பவனைப்போல அவன் விழிகூர்ந்தான். அந்தக் கூர்தலே அவனை அறிஞனாக்குகிறது என பைலன் எண்ணிக்கொண்டான். “மண்ணில் உள்ள அனைத்தையும் வெல்லும் ஆற்றல் கொண்ட பேருருவன் என்பதனால்தான் வருணன் அசுரன் என்று சொல்லப்படுகிறான். வேதச்சொல் அறிந்து நுண்மைகொண்டவன் என்பதனால் கவிதமன் என்றும் விண்வடிவாக எழுபவன் என்பதனால் மாயாவான் என்றும் அவனை சொல்கிறார்கள். மண்ணிலுள்ளவர்களுக்கு அரசன் என்றும் விண்ணவர் வணங்கும் தேவன் என்றும் அவனைச் சொல்கின்றனர் முன்னோர்.”

“மித்ரனும் வருணனும் வேதங்களில் நரர்கள் என்று சுட்டப்படுவதுண்டு என அறிந்திருக்கிறீரா?” என்றான் சண்டன். “ஆம்” என்றான் ஜைமினி. “அவர்கள் மண்ணில் வாழ்ந்த அரசர்கள். விண்புகுந்தபின் தெய்வமானவர்கள். அவர்கள் அரசர்கள் என்றால் எவருடைய அரசர்கள்?” என்று சண்டன் கேட்டான். ஜைமினி அவன் மேலே பேசட்டும் என காத்திருந்தான். “மேற்குமலைக்குடிகள் கடலோரம் வாழ்ந்தவர்கள். மூதாதையரை கடலில் விடும் வழக்கம் கொண்டவர்கள். உயிருடன் கொந்தளிக்கும் கடல் அவர்களின் மூதாதையரின் உயிரின் பெருந்தொகை என அவர்கள் எண்ணுகிறார்கள். மழையை கடல்தேவனின் ஆடை என்கிறார்கள். வரமளிப்பவனாகையால் அத்தேவன் வருணன்.”

“பருவம் தவறாது மழைபொழிவதும் பனிஎழுவதும் வெயில் விளைந்து மூத்து கனிவதும் இப்புடவியின் தாளம் என்று அவர்களின் தொல்பாடல்கள் சொல்கின்றன. அதை அவர்கள் ருதம் என்கின்றனர்” என்றான் சண்டன். “ஆம். அச்சொல் வேதங்களில் அறமென்னும் பொருளில் அமைந்துள்ளது” என்றான் பைலன். “ருதத்தைக் காப்பவன் வருணன் என்று வேதங்களும் சொல்கின்றன. ஓயா தாளம் திகழும் கடலே நிலத்தின் உயிர்களிலும் விசைகளிலும் திகழும் தாளங்கள் அனைத்துக்கும் அடிப்படை.”

“வருணனை வேதம் போற்றுகிறது” என்றான் சண்டன். “நெறிகளின் தலைவன். பலிவிலங்கின் தோல் என புவியை வான் நோக்கி விரித்தவன். ஆதித்யர்கள் புவியை சுற்றிவரும்படி அமைத்தான். சூரியனால் பூமியை அளக்கிறான். அவன் செல்ல பாதையை அமைத்தளிக்கிறான். ஆண்டு, மாதம், நாள், பகல், இரவு என அதை பகுத்தான். யக்ஞும் ரிக் என

அதை செலுத்தினான். மரங்கள் மேல் வெளியை கவித்தவன். குதிரைக்கால்களில் ஆற்றலையும் பசுக்களில் பாலெனும் கனிவையும் உள்ளங்களில் ஊக்கத்தையும் நீரில் நெருப்பையும் வானில் கதிர்களையும் மலைமுகடுகளில் ஊற்றுக்களையும் அமைத்தவன்.”

“மழை பெய்வதும் பயிர் வளர்வதும் அவனால். வருணனின் ருதத்தின்படியே நதிகள் தேங்காமல் ஓடுகின்றன. ஆற்றுநீர் கடலை நிரப்புவதில்லை. வருணன் எல்லைகளை காக்கிறான்” என்று ஜைமினி தொடர்ந்து பாடினான். “பிறர் பிழைகள் எங்கள் மேல் படராதொழிக! மூதாதையர் பிழைகளுக்கும் நாங்கள் பொறுப்புகொள்ளாமல் ஆகுக!” என்றான் பைலன். ஜைமினி புன்னகை செய்தான். “மித்ரனும் வருணனும் எளியோனை அறிவனாக்குகிறார்கள். அறிவனை மெய்மையுணரச் செய்கின்றனர். வழிகாட்டி அழைத்துச்செல்கிறார்கள்.”

“ஆம், அவ்வாறே ஆகுக!” என்றான் சண்டன். பைலன் “இத்தனைக்கும் பிறகு நமக்கு நீரூற்றை காட்டியாகவேண்டும் வருணன்” என்றான். சண்டன் புன்னகைத்து “அணுகிக்கொண்டிருக்கிறோம்” என்றான். “எப்படி சொல்கிறீர்கள்?” என்றான் ஜைமினி. “கருங்குரங்கின் ஓசை...” என்று சொல்லி சண்டன் சிரித்தான். “வருணனின் முழவல்லவா அது?”

**[ 2 ]**

இமயப்பனிமலைகளில் இருந்து மேற்கே சென்று புழுதிபடிந்து குளிர்ந்து உயிரசைவின்றிக் கிடந்த அரைப்பாலை நிலத்தில் இறங்குவதற்கு வணிகப்பாதை ஒன்றிருந்தது. வேனிலில் கீழ் நிலத்தில் இருந்து உப்புவணிகர்கள் படைக்கலங்களும்,

மரவுரியும், உலோகப்பொருட்களும் பிறவும் சுமக்கும் அத்திரிகளையும் கழுதைகளையும் ஓட்டியபடி மேலேறி வருவார்கள். மலைக்கம்பளியும், அருமணிகளும் கொண்டு கீழிறங்கிச் செல்வார்கள். சுழன்று காற்றிலிறங்கும் கருமணிமாலை என அவர்களின் குழுக்கள் தோற்றமளிக்கும். அவர்களுடன் வரும் சூதர்களின் பாடலோசையும் முழவொலியும் அந்த மணிகளை இணைக்கும் பொற்பட்டுநூல் என தோன்றும்.

மலைவணிகர்களுடன் அர்ஜுனன் கீழிறங்கிச் சென்றான். அவன் வில்லவன் என்று அறிந்ததுமே வழிப்பணமும் உணவும் அளித்து காவலுக்கு அமர்த்திக்கொண்டனர் வணிகர். ஒருமுறை மலையிடுக்கு ஒன்றிலிருந்து தொல்குடிக் கள்வர் சிலர் தலையெடுத்ததும் அர்ஜுனன் தன் நாணொலியை எழுப்பினான். அக்கணமே அவர்கள் அஞ்சிச் சிதறி ஓடி மறைந்தனர். “வெந்நீரில் எறும்புகள் போல ஓடுகிறார்கள். எதைக் கண்டனர் இவர்கள்?” என்றான் பெருவணிகன் மார்த்தாண்டன். “நான் தேர்ந்த வில்லவன் என அவர்கள் உணர்ந்திருப்பார்கள். அச்சம் அனைத்தையும் எளிதில் புரியவைக்கும் ஆற்றல்கொண்டது” என்றான் அர்ஜுனன்.

“வீரரே, நீங்கள் பாண்டவனாகிய அர்ஜுனனை அறிவீரா?” என்றான் நிகும்பன் என்னும் இளவணிகன். “அவர் இப்போது விண்ணுலகில் உலவிக்கொண்டிருக்கிறார் என்கிறார்கள்.” அர்ஜுனன் புன்னகை செய்தான். “அவர் வில்லின் புகழ்கேட்டே இங்கே இளமைந்தர் வளர்கிறார்கள்” என்றார் முதுவணிகனாகிய கருணன். “அறத்தின்பொருட்டு கானேகியவர்கள். வெற்றியின்பொருட்டு விண்ணேகியிருக்கிறார்கள்” என்றான்

நிகும்பன். “விண்ணேகிய பின் அங்கிருந்து அம்புகளையா பெற்று மீளவேண்டும்?” என்றான் மார்த்தாண்டன்.

“வில் என்பது உள்ளம். அம்பென்பது எண்ணம். கூரிய அம்பென்பது ஆற்றல்கொண்ட எண்ணம். மாபெரும் அம்புகள் மெய்யறிதல்களேயாகும்” என்றார் கருணன். “இறுகியும் வளைந்தும் நாணொலித்தும் தளர்ந்தும் அம்புகளை ஏவிக்கொண்டே இருக்கும் உள்ளம் இடைவிடாது வானத்துடன் உரையாடிக்கொண்டிருக்கிறது என்பார்கள் கவிஞர்கள்.” நிகும்பன் “அவர் மெய்யறிந்து முனிவராகவே மீண்டு வருவார்” என்றான்.

மலையிறங்கி புழுதிக்குளம்போலிருந்த சிற்றூர் ஒன்றுக்கு அவர்கள் வந்தனர். பிங்கலம் என்னும் அச்சிற்றூரில் இருபது குடில்களே இருந்தன. அவையும் மலைக்காற்றில் வந்த சருகுகளும் புழுதியும் மூடி தொலைவிலிருந்து நோக்கினால் இல்லங்களென்று தெரியாதபடி தோன்றின. ஊர்முகப்பில் நாட்டப்பட்ட பெரிய மூங்கிலில் பறந்த பச்சைநிறமான கொடி ஒன்றே அங்கு மானுடர் இருப்பதற்கான சான்றாக இருந்தது.

அத்திரிகளின் குளம்போசை கேட்டதும் அவ்வூரிலிருந்து கூச்சலிட்டபடி ஏழெட்டுபேர் அவர்களை நோக்கி ஓடிவந்தனர். புழுதியடர்ந்த கம்பளியாடை அணிந்து கம்பளியாலான தலையுறையும் அணிந்திருந்தமையால் காட்டுக்கழுதைகள் என்றே அவர்கள் தோன்றினர். பொதிவண்டிகளை அணுகி அவற்றின் கடிவாளங்களை பற்றிக்கொள்ள முண்டியடித்தனர். “பெருவணிகர்களே, இனிய நீரும் வெம்மையான படுக்கையும்” என்று ஒருவன் கூவினான். “தளரா இளமுலைகொண்ட பெண்கள். இன்னுணவு” என்று இன்னொருவன் சொன்னான்.

“விலகுங்கள்! அகலுங்கள்!” என்று வணிகர்கள் அவர்களை தள்ளிவிட்டனர். “வணிகர்களே, நான் முதலில் வந்தேன். நானே முதலில் அழைத்தேன்” என்றான் ஒருவன். “என் இன்னுணவை வணிகர் விரும்புகிறார். வணிகரே, மலையணிலை உயிருடன் வைத்திருக்கிறேன். நீங்கள் நோக்கியபின் அதை சுடுவேன்” என்றான் இன்னொருவன். “இனிய கீரி... உடும்பு” என்று ஒருவன் அர்ஜுனனின் கையை பற்றினான். “வெம்மையான தோள்கள் கொண்டவள் என் மனைவி. இனிய சொல்லாடல் கற்றவள்.” மேலும் மேலும் ஊரிலிருந்து மக்கள் வந்துகொண்டிருந்தனர்.

அவர்கள் ஊரை அணுகியதும் பெண்களும் குழந்தைகளும் ஓடி வெளியே வந்துவிட்டார்கள். பெண்கள் குளம்போசை கேட்டதுமே முகம் கழுவி குழல் திருத்தி ஆடை மாற்றிக்கொண்டிருப்பது தெரிந்தது. அங்கிருந்த பாறைகள்போல செம்மஞ்சள் நிறமான தோல். சிறிய நீலப்பச்சை விழிகள். விழிகளைச் சூழ்ந்தும் வாயைச் சுற்றியும் சுருக்கங்கள் செறிந்திருந்தன. மிகச்சிறிய உதடுகள் உள்ளிழுத்துக்கொண்டவை போலிருந்தன.

வணிகர்கள் பெண்களை தழுவிக்கொண்டார்கள். அவர்களை அப்பெண்கள் தோள்வளைத்து உள்ளே அழைத்துச் சென்றனர். பணியாளர் அத்திரிகளையும் கழுதைகளையும் அழைத்துச்சென்று ஊர்மன்றில் நிறுத்தி பொதிகளைக் கழற்றி கீழிறக்கினர். அவற்றை மையத்தில் ஒன்றாகக் குவித்து கயிறு செலுத்தி சேர்த்துக்கட்டினர். அத்திரிகளை அங்கிருந்தவர்கள் அழைத்துச்சென்று மரத்தொட்டிகளிலிருந்த நீரை அளித்தனர். பெருமூச்சுவிட்டு உடல்சிலிர்த்தபடி அவை நீர் அருந்தும் ஒலி கேட்டது.

“நம்மவர் ஒரு காவலர் இங்கிருந்தால் போதும், வீரரே” என்றார் கருணன். “இவர்களே காவல் நோக்குவர். இவர்களில் விழைவுகொண்ட சிலர் இருக்கக்கூடும் என்பதனால் நாமும் ஒரு நோக்கு கொண்டிருக்கவேண்டும், அவ்வளவுதான்.” அர்ஜுனன் “நான் இங்கிருக்கிறேன்” என்றான். “வேண்டியதில்லை. நீங்கள் இளைப்பாறலாம். இதெல்லாம் எங்களுக்குப் பழக்கமானவை” என்றான் வாகுகன் என்னும் இளவணிகன். “தாழ்வில்லை. நான் இங்கேயே இளைப்பாற முடியும்” என்றான் அர்ஜுனன்.

“நானும் உடனிருக்கிறேன்” என்றான் வாகுகன். பிறர் நீர் அருந்தவும் இளைப்பாறவும் அங்கிருந்த சிற்றில்களுக்குள் சென்றனர். குழந்தைகள் அவர்களைச் சூழ்ந்து நின்று வேடிக்கை நோக்கின. மூக்கு கூர்ந்த குழந்தைகள் செந்நிற உருளைக் கற்கள் போலிருந்தன. அவற்றின் நீலவிழிகளை நோக்கிய அர்ஜுனன் “இவர்கள் யவனரா?” என்றான். “யவனரும் இவர்களும் ஒரே குலம் என்கிறார்கள். ஆனால் இவர்களை பிங்கலர் என்பதே வழக்கு.”

அச்சிற்றூரின் மேற்கு மூலையில் இருந்த சிறிய தெய்வப்பதிட்டையை அர்ஜுனன் கண்டான். அருகே சென்று அதை நோக்கினான். நீளமான சப்பைக்கல் மேல் செந்நிறத்தில் ஒரு குத்துக்கல் நிறுத்தப்பட்டு விழிகள் வரையப்பட்டிருந்தன. அருகே பிறிதொரு விழிதிறந்த கல். “இது வருணன். துணைவி வருணையுடன்” என்றான் வாகுகன். வருணன் அணிந்திருந்த மாலையை அர்ஜுனன் குனிந்து நோக்கினான். “முதலைப் பல்லால் ஆன மாலை” என்றான் வாகுகன். “வருணை சங்குமாலை அணிந்திருக்கிறாள்.”

“இங்கு மழைபெய்வதுண்டா?” என்றான். “பெய்வதுண்டு, ஆனால் மழைக்காலம் என்று ஒன்றில்லை. மேலே பனிமலைகளில் என்ன நிகழ்கிறதென்பதே மழையை வருவிக்கிறது” என்றான் வாகுகன். “இவர்களே அதை நோக்கி சொல்வார்கள். மேலே வடமேற்குமூலையில் புகை எழுந்தால் மழை வரும் என்பார்கள்.” அர்ஜுனன் “வடமேற்கிலா?” என்றான். “ஆம், இவர்களின் மழை என்பது தென்கிழக்கில் இருந்து வந்து மலைமேல் சுழன்று இங்கே இறங்குவது” என்றான் வாகுகன்.

பிங்கலமுதியவர் ஒருவர் அருகே வந்து “வருணனின் அருள் உண்டு” என்றார். அர்ஜுனன் “எப்போது?” என்றான். “நேற்று முன்நாள் என்மேல் ஏறிவந்து அவன் தன் வருகையை சொல்லிவிட்டான். நாளையோ மறுநாளோ மழை விழும்” என்றார் அவர். “அகிபீனா இவர்களின் உணவுபோல. இவர்களின் உள்ளம் இயங்குவதே அக்களிமயக்கில்தான்” என்றான் வாகுகன்.

அர்ஜுனன் “மழைபெய்வதை உறுதியாகச் சொல்வீரா?” என்றான். “வருணன் நெறிகளுக்கு கட்டுப்பட்டவன். இங்கு வீசும் ஒவ்வொரு காற்றும் அவன் தாளத்தின்படியே” என்றார் பிங்கலமுதியவர். அர்ஜுனன் அவரை சிலகணங்கள் நோக்கியபின் “பொதிகளை தோலுறையால் நன்கு மூடுவோம்” என்றான். “இவர் அகிபீனா மயக்கில் பேசுகிறார். இப்போது மழையெழும் குறியே இல்லை” என்றான் வாகுகன். “இவ்வூரில் எவருமே நம்மை எச்சரிக்கவில்லை.”

“நாம் பொதிகளை மூடுவோம். நான் இவரை நம்புகிறேன்” என்று அர்ஜுனன் சொன்னான். “தங்கள் ஆணை!” என்றான் வாகுகன். அவர்கள் மெழுகுபூசப்பட்ட தோலுறையை எடுத்து பொதிகளை நன்றாக மூடி மழைநீர் புகாதபடி செருகினர்.

அவ்வழியாக கையில் மதுக்குடுவையுடன் சென்ற கருணன் “மழைபெய்யப்போகிறதா என்ன? அகிபீனா அருந்திவிட்டீர்களா அதற்குள்?” என்றபடி சென்றார். “மழை வரும்” என்றார் பிங்கலமுதியவர்.

# கிராதம் - 29

**[ 3 ]**

இருள் பரவத்தொடங்கியதும் அச்சிற்றூரில் இருந்த அனைத்துக் குடில்களும் உருவழிந்து கரைந்து மறைந்தன. புழுதிக்காற்று அவற்றின் புற்கூரைகளை அலைத்த ஓசை மட்டும் கேட்டுக்கொண்டிருந்தது. உச்சிவெயில் எழுந்த சற்றுநேரத்திலேயே சூரியன் நெடுமலைகளுக்கு அப்பால் இறங்கி மறைந்து விட்டிருந்தான். கதிர் சரியத்தொடங்கியதுமே மலையுச்சிகளில் இருந்து குளிர் ஓசையின்றி இறங்கி ஊரை மூடிச் சூழ்ந்தது. உடல் நடுங்கத் தொடங்கியதும் அர்ஜுனன் தோலாடைகளை இறுக்கி அணிந்து தலை உறையை போர்த்திக்கொண்டான்.

இருளெழத் தொடங்கியதும் ஓசைகள் மேலும் ஆழம் கொண்டன. அவ்வூரார் இருளிலேயே நோக்குதுலங்கப் பழகிவிட்டிருந்தனர். இளையோர் ஐவர் விறகுகளைக் கொண்டு வந்து கூம்பாகக் குவித்து தீ எழுப்பினர். அதைச் சூழ்ந்து உடல்குறுக்கி அமர்ந்து தழலில் காட்டிச்சுட்ட மலைக்கிழங்குகளையும் பொறிவைத்து பிடிக்கப்பட்ட சிற்றுயிர்களையும் பறவைகளையும் ஏவலரும் பிறரும் உணடனர்.

அனைத்துச் சிறு விலங்குகளும் அவர்களுக்கு உணவாக இருந்தன. மலைகளில் எலிகளும் கீரிகளும் உடும்புகளுமே பெரும்பாலும் கிடைத்தன. சுடுவதன்றி வேறு சமையல்முறைகளையும் அவர்கள் அறிந்திருக்கவில்லை. “முயல்கள் இல்லையா?” என்று அர்ஜுனன் ஒருவனிடம் கேட்டான். “இங்கில்லை. நெடுந்தூரம் சென்றால் மலைச்சரிவு இன்னும் சற்று பசுமை கொண்டிருக்கும். அங்கு முயல்கள் உண்டு. ஆனால் அங்கு செல்ல பன்னிரண்டு நாட்களாகும்” என்றான் ஒருவன்.

இருள் அடரும் தோறும் குளிரும் கூடிவந்தது. அனைவரும் உடல்களை தோலாடைக்குள் ஒடுக்கிக் கொண்டு நெருப்பை மேலும் மேலும் அணுகி அமர்ந்தனர். குடில்களுக்குள் எவற்றிலும் விளக்குகள் இல்லை. அங்கு இல்லங்களில் விளக்கேற்றும் வழக்கமே இல்லை. குடில்களுக்குள் மதுவும் அகிபீனாவும் மயக்கேற்ற களிகொண்ட வணிகர் குழறிப்பேசியும் வெடித்துச்சிரித்தும் ஓசையிட்டனர். அவர்களுடன் சிரித்தும் கொஞ்சியும் குலவினர் பெண்டிர்.

அவர்களின் ஆண்களெல்லாம் முற்றத்தில்தான் இருந்தனர். துள்ளும் ஓசையில் விரைந்த சொற்களுடன் பேசிக்கொண்டனர். அவர்கள் வணிகர்களின் வரவால் உளக்கிளர்ச்சி அடைந்திருப்பது தெரிந்தது. அகிபீனாக் களியை சிறு உருளைகளாக வாயில் அதக்கிக் கொண்டிருந்தனர். மெல்ல மயக்குகொண்டு நாக்குழறினர். அனல் அவிந்ததும் அதைச் சூழ்ந்து படுத்து ஒவ்வொருவராக துயிலத்தொடங்கினர்.

குறட்டை ஓசைகளைக் கேட்டபடி அர்ஜுனன் முழங்காலில் கைகட்டி விண்மீனை நோக்கியபடி அமர்ந்திருந்தான். வான் முழுக்க அதிர்வொளிப்புள்ளிகள் செறிந்து பரவியிருந்தன.

சற்றும் முகில்களே இல்லை என்று அதற்குப்பொருள். ஆனால் மழை உண்டு என்று பிங்கல முதியவர் அழுத்தி பலமுறை கூறியிருந்தார். அவர்களின் குலத்து இளையோர்கூட அதை நம்பவில்லை. வணிகர்கள் அவர் சொன்னதை தட்டவில்லை.

மறுநாள் காலை அவரிடம் ஏன் மழை வரவில்லை என்று கேட்டால் என்ன சொல்வார் என்று எண்ணிக்கொண்டான். தெய்வங்கள் பொய்ப்பதில்லை. நாளை என்று தெய்வங்கள் சொன்னது அதற்கு அடுத்த நாளைத்தான் என்று சொல்லக்கூடும். அவரது நம்பிக்கை மாறாது. மானுடத்தை சற்றும் கருதாது பேருருக்கொண்டு சூழ்ந்த அமைதிமலைகளை, நெடுந்தொலைவுக்கு அப்பால் இருந்து வரும் விசைகொண்டகாற்றை, அனல் சுமந்த புழுதிஅலைகளை நம்பி வாழும் இச்சிறு வாழ்க்கையில் தெய்வங்களே அனைத்தையும் முடிவு செய்கின்றன. அவற்றை நம்பாமல் வேறுவழியில்லை.

அறிய முடியாதவற்றை நம்பி வாழ்வதில் அழகு ஒன்று உள்ளது என்று அவன் நினைத்துக் கொண்டான். அறிதலுக்கான பெருந்தவிப்பிலிருந்து அது விடுதலை. அறிய விழைபவர்கள் வாழுமிடத்திலிருந்து சென்று கொண்டே இருக்கிறார்கள். சித்தம் அமைந்த இடத்திலிருந்து மீண்டும் மீண்டும் மேலும் மேலும் என நகர்ந்துகொண்டே இருக்கிறது. நம்பிக்கையே நிலைக்க வைக்கிறது. அமையச் செய்கிறது. பிறிதிலாது துய்க்க வைக்கிறது. எஞ்சாது கடந்து போகச் சொல்கிறது.

விண்மீன்களை அவன் விழியிமைக்காமல் நோக்கிக் கொண்டிருந்தான். அவற்றின் நடுக்கம் கூடி வருவது போலத் தோன்றியது. கண்காணா சரடொன்றில் தொற்றியபடி அவை இறங்கி இறங்கி மிக அருகே வருவது போலிருந்தது. பின்பு

அவன் தன் கனவுக்குள் விண்மீன்களை நோக்கிக் கொண்டிருந்தான்.

விண்மீன்கள் அவனைச் சுற்றி அதிர்ந்து கொண்டிருந்தன. கை நீட்டினால் ஒவ்வொரு விண்மீனையாக பற்றி எடுத்து விழிமுன் கொண்டு வந்து உறுத்து நோக்கலாம் என்பது போல இரு விண்மீன்கள் அதிர்வதை அவன் கேட்டான். அதிர்வதை எப்படி கேட்க முடியும் என்று அவன் சித்தம் வியந்தபோது அது தவளைக் குரல் என்று தெளிந்தான். தவளைக்குரலா? கங்கைக்கரையிலா இருக்கிறோம்? புரவியை எங்கு கட்டினோம்?

கங்கைப்பெருக்கிலிருந்து வந்த குளிர் காற்று அவன் உடலை நடுங்க வைத்தது. ஆடையை எடுக்க கைநீட்டி அவ்வசைவிலேயே விழித்துக்கொண்டு எழுந்து அமர்ந்தபோது தொலைவிலிருந்து வந்து அறைந்து இரு குடில்களுக்கு இடையே பீரிட்டு வந்த காற்றில் அனல் உயிர்கொண்டு சீறிக்கொண்டிருந்தது. செம்பொறிகள் எழுந்து மறுதிசை நோக்கி பெருகிச் சென்றன. குடில்களின் கூரைகள் எழுந்து படபடத்தன. தவளைக்குரல்களை அவன் தெளிவாகக் கேட்டான். நெடுந்தொலைவிலென ஒரு முறையும் மிக அருகிலென மறுமுறையும். ஒற்றை ஓசையென ஒலித்து பின் தனித்தனி குரல்களாக மாறிச்சூழ்ந்தன.

அண்ணாந்து வானைப் பார்த்தபோது ஒரு விண்மீன்கூட இல்லையென்பதை உணர்ந்தான். படுத்திருந்தவர்களை எழுப்ப வேண்டுமென்று தோன்றியது. மறுகணம் தவிர்த்து புன்னகையுடன் கைகட்டியபடி நோக்கி நின்றான். ஒரு மின்னலில் அனைவரும் படுத்திருந்த காட்சி துடிதுடித்து அணைந்தது. இருண்ட வானில் விழியொளி அதிர்ந்தது. மறுகணம் தெற்குச்சரிவு இடியோசை எழுப்பியது. மீண்டும்

ஒரு மின்னல் அதிர்ந்து வான் நிறைத்திருந்த பெருமுகில் மலைகளை நடுநடுங்க காட்டிச் சென்றது.

மின்னல்களின் கொடிபடர்வு. இடியோசை உருண்டு செல்ல மின்கதிரால் விரிசல் விட்டது வானம். இடி செவி ரீங்கரிக்க மீண்டும் வலுத்து ஒலித்தது. அச்சிற்றூரின் அனைத்து கூழாங்கற்களும் ஒளிபெற அனைத்து புற்கூரை பிசிறுகளும் பொன்னொளி கொண்டெரிய மின்காட்சி தெரிந்து மறைந்தது. மீண்டும் ஒரு இடியில் துயின்று கொண்டிருந்தவர்கள் அனைவரும் பாய்ந்து எழுந்தனர். ஒருவன் “இடி!” என்றான். வாகுகன் புரண்டு படுத்து. “முரசு” என்றான்.

மின்னல் அனைத்துப் பகுதிகளையும் ஒளியால் நிரப்பி விழியை முற்றிலும் பறித்துச் சென்றது. செம்மை குருதியென குமிழிகளென இமைக்குள் அதிர செவிகள் முற்றிலும் அடைந்து தலைக்குள் உலோக ரீங்காரம் நிறையும்படி பேரிடி எழுந்தது. வாகுகன் பாய்ந்தெழுந்து “என்ன? எங்கு?” என்றான். “மழை வருகிறது” என்றான் அர்ஜுனன். “இங்கா? மழையா?” என்று அவன் கேட்டான். மின்னல்கள் அதிர்ந்து அதிர்ந்து முகில் கணங்களைக் காட்டியதைப்பார்த்துவிட்டு எழுந்து நின்று கைவிரித்துச் சுழன்று “முற்றிலும் வான் நிறைந்துள்ளது, வீரரே!” என்றான்.

“ஆம்” என்றான் அர்ஜுனன். “இத்தனை விரைவாகவா முகில் வந்து நிறையமுடியும்?” என்றான் வாகுகன். “அந்தப் பிங்கல முதியவர் அதைத்தான் சொல்லிக் கொண்டிருந்தார். இங்கு மழை வான் வழியாக தவழ்ந்து வருவதில்லை.. மலைகளினூடாக வந்து உச்சிப்பிளவுகள் வழியாக பிதுங்கி ஒழுகுகிறது” என்றான் அர்ஜுனன்.

இடியோசையும் மின்னல்களும் எழுந்து சூழ ஆடைபறக்க குழல் சிதறி அலைபாய நின்றிருந்தபோது நெடுந்தொலைவிலிருந்து வெந்த புழுதியின் மணத்துடன் காற்று வந்து சுழன்று சென்றது. அதில் சருகுத் திவலைகளும் புழுதியும் இருந்தன. “ஈரப்புழுதி” என்றான் வாகுகன். “அங்கே மழை இறங்கிவிட்டது” என்றான் பிறிதொருவன். “மழை! மழை!” என கூச்சலிட்டுக்கொண்டிருந்தனர் பிறர். அகிபீனாவின் மயக்கிலிருந்து எழுந்து “யார்?” என்றும் “என்ன?” என்றும் சிலர் கூவினர்.

குடில்களின் கதவுகளைத் திறந்தபடி அச்சிற்றூரின் இளையோர் வெளியே ஓடி வந்தனர். குழந்தைகள் கூச்சலிட்டபடி வெளியே வந்து “மழை மழை மழை” என குதிக்கத் தொடங்கின. தொடர்ந்து ஆடைகளை அள்ளி அணிந்தபடி பெண்களும் வணிகர்களும் வெளியே வந்தனர். அவர்களின் ஆடைகளை இழுத்து உப்பி அதிரச்செய்தது காற்று. குழல்களைச் சுழற்றி பறக்க வைத்தது. முகில்கள் சுடர் கொண்டெரிந்தன. இடியோசையில் முகில்கள் அதிர்வதுபோல விழிமயக்கெழுந்தது

வடமேற்கு மலைகளுக்கு அப்பால் இருந்து எழுந்து பல்லாயிரம் முகில் படிக்கட்டுகளில் உருண்டுருண்டு சென்று கீழ்த்திசையில் உறுமி மறைந்தது பேரிடித்தொடர் ஒன்று. நெடுந்தொலைவில் புரவிக்குளம்படிகள் பெருகி எழுவது போன்ற ஓசையை அர்ஜுனன் கேட்டான். ‘புரவிகளா!’ என்று வியந்த மறுகணம் அது மழையெனத் தெளிந்து அவ்வுணர்வால் உடல் சிலிர்க்கப்பெற்றான். மறுகணம் பேரோசையுடன் நிலம் அறைந்து அணுகி ஊரை முழுக்க மூடி கடந்து சென்றது மழை.

ஓரிரு கணங்களிலேயே அங்கிருந்த அனைவரும் முழுமையாக நனைந்துவிட்டனர்.

இளைஞன் ஒருவன் இரு கைகளையும் விரித்து தொண்டை அதிரும் கூச்சலுடன் ஓடிச் சுழன்றான். உடனே அங்கிருந்த இளையோரும் பெண்களும் கைகளை விரித்தபடி கூவி ஆர்ப்பரித்து மழையில் சுழன்றாடினர். ஒருவரையொருவர் தழுவியும் சிறுமைந்தரை தூக்கி எறிந்து பற்றியும் களியாடினர். கரைந்து வழிந்தோடிய மென்புழுதியின் சேற்றில் விழுந்து புரண்டனர். சேற்றை அள்ளி ஒருவரை ஒருவர் அடித்துக் கொண்டனர். மழை அவர்களின் களியாட்டை தான் வாங்கிக் கொண்டது போல காற்றுடன் கலந்து சுழன்று சுழன்று அடித்தது. வெறி ஒவ்வொரு கணமும் ஏற அவர்கள் கூத்தாடினர்.

மெல்ல ஒவ்வொருவரும் தனித்தனியாக தங்களுக்குள் எதையோ முனகலாகப் பாடியபடி கைகளை விரித்து தள்ளாடும் கால்களுடன் மெல்ல சுழன்றனர். நிலை தடுமாறி நீரில் விழுந்து சேற்றில் புரண்டு மழையை முகத்திலும் மார்பிலும் வாங்கியபடி துயர் கொண்டவர்கள் போல படுத்தனர். சிலர் அழுதனர். சிலர் தெய்வங்களை நோக்கி மன்றாடினர். சிலர் தங்கள் உள்ளமைந்திருந்த சொற்கள் சிலவற்றை வழிபாடு போல சொல்லிக்கொண்டிருந்தனர்.

இரு கைகளையும் மார்பில் கட்டி, மழையின் அம்புப்பெருக்கை உடல் முழுக்க வாங்கியபடி அர்ஜுனன் அவர்களை நோக்கி நின்றான். கூத்தாடியவர்களுடன் வணிகர்களும் ஏவலர்களும் கலந்துவிட்டிருந்தனர். முதியவர்கள் குழந்தைகள் என ஒருவர்கூட மீதமில்லை. மெல்ல ஒவ்வொருவராக விழுந்து விழுந்து அவன் மட்டும் எஞ்சினான். தன்னைச் சூழ்ந்து உயிரற்றவர்கள் போல கிடந்தவர்களை அவன் நோக்கிக் கொண்டு நின்றான். குளிரில் அவன் இடக்கால் மட்டும் துடித்துக் கொண்டிருந்தது. அவன் நெஞ்சில் ஒற்றைச் சொல் ஒன்று இரு பெரும்பாறைகளால் இறுகக் கவ்விப்பற்றப்பட்டிருந்தது.

**[ 4 ]**

மறுநாள் கதிர் எழவே இல்லை. மலைகளுக்கு அப்பால் இருந்து ஒளிமட்டும் கசிந்து மழைத்தாரைகளினூடாக பரவியது. மழையலையுடன் இணைந்து குடில்கள் நிழல்கள் போல் ஆடின. மழைக்குள் விழுந்தவர்கள் அப்படியே துயில் கொள்பவர்கள் போல, ஊழ்கத்தில் உடல் உதிர்த்தவர்கள் போல முழுநாளும் அசையாது கிடப்பதை அர்ஜுனன் வியப்புடன் கண்டான். அவன் கால்கள் குளிரில் நடுங்கி இறுகி முழங்கால் தசை உருண்டு வலிகொண்டு நின்றது. தாடை அசைவிழந்து ஒட்டிக்கொண்டது. பற்கள் உரசி அரைபட்டன. ஆயினும் குடிலுக்குள் சென்று ஒளிந்துகொள்வதற்கு அவனால் இயலவில்லை.

இரவிலேயே வணிகர்கள் மட்டும் குடில்களுக்குள் சென்று ஆடைகளைக் களைந்து உடல் துடைத்துக் கொண்டனர். சிலர் உள்ளேயே கற்செதுக்குக் கலங்களில் நெருப்பிட்டு அமர்ந்தனர். இப்போது தணியும், இதோ அலை இறங்குகிறது, இதோ ஓசை

மயங்குகிறது என்று பலமுறை மாயம் காட்டி மீண்டும் மீண்டும் எழுந்து பெய்துகொண்டே இருந்தது மழை. உச்சிப் பொழுதுக்கு முன்னரே கதிரொளி மறைந்து மீண்டும் முற்றிருளாகியது. மீண்டும் இருள் வந்து மூடிக்கொண்டது

எண்ணியிராத தருணத்தில் மழை ஓயத்தொடங்கியது. சற்று நேரத்திலேயே தெற்கிலிருந்து வந்த காற்று மழையை திரைச்சீலையென சுழற்றி அள்ளிக்கொண்டு சென்றது. மீண்டும் வந்த காற்றில் துளிச்சிதர்கள் இருந்தன. மீண்டும் வீசிய காற்றில் தொலைதூரத்துப் புழுதி வெந்த மணம் இருந்தது. கூரைகள் நீரைச்சொட்டி உதறி எழுந்து மீண்டும் பறக்கலாயின. வானில் விண்மீன்கள் சில மெல்ல பிதுங்கி எழுந்து வந்தன.

இரவு முழுக்க தெற்கிலிருந்து அலையலையென காற்று வந்து ஊரைச்சூழ்ந்து சுழன்று கடந்து சென்றது. மழையில் கிடந்தவர்கள் ஒவ்வொருவராக விழித்து கையூன்றி தவழ்ந்தபடி குடில்களுக்குள் சென்றனர். அங்கே ஈரத்துணியுடனே படுத்து துயிலலாயினர். சிலர் மண்ணில் முகம் புதைத்து நெஞ்சுகலுழ்ந்தவர்கள் போல அழுதபடி ஏதோ முனகினர். சிலர் கைகூப்பியபடி மல்லாந்துகிடந்து அரற்றிக்கொண்டிருந்தனர்.

அர்ஜுனன் அருகிருந்த குடிலொன்றுக்குள் நுழைந்து தன் தோலாடையை அகற்றி மரவுரி அணிந்துகொண்டான். குடில் நடுவே இரும்பு யானத்தில் அனல் வைத்து அதைச்சூழ்ந்து வணிகர்கள் அமர்ந்திருந்தனர். ஒருவன் சற்று இடம் விட்டு “அமருங்கள், வீரரே!” என்றான். அர்ஜுனன் அமர்ந்து கைகளை அனல் மேல் நீட்டி அவ்வெம்மையை உடல் முழுக்க வாங்கி நிரப்பிக்கொண்டான். குருதியில் வெம்மை படர்ந்து செல்லச் செல்ல அவன் உடல் சிலிர்த்தபடியே இருந்தது.

குளிருக்கு வெம்மையையும் வெம்மையில் குளிரையும் உணர்வதுபோல் உடலறியும் பேரின்பம் பிறிதில்லை என்று அவன் எண்ணிக்கொண்டான். உடல் அறியும் இன்பதுன்பங்களே புறவயமானவை. மறுக்கமுடியாதவை. ஆகவே அவை மட்டுமே இன்பங்களும் துன்பங்களும். பிற அனைத்தும் உளமயக்குகள். ஆம். அகிபீனா இழுத்தால் என்ன? வேண்டியதில்லை, இப்போதே சித்தம் பித்துகொண்டிருக்கிறது. மழை மனிதர்களை பித்தாக்க முடியுமா? முடியும். அதற்கு பதினொருமாதம் அனலில் காயவேண்டும். வெந்து உருகவேண்டும். மழை இன்னும் பெய்கிறதா? இல்லை, இது காற்று.

அமர்ந்தபடியே துயிலத்தொடங்கி கையூன்றி விழுந்து வெறுந்தரையிலேயே ஆழ்ந்துறங்கினான். காலையில் ஊரின் ஓசைகளைக் கேட்டபோது எங்கிருக்கிறோம் என்ற உணர்வு சற்று பிந்தி எழுந்தது. தொடர்பயணங்களில் இட உணர்வு முற்றிலும் அகன்றுவிட்டிருந்தமையால் அவன் அப்போது மிதிலையின் உணவு விடுதி ஒன்றில் துயின்று கொண்டிருப்பதாக உணர்ந்தான். விழித்துக்கொண்டு தன்னைச் சுற்றி எவரும் இல்லை என்று கண்டபின் ஆடை திருத்தி எழுந்து நின்றான்.

குனிந்து குடில் வாயில் வழியாக வெளியே வந்தபோது அங்கு மழை பொழிந்ததன் எந்தத் தடயமும் எஞ்சியிருக்கவில்லை என்று கண்டான். தரையின் ஈரம்கூட காய்ந்துவிட்டிருந்தது. அங்கு வந்தபோது எழுந்து பறந்துகொண்டிருந்த புழுதி பல்லாயிரம் கால்தடங்களும் குளம்புத்தடங்களுமாக படிந்திருப்பதைக் கொண்டே பெய்து நனைந்த மழையை நினைவுகூர முடிந்தது. வான் நிரப்பிச் சென்றுகொண்டிருந்த

காற்றில் நீர்த்துளிகள் இல்லை, ஆனால் நீர் என அது மணத்தது.

ஏவலர்கள் பொதிகளைப் பிரித்து அத்திரிகளின் முதுகில் கட்டிக் கொண்டிருந்தார்கள். ஓய்வும் உணவும் கொண்டு புத்துயிர் பெற்றிருந்த அத்திரிகள் கழுத்து மணியை அசைத்தபடி கடிவாளத்தை மென்று காதுகளைத் திருப்பி ஓசைகளைக் கூர்ந்தன. ஒற்றைக்கால் தூக்கி மூன்றுகாலில் நின்றன. அவற்றின் வால்சுழற்சிகளும் செருக்கடிப்பொலிகளும் பசுஞ்சாண மணமும் சிறுநீர் வீச்சமும் குடில் சூழ்ந்த அந்நடுமுற்றத்தில் நிறைந்திருந்தன.

“நாம் கிளம்புகிறோம், வீரரே!” என்றான் வாகுகன். “நம் வரவு இவர்களுக்கு நல்லூழைக் கொணர்ந்தது என்று சொல்கிறார்கள்.” அர்ஜுனன் “இவர்கள் வேளாண்மை செய்வதுண்டா?” என்றான். “இங்கு அவ்வாறு எதையும் செய்ய முடியாது. இங்குள்ள புழுதியும் காற்றும் அப்படிப்பட்டவை. இந்த மழை இவர்களின் முட்காடுகளை தளிர்க்கச் செய்யும். அதை உண்ணும் சிற்றுயிர்கள் பெருகும். இன்னும் பலமாதங்களுக்கு இங்கு ஊனுயிர்களுக்கு குறைவிருக்காது. இவர்கள் இவ்வழிசெல்லும் வணிகர்களையும் அவ்வப்போது பெய்யும் மழையையும் நம்பி வாழ்பவர்கள்.”

ஊரே அமைதியாக இருப்பதைக் கண்டு “அவர்கள் எங்கே?” என்று அர்ஜுனன் கேட்டான். கருணர் “மழை பெய்துவிட்டதால் அவர்கள் பொழுதை வீணடிக்க விரும்பவில்லை. இது ஈசல்கள் எழும் பொழுது. அவர்களுக்கு இது அறுவடைக்காலம் போல. வெயிலில் உலரச்செய்து பானைகளில் நிறைத்து மூடியை களிமண் கொண்டு பொருத்தி காற்றிலாது மூடி புதைத்து வைத்தால் நான்குமாதம் வரை இருக்கும். ஈசல்வலைகளுடன்

விடிவதற்குள்ளாகவே அனைவரும் காடுகளுக்குள் சென்றுவிட்டார்கள்” என்றார்.

அர்ஜுனன் முகம் கழுவி வாகுகன் அளித்த ஊன் உணவை உண்டு புறப்படுவதற்கு சித்தமாக வில்லுடன் வந்து நின்றான். “வருணனை வணங்கி கிளம்புவோம். அளியிலாப் பெரும்பாலையை இம்முறை எளிதில் கடப்போம் என்று எண்ணுகிறோம்” என்று கருணர் சொன்னார். “வருணன் சினம் கொண்டவன். அவன் அளி பாலைமழைபோல இனியது” என்றார் ஒரு வணிகர்.

அவர்கள் ஊர் மூலையில் அமைந்திருந்த வருணனின் சிறு பதிட்டை நோக்கி சென்றனர். புலரிக்கு முன்பாகவே ஊனுணவையும் காட்டுமலர்களையும் வருணனுக்குப் படைத்து பூசனை செய்திருந்தனர் ஊர்மக்கள். அவர்கள் வருணனை வணங்கினர். வருணன் காலடியில் இருந்த சிறு கிண்ணத்தில் இருந்து செம்மண் எடுத்து நெற்றியில் அணிந்து அருள் பெற்றனர். அர்ஜுனன் அந்தக் கல்லில் விழித்த விழிகளை நோக்கினான். முந்தைய நாளின் இடிமின்னலும் மழைக்குளிரும் நினைவிலெழுந்தமைந்தன.

“கிளம்புவோம்” என்றார் வணிகத்தலைவர். ஊருக்கு புறம்காட்டாமல் பின்காலடி எடுத்து வைத்து வாயிலினூடாக ஏழு சுவடுகள் பின்சென்று குனிந்து தரைதொட்டு சென்னி சூடி வணங்கி அவர் திரும்பி நடக்க அத்திரிகளும் ஏவலருமாக வணிகர்குழு அவர்களைத் தொடர்ந்து சென்றது. அர்ஜுனன் ஆளில்லாது கைவிடப்பட்ட குருவிக்கூடுகள்போல நின்ற ஊரை இறுதியாக திரும்பிப்பார்த்தான்.

செல்லும் வழி முழுக்க புழுதி அடங்கி, வானம் குளிர்ந்த ஒளி கொண்டு, காற்றில் நீர்த்துளிகள் பரவி, இனிய மண்மணத்துடன் பயணம் இனிதாக இருந்தது. சூதரின் பாடலொன்று தொலைவில் கேட்டது. முன்பே செல்லும் வணிகர் குழுவில் மெலிந்து எலும்புகள் புடைத்த கழுத்தும் சற்றே கூன் கொண்ட முதுகும் தசைகள் இறுகிய வயிறும் கால்களும் கொண்ட முதிய சூதர் இருப்பதை அர்ஜுனன் கண்டிருந்தான். சீவிடு போல சிற்றுடலிலிருந்து எழும் பெருங்குரல் கொண்டவர். அவர்கள் அக்குழுவை நடைவிசையால் அணுகும்போதெல்லாம் அவர் பாடல் காற்றில் எழுந்து வந்துகொண்டிருந்தது.

வாகுகன் "வருணனைப் பாடுகிறார்" என்றான். அர்ஜுனன் புன்னகைத்தான். "வருணனின் நகரம் மேற்கே அலையற்ற கடலுக்கு அப்பால் உள்ளது. உப்பால் ஆன கோட்டை சூழ்ந்தது அந்நகர்" என்றான் வாகுகன். "எப்படி தெரியும்?" என்று அர்ஜுனன் புன்னகையுடன் கேட்டான். "ஒவ்வொருமுறை இவ்வழிசெல்லும்போதும் அந்நகர் பற்றி எவரேனும் சொல்கிறார்கள். இன்று மழை பெய்ததனால் வருணனை புகழ்ந்து பாடுகிறார்கள். மழையின்றி புழுதி அனலென சுழன்று கடந்துசெல்லும் பொழுதில் நடக்கும்போது வருணனை வேண்டிப்பாடுகிறோம். வருணனை நினைக்காது இப்பாதையை எவரும் கடக்க முடியாது" என்றான் நிகும்பன்

"வருணனின் பெருநகர் மூன்று பெருங்கோட்டைகளால் ஆனது" என்று கருணர் சொன்னார். "கதிரொளியில் கண் கூசவைக்கும் வெண்மை கொண்ட உப்புக்கோட்டை. அதற்கப்பால் அசைவற்ற நீலநிற நீரால் ஆன பெருங்கோட்டை. அதற்கப்பால் வெண் சங்கும் சிப்பிகளும் சேர்த்தடுக்கிக் கட்டப்பட்ட அரண்மனைக்கோட்டை. அவன் அரண்மனை நீருக்கடியில்

அமைந்துள்ளது. நீர்ப்பாசிகளைப் பின்னி கட்டப்பட்டது அது என்று ஒரு கவிஞன் சொன்னான். நீரலைகளுக்கு ஏற்ப நூற்றியெட்டு அடுக்கு கொண்ட பெருமாளிகையில் நெளிந்து கொண்டிருக்கும் அதன் சுவர்கள் வளைவுகள் அனைத்தும் அலைந்தாடும்.”

“வருணன் சிறகுகள்கொண்ட மீன்தேவியராலும் நீருள் பறக்கும் நாகங்களாலும் காக்கப்படுகிறான். நீலவைரங்களால் அடுக்கிக் கட்டப்பட்டது அவன் அரண்மனைக்கூடம். அதற்குள் நீர்மணிகளால் ஆன அரியணையில் அமர்ந்து அவன் புவிநீரை எல்லாம் ஆள்கிறான்.”

“வருணனை சென்று காண்பது எப்படி?” என்று அர்ஜுனன் கேட்டான். சிரித்துக்கொண்டு “ஏன்? நீங்கள் சென்று காண எண்ணியுள்ளீரா?” என்றான் நிகும்பன். அவன் விழிளை நோக்கியபடி “ஆம்” என்றான் அர்ஜுனன். வாகுகன் அவன் கையைப்பற்றி “அர்ஜுனன் திசைத்தேவர்களைச் சென்று வென்று கொண்டிருக்கிறார் என்று கேள்விப்பட்டேன். வருணனை அவர் சென்று கண்டிருப்பாரா?” என்று கேட்டான். “காணச் சென்றுகொண்டிருக்கிறான் போலும்” என்றான் அர்ஜுனன் சிரித்தபடி.

“இவர்கள் இதை கதையென எண்ணுகிறார்கள் ஆனால் செல்லவும் காணவும் முடியுமென்றே நான் எண்ணுகிறேன்” என்றான் வாகுகன். கருணர் சிரித்துக்கொண்டு “நீராழத்தில் சென்று நீரரமகளிரைக் கவர்ந்து நீர் நாகங்களைக் கடந்து வாய்திறந்து விழுங்க வரும் கவந்தமச்சர்களை வென்று வருணனைக் காணவேண்டும். அப்படி சென்று கண்டு உமக்கு வரப்போவதென்ன?” என்றார். “மெய்மை” என்றான் அர்ஜுனன்.

“அத்தனை தொலைவில்தான் அது இருக்குமா?” என்றான் வாகுகன். “இங்கு நம்முடன் அது இயல்பாக இல்லையென்பதனால் அதற்கு அப்பால் மேலும் துலங்கி இருக்கும் என்பதுதானே பொருள்?” என்றான் அர்ஜுனன். “இதென்ன கூறுமுறை என்று எனக்கு விளங்கவில்லை” என்று கருணர் நகைத்தார். “சொல்லுங்கள், வீரரே! வருணனிடம் நீர் கோரப்போகும் மெய்மை என்ன?” என்றார்.

“ஒவ்வொரு திசைக்கும் ஒரு மெய்மை” என்றான் அர்ஜுனன். “இருண்ட ஆழத்தின் மெய்மை யமனிடம். ஒளிரும் துயரங்களின் மெய்மை குபேரனிடம். நெளியும் உண்மை வருணனிடம். உடையாத வைரத்தின் உண்மை இந்திரனிடம். மெய்மை என்பது இந்நான்கும் கலந்த ஐந்தாவது ஒன்றாகவே இருக்க முடியும். நான்கையும் கடக்காது ஐந்தாவதற்கு செல்ல முடியாது என்று தோன்றுகிறது.”

கருணர் “இப்படி சொல்லிக்கொண்டே செல்லலாம். கதை சொல்லல் என்பது இனிது. அது இங்குள்ள இறுகிய புடவிநெறிகளை மீறிச்செல்லும் கனவு. கல்லை கையில் அள்ளி அருந்தலாம். வானை அள்ளி குடத்தில் நிறைக்கலாம். ஆனால் அது அழகிய சிலந்தி வலை ஒன்றில் நாம் சென்று சிக்கிக்கொள்வது போல. திமிறும்தோறும் மேலும் சூழும். அனைத்துக் கதைகளுக்கும் நடுவே விஷக்கொடுக்குடன் சிலந்தி அமர்ந்திருக்கும். அதற்கு நம் உயிரை அளித்தாக வேண்டும்” என்றார்.

அவனருகே வந்து “கதைகளல்ல வாழ்க்கை. இங்கு இவ்வாறு இருப்பதுதான் இளைஞனே வாழ்க்கை. உவத்தல் அன்றி இப்புவியில் வாழ்வுக்கு பொருளொன்றும் இல்லை. மகிழ்வன்றி மெய்மை என்று ஒன்றில்லை” என்றார். “அவ்வாறு எண்ணுவது

பிறிதொரு சிலந்தி வலை” என்று அர்ஜுனன் சொன்னான். கருணர் உரக்க நகைத்து “ஆம், இருக்கலாம்” என்றார். “இளமையிலே நான் இதில் சிக்கிவிட்டேன்.”

“நான் இங்குள்ளதே முழுமை என எண்ணிக் களியாடினேன். அக்களியாட்டு முடிந்ததுமே அவ்வாறல்ல என்று உணர்ந்து கிளம்பினேன். இங்குளதில் முழுதமைந்திருப்பவன் அங்கு என்னும் சொல்லையே அறிந்திராதவன். அங்குளதை உணர்ந்தபின் இங்கமைபவன் இயல்பானவன் அல்ல. அவன் அதைச் சொல்லிச் சொல்லி தன்னுள் நிலைநாட்டிக்கொண்டே இருக்கவேண்டும்” என்றான் அர்ஜுனன்.

கருணர் திகைப்புடன் நோக்கிவிட்டு திரும்பிக்கொண்டார். நிகும்பன் “வருணனிடம் நெளியும் மெய்மையை நெளிந்தபடி அடையுங்கள் வீரரே, அப்போதுதான் அது நிலையான உண்மையாகும்” என்றான். சூழ்ந்திருந்தவர்கள் நகைத்தனர்.

# கிராதம் - 30

**[ 5 ]**

நெடுவெளி வளைக்க விரிந்து மேலும் விரிந்து எனக்கிடந்த ஏழு பெரும்பாலை நிலங்களைக் கடந்து அர்ஜுனன் இருபத்தியாறு மாதங்களில் வாருணம் என்றழைக்கப்பட்ட அறியாத் தொல்நிலத்தை சென்றடைந்தான். வருணனின் நிலம் அது என்றன அவன் சென்றவழியில் கேட்டறிந்த கதைகள். மழைக்கலங்கல் நீரின் நிறமுடைய பிங்கலத்தைக் கடந்ததும் தன்னை அழைத்துவந்த பனிமலை வணிகர்களிடம் விடைபெற்றுக்கொண்டான். அவர்கள் “நன்று சூழ்க, வீரரே... அறியா நிலம் நோக்கி செல்கிறீர்கள். அங்கு அறிந்த

தெய்வங்கள் துணை வரட்டும்” என வாழ்த்தி விடைகொடுத்தனர்.

முள்ளூற்று என்று பாலைநில மக்களின் மொழியில் அழைக்கப்பட்ட தொன்மையான சிற்றூரில் ஏழு நாட்கள் அவன் தங்கியிருந்தான். புழுதி ஓடும் நதி என பாலை வளைந்து கிடந்தது அப்பாதை. விண்வடிவத் தெய்வம் ஒன்று சாட்டையால் அறைந்து பூமி மார்பில் இட்ட குருதித் தழும்புபோல் இருந்தது அது. எங்கிருந்தோ எவரோ மறுகணம் வரக் காத்திருப்பதென ஒருமுறையும் எவரோ முந்தைய கணம் சென்று மறைந்தது என மறுமுறையும் தோன்றச்செய்யும் வெறுமைகொண்டிருந்தது.

ஏழு நாட்கள் அங்கிருந்த மதுவிடுதி ஒன்றின் வெளித்திண்ணையில் அமர்ந்து அப்பாதையையே நோக்கிக்கொண்டிருந்தான். பாதை என்பதே பெரும்கிளர்ச்சியை அளித்த இளமைக்காலத்தை எண்ணிக்கொண்டான். பின்னர் பாதைகள் அச்சத்தை அளிப்பவையாக மாறிவிட்டிருந்தன. அவற்றின் முடிவின்மை அளிக்கும் அச்சம். முடிவின்மை நோக்கி செல்லும் பாதை என்பது உருவாக்கும் பொருளின்மை குறித்த அச்சம்.

அங்கிருந்து எழுந்து மீண்டும் அஸ்தினபுரிக்கு திரும்பிவிடவேண்டும் என்று உள்ளம் விரும்பியது. உடனே கசப்புடன், அஸ்தினபுரிக்கு சென்று என்ன செய்வதென்று எண்ணிக்கொண்டான். அரண்மனைக்குள் நுழைந்து தன் அறைக்குள் நுழையலாம். மஞ்சத்தில் புரளலாம். அன்னையின் கருப்பைக்குள் மீளலாம். அங்கிருந்து பார்த்திவப் பரமாணுவுக்கு குறுகிச் செல்லலாம். அங்கிருந்து மீண்டும் கடுவெளிக்கு

விரிந்தெழலாம். இப்பாதையும் அங்குதான் செல்கிறது என்று எண்ணியபோது உரக்க நகைத்தான்.

நீண்ட சடைமுடியும் தோள்களில் சரிந்துகிடந்த சடைப்புரிகளும் பித்தெழுந்த விழிகளுமாக இருந்த அவனது நகைப்பு மதுக்கடைக்குள் இருந்த காப்பிரிநாட்டுத் தொலைவணிகர் மூவரை திரும்பிப்பார்க்க வைத்தது. பெரியஉதடுகளும் எருமைவிழிகளும் மின்னும் கருநிறமும் கொண்ட ஒரு வணிகன் வெளியே வந்து “புளித்த மது அருந்துகிறீர்களா, பாரதரே?” என்று கேட்டான். அர்ஜுனன் “ஆம்” என்று உள்ளே சென்று மதுவை வாங்கி அருந்தினான். அழுகல் மணத்துடன் எழுந்த ஏப்பத்தை சற்று உடல் உலுக்க குமட்டி வெளிவிட்டபடி மீண்டும் திண்ணைக்கு வந்து அமர்ந்தான்.

“அங்கு வெயிலின் அனலடிக்கிறதே? இங்குள்ள இருள் குளுமையாக இருக்கிறதே!” என்றான் இன்னொருவன். அவனை நோக்கி மறுமொழி எடுக்க எண்ணி சொல் நாவில் எழாது அர்ஜுனன் தலையசைத்தான். “இன்னும் சில நாட்களில் வடபுலத்திலிருந்து பீதர்நாட்டு வணிகர்கள் வருவார்கள். ஆயிரம் ஒட்டகங்களுக்கு மேல் அவர்களுடன் வரும். அது ஒரு நகரும் சிற்றூர். கூடாரங்களும் உணவும் நீரும் அவர்களிடம் இருக்கும். பாடகர்களும் பெண்களும்கூட இருப்பார்கள். அவர்களின் நாட்டிலிருந்து பாலையைக் கடந்து யவன நாட்டை அடைய அவர்களுக்கு இரண்டு ஆண்டுகள் ஆகும்” என்றான் ஒருவன்.

“அவ்வளவு தொலைவு சென்று அவர்கள் ஈட்டும் பொருள்தான் என்ன?” என்று தரையில் அமர்ந்திருந்த மேய்ப்பன் கேட்டான். பச்சைக்கண்களும் ஒடுங்கிய கன்னமும் சுருக்கங்கள் செறிந்த முகமும் கொண்டிருந்தான். முதுமைகொண்ட சோனக

வணிகன் கையில் மதுக்குவளையுடன் "எந்த வணிகமும் பொருளை எண்ணி தொடங்கப்படுவதில்லை. நேர்நோக்கில் பொருள் மட்டுமே வணிகனின் எண்ணத்தில் உள்ளது. ஆனால் பொருள் என்பதற்கே மீறல், கடந்து செல்லல் என்பது உட்பொருள். எண்ணிப்பாருங்கள், உண்பதற்கும் உடுப்பதற்கும் மட்டும் பொருள் தேவைகொண்டவன் பொருள் விழைவதே இல்லை. எவராயினும் பொருள் விழைவதே பிறிதொன்றென ஆகவும் தானும் பிறரும் வகுத்த எல்லைகளிலிருந்து வெளியேறவும்தான்" என்றான்.

"ஆம், உண்மை" என்றான் காப்பிரிவணிகன். "அமர்ந்த இடத்திலிருந்து பொன் குவிப்பதைப் பற்றி கனவு காணும் இளவணிகன் எவனாவது உள்ளானா? தொலைவில் மேலும் தொலைவில் எங்கோ பொன் குவிந்துள்ளது என்றல்லவா அவன் எண்ணுகிறான்? தொடுவான் முட்டும் நெடும்பாதையைப்போல வணிகனை கிளர்ச்சியுறச் செய்வது எதுவுமில்லை. ஆம், பொன்கூட இல்லை" என்றார் முதியவர். காப்பிரி வணிகன் "உண்மைதான்" என்றான்.

முதிய வணிகன் மதுக்கோப்பையை வைத்துவிட்டு வாயை அழுந்தத் துடைத்தான். "வீரர்களின் வெற்றிக்கதைகளை சூதர்கள் பாடுகிறார்கள். தலைமுறை தலைமுறையாக அவர்கள் பெயர்கள் சொல்லில் பதிந்து நீடிக்கின்றன. வணிகர்களை எவரும் பாடுவதில்லை. வணிகர்கள் பொன் கொடுத்தால்கூட அவர் புகழை பாடவேண்டுமென்று சூதர்கள் நினைப்பதில்லை. ஆனால், இளையோரே! நாம் காணும் இப்புவி என்பது வணிகர்களால் உருவாக்கப்பட்டது. ஆம், நாம் உருவாக்கியிருக்கிறோம் இதை."

“ஒவ்வொரு முறையும் தன் மூதாதையர் வகுத்த எல்லையொன்றை மீறி ஒரு காலடி எடுத்து வைக்கும் வணிகன் விராட வடிவம் கொண்டு இப்புவியில் நிறைந்திருக்கும் மானுடத்தின் ஒரு புதிய தளிராக எழுகிறான். அவனில் அப்போது கூடும் தெய்வமே மானுடர்க்கு அருளும் தெய்வங்களில் முதன்மையானது. அதை இவ்வெளிய மக்கள் உணர்வதில்லை. பொருள்வயின் அலையும் வணிகன் பொருளையும் அடைவதில்லை, தோழரே. வணிகம் எனும் பேரின்பத்தை அறிந்தவனே அவ்வின்பநாட்ட விசையை பொருளாக மாற்றிக்கொள்கிறான்” என்றார் முதியவர். “நீர் என்ன சொல்கிறீர், வீரரே?” என்று அழுக்கான தோலாடை அணிந்து தலையில் மேலும் அழுக்கான தலையுறையுடன் தரையில் கால்மடித்து அமர்ந்திருந்த மதுக்கடை ஏவலன் அர்ஜுனனை நோக்கி சிரித்தபடி கேட்டான். மீசையை சுட்டுவிரலால் சுழற்றியபடி அவனை நோக்கிக்கொண்டு பேசாமல் இருந்தான் அர்ஜுனன். அவன் பேசப்போவதில்லை என்று உணர்ந்தபின் ஏவலன் விழி திருப்பிக்கொண்டான்.

“அவரும் எல்லை கடந்து செல்பவரே. அவரால் வணிகர்களை புரிந்துகொள்ள முடியும்” என்றான் மெல்லிய உடல்கொண்ட ஒருவன். முகத்தைப் பாராதவர்கள் அவனை சிறுவன் என்றே சொல்லிவிடுவார்கள். “வீரர் செய்வதும் வணிகமே. அவர்கள் வெல்வது பணமல்ல, புகழ்.” முதிய வணிகன் “புகழ் அல்ல, வெற்றி. தன்மீதான வெற்றி. அது அளிக்கும் மெய்மை” என்றார். அர்ஜுனன் மெல்ல அச்சூழலில் இருந்து நழுவி மீண்டும் பாதைமேல் படர்ந்த சித்தம் மட்டுமென்றானான்.

**[ 6 ]**

ஏழாவது நாள், தொலைவில் குருதி ஒற்றிஎடுத்த பஞ்சுத் திவலை போல செம்புகை எழுவதை மதுக்கடைக்காரன் கண்டான். உடல் அனல்பட்டதுபோல துடிக்க "வருகிறார்கள்! அதோ!" என்று கூவியபடி கொம்பு ஒன்றை எடுத்து கவிழ்த்துப் போடப்பட்ட மரத்தொட்டி மேல் ஏறிநின்று அவன் மும்முறை முழங்கியதும் அச்சிற்றூரிலிருந்து ஆண்களும் பெண்களும் இல்லங்களில் இருந்து புதரிலிருந்து சிறுபறவைகள் என கிளம்பி பாதையை நோக்கி கூச்சலிட்டபடி ஓடி வந்தனர்.

ஒவ்வொருவரும் தங்கள் கையில் பலவண்ணக் கொடிகளை எந்தியிருந்தனர். பச்சைக் கொடி உணவையும் ஓய்விடத்தையும் குறித்தது. நீலநிறக் கொடி உணவுடன் பெண்டிரும் உண்டென்பதை குறித்தது. நீலச்சிவப்புக் கொடி அங்கு சூதாட்டம் நிகழும் என்பதை காட்டியது. மஞ்சள்நிறக் கொடி குளியல்சேவை உண்டு என்று சொன்னது. செம்பச்சைநிறக் கொடி பொருள் மாற்று வணிகத்திற்கு அழைப்பு விடுத்தது. காற்றில் துடிதுடித்து அவை எழுந்து பறந்து அவ்வணிகக்குழு நோக்கி செல்லத் தவித்தன.

அர்ஜுனன் எழுந்து அங்கிருந்த முள்மரத்தின் அடியில் மார்பில் கைகளைக் கட்டியபடி நோக்கி நின்றான். வணிகர்குழுவில் முதன்மையாக குருதிநிறப் பெருங்கொடி ஒன்று பறந்தது. அதில் வாய்பிளந்து சுருண்டு பறக்கும் முதலைச்சிம்மம் துடித்தது. அதன் நா அனல்சுருளாக எழுந்திருக்க பெரிய உருண்டைவிழிகள் பசிகொண்டிருந்தன. "பீதர்கள்!" என்றான் ஒருவன். "பீதர்கள்! பீதர்கள்!" என்று குரல்கள் எழுந்தன. "பீதர்கள்" என்றபடி ஒருவன் குடில்களை நோக்கி ஓடினான்.

வணிகக்குழு மிக மெதுவாக உருவம் கொண்டு பெருகி வளர்ந்து அணுகுவதை அர்ஜுனன் நோக்கி நின்றான்.

அவர்களுக்கு மேல் புழுதி எழுந்து செந்நிறக் குடைபோல் நின்றது. அனல் என படபடத்த கொடிக்குப் பின்னால் படைக்கலங்களை ஏந்தியவர்கள் சீர்நடையிட்டு வந்தனர். இரும்புப்பட்டைகள் தைக்கப்பட்ட தோற்கவசங்களும் மெழுகிட்டு துலக்கப்பட்ட தோல் காலணிகளும் தீட்டப்பட்ட இடைப்பட்டைகளும் மின்னின. பாதரசக் குமிழென ஒளிவிட்டன தலைக்கவசங்கள். வேல்முனைகளும் வாள்முனைகளும் வெயிலில் நீர் அலைவளைவுகள் என ஒளி வீசின.

இரு நிரைகளாக ஒட்டகைகள் இரட்டைப்பொதி சுமந்து நீரில் ஆடும் கலங்களைப்போல அசைந்து வந்தன. ஒட்டகைகளின் நிரைக்கு இருபுறமும் படைக்கலங்களை ஏந்திய வீரர்கள் காவல் வர தொடர்ந்து செந்நிறமான தலைப்பை அணிந்த பீதவணிகர்களும் நடந்து வந்தனர். அவர்களைத் தொடர்ந்து ஏவலர்களும் சுமையர்களும் நான்கு நிரைகளாக வந்தனர்.

ஒட்டகைகளின் மீது இருபுறமும் தொங்கும்படியாக பொதிகள் ஏற்றப்பட்டிருந்தன. தோலுறைகளால் பொதியப்பட்டவை. அவற்றுக்குள் பட்டும் புல்லேட்டுக் கட்டுகளும் இருக்கும் என அவன் அறிந்திருந்தான். தேய்ந்த கூழாங்கற்பற்கள் தெரிய தாடையை தொங்கவிட்டு அசைபோட்டபடியும், கடிவாளத்தை மென்றபடியும், அண்ணாந்து கழுத்தை வளைத்து எடை மிக்க குளம்புகளை எறிந்து எறிந்து எடுப்பவை மணல் எழுந்து தெறிக்க வைத்து ஒட்டகைகள் அணுகின.

பீதவணிகர்களில் பெரும்பாலானவர்கள் குருதிநிற ஆடை அணிந்து உயரமான தோல் காலணிகள் அணிந்திருந்தனர். அவர்களின் செந்நிற ஆடைகள் பாலைக்காற்றில் படபடக்க அனல் எழுந்து தழலாடுவதுபோல அவர்கள் நிரை நெளிந்தது.

தொடர்ந்து வந்த அத்திரிகளில் முதிய பெருவணிகர்கள் அமர்ந்திருந்தனர். பொன்பட்டுநூல் பின்னிய தலையணிகளை அணிந்திருந்தனர். அவர்களுக்கு இருபுறமும் நாணேற்றப்பட்ட விற்களுடனும் அம்புகள் நிறைந்த தூளிகளுடனும் வில்லவர்கள் வந்தார்கள். தொடர்ந்து காவலரால் சூழப்பட்ட அத்திரிகள் உணவுப்பொதிகளையும் நீர் நிறைந்த தோற்பைகளையும் சுமந்தபடி வந்தன. இறுதியாக மீண்டும் வில்லவர்கள் வந்தனர். அவர்கள் தொலைவை தொடு பெருவிற்களும் நீண்ட அம்புகளும் கொண்டிருந்தனர்.

கொடியுடன் வந்த முதல் காவலன் விடுதிக்கு முன்பிருந்த முற்றத்தை அடைந்தபோதும் பின்நிரை வந்துகொண்டிருந்தது. பள்ளத்தில் இறங்கித்தேங்கும் நீரோடைபோல அந்தப் பெருநிரை முற்றத்தில் வளைந்து சுழலத்தொடங்கியது. பெருவணிகர்கள் தனியாகப் பிரிந்து அவர்களை ஓடிச்சென்று வரவேற்ற அவ்வூர் மக்களை விழிசுருங்கச் சிரித்தபடி எதிர்கொண்டனர். கைகளை விரித்து பெண்களை தழுவிக்கொண்டார்கள். ஊரார் கொடிகளைத் தாழ்த்தி கைகளைத் தூக்கி தங்கள் மொழியில் உரக்க வாழ்த்துரைத்தனர்.

அத்திரிகளிலிருந்து பெருவணிகர்கள் இறங்கியதும் அவர்களின் கால்களைத் தொட்டு சென்னி சூடி தங்கள் இல்லங்களுக்கு வரும்படி அழைத்தனர். கூச்சல்களும் சிரிப்பொலிகளும் வாழ்த்தொலிகளும் நிறைந்திருந்தன. சிறு குழந்தைகள் நடுவே கூச்சலிட்டபடி ஓடி வணிகர்களின் ஆடைகளைத் தொட்டு பணம் கேட்டன. அவர்கள் செம்புநாணயங்களை அவர்களுக்கு அளித்தனர். உணவைச் சூழ்ந்து கூச்சலிடும் காகங்கள்போல குழந்தைகள் அவர்களை மொய்த்தன.

காவலர்கள் படைக்கலங்களைத் தாழ்த்திவிட்டு கவசங்களையும் காலணிகளையும் கழற்றினர். சிலர் களைப்புடன் அப்படியே அமர்ந்து கைகளைத் தூக்கி சோம்பல் அகற்றினர். ஏவலர்கள் ஒட்டகைகளை கடிவாளம் அகற்றி விட்டுவிட்டு அத்திரிகளை நாடாவைப்பற்றி முதுகில் கையால் அடித்து அதட்டி அழைத்துச் சென்றனர். ஒட்டகைகள் கால்மடித்து விழுவதுபோல நிலத்தில் நெஞ்சுபட அமர்ந்து ஒருக்களித்துக்கொண்டன. அத்திரிகள் கனைத்து தங்கள் தோழர்களை அழைத்தன. பொதி அகன்றதும் முதுகை நீட்டி இளைப்பாறலுடன் சாணியுருளைகளை உதிர்த்தன. பச்சைக்குழம்பாக சிறுநீர் கழித்து வால்சுழற்றி துளிவிசிறின.

ஏவலர் பொதிகளைச் சரித்து இறக்கி இழுத்துச்சென்று ஒன்றுடன் ஒன்று சேர்த்து சிறு குன்றுகள்போல அடுக்கினர். ஒட்டகைகள் நாணொலி எழுப்புவதுபோல ஒலி எழுப்பின. தும்மல் ஓசையிட்டபடி தலைகளை குலுக்கின. அருகிலிருந்து ஓர் ஒட்டகை கண்களை நோக்கியபோது விழி திறந்தபடி அது துயிலில் இருப்பதுபோல் அர்ஜுனனுக்குத் தோன்றியது. அவற்றின் குளம்புகளில் லாடங்கள் தேய்ந்திருந்தன. குறியவாலை பட் பட் என அவை அறைந்து அவ்வோசையால் பேசிக்கொண்டன.

அத்திரிகளை நீண்ட மரத்தொட்டிகளில் ஊற்றப்பட்ட நீரை அருந்துவதற்காக கொண்டுசென்றனர். கழுத்து மணி குலுங்க ஆவலுடன் நீரருகே சென்று மூழ்கி மூக்கு மயிர்களில் துளிகள் சிதற தலைதூக்கி செவிகளை அடித்தபடி சிலுப்பிக்கொண்டு அவை நீரருந்தின. நீரின் தண்மை அவற்றின் உடலின் அனலை அவிப்பதை வால் சுழலும் துள்ளலிலிருந்து அறியமுடிந்தது.

ஒட்டகைகள் நீருக்கென தவிப்பெதையும் வெளிப்படுத்தவில்லை. ஓர் ஒட்டகை படுத்தபடியே மல்லாந்து நான்கு கால்களையும் மேலே தூக்கி உதைத்து கனைத்தது. பிற ஒட்டகைகள் ஆர்வமில்லாது அதை நோக்கின. அவற்றின் கண்ணிமைகள் பாதி மூடியிருந்தன. தேர்ந்த கைகளுடன் ஏவலர்கள் பொதிகளை அமைத்து அவற்றின் மேல் தோலுறையிட்டு மூடி இறுகக்கட்டினர். பின்னர் அவர்களுக்கு அளிக்கப்பட்ட புளித்த மாவுக்கள்ளை மரக்குடுவைகளில் வாங்கி அருந்தினர்.

நீரை வாயிலெடுத்ததும் விழுங்காமல் வாய்க்குள்ளேயே பலமுறை சுழற்றி அவற்றின் குளுமையை உணர்ந்து துளித்துளியாக விழுங்கியபின் மீண்டும் பணியாற்றி போதுமான இடைவெளிவிட்டு இன்னொரு மிடறை அருந்தினர். அனைத்துப் பொதிகளையும் இறக்கிவைத்து அனைத்து அத்திரிகளையும் நீர்காட்டி முடித்தபிறகுதான் அவர்கள் புளித்த மதுவை அருந்தி முடித்திருந்தனர். அதன் பின்னரே ஒட்டகைகளுக்கு நீர் அளிக்கப்பட்டது.

நீரருந்தும்பொருட்டு எழுந்து தொட்டிகளை நோக்கிச் செல்ல ஒட்டகைகள் விரும்பவில்லை. எனவே மூங்கில்களில் நீர்த்தொட்டிகளை கயிற்றால் கட்டி இருவர் இருவராக தூக்கிக்கொண்டு வந்து அவற்றின் முன் வைத்து அவற்றை நீரருந்தச் செய்தனர். ஒட்டகைகளும் ஏவலரும் அத்திரிகளும் காவல்வீரரும் புழுதியால் மூடப்பட்டிருந்தனர். அம்முற்றத்தில் வந்து தங்கள் ஆடைகளை உதறிக்கொண்டபோது எழுந்த புழுதியே அவர்களை மறைக்கும் திரையாக மாறியது.

மதுவிடுதியின் அனைத்து இருக்கைகளிலும் தரையிலும் மரப்பெட்டிகளிலும் வணிகர்கள் செறிந்து அமர்ந்திருந்தனர்.

அவர்களின் பேச்சொலிகளும் சிரிப்போசையும் வாயில் வழியாகத் தெறித்தன. குள்ளனான மதுக்கடை ஏவலன் வெளியே வந்து குடில்களை நோக்கி ஓடினான். நான்குபேர் பெரிய மதுப்பீப்பாயை உருட்டியபடி உள்ளே சென்றார்கள். உள்ளிருந்து இரு வணிகர் சிரித்தபடி ஓடிவந்து அதை தாங்களும் சேர்ந்து உருட்டிச்சென்றனர்.

ஏவலரும் காவல் வீரர்களும் மதுவிடுதிக்குள் நுழைய ஒப்புதல் இருக்கவில்லை. அவர்கள் பொதிகளைச் சூழ்ந்து முற்றத்திலேயே நீள்வட்டமாக அமர்ந்து கொண்டனர். கால்களை வளைத்து மடிக்காமல் முழங்காலை ஊன்றி குதிகால் மேல் பின்பக்கத்தை வைத்து அமரும் அவர்களின் முறையும் பெரிய கைகள் கொண்ட உடையும் அவர்களை பறவைகள் போலக் காட்டின.

அவர்களின் உடல்கள் மிகச் சிறியவையாகவும் தோள்கள் முன்நோக்கி வளைந்து குறுகியதாகவும் இருந்தன. உடலோடு ஒப்பிடுகையில் அவர்களின் கைகள் மிகப் பெரியவை என்பதை அர்ஜுனன் கண்டான். கடும் உழைப்பின் விளைவாக அவை தோல் காய்ந்து மரத்தாலானவைபோல் தோன்றின. தொடர் அனல் காற்றால் அரிக்கப்பட்ட சுண்ணப்பாறைகள்போல மஞ்சள் முகங்கள் சுருக்கங்கள் மண்டி நிறம் கன்றிப்போயிருந்தன. கண்கள் சேற்று வெடிப்புக்குள் தெரியும் நீர்த்துளிகள்போல. வாய்கள் கத்தியால் கீறப்பட்ட புண்கள்போல.

குறுவில்லை கையால் மீட்டியது போன்ற விரைவொலியுடன் அவர்கள் பேசிக்கொண்டிருந்தனர். பூனைகளின் பூசல்போல மறுகணம் தோன்றியது. விடுதிக்காவலன் வந்து அர்ஜுனனை வணங்கி “பெருவணிகர் தங்களைப் பார்க்க விரும்புகிறார்.

தாங்கள் விரும்பினால் அவரிடம் வில்லவராக சேர்ந்துகொள்ளலாம்” என்றான். “நன்று” என்றபடி அர்ஜுனன் அவனுடன் சென்றான்.

விடுதிக்குப் பின்புறம் பிறைவடிவில் இருந்த மரப்பட்டைக்கூரைகொண்ட சிற்றில்களில் பெருவணிகர் பலர் உடைகளைக் கழற்றி இளைப்பாறத் தொடங்கியிருந்தனர். உடலில் படிந்த கூரிய மணல்பருக்களை அகற்றும்பொருட்டு பெரிய தோல் துருத்தியால் காற்றை விசையுடன் வீசி அவர்களின் உடலை தூய்மை செய்தபின் பெரியமரக்குடைவுக் கலங்களில் வெந்நீர் கொண்டுவந்து அதில் துணியை முக்கி அவர்களின் உடலை மெல்ல ஒற்றி எடுத்துக்கொண்டிருந்தனர் பெண்கள். அதிலிடப்பட்ட நறுமணத் தைலத்தின் ஆவி அங்கே சூழ்ந்திருந்தது. உடலெங்கும் பரவியிருந்த தோல்வெடிப்புகளில் நீர் பட்டபோது வணிகர்கள் முனகினர். சிலர் அப்பெண்களை கையால் அடித்துத் தள்ளினர்.

அவர்களின் ஆடைகளை கழிகளில் தொங்கவிட்டு மென்மையான குச்சிகளால் அடித்தும் தூரிகைகளால் வருடியும் மணலையும் அழுக்கையும் போக்கிக்கொண்டிருந்தனர் இளைஞர். உடல் தூய்மை செய்துகொண்டிருக்கும்போதே ஒரு கையில் மதுக்கிண்ணத்துடன் மெல்ல விழிசொக்கி உடல் தளர்ந்து இளைப்பாறினார்கள் வணிகர்கள் சிலர். சிலர் ஏனென்றறியாமல் அழுதுகொண்டிருந்தனர்.

அரைவட்ட வடிவ குடில்நிரையாலான ஊரின் மையமாக இருந்த பெரிய குடிலின் முன் விரிபலகையில் பீதர்குலத்து முதுவணிகர் படுத்திருந்தார். அவருடைய நீண்ட கூந்தல் பெண்களின் பின்னல் போல இடையையும் தாண்டி பின்னி கரிய நாகம்போல வளைந்து கிடந்தது. மெழுகு பூசி

திரிக்கப்பட்ட அதன் புரிகளை கீழிருந்து ஒரு பெண் பிரித்துக்கொண்டிருந்தாள். முகவாயிலிருந்து மட்டும் ஓரிரு மயிர்கள் நீண்டு நின்ற தாடியும் கீறி நீட்டப்பட்ட காதுகளும் சுருக்கங்களுக்குள் புதைந்து மறைந்த சிறிய விழிகளும் கொண்டிருந்தார்.

இடையில் தோலாடை மட்டும் அணிந்து படுத்திருக்க அவர் உடலில் துருத்தியால் ஊதப்பட்ட காற்றுடன் வெந்நீரைக் கலந்து மென்துளிகளாக்கி புகைபோல பாய்ச்சிக்கொண்டிருந்தனர் இரு பெண்கள். ஒரு சிறு பீடத்தின் மேல் வைக்கப்பட்டிருந்த அவரது காலை இரு பெண்கள் வெந்நீரால் கழுவிக்கொண்டிருந்தனர். ஒருத்தி மென்மையான கல்லால் காலை உரசிக் கழுவ இன்னொருத்தி சிறிய மர ஊசியால் நகங்களுக்கிடையே இருந்த மணலை எடுத்துக்கொண்டிருந்தாள். அவர் கைகளையும் இருவர் கழுவி நகங்களைத் தூய்மைப்படுத்திக் கொண்டிருந்தனர்.

பெருவணிகர் அருகே நின்றிருந்த இரு கணக்கர்கள் புல்லால் ஆன பட்டுச் சுருளை விரித்து அவற்றிலிருந்து அவரது மொழியில் எதையோ வாசித்துக் காட்டிக்கொண்டிருக்க அவர் ஒவ்வொரு சொற்றொடருக்கும் தலையசைத்து ஒப்பு அளித்தபடி கேட்டுக்கொண்டிருந்தார். அர்ஜுனன் அருகே சென்றதும் விடுதித்தலைவர் அவனைப் பற்றி அவரிடம் சொன்னார். பீதவணிகரின் முதிய விழிகள் ஆர்வமற்றவைபோல அர்ஜுனனை பார்த்தன. இல்லையோ என்பது போன்று தெரிந்த உதடுகள் மெல்ல அசைய செம்மொழியில் "இமயமலையைச் சார்ந்தவரா?" என்றார்.

"அங்கிருந்தேன். ஆனால் பாரதவர்ஷத்தின் வடபுலத்து அரசகுடியினன். க்ஷத்ரியன்" என்றான் அர்ஜுனன். அவரது

கண்கள் சற்று சுருங்கின. “உங்கள் பெயரென்ன? அதையல்லவா முதலில் சொல்ல வேண்டும்?” என்றார். “எங்கள் ஊரின் வரிசை வேறு வகையில்” என்றபின் அர்ஜுனன் “என் பெயர் விரஜன்” என்றான். அவர் சிறிய வாய் மேலும் குவிய “நன்று” என்றபடி “நீர் வில்லவர் என்பதை கைகள் காட்டுகின்றன” என்றார்.

அர்ஜுனன் தலையசைத்தான். அவர் திரும்பி ஒரு வீரனைப் பார்த்து அவரது மொழியில் அவனிடம் ஒரு வில்லை கொடுக்கும்படி சொன்னார். அவன் தன் கையிலிருந்த வில்லையும் அம்பறாத்தூணியையும் கொடுத்தான். அர்ஜுனன் அவற்றை வாங்கி கையில் அணிந்து தோளில் எடுத்துக்கொண்டான். “உமது திறமைகளில் ஒன்றைக் காட்டுக!” என்றார்.

அர்ஜுனன் திரும்பி தொலைவில் ஒரு குடிலுக்குள் இருந்து எழுந்துகொண்டிருந்த புகைச்சுருளைப் பார்த்து தன் அம்பு ஒன்றை எய்தான். வெண்பட்டாலான மரம்போல எழுந்து விரிந்து கொண்டிருந்த புகையை அம்பு இரண்டென கிழித்தது. பெருவணிகர் வியப்புடன் எழுந்து அதைப் பார்த்தார். அந்த அம்பு கீழே விழுவதற்குள் அடுத்த அம்பு அதைத் தைத்து மேலே தூக்கியது. மூன்றாவது அதை மேலும் தூக்கியது. தொடர் அம்புகளால் முதல் அம்பு வளைந்து வானத்தில் எழுந்தது.

கீழிருந்து மேலெழுவதுபோல் சென்ற அம்புகளால் அந்த முதல் அம்பு திருப்பி உந்தப்பட்டு அர்ஜுனனை நோக்கி வந்தது. அவன் அதைப் பற்றி மீண்டும் அம்பறாத்தூணிக்குள் போட்டான். பிற அம்புகள் வரிசையாக மண்ணில் தைத்து சாய்ந்து நின்று அசைந்தன. அவன் நின்றிருந்த இடத்தில் இருந்து அந்த

அம்புகள் அனைத்தும் நேர் கோட்டில் ஒரே கோணத்தில் சாய்ந்து நாணல்கள் போல நின்று பீலி சிலிர்த்தன.

சொல்லழிந்து அமர்ந்திருந்த பெருவணிகர் கைகளை இழுத்துக்கொண்டு நீர்க்குடுவைகள் சரிய எழுந்து பதறும் குரலில் “வீரரே, நீங்கள் அஸ்தினபுரியின் விஜயரா?” என்றார். “ஆம், வேறு எவருமில்லை. கர்ணனல்ல. பரசுராமனல்ல. அப்படியென்றால் நீங்கள் அர்ஜுனனேதான்.” அர்ஜுனன் “ஆம்” என்றான்.

# கிராதம் - 31

[ 7 ]

பீதர் வணிகர்களுடன் அர்ஜுனன் பிங்கலத்தில் இருந்து எலிமயிரின் நிறம் கொண்டிருந்த தூசரம் என்னும் பாலையை கடந்தான். மரவுரியின் நிறம் கொண்டிருந்த கபிலத்தையும் பூர்ஜப் பட்டை என வெளிறிய பாண்டகத்தையும் கடந்தான். வெயில் என்பது நிலத்திற்கு ஒன்று என்று உணர்ந்தான். மரப்பட்டைகளை உலர்த்திவெடிக்கவைக்கும் வெயிலை அவன் அறிந்திருந்தான். கற்பாறைகளை விரிசலிடச்செய்யும் வெயிலை அங்கு கண்டான்.

நீர் என்பது தேக்கமென பெருக்கென அதுவரை அறிந்திருந்தான். அது துளிகள் மட்டுமே என உணர்ந்தான். கழுதைகளில் ஏற்றப்பட்ட தோற்பைகளில் நீர்கொண்டுசென்றனர். ஒவ்வொருவருக்கும் உரிய நீர் அன்றுகாலையிலேயே வழங்கப்பட்டது. எரிக்கும் வெயிலில் அதை துளித்துளியாக அருந்தியபடி முன்சென்றனர். கையில் நீர் இருக்கும் எண்ணமே கடும் விடாயை தாங்கச்செய்யும் விந்தையில் திளைத்தனர். அதில் சிறுபகுதியை மறுநாளைக்கென சேர்த்துவைத்தவர்கள் பற்களைக் காட்டி மகிழ்ந்து நகைத்தனர். இரவில் துயில்வதற்கு

முன் அந்த நீரை நாவில் விட்டுச் சுழற்றி அமுதென சுவைத்தனர்.

நீர்த்துளியை விரல்நுனியில் தொட்டு கண்முன் தூக்கி நோக்கினான் அர்ஜுனன். அதன் ஒளியும் ததும்பலும் முழுப்பும் நெஞ்சை ஆட்கொண்டன. அதன் வளைவுகளில் பாலைநிலப்பரப்பு வளைந்து சுருண்டிருந்தது. விழிகளைச் சந்திக்கும் விழிமணி. விழியே நீரென்றாகியதா என்ன? சொட்டுவதும் வழிவதும் தேங்குவதும் பெருகுவதும் விரைவதும் பொழிவதும் அலைகொள்வதும் திசையென்றாவதுமான விழியா அது?

கடக்கும்தோறும் பாதை நீண்டு வர கால்கள் தன்விழைவால் நடந்தன. நடப்பதே அவற்றின் இருப்பு என்பதுபோல. துயிலிலும் கால்கள் நடந்துகொண்டிருப்பதாக உணர்ந்தான். அதுவரை அவன் கொண்டிருந்த நடையே மாறலாயிற்று. புதையும் மணலுக்குள் முழுக்காலையும் பதியவைத்து சிறிய அடிகளாக தூக்கி வைத்து சீரான விரைவில் நடக்கவேண்டியிருந்தது. நடைமாறுபட்டதும் நடப்பதும் எளிதாயிற்று. ஒருகட்டத்தில் அத்திரிகளும் ஒட்டகைகளும்கூட அப்படித்தான் நடக்கின்றன என்று தோன்றியது.

நாள் செல்லச்செல்ல ஒவ்வொரு நோக்கிலும் பாலையின் வடிவங்கள் பெருகின. இன்மையென, வெறுமையென, மாற்றமின்மை எனத் தெரிந்த வறுநிலம் மெல்ல தன் உயிர்க் களியாட்டத்தை காட்டலாயிற்று. பொருக்கு என எழுந்த சிறுகூடுகளுக்குள் வெண்ணிற எறும்புகளின் உலகம் கலைந்து பரவியது. சிதல்வரிகளுக்குள் ஆழ்ந்த பாதைகள் இருந்தன. நொதித்த மாவில் என மென்மணலில் விழுந்த

சிறுதுளைகளிலிருந்து கரிய எறும்புகள் கசிந்தவைபோல் எழுந்து நிரைவகுத்துச் சென்றன. கற்களின் அடியிலிருந்த விரிசல்களில் இருந்து சிற்றுயிர்கள் எட்டிப்பார்த்தன. ஒட்டகக் குளம்போசையின் நடுவே விரைந்து உட்புகுந்து மறைந்தன.

சாறே அற்றவைபோல, மறுகணம் பற்றிக்கொள்வனபோல தெரிந்த முட்புதர்கள் அனைத்திலும் புழுதிபடிந்து மண்வடிவெனத் தோன்றிய இலைகள் உயிருடனிருந்தன. அவற்றை உண்ண இருளுக்குள் விழிமின்ன எலிபோன்ற சிறு விலங்குகள் வந்தன. அவற்றை பிடிக்க பட்டுநாடா போன்ற வண்ணப்பட்டைகளுடன் பாலைநாகங்கள் பாறைகளுக்கிடையே இருந்து வளைந்து எழுந்தன.

உலோகமென மயல் காட்டிய கூர்முட்களில்கூட உயிர் இருந்தது. புலரியில் அந்த முள்முனைகளில் மென்மயிர் நுனியில் என பனித்துளிகள் நடுங்கின. அத்துளிகளை சிறு சிப்பியளவே இருந்த குருவிகள் வந்து அமர்ந்து கோதுமை மணிகள் போன்ற அலகுகளால் கொத்தி உறிஞ்சி உண்டன. சாம்பல்நிறச்சிறகுக்கு அடியில் கொன்றைமலர் வண்ணம் கொண்ட அடிவயிறுள்ளவை. வெண்பஞ்சு நெஞ்சும் இளநீலவரிகொண்ட சிறகுகளும் கொண்டவை. கோவைப்பழம்போல் சிவந்தவை சிலவற்றின் சிறகுகள். பழுத்த மாவிலைபோல் பொன்மின்னியவை சில.

முள் மட்டுமேயாகி, கீழே வலையென நிழல்விரித்து நின்றிருந்த மரங்களுக்குள் மலர்செறிந்ததுபோல் நூற்றுக்கணக்கில் சிறிய குருவிகள் அமர்ந்து சலங்கைகள் குலுங்குவதுபோல் ஒலி எழுப்பி பேசிக்கொண்டிருந்தன. காலடியின் ஓசை கேட்டு அவை காற்று அள்ளி வீசிய மலர்கள்

என எழுந்து சுழன்று பறந்து அமைந்தன. தொலைவில் வண்ணப் பட்டுத்துவாலை ஒன்று பறந்தலைவதெனத் தோன்றியது.

அனலென நாக்கை நீட்டிப்பறக்க வைத்தபடி சாலையோரப் பாறையொன்றில் அமர்ந்து நடுங்கி வண்ணம் மாற்றிக்கொண்டது உடும்பு. ஓசை கேட்டு வால் வில்லென வளைய கன்னச்செதில்கள் சிலிர்த்து விடைக்க தலையை மேலும் கீழும் அசைத்து நெருப்பொலியை எழுப்பியது. வண்ணமணித்தொகை என தன் வாலை சிலம்பொலியுடன் ஆட்டிக்காட்டி மணலுக்குள் தலைபதித்துக் கிடந்த நச்சு நாகம் ஒன்றை காவல்வீரன் நீண்ட கழியால் அள்ளி எடுத்து வீசினான். மென்மணல் சரிவில் அலைவடிவை வரைந்தபடி அது வளைந்து சென்று மணலுக்குள் தலை பதித்து தன்னை இழுத்து உள்ளே பதுக்கிக்கொண்டது.

மணல்மேல் கால்பரப்பி நடந்த வெண்சிறு சிலந்திகள் துளைகளுக்குள் சென்று மறைந்தன. முட்புதர்களுக்குள் பனி நிற வலைச்சுழிகள் அழகிய உந்திக்குழிகள்போல் இருந்தன. பொன்னிறக் கூழாங்கற்கள்போல வண்டுகள் சிறகுகள் ரீங்கரிக்க சுற்றிவந்தன. அவற்றை உண்பதற்காக மணலில் கால்பதிய வாலசைத்து எம்பி அமர்ந்து நடந்தன நீளவால்கொண்ட குருவிகள்.

“உயிர்” என்று அர்ஜுனன் சொன்னான். “ஆம், நீரின் சாயல் காற்றிலிருந்தால் போதும், அங்கு உயிர் இருக்கும்” என்றார் போ என்னும் பெயர்கொண்ட முதுபெருவணிகர். “வீரரே, நீர் என்பது உயிரின் மறுபெயர்.” வெந்துவிரிந்த வறுநிலம் நோக்கி “இங்கு மழை பெய்வதுண்டா?” என்றான் அர்ஜுனன். “மழைக்காலம் என்று ஒன்றில்லை. பல்லாண்டுகளுக்கு ஒருமுறை

எப்போதேனும் பெய்யலாம். ஆனால் காற்றில் நீர் உண்டு. குளிர்ந்து காலையில் அவை இலைகள் மேல் பரவுகின்றன. இச்சிற்றுயிர்களுக்கு அந்த நீரே போதும்.”

“இங்கு பெரிய உயிர்களும் உள்ளன” என்று அர்ஜுனன் இரும்பாலான கவசமணிந்த புரவிபோல அவர்களின் பாதையைக் கடந்துசென்ற ஒரு பெரிய எறும்புதின்னியை நோக்கியபடி சொன்னான். “இளையபாண்டவரே, குருதியும் நீரல்லவா?” என்றார் போ. அச்சொல்லாட்சி அவனை ஒரு கணம் திகைக்கச் செய்தது. உடனே புன்னகைத்து “ஆம்” என்றான்.

முகிலற்றிருந்த நீலவானத்தின் தூய்மை ஒரு அழியா இருப்பென தலைக்கு மேல் ஏறி எப்போதும் தொடர்ந்தது. நிற்கும்போதெல்லாம் அதை அண்ணாந்து நோக்காமல் இருக்க முடியவில்லை. பாலையில் நுழைந்ததுமுதல் வானத்தின் முகிலின்மை அளித்து வந்த மெல்லிய பதற்றம் நாள்செல்லச் செல்ல விலகியது. அளியின்மை எனத் தோன்றியிருந்த அது மாசின்மை எனத் தோன்றத்தொடங்கியது.

இளைப்பாறுவதற்காக பாலைச்சோலைகளில் படுக்கும்போது வான் முழுமையாகத் தெரியும்படி முள்மர நிழல்களைத் தவிர்த்து பாறையடிகளில் அவன் மல்லாந்தான். வானை நோக்கிக் கொண்டிருக்கையில் அங்கிருந்து ஒலியின்மை வழிந்து தன்னைச் சூழ்ந்து மூடிக்கொள்வதை அவன் விழிகளால் பார்த்தான். உள்ளமென்று அவன் உணர்ந்த சொற்பெருக்கு ஓய்ந்து துளித்துச் சொட்டி மறைய முற்றிலும் இன்மையில் ஆழ்ந்து விழிதிறந்து கிடந்தான்.

விண்ணிலுள்ளது தூயநீர்ப்பெருக்கு என்கின்றது வேதம். மாமழை அக்கடலின் ஒரு துளிக்கசிவே. வருணன் அத்துளியின் காவலன். வருணனைப்போன்ற துளிகள் சென்று சேர்ந்தெழுந்த பெருங்கடல் ஒன்று அங்குள்ளது. இவ்விண்மீன்கள் நீர்த்துளிகளா என்ன? சுட்டுவிரல்முனையில் பழுத்துத் ததும்பி சொட்டத்துடிக்கும் விழிகளா? எவரேனும் தொட்டு உசுப்புகையில் துடித்து வந்து அள்ளிப்பற்றிக்கொண்டு எரித்துக் கொழுந்தாடத் தொடங்கியது காலம்.

கழுகின் உகிர்க்கால்கள் போல புழுதிப்பரப்பை அள்ளிநின்ற வேர்ப்பற்றும் யானைக்கால்கள் போன்று கருமைகொண்டு முரடித்த அடிமரங்களும் கொண்ட மரங்கள் குறுகிய கிளைகளை நீட்டி குற்றிலைகளும் முட்களுமாக செறிந்திருந்த சோலைகள். தெற்கிலிருந்து நிலைக்காது வீசும் காற்றுக்கு வடபுலம் நோக்கி சீவப்பட்ட மயிரென வளைந்து நின்றிருந்தன அவை. சருகுகள் மென்மணலால் மூடப்பட்டிருந்தன. கால்கள் வைக்கையில் அழுந்தி ஆழங்களில் தீப்பற்றிக் கொள்ளும் ஓசை எழுப்பின.

“சருகுகளின் மேல் கால்வைக்க வேண்டாம்” என்று வணிகர்கள் எச்சரித்துக் கொண்டிருந்தனர். “நாகங்கள் உள்ளிருக்கும், கருதுக!” காலில் தோல் உறையிட்ட அத்திரி ஒன்றின்மேல் ஏறி ஒருவன் சரிவிலிறங்கிச் சென்று குவிந்த ஆழத்தில் சேறு தேங்கிய வளையத்தின் நடுவே சந்தனச்சட்டத்திற்குள் ஆடி என வானொளி ஏற்று நடுங்கிக் கொண்டிருந்த நீர்ப்பரப்பு வரை சென்று வழி உருவாக்கினான். முன்னும் பின்னும் சென்று அவன் உருவாக்கிய அவ்வழியினூடாக மட்டுமே பிறர் நடந்து சென்றனர்.

மூங்கில் குவளைகளில் நீரள்ளி முதலில் போவுக்கு அளித்தனர். அதை வாங்கி தலைவணங்கி தெய்வங்களுக்கு வாழ்த்துரைத்தபின் அவர் அருந்தினார். பின்னர் அர்ஜுனனுக்கு அதை அளித்தார். "இனிது... நீரளவு இனிதென ஏதுமில்லை புவியில்." வரிசையாக அனைவருக்கும் நீர் அளிக்கப்பட்டது. ஓர் ஆழ்ந்த இறைச்சடங்குபோல அவர்கள் அமைதியுடன் நீர் அருந்தினர். நீரை உடல் ஏற்றுக்கொள்ளும் ஒலி எழுந்தது. அவி ஏற்கும் அனலின் ஒலிபோல. உயிர் மண்ணை உணரும் ஒலி என அர்ஜுனன் நினைத்தான்.

மானுடர் அருந்திய பிறகு அத்திரிகளுக்கும் இறுதியாக ஒட்டகைகளுக்கும் நீரளிக்கப்பட்டது. மணற்காற்று ஓலமிட்டுக் கொண்டிருந்த இரவில் வெடித்துச் சாய்ந்தும் காற்றில் அரித்து ஊன்போல உருக்காட்டியும் நின்ற பாறைகளுக்கு அடியில் காற்றுத்திசைக்கு மறுபக்கம் அவர்கள் தங்கினர். அப்பால் பாறைமேல் மணலை அள்ளி வீசி மழையோ என ஓசையிட்டுக்கொண்டிருந்தது காற்று. தோலாடைகளால் முற்றிலும் உடல் மறைத்து முகத்தை மட்டும் காற்றுக்கு வெளியே நீட்டி அமர்ந்தபடியே துயின்றனர்.

**[ 8 ]**

மழை என ஒவ்வொருநாளும் மயல்காட்டியது பாலை நிலம். ஒவ்வொருநாளும் காலையில் கடுங்குளிரில் உடல் நடுங்கி பற்கள் கிட்டிக்கத்தான் போர்வைக்கூடாரத்திற்குள் அவன் விழித்துக்கொண்டான். குளிர் குளிர் குளிர் என உள்ளம் ஓடிக்கொண்டிருக்கும். குளிரில் தோள்கள் இறுகிக்கோட்டியிருக்கும். கழுத்துத் தசைகள் எடைதூக்குவதுபோல இறுகி நிற்கும். கைவிரல்பூட்டுகள்

எலும்பு ஒடிந்தவைபோல உளையும். கால்விரல்கள் மரத்து உயிரற்றிருக்கும். காதுமடல்கள் எரியும்.

உள்ளே கம்பளியும் வெளியே தோலும் வைத்து தைக்கப்பட்ட அந்தப்போர்வை அவன் உடலின் மூச்சையும் வெம்மையையும் உள்ளே சேமிப்பது. பின்னிரவில் அந்த வெம்மை கருப்பை போலிருக்கும். எந்த அணைப்பிலும் அந்த ஆழ்ந்த அன்பை உணர்ந்ததில்லை. விடியலின் இருளுக்குள் அந்த வெம்மையை விண்மீன் மினுங்கும் கரியவானம் அள்ளி உண்டுவிடும். உடல் உயிரென எஞ்சியிருக்கும் வெம்மையை மூச்சினூடாக வெளியே அனுப்பிக்கொண்டிருக்கும். சற்று நேரத்திலேயே நடுங்கி அதிரத்தொடங்கும்.

பின்னர் சூரியனுக்கான தவம். கணம் கணம் என. எண்ணம் எண்ணம் என. விண்மீன் விண்மீன் என. அலையலையென காற்றில் காலம் அள்ளி வரப்பட்டு அவனைச்சூழும். அள்ளிச்செல்லப்பட்டு அடுத்த அடுக்கு வந்தமையும். காற்றில் எப்போதும் ஒரே மணம். புழுதி. ஆனால் வந்தபின் அந்த மணத்தின் வேறுபாடுகளை காணப்பழகிக்கொண்டான். காலைப்புழுதியில் குளிர்ந்த பனியின் ஈரம் கலந்திருக்கும். பின்னர் நீராவி. பின்னர் வறுபடும் மணல். பின்னர் மணலுமிழும் அனல். பின்னர் வெந்த சுண்ணம். பின்னர் மெல்லிய கந்தகம். பின்னர் இருளுக்குள் இருந்து முள்மரங்களின் மெல்லிய தழைமணம்.

ஒளியெழுந்ததும் கண்கள் வழியாகவே உடல் வெப்பத்தை அள்ளிப்பருகத் தொடங்கும். உடல்தசைகள் நீர்பட்ட களிமண் என இறுக்கம் அழிந்து குழைந்து நீளும். கைகால்கள் சோர்வு கொண்டு இனிமையடையும். கண்கள் சொக்கி மீண்டும் ஓர் இன்துயில் வந்து எடையென உடல்மேல் அமையும். சித்தம்

ஒளியுடன் குழைந்து மயங்கும். குருதிக்கொப்புளங்கள் அலையும் செவ்வெளியில் சூரியக்கதிர்கள் அதிர்ந்துகொண்டிருக்கும். உடலெங்கும் குருதி உருகி கொப்பளிப்பு கொள்ளும். செவிமடல்களில் குருதியின் துடிப்பை உணரமுடியும்.

எழுந்து நோக்கும்போது முள்முனைகளில் எல்லாம் பனித்துளிகள் ஒளிவிட்டுக்கொண்டிருக்க அருமணிகள் கனிந்த வயல் எனத் தெரியும் பாலை. விண்சுரந்த நீர். விண்ணில் வாழ்கின்றன பெருங்கடல்கள். ஆனால் நோக்கி நிற்கவே அவை உதிராது காற்றில் மறையும். பின்னர் நீள்மூச்சுடன் பாலைநிலம் வெம்மைகொள்ளத் தொடங்கும். வானிலிருந்து வெம்மை மண்ணை மூடிப்பொழிந்துகொண்டிருக்கும். பின்காலையாகும்போது மண்ணிலிருந்து வெம்மை மேலெழத் தொடங்கும். பின்னர் வானிலிருந்து வரும் காற்று மண்ணின் அனலை அவிப்பதாகத் தெரியும்.

உச்சிப்பொழுதே பாலையில் பெரும்பொழுது. அறத்தின் துலாமுள் என கதிரவன் அசைவற்று நின்றிருக்க நிழல்கள் தேங்கிய பாறைகள் வெம்மைகொண்டு கனலுண்டு கனலுமிழ்ந்து உருகுநிலையை நோக்கி செல்வதுபோலிருக்கும். பின்மாலையில் வெம்மை இறங்குகிறதா இல்லையா என உள்ளம் ஏங்கும். அப்போது மென்மையாக காதை ஊதும் நீராவி மழை என்று சொல்லும். மழை என உள்ளம் குதித்தெழும். ஆம், மழையேதான். மழைவிழுந்த வெம்புழுதியின் தசைமணம். மழைக்காற்றின் மென்குளிர். அது மயலா மெய்யா? இல்லை உணர்கிறேன். உண்மையே அது. மழை.

“மழை!” என அவன் அருகே வந்த வணிகரிடம் சொன்னான். “மழையேதான்.” அவர் இதழ்கோட்டிய புன்னகையுடன் “அதன்

பெயர் மாயாவருணன். மழையெனக் காட்டுவான். மழைத்துளிகளைக்கூட உதிர்ப்பான். மழைக்காக ஏங்கும் உயிர்களுடன் விளையாடுவான். வருணனை வெறுக்கச்செய்யும்பொருட்டே அவன் தோன்றுகிறான்.” அர்ஜுனன் விண்ணை நோக்கினான். தென்கிழக்கே முகில்கள் தெரிந்தன. “முகில்கள் வந்துகொண்டிருக்கின்றன” என்றான்.

“ஆம், அவை நீர்சுமந்த கடல்முகில்கள் அல்ல. மண்ணில் இருந்து எழுந்தவை. மேலெழுந்து குளிர்ந்து குடையாகின்றன. அவைதான் மாயாவருணனின் கருவிகள்.” அர்ஜுனன் அவர் சொன்னதை நம்பவில்லை. மழை மழை என உள்ளம் தவிக்க முகில்களை நோக்கிக்கொண்டிருந்தான். முகில்கள் காற்றில் புகை எனக்கரைந்து வானில் மறைந்தன. மேலும் மேலும் நீராவி சுமந்து தோலை வியர்க்கவைத்த காற்று மீண்டும் வெம்மைகொள்ளத் தொடங்கியது. மூச்சுத்திணறல் வந்தது. கண்ணிமைகள் வியர்த்து விழிகளுக்குள் உப்பு சென்றது. விடாய் எழுந்து உடலகம் தவித்தது.

“நீர் அருந்தலாகாது. மழைவருமென எண்ணி நீரை அருந்தவைக்கும்பொருட்டே மாயாவருணன் இதை செய்கிறான்” என்றார் வணிகர். “பாலையில் தவித்து இறக்கும் மானுடர் அருகே வந்திறங்கி அவன் நடனமிடுகிறான். வெள்ளெலும்புகளைச் சுற்றி அக்காலடிகளை காணமுடியும்.” அர்ஜுனன் அந்த மழைமயக்கு மெல்ல விலகி சூரியன் மேலும் ஒளிகொள்வதையே கண்டான். மெல்ல அந்தி. இருள்மயக்கில் மீண்டுமொரு நீராவிப்படலம் வந்து செவிதொட்டு ஏக்கம் கொள்ளச்செய்தது.

மாயாவருணனை அறிந்த தேர்ந்தவணிகரும் கூட ஏமாற்றம்கொள்ளாமல் இருக்கமுடியவில்லை. ஒருமுறை

நன்றாகவே வான் மூடிவிட்டது. திசைகள் மயங்கும் இருள். ஆடைவண்ணங்கள் மேலும் ஆழம் கொண்டன. “மழை” என்றான் அர்ஜுனன். “பார்ப்போம்” என்றார் போ. மேலும் மேலும் இருட்டிவந்தது. வெம்மை முழுமையாக மறைந்து குளிர் காதுகளைத் தொட்டது. உடல் சிலிர்ப்பு கொண்டது. “ஆம், மழையேதான்” என்றான். “பார்ப்போம்” என்று போ சொன்னார்.

முதல்மழைத்துளியின் ஓசையைக் கேட்டதும் அவன் உடல் அதிரத் தொடங்கியது. சிற்றம்பு வந்து மென் தசையை தைப்பதுபோல மீண்டுமொரு மழைத்துளி. “ஆம், மழை” என்று அவன் கூவினான். “மழை! மழை!” பலர் கூவத்தொடங்கினர். இளைஞர் கைகளை விரித்து கூச்சலிட்டபடி ஆடலாயினர். “மழைதான்...” என்றார் போ. ”பாணரே, சொல்க! இது மழையா?” என்றான் ஒருவன். பீதர்நாட்டுப்பாணன் சுருங்கிய கண்களுடன் நகைத்து “ஆம், மழை” என்றான். “அனைத்துக்குறிகளும் மழை என்கின்றன.”

மழைத்துளிகள் கூடை கவிழ்த்து கொட்டியதுபோல விழுந்தன. அக்கணமே மண்ணிலிருந்து எழுந்த நீராவிக்காற்று அவற்றை அள்ளிச் சிதறடித்தது. வானிலெழுந்த முகில்பரப்பு விரிசலிடலாயிற்று. சூரிய ஒளி அதனூடாக வந்து மண்ணில் ஊன்றி நின்றது. அதில் செந்நிறமாக புழுதிகலந்த நீராவி ஒளியுடன் அலையடித்தது. வானம் பெரும் பெட்டகம்போல் திறக்க பாலை செந்நிற ஒளிகொண்டபடியே வந்தது.

சற்றுநேரத்திலேயே முகில்பரப்பு இரண்டு பகுதிகளாகப்பிரிந்து தெற்கும் மேற்குமென வளைந்தது. பாலை முன்பிருந்ததுபோலவே வெயில்படர்ந்து விழிகூசச் சுடர்ந்தது. வணிகன் ஒருவன் குனிந்து புழுதியில் இருந்து நீர்த்துளி விழுந்து உருவான உருளையை கையில் எடுத்தான்.

“பனிப்பழமா?” என்றான் ஒருவன். “இல்லை நீர்தான்” என்றான் அவன்.

போ தன் ஆடையிலிருந்த மண்ணைத் தட்டியபடி “முகில் என நின்றது புழுதி” என்றார். புழுதியை மண்ணில் இருந்து எழும் வெங்காற்று மேலே கொண்டுசென்று முகிலீரத்துடன் கலந்துவிடுவதைப்பற்றி ஒருவன் சொன்னான். “வானில் ஒரு சேற்றுச்சுவர் அது” என்றார் போ. பெருமூச்சுடன் தனக்குத்தானே என “எத்தனை அறிந்தாலும் மாயாவருணனிடமிருந்து எவரும் முற்றிலும் தப்பிவிடமுடியாது” என்றார்.

பாணன் உரக்க நகைத்து “அத்தனை தெய்வங்களுக்கும் மாயவடிவங்கள் உள்ளன, பெருவணிகரே” என்றான். மூச்சிழுக்க முடியாதபடி காற்று எடை கொண்டதாகத் தோன்றியது. குருதி அழுத்தம் கூடி உடலை உடைத்துத் திறக்க விரும்பியது. “ஒரு மழை... ஒருமழை இல்லையேல் இறந்துவிடுவேன்” என முதல்முறையாக வந்த இளவணிகன் ஒருவன் கூவினான். தலையை ஓங்கி ஓங்கி அறைந்தபடி “வாழமுடியாது.... என் உடல் உருகிக்கொண்டிருக்கிறது” என்றான்.

“இந்த நீர்த்துளிகள் நச்சுக்கு நிகரானவை” என்றார் போ. “மாயாவருணன் உமிழ்வது இந்த நச்சுமழை.” பாதையின் ஓரத்தில் சிற்றுயிர்கள் இறந்து கிடப்பதை அவர்கள் கண்டனர். சிறிய ஓணான்கள் பல்லிகள் வெண்வயிறுகாட்டி எஞ்சிய உயிர் வயிற்றில் பதைக்க விரல்கள் விரிந்து சுருங்க வால்நுனி அசைய கிடந்தன. ஒருநாகம்கூட நாவீசியபடி நெளிந்துகொண்டிருந்தது. “நூறு மாயாவருணன்களைக் கடந்தே வருணனை அடையமுடியும்” என்றான் பாணன்.

[ 9 ]

பாறைகளற்று நெடுந்தொலைவு வரை அலையலையாகக் கிடந்த ஊஷரத்தைக் கடப்பதற்கு நெடுநாட்களாயிற்று. அங்கு கிடைத்த நீர் உப்பு மிகுந்திருந்தது. அதை வடிகட்ட அரிப்புகளை அவர்கள் கொண்டுவந்திருந்தனர். மென்மணலை சுண்ணத்துடன் பிசைந்து அழுத்திச்செய்த மணற்பலகை அரிப்புகளினூடாக முதலில் நீர் ஊறி கீழே வந்தது. பின்பு மூங்கில் சக்கைகளும் படிகாரமும் கலந்து உருவாக்கப்பட்ட அரிப்புகளில் பலமுறை வடிகட்டி எடுக்கப்பட்டது. அதன்பின்னும் அது மெல்லிய உப்புச்சுவையுடன் இருந்தது.

“குருதிச்சுவை” என்று அர்ஜுனன் அதைக்குடித்தபடி சொன்னான். “கண்ணீரின் சுவையும்கூட” என்றார் போ. இளையவணிகன் ஒருவன் “ஏன் கன்னியின் இதழ்ச்சுவை என்று சொல்லக்கூடாதா?” என்றான். வணிகர்கள் நகைத்தனர். “மைந்தனின் சிறுநீரின்சுவை” என்றார் போ. பீதர்நாட்டில் இளமைந்தரின் சிறுநீரின் சிறுதுளிகளை தந்தையர் அருந்துவதுண்டு என்றான் பீதர்நாட்டுச் சூதன். “அது தன் குருதியை தானே அருந்துவது.”

உப்பரித்த நிலம் வழியாக நிழல் தொடர நடந்தனர். பின் நீளும் நிழலை நோக்கி சென்றனர். உப்பு விரைவிலேயே காற்றை வெம்மை கொள்ளச்செய்தது. நிலத்தில் இருந்து எழுந்த வெம்மை காதுமடல்களை, மேலுதடுகளை, மூக்குவளைவை, இமைகளை எரியச்செய்தது. மணல் இளகி கால்களை சேறென உள்வாங்கியதால் நடப்பதும் கடினமாக இருந்தது.

நெடுங்காலத்திற்கு முன் ஏதோ நீர் தேங்கி பின் வற்றிவிட்டிருந்த குட்டைகள் விளிம்புகளில் அலையலையாக உப்புப்படிவு இதழ்கள் போல் ஒன்றன்மேல் ஒன்றென பதிந்திருக்க மாபெரும் மலர்போல் விரிந்து தெரிந்தன.

“அவற்றை மண்மலர்கள் என்கிறார்கள். வான்மழையை அளிக்கும் தெய்த்திற்கு மண் மலர்படைத்து வரவேற்கிறது” என்றார் போ. பீதர்நாட்டுச் சூதன் “புன்னகைகள்” என்றான்.

எப்போது முளைத்தன என்று தெரியாத மரங்கள் அக்குட்டைகளைச் சூழ்ந்து நின்றிருந்தன. தொலைவிலிருந்து பார்க்கையில் சற்றுமுன் காட்டு நெருப்பு எழுந்து எரிந்து எஞ்சிய அடிமரங்கள் அவை எனத் தோன்றின. அருகணைந்தபோதுதான் அவை மட்கி அழிந்து பல்லாயிரம் ஆண்டுகளாகியிருக்கக்கூடும் என்று தெரிந்தது. விழுந்து கிடந்த மரங்கள் கல்லென மாறிவிட்டிருந்தன. சில மரங்கள் வெண்ணிற உப்பாக உருக்கொண்டிருந்தன.

வணிகர்கள் உப்புப்பரப்பை உடைத்துக் கிளறி உள்ளே புதைந்திருந்த உலர்ந்த மீன்களை வெளியே எடுத்தனர். உப்பில் அமைந்திருந்தமையால் அவை கெடா ஊனுடன் இருந்தன. “பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தவை” என்றான் ஏவலன். ஆனால் சற்றுமுன் உயிரிழந்தவை போலிருந்தன. அர்ஜுனன அவற்றின் விழிகளை நோக்கியபோது மெல்லிய துயில் ஒன்றுக்கு அப்பால் அவன் பார்வையை அவை உணர்ந்து கொண்டிருப்பதுபோல் தோன்றியது. மீன் விழிகள் நீர்ச்சொட்டு போன்றவை. நீர் விழிகள் என மீன்களைச் சொல்லும் கவிதைவரியை நினைவுகூர்ந்தான்.

“இங்கு பறவைகள் மீன் கொள்ள வருவதுண்டு” என்று இன்னொரு ஏவலன் சொன்னான். “நீள் அலகால் அவை மீன்களை கிளறி எடுக்கின்றன. எனவே ஆழத்தில் உப்பில் சிக்கிக்கொண்ட மீன்களை மட்டுமே மானுடர் எடுக்கமுடியும். இப்பாலைப்பரப்பில் செல்பவர்களுக்கு அது நல்லுணவு. ஆனால் மிகை உப்பால் விடாய் கூடி வரும். உப்பு நீரிலேயே இவற்றை

பலமுறை கொதிக்கவிட்டு செறிந்துள்ள உப்பை அகற்ற வேண்டும். மீண்டும் நன்னீரில் கொதிக்கவிடவேண்டும்.”

“சுழல்காற்று எழுகையில் இவை உப்புடன் எழுந்து வானுக்குச் சென்றுவிடுவதுண்டு. அங்குள்ள நீராவியில் உப்பு உருகிக்கரைய இவை மழையெனக் கொட்டியதாகவும் கதைகள் உண்டு. இறையருளால் வானிலிருந்து உணவு பொழியும் என்கிறார்கள் இங்குள்ளோர்” என்றார் போ. உப்புநீரை அள்ளி யானங்களிலாக்கி அங்கிருந்த சுள்ளிகளைக்கொண்டு தீமூட்டி வாற்றி நீர் எடுத்தனர். அதில் மீன்களை வேகவைத்து உலர்ந்த கோதுமைத்தூளுடன் உண்டனர்.

அதன் பின் காற்றோ வானோ உயிர்க்குலங்களோ ஓசை எழுப்பாமையால் முற்றிலும் அமைதிகொண்டிருந்த விமூகமென்னும் பாலையைக் கடந்து சென்றனர். “அதற்கப்பால் உள்ளது லவணம். அதை சுற்றிக்கொண்டுதான் நாங்கள் செல்வோம். லவணம் இறந்தவர்களின் நிலம் என்று அழைக்கப்படுகிறது” என்றார் போ. “அங்கு ஒரு கடல் இறந்து கிடக்கிறது என்கிறார்கள்.”




அர்ஜுனன் புருவம் சுருக்கி நோக்கினான். “பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு அங்கு வேறு வகையான மானுடர்கள் வாழ்ந்ததாகவும் விண்ணிலிருந்து அனல் வடிவ இறைவனால் அவர்கள் அனைவரும் உப்புச் சிலைகளென மாற்றப்பட்டதாகவும் இங்குள்ள தொல்கதைகள் சொல்கின்றன. முற்றிலும் உப்பாலானது அந்நிலம். உப்புச் சுவருக்கு அப்பால் உப்பு செறிந்த நீரால் உயிர்கள் வாழா கடல்

ஒன்று உள்ளது என்றும் அங்கே ஆழத்தில் நீரின் தேவன் வாழ்வதாகவும் சொல்கிறார்கள்” என்றார் பீதர்குலத்துப் பாணர்.

“அந்த இடத்தை நாடியே நான் வந்தேன்” என்றான் அர்ஜுனன். “நான் அறிந்து எவரும் அங்கு சென்றதில்லை. சென்று மீண்டேன் என்று ஒரு சொல்லும் காதில் விழுந்ததில்லை” என்றார் போ. “நான் அதை வெல்லும் பொருட்டே வந்தவன்” என்றான் அர்ஜுனன். “தெய்வங்களை அறைகூவலாகாது, வீரரே. இப்பெரும்பாலையைப் பார்த்தபின்னருமா மானுடம் என்னும் நீர்க்குமிழியை நம்புகிறீர்?” என்றார் பாணர். போ புன்னகையுடன் “சில மானுடர் தெய்வங்களால் தங்களை அறைகூவும்பொருட்டு தெரிவுசெய்யப்படுகிறார்கள் பாணரே” என்றார்.

# கிராதம் - 32

**[ 10 ]**

வாருணம் என்று அழைக்கப்பட்ட அந்நிலத்திற்குச் செல்வதற்கு பாதைகளென எதுவும் இருக்கவில்லை. விண்ணிலிருந்து விழுந்து நான்காகப் பிளந்து சரிந்ததுபோல் கிடந்த வெண்ணிற பாறைக்கூட்டங்களின் அருகே வணிகர் குழு வந்தபோது பீதர் தலைவர் போ அர்ஜுனனிடம் தொலைவில் வானில் எழுந்து தெரிந்த வெண்ணிற ஒளியை சுட்டிக்காட்டி “அங்குதான் என்று ஒவ்வொரு முறை இங்கு வரும்போதும் எவரேனும் சொல்வதுண்டு. அந்நிலத்தைப் பற்றிய கதைகளன்றி வேறெந்த செய்தியும் நானறிந்திருக்கவில்லை” என்றார்.

அர்ஜுனன் புன்னகைத்து “நன்று, நான் மீள்வேன்” என்றான். பீத வணிகர் குழுவில் அனைவர் விழிகளும் அவன் மேல் பதிந்திருந்தன. அவனுடைய நிமிர்ந்த தலையையும்

புன்னகையையும் கண்டு அவர்கள் உணர்வெழுச்சி கொள்வது உடலசைவுகளிலும் ஓசையுடன் எழுந்த உயிர்ப்பிலும் தெரிந்தது. “விடைகொடுங்கள், மூத்தவரே” என்று சொல்லி அர்ஜுனன் குனிந்து முதிய பீதவணிகரின் கால்களைத் தொட்டு வணங்கினான். “நன்று சூழ்க! உங்கள் தெய்வங்கள் துணை நிற்கட்டும். எங்கள் தெய்வங்கள் உடனிருக்கட்டும். வெற்றி திகழ்க!” என்று போ அவனை வாழ்த்தினார்.

அவர்கள் குளம்படியோசைகளும் கால்கள் மண்ணில் விழுந்தெழும் ஓசைகளும் ஒலிக்க அவனைக் கடந்து சென்றனர். ஒவ்வொரு விழியும் கடந்து செல்லும்போதும் அவன் தலைவணங்கி புன்னகை செய்தான். கண்முன்னால் ஒரு காலத்துண்டு ஒழுகிச்செல்வதுபோல் தோன்றியது. பல மாதங்கள் உடனிருந்தவர்கள். ஒவ்வொருவரின் பெயரும் இயல்பும் உவகையும் துயரும் கனவுகளும் அவன் அறிந்தவை. அம்முகங்களில் ஒன்றைக்கூட அவன் மறக்கப்போவதில்லை. ஆனால் மீண்டும் அவர்கள் எவரையும் பார்க்க வாய்ப்பும் இல்லை. எனவே அந்நினைவுகளுக்கு எப்பொருளும் இல்லை.

குளம்படியோசைகள் முற்றிலும் மாய்ந்தன. அவர்கள் சென்றபின் எஞ்சிய புழுதியை அவன் நோக்கிக்கொண்டிருந்தான். முன்காலை வெயிலின் ஒளியில் விண்புகைபோல் நின்றது அது. ஒரு மென்மலரிதழ் போல. பின்னர் புழுதித்திரை சரிந்தபோது வளைந்திறங்கிச் சென்ற பாதையின் தொலைவில் புழுதிச்சிறகு சூடி ஒரு பெரிய பறவை செல்வதுபோல் அக்குழு சென்றுகொண்டிருந்தது.

ஒருவேளை அவர்களை மீண்டும் சந்திக்கலாம். அங்கு சென்று மீண்டும் இங்கு வந்து நிற்கையில் தங்கள் வணிகம் முடிந்து

அவர்களும் இந்த இடத்திற்கு வந்திருக்கக்கூடும். விந்தைகள் நிகழக்கூடாதென்பதில்லை.

அவ்விழைவு எழுந்ததுமே அவன் புன்னகைத்தான். அவர்களை மீண்டும் சந்திப்பதனால் என்ன பொருள் வந்துவிடப்போகிறது? திரும்பிச்செல்லலாம். மீண்டும் ஏழு பாலைகளைக் கடந்து பாரதவர்ஷத்தின் விளிம்புவரை போகலாம். அங்கு விடைகொள்ளலாம். அல்லது அவர்களுடன் சென்று பீதர் நாட்டிலேயே குடிபுகலாம். அதனாலென்ன? எங்கோ ஒரு புள்ளியில் விடைபெற்றாக வேண்டியுள்ளது. வந்து உறவாடி அகன்று மறையும் உறவுகளில் பொருள் உள்ள உறவென ஏதும் உண்டா? உறவாடலின் அத்தருணத்தில் உருவாக்கப்படும் பொருள். பின்னர் நினைவுகள். நினைவுகளும் உதிரும் காலம் வரக்கூடும்.

அவன் சிபிநாட்டு பால்ஹிகரை நினைவுகூர்ந்தான். சிற்றிளமை முதலே அவர் கதைகளை கேட்டு வளர்ந்தான். அவனுடைய தொல்மூதாதை தேவாபியின் இளையோன். அவருடன் பிறந்த அனைவரும் இறந்து மறைந்து கதைகளென்றாகி, பின் நூல்களாக மாறிய பின்னரும் அவர் ஊனுடலுடன் உச்சி மலையடுக்குகளில் வாழ்ந்து கொண்டிருக்கிறார்.

அவரைச் சென்று பார்த்துவிட்டு வந்து சூதனொருவன் சொன்னான் “அவர் சில ஆண்டுகளுக்கு முன்புதான் முற்றிலும் புதிதாகப் பிறந்திருக்கிறார், இளைய பாண்டவரே! அதற்கு முந்தைய எதுவுமே அவர் நினைவில் இல்லை. முழுமையாகவே அப்படி உதிர்த்துவிட்டுச் செல்வதனால்தான்போலும் அவர் உயிருடன் இருக்கிறார். இங்கு உச்சிமலைக் குடிகளில் அவருக்கு ஏழு குழந்தைகள்

இருக்கிறார்கள். அவரது இளம்மனைவி மீண்டும் கருவுற்றிருக்கிறாள்.”

கைநீட்டி அவன் பாடினான் “அவருக்கு இறப்பே இல்லை. காலமென வந்து படிவனவற்றை முற்றாக உதிர்த்துவிட்டு கடந்து செல்பவருக்கு இறப்பில்லை. ஏனெனில் இறப்பென்பது அணுவணுவாக வந்து படியும் துயரத்தின் பெருந்தொகையே. இந்தத் துலாத்தட்டில் மேலும் மேலும் என வைக்கப்படும் துயரத்தின் எடை அச்சிறுந்து போகுமளவு மிகுவதற்குப் பெயர் இறப்பு. வைத்தவற்றை முற்றிலுமாக அவ்வப்போது எடுப்பவனை இறப்பு அணுகுவதே இல்லை.”

அர்ஜுனன் புன்னகைத்தபடி “அவ்விறவாமைக்கு என்ன பொருள்? நேற்றும் இன்றும் நாளையும் நினைவுகளால்தான் தொடர்பு கொள்கின்றன. நேற்றென இன்றென நாளையென ஒழுகும் காலமே வாழ்க்கையென்பது. வாழ்க்கையின்றி இருத்தல் மட்டுமேயாக இங்கு எஞ்சுவதற்கு என்ன பொருள்?” என்றான்.

சூதன் நகைத்து “எழுவினா ஒன்றே. வாழ்வதா, இருப்பதா? வாழ்பவன் வாழ்வை சுமந்தாக வேண்டும். எடை முதிர்ந்து அச்சிறுந்து சகடம் சரிந்தாகவேண்டும். இருப்பவன் இந்த மலைகளைப்போல. இவை நேற்றற்றவை. எனவே முடிவற்ற நாளை கொண்டவை” என்றான். அவர்கள் சுரபிவனம் என்னும் சிற்றூரின் ஊர்ச்சாவடியில் இரவுறங்கப் படுத்திருந்தனர். மேலே அரசமரம் இலைகளை சிலிர்த்துக்கொண்டிருந்தது.

மிகச்சிறிய புழுதித் தீற்றலாக நெடுந்தொலைவில் அவ்வணிகக் குழுவின் இறுதி அசைவு தெரிந்து வானில் மறைந்தது. ஒரு கணம் மெல்லிய நடுக்கமொன்று அவனுக்கு ஏற்பட்டது.

வடிவும் வண்ணமும் இயல்பும் இயைபும் கொண்டு கண்முன் நின்ற பருப்பொருள் ஒன்று வெளியில் கரைந்து மறைவதை கண்கூடாக அப்போதுதான் அவன் கண்டான். இல்லை அது விழி மாயை. அப்பால் துளியிலும் சிறு துளியென அவர்கள் அங்கிருக்கிறார்கள். மறையவில்லை. இல்லாமலாகவில்லை.

ஆனால் வெளி மட்டுமே அங்கிருந்தது. வானும் மண்ணும் இணைந்துகொண்ட மாபெரும் வில் என. அந்த வில் மீது சில முள்மரங்கள் நின்றிருந்தன. துயருடன் விரல்விரித்து இறைஞ்சின. வானை வருடி வீண் வீண் என அசைந்தன. இப்பால் சில உப்புப்பாறைகள் வெண்பற்கள் என எழுந்திருந்தன. அங்கிருந்து அவன் நின்றிருந்த இடம் வரைக்கும் வெண்களர் மண் காற்றின் அலைகளை அணிந்தபடி கிடந்தது. அதன்மேல் மென்புழுதி சுருண்டு ஓடிச்சுழன்று மேலேறி உருவழிந்து அள்ளிச்சென்ற அனைத்தையும் கொட்டியபடி மண்ணுக்கு மீண்டது.

அந்த விற்கோட்டுக்கு அப்பால் காலமில்லை. அங்கிருப்பது இன்மை மட்டுமே. வெளி மயங்கி இன்மையென்றாகிறது. இன்மை சற்று தயங்குகையில் வெளியென்றாகிறது. மீண்டுமொரு நீள்மூச்சுடன அவன் தன்னை அவ்வெண்ணங்களிலிருந்து விடுவித்துக்கொண்டான். நடந்து தொலைதூரத்தில் தெரிந்த அந்த விண்ணொளி நோக்கி செல்லலானான்.

**[ 11 ]**

தொலைவிலிருந்து பார்க்கும்போது வெண்நெருப்பு எழுந்து தழல் அலைப்பதுபோலத் தோன்றியது. அணுகும்தோறும் வெம்மை மிகுந்து உடல் பொசுங்கும் என்று பட்டது. காற்றுச்

சுவடுகளன்றி வேறேதும் படிந்திராத வெண்ணிற நிலம் மெல்ல சரிந்துகொண்டிருப்பதை சற்று தூரம் நடந்த பின்னரே உணரமுடிந்தது. குனிந்து அம்மண்ணைப் பார்த்தான். அது உப்புத்தூளா என்று ஐயம் தோன்றியது. பின்காலை நேரத்திலேயே வானில் சூரியவட்டம் சூளையென எரிந்தது.

ஊஷரத்தைக் கடந்தபோதே தசையுருக்கும் உயர் வெப்பம் அவனுக்கு பழகத் தொடங்கிவிட்டது. பாலையில் நுழைந்தபோதே நிலத்தில் இருந்து உடலுக்கு வெப்பம் வந்து படியாமல் இருக்கும்பொருட்டு மென்மையான ஆடையால் முகத்தைத் தவிர பிற பகுதிகள் அனைத்தையும் திரையிடுவதுபோல் மூடிக்கொள்ளும் முறையை அவனும் கடைபிடித்திருந்தான். காற்றில் அலையடித்த மெல்லிய ஆடைக்குள் உடல் அதுவே உருவாக்கிக்கொண்ட நீராவிக்குள் வெம்மைகொண்டு வியர்த்து மீண்டும் குளிர்ந்து தன் இயல்பை பேணிக்கொண்டிருந்தது.

வெளியிலிருந்து வந்த வெங்காற்று முகத்தில் மோதி மூக்கையும் கன்னத்தையும் பொசுக்கி முடிகருக்கி உள்ளங்கையின் தோல்போல ஆக்கியது. பின்னர் கைகளால் முகத்தைத் தொட்டபோது மரத்தாலான முகமூடி ஒன்றை அணிந்திருப்பதாகத் தோன்றியது. வியர்வைமேல் காற்றுபடும் சிலிர்ப்பே குளிர் என நெஞ்சு வகுத்துக்கொண்டுவிட்டிருந்தது.

கையில் இருந்த வில்லை ஊன்றுகோலாக்கி சிற்றடி வைத்து சீரான விரைவில் அவன் நடந்தான். மூச்சு இரைக்கத்தொடங்கிய உடனேயே நின்று தொடைகளில் கைவைத்து சற்று குனிந்து வாயால் முழுக்காற்றையும் இழுத்து உள்ளே நிரப்பி நாய்க்குரைப்பு போல் ஒலியெழுப்பி

மூச்சு அனைத்தையும் வெளித்தள்ளினான். அது விரைவிலேயே இளைப்பாற்றி அவன் ஆற்றலை மீட்டளித்தது.

அன்று அந்தியானபோது தொலைவில் அவன் பார்த்த வெண்ணிற ஒளி முற்றிலும் அணைந்துவிட்டது. ஒதுங்குவதற்கு பாறையோ மரநிழலோ எதுவும் இல்லாமல் மண்வெளி கண்களை நிறைத்தது. சுழன்று பார்க்கையில் பிழையற்ற வட்டம் என தொடுவானத்து ஒளிக்கோடு தெரிந்தது. கவிழ்ந்த பளிங்குக்கிண்ணம்போல முகிலற்ற வானம். உயிர் என எதுவும் அங்கு இல்லை என்று தோன்றியது. மணல் வெளியிலேயே அவன் படுத்துக்கொண்டான். வயிற்றின் குறுக்காக வில்லை வைத்து வலதுகைப் பக்கம் அம்பறாத்தூணியை போட்டுக்கொண்டு வானை நோக்கிக்கொண்டிருந்தான்.

வானொளி முற்றிலும் அணைவதற்கு நெடுநேரம் ஆகியது. கிழக்கு இருண்ட பின்னரும் மேற்குச் செம்மை வெகுநேரம் எஞ்சியிருந்தது. சூரியன் இருக்கையிலேயே விண்மீன்கள் எழுந்து வந்தன. பாலையில் புகுந்த பின்னர் விண்மீன்களை முழுமையாக நோக்குவதற்கு அவன் கற்றுக்கொண்டிருந்தான். ஒவ்வொரு நாளும் இரவில் விண்மீன்களுடன் துயின்றான். திசைகளாக முதலில் அவை பொருள்கொண்டன. பின்னர் இடங்களாயின. மண்ணின் வழிகளைச் சுட்டி நிற்கும் அதிரும் சொற்களாயின. நண்டு, தேள் என வெவ்வேறு வகை வடிவங்களாயின. ஆனால் ஒரு கணத்தில் அத்தனை பொருளையும் இழந்து திகைக்கவைக்கும் வெறும் அதிர்வுகளாகி எஞ்சின.

அந்தியில் விண்மீன்களை நோக்கி அவை கொண்ட ஒவ்வொரு பொருளையாக உதிர்த்து வெறும் அதிர்வுப்பரப்பென ஆக்கி

தானும் வெறுமைகொண்டு அவற்றை நோக்கிக்கொண்டிருப்பதும் புலரிக்கு முன் அவற்றை எண்ணி எண்ணி எடுத்து ஒவ்வொன்றாக பொருளேற்றம் செய்து மண்ணுக்குரியவையாக மாற்றுவதும் அவை சுட்டும் ஒவ்வொன்றையும் தன்னுள் இருந்து எடுத்து அமைத்துக்கொள்வதுமே மீள மீள நடந்துகொண்டிருந்தது. ஏதோ ஒரு தருணத்தில் அவன் சென்றுகொண்டிருப்பது அம்மண்ணில் அல்ல, விண்மீன்கள் பரவிய இருள் வெளிக்குள்தான் என்று தோன்றியது. மண் இருப்பது அவ்விண்மீன்களுக்கு நடுவே எங்கோ அல்லது மண்ணென அவன் உணர்வது ஓர் விழிமயக்கு.

அவன் துயின்று எழுந்து நோக்கியபோது வெயில்விழுந்து சூழ்ந்து அலையடித்தது. வானம் அனைத்துத் திரைகளும் இழுக்கப்பட்டு நீல ஆடிப்பரப்பென தெரிந்தது. இரவு முழுக்க அவன் நீரருந்தவில்லை. பீதவணிகரிடம் பெற்றுக்கொண்ட தோல்குவளையில் நீர் சற்றே எஞ்சியிருந்தது. அதை அருந்தியதும் மீண்டும் அவன் உடல் நீர் என எழுந்தது. நீரைப்பற்றி எண்ணக்கூடாதென்று தனக்குத்தானே ஆணையிட்டுக்கொண்டான். நீரைப்பற்றி எண்ணுவேன் என்றால் அதன்பிறகு நீருக்கான பயணம் மட்டுமே நிகழ முடியும்.

அவன் சென்றுகொண்டிருப்பது வருணனின் நிலம். வரமளிப்பவனின் உலகு. இங்கு அவன் விடாய்கொண்டு உயிர் துறப்பான் என்றால் அது வருணனின் ஆணை என்றிருக்கட்டும். இப்பயணத்தில் நடுவில் அவன் எங்கு இறந்து விழுந்தாலும் அதுவே முறையென்றாகுக. நீர் தேடி பரிதவித்து செத்துவிழுந்தான் என்றால்தான் அது அவன் தோல்வி.

அவன் எண்ணியதுபோலவே சற்று தொலைவில் நீரைப் பார்த்தான். அதற்கு நெடுநேரம் முன்னரே வானில் சுழன்று கொண்டிருந்த பறவைகளை கண்டிருந்தான். பறவைகள் அங்கிருந்த மஞ்சள் நிறமான பாறையொன்றின் மேல் கூடிச்சுழன்று எழுந்து அமர்வதைக் கண்டபோது அங்கு நீர் இருக்கலாமென்று தோன்றியது. காலையின் அரைவிழிப்பில் சித்தம் எழுந்ததுமே வானில் பறந்த பறவைச்சிறகுகளின் நிழலை தன்னைச்சுற்றி உயிரசைவென உணர்ந்ததை அப்போதுதான் எண்ணிக்கொண்டான். பறவைக்குரல்கள் ஓங்கின. அவை அவனை பார்த்துவிட்டிருந்தன. அவன் அணுகி அப்பாறைமேல் தொற்றி ஏறியபோது அதன் குழி ஒன்றில் நீர் இருந்ததை கண்டான். சிறிது அள்ளி வாயில் வைத்தபோது அது தூயநீர் என்று தெரிந்தது. கையில் எஞ்சியிருந்த உலர் உணவை உண்டு அந்நீரை அருந்தி தோல் குடுவையையும் நிரப்பிக்கொண்டான்.

அவனைச் சுற்றி நீர் நாடி வந்த பறவைகள் எழுந்து பறந்து அமைந்துகொண்டிருந்தன. வெண்ணிறமான கடற்காகங்கள். அவற்றின் குரல் அவனை எச்சரிப்பதுபோல மன்றாடுவதுபோல மாறி மாறி ஒலித்தது. அவற்றின் நோக்கை சந்தித்தபோது அச்சொற்களை மிக அணுக்கமாக புரிந்துகொண்டான். அவை அவனைத் தாக்கி கீழே தள்ள விரும்புபவைபோல சிறகுக்காற்று அவன் மீது படும்படியாக சீறிப் பறந்தன. ஒன்று அவன் தோளை தன் நகத்தால் கீறிச்சென்றது.

புன்னகையுடன் அவன் பாறையைவிட்டு இறங்கியபோது அவை மீண்டும் அமர்ந்து நீரருந்தத் தொடங்கின. குனிந்து நீரில் தலையை முக்கி அண்ணாந்து தொண்டையை சிலிர்த்தன.

சிறகுகளை நனைத்து உதறி எழுந்து மீண்டும் அமைந்தன. நீர் நீர் என்று அவை கூவிக்கொண்டிருப்பதாகத் தோன்றியது.

முன்னால் சென்றபோது மேலும் மேலும் பறவை நிழல்கள் தரையைக் கடப்பதை அவன் கண்டான். அவை அப்பாலிருந்து வந்து மீண்டுசென்றன. அன்று மாலை நெடுந்தொலைவில் பறவைகளின் ஓசையை கேட்க முடிந்தது. எங்கோ பெருங்கூட்டமாக அவை வாழ்கின்றன என்று எண்ணிக்கொண்டான். இரவில் அப்பறவைக்குரல்களைக் கேட்டபடி துயின்றான். கனவில் பறவைகள் சூழ வானில் மிதந்துகொண்டிருந்தான்.

மறுநாள் பகல் முழுக்க நடந்து மாலையில் வெட்டவெளியில் விண்மீன்களுக்குக் கீழே துயின்றான். அதற்கு அடுத்தநாள் பின்காலையில் தொலைவிலிருந்து பறவைகளின் சிறகடிப்பை பார்த்தான். புகையசைவென, வெண்ணிற இலைக்கொந்தளிப்பென அது அவன் காலடிகளுக்கு ஏற்ப தெளிந்து வந்தது . பறவைக்குரல் இணைந்து எழுப்பிய இரைச்சல் அணுகியது. அவன் அந்த உயிரில்லாத கடல் வரக்கூடுமென எதிர்பார்த்தான். ஆனால் கரையொதுங்கிய பெரிய மீன்கள் என வெள்ளி மின்ன நூற்றுக்கணக்கான நீர்க்குட்டைகள்தான் கண்ணுக்குத் தெரிந்தன.

அணுகுந்தோறும் அவை உருப்பெருகி வந்தன. முதல் குட்டையின் அருகே சென்றதும் அதன் கரையெங்கும் செறிந்திருந்த வெண்நாரைகளும் கடற்காகங்களும் கூச்சலிட்டபடி சிறகடித்து வானில் எழுந்து பறந்தன. குட்டையின் மணற்சேற்று விளிம்பை அணுகும்போது மென்கதுப்பு புதைந்து இடைவரைக்கும் இறங்கியது. கைகளை ஊன்றி நீச்சலிட்டு அந்நீரை அணுகி தொட்டு அள்ளி

வாயிலிட்டான். உப்பு நீர். குட்டை முழுக்க வெள்ளி நாணயங்களென ஒளிர்ந்து ஒளிர்ந்து திரும்பியபடி சிறிய பரல் மீன்கள் நிறைந்திருந்தன. நோக்க நோக்க மீன்கள் மேலும் தெரிந்தன. குறுவாள்கள், மூங்கில் இலைகள், வெள்ளிச் சிமிழ்கள். இளஞ்சிவப்பு நாக்குகள். கன்றுச்செவிகள்.

அவன் கைகளை எடுத்துவிட்டு மேலே வந்து நோக்கியபோது அவை நீர்ப்பரப்பின் மேலே வந்து விழிகள் மின்ன, வால் தவழ, செவுள்கள் அலைபாய அவனை நோக்கின. அவன் உடல் சற்று அசைந்தபோது ஒரு கணத்தில் நீரில் விரிந்த வானில் மூழ்கி மறைந்து பின் ஒவ்வொன்றாக உருவம்கொண்டு எழுந்தன.

கரையேறி மணல்விளிம்பில் நின்றபடி அந்தச் சுனைகளை விழிதொடும் தொலைவு வரை பார்த்தான். வெள்ளி ஆரம்போல வானிலிருந்து வான்வரைக்கும் வளைந்து கிடந்தன அவை. அக்குட்டைகளின் இடைவெளியினூடாக நடந்து மறுபக்கம் சென்றான். அங்கு சிறிய அலைகளாக தொலைதூரம்வரை படிந்துகிடந்த மணல் அவன் கால் பட்டு பொருக்குடைந்து தடம்கொண்டது. பொருக்கு உடையும் ஒலி சிம்மம் எலும்புகளை மென்று இரையுண்பதுபோல ஆழ்ந்த அமைதியுடன் ஒலித்துத் தொடர்ந்தது.

மணல் பொருக்குகள் அடர்ந்து வந்தன. அங்கு மட்டும் மழை பெய்திருக்கிறதா என்று பார்த்தான். மழை விழும் இடம் அல்ல அது. அவ்வாறென்றால் நீர் வற்றி கீழிறங்கிச் சென்றிருக்கிறது. அருகமைகாலத்தில் அல்ல. நெடுங்காலத்துக்கு முன். பலநூறு தலைமுறைகளுக்கு முன். அப்பரப்பில் பறவைகள்கூட வந்தமர்வதில்லை என்று தெரிந்தது. காலால் தட்டிப்பார்த்தான். பொருக்கு மணலுக்குள் இருந்த மீன்கள் அனைத்தும் வெறும் எலும்பு வடிவுகளாகத் தெரிந்தன. வெண்சுண்ணச் சித்திரங்கள்

என பல்லாயிரம் மீன்கள். வெள்ளி இலைநரம்புகள். பளிங்குச்சீப்புகள். பல்வரிசைகள்.

குனிந்து ஒரு மீன்முள்ளைத் தொட்டபோது அது அரிசிமாவுப் பொருக்கு என உதிர்ந்தது. மீனென அது வாழ்ந்தபோது அங்கு வாழ்ந்தவர்கள் எவர்? அவற்றை உண்ணவந்த பறவைகள் எவை? இறந்தநிலம். இறந்தமையால் காலத்தை வென்ற இடம். இறப்புவரைதான் வளர்வும் தளர்வும். இறப்பு என்பது நிலையமைவு. மாறிலியென மாற்றங்களுக்கு மையம் கொள்ளும் புள்ளி. தயங்கிய விழிகளுக்கு முன் நெடுந்தொலைவில் வானின் வெண்ணிறஒளி மீண்டும் தெரியலாயிற்று. வெண்ணிற அனல். அல்லது அங்கிருப்பது வெண்பாற்கடல்.

பொருக்கு மண் மீது கால்களை தூக்கிவைத்து காண்டீபத்தை ஊன்றி உடல்நிகர் செய்தபடி நேர்நடையிட்டு அவன் சென்றுகொண்டிருந்தான். அந்தி வரை சென்று திரும்பிப்பார்த்தபோது அவன் வந்த பாதை மண் கிளறப்பட்டு ஒரு செந்நிற வடு என அவனை நோக்கி வந்து கால்களைத் தொட்டு இணைந்திருந்தது. அந்தத் தடம் அங்கே கிடக்கும். காலமுடிவுவரை. அதை எவர் வந்து பார்க்கக்கூடும்? பார்த்து அவன் விழைவை தயக்கமென எண்ணிக்கொள்வார்கள் போலும். அவன் குழப்பத்தை அச்சமென பொருள்கொள்ளலாம். மூதாதையரை நம்மில் உள்ளவற்றின் பின்நீட்சியென உருவகித்துக்கொள்கிறோம். அல்லது நம்மில் இல்லாதவற்றினாலா?

பொருக்கு மண்மேலேயே படுத்து விண்மீன்களை நோக்கியபடி துயின்றான். விண்மீன்கள் காலிடற முகில்களில் கால்புதைந்து புதைந்து தள்ளாடி நடந்துகொண்டிருந்தான். நீலநீரில்

எலும்புருவான மீன்கள் நீந்தித் திளைத்தன. சுண்ணமுள் வடிவ இலைகளுடன் செடிகள் காற்றில் ஆடின. அவன் தன் கால்களை குனிந்து நோக்கினான். அவை எலும்புவடிவிலிருந்தன. நீர்விடாயென விழித்துக்கொண்டபோது புலரி எழுந்திருந்தது. பாலையின் குளிரில் அவன் ஆடைக்குள் அவன் உடம்பு சிலிர்த்து நடுங்கிக்கொண்டிருந்தது. குடுவையில் எஞ்சிய சிறிதளவு நீரை அருந்தினான். நாநனையும் அளவுக்கே நீர் இருந்தது. ஆனால் அது உடலை ஊக்கம் கொள்ளச்செய்தது.

மீண்டும் புரண்டு சுருள் விரிந்து அகன்று அகன்று சென்றுகொண்டிருந்த நிலத்தில் அசையாமல் நின்றுகொண்டிருந்த வெண்ணிற ஒளிகொண்ட தொடுவான் வளைவு நோக்கி நடந்தான். நிலப்பொருக்கு சேற்றுப்பலகை அடுக்குகளாக ஆகியது. முதலையின் செதில்தோல் பரப்புபோல வெடிப்புகள் கொண்டது. ஓட்டுக்கூரை ஒன்றின் சரிவில் நடப்பதாக மறுகணம் தோன்றியது. அவன் காலடியில் அவை ஓசையுடன் நொறுங்கி துண்டுகளாயின.

குனிந்து ஒரு சிறு ஓட்டை எடுத்துப் பார்த்தான். அதன் அடியிலும் ஈரம் இருக்கவில்லை. அடியில் அவன் எதிர்பார்த்த சிற்றுயிர்களும் இல்லை. அவற்றின் அசைவை மட்டும் கண் ஒருகணம் அடைந்து நிலைமீண்டது. என்னென்ன எண்ணிக்கொண்டிருக்கிறேன்? பித்துக்குள் சென்றுகொண்டிருக்கிறது என் உள்ளம். ஆனால் இத்தனித்த பயணத்தில் அவ்வாறு அனைத்து வழிகளிலும் சிதறும் எண்ணங்களே பெரும்வழித்துணை என்றாகும். அவை பெருகும் சித்தவிடாயை மாற்றுலகங்களை உருவாக்கி நிறைவுசெய்கின்றன. தனியன் பல உலகங்களில் வாழ்பவன். பல புவிகளை சுமந்து செல்பவன்.

பயணத்தில் இல்லம் துறந்து ஊர் துறந்து பெயர் துறந்து உளம் துறந்து செல்பவன் மீண்டும் இளமைந்தனாகிறான். தவழும் குழந்தையென்றாகிறான். பார்க்கும் ஒவ்வொன்றும் புதிதென்றாகிறது. பொருளற்று வெறும் பொருளென நின்று பொருள் அவனை நோக்குகிறது. பொருளை பொருள்மட்டுமே என நோக்கும் சித்தத்துடன் தவித்து தன்னிலை மீண்டு பொருள் தேடுகிறான். இது களிமண்ணால் ஆன சருகுப்பரப்பு. இல்லை, இவை அப்பங்கள். பழைய தோற்கவசப்பரப்பு. மாபெரும் ஆமையின் ஓடு. இங்கிருந்ததா ஒரு கடல்?

அப்பரப்பின் மறுஎல்லையென்று ஒன்று விழிக்குப்படவில்லை. நடந்து நெடுந்தொலைவு கடந்து திரும்பிப் பார்க்கையில் அப்பொருக்குப் பரப்பு அன்றி வேறெதுவும் புவியிலேயே இல்லை எனத் தோன்றியது. ஆம், இதுதான் கடல். இங்கிருந்த நீர் கடல்களில் மட்டுமே எஞ்சி இங்கு வற்றிவிட்டிருக்கிறது. இது கடலடி வண்டல். இக்கடலைக் குடித்து உலர்த்தியது யார்? இது ஒரு ஒழிந்த மதுக்கோப்பையா? இங்கிருந்த நீரனைத்தும் ஆவியென்றாகி எழுந்து காற்றில் நிறைந்துள்ளன. அலையடித்து அலையடித்துத் தவித்து அலையைச் சிறகென்றாக்கிப் பறந்தெழுந்து விண்நின்றுள்ளது கடல்.



இதோ என் தலைக்கு மேல் உள்ளது கடல். நுண் வடிவக்கடல். இங்கு வெண்சுண்ண வடிவுகளெனப் பதிந்திருக்கும் மீன்கள் அங்கு நுண் வடிவில் நீந்திக்கொண்டிருக்கலாம். அதில் ஓடிய கலங்கள் அங்கு நுண்வடிவில் மிதந்தலையலாம். கடலோடிகள் அங்கிருக்கலாம். என்ன எண்ணங்கள் இவை? ஏன் இவை தங்கள் ஒத்திசைவை, பொருள் இணைப்பை சிதறடித்துக் கொண்டிருக்கின்றன? ஒவ்வொரு எண்ணமும் பிறிதொரு எண்ணத்தால் கட்டுண்டிருக்கிறது. கட்டடத்தில் அமைந்த

செங்கற்கள் போல. கட்டடம் இடிந்து சரிகிறது. என்னுள் விடுதலைகொண்டுள்ளது ஒவ்வொரு கல்லும். எண்ணங்கள் ஓட தோற்றம் மயங்கிய நோக்குடன் திரும்பியபோது அவன் தொலைவில் அந்தக் கடலை ஒரு பெரிய முகில் நிழல் என கண்டான்.

# கிராதம் - 33

[ 12 ]

அருகிலெனத் தெரிந்தாலும் அந்தக் கடல் சேய்மையிலேயே உள்ளதென அர்ஜுனன் அறிந்திருந்தான். மலைகளும் கடல்களும் போன்ற பேருருவ இருப்புகள் அண்மையை நடிக்கத் தெரிந்தவை. அணுகுபவனை நோக்கி சேய்மையில் நின்று நகைக்கக்கூடியவை.

அவன் அக்கரிய கடலை அணுக மேலும் நான்கு நாட்களாயின. அது முற்றிலும் ஓசையற்றிருந்தது, எனவே தன்னைக் கடலென்றே காட்டவில்லை. பெருமலைகள் ஒளிந்து அமர்ந்திருப்பதை அவன் கண்டிருந்தான். கடல் ஒன்று பதுங்கியிருப்பதை அப்போதுதான் கண்டான்.

கரும்புகை என முதலில் தோன்றியது. விண்சரிவில் தீற்றப்பட்ட ஒரு கரிக்கறை என பின்னர் தெரிந்தது. மேலும் அணுகியபோது வாசல்களோ மாடங்களோ அற்ற பெருங்கோட்டை என விரிந்தது. பின்னர் அவ்வண்ணமே திசைமறைத்து நின்றது. அவன் அதை நோக்கியபடியே நடந்தான், துயின்றுவிழித்தான். காலையில் எப்படித் தெரிந்ததோ அப்படியே மாலையிலும் அமைந்திருந்தது.

ஒளியின்மை. அசைவின்மை. பருவின்மை கொண்ட இருப்பு. இருப்பெனக் காட்டும் இன்மை.

கையிலிருந்த நீர் முற்றிலும் தீர்ந்துபோன அன்றுதான் அவன் உப்புப்படுகையை வந்தடைந்தான். கண்களை ஒளியால் நிறைத்து இமையதிர்ந்து சுருங்கவைக்கும் வெண்மை. வெண்ணிற நுரைபடிந்து வற்றியதுபோல் தெரிந்த விளிம்புக்கு வந்துசேர்ந்து அங்கே நின்றான். காலை வைத்து அந்த மென்மையை உடைக்க அவனுக்குத் தோன்றவில்லை. கொக்கிறகின் பீலிவரி. நீரில் மிதந்து வந்து கரையில் படிந்த இலவம்பஞ்சு.

அதற்கப்பால் உப்பு தடிமன் கொண்டு அலைகளாக ஆகியது. பனிப்பரப்பு. பளிங்குப்பரப்பு. உடலை சித்தத்தால் உந்திச்செலுத்தி அவன் முன்னால் சென்றான். கால் வைத்த உப்பு நொறுங்கியது. மேலும் கால் வைக்க உடல்கூசியது. மேலும் மேலுமென பலமுறை உடல் ஆயம் கொண்டபின்னரே காலை வைக்கமுடிந்தது. உப்பு நொறுங்கும் ஒலி. வஞ்சம் கொண்ட சிரிப்பின் ஒலி. கீழே குனிந்து நோக்கியபோது பற்களைக் கண்டான்.

பற்களின் பரப்பு. அவன் கண்களை மூடிக்கொண்டு அசைவற்று நின்று உடலில் ஓடிய அச்சத்தை உளவிசையால் நிகர்செய்துகொண்டான். அந்த மாபெரும் அரைவட்டத்தை ஒரு புன்னகை என அவன் கண்டான். பின்னர் வெறிகொண்டவனாக ஓடத்தொடங்கினான். கைகளை விரித்து கூச்சலிட்டபடி பித்தன்போல ஓடி உப்பில் கால்வழுக்கி விழுந்து புரண்டு எழுந்தமர்ந்து மூச்சிரைப்புடன் நோக்கினான். அவனைச் சூழ்ந்திருந்தது உச்சிவானின் ஒளி.

அவன் ஒளிமேல் நடந்தான். கண்விழிப் புள்ளிகள் சுருங்கி ஊசித்துளையென்றாகி அந்த ஒளிப்பரப்பை காட்சியாக மாற்றலாயின. இரவணைந்தபோது வானிருண்டு மூடிய பின்னரும் அவனைச் சூழ்ந்திருந்தது அதுவரை உப்புப்படுகை அள்ளி உண்டு உள்ளே தேக்கியிருந்த ஒளி. இரவெல்லாம் அந்த ஊமையொளி காலடியில் நிறைந்திருந்தது. அதன்மேலேயே படுத்துத் துயின்றான். வானில் முகில்கள் மேல் துயில்வதாக கனவுகண்டான்.

ஒரு மென்சரடில் சிலந்தியென காற்றில் மிதந்தலைவதாக உணர்ந்து விழித்துக்கொண்டபோது மேலே விண்மீன்கள் அதிர்ந்து நின்றன. அவனைச் சுற்றி இருந்த வெண்ணிற மென்பரப்பில் குளிரே ஒளியென்றிருந்தது. விடாய் அறிந்தே விழித்திருப்பதை உணர்ந்தான். நாவால் உதடுகளை நக்கியபோது உப்புப்பொருக்கு உள்ளே சென்றது. அதை துப்புமளவுக்கு வாயில் எச்சில் இருக்கவில்லை.

நாக்கு கோடையில் வற்றிய சுனையருகே பாறையில் உலர்ந்து ஒட்டியிருக்கும் நீரட்டை போலிருந்தது. வாய்க்குள் தசைப்பரப்புக்கள் தோலென நாவுரசின. தொண்டை மணலால் அடைக்கப்பட்டிருந்தது. ஆனால் உட்குழாய்களில் அனலோடியது. கீழே அடிவயிறு நீர் நீர் என எம்பித் தவித்தது. விடாய் கால்களை தளரச்செய்தது. கைவிரல்களை நடுங்கவைத்தது. மூச்சில் வெம்மையென ஓடியது. சித்தத்தில் நீர்க்காட்சிகளை உருவாக்கியது.

அப்பால் அப்பாலென மயலூற்றுக்கள் அழைத்தன. அலைகள். ஒளிகள். நெளிவுகள். குளுமைகள். நீர் ஒரு பூண் அணி. மணிமுடி, கல்லாரம், மேகலை. நீர் ஒரு வாள். நீர் ஒரு கேடயம். நீர் ஒரு பட்டாடை. ஒரு திரை. ஒரு தாலம். ஓர் ஏடு.

இரக்கமற்ற ஏதோ ஒன்று எழுதப்பட்டது. இரக்கம் எனப் பொருள் அளிக்கும் வரிகள் அவை.

வேண்டுமிடத்திற்கு வரும்பொருட்டே வழிவெனும் இயல்பைக் கொண்டுள்ளது நீர். மழையென இழிந்து அருவியெனப் பொழிந்து ஆறெனச் சரிந்து நதியெனப் பெருகி கிளையென விரிந்து கழனிகளில் நிறைகிறது. மண் நெகிழவைக்கிறது. இளஞ்சேற்றின் நெகிழ்வு. முலைகொண்ட அன்னை மகவுக்களிக்கும் முத்தம் என கண்கனிந்த தருணம். இளஞ்சேற்றின் மணம். முலைப்பால் குருதி. உருகிவரும் மென்கதுப்புத்தசை.

வேண்டுக, வந்தாகவேண்டும். விழைக, பொழிந்தாகவேண்டும். அறம்நின்று ஆணையிடுக, அமுதாகிச் சுரந்தாகவேண்டும். நீர் ஒரு வாக்குறுதி. ஒரு கருணை. ஒரு பேரருள். நீரென்றாகியது பருவெளியின் கனிவு. கற்பாறைகளும் கடுமண்ணும் அளிகொண்டல்லவா நீர்மையென்றாகின்றன? முலையென ஊறுவது அன்னையின் சித்தம் கொண்ட உறுதி. கொலைக்கூர் வெண்தேற்றை கொண்ட பெரும்பன்றியின் முலைக்கொத்துக்களில் வெண்ணிறத்துளி என ஊறி நிற்பதும் அவ்வெண்தேற்றையென தன்னை எழுப்பிக்கொண்டதே அல்லவா?

நீர்மையென்பது ஓர் அறிவுறுத்தல். ஒவ்வொருநாளும் வான் கனிந்தாலன்றி வாழ்க்கை இல்லை. அறியா வெளி அளித்தாலன்றி அமுதென ஒன்றில்லை. விசும்பு துளிகூராமல் பசும்புல் இல்லை. பசும்புல்லே, மழைகொண்ட உயிர்வடிவே, வான் வளர்க்கும் மண்ணே. பசுமையே. பசுமையென்பதுதான் என்ன? இளந்தளிர்களில் எத்தனை வண்ணங்கள்!

பொன்னிறமென்மை, வெள்ளிக்கூர்மை, செம்புச்செம்மை. அனைத்தும் முதிர்ந்து பசுமை. பசுமையின் நீர்மையே தளிரா?

தேங்கி அலையடிக்கும் முடிவிலி என நீலம். நீர் நீலம் கொள்கையில் தன்னை விலக்கிக்கொள்கிறது. வேட்டைக்கு குட்டிகளை விட்டு விலகிச் செல்கிறது அன்னைச்சிம்மம். நீலம் அளியின்மையின் நிறம். முடிவிலி என்பதே அளியற்றது. முடிவுகொண்டவை மட்டுமே மானுடனுக்கு அணுக்கமானவை. காலம் முப்பிளவு கொண்டு சூழ்ந்தவன் மானுடன். எல்லை வகுக்கப்பட்டவன். எல்லைகொண்டவை மட்டுமே மானுடனை அறியும். ஏனென்றால் எல்லைகொண்டவற்றை மட்டுமே மானுடன் அறியமுடியும்.

முடிவிலிகள் இரக்கமற்றவை. முடிவிலி என்பதே வகுக்கப்பட்டு இங்கென்றும் இன்றென்றும் இருப்பென்றும் ஆனவற்றை உறிஞ்சி உறிஞ்சி உண்ணும் அலகிலா விடாய்கள்தான். வானம் மண்ணை உறிஞ்சிக்கொண்டிருக்கிறது. உயிர்களை உண்கிறது. இதோ இந்த உப்பை, அந்தக் கற்பாறையை நக்கிக்கொண்டிருக்கிறது. அங்கெங்கோ மலைகளை அது கரைத்துண்கிறது. பனித்துளிகளை சுனைகளை ஆறுகளை ஏரிகளை அருந்துகிறது. பெருங்கடல்களை வற்றவைக்கிறது.

மண்ணிலிருந்து நீர்மையை அள்ளிக்கொள்கிறது வானம். உருவழித்து அருவமாக்கி தன்னுள் வைத்துக்கொள்கிறது. வானென்று நாமறிவது இன்மையும் நீரும் ஊடுபாவென ஓடி நெய்தெடுத்தது. மண்ணமைந்த நீரெல்லாம் வானுக்குரியவை. சிறகுகொண்டு எழுந்து வானில் நிறைந்த பின்னரும் மண்நோக்கிக் கனிந்து குளிர்ந்துகொண்டிருக்கும் நீரே, நீயே அன்னை.

துளித்து கண்ணென ஆகி நோக்கி ஒளிர்கிறாய். பொழிந்து பல்லாயிரம்கோடி குளிர்முத்தங்களாகி மூடிக்கொள்கிறாய். தழுவிச்சிலிர்க்கிறாய். அமுதாகிறாய். வளைந்தோடி குருதிச்சரடாகிறாய். கடலை அடையும் நதிகளின் தயக்கம்தான் என்ன? மானுடனை நோக்கி கனிந்திருக்கும் தெய்வமென்பது நீர் மட்டுமேதானா?

விடாய், விடாய், விடாய். அதுவே சித்தம். அதுவே சித்தப்பெருக்கு. அதுவே இருப்பு. அதுவே இயக்கம். விடாய் என்பது ஓர் அறிவிப்பு. மிருத்யூதேவி வரும் காலடியோசை. விடாய் இனிது. அது தசைகளை மெல்ல சுருளச்செய்கிறது. அறம்பொருளின்பவீடென ஆன அனைத்தையும் ஒன்றெனச் சுருக்கி பிறிதிலாது ஆக்கி இலக்களிக்கிறது.

விடாய் வாழ்க! விடாய்கொண்டு மறைந்தவர் விண்புகுவர். அவர்கள் மண்ணுதிர்வதில்லை. விண் அவர்களை உறிஞ்சி எடுத்துக்கொள்கிறது. மண்ணில் அவர்களுக்கு கடன்களேதுமில்லை. கொடுத்தல், பெறுதல், அறிதல், இயற்றல், ஆதல் என ஏதும் எஞ்சுவதில்லை. அவர்கள் உண்ணாத நீர் உருவழிந்து செறிந்த விண்ணில் அவர்கள் மென்பஞ்சு முகிலென மாறி நீர் ஒற்றிஎடுத்து எடைகொண்டு கனிந்து அமர்ந்திருப்பர்.

விடாய், விடாய், விடாய். பிறிதொன்றுமில்லை. சொற்களை சிதறடிக்கிறது அது. அள்ளி அள்ளி வைக்கும் அத்தனை எண்ணங்களையும் விடாயெனும் ஒற்றைச் சொல்லாக உருமாற்றி விளையாடுகிறது. நாவறிந்து தொண்டை உணர்ந்து உடலாகி நின்ற விடாயை உளம் அறிந்துவிட்டபின் எங்கோ உயிர் அறிந்துவிடுகிறது. அக்கணமே அது உலகமைத்த விசைகளில் ஒன்றெனக் காட்டுகிறது.

நீரே பிறப்பு. விடாய் இறப்பு. நாதுழாவி இறப்பை நெருங்கும் முதியவர்களின் வாய்க்குள் செல்லும் இறுதிநீர் அறிந்த ஒன்று. இங்கிருந்து பெற்றுக்கொள்ளும் இறுதி. இங்கு வந்தபின் பெற்றுக்கொண்ட முதல்துளியின் மறுநுனி.

உடலென்றானது அனலும் அதை அவிக்கும் நீரும் கொண்டுள்ள நிகர். நீரழிகையில் உள்ளூறை அனலெழுந்து உண்ணத் தொடங்குகிறது அன்னத்தை. குருதி என்பது நீர்மைகொண்ட அனல். அனல் உறையும் நீர். குருதி எரிக்கிறது என் தசைகளை. குருதி புகைந்து கண்கள் நோக்கிழக்கின்றன. செவிமடல்களில் தழலாடத் தொடங்கிவிட்டது.

அவன் மயங்கி விழுந்திருந்ததை விழித்துக்கொண்டதும்தான் உணர்ந்தான். விழிக்கச்செய்ததும் விடாயே. உப்புவெளிக்கு அப்பால் அந்தக் கரிய நீர்க்கோட்டை எழுந்து வானளாவ நின்றிருப்பதை நோக்கியபடி அங்கேயே படுத்திருந்தான். எங்கு செல்கிறேன்? நுழையவிடாத அக்கருந்திரையை அணுகி என்ன செய்யப்போகிறேன்? மறு எண்ணம் எழவிடாமல் எழுந்து அதை நோக்கி தன்னை மீண்டும் செலுத்தினான்.

கால்கள் எங்கோ மிதித்துக்கொண்டிருந்தன. சித்தம் எங்கோ திரிகளாகப் பிரிந்துகொண்டிருந்து. உயிர் சிதையென்றாகி உடலை எரித்தது. உயிரால் உடலை எரித்தழிக்கமுடியுமா? பெருந்துயர் ஒன்று காட்டுகிறது பொருளற்ற துயர்களை உருவாக்கி ஆடி உவகைகொண்டிருக்கும் மானுட மடமையை. நீரே ஆகிய நீரென்றே எஞ்சிய நீரென்றே கனிகிற நீரன்றி பிறிதிலாத தெய்வமொன்று எழுக! அதைத் தொழுக தெய்வங்கள்!

மீண்டும் அவன் மயங்குவதை உணர்ந்தான். காட்சி அலையடித்தது. திசையென்றான வெண்ணொளி கொப்பளித்தது. விளிம்புததும்பும் கலமென ஆடியது தொடுவான். விழக்கூடாது, விழமாட்டேன், விழுந்தால் இறப்பு. விழுவதே இறுதிக்கணம். ஆனால் விழவில்லை. அவன் காலூன்றி நின்றிருந்தான். அப்பால் ஒரு மென்குரல். அவன் திரும்பிப்பார்த்தபோது அவளைக் கண்டான்.

கொழுவிய உடலில் பெரிய முலைகள் ததும்பி அசைந்தன. உருள்தொடைகள் நடையில் இறுகி மீண்டன. அருகே வந்து புன்னகைத்தபோது அவள் உதடுகள் செந்நிறமாகக் கசிந்திருப்பதைக் கண்டான். “நானேதான்…” என்றாள். “ஆம்” என்று அவன் சொன்னான். “அருந்துக!” என்றாள். “நான் விடாய் கொண்டிருக்கிறேன்” என்றான். “ஆம், அருந்துக!” அவன் குனிந்து அவள் முலைகளைப் பற்றி சுவைத்தான். அவை வறண்டிருந்தன. வெறிகொண்டவனாக அவளை அவன் இழுத்து உண்டான். அவள் வெறுமைகொண்டிருந்தாள்.

மூச்சிரைக்க நிமிர்ந்தான். அவள் விழிகள் நீல ஒளிகொண்டிருந்தன. “நீ யார்?” என்றான். “மூத்தவள். நான் மட்டுமே இத்தனை தொலைவுவரை வருவேன்.” அவள் உடல் தேய்த்த சந்தனமென ஒளிகொண்டிருந்தது. மலர்வரிகள் படிந்த தோல். முலைகளுக்குமேல் மணல்வரிகளென பருத்தமைக்கான வெண்விரிசல்கள். “நீ மிருத்யூ. வியாதி. நித்ரை” என்றான். “நான் ஸ்வப்னை, சுஷுப்தி, பூர்ணை” என்றாள் அவள். “கொள்க!” என தன் இதழ்களை நீட்டினாள்.

அவன் அதைக் கவ்வி உறிஞ்சினான். இனிய கனிபோல சாறு ஊற்றெடுத்து அவன் தொண்டையை நிறைத்தது. அருந்த அருந்த மேலும் வெறிகொண்டு அவளை உறிஞ்சிக்கொண்டே

இருந்தான். அவள் திமிறாமல் மெல்ல உடலமைந்து அவனுக்கு தன்னை அளித்தாள். அவள் குருதி இனிய குளிருடன் இருந்தது. அமுதென்பது குருதி. குருதி வெறும் நீரல்ல. அதில் ஓடுகின்றன எண்ணங்கள், விழைவுகள், கனவுகள். இத்தனை ஆழ்ந்தவளா? இத்தனை கூரியவளா? இவளை நான் இன்றுதான் அறிகிறேனா?

உண்டு முடித்து அவன் நோக்கியபோது தோலுறை நீர் இழந்து சுருங்கியதுபோல அவள் அவன் கையில் இருந்தாள். கைநெகிழ அவள் கீழே தளர்ந்து விழுந்து உப்பில் படிந்தாள். முதுமகள். நீண்ட பழுப்புநிறப் பற்கள். எலும்புகள் உந்திய முகம். ஒட்டிய கன்னங்கள். நரம்பெழுந்த கழுத்து. வறுமுலைகள். சுருங்கி வலிந்த வயிறு. எலும்பெழுந்த விலா. சுள்ளிக்கைகால்கள். அவள் உடல் அவன் கண்முன்னால் மட்கிக்கொண்டிருந்தது.

அவன் விழித்துக்கொண்டபோது உப்பில் கிடந்தான். எழுந்தமர்ந்தபோது குருதி மணத்தை உணர்ந்தான். வெண்ணிற உப்புப்பரப்பில் செங்குருதிச் சொட்டுகள் உதிர்ந்து இதழ் விரிந்திருந்தன. வீசியெறிந்த செந்நிற மலர்மாலை என. மறுகணம் அவன் தன் கையை நோக்கினான். அவன் கைநரம்பு உடைந்து குருதி வழிந்து உள்ளங்கையை அடைந்து விரல்நுனிகளில் திரண்டு சொட்டிக்கொண்டிருந்தது. கையைத் தூக்கி வாயில் வைத்து அதை சுவைத்தான். ஏற்கெனவே அக்குருதியை வேண்டுமளவு உண்டிருப்பதை உணர்ந்தான்.

அவன் தொண்டை ஈரமாகியது. நாக்கு சுவையறிந்து சுழன்றது. உடலுக்குள் பல்லாயிரம் நாக்குகள் எழுந்து அத்துளிகளை வாங்கிக்கொண்டன. தன்னை உறிஞ்சி அருந்தியபடி அவன் முன்னால் சென்றான். கால்கள் தள்ளாடின. கண்கள்

ஒளியணைந்து மயங்கி மீண்டன. ஆயினும் நாவூறத்தொடங்கியது. அனல் அவிந்து தொண்டை அமைந்தது.

தன் குருதியை அருந்தியபடி அவன் நீர்க்கோட்டையின் அருகே சென்று நின்றான். உப்புப்படுகைக்கு அப்பால் விழிஎல்லை வரை கரியநீர் அசைவில்லாது தேங்கி நின்றிருந்தது. கருங்குழம்புபோன்ற நீர். நீர்ப்பாறை. குற்றலைகள் அதன் உடலை சிலிர்க்கச்செய்தன. மாபெரும் மீன் ஒன்றின் செதில். அவன் அதை நோக்கி நின்று சற்றுநேரம் சித்தம் அழிந்து அஸ்தினபுரியில் அம்பு பழகினான். வேர்கள் அலைபாய்ந்த நீர்ப்பரப்பினுள் நீந்தினான்.

பின் விழித்துக்கொண்டு அந்த நீர்ப்பரப்பை நோக்கினான். கருங்கல் உடைத்து எடுக்கப்பட்ட பரப்பு. வான்பொழிந்த ஒளியெல்லாம் அதன் ஆழத்திற்குச் சென்று மறைய மேல்பரப்பில் மெல்லிய கசிவு மட்டும் இருந்தது. உயிரில்லா நீர். நீருக்குள் குனிந்து நோக்க அங்கே நெளிவுகளைக் கண்டான். உயிரல்ல என சித்தம் உணர்ந்தது. அனல் அல்ல. நாகம் அல்ல. நெளிவு.

மெல்ல காலடி எடுத்து வைத்து அந்நீருக்குள் நுழைந்தான். இடைவரை சென்றபோது நீர் சேறென காலில் சிக்குவதை உணரமுடிந்தது. அள்ளி கையில் எடுத்தான். மதுத்தேறலின் அடியூறல் போன்ற வீச்சமும் எடையும் நிறமும் கொண்டிருந்தது. வாயில் விட்டதுமே துப்பிவிட்டான். உப்பு செறிந்த ஊன் மட்கிய சேற்றுக்குழம்பு. மேலும் சென்றபின் அவன் ஒன்றை உணர்ந்தான். நீர் அவனை வெளியே தள்ளியது. மூழ்க முயன்றாலும் அதன் ஆழம் ஏந்திக்கொண்டது.

நீர்நிலைகள் வாயில்களால் ஆனவை என்று அவன் அறிந்திருந்தான். அனைத்து கதவுகளையும் முழுமையாக மூடியிருந்தது அந்த நீர். உள்ளே ஆழ்ந்த இருட்டைக் கண்டான். இருட்டுக்குள் ஏதோ நெளிவுகள் தெரிந்தன. செல்லமுடியாத அந்த ஆழத்தில் அமைந்திருப்பது என்ன உலகம்? அதுதான் வாருணமா? மூச்சுக்கு மெல்ல அசைந்தபோது உதைத்து மேலே எழுப்பிவிட்டது ஆழ்நீர்ப்பரப்பு. மீண்டும் மீண்டும் மூழ்க முயன்று மேலே வந்துகொண்டிருந்தான்.

இது நீரல்ல. இது பாலையைப் பிழிந்தெடுத்த சாறு. வெந்நிலத்தின் குருதி. இது ஏதோ வஞ்சக்கொடுந்தெய்வம் வாற்றி எடுத்த மதுத்தேக்கம். அவனை வெறி கொள்ளச்செய்யும் அனைத்தும் இதில் கரைந்துள்ளன. இது பிறருக்கு நஞ்சு. நச்சுப்பெருங்கோப்பை. பாலையில் கனிந்த நச்சுப்பழம்.

**[ 13 ]**

அவன் மேல் பெரிய நீர்க்கொப்புளம் ஒன்று வந்து மோதியது. மீன் என நினைத்து அவன் விலகிக்கொண்டதும் பிறிதொன்று வந்தது . அவை மலர்வெடிக்கும் ஓசையுடன் நீர்ப்பரப்பின் மேல் விரிந்து வட்டங்களாகி அகன்றன. நீர்க்கொப்புளங்கள் சுழியென்றாகி உள்ளிருந்து மெல்ல ஒரு தலை எழுந்துவந்தது. நெற்றி, நீள்மூக்கு, குமிழுதடு, முகவாய், கழுத்துக்குழைவு, மார்புச்சரிவு, முலைஎழுச்சி. நீலநிறமான இமையாவிழிகளால் அவள் அவனை நோக்கினாள்.

அப்பால் எழுந்த குமிழிச்சுழியில் இன்னொருத்தி எழுந்தாள். அப்பால் பிறிதொருத்தி. ஏழு கன்னியர் அவனைச் சூழ்ந்துகொண்டனர். அவர்களின் நீண்ட செந்நிறக்கூந்தல்கள்

நீலநீரில் செஞ்சேற்றுக் கீற்றுபோல அலைபாய்ந்தன. அவன் அவர்களை திகைப்புடன் நோக்க ஒருத்தி சிட்டுக்குருவி அலகுபோல பொன்னிற நகங்கள் நீண்ட விரல்கள்கொண்ட கையை நீட்டி “வருக!” என்றாள்.

அவன் “ஆம்” என்றான். அவர்கள் புன்னகையுடன் “வாருணத்திற்கு வருக, இளைய பாண்டவரே!” என்றனர். அவன் தன் கையை நீட்ட அதை பற்றிக்கொண்டனர். நீருக்குள் அவர்களுடன் அமிழ்ந்தபோது திரைகள்போல நீர்ப்படலங்கள் விலகி ஆழம் திறந்துகொண்டது. மூழ்கி நீருள் கண்திறந்ததுமே அவர்களின் இடைக்குக்கீழே மீனுடல் இருப்பதை அவன் கண்டான். பெரிய செதில்வால்கள் அசைந்தசைந்து துழாவின.

நீராழத்திலிருந்து மனிதமுகம் கொண்ட கரிய பெருநாகங்கள் நெளிந்தெழுந்து வந்து அவனைச் சூழ்ந்துகொண்டன. அவற்றின் மணிவிழிகளில் அவனை அறிந்த வெறிப்பு இருந்தது. அவன் உடலில் அவற்றின் வளைவுகள் உரசி தழுவிச் சென்றன. ஆழத்தில் அவன் கண்ட அனைத்து உடல்களும் நெளிந்துகொண்டிருந்தன. அவன் தன் கைகளை நோக்கினான். எலும்புகளற்றவையாக அவை நெளிந்தன. உடல் நாகமென வளைந்து சுழன்றது.

மேலும் மேலுமென அவன் ஆழ்ந்து சென்றுகொண்டிருந்தான். திறந்து வந்தணைந்த ஆழங்களிலிருந்து நீரரமகளிரும் நீர்நாகங்களும் எழுந்து வந்து சூழ்ந்துகொண்டிருந்தனர். உடல்களாலான நெளியும் காடு ஒன்று அவனைச் சுற்றி பரவி உடன் வந்தது. அவன் விழிகள் மேலும் கூர்கொண்டபடியே வந்தன. கரிய மாளிகை ஒன்றை நீரின் இருளுக்குள் கண்டான். அது நீர்ப்பாவை என நெளிந்துகொண்டிருந்தது.

அதன் வாயிலை அடைந்ததும் நீரரமகள்கள் திரும்பி வருக என கைகாட்டி உள்ளே சென்றனர். மாளிகையின் வாயிலுக்குள் மேலும் குளிர் தேங்கியிருப்பதை உணர்ந்தான். உள்ளே பெருந்தூண்களும் உத்தரங்களும் நெளிந்தன. தரை அலையடித்தது. கூரை வளைந்தாடியது. படிகள் திரைச்சீலைகள் என ஆடின. அவன் மேலேறி இடைநாழிகளினூடாக நெளிந்து சென்று அரசவை ஒன்றுக்குள் நுழைந்தான்.

அங்கே நூறு அன்னையர் அமர்ந்திருந்த அவைநடுவே அரியணையில் அமர்ந்திருந்தவளை அவன் முன்னர் கண்டிருக்கவில்லை, ஆனால் அவளை நன்கறிந்திருந்தான் என உணர்ந்தது நெஞ்சு. ஒளிர்நீல மணிமுடியும் இளநீல ஆடையும்

அணிந்திருந்தாள். வலக்கையில் வளைந்த முனைகொண்ட செங்கோலில் காகம் செவ்விழிகளுடன் சிறகு விரித்து அமர்ந்திருந்தது. அவள் உடல் விளக்கேற்றப்பட்ட நீர்த்தாலமென உள்ளொளி கொண்டிருந்தது. விழிகள் கனிந்து அவனை நோக்கின.

“அன்னையே, வணங்குகிறேன்” என்றான் அர்ஜுனன். “நல்லூழ் தொடர்க!” என்று அவள் சொன்னாள். “நான் ஜேஷ்டை. எழுவரில் முதலோள். திருமகளுக்கு மூத்தோள். அமுதுடன் பிறந்தேன். அனல்வண்ணன் மகளென்றானேன். இங்கு அரசியென்றமர்ந்திருக்கிறேன்.” அர்ஜுனன் வியப்புடன் “அன்னையே, விழிகொள்ளாப் பேரழகு கொண்டிருக்கிறீர்கள். மண்ணில் உங்களை அழகிலியாகவே அறிந்திருக்கிறோம்” என்றான்.

“அங்கு நான் அழகிலியே” என அவள் புன்னகைத்தாள். அக்கூடமே ஒளிகொண்டது அதன் அழகால். “உங்கள் விழைவுகளாலும் அச்சங்களாலும் காழ்ப்புகளாலும் திரிபடைந்த உருவையே நான் அங்கு சூடுகிறேன்.” அவன் பெருமூச்சுவிட்டான். “தன்னுருவில் உங்களை பார்க்கும் பேறுபெற்றேன்” என்றான். “நான் மெய்மகள். திருமகளைத் துறந்து கடந்தவர் அடையும் முழுமை” என்றாள் அவள்.

அருகிருந்தவர்களை நோக்கி “அவர்கள் துயர்களென நோய்களென தனிமையென மண்ணில் உங்களால் உணரப்படுகிறார்கள். இங்கு உண்மையென தெளிவு என துணிபு என அமர்ந்திருக்கிறார்கள்” என்றாள். “இவன் ஆற்றலை அளிக்கும் பலன். என் முதல் மைந்தன். இவள் அழியா உவகையை அளிக்கும் சுரநந்தினி. இவள் களிமயக்கை அளிக்கும் சுரை. அங்கு நீங்கள் அறியும்தருணத்தில் எல்லாம்

அடைவது என் இவ்விரு மகள்கள் அளிக்கும் உணர்வுகளையே.”

பெருந்தோள் கொண்ட பலன் கைகளைக் கட்டியபடி நிமிர்ந்து நின்றிருந்தான். இளநீல ஆடையணிந்த சுரநந்தினியும், சுரையும் அவனை நோக்கி புன்னகை செய்தனர். “இவன் அதர்மகன்” என்று அவள் தன் இளைய மகனை சுட்டிக்காட்டினாள். கரிய உடல்கொண்டிருந்த அவன் விழிகள் மட்டும் வெண்மையாக தெரிந்தன. “நெறிகளென நீங்கள் உணர்வன அனைத்தையும் அழிப்பவன் இவனே. இவன் துணையின்றி எவரும் எதையும் முழுதறிய முடியாது.”

அர்ஜுனன் அவர்களை வணங்கி “இன்று மெய்யருளப்பட்டேன்” என்றான். “இளையோனே, என்னைக் கடந்தே எவரும் வாருணத்திற்குள் நுழைய முடியும். இவ்வாயிலை கடப்பதற்கு நான் அளிக்கும் ஆணைநெறி ஒன்றே. நீ பெற்றும் கற்றும் அறிந்த அனைத்து நெறிகளையும் அறங்களையும் உதறுக! ஒன்றை மட்டும் கொண்டுசெல்ல நான் ஒப்புகிறேன். அதை மட்டும் நெஞ்சில்கொண்டு இவ்வாயிலைக் கடந்து உள்ளே செல்லலாம். அங்கு உபவாருணம் உனக்கு வழிதிறக்கும்.”

அர்ஜுனன் தலைவணங்கி “அன்னையே, பெரும்பாலையில் முழுதுலர்ந்து அறிந்த ஒன்றுண்டு என்னுள். மெய்மைக்கு முன் முழுவெறுமைகொண்டு நின்றாகவேண்டும். நான் கொள்வதென நெறியேதுமில்லை” என்றான். மூத்தவள் புன்னகைத்து “நன்று, எந்நெறியை நீ கொள்ள விழைந்திருந்தாலும் அவ்வாயிலை கடக்க ஒப்பியிருக்கமாட்டேன்” என்றாள். அவன் அந்த அவையமர்ந்திருந்த தேவியரை வணங்கி நடந்து மறுபக்கம் சென்று அங்கிருந்த வாயிலினூடாக வெளியே சென்றான்.

அங்கே ஏழு நாகங்கள் அவனுக்காக காத்திருந்தன. முதன்மைநாகம் வளைந்து தலைவணங்கி “வாருணத்தின் காவலர்கள் நாங்கள். எங்கள் தலைவர் தட்சசாவர்ணியிடம் உங்களை கொண்டுசெல்கிறோம்” என்றது. அவற்றுடன் நாகமென நெளிந்து மேலும் ஆழம் நோக்கி சென்றான். அங்கே பொன்னிறமான மாளிகை ஒன்று ஒளியாடியது. அதை அணுகி அதன் வாயிலினூடாக அவனை நாகங்கள் கொண்டுசென்றன.

நாகவளை போன்ற குகைவழிகள் பொன்னாலானவை. பொன்னொளியே வழிநடத்தியது. அதனுள் சென்றதும் நாகங்களும் அவனும் பொன்னுடல் கொண்டனர். வளைவழி சுருண்டு தேங்கி வளைந்து உருவான அரண்மனையின் ஆழத்திலிருந்தது கோளவடிவ அரசவை. அதில் புற்றுவடிவப் பீடங்களில் உடல் சுருட்டி அவையமர்ந்திருந்தன பெருநாகங்கள். நடுவே அரியணையில் பொன்நாகப் பேருடல்கொண்ட தட்சசாவர்ணி அமர்ந்திருந்தான்.

அர்ஜுனன் அவன் முன் சென்று நின்று வணங்கினான். “சொல் ஓதப்படும் அவைகளில் எல்லாம் நின்றிருக்கும் நாகங்கள் நாங்கள். நீரிலும் நெருப்பிலும் வளைபவர்கள். முதற்காவியம் கண்ட புற்றுறைமுனிவரை இங்கே நீ காண்கிறாய்” என்றான் தட்சசாவர்ணி. அவையமர்ந்திருந்த நாகச்சுருளுடல் கொண்ட முனிவரைக் கண்டு அர்ஜுனன் தலைவணங்கி “உங்கள் காவியத்தால் சொல்லென்பது துயருக்கு நிகர்வைக்கவேண்டியது என்று அறிந்தோம், முனிவரே. வணங்குகிறேன்” என்றான். வேடகவிஞர் கைதூக்கி அவனை வாழ்த்தினார்.

“இந்த அவையில் மண்ணிலுள்ள நச்சுக்கள் அனைத்தும் பொன்னொளி கொண்டு அமைந்துள்ளன, வீரரே” என்றான்

தட்சசாவர்ணி. அவன் திரும்பி அங்கிருந்த நாகங்களை நோக்கினான். புற்றுறைமுனிவர் "நஞ்சென்பதெல்லாம் நீரில் கரைவதென்பதனால் வாருணமே நஞ்சுக்கு மையநிலை என்று அறிக! அமுதென்பதனாலேயே நீர் நஞ்சாகும் விழைவையும் தன்னுள் கொண்டது. பெருவிழைவுடன் நஞ்சை நாடுகிறது நீர். ஆழச்சென்றும் ஊறிக்கடந்தும் நஞ்சுகளை தான் பெற்றுக்கொள்கிறது. தேங்குகையில் தன் தனிமையையே நஞ்சென்று ஆக்கிக்கொள்கிறது" என்றார்.

"ஆம்" என்றான் அர்ஜுனன். "நீர் கொண்ட அனைத்து நஞ்சுகளையும் எண்ணுக! உண்ட நஞ்சுகள், தொட்டுக் குருதியில் கலந்த நஞ்சுகள், எண்ணிப்பெருக்கிய நஞ்சுகள், கற்றறிந்த நஞ்சுகள், கரந்த நஞ்சுகள் அனைத்தையும் முற்றிலும் இங்கு உதறி அந்த நீர்வாயிலைக் கடந்து மகாவாருணத்திற்குள் நுழைக!" என்றான் தட்சசாவர்ணி.

"முற்றுதறப்போவதில்லை, பொன்னாகரே" என்றான் அர்ஜுனன். "ஒரு துளி நஞ்சு எஞ்சாது மெய்மையை அறியமுடியாது. அந்நஞ்சையும் இழந்தால் அறிவதற்கொரு தன்னிலை எஞ்சாது எனக்கு. மெய்மையென்றே ஆவேன். மீண்டுவரமாட்டேன்" என்றான். தட்சசாவர்ணி "ஆம், உண்மை" என்றான். வால்மீகி புன்னகைத்தார்.

"கருவிற்குள் வந்து கடித்த பாம்பின் முதற்துளியை மட்டும் உடன்கொண்டு அங்கு செல்கிறேன்" என்றான் அர்ஜுனன். தட்சசாவர்ணியும் வால்மீகியும் வாழ்த்த தலைவணங்கி அடிவைத்து அவ்வாயிலை நோக்கிச்சென்று தொட்டுவணங்கி திறந்து கடந்தான்.

# கிராதம் - 34

[ 14 ]

விண்ணொளியால் ஆன ஜலதம், கொந்தளிப்புகளால் ஆன தரங்கம், கொப்பளிக்கும் அலைகளால் ஆன கல்லோலம், நீலநீர் ஊசலாடும் உத்கலிகம், சிலிர்த்து விதிர்க்கும் குளிர்ப்பரப்பாலான ஆர்ணவம் ஆகிய ஐந்து ஆழங்களை அர்ஜுனன் கடந்துசென்றான். ஆறாவது ஆழமான ஊர்மிகத்தில் மூழ்கிய பெருங்கலங்கள் அன்னைமடியில் துயிலும் மதலைகள் என மெல்ல ஆடிக்கொண்டிருந்தன. ஏழாவது ஆழமான தரளம் கரிய நீர்க்குமிழி ஒன்றின் பரப்பு போல மாபெரும் விழியொன்றின் வளைவு போல மெல்ல அதிர்ந்துகொண்டிருந்தது.

நீருக்குள் அவனை ஆழ்ந்து மேலும் ஆழ்ந்து அழைத்துச்சென்றனர் நாகர்கள். ஆழத்தை அறியும்தோறும் அவன் உடல் எடைகொண்டபடியே சென்றது. எடைமிகும்தோறும் இறுகி சுருங்கி ஒளிகொண்டது. பாதரசம்போல ஆயிற்று அவன் குருதி. ரசம் உறைந்து ஒளிரும் உலோகமென உடல்கொண்டான். அவன் நகங்கள் மீன்விழிகளென்றாயின. அவன் உள்ளம் உடலுக்குள் செறிந்து ஒளிகொண்டு பிறிதொரு விழி என ஆகியது.

தரளத்தின் மென்பரப்பை மெல்ல கைகளால் தொட்டுத் திறந்து அவனை உள்ளே அனுப்பினர். அவனுக்குப்பின்னால் ஒளிக்குமிழி வாயில் மூடியது. அப்பால் அவன் வருணனின் மாளிகையை கண்டான். நோக்கு நிலைக்க நெஞ்சழிந்து

நெடுநேரம் அப்படியே மிதந்துகொண்டிருந்தபின் அதைநோக்கி சென்றான்.

முற்றிலும் நீராலானது. அதன் நூற்றெட்டு அடுக்குகளும் ஆயிரத்தெட்டு உப்பரிகைகளும் பத்தாயிரத்தெட்டு சாளரங்களும் செழித்து கிளையும் இலையும் விரித்து குமிழிகளையும் மலர்களையும் சூடி நின்றிருக்கும் நீர்ச்செடிக்குவை என நின்று நெளிந்துகொண்டிருந்தன. மிதந்து அணுகிய அர்ஜுனனை ஏழு வாருணீகர் வந்து எதிர்கொண்டு அழைத்துச்சென்றனர்.

வாருணீகர் நெளியும் நீருடலும் நீல விழிகளும் கொண்டிருந்தனர். அவர்களின் சிறகுகள் நீரலைகள்போல நீருக்குள் மிதந்து பறந்தலைந்தன. பெருமாளிகையின் முதல்வாயிலை அவர்கள் சுட்டுவிரலால் தொட்டதும் நீர்க்குமிழிப்படலமென வண்ணச்சித்திரம் காட்டி நின்றிருந்த அது உடைந்து திறந்து அவர்களை உள்ளே விட்டது. பின்பக்கம் மீண்டும் அது குமிழியென மூடிக்கொண்டது.

அவனைநோக்கி சிரித்த வாருணீகன் “இவையனைத்தும் குமிழிகளே” என்றான். “நீர்க்குமிழிகளே நீருக்குள் கடினமானவை” என்றான் இன்னொருவன். அவன் கைகளைப்பற்றி அணுகிய இன்னொரு வாருணீகன் “இந்த மாளிகையே நீர்க்குமிழிகளாலான நுரை” என்றான். “நீங்கள் நோக்குவது நுரையின் ஒருபகுதியை. பதினெட்டுலட்சம் குமிழிகள் கொண்டது இந்நுரைப்படலம்” என்றான் ஒருவன். “குமிழிகள் அனைத்திலும் ஒரேதருணத்தில் தோன்ற இயன்றவர் என் தலைவர்” என்றான் பிறிதொருவன்.

“வருக!” என அவனை அழைத்துச்சென்றனர். நீர்க்குமிழியின் உட்பக்கமென சுவர்களில் வண்ணச்சித்திரங்கள் இழுபட்டும் சுருண்டும் அசைந்த அறைக்குள் சென்றதும் அவனை மூன்று மைந்தர் எதிர்கொண்டழைத்தனர்.
“வருக, இளையபாண்டவரே! நான் மேற்றிசைத்தலைவரின் மைந்தனான சுஷேணன். இவர்கள் என் இளையோரான வந்தியும் வசிஷ்டனும். உங்களை எதிர்கொண்டழைக்கும்படி அரசரின் ஆணை” என்றான் மூத்தவன். “வாருணர்களை வணங்குகிறேன்” என்றான் அர்ஜுனன்.

“நாங்கள் எங்கள் தந்தைக்கு அமைச்சர்களாகவும் இங்கு அமைந்துள்ளோம்” என்றான் சுஷேணன். “நீங்கள் இங்கு வந்தது ஏன் என நாங்கள் அறியலாமா?” என்றான் வந்தி. “நான் வருணனை வென்று செல்ல வந்துள்ளேன். திசைத்தெய்வங்களை வெல்லாமல் திசைமையத்தில் அமர இயலாதென்று உணர்ந்துள்ளேன்” என்றான் அர்ஜுனன். “இளவரசே, நீங்கள் வென்று கடக்க விழையும் வருணன் யார்?” என்றான் சுஷேணன். “ஏனென்றால் இங்கு மூன்று வருணர்கள் உள்ளனர்.”

அர்ஜுனன் திகைப்புடன் நோக்க வசிஷ்டன் புன்னகையுடன் சொன்னான் “இளவரசே, காசிய பிரஜாபதிக்கு அதிதியில் பிறந்த பன்னிரு மைந்தர்களில் ஒருவர் முதல் வருணன். தாதா, ஆரியமான், மித்ரன், சுக்ரன், அம்சன், பகன், விவஸ்வான், பூஷா, சவிதா, துவஷ்டா, விஷ்ணு ஆகியோருடன் வருணனும் விண்ணில் ஒரு மீன் என பிறந்தார். ஒளியுடன் பெருவெளியில் திகழ்ந்தார். திசைகளை பிரம்மன் படைத்தபோது மேற்குக்கு அவரை தலைவனாக்கினார். பின் ஏழு கடல்களை

பிறப்பித்தபோது அவற்றின் முடிவிலா அலைகளை ஆள்பவராக ஆக்கினார். நான் ஆதித்யனாகிய வருணனின் மைந்தன்.”

“நான் தொல்லரசனாகிய வருணனின் மகன்” என்றான் வந்தி. “புலக பிரஜாபதிக்கு க்ஷமை என்னும் மனைவியில் பிறந்தவர் கர்த்தம பிரஜாபதி. பொறுமையின் மைந்தர். உர்வரியான் ஸஹிஷ்ணை என்னும் உடன்பிறந்தார் கொண்டவர். வளத்தான் இடமும் பொறுத்தாள் வலமும் நிற்க பெருந்தவம் செய்து பிரஜாபதி என்றானவர்.”

தவம் செய்கையில் புகைஎழக்கண்டு நெருப்பென எண்ணி விழிதிறந்தார். தொலைவில் ஒரு புகை எழக்கண்டார். அதன் சுருள்களை ஒரு மங்கையின் கூந்தல் என அவர் உள்ளம் எண்ணியது. அக்காமம் அவளை உருக்கொள்ளச் செய்தது. இடைதிரண்டு முலை முகிழ்த்து முகம்கொண்டு அவள் எழுந்தாள். அவளை அவர் தூம்ரை என்றழைத்தார், அவளைக்கூடி அவர் ஒரு மைந்தனைப் பெற்றார்.

தூயவனாகிய அவனை அவர் சுசித்மான் என அழைத்தார். ஒளி ஊடுருவும் உடல்கொண்டிருந்தான் அம்மைந்தன். கங்கைக்கரையில் அவன் இளையோருடன் நீராடச்சென்றபோது அலைகளில் மூழ்கி மறைந்தான். உடன்சென்றோர் அஞ்சி ஓடிவந்து கர்த்தமரிடம் அச்செய்தியை சொன்னார்கள். அவர் அப்போது வேள்வியில் இருந்தார். எடுத்த நெய்க்கரண்டியை வானில் நிறுத்தி, “இக்கணமே என் மைந்தன் திரும்பி வரட்டும்” என ஆணையிட்டார்.

கங்கைவழியாக கடலுக்குச் சென்றுவிட்டிருந்தான் சுசித்மான். கர்த்தமரின் ஆணையை தேவர்கள் கடலரசனிடம் வந்து

சொன்னார்கள். “பிரஜாபதியின் ஆணை. அவரால் சொல்லப்பட்ட வேதச்சொல் முழுமையடையவில்லை. அது முழுமையடையும்வரை இப்புவியில் எதுவும் பிறக்கமுடியாது” என்றனர். ஆழிவேந்தன் அம்மைந்தனை இரு கைகளாலும் அள்ளி எடுத்தான். தான் ஒரு முதலை என உருக்கொண்டு தன்மேல் அவனை ஏற்றி கங்கைவழியாக நீந்தி கர்த்தமரின் வேள்விச்சாலையை வந்தடைந்தான்.

நீர்மணிமாலைகளையும் பவள ஆரங்களையும் மைந்தன் அணிந்திருந்தான். சங்குகளால் வளையலும் அருமணிகள் பதிக்கப்பட்ட முடியும் கொண்டிருந்தான். மைந்தனை அள்ளி அணைத்த கர்த்தமர் அவனை வரமென வந்தவன் என்னும் பொருளில் வருணன் என்றழைத்தார். கடல்களை அவன் ஆளவேண்டுமென ஆணையிட்டார். அந்த ஆணையின்படி ஏழ்கடல்களின் அரசனென ஆனான் வருணன்.

இளமைந்தனாகிய வருணன் முதிர்ந்து முடிசூடி பாரதவர்ஷத்தின் மேற்குத்திசையை முழுதாண்டான். மேற்குக்கடல்களின் அலைகள் அவன் சொல்லுக்கு கட்டுப்பட்டன. அவன் கையசைத்த திசைகளில் கடற்காற்றுக்கள் வீசின. அவன் ஆணைப்படி பல்லாயிரம் நாவாய்கள் கடல்களின் மேல் ஏறி அயல்நிலங்களை சென்றடைந்தன. கடற்பறவைகள் போல துறைநகரங்களில் அவன் கலங்கள் சென்றணைந்து பாய்விரித்து மீண்டன. தனித்த நிலத்தில் வாழ்ந்த மக்களுக்கு அயல்மகரந்தங்களுடன் வந்தன அந்தக்கலங்கள். ஒவ்வொரு குலத்துக்கும் பிறகுலத்திலிருந்து குருதியுடன் விந்தைப்பொருட்களுடன் புத்தறிதல்களுடன் அவை சென்று சேர்ந்தன.

அவனை கடல்களின் அரசன் என்று சூதர் பாடினர். மொழிகளை ஆள்பவன் விழியெட்டா நெடுந்தொலைவுகளை சுருட்டி கையிலொரு பாசக்கயிறெனச் சூடியவன். காற்றுகளை அறிந்தவன். நீர்வெளியில் இருந்து மழைகொண்டு மண்மீது பரவும் பருவக்காற்றுகளின் தேவன். வான்மழைகளை வகுப்பவன். நாற்பருவங்களை நிலைநிறுத்துபவன். அவனுக்கு கடல்முகங்கள் தோறும் ஆலயங்கள் அமைத்தனர். அங்கே அவன் செதிலெழுந்த முதலைமேல் அமர்ந்து பலிகளை பெற்றுக்கொண்டான். அவனுக்கு அளிக்கப்படும் அவி காரென வரும் இந்திரனுக்கும் நாளென வரும் கதிரவனுக்கும் சுவையென வரும் சோமனுக்கும் நோயென்றும் மருந்தென்றும் வரும் அஸ்வினிதேவர்களுக்கும் செல்கின்றது என்று கொண்டனர்.

“அவனே எந்தை” என்றான் வந்தி. அர்ஜுனன் “ஆம். அறிந்துள்ளேன்” என்றான். அவனை நோக்கி புன்னகைத்த சுஷேணன் “எந்தை பிறிதொரு வருணன். இங்கு முன்புவாழ்ந்த அசுரகுடித்தலைவர்” என்றான். அவர்கள் பெரும்பாலையில் இருந்த ஏழு ஊற்றுக்களை நம்பி தொல்பழங்காலம் முதல் வாழ்ந்தவர்கள். வானிலிருந்து வந்தணையும் பறவைகளும் மண்ணுள் ஒளிந்து வாழும் சிற்றுயிர்களும் முள்மரங்களின் கனிகளுமே அவர்களின் உணவாக இருந்தன. கள்ளிச்செடியென இலையிலும் கிளையிலும் வேரிலும் முளையெழுவது, வெறுநிலத்திலும் அழியாமலிருப்பது அக்குலம்.”

ஆனால் ஏழு ஊற்றுக்களும் மெல்ல வற்றலாயின. அக்குடிகள் கிடைக்கும் நீரை பகிர்ந்துகொண்டு அங்கேயே வாழ்ந்தனர். அவர்களைச் சூழ்ந்திருந்தது வெண்ணிற அனலால் ஆன

மணல்வெளி. அது அப்பால் செல்ல ஒப்பாத தெய்வங்களின் கோட்டை என அவர்கள் எண்ணினர். ஒருநாள் அவர்களின் குடித்தலைவர் மண்மறைந்தார். தன் ஒரேமைந்தனிடம் உன் குருதி இது, உன்னவர் என்று சொல்லி கைகாட்டிவிட்டு கண்மூடினார். இளமைந்தன் குடித்தலைமை கொண்டான்.

கடக்கமுடியாதவை என்னவென்று தன் தந்தையிடமிருந்து அவன் தந்தை கற்றிருந்தார். அவற்றை கடக்கலாம்போலும் என்னும் எண்ணத்தை அவன் தன் குருதியின் ஆழத்திலிருந்து அடைந்தான். தன்குடிகளை அழைத்தபடி எரிமணல்வேலியை கடந்து சென்றான். சினம்கொண்ட தெய்வங்கள் அவன்மேல் அனல்சொரிந்தன. எரிவளியெனச் சூழ்ந்து கொப்பளித்தன. உறுமி எச்சரித்தது வானம்.

அஞ்சாது தன்னை எதிர்த்து நிற்பவனை தெய்வங்கள் விரும்புகின்றன. குளிர்ந்த காற்று வந்து அவர்களை மூடியது. பாலையின் சிறகென மணல் எழுந்து வானைமூடி வெயிலை அணைத்தது. வானிலிருந்து மீன் என உணவு பொழியலாயிற்று. அதை உண்டபடி அவர்கள் அலையற்ற கரிய கடலொன்றை வந்தடைந்தனர். உப்புக்களால் வேலியிட்டு காக்கப்பட்டது அக்கடல். இனிய ஊற்றுக்களால் சூழப்பட்டிருந்தது. அக்கடலில் இருந்து கைகளாலேயே மீன்களை பிடிக்கமுடிந்தது. அம்மீன்களைக் கொள்ளவரும் பறவைகளை கண்ணி எறிந்து கொள்ளமுடிந்தது. அக்கடலோரம் அவன் தன் குடிகளை தங்கும்படி செய்தான்.

அவன் குடி அங்கே பெருகியது. நெடுந்தொலை கிழக்கின் ஒதுங்கிய துறைநகர்களுக்கு அவர்கள் முதலைவடிவ நாவாய்களில் ஏறிச் சென்றனர். உப்பின் உடைமையாளர்கள் என்பதனால் அவர்கள் லவணர் என அழைக்கப்பட்டனர்.

அவர்களின் உப்புத்தூண்கள் மலைச்சிற்றூர்கள் வரை சென்றன. கடல்கடைந்து இனிய வெண்ணையை எடுப்பவர்கள் அவர்கள் என்று கொள்ளப்பட்டனர். கடலுக்குத் தலைவர்களான அவர்களின் தலைவனை சிற்றூர்கள் தோறும் தெய்வமென நிறுவி வழிபடலாயினர். கடல்களை ஆள்பவனாகிய அவனே மழைகளை நிலைநிறுத்துபவன் என்று தொல்கதைகள் சொல்லின.

அவர்களின் ஆயிரத்தெட்டு தொல்லூர்கள் அலையற்ற கரியகடலைச்சூழ்ந்தே அமைந்திருந்தன. அவர்களின் கிளைக்குடிகள் தொலைவிலிருந்த பெருங்கடல் துறைகளில் குடியேறியிருந்தாலும் மூத்தாரும் முதலோரும் அலையிலாக்கடல் அருகிலேயே வாழ்ந்தனர். எவரையும் உள்ளே செல்ல ஒப்பாத அதன் அடித்தட்டு தெய்வங்கள் வாழும் ஆழம் என அவர்கள் அறிந்தனர். இறந்தவர்களை அக்கடலுக்குள் செலுத்தி ஆண்டுதோறும் பலிகொடுத்து வணங்கினர்.

“பல்லாயிரம் ஆண்டுகளுக்குப்பின் அக்கடலில் மீன்கள் இறந்து மறையலாயின. மீன் என விளங்கிய விழிகளை மூடி கடல் துயில்கொள்கிறது என்றனர் அவர்களின் பூசகர். அவர்கள் தங்கள் ஊர்களை கைவிட்டுவிட்டு தொலைவிலிருந்த பெருங்கடல்துறைகளை நோக்கி சென்றனர். அங்கிருந்து கிழக்கும் மேற்குமாக விரிந்து சென்றுகொண்டே இருந்தனர். அலையிலாக்கடல் அவர்களின் மொழியிலும் கனவிலும் மட்டும் எஞ்சியது.” என்றான் சுஷேணன். “இளையபாண்டவரே, தாங்கள் இறங்கி வந்துள்ளது அம்மக்களின் தெய்வங்களும் முன்னோர்களும் வாழும் ஆழத்திற்கு என்றறிக! அவர்களின் முதற்றாதையாகிய வருணனின் மைந்தன் நான்.”

“இம்மூன்று தெய்வங்களும் இந்நீராழத்திற்குள் கோல்கொண்டுள்ளன” என்றான் சுஷேணன். “இவர்களில் நீங்கள் சென்று கண்டு வெல்ல விழைவது எவரை?” அர்ஜுனன் “கசியபரின் மைந்தரை வேதத்தால் வெல்ல விழைகிறேன். கர்த்தமரின் மைந்தரை என் குருதியால் கடக்க விழைகிறேன். இளவரசர்களே, தொல்குடி அசுரர் தலைவரை என் தோள்கொண்டு எதிர்க்க எண்ணுகிறேன். மூவரையும் கடந்து எனக்கென எழும் நாலாமவரிடமிருந்து எனக்குரிய மெய்மையை நான் பெற்றாகவேண்டும்” என்றான்.

புன்னகைத்து “ஆம், அவ்வாறே ஆகுக!” என்றான் சுஷேணன். “வேதமொன்றே தெய்வங்களை வெல்வதென்று அறிந்திருப்பீர்கள். மூவருக்கும் உரிய வேதங்களை கற்று தெளிவுற்றிருப்பீர் என எண்ணுகிறேன். உங்களுக்குரிய வழிகள் திறப்பதாக!” வந்தி “செல்வதற்குரிய வேதத்துடன் மீள்வதற்குரிய வேதமும் உங்களுடனிருக்கட்டும்” என்றான். வசிஷ்டன் “வேதமென்றானது துணைவருக!” என்று வாழ்த்தினான்.

**[ 15 ]**

வருணனின் மாளிகையின் முதற்கதவைத் திறந்ததும் அங்கு நின்றிருந்த கடைவாருணனாகிய புஷ்கரன் வணங்கி “வருக, இளையவரே! நான் வாருணனாகிய புஷ்கரன். உங்களை எந்தையர் மூவரிடமும் அழைத்துச்செல்ல வந்துள்ளேன்” என்றான். வணங்கி “நன்று” என்றான் அர்ஜுனன். “அளவிலா அருளும் எல்லையில்லா முனிவும் கொண்டவர் அவர் என அறிந்திருப்பீர்” என்றான் புஷ்கரன். அர்ஜுனன் “ஆம், இரண்டையும் பெரும்பாலைகளில் அறிந்தேன்” என்றான்.

முதல் வாயிலை அடைந்ததும் புஷ்கரன் “இது என் எல்லை, இனி உங்கள் பயணம்” என்றான். அர்ஜுனன் தலைவணங்கி முன்னால் சென்றான். நீர்க்குமிழி வாயிலின் அருகே இரு வாருணீகர் தோன்றினர். பொன்னிறமான கொம்புகள் எழுந்த வரையாட்டின் தலைகொண்டிருந்தனர். “வருக!” என்று வணங்கி உள்ளே அழைத்துச் சென்றனர். “வருணனை வாழ்த்தும் முதல் வேதச் சொல்லை ஓதுக, வீரரே! அதுவே இங்குள்ள முறை” என்றான் ஒரு வாருணன். “அது அவருக்குரிய வரியாக இருந்தாகவேண்டும். இல்லை என்றால் நீங்கள் மீள இயலாது என்று அறிக!”

அவர்கள் ஒரு குமிழிக்கதவைத் திறந்து அவனை உள்ளே கொண்டுசென்றார்கள். அலைகொண்டு மெல்ல ஆடிநின்ற நீர்வெளிக்குள் இறங்கி ஈர்த்து இழுத்து எடுத்துக்கொண்ட அடியிலி ஒன்றை நோக்கி அவன் ஆழ்ந்து சென்றான். நீலநிறமான இருளுக்குள் ஒளியும் நாகங்களும் நெளிந்தாடின. விழிகளென மட்டுமே தோற்றம் காட்டிய மீன்கள் உருக்கொண்டு எழுந்து அணுகி விலகி உருகி மறைந்தன.

அர்ஜுனன் உள்ளே நுழைந்த நீர்க்குமிழியறை வெண்ணிற ஒளிகொண்டிருந்தது. அவ்வவையில் உதத்யரும் கஸ்யபரும் உள்ளிட்ட முனிவர்கள் அமர்ந்திருந்தனர். “அறம் ஓம்பி அமைந்த முனிவர் அனைவரின் மெய்யுடல்களும் இங்குள்ளன. அவர்கள் எங்கிருந்தாலும் இங்கும் இருப்பார்கள்” என்றான் வாருணீகன். அர்ஜுனன் விஸ்வாமித்திரரை வசிட்டரை பிருகுவை கௌதமரை அங்கே கண்டான். நோக்க நோக்க அச்சபை விரிந்தபடியே சென்றது.

அவைமேடையில் நீர்க்குமிழியாலான வெண்ணிற அரியணையில் பொன்னிற உடலுடன் வருணன் தன் துணைவி கௌரியுடன் அமர்ந்திருந்தான். அவன் வலக்கையருகே பாசக்கயிறு அமைந்திருந்தது. அர்ஜுனன் உள்ளே நுழைந்ததும் தலைவணங்கி “நீரின் தலைவனை, பெருங்கடல்களை ஆள்பவனை, மழையென காப்பவனை, நெறிகளில் கட்டுண்டவனை வணங்குகிறேன்” என்றான்.

வருணனின் விழிகள் சுருங்கின. “நான் எங்கு கட்டுண்டவன்?” என்றான். “அரசே, பெருங்கடல்கள் பல்லாயிரம்கோடிமுறை எழுந்தமைந்தாலும் கரைமீறுவதில்லை. அவற்றைக் கட்டியிருக்கும் நெறியே கரையை ஆள்கிறது. அது உம் கையிலிருக்கும் அக்கயிறு. ஆனால் நீங்கள் மானுடர் இயற்றும் நான்கு அறங்களால் கட்டப்பட்டவர். வேள்வியும் அறமும் கொடையும் புரத்தலும் வாழும் மண்ணில் நீங்கள் பெய்திறங்கியாகவேண்டும்” என்றான்.

“ஆம்” என்று வருணன் சொன்னான். “என்னை வென்று மீள நீ வந்திருப்பதாக அறிந்தேன்.” அர்ஜுனன் “ஆம்” என்றான். “யமனிடம் தண்டகை என்னும் படைக்கலத்தையும் குபேரனிடம் அந்தர்த்தானை என்னும் ஆவத்தையும் பெற்று மீண்டேன். உங்களிடமிருந்து வெல்லற்கரிய அம்பொன்றை பெறவிழைகிறேன்.” வருணன் “என்னை வென்று அதைக் கொள்க!” என்றான் வருணன். “வேதச்சொல்லால் உங்களை வெல்லலாம் என்பது நெறி. அரசே, உங்கள் செவியறிந்த முதல்வேதச்சொல்லையே படைக்கலமாகக் கொண்டுள்ளேன்” என்றான்.

வருணன் முகம்கூர்ந்தான். அர்ஜுனன் உரத்தகுரலில் சந்தம் கூட சொல்கூர்மை திகழ ரிக்வேதச் செய்யுளைப் பாடினான்:

“வருணனே, இறைவடிவோனே உன்னை வணங்குகிறேன்

நாங்கள் எளிய மானுடர்

நாள்தோறும் உன் நெறிகளை மீறிக்கொண்டிருக்கிறோம்

எங்களை இறப்புக்கு இரையாக்காது அருள்க!

ஒவ்வாதன கண்டு நீ கொள்ளும் பெருஞ்சினத்தால்

எங்களை அழிக்கலாகாது எந்தையே.

உன் அளிதேடி இதோ வந்துள்ளோம்.

உன் நெஞ்சத்தை வேதச்சொல்லால் கட்டுகிறோம்

கடிவாளமிட்ட புரவிகளால் தேரை என”

வருணனின் முகம் மலர்ந்தது. “ஆம், இவ்வேதச்சொல்லையே நான் எந்தை பிரம்மனிடமிருந்து ஏழுகடல்களின் உரிமையைப்பெற்றபோது என்னை வாழ்த்தி முனிவர்கள் பாடினர்.” அர்ஜுனன் “ஆம், இதுவே தொன்மையானது” என்றான். “நன்று. நீ என்னை வென்றாய். ஆனால் என் முகங்கள் மூன்று. அவற்றையும் வென்று மீள்க!” என்றான் வருணன்.

மூன்று அஜமுக வாருணீகர்களுடன் அர்ஜுனன் சென்றான். நீர்க்குமிழி வாயிலைத் திறந்து அவனை மேலும் ஆழத்திற்கு செலுத்தினர் அவர்கள். நீர்த்துளிகள் ஒவ்வொன்றும் நூறாயிரம் மடங்கு எடைகொண்டிருந்த கர்த்தம் அணுவடிவ உயிர்கள்

மட்டுமே கொண்ட ககனம் ஒவ்வொன்றும் உடலழிந்து சாரம் மட்டுமென்றே ஆகியிருந்த நிம்னம் அலைகளே அற்ற தாரம் நீர்செறிந்து பாறையென்றான குப்தம் பாறைசெறிந்து வைரமென்றான காகம் செறிவே ஒளியென்றான நிவதம் என்னும் ஏழு ஆழங்களைக் கடந்து இறங்கிச்சென்றான்.

அங்கே ஒளிக்குமிழி எனத்தெரிந்த ஆழ்வருணனின் மாளிகையை அணுகினான். அங்கிருந்த வாருணீகர் வெள்ளியாலான கலைமான் கொம்புகளும் குளம்புகளும் கொண்டிருந்தனர். “வருக, இளவரசே!” என அவர்கள் அவனை வரவேற்றனர். “ஆழங்களின் வருணரின் அவைக்கு வருக!” என அழைத்துச்சென்றனர்.

அவன் அவர்களுடன் மூத்த வருணனின் அரசவைக்குள் நுழைந்தான். “இவர் நீர்களின் தலைவராகிய வருணனின் பிறிதொரு வடிவம் அல்லவா?’ என்றான் அர்ஜுனன். “அல்ல, இவர் வருணரின் தந்தை” என்றான் முதல் வாருணீகன். “தந்தையின் நாவிலிருந்து மைந்தர் முளைத்தெழுந்தார். அவரது சொல்லே மைந்தர்” என்றான் இரண்டாவது வாருணீகன். “தந்தை முடிவிலாத கைகளால் ஆனவர். செயல்வடிவர். அவரை வெல்வது எது என்றறிக!” என்றான் மூன்றாமவன்.

செந்நிறமான பெருங்குமிழிக்குள் அமைந்திருந்தது முந்தைவருணனின் அவைக்கூடம். அங்கே அமர்ந்திருந்த அரசர்கள் அனைவரையும் அர்ஜுனன் கண்டான். பரதன், உபரிசிரவஸு, சிபி, தசரதன், ராமன், யயாதி, குரு, வாலி, மாவலி என அவனறிந்த முகங்கள். அரசர்களின் முகங்களாக முளைத்து மண்ணில்பெருகியிருந்தவை. “இது துலாமுள் ஆடாது

மண்புரந்து மழைநிகழ்த்திய மாமன்னர்களின் அவை” என்றான் வாருணீகன்.

அர்ஜுனன் அவர்களை உடல் பணிந்து வணங்கினான். மேலே பெரிய செங்குருதித்துளி என ஒளி கொண்டிருந்த அரியணைமேல் நீண்ட வெண்தாடியுடன், தோளில் புரண்ட வெண்குழல்கற்றைகளுடன் அமர்ந்திருந்த முதிய வருணனை நோக்கி திரும்பி “நெறிகளின் தேவனே, உமக்கே அடைக்கலம்” என மண் தொடக்குனிந்து வணங்கினான். அவனருகே முதிய வருணானி அமர்ந்திருந்தாள். “அறத்தானின் அறத்துணைவி எனக்கு அன்னையெனக் கனிக!” என்றான்.

செந்நிறத் தலைப்பாகையும் செம்மணிக்குண்டலங்களும் அணிந்திருந்த அமைச்சர் எழுந்து “இளவரசே, முதுவருணரின் அவைக்கு வருக! அரசரை வென்று சொல்கொண்டு மீள விழைகிறீர்கள் என்றறிந்தோம். அரசரை வாழ்த்தும் முதல் தொல்வேதச் சொல்லை சொல்க! அதுவே ஆம் என்றால் அவர் அருள் கொண்டு மீளலாம்” என்றார்.

முதியவருணனின் குரல் அலையோசைகளின் முழக்கம் கொண்டிருந்தது. “இளையோனே, அச்சொற்கள் என் முழுமையை ஒரு துளியேனும் எஞ்சாமல் அள்ளி தன்னுள் நிரப்பியவை. அச்சொற்கள் அன்றி பிற எதைச் சொன்னாலும் நீ இங்கு சிறையிடப்படுவாய் என்று அறிக!”

அவருடைய கைகள் பெருகுவதை அவன் கண்டான். ஓரிரு கணங்களில் கடலலைப்பெருக்கென பல்லாயிரங்களென கைகள் விரிய அவர் பேருருத்தோற்றம் கொண்டார். அவன் அவரை நோக்கியபடி “ஆம், ஆணை” என்றபின் முந்தைய அவையில் பாடிய அவ்வேதவரிகளையே மீண்டும்

பாடினான். “உன் நெஞ்சத்தை வேதச்சொல்லால் கட்டுகிறோம், கடிவாளமிட்ட புரவிகளால் தேரை என” என்று மும்முறை ஓதிமுடித்தான்.

முதியவருணனின் கண்கள் கனிந்தன. புன்னகையுடன் திரும்பி “ஆம், நான் முதலைவடிவ கடரசன் மேலேறி கரையணைந்தபோது எந்தை கர்த்தமர் இச்சொற்களைப் பாடியபடி கைநீட்டி என்னை அணைந்தார். என்னைத்தூக்கி தன் தலைமேல் வைத்துக்கொண்டு இவனே அவன் இவனே ஆம் என்று கூவினார். அன்று நான் இக்கடல்கள் அனைத்தையும் அரசெனக் கொண்டேன்” என்றார்.

“நன்று, உனக்கென கனிவுகொண்டேன். இளையோனே, எங்களுக்கெல்லாம் பெருந்தந்தை ஆழங்களின் அடியில் இன்னொரு அவையில் கொலுவமர்ந்திருக்கிறார். அங்கு சென்று அவர் சொல்லையும் வென்றுவருக!” என்றார் வருணன். “அவ்வாறே” என வணங்கி அவன் மூன்று மான்கொம்பு வாருணீகர்களுடன் சென்றான்.

அவர்கள் அவனை அழைத்துச்செல்கையில் ஒருவன் “அங்கிருப்பவர் ஒவ்வொரு மூச்சிலும் நுரைக்குமிழிகள் என வருணர்களை முடிவிலாது பிறப்பிக்கும் மூதாதை என்று அறிந்துள்ளோம். எவரும் அவரைக் கண்டதில்லை” என்றான். பிறிதொருவன் “பெருங்கடல்களை தன் பிடரிமயிர் சிலிர்ப்பின் நீர்த்துளிகளெனச் சூடியவர். புயற்காற்றுகளை இமையசைவாகக் கொண்டவர்” என்றான். “சொல்லப்படும் அனைத்துச் சொற்களுக்கும் அப்பாற்பட்டவர். அனைத்து எண்ணங்களுக்கும் அடியிலிருப்பவர். அனைத்துக் கனவுகளாலும் ஆனவர்.”

நீர்ப்படல வாயிலைத் திறந்து அவனை அப்பால் செறிந்திருந்த இருளுக்குள் செலுத்தினார்கள். விழிகள் அழியும் திமிரம், உடலும் நோக்கழியும் அந்தகம், எண்ணம் நோக்கழியும் சாரதம், உருவங்களேதும் எஞ்சாத சியாமம், எண்ணங்களே மிஞ்சாத தமம், இருள் ஒளிகொள்ளத்தொடங்கும் அசிதம், இருளே ஒளியென்றான கிருஷ்ணம் என்னும் ஏழு ஆழங்களைக் கடந்து அவன் முதல்வருணனின் மாளிகையை அடைந்தான்.

பன்றிமுகமுள்ள மூன்று வாருணீகர்களால் அவன் அழைத்துச்செல்லப்பட்டான். அவர்கள் இருளுடல் இருள்நீரில் வடிவுகொண்டும் வடிவழிந்தும் தெரிந்தனர். அவர்களை நோக்கி அறிந்தபின்னரே அவர்களுக்கு விழிகளில்லை என்பதை அவன் அறிந்தான். தான் அவர்களை விழிகள் வழியாக நோக்கவில்லை என்பதை அதன் பின்னர் உணர்ந்தான்.

“பெருஞ்சினத்தவர் இங்கமைந்த எந்தை. அவர் அவைபுகுந்து தேவரோ மானுடரோ அசுரரோ இதுவரை மீண்டதில்லை” என்றான் ஒருவன். “அவர் அவைக்குச் சென்று அருள்பெற்று மீள்பவர் அனைத்து நெறிச்சரடுகளுக்கும் அப்பால் முதல்நெறியென்று அமைந்துள்ள ஒன்றை அறிந்தவர் ஆவார்” என்றான் இன்னொருவன். மூன்றாமவன் “அவர் அருள் கொண்டவர் தன்னை தன் அறச்சரடுகளால் முழுக்க பிணைத்துக்கொண்டவர் ஆகிவிடுவார்” என்றான்.

முதல்வருணனின் அவை நீலநிறமாக இருந்தது. அதனுள் நுழைந்த அர்ஜுனன் அங்கே அவன் முற்றிலும் அறியாத குலத்தலைவர்கள் செறிந்திருப்பதைக் கண்டான். தங்கள் குடிக்குறிகளையும் குலமுடிகளையும் அணிந்து கோல்சூடியிருந்தனர். முகங்கள்தோறும் தொட்டுத்தேடியபின்

முதல் முகத்தை அவன் அடையாளம் கண்டான். அஸ்தினபுரியின் தொல்குடித்தலைவர் ஒருவர் அவர் என அறிந்த மறுகணமே அனைவரையும் அடையாளம் காணலானான்.
குலத்தலைவர்களாக, குடிமூத்தோராக, தெருக்களிலும் அங்காடிகளிலும் கழனிகளிலும் சாவடிகளிலும் நிறைந்திருக்கும் குடிமக்கள்பெருக்காக.

அரசமேடை கரிய கல்லால் ஆனது. அதன்மேல் கரிய உடல்கொண்ட வருணன் எரியும் அனல்விழிகளுடன் அமர்ந்திருந்தார். தோளில் வழிந்து தொடையில் விழுந்து தரையில் கிடந்தன சடைமுடிக்கற்றைகள். சடைத்திரிகளான தாடி மடியில் விழுந்திருந்தது. வடிகாதுகள் தசைவளையங்கள் என தோளில் தொங்கின. "எந்தைக்கு வணக்கம். எளிய மைந்தன் தங்கள் அவைநாடி வந்துள்ளேன்" என்றான் அர்ஜுனன்.



“நீ பாண்டுவின் மைந்தன் அல்லவா?” என்றார் அவர். அவர் கைகளில் நீண்ட பறவையலகுகள் போல நகங்கள் எழுந்திருந்தன. “உன் தந்தையின் நெறித்தூய்மையால் இங்கு வந்தாய் நீ.” அர்ஜுனன் “ஆம், எப்போதும் அவரால் வழிநடத்தப்படுகிறேன்” என்றான். “உன் தந்தை நீயென்றாக

விழைந்தார். எனவே நீ நிகழ்கிறாய்” என்றார் வருணன். “எந்தையே, நான் தங்கள் அருள்கொண்டு செல்ல வந்தவன்.”

“நீ என் தொல்குடி என்னைப்பற்றிப் பாடிய வாழ்த்தை அறிவாயா?” என்றார் வருணன். “வெயிலெரியும் பாலைகளில் வழிதவறும்போதும், விழிதிறந்த சுனைகளைக் கண்டு ஓடிச்சென்று அள்ளி வாயில் விடுவதற்கு முன்னரும் விண்மீன்களை நோக்கி படுத்திருக்கையிலும் விடியொளியில் விழிதிறந்து எழுந்த உடனேயும் அவர்கள் அதைப்பாடினர். உங்கள் மொழிகளனைத்தும் எழுந்த வயல். உங்கள் குடிநிரைகள் அனைத்துக்கும் ஊற்று.”

“அதைச்சொல்கையிலேயே நீ எங்களவன் ஆகிறாய்” என்றார் ஒருவர். “இல்லையேல் நீ அயலவன், இங்குள்ள கோடானுகோடி விழியிலா மீன்களில் ஒன்று என காலமிலாது வாழ்வாய்.” அர்ஜுனன் அவரை வணங்கி “அறிவேன், மூத்தவரே. நீங்கள் என் குடிமூத்தவராகிய குருவின் முகம் கொண்டவர். அவருக்கும் மூத்தவர்கள் சூடிய முகம் நீங்கள். உங்கள் முகம் கொண்டு இங்கு நின்றிருக்கிறேன்.” அவருடைய கண்கள் கனிந்தன. “சொல்” என்றார்.

அர்ஜுனன் அந்த முதல்வேதப்பாடலையே பாடினான் “வருணனே, இறைவடிவோனே உன்னை வணங்குகிறேன். நாங்கள் எளிய மானுடர். நாள்தோறும் உன் நெறிகளை மீறிக்கொண்டிருக்கிறோம். எங்களை இறப்புக்கு இரையாக்காது அருள்க!” அவன் பாடிமுடித்ததும் முகம் மலர்ந்த வருணன் “ஆம், தொன்மையான பாடல். நம் குடியின் வாழ்த்து” என்றார். “நன்று மைந்தா, நீ என்னவன். வருக!”

அவர் கைநீட்ட அவன் அணுகி அவர் காலடிக்குச் சென்று குனிந்து நகங்கள் நீண்டு பின்னிய முதியகாலடிகளைத் தொட்டு வணங்கினான். அவர் அவன் தலைமேல் கைகளை வைத்தார். "முதல்மைந்தனைத் தொட்டபோது இவ்வெழுச்சியை அடைந்தேன்" என்றார். அவனை தோள்பற்றி இழுத்து தன் மடியில் அமரச்செய்துகொண்டார். திரும்பி அருகிருந்த வருணையிடம் "இவனை நினைவுகூர்கிறாயா?" என்றார்.

"இவனுக்களித்த முலைப்பாலின் எச்சத்தை உடலில் உணர்கிறேன்" என்றாள் அவள். கைநீட்டி அவன் கன்னங்களை வருடியபடி "அழகன்! என் மைந்தன். அவன் விழிகளால் பெண்கள் பித்தாகிறார்கள்" என நகைத்தாள். வருணன் வெடிப்புறு குரலில் நகைத்து "அன்னையை மகிழ்விப்பவன் வாழ்நாளெல்லாம் பெண்டிரை வென்றுகொண்டிருப்பான்" என்றார். அவர்கள் இருவரும் சேர்ந்து உடல்குலுங்க நகைத்தனர்.

வருணை அவன் கைகளை வருடி "படைக்கல வடுக்கள்" என்றாள். "இவை புண்ணென்றிருக்கையில் வலித்திருக்கும் அல்லவா?" அர்ஜுனன் "போரே வலியளிப்பதுதான், அன்னையே" என்றான். வருணன் "உன்னை எவரும் போரில் வெல்லமுடியாது, மைந்தா" என்றார். "கேள், தந்தை உனக்களிக்கவேண்டியதென்ன?" அர்ஜுனன் "உங்கள் மிகச்சிறந்த சொல்லை" என்றான்.

"ஆம், அதுவே முறை" என்றார் "இதுவே அது. வல்லமை எதுவும் கட்டுண்டாகவேண்டும்" என்று சொல்லி அவன் நெற்றிமேல் கையை வைத்தார். அர்ஜுனன் கைகூப்பி அதை ஏற்றான். மும்முறை அந்த அழியாச்சொல்லை தன்னுள் சொல்லி

பதித்துக்கொண்டான். "அனைத்தையும் கட்டும் சரடொன்று உள்ளது. அறமெனும் சொல். அதை உனக்களிக்கிறேன். உன் அம்பென்று அது அமைக!" என்றார். "ஆம், அருள் அது" என்றான் அர்ஜுனன்.

அவர் திரும்பி நோக்க அமைச்சர் ஒருவர் அணுகி ஒரு தாலத்தில் வைக்கப்பட்ட பாசச்சுருளை அவரிடம் நீட்டினார். அவர் அதை எடுத்து சுருட்டியதும் யானைவால்முடியைப்போல சுருட்டி கணையாழியாக்கினார். அவன் கையில் அதை அணிவித்து "இது உன்னுடன் என்றுமிருக்கட்டும்!" என்றார். "தங்கள் ஆணை" என்றான் அர்ஜுனன்.

"மைந்தா, என்னிடம் நீ கோருவதென்ன?" என்றாள் வருணை. "மைந்தர் அன்னையிடம் எதையும் கோரலாகாது. பசிப்பதற்கு முன் ஊறுபவை முலைகள்" என்றான் அர்ஜுனன். "நீ என்றுமே சொல்வலன்..." என்று சிரித்த வருணை அவன் தலையில் மெல்ல அடித்து "மூடா மூடா" என்றாள். அவன் குழல்களைப்பற்றி மெல்ல உலுக்கி "என் மகன்" என்று முகம் கனிந்து விழி நீர்மைகொள்ள தனக்குள் என சொன்னாள்.

# கிராதம் - 35

**[ 16 ]**

தண்டகாரண்யம் வறண்டு தூசுபடிந்த புதர்களுடன் சூழ்ந்திருந்தது. முட்புதர்களுக்குள் சருகுகள் சலசலக்க ஓடி பாறைமேல் தாவி ஏறிநின்று செதில் உப்பி வண்ணம் மாற்றிக்கொண்ட பச்சோந்தியின் களைத்த கண்களில் நீண்ட கால வறட்சியின் சலிப்பு தெரிந்தது. காலடி பதிந்த இடங்களில்

கூழாங்கற்கள் எழுந்து உருண்டு சரிவிறங்கி சருகுகளை ஒலிக்கச்செய்தன. வியர்வை உடலில் வழிய இடையில் கைவைத்து நின்று “நீர் இருக்கிறதா, பைலரே?” என்று ஜைமினி கேட்டான்.

“அது உள்ளம் கொண்ட விடாய். நீர் இப்போது கேட்ட கதை அவ்விடாயை அளிக்கிறது” என்றான் பைலன். “மிகக்குறைவாகவே நீர் உள்ளது. நீரின் பசுமை தெரியத்தொடங்கிய பின்னர் நாம் நீர் அருந்துவதே நன்று.” விண்ணை நோக்கி “வெளித்துக்கிடக்கிறது. மரங்களின் இலைகள்கூட தளர்ந்துவிட்டிருக்கின்றன. சோர்ந்த பசுவின் காதுகள்போல தொங்குகிறது இந்த செண்பகமரத்தின் இலை” என்றான்.

சண்டன் “அது சிறந்த கவிதை” என்றான். “நானும் கவிதை எழுதுபவனே” என்றான் ஜைமினி. “ஆம், நான் இல்லை என்று சொல்லவில்லையே? இதுவும் கவிதைதான்” என்றான் சண்டன். “கவிஞர் பலவகை. சொல்லை படைக்கலமாக்கியவர். சொல்லை துடுப்பென ஆக்கியவர். சொல்சூடி வானெழுபவர். சொல்லை ஆடையென அணியென சூடிக்கொள்பவர்.” ஜைமினி “நான் என்ன செய்யவேண்டுமென எனக்கே தெரியும்” என்றான். “அது நன்று. தெளிவிருப்பவர்கள் நெடுந்தொலைவு அலையவேண்டியிருக்காது” என்றான் சண்டன்.

பைலன் “சற்று தொலைவுதான். மலைச்சரிவில் ஒரு உணவுநிலை உள்ளது என்கிறார் சண்டர்” என்றான். “எனக்கு உடனடியாக அருந்த நீர் வேண்டும். அதன்பின்னரே நான் கால்வைக்க முடியும்” என்றான் ஜைமினி. “நீர் மிகச்சிறிதளவே உள்ளது. ஒருவேளை உமக்கே தேவையாகலாம்” என்றான் சண்டன். “நீர்” என்றான் ஜைமினி. சண்டன் நீரை

கொண்டுசென்று அவனுக்கு அளிக்க அதை வாங்கி முழுக்க குடித்தபின் குடுவையை திருப்பி அளித்தான். “முற்றருந்தலாகாது என்பது ஒரு முறைமை” என்றான் பைலன். ஜைமினி அதைக் கேளாதவன் போல “செல்லலாம்” என்றான்.

“செல்வோம்” என்றான் சண்டன். அவர்கள் காய்ந்த நிலத்தினூடாக கூர்ந்த முட்களை ஒதுக்கி உருளும் பாறைகளைக் கடந்து சென்றார்கள். “சொல்க!” என்றான் பைலன். “யவனநாட்டிலிருந்து திரும்பி வந்துகொண்டிருந்த காப்பிரிநாட்டு வணிகக்குழுவினர் பாலைநிலத்தில் வெற்றுடலுடன் சடைக்கற்றைசூடி சிரித்தும் நடனமிட்டும் சென்றுகொண்டிருந்த பித்தனை கண்டார்கள். அவனை அவர்கள் தங்கள் அத்திரிகள் ஒன்றின்மேல் ஏற்றிக்கொண்டார்கள். அவர்களின் காப்பிரிநாட்டு துறைநகர் ஒன்றுக்கு கொண்டுசென்றார்கள்.”

“அங்கே சென்று நீரைக் கண்டபின்னர்தான் அவன் மீண்டான். முதன்முதலாக மானுடரைக்கண்டதும் அவனால் அதை அடையாளம் காணவே முடியவில்லை. ஆனால் அவனுள் இருந்த விலங்கு சுனைகளைக் கண்டடையும் திறன்கொண்டிருந்தது என்பதை அவர்கள் உணர்ந்தனர். அவன் மொழியிழந்திருந்தான். அனைத்து முறைகளையும் இழந்திருந்தான். கடல்கண்டதும் கைவிரித்து அதை நோக்கி ஓடி மயங்கி விழுந்தான். பதினெட்டு நாட்கள் அழுதபடியும் அரற்றியபடியும் அரைவிழிப்பு நிலையில் இருந்தான். அதற்குள் அவன் உடலின் குலக்குறிகளிலிருந்து அவன் அர்ஜுனன் என அவர்கள் உணர்ந்துகொண்டிருந்தனர்.”

“விழித்து மொழியெழுந்ததும் அவன் கிழக்கு என்றே சொன்னான்” என்றான் சண்டன். “அங்கிருந்து காப்பிரிகளின்

கலத்தில் ஏறி தென்முனை சுற்றிக்கொண்டு அவன் கிழக்கே இந்திரகீல மலையை தேடிச்சென்றான்.” முகம் மலர்ந்து கேட்டுக்கொண்டு வந்த பைலன் சண்டனை நோக்கி முன்னால் சென்று உள்ள எழுச்சியுடன் “திசைவெற்றி என்னும் சொல்லே உள்ளத்தை எழுச்சி கொள்ளச்செய்கிறது, சண்டரே” என்றான்.

தோளில் இட்ட முழவை விளையாட்டாகத் தட்டியபடி வேர்கள் மேல் தாவித்தாவி முன்னே சென்ற சண்டன் நின்று திரும்பிநோக்கி “ஆம், தவழ்ந்து இல்லம் விட்டு வெளியே வந்து படியில் அமர்ந்து தொலைவை நோக்கும் குழவி அடையும் முதல் உணர்வு அது. வெல்வதற்குத் திறந்திருப்பவை திசைகள் என்ற எண்ணம் அதை ஒவ்வொரு கணமும் தூண்டிக்கொண்டிருக்கிறது” என்றான்.

“ஒவ்வொரு முறை நாம் பார்க்கும்போதும் அதன் கால்கள் கொண்டுசெல்லும் தொலைவின் இறுதி எல்லையில்தான் அது நின்றுகொண்டிருக்கிறது. பின்னர் எப்போதோ திசைகள் சுவர்களாகின்றன. உள்ளே நின்று நெஞ்சில் அறைந்து தொண்டை உடையும்படி கூவி ஓங்கி உதைத்து கொந்தளிக்கிறோம். தலையை அறைந்து யார் அங்கே, என்னை கேட்கிறீர்களா, எனக்கு மறுமொழி அளிப்பீர்களா, என்னை அறிவீர்களா என்று ஆர்ப்பரிக்கிறோம். சோர்ந்து உடைந்து தனிமையிலமர்ந்து கண்ணீர்விடுகிறோம்.”

“பின்பு ஒரு கட்டம் வருகிறது. திசைகள் இறுகி கோட்டைகளாகின்றன. முடிவின்மையிலிருந்து அலையலையென எழுந்துவரும் அனைத்தையும் தடுத்து அப்பால் நிறுத்தி நம்மைக் காக்க உறுதிகொண்டு நின்றுள்ளன. திசைகளுக்கு அப்பாலுள்ள வெளி அச்சுறுத்துகிறது. திசைகளுக்குள் அடைபட்ட வெளி குழப்புகிறது. இன்னும்

சிறிதாகுக இக்கோட்டை, இன்னும் அணுகுக இச்சுவர்கள் என்று ஏங்குகிறோம். நாம் விழைய விழைய திசைகள் அணுகி வருகின்றன. சிற்றூராகின்றன. இல்லச்சுவர்களாகின்றன. கவசமாகின்றன. உடை என்றாகின்றன. தோல் என்றாகின்றன.”

சண்டன் முழவில் கையோட்டி “தந்தனத் தானன தானே – தன தந்தன தானன தானே” என்றான். மெல்ல துள்ளி ஆடியபடி “வயதேற வயதேற சுருங்குவதேனடி கண்ணே? வாழ்க்கை அறிந்திட அறிந்திட அகலுவதேனடி பெண்ணே? விழிசூட மொழிசூட மழலையென்றாகிறார் கண்ணே – மாந்தர் வீட்டுக்குள் ஒடுங்கும் விந்தைதான் என்னடி பெண்ணே?” என்று பாடினான். பைலன் “வீட்டுக்குள் ஓட்டுக்குள் அடங்குவதேனடி பெண்ணே – வெளியென திசையென வேறொன்று நிற்கையில் கண்ணே?” என்று உடன் பாடினான்.

ஜைமினி “இதென்ன காட்டுத்தனமான பாடல்? இலக்கணமே இல்லை” என்றான். அவன் அருகே சென்று மிக அருகே குனிந்து “காட்டு வெள்ளம் கரைமீறி வருகுது பெண்ணே – கண்டு குளிரென்று குடிலுக்குள் ஒளிவாயோ கண்ணே?” என்றான் சண்டன். ஜைமினி பல்லைக்கடித்து முன்னால் சென்றான்.

சண்டன் முழவின் கதி மாற்றி முழக்கி “எட்டு திக்கும் ஆடையென்றாகிடும் வெறுமை – விண் தொட்டு தலையெழ நின்றிடும் முழுமை” என்றான். பைலன் உரக்க நகைத்து “எவராயினும் திசைகளை சூடிக்கொண்டுதான் விண்ணேகுகிறார்கள் மனிதர்கள்” என்றான். சண்டன் “ஆம், ஆனால் உயிருடன் உணர்வுடன் ஆடை களைந்து இல்லம் களைந்து ஊர் களைந்து அச்சம் களைந்து ஆணவம் களைந்து

அமையும் உணர்வனைத்தையும் களைந்து திசைகளைச் சூடி நின்றிருப்பதற்கோர் ஆண்மை வேண்டும்" என்றான்.

"அருகநெறியினரின் பாதை அது" என்றான் ஜைமினி. "அவர்கள் தங்கள் உடலை இழிவுசெய்பவர்கள். உடல் இறைவாழும் ஆலயம். அதை இடிபாடுகளாகக் கொண்டு அலைகிறார்கள்." சண்டன் அவனை நோக்கி சென்று முழவை முழக்கியபடி "ஆலயம் கண்டவர் அறிவதேயில்லை கண்ணே – அணி ஆலயம் என்பதும் ஆடையே யாகும் பெண்ணே" என்றான். ஜைமினி "நாம் இங்கே என்ன செய்கிறோம்? இருட்டுவதற்குள் செல்ல நெடுந்தொலைவு எஞ்சியிருக்கிறது" என்றான்.

முழவை விரைந்து முழக்கிய சண்டன் சட்டென்று தன் மரவுரியைக் கழற்றி அப்பாலிட்டான். வெற்றுடலுடன் கால் தூக்கி வெறிநடமிட்டுச் சுழன்றாடி நின்றான். ஜைமினி திகைத்து அப்பால் திரும்ப அவன் முன்னால் சென்று நின்று தட்தட்தட் என்று முழவை அறைந்து "அந்தணரே, அந்த முப்புரியை கழற்றி வீசுக! அந்த மரவுரியை வீசுக! காற்றை அணிக! திசைகளை அணிக! வேதமழையின் முதல்துளி உங்கள் மேல் விழட்டும்" என்றான். ஜைமினி "அப்பால் செல்க!" என்றான்.

பைலன் தன் ஆடையைக் களைந்து வீசினான். கைகளைத் தூக்கியபடி சண்டனுடன் சேர்ந்து நடனமிட்டான். "ஆம், ஆம், ஆம்!" என்று முழவு முழங்கியது. "ஆம்! ஆம்! ஆம்!" என்று பைலன் கைகொட்டி ஆடினான். "ஆம், ஆம், ஆம்! செத்ததன் வயிற்றினில் சித்தம் இருப்பது பித்தர் அறிவாரோ? ஆம், ஆம், ஆம்! பித்தென்றும் பிழையென்றும் முற்றி எழுவதை மூடர் அறிவாரோ? பற்றிடும் யாவிலும் பேய்கள் வாழ்வதை பாவியர்

அறிவாரோ? கற்றிடும் சொற்களே கால்தளை ஆவதை கவிஞர் அறியாரோ?”

அப்பால் ஒரு மரத்தடியில் சென்று வேர்களில் அமர்ந்து அவர்களை விழிசுருக்கி நோக்கிக்கொண்டிருந்தான் ஜைமினி. அவர்கள் ஆடுந்தோறும் வெறிகொண்டனர். வெறியேறும்தோறும் விசைகொண்டனர். விசைமுழுக்கும்தோறும் தாளம் பிசிறின்றி எழுந்தது. கைகளும் கால்களும் விழிகளும் விரல்களும் தாளமென்றேயாகி துடிக்க அவர்கள் ஒருவரை ஒருவர் நிறைத்தாடினர். ஒருவரோடு ஒருவர் நிறைந்து ஆடினர்.

மின்னலில் அவர்கள் ஒளியெனத் தெரிந்து அணைய ஜைமினி பாய்ந்து எழுந்தான். இடியோசை காட்டுக்குள் விழுந்து முழக்கம்கொண்டது. முகில்கள் பிளிறியமைந்ததுமே பிறிதொரு பெருமின்னலால் மரங்களனைத்தும் வெண்தழல்களாகி துடித்தணைந்தன. இடியோசை எழுந்து முற்றமைதியை விரித்தது. மீண்டும் செவி எழுந்தபோது காடெங்கும் பறவைக்குரல்கள் எழுந்து முழக்கமாவதைக் கேட்டான். மரக்கிளைகளில் குரங்குகள் கிளர்ச்சிகொண்டு தாவிப்பாய்ந்து சுழன்றுவந்தன.

தொலைவில் மண்மணம் எழுந்தது. இளநுங்கின் மணம் என ஒருமுறையும் வறுபட்ட பருப்பின் மணமென மறுமுறையும் புதுக்குருதியா என ஆழத்திலும் ஐயமெழுப்பும் மணம். உள்ளம் கிளர்ந்தெழ எழுந்த ஜைமினி மீண்டும் அமர்ந்துகொண்டான். ஆனால் அவன் கால்கள் துடித்து மண்ணில் அசைந்தன. அதை உணர்ந்ததும் அவன் அவற்றை இறுக ஊன்றி அழுத்திக்கொண்டான்.

முதல் மழைத்துளி அவன் மேல் விழுந்தது. உடலைக்குறுக்கி மழைத்துளிகளின் அறைதலை வாங்கிக்கொண்டான். அவனைச் சூழ்ந்த காடு பேரொலியாகியது. மின்னலில் நனைந்துசொட்டிய இலைகள் வெள்ளியொளிகொண்டு மின்னி அணைந்தன. மீண்டுமொரு இடிப்பெருக்கு. மீண்டுமொரு மின்னல் அதிர்வு. அவர்கள் மழையில் ஆடிக்கொண்டிருப்பதை அவன் அடிமரத்தின் குவைக்குழி ஒன்றுக்குள் உடலை நன்கு செலுத்தி ஒடுங்கிக்கொண்டு விழிவிரித்து நோக்கிக்கொண்டிருந்தான்.

“அந்தணரே, விடாய் தீர இந்த நீர் போதுமா?” என்றான் சண்டன். மழைக்குள் அவன் பற்கள் வெண்மையாக தெரிந்து மறைந்தன. “உங்கள் விடாய் தீர்ந்த பின்னர் எஞ்சும் மழையை என்ன செய்வீர்கள்?” ஜைமினி முகம் திருப்பி அப்பால் நோக்கினான். சண்டன் “காய்ந்த நிலமென விரிக! மழைமுழுமையையும் பருகலாகும்” என்றான். பைலன் “வருக, ஜைமின்யரே!” என்றான். ஜைமினி திரும்பி நோக்காமல் மழை தழுவ சிலிர்த்துக்கொண்டிருந்த நெல்லிமரத்தை நோக்கிக்கொண்டிருந்தான்.

**[ 17 ]**

உடைகள் நீர்சொட்ட உடல்குளிர்ந்து நடுநடுங்கிக்கொண்டிருக்க அவர்கள் உணவுநிலையை சென்றடைந்தனர். அங்கே முன்னரே ஐம்பதுக்கும் மேற்பட்ட வழிநடையர் கூடியிருந்தனர். அடுமனைப்புகை தொலைவிலெழக்கண்டதும் உளம் மலர்ந்த சண்டன் “அன்னம்!” என்றான். பைலன் “ஆம், அன்னம்” என்று கூவினான். ஜைமினி சிரித்தபடி “நீங்கள் கொள்ளும் மகிழ்ச்சிகளில் நான் தடையின்றி பங்கெடுப்பது இதில் மட்டுமே” என்றான்.

“திசைவென்றவனின் கதையை நாம் இன்னமும் முடிக்கவில்லை, சண்டரே” என்றான் பைலன். ஜைமினி “திசை மூர்த்திகளிடமிருந்து அர்ஜுனன் மெய்யறிதல்களை பெற்றான். அவர்கள் அவனை வாழ்த்தி சொல்லளித்தனர். அது எப்படி வென்றதாகும்?” என்றான். “வெல்லப்படாத எதுவும் அடையப்படுவதில்லை, அந்தணரே” என்றான் சண்டன்.

சீற்றத்துடன் ஜைமினி “தெய்வங்களை எவரும் வெல்வதில்லை. வேள்விக்கு முன் வந்து அவி கொள்ளும்

விண்ணவர் திசைவேந்தர். மானுடன் அவர்களை வெல்ல முடியாது” என்றான். அதே சிரிப்புடன் “வென்றவர் அனைவரும் தெய்வங்களை வென்றவர்களே” என்றான் சண்டன். “தெய்வங்கள் வெல்வதற்குரிய இலக்குகள் என்றறிந்தவனே வெல்வதற்கு எழுகிறான். தெய்வங்களை அடைகிறான். கடந்து சென்று தெய்வமென்றும் ஆகிறான்.”

ஜைமினி “உமது எளிய சூத மெய்யறிவு அவ்வாறு சொல்லலாம். வேத மெய்மை அதை ஏற்காது” என்றான். சண்டன் “மெய்மை எனும் பசுவை ஓட்டி வந்து இல்லத்தூணில் கட்டி கறந்தெடுத்த பாலே வேதம் என்று பிராம்மணம் ஒன்று சொல்கிறது. வெல்லப்படாத ஒன்றை எப்படி கட்டிவைத்தார்கள் உமது வேத மூதாதையர்?'' என்றான். ஜைமினி உரக்க “நான் உங்களிடம் பேச விரும்பவில்லை. நீங்கள் இருவருமே வேத மறுப்புக் கொள்கை கொண்டவர்கள்” என்றான்.

“அந்தணரே, வேத மறுப்புக் கொள்கை கொண்ட இருவருடன் சொல்லுரசி உங்கள் வேதத்தை கூர்தீட்டிக் கொள்ளலாமல்லவா?” என்று கேட்டபின் பைலனை பார்த்தான் சண்டன். பைலன் புன்னகைத்தான். “நான் உங்களிடம் பேச விரும்பவில்லை” என்றபின் ஜைமினி முன்னால் நடந்தான். அவர்களிடமிருந்து முற்றிலும் விலகுவதுபோல நடந்துசென்று பின்னர் தயங்கி நின்று அவர்கள் வருவதற்காக காத்தான்.

பைலன் “எந்தச் சொல்லாடலையும் அவர் விரும்புவதில்லை” என்றான். “அஞ்சுகிறார். நம்பிக்கைகளை சூடியிருப்பவர்கள் கைக்குழந்தைகளை இடையில் வைத்த அன்னையரைவிட எச்சரிக்கையுடன் இருக்கிறார்கள். அமுதூட்டி நெஞ்சணைத்து துயில்கையில் விழித்திருந்து பேணி வளர்க்கிறார்கள். ஒவ்வொரு கணமும் அதையே எண்ணிக்கொண்டிருக்கிறார்கள்.

பிறனெல்லாம் எதிரியே என அச்சம் கொள்கிறார்கள்” என்று சண்டன் நகைத்தான்.

“நான்காவது பாதம் அர்ஜுனனின் இந்திர உலக பயணத்தைப் பற்றியதல்லவா?” என்று பைலன் கேட்டான். “காப்பிரிகளின் கலங்களுடன் அவன் கிழக்கே சென்றதாக சொன்னீர்கள். இந்திரகீலம் கிழக்கே எங்கோ உள்ளது என்பார்கள். பாரதவர்ஷத்தில் பல இந்திரகீலங்கள் உள்ளன.” சண்டன் “இந்திரவில் சூடி நிற்கும் மலைகளனைத்தும் இந்திரகீலங்களே” என்றான். “ஆனால் கீழைக்கதிர் பாரதவர்ஷத்திற்குள் காலடி வைப்பது இந்திரகீலத்தின் உச்சிப்பாறைமேல் என்பார்கள். அது காமரூபத்திற்கும் மணிபூரகத்திற்கும் அப்பால் விரிந்துள்ள மானுடர் அணுகமுடியா பசுங்காடுகளுக்கும் அப்பால் எங்கோ உள்ளது.”

அச்சொற்களை தொலைவிலிருந்தே கேட்டு மரங்களைப் பார்த்து அக்கறையற்று நிற்பது போன்ற தோரணையில் ஜைமினி அவர்களை எதிர்நோக்கினான். அதைப் பார்த்த சண்டன் புன்னகையுடன் பைலனைப் பார்த்து கண்களை காட்டினான். பைலன் “அவர் அர்ஜுனனை வழிபடுகிறார்” என்றான். “அவர் வேதமெய்யறிந்த பெருவீரர் என அவருடைய குருமுறை எண்ணுகிறது.” அவர்கள் அருகே சென்றதும் ஜைமினி “நாம் அன்னசாலையை நெருங்கிக்கொண்டிருக்கிறோம்” என ஆர்வமற்றவன்போல் சொன்னான்.

“இந்திர உலகுக்குச் சென்று தன் பெயர்த்தந்தையைப் பார்த்து பணிந்து மெய்யறியவைப் பெற்று அர்ஜுனன் மீண்டதை முழுமையான தனி பாதமாகவே கவிஞர் பாடியிருக்கிறார் அல்லவா, அது ஏன்?” என்று பைலன் கேட்டான். “மூன்று

திசைகளிலிருந்தும் அவர் பெற்றது மெய்யறிதலின் மூன்று முகங்களை. கிழக்கில் எழுவதே முதல்மெய்மை” என்றான் சண்டன். “அப்படியென்றால் கிழக்கல்லவா முதலில் சென்றிருக்க வேண்டிய திசை?” என்று ஜைமினி தன்னை அறியாமலேயே சண்டனின் அருகே வந்து கேட்டான். “ஆம், அந்தணரே. ஆனால் அறிதலில் மட்டும் படிப்படியாக மேலெழுவதே உகந்தது” என்றான் சண்டன்.

“இருண்ட தெற்கின் இறப்புலகில் இருந்து தொடங்கி உயிர் முளைகொண்டெழும் கிழக்குவரை செல்வதே உகந்த சுற்று” என்றான் பைலன். சண்டன் உரக்க நகைத்து “நாம் அப்படி சொல்லிக்கொள்ளலாம். அப்படி நிகழ்ந்தது என்று மட்டுமே சூதனால் பாடமுடியும்” என்றான். ஜைமினி “சண்டரே, வேதமெய்ப்பொருளை அறிய வேத முதன்மைத் தெய்வமாகிய இந்திரனிடமல்லவா அர்ஜுனன் சென்றிருக்க வேண்டும்?” என்றான்.

“வேதமூதாதையர் அறிந்த முதல்தெய்வம் யமனே” என்றான் சண்டன். “இப்பெருநிலம் முழுக்க இன்னமும் ஆழ்காட்டுக்குள்ளும் உயர்மலைகளுக்குமேலும் தொல்குடிகள் வாழ்கின்றனர். அவர்கள் நாவில் வாழ்கின்றது வேதமெனும் கனிவிளைந்த சொற்காடு. அவர்களின் முதல்தெய்வம் காலமும் இறப்பும் நோயும் மீட்புமெனத் தோன்றி அருளும் தென்புலத்தோன். அவர்களின் மூதாதையரை அழைத்துச்சென்றவன், அவர்கள் வாழும் தென்னுலகை ஆள்பவன். அனைத்துக்கும் பொருள் அளிக்கும் முழுமையில் குடிகொள்பவன்.”

“பின்னர் எழுந்தவன் குபேரன். ஈட்டிவைக்கும் அனைத்துக்கும் தலைவன். அந்தணரே, வடக்கே இமயமலையுச்சியில் கீரி

ஒன்றுள்ளது. மண்ணுக்குள் ஆழ்துளையிட்டு வாழ்வது. பனிக்காலம் முழுக்க அங்கே மறைந்திருப்பதனால் அது ஒவ்வொரு மணியாகச் சேர்த்து கரந்து வைக்கும் இயல்புகொண்டது. குளிர்காலத்தில் மலைக்கீரி வளைகளை அகழ்வது அங்குள்ளவர்களின் தொழில்களில் ஒன்று. பல தருணங்களில் பொன்னும் அருமணிகளும் அங்கே சேர்க்கப்பட்டிருக்கும். அக்கீரியை அவர்கள் தெய்வமென வழிபடுகிறார்கள். அதை குபேரன் என்கின்றன தொல்கதைகள். கொழுத்து உருண்ட அதன் வடிவிலேயே குபேரனும் இருப்பதாக அவர்கள் நம்புகிறார்கள்.”

“வருணன் மேலைநிலத்தில் மழைநோக்கி அமர்ந்திருக்கும் மக்களின் வேதத்தில் எழுந்த தெய்வம். வேழாம்பலும் மழைக்குருவிகளும் அவனை அறிகின்றன என்கின்றனர் தொல்குடிகள். முதல்மூவரும் அமர்ந்த வேதபீடத்தை பின்னர் இந்திரன் வென்றான் என்கின்றனர் வேதமறிந்த அறிவர். வகுக்கப்பட்ட தொல்வேதம் வருணனின் புகழ் பாடியது. தொடர்ந்த நால்வேதம் இந்திரனையே முதல் தலைவனாகக் கொண்டது. விரிந்த பாலைநிலத்திலிருந்தும் காடுசெறிந்த தென்னிலத்தில் இருந்தும் மலைமேல் பனியுலகில் இருந்தும் நமது மூதாதையர் புல்வெளி விரிந்த பசுநிலத்திற்கு வந்தபோது கண்ட தேவன் அவன்.”

“புல்வெளிகளைப் புரக்கும் தெய்வம் அவர்களுக்கு மேலும் உகந்தவனாக ஆகியிருக்கலாம். இன்றும் பசும்புல்வெளியின் மீது இளமழை நின்றிருக்கையில் கதிரெழக்காண்பது ஒரு பெருங்காட்சியே” என்றான் பைலன். “இம்மண்ணில் காலூன்றி நின்று மானுடர் காணும் காட்சியில் மழைவில்லுக்கு நிகரான அழகு கொண்டது வேறொன்றுமில்லை. இடியோசைக்கு

நிகரான ஆற்றல் கொண்ட எதுவுமில்லை. குளிர் காற்றுக்கு நிகரான இனிமைகொண்ட எதுவும் இல்லை.”

ஜைமினி முகம் மலர “ஆம், எங்கள் குல மூதாதையர் என்றும் இந்திரன் பூசகர்களாகவே இருந்துள்ளனர். இந்திரநாதம் விண்ணில் எழும் நாளிலேயே அவர்கள் மூதாதையரை வாழ்த்தும் வேள்விகளை செய்வார்கள்” என்றான். “ஏனென்றால் இந்திரன் பிறரைப்போல அசுரர்களிடமிருந்து எழவில்லை. ஒருபோதும் அசுரர்களால் வழிபடப்பட்டதில்லை” என்றான் சண்டன். ஜைமினி சினத்துடன் “மீண்டும் மீண்டும் அனைத்தையும் அசுரர்களிடம் கொண்டுசென்று சேர்க்கவே விழைகிறீர்” என்றான். “ஆம், ஏனென்றால் நான் அசுரன்” என்றான் சண்டன்.

அதன்பின்னர் அவர்கள் பேசிக்கொள்ளவில்லை. அன்னசாலை அணுகிவந்தது. சிறிய மண்பாதை ஒன்று அதை நோக்கி இறங்கிச்சென்றது. மழைநனைந்து மிதிபட்டு அது சேறாகிவிட்டிருந்தது. அவர்கள் அதில் ஒவ்வொருவராக இறங்கிச்சென்றனர். ஜைமினி “அவ்வண்ணமென்றால் வருணனை வைதிகர் போற்றுவது ஏன்?” என்றான். “அவன் இந்திரனுக்கு உகந்த தோழனாக ஆனான் என்பது தொல்கதை” என்றான் சண்டன். ஜைமினி “எப்படி?” என்றான்.

“நீங்கள் அறிந்திருப்பீர்கள், அந்தணரே. விருத்திராசுரனுக்கு எதிரான போரில் வருணன் இந்திரனுடன் துணைநின்றான். அதன்பொருட்டே வேள்விகளில் அவிகொள்ளலானான். அவிகொண்டு அவன் ஒளிபெற்று ஆதித்யனாக மாறினான். வைதிகர் வணங்கும் தெய்வமென்று அமர்ந்தான்” என்றான் சண்டன். “இங்கே மிக அருகில் கரூஷம் என்னும் சுனை ஒன்றுள்ளது. விருத்திரனைக் கொன்ற பழியை இந்திரன்

அங்குவந்து நீராடி தவமிருந்து அகற்றிக்கொண்டதாக சொல்கிறார்கள் இங்குள்ள தொல்குடிகள். நாளை நாம் அங்கு செல்வோம்.”

ஜைமினி ஒன்றும் சொல்லவில்லை. பைலன் “இனிய இரவொன்று அமையுமென நினைக்கிறேன். இன்னுணவு, குளிர்ந்த மழைக்காற்று” என்றான். அன்னசாலையில் இருந்து வெளியே வந்த புரப்போன் கைகூப்பி “அந்தணர்களுக்கும் வழிப்போக்கருக்கும் நல்வரவு. உணவுகொண்டு எங்களை வாழ்த்துக!” என்றான். “ஆம், இனிய அன்னசாலை. பாலையில் சுனைபோல பேரருளின் வடிவம் இது” என்றான் பைலன். “நீராடி உணவுண்ணலாம். அப்பால் ஒரு சிறு சுனை உள்ளது. மழைக்குளிரில் அந்நீர் இனிய வெம்மையுடன் இருக்கும்” என்றான் புரப்போன்.

“நீராடியபடியேதான் வந்தோம்” என்றான் சண்டன். பைலன் “ஆம்” என்றான். ஜைமினி “நீராடாது உணவுண்பதா? நீர் அந்தணர் அல்லவா?” என்றான். பைலன் சண்டனிடம் “நீர் சென்று உணவுண்ணும். எனக்கு வேறுவழியே இல்லை” என்றான். சண்டன் “உமது ஊழ் அது” என்றபின் சிரித்தபடியே முழவுடன் விலகிச்சென்றான். “நீராடி வருக அந்தணரே, நான் என் முழவை உலரச்செய்யவேண்டும். மூன்று உழக்கு மது அருந்திய நாவென உளறுகிறது” என்றான்.

“நீராடுவோம்” என்றான் ஜைமினி. அவர்கள் அன்னசாலையை சுற்றிக்கொண்டு நடந்தனர். “இவர் சொல்லும் கதைகளை எல்லாம் நான் உதிரிச்செய்திகளாக முன்னரே கேட்டிருக்கிறேன்” என்று ஜைமினி சொன்னான். “அவற்றில் எப்பொருளும் இல்லை. அவை மெய்யறிதலை வெறும் குலப்போராகவும் அரசாடலாகவும் குறுக்கிவிடுகின்றன.

அவற்றுக்குள் சென்றுவிட்டவரால் மெய்மையை ஒருபோதும் சென்று தொடமுடியாது.” பைலன் “நடக்காத பறவை ஒன்று இல்லை, ஜைமின்யரே” என்றான்.

ஜைமினி “உம்மை அவருடைய மாயம் கட்டிவிட்டது. நான் ஒன்றும் சொல்வதற்கில்லை இனி” என்றான். அவர்கள் குறும்புதர்கள் சூழ்ந்த சிறிய சுனையை அணுகியபோது அங்கே சிறுவன் மட்டும் நீராடிக்கொண்டிருப்பதைக் கண்டனர். சுனையில் இருந்து நீர் அள்ளிக் குளிப்பதற்காக கமுகுப்பாளைத் தொன்னைகள் போடப்பட்டிருந்தன. அவன் நீரை அள்ளி மேலே விட்டு உடல் சிலிர்த்து உரக்க நகைத்தான்.

ஜைமினி முகம் மலர்ந்து “அந்தணர்” என்றான். “ஆம், நான் முதலில் ஏதோ வெண்ணிற மரம் என நினைத்தேன்” என்றான் பைலன். காற்று வீச மழைத்துளிகள் சொட்டியபடி கிளைகள் அசைந்தன. அவர்கள் அருகே அணுகியபின்னர்தான் சிறுவன் அவர்களைக் கண்டான். “வணங்குகிறேன், உத்தமர்களே” என்றான். “அங்கிரீச மரபில் வந்தவனும் விஸ்வகரின் மைந்தனுமாகிய என் பெயர் சுமந்து.” ஜைமினி தன்னை அறிமுகம் செய்துகொண்டான்.

பைலன் தன்னை அறிமுகம் செய்துகொண்டபோது “ஆம், உங்களை நான் கேள்விப்பட்டேன். நான் வைஜயந்தம் என்னும் சிற்றூரில் ஒரு வேதசாலைக்குச் சென்றபோது என்னைப்போலவே ஒரு சிறுவன் வந்துசென்றதாகச் சொன்னார்கள். உங்கள் பெயரையும் சொன்னார்கள்” என்றான். “என்னைப்போலவே செல்கிறீர்களா?” என்றான் பைலன்.

“ஆம், நான் வேதமெய்ப்பொருள் அறிந்த வியாசராகிய கிருஷ்ண துவைபாயனரை அன்றி பிறிதெவரையும் இனிமேல் ஆசிரியன்

எனக்கொள்ளமாட்டேன் என்று உறுதிகொண்டுள்ளேன்” என்றான் சுமந்து. “கிழக்கே வங்கத்தில் என் சிற்றூரான தீர்க்கஜலத்தில் இருந்து குடியும் குலமும் விட்டு நான் கிளம்பியது அதன்பொருட்டே. தனியாக இத்தனை தொலைவு வந்துவிட்டேன். சென்றடையாமல் ஓய்வதில்லை.”

# கிராதம் - 36

### பகுதி ஐந்து : மாகேந்திரம்

**[ 1 ]**

உணவருந்திவிட்டு ஜைமினியும் பைலனும் சுமந்துவும் சிரித்துப் பேசிக்கொண்டே வெளியே வந்தனர். “அன்னசாலை உணவுகள் இனியவை” என்றான் சுமந்து. “ஏனென்றால் உரிய பசியுடன் நாம் அவற்றை அணுகுகிறோம்.” பைலன் “வேதசாலை உணவுகள் ஆன்மாவுக்கானவை” என்றபின் ஜைமினியை நோக்கி புன்னகை செய்தான். “நான் பெரும்பசியுடன் சென்றுகொண்டிருக்கிறேன். ஆகவே ஆசிரியர் சுவையானவராகவே இருப்பார் என நம்புகிறேன்” என்றான் சுமந்து.

“வியாசர் வாழ்வது தெற்கே என்று எவர் சொன்னார்கள் உம்மிடம்?” என்று பைலன் கேட்டான். “நான் அவரைப்பற்றி மட்டுமே கேட்டுக்கொண்டு செல்கிறேன். ஒவ்வொருவரும் அவரைப்பற்றி ஒவ்வொரு செய்தியை சொல்கிறார்கள். திரௌபதியை ஐவரும் மணம்புரிந்துகொண்டபோது அவர் பாஞ்சாலத்தில் தோன்றி ஐவரையும் ஒருத்தி மணப்பது பிழையல்ல என்று பாண்டவர்களுக்கு அறிவுறுத்தினார் என்று ஒரு சூதன் பாடினான். அஸ்தினபுரியின் அவைக்களத்தில்

நாற்களமாடல் நிகழ்வதற்கு முன்னர் அவர் அங்கே சென்று அது கூடாதென்று வலியுறுத்திச் சொன்னார் என்கிறார்கள்.”

“ஆம், அத்தனை கதைகளிலும் அவர் உரிய தருணங்களில் எல்லாம் தோன்றி அறிவுரை சொல்கிறார்” என்றான் பைலன். “அதை உண்மையெனக்கொண்டால் அவர் அஸ்தினபுரியின் நிலவறை ஒன்றில் வாழ்ந்துகொண்டிருக்கவேண்டும்.” சுமந்து சிரித்துக்கொண்டு “ஆனால் அவர் காட்டில் பாண்டவர்கள் வாழ்ந்தபோதும் நேரில் தோன்றி செல்வழி சொல்லியிருக்கிறார்” என்றான். “உண்மையில் திருதராஷ்டிரரும் பாண்டுவும் பிறப்பதற்கு முன்னரே அவர் அஸ்தினபுரிவிட்டு விலகிச்சென்றுவிட்டார். அவருடைய நுண்ணறிவு நிகழ்வதனைத்தையும் காட்டியமையால் அவர் தனிமையிலமர்ந்து தவம்செய்யச் சென்றார் என்கிறார்கள்.”

“அல்லது குற்றவுணர்ச்சியாகவும் இருக்கலாம்” என்றான் பைலன். “இருக்கலாம். குற்றவுணர்ச்சியிலிருந்துதான் பெருங்காவியங்கள் தோன்றுகின்றன” என்று சுமந்து சொன்னான். “புற்றுறைமுனிவரின் குற்றவுணர்ச்சியே முதற்காவியம்” என்றான் ஜைமினி. “நான் அவருடைய காவியத்தின் பகுதிகளை இளமையிலேயே வாசிக்கத் தொடங்கிவிட்டேன். மொழியென நானறிந்ததே அவருடைய சொற்களைத்தான். அவரிடமன்றி எங்கும் என் சித்தம் அமையாதென்று தோன்றியது” என்றான் சுமந்து.

ஜைமினி “அது அவரென்று எவருக்குத் தெரியும்? பெருந்தவளை என அவர் நீருள் எங்கோ மூழ்கியிருக்கிறார், குமிழிகளென காவியங்கள் மட்டும் கிளம்பிவருகின்றன என்பதை என்னால் நம்பமுடியவில்லை. அனைத்தும் சூதர்சொல்லாகவும் இருக்கலாமே?” என்றான். “இல்லை, அது அவர் சொற்களே”

என்றான் சுமந்து. “அவருடைய சொற்களை என்னால் பல்லாயிரம் சொற்களுக்கு நடுவே முதல்செவியிலேயே சொல்லிவிடமுடியும். அவரன்றி பிறர் அந்த உயரத்திற்கு செல்லமுடியாது. தோழரே, விண்ணிலிருந்து செம்பருந்து உதிர்க்கும் ஒற்றை இறகு போதும், அது அங்கே அளாவிய முகிலையும் ஒளியையும் நாம் அறிவதற்கு.”

பைலன் சிரித்து “நீர் கவிஞர்” என்றான். “ஆம், நான் வியாசனின் மாணவன். தலைமுறைகள் என் சொற்களைப் பாடும், ஐயமே இல்லை அதில்” என்றான் சுமந்து. அந்தக் குரலில் எழுந்த நம்பிக்கையை உணர்ந்து பைலன் திரும்பி அவனைப் பார்த்தான். சுமந்துவின் முகம் அனல்கொண்டது போலிருந்தது. பைலன் பெருமூச்சுடன் “நீர் எவரென அறிந்திருக்கிறீர். நான் அதைத்தான் தேடிக்கொண்டிருக்கிறேன்” என்றான்.

அவர்கள் கொட்டகையை அடைந்தபோது சண்டனின் முழவின் உறைமட்டும் இருந்தது. “சூதர் எங்கே?” என்றான் பைலன். “யார்?” என்று சுமந்து கேட்டான். “எங்களுடன் வந்தவர். சூதர்களில் அவர் ஒரு பிட்சாடனர்” என்றான் பைலன். “ஆசாரங்களில்லாதவர். எதையும் அத்துமீறி மட்டுமே நோக்கும் துடுக்கர். ஆனால் கற்றவர். சொல்தேர்ந்தவர்” என்றான் ஜைமினி. “கற்று சொல்தேர்ந்தவர் அப்படித்தான் இருக்கமுடியும் போலும்” என்று சுமந்து சிரித்தான். “ஏன் முறைமைகொண்டு ஒழுகும் முனிவர்கள் இல்லையா?” என்றான் ஜைமினி சினத்துடன். “ஓர் அமைப்பை ஒட்டி ஒழுகும் எவரும் முனிவர்கள் அல்ல” என்றான் சுமந்து. ஜைமினி அவனை சிலகணங்கள் நோக்கிவிட்டு விழிதிருப்பிக்கொண்டான்.

“அமைப்புகளை விரும்புபவர்கள் எளிய மனிதர்கள். அவர்கள் தெப்பத்தைப் பற்றிக்கொண்டு நீந்த விழையும் கைதளர்ந்தோர். அமைப்பை பொருள்படுத்திக்கொள்ள அமைப்புமனிதர்களை அவர்கள் முனிவர்களென ஆக்கிக்கொள்கிறார்கள்” என்றான் சுமந்து. “ஜைமின்யரே, இங்குள்ள ஒவ்வொரு வேதநிலையிலும் ஒரு முனிவர் இருக்கிறார். நெறிநின்று இயங்கும் ஓர் உடல். மரபில் பொருந்தி இருந்துகொண்டிருக்கும் ஓர் உள்ளம். அதற்கப்பால் அவர்கள் ஏதுமில்லை. வயது முதிர்ந்தால் நாம் எவரையும் முனிவர் என சொல்லத் தொடங்கிவிடலாம். நமக்கு முதுமைமீது இருக்கும் அச்சமும் கனிவுமே அவரை அப்படி காட்டத்தொடங்கிவிடும்.”

“அறிதலென்பது மீறலால் அன்றி நிகழமுடியாது. தனித்து அன்றி அதை கொள்ள முடியாது. தன் தனிமையைப் பகிர்பவரிடமன்றி அதை அளிக்கவும் முடியாது” என்றான் சுமந்து. பின்னாலிருந்து முழவுடன் வந்த சண்டன் “முழவின் தோலை அடுப்புநெருப்பில் காட்டி சற்று காயவைத்தேன்” என்றான். “நாளைக் காலைக்குள் காய்ந்துவிடுமே, ஏன் உடனே?” என்றான் பைலன். “இங்கே வணிகர்கள் இருக்கிறார்கள். என்னை பாடச்சொல்வார்கள். வேறு சூதர்களும் இல்லை என்பதை நோக்கினேன்” என்றபின் “இவர் யார்?” என்றான்.

சுமந்து தன்னை அறிமுகம் செய்துகொண்டதும் அவன் உரக்க நகைத்து “நன்று, ஓடைகள் நதிதேடிச் செல்லும் என்கின்றது தொல்மொழி” என்றான். “நதி ஓடி ஓடி உருவாக்கும் ஆழமென்பது ஓடைகளுக்கான பொறியே.” பைலன் “நாங்கள் அர்ஜுனனின் திசைவெற்றி குறித்த கதைகளைத்தான் பேசிக்கொண்டே வந்தோம்” என்றான். ஜைமினி “அவை பெரும்பாலும் புனைவுகள். கவிஞர் தங்களுக்குத் தோன்றியதை

சொல்லிவைக்கிறார்கள்” என்றான். சுமந்து “ஆம், நானும் அக்கதைகளைக் கேட்டபடியே வந்தேன். மேற்குக்கடற்கரையில் காண்டீபத்துடன் நின்றிருக்கும் பார்த்தனை எதிர்க்க வெண்ணிறப் பிடரிமயிர் கொண்ட பன்னிரண்டாயிரம் நீலப்புரவிகளின் பெரும்படையுடன் வருணன் வந்த சித்திரம் எனக்கே பேரெழுச்சியை ஏற்படுத்தியது” என்றான்.

“பிறகு?” என்றான் பைலன். “அலைகளின் முடிவின்மையால் வருணன் எதிர்க்க கரைமணல்களை அம்புகளாக்கி அர்ஜுனன் அவனுடன் போரிட்டான். அலைகள் வல்லமை மிக்கவை. ஆனால் மணல்களின் எண்ணிக்கைக்கும் ஒருமைக்கும் முன் அவை தோற்றே ஆகவேண்டும். வருணனை வென்று கயிற்றம்பைக் கொண்டு அர்ஜுனன் மீண்டான்” என்றான் சுமந்து. “ஆம், நல்ல கற்பனையே” என்றான் பைலன். “குபேரனை அவன் வென்றது எடைமிக்க கற்பாறைகளால் என்று அந்தக் கதையில் வந்தது. குபேரனின் படைக்கலங்களான பொன்னும் வெள்ளியும் இரும்பும் அழிபவை. அழிவற்ற கல்லை அவற்றால் வெல்லமுடியவில்லை” என்றான் சுமந்து.

பைலன் “யமனை எப்படி வென்றான்?” என்றான். “ஒரு புல்வேரை அவன் தன் படைக்கலமாக ஆக்கினானாம். யமன் இப்புவியில் எதை அழித்தாலும் புல்லை அழிக்கமுடியாது. புல்வேரின் முன் யமனின் அனைத்துப் படைக்கலங்களும் பொருளிழந்தன. அவனுடைய தண்டத்தை அம்பெனக் கொண்டு அர்ஜுனன் புவிமீண்டான்” என்றான் சுமந்து. சண்டன் “நன்று, கவிஞர்கள் கற்பனைசெய்யத் தேறியிருக்கிறார்கள்” என்றான். “அர்ஜுனனின் வெற்றிக்கதையை கேட்டுக்கேட்டு மக்களுக்கு சலிக்கவில்லை” என்றான் ஜைமினி. “சூதர்களின் சொல்லில்

வாழும் அர்ஜுனர்கள் பல்லாயிரம்பேர். அத்தனைபேரின் எடையையும் தாங்கி மண்ணில் வாழ்கிறான் அவ்வெளிய மனிதன்” என்றான் சண்டன்.

வணிகர்களில் ஒருவன் “சூதரே, உங்களுக்காகவே காத்திருக்கிறோம்” என்றான். “முழவு நா கொண்டுவிட்டதல்லவா?” என்றான் இன்னொருவன். “நா தளர்ந்திருந்ததென்றால் சற்று யவன மதுவை அதன்மேல் பூசுக! நா துடித்து எழக்காண்பீர்” என்றான் பிறிதொருவன். அவர்கள் நகைத்தனர். உணவுக்குப்பின் அனைவருமே வெற்றிலை போட்டுக்கொண்டிருந்தனர். வெளியே மழைக்காற்று சுழன்று வீசியது. சிலர் மரக்கட்டில்களில் பொதிகளை தலைக்கு வைத்துக்கொண்டு துயின்றுகொண்டிருந்தனர். சண்டன் எழுந்து அவர்களை அணுகி “என்ன கதை சொல்ல?” என்றான். “இளைய பாண்டவரின் கதைதான். அவர் திசைவென்ற வரலாறு” என்றான் ஒருவன்.

“கேட்டுக்கேட்டு சலித்துவிட்டேன்... புதிய கதை ஏதேனும் சொல்!” என்றான் முதிய வணிகன் ஒருவன். “விருத்திராசுரனை இந்திரன் வென்ற கதையைச் சொல்லும், சண்டரே” என்றான் பைலன். “விருத்திராசுரன் கதையா? அது மிகமிகத் தொன்மையானதல்லவா? ஏட்டுக்கல்விக்கு முன்னரே கேட்டறிந்த கதை” என்றான் ஒரு வணிகன். “என்ன கதை கேட்டீர்கள்?” என்றான் சண்டன். “மாமுனிவராகிய காசியப பிரஜாபதிக்குப் பிறந்தவன் விருத்திரன். அவர் தனு என்னும் மனைவியில் பெற்றெடுத்த தானவர்களில் ஒருவன்” என்றார் ஒரு வணிகர். “அல்ல, அவன் த்வஷ்டாவால் உருவாக்கப்பட்டவன்” என்றார் இன்னொரு வணிகர்.

சண்டன் நகைத்து "ஊருக்கொரு கதை உண்டு, வணிகர்களே. விருத்திராசுரனை இந்திரன் கொன்றான் என்பதில் மட்டும் பிறிதொரு கருத்தில்லை" என்றான். "நீரே சொல்லும்" என்றான் ஒரு வணிகன். சண்டன் "கதை என்பது நீர் போல. நேற்று அருந்திய நதி இன்றுள்ளது அல்ல. நேற்றிருந்த விருத்திரன் அல்ல இன்று வாழ்பவன். சொல் நாளும் வளர்வது, வணிகர்களே" என்றான். "ஆகவே சொல்லை ஓம்புக! சொல் வேள்வியெரி போல. நெய்யும் அவியும் சமித்துமிட்டுப் பேணுபவர்களிடமே அது வாழும்." வணிகர்களில் மூத்தவர் நகைத்து "எந்தக் கதையும் நாணய ஒலியில் இருந்தே தொடங்குமென நாங்கள் அறிவோம், சூதரே" என்றார்.

அவர்கள் அளித்த நாணயங்களை வாங்கி தன் மடிச்சீலையில் பொதிந்து செருகிக்கொண்ட பின்னர் சண்டன் கதையை தொடங்கினான். "அழிக்கப்பட்ட ஒன்று அழிவற்றதாகும் விந்தை என்ன? வணிகர்களே, அழியாது பேணி நெஞ்சோடு சேர்த்து மானுடம் கொண்டுசெல்வதுதான் என்ன? அழிவன சூழ்ந்தது இப்புவி. அழிவென அழிவென கூவிக்கொண்டிருக்கிறது காலம். சூழ்ந்து பறக்கும் பெருங்காற்று கற்பாறைகளை கரைத்துக்கொண்டிருக்கிறது. ஒளியற்ற வெம்மையற்ற நெருப்பொன்றில் எரிந்துகொண்டிருக்கின்றன அனைத்தும்."

"இப்புவியில் முற்றழிவது எது? பிழையுணர்வு வளர்கிறது. தன்னிரக்கம் குமைகிறது. வெற்றிக்களிப்பு மிகுகிறது. வஞ்சம் கரந்து ஊறிப்பெருகுகிறது. அழிவதுதான் என்ன? அழிவின்மை என்பது நலனா தீதா? வணிகர்களே, இங்கு அழியாதது இருளா ஒளியா? அழிந்தழிந்து செல்லும் வாழ்வுக்குமேல் அழியாமல் நின்றிருக்கும் தெய்வங்களின் பிறப்புவாயில் என்ன?

ஓடும்நதிமேல் படர்ந்த விண்முகில்களென தனிவழி சென்றுகொண்டிருக்கின்றன தெய்வங்கள். தெய்வங்களை வழிபடுக! அவை நம் அச்சங்களின் கூர். நம் ஐயங்களின் இருள். நம் வஞ்சங்களின் கசப்பு. நம் துயர்களின் எடை. அவை வாழ்க!”

**[ 2 ]**

பிரம்மகபாலம் என்னும் மலைப்பாறைக்கு மேலிருந்த குகையொன்றில் ஒரு மழைக்குளிர்காலத்தில் மூவர் சந்தித்துக்கொண்டனர். ஒருவர் மெய்ச்சாம்பல்பூசி கரித்தோலுடுத்து மூவிழிதிறந்து முப்புரிவேல் ஏந்திய பெயரற்ற பிச்சாண்டவர். இன்னொருவர் தருப்பைச்சுருளும் துணிப்பொதியும் கைக்கோலும் கொண்டு அயலூர் செல்லும் வைதிகர். பிரசாந்தர் என்பது அவர் பெயர். மூன்றாமவன் முழவேந்தி கொம்பு இடைகட்டி கழியில் தொங்கும் பொதியுடன் வழிநடைசெல்லும் சூதன். அவன் பெயர் பிரசண்டன்.

குகைக்கு வெளியே இளமழை பொழிந்துகொண்டிருந்தது. உள்ளே காட்டுவிறகை அடுக்கி எரிமூட்டி வெப்பத்தை நிறைத்தான் சூதன். வெளிக்குளிர் உள்ளே நுழையாமலிருக்க மரக்கிளைகளை வெட்டிச் சாய்த்து அதன்மேல் தழைகளை அடுக்கி கதவமைத்திருந்தனர். செவ்வொளியே குளிரை விரட்டியது. குகைச்சுவர்கள் அனல்கொண்டதும் அவர்களின் இறுகிய உடல்கள் தழைந்தன.



மெல்லிய சோர்வுடன் கண்களை மூடிக்கொண்டு தரைப்புழுதிமேல் தன் ஆடையை விரித்து படுத்துக்கொண்ட பிரசாந்தர் “இனியபொழுது. இவ்விரவில் தெய்வங்கள் நம்மைச் சூழ்ந்து நிற்பதாக!” என்றார். அச்சொல் முடிவதற்குள் கதவுத்திரையின் இடைவெளியினூடாக குகையின் ஆழங்களனைத்தும் ஒளிகொண்டதிர மின்னலொன்று வெட்டி அதிர்ந்து அணைந்தது. இடியோசை

எழுந்து குகைக்குள் பெருமுழக்கமொன்று முழவின் ரீங்காரமென நீடித்தது.

பிரசாந்தர் திரும்பி நோக்கி “இக்குகை மேலும் பலகாதம் உள்ளே செல்கிறது போலும்” என்றார். “இது குகையல்ல அந்தணரே, பிலம். மண்ணுக்குள் ஓடும் பேர்விரிசல் இது. இதற்குள் ஆறுகள் ஓடக்கூடும். பலநூறு கிளைகளுடன் இது விரிந்து செல்லக்கூடும்.” பிறிதொரு மின்னல் அந்தணரை ஒளிர்ந்தணையச் செய்தது. திரும்பிநோக்கி இடியோசைக்காக அவர் காத்திருந்தார். இடியெழுந்து அவ்வோசை இருளுக்குள் உருண்டோடிச் செல்வதை கண்டார். “நெடுந்தொலைவு” என்றார். “ஆம், இருளுக்குள் ஓசை சென்றுகொண்டே இருக்கிறது, மீளவில்லை” என்றான் சூதன்.

பிச்சாண்டவர் அங்கிலாதவர் போல அமர்ந்திருந்தார். அவர் கையில் சிவமூலிகை புகைந்துகொண்டிருந்தது. விழிகள் அதன் அனலுடன் இணைந்து கனன்றணைந்தன. “பாதாளம்வரை செல்லும்போல” என்று பிரசாந்தர் புன்னகைத்தார். “ஆம், பாதாளமூர்த்திகள் வெளியே வரும் வழியாக இருக்கலாம்” என்றான் சூதன். பிரசாந்தர் அச்சத்துடன் “வெறும்கதைகள்” என்றார். “பாதாளமென்று ஒன்று இருந்தால் அது வெளிவந்துதானே ஆகவேண்டும்?” என்றான் சூதன். அந்தணர் சரியாக புரிந்துகொள்ளாமல் “ஆம்” என்றார்.

“அனைத்தும் புதைந்துகொண்டே இருக்கின்றன, அந்தணரே. புதைந்தவை சென்றடையும் ஆழம் ஒன்று இருக்கும். மிச்சமின்றிப் புதைபவை அங்கே முழுதமையக்கூடும். மிச்சமென சில கொண்டவை அவற்றை விதைமுளையெனக் கொண்டு மேலெழுந்து வரும்.” பிரசாந்தர் விழிகள் அசைவிழந்திருக்க சூதனை நோக்கியபின் பெருமூச்சுடன் “ஆம்”

என்றார். பிச்சாண்டவர் அங்கு நிகழ்ந்த சொற்களுடன் தொடர்பற்றவர்போல வெடித்து நகைத்து இருமி உடல்குலுங்கி அமைந்து மீண்டும் புகையை ஆழ இழுத்தார்.

மீண்டுமொரு மின்னல் எழுந்து குகைக்குள் தழைநிழல்களின் காடு ஒன்றை கூத்தாட வைத்து அணைந்தது. குகைச்சுவரில் பதிந்திருந்த கற்களின் மேல் மின்னலின் ஒளி சற்றுநேரம் எஞ்சி விழிகளென தெரிந்து அணைந்தது. பிரசாந்தர் “இந்திரனே, மருத்வானே, பிதௌஜஸே, பாகசாசனனே, விருத்தசிரவஸே, சுனாசீரனே, புருஹூதனே, புரந்தரனே, ஜிஷ்ணுவே, லேகர்ஷபனே, சக்ரனே, சதமன்யூவே, திவஸ்பதியே, சுத்ரமாவே, கோத்ர்ஃபித்துவே, வஜ்ரியே, வாசவனே உன்னை வணங்குகிறேன்” என்று சொல்லி தன் தலைமேல் கைகளால் மும்முறை குட்டிக்கொண்டார்.

இடி உறுமியது. மின்னல் கூர்வாள்கள்போல குகையிருளில் நீண்டு சுழன்றணைந்தது. மேலும் உரத்த குரலில் “நீ விருதஹா, விருஷா, வாஸ்தோஷ்பதி, சுரபதி, வலராதி, சசீபதி, ஜம்பஃபேதி, ஹரிஹயன், ஸ்வராட், நமுசிசூதனன், சம்கிரந்தனன், துஞ்ச்யவனன். நீ வாழ்க!” என்றார். தலைக்குமேல் கைகளைக் கூப்பி “துராஷாடன் அல்லவா நீ? மேகவாகனனே, ஆகண்டலனே, சகஸ்ராக்ஷனே, ருஃபுக்ஷாவே என்னை காத்தருள்க! எங்களுக்கு துணைநின்றருள்க!” என்றார்.

சூதன் “இந்திரநாமங்கள்” என்றான். “ஆம், இடிமின்னலில் இருந்து அவை நம்மை காக்கின்றன” என்றார் பிரசாந்தர். சூதன் நகைத்துக்கொண்டு “அஸ்தினபுரியின் குடிகள் இந்திரன் மைந்தனாகிய அர்ஜுனனின் பெயர்களை சொன்னால் போதுமென நினைக்கிறார்கள்” என்றான். அந்தணர் “பண்டு விருத்திராசுரனைக் கொன்று பிளந்த மின்படை அவன்

கையிலுள்ளது. சூதரே, இதோ மின்னி அணைவது அதன் ஒளிதான்” என்றார்.

“இருளே உருவான அரக்கன். அவனைக் கொன்றது மின்னலெனும் வாள். அவன் இடியோசையென ஒலியெழுப்பி விழுந்தான். இருளுக்குள் கரைந்து மறைந்தான். இருள்செறியும் இடங்களில் அவன் எழுந்து வருகிறான். அப்போது விளக்கென, வேள்விச்சுடரென இந்திரனை ஏற்றுவோம். அவன் நம்மை அவன் மடியில் வைத்துக் காப்பான்” என்றார் பிரசாந்தர்.

பிச்சாண்டவர் மீண்டும் உரக்க நகைத்து இருமினார். “இவர் துயில்வதே இல்லை. இந்த அனலை உண்டபடி எப்போதும் செவ்விழி திறந்து விழித்திருக்கிறார்” என்றார் அந்தணர். “அவர் மூன்றாம் விழி துயிலும்போலும்” என்றான் சூதன். மின்னுடன் இடியோசை எழ பிரசாந்தர் உடலை குறுக்கிக்கொண்டு “மழைக்கால இடிக்கு இத்தனை ஒலியிருக்காது. இன்று வான்கிழிவதுபோல முழங்குகிறது” என்றார்.

“அந்தணரே, விருத்திரனை வெல்ல ஒருபோதும் இந்திரனால் முடியாது என்று அறிக! அவர்கள் என்றுமிருப்பார்கள். அப்போர் முடிவடைவதேயில்லை” என்றான். “விருத்திரன் கொல்லப்பட்டான் என்பதே தொல்கதை” என்றார் பிரசாந்தர். “சொல்க, அக்கதை என்ன?” என்றான் சூதன். “முன்பு இப்புவியை ஆண்டிருந்த சித்ரகேது என்னும் ஷத்ரிய அரசனின் மறுபிறப்பே விருத்திரன்” என்றார் பிரசாந்தர். “சொல்க!” என்று சூதன் சொன்னான்.

“சித்ரபாகம் என்னும் நாட்டை அவன் ஆண்டுவந்தான். ஏழாண்டுகள் இல்லறம் கண்டபின்னரும் அவன் தேவி கிருத்யத்யூதி கருவுறவில்லை. கொடையும் நோன்பும்

இயற்றியும் பயனிருக்கவில்லை. அவர்கள் மாமுனிவராகிய அங்கிரசரிடம் சென்று தங்களுக்கு மைந்தனை அளிக்கவேண்டுமென கோரினர். மைந்தன் இல்லாது தன் நாடும் குடியும் அழியுமென்றால் மூதாதையருக்கு பழிசேரும் என்றும் அதை தவிர்க்கும்பொருட்டு உயிர்துறந்து பேயென அலைவதே மேலென்று எண்ணுவதாகவும் சித்ரகேது கண்ணீருடன் சொன்னான்" அந்தணர் சொல்லலானார்.

அங்கிரசர் அவர்களிடம் சொன்னார் "மைந்தனை அளிப்பதும் எடுப்பதும் மானுடரால் இயல்வதல்ல. தெய்வங்களை கோருவோம். உயிருக்கு இறைவனை அழைக்கிறேன். அவனிடம் கேள்!" சித்ரகேது இயற்றிய பெருவேள்வியில் எழுந்த யமன் "நான் எடுப்பவன், அளிப்பவன் அல்ல. உயிரளிக்கும் ஆற்றல்கொண்டவர் ஒருவரே. படைப்பு முதல்வனாகிய பிரம்மனிடம் கோருக!" என்றான்.

வேள்வி தொடர்ந்தது. அவியுண்டு எழுந்த நெருப்பில் தோன்றிய பிரம்மன் "பிறப்பும் இறப்பும் துலாநிகர் கொண்டது, முனிவரே. அந்நெறிகளை பிரம்மனும் மீறமுடியாதென்றறிக! இவன் குருதியில் மைந்தர் பிறக்கமுடியாது. இவனது முற்பிறவிகளிலேயே அது வகுக்கப்பட்டுவிட்டது" என்றார். "மாட்டேன், மைந்தன் பிறக்காமல் அமையமாட்டேன். அருவேள்வி எதுவானாலும் செய்யுங்கள். என் இறுதிச்செல்வத்தையும் ஈடுவைக்கிறேன். கடுந்தவம் எதுவானாலும் என் இறுதிக்குருதிவரை அளிக்கிறேன்" என்று சித்ரகேது கூவினான்.

"வேறுவழியில்லை, அரசே" என்றார் அங்கிரசர். "அதை நானறியவேண்டியதில்லை. நான் விழைவது மைந்தனை" என்று அவன் சொன்னான். "விழைவுகளின் அரசன் இந்திரனே.

வேள்விக்கு கட்டுப்பட்டவன். அவனிடம் கோரலாம்” என்றார் அங்கிரசர். வேள்விமரத்தில் மின்னெனப் பாய்ந்து எரியென எழுந்த இந்திரனிடம் அரசனின் விழைவை அவர் உரைத்தார். “தேவர்க்கரசே, அளிகொள்க! அரசனுக்கு அருள்க!” என்றார்.

“படைக்கப்படாததை உருவாக்க இயலாது என்னால்” என்றான் இந்திரன். “அளிகொள்க! அரசே, அளிகொள்க” என்று சித்ரகேது கூவியபடி மண்டியிட்டு கைநீட்டி இரந்தான். “விண்ணாளும் தேவர்களில் ஒருவனை இவன் மைந்தன் என மண்ணுக்கு அனுப்புகிறேன். இவன் தேவியிடம் அவன் ஊனுடல்கொண்டு பிறப்பான். மண்ணில் அறுபதாண்டுகாலம் வாழ்ந்து சிறந்து விண்மீள்வான்” என்றான் இந்திரன். “ஆனால் இவன் என் மைந்தன் என ஒருகணமும் நீ எண்ணலாகாது. எண்ணும் அக்கணம் அம்மைந்தன் உயிர்நீப்பான்.”

சித்ரகேது “ஆம், ஆணை! அவ்வாறே, ஆணை!” என்று கூவினான். அங்கிரசர் “எண்ணிச்செய்க, அரசே!” என்றார். “இல்லை, இது எனக்களிக்கப்படும் பேரருள்...” என்றான் சித்ரகேது. “அரசே, நாம் மாந்தர். தேவர்கள் அல்ல. அவர்களுடைய வாள்முனைகளின் உலகு” என்றார் அங்கிரசர். “ஆம், வாள்முனையில் எறும்பு ஊரும். அது அஞ்சவேண்டியதில்லை” என்றான் சித்ரகேது. “தேவர்க்கரசே, இதோ சொல்லளித்தேன். எனக்கு மைந்தனை அருள்க!” இந்திரன் “அவ்வாறே ஆகுக!” என்று சொல்லி மீண்டான்.

சித்ரகேதுவின் மனைவி கருவுற்று மைந்தன் ஒருவனை ஈன்றாள். சர்வஜித் என்று அவனுக்கு பெயரிட்டனர். பொன்னொளிகொண்ட உடலும் மணிவிழிகளும் கொண்ட அழகனாக இருந்தான் அம்மைந்தன். அவன் பிறந்த கணமே வயற்றாட்டியரால் அங்கிருந்து விலக்கப்பட்டான். அன்னைக்கு

அவன் முகமே காட்டப்படவில்லை. அவனுக்கு அமுதூட்ட முலைததும்பும் செவிலியர் வெளியே காத்துநின்றிருந்தனர்.

அரசனும் தேவியும் அவனை ஒருபோதும் நேரில் பார்க்கவேயில்லை. ஒருகணமேனும் தன் மகன் அவன் என எண்ணிக்கொள்ளலாகாதென்பதை அவன் கருவில் இருந்தபோதே தங்களுக்குள் சொல்லி உறுதிகொண்டு அதையே தவமெனச் செய்து அகத்தை பயிற்றுவித்திருந்தனர். அம்மைந்தனைப் பற்றிய ஒரு செய்தியும் தங்கள் செவிக்கு வரக்கூடாதென்று அவர்கள் ஆணையிட்டிருந்தனர். அவன் அறியாமலும் அவர்களின் விழிமுன் சென்றுவிடக்கூடாதென்று அனைவரும் நெறிகொண்டிருந்தனர்.

மைந்தனை மறக்க அரசன் அரசப்பணிகளில் கணமிடைவெளியின்றி மூழ்கினான். மாலையில் களைத்து தளர்நடையிட்டுச் சென்று படுக்கையில் விழுந்து அக்கணமே துயின்றான். காலையில் அலுவல்செய்தியொன்றுடன் தன்னை எழுப்பவேண்டுமென அமைச்சர்களுக்கு அவன் ஆணையிட்டிருந்தான்.

மைந்தனை எண்ணாமல் கடக்க தேவி ஒரு வழி கண்டுகொண்டாள். ஒரு மரப்பாவையை அவள் தன் மகன் என எண்ணினாள். அதற்கும் சர்வஜித் என்று பெயரிட்டாள். அந்தப் பாவையை நெஞ்சோடணைத்து அமுதூட்டினாள். கொஞ்சிக் கனிந்து குதலை பேசினாள். ஆடையும் அணியும் அணிவித்து மடியிருத்திக்கொண்டாள். அருகே படுக்கவைத்து துயின்றாள். அதையே கனவிலும் கண்டாள். பாவை அவளுக்குள் ஊறிய முலைப்பால் அனைத்தையும் உண்டது. அவள் உதடுகளில் எழுந்த முத்தங்கள் அனைத்தையும் பெற்றுக்கொண்டது. அவள்

கனவிலும் அதுவே வந்தது. அவள் மெல்ல தன் மைந்தன் இருப்பையே மறந்தவளானாள்.

அகத்தளத்தில் அன்னையையும் தந்தையையும் அறியாமல் வளர்ந்தான் சர்வஜித். அவனுக்கு ஒரு வயதானபோது ஒருநாள் சேடியொருத்தி அவனை கொற்றவை ஆலயத்திற்கு கொண்டுசென்றாள். அங்கே விளையாடிக்கொண்டிருந்த மைந்தன் அவ்வழி சென்ற நாயொன்றைக் கண்டு அதைத் துரத்தியபடி வெளியே சென்றான். மறுதிசையில் சேடியர் தேடிப்பதைத்து கூச்சலிட்டுக்கொண்டிருக்க மையச்சாலையில் இறங்கி அவன் கூட்டத்தில் கலந்தான். கூட்டத்தின் அலையால் உந்திச்செல்லப்பட்ட மைந்தன் அதில் மகிழ்ந்து துள்ளிக்கொண்டிருந்தான்.

அப்போது குலத்தாரின் அவைக்கூட்டம் முடித்து அவ்வழியே தேவியுடன் சென்ற சித்ரகேதுவின் தேர்முன் அவன் வந்தான். தேவி அறியாமல் பதறி எழுந்து “என் மகன்!” என்று கூவினாள். அவள் மடியிலிருந்த பாவை கீழே விழுந்தது. அதை காலால் தட்டி வீசிவிட்டு பாய்ந்து ஓடும் தேரிலிருந்து இறங்கி அவனை அள்ளி நெஞ்சோடணைத்து முத்தமிட்டு “என் மகன்! என்மகன்!” என்று அவள் அழுதாள். அருகே நின்ற சித்ரகேது கைகால்கள் பதற தேரை பற்றிக்கொண்டான்.

அன்றிரவே அம்மைந்தன் கடும்சுரம் கண்டு இறந்தான். அவன் சடலத்தருகே நெஞ்சறைந்து தலைமோதி கதறிக்கொண்டிருந்தாள் அன்னை. பித்தனைப்போல வெறித்து நின்றிருந்த சித்ரகேது ஒரு கணத்தில் பாய்ந்து மைந்தனை கையிலெடுத்துக்கொண்டு ஓடினான். “அரசே! அரசே” என்று கூவியபடி அமைச்சரும் பிறரும் பின்னால் ஓடினர். தேரிலேறி

“செலுத்துக, காட்டுக்கு!” என்று ஆணையிட்டான். “விரைக! விரைக!” என்று கூவிக்கொண்டே இருந்தான்.

தேர் சென்று அங்கிரசரின் குருநிலை முன் நின்றது. இறங்கி ஓடி மைந்தனின் உடலை முனிவர் முன் இட்டு அவன் கூவினான் “நான் ஒருகணமும் எண்ணவில்லை. ஒருகணமும் இவனை உரிமைகொள்ளவில்லை. இவன் உயிருடலை நான் தொடவே இல்லை.” அங்கிரசர் “ஆம்” என்றார். “என் துணைவி செய்த பிழைக்கு என்னை ஏன் தண்டிக்கின்றான் தேவர்க்கிறைவன்? நான் எண்ணவில்லை. மைந்தன் என்று இவனை கொள்ளவே இல்லை.” நெஞ்சில் ஓங்கி அறைந்து அவன் கண்ணீருடன் அலறினான். “தெய்வங்கள் சொல்க! அறமென நின்றிருக்கும் மூதாதையர் சொல்க! தேவர்க்கரசன் அறமுள்ளவன் என்றால் இங்கெழுக… நான் எண்ணவே இல்லை.”

“ஆனால் அவள் உன் அறத்துணைவி. அவள் எண்ணியது நீ எண்ணியதேயாகும்” என்றார் அங்கிரசர். “அவ்வண்ணமென்றால் அவளை நான் நீங்குகிறேன். அவள் என் துணைவியல்ல என்று இப்போதே அறிவிக்கிறேன். இந்த அனல் சான்றாகுக! அவள் என் துணைவியல்ல என்று தெய்வங்கள் அறிக! அவள் என் துணைவி அல்ல என்று மூதாதையர் அறிக! அவள் என் துணைவியல்ல என்று குலமும் குடியும் சுற்றமும் அறிக! ஆம் ஆம் ஆம்” என்றான். நெருப்பு எழுந்து தழலாடி அதை ஏற்றது.

“தேவர்க்கரசே, இது உனக்கு ஏற்புடையதென்றால் இம்மைந்தன் எழுவானாக!” என்றார் அங்கிரசர். துயிலில் இருந்து என மைந்தன் எழுந்து தந்தையை நோக்கினான். அவனை நோக்காமல் திரும்பி அப்பால் சென்ற சித்ரகேது “அவனை அகத்தளத்திற்கு கொண்டுசெல்க!” என ஆணையிட்டான்.

“வேந்தே, நீ அரசமுனிவனாக ஆகமுடியுமென்று உன் பிறவிநூல் சொல்கிறது. பற்றறுத்து மீளாமல் உனக்கு அது இயல்வதல்ல என்பதனாலேயே இது நிகழ்ந்தது என்று கொள்க! பற்றுவனவற்றில் பெரும்பற்று மைந்தனே. அதை வென்றாய். இனி நீ அடைவன முடிவற்றவை. நீ வாழ்க!” என்றார் அங்கிரசர்.

“அங்கிரசரின் சொல் நிலைத்தது. அவன் முடிவின்மையை அடைந்தான்” என்றார் பிரசாந்தர். “முடிவின்மை என்பது இப்பெரும் ஊசலின் இருபக்கங்களிலும் உள்ளது. அவன் ஒளிர்ந்து அதை அடையவில்லை. இருண்டு அடைந்தான். அவன் தேடியது திரண்டு அவன் தெய்வமாகவில்லை. அவன் கரந்தது கூர்ந்து அவன் அசுரன் ஆனான். அவனே விருத்திராசுரனாகப் பிறந்தான் என்கின்றனர் தொல்நூலோர்.”

# கிராதம் - 37

**[ 3 ]**

பிரம்மகபாலமென்னும் ஊரில் மின்னும் இடியும் சூழ்ந்த மலைக்குகைக்குள் அமர்ந்து பிரசாந்தர் என்னும் அந்தணர் சொன்னார் “சர்வஜித் வளர்ந்து பதினெட்டாண்டு திகைந்து முடிகொண்டு அரியணை அமர்வதுவரை நூலாய்ந்தும் நெறிதேர்ந்தும் அரசமுனிவர் என ஆட்சி செய்தார் சித்ரகேது. அவரை குடிகள் தந்தையென கொண்டாடினர். பற்றற்றவன் செய்யும் உலகியல்செயல்கள் தவமென்றாகின்றன. அவற்றின்மேல் ஊழின் துலாமுள் அசைவற்று நிற்கிறது. அவை வைரமுனைகொண்ட வாட்கள். அளியின்றி அளிப்பவை. சினமின்றிக் கொல்பவை.”

சித்ரகேது தன் ஆட்சிக்காலம் முழுக்க தன் பேச்சிலும் எண்ணத்திலும் இரு சொற்களை முற்றிலும் இழந்திருந்தார். ‘என்’ என்றோ ‘மகன்’ என்றோ அவர் நா உரைப்பதில்லை. அவர்முன் அச்சொற்களை சொல்லலாகாதென்று ஆணையிருந்தது. அமைச்சர்கள் நூறுமுறை பயிற்றுவித்த பின்னரே அவர் முன் அயலாரை அனுப்பினர். மைந்தனுக்கு பதினெட்டு அகவை நிறைந்ததும் அவனுக்கு முடியளித்துவிட்டு மரவுரி அணிந்து காடேகி தவம் செய்யலானார். தன்னுள் உறைந்த சொற்கள் அனைத்தையும் அகழ்ந்தெடுத்து அருகிலோடிய ஆற்றுப்பெருக்கிலிட்டு சொல்லின்மையை சென்றடைந்தார்.

தவம் கனிந்து அவர் முற்றிலும் சொல்லிழந்தவராக ஆனார். ஓணான்கள் அவர் தலைமேல் தாவின. எலிகள் அவர் கால்மடிப்புகளில் ஒடுங்கிக்கொண்டன. அவர்மேல் சாரைப்பாம்பு சுழன்றேறி மேலே சென்றது. அதைத் தொடர்ந்து அரசநாகம் ஏறிச்சென்று கவ்வி விழுங்கியது. மரங்கள்போல் பாறைபோல் அவர் ஆனார். அவ்வெறும்வெளியில் யாழிசையுடன் நாரதர் தோன்றி பிரம்மனுக்குரிய நுண்சொல்லை அவர் செவியில் உரைத்தார்.

அச்சொல்லை தவம்செய்து பெருக்கி மொழியென்றாக்கினார். அம்மொழியின் கனிவில் பிரம்மன் அவர் முன் தோன்றினார். “மைந்தா, நீ வேண்டுவதென்ன?” என்றார் பிரம்மன். “மானுடன் அறிவதன் உச்சமென ஒன்றுண்டு எனில் அது” என்றார் சித்ரகேது. “மைந்தா, நீ கோரியது அருளல்ல, உன் ஆணவநிறைவை மட்டுமே. அது உனக்கு அமைக!” என்று சொல்லி பிரம்மன் மறைந்தார்.

உடலே தான் என்னும் உணர்விலிருந்து சித்ரகேது விடுபட்டார். அக்கணமே விரும்பிய உடல்கொள்ளும் ஆற்றல்கொண்டவராக ஆனார். நீரென ஒழுகவும் நெருப்பென எழுந்தாடவும் காற்றென பரக்கவும் ஒளியென விரியவும் முகிலெனத் தவழவும் அவரால் இயன்றது. ஊனுணர்வழிந்தவன் உள்ளிருப்பையும் துறக்கிறான். அவர் இருப்பும் இன்மையும் என இருநிலையும் கொண்டவராக ஆனார். விண்வாழும் கந்தர்வர்களைப்போல எங்குமிருந்தார். அவர் உடல் அங்கே கிடந்து மட்கி எலும்புக்கூடாக மாறி மறைந்தது.

அவ்வாறு விண்ணில் செல்கையில் ஒருமுறை காட்டில் ஒரு வேடனும் அவன் துணைவியும் ஒரு சுனைக்கரையில் காதலாடுவதைக் கண்டார். அவர்கள் சிவனும் உமையுமென தெரிந்ததும் விண்ணிலிருந்து இறங்கி அங்கு மலர்ந்திருந்த நீலம் ஒன்றில் விழிகொண்டு அவர்களை கூர்ந்து நோக்கினார். உமையை அள்ளி தன் மடியிலமர்த்திய ஈசன் “இவள் என்னவள்” என்று எண்ணி முகம் மலர்ந்த கணம் சித்ரகேது வெடித்துச் சிரித்தார்.

அச்சிரிப்பொலியைக் கேட்டு சினம்கொண்டு எழுந்து நோக்கிய உமை “யார் நீ? உருக்கொண்டு எழு! நீ எதனால் சிரித்தாய் என்று சொல்!” என்று சீறினாள். சித்ரகேது எழுந்து “உலகளந்து புரப்பவனுக்கும் எனது என்னும் எண்ணத்தை கடக்கமுடியவில்லை என்றால் மானுடர் எங்ஙனம் அதை வெல்வது?” என்றார். தேவி மூச்சில் முலைகளெழுந்தமைய கண்களில் ஈரம் மின்ன “இழிந்தோனே, தன் உடைமை என தெய்வங்கள் எண்ணுவதனால்தான் அவர்கள் மானுடருக்கென இறங்கிவருகிறார்கள். மானுடர் அவ்வாறு எண்ணும்போது தெய்வநிலையை இழக்கிறார்கள்” என்றாள்.

“நான் தெய்வநிலையை இழந்தேன். என் மைந்தனை நான் தீண்டியதுகூட இல்லை” என்றார் சித்ரகேது சினத்துடன். “ஆம், இதுவரை உன்னுள்ளத்தில் கரந்து எஞ்சிய நஞ்சு பெருகி உன்னை வென்றுவிட்டது. நஞ்சென நீ வளர்க!” என்றாள் உமை. நீரில் ஒரு குமிழியென ஆகி மறைந்த சித்ரகேது மீண்டும் தன் தவச்சாலைக்கு வந்தார். அங்கே வெள்ளெலும்புக்குவையெனக் கிடந்த தன் உடலை நோக்கி ஏங்கியபடி சுற்றிவந்தார். அப்பகுதியிலேயே காற்றென குளிரென கெடுநாற்றமென செவிமாயச்சொல் என நின்றிருந்தார்.

“என் மகன் என் மகன் என்று சித்ரகேது சொல்லிக்கொண்டிருந்தார். அச்சொல்லே மொழியாக அதில் திளைத்தார். நீண்டநெடுங்காலம் அங்கே அவர் காத்திருந்தார்” என்றார் அந்தணர். “காத்திருக்கப்படுபவை எய்தப்படும் என்று சொல்கின்றன தொல்மொழிகள். தேயும் காத்திருப்புகளை காலம் உருமாற்றி வெற்று நினைவுகளும் ஏக்கங்களுமாக ஆக்குகிறது. வளரும் காத்திருப்புகள் காலத்தையே தங்கள் விழைவுக்கான படைக்கலமாகக் கொள்கின்றன.”

சித்ரகேது காத்திருந்த அந்தக் குடிலுக்கு ஒரு நாளிரவு சுசரிதன் என்னும் அந்தணன் ஒருவன் பசித்து மழையில் நனைந்து வந்துசேர்ந்தான். இடிந்த குடிலை தொலைவிலேயே கண்ட அவன் அதை அணுகி உள்ளே பார்த்தபோது வெள்ளெலும்புகளைக் கண்டான். ஆயினும் அந்த மழைக்குளிரில் வெளியே செல்ல அவனால் இயலவில்லை. ஆகவே உள்ளே நுழைந்து அமர்ந்து அங்கிருந்த கற்களை உரசி நெருப்பெழச்செய்து அந்தக் குடிலின் தூண்களையும் சட்டங்களையும் எரித்து அனலாக்கி அதில் தன் உடலை

காயச்செய்தான். கையுடன் கொண்டுவந்திருந்த கிழங்குகளை அதில் சுட்டு உண்டான்.

அவனைக் கண்டதும் அக்குடிலுக்கு மேலே காஞ்சிரமரத்தில் கசந்துத் திரண்ட காய்களாக குடிகொண்டிருந்த சித்ரகேது ஒரு கரும்பூனையாக மாறி உள்ளே வந்தார். பூனையின் குரலைக் கேட்டதும் சுசரிதன் திரும்பிப்பார்த்தான். அதன் கண்களின் ஒளி அவனை அச்சுறுத்தியது. அவன் தன் உபவீதத்தைப் பற்றியபடி வேதச்சொல்லெடுத்து இந்திரனை வாழ்த்தலானான். அஞ்சிய பூனை அருகே வந்து அவனை நோக்கி விழிசுடர்ந்தபடி அமர்ந்தது.

“இந்திரனே, இது உன் படைக்கலம். இது உன் கையில் இருக்கிறது. இதுவே எனக்குக் காவல்” என்று கூவியபடி அந்தணன் ஒரு கழியை எடுத்து தன்னருகே வைத்துக்கொண்டான். பூனை சித்ரகேதுவின் குரலில் “அந்தணனே, அஞ்சாதே. நான் உன்னை ஒன்றும் செய்யமுடியாது. இந்திரன்சொல் உன்னிடமுள்ளது. ஆனால் அழியாப்பெருவிழைவுடன் நான் இங்கு காத்திருக்கிறேன். இங்கு எவரும் வருவதில்லை. இந்த வெள்ளெலும்புகள் என் முந்தைய பிறவிக்குரியவை. இவற்றை விட்டுவிட்டு நான் செல்லமுடியாது” என்றது.

“எது உன் துயர்?” என்றான் சுசரிதன். பூனை தன் கதையை சொன்னது. “ஆம், உன் துயர் எனக்குப் புரிகிறது. விழைவுகள் அனல்துளி. அவற்றின்மேலிட்டு மூடும் மூத்தோர்சொற்கள் உலர்சருகுகள். கற்றோர்சொற்கள் பச்சை இலைகள். அனல் அனைத்தையும் உண்ணும்” என்றான் சுசரிதன். “நான் உருக்கொண்டெழ விழைகிறேன். என்னில் எஞ்சிய அனைத்தும் நுரைத்தெழுந்து பேருருக்கொண்டு ஆடாமல் நான்

மீளமுடியாது” என்றது பூனை. “ஆம், துளியென இருப்பது எதுவும் பெருகும் விழைவுகொண்டதே” என்றான் சுசரிதன்.

“அந்தணனே, அணுகுவோர் எவராயினும் துயர்சொல்லி வழிகோருபவர்களுக்கு அந்தணன் சொல்லளித்தாகவேண்டும். அச்சொல்லால் அவனும் அவன் குடியும் அழியுமென்றாலும் அது அவன் கடன் என்கின்றன நெறிநூல்கள். நூலறிந்து உபவீதமணிந்த அந்தணன் எந்நிலையிலும் மானுடருக்கு அமைச்சனே. இன்று உன்னை என் சொல்வலன் எனக்கொள்கிறேன். நான் செய்வதற்குரியதென்ன?” என்றது. சுசரிதன் “ஆம், அது உண்மை. உனக்கு உதவியாகவேண்டியது என் பொறுப்பே” என்றான். “இது ஒரு நிமித்தம் போலும். நான் சற்றுமுன் கேட்டுவந்த கதையே உனக்குரிய விடையென ஆகிறது. அதை சொல்கிறேன்.”

பிரம்மனின் சொல்கனிந்து உருவான மைந்தராகிய கசியப பிரஜாபதி உடலும் உள்ளமும் வளர்ந்து இளமையின் ஒளிகொண்ட இளைஞராக ஆனபோது வான்கீழ் கைவிரித்து நின்று இறைஞ்சினார் “எந்தையே, நான் கொள்ளவேண்டிய துணைவி யார்? எங்குள்ளாள்?” விண்ணில் தோன்றிய பிரம்மன் சொன்னார் “மைந்தா, ஆண் பிறக்கும்போதே பெண் அவனுள் பிறந்துவிட்டிருக்கிறாள். அவன் கொள்ளும் விழைவும் கனவும்தான் திரண்டு பின்னர் ஊனுருக்கொண்டு கருவறையில் திகழ்கின்றன. விழையாத பெண்ணை எவரும் அடைவதில்லை. உள்விழைந்த பெண்ணை எவரும் அடையாதுபோனதுமில்லை. நீ விழையும் பெண் எவள்? அவளை முகமெனத் திரட்டு. அம்முகத்தை கண்டடை.”

கசியபர் தன்னுள் தேடி தவமிருந்தார். தன் சிற்றிளமையிலேயே காமம் ஊசிமுனையால் தொட்டு உட்செலுத்திய நஞ்சென

குருதியில் நுழைந்து நுரைத்து ஓடிக்கொண்டிருப்பதை உணர்ந்தார். அந்நுரையில் ஒளிக்குமிழியென எழுந்த முகமொன்றைக் கண்டார். கண்விழித்து "தந்தையே, ஒளிதவழ் முகம் கொண்டவள். இனியவள். அவளை இன்று கண்டேன்" என்றார். பிரம்மன் புன்னகைத்து "தட்சப்பிரஜாபதியின் மகளாகிய அவள் பெயர் அதிதி. அவளை கொள்க!" என்றார்.

அதிதியை மணந்து பன்னிரு ஆதித்யர்களுக்கு தந்தையானார் கசியபர். விஷ்ணு, சுக்ரன், ஆரியமா, தாதா, த்வஷ்டா, பூஷா, விவஸ்வான், சவிதா, மித்ரன், வருணன், அம்சன், பகன் என்னும் பன்னிரு ஆதித்யர்களும் விண்ணில் ஒளியுடன் திகழலாயினர். ஒளிகொண்ட மைந்தரை எண்ணி மகிழ்ந்து வாழ்ந்த கசியபர் அம்மகிழ்ச்சியில் பளிங்கில் மயிரிழைவிரிசல்போல மெல்லிய குறையொன்று ஓடுவதைக் கண்டு முதலில் வியந்தார். பின்னர் அதையே எண்ணிக்கொண்டிருந்தார். பின் அது என்னவென எண்ணப்புகுந்தார். பின்னர் அதை கண்டுகொண்டார்.

துயருடன் தனித்து நின்றிருந்த கசியபர் மேல் முகிலென எழுந்த பிரம்மன் கேட்டார் "சொல்க, உன் துயர் என்ன?" கசியபர் சொன்னார் "எந்தையே, என்னை எண்ணி நாணுகிறேன். ஒளியையும் இன்சுவையையும் நறுமணத்தையும் நுகர்ந்து என் உள்ளம் சலித்துவிட்டது. இருளையும் எரிசுவையையும் கெடுமணத்தையும் நாடுகிறது. அவையே சுவையென்று எண்ணுகிறது." பிரம்மன் புன்னகைத்து "நீ நாணவேண்டியதில்லை. உன்னுள் குருதியில் வாழும் மைந்தரின் விழைவு அது. அவர்கள் உன் உடல்திறந்து வெளிவரட்டும். உன் விழைவைத் தொடர்ந்து செல்க!"

தன் உள்ளோடிய இருள்குமிழிகளைத் தேடி காசியபர் கண்டடைந்த முகம் தட்சப்பிரஜாபதியின் இரண்டாவது மகள்

திதி என்றார் பிரம்மன். அவளை மணந்த கசியபர் தைத்யர்களை பெற்றெடுத்தார். இருளின் பேராற்றலை திதியில் அறிந்த கசியபர் அவள் கைகளால் முற்றிலும் வளைக்கப்பட்டு பிறிதொன்றுமறியாது நெடுங்காலம் வாழ்ந்தார். கரிய பேருருவும் கட்டற்ற சினமும் சினமளிக்கும் பேராற்றலும் கொண்டிருந்தனர் அவரது மைந்தர். ஹிரண்யகசிபு, ஹிரண்யாக்ஷன், சிம்ஹிகை என்னும் மூவரிலிருந்து தைத்யர்களின் குலம் பெருகியது.

பின்னர் இருளின் தழுவலுக்குள் தன் தனிமையை உணர்ந்த கசியபர் தான் விழைவது வெல்லும் பெண்ணை அல்ல தான் வென்றாளும் பெண்ணையே என்று உணர்ந்தார். பிரம்மனிடம் அதை சொன்னார். "மைந்தா, அன்னையெனப் பெண்ணை விழைவதும் பின்னர் தோழியென பிறிதொருத்திமேல் மையல்கொள்வதும் ஆண்களின் இயல்பே. உன் உள்ளில் எழுந்த மகள் தட்சனின் மகள் தனு. அவளை கொள்க!" என்றார்.

தனுவை மணந்து மீண்டும் இளமைந்தனென்றாகி ஐவகை நிலங்களிலும் விளையாடி காதல்கொண்டாடினார் கசியபர். த்விமூர்த்தா, சம்பரன், அயோமுகன், சங்குசிரஸ், கபிலன், சங்கரன், ஏகசக்ரன், மகாபாகு, தாரகன், மகாபலன், ஸ்வர்பானு, ருஷபர்வா, புலோமன், விப்ரசித்தி போன்ற தானவர் அவர்களுக்குப் பிறந்தனர். ஆதித்யர்களின் ஒளியையும் தைத்யர்களின் இருளையும் கலந்து அமைந்த அகம் கொண்டிருந்தனர் அவர்கள்.

மீண்டும் மீண்டும் தன்னுள்ளிருந்து பெண்களை கண்டெடுத்தார் கசியபர். அரிஷ்டை, சுரசை, கஸை, சுரஃபி, வினதை, தாம்ரை, குரோதவஸை, இரா, கத்ரு என்னும் தட்சமகளிரை மணந்தார். பின்னர் முனி, புலோமை, காலகை, நதை, தனாயுஸ், சிம்ஹிகை,

பிராதை, விஸ்வை, கபிலை என்னும் மகளிரையும் மணந்து பெருங்குலங்களைப் படைத்து முதற்றாதையாக அமர்ந்திருந்தார். அக்குலங்கள் வாழ்ந்த ஊர்மன்றுகளில் கல்லில் எழுந்து மலரும் நீரும் படையலும் கொண்டார். அவர்களின் பிறப்புக்கும் இறப்புக்கும் விழியானார். அவர்களின் வேண்டுதல்களுக்கு செவியானார்.

தைத்யர்களான ஹிரண்யகசிபுவையும் ஹிரண்யாக்ஷனையும் விண்ணளந்தோன் வென்று அழித்த கதையை கசியபர் கேட்டார். தைத்யர் குலத்தை இந்திரன் அழித்துக்கொண்டிருக்கும் செய்திகள் நாளும் வந்தவண்ணமிருந்தன. வஞ்சம் எரிய அவர் சுக்ரமுனிவரை வரவழைத்து அவரிடம் கோரினார் “என் மைந்தர் தோற்பது எங்கே? அவர்களின் வஞ்சம் நிறைவேறும் வழி என்ன?” சுக்ரர் சொன்னார் “முனிவரே, தைத்யர்கள் ஆற்றல் மட்டுமே கொண்டவர்கள். அவர்களை தேவர்கள் வெல்வது எளிது.”

“ஆதித்யர்களை நான் ஏவுகிறேன். அவர்கள் வென்றுவரட்டும் தேவர்களை” என்றார் கசியபர். “அவர்கள் நெறிகளுக்கு கட்டுப்பட்டவர்கள். வேதச்சொல் அவர்களை வடமெனப் பிணைக்கும்” என்றார் சுக்ரர். “என்ன செய்வது?” என்றார் கசியபர். “ஒன்றே வழி. ஆதித்யர்களின் ஒளியும் தைத்யர்களின் இருளும் கொண்ட தானவர்களில் தெய்வங்களையும் தேவர்களையும் வெல்லும் மைந்தர்கள் எழுவதாக!” மகிழ்ந்து “ஆம், அவ்வாறே” என்றார் கசியபர்.

கசியபர் பெருவஞ்சம் எரியும் உள்ளத்துடன் தன் துணைவியாகிய தனுவைப் புணர்ந்து பெற்ற மைந்தன் பலன் என்றழைக்கப்பட்டான். மைந்தன் பிறந்ததும் அவன் நெற்றியில் கைவைத்து “உன் மூத்தவர்களின் குருதிக்கு நிகர் கேள்,

மைந்தா!” என்று வாழ்த்தளித்து மீண்டார் கசியபர். அவனுக்கு படைத்துணையாக விக்ஷரன், வீரன் என்னும் இரு மைந்தரையும் தனு பெற்றாள். தம்பியருடன் பலன் இளைஞனாக வளர்ந்தபோது அவன் பிறப்புநோக்கத்தை தனு சொன்னாள். வஞ்சினம் உரைத்து பலன் கிளம்பிச்சென்றான்.

விண்ணை வெல்லும்பொருட்டு தம்பியரை உடனழைத்துக்கொண்டு சென்ற பலன் வழியில் கடல்விளிம்பில் நின்று அந்திவணக்கம் செய்துகொண்டிருந்தான். அருகே அவன் தம்பியரும் அந்திவணக்கம் புரிந்தனர். பிறபொழுதுகளில் விக்ஷரன் நான்கு திசைகளையும் வீரன் விண்ணையும் நோக்கி மூத்தவனை காவல்புரிவது வழக்கம். அந்திவணக்கமென்பதனால் மூவரும் விழிமூடியிருந்தனர்.

விண்ணில் வெள்ளையானைமேல் எழுந்தருளிச் சென்றுகொண்டிருந்த இந்திரன் அவர்களைப் பார்த்தான். புலித்தோலாடை அணிந்து ஒளிவிடும் தண்டுப்படைக்கலத்துடன் நின்றிருந்த அந்தத் தானவர்கள் விண்புகும் ஆற்றல்கொண்டவர்கள் என அக்கணமே உணர்ந்தான். மறு எண்ணம் நிகழ வாய்ப்பளிக்காமல் தன் மின்கதிர் வாளெடுத்து பலனை இரு துண்டுகளாக வெட்டினான். திகைத்து விழிதிறந்த இளையோரின் தலைவெட்டி இட்டான். அவர்களின் குருதிகலந்து கடல் சிவந்தது.

மைந்தர் கொல்லப்பட்ட செய்தி கேட்டார் கசியபர். சினம்கொண்டு கொந்தளித்தபடி சுக்ரரை நாடிச்சென்றார். “என்ன நிகழ்ந்தது? குறி நோக்கிச் சொல்க! என் மைந்தர் எப்படி அழிந்தனர்?” என்றார். சுக்ரர் ஏழுவகை குறிநோக்கியபின் சொன்னார் “அவர்கள் அன்னையின் முலைப்பால்

உண்டவர்கள். முலைப்பாலே குருதியென்றாகிறது. தேவர்கள் குருதியற்றவர்கள். ஏனென்றால் அவர்கள் பிறப்பதில்லை, ஒளிபோல எண்ணம்போல வெளியில் தோன்றி நிற்பவர்கள். அவ்வாறு தோன்றும் ஒருவனே இந்திரனுடன் எதிர்நிற்க முடியும்.” “அவ்வண்ண்ணம் ஒருவன் தோன்றுக! அவன் என்னிலிருந்தே தோன்றுக!” என்று கசியபர் கூவினார். “அது நிகழும். அதற்குரிய தருணம் வரும்” என்றார் சுக்ரர்.

“அரசே, கேள்! உன் வஞ்சம் பருவுடல்கொண்ட ஒருவனில் படர்ந்தெழவேண்டும். நீ கசியபரின் மைந்தனாகப் பிறக்கவேண்டும்” என்றான் சுசரிதன். “எவ்வண்ணம்?” என்று பூனை கேட்டது. “உன் எலும்புகளில் ஒன்றை நான் எடுத்துக்கொள்கிறேன். அதைத் தொடர்ந்து என்னுடன் வருக! நான் கசியபரின் குருநிலைக்குச் சென்று அவரை வணங்கி அவருடைய வேள்விநெருப்பில் அதை இடுவேன். அங்கு நீ எழுக!” என்றான் சுசரிதன். “நன்று அந்தணனே, நான் உனக்கு பொருளேதும் அளிக்கமுடியாதவன். உடல்கொண்டெழுந்ததும் உன் குடித்தோன்றல்கள் எவரேனும் என்னைத் தேடி வரட்டும். உரிய பொருளை அவர்களுக்கு அளிப்பேன்” என்றார் சித்ரகேது.

அந்தணன் வணங்கி “அவ்வாறே ஆகுக, அரசே!” என்றான். “ஆனால் அன்று நான் உயிருடனிருக்கமாட்டேன். என் வாழ்நாள் இன்னமும் ஏழு மாதங்கள் மட்டுமே. இப்போது இச்சொல்லை உரைத்தமையால் இந்திரன் என்னிடம் முனிந்திருக்கிறான். அவன் மின்னிடி விழுந்து நான் கருகி இறப்பேன். அதை அறிந்தபின்னரே உங்களுக்கு செல்வழி சொன்னேன்” என்றான். “நம் இருவருக்கும் வேறு வழியில்லை. அந்தணனே, உங்கள் கொடிவழியினர் மார்ஜார ரகசியம்

என்னும் குறிச்சொல்லைச் சொன்னால் அவர்களை நான் அடையாளம் கண்டுகொள்வேன்” என்றார் சித்ரகேது.

சித்ரகேதுவின் எலும்புத்துண்டு ஒன்றுடன் சுசரிதன் அங்கிருந்து கிளம்பி கசியபரின் வேள்விச்சாலைக்கு சென்றான். உடன் கரிய பூனையும் சென்றது. கசியபரின் மாணவர்கள் அவனை முகமனும் பூசனையும் செய்து அழைத்துச்சென்றனர். நீராடச் செய்து உணவளித்தனர். அவன் சென்று கசியபர் செய்துகொண்டிருந்த மகாஉத்தீபன வேள்வியில் ஹோதாவாக அமர்ந்தான். தன் விரல்களுக்கு நடுவே எலும்புத்துண்டை வைத்திருந்தான். கரிய பூனை வேள்விக்குடில்மேல் ஏறி கூரையில் அமர்ந்து நோக்கிக்கொண்டிருந்தது.

கசியபர் சுபவேள்வியைத்தான் இயற்றிக்கொண்டிருந்தார். தன் உள்ளம் கொண்டிருந்த வஞ்சத்தை இனிய வேதச்சொற்களால் மூடிமறைத்திருந்தார். வேள்வி நிகழ்ந்து கொண்டிருந்தபோது அவியிடுவதாக கைநீட்டிய சுசரிதன் அந்த எலும்புத்துண்டை எரியிலிட்டான். எலும்பு எரியும் கெடுமணம் எழுந்ததும் ஹோதாக்கள் அஞ்சிக்கூவியபடி எழுந்தனர். அக்கணமொரு பூனையின் குரலையும் அவர்கள் கேட்டனர்.

கெடுமணம் முகர்ந்ததும் கசியபருக்குள் இருந்து அவ்வஞ்சம் உளம்மீறி எழுந்தது. வேள்வியில் அவர் உரைத்துவந்த வேதச்சொல் மாறுபட்டது. இருண்ட தொல்வேதச் சொல்லை ஓதியபடி தன் இடப்பக்கச் சடைத்திரி ஒன்றைப் பற்றி அறுத்தெடுத்து எரியிலிட்டார். “எழுக, என் வஞ்சமே! எழுக இருளே! எழுக என் நஞ்சே!” என்று கூவினார். அவிகொண்டு எழுந்த அனலில் இருந்து கரிய உடல் ஒளிர அசுரப்பேருரு ஒன்று எழுந்து வந்தது.

இடத்தோளில் வைத்த தண்டமும் வலக்கையில் ஒளிரும் வாளுமாகத் தோன்றிய காருருவன் இடியோசை எழுப்பி கேட்டான் “தந்தையே, என்னிடம் எதை விழைகிறீர்கள்? எதன்பொருட்டு நான் இப்புவியிலெழுந்தேன்?” கசியபர் அவன் கொடுந்தோற்றம் கண்டு அஞ்சி பின்னடைந்தார். அவன் கூர்வாட்கள் போன்ற வளையெயிறுகளும் ஈட்டிமுனைபோன்ற உகிர்களும் கொண்டிருந்தான். “எந்தையே, ஆணையிடுங்கள். நான் உங்கள் மைந்தன்” என்றான் அவன்.

“நீ என்னுள் இருந்தாயா? இல்லை. இது என் விழிமாயை. இவ்விருளை நான் இத்தனைநாள் சூடியிருக்க இயலாது” என்றார் கசியபர். “மைந்தரைக் கண்டு இவ்வண்ணம் சொல்லாத தந்தை உண்டா?” என்றான் விருத்திரன். “நீ என் மைந்தன் என்பதற்கு சான்று ஒன்று சொல்க” என்றார் கசியபர். “உங்கள் துணைவியரில் ஒருத்தியை அழைத்து வினவுக! என்னை அவள் அறிவாளா என்று” என்றான் விருத்திரன்.

தன் ஒளிமிக்க தேவியாகிய அதிதியை அழைத்துவரும்படி ஆணையிட்டார் கசியபர். வேதநிலைக்குள் நுழைந்த அதிதி விருத்திரனின் இருளுருவைத்தான் முதலில் கண்டாள். “ஏன் இவ்வுருக் கொண்டீர்கள்? எங்கே செல்லவிருக்கிறீர்கள்?” என்று கேட்டபடி வந்து அவன் கைகளை பற்றிக்கொண்டாள். விருத்திரன் உரக்க நகைத்து “அன்னையே, நான் உங்கள் கொழுநனல்ல, அவர் உருக்கொண்ட மைந்தன்” என்றான்.

கசியபர் “எப்படி நீ இவனை நான் என எண்ணினாய்?” என்று கேட்டார். அவர் உடல் நடுங்கிக்கொண்டிருந்தது. “பெருஞ்சினம்கொள்கையில் உங்களை இத்தோற்றத்தில் பலமுறை கண்டிருக்கிறேன்” என்று அவள் சொன்னாள். உடல்தளர்ந்த கசியபர் “ஆம், நீ நானேதான்” என விருத்திரனிடம்

சொன்னார். “என் பணியென்ன, தந்தையே?” என்றான் விருத்திரன்.

“மைந்தா, என் மைந்தர்களை வஞ்சத்தால் கொன்ற இந்திரனை நீ பழிதீர்க்கவேண்டும். அவனை வென்று இழுத்துவந்து இந்த வேள்விச்சாலை கம்பத்தில் கட்டவேண்டும். அவன் உளம் வருந்தி என் மைந்தருக்கு அன்னம் அளிக்கவேண்டும்” என்றார் கசியபர். “ஆணை!” என்று சொல்லி விருத்திரன் தலைவணங்கினான்.

பிரம்மகபாலம் என்னும் ஊரின் குகைக்குள் அனல்வெம்மைக்கு உடல்கூட்டி அமர்ந்திருந்த பிரசாந்தர் என்னும் அந்தணர் தன் முன் அமர்ந்திருந்த பிரசண்டன் என்னும் சூதனிடம் சொன்னார் “விருத்திராசுரன் உருக்கொண்ட கதை இது என்கின்றது விக்ரமேந்திரம் என்னும் தொல்காவியம். அந்தணர் ஏற்கும் நூல் இதுவேயாகும்.”

வெளியே மழை நிலைத்துப் பெய்துகொண்டிருந்தது. நீர்த்திரைக்குள் மின்னல்கள் அடங்கி ஒளிதுடித்து அணைந்தன. இடி போர்த்தப்பட்டதென ஒலித்தது. கபாலர் இன்னொரு சிவமூலிச்சுருளை பற்றவைத்துக்கொண்டு உடலை ஒருக்களித்துக்கொண்டார். பிரசண்டன் “கதைகள் வாள்களையும் கதைகளையும் போல. மின்னும் இடியும் எழ அவை மோதிக்கொண்டே இருக்கின்றன இப்பாரதவர்ஷத்தில்” என்றான். “சொல்க, உமது கதையை!” என்றார் பிரசாந்தர்.

“அந்தணரே, ஏழாண்டுகளுக்கு முன்பு நான் கராளம் என்னும் மலைச்சிற்றூருக்குச் சென்றிருந்தேன். இரு பெருமலையடுக்குகளுக்கு நடுவே ஒளிந்திருக்கும் அவ்வூர் சுழன்று ஏறி மீண்டும் அதேயளவு இறங்கும்

ஒற்றையடிப்பாதை ஒன்றில் பன்னிருநாட்கள் நடந்தாலன்றி அணுகமுடியாதது. அவ்வூரிலிருந்து ஆண்டுக்கொருமுறை ஒரு வணிகர்குழு கிளம்பி காட்டுக்கு வெளியே இருக்கும் சதவிருட்சம் என்னும் ஊரின் சந்தைக்கு வந்து உப்பும் பிறபொருளும் வாங்கிக்கொண்டு மீளும். பிறர் வேற்றுநிலத்தை அறிவதே இல்லை."

"அவ்வண்ணம் சென்ற வணிகர்குழு ஒன்றுடன் நானும் சென்றேன்" என்று பிரசண்டன் சொன்னான். "அவர்களுக்கு நான் பாடிய பாடல் பிடித்திருந்தது. ஏழு நாட்களில் அவர்களின் மொழியைக்கற்று அம்மொழியிலேயே பாடத்தொடங்கினேன். அவர்கள் என்னை தங்களுடன் வந்துவிடும்படி கோரினர். அவ்வூர் முற்றிலும் குகைகளால் ஆனது. நூற்றெட்டு பெருங்குகைகள். அவற்றின் முன் பட்டைக்கற்களை அடுக்கி உருவாக்கிய சிறுகுகைகளும் இருந்தன."

"அங்கிருந்த மக்களுடன் நானும் உடன்கலந்தேன். இனிய இரு மாதரை மணந்தேன். ஊனும் தேனும் கிழங்கும் கனியும் உண்டேன். மலைச்சுனை பெருகி விழுந்த அருவியில் நீராடினேன். கனவென அவ்வாழ்க்கையில் மகிழ்ந்திருந்தேன்" என்று பிரசண்டன் சொன்னான். "மூன்றாண்டுகள் அங்கு வாழ்ந்தேன். ஓராண்டு முடிந்தபின்னரே அவர்கள் வழிபடும் தெய்வத்தை மலையேறிச்சென்று கண்டேன். யானைவிலாவென எழுந்த கற்பாறையில் ஒட்டிக் கீழிறங்கிய கொடிகளைப் பற்றிக்கொண்டு விரிசல்களில் கால்வைத்து மேலேறிச் செல்லவேண்டும். திறன்மிக்க இளையோர் மட்டுமே அங்கு சென்றடையமுடியும்."

"ஆண்டுக்கொருமுறை அவ்வாண்டு பிறந்த இளமைந்தரை தங்கள் தோள்களில் கட்டிக்கொண்டு மலையேறுவர்.

முதுபூசகரான கபாலர் இளையோரை மிஞ்சும் விரைவுடன் எழுந்து மேலே செல்வதைக் கண்டேன். விட்டில்களென ஏறிச்செல்லும் அவர்களை உயிரச்சத்துடன் நான் தொடர்ந்துசென்றேன். மேலே பாறைகள் மேலும் மேலுமென ஏறி வான் நோக்கி சென்றன. கரிய உடலில் திறந்த வாய் என அங்கு ஒரு குகை திறந்திருக்கக் கண்டேன்.”

“இதைப்போன்ற குகைவாயில் அது. உள்ளே ஏழு கிளைகளாக பிலவழி விரிந்து செல்கிறது. கைகூப்பியபடி இருளுக்குள் துயிலும் மூதாதையரை விழித்தெழக் கோரியபடி பூசகர் குகைக்குள் நுழைந்தார். பூசனைப்பொருட்களுடன் பிறர் தொடர்ந்துசென்றனர். பந்தங்களுடன் சென்றவர்களுக்குப் பின்னால் நானும் இருந்தேன். ஈரம் வழியும் தொல்குகைச்சுவர். அதில் கல்லோவியம் என அவர்களின் தொல்தெய்வம் நின்றிருக்கக் கண்டேன்.”

“ஒரு கையில் ஓங்கிய தண்டு. மறுகையில் வாள். வளைதேற்றை, கூருகிர், கொடுங்கண். சடைசரிந்த பெரும்பிடரி. அவர்கள் விருத்திரன் என்னும் மூதாதை என அத்தெய்வத்தை சொன்னார்கள்” என்றான் பிரசண்டன்.

# கிராதம் - 38

**[ 4 ]**

பிரம்மகபாலத்தின் மலைக்குகைக்குள் மழைக்காற்று தழல்கெட்டு கனல்கொண்டிருந்த எரிகுளத்தில் இருந்து பொறிஎழ வீசியது. செவ்வொளியில் குகைச்சுவர்கள் தசைப்படலமென சுருங்கி விரிந்து அதிர்ந்தன. செங்கனல்துளியை கைபொத்திப் பற்றி விரல் இடுக்குகளில்

குருதியென அனல்வழிய வாயில் சேர்த்து முகம் குனித்து ஆழ இழுத்தார் பிச்சாண்டவர். நெஞ்சு நிறைத்த புகையை உடலெங்கும் பரவவிட்டு மேலும் மேலுமென உடல் குறுக்கி ஒடுங்கினார். சடைப்புரிகள் சரிந்துவிழுந்து நிழலுடன் ஆடி முகம் மறைக்க அமர்ந்த பிச்சாடனரின் இருபக்கமும் அமர்ந்து அந்தணரும் சூதனும் கதையாடினர்.

பிரசாந்தர் "சொல்க சூதரே, நீங்கள் அந்த மலைச்சிற்றூருக்குள் கண்ட விருத்திரன் யார்? எவ்வண்ணம் அவர்களின் குலத்தலைவன் ஆனான்? அவனை ஈன்றவர் யார்? இந்திரன் அவனை வென்ற கதை எது?" என்றார். பிரசண்டன் "அவர்கள் சொன்ன கதையை நான் இன்று சொல்லமுடியாது. அக்கதையை அன்று என்னுள் இருந்த ஒரு கதைசொல்லி உள்வாங்கினான். அந்தணரே, சூதனுள் கதைகள் விதைகளெனச் சென்று விழுகின்றன. அக்கதையை நான் நூறு சந்தைகளில் பாடியிருப்பேன். அது ஒரு கவிஞர் நாவில் விழுந்து என்னிடமே மீண்டு வந்தது. விருத்திரப்பிரபாவம் என்னும் அந்நூலை நான் சந்தை ஒன்றில் சூக்தன் என்னும் சூதன் பாடக்கேட்டேன்" என்றான்.

"கதை நின்றுகொண்டிருப்பதில்லை. அது நீரோடை, பேராறு, அலைகடல். கதைக்குள் கதைமாந்தர் ஒவ்வொருவரும் தங்களுக்குள் போராடிக்கொண்டிருக்கிறார்கள். சொற்கள் ஒவ்வொன்றும் உரசிக்கொண்டிருக்கின்றன" என்றான் பிரசண்டன். பிரசாந்தர் "கதையில் எது வளர்கிறதோ அதுவே உண்மை என்று எனது ஆசிரியர் சொன்னதுண்டு. சூதர் சொல்லில் மெய்யே வளரும் என்று எண்ணுகின்றேன்" என்றார். "வளர்வதேதும் மெய்யே என்று கொள்வதன்றி மானுடருக்கு வேறுவழியில்லை" என்றான் பிரசண்டன்.

அந்தணரே, நான் கண்ட அந்த மலைக்குகைக்குள் வளைந்து எழுந்த மென்பாறைச் சுவர்ப்பரப்பில் கூரிய கற்களால் அடித்து கீறி வடுவாக்கி வரையப்பட்ட ஈராளுயர ஓவியமாக நின்றிருந்தான் விருத்திரன். நீர்ப்பாசி படிந்த அச்சுவரில் அவ்வோவியத்தை காண்பதற்கு விழி பழகவேண்டும். பள்ளக்கோடுகளென செல்லும் அவ்வோவியத்தின் மீது விழிகள் பரவி துழாவி வடிவொன்றை அள்ள முயல்கின்றன. நழுவி மேலும் விழைவு கொண்டு தவிக்கும் ஒரு கணத்தில் மின்னென அம்முகம் தெரிகிறது. அதன்பின் அம்முகமன்றி பிறிதொன்று தெரிவதில்லை.

தொல்முகம் அது. நாமறிந்த மரங்கள் முளைத்திருக்கவில்லை. நாம் காணும் நகரங்களும் விதைகளுக்குள் இருந்தன. யாரறிவார்? அன்று மலைகள்கூட சிறியவையாக இருந்திருக்கும். நதிகள் இவ்வண்ணம் திரண்டிருக்காது. யார் முகம் அது? இங்கு எழுந்த அனைத்தையும் கண்டு திகைத்து நின்றிருக்கும் மூதாதை முகம். இல்லை, இங்கெல்லாம் நிறைந்துபெருகியிருக்கும் தன் முகம் கண்டு புன்னகைத்து நிற்கும் தந்தைமுகம். விரிந்த தோள்களில் மலர்கள். சடைத்திரிகள் தொங்கிய பிடரி. ஒரு கையில் வாள். பிறிதொன்றில் அமுதகலம். விரிந்த அருள்விழிகள். இதழ்களின் இருபுறமும் எழுந்த வளைதேற்றைகள்.

இந்நாள்வரை இங்கு நிறுவப்பட்ட எந்தப் பேராலயத்திலும் நாம் அம்முகத்தை கண்டதில்லை. என் மைந்தரென சுற்றும் பெருகியிருக்கும் இன்முகம். என் மூதாதையர் என தெற்கில் பெருகியிருக்கும் கிராத முகம். நான் என் கனவால் அதை கண்டுகொண்டேன். அதிலிருந்தேன். விருத்திரன் என்ற சொல்லை என் சித்தம் தொட்டெடுத்ததே பின்னர்தான். பந்தம்

கொளுத்திவைத்து பச்சையூன் படைத்து மூதாதையை வழிபட்டனர் அவர்கள். மைந்தர்களை அவர் காலடியில் கிடத்தி வணங்கி எடுத்துக்கொண்டனர்.

பின்னர் ஒவ்வொரு பந்தத்தையாக அணைத்து இருளுக்குள் அவரை அமைத்துவிட்டு வணங்கி புறம்காட்டாமல் வெளியேறினர். "தந்தையே, மூத்தவரே, விருத்திரனே, மீண்டும் எங்கள் இளமைந்தருடன் வருகிறோம். எங்கள் குலம் பெருகட்டும். எங்கள் உணவு செழிக்கட்டும். எங்கள் சொற்களில் கனிவு நிறைந்திருக்கட்டும். எங்கள் அம்புகளில் கூர் திகழட்டும். அருள்க!" என்றார் முதுபூசகர் கபாலர். அப்போதுதான் அச்சொல் என்னுள் உறைத்தது. விருத்திரனா? தொல்கதைகள் சொல்லும் அசுரர்தலைவனா?

திரும்பும்போது கேட்டேன் "என்ன சொன்னீர், விருத்திரனா?" கபாலர் "ஆம், எங்கள் குலம் அவரால்தான் விருத்திர குலம் என்று அழைக்கப்படுகிறது" என்றார். என்னுள் அலையென வந்தடித்த பலநூறு கதைகளிலிருந்து நான் விடுபட நெடுநேரமாகியது. வழுக்கும் பாறைகளினூடாக கொடிபற்றி இறங்கி மீண்டும் குகை இல்லங்களுக்கு வந்து குளிர்ந்த பாறையொன்றில் அமர்ந்து நீரருந்தினோம். என்னருகே கபாலர் படுத்துக்கொண்டார்.

விருத்திரன் வாழ்ந்த கதையை அப்பூசகரிடம் நான் கேட்டேன். அவர்களின் தொல்கதையை அவர் சொன்னார். "இப்புவி உளிஓயா பெருந்தச்சன் ஒருவனால் கற்பாறையில் செதுக்கப்பட்டது, பாடகரே. அவனே மலைகளையும் தாழ்வரைகளையும் ஆறுகளையும் நிலவிரிவுகளையும் உருவாக்கியவன். அலைக்கும் கடல்களை அமைத்தவன். அவனை தச்சன் என்று வழிபட்டனர் என் முன்னோர். அந்த

முதற்சிற்பி தன் வடிவில் படைத்தவனே பெருந்தச்சனாகிய விஸ்வகன். அவனே இங்கு எழுந்துவரும் ஒவ்வொன்றையும் படைப்பவன். தன்கூட்டை தன்னைச்சுற்றி கட்டிக்கொள்ளும் புழுவென இவையனைத்துக்கும் அடியில் அவன் குடியிருக்கிறான். அவன் மைந்தன் கர்மகன். அவனிடமிருந்தே எங்கள் குடி எழுந்தது."

பிரசாந்தர் சற்று உளஎழுச்சி கொண்டு கையூன்றி "விஸ்வகர்மன்! அவர்கள் வழிபடுவது விஸ்வகர்மனை" என்றார். "விஸ்வகர்மனை அசுரன் என்றும் அவர் பெற்ற நான்கு மைந்தர்களை மகாருத்ரர்கள் என்றும் பராசரரின் புராணமாலிகை சொல்கிறது." பிரசண்டன் "கதைகளை கதைகளைக்கொண்டே அறியமுடியும், அந்தணரே. கதைகள் கதைகளுக்கு மட்டுமே பொருள்சேர்க்கின்றன" என்று புன்னகையுடன் சொன்னான்.

கற்பாறையின் தண்மைமேல் முதுகமைத்து மல்லாந்து படுத்து வானை நோக்கியபடி கபாலர் சொன்னா "மண்ணுக்குள் புதைந்த சிறுவிதைகளிலிருந்து எழுந்தவை, ஒவ்வொரு கணமும் மண்பிளந்து எழுந்துகொண்டே இருக்கின்ற கோடானுகோடி மரங்களும் செடிகளும். பல்லாயிரம் கோடி துளைகளிலிருந்து விதை கொண்டு வெளிவருகின்றன சிற்றுயிர்கள். இருண்ட வளைகளிலிருந்து மின்னும் கண்களுடன் சுருண்டெழுந்து வருகின்றன நாகங்கள். நாம் நின்றிருக்கும் இம்மண்ணுக்கு அடியில் அனைத்தையும் முளைத்தெழச்செய்யும் பெரும்பரப்பு ஒன்றுள்ளது."

முதலில் உள்ளது சமூலம். அதை விதைகளினாலான உலகம் என்றனர் என் முன்னோர். அவ்வுலகுக்கு அடியில் சிற்றுயிர் முட்டைகள் செழித்த ஆழுலகொன்று உள்ளது. அதை தாதம்

என்றனர். அதற்கும் அடியில் உள்ளது பெருநாகங்கள் பின்னிய பிறிதொரு உலகு. அதை ஜாதம் என்றனர். பாடகரே, அதற்கும் அடியில் உள்ளது இப்பெரும்பாறைகளுக்கும் மலைகளுக்கும் ஆணிவேரென்றான ஓர் உலகம். அதன் பெயர் பீஜம். அவ்வுலகுக்கும் அடியில் உள்ள ரேதம் என்னும் உலகில் வாழ்கிறார்கள் மண்மறைந்த நம் மூதாதையர்.

அவர்கள் சென்றடைவது முதுதாதை ஒருவனின் மடியை. அனலுருவ உடல்கொண்ட அவனை விஸ்வகன் என்கின்றனர். அவ்வுலகு ரேதம். அவன் மண்விரிவின் ஆழத்தை முழுக்க நிரப்பும் பேருடலன். அவன் அருகே அவனுடன் நிகரென உடல் பின்னிப் படுத்திருக்கிறாள் மூதன்னையாகிய ஜலை. நீரே உடலென்றானவள். அவர்களுக்கு அடியிலிருப்பது அனலம். தீயும் நீரும் ஒன்றென அலையடிக்கும் முடிவிலி அது. அதன் மேற்பரப்பே அன்னையும் தாதையும் கொண்ட மஞ்சம்.

முதலன்னையும் முதுதந்தையும் பிரிக்கமுடியாத உடலிணைவில் என்றுமுள்ளனர். அவர்கள் பிரியாமலிருப்பதனால் அடியிலுள்ள அனல் வேலியிடப்பட்டிருக்கிறது. அவர்களின் தழுவலில் ஒருகணம் நெகிழ்வு விழுந்தால் அனல் பொங்கி எழுந்து உலகை மூடும். அன்னை தன் விரிந்த அல்குலால் தந்தையின் எழுந்த குறியை தழுவி இணைந்திருக்கிறாள். அவன் உடலில் இருந்து விதைப்பெருக்கு நீள்கொடியினூடாக சாறு என அவள் வயிற்றுக்குள் சென்று குருதியில் கலந்துகொண்டே இருக்கிறது. அவள் உடலின் வியர்வைத்துளைகள் அனைத்தும் கருவாய்களௌன திறக்க அவற்றிலிருந்து தெய்வங்களும் தந்தையரும் அன்னையரும் எழுந்துகொண்டே இருக்கிறார்கள்.

பாடகரே, அறிக! ஒவ்வொரு கணமும் ஓராயிரம் கோடி தெய்வங்கள் அவளிடமிருந்து மண்ணுக்கு எழுந்து வருகின்றன. அவற்றின் வடிவங்களும் முடிவற்றவை. ஈயென எறும்பென கொசுவென குளவியென பாம்பென பல்லியென மானென குரங்கென களிறென சிம்மமென தெய்வங்கள் பெருகிக்கொண்டிருக்கின்றன. அன்னை வாயிலிருந்து பிறந்த பெரும் குமிழி ஒன்று மேலெழுந்து வந்தது. மண்ணில் காலூன்றி தோள்பெருத்த தந்தை என எழுந்ததும் அவன் குனிந்து ஆழத்தை நோக்கி தன் அன்னையிடம் கேட்டான் “அன்னையே, நான் செய்யவேண்டியதென்ன?”

“நீ தச்சன். உன் கைகளில் இருந்து பிறிதொரு உலகு முளைப்பதாக!” என்று அன்னை சொன்னாள். அவனுக்கு கர்மகன் என்று பெயரிட்டான் தந்தை. கர்மகன் நிலத்தை வயல்களென்றாக்கினான். ஆறுகளை ஏரிகளாக்கினான். குகைகளை இல்லங்களாக மாற்றினான். கால்தடங்களை சாலைகளாக்கினான். எரியை அடுப்பிலும் நீரை கலத்திலும் நிற்கும்படி செய்தான். கல்லை தெய்வமாக்கினான்.

அவன் கைகள் பெருகிக்கொண்டிருந்தன. துயிலிலும் அவன் கைகள் பணியாற்றிக்கொண்டிருந்தன. நான்கு பக்கமும் பதினெட்டு கைகள் எழுந்ததும் அவனால் படுத்துறங்க முடியாமலாகியது. தன் கைகளை பகிர்ந்தளிக்கும்பொருட்டு அவன் மைந்தர்களைப் பெற எண்ணினான். தனக்குரிய துணைவியைத் தேடி அவன் காட்டுக்குள் சென்றுகொண்டிருக்கையில் யா என்னும் காட்டுமகளைக் கண்டான். அவள் உடலில் நூறு பேற்றுவாய்கள் விரிந்திருந்தன. இவளே என்று முடிவுசெய்து அவளை அணுகி “நீ மைந்தரால் நிறைவாய்” என்றான்.

முதல் தச்சனுக்கு யா என்னும் அன்னையில் ஆயிரத்தெட்டு மைந்தர் பிறந்தனர். அவர்களில் முதல்வர் நால்வர். முதல் மைந்தன் நான்கு கைகளில் உளியும் கூடமும் முழக்கோலும் சரடும் கொண்டு பிறந்தான். "தந்தையே, நான் யார்?" என்றான். "அஜைகபாத் என்று நீ அறியப்படுவாய். நீ கற்சிற்பி. பாறைகள் உன் கைக்கு நெகிழும்" என்றான் தந்தை. நான்கு கைகளுடன் உளியும் கூடமும் துருத்தியும் அனலூதியும் கொண்டு எழுந்தான் இரண்டாமவன். "தந்தையே, நான் செய்யவேண்டியதென்ன?" என்றான். "நீ கொல்லன். உன்னை அஹிர்புத்ன்யன் என்பர். நீ படைக்கலங்களை இயற்றுக!" என்றான் தந்தை.

மூன்றாமவன் வணங்கி நின்றான். அவன் கைகளில் துலாவும் ஊதுகுழாயும் கிடுக்கியும் சிற்றுளியும் இருந்தன. "நீ த்வஷ்டா. உன் கனவுகளை பொன்னில் எழுப்புக!" என்றான் தந்தை. இறுதியாக நான்கு கைகளும் அனலென உருகிப்பறக்க வந்த மைந்தனிடம் "நீ ருத்ரன். அனலே உன் ஊடகம். வேள்விக்குளங்களை அமைத்து கணமொரு சிற்பமென சமைப்பாயாக!" என்றான் கர்மகன்.

பாடகரே, நான்கு தச்சர்களால் உருவானவை மண்ணில் எழுந்ததே மானுடம் கொண்ட செல்வங்கள் அனைத்தும். அவர்கள் கோட்டை சூழ் நகரங்களை செய்தார்கள். கொடியென சாலைகள் நெளிந்தன அங்கு. கூரை கவிழ்ந்த மாடங்கள் அமைந்தன. பொற்சூடிய அரண்மனைகள் எழுந்தன. முட்களும் உகிர்களும் அலகுகளும் படைக்கலங்களாக மாறின. நான்கு திசைகளையும் நால்வர் ஆண்டனர். கிழக்கே பொற்தச்சன் த்வஷ்டா நின்றான். மேற்கே இரும்புத்தச்சன் அஹிர்புத்ன்யன்

இருந்தான். வடக்கை ஆண்டவன் கல்தச்சனாகிய அஜைகபாத். மூதாதையர் எரிந்தணையும் தெற்கில் வாழ்ந்தான் ருத்ரன்.

**[ 5 ]**

“பிரதீகம் என்னும் சிற்றூரில் ஒரு சந்தையில் நான் நின்றிருக்கையில் அங்கு இளம்சூதன் ஒருவன் பாடிய பாடலைக் கேட்டு வியந்து அருகணைந்தேன்” என்றான் பிரசண்டன். “அவன் என் சொற்களை என்னிடம் சொல்லிக்கொண்டிருந்தான். சென்று நின்று செவிகொடுத்தபோது கேட்டேன், அவை என் சொற்களல்ல. என் சொற்கள் ஒன்று நூறென முளைத்து காவியமாகிவிட்டிருந்தன.”

“குப்த சந்திரசூடர் என்னும் கவிஞர் யாத்த விருத்திரப்பிரபாவம் என்னும் அந்நூலை அன்றுதான் நான் முதல்முறையாகக் கேட்டேன். பன்னிரண்டு பாதங்களிலாக நூற்றிருபது பாடல்கள் கொண்டது அது. விருத்திராசுரனின் மும்மூதாதையரின் கதையிலிருந்து தொடங்கி அவன் விண்மேவியது வரை பாடியது. அதை விழிமின்ன கேட்டுக்கொண்டிருந்தவர்கள் அனைவரும் தொல்குடி அசுரர் என்று கண்டேன். அவர்கள் அதற்கு தங்கள் மடிச்சீலையில் எஞ்சும் நாணயங்களைக்கூட கொடுப்பார்கள். எனவே அக்கதை ஒருபோதும் அழியாதென்று தெளிந்தேன்.”

“அன்று பாடிக்கொண்டிருந்தவன் பெயர் குணதன். அவனை அன்றிரவு அந்தியில் ஊருக்கு வெளியே ஆற்றங்கரையிலிருந்த விடுதியில் சந்தித்தேன். அக்காவியத்தை எனக்காக முழுமையாகப் பாடும்படி சொல்லி நினைவில் நிறுத்திக்கொண்டேன். அன்றிரவு முழுநிலவு. ஆற்றுநீர்

மின்னிக்கொண்டிருந்தது. தென்றலை ஒளியலைகளாக பார்த்துக்கொண்டிருந்தேன். முழுநிலவின் ஒளியில் தன் மைந்தரின் படைப்புலகை நோக்கி உவகைமயக்கில் இருந்த கர்மகனின் தோற்றத்தை அவன் பாடினான்” என்றான் பிரசண்டன்.

“நான் நான் என மானுடன் தருக்கி எழும் தருணங்கள் இரண்டு. தன் கலை கண்டு நெஞ்சு எழுகையில். தன் மைந்தர் செயல் கண்டு வயிறு மலர்கையில். இரண்டும் நிகழ்ந்தன கர்மகனுக்கு அப்போது. நான்கு கைகளையும் விரித்து நான்கு மைந்தரையும் நெஞ்சோடணைத்து விழிநனைந்தான். விம்மி விம்மி எழும் உள்ளத்தால் நிலைகொள்ளாது தவித்தான். உச்சகணங்களை நிற்க இடமில்லாது ஊசிக்கூர்களாகப் படைத்த தெய்வங்கள் மானுடனுடன் விளையாடுகின்றன” என்று குணதன் பாடினான்.

ஒளியலைகளாக தன்னைச் சூழ்ந்த தெய்வங்களை நோக்கி கர்மகன் கேட்டான் “தெய்வங்களே சொல்க, இப்புவியில் நிகரற்றவன் யார்?” தெய்வங்கள் அமைதிகொண்டிருந்தன. “சொல்க, யார்?” என்று அவன் கூவினான். தெய்வங்களின் ஒலியெழாதிருக்கவே “காண்பீர்கள். மாற்றுச்சொல் இல்லாது நீங்களே ஏற்பீர்கள்” என்றான்.

பெருந்தச்சனாகிய கர்மகன் தன் மைந்தரிடம் “உங்களில் முதல்வர் எவர் என்றறிய விழைகிறேன், மைந்தர்களே. உங்களால் இயன்ற உச்சங்களை சமைத்து அளியுங்கள்” என்றான். “ஆணை” என்று நான்கு மைந்தரும் அவனைப் பணிந்தனர். “அறிக, அவை தெய்வங்கள் அஞ்சும் முழுமை கொண்டிருக்கவேண்டும். அம்முழுமைக்குமேல் ஒன்று எண்ணற்கும் அரிதாக இருக்கவேண்டும்.” மைந்தர் “அவ்வாறே” என்றனர். “படிப்படியாக வெல்வது மானுடர் வழக்கம். தன்னை

எரித்து பெருகியெழுவதே ஆசுரம். அவ்வழியே உங்களுக்கு” என்றான் கர்மகன்.

மைந்தர் ஆணைபெற்றுக் கிளம்பினர். கற்தச்சனாகிய அஜைகபாத் ஒரு யானை வடிவம் கொண்டு துதிக்கைதூக்கிப் பிளிறியபடி காட்டுக்குள் புகுந்தான். அவனுடைய பிளிறல் கேட்டு பதினெட்டாயிரம் காட்டுயானைகள் துதிசுழற்றி சின்னம் விளித்து அவனைப் பணிந்தன. அந்த யானைகளை அழைத்துவந்து மலைப்பாறைகளை உருட்டி அவன் ஒரு கோட்டையைக் கட்டினான். இரையைச் சுற்றி இறுக்கிய மலைப்பாம்புபோல மகாவீரியம் என்னும் மலையை ஏழுமுறை சுற்றியிருந்தது அந்தக் கோட்டை.

இரும்புக்கொல்லனாகிய அஹிர்புத்ன்யன் ஒரு செங்கழுகாக மாறி பறவைக்குலங்களை அறைகூவினான். வேழாம்பலின் அலகுகள் வாள்களாயின. பருந்துகளின் அலகுகள் வேல்களாயின. கழுகுகளின் உகிர்கள் அம்புகளாயின. அந்தப் பெருங்கோட்டை வெல்லமுடியாத படைக்கலங்களால் நிறைந்தது.

அனைத்து உலோகங்களும் முனைகொண்டமையால் அது முள்செறிந்த மலையுச்சி மரம்போலவும் சினந்த முள்ளம்பன்றிபோலவும் சீறி நின்றது. தெய்வங்களும் அதை அணுக அஞ்சி வளைந்து பறந்தன. அதற்குள் புகுந்த காற்று பல்லாயிரம் சீறல்களாக கிழிபட்டது. அங்கு நீட்டிநின்றிருந்த கூர்களில் ஒளி நீர்த்துளியெனச் சொட்டி நின்றது. அவற்றின் நிழல்களால் நிலம் நாளும் மும்முறை சீவித் தூய்மையாக்கப்பட்டது. அக்கோட்டைக்குள் பறவைகள் நுழையவில்லை. பூச்சிகளும் அங்கு செல்ல அஞ்சின.

த்வஷ்டா ஒரு மாபெரும் தவளை வடிவை எடுத்தான். கங்கை ஆறு காலையிளவெயிலில் பொன்னிறமாக ஓடும் கணத்தில் நீருக்குள் குதித்து மூழ்கி வாயைக் குவித்து ஊதி நுரையெழுப்பலானான். அந்நுரைக்குமிழிகள் ஒன்றன்மேல் ஒன்றென எழுந்து பெருமாளிகையென்றாயின. தன்னைத்தானே பெருக்கிக்கொண்டமையால் அம்மாளிகை முழுமுதல்தெய்வத்தின் உள்ளத்தில் வாழ்ந்த அந்த முதல்மாளிகையைப்போலவே தானும் அமைந்தது.

படைப்பின் குறை என்பது படைப்பாளியின் எல்லை. தன்னைத்தான் உருவாக்கும் படைப்பு படைப்பவனிடமிருந்து விடுதலைகொண்டுவிடுகிறது. சூதரே, அனைத்து வடிவங்களும் தங்கள் முழுமையை சென்றடையும் உள்விருப்பாலேயே செயலூக்கம் கொள்கின்றன. முழுமை முழுமை எனத்துடிக்கும் வடிவங்களையே நாம் கலை எனக்கொள்கிறோம்.

அணிமாளிகை விண்முட்ட குவிந்து உயர்ந்து பதினெட்டாயிரம் முகடுகளுடன் இருபத்தெட்டாயிரம் உப்பரிகைகளுடன் முப்பத்தெட்டாயிரம் பலகணிகளுடன் நின்றது. அதன் அழகைக்காண தெய்வங்கள் விண்ணிலும் மண்ணிலும் நிறைந்து நெரித்தனர். தெற்கே கடல்சூழ்ந்த நிலங்களில் இருந்தும் வடக்கே பனிசூழ்ந்த உச்சிகளில் இருந்தும் மேற்கே பெரும்பாலைகளில் இருந்தும் கிழக்கே எழுந்த பசுங்காட்டுவெளிகளில் இருந்தும் பன்னிரண்டாயிரத்துஎட்டு பழங்குலங்களைச் சேர்ந்தவர்களும் தேடி வந்தனர். அவர்களின் பாணர்கள் அதை பாடல்களாகப் பாடினர்.

பாட்டில் அந்த மாளிகை நெய்யுண்ட எரியென மேலும் வளர்ந்தது. அதைப் பாடியவர்களெல்லாம் அதில் ஒரு மாடத்தைக் கட்டினர். அதைக் கேட்டவர்களெல்லாம் ஓர்

உப்பரிகையை இணைத்தனர். நினைவுகூர்ந்தவர்களெல்லாம் ஒரு பலகணியை திறந்தனர். பெருகிப்பெருகிச் சென்ற மாளிகை விண்முகில்கள் நடுவே பொன்னிற ஒளியுடன் எழுந்து நின்றது. மழைமுகில்கள் அதில் முதுகுரசிக்கொண்டன. அவை அதன் தண்மையால் எடைபெற்று அங்கேயே நின்றமையால் தேங்கிக் குளிர்ந்து சுனையென்றாயின. சுனையின் அடிப்படலம் கிழிய மழையெனப் பொழிந்தன. அதன் பொன்மாடங்கள் மேல் எப்போதும் மழை பொழிந்துகொண்டிருந்தது. அதன் கூரைமடிப்புகளிலிருந்து அருவிகள் கொட்டிக்கொண்டிருந்தன.

சிறந்தவை தங்கள் இருப்பாலேயே அறைகூவலென்றாகின்றன. விண்ணுலாவியாகிய நாரதர் ஒருநாள் முகில்களினூடாகச் செல்லும்போது கூட்டம்கூட்டமாக அசுரதெய்வங்கள் செல்வதைக் கண்டார். “எங்கு செல்கிறீர்கள், தெய்வங்களே? உங்களை ஆளும் பெருந்தெய்வமொன்று மீண்டும் எழுந்துள்ளதா?” என்றார். “ஆம், அத்தெய்வத்தின் மாளிகை எழுந்துள்ளது அங்கே” என்றார்கள் அவர்கள்.

அவர் மேலும் செல்லும்போது கந்தர்வர்கள் ஒளிரும் மணிமுடிகளும் வெண்சிறகுகளுமாக வண்ணத்துப்பூச்சிகளின் பெருக்கென சென்றுகொண்டிருப்பதைக் கண்டார். “எங்கு செல்கிறீர்கள், கந்தர்வர்களே?” என்றார். “பேரழகு எங்களை ஈர்க்கிறது. பிறிதெங்கும் நிலைக்கமுடியவில்லை” என்றனர்.

மேலும் செல்லும்போது கின்னரர்கள் செல்வதைக் கண்டார். “அழகிய பொருட்களில் இசை நிறைந்துள்ளது, நாரதரே” என்றனர். மேலும் சென்றபோது வித்யாதரர்களைக் கண்டார்.

“மெய்மை என்பது முழுமை. முழுமையே அழகென விழிகளால் அறியப்படுகிறது” என்றனர்.

இறுதியாக அவர் தேவர்களைக் கண்டார். அவர்கள் பித்தெழுந்த விழிகளுடன் விண்ணில் ஒளிக்கீற்றுகளாக வழிந்து சென்றுகொண்டிருந்தனர். “எங்கு செல்கிறீர்கள், தேவர்களே?” என்றார். “நாங்கள் வெற்றியை நாடுபவர்கள். உடல்மேல் உள்ளம் கொண்ட வெற்றியே ஆற்றல். பொருள்மேல் ஆற்றல் கொண்ட வெற்றியே செல்வம். செல்வத்தின்மேல் கனவு கொண்ட வெற்றியே அழகு. அழகின்மேல் மானுடன் கொள்ளும் வெற்றியே கலை. முழுமைகொண்ட கலை மெய்மையின் பருவடிவு. மெய்மையே மானுடனை தெய்வமாக்குகிறது. அதை ஒருவன் அடைந்துள்ளான். அவனைக் காணச்செல்கிறோம்” என்றனர்.

நாரதர் அமராவதிக்குச் சென்று அங்கே வைஜயந்தத்தில் இந்திராணியுடன் அமர்ந்திருந்த இந்திரனைப் பார்த்தார். அவனைச் சூழ்ந்திருந்தன முழுமைகொண்டவை அனைத்தும். நீர்மலர்களில் தாமரை. கிளைமலர்களில் பாரிஜாதம். கொடிமலர்களில் முல்லை. பறப்பனவற்றில் செங்கழுகு. தவழ்வனவற்றில் அன்னம். பாடுவனவற்றில் குயில். பேசுவனவற்றில் பசுங்கிளி. ஆடுவனவற்றில் மயில். தாவுவனவற்றில் புள்ளிமான். தயங்குவனவற்றில் வரிப்புலி. முக்கனிகள் காய்த்த மரங்கள். முலைகனிந்த காமதேனு. நிழல் விரித்த கல்பமரம். துதிக்கை அசைத்தபடி ஐராவதம்.

வணங்கி அருகமர்ந்த நாரதர் “முழுமையைத் தோற்கடிப்பது தெய்வங்களின் ஆடல்போலும்” என்று பெருமூச்சுடன் சொன்னார். இந்திரன் வினாவெழுந்த புருவங்களுடன் நோக்க “தெய்வங்கள் அழகிலும் சிறப்பிலும் முழுமையை

அடைந்ததுமே நிறைவின்மைகொள்கின்றன. ஏனென்றால் முழுமைக்கு அப்பால் நின்றிருப்பவை அவை. மேலுமொரு முழுமையை அவை படைக்கின்றன. முந்தைய முழுமையை குறையென ஆக்கி விளையாடுகின்றன” என்றார்.

அவரை நன்குணர்ந்திருந்த அவன் அவர் சொல்லவருவதை உய்த்தறிந்தான். “சொல்க, இங்கு நீங்கள் கண்ட குறை என்ன?” என்றான் இந்திரன். “நான் காணவில்லை. இங்குள்ள தேவர்கள் காண்கிறார்கள்போலும். மண்ணில் அசுரசிற்பியின் மைந்தர் நால்வர் அமைத்த மகாவீர்யம் என்னும் பெருநகர் அனைத்திலும் முழுமைகொண்டிருக்கிறதென்கிறார்கள். பெருஞ்சிற்பியின் நான்கு மைந்தர்களான ருத்ரர்களில் த்வஷ்டா அமைத்த மணிமாளிகை விண்முகில்களையே ஆடையென அணிந்து நின்றிருக்கிறது.”

“அங்கு சென்று சூழ்ந்திருக்கின்றன அவர்களின் தெய்வங்கள். உடன் நம் தேவர்களும் நெருக்கியடிக்கிறார்கள். இங்கு வரும்போது பார்த்தேன், இலையுதிர்காலத்து பொன்னிறச் சருகுகள் என தேவர்கள் அமராவதியிலிருந்து உதிர்ந்து சென்றுகொண்டே இருக்கிறார்கள். இப்பெருநகரின் அனைத்து வீதிகளும் ஒழிந்துகிடக்கின்றன. அமுதமுண்ணவும் இங்கு தேவரில்லாமலாகும் நிலைவருமோ என எண்ணிக்கொண்டேன்” என்றார் இசைமுனிவர்.

வினைமுடித்து நாரதர் கிளம்பும்போது இந்திரன் முகம் சுருங்கி இதழ்கள் இறுகி கைவிரல்களால் வெளியை சுழித்துக்கொண்டிருந்தான். அவர் சென்றபின் வியோமயானம் மீதேறி விண்வழி ஊர்ந்தான். கீழே மண்மகளின் மணிமுடி என எழுந்து நின்ற மாளிகையைக் கண்டான். அவன் உடல்

பதறத்தொடங்கியது. யானை மேலிருந்து வழுக்கி விழுபவன்போல தடுமாறினான்.

உடல் எரிய திரும்பி அமராவதிக்கு வந்தான். அவனுக்கு காய்ச்சல் கண்டிருக்கிறதென எண்ணி அவன் தேவி அவனை ஆறுதல்படுத்த வந்தபோது சினந்து கையோங்கி அவளை அடிக்கப்போனான். கொந்தளிப்பு தாளமுடியாமல் சுற்றிச்சுற்றி வந்தான். அருகே வந்து உசாவிய வசிட்டரிடம் நிகழ்ந்ததை சொன்னான். “முதல்வனாக அன்றி நான் இருக்கவியலாதென்பதே என் நெறி. முதன்மை என்பது கணம்தோறும் நூறு குரல்களால் அறைகூவப்படுவது” என்றான். “வெற்றிகளால் ஆனதே என் காலம். இவ்வரியணை முந்தைய கணம் வரை நான் வெல்லப்படவில்லை என்பதன் சான்றுமட்டுமே” என்று உறுமினான். “நான் வென்றாகவேண்டும். எவ்வகையிலாயினும் வென்றாகவேண்டும்” என்றான்.

# கிராதம் - 39

**[ 6 ]**

ஏழுமாத காலம் எண்ணி எண்ணி ஏங்கி வெந்து சுருங்கிய இந்திரனிடம் இந்திராணி சொன்னாள் “அஞ்சுவதை விட்டு அகலவேண்டும். வஞ்சம் கொள்வதை நோக்கி அணுகவேண்டும். அகன்றிருப்பதனால் பெருகுவதே வஞ்சம். சென்று அவ்வசுரனை காணுங்கள். அவனுடன் சொல்லாடுங்கள். அவன் யாரெனத் தெளிந்தால் இவ்வஞ்சம் அணையக்கூடும்.” இந்திரன் சினத்துடன் உறுமினான்.

“கரந்தமையும் எண்ணம் எதுவும் நஞ்சு. வஞ்சம் வீண் எண்ணங்களை உணவெனக்கொண்டு பெருகுவது. நீங்கள்

எண்ணுபவன் அல்ல அவ்வசுரன் என்றிருக்கலாம். உங்கள் சொல்கேட்டு நண்பனென்றும் ஆகலாம். சென்று பாருங்கள். நல்லவை நிகழுமென நம்புங்கள்” என்றாள் இந்திராணி. எண்ணி இருநாட்கள் இருந்தபின் “ஆம், அவன் முகம் எனக்கு வேண்டும். வெறுப்பதற்கேனும். அவன் வல்லமையை நான் அறியவேண்டும். என்னுள் போர்புரிந்துகொள்வதற்கேனும்” என்றான் இந்திரன்.

ஒரு வெண்புறாவாக மாறி பறந்து மகாவீரியத்தின் முகடு ஒன்றின்மேல் இறங்கினான் முதல் அமரன். முதிய அந்தணனாக உருக்கொண்டு கழியூன்றி நடந்து சென்று நான்கு ருத்ரர்களை சந்திக்க ஒப்புதல் கேட்டான். முதல் ருத்ரன் மலைப்பாறைகளை தேடிச் சென்றிருந்தான். இரண்டவது ருத்ரன் இரும்பு அகழ மண்ணுக்குள் துளைத்துச் சென்றிருந்தான். நான்காம் ருத்ரன் வேள்விச்சாலையில் மட்டுமே இருப்பவன்.

இந்திரனை மூன்றாவது ருத்ரனாகிய த்வஷ்டாவின் முன் கொண்டுசென்று நிறுத்தினர் அசுரகுலக் காவலர். “அரசே, அளப்பரிய ஆற்றல்கொண்டிருக்கிறாய். நீ அமைத்த நகர்தான் இதுவரை மண்மேல் எழுந்தவற்றிலேயே முதன்மையானது. அதைப் பார்த்து வாழ்த்திச் செல்லவே வந்தேன். நீ வாழ்க! உன் நகர் நீடூழி வாழ்க!” என்றான்.

நற்சொல் கேட்டு மகிழ்ந்த த்வஷ்டா “அந்தணரே, நீர் விரும்பும் பரிசு எது? சொல்லுங்கள், இப்போதே அளிக்கிறேன்” என்றான். “நான் பரிசில்பெற வரவில்லை, ஒரு சொல்லுரைத்துச் செல்லவே வந்தேன். அரசே, முழுமையான செல்வத்தையும் அழகையும் இன்பத்தையும் மானுடரோ அசுரரோ நாடிச் செல்லலாகாது. முழுமையைத் தேடும் இன்பமே அவர்களுக்கு

அளிக்கப்பட்டுள்ளது. முழுமையில் அமர்வது அவர்களுக்கு பெருந்துன்பமே ஆகும்" என்றார் அந்தணர்.

"அரசே, முழுமையை நாடி மலர்களுக்கு தேனீக்கள் என தெய்வங்கள் வந்துகொண்டிருப்பர். அவர்களில் ஒருவர் இப்பெருநகரை அடையவிரும்பினால்கூட நீ அத்தெய்வத்துடன் சமராடவேண்டியிருக்கும். அது உன்னை அழிவுக்கே கொண்டுசெல்லும். மானுடர் பெற்றுப்பெருகுபவர். அன்னத்தில் முளைக்கும் எதுவும் அன்னத்தின் கட்டுக்குள் அடங்கியதே. அன்னம் மிகுவதில்லை குறைவதுமில்லை. அன்னம் அழிந்தே அன்னம் பிறக்கமுடியும். அன்னம் எரிந்தே அன்னம் வாழமுடியும்."

"வேந்தே, தெய்வங்கள் எண்ணத்தில் பிறப்பவர்கள். எண்ண எண்ணப் பெருகுபவர்கள். ஆகவே தெய்வங்களை மானுடரோ அசுரரோ வெல்லவே முடியாது. தேவர்கள் எண்ணங்களை உருவாக்குகிறார்கள். எண்ணங்கள் வேள்விகளாக ஆகுதியாகின்றன. செயல்களாக பெருகுகின்றன. வேள்வியும் செயலும் தேவர்களை பெருக்குகின்றன. ஆம், நீ வல்லவன். தெய்வங்களை எதிர்த்து நிற்பவன். ஆனால் அச்சமர் புயல்காற்றில் மலர்மரம் என உன் உள்ளத்தை ஆக்கும். ஒருகணமும் நீ உவகைசூடி அமைய முடியாது."

"ஆகவே முழுமைக்கு முன்னரே நின்றுவிடுவதே இன்பத்தில் என்றும் வாழும் வழி. உலகோருக்கு என முன்னோர் நெறியொன்று அமைத்துள்ளனர். அணிகொள்கையில் ஒரு குறை வை. அன்னமுண்ணும்போது ஒரு துளி கசப்பும் இலையில் வை. செல்வக்குவையில் ஒரு பிடி அள்ளி பிறருக்கு அளி. அரசே, இல்லத்தில் ஒரு சாளரக்கதவை எப்போதும் மூடி வை. அகல்களில் ஒன்றில்

சுடரில்லாமலிருக்கட்டும். அதுவே வாழ்நெறி” என்றார் அந்தணர்.

“வெறுமையும் முழுமைகொள்ளலாகாது என்றறிக! எனவே நீர் சேந்தும்போது ஒரு குவளை மிச்சம் வை. மலர்கொய்யும்போது ஒரு மலர் மிஞ்சியிருக்கட்டும். மைந்தரைக் கொஞ்சும்போது ஒரு சொல் உள்ளத்திலேயே எஞ்சட்டும்” என்றார் அவர். “பெருக்கத்தில் பணிவென்று மூதாதையர் சொன்னது இதையே. செல்வம் இன்பமென மாறும்போதே பொருள்கொள்கிறது. ஆணவமென இருக்கையில் அது நோய்க்கட்டியே ஆகும்.”

எண்ணம் திரள நோக்கிக்கொண்டிருந்த ருத்ரனிடம் “இப்பெருநகர் முழுமைகொண்டிருக்கிறது. இதன் அனைத்து முகடுகளும் பழுதற்ற வடிவுடன் உள்ளன. அனைத்து உப்பரிகைகளும் கொடிகள் பறக்க ஒளிகொண்டுள்ளன. இதன் அனைத்துச் சாளரங்களும் வாயில்களும் விரியத் திறந்துள்ளன. இது தெய்வங்களுக்கு விடப்படும் அறைகூவல். உன் நலம்நாடியே இதை சொல்கிறேன். இப்பன்னிரண்டாயிரம் முகடுகளில் ஒன்றை இடித்துவிடு. அந்தக் குறை இந்நகரை வாழச்செய்யும்” என்றார் அந்தண முதியவர்.

சினந்தெழுந்து கைகளை தட்டியபடி த்வஷ்டா கூவினான் “ஒளி வளருமென்றால் இருளும் உடன்வளருமென்றறிக, அந்தணரே! மலைகளைவிடப் பெரிது மலைநிழல் என்று உணர்க! முழுமையை வென்றபின் நான் மானுடனல்ல, அசுரனுமல்ல. நானே தெய்வம்.” அந்தணர் முகம் சுளித்து “தருக்கி நிமிரலாகாது, அரசே. தெய்வமென்று தன்னை உணர்தலைப்போல மானுடன் தெய்வங்களுக்கு இழைக்கும் பிழை பிறிதொன்றில்லை” என்றார்.

“ஆம், தெய்வங்களைப்போல வெல்வது என்றால் அது பிழை. தண்டிப்பதென்றால் பெரும்பிழை. அடைவதென்றால் பிழையினும் பிழை. ஆனால் படைப்பதென்பது பிழையல்ல. படைத்து திரும்பி நோக்கி இது நான் என்றுணர்பவனை தெய்வமென்றாக்குவது தெய்வங்களைப் படைத்த வல்லமை” என்றான் த்வஷ்டா. “ஆம், உன்னால் படைக்கமுடியும் என்று உணர்ந்துவிட்டாய். வென்றவனென்று உன்னை உணர்ந்துவிட்டாய். இனி நீ ஓர் அடி எடுத்து பின்னால் வைக்கலாம். ஒரு முகடை இடி. ஓர் உப்பரிகையையாவது அழி” என்றார் அந்தணர்.

“அதை எந்தக் கலைஞனாலும் செய்யமுடியாது, அந்தணரே. அந்தக் குறையின் சிறுபுள்ளியிலேயே சென்று மோதிக்கொண்டிருக்கும் அவன் சித்தமெல்லாம். அதை வெல்லாமல் அடுத்த படைப்பை அவன் ஆக்கமுடியாது. அறிந்து ஒரு படைப்பில் குறைவைத்த கலைஞன் வாளெடுத்து தன் கைகளை தானே அறுத்தெறிந்தவன். இதை வென்றபின் இனிமேல் என்ன என்றே நான் எழமுடியும்” என்றான் பொற்சிற்பி.

அந்தணர் தன் உருமாற்றி மணிமுடியும் ஒளிர்படையும் கொண்டு எழுந்தார். பெருங்குரலில் இந்திரன் சொன்னான் “நான் தேவர்க்கரசன். எனக்கிணையாக ஒன்றை நான் ஒப்பக்கூடாதென்பதே தெய்வங்கள் எனக்கிட்ட ஆணை. இம்மணிமாளிகையை நான் அழித்தாகவேண்டும். அதை அழிக்க வேண்டாமென்றுதான் நானே உன்னிடம் வந்தேன்.” அவன் எவரென உணர்ந்ததும் மேலும் சினம்கொண்டு “இது போருக்கான அறைகூவல். இதை எதிர்கொள்ளவேண்டியவர் என் உடன்பிறந்தார் இருவர்” என்றான் த்வஷ்டா.

“ருத்ரனே கேள், என்னை எதிர்த்து எவரும் இன்றுவரை வாழ்ந்ததில்லை. அழியவேண்டாம் என்று உன்னிடம் கோருகிறேன்” என்றான் இந்திரன். “படைக்கப்பட்டுவிட்ட ஒன்று அழிவதில்லை. அது பிறிதொரு படைப்புக்குள் தன்னை செலுத்திக்கொண்டுவிடும்” என்றான் த்வஷ்டா. சினந்து தன் வாளை நீட்டியபடி அவனை அணுகி இந்திரன் கூவினான் “இக்கணம் உன்னிடம் எச்சரிக்கிறேன். அந்த மாடங்களில் ஒன்றை இடி. அந்த உப்பரிகைகளில் ஒன்றையேனும் உடை!”

“இயலாது, இந்திரனை இங்கு வரவழைத்தது அது என்று உணரும்போது அதை ஆக்கியவன் என்று என் உள்ளம் உவகையே கொள்கிறது” என்றான் த்வஷ்டா. “தணிந்து கேட்கிறேன், அதன் வாயில்களில் ஒன்றையேனும் மூடி வை” என்றான் இந்திரன். “நான் இக்கலைவடிவை அழித்தேன் என பெயர்கொள்ள விழையவில்லை. எண்ணிச்சொல்!” த்வஷ்டா “எண்ணவே வேண்டியதில்லை, இது இங்கு இவ்வாறே இருக்கும்” என்றான். “ஒரு அகல்சுடரையாவது அணைத்து வை” என்றான் இந்திரன். “ஒரு துளி குங்குமம்கூட அந்நிலத்தில் விழுந்து கறையாகாது” என்றான் த்வஷ்டா.

சினத்தால் உடல் ததும்ப நின்று நோக்கியபின் மீண்டும் ஒரு புறாவென மாறி தேவர்க்கிறைவன் மறைந்தான். அவன் செல்வதை நோக்கி நின்ற த்வஷ்டாவிடம் அவன் மூத்தவர் இருவரும் வந்தனர். “எல்லைகடந்து ஒரு புறா நகருக்குள் வந்தது என்று அறிந்தேன்” என்றான் அஜைகபாத். “என் கூர்முனைகள் அதை கிழிக்கவில்லை என்று கண்டேன்” என்றான் அஹிர்புத்ன்யன். “வந்தவன் இந்திரன். நம் நகர்முழுமை கண்டு நெஞ்சழிந்து மீள்கிறான்” என்றான் த்வஷ்டா.

[ 7 ]

மகாவீரியமென்னும் அசுரர்பெருநகரை வெல்ல எண்ணிய இந்திரன் தன் படைத்தலைவர்களை அழைத்து அவர்களிடம் படைகொண்டு செல்வதைப்பற்றி கேட்டான். அவர்கள் ஒற்றைக்குரலில் அஜைகபாத் அமைத்த ஏழு கோட்டைகளைக் கடந்து எவரும் செல்லமுடியாது என்றனர். அஹிர்புத்ன்யனின் ஆயிரம்கோடிக் கூர்முனைகளை எதிர்கொள்ளும் ஆற்றல் தேவர்களுக்கும் இல்லை என்றனர்.

இந்திரன் துயருடன் தன் அரண்மனையில் உலவினான். தொலைப்பயணியான நாரதரை அழைத்துவரும்படி சொல்லி அவரிடம் ஆவதென்ன என்று கேட்டான். “அரசே, போர் பயனற்றபோது சூழ்ச்சி பயனளிப்பது. சூழ்ச்சியும் பயனற்றுப் போகும்போது தவம் பயனளிப்பது. சூழ்ச்சி வழியாகவே அசுரர்களின் பெருநகரை வெல்லமுடியும்” என்றார் நாரதர். “அதற்கான வழிகளை சொல்க!” என்றான் இந்திரன்.

“சூழ்ச்சிகளில் தலையாயவை எட்டு. காமத்தால் அறிவிழக்கசெய்தல், பெருவிழைவால் நிலையழியச்செய்தல், தன் வல்லமையை மிகையென எண்ணச்செய்தல், தன் வல்லமையை குறைவென எண்ணி அஞ்சவைத்தல், அணுக்கர்களை நம்பிக்கையிழக்க வைத்தல், ஏவலர்களை நேர்மையிழக்கச்செய்தல், பொய்யிலக்குகளை நோக்கி திருப்பிவிடுதல், நட்புகளுக்குள் பகை உருவாக்கல்” என்றார் நாரதர். “அறம் வெற்றியால் மட்டுமே நிலைக்குமென்றால் அறத்தின்பொருட்டு இவற்றை ஆற்றலாம் என்கின்றன நூல்கள்.”

“இவை ஒவ்வொன்றுக்கும் உரியவர்கள் உள்ளனர். எதிரியரசு ஒற்றையொருவனை நம்பியிருக்குமென்றால் காமமும் பெருவிழைவும் கொண்டு அவனை வெல்வது உகந்த வழி. வெற்றிமேல் வெற்றிகொண்டெழும் நாட்டை மிகைநம்பிக்கை கொள்ளச்செய்யலாம். பல்லாண்டுகளாக போரிலீடுபடாத நாட்டை குறைநம்பிக்கை கொள்ளச்செய்யலாம். அடித்தளத்திலிருந்து மேல் தளம் மிக அகன்றுபோகுமளவுக்கு பெரிய நாட்டை அணுக்கர்களை சோர்வுறச்செய்தும் ஏவலரை திரிபடையச்செய்தும் வெல்லலாம். உரிய அமைச்சர்கள் இல்லாதவர்களை திசைதிருப்பிவிடலாம்” என்று நாரதர் சொன்னார். “ஆனால் எங்கும் எப்போதும் வெல்லும் வழி என்பது நட்புத்திரிபு என்னும் சூழ்ச்சியே.”

இந்திரன் “ஆம்” என்று தலையசைத்தான். “திரிபுகொள்ளச் செய்யத்தக்கவர் இருவகை. அரசின் உச்சியிலிருப்பவர் மேலும் உச்சிநோக்கி செல்லும் தகுதிபடைத்தவர் தாங்கள் என எண்ணியிருப்பார்கள். அவர்களிடம் அவர்களின் வல்லமையும் கொடையும் உரியமுறையில் மதிக்கப்படவில்லை என்று சொல்லி உளத்திரிபடையச் செய்வது எளிது. மிகஅடித்தளத்தில் உள்ளவர்களிடம் அவர்கள் வெளியேதெரிவதில்லை என்னும் உளக்குறை இருப்பதனால் அவர்களை வெல்வதும் எளிது” என்றார் நாரதர்.

“நடுவிலிருப்பவர்களை திரிபடையச் செய்வது கடினம். அவர்களுக்கு மேலே வாய்ப்புகள் நிறைந்துள்ளன. கீழே அச்சுறுத்தும் வீழ்ச்சிகளும் தென்படுகின்றன. ஆகவே நிலைவிட்டு ஓர் அடியும் எடுத்துவைக்க அஞ்சுவார்கள்” என நாரதர் தொடர்ந்தார். “ஆனால் எவராயினும் அவர்களுக்கு எதிரியென ஒருவன் சுட்டிக்காட்டப்படவேண்டும். அவர்கள்

இழந்ததை எல்லாம் பெறும் ஒருவன். அவர்கள் செல்லவேண்டிய இடங்களில் முந்திச்செல்பவன். அவர்களுக்கு என்றும் தடைக்கல்லாகி நிற்பவன்.”

“அவ்வெதிரி திரிபுக்குரியவனுக்கு மிகவும் கீழிருப்பவனாக இருக்கலாகாது. அவனை அவர்கள் திறனற்றவன் என்றே உள்ளூர எண்ணுவர். மிக மேலே இருப்பவனாகவும் எண்ணக்கூடாது. மேலிருப்பவர்களை அவர்கள் உள்ளூர அஞ்சுவர். அவனுக்கு நிகரானவனாக அவன் எண்ணுபவனாகவே எதிரி இருக்கவேண்டும். அத்தகைய ஒருவன் ஒவ்வொருவருக்கும் அருகிலேயே இருப்பான். அவன் மேல் நம் இலக்குக்குஉரியவன் கொள்ளும் உள்ளூறை அச்சத்தை நாம் தொட்டறியவேண்டும். தூண்டி வளர்க்கவேண்டும்.”

“அரசே, ஐந்து வகையினர் எளிதில் திரிபடையக்கூடியவர். அச்சம் கொண்டவன் திரிபடைவான். அவன் அஞ்சுவதை எளிதில் பெரிதாக்கிக் காட்டலாம். விழைவு கொண்டவன் திரிபடைவான். அவனுக்கு நாம் வாக்குறுதிகளை அளிக்கலாம். அன்பு கொண்டவர் திரிபடைவர். அவர்கள் அன்புகொண்டுள்ளவற்றின் பொருட்டு பணிவார்கள். ஆணவம் கொண்டவர்கள் திரிபடைவார்கள். அவர்களின் ஆணவத்தை புண்படச்செய்யலாம். அரசே, வீணே இருப்பவனைப்போல திரிபடையச் செய்ய எளிதானவன் எவனுமில்லை. அவனை மூச்சுக்காற்றால் ஊதிப்பறக்கவிடலாம்.”

மகாவீரியத்தைத் தாங்கி நின்றிருந்தவை நான்கு ஆமைகள். அவை ஆழுலகத்தின் அன்னையின் கைநகங்களிலிருந்து உருவானவை. கிழக்கே மஞ்சள் நிறம்கொண்ட கனகன், மேற்கே சிவப்பு நிறம் கொண்ட சோனன், தெற்கே நீலநிறமான

சியாமன், வடக்கே பச்சை வண்ணம் கொண்ட ஹரிதன். அவை ஒன்றையொன்று நோக்கமுடியாத கோணத்தில் திரும்பி நின்று ஆழ்துயிலில் இருந்தன. ஒவ்வொன்றும் அந்நகரை அதுமட்டுமே தாங்குவதாக எண்ணியிருந்தது. அவ்வெண்ணம் அவற்றுக்குள் செரிக்காத ஊனுணவென கிடந்தது. அதன் சுமையால் அவை இனிய புன்னகையுடன் கண்சொக்கி அமைந்திருந்தன.

அப்பால் நின்று அவற்றை நோக்கியதுமே அவற்றின் உள்ளக்கிடக்கையை அரசன் புரிந்துகொண்டான். சிற்றறிவுகொண்டவர்கள் அருகருகே இருந்தால் ஒற்றை எண்ணத்தையே கொண்டிருப்பர். அவர்கள் சிற்றறிவுகொண்டவர்கள் என்பதனால் மாறாமலிருப்பர். மாறாமலிருப்பவற்றுக்கு இருக்கும் உறுதியினால் அவர்கள் மேல் பெருஞ்சுமைகள் ஏற்றப்பட்டிருக்கும். சிற்றறிவுகொண்டவர்கள் அனைத்தையும் தாங்கி அடித்தளமாவது என்பது பெரும்பிழை. மேலும் செல்லும் அறிவுகொண்டவர்கள் அனைத்தையும் தாங்கி அடித்தளமாக அமைந்து அறியப்படாமலிருக்க ஒப்பமாட்டார்கள்.

மானுடரின் இக்கட்டுகளை எண்ணி நகைத்தபடி இந்திரன் ஒரு பொற்சரடென ஒளிவிடும் நாகமென மாறி நெளிந்து அந்த ஆமைகளின் அருகே சென்றான். தெற்கை ஆளும் திசையாமையாகிய நீலனின் கழுத்தில் சுற்றிக்கொண்டான். “மகாபலரே, பேரெடைசுமப்பவரே, அழியாதவரே, வாழ்க! உங்களை நம்பி இப்புவியின் பெருநகர் ஒன்று அமைந்துள்ளது. எண்ண எண்ண பெருமை கொள்ளவேண்டியது இது” என்றது நாகம்.

“என் பெயர் சுவர்ணை. பொன்னொளியுடன் நான் பிறந்தபோது என்னை சிறு ஆரம்போலிருக்கிறாள் என்றனர் என் குலத்து மூத்தோர். இவள் எந்தக் கழுத்திற்கு அணி என்று வியந்தனர். என் ஊழ்நெறி நோக்கிய நிமித்திகர் நான் இப்புவியிலேயே பேராற்றல்கொண்ட ஒருவரின் அணிகலன் ஆகும்பொருட்டு பிறந்தவள் என்றனர். என்னைச் சூடுபவரை தெய்வங்கள் தங்களுக்கு நிகரென ஏற்கும்.”

“ஆற்றல்மிக்கவரைத் தேடி நான் அலைந்தேன். புவிதாங்கும் ஆமைகள் என் மூதாதையர். வாசுகியும் சேடனும் என் குலமூத்தார். மண்மேல் எழுந்தபோது இந்நகரைக் கண்டேன். இந்நகரின் எடைதாங்கும் உங்களைப்பற்றி அறிந்தேன். உங்கள் நால்வரையும் இங்கு வந்து கண்டேன். நால்வரில் எவர் ஆற்றல் மிக்கவர் என்று அறிந்து உங்களை அணுகினேன். என்னை ஏற்று என் பிறப்புக்கு ஒரு பொருள் தருக!” என்றது நாகம்.

“ஆம், நீ எனக்கு இனியவள். என் ஆற்றலை அறிவிக்கும் அடையாளமும் கூட” என்றது நீலன். மகிழ்ச்சியுடன் நீலனின் முதுகுமேல் வளைந்தேறி நின்று “கண்டேன் புவியிலேயே ஆற்றல்மிக்கவரை. நிகரற்றவரின் துணைவி ஆனேன். நானும் நிகரற்றவளானேன்” என்றது நாகம். சினத்துடன் திரும்பிய வடக்குதிசையின் ஆமையாகிய ஹரிதன் “எவ்வாறு சொல்கிறாய், இவனே நிகரற்றவன் என்று?” என்று கேட்டது.

நாணத்துடன் விழிசரித்து “வடவரே, நால்வரில் நீங்களே செல்வர். இந்நகரின் செல்வம் அனைத்தும் குவிக்கப்பட்ட கருவூலம் குபேரமூலையிலேயே உள்ளது. அதைத் தாங்குபவர் நீங்கள். இவர்களனைவரும் உங்கள் அளிநிழல்கீழ் வாழ்பவர்களே” என்றது நாகம். “அப்படியென்றால் நான்?” என்று

சீறிக்கேட்டது கீழ்த்திசையின் கனகன். நாணம் கொண்டதென நெளிந்து “நீங்களே நால்வரில் அழகர். புலரிப்பொன்னொளி கொண்டவர்” என்றது நாகம்.

மேற்குத்திசையின் சோனன் கால்களை உதைத்து திரும்பிநோக்கி “என்னை நீ அறியமாட்டாய்” என்றது. வேட்கையுடன் மூச்செறிந்து “உங்களை அறியாதோர் எவர்? நீர் நகரின் நீர்நிலைகள் அனைத்துக்கும் தலைவர் அல்லவா?” என்றது நாகம். “நாள்தோறும் பெருகும் நீர்நிலைகளை சுமப்பவன் நான். என்னைவிட எடைதாங்குபவனா இவன்?” என்றது சோனன். “தெற்குத்திசையில் மூதாதையர் அமைந்திருக்கிறார்கள். அவர்களே நாள்தோறும் பெருகும் எடைகொண்டவர்கள்” என்றது நாகம்.

“பெண்ணே நீ அறியமாட்டாய், இந்நகரின் கருவூலம்போல கணம்தோறும் பெருகும் பிறிதொன்றில்லை” என்றது ஹரிதன். “எவர் சொன்னார்? நானறிவேன், இங்கு பெருகும் ஒளியின் எடையை” என்றது கனகன். “உயிருக்கு நிகரான பிறிதேதுள்ளது?” என்றது தெற்கின் ஆமை. அவர்களின் சொல்லாடல் பூசலாகியது. ஆமைகள் மாறிமாறி காலால் உதைத்துக்கொண்டன. அவை தலைகளால்முட்டி போரிடத்தொடங்கியபோது நாகம் வழிந்து கீழிறங்கி மறைந்தது.

நகர் அதிரத்தொடங்கியதை முதலில் உணர்ந்தவன் முதற்சிற்பியாகிய கர்மகனே. அவனுடைய கணையாழியில் இருந்த சின்னஞ்சிறு நீலமணிக்குள் ஒளிநலுங்குவதை அவன் கண்டான். “நகர் நிலையழிகிறது... கிளம்புக! அனைவரும் கூரைமீதிருந்து அகல்க!” என்று கூவினான். அவன் வெளியே வந்து அச்செய்தியை சொல்லிக்கொண்டிருக்கையிலேயே நகரில் வாழ்ந்த கூண்டுக்கிளிகள் நிலையழிந்து

ஒலியெழுப்பலாயின. பசுக்கள் தொடர்ந்து குரலெழுப்பின. நாய்கள் ஊளையிட்டபடி வெளியே ஓடின.

அனைவரும் வெளியேறிவிடும்படி அறைகூவி நகரின் பெருமுரசுகள் ஒலிக்கத் தொடங்கின. அவ்வொலி கேட்டு அஞ்சியும் கூவியும் அசுரர்குலம் தெருக்களுக்கு வந்தது. கூரையிலிருந்து தூசுப்பொருக்குகள் உதிர்ந்தன. மரங்கள் திடுக்கிட்டு சருகுதிர்த்தன. பின்னர் அடிபீடம் ஆட தூண்கள் நடுங்கத் தொடங்கின. வெண்முட்டையோடுபோன்ற சுவர்களில் நீர்வரிபோல விரிசல்கள் ஓடி கொடிப்பரப்பென கிளைவிட்டுப் பரவின. கூரைப்பரப்பு பிளந்து வெண்ணிற வானம் தெரிந்தது.

பாறை பிளக்கும் ஒலியுடன் காவல்மாடமொன்று உடைந்து சரிந்தது. அந்த அதிர்வில் இரு சிறுமாடங்கள் சரியலாயின. மெல்ல கரைந்து நதிநீரில் விழும் கரைமணல்குவை என அரசமாளிகையின் முகடுகளில் ஒன்று சரிவதைக்கண்டு மக்கள் அஞ்சி கூச்சலிட்டார்கள். அடுக்குகள் வெடித்து கற்கள் சரிய அடிபட்டுப்புரளும் மலைப்பாம்பு போல கோட்டை புரண்டுவிழுந்தது. மெல்ல நிலையழிந்து காலிடறுவதுபோல தடுமாறி மண்ணை பேரெடையுடன் அறைந்து விழுந்தது முரசுமேடை.

உயர்ந்தவை ஒவ்வொன்றாக சரியலாயின. “வெளியேறுக! வெளியேறுக!” என முரசுகள் கூவின. மக்கள் கூவியும் அலறியும் மைந்தரையும் பெற்றோரையும் அள்ளி தோளிலேற்றிக்கொண்டு நீரலைத்திரளென கோட்டையின் நான்கு வாயில்களையும் நோக்கி முண்டியடித்தனர். அவர்கள் வெளியேறும்பொருட்டு பொறிகளால் இயக்கப்பட்ட பெருவாயில்கள் திறக்கப்பட்டன. அவர்கள் மதகுமீறிய வெள்ளமென வெளியே பீரிட்டனர்.

அப்போது விட்டில்கூட்டம் மண்ணிலிறங்குவதுபோல தேவர்கள் விரித்த சிறகுகளும் கைகளில் நாணேற்றப்பட்ட அம்புகளுமாக கோட்டையைச் சூழ்ந்துகொண்டு தாக்கத்தொடங்கினர். அசுரர்கள் கூட்டம்கூட்டமாக இறந்துவிழுந்தனர். தங்கள் மக்களே கட்டுப்பாடிழந்து தெருக்களில் நிறைந்தமையால் சேற்றில் சிக்கிக்கொண்ட யானைபோலாயினர் நகரின் அசுரப்படையினர். விரைவிலேயே அவர்கள் அனைவரும் கொன்றழிக்கப்பட்டனர். ருத்ரர் நால்வரும் அரண்மனைக்குள் அமைந்த கரவுப்பாதை வழியாகத் தப்பி மண்ணுக்கு அடியில் அமைந்திருந்த கரளாகம் என்னும் சுரங்கமாளிகைக்குள் சென்று ஒளிந்துகொண்டனர்.

இந்திரன் அந்நகரை முற்றாக இடித்தழித்தான். அதன் மக்களையும் படைகளையும் அவன் படைக்கலங்கள் கொன்று குவித்தன. அச்சடலங்களை இடிந்திடிந்து விழுந்த நகரின் மாளிகைகளே அடக்கம் செய்தன. மகாவீரியம் ஒரு பெரும் இடுகுழியாக மாறியது. அதன் பெருமாளிகை சரிந்த புழுதி விண்ணில் பெரிய குமிழி என எழுந்தது. அதில் முகில்தொட்டதும் குளிர்ந்து மழையென்றாகியது. அப்புழுதியில் அசுரர்களின் குருதியும் கலந்திருந்தது. சுற்றிலுமிருந்த காடுகள் அனைத்திலும் குருதிமழை பெய்தது.

கான்மக்கள் கைநீட்டி மழையைத் தொட்டபோது ஒட்டும்பசையென குருதியில் கைநனையக்கண்டு அஞ்சி குகைகளுக்குள் ஓடி ஒளிந்துகொண்டனர். அந்தணர் வேள்வித்தீ மூட்டி அவியளித்து இந்திரனைப் போற்றி வேதம் பெருக்கினர். இடிந்தழிந்த நகர்மேல் ஏழு வண்ணத்தில் இந்திரவில் எழுந்து நிற்பதை உயிர் எஞ்சிய சிலரே கண்டனர். அவ்வில்லைக்கண்டு

அந்தணர் தங்கள் வேள்விச்சாலைகளிலிருந்து வெளியே ஓடிவந்து கைகூப்பி வாழ்த்து கூவினர்.

தன் குடியுடன் கரவறையில் ஒளிந்துகொண்டு த்வஷ்டா கண்ணீர் விட்டான். “நான் படைத்தவை அழிவதைக் கண்டேன். மைந்தர்துயருக்கு நூறுமடங்கு பெரிய துயர் இது” எனச் சொல்லி ஏங்கினான். அவன் அளித்த அவியை ஏற்க முன்னோர் அனலிலும் புனலிலும் எழவில்லை. கனவுகளில் அவர்களின் முனகலோசைகளை இருளுக்குள் கேட்டான். திடுக்கிட்டு எழுந்தமர்ந்தவனை அவன் துணைவியாகிய சுபகை தேற்றினாள். “அனைத்தையும் மறப்போம்” என்றாள்.

“மறப்பதற்கு நிறையவே உள்ளன தேவி” என்றான் த்வஷ்டா. பொன்மாளிகையின் ஒவ்வொரு தூணையும் ஒவ்வொரு சிற்பத்தையும் மறந்தாகவேண்டும். மறக்கமுனைகையில் அவை மேலும் ஒளிகொண்டெழுந்து வந்தன. கண்மூடினால் அங்கே சென்றுலாவ முடிந்தது. “நான் சென்று மீளும் அந்நகர் எங்குள்ளது, இளையோனே?” என்று அவன் தன் தம்பியாகிய ருத்ரனிடம் கேட்டான். “அவை உங்களால் பொன்னில் செதுக்கப்படுவதற்கு முந்தைய வடிவில் உள்ளன, மூத்தவரே. பொருளில் எழாத கலையின் உலகொன்று உள்ளது. அது மண்ணுள் வாழும் விஸ்வகரின் கனவு என்கின்றனர்.”

“என் ஆணவத்தால் நால்வரையும் தோல்வியுறச் செய்தேன். என் குடியை முற்றழித்தேன்” என்று த்வஷ்டா சொன்னான். இளையோனாகிய ருத்ரன் சொன்னான் “மூத்தவரே, ஆணவம் அழிந்த சிற்பியின் கைகள் வெறும் தசைக்கொடிகள். அவன் விரல்களில் குடிகொள்ளும் தெய்வங்களுக்குரிய இன்னமுதென்பது அவன்கொள்ளும் கனவுகளே. கனவுகள்

ஆணவம் செழிக்கும் வயல்கள். கனவுநிறையட்டும் உங்களுக்குள்.”

“ஆம்” என்றான் த்வஷ்டா. “நான் மீண்டு எழுந்தாகவேண்டும். என் உள்ளத்தின் அனல் முளைக்கவேண்டும்.” ருத்ரன் “மூத்தவரே, அந்நகரிலிருந்து ஒரு கல்லை எடுத்துவரச் சொல்லுங்கள். அதை என் அனலில் இட்டு உங்கள் வஞ்சத்தை எழுப்புக! அதுவே உங்கள் படைப்புக்கு விதையாகட்டும்” என்றான். “நான் இனிமேல் படைப்பதென்றால் இந்திரனை வென்றபின்னரே அது நிகழமுடியும். இவ்வஞ்சம் நஞ்சென்று என்னுள் இருக்கையில் இனி நான் சிற்பியே அல்ல” என்றான் த்வஷ்டா.

அசுரர்கள் வெளியே சென்றால் கொன்றழிப்பதற்காக அத்தனை நீர்க்குமிழிகளிலும் விழிகளை நிறுத்தியிருந்தனர் தேவர். த்வஷ்டாவின் மைந்தர்களில் ஒருவனாகிய நளன் என்னும் குரங்கு அவர்களை ஏமாற்றி இடிந்து சரிந்த நகருக்குள் சென்றது. அங்கே சடலங்கள் வெள்ளெலும்பாகக் கிடந்தன. மண்டைகளின் சிரிப்பைக் கண்டு அஞ்சி அது கண்களை மூடிக்கொண்டது. கைநீட்டி சிக்கிய அங்கிருந்த முதற்கல்லை எடுத்துக்கொண்டு துள்ளிவிலகித் திரும்பி ஓடிவந்தது.

அந்தக் கல்லை கையில் வாங்கிப்பார்த்தான் த்வஷ்டா. அது மூன்றுதலைகொண்ட சிம்மம். மகாவீரியத்தின் காவல்மாடங்களில் ஒன்றின் முகப்பிலிருந்த முத்திரைக்கல். “ஆம், இது ஒரு செய்தி” என்று சொல்லிக்கொண்டான். “இதுவே எஞ்சவேண்டுமென்பது ஊழ்.” ஒருமுறையேனும் அவன் அந்நகரில் அதை பார்த்திருக்கவில்லை. ஆனால் உயரத்திலமைந்து அந்நகரை அது பார்த்துக்கொண்டிருந்தது என்று உணர்ந்தான்.

அதை அவன் ருத்ரனின் வேள்வித்தீயிலிட்டான். தழலில் அலையலையென எழுந்து கரைந்து சென்றன முகங்கள். அவற்றில் மும்முகம் கொண்ட மைந்தன் ஒருவனை அவன் கண்டான். “ஆம், அவன்தான். அவன் பெயர் திரிமுகன். அவனே என் மைந்தன்” என்று கூவினான். “என் ஆற்றலெல்லாம் அம்மைந்தன் ஆகுக! பேருருக்கொண்டு அவன் எழுக! அவன் வெல்லட்டும் இந்திரனை” என்று வஞ்சினம் உரைத்தான்.

# கிராதம் - 40

**[ 8 ]**

பிரம்மகபாலத்தின் மழைசூழ்ந்த குகையறைக்குள் இருந்து பிரசண்டன் சொன்னான் “மும்முகன் பிறந்த கதையை நான் விருத்திரர்களின் தொல்லூரில் கேட்டேன். அந்தணரே, அங்கே காட்டுக்குள் அமைந்த பாறையொன்றின்மேல் மூன்று பெருங்கற்களை மூன்று திசைநோக்கி முதுகிணைய நிறுத்திவைத்து விழிகளும் வாயும் வரைந்து அவர்கள் வழிபடுகிறார்கள். மும்முகனின் ஒரு முகம் கனிந்த தந்தை. அதன் காலடியில் மலரும் நீரும் மாவுணவும் படைத்து வழிபட்டனர். இரண்டாவது முகத்தின் அடியில் கள்ளும் குருதியும் படைத்தனர். மூன்றாம் முகத்தின் முன்பு ஊழ்கநுண்சொல்லன்றி எதையும் படைப்பதில்லை.”

“முதல் முகத்தை முழுநிலவிலும் இரண்டாம் முகத்தை கருநிலவிலும் வழிபட்டனர். மூன்றாம் முகத்தை ஆண்டுக்கொருமுறை இளவேனில் தொடங்கும் நாளில் பூசகர் மட்டுமே சென்று வணங்கினர்” என்றான் பிரசண்டன். “மும்முகனின் கதையை எனக்கு கபாலர் சொன்னார்.

இடிந்தழிந்த மகாவீரியத்திலிருந்து ஒரு சிறுகல்லை எடுத்துவரச் சொன்னான் த்வஷ்டா. அதை கொண்டுசென்று காட்டுக்குள் நட்டான். ஒவ்வொரு நாளும் அதனருகே அமர்ந்து விழிநீர் சிந்தி அழுதான். அவனுடைய கண்ணீர்பட்டு அக்கல் முளைத்தது. பேருருவம் கொண்டு ஒரு மலையென எழுந்து வளர்ந்தது. மூன்றுமுகம் கொண்டு எழுந்து நின்றிருந்த அந்த மலையை த்வஷ்டா தன் முதற்றாதையின் மண்வடிவமென எண்ணினான். அதற்கு விஸ்வரூபன் என்று பெயரிட்டான்.”

மும்முகம் கொண்ட மலையைப்பற்றி தொல்லசுரர்குடியின் பாடகர்கள் பாடியலைந்தனர். அதைக் கேட்டு அசுரர்குடியினர் ஒவ்வொரு கோடையிலும் இருமுடிகட்டு சுமந்து அங்கே வந்துசேர்ந்தனர். ஒருமுடிச்சில் உணவும் உடையும். மறுமுடிச்சில் மலைவடிவனுக்கான பூசனைப்பொருட்கள். பதினெட்டு நாட்கள் காடுகளுக்குள் ஓடைக்கரையிலும் பாறையுச்சியிலும் தங்கி வறண்ட ஓடையின் நீர்வழிந்த தடம்கொண்ட பாறைகளினூடாக ஏறி மேலே சென்று அவனை நோக்கினர். அசுரர்களில் ஹிரண்யர்கள் அவன் தந்தைமுகத்தை மட்டுமே காணமுடிந்தது. அவன் சினமுகத்தைக் கண்டனர் மகிடர். அவன் நுண்முகத்தைக் காணும் வழி மேலும் அடர்ந்த காட்டுக்குள் வாழ்ந்திருந்த சண்டர் என்னும் குடிக்கு மட்டுமே இருந்தது.

மும்முகப் பெருமலை தொல்குடிகள் அளித்த பலிகொடைகளைப் பெற்று பேருருவம் கொண்டு வளர்ந்தது. அதன் முடிகள் எழுந்து முகில்களை தொட்டன. அதன் குளிர்ந்த முடியிலிருந்து நூற்றெட்டு அருவிகள் பொழிந்தன. அவை ஒழுகிய பாதைகளிலெல்லாம் அசுரர்களின் ஊர்கள் எழுந்தன. அந்நீரை உண்டு அவர்களின் குடிகள் செழித்தன.

தந்தைமுகத்தைக் கண்ட அசுரர்கள் வேளாண்தொழில் செய்து செழித்தனர். சினமுகம் கண்டவர் வேட்டுவராயினர். நுண்முகம் கண்டவர்களோ அருங்காட்டுக்குள் வாழ்ந்தனர். அவர்கள் மட்டுமே பிற இருகுலங்களுக்கும் முதன்மைப்பூசகர் என்று கருதப்பட்டனர்.

பிற இருமுகங்களையும் அறிந்திருந்தனர் சண்டர்குடிப் பூசகர். அறம்பிழைத்த வேட்டுவரை அருட்தந்தையிடம் அனுப்பி பன்னிருநாட்கள் உணவொழித்து நோன்புகொண்டு மீளச்செய்தனர். அறம் கடந்த வேளிரை கொடுந்தந்தையிடம் சென்று குருதிசிந்தி பிழைபொறுக்கக் கோரி மீளவைத்தனர். இரு தந்தையருக்கும் அப்பால் இருவரின் குடிகளையும் நோக்கியபடி ஊழ்கத்தில் இருந்தான் இருள்தந்தை. அவன் விழிகளுக்கு முன் தழைத்து செறிந்து அணுகமுடியாத மந்தணம் இருளெனச் சூழ்ந்து கிடந்தது பெருங்காடு.

அங்கிருந்துதான் கஸ்தூரியும் கோரோசனையும் புனுகும் கொண்டு உயிர்கள் வந்தன. கொலைமதவேழங்கள் அங்கே பிடிகளுடன் புணர்ந்து குட்டிகளை ஈன்றன. புலிகளும் சிம்மங்களும் அதன் வாயில் திறந்து ஒளிரும் விழிகளுடன் வளையெயிறும் கூருகிருமாக வந்து எச்சரித்துச் சென்றன. இரவில் அங்கிருந்து குளிர்ந்த மூலிகைத்தென்றல் வீசி நோயுற்ற உடல்களை ஆற்றியது. எப்போதும் மழைதிகழும் அந்த வானையே அவர்களால் பார்க்கமுடிந்தது. அங்கே எழும் இடியோசையையும் களிறோசையையுமே அதன் குரலென அவர்கள் அறிந்திருந்தனர்.

ஒவ்வொரு நாளும் வளர்ந்த மும்முகனின் புகழ் விண்ணை அடைந்தது. அவன் குளிர்முடியை நோக்க விண்ணவர் வந்துசெல்வதை தேவர்க்கரசன் அறிந்தான். “இக்கணமே அதை

அழிக்கிறேன்” என்று அவன் கிளம்பினான். மலைமேல் முகிலில் தோன்றி தன் மின்படைக்கலத்தை செலுத்தினான். பன்னிரண்டாயிரம் முறை மின்னல்கள் மலையைத் தாக்கின. திசைமறைத்த பெருமுகம் புன்னகையும் சிரிப்புமாக மின்னி மின்னி அணைந்ததே ஒழிய ஒரு சிறுபாறைகூட அதிலிருந்து உதிரவில்லை.

அசுரர்களின் குடிகளில் மக்கள் ஒரு மாதம் தொடர்ந்து இரவிலும் பகலிலும் மலைமுடிமேல் சுழன்றடித்த மின்னல்களைக் கண்டனர். “இந்திரன் எழுந்துவிட்டான்” என்று பூசகர்கள் அஞ்சிக்கூவினர். தங்கள் முற்றங்களில் சோரும் பெருமழைக்கு தலையில் காமணங்களைப் போட்டு உடல்குறுக்கி நின்று அவர்கள் அந்தப் போரை நோக்கினர். முகில்முழக்கமாக இந்திரன் போர்க்குரலெழுப்பினான். அடர்காட்டுக்குள் அவ்வொலியை எதிரொலியாக எழுப்பி மறுமொழி அளித்தான் மும்முகன்.

இறுதியில் சோர்ந்து இந்திரன் திரும்பியபோது முகில்பரப்பு விரிசலிட்டு வான்புன்னகை எழுந்தது. காடெங்கும் இலைகளில் ஒளிநகை விரிந்தது. காற்று சுழன்றடிக்க காடு கூச்சலிட்டது. பறவைகள் வானிலெழுந்து சிறகுலைத்து நீர்த்துளி சிதறின. அசுரகுடிகள் கைகளைத் தூக்கி கூச்சலிட்டபடி துளிவிழுந்த சேற்றுமுற்றங்களில் கூத்தாடினர். கொம்பும் குழலும் விளித்து வெற்றியறைந்தனர். இன்னுணவும் கள்ளும் உண்டு களியாடினர். “வெல்லற்கரியவன் குன்றுமுகன்” என்றனர் பூசகர்.

ஆற்றாமையும் கண்ணீருமாக தன் அரண்மனையில் ஒடுங்கிக்கிடந்தான் இந்திரன். இந்திராணியாலும் அவனை தேற்றமுடியவில்லை. தேவர்கள் நாரதரைத் தேடி அழைத்துவந்தனர். அவனைத் தேடிவந்த நாரதரிடம் “தோற்று

திரும்பினேன், நாரதரே. ஒவ்வொருமுறை தோற்கையிலும் என் அரியணையின் கால் ஒன்று புதைகிறது. ஏழு தோல்விகளுக்குப்பின் நான் இந்திரனென அமையமுடியாது என்பது நெறி. அரியணை என்றும் இருக்கும். அமராவதியும் இருக்கும். இங்குள்ள செல்வமனைத்தும் இவ்வண்ணமே இருக்கும். இந்திராணியும் மாற்றமின்றி நீடிப்பாள். நான் ஒருவனே மறைவேன். இன்மையுள் கரைவேன்" என்றான்.

"போரின் ஒரு தருணத்தில் அப்பேருருவனை வெல்ல என்னால் ஆகாது என்ற எண்ணம் எழுந்துவிட்டது. என் மின்படைகள் அவனை வெண்ணிறஇறகென வருடிச் செல்வதையே கண்டேன். அதிரும் ஒளியில் அவன் முகத்தில் எழுந்த பெரும்புன்னகை என்னுள் ஆழத்தில் உறைந்த ஒன்றை அதிர வைத்தது. அது நான் என்னைப்பற்றி என் கனவுகளில் மட்டுமே உணர்ந்த ஓர் உண்மை. இசைமுனிவரே, நான் ஒரு துலாமுள்ளன்றி வேறல்ல. அசுரரும் தேவருமென பிரிந்து பிறிதொன்று ஆடும் களத்தில் நான் ஓர் அடையாளம் மட்டுமே."

"கை தளர்ந்த மறுகணமே கால் பின்னடைந்தது. என் அச்சத்தை ஐராவதம் உணர்ந்ததும் அது திரும்பி ஓடியது" என்றான் இந்திரன். "எப்படைக்கலமும் இனி என்னை சினந்தெழச் செய்யாதென்று உணர்ந்தேன். நான் மறையும் தருணம் அணுகிவருகிறது." நாரதர் புன்னகைத்து "இந்திரனே, மகாவீரியத்தை நீ வென்றது எப்படி?" என்றார். "வஞ்சத்தால், இரக்கமற்ற பெருவிசையால்" என்றான். "ஆம், நுண்கலையை எப்போதும் வெல்வது குருட்டுப்பெருவிசையே. கலையை அழிப்பது காட்டாளருக்கே எளிது. கலை தன்னை அறிபவனின் விரிவை தன் பாதையெனக்கொண்டு எழுவது.

நுண்மைகொண்டவனில் அது நுண்மை. கனவுநிறைந்தவனில் அது கனவு. அரசே, தெய்வங்களில் அது தெய்வத்தன்மை. வீணரிடமும் வெறிகொண்டவரிடமும் அது வீண்” என்றார் நாரதர்.

“மலர்பூத்த மரத்தை மோதும் மலைவேழமெனச் சென்று நீ மகாவீரியத்தை அழித்தாய். அதுவே முறை. பிறிதெவ்வகையிலும் அதை வெல்ல முடியாது. ஒலி கேளாதவனே யாழை உடைக்கமுடியும். விழியில்லாதவன் மட்டுமே ஓவியத்தை அழிக்கிறான். சுவை உணராதவனே தேன் கலத்தை கவிழ்க்கும் ஆற்றல்கொண்டவன்” என்றார் நாரதர். “உன்னை வெல்ல எழுந்த கலையை உணராத மூடனாகச்சென்று வென்றாய். அதுவே போர்வீரனின் வழி. அதன்பின் அந்நகரை உன் நகருக்குள் அமைத்துக்கொண்டாய். அதுவே அரசர்களின் வழி.”

இந்திரன் நீள்மூச்சுவிட்டான். “இங்கு உன்னை அறைகூவி நிற்பது பொருளில்லாப் பேருரு. இதன் மடம்புகளிலும் முகடுகளிலும் கரவுகளிலும் சரிவுகளிலும் ஒழுங்கென்று ஒன்றுமில்லை. இதில் உள்ளவை அனைத்தும் விசை என்ற பொருள்மட்டுமே கொண்டவை. அரசே, பெருமலையின் ஒவ்வொரு கூழாங்கல்லும் சிற்பத்துக்கு எதிரானது. அதன் ஒவ்வொரு இருப்பிலும் கலையின் மறுப்பு திகழ்கிறது” என்றார் நாரதர். “கலை தன்னைத் திறந்துவைத்து தன்னை அணுகுபவனுக்காக காத்திருக்கிறது. கலைப்பொருளில் முழுமை கூடுவது அதை அறிந்து உணர்பவன் உடனுறைகையில் மட்டுமே. அதன்முன் அதை மறுத்து

நின்றிருந்தபோது நீ அதன் முழுமையை சிதைத்தாய். அதை வென்றாய்.”

“இது முழுமைகூடிய இருப்பு. தன்முன் இருக்கும் எவரையும் இது அறிவதில்லை. எவரும் இதில் எதையும் கூட்டவோ குறைக்கவோ முடியாது. எதைக்கொண்டும் இதை மறைக்கவோ திரிக்கவோ இயலாது. எச்சொல்லாலும் இதை விளக்கவோ விரிக்கவோ இயலாது. பொருண்மையின் நெகிழ்வற்ற அறியாமையைச் சூடி நின்றிருக்கிறது மும்முக மாமலை. இதை வெல்ல உன் குருட்டுவிசை உதவாது என்று அறிக!” என்று நாரதர் சொன்னார். “கலையை இழந்த சிற்பியின் கட்டற்ற வஞ்சப்பெருக்கு பொருண்மை கொண்டெழுந்தது இம்மலை.”

“இதன் விழியின்மை முன் உன் மின்னொளி செல்லாது. இதன் செவியின்மை முன் உன் இடி ஒலிக்காது. இதன் அசைவின்மை முன் உன் ஆற்றல் இயங்காது” என்றார் நாரதர். “இதை நான் வெல்வது எப்படி?” என்றான் இந்திரன். நாரதர் அவன் தோளில் கைவைத்து “வெல்லும் வழி ஒன்றே” என்றார். “இவ்வசைவின்மையை கலை அசைவுள்ளதாக்கும். இவ்விழியின்மையை கலை ஒளி அறிவதாக ஆக்கும். இச்செவியின்மையில் கலை இசை நிறைக்கும். உன் அரசவையின் பெருந்தச்சனை அங்கு அனுப்பு. வானிடிக்கு கரையாத மலை கலைஞனின் சிற்றுளிக்கு நெகிழ்வதை நீ காண்பாய்.”

முகம் மலர்ந்த இந்திரன் “ஆம், அவ்வாறே!” என்றான். தனது அரசவையின் முதன்மை சிற்பியாகிய காம்யகனை அழைத்து “மும்முகனை வென்று வருக!” என்று ஆணையிட்டான். காம்யகன் ஆயிரம் கைகள் விரித்தெழும் வல்லமை

கொண்டவன். “தேவசிற்பியே, சென்று அவனை ஒரு சிற்பமாக்குக! பகைகண்டு அஞ்சும் கண்ணும் படைக்கலத்திற்கு முன்நிற்கும் உடலும் அவனில் எழுவதாக!” என்றார் நாரதர்.

காம்யகன் ஆயிரம் கைகளில் உளிகளும் கூடங்களும் அளவுகோல்களும் அளவைக் கயிறுகளும் நீர்நிகரிகளும் கொண்டு எழுந்து மண்ணிறங்கி மும்முகன் முன் சென்று நின்றான். அவன் நோக்கு தன்மேல் பட்டதுமே மும்முகன் மகிழ்ந்து குனிந்து நோக்கினான். “உன்னை மூடியிருக்கும் பொருளின்மையை செதுக்கி எடுப்பேன். உன்னுள் உறங்கும் பொருள் துலங்கச்செய்வேன்” என்றான் காம்யகன். “நீ என் கைகளுக்கும் கருவிகளுக்கும் முன் வெறும் முதற்பொருள் மட்டுமே.”

அவன் முன் சிறு மைந்தனென மகிழ்ந்து வளைந்து நின்றான் பேருருவன். அவன் காலடியில் இருந்த பாறை ஒன்றில் சிற்றுளியை வைத்து மெல்ல தட்டி கல்நுனியை உடைத்து வீசினான் சிற்பி. “உன்னிலிருந்து விலகிச்செல்லும் இந்தக் கற்சில்லைப் பார். பொருளற்றது என நீயே காண்பாய். பொருள்கொண்ட ஒன்றிலிருந்து பொருளின்மை எப்படி விலகிச்செல்லமுடியும்? அப்படியென்றால் அது உன்னுடையதல்ல என்றே பொருள்” என்றான் சிற்பி. செதுக்கிச் செதுக்கி அப்பாறையை சுட்டுவிரல் நகமென்றாக்கினான்.

குனிந்து தன் காலை நோக்கிய மும்முகன் திகைத்து “எங்கிருந்தது இது?” என்றான். “உன்னுள். நீயல்லாத அனைத்தையும் விலக்குகையில் நீ மீள்வாய்” என்றான் காம்யகன். “ஆம், விலக்குக!” என்றான் மும்முகன். அவன் தலைமேல் கூடுகட்டியிருந்த பறவைகள் கூவின. மூதாதைமுகம் கொண்ட தலைமேல் வாழ்ந்த கௌதாரிகள்

“எந்தையே, எண்ணித் துணிக! தன்னை பிறிதொன்றாக ஆக்குவது இறப்பேயாகும்” என்று கூவின. முனிந்த முகம்கொண்ட தலைமேலிருந்த சிட்டுக்குருவிகள் “முகம்கொண்டபின் நீங்கள் முடிவிலியை தலைசூட முடியாது, தந்தையே” என்று சிலம்பியபடி எழுந்துபறந்து சுழன்றன. சொல்லின்மையில் அமைந்த மலையில் வாழ்ந்த மைனாக்கள் “தாதையே, விழிகொண்டபின் ஒளியின்மையை நோக்கமுடியாதவர் ஆவீர்” என்றன.

ஆனால் தன்னைத்தான் நோக்கி உவகையிலாடி நின்றது மலை. கல்திரை விலக்கி எழும் அந்த உருவம் தன்னுள் ஒளிந்திருந்தது என்று எண்ணியது. “மலையரே, அது அச்சிற்பியின் உள்ளத்திலுள்ள உருவம்” என்றன கௌதாரிகள். “அவன் அகற்றுவனவற்றில் எஞ்சுவதைக்கொண்டே நீர் அவனை வெல்லமுடியும்” என்றன சிட்டுக்குருவிகள். “பேருருவரே கேளுங்கள், உருவின்மையே தெய்வங்கள் விரும்பும் உருவம்” என்றன மைனாக்கள். எச்சொல்லையும் அவன் செவிகொள்ளவில்லை. சிற்பி முதுமரத்தைக் கொத்தும் மரங்கொத்திபோல கற்பாறைகளில் தொற்றி ஏறி செதுக்கினான். அவன் கோரும் வகையிலெல்லாம் வளைந்து திரும்பி உதவியது மும்முகம்.

முற்றுருக்கொண்டு மும்முகன் எழுந்தபோது சிற்பி திரும்பி “அரசே, இதோ என் பணி முடிந்தது” என்றான். விண்ணில் ஐராவதம் தோன்றியது. அதிலிருந்த இந்திரன் தன் மின்படையைச் சுழற்றி மும்முகனை மூன்றாகப் பிளந்து வீழ்த்தினான். அவன் தலைகளை வெட்டி அகற்றினான் காம்யகன். மழையிரவின் இருளுக்குள் இடியோசை கேட்டு குடில்களுக்குள் இருந்த அசுரகுடிகள் எழுந்தோடி வந்து

நோக்கினர். மின்னல்கள் வெட்டி அணைந்துகொண்டிருந்தன. பூசகன் ஒருவன் கைசுட்டி “அதோ” என்றான். மறுமின்னலில் அவன் சுட்டியதென்ன என்று அவர்கள் கண்டுகொண்டனர். அங்கே பேருருவ முகம் மறைந்துவிட்டிருந்தது.

மறுநாள் விடிந்தபோது அவர்கள் அது விழிமயக்கல்ல என்று உறுதிகொண்டனர். கூட்டம்கூட்டமாக கண்ணீர்விட்டுக் கதறியபடியும் முழவுமீட்டி மும்முகனின் கதையைப் பாடியபடியும் அவர்கள் காட்டுக்குள் புகுந்து மும்முகனின் அடிநிலத்தை சென்றடைந்தனர். அங்கே பெருமுகமென அவர்கள் அன்றுவரை கண்டிருந்த தோற்றம் பாறைக்குவியலென சிதைந்து பரந்திருப்பதைக் கண்டனர். அதனருகே அமர்ந்து கண்ணீர்விட்டனர். மலரும் ஊன்படையலும் அளித்து மண்விழுந்த மூத்தோனை வணங்கி தங்கள் இல்லங்களுக்கு மீண்டனர்.

மும்முகனின் முதற்தலையிலிருந்து எழுந்த கௌதாரிகள் தொல்வேதச் சொல்லுரைத்து காட்டை நிறைத்தன. களிமயக்கின் முகத்திலிருந்து எழுந்த சிட்டுக்குருவிகள் விழைவின் பாடல்களை பாடின. ஊழ்கமுகத்திலிருந்து எழுந்த மைனாக்கள் நுண்சொற்களை உரைத்தன. அவற்றைக் கலந்து அவர்கள் உருவாக்கிய பாடலின் சொற்களில் மும்முகன் வாழ்ந்தான்.

“இந்திரன் மும்முகனை வென்ற கதையை ஒளிரும் ஆற்றங்கரையில் இளஞ்சூதனாகிய குணதன் சொல்லக்கேட்டேன். நிலவலைகளைக் கேட்டபடி அமர்ந்திருந்தேன்” என்றான் பிரசண்டன். “அவன் பாடிமுடித்ததும் நான் விருத்திரர்களின் மலைக்குடியில் என்னிடம் முதற்பூசகன் சொன்ன கதையை சொன்னேன்.

இருகதைகளும் நீர்ப்பரப்பில் இரு நெற்றுகள்போல மிதந்துசென்றன. அணுகி அகன்று மீண்டும் அணுகி அவை செல்வதை உணர்ந்தபோது நான் அலைகளைத்தான் எண்ணிக்கொண்டேன். அவனும் அதை எண்ணி அக்கணத்தில் அலைகள் என்று சொன்னான்.”

“திரிசிரஸை இந்திரன் வென்ற கதையை நான் பிறிதொரு வடிவில் கேட்டுள்ளேன்” என்றார் பிரசாந்தர். “த்வஷ்டாவின் மைந்தராக அசுரகுலமகள் வாகாவின் வயிற்றில் பிறந்து தன் தவத்தால் முழுமைகொண்டு இந்திரநிலை தேடிய முனிவர் அவர். ஒரு தலையால் வேதமும் மறு தலையால் ஊழ்கமும் பயின்றார். மூன்றாவது தலையை களிமயக்குக்கு அளித்திருந்தார். ஒவ்வொரு கணமும் வைதிகரும் ஊழ்கப்படிவரும் எதிர்கொண்டு போராடும் விழைவனைத்தையும் தனியாகப் பிரித்து ஒரு தலைக்கு அளித்தமையால் அவர் வேதம் தூய்மைகொண்டது. ஊழ்கம் முழுமைகொண்டது.”

“இந்திரன் படைக்கலத்துடன் எழுந்துவந்து அவரை வென்றபோது வேதமுகத்திலிருந்து மரங்கள் பற்றி எரியும் அனலெழுந்தது. களிமயக்கின் முகத்திலிருந்து நீர்நிலைகள் சுருண்டெழும் புயலெழுந்தது. ஊழ்கமுகத்திலிருந்து மலைகளை நுரைக்குமிழிகளென உடைக்கும் ஓங்காரம் எழுந்தது. இந்திரன் அஞ்சி ஓடி தன் அமராவதியில் ஒளிந்துகொண்டான். நாரதர் அவனிடம் சொன்னார், திரிசிரஸின் வெற்றி அவரது ஒரு முகம் பிறிதொன்றுக்குத் தெரியாதென்பதே. இந்திரன் வெண்முகிலொன்றை மாபெரும் ஆடியென்றாக்கினான். அதில் களிமுகத்தை வேதமுகத்திற்குக்

காட்டினான். வேதமுகத்தை ஊழ்கமுகத்திற்குக் காட்டினான். ஊழ்கமுகத்தை களிமுகம் கண்டது.”

“களிமுகம் கண்ட வேதமுகம் தன் கரந்துறைந்த விழைவைக் கண்டறிந்து சொல்தவறியது. வேதம் பிழைக்கவே அதன் ஆற்றல் அழிந்தது. வேதமுகம் கண்ட ஊழ்கமுகத்தின் அமைதிக்குள் அறிவின் வினா எழுந்தது. ஊழ்கம் கலைந்தது. ஊழ்கமுகம் கண்ட விழைவுமுகம் தன்னுள் உறைந்த பிறிதொன்று களியாட்டை அறிவதேயில்லை என்று உணர்ந்து திகைத்தமைந்தது. மும்முகமும் செயலிழக்க அத்தருணத்தில் இந்திரன் அவற்றை மூன்றென வகுந்திட்டான்.”

“அத்தலைகளை தேவசிற்பி ஒருவன் வெட்டிக்கொண்டுசென்றான். அமராவதியின் மூன்று வாயில்களையும் அம்முகங்கள் அணிசெய்தன. ஒரு வாயில் இளங்காலையில் வேதமோதும்படி அமரர்களை அழைத்தது. மற்றொன்று அந்தியில் கொண்டாடி மகிழும்படி கூவியது. பிறிதொன்று இரவின் அமைதியில் முழுதடங்கி உள்ளுணரும்படி சொன்னது” என்றார் பிரசாந்தர்.

**[ 9 ]**

கைமுழவை மீட்டி மெல்ல நடனமிட்டுச் சுழன்று நின்ற சண்டன் சொன்னான் “அமராவதிக்குள் நுழையும் வேதியர் களிமயக்கில் நின்றிருக்கும் முகத்தினூடாகவே செல்லவேண்டும் என்று நெறியுள்ளது. விழைவாடுபவர் ஊழ்கப்படிவரின் முகத்தினூடாக நுழையவேண்டும். வணிகர்களே, ஊழ்கப்படிவர் நுழைந்தால் வேதமுகம்கொண்ட வாயிலே காட்டப்படும்.” கைகளால் விரைந்து தாளமிட்டு நிறுத்தி “ஏனென்றால் ஒவ்வொருவரும் தாங்கள்

விழைந்தவற்றின் வடிவில்தான் விழைவுக்கரசின் அணிநகருள் புகமுடியும். இழந்ததென்ன என்று அறிந்தாலே விழைந்தது என்ன என்று அறிவதுதான் அல்லவா?” என்றான்.

வணிகர்கள் உரக்க நகைத்தனர். சிலர் வெள்ளி நாணயங்களை சண்டனை நோக்கி வீச அவன் குனிந்து அவற்றைப் பொறுக்கி தன் மடிச்சீலையில் முடிந்துகொண்டான். “வெள்ளியும் பொன்னும் துள்ளிவருவதைப்போல் அழகிய காட்சியென புவியிலேதும் இல்லை. வணிகர்களே, கங்கைப்பரப்பில் மீன் துள்ளுவதைப்போல் இங்கு செல்வம் துள்ளட்டும். உடனெழுந்து துள்ளும் என் சொல்” என்றான்.

“விருத்திரனை இந்திரன் வென்ற கதையை சொல்லவந்தாய், சூதனே” என்றார் முதிய வணிகர். “ஆம் அக்கதையைத்தான் சொல்லிக்கொண்டிருக்கிறேன். கதைகளுக்குள் கதைகள் புகுந்துகொள்கின்றன. கதைகளிலிருந்து கதைகளை பிரித்தெடுத்து நீட்டுகையில் கதைகளுடன் அவை பின்னிக்கொள்கின்றன. வணிகர்களே, மண்ணுக்கு மேலே கிளையென கொடியென தண்டென பின்னிய கதைகளை நாம் காண்கிறோம். காணா ஆழத்தில் வேரெனப் பின்னிய கதைகளை அறிவதே இல்லை.” முழவை மும்முறை மீட்டி “ஒரு மிடறு இனிய கள் ஒருவேளை அக்கதைகளை மீட்டுக்கொண்டுவரக்கூடும்” என்றான்.

“இது கள்ளருந்தும் தருணம் அல்ல. கதை இருந்தால் சொல்க!” என்றார் முதிய வணிகர். “ஆம், மேலெழுந்த கதைகளைச் சொல்கிறேன். கரந்துறையும் கதைகளை உங்கள் கரந்துறையும் காதுகள் கேட்பதாக!” என்று சொல்லி முழவை மீட்டி மெல்ல ஆடினான் சண்டன். ஜைமினி பைலனிடம் “இவர் சொல்பவை எந்நூலில் உள்ள கதைகளென்றே தெரியவில்லை” என்றான்.

“நூலில் இடம்பெறப்போகும் கதைகள்” என்றான் பைலன். சுமந்து சிரித்தபடி “நூலில் இருந்து உதிர்ந்த கதைகளும் உண்டு எனத் தோன்றுகிறது” என்றான்.

“மும்முகனின் குருதி ஊறிப்பெருகி ஓர் அலையென எழுந்து விண்ணை அறைந்தது. அமராவதியில் தன் உப்பரிகையில் நின்று நோக்கிய இந்திரன் தொலைவில் அந்திவானம் வழக்கத்தைவிட சிவந்திருப்பதைக் கண்டான். அச்சிவப்பு பெருகிவருவதை உணர்ந்ததும் அச்சம் கொண்டான். அது ஒரு குருதிப்பேரலையென எழுந்து வந்து அமராவதியின் நகர்முகத்தை அறைந்தது. கோட்டையைக் கடந்து தெருக்களை நிறைத்தது. சுழியும் நுரையுமெனப் பெருகி வந்தது” சண்டன் சொன்னான்.

இரு கைகளையும் விரித்து அக்குருதிமுன் நின்று இந்திரன் சொன்னான் “முனிவனைக் கொன்ற பழி என்னைச் சூழ்க! என் நகரை விட்டொழிக!” குருதியில் ஒரு முகம் மூக்கும் வாயும் கொண்டு எழுந்தது. “மூன்று பழிகளால் சூழப்பட்டாய், இந்திரனே. ஊழ்கத்திலமர்ந்த முனிவனைக் கொன்றமையால் நீ பழிகொண்டாய். வேதமோதிய வைதிகனைக் கொன்றமையால் இருமடங்கு பழிகொண்டாய். காமக்களிமயக்கில் இருந்தவனைக் கொன்றமையால் மும்மடங்கு பழிகொண்டாய்.”

“இப்பழிக்கு உன் நகரும் நாடும் கொடியும் முடியும் குலமும் சுற்றமும் குருதியும் போதாது” என்றது குருதிவடிவம். “இப்பெருநகரை நூறுமுறை உண்டாலும் தீராது என் பழி” என்று கூவியது. துயருடன் “அப்பெரும்பழிக்கு நிகரென நான் கொடுப்பதேது?” என்றான் இந்திரன். குருதிகண்டு அங்கே ஓடிவந்த நாரதர் சொன்னார் “இக்கணத்தில் கொடுப்பதென்றால் இந்திரபுரியும் மிகச்சிறிது. ஆனால் எதையும் முடிவிலிவரை

நீட்டினால் மிகப்பெரிதே. இப்பழியை காலத்தில் நீட்டிச்செல்க!” குருதிவடிவன் “ஆம், அவ்வாறு என் பழி நிகர்செய்யப்பட்டாலும் நன்றே” என்றான்.

“இந்திரனுக்கென இப்பழியை உயிர்கள் சுமக்கட்டும். அவன் முகிலருளால் வாழ்பவை அனைத்தும் இங்கு வருக!” என்றார் நாரதர். மண்ணிலுள்ள அனைத்துக்கும் தேவருலகில் உள்ள நிகர்வடிவங்கள் வந்து அவர்கள் முன் நிரைவகுத்தன. “இந்திரனை வேண்டி அருள்கொள்வனவற்றில் முதன்மையானவை இவை” என்றார் நாரதர். “நிலம் மழை கொள்கிறது, நீர் மின் கொள்கிறது, மரம் இடி கொள்கிறது, பெண் அவன் ஆண்துளியை கொள்கிறாள். அவர்கள் இப்பழியை ஊழிமுடிவுவரை சுமக்கட்டும்” என்றார்.

“என்பொருட்டு இதை சுமப்பவர்களுக்கு நற்சொல்லொன்றை அளிப்பேன். அப்பழி சுமக்கும் நாள்வரைக்கும் அக்கொடையும் உடனிருக்கும்” என்றான் இந்திரன். “அவ்வாறே ஆகுக!” என்றனர் நிலமும் நீரும் மரமும் மங்கையும். குழிகையில் நிறைக என அருளி அப்பழியை நிலத்திற்கு அளித்தான் இந்திரன். இணைகையில் வளர்க என்று நீர் அப்பழியை சூடிக்கொண்டது. முறிந்தாலும் இறப்பில்லை என்னும் நற்சொல்லுடன் பழிசூடியது மரம். விழைவு அடங்காதெரிக என்னும் வாழ்த்துடன் அதைப் பெற்றாள் பெண். நிலத்தில் களரூற்றாக செங்குழம்பெழுந்து குமிழியிடுவது அப்பழியே. நீரில் குமிழிகளென நுரைகொள்வது அக்குருதி. மரத்தில் அது செவ்வரக்கு. பெண்களில் அது மாதவிடாய்.

“வணிகர்களே, தாதவனம் என்னும் ஊரின் பெருவழிச் சந்திப்பில் நான் பிரசாந்தரைக் கண்டேன். இந்திரன் அவனுக்கு வேள்வியில் பலிகொடுக்கப்படும் பசுவின் தலை காம்யகன்

என்னும் தச்சனுக்கு செல்லவேண்டும் என்று அறிவித்ததாக சொன்னார். வேள்வியில் கழுத்துக்குழாய் வெட்டி குருதிசொரிந்து அனலெழுப்பியபின் துண்டுபடுத்தி அகற்றி இலைத்தாலம்மீது பசுவின் தலை வலக்கொம்பு கீழே சரிந்த நிலையில் வைக்கப்படும்போது பொன்னிறச் சிறகுகள் கொண்ட ஈயெனப் பறந்துவந்து அப்பலியை கொள்பவன் அவனே என்றார்” என்று சண்டன் தொடர்ந்தான்.

“பின்னர் குத்ஸிதம் என்னும் மலைக்குடியில் நான் பிரசண்டரைக் கண்டேன்” என்றான் சண்டன். “முதிய சூதர் சடைமுடிக்கற்றைகள் தோளில் சரிய செவ்விழிகளில் கள்ளின் பித்து வெறித்திருக்க என்னிடம் சொன்னார், தொல்குடி அசுரர் தங்கள் குடியிலிருந்த அத்தனை தச்சர்களின் கட்டைவிரல்களையும் வெட்டி வீசினர். அவர்கள் கல்வெட்டி சுவர் எழுப்புவதில்லை என்றும் மரம்வெட்டி கூரைவேய்வதில்லை என்றும் உறுதிகொண்டனர். அதன்பின்னரே உள்காடுகளுக்குள் புகுந்து கற்குகைகளை இல்லங்களாகக் கொள்ளலாயினர்.”

# கிராதம் - 41

**[ 10 ]**

சண்டன் “மும்முகப் பிரஜாபதியை நான்முகப் பிரஜாபதி வென்றதே கதை என்றறிக!” என்றான். முழவை மீட்டி “மும்முகன் அறியாதது ஒரு திசை மட்டுமே. அது வலமில்லை இடமில்லை பின்னாலும் இல்லை. தன் முன்பக்கத்தை. தன்னை நோக்காத மும்முகன் குலத்தோர் மறைந்தனர். தன்னை மட்டுமே நோக்கிய நான்முகன் மைந்தர் எழுந்தனர்”

என்றான். வணிகர்கள் "ஆம்! ஆம்!" என்றனர். "அரிய சொல்" என்றார் ஒரு முதுவணிகர்.

ஜைமினி உரக்க "இவை முறையான கதைகளல்ல. இவற்றுக்கு நூற்புலம் ஏதுமில்லை. சொல்லிச்சொல்லி அனைத்தையும் உருமாற்றுகிறான் இந்த வீணன்" என்று கூவினான். சண்டன் புன்னகையுடன் திரும்பி "அவ்வாறென்றால் நீங்கள் அறிந்த மெய்க்கதையை நீங்கள் சொல்லுங்கள், உத்தமரே" என்றான். ஜைமினி "அதை இவ்வணிகர்முன் சொல்ல எனக்கு உளமில்லை" என்றான். சண்டன் "அப்படியென்றால் அவர் சொல்லட்டும்" என பைலனை சுட்டினான்.

பைலன் "இளையவர் சொல்ல விரும்புவார்" என்றான். சுமந்து ஊக்கத்துடன் "ஆம், நானறிந்ததை சொல்கிறேன்" என முன்னால் சென்றான். "விஸ்வரூபனின் கதையை தேவலரின் புராணகாதம்பரி சொல்கிறது" என்றான். "அந்நூலை நான் நான்குமுறை முழுதாக கற்றிருக்கிறேன். பலமுறை சொல்லியும் இருக்கிறேன்." "சொல்க! சொல்க!" என்றனர் வணிகர். அவன் சொல்லத்தொடங்கினான்.

அசுரகுலத்தில் பிறந்தவள் அன்னை வாகா. அசுரர்களுக்கு முழவின்குரல் என்பது நெறி. அன்னையோ இளமையிலேயே குழலினிமைகொண்ட குரலுடனிருந்தாள். அசுரகுலமுறைப்படி வேட்டையாடி ஊனுண்டு மதுக்களியாடி அவள் வாழ்ந்தாள். ஒருநாள் காட்டுக்குள் அவள் செல்கையில் ஒரு முனிவர் ஆற்றங்கரையில் அமர்ந்து வேதமோதக் கண்டாள். அவள் அச்சொற்களை ஒருமுறைதான் கேட்டாள். தீட்டிக்கூராக்கிய வைரங்களெனச் சொல்லெழ வேதமோதக் கற்றாள்.

அந்நதிக்கரையிலமர்ந்து வேதமோதிக்கொண்டிருந்தவர் மாமுனிவராகிய த்வஷ்டா. அவர் காட்டுக்குள் செல்கையில் மரங்களில் பறவைகள் சிறகோய்ந்து அமைந்திருக்க மீன்கள் நீர்ப்படலத்திற்குள் விழிகளென நிறைந்திருக்க மானும் சிம்மமும் இணைந்து மயங்கிநிற்க இனிய ஓசையுடன் வேதமெழக்கேட்டார். அருகே சென்று நோக்கியபோது அதை ஓதுபவள் ஓர் அசுரகுலப்பெண் என்று கண்டார். அவளிடம் “அசுரகுலத்தவளே, வேதமுழுமை உன்னில் எப்படி கைகூடியது?” என்று கேட்டார். “இது வேதமென்றே நானறியேன். ஆற்றங்கரையில் நான் கேட்ட ஒரு பாடல் இது. இனிதென இருப்பதனால் பாடினேன்” என்றாள் அவள்.

வேதத்தை அறியும் நல்லூழும் வேதமோதிப் பெற்ற நற்பலனும் கொண்டவள் அவள் என உணர்ந்த த்வஷ்டா “நீ வேதமுணர்ந்த மைந்தனைப் பெறுவாய்!” என வாழ்த்தினார். அவளுக்கு வாகா என்று பெயரிட்டு தன் துணைவியாக்கிக்கொண்டார். அவளிடம் காமம் கொள்வதற்காக தன்னுள் இருந்து உகிர்களும் எயிறுகளும் அனல்பரவிய குருதியுமாக அசுரன் ஒருவன் எழுவதை அவர் உணர்ந்தார். அவள் வேதத்தை பெற்றுக்கொண்டாள். அவர் விழியுளமறிவென ஏதுமில்லா விலங்குக் காதலை அவளிடமிருந்து பெற்றுக்கொண்டார்.

வாகாவின் வயிற்றில் பிறந்த மைந்தன் மும்முகம் கொண்டிருந்தான். மூன்றுமுகம் கொண்ட மைந்தனைக் கண்டு திகைத்த த்வஷ்டாவிடம் அவரது தந்தையாகிய விஸ்வகர்மர் சொன்னார் “மூன்று விழைவுகள் மைந்தனுக்காகக் கோரின. ஒன்று அசுரனொருவனுக்காக எழுந்தது. மற்றொன்று வேதமெய்யறிவன் பிறக்கும்பொருட்டு வேண்டியது. மூன்றாம் விழைவு இரண்டையும் கடந்த படிவனொருவனுக்காக

எழுந்தது. மூன்று விழைவுகளும் இணைந்துபிறந்த இம்மைந்தன் மும்முகனாகத் திகழ்கிறான்.”

மும்முகன் வளர்ந்து மெய்யறிவனென்றானான். வேதமெய்மையை ஓதியது ஒரு முகம். ஊனும் கள்ளும் கொண்டு களித்தது பிறிதொருமுகம். ஊழ்கத்திலமைந்திருந்தது மூன்றாம் முகம். வேதிய முகத்தை அன்னை விரும்பினாள். கிராத முகத்தை தந்தை விரும்பினார். இருவரையும் விரும்பியது ஊழ்க முகம். வேதியரின் ஒழுங்கும் அசுரரின் விசையும் படிவரின் அமைதியும் கொண்டவர் அவர் என்றனர் முனிவர். அவர் சொல்லும் ஒவ்வொரு வேதச்சொல்லையும் தேவர்கள் விரும்பி ஏற்றனர். அவர் அளித்த அவிகொள்ள மும்மூர்த்திகளும் வானிலெழுந்தனர்.

அந்நாளில் பிரஜாபதியான கசியபர் நாரதரிடம் கேட்டார் “இப்புவியில் வேதத்தை முழுதறிந்தவர் யார்?” நாரதர் சொன்னார் “மண்ணுலகில் வாழும் வேதமெய்யறிவராகிய திரிசிரஸ்.” அதைக் கேட்டு கசியபர் ஆணவம் புண்பட்டார். தானறியாத வேதமேது திரிசிரஸிடம் என்றறிய தானே ஒரு மைனாவாக மாறி அவர் அருகே மரக்கிளையில் அமைந்து அவர் ஓதும் வேதத்தை கேட்டார். அவர் கற்ற வேதத்தையே திரிசிரஸ் பாடினார். ஆனால் அவர் ஒருபோதும் உணராத இனிமை அதில் இருந்தது.

திகைப்புடன் மீண்டு வந்து நாரதரிடம் “அந்த வேதத்தின் இனிமை எப்படி அமைந்தது?” என்று கேட்டார். “அந்தணமுனிவரே, அவருடைய அசுரமுகம் பிறிதொரு வேதத்தை பாடுகிறது. வைதிகமுகம்கொண்டு அவர் பாடும் அனைத்து வேதவரிகளுடனும் ஒரு சொல்லென அதுவும்

இணைந்துகொண்டுள்ளது. அப்போதுதான் அது முழுமையடைகிறது" என்றார் நாரதர். "மறைந்த வேதம் அது. நீருக்குள் ஒளியென அது இருக்கையிலேயே வேதம் முழுமைகொள்கிறது."

கசியபர் மேலும் ஆணவம் புண்பட்டார். திரிசிரஸிடம் வந்து அவர் பாடிய அந்த வேதவரிகளுக்கு பொருளென்ன என்று கேட்டார். திரிசிரஸின் இருமுகங்களுக்கும் அதன் பொருள் தெரிந்திருக்கவில்லை. ஊழ்கமுகம் கொண்ட திரிசிரஸ் மூன்று கைவிரல் செய்கைகளில் அதற்கு முழுவிளக்கம் அளித்தார். அனைத்து விரல்களையும் விரித்து முழுவிடுதலை காட்டினார். கைமேல் கைவைத்து அமரும் முத்திரையை காட்டினார். கட்டைவிரலை சுட்டுவிரலால் தொட்டு முழுமைமுத்திரையை காட்டினார்.

கசியபர் "ஆம், ஒன்று பிறிதை நிறைக்க எழுந்த மும்முகனே வேதமுதல்வன். காட்டாளனும் மெய்யறிவனும் இருபுறம் நிற்கையிலேயே வேதம் முழுமைகொள்கிறது" என்றார். நாரதர் புன்னகைத்து "காட்டாளனும் வேதமும் இருபுறம் நிற்கையிலேயே ஊழ்கம் தகைகிறது" என்றார். பின்னர் மேலும் உரக்க நகைத்து "வெறிகொண்டெழும் காட்டாளனுக்கு இருபுறமும் வேதமும் ஊழ்கமும் காத்துநிற்கின்றனவா, முனிவரே?" என்றார். "ஆம்" என்று கசியபர் சொன்னார்.

அங்கிருந்து இந்திரன் ஆண்டமர்ந்த அமராவதிக்கு நாரதர் சென்றார். அங்கே அவையமர்ந்திருந்த இந்திரனிடம் அந்நகரின் முழுமையை புகழ்ந்து பேசினார். "ஒரு துளி ஆசுரம் கலந்திருப்பதனால் இந்நகர் அழியாநிறை கொண்டிருக்கிறது. இது வாழ்க!" என்றார். சினம்கொண்ட இந்திரன் "இங்கு ஆசுரமென ஏதுள்ளது? இது தேவர்களின் உலகு" என்றான்.

“அரசே, இங்கு அவையமர்ந்திருக்கும் பிரஹஸ்பதி அசுரர்களுக்கும் குரு அல்லவா?” என்றார் நாரதர். இந்திரனால் மேலும் சொல்லெடுக்க முடியவில்லை.

ஆனால் அவன் உள்ளம் திரிபடைந்தது. பிரஹஸ்பதியை அவன் ஐயத்துடன் நோக்கலானான். ஐயம்கொண்டவன் தன் அனைத்து அறிவாலும் அந்த ஐயத்தை நிறுவிக்கொள்ளவே முயல்கிறான். ஆகவே அதை அவன் நிறுவிக்கொள்வான். ஐயம் அச்சமாகியது. அச்சம் சினத்தை கொண்டுவந்தது. ஒருநாள் தன் அவைக்கு வந்த பிரஹஸ்பதியிடம் இந்திரன் “நீங்கள் உங்கள் முழுதுள்ளத்தை தேவர்களுக்கு அளிக்கவில்லை. அசுரர்களையும் உங்கள் மைந்தரென்றே எண்ணுகிறீர்கள்” என்றான்.

“நான் தேவருக்கும் அசுரருக்கும் ஆசிரியன். கற்பிப்பது என் பணி. கல்வியை விழைவுக்கு அவர்களும் நிறைவுக்கு நீங்களும் பயன்படுத்துவதனால் நீங்கள் மாறுபடுகிறீர்கள்” என்றார் பிரஹஸ்பதி. இந்திரன் “தேவர்களுக்கு மட்டுமென நீங்கள் மெய்மையை கற்பிக்கவில்லை” என்றான். “மெய்மை அனைவருக்கும் உரியது” என்றார் பிரஹஸ்பதி. “மாணவனை விரும்பாத ஆசிரியனால் அறிவை அளிக்கமுடியாது” என்று இந்திரன் சொன்னான்.

உளம் புண்பட்ட பிரஹஸ்பதி “நீ என்னை ஐயப்படுகிறாயா?” என்றார். “நீங்கள் இனி தேவர்களுக்கு மட்டும் உரியவராக இருப்பதாக சொல்லுங்கள்” என்றான். “அச்சொல்லை நான் சொல்லமுடியாது. நீ என் அருமையை அறிந்து மீள்வதுவரை தேவருலகைவிட்டு அகல்கிறேன்” என்று சொல்லி பிரஹஸ்பதி கிளம்பிச்சென்றார். இந்திராணி “அவர் நம் முதன்மையாசிரியர்.

அவரை அழையுங்கள்" என்றாள். இந்திரன் "அவர் செல்லட்டும். நாம் நம் மெய்மையை மட்டும் சூடி இங்கிருப்போம்" என்றான்.

மறுநாள் வேள்விக்கு அமர்ந்த முனிவர்கள் "முதன்மைவைதிகரான பிரஹஸ்பதி அமராமல் வேள்வி இங்கு நிகழாது" என்றனர். "ஏன், நீங்கள் வேதம் முற்றறிந்தவர்கள் அல்லவா?" என்று இந்திரன் சினம்கொண்டு கேட்டான். "ஆம், ஆனால் நாங்களறிந்தது தேவர்களின் வேதம். அசுரவேதம் அறிந்தவர் அவர்மட்டுமே. அதுவுமிணையாமல் வேதம் முழுமைகொள்வதில்லை." இந்திரன் திகைத்து அமர்ந்திருக்க "சென்று அவரை அழைத்துவாருங்கள், அரசே!" என்றனர் முனிவர்.

நாரதரை அழைத்து "என்ன செய்வது, முனிவரே? இங்கிருந்து மறைந்த பிரஹஸ்பதியை நான் எங்கு சென்று தேடுவது?" என்றான் இந்திரன். "மண்ணில் அவருக்கு நிகரென பிறிதொருவன் இருக்கிறான். அவன் பெயர் திரிசிரஸ். வேதமெய்மை உருக்கொண்டு எழுந்த அவனை பேருருவன் என்கின்றனர்" என்றார் நாரதர். நாரதரையே அனுப்பி திரிசிரஸை அழைத்துவரச்சொல்லி வேதவேள்வியைத் தொடங்கினான் இந்திரன். ஐயம்கொண்டிருந்த முனிவர் திரிசிரஸின் முதற்சொல்லைக் கேட்டதும் அவரே முதல்வர் என ஏற்றனர்.

வேதம் செழித்தது விண்நகரில். ஆனால் நாள் செல்லச்செல்ல அசுரர்களும் பெருகலாயினர். இந்திரனின் அரியணையைத் தாங்கிய துலாக்கோல் நிலைபிறழ்ந்தது. அதன் முள் அசுரர்பக்கம் சாயத்தொடங்கியபோது இந்திரன் அது எவ்வாறு நிகழ்ந்தது என்று முனிவர்களை அழைத்து கேட்டான். "அரசே, நாம் இடும் வேள்விக்கொடை அசுரர்களுக்கும் செல்கிறது"

என்றனர் முனிவர். “எவ்வண்ணம் செல்லமுடியும்? தேவர்களில் அசுரர்களுக்கு அவியிடுபவர் யார்?” என்றான் இந்திரன். ஐயத்துடன் சொல்லின்றி நின்றனர் தேவர். அவர்களின் சொல்லின்மையைப் புரிந்துகொண்ட இந்திரன் தலையசைத்தான்.

மறுநாள் வேள்வி நிகழ்கையில் தலைமைகொண்டு அமர்ந்திருந்த மும்முகனையே இந்திரன் நோக்கிக்கொண்டிருந்தான். அவருடைய கிராதமுகம் சொல்லும் வேதச்சொல்லை இதழ்களைக் கூர்ந்து நோக்கினான். அவர் அசுரர்களுக்கு கொடையளிப்பதைக் கண்டான். அனலில் நீலக்கொழுந்து எழுந்து நாவாகி அந்த கொடையைப் பெற்றுக்கொண்டதை உணர்ந்தான். என்ன செய்வதென்று அறியாமல் திகைத்தான்.

அன்றே ஒரு கிளியென்றாகி பறந்து மண்ணுலகுக்கு சென்றான். கிளிகள் சொல்லும் மொழிகளைக் கூர்ந்தபடி அலைந்தான். ஒரு கிளி சொன்ன சொல் வேதச்சந்தத்துடன் இருப்பதை உணர்ந்ததும் அதை பின்தொடர்ந்தான். அக்கிளி சென்றணைந்த மரத்தின் அடியில் பிரஹஸ்பதி தவம் செய்துகொண்டிருந்தார். அவர் காலடியில் விழுந்து “பிழை செய்துவிட்டேன், ஆசிரியரே. ஆசிரியர் மாணவருக்கு உரிமைகொண்டாடலாம், ஆசிரியனுக்கு மாணவன் உரிமைகொண்டாடக்கூடாதென்று இன்று அறிந்தேன். கனிவு கொள்க!” என்றான்.

பிரஹஸ்பதி கனிந்தார். தன் முதன்மை மாணவனாகிய காம்யகன் என்னும் சிற்பியை இந்திரனுடன் அனுப்பினார். மறுநாள் வேள்வி நிகழ்கையில் காம்யகன் திரிசிரஸின் அருகே நின்றிருந்தான். வேள்வியனலில் அவியிடும்போது கிராதமுகம் அசுரர்களுக்கு என வேதமோதி அளித்த அவி அனல்சேரும்

முன் தச்சன் அந்தத் தலையை துண்டித்தான். திகைத்து திரும்பிநோக்கிய வேதமுகம் தான் ஓதிய சொல்மறந்து நின்றது. அந்தத் தலையை இந்திரன் துண்டித்தான். இருமுகமும் சரிந்தபோது ஊழ்கமுகம் நிகர்நிலை அழிந்து முகம் சுளித்தது. அந்தத் தலையை இந்திரன் துணித்தான்.

“இந்திரன் திரிசிரஸை வென்ற கதை இது” என்றான் பைலன். ஜைமினி “ஆம், மும்முகன் செய்த வேள்வி அசுரர்களுக்குச் சென்றது. அந்தக் கரவுக்குரிய தண்டமே அவருக்கு அளிக்கப்பட்டது” என்றான். “அப்படியென்றால் பன்னிரு தூயநீர்நிலைகளில் ஏன் இந்திரன் நீராடி பழி களைந்தான்?” என்றான் சுமந்து. “வேதமோதி அவிக்கரண்டியுடன் அமர்ந்த வைதிகனைக் கொன்ற பழி அகலும்பொருட்டே” என்றான் ஜைமினி.

“அசுரனும் அந்தணனும் கலந்து ஒன்றாகக்கூடுமென்பதை உணர்ந்தே ஊழ்கமுகம் புன்னகைத்தது என்று தேவலரின் புராணகாதம்பரி சொல்கிறது” என்றான் பைலன். “ஆம்” என்றான் சுமந்து. உரக்க நகைத்து சண்டன் சொன்னான் “அசுரரில் இருந்து வேதத்தையும் வேதத்திலிருந்து அசுரத்தையும் வெட்டிவிலக்குவதே தேவர்களுக்கரசனின் முதற்பணி போலும்.”

**[ 11 ]**

பிரம்மகபாலத்தின் குகைக்குள் அமர்ந்திருந்த மூவரில் சூதன் எழுந்துசென்று இலைமறைப்பினூடாக வெளியே நோக்கினான். “இன்னமும் ஓயவில்லை மழை. நீர்ப்பொழிவுகள் பெருமரங்கள் போல வேரூன்றி நின்றிருக்கின்றன” என்றான். அந்தணர் “இந்த மழை எளிதில் ஓயாது. இக்காட்டைக் கண்டதுமே அதை அறிந்தேன். நீர்கொள் உடல்கொண்ட மரங்களே இங்கு

மிகுதியாக உள்ளன. நீர்நிலைகள்தோறும் தவளைகள் செறிந்திருக்கின்றன” என்றார். சூதன் திரும்ப வந்து அமர்ந்துகொண்டான். பிச்சாண்டவர் இருகைகளையும் மார்பின்மேல் கட்டி தசைச்சிலையென அமர்ந்திருந்தார்.

“மலைச்சிற்றூரில் கபாலரின் சொற்களில் நீங்கள் கேட்ட விருத்திரனின் கதையை சொல்க!” என்றார் பிரசாந்தர். “அந்தணரே, குளிர்ந்த பாறைமேல் படுத்து விண்மீன்களை நோக்கியபடி நான் கேட்ட கதை இது” என்று பிரசண்டன் சொன்னான். “திரிசிரஸின் இறப்பால் உளமுடைந்த த்வஷ்டா அனைத்தையும் துறந்து பித்தனென காட்டில் அலைந்தார். சடைவளர்ந்து நிலம்தொட்டது. தாடிவளர்ந்து கால்களில் ஆடியது. கைநகங்கள் வளர்ந்து சுருண்டு உள்ளங்கைக்குள் செறிந்தன. அவர் இமைமயிரும் வளர்ந்து நோக்கைமூடியது. உடல்பழுத்து மண்படியும் நிலையை அடைந்தும் உயிர் எஞ்சி நின்றது. நூற்றெட்டுமுறை முயன்றும் தன் உடல்விட்டு உயிரை உதிர்க்க அவரால் இயலவில்லை.”

நெஞ்சுள் அமைந்த உயிரிடம் அவர் கோரினார் “சொல்க, இந்தப் பட்டமரம்விட்டு விண்ணிலெழ உனக்கு என்ன தடை?” உயிர் சொன்னது “விடாய்கொண்டும் விழைவுகொண்டும் வஞ்சம்கொண்டும் எவரும் இறக்கலாகாது, அசுரரே. நான் கொண்ட வஞ்சம் அடங்கவில்லை.” கண்விழித்த த்வஷ்டா நடந்து காட்டைவிட்டு வெளியே வந்து அவ்வழி சென்ற இடைச்சி ஒருத்தியிடமிருந்து இளம்பால் வாங்கி அருந்தி தன் உயிரை மீட்டுக்கொண்டார். உயிரின் வஞ்சம் ஒழிய என்ன செய்வதென்று எண்ணியபடி ஊர்கள் தோறும் அலைந்தார்.

அப்பயணத்தில் அவர் பிரஹஸ்பதியை கண்டடைந்தார். குற்றாலமரத்தின் உச்சியில் இருந்த பொந்து ஒன்றுக்குள் ஒரு

மலைக்கழுகு உணவுகொண்டு போடுவதைக் கண்டு மரத்தின் மேலேறி அதற்குள் அவர் எட்டிப்பார்த்தபோது கையளவே ஆன உடல் ஒன்று சுருண்டு மூச்சசைவுடன் இருப்பதைக் கண்டார். அவர் பிரஹஸ்பதி முனிவர் என்று உணர்ந்ததும் வணங்கி தன் உளத்தேடலை சொன்னார். முனிவரின் குரல் வெளியே எழவில்லை. ஆகவே அவ்வுருவை அவர் அருகே ஓடிய கங்கையின்மேல் வைத்தார். கங்கையில் அலைகளென அவர் குரல் மாறியது. அவ்வதிர்வை விழிகளால் நோக்கி அவர் குருமொழியை உணர்ந்தார்.

பிரஹஸ்பதி சொன்னார் "மைந்தா, சிற்பியென நீ கொண்ட பொருட்களின் எல்லையையே அப்படைப்புகளும் கொண்டுள்ளன என்று நீ அறிக! பொன் உருகுவது. பாறை பிளப்பது. இனி உன் கலை அனலில் எழுக!" த்வஷ்டா கைகூப்பி "நான் செய்ய வேண்டியதென்ன, முதலாசிரியரே?" என்றார். "அணையாத அனலில் உன் படைப்பு எழுக!" என்றார் பிரஹஸ்பதி. முனிவரை மீண்டும் பொந்துக்குள் வைத்துவிட்டு காட்டுக்குள் செல்லும்போது அணையாத அனலேது புவியில் என்பதே அவர் எண்ணமாக இருந்தது. எரிவதென்பதனாலேயே அணைவது எரி. அந்தியில் மறைவது விண்கதிர். அணையாதெரியும் அனலென ஏதுள்ளது?

அவ்வழி செல்கையில் கங்கைச்சதுப்பில் குழியகழ்ந்து முட்டையிட்டு காலால் தள்ளி மூடியபின் ஆமை ஒன்று "அனல்கொள்க, மைந்தர்களே! அழியாத அனல்கொள்க!" என்று நுண்சொல் உரைத்தபின் நீர்நோக்கி செல்வதைக் கண்டதும் அக்கணம் அவர் அறிந்தார், அழியா அனலென்பது உயிர் என. உளமென்றாகி உணர்வுகொள்வதும் சொல்லென்றாகி பொருள்கொள்வதும் உயிரே. உயிரில் எழுக என் சிற்பம் என்று

அவர் உறுதிகொண்டார். தன் கலையை எழுப்ப பேரனல் கொண்ட கருவறை ஒன்றை அவர் நாடினார். அனல் ஓங்கிய உயிர் எது புவியில் என்று நோக்கிக்கொண்டு காடுகளில் நடந்தார்.

யானையென பெருகிய தசைத்திரளைத் தூக்கியலையும் உயிரனலே ஆற்றல்கொண்டது. சிம்மமென முழங்குவது சினம் மிக்கது. செம்பருந்தென ஆன உயிர் விரைவெழுந்தது. சிற்றெறும்பென ஆனதோ கணம்கோடியெனப் பெருகுவது. அனைத்துமான உயிர் ஒன்று இருக்கவேண்டும் புவியில். அவர் களைப்புடன் அமர்ந்த புதர்காட்டில் ஒரு யானை தன் மைந்தனிடம் சொன்னது "கவ்விச்சுருட்டிச் செயலற்றதாக்கும் நாகங்களைப்பற்றி எச்சரிக்கை கொள்க, மைந்தா!" அக்கணமே சிம்மம் ஒன்று தன் குருளையிடம் "சீறும் பாம்பின் நஞ்சுக்கு நிகரான எதிரி உனக்கில்லை, குழந்தை" என்றதைக் கேட்டார். செம்பருந்து ஒன்று தன் குஞ்சிடம் "நீளும் நாவின் விரைவுக்கு நம் விழி செல்லமுடியாது என்று கொள்க!" என்றது. அன்னை எறும்பு புற்றுக்குள் அமர்ந்து சொன்னது "பெருகுவதில் நமக்கு நிகர் அது ஒன்றே. எனவே நம் புற்றுகளை காத்துக்கொள்க!"

த்வஷ்டா நாகங்களின் முதல் தந்தையான தட்சனின் மகள் தனுவை மணந்தார். அவளுக்குள் எரிந்த நெருப்பில் உருகிக் கரைந்தது அவரது சித்தம். அவள் கருவறையில் எழுந்த மைந்தன் சிம்மப்பிடரியும் சிறகும் நாகங்களின் உடலும் யானையின் தந்தங்களும் கொண்டிருந்தான். வளர்ந்துகொண்டே இருப்பவன் என்னும் பொருளில் அவர் அவனை விருத்திரன் என்றழைத்தார். அவன் உகிர்கொண்டு கிழித்தான். தந்தங்களால் சரித்தான். பறந்தெழுந்தான். நெளிந்து இருளாழத்தில்

மூழ்கினான். அவனை வெல்லும் எவ்வுயிரும் மண்ணில் இருக்கவில்லை.

விருத்திரனுக்கு அனைத்து அறிவுகளையும் தந்தை அளித்தார். அனைத்து போர்க்கலைகளையும் தாய் அளித்தாள். இளைஞனான விருத்திரன் தன்னந்தனியாக நடந்துசென்று மேற்கே வெந்துசிவந்த செம்புலன்களுக்கு அருகே, மூன்று பேராறுகள் பொற்களி சுமந்து வந்து கடல்காணும் முகப்பில் ஏழு கடல்கள் சூழ்ந்த தீவு நிலமொன்றை அடைந்தான். அங்கிருந்த பெரும் சிதல்புற்றின் மேல் அமர்ந்து நாகமொழியில் சீறி சிதல்களை அழைத்தான். அவனை அணுகி வணங்கிநின்ற சிதல்குலங்களின் நூற்றெட்டுதலைவர்களிடம் தனக்கு ஒரு வெல்லமுடியா பெருங்கோட்டையை அமைக்கும்படி ஆணையிட்டான்.

ஆயிரம்புற்றுகளை எழுப்பி அவை உருவாக்கியதே முதல்கோட்டை. அதற்குள் மேலும் மேலும் கோட்டைகளை எழுப்பிக்கொண்டே இருந்தன அவை. அந்நகர் புற்றிகபுரி என்றழைக்கப்பட்டது. அதன் புற்றுகள்தோறும் பன்னிரண்டாயிரம் நச்சுநாகங்கள் காவல்காத்தன. அவற்றின் இமையாவிழிகள் பத்து திசைகளிலும் நோக்கியிருந்தன.

புற்றிகபுரியில் ஒன்பது கோட்டைகள் முதலில் எழுந்தன. அவை தொண்ணூற்றொன்பது பெருங்கோட்டைகளாயின. கோட்டைக்குள் கோட்டையென அவை விரிந்தபடியே சென்றன. ஒவ்வொருநாளும் எழுந்து ஒரு புதுக் கோட்டையைக் கண்டனர் அந்நகர் வாழ்ந்த அசுரர். அந்நகரின் புகழ் வளரவே அசுரகுடிகள் நான்கு திசைகளிலிருந்தும் அங்கு சென்று குடியேறின. புற்றிகபுரி வளர்ந்து அங்கே செல்வம் பெருகியது.

வணிகர்களும் பாடகர்களும் புலவர்களும் அந்நகர்நோக்கி வரலாயினர்.

கருவூலம் செழித்ததும் விருத்திரன் வேள்விகளைத் தொடங்கினான். நூற்றெட்டு அசுரவேள்விகளை முடித்து மண்ணிலுள்ள அத்தனை அரசர்களையும் திறைகட்டும்படி சொன்னான். எட்டுத் திசைதேவர்களையும் வென்றான். பின்னர் விண்புகுந்து அமராவதியின் அரியணையில் அமரும்பொருட்டு இந்திரவிஜயம் என்னும் பெருவேள்வி ஒன்றைத் தொடங்கினான். அவ்வேள்வி ஆயிரத்தெட்டு நாட்களாக இரவும்பகலும் ஒழியாத அவிப்பெருக்குடன் அணையாத அனலுடன் நிகழ்ந்தது.

அமராவதியில் இந்திரன் அமைதியிழக்கலானான். முதலில் அவன் கனவில் வெண்ணிற இறகு ஒன்று காற்றில் மிதப்பது தெரிந்தது. அது என்ன என்று நூல்களிலும் அறிஞரிலும் உசாவினான். அவர்களால் விடையளிக்க முடியவில்லை. பின்னர் அவன் ஆழ்ந்து அமைதியிலமைந்திருக்கையில் செவிக்குள் ஒரு நரம்புத்துடிப்பென மெல்லிய அதிர்வொன்று கேட்டது. பின்னர் அவ்வொலி வலுக்கலாயிற்று. குறுமுழவு ஒன்றின் தொலைவொலி. அவன் கனவில் ஒரு வெண்ணிறப் புகைக்கீற்றைக் கண்டான். குறுமுழவொலி பெருமுழவின் அதிர்வாகியது. அவன் கனவில் வெண்முகிலொன்று அணுகுவதைக் கண்டான்.

ஒருநாள் காலையில் அவன் போர்முரசின் முழக்கம் அது என்று நன்கறிந்தான். அன்று கனவில் வெண்களிற்றில் ஏறிவரும் விருத்திரனின் தோற்றத்தைக் கண்டான். அமைச்சரை அழைத்து நிகழ்வதென்ன என்று நோக்கினான். விருத்திரன் இந்திரவுலகுக்கு படைகொண்டு எழவிருக்கிறான்

என்றனர். “அசுரர் அவனுடன் இணைந்து பெருகியிருக்கின்றனர். வேள்விப்பயனுடன் அவர்கள் போருக்கெழுந்தால் அவனுடன் எதிர்நின்று களமாட நமக்கு ஆற்றலில்லை” என்றனர் தேவர். “அவன் வேள்வி முடியலாகாது. அதன்பின் இந்திரஅரியணை உங்களை ஏற்காது” என்றனர் அமைச்சர்.

பெரும்படையுடன் இந்திரன் புற்றிகபுரிமேல் போருக்குச் சென்றான். விண்ணில் அவன் முகில்படை திரண்டது. மின்கதிர்கள் சுழன்று சுழன்றறைந்தன. இடியோசை கேட்டு நாகங்கள் வெருண்டு சீறிய ஒலி புற்றிகபுரியில் புயல்போல ஒலித்தது. விண்கிழிந்து கங்கைப்பெருக்குகள் விழுந்ததுபோல நகர்மேல் மழை பொழிந்தது. இடியும் மின்னலுமாக இந்திரனின் படைக்கலங்கள் நகரின் நண்ணமுடியாத பெருங்கோட்டைகளை தாக்கின.

நூற்றெட்டுமுறை இந்திரன் புற்றிகபுரியைத் தாக்கினான். நகரின் புற்றுக்கோட்டைகள் மின்படைக்கலம்கொண்டு பிளந்து இற்றுக் கரைந்து வழிந்தோடின. ஆனால் அவை மயிர்க்கற்றைகள்போல சிலிர்த்து எழுந்துகொண்டுமிருந்தன. போர்முடிந்து கை சலிக்கையில் கோட்டைகள் முந்தைய உயரத்தைவிட மேலாக மீண்டும் எழுந்து நிற்பதை இந்திரன் கண்டான். நெஞ்சு ஓய்ந்து அவன் அமராவதிக்கு வந்து அமர்ந்தான்.

“அது உயிருள்ள கோட்டை, அரசே. அதை வெல்லவே முடியாது” என்றனர் தேவர். “உயிரின் அனல். அதை அணைக்க முடியாது. அழியுந்தோறும் பெருகுவது அது” என்றனர் அமைச்சர். சோர்ந்து அமர்ந்திருந்த இந்திரனின் காதுகளில் போர்முரசின் ஓசை பெருகிக்கொண்டிருந்தது. பின்னர் தேவியின் சொல்கூடக் கேட்காத முழக்கமாக அது ஆயிற்று.

இருகைகளாலும் காதுகளைப் பொத்தி உடல்சுருட்டி நடுங்கியபடி அமர்ந்திருந்தான்.

அவனைச் சூழ்ந்திருந்த நீர்த்துளிகள் நடுங்கி உதிரத்தொடங்கின. பின்னர் அவன் மாளிகைக்கூரைகள் இற்று சரிந்தன. அங்கே ஒளிகொண்டு தொங்கிய விண்மீன்கள் விழுந்து சிதறின. பின்னர் அவன் நான்கு திசைகளையும் மூடும் பேரொலியுடன் எழுகடல்போல அசுரர் வருவதைக் கண்டான். அமராவதியின் கோட்டைகள் இற்றுச்சரிந்தன. தெருக்களில் வெற்றிக்கூச்சலுடன் அசுரர்படைகள் நிறைந்து கரைமுட்டிப் பெருகின.

“இனி இங்கிருக்கலாகாது அரசே, விரைக!” என்றனர் அமைச்சர். இந்திரன் ஒரு பொன்வண்டாக மாறி பறந்துசென்று மறைந்தான். அவன் அமைச்சரும் துணைவரும் பொற்தாலங்களில் வெண்ணிற ஒளிகொண்ட பாரிஜாத மலர்களுடன் சென்று கரியயானைமேல் ஏறி அமராவதிக்குள் நுழைந்த விருத்திரனை எதிர்கொண்டு வரவேற்றனர். நகருக்குள் நுழைந்ததும் விருத்திரன் இந்திரனின் ஐராவதத்தின் மேல் ஏறிக்கொண்டான். அமராவதியின் தெருக்களினூடாக தேவர்கள் மலர்மழை சொரிய மாளிகை நோக்கி சென்றான்.



அங்கே அரண்மனை முகப்பில் இந்திராணி அசுரப்பெண்ணாக உருவம்கொண்டு அவனுக்காக காத்திருந்தாள். அவளைச் சூழ்ந்து மங்கலப்பொருட்களுடன் சேடியர் நின்றனர். அவனை நீரும் மலரும் சுடரும் காட்டி வரவேற்று உள்ளே அழைத்துச்சென்றனர். விருத்திரன் இந்திரனின் மணிமுடியைச் சூடி அரியணையில் இந்திராணியுடன் அமர்ந்தான். இனி வேதியர் அளிக்கும் அவியில் பாதி தனக்குரியதென்று ஆணையிட்டான். அரசர்சூடும் மணிமுடிகள் அனைத்திலும் தன்

காலடிப்புழுதியின் பரு ஒன்று அருமணியென பதிக்கப்பட்டாகவேண்டும் என்றான்.

இந்திரனின் வியோமயானம் பறந்து மண்ணுக்குச் சென்று கங்கைக்கரையில் ஒரு புற்றுக்குள் அமர்ந்து தவம் செய்திருந்த த்வஷ்டாவை அழைத்துவந்தது. இந்திரனை வென்று அரியணையில் ஒளியுடன் அமர்ந்திருந்த மைந்தனைக்கண்டு அவர் விழிபொங்கினார். "என் அனல் இன்று அவிந்தது. நிறைவுற்றேன். இனி என் உயிர் உதிரும். விண்திகழ்வேன்" என்றார். தேவர் புடைசூழச் சென்று ஏழுகடல்களிலும் தன் மூத்தவர்களான பலனுக்கும் திரிசிரஸுக்கும் நீத்தார்கடன்புரிந்து நிறைவுறச்செய்தார்.

மைந்தரை விண்ணேற்றியபின் த்வஷ்டா தன் உடலை உதறினார். அவரிலிருந்து ஆடி ஒளியை திருப்பியனுப்புவதுபோல உயிர் எழுந்து விண்ணுக்குச் சென்றது. விண்ணில் ஒரு சிவந்த ருத்ரனாக அவர் சென்றமைந்தார். அவரை நான்கு ருத்ரர்களில் ஒருவராக அசுரர் வழிபட்டனர். விருத்திரேந்திரனின் கோல்கீழ் ஆயிரமாண்டுகாலம் புவியும் வானும் செழித்தன.

# கிராதம் - 42

**[ 12 ]**

பொன்வண்டென உருக்கொண்டு அமராவதியிலிருந்து தப்பி ஓடிய இந்திரன் சதகூபம் என்னும் பெருங்காட்டின் நடுவே ஆயிரத்தெட்டு கிளைகளுடன் நின்றிருந்த பிரபாவம் என்னும் ஆலமரத்தின் உச்சியில் இருந்த ஆழ்ந்த பொந்தை தன் வாழிடமாகக் கொண்டான். அவனுடன் பணி செய்ய வந்த

நூற்றெட்டு தேவர்கள் சிறு வண்டுகளாகவும் பொற்சிறைத் தேனீக்களாகவும் உடனிருந்தனர். தேனீக்கள் காடெங்கிலும் சென்று பூங்கொடியும் தேனும் கொண்டு வந்து அவனுக்குப் படைத்தன. வண்டுகள் அவனைச் சூழ்ந்திருந்து சிறகதிர இசைமீட்டின.

பொந்துக்குள் ஆழத்தில் செறிந்திருந்த இருளில் அவன் தன்னை படிய வைத்துக்கொண்டான். உள்ளே ஒளிவரும் பொந்துகள் அனைத்தையும் அரக்கு வைத்து மூடச்செய்தான். தேன்மெழுகால் கட்டிய சிறுகுழியில் நறவல் தேக்கி அதனுள் மூழ்கி தன்னைமறந்து கிடந்தான். நாள் மடிந்து பொழுது கடப்பதை அவன் அறியவில்லை. காலம் செல்வதை அவனிடம் எவ்வண்ணம் சொல்வதென்று தேவர்கள் எண்ணி எண்ணி தயங்கினர். அவனோ மது மயக்கிலிருந்து ஒருகணமும் மீண்டு வரவும் இல்லை. ஆயிரம் ஆண்டுகாலம் அவ்வண்ணம் சென்றது.

எவரும் அறியாது மறைந்த இந்திரனைத் தேடி நாரதர் யாழிசை ஒலிக்கும் கருவண்டென காடுகளிலும் ஊர்களிலும் நகர்களிலும் அலைந்தார். பல்லாண்டுகாலம் அவ்வண்ணம் செல்லுகையில் இரவின் இருளுக்குள் சில தேனீக்கள் தேன்தேடி அலைவதையும் மலர்தோறும் அமர்ந்தெழுந்து சுழலுவதையும் கண்டார். அவற்றில் ஒன்றை அணுகி “யார் நீங்கள்? அந்திக்குப்பின் தேனீக்கள் தேன்நாடிப் பறப்பதில்லை” என்றார். “நாங்கள் இந்திரனின் அணுக்கர்கள். அவர் எப்போதும் மதுவில் ஆட விழைகிறார்” என்றன. “எங்கிருக்கிறார்?” என்றார் நாரதர். “இக்காட்டில் ஒரு பொந்துக்குள்” என்ற தேவர்கள் அவரை அழைத்துச்சென்றனர்.

மறுநாள் புலரியில் நாரதர் இந்திரன் வாழ்ந்த அப்பொந்துக்கு வந்தார். அதைச் சூழ்ந்து பொன்னிற மலர்கள் மலர்ந்து நறுமணம் சூழ்ந்திருந்தது. இருளுக்குள் தேன்குழிக்குள் மூழ்கி அசைவற்று கிடந்த இந்திரனைக் கண்டார். அவர் வருகையை அவன் அறியவில்லை. தேவர்களை அழைத்து “இப்பொந்தை மூடியிருக்கும் அனைத்து அரக்கையும் அகற்றுக!” என்றார். தேவர்கள் “அரசரின் ஆணை அது” என்றனர். “அரசரின்பொருட்டு இது என் ஆணை” என்றார் நாரதர்.

“அரசரிடம் ஆணை பெற்று செய்கிறோம்” என்றபின் ஒரு தேவன் “நாரதரின் ஆணையை நிறைவேற்றலாமா, அரசே?” என்றான். தேனில் ஊறி செயலற்ற சித்தம் கொண்டிருந்த இந்திரன் “ஆம்” என்று ரீங்கரித்தான். வண்டுகள் எழுந்து அப்பொந்தை மூடியிருந்த மெழுகனைத்தையும் தள்ளி வெளிவிட்டன. கதிரொளி சாய்ந்து பொந்துக்குள் விழுந்தது. இந்திரன் மிதந்திருந்த தேன் ஒளி கொண்டது. கண்கள் கூச விழித்தெழுந்து “யார்? என்ன நிகழ்கிறது?” என்ற அவன் கூவினான்.

அவன் அருகே வந்த நாரதர் “பொழுதுவிடிந்துவிட்டது, அரசே” என்றார். “நான் துயில் முடிக்கவில்லை” என்று அவன் சொன்னான். “மூடா, இன்னும் ஒரு பொழுது நீ துயின்றால் பின்னர் அமராவதியை அசுரரிடமிருந்து மீட்கவே இயலாது” என்றார் நாரதர். அவர் நாரதர் என்பதை உணர்ந்த இந்திரன் மெல்ல துயில்கலைந்து தேன்குழம்பின் விளிம்பில் நீந்தி வந்து அரக்கை பற்றிக்கொண்டு அமர்ந்தான். “என்ன செய்யவிருக்கிறாய்?” என்று நாரதர் கேட்டார். “செய்வதற்கொன்றுமில்லை. இவ்வினிமையிலேயே இருந்துவிட விழைகிறேன்” என்றான்.

“இது இனிமையல்ல. செயலின்மையின் இனிமை ஒரு போதும் முழுமையாவதில்லை. செயலற்றவனைச் சூழும் ஆழுலகத்து தெய்வங்கள் அவனை முழுதும் இனித்திருக்க விடுவதில்லை. விழித்திருப்பவனின் இனிமை மட்டுமே தெய்வங்களுக்குரியது” என்றார் நாரதர். அவர் கைகாட்ட தேவர்கள் இந்திரனைப்பற்றி இழுத்து மேலே கொண்டு வந்தனர். துளைகள் வழியாக வந்த ஒளியில் அவன் சிறகுகள் காய்ந்தன. அவன் உணர்கொம்புகள் சுருள் அவிழ்ந்தன. அவன் கால்கள் தேன்பிசுக்கிலிருந்து பிரிந்து எழுந்தன. இமைகள் மேலேற அவன் சூழலை நோக்கினான். “ஆம், நெடுநாட்களாகிறது” என்று பெருமூச்சுவிட்டான்.

அவன் அருகே அமர்ந்து நாரதர் சொன்னார் “உன் கடன் அமராவதியை மீட்பது. இந்திரனே, மண் முழுக்க வேள்விக்களங்களில் உனக்காகவே அவியளிக்கப்படுகிறது. அவற்றை உண்டு மண்ணிலும் விண்ணிலும் அசுரர்கள் தழைத்து எழுகிறார்கள். பயிருக்கு அளித்த நீர் களைக்குச் செல்வதை அறியாதவர்களாக இருக்கிறார்கள் அந்தணர். கொடிய நோய் என விருத்திரன் விண்ணுலகையும் வியனுலகையும் ஆள்கிறான்.”

“தேவருலகு என்பது என்ன? அது அரசன் தன் கருவூலத்தில் வைத்திருக்கும் பொன்போன்றது. அது அங்கு இருக்கும்வரையே அங்காடிகளில் வணிகம் திகழும். பயணிகள் புலம் கடக்க முடியும். இந்திரனே, சான்றோர் சொல் திகழ்வதும், மகளிர் கற்பு வாழ்வதும், நூலோர் சொல் வளர்வதும், வேதியர் அனல் அணையாதிருப்பதும் அப்பொன்னாலேயே. இன்று அது களவு போகிறது. மண்ணில் ஒவ்வொருநாளும் அறம் குன்றுவதையும் கண்டபின்னரே உன்னைத் தேடி கிளம்பினேன். இது உன் பிறவிக்கடன்.”

“அரசனே, கடமையிலிருந்து தப்பி ஓடுபவர்கள் தீராப்பழி கொள்ளுகிறார்கள். பழி நிழல்போல, நாம் அதை உதறினாலும் நம்மை அது விடாது. நாம் அறியாது நம்முடனேயே இருக்கும். சித்தத்தின் அத்தனை சொற்களாலும் நாம் கொண்ட பழியை விலக்கலாம். அச்சொற்கள் ஊறிவரும் ஆழ்சுனை ஒன்றுண்டு. அங்கு நஞ்சென அது கலந்திருக்கும். பழி விலக்கி ஆண்மை கொள். அதுவன்றி நீ கொள்ளும் விடுதலை பிறிதொன்றில்லை” என்றார் நாரதர்.

“ஆம்” என்று சொல்லி இந்திரன் உடைந்து அழுதான். “தோல்வியின் தருணமொன்றை எவ்வண்ணம் எதிர்கொள்வதென எனக்கு தெரிந்திருக்கவில்லை. வெற்றியை மட்டுமே பயின்றிருக்கிறேன்.” நாரதர் கனிந்து அவனை தொட்டார். “துயர்களை விட்டு விலகுவதே மிகச்சிறந்த வழி. இழிவுகளைக் கடந்து செல்வது அதனிலும் நன்று. ஆனால் தோல்விகளைக் கண்டு விலகுபவன் மேலும் தோல்விகொள்கிறான்” என்றார் நாரதர். உளம் கரைந்து விம்மி அழுது விசும்பி ஓய்ந்தான் இந்திரன். “கடந்ததை எண்ணவேண்டாம். ஆவதை நோக்குக!” என்றார் நாரதர்.

“சொல்க, நான் என்ன செய்ய வேண்டும்?” என்று இந்திரன் கேட்டான். “உன் நச்சுக் கொடுக்கு உயிர் பெறட்டும். சிறகுகளில் ஆற்றல் பெருகட்டும். கண்களில் கனல்துளி வந்தமையட்டும். இந்திரனென எழு! எதன்பொருட்டு பிறந்தாயோ அதை ஆற்று” என்றார் நாரதர். “அவ்வண்ணமே” என்று இந்திரன் சொன்னான். “புலரட்டும், என் படைக்கலங்களை சூடுகிறேன். பொருதி நின்று என் கடன்முடிக்கிறேன். இனி சோர்வில்லை.”

ஆனால் அன்று கடந்து மறுநாள் காலையில் நாரதரை வரவேற்ற தேவர்கள் விழிதாழ்த்தி அவர் முன்னிருந்து

ஒழிந்தனர். “என்னவாயிற்று?” என்றார் நாரதர். “அரசர் மீண்டும் மதுவுக்குள் மூழ்கியிருக்கிறார்” என்றனர் தேவர். உள்ளே மீண்டும் நிறைக்கப்பட்ட மதுக்குளத்திற்குள் விழுந்து சிறகுகள் ஊறி கால்கள் செயலற்று மிதந்துகிடந்தான் இந்திரன். சினத்துடன் “அதை உடையுங்கள்” என்றார் நாரதர். மதுக்குழியை தேவர்கள் உடைக்க ஒழிந்தொழிந்து செல்லும் மதுவையும் அறியாது மிதந்துகிடந்தவன் கால்தொட்டு மது ஒழிந்த தரையை அறிந்ததும் விழித்து “என்ன?” என்றான்.

குழியின் பின்னால் தவழ்ந்து கரையேற முயன்று வழுக்கி மீண்டும் விழுந்து உருண்டெழுந்துகொண்டிருந்தவன் விண்ணரசன் என்பதை எண்ணுகையில் நாரதர் நீள்மூச்செறிந்தார். “எழுக, தேவர்க்கரசே!” என்றார். மங்கலாக புன்னகைத்தபடி குழறிய குரலில் “தேன் இனிது. தேனாடல் அதனினும் இனிது” என்று இந்திரன் சொன்னான். “எழுக! நீ வெல்ல வேண்டியது அமராவதி” என்றார் நாரதர். அவன் மெல்ல கையூன்றி நிமிர்ந்து “இப்போது நான் அமராவதியில்தான் இருந்தேன்” என்றான். “பன்னிரு கோடி பொன்மாடங்கள் கொண்ட பெருநகர். ஒளிச்சிறகுகளுடன் தேவர்கள். செல்வங்களுக்கெல்லாம் தலையாயவை செறிந்த கருவூலம். வெண்ணிற யானை. பொற்கொம்புள்ள பசு. புலரிகதிரென அரியணை. பேரழகுகொண்ட துணைவி...”

“அது பொய். அரசே, இது மலர்களில் நிறைந்த நறுந்தேன். வண்டுகளைப் பித்தாக்கும்பொருட்டு தெய்வங்கள் இதை அவற்றின் இதழ்களில் சேர்க்கின்றன. வாழ்நாள் முழுக்க மலரிலிருந்து மலர் தேடி ஒருபோதும் நிறைவுறாது பண்ணிசைத்து பறந்து பறந்து அழிவதே வண்டுகளின் வாழ்வென வகுத்துள்ளது புவி சமைத்த நெறி. பேதைமையை

விளம்புவது இது. இதை உண்ணும் ஒவ்வொரு சித்தத்திற்குள்ளும் ஒரு பொன்னுலகு பொலிந்து மறைகிறது” என்றார் நாரதர்.

“நாரதரே, வெளியே பருவடிவுகொண்டு இருக்கும் பொன்னுலகு அருளும் அனைத்து உவகைகளையும் இந்த மது உருவாக்கும் பொய்யுலகும் அருளுமென்றால் இது எவ்வகையில் குறைவுபட்டது? தேறலை பழிக்காதீர். இனிமை மட்டுமே கொண்ட ஒன்று இப்புவியில் பிறிதொன்றில்லை” என்றான் இந்திரன். “உணவென்றால் அது தெவிட்டியாகவேண்டும். இனிமை மட்டுமே கொண்ட ஒன்றை நாம் உண்பதில்லை. அது நம்மை உண்கிறது. உன்னை இது கரைத்தழிப்பதை நீ உணரவில்லையா?” என்றார். “இனித்து இனித்து கரைந்தழிவதற்கு அப்பால் பிறவிக்கான பொருளேதும் உண்டா?” என்றான் இந்திரன்.

“நீ ஒரு கனவின் துளியென்றால், நீ கொள்வதே பொருள். மூடா, தன்னை உருவென இருப்பென ஆக்கிய ஆற்றலின் ஆணையை மீறும் உரிமை அசுரருக்கோ தேவருக்கோ மானுடருக்கோ தெய்வங்களுக்கோ இல்லை” என்றார் நாரதர். இந்திரன் சோம்பலுடன் உடல்நெளித்து “ஆயிரம் ஆண்டு நான் இவ்வுடலில் எழவேயில்லை. இச்சிறுதுளிக்குள் ஒரு பெரும்பொன்னுலகு எழுந்து விரிந்தது. எண்ணுகையில் இப்புவி ஒரு பொருட்டல்ல என்றே துணிகிறேன்” என்றான்.

சொல்லிப் பயனில்லை என உணர்ந்து நாரதர் சீறியபடி பாய்ந்து சிறகு விரித்து இந்திரனின் தலையில் தன் கொடுக்கால் கொட்டினார். அதன் நச்சு உள்ளே செல்ல பெருவலியில் துடித்து அலறியபடி அவன் செயலிழந்து அமர்ந்தான். தன் கால்களால் அவனைக் கவ்வி தூக்கி எடுத்து வெளியே

கொண்டுசென்று காலை வெயிலேற்று வெம்மை கொள்ளத் தொடங்கியிருந்த ஆற்றுமணலில் இட்டார்.




சுடுமணலில் புரண்டு சிறகுகள் பொசுங்க கதறி அழுதபடி தவித்தான் இந்திரன். “எத்தனை மதுவுண்டாலும் இவ்வெம்மையை உன்னால் கடக்க முடியாது. நீ விழையும் அனைத்து மதுவையும் கொண்டுவரச் செய்கிறேன், இவ்வுண்மையை கடந்துசெல் பார்ப்போம்!” என்றார் நாரதர்.

இந்திரன் தவழ்ந்து சென்று நதியின் விளிம்பை அடைந்து அலைகளில் ஏறி ஆழத்தில் பாய்ந்து மூழ்கி எழுந்து தன் சிறகுகளை உதறிக்கொண்டான். மூழ்கிமூழ்கி குளிர் நீரை உதறி மீண்டபோது அவன் சித்தம் தெளிந்திருந்தது.

அருகே கடந்துசென்ற இலையொன்றைப் பற்றி மேலேறி அமர்ந்தபோது மெல்ல சித்தம் மீண்டுவந்தது. நீள்மூச்சுகள் விட்டபடி சோர்ந்து விழுந்து கைகளை உரசிக்கொண்டான். சிறகுகள் உலர்ந்ததும் எழுந்தமர்ந்து விழிகளை உருட்டியபடி "நான் செய்வதற்கென்ன உள்ளது, நாரதரே?" என்றான். "நீ வென்றெடுப்பதற்கு ஓர் உலகுள்ளது. அதை வென்றேயாக வேண்டிய கடமை உள்ளது" என்றார் நாரதர்.

**[ 13 ]**

ஆயிரமாண்டு இந்திரனின் சித்தத்தில் படிந்த தேன்விழுதுகள் அனைத்தையும் கங்கை கழுவி அகற்றியது. சாம்பல் அகன்று அனல் எழுவதுபோல் அவன் தன்னிலை மீண்டான். கரைசேர்ந்து தன் முழு நினைவுடன் அவன் மீண்டான். பொன்னிற உடலும் சுடர்கொண்ட கண்களுமாக நின்று வணங்கி "முனிவர் தலைவரே, என்னை வாழ்த்துக! இதோ, மீண்டு வந்துள்ளேன்" என்றான். தன் உரு மீண்டு அவன் முன் வந்த நாரதர் "உன் தருணம் நெருங்கிவிட்டது. விருத்திரனை நீ வென்றாகவேண்டும். ஆயிரம் ஆண்டு இந்திரன் அரியணையில் அவன் அமர்ந்திருந்தான் என்றால் அவனை மும்மூர்த்திகளும் வாழ்த்தியாக வேண்டுமென்பதே நெறி. மும்மூர்த்திகளின் அருள் பெற்றபின் அவனே இந்த யுகத்தின் இந்திரன் எனப்படுவான்" என்றார்.

“நான் என்ன செய்யவேண்டும்?” என்றான் இந்திரன். “அவன் நகரம் அழிக்கப்படவேண்டும். நகர் காக்க அவன் விண்ணுலகிலிருந்து படைகொண்டு எழும்போது அவனைக் கொன்று வெல்ல வேண்டும்” என்று நாரதர் சொன்னார். “ஆம், அது ஒன்றே வழி. ஆனால் அவனை வெல்லும் ஆற்றல் என் படைகளுக்கு இல்லை. என் படைக்கலங்கள் எதனாலும் கணந்தோறும் வளரும் அவன் பெருங்கோட்டைகளை அழிக்கவும் முடிவதில்லை” என்று இந்திரன் சொன்னான். “அப்போரின் அனைத்து செய்திகளையும் நான் அறிந்தேன். எவ்வண்ணம் விருத்திரன் அந்நகரை அமைத்தான் என்பதை உசாவி உணர்ந்தேன்” என்று நாரதர் விளக்கினார்.

த்வஷ்டாவின் மைந்தனாகப் பிறந்தவன் தன் ஏழு வயதில் தந்தையிடம் ஒரு வினாவை கேட்டான். “தந்தையே, வேதங்களில் தலையாயது எது?” அவர் “ரிக்வேதம்” என்றார். “ரிக்வேதத்தில் தலையாயது எது?” என்று அவன் கேட்டான் “நாசதீய சிருஷ்டி கீதம்” என்று அவர் சொன்னார். “சிருஷ்டி கீதத்தில் தலையாயது எது?” என்று அவன் கேட்டான். “அதன் முதல் வரி” என்று அவர் சொன்னார். “முதலில் பொற்கரு எழுந்தது.” மைந்தன் “அம்முதல் வரியில் தலையாயது எது?” என்று கேட்டான். “முதற்சொல், முதல் எனும் சொல்” என்றார் தந்தை. “தந்தையே, அச்சொல் ஒன்றே போதும். ஒரு சொல்லில் இல்லாத வேதம் முழு பாடல்பெருக்கிலும் இருக்க வழியில்லை” என்றபின் தந்தையிடம் விடைபெற்று அவன் கிளம்பிச் சென்றான்.

தெற்கே பெருங்கடல்முனையை சென்றடைந்து வருணனிடம் கேட்டான் “என் குடிமூத்தோனே, ஒரு சொல் மட்டும் என்னில் எஞ்சியிருக்கச் செய்க!” வருணன் தன் அலைப்பரப்பை விலக்கி

ஒரு தீவைக் காட்டினான். பிரணவம் என்னும் அந்தத் தீவில் வெண்மணல் மட்டுமே இருந்தது. பறவைகளும் அங்கு செல்லவில்லை. அங்கு சூழ்ந்த அலைகள் அத்தனை ஒலிகளையும் உண்டு ஓங்காரமென்றாக்கின. அங்கு அமர்ந்து அவ்வொரு சொல்லை ஊழ்கப் புள்ளியென நிறுத்தி விருத்திரன் தவம் செய்தான். அவ்வொரு புள்ளியை கோடிமுறை திறந்து அதனுள் எழுந்த முடிவிலியைக் கண்டான். அவன் தந்தையென்றே வடிவுகொண்டு முன்னால் வந்தது அது. "மைந்த, நீ விழைவதென்ன?" என்றது.

"எந்தையே, என் தந்தைகொண்ட இலக்கு நிறைவேற வேண்டும். அதற்கு எனக்கு மூன்று நற்சொற்கள் தேவை" என்றான். "கேள்" என்றது இறை. "கணந்தோறும் தானாகவே வளரும் ஒரு நகரம் எனக்குத் தேவை" என்று அவன் சொன்னான். "ஆம், அவ்வாறே ஆகுக!" "தந்தையே, என் நகரம் மண்ணிலுள்ள பாறைகளாலோ மரங்களாலோ உலோகங்களாலோ வெல்லப்படலாகாது. மானுடர் இயற்றிய எக்கருவிகளாலும் அது எதிர்க்கப்படலாகாது. விண்ணிலுள்ள தேவர்களோ தெய்வங்களோ மண்ணிலுள்ள மானுடரோ கொண்ட எப்படைக்கலமும் என்னை கொல்லலாகாது" என்று அவன் கேட்டான். "ஆம், அவ்வாறே ஆகுக!" என்றது முடிவிலி.

கண்விழித்தெழுந்து தன் தந்தையைத் தேடி வந்தான். "உங்கள் கனவை நிறைவேற்றிய பின்னர் மட்டுமே இனி உங்களை பார்ப்பேன், தந்தையே. நான் வெல்கவென்று அருளுங்கள்" என்றான். "அவ்வாறே" என்று த்வஷ்டா தன் மைந்தனின் தலைதொட்டு வாழ்த்தினார். "விண்ணுக்கும் மண்ணுக்கும் இடைப்பட்ட மூச்சுலகில் அனல்கொண்ட புயல்காற்றுகளென அலைந்து கொண்டிருக்கின்றனர் உன் தமையர் பலனும்

திரிசிரஸும். அவர்களை அனலவித்து அமையவைக்கும் புனலும் அன்னமும் உன் கைகளிலிருந்து விழவேண்டும். இந்திரனை வென்றபின் நீ அதை இயற்றுக!" என்றார். "அவ்வாறே" என்றபின் அவன் கிளம்பிச் சென்றான்.

ஏழு பெருநிலங்களை அவன் கடந்து சென்றான். தானாக வளரும் ஒரு நகரம் தனக்கென அமையுமென்ற சொல்லை கைக்கொண்டு தேடிச் சென்றான். பெரும்பாலையருகே மென்மணல் மீது இரவில் துயில்வதன்பொருட்டு படுத்தபோது அவ்வெண்ணத்தையே நெஞ்சில் நிறைத்து விண்ணை நோக்கிக்கொண்டிருந்தான். அனல் பெருகும், புனலும் பெருகும். அவை அணையும், வற்றும். அணையாத, வற்றாத ஒன்றால் அமைவதே என் கோட்டை என்று அவன் தனக்குள் சொல்லிக்கொண்டான்.

துயின்று கண்திறந்தபோது தன்னைச் சுற்றி நூறு பெரும்மண்குவைகள் எழுந்திருப்பதைக் கண்டான். திடுக்கிட்டு நோக்கியபோது அவை அனைத்தும் சிதல் புற்றுகள் என்று தெரிந்தது. ஓரிரவில் இப்பெரும்புற்றுகள் எப்படி எழுந்தன என்று அவன் வியந்தான்.

ஒரு புற்றை சுட்டுவிரலால் உடைத்து அதிலிருந்து வெண்ணிறச் சிற்றுடல்கொண்ட சிதலெறும்பு ஒன்றை எடுத்து சுட்டுவிரலில் வைத்து தன் கண்முன் கொண்டுவந்தான். "சிற்றுயிரே, சொல்க! இப்பெரும் ஆற்றல் எப்படி உனக்கமைந்தது?" என்று அவன் கேட்டான். "நான் சிற்றுயிரல்ல, இப்புவியில் இருக்கும் பேருயிர்களில் ஒன்று. என் முன் மானுடரும் விலங்குகளும் வான்நிறைக்கும் பறவைகளும் சிறுதுளிகளே" என்றது சிதல். "ஏனெனில் இச்சிற்றுடல் அல்ல

நான் என்பது. கோடானுகோடி உடல்களில் எரியும் உயிரின் பெருந்தொகை நான்.”

‘ஆம், சிதலே என் நகரை அமைக்கும் புவியின்ஆற்றல்’ என்று அவன் எண்ணிக்கொண்டான். “மண்ணுக்குள் வாழும் முதல் மூதாதையின் பெயரால், அவர் மைந்தராகிய த்வஷ்டாவின் பெயரால், மண்ணிலிருந்து எழுந்த அசுரனாகையால் உங்களை பணிந்து கேட்கிறேன், சிற்றுருவரே. எனக்கு அருள் புரிக!” என்று அவன் சொன்னான். “ஆம், நீயும் எங்கள் குலமே” என்றது சிதல். “உன்னை நாங்கள் ஏற்கிறோம். பன்னிரு பெருங்குலங்களாகப் பிரிந்து உன்னை துணைப்போம். ஆனால் எங்கள் அன்னம்பெருக நீ உதவவேண்டும். ஒவ்வொருநாளும் எங்களுக்கு உண்ணக்குறையாது அன்னம் அளித்தாகவேண்டும்.” “ஆம், ஆணை” என்றான் விருத்திரன்.

“சிதல்களின் ஆணை பெற்று அவன் தேடிச் சென்று கண்டடைந்த இடமே புற்றிகபுரி. அங்கு சிதல்புற்றுகள் ஒன்றன்மேல் ஒன்றென மண்ணலை என மலைநிரை என எழுந்து அமைத்த தொண்ணூற்றொன்பது கோட்டைகள் சூழ்ந்தது அவன் நகர். விண்ணோரும் மண்ணோரும் கைகொள்ளும் எப்படைக்கலமும் சிதல்களை அழிக்க முடியாது என்றறிக! ஏனெனில் காலத்தின் அளவுக்கே பெரியவை அவை. காலமே ஆன பிறிதொன்றே அதை வெல்ல முடியும்” என்றார் நாரதர்.

இந்திரன் சோர்வுடன் “நான் என்ன செய்ய முடியும், முனிவரே? அந்நகரை அழிக்க நானறிந்த எவ்விசையாலும் இயலாது என்றல்லவா முதற்தந்தையிடமிருந்து அவன் வரம் பெற்றிருக்கிறான்? முதல் முறையாக மண் விண்ணை

முற்றிலும் வெல்கிறது என்றல்லவா அதற்குப் பொருள்?" என்றான்.

"வேந்தனே, மண்ணும் விண்ணும் ஒன்றையொன்று வளர்ப்பவை. மண் அளிக்கும் அவியும் சொல்லும் விண்ணாளும் தேவர்களுக்கானது. தேவர்கள் அளிக்கும் மழையாலும் ஒளியாலும் காற்றாலும் மண் செழிக்கிறது. மண்ணுக்கும் விண்ணுக்கும் நடுவே துலாமுள் என நின்றிருக்கும் அனலே நிகர்நிலையை புரக்கிறது. அந்நிகர்நிலை இன்று அழிந்துள்ளது. விண் சரிந்து மண் எழுந்தால் மண்ணைக் காக்கும் விண்விசைகளும் அழியும். விளைவாக மண்ணும் அழியும்" என்றார் நாரதர். "என்னைத் தேடி வந்து இந்நிகரில் அழிவைச் சொன்னவன் அனலோன். நீ வென்றேயாகவேண்டும். விருத்திரனை வெல்லாது இப்புவி வாழ பிறிதொரு வழியில்லை."

இந்திரன் தன்னுள் என "ஆம், அவனை வென்றாகவேண்டும்" என்றான். "எவ்வண்ணமேனும் நிகழ்த்தப்படவேண்டுமென உறுதிபூணப்பட்ட ஒரு செயல் நிகழ்ந்தே ஆகும் என்று உணர்க! நீ இழப்பது எதுவென்றாலும் இக்கடனை முடிப்பாய் என்றால் இங்கிருந்தே கிளம்புக!" என்றார் நாரதர். "ஆம், என்னை ஆக்கிய தெய்வங்கள் மேல் ஆணையாக!" என்று இந்திரன் வஞ்சினம் உரைத்தான்.

"நீ வெல்வாய். வெற்றியையே வேதம் அறைகூவுகிறது. வேதமுதல்வனாகிய உன்னை வெற்றிநோக்கி கொண்டுசெல்லும் ஊர்தி அதுவே. ஆயிரம் வேள்விகளில் இக்கணம் முதல் ஒழியாது அவிசொரியப்படும். உன்னை ஊக்கும் வேதச்சொல் ஒரு கணமேனும் ஓயாது முழங்கும்.

இடியின் தலைவனே, உன் போர்முரசென்றாகுக வேதம்!”
என்றார் நாரதர்.

# கிராதம் - 43

**[ 14 ]**

சதகூபம் என்னும் காட்டில் கங்கையின் கரையில் தன் முன் அமர்ந்திருந்த இந்திரனிடம் நாரதர் சொன்னார் "அரசே, வல்லமைகொண்ட ஒருவனை வெல்ல சிறந்த வழியென்பது அவனுக்கு நிகரான வல்லமைகொண்ட ஒருவனை எவ்வண்ணமேனும் நம்முடன் சேர்த்துக்கொள்வதே. எண்ணுக, புவி கொண்ட முதல் வல்லமைகள் எவை? காற்று, அனல், நீர்." இந்திரன் சற்றே துடிப்புடன் முன்வந்து "அனலவன் எத்தரப்பும் எடுக்கமாட்டான். காற்று நம்மை துணைக்கலாகும்" என்றான். "ஆம், ஆனால் அது முடிவற்றதல்ல. குன்றாததும் அல்ல" என்றார் நாரதர்.

"அவ்வண்ணமெனில், நீர்?" என்றான் இந்திரன். "நீரின் நான்கு வடிவங்கள் புவியில் உள்ளன. மழை, ஊற்று, ஆறு, கடல்" என்றார் நாரதர். "கடலே காலத்தின் வடிவம். கடலை துணைக் கொள்வோம்" என்று அவர் சொன்னதும் இந்திரன் உளம் தளர்ந்தான். "முனிவரே, வருணன் அசுரர் குடிப்பிறந்தோன். அசுரகுடித் தலைவனாக அமர்ந்திருக்கும் ஒருவனை எதிர்க்க ஒருபோதும் அவன் ஒப்புக்கொள்ளப்போவதில்லை." நாரதர் புன்னகைத்து "ஆம். ஆனால் ஒரு வினா அவனில் வளரும். புவியில் இன்றிருப்பதில் முதன்மையான அசுரன் யார்?" என்றார். இந்திரன் அதை புரிந்துகொண்டு புன்னகைத்தான்.

முதிய அந்தணன் உருவம் பூண்டு கைக்கழியும் தோள்முடிச்சும் முப்புரியும் அனல்கட்டையும் தர்ப்பையும் கொண்டு இந்திரன் மேற்கே அலைத்த கடலின் விளிம்புக்கு வந்தான். தன் கையில்

இருந்த கழியால் கடல் அலைகளை அடித்துக் கிழிக்கத் தொடங்கினான். சலிக்காது சினத்துடனும் ஆற்றாமையுடனும் அவன் அதைச் செய்துகொண்டிருப்பதைக் கண்டு அலைகள் என சுருண்டு கரைதொட்டு உருக்கொண்டு எழுந்து அவனருகே வந்த வருணன் கேட்டான் "அந்தணரே, இங்கு என்ன செய்கிறீர்?" "அலைகளை கிழிக்கிறேன்" என்றார் அந்தணர். "அடித்து கிழிக்கலாகுமா நீரை? அது இணையும் தன்மைகொண்டதல்லவா?" என்றான் வருணன். "அடிமேல் அடிவைத்தால் நீரையும் கிழிக்கலாகும்" என்றார் அந்தணர்.

நீள்தாடியும் குழலும் அலைபுரள நீலநிற ஆடையுடன் நின்ற வருணன் "ஏன் இதை செய்கிறீர்?" என்றான். "புவி அனைத்திற்கும் உரிய முதலரசனைத் தேடி சென்றுகொண்டிருக்கிறேன். வழியில் இந்த நீர்ப்பெருக்கு என்னை தடுக்கிறது" என்றார் அந்தணர். "புவியனைத்திற்கும் அரசன் யார்?" என்று வருணன் கேட்டான். "விருத்திரன். அவனே இன்று விண்ணகத்தை ஆள்கிறான். அசுரப் பேருருவனின் ஆட்சியில் இப்படி ஒரு எளிய நீர்வெளி கட்டற்று கொந்தளிப்பதை அவன் எப்படி ஒப்புக்கொள்கிறான் என்றே புரியவில்லை" என்றார் அந்தணர்.

புருவம் சுளிக்க சினத்தை அடக்கி வருணன் கேட்டான் "இது ஆழி என்று அறிவீரா?" அந்தணர் "ஆம், அறிவேன். இது வருணனின் உடல். இன்று வருணனின் மேல் விருத்திரனின் கோல் நாட்டப்பட்டுவிட்டது. விண்ணேகி விருத்திரனைக் கண்டதுமே வருணனைக் குறித்து நான் துயர் சொல்லப்போகிறேன். என்னைப்போன்ற எளியோர் அவனை அடையும் வழிகள் அனைத்தையும் இந்த பொறுப்பற்ற நீலநீர்க் கொந்தளிப்பு சூழ்ந்துள்ளது. இதன் பொருளற்ற

அலைகளுக்குமேல் தன் செங்கோலால் ஒரு கோடு கிழித்து ஒரு பாதையை அவன் அமைக்கவேண்டும். அன்றி அவன் தன் சொல்லைச் சரடாக்கி இந்த மாளாத் திமிறலை கட்டிப்போட வேண்டும்” என்றார்.

ஏளனத்துடன் இதழ்கோட நகைத்து “வருணனை வெல்ல விருத்திரனால் இயலுமென்று எவர் சொன்னது உங்களிடம்?” என்றான் கடலரசன். “வருணன் இந்திரனை தலைவனென ஏற்றுக்கொண்டான் என்பது நான் கற்ற அனைத்து நூல்களிலும் உள்ளது” என்றார் அந்தணர். “எந்நூலில் உள்ளது?” என்று சினத்துடன் உரத்த குரலில் வருணன் கேட்டான். “விருத்திரன் புகழ் பாடும் அனைத்து நூல்களிலும்” என்றார் அந்தணர். “இது என் சொல், இதை நம்புக! நூலில் பதிந்ததே காலத்தில் வாழ்வது.”

வருணன் சீற்றத்துடன் “அது பொய். இப்புவியில் எனக்கு நிகரென அசுரன் யாருமில்லை” என்றான். “அவ்வண்ணமெனில் விருத்திரனை இங்கு வரவழைத்து எனக்குக் காட்டு” என்று இந்திரன் சொன்னான். வருணன் புன்னகைத்து “இதோ” என்று கூறி அலைவடிவு கொண்டான். ஆயிரம் முறை தன் கைகளால் நிலத்தை அறைந்து “விருத்திரனே, இங்கு எழுக!” என்று கூவினான்.

அவ்வொலி இந்திர உலகில் இந்திராணியுடன் மலர்வனத்தில் காதலாடிக்கொண்டிருந்த விருத்திரனின் செவியில் விழவில்லை. மதுக்கிண்ணத்துடன் இருந்த அவன் மெல்லிய அலையோசை ஒன்றையே கேட்டான் “என்ன?” என்று இந்திராணி கேட்டபோது “அலையோசைபோல் ஒன்று” என்றான். “அது அலை ஓசை அல்ல. உங்களுக்கு சேடியர் வீசும் சாமரத்தின் ஒலி” என்றாள் இந்திராணி. “ஆம்” என்று

விருத்திரன் புன்னகைத்தான். மதுக்குடுவைகளுடன் இரு சேடியர் அருகே வர அவர்களை நோக்கி கையசைத்தான்.

மீண்டும் உருக்கொண்டு எழுந்து வந்த வருணனின் முகம் சினம் கொண்டு சுருங்கியிருந்தது. தன் உருமீண்ட இந்திரன் "அசுரர் பேருருவே, நான் இந்திரன். உம் நிகரற்ற ஆற்றல் எவ்வண்ணம் ஏமாற்றப்பட்டுவிட்டது என்பதை சொல்லும்பொருட்டே இவ்வுருவில் வந்தேன்" என்றான். சினமும் ஆற்றாமையுமாக வருணன் பெருமூச்சுவிட்டான். "என் நகரை வென்று, என் துணைவியைக் கொண்டு, என் அரியணையில் அமர்ந்திருக்கிறான் அவன். அவனை வஞ்சம் தீர்க்கும்பொருட்டு இங்கு வந்தேன். அவனுக்கு நிகரான ஆற்றல் ஒன்று என்னுடன் இருக்கையிலேயே அவனை வெல்ல முடியும்" என்றான்.

வருணன் "நீர் விண்ணவர். விண்ணவர் என்றும் அசுரர்க்கு எதிரானவர். அசுரனாகிய எனது துணை ஒருபோதும் உமக்கில்லை" என்று திரும்பப்போனான். அவன் தோளைப்பற்றி "பொறுங்கள்! நான் விண்ணவன், ஆனால் விண்நகரை விட்டு வந்தபின் என்னை எப்படி விண்ணவன் என்று சொல்ல முடியும்? இதோ, இவ்வலைகளில் திகழும் காலப்பெருக்கை சான்றாக்கி உமக்கு நான் வாக்குறுதி அளிக்கிறேன். ஒருபோதும் விண்ணவர் உமக்கு எதிராக எழமாட்டார். எனக்கு நிகரான இடத்தில் விண்ணவனாக உம்மை அமைக்க நான் படைப்புத்தெய்வத்திடம் கோருவேன். நான் கிழக்கென்றால் நீர் மேற்கு. என்றும் உம் துணைவனாகவே திகழ்வேன்" என்றான்.

வருணன் முகம் சற்று கனிந்ததை உணர்ந்து அவன் இரு கைகளையும் பற்றிக்கொண்டு "இதோ, மூன்று தெய்வங்களின்மேல் ஆணையாக சொல்கிறேன். இனி எந்த

வேள்வியிலும் எனக்கு அளிக்கப்படும் அவியில் நேர்பாதி உமக்குரியது. ஆயிரம் ஆண்டு வேள்வியில் அவி கொண்டு இருந்தால் நீர் விண்ணவராக வானில் நிறுத்தப்படுவீர். உம்மை வேதங்கள் பாட்டுடைத்தலைவனாக்கும். வேதியர் உம்மை தெய்வமென வணங்குவர்" என்றான். வருணன் இறுதித் துளி தயக்கத்தில் நின்றிருப்பதை உணர்ந்து "வான் மழை அருளும் நீர்ப்பெருக்கு நீர். முகில்களின் காவலன் நான். நாம் இணைந்து இப்புவியை ஆளுவோம்" என்றான்.

வருணனை எண்ணவிடாமல் இந்திரன் சொல்லெடுத்தான் "நாம் பிரிந்தால் புவி வறண்டு அழியும். நீர் தேடி வான் நோக்கி அமர்ந்திருக்கும் பல்லாயிரம் கோடி உயிர்களின் குரலைக் கேட்பவன் நான் மட்டுமே. மழை பொழிகையில் அவை அளிக்கும் வாழ்த்துக்களை நானே பெற்றுளேன். அவ்வாழ்த்துக்களாலேயே நான் அரசனென மண்ணில் நிறுத்தப்படுகிறேன். இன்று வாக்களிக்கிறேன், என்னை வந்தடையும் வாழ்த்துக்களில் பாதியை உமக்கு அளிப்பேன். ஒவ்வொரு உயிரும் உமது பெருங்கருணையை உணரும்படி செய்வேன். உமது அலைகளின் பேருருவை முகில்களின் இடியென ஒலித்துக்காட்டுவேன். ஆணை! ஆணை! ஆணை!"

மறுத்தொரு சொல் எடுக்கமுடியாது வருணன் திகைத்து பின் மெல்ல அமைந்தான். "உமது சொல் எனக்கு வந்துவிட்டதென்றே கொள்கிறேன், நீர்களின் தலைவரே" என்றான் இந்திரன். வருணன் தலையசைத்து "ஆம், அவ்வாறே ஆகுக!" என்றான். அலைகடலை நோக்கி திரும்பி "அவ்வாறெனில் முடிவிலாதெழும் இப்பெரும்படை இனி எனக்குரியது அல்லவா?" என்றான் இந்திரன். "ஆம்" என்றான் வருணன். "இனி வேதமுதல்வர் நாம். இனி வேதம் இரு முகம்

கொள்க! அதன் சொல் ஒவ்வொன்றும் இருவகையில் பொருள் பெறுக! உமது நெறியும் எனது இடியும் அதில் விளங்குக!” என்றான் இந்திரன்.

[ 15 ]

பிரதீகம் என்னும் சிற்றூரில் நிலவெனப்பெருகி ஓடிய ஆற்றங்கரையில் தன் முன் அமர்ந்திருந்த பிரசண்டன் என்னும் சூதனிடம் இளம்சூதனாகிய குணதன் சொன்னான் “வருணனின் ருதமும் இந்திரனின் வஜ்ரமும் அவ்வாறு வேதமெய்ப்பொருளாயின.” பிரசண்டன் “அக்கதையை சொல்க!” என்றான். குணதன் குப்தசந்திரசூடர் எழுதிய விருத்திரபிரஃபாவம் என்னும் காவியத்தின் இறுதியை சொன்னான்.

விருத்திரன்மேல் சினம் கொண்ட வருணன் தன்னை அவன் வந்து சந்திக்க வேண்டுமென்று ஆணையிட்டு நூற்றெட்டு அலைகளை புற்றிகபுரிக்கு தூதனுப்பினான். அவ்வலைகள் அனைத்தும் கரைமுட்டி வளைந்து பின் திரும்பி அவனையே வந்து சேர்ந்தன. பின்னர் நீர்மலை என எழுந்த பேரலை ஒன்றின்மேல் ஏறி வருணனே புற்றிகபுரியின் மண் கோட்டை வாயிலை வந்து அறைந்து மேலெழுந்தான். முதிய அரசன் சினம்கொண்டிருந்தான். அவன் சடைக்குழலும் திரிகளாக சரிந்த தாடியும் நனைந்திருந்தன. உதடுகள் துடித்தன. “எங்கே அவன்? இக்கணமே நான் பார்த்தாகவேண்டும் விருத்திரனை” என புற்றிகபுரியின் கோட்டைவாயிலில் நின்று அவன் கூவினான்.

அவனை எதிர்கொண்ட விருத்திரனின் படைத்தலைவன் கௌமாரன் பணிந்து “நீருக்கு அரசே, வருக... மூத்தவராகிய

தங்களை புற்றிகபுரி பணிகிறது. விருத்திரர் இப்போது இந்நகரில் இல்லை. அவர் சொல்கொண்டு நானே இதை ஆள்கிறேன்" என்றான். அலைமுழக்கமென ஒலித்த குரலில் "நான் உயிர் வாழும் அசுரர்களின் முதற்தலைவன் வருணன். எனது ஆணையுடன் நூற்றெட்டு அலைத்தூதர்கள் இங்கு வந்தனர். அவர்களை மறுமொழியின்றி திருப்பி அனுப்பியிருக்கிறீர்" என்றான். "அரசே, விருத்திரர் மண்மீதுள்ள அசுரர்களின் முதற்தலைவர். அவரை வந்து சந்திக்க எளிய தூதர்களுக்கு நிலை இல்லை. அமைச்சரோ அரசரோதான் வந்திருக்கவேண்டும்" என்றான் கௌமாரன்.

"உங்கள் அரசன் இன்று அந்திக்குள் என்னை வந்து சந்திக்க வேண்டும். பெருங்கடல்களின் ஆழத்தில் எனது மாளிகை உள்ளது. அதன்முன் அவன் ஒரு காலத்தில் இரந்து கையேந்திய முற்றம் உள்ளது. அங்கே வாயிலில் கைகட்டி வாய்பொத்தி நின்று சந்திப்பு கோரவேண்டும். இல்லையேல் அவன் இறுதிக் குருதியும் எஞ்சுவதுவரை போரிடுவேன். இறுதிச் சாம்பலும் எஞ்சுவதுவரை வஞ்சம் கொண்டிருப்பேன். அவனை அறிவுறுத்துவதற்கே வந்தேன்" என்றான்.

அச்சமின்றி நிமிர்ந்து வருணனின் விழிகளை நோக்கி கௌமாரன் சொன்னான் "வருணனே, நீர் உளம் திரிந்திருக்கிறீர். இப்புவிக்கு மட்டுமே நீர் பேருருவர். இன்று விண் எழுந்த ஏழு உலகங்களையும் வென்று இந்திரனென அமர்ந்திருக்கிறார் விருத்திரர். விதையென இருக்கையில் ஆலமரத்திற்கு நீர் நீரூற்றியிருக்கலாம். பன்னிரண்டாயிரம் விழுதுகள் எழுந்தபின் ஆலமரம் உமது முற்றத்து தொட்டியில் அடங்கவேண்டுமென நினைத்தீர் என்றால் உலகறியா பேதையெனப் பேசுகிறீர்."

“கேளுங்கள், நீருக்கரசரே! இன்னும் சில ஆண்டுகளில் மூன்று பெருந்தெய்வங்களும் எழுந்துவந்து என் தலைவரை இந்திரனென ஏற்கப்போகின்றனர். புவியில் அந்தணர் அளிக்கும் அவியனைத்திற்கும் அவரே உரிமை கொள்ளப்போகிறார். அன்று அவருடைய சினத்திற்கு ஆளானீர்கள் என்றால் அவர் சுட்டுவிரலில் ஒரு துளி நீரென சுருங்குவீர். இருள் அழியா ஆழ் உலகங்களில் உம்மை சுண்டித் தெறிக்கவைக்க அவரால் முடியும். இடமறியாது ஆளறியாது உம்முள் எழுந்த சினம் நம்முடனே மறையட்டும். மீள்க! விருத்திரேந்திரனை வணங்கி உமது மாளிகையில் சென்று அமைக!” என்றான்.

வருணன் “நீ நிலைமீறிப் பேசிவிட்டாய். இதன் ஒவ்வொரு சொல்லும் உனக்கும் உன் குலத்திற்கும் நஞ்சு” என்றான். கௌமாரன் “வருணரே, நீர் அரசமுறை அறிந்தவர் என்றால் வரும் நீர்த்திருநாளில் சங்கும் முத்தும் பவளமும் மீன்மணியும் கொண்டுசென்று விருத்திரரின் காலடியில் வைத்து பணிக! அதுவே நன்று உமக்கு” என்றான். வருணனின் தோளைத்தொட்டு “முதுமையின் அறிவின்மை ஒன்றுண்டு, அது இளையோரை எப்போதும் இளையோரென்றே காணும். காட்டில் குலமாளும் முதுகளிறும் அவ்வண்ணமே. அது இளங்களிறின் கொம்புபட்டு குடல்சரிந்து சாகும்” என்றான்.

உளக்கொந்தளிப்பால் வருணனின் உடல் நடுங்கியது. மும்முறை சொல்லெடுக்க ஒலியெழாமல் கைகள் மட்டும் அசைந்தன. பின்பு பேசியபோது முதுமையும் இணைய அவன் குரல் நடுங்கியது. “அப்படியென்றால் இதோ, போர் குறித்திருக்கிறேன். போர் முடிவுக்குப் பின் நாம் மீண்டும் பார்ப்போம்” என்றபின் வருணன் திரும்பிச்சென்றான். அன்றே அலைகள் அடங்கின. கடல் குளம்போன்றிருப்பதாக

சொன்னார்கள் தோணியோட்டி மீன்கொள்ளச் சென்ற அசுரர். மீன்களின் விழிகள் அனைத்தும் பொருளற்ற வெறிப்பு கொண்டிருந்தன. வலையிலிருந்து இழுத்து கரையிலிட்டபோதும் அவ்வெறிப்பு அவ்வண்ணமே நீடித்தது.

வருணன் வந்துசென்ற செய்தியை விருத்திரனிடம் சென்று சொல்ல கௌமாரன் எண்ணினாலும் பின்னர் அது ஒரு முதன்மைச் செய்தி அல்ல என்று தோன்றி வாளாவிருந்தான். ஆனால் என்ன நிகழ்கிறதென்று அறிய விண்ணில் நாரைகளென உருக்கொண்டு பறக்கும் அசுரர்களை அனுப்பினான். பலநாட்கள் கடல் அலை ஓய்ந்து கிடந்தது. ஆழம் மட்டும் மெல்ல அதிர்ந்துகொண்டிருந்தது. "அஞ்சிவிட்டார் என எண்ணுகிறேன், தலைவரே" என்றான் ஒற்றனாகிய தவளன். பிறிதொரு ஒற்றனாகிய சார்ங்கன் "எண்ணிநோக்கி தன்னிலையை உணர்ந்துவிட்டார் போலும்" என்றான்.

ஆனால் இந்திரன் வருணனை கிழக்குக் கடல் எல்லையில் அமைந்திருந்த இந்திரகீலம் என்னும் மலையில் சந்தித்தான். அங்கு அவனுடன் நாரதரும் இருந்தார். அவர்கள் அங்கே சந்தித்ததை அசுரகுலத்து ஒற்றர் எவரும் அறியவில்லை. இந்திரகீலம் ஒளிவிடும் வெண்முகில்களால் முற்றிலும் மறைக்கப்பட்ட மலை. இந்திரகீலம் அங்கிருப்பதை தேவர்களும் அறிந்திருக்கவில்லை. இந்திரகீலமெனப் பெயர்கொண்ட வேறு பதினெட்டு மலைகளை பாரதவர்ஷமெங்கும் அமைத்து மொழித்தடம் கொண்டு தேடிச்செல்பவர்களையும் இந்திரன் ஏமாற்றிவந்தான்.

விருத்திரனை வெல்வதெப்படி என்று நாரதர் இந்திரனுக்கும் வருணனுக்கும் சொன்னார். "உலோகங்களாலோ, கல்லாலோ,

மரத்தாலோ, மானுடர் வனைந்த எப்பொருளாலோ, மின்னாலோ கொல்லப்பட இயலாதவன் விருத்திரன்.” வருணன் “ஆம், அந்த நற்சொல்லை என் முன் நின்றுதான் அவன் பெருந்தந்தையிடமிருந்து பெற்றான்” என்றான். அவர்கள் இந்திரனின் முகில்பளிங்கு மாளிகையின் முந்நூற்றிஎட்டாவது உப்பரிகையில் இருந்தனர். “இவையன்றி வேறேதுள்ளது படைக்கலமாக?” என்றான் இந்திரன். “அவனைக் கொன்றொழிப்பது ஒன்றே” என்ற நாரதர் சாளரம் வழியாக சுட்டிக்காட்டினார்.

அப்பால் எழுந்த குடாக்கரையில் வெள்ளிவாளென வளைந்து சென்றமைந்த அலைநுரையைச் சுட்டி நாரதர் சொன்னார் “அவ்வலைநுரையை வாளென ஏந்துக! அதுவே அவனை அழிக்கும் படைக்கலம்.” திரும்பி வருணனிடம் சொன்னார் “கணம்தோறும் பெருகும் உயிராற்றலால் தன் கோட்டையைப் படைத்து நிறுத்தியிருக்கிறான் விருத்திரன். கணங்களென்றே ஆன அலைகள்மட்டுமே அவனுடைய அக்கோட்டையை அழிக்க இயலும். காலமே அவன் கோட்டை. காலமே அதற்கு எதிரி என எழட்டும்.”

புன்னகைத்து “ஆம், அவன் கோட்டையை நான் வெல்வேன்” என்றான் வருணன். பின்பு வளைந்த கடற்கரையில் வெண்நுரை என எழுந்த மாபெரும் வாளை கைநீட்டி தொட்டெடுத்து இந்திரனிடம் அளித்தான். “இது உன் படைக்கலமாகட்டும். வெல்க!” நாரதர் “வருணனே, இந்திரனின் சொல் என்றும் திகழ்க! இனி அவன் கொள்ளும் அவி அனைத்திலும் பாதி உனக்காகும். அந்தணர்குலம் காக்கவும், வேதம்கொண்டு முடி சூடிய மன்னர்கொடி காக்கவும், நாற்குலம் காக்கவும் நீ தெய்வமென அமைந்து அருள்புரிக!” என்றார்.

“அவ்வண்ணமே” என்று உரைத்து வருணன் கிளம்பிச் சென்றான்.

அச்சந்திப்பை பலநாட்கள் கழித்தே கௌமாரன் அறிந்தான். அலைகளில் எழுந்த மீன்கன்னி ஒருத்தி செம்படவர்களிடம் “இன்னும் சிலநாட்களே. புற்றிகபுரி அழியும். இந்திரனிடம் எங்கள் தலைவர் சொல்லளித்துவிட்டார்” என்றாள். அச்செய்தியை கேட்டபின்னரே அவன் தூதர்களை அனுப்பினான். நீருக்குள் மூழ்கும் கரிய நீர்க்கோழிகளாக மாறிய அசுரர் அங்குள்ள மீன்களிடம் கேட்டு அச்சந்திப்பை உறுதிசெய்தனர். ஆனால் என்ன நிகழுமெ‌ன அவனால் உய்த்தறிய இயலவில்லை.

ஒரு புலர்காலையில் பேரலைகள் எழுந்து புற்றிகபுரியை தாக்கின. நீரின் அறைபட்டு கோட்டைகள் அதிர்ந்தன. தன் மஞ்சத்தறையில் பொற்கலங்கள் குலுங்குவதைக் கேட்டு எழுந்து அமர்ந்த கௌமாரன் நீர்த்துமிகள் சாளரம் வழியாக வந்து அறைக்குள் பொழிவதைக் கண்டான். அவன் ஆடையும் போர்வையும் நீர்சிலிர்த்தன. சுவர்கள் கரைந்தவை என வழியலாயின. எழுந்து வந்து உப்பரிகையில் நின்று நோக்கியபோது வருணனின் படைகளான நீலநீரலைகள் நாகபடமென வளைந்து எழுந்து வருவதைக் கண்டான்.



ஆயிரம் ஆண்டுகளாக கணமொன்றென வந்து அலைத்து அந்நகரைத் தொட்டு நனைத்து மீண்டு கொண்டிருந்த அலைகளை அவன் அறிந்திருந்தான். கண் அறியாது வளரும் அப்பெருநகருக்கு அவை எவ்வகையிலும் ஊறல்ல என்று உணர்ந்தும் இருந்தான். ஆயினும் அலைகளின் சினம் அவனை அகத்தில் எங்கோ சற்று அச்சுறுத்தியது. இந்திர உலகுக்குச் சென்று விருத்திரனிடம் அச்செய்தியை சொல்லலாம் என்று எண்ணினான். அதற்கு முன் புற்றில்வாழ் சிதற்குலங்கள்

பதினெட்டின் தலைவர்களை தன் அவைக்கு கூட்டினான். பொன்நிறக் கொம்புகளும் வெள்ளி உடல்களும் கொண்டிருந்த அவர்கள் அவை நிரந்து அமர்ந்தனர்.

“புற்றுறை குலத்தலைவர்களே, இக்கோட்டை உங்களால் எங்கள் அரசனுக்கு அமைத்து அளிக்கப்பட்டது. ஆயிரம் ஆண்டுகளாக இதைக் காப்பவர்களும் நீங்களே. எழுந்து வரும் இக்கடலலைகள் என்னை அச்சுறுத்துகின்றன” என்றான் கௌமாரன். ஏளனமாக நகைத்து முதற்குலத்தலைவர் சொன்னார் “அசுரர் தலைவரே, இக்கணமே பதினெட்டு குலங்களும் நூற்றெட்டு குலங்களாக மாறவும் மறுகணமே ஆயிரத்தெட்டு குலங்களாகப் பெருகவும் ஆற்றல் கொண்டவர்கள் நாங்கள். எழுபசியும் எரிவிழைவும் கொண்டவர்கள். எனவே நாங்கள் உண்பதற்கு மட்டும் மாளாது உணவளியுங்கள். வான் எனப்பெருகி இங்கு நிற்கிறோம். எங்கள் கோட்டை வாயிலில் சிற்றுருவென சிறுத்து வருணன் இருப்பதை காண்பீர்கள்.”

இன்னொரு குலத்தலைவர் சொன்னார் “அரசே, உள்ளனலால் அல்ல, உயிர் விசையாலும் அல்ல, உண்ணும் அன்னத்தால் மட்டுமே நாங்கள் எல்லைக்குள் நிறுத்தப்பட்டவர்கள். எங்களுக்கு அன்னம் முடிவின்றி கிடைக்கும் என்றால் இப்புவி அளவுக்கே நாங்களும் பெருகுவோம்.” கௌமாரன் தன் அமைச்சரை நோக்கி “முடிவற்று பெருகும் அன்னம் இப்புவியில் எது?” என்றான். “இங்குள்ள அன்னமெல்லாம் முடிவின்றி பெருகுவதே” என்றார் அமைச்சர். “ஆனால் அன்னம் அன்னத்தை உண்டே பெருக முடியும்.”

“அன்னத்தில் விரைந்து பெருகுவதென்ன?” என்று அவன் கேட்டான். “புல்” என்றார் அமைச்சர். “தடையின்றி

வளரமுடிந்தால் ஆயிரம் ஆண்டுகளில் ஆயிரம் முறை இப்புவியைச் சுற்றி வளைக்கும் ஆற்றல் கொண்டது புல். ஆகவே அதை பிரஜாபதி என வாழ்த்துகின்றது வேதம்" என்றார். "அவ்வண்ணமெனில் இங்கு புல் வளர்க! புல்லை உண்டு சிதல்குலம் வளர்க! சிதல்குலம் எழுப்பும் கோட்டை தடையின்றி பெருகுக!" என்றான் கௌமாரன்.

அசுரகுலத்தோர் எட்டுத் திசைக்கும் சென்றனர். விரைந்து பரவும் புல் வகைகளைத் தேர்ந்து நகருக்கு கொண்டுவந்தனர். நாளுக்கு இருமடங்கென பெருகும் திரணம், நாளுக்கு மும்மடங்கென பெருகும் குசம், நாளுக்கு ஐந்து மடங்கென பெருகும் உதம், நாளுக்கு ஏழுமடங்கெனப் பெருகும் கேதம் என்னும் நால்வகைப் புற்கள் புற்றிகபுரியைச் சுற்றியிருந்த பெரும்பாலை நிலங்களில் விதைக்கப்பட்டன. புல் எழுந்தோறும் சிதல் புற்றெழுந்தது. வெளியில் எழுந்தெழுந்து வந்த வருணனின் படைகளை புற்றுமலைக்கோட்டைகள் தடுத்தன.

பன்னிரண்டு ஆண்டுகாலம் ஒவ்வொருகணமும் என அப்பெரும்போர் நிகழ்ந்தது. பெரும்பசிகொண்டு மண்ணை அள்ளி அள்ளி உண்டு வளர்ந்தது புல். அப்புல்லை உண்டு வளர்ந்தது சிதல். அசுரகுலக் கவிஞர் சிதலை உயிரின் வெண்ணுரை என்றனர். மண்ணிலெழும் பேரலை என்றனர் புற்றுகளை.

# கிராதம் - 44

**[ 16 ]**

பன்னிரண்டு ஆண்டுகள் நடந்த அந்த சலியாப் போரில் முதற்கணம் முதலே நுண்ணளவுகளோ நுண்மைகொள்சித்தமோ தொட்டெடுக்க முடியாத காலத்துளி ஒன்றின் இடைவெளி இருந்தது. அதை கடல்களும் அறியவில்லை. எதிர்நின்ற புற்றுகளும் அறியவில்லை. வருணனின் படைகள் சிதல் நிரைகளைக் கடந்து அவ்வொரு கணத்துளியில் முன் நின்றன. ஏனெனில் அலையெழுந்து மோதிச் சிதறி கொந்தளித்து மீண்டும் எழுந்து கொண்டிருந்தபோதும் கடல்ஆழம் அதை அறியாது இருண்ட மோனத்தில் தன்னுள் தான் நிறைந்த ஊழ்கத்தில் இருந்தது. மறுபக்கம் நுரை பெருகுவதுபோல் எழுந்து கடலுக்கு நிகர்நின்ற போதிலும் புற்றுகளின் ஆழத்தில் உயிர்வெள்ளம் கொப்பளித்து அலைசுழித்துக் கொண்டிருந்தது.

அக்கணத்துளி பெருகி கனவறிந்து பின் கருத்தறிந்து இறுதியில் கண்ணறியும் வகையில் உருக்கொண்டது. அதைக் கண்டதுமே சிதல்கள் சீற்றம்கொண்டு மேலும் பெருகின. அலைகளோ மேலும் அமைதி கொண்டன. வெறிகொண்டவை எழுந்து பின் அமைகின்றன. அமைதிகொள்வன மெல்ல வளர்ந்து நிறைகின்றன. அலைமேல் அலையென கடல்கள் வளர்ந்தன. அலைகளென எழுந்த புற்றுகள் சினம்கொண்டு வீங்கின.

புற்றுச்சுவர்களின் முகப்புகள் கரைந்து இடிந்து கடலுக்குள் விழுவதை நாளும் கௌமாரன் பார்த்துக்கொண்டிருந்தான். அது ஒவ்வொருநாளும் நிகழ்வது. இழந்தது மீண்டும் பெருகி எழுவதையே அவன் அந்நாள்வரை அறிந்திருந்தான். ஆயினும் தொண்ணூற்றொன்பது கோட்டைகள் சூழ்ந்த பெருநகரில் அரண்மனையின் உப்பரிகையில் அமர்ந்தபடி சொல்லென

ஆகும்போது பொருளிழக்கும் அச்சத்துடன் அவன் நோக்கிக்கொண்டிருந்தான்.

அக்கோட்டைச்சுற்றை ஒரு விராடவடிவனின் பருவுடல் என்று கவிஞர் சொன்னார்கள். அன்னம், பிராணம், மனம், விஞ்ஞானம், ஆனந்தம் என அவை ஐந்து பெருஞ்சுற்றுகள். முதலில் இருந்த அன்னம் செவி, மூக்கு, விழி, நாக்கு, தோல் என ஐந்து. பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன் என பிராணம் ஐந்து. மனம் ஜாக்ரத், ஸ்வப்னம், சுஷுப்தி, துரியம், பூர்ணம் என ஐந்து. ஸ்தவிரம், ருஜு, ஆலயம் என விஞ்ஞானம் மூன்று. தத்பரம், பரம் என ஆனந்தம் இரண்டு. இருபது வட்டங்களுக்குப் பின்னர் எழுபத்திரண்டு நாடிகளின் வளையங்கள். பின்னர் காலம், நியதி, கலை, வித்யை, ராகம், புருஷன் என்னும் வளையங்களுக்குப் பின் மாயாவளையம். அதற்குள் இருந்தது ஏழு அடுக்குகள் கொண்ட விருத்திரனின் மாளிகை.

மூலம், சுவாதிட்டம், மணிபூரம், அநாகதம், விசுத்தி, என்னும் ஐந்து நிலைகளில் முறையே ஏவலர், சூதர், காவலர், கருவூலர், அமைச்சர் ஆகியோர் குடியிருந்தனர். ஆஞ்ஞை என்னும் ஆறாம் தளத்தில் விருத்திரனின் இருப்பிடம். ஏழாம் நிலையில் உச்சியில் இருந்த சகஸ்ரத்திலிருந்து அவன் விண்ணில் எழுந்தான். முகில்களைத் தொட்டு பறந்து இந்திரபுரியை அடைந்தான். உறையிருந்த வாள் என்று அவ்வரண்மனை தோன்றியது. உறையின் வடிவும் கூரும் இருந்த வாளினால் அமைவது. இன்மையென வாள் அதனுள் எப்போதுமிருந்தது.

புற்றுப்பெருங்கோட்டைகள் கரைந்திடிந்து அலைகளுக்குள் விழும் ஓசை அவன் அறையிலிருக்கையில் நாய் நீர்குடிக்கும் ஒலிபோல் கேட்டது. உப்பரிகையில் நின்று விழிகூர்ந்தால் முதலை இரைபற்றுவதுபோல ஆகியது. எழுந்துசென்று

இருளில் நின்று நோக்கியபோது வளைந்து வளைந்து வந்த நாகங்களுக்கு முன் நிரைவகுத்து முடிவிலாது சென்று நின்றிருக்கும் தவளைக்குலம் எனத் தோன்றின புற்றுக்கோட்டைகள்.

துயில்கையிலும் அவ்வோசையை அவன் கேட்டான். அவன் கனவுக்குள் குருதி எழ கரிய உருவங்கள் மண்ணறைந்து விழுந்து புதைந்து ஆழத்தில் வேர்ப்பரப்பாகி கிடந்தன. தன் குலத்து மூதாதையரின் இமையாவிழிகளை நோக்கியபடி துயிலுக்குள் அவன் விழித்துக் கிடந்தான். எழுந்ததுமே ஓடிவந்து உப்பரிகையில் நின்று நோக்குகையில் புற்றுக்குவைகளில் ஓரிரண்டு குறைந்திருப்பதைக் கண்டு நெஞ்சு பதைத்தான். எண்ணித்தொலையாதவை புற்றுகள் என்று அறிந்திருந்தும் எண்ணாமலிருக்க முடியவில்லை உள்ளத்தால். எண்ணி எண்ணிச் சலிக்கையில் புற்றுகள் குறைந்துள்ளன என்றே தோன்றிக்கொண்டிருந்தது.

புற்றுறை குலத்தலைவரை மீண்டும் மீண்டும் அழைத்து "என்ன நிகழ்கிறது?" என்று கேட்டான். "எங்கள் ஆற்றல் நூறுமடங்கு பெருகியிருக்கிறது, அரசே" என்றார் முதற்தலைவர். "புற்றுகள் குறைகின்றனவா?" என்றான். "இல்லை, இருமடங்கு கூடியிருக்கின்றன" என்றார் இரண்டாம்தலைவர். "உங்கள் ஐயம் அது" என்றார் மூன்றாம்தலைவர். "தலைவர்களே, ஐயம் என ஒன்று ஏன் எழுகிறது? என் உள்ளிருந்து அந்த ஐயத்தை எழுப்புவது எது?" என்றான். "அது உங்கள் ஆற்றலின்மையே" என்றார் நான்காம்தலைவர். அப்போது முதிய தலைவர் ஒருவர் மெல்ல அசைந்து முனகினார். "சொல்லுங்கள், மூத்தவரே" என்றான் கௌமாரன்.

“எங்கள் குலம் நூறெனப் பெருகுகிறது. அது உண்மை, ஆனால் அலைகளின் விசையோ நூற்றியொருமுறை பெருகியிருக்கிறது” என்றார் அவர். புற்றிகர் அமைதியாயினர். ஒருவர் “நாளையே அவ்விடைவெளியை வெல்வோம்” என்றார். “இளையோரே, அவ்விடைவெளியை உருவாக்கியது எது? இத்தனை நிகர்நிலையாற்றல்களின் நடுவே அவ்விடைவெளி உருவாகிறதென்றால் அது எளிய மீறல் அல்ல. அணுதோறும் ஆயிரம் புவி சென்றமைந்த எடைகொண்டது அது. அதைக் கடப்பது எளிதல்ல” என்றார் முதியவர். “வெல்வோம், வெல்வோம்” என்று அவர்கள் கூவினர். “நாம் தொடக்கம் முதலே எழுவிசை கொண்டிருக்கிறோம். இத்தனை விசையெழுந்த பின்னரும் எப்படி அந்த சிறுமாத்திரை இடைவெளி விழுந்தது?” என்றார் முதியவர்.

“நீரே சொல்லும்” என்றனர் குலத்தோர். “நாம் கொண்டுள்ள எழுவிசையே சுமையா என்ன? நீர் அதன் ஆழத்தில் அசையா நிலைவிசைகொண்டுள்ளதா என்ன?” என்றார் முதியவர். “நோக்குக முதியவரே, நாங்கள் வெல்வோம்” என்றார் இளைய குலத்தலைவர் ஒருவர். “மைந்தா, அவ்விடைவெளி எங்கள் ஆற்றலின்மையாலோ அவர்களின் ஆற்றலாலோ உருவானதல்ல. மாற்றமுடியாத ஊழொன்றால் நடுவே செருகப்பட்டது” என்றார் முதியவர். அவர்கள் அமைதிகொண்டனர். அவையின் பின்நிரையில் அசைவெழுந்தது. விழியில்லாத முதுகுலத்தலைவர் மெல்ல செருமினார். அவரை அவர்கள் நோக்கினர். முதுமையால் புற்றுக்குள் செயலற்று அமைந்த அவரை நால்வர் சுமந்து அவைக்கு கொண்டுவருவது வழக்கம்.

“இன்றுவரை நான் இங்கேதும் சொன்னதில்லை. இன்று சொல்ல விழைகிறேன். அசுரரே, புவி தோன்றிய முதற்கணம் முதல் நாம் இங்கு இருக்கிறோம். அன்னத்தை உண்டு மண்ணில் உப்பாக ஆக்குகிறோம். மண்ணை மீண்டும் அன்னமாக்குகின்றன புற்கள். புல்லும் சிதலும் இணைந்துருவாக்கிய நெசவு இப்புவி என்பார் நூலோர். எங்கேனும் புல் அழிந்து சிதல் மேலேறிய காலமுண்டா? எப்போதேனும் சிதல் ஒருகணம் முன்சென்று முந்தியுள்ளதா?” என்றார். அவர்கள் நோக்காடிக்கொண்டனர்.

“நாம் அழிப்பவர்கள். ஆக்கத்திற்கு அரைக்கணம் பின்னரே நாம் செல்ல முடியும். அந்நெறியையே இவர்கள் ஊழென்று இங்குரைக்கிறார்கள்” என்றார் முதியவர். சற்று எரிச்சலுடன் “என்ன சொல்கிறீர்கள்? இக்கோட்டை அழியுமா?” என்று கௌமாரன் கேட்டான். “ஐயமே வேண்டியதில்லை. இப்புவியில் கோடானுகோடி ஆண்டுகளாக கட்டப்பட்ட அனைத்து சிதல்புற்றுகளும் அழிந்துள்ளன. அழிந்தாகவேண்டும். உயிரை நாங்கள் வெல்ல வேண்டுமென்றால் அந்த ஆணை விண்வெளியில் ஆதித்யர்களை அள்ளி விளையாடும் பிரம்மத்திடம் இருந்து வரவேண்டும்” என்றார் முதியவர்.

அவை சொல்லின்றி கலைந்தது. ஒவ்வொருவரும் அச்சொற்களின் எடையை உணர்ந்தனர். ஏனென்றால் அவர்கள் அதை முற்றாக முன்னர் அறிந்திருந்தனர். அவ்வுண்மைக்கு எதிராகவே அவர்கள் கிளர்ந்தெழுந்தனர். மாற்றவியலாத ஒன்றுக்கு எதிராகவே அத்தனை கொந்தளிப்பு எழமுடியுமென அவர்கள் உணர்ந்தனர். அவைநீங்கிய அக்கணமே அவர்களனைவரும் ஒன்றாக விடுதலை உணர்வை அடைந்தனர். இனி கணம்தோறும் முழு உயிராலும்

கொப்பளிக்கவேண்டியதில்லை. இனி தன்னைப்பெருக்க தன் உயிர்த்துளி ஒவ்வொன்றையும் நுரைக்கவைக்க வேண்டியதில்லை.

ஆனால் அந்த விடுதலையுணர்வால் அவர்கள் தோல்வியை ஏற்க சித்தமானார்கள். அங்கிருந்து செல்லும்போதே தோற்றழிந்தபின் தங்கள் குலங்கள் எவ்வாறு மீண்டும் எங்கோ ஒரு புள்ளியில் சிறுதுளையொன்றினூடாக கசிந்து வெளிவந்து மீண்டும் தழைக்கும் என்று எண்ணிக்கொண்டிருந்தார்கள். தோல்வியை பலமுறை உள்ளூர அடைந்தபின் அது நிகழ்வதற்காக பொறுமையிழந்து காத்திருக்கலானார்கள்.

**[ 17 ]**

புற்றுக்குலங்களின் அவை முடிந்த அன்றே சகஸ்ரத்தில் ஏறி தன்னை நுண்ணுருவாக்கி பறந்து விண் ஏகி இந்திரபுரியை அடைந்தான் கௌமாரன். அமராவதியின் பெருவாயிலுக்குள் நுழைந்தபோது அங்கே இன்மதுவின் மணமே நிறைந்திருக்கக் கண்டான். அத்தனை பூக்களிலும் கள் வழிந்தது. அத்தனை வண்டுகளும் குழலும் யாழுமென இசைத்து தரையில் விழுந்து சிறகதிரச் சுழன்றன. மது மயக்கில் அமராவதியின் மாளிகைத்தூண்களும் சுவர்களும் நெளிவதாகத் தோன்றியது அவனுக்கு. களிவெறிகொண்டு சிரித்தும் கூச்சலிட்டும் அலைந்தனர் தேவர்கள். அவர்களுடன் காமத்திலாடி கண் சிவந்து கொந்தளித்துக் கொண்டிருந்தனர் அரம்பையர்.

அவனைக் கண்டதும் கள்மயக்கில் காலாடிக்கொண்டிருந்த தேவன் ஒருவன் அணுகி வந்தான். “நீர் அசுரரா?” என்றான். “ஆம்” என்றான் கௌமாரன். “இல்லை, நீர் தேவர். நான் அசுரன்” என்றான். குழறியபடி நகைத்து “தேவனாக முன்னால்

இருந்தேன். கடமையைச் சுமந்தவன் தேவன். கட்டுக்குள் வாழ்பவன் அவன். கடமைகளற்றவன் அசுரன். கட்டற்றவன் அசுரன். எங்களை விடுதலை செய்தவர் அசுரேந்திரர் விருத்திரர்…" என்றான். மதுக்கிண்ணத்தை தூக்கிக் காட்டி "நான் உண்பது என் விழைவை. இதுநாள்வரை இதை என் மூலாதாரத்தில் ஒரு துளி நஞ்செனத் தேக்கி வைத்திருந்தேன். இதோ, அது விடுதலைகொண்டு வளர்கிறது" என்றான்.

முகவாயிலினூடாக இந்திரனின் அரண்மனைக்குள் சென்றான் கௌமாரன். அங்கு தன்னை எதிர்கொண்ட அமைச்சரிடம் "விருத்திரேந்திரரைக் காணவந்தேன். உடனே சொல்லளிக்க வேண்டும்" என்றான். "எவரும் தன்னைக் காணலாகாதென்ற ஆணையிட்டு களியாட்டுக்குச் சென்றிருக்கிறார் அரசர்" என்றார் அமைச்சர். "சென்று நெடுங்காலம் ஆகிறது." பொறுமையை பேணியபடி கௌமாரன் "நான் இப்போதே கண்டாகவேண்டும்" என்றான். "அரசரின் உறுதியான ஆணை அது. மீற என்னால் இயலாது" என்று அமைச்சர் சொன்னார். ஒருகணம் எண்ணி நின்றபின் அவரை தள்ளி வீழ்த்திவிட்டு அரண்மனைக்குள் புகுந்து அதன் பன்னிரண்டாவது உப்பரிகையை அடைந்தான்.

அந்த உப்பரிகையே ஒரு மலர்வனமாக ஆக்கப்பட்டிருந்தது. அங்கு சிறு குளிர்ச்சுனைகள் மான்விழிகளென ஒளிகொண்டிருந்தன. பொன்வண்டுகளென்றான தேவர்கள் யாழிசை மீட்டினர். அனைத்து மலர்களும் ஒரு திசை நோக்கி திரும்பி இருக்கக்கண்டு அங்கு சென்றான். மூன்று சுனைகளால் சூழப்பட்ட சிறு மலர்ச்சோலை ஒன்றில் அல்லியிதழ்கள் சேர்த்து அமைத்த மஞ்சத்தில் ரம்பையும் ஊர்வசியும் திலோத்தமையும் அருகிருக்க கள் மயக்கில் காமத்திலாடிய களைப்பில் விழிமயங்கி இருந்த விருத்திரனை கண்டான்.

அவனைக் கண்டதும் எழுந்து ஆடை அள்ளி உடல் மறைத்து விலகிய தேவகன்னியர் சினமும் நாணமும் அச்சமும் கொண்ட விழிகளால் அவனை சரித்து நோக்கினார்கள். விருத்திரனின் கால்களைப்பற்றி உலுக்கி “அரசே, எழுக அரசே!” என்று கௌமாரன் அழைத்தான். ஏழுமுறை அழைத்தபின் மெல்ல விழிதிறந்து கைகளை ஊன்றி எழுந்து “யார்? என்ன நிகழ்கிறது?” என்று விருத்திரன் கேட்டான். “அரசே, நான் கௌமாரன். உங்கள் முதன்மை படைத்தலைவன்” என்றான் கௌமாரன். தலையை உலுக்கி தெளிந்த விருத்திரன் “ஆம், உன்னை நினைத்துக்கொண்டிருந்தேன்” என்றபின் நீர் கொண்டுவரச்சொல்லி அள்ளி அள்ளி தன் தலையை கழுவிக்கொண்டான். முகத்தில் நீரை அள்ளி அள்ளி அறைந்தான்.

சிற்றேப்பத்துடன் “என் குடி அனைத்து செல்வங்களையும் பெற்று வாழ்கிறதல்லவா? குலமூத்தோர் நிறைவுகொண்டுள்ளனர் அல்லவா? மூதன்னையர் குலம் பெருகுவது கண்டு மகிழ்கிறார்களல்லவா?” என்றான். ஒவ்வொருமுறையும் எழும் அந்த வழக்கமான வினாக்கள் கௌமாரனிடம் அப்போது பெருஞ்சினத்தையே எழுப்பின. “அரசே, கீழே தாங்கள் கட்டி எழுப்பிய முதற்பெருநகர் விழுந்துகொண்டிருக்கிறது. வருணனின் படைகளால் நமது கோட்டைகள் சரிகின்றன” என்றான். அதை விருத்திரனின் உள்ளம் உணரவில்லை. “நன்று” என்று இன்னொரு ஏப்பம் விட்டான்.

உரத்த குரலில் “அரசே, புற்றிகபுரி அழியப்போகிறது. வருணனின் படைகள் அதை அழிக்கின்றன” என்றான் கௌமாரன். “யார்?” என்றான் விருத்திரன். “வருணன். அவர்

படைகளால் நம் நகர் அழிகிறது" என்றான் கௌமாரன். விருத்திரன் வாய் திறந்திருக்க, கண்கள் நீர்படிந்து சிவந்து பொருளற்ற வெறிப்பு கொண்டிருக்க "என்ன சொல்கிறாய்?" என்றான். மீண்டும் கௌமாரன் அச்செய்தியை கூவிச்சொன்னான்.

மெல்ல புரிந்துகொண்டதும் "என் நகரையா?" என்ற விருத்திரன் உடனே நகைத்து "கணம் வளரும் கோட்டை அது. சரிவது அதன் இயல்பு. மீண்டும் வளர்வதற்கென்றே சரிகிறது அது. இன்னமும் அதை நீ உணரவில்லையா?" என்றான். கௌமாரன் "அரசே, வருணனை நானும் எளியவர் என்றே எண்ணினேன். உங்கள் காலடிகளை பணியும்படி அறிவுறுத்தினேன். அவர் வல்லமையைக் கண்டு இன்று அஞ்சுகிறேன்" என்றான். "அச்சம் தவிர், படைத்தலைவனே! என்னை வெல்ல எவருக்கும் ஊழில்லை" என்றபின் சோம்பலுடன் உடலை நீட்டிப்படுத்து "எனக்கு மிகவும் களைப்பாக இருக்கிறது. இன்மது கொண்டுவருக!" என்றான். கௌமாரனின் அஞ்சிய முகத்தைகண்டு "படைத்தலைவருக்கும் மது வரட்டும்" என்றான். சீற்றத்துடன் "அரசே!" என்று அவன் கால்களைப்பற்றி உலுக்கினான் கௌமாரன். "வந்து பாருங்கள்! தங்கள் கோட்டை அங்கிருக்கிறதா என்றே ஐயம் கொள்கிறேன்."

விருத்திரன் நகைத்து "எனது பகைவன் இந்திரன் மட்டுமே. அவனோ எங்கு என்றறியாது மறைந்துவிட்டான். இந்திரன் வெல்லமுடியாத என்னை இவ்வேழு உலகிலும் எவரும் வெல்ல முடியாதென்றறிக! மூடா, வருணன் என் குலத்தவர். அசுரர்களின் வெற்றி கண்டு உளம்நிறைபவர். நான் புற்றிகபுரியை அமைத்தபோது அவர் வாழும் ஆழ்கடலுக்குள் சென்று மூத்தவரே வாழ்த்துக என்னை என்று சொல்லி

தலைவணங்கி அரிசியும் மலரும் நீரும் பெற்றே வந்தேன். இங்கே இந்திரனை வெல்லவரும்போதும் அவர் சொல் பெற்றேன். அவர் அருளுடனேயே இந்திரன் என்று ஆவேன்" என்றான்.

சொல்லிழந்து நின்ற கௌமாரனின் தோளில் தட்டி "நீ செல்க! உனது எளிய அச்சங்களுக்கு விடையளித்து வீணடிக்க என்னிடம் பொழுதில்லை" என்றபின் களிமயக்குடன் கண்மூடி "கள்ளுண்டவனுக்கும் காமம்கொண்டவனுக்கும் காலம் இமைக்க இமைக்க குறுகி வருவதை நீ அறியமாட்டாய்" என்றான் விருத்திரன். செய்வதறியாது அங்குமிங்கும் நோக்கியபின் கௌமாரன் எழுந்து விலகினான். அவன் மீண்டும் படிகளுக்கு வந்தபோது அங்கே இந்திராணி நின்றிருந்தாள். "வணங்குகிறேன், தேவி" என்றான்.

"என்ன சொல்கிறார்? காமம் நிறையவில்லையா அவருக்கு?" என்றாள். "ஆம், அவர் விழித்தெழ விழையவில்லை" என்றான். "அவர் விழித்தெழவேண்டும்... நான் சொல்லிச்சொல்லி சோர்ந்துவிட்டேன்" என்றாள் இந்திராணி. "கண்ணறிய மாறிக்கொண்டிருக்கிறது காலம். காலத்தில் பிந்தியவன் கணம்தோறும் தன்னை இழந்துகொண்டிருக்கிறான். வேந்தர் எண்ணி வாழும் அவ்வுலகம் இன்றில்லை. விழுந்துகிடக்கும் இனிய சேற்றிலிருந்து ஒருகணம் வெளிவந்து நோக்கும்படி சொல்லுங்கள்." இந்திராணி அவனை அழைத்துக்கொண்டு விருத்திரனை அணுகினாள். "படைத்தலைவர் சொல்லையும் அமைச்சர் சொல்லையும் ஒற்றர் சொல்லையும் மறந்த அரசன் பகைவர் சொல்லை கேட்பான் என்பார்கள். இனி பொறுக்கமுடியாது. எழுக!" என்றாள்.

“செல்க! இனியொரு சொல்லும் கேட்க எனக்கு விழைவில்லை” என்றபின் விருத்திரன் புரண்டு படுத்தான். இரு கைகளையும் விரித்து அருகே நின்ற மகளிரை அழைத்து “என்னை தழுவிக்கொள்ளுங்கள். இவ்வினிமை ஒருகணமும் விரிசலிடாமலிருக்கட்டும். அது உங்கள் திறன்” என்றான். இந்திராணி “அரசே, அனைத்தும் அழிந்துகொண்டிருக்கின்றது என்கிறார் படைத்தலைவர். விழித்தெழுக!” என்று கூவினாள். அவன் தோளைத்தொட்டு உலுக்கி “எழுக!” என்றாள். விருத்திரன் “நீ இனியவள்” என அவள் கன்னத்தை வருடினான்.

“இனிமேலும் தயங்கினால் உங்கள் அழிவே” என்று இந்திராணி சொன்னாள். “மீண்டும் மீண்டும் இதை சொல்லிக்கொண்டிருக்கிறேன். இதோ, இறுதிக்கணமே இவர் வடிவில் வந்து நின்றிருக்கிறது. நான் சொல்வதை செவிகொள்ளுங்கள். எழுங்கள்!” என்றாள். அவள் கண்கள் கலங்கி குரல் உடைந்தது. அவன் “நீ நல்லமைச்சர். நல்ல சொற்களை சொல்கிறாய். அது உன் கடமை” என்றான். பின்னர் கௌமாரனிடம் “இந்திராணி என்றாலும் பெண். ஆண்களின் ஆற்றல் அவர்களுக்கு புரிவதே இல்லை” என்றான்.

உடைவாளை உருவி தன் கழுத்தில் வைத்து கௌமாரன் வீறிட்டான் “அரசே, உங்கள் மேல் ஆணை! ஒருகணம் எழுந்து வந்து என்னுடன் நின்று கீழே உங்கள் நகரை நோக்குக! அன்றேல் இக்கணமே சங்கறுத்து உங்கள் காலடியில் விழுவேன்.” சினத்துடன் அவனை சற்றுநேரம் பார்த்தபின் மெல்ல தளர்ந்து “பித்து நிறைந்துவிட்டது உன் உள்ளத்தில். மூடா, உன் மேல் நான் கொண்ட அன்பின்பொருட்டு எழுகிறேன். இவையனைத்தும் உன் வீண் அச்சமென அறிவேன். விருத்திரேந்திரனின் முதன்மைப் படைத்தலைவன்

அச்சம்கொண்டான் என்று நான் அன்றி பிறர் அறியலாகாது. வா!” என்று எழுந்து ஆடை சுற்றி தலையணியைச் சூடி நடந்தான்.

“வருக, அரசே! ஒருமுறை கீழே நோக்குங்கள்” என்றபடி கௌமாரன் முன்னால் ஓடினான். “மூடன்” என்றான் விருத்திரன் தேவியிடம். “நம் படைத்தலைவர் அவர். நாம் காணாதவற்றை அவர் காணக்கூடும்” என்று இந்திராணி சொன்னாள். “பார்வையென்பது பார்ப்பவனின் இடத்தாலும் திசையாலும் ஆனது. ஆகவே எந்தப் பார்வையும் தன்னளவில் தனித்ததே. சென்று நோக்குக!” விருத்திரன் நகைத்து “நான் வெல்லற்கரியவன். அதை நான் அறிவேன். நீங்கள் என் வெற்றியில் ஐயம் கொண்டிருக்கிறீர்கள். இதுதான் வேறுபாடு” என்றான்.

அமராவதியிலிருந்து வெளிவந்து அங்கு தெற்கு மூலையிலிருந்த கோட்டைச்சுவர் மேல் ஏறி காவல்மாடத்தில் நின்று கீழே நோக்கினான் விருத்திரன். அக்கணமே எரிசினத்துடன் “என்ன நிகழ்கிறது அங்கே? நான் காண்பது விழிமயக்கா?” என்று கைநீட்டி கூவினான். புற்றுறைக் குலங்களால் சமைக்கப்பட்ட அவன் தொண்ணூற்றொன்பது பெருங்கோட்டைகளில் ஒன்று மட்டுமே எஞ்சியிருந்தது. பிற அனைத்தும் விழுந்து கரைந்து மறைய அங்கு வெண்நுரை எழுந்து அலை கொப்பளித்துக்கொண்டிருந்தது.



கௌமாரன் சொன்னான் “இன்னும் நெடுநாள் இக்கோட்டை எஞ்சாது, அதை இப்போது உள்ளுணர்கிறேன், அரசே. தங்கள் முதல் நகர் விழுவதென்பது தோல்வியின் தொடக்கம். தங்களை வெல்லலாகும் என்று இந்திரன் தேவர்களுக்கு காட்டிவிட்டால் அதன் பின் உங்கள் முடி நிலைக்காது.” தன் நெஞ்சில் அறைந்து விருத்திரன் கூவினான் “இக்கணமே எழுகிறேன். வருணனை சிறைபற்றி இங்கு என் அரியணைக்காலில் கொண்டு கட்டுகிறேன். மூதாதை என நான்

எண்ணியிருந்தவன். என் குலத்து மூத்தவன். வெற்றாணவத்தால் குடிகெடுக்கும் வஞ்சகனானான்.” சினத்தால் மதம்கொண்டு சுற்றிவந்து கூச்சலிட்டான் “அவனை என் காலடியில் வீழ்த்துவேன். அவன் தலையை மிதித்தாடுவேன். இது ஆணை! என் குலமூதாதையர் மேல் ஆணை!”

“பொறுங்கள், அரசே! நான் சினம் மீதூறிச் சொன்ன சொல்லே நம் நகரை அழிக்கிறது. இச்சினம் முதலில் அவருக்கு எப்படி வந்ததென்று பார்ப்போம். நம் குலத்தார் ஒருசொல் சென்று சொன்னால் நம்மில் கனிவு கொள்ளக்கூடும். நிகர் வல்லமை கொண்ட இரு அசுரர் குலத்து அரசர்கள் அவரும் நீங்களும். உங்களை பிரித்து வெல்வது இந்திரனின் சூழ்ச்சி” என்றான் கௌமாரன். “தலைவணங்குவதா? தேவருக்கு வணங்காத தலை பிறிதொரு அசுரன் முன் இறங்குவதா?” என்று விருத்திரன் கூவினான். “வீண்சொல்! போரன்றி வேறேதுமில்லை. எழுக நமது படைகள்!”

கௌமாரன் “அரசே, இங்குள்ளவை தேவர் படைகள். அவர்கள் கள்ளுண்டு செயலற்றிருக்கிறார்கள். அங்கு நம் அசுரகுடிகளும் பிறிதொரு நிலையில் இல்லை. படைகொண்டு சென்றாலும்கூட யாரிடம் போர் புரியப்போகிறோம்? அங்கு அலையுருக்கொண்டு எழுந்து வருவதும் நமது குடியல்லவா? நாம் இந்திரனின் கண்முன் போரிட்டு அழியப்போகிறோம். ஆம், நமது அழிவுபோல் அவனுக்கு உவகை அளிப்பது பிறிதொன்றுமில்லை” என்றான்.

“ஆம்” என்று விருத்திரன் சோர்ந்து அமைந்தான். “பகை, நஞ்சு, நெருப்பு மூன்றும் ஒரு துளியும் எஞ்சலாகாது என்று கற்றிருக்கிறேன். அவனை எஞ்சவிட்டது என் பிழை” என்றான். “இல்லை அரசே, அவனை சிறுதுளியென விட்டிருந்ததே உங்கள்

பிழை” என்றான் கௌமாரன். “அவனை தேடிக் கண்டடைந்து பெருக்கியிருக்க வேண்டும். நிகர் எதிரியென உங்கள் முன் அவன் நின்றிருக்கவேண்டும். தேவர்களின் ஆற்றல் நேர்விசை. அசுரர்களோ எதிர்விசை மட்டுமே கொண்டவர்கள். பேருருவப் பகைவனொருவன் இன்றி அசுரர்கள் தன்னை திரட்டிக்கொள்ள முடியாது. சினமின்றி படைக்கலங்கள் ஏந்த முடியாதவர்கள் நாம்” என்றான்.

“அரசே, அசுரர் வெற்றியெல்லாம் அவர்கள் எதிரிகளை எதிர்கொள்ளும்போது மட்டும் அமைவதே. இந்திரன் இல்லாததனால் தேவர்குலம் வலுவிழந்தது. எதிரி இல்லாததனால் அசுரர்குலம் வலுவிழந்துள்ளது. தேவர்கள் எழமுடியும். விழைவே அவர்களின் இயல்பு. தேவர்கள் எழுந்து நம்மை வெல்ல வரும்போது மட்டுமே அசுரர் எழுவார்கள். எதிர்ப்பே நம் இயல்பு” என்றான் கௌமாரன். “ஆம்” என்று சோர்ந்து தோள்தாழ்த்தினான் விருத்திரன்.

“இன்னமும் பிந்திவிடவில்லை” என்றாள் இந்திராணி. “உங்கள் வெல்லமுடியாத ஆற்றல் அப்படியே எஞ்சியிருக்கிறது. எழுக! இந்திரனை வென்று மீண்டும் புற்றிகபுரியை அமைத்தால் உங்கள் ஆற்றல் மீண்டும் நிறுவப்படும்...” விருத்திரன் “ஆம்” என்றான். “வேறுவழியில்லை. போர்தான்” என தனக்குள் சொல்லிக்கொண்டான். “அரசே, வருணனுடன் நாம் ஓர் ஒப்பந்தம் செய்துகொள்ளலாம். அவரை பகைத்தல் நன்றல்ல” என்றான் கௌமாரன். “நான் எண்ணுவதும் அதுவே” என்றாள் இந்திராணி. “பகைவரைப் பெருக்குவது அறிவுடைமை அல்ல.”

“அப்படியென்றால் நான் வெல்லமுடியாதென்று எண்ணுகிறீர்கள் அல்லவா?” என்றான் விருத்திரன். “நான் அழியக்கூடுமென ஐயுறுகிறீர்கள். அந்த ஐயம் எனக்கில்லை. நான் வெல்வேன்.

என் முதற்றாதையின் அழியாச்சொல்லே என் படைக்கலம்.” மீண்டும் குனிந்து அவன் நோக்கியபோது ஒரு புற்று எழுந்திருந்தது. “ஆம், அவர்களும் போர்புரிகிறார்கள். அசுரர்களாகிய நாம் ஒருபோதும் தோல்வியை ஏற்பதில்லை” என்றான்.

# கிராதம் - 45

**[ 18** ]

அமராவதிக்கு மீளும் வழியெல்லாம் திரும்பத்திரும்ப விருத்திரன் வஞ்சினத்தையே உரைத்துக்கொண்டிருந்தான். செல்லும் வழியெல்லாம் மதுஉண்டு நிலைமறந்து சிரித்தும் குழறியும் பித்தர்கள்போல் பாடியும் நடனமிட்டும் கிடந்த தேவர்களைப் பார்த்தபடி சென்றான். ஒரு நிலையில் நின்று ஆற்றாமையுடன் கைவிரித்து “எப்படி இவர்கள் இவ்வண்ணம் ஆனார்கள்! அசுரர்களும் இக்கீழ்நிலையை அடைவதில்லையே?” என்றான்.

“அரசர் வழியையே குடிகளும் கொள்கின்றன” என்றாள் இந்திராணி. “நீங்கள் முடிசூடிய நாள்முதலே இதைத்தான் நான் சொல்லிவருகிறேன்.” விருத்திரன் “இவர்கள் தேவர்கள் அல்லவா?” என்றான். “ஆம், அசுரர்களில் தேவர்கள் ஒளிந்திருப்பதில்லையா என்ன?” என்று அவள் சொன்னாள்.

விருத்திரன் பெருமூச்சுவிட்டான். “அரசே, அசுரர்கள் என்றும் கள்ளிலும் காமத்திலும் திளைப்பவர்கள். தேவர்கள் அவற்றை கடந்து அமைந்தவர்கள். கடக்கப்பட்டவை அனைத்தும் எங்கோ கரந்துறைகின்றன. கரந்துறைபவற்றின் ஆற்றல் நிகரற்றது. ஏழு ஆழுலகங்களின் அனைத்து தெய்வங்களும் அவற்றில் வந்து

குடியேறுகின்றன. இங்குள்ள தேவர்கள் இன்று உள்ளங்களில் சூடியிருப்பவை இருள்உலகத்து தெய்வ வல்லமைகளே” என்றாள் இந்திராணி.

“பாருங்கள், தேவர்கள் நிழலற்றவர்கள். இங்கோ ஒவ்வொரு தேவர்க்கும் மூன்று நிழல்கள் விழுந்துள்ளன. இதோ, மலர்சூடி இளித்தபடி செல்பவனை நான்கு கைகளுடன் நிழலெனத் தொடர்வது காளன் என்னும் காமத்தின் தெய்வம். அங்கே சினம்கொண்டு வெறித்துக் கனைப்பது கராளன் என்னும் குரோதத்தின் தெய்வம். நூறு கைகளுடன் எழுந்த நிழல்சூடி நின்றிருக்கும் அவனை நோக்குக! அவனில் கூடியிருப்பது கிராதம் என்னும் மோகத்தின் முதன்மைத்தெய்வம். கோடிகோடியெனப் பெருகி இந்நகரை அவர்கள் சூழ்ந்துள்ளார்கள்.”

“முன்னகர திசையின்றி நின்றுவிட்ட தேர் இந்நகர். கடையாணி துருவேறிவிட்டது. சக்கரம் மண்ணில் புதைந்துவிட்டது” என்றாள் இந்திராணி. “இதன் அழிவு உங்களால்தான். அரசு என்பது அரசனின் விராடவடிவம் கொண்ட உடலே. உங்கள் நோயனைத்தையும் உங்கள் விழிகளால் நீங்கள் பார்க்கும் வாய்ப்பு ஒரு நகருலாவில் அமைகிறது. அரசே, இது இங்கு நுழைந்தபின் நீங்கள் செல்லும் முதல் நகருலா.”

விருத்திரன் அவற்றை நோக்க அஞ்சி விழிமூடிக்கொண்டான். களைத்து கால்தளர்ந்து இந்திராணியின் அணைப்பில் மயங்கியவன்போல நடந்தான். அரண்மனையின் அகத்தளத்தை அடைந்ததும் “என் நகரும் வீழுமா? என் கொடியும் சரியுமா?” என்று தனக்குத்தானே என கேட்டான். “நான் தோற்கலாகுமா?” கௌமாரன் “அரசே, இன்னமும் நம் கோட்டைகளில் ஒன்று எஞ்சியுள்ளது. ஒன்று எஞ்சுவதுவரை நம்பிக்கை நீள்கிறது

என்றே பொருள். நம் படைகள் எழும்படி ஆணையிடுக! வென்று பகை முடிப்போம்” என்றான்.

“ஆம், நாம் எழவேண்டிய நேரம். ஆனால் என் உள்ளமும் உடலும் களைத்திருக்கின்றன. சற்று மது அருந்தி இளைப்பாறாது இங்கிருந்து என்னால் எழமுடியாது” என்றபின் இருக்கையில் சரிந்து அருகணைந்து நின்ற சேடியரிடம் மதுக்கோப்பைகள் வருவதற்கு கையசைத்தான் விருத்திரன். அவர்கள் கொண்டுவந்த மதுவை வாங்கி ஒன்றன்மேல் ஒன்றென அருந்தினான். எரிதீயை நீர்விட்டு அணைப்பதுபோல. விடாய்கொண்டிருப்பது அவனல்ல, அவன் உயிர் என கௌமாரன் நினைத்தான்.

நீள்மூச்சுடன் இந்திராணி சொன்னாள் “ஒன்றும் செய்வதற்கில்லை, படைத்தலைவரே. ஊழ் இதுவென்றால் தலைவணங்கி காத்திருப்பதே நம் கடன்.” அவள் செல்வதை கௌமாரன் நோக்கிநின்றான். அவள் உடலசைவுகள் அனைத்திலும் துயரும் சினமும் நிறைந்திருந்தன. அவள் செல்லும்போது எதிர்த்திசையில் அவள் நிழலொன்று வருவதுபோல் தோன்றியது. அவன் விழியிமைத்து அம்மயக்கை அகற்றினான்.

அங்கிருந்து ஆவதொன்றுமில்லை. அவன் தானும் செல்லவே நினைத்தான். ஆனால் கால்கள் அசையவில்லை. விருத்திரனையே நோக்கிக்கொண்டிருந்தான். இளமையில் அவன் நோக்கி வியந்த உடல். அவன் கனவுகண்ட முகம். துயர்மிக்க இறப்பென்பது இது, வழிகாட்டியின் வீழ்ச்சி.

விருத்திரன் உடலில் அத்தனை தசைகளும் மெல்ல மெல்ல முறுக்கவிழ்வதை காணமுடிந்தது. முற்றணைந்து தாடை

தளர்ந்து வாய் விரிய, கைவிரல்கள் ஒன்றொன்றாக நரம்பு தளர்ந்த யாழின் புரிகளென விடுபட, விழிகள் நனைந்த குருவியிறகுகள்போல் சரிந்து ஒட்டிக்கொள்ள துயில் அவன் உடலில் கால்கட்டை விரலில் இருந்து எழுந்து எங்கும் பரவி நெற்றிப்பொட்டை நிறைத்தது.

அவன்மேல் எழுந்த நித்ராதேவி உரத்த குரலில் தன் மொழியில் பேசலானாள். திகைப்புடனும் துயருடனும் அதை நோக்கிநின்றான் கௌமாரன். அச்சொல் மெல்ல திருந்தியது. "அகல்க. அகல்க." கௌமாரன் அக்குரலை கூர்ந்து கேட்டான். செவிமயலா அது? "அமைக அமைக அமைக" அது அவள் குரலேதான். அவனும் அதை கேட்டிருக்கிறான்.

"அன்னையே, இவருக்கு கடமைகள் உள்ளன" என்றான். வெண்ணிற ஆடையணிந்து வலக்கையில் சாமரமும் இடக்கையில் அமுதமுமாக அவள் அவன் முன் தோன்றினாள். அவன் கைகூப்பி வணங்கி நின்றான். "அவர் இங்கிருந்து செல்ல விரும்புகிறார்." நித்ராதேவி அவனிடம் சொன்னாள் "நான் நாடிவரவேண்டும் என்பதே நெறி. என்னை நாடுபவர்கள் தங்கள் உள்ளத்தின் ஆழத்தில் இங்குள்ள அனைத்தையும் விட்டுவிட்டவர்கள். அவர்களை உடலும் உறவும் சுற்றமும் பற்றிக்கொள்ளலாம். அவர்கள் நெடுநாள் முன்னரே நழுவத் தொடங்கிவிட்டவர்கள். அவர்கள் மீளமுடியாது. அடித்தளத்தின் ஆழத்தில் விரிசல் விழுந்துவிட்டது."

"தேவி, இவர் எங்கள் குலத்தின் முதல்வர். இவரில்லையேல் நாங்கள் முற்றழிவோம்" என்று கௌமாரன் சொன்னான். "மைந்தா, மாமனிதருக்குள் வாழ்வது எளிதில் சலிப்பு கொள்கிறது. உங்களுள் விசைகொண்டு மேலெழுந்தவன் இவனே. தன் முழுமையைத் திரட்டி இங்கு வந்தடைந்தான்.

இனி அவன் கொள்ள ஒன்றுமில்லை என அவனுள் வாழ்வது அறிந்துவிட்டது. இந்திரனையோ வருணனையோ எஞ்சும் கயிலையையோ வைகுண்டத்தையோ வென்றாலும் அது அடைவது ஒன்றில்லை."

கௌமாரன் "தேவி, என் குலங்கள் இங்கே இன்னும் வேர்நிலைக்கவில்லை. இன்றுதான் நாங்கள் முளைகொண்டு எழுகிறோம்" என்றான். "ஆம், ஆனால் அது உங்கள் வாழ்க்கை" என்றாள் தேவி. "மாமனிதர்கள் எக்குலத்திற்கும் உரியவர்கள் அல்ல. குடிவிட்டெழுகிறார்கள். குலம்விட்டு எழுகிறார்கள். மானுடம்விட்டு உயர்கிறார்கள். பின்னர் தங்களையே கடந்துசெல்கிறார்கள். உதிர்த்து உதிர்த்து அவர்கள் அடைந்தவையே அனைத்தும்." துயில்பவன் தலையை வருடி நித்ராதேவி சொன்னாள் "இனி அவர் உதிர்க்க விழைவது விருத்திரன் என்னும் வடிவை."

செய்வதறியாது சுற்றிலும் விழியோட்டிய கௌமாரன் சினத்துடன் மதுக்கோப்பையை நோக்கி "அந்நஞ்சு அவரை கொல்கிறது" என்றான். நித்ராதேவி "மதுவை நாடுபவர் அனைவரும் மதுவெனக் கொள்வது ஒன்றையே அல்ல. அஞ்சுபவர்களுக்கு அது துணை. பணிந்தவர்களுக்கு அது குரல். தனித்தவர்களுக்கு அனைத்து வாயில்களையும் திறக்கும் காற்று" என்றாள். "எவருக்காயினும் மது என் புரவி. என்னைத் தொடர்ந்து வருகிறார்கள் என் மூத்தவளாகிய வியாதியும் எங்கள் மூதன்னையாகிய மிருத்யூவும்."

கௌமாரன் நெஞ்சுபொறாது மீண்டும் மீண்டும் பெருமூச்சுவிட்டான். நித்ராதேவி அனல்பட்டவள்போல் செந்நிறம்கொள்வதை கண்டான். அவள் சாமரம் சவுக்காகியது. அமுதகலம் அனல்குடுவையாகியது. "துயர்! துயர்! துயர்!"

என்றாள் வியாதிதேவி. சுண்டும் தைலமென மெல்ல கருகி நீலநிறம் கொண்டாள். மிருத்யூதேவி செந்நிற உதடுகளும் நீண்டுபறக்கும் செந்தழல்குழலும் கொண்டிருந்தாள். வலக்கையில் மின்படையும் இடக்கையில் துலாக்கோலும் கொண்டிருந்தாள். “இனிது! இனிது! இனிது!” என்று அவள் சொன்னாள்.

கௌமாரன் பதைப்புடனும் துயருடனும் அங்கிருந்து மீண்டான். அமராவதியிலிருந்து இறங்கிச்சென்று முகில்கணம் மேல் நின்று கீழே நோக்கினான். கோலால் அடிபட்ட நாகங்கள்போல சீறி நுரைநாக்குகள் சிதற படம்எடுத்து ஓங்கி அறைந்து நகரை கொத்தி மீண்டன அலைகள். அவன் நோக்கியிருக்கவே இறுதிக் கோட்டை கரைந்து சரிந்தது. நெஞ்சு அறைய கண்ணீருடன் அவன் விழி அசைக்காது நின்றான். இறுதி அலை ஒன்று எழுந்து எஞ்சிய புற்றுக் கோட்டையை மூடி நாற்புறமும் வெண்மலரென விரிந்து அகன்றது. நடுவே ஒரு சிறுகுமிழியென கோட்டையின் மண்குவை தெரிந்தது. பின்னர் நீல அலைகள் மட்டுமே அங்கு எஞ்சின.

நீள்மூச்சுடன் கௌமாரன் எண்ணிக்கொண்டான், சென்று மறைந்த பெருநகரங்களின் நிரையில் பிறிதொன்று. இனி சொல்லில் மட்டுமே அது வாழும். சொல், அதனால் பொருள் என்ன? என்றோ ஒருநாள் அது வாழ்வென்று ஆகும் என்னும் நம்பிக்கையைத் தவிர? அவன் விரிந்துகிடந்த மண்ணை நோக்கி ஏங்கினான். மூதாதையரே, தெய்வவடிவங்களே, இனி என்று வந்தணையும் இச்சொல்லில் எழும் உலகு? சொல் ஒன்றே மிச்சமென்றால் இவ்வாழ்வை எதற்கு எங்களுக்கு காட்டினீர்கள்?

நெஞ்சுருகி அழுதான். நெடுநேரம் கழித்து மீண்டு நீல அலைகளை நோக்கிக்கொண்டிருந்தபோது சொல்லேனும் எஞ்சியிருக்கிறதே என்று எண்ணினான். அப்போது உருவான நிறைவை எண்ணி அவனே வியந்தான். "எஞ்சுக எஞ்சுக எஞ்சுக" எனும் சொல்லாக அவன் உள்ளம் ஓடிக்கொண்டிருந்தது.

**[ 19 ]**

பிரம்மகபாலம் என்னும் ஊரின் மலைக்குகையில் அணைந்து கொண்டிருந்த அனலுக்கு இப்பால் இருந்த பிரசண்டன் அப்பால் உடல் சரித்து கைகளை தலைக்கு வைத்து மேற்கூரையைப் பார்த்து படுத்திருந்த பிரசாந்தரிடம் சொன்னான் "விருத்திரகுடியின் மூத்த பூசகர் கபாலர் என்னிடம் சொன்னது இது. இதை பின்னர் நூறுமுறை அசுரர்களும் நாகர்களும் நிஷாதர்களும் சொல்லி கேட்டிருக்கிறேன். ஒவ்வொருமுறையும் ஒரு வடிவம் கொண்டு என்னுள் நின்றிருக்கும் ஒற்றைக் கதை இது."

"கதை என்பது சிதல்புற்றென மூத்த அசுரர் என்னிடம் சொன்னார். பல்லாயிரம் கோடி சிதல்களால் சொல் சொல் என இயற்றி கோத்துருவாக்கப்பட்டு எழும் பெருமலை அது" என்றான் பிரசண்டன். பிரசாந்தர் புன்னகையுடன் "ஆம், ஆனால் நிலைமாறா ஆழத்திலிருந்து எழுந்துவரும் அலைகள் என்றும் அதை சொல்லலாம்" என்றார். அவரை ஒருகணம் நோக்கிவிட்டு "ஆம்" என்றான் பிரசண்டன்.

"புற்றுகளிலிருந்து எறும்புநிரைகள் ஊறிப் பெருகுவதுபோல மலைகளின் ஆழங்களிலிருந்து அசுரகுடிகள் எழுந்து நிலம் நோக்கி விரிந்த காலம் அது என்று என்னிடம் கபாலர்

சொன்னார். ஊன் வேட்டும், தேன் எடுத்தும், மலைப்பொருள் சேர்த்தும் காடுகளுக்குள் வாழ்ந்த குலங்கள் அவை. முன்பு எப்போதோ நிலம் திருத்தி மண் விளைவித்த நினைவு அவர்களின் மொழியில் இருந்தது. மேற்கே கடலோரமாக தங்களுக்கென ஒரு நகர் அமைந்ததை அறிந்ததும் அவர்கள் தங்களிடம் நாடி வந்த அச்சொல் வழியாகவே வழியறிந்து கிளம்பிச் செல்லலாயினர்."

புற்றிகபுரியில் ஒவ்வொரு நாளும் பல்லாயிரவர் தங்கள் குழந்தைகளுடனும் முதியோருடனும் படைக்கருவிகளுடனும் வந்து சேர்ந்துகொண்டிருந்தனர். அவர்களுக்கு உணவும் இல்லமும் அளிக்க அசுரப்படைகள் பன்னிரு பிரிவுகளாகப் பிரிந்து இரவும் பகலும் பணியாற்றின. விருத்திரேந்திரனின் ஆணையின்படி அவை கூடி புற்றுக்குலத்தின் பதினெட்டு தலைவர்களிடம் மூன்று கிளையென பிரிந்து பரவிய அணைநீரை திருப்பி சூழ்ந்திருந்த வறுநிலத்தில் பரப்பும்படி ஆணையிடப்பட்டது. அதன்படி ஒவ்வொரு நீர்ப்பெருக்கும் நூறு கால்களாக பிரிக்கப்பட்டன. ஒவ்வொரு காலும் புற்று என எழுந்த சுவரால் தடுக்கப்பட்டு சுனையாக்கப்பட்டது.

சுனைநீர் சிற்றோடைகளில் பெருகி செந்நிலத்தை குளிர்வித்தது. அங்கு பொன் என அன்னம் பெருகலாயிற்று. ஒன்று நூறு ஆயிரம் என நீர்ப்பெருக்குக்கு குறுக்காக புற்றுச் சுவர்கள் பெருக பன்னிரண்டாயிரம் சுனைகள் அங்கெழுந்தன. விண்ணில் எழுந்துசென்ற கந்தர்வர்கள் மூன்று கொடிகளில் மூவாயிரம் கிளைகள் எழுந்து முப்பதாயிரம் தளிர்நுனிகளில் பன்னிரண்டாயிரம் நீலக்கனிகள் விளைந்திருப்பதைக் கண்டனர். தேன்தட்டென ஆயிற்று அந்நிலம். தேனீக்களென வந்து

சுனைகளில் நீரள்ளிச் சென்றன அத்திரிகள் இழுத்த கரியநிற வண்டிகள்.

நீர்வெளிமேல் சிறகுவிரித்த பெருங்கலங்களில் வந்த வாருணீகர்களான வணிகர்கள் தங்களுக்கு நீர் கொண்டுவந்த நதிகள் நின்றுவிட்டதைக் கண்டனர். கடலாழத்திலிருந்து எழுந்து நதிமுகப்புக்கு உணவு தேடி வந்த படகுபோன்ற மீன்கள் துயரத்துடன் திரும்பிச் சென்றன. மீன்கன்னியரும் நீர்நாகங்களும் புதுமழைநீர் இல்லாமல் வருந்தினர். இருண்ட ஆழத்தில் விழியொளி மட்டுமே கொண்டு அமர்ந்திருந்த முதற்தாதையிடம் சென்று குமிழிகளென வெடித்த சொற்களால் அவை முறையிட்டன. ஒவ்வொருநாளும் ஒரு முறையீடு வருணனை வந்தடைந்துகொண்டிருந்தது.

கடலுக்குள் அமைந்த வருணனின் உள்ளங்கையாகிய ஜலஹஸ்தம் என்னும் தீவில் பன்னிரண்டாயிரம் நாவாய்கள் ஒருங்கு கூடின. நதிகள் நின்றுவிட்டால் தங்கள் குலம் அழியும் என்றும், குலம் காக்க மூதாதையாகிய வருணன் எழவேண்டும் என்றும் கோரின. முதற்றாதையாகிய வருணனை அன்னமும் பலியுமிட்டு பூசை செய்தன. ஆழத்து நீருள் அனல் வெடித்தெழுந்ததுபோல பேரலைகளென வருணன் படைகள் வந்து புற்றிகபுரியை தாக்கின. முட்டைகளை உண்ணும் பசிகொண்ட நாகங்களென புற்றுகளை விழுங்கி அழித்தன.

நீர் உண்டு பெருத்து விதை வாங்கிச் செழித்து பொன் உமிழ்ந்த வயல்கள் அனைத்தும் உப்பு நீரால் மூடின. புற்றிகபுரியும் அதைச் சூழ்ந்த வயல் பெருவெளிகளும் கடல் கொண்டன. கதறி அழுதபடி தங்கள் குலங்களை திரட்டிக்கொண்டு மீண்டும் வடக்கு நோக்கி ஓடி காடுகளுக்குள் புகுந்து ஒளிந்து

கொண்டனர் அசுரகுடிகள். தடையுடைத்துப் பெருகி கடல் கண்டன மூன்று பெருநதிகளும்.

குளவிக்கூட்டுக்குள் குளவிக்குஞ்சுகள் மட்டுமே உகந்து அமையமுடியும். அன்னையின் நெஞ்சு அவற்றுக்கு இன்னுணவு. அங்கு செல்லும் பிற உயிர்கள் அக்கணமே உயிர் கரையத்தொடங்கிவிடுகின்றன. அமராவதிக்குள் நுழைந்ததுமே விருத்திரன் உயிரழியலானான். அங்கிருந்த அனைத்தும் அழகும் இனிமையும் கொண்டிருந்தன. அழகும் இனிமையும் மயக்கம் அளிப்பவை. மயக்கென்பது உயிர் தன் விழிப்பை மறந்து தேங்குவது.

விண்ணுலகில் காலமில்லை. காலமில்லாத இடத்தில் கணங்கள் மட்டுமே உள்ளன. முன்னும் பின்னும் எழும் இரு பெருங்காலங்களால் மட்டுமே கணங்கள் பொருளேற்றம் செய்யப்படுகின்றன. பொருளற்ற காலத்தில் எஞ்சுவது துய்த்தல் மட்டுமே. துய்த்தல் என்பது தன்னை ஒப்புக்கொடுத்தல். ஒப்புக்கொடுத்தல் என்பது இழத்தல். இழத்தல் என்பது துளித்துளியாக அழிதலன்றி வேறல்ல.

விண்ணுலக மதுவிலும் மாதரிலும் மூழ்கிக் கிடந்தான் விருத்திரன். மது எழுப்பிய மெய்யிலி உலகங்களில் உவந்தலைந்தான். காமமோ துய்க்கும்தோறும் பெருகுவது. இன்பங்களெல்லாம் அடையும்தோறும் விடாய்கொள்ள வைப்பவை. இன்பத்திலாடியவன் வென்றவை என ஏதுமில்லை, உள்ளும் புறமும். துயரென்பது தன் எல்லையை கடத்தல். கடத்தலே வெல்லல். துயரிலாடி மீள்பவன் தன்னை கடந்திருப்பான். சூதரே, துயரினூடாகவே மானுடர் வளர்கிறார்கள்.

ஒவ்வொருநாளும் விழித்தெழுந்து எங்கிருக்கிறேன் என்று உணர்கையில் கொல்லும் பழி உணர்ச்சி எழ தன் தலையில் அறைந்துகொண்டு விருத்திரன் அழுதான். ஒரு தருணம் கரைந்தழிந்த தன் நகரங்களை எண்ணி சினந்து உடல் கொதித்தான். அத்துயரும் சினமும் தாளமுடியாமல் மீண்டும் மது அருந்தினான். மதுவிலமைந்து துயின்று எழுகையில் மதுக்கோப்பைகளை அள்ளி வீசி உடைத்தான். "என்னைக் கொல்ல வந்துள்ளது. இது என்னை அழைத்துச்செல்லவே வந்துள்ளது" என்றான்.

"ஒருகணம்தான். உங்களுக்குள் வாழும் மதுவிழைவை பிறிதொரு தலையை எனக் கிள்ளி விலக்குக! விடுபடுக!" என்றாள் இந்திராணி. "ஆம், அதுவே" என்றான். ஆனால் மீண்டும் மது அவனை வந்து சூழ்ந்துகொண்டது. "என்ன செய்கிறீர்கள்?" என்று இந்திராணி சினந்து விழிநீர் உகுத்தாள். "தன்னைத்தானே அழிக்கும் சுவை ஆண்களுக்கு தெரியும், பெண்கள் அதை உணரமுடியாது" என்றான் விருத்திரன். கசப்புடன் நகைத்து "அன்னையென்றில்லாது நீங்கள் இருப்பதில்லை. சூதுக்களத்திலல்லாது நாங்களும் வாழ்வதில்லை" என்றான்.

மறத்தல் ஒன்றே வழியென்று அவனிடம் சொன்னது மது. அடைதலும் மயங்குதலும் ஒன்றே என்று அது காட்டியது. மதுவிலிருந்து விழிக்கும்போது வரும் வெறுமையை வெல்ல மேலும் மதுவே ஒரே வழி என்று அவன் கண்டான். மதுவென வந்து அவனில் நிறையும் தெய்வங்கள் அவனிலிருந்து உந்தி வெளியே தள்ளிய இருள் அனைத்தும் மது ஓய்ந்ததும் மீண்டும் வந்து அவனை சூழ்ந்துகொண்டன. விழிப்பிற்கும் மயக்கிற்கும் இடையே ஓயா ஊசலென நாட்கள் சென்றமைந்தன.

அப்போது ஒருநாள் நெடுந்தொலைவிலென மெல்லிய அதிர்வொன்றை அவன் கேட்டான். அருகிருந்த ரம்பையிடம் “அது என்ன ஓசை?” என்றான். “இது அந்தி. முல்லை மொட்டுகள் மொக்கவிழ்கின்ற ஓசை போலும்” என்று அவள் சொன்னாள். மறுநாள் மீண்டும் அவ்வோசையை அவன் கேட்டான். அது மேலும் வலுத்திருந்தது. “இம்மலர்வனத்தில் இளமான்கள் காதுகளை அடித்துக்கொள்ளும் ஒலி போலும் அது” என்றாள் மேனகை. பின்னொருநாள் அவ்வொலியைக் கேட்டபோது “களிறுகள் தங்கள் கூடுகளை முட்டுகின்றன” என்றாள் திலோத்தமை.

அன்றிரவு கனவில் தொலைவானின் சரிவில் மெல்லிய வெண்கீற்றொன்றை அவன் கண்டான். விழித்தெழுந்து அது என்னவென்று நிமித்திகரிடம் கேட்டான். “அரசே, அது ஒரு வெண்ணிறகு. விண்கடந்து சென்ற பறவை ஒன்று உதிர்த்தது” என்றான் நிமித்திகன். “என்ன சொல்கிறது அப்பறவை?” என்றான் விருத்திரன். “அலைகள் என்றுமுள்ளவை என்று” என்றான் நிமித்திகன்.

ஒவ்வொரு நாளும் அவ்வொலி வலுத்துவருவதை கேட்டான். தொலைவில் களிறுகளின் காலடிபோல அது ஒலிக்கத் தொடங்கியபோது “அது அணுகி வருகிறது. நான் அறிவேன்” என்று அவன் இந்திராணியிடம் சொன்னான். “உண்மையில் என் முதிராஇளமையிலிருந்தே அதை கேட்டுவருகிறேன். என்று என் எழுச்சியின் முரசை கேட்டேனோ அன்றே அதுவும் ஒலிக்கத்தொடங்கிவிட்டது.”

மறுநாள் அவன் அறிந்தான், அது அணுகிவரும் போர்முரசின் ஒலியென்று. “போர்முரசு” என்று அவன் தன் அமைச்சரிடம் சொன்னான். “ஆம், அரசே. கிழக்கிலிருந்து இந்திரன்

படைகொண்டு வருகிறான்” என்றார் அமைச்சர். “இந்திரனா? அவனிடம் ஏது படைகள்?” என்றான் விருத்திரன். “வருணனின் அசுரப்படை அவனிடம் உள்ளது” என்று அமைச்சர் சொன்னார். “எழுக நம் படைகள்! இப்போதே களம் புகுகிறேன்” என்றான். “ஆம், இதோ படை எழ ஆணையிடுகிறேன்” என்று அமைச்சர் சொன்னார். திரும்பி வெளியே ஓடினார்.

போர்முரசுகள் ஒலிக்கலாயின. அமராவதி நகரெங்கும் பெண்களுடன் மஞ்சங்களில் மதுக்களிப்பில் மயங்கிக்கிடந்த தேவர்கள் அரைவிழிப்பில் கையூன்றி எழுந்து “அது என்ன ஓசை?” என்று கேட்டனர். “போர்முரசு” என்றனர் மகளிர். “அது ஏன் இங்கு ஒலிக்க வேண்டும்? இந்நகருக்கு எதிரிகளே இல்லையே?” என்றனர். “எதிரியே அரசனான பிறகு எதிரியென யார் இருக்க முடியும்?” என்று ஒரு தேவன் நகைத்தான். “ஆம், எதிரிக்கு குடிகளாகி அமைவதைவிட இனிய வெற்றி பிறிதொன்றில்லை” என்றான் இன்னொருவன்.

மகளிர் அவர்களை எழுப்பி உந்தி கிளப்பினர். “போர் அல்ல என எண்ணுகிறேன். இது களிப்போராகவே இருக்கவேண்டும்” என்றான் ஒருவன். “ஆம், பயிற்சிப்போர். அல்லது போர்முரசின்மேல் ஏதேனும் விழுந்திருக்கும்.” அவர்கள் படைக்கலங்களுடன் தள்ளாடியபடி தெருக்களுக்கு வந்தனர். கவசங்களை சீராக அணியாமையால் கழன்று விழுந்தன. சிலர் காலணிகளை அணிந்திருக்கவில்லை. “எப்போது முடியும் இந்தப் போர்? இருட்டிவிடுமா?” என்று ஒருவன் கேட்டான். “விரைவிலேயே முடியும். அந்தியானால் அரசர் மதுவின்றி அமையமாட்டார்” என்று ஒருவன் நகைத்தான்.

போர்முரசின் ஒலி கேட்டு கவசங்களை அணிந்துகொண்டு அமர்ந்த விருத்திரன் மது கொண்டுவர ஆணையிட்டான்.

மேலும் மேலும் என அருந்தி கவசங்களுடன் படுத்துத் துயின்றான். அவன் வீரர்களும் படைக்கலங்களுடன் தெருக்களில் துயின்று சரிந்தனர். சிலர் சிரித்தபடியே "இத்தனை விரைவாகவா போர் முடிந்துவிட்டது?" என்றனர். "மது இருந்தால் போரே வேண்டியதில்லை" என்றான் ஒருவன்.

மறுநாள் விழித்தெழுகையில் உடலில் கவசங்கள் இருக்கக் கண்டு நடந்ததை உணர்ந்து பாய்ந்து சென்று விரைந்து அமைச்சரை அழைத்து என்ன நிகழ்ந்தது என்றான் விருத்திரன். “அரசே, இந்திரனின் படைகள் அணுகிவிட்டன. நகருக்குள் அவை நுழைந்துகொண்டிருக்கின்றன” என்றார் அமைச்சர். “இனி ஒருகணம்கூட நமக்கு இல்லை” என்று கூவினார். “ஆம், காலம்…” என்று விருத்திரன் சொன்னான். “நாள் என ஒன்றுபோல் காட்டி வாளென்று வருவது. அவ்வாறே ஆகுக!”

# கிராதம் - 46

**[ 20 ]**

இந்திரனின் படைகள் அமராவதியைச் சூழ்ந்து அதன் கோட்டைகளைத் தாக்கி எட்டுவாயில்களையும் உடைத்து உட்புகுந்தன. கோட்டையென அமைந்த பெரும்பாறைகள் நிலைபெயர்ந்துச் சரியும் அதிர்வில் தன் கையிலிருந்த மதுக்கிண்ணத்தில் சிற்றலையெழுந்ததைக் கண்டுதான் அமராவதி வீழ்ந்தது என்று விருத்திரன் உணர்ந்தான். அப்போதும் எழமுடியாமல் ஏவற்பெண்டிரை நோக்கி “பிறிதொரு கலம்” என்று மதுவுக்கு ஆணையிட்டான். “இறுதிக் கலம்” என தனக்கே சொல்லிக்கொண்டான்.

இந்திராணி அவனை அணுகி சினத்துடன் “என்ன செய்கிறீர்கள்? உங்கள் கொடியும் கோட்டையும் விழுகின்றன. இன்னும் சற்றுநேரத்தில் அசுரப் படைகள் இங்கு வந்தணையும்” என்றாள். “நீ அஞ்சவேண்டியதில்லை தேவி, என்னை வெல்ல எவராலும் இயலாது” என்றான் விருத்திரன். “எனக்கு எந்தை அளித்த

நற்சொல் துணையிருக்கும். இந்திரனின் மின்படை ஒரு மென்மலரென என் தோளில் வந்துவிழுவதை நீ காண்பாய்.”

இந்திராணி அவன் தோளைப்பிடித்து உலுக்கி “பித்தன்போல பேசவேண்டாம். இனி உங்களுக்கு நேரமில்லை. இதோ நகரெங்கும் தேவர்கள் தாக்கப்படும் ஓசை கேட்கிறது” என்றாள். “இன்னொரு கலம் மது. இறுதிக் கலம் எனக்கென எதை வைத்திருக்கிறதென்று ஆவல்கொள்கிறேன். அதன்பின் நான் என் படைக்கலங்களுடன் எழுவேன்” என்றான் விருத்திரன். அவள் தலையிலறைந்துகொண்டு கண்ணீருடன் ஓடிச்சென்று உப்பரிகையில் ஏறி வெளியே பார்த்தாள். வருணகுலத்து அசுரப்படைகள் நீலநிற உடலும் எழுந்துபறக்கும் வெண்பிடரியும் கொண்ட புரவிகளில் நகருக்குள் நிறைவதைக் கண்டாள். “நம் முற்றத்தில்... நம் கூடங்களில்” என்று நெஞ்சைப்பற்றிக்கொண்டு கூவினாள்.

வாருண குடியின் அசுரர்கள் தேவர்களை தங்கள் ஒளிரும் வாள்களால் வெட்டி வீழ்த்தினர். மதுவுண்டு தெருவெங்கும் மயங்கிக்கிடந்த தேவர்கள் தங்கள் இல்லப்பெண்டிரால் உசுப்பி உந்தி எழுப்பப்பட்டு படைக்கலங்களுடன் வெளியே அனுப்பப்பட்டனர். என்ன நிகழ்கிறதென்றறியாமல் அவர்கள் வெற்றுப்போர்க்கூச்சலை எழுப்பினர். அக்கூச்சல் தொண்டையில் எஞ்சியிருக்கவே வெட்டுண்டும் அம்புபட்டும் விழுந்து மடிந்தனர். மடியும் கணத்தில் அவர்கள் தொலைகனவென மறந்த மானுடவாழ்க்கை மீண்டுவர திகைத்து அத்திகைப்புடன் சிலைமுகம் கொண்டனர்.

அமராவதியின் மாளிகைகளின் அடித்தூண்களை முட்டி இடித்தன நீலப்புரவிகள். அவை முனகியபடி விரிசலிட்டு வெண்புழுதிகொட்ட நோய்கொண்ட யானையென

முழந்தாளிட்டு கொம்புகுத்தி சரிந்தன. அவை சரிந்தபோதெழுந்த நிலப்புழுதியால் நகர் பொற்திரையால் என மூடப்பட்டது. எங்கும் ஓலங்களும் கூச்சல்களும் எழுந்தன. அவற்றை வென்று வந்தணைந்தது அசுரப்படைகளின் வெற்றிக்கூவல்.

இந்திராணி மீண்டும் ஓடிவந்து “அரசே, எழுங்கள்… அரண்மனைக்குள் நுழைந்துவிட்டது அசுரர்படை” என்றாள். “ஆம், நான் எழுந்தாகவேண்டும். எங்கே என் படைக்கலம்?” என்றான் விருத்திரன். அவள் ஓடிச்சென்று அவன் படைக்கலங்களை கொண்டுவந்து கொடுத்தாள். நிலைகொள்ளா உடலுடன், அலையும் கைகளுடன் அவன் ஒளிரும் கவசங்களையும் காலணிகளையும் அணிந்துகொண்டான். நீண்ட வாளை வலக்கையிலும் சென்றுதிரும்பும் வேலை இடக்கையிலும் ஏந்தியபடி போருக்கெழுந்தான்.

அவனால் நிற்கமுடியவில்லை. கால்கள் தள்ளாட அரண்மனைச் சுவரை பற்றிக்கொண்டான். அது திரைபோல் நெளிய “நீர் வழிகிறது” என்று சொல்லி அவளை நோக்கிப் புன்னகைசெய்தான் “சென்று போரிடுங்கள்… வீரனென களம்நில்லுங்கள்!” என்றாள் இந்திராணி. “இதோ” என்று அவன் அரண்மனையின் படிகளில் இறங்கினான். “நீர் வழிகிறது!” ஒருகணம் ஏன் போரிடவேண்டும் என்னும் சலிப்பு எழுந்து அவன் மேல் இனிய துயிலெனப் பரவியது. எவருக்காக இந்நகரை நான் தூக்கி நின்றிருக்கவேண்டும்? நான் இதைப் பற்றியிருக்கிறேனா, இதில் கட்டுண்டிருக்கிறேனா?

அந்த அரக்குப்பரப்பிலிருந்து தன்னை கிழித்துப்பிரித்து மெல்ல கீழிறங்கிச் சென்றான். மாமுற்றமும் களமும் ஒழிந்துகிடந்தன. காவல்நின்றிருந்த தேவர்கள் ஓடி ஒளிந்துகொண்டிருந்தனர்.

வற்றியகுளத்தில் மீன்கள் இறந்து பரந்திருப்பதுபோல அவர்கள் கைவிட்டுச்சென்ற படைக்கலங்கள் சிதறிக்கிடந்தன. போர்முடிந்த களம் உண்டு எழுந்த பந்திபோல கொண்ட வெறுமை. களத்தில் விளைவது விஜயலட்சுமி என்று யார் சொன்னது?

அவன் முற்றத்தில் இறங்கியதும் வருணன் அளித்த நீலப்புரவிமேல் நுரைவாளை வீசியபடி கிழக்கு முனையில் இந்திரன் தோன்றினான். "இழிமகனே, இன்று உன்னைக் கொன்று குருதிசூடவே வந்தேன்" என்று வஞ்சினம் உரைத்தபடி பாய்ந்து அணுகினான். அவன் புரவியின் பிடரி பறந்தது. அவன் கவசங்களில் அரண்மனையின் படிமம் அலையடித்தது.

சுட்டுவிரல் சொடுக்க நாண் விம்ம எழுந்த அம்புபோல இந்திரனின் அச்சொல் அவனுள் சினம் எழச்செய்தது. காலை ஓங்கி உதைத்து அலறியபடி முன்னால் பாய்ந்தபோது விருத்திரனின் உடல் நாகமென நீண்டது. அவன் கைகள் விரிந்து கழுகின் சிறகுகளாயின. பிடரியில் செஞ்சடை விரிந்து சிம்மமுகம் கொண்டான். யானையெனப் பிளிறியபடி தன் வாளைவீசி இந்திரனின் புரவியை இருதுண்டுகளாக ஆக்கினான். குருதி பெருக விழுந்து துடித்தது அது. இந்திரனின் தலைக்கவசம் ஓசையுடன் தரையில் விழுந்து உருண்டது. அவன் தலை அது என அவன் உள்ளம் களிவெறிகொண்டது.

விழுந்த புரவி நிலம்தொடுவதற்குள் கால்களால் உந்திப் பாய்ந்தெழுந்து பிறிதொரு புரவிமேல் ஏறிக்கொண்டான் இந்திரன். வாளுடன் அணுகிய தன் வீரரை நோக்கி "விலகுக, இது என் போர்" என்று வாளைச் சுழற்றியபடி அவன் கூவினான். விருத்திரன் அவன் புரவியை மீண்டும் துணித்தான்.

இந்திரன் அலைநுரைவாளுடன் பாய்ந்து விலகுவதற்குள் அவன் தோளைவெட்டியது விருத்திரன் வாள்.

குருதிசிந்தியபடி ஓடிச்சென்று பிறிதொரு புரவியில் ஏறி தன் வாளை வீசினான் இந்திரன். அது கண்கூசும் ஒளியுடன் வந்து விருத்திரனை தாக்கியது. வெட்டுண்டு நிலத்தில் விழுந்து புரண்டு எழுந்தான். அவன் வால் குருதியுடன் கிடந்து துடிப்பதைக் கண்டான். கவிழ்க்கப்பட்ட கலத்து நீர் என குருதி சிற்றலையெனச் சென்று சுவர்களை மோதிப்பரந்தது. குருதிவாசனை அவனை அனல்பற்றி எழச்செய்தது. வெறிக்கூச்சலுடன் கைகளால் நிலத்தை அறைந்தபடி பாய்ந்து இந்திரனின் புரவியை வெட்டினான்.

அலறியபடி மேலெழுந்த இந்திரன் தொடைவெட்டுபட்டு புழுதியில் விழ வாருணப்படைகள் பாய்ந்து அவனை அள்ளி திருப்பிக் கொண்டுசென்றன. சுவர்கள் அதிரும் பிளிறலுடன் விருத்திரன் விண்ணில் சிறகடித்தெழுந்தான். அவன் சிறகுகளின் நிழல் அமராவதியின் தெருக்களெங்கும் பரவிக்கிடந்த தேவர்களின் சடலங்களின் மேல் பறந்தலைந்தது.

இந்திரன் குருதிவார அசுரர் கைகளில் கிடந்து துடித்தான். அசுரர்கள் விருத்திரனின் விரிவுரு கண்டு அஞ்சி அலறியபடி விலகி ஓடினர். சிலர் இந்திரனை இழுத்துச்சென்று இடிந்த மாளிகையின் சுவர்களுக்குள் ஒளித்தனர். மண்ணில் பல்லாயிரம் வேள்விநெருப்புகளில் விழுந்த நெய்யால் இந்திரன் மீண்டும் குருதியூறப்பெற்றான். புதுவிசையுடன் எழுந்து புரவியில் ஏறிக்கொண்டு சென்று வெளிமுற்றத்தில் நின்றான். “வா! வா!” என அறைகூவல்விடுத்து வாளை தூக்கினான்.

சிறகுக்காற்று விம்மலோசை எழுப்ப கழுகென அகவியபடி வந்து அவனை தாக்கினான் விருத்திரன். எம்பிப்பாய்ந்து பற்றவந்த அவன் உகிர்எழுந்த செதிற்கால்களை இந்திரன் வெட்டி வீசினான். நிலையழிந்து சரிந்துசென்று மண்ணில் விழுந்து துடித்து சிறகைவீசி மீண்டும் காற்றிலேறினான் விருத்திரன்.

இந்திரன் வெட்டுண்ட புரவியிலிருந்து இறங்கி ஓடி அரண்மனைக்குள் சென்று தன் அரியணைமேல் அமர்ந்தான். அக்கணமே ஐராவதம் பிளிறியபடி அதைக் கட்டியிருந்த சங்கிலியை உடைத்துக்கொண்டு மாமுற்றத்திற்கு வந்தது. அதன்மேல் அவன் ஏறி விண்ணிலெழுந்தான். பறந்துவந்து சூழ்ந்த விருத்திரனின் பிடரிகளை செவிகளுடன் அவன் வாள் சீவி எறிந்தது. பின் அவன் வலச்சிறகை கைகளுடன் அரிந்தது.

இந்திரனின்மேல் மழையெனப் பெய்தது விருத்திரனின் குருதி. அவன் உடல் செவ்வரக்கில் முக்கிய பொன்னகை என தோன்றியது. மீண்டும் மீண்டும் விருத்திரன் இடக்கையில் ஏந்திய நீண்ட வாளால் இந்திரனை வெட்டினான். இந்திரனின் இருகால்களும் செயலற்றன. ஒற்றைக்கை துண்டாகித் தசைச் சரடில் தொங்கியது. அவன்குருதியும் அசுரன்குருதியும் ஒன்றெனக்கலந்து பெய்து அமராவதி சிவந்தது.

இடச்சிறகுமேல் வெட்டு விழ விருத்திரன் பிளிறலோசையுடன் சரிந்து சென்று கிழக்குவானில் விழுந்தான். அங்கிருந்து குருதிசிதறும் ஒற்றைச்சிறகை அசைத்தபடி பறந்து திசைமடிப்புக்குள் மறைந்தான். இந்திரன் தன் வியோமயானத்தை வரவழைத்து அதில் ஏறிக்கொண்டு சென்றான். வான்வெளியெங்கும் சொட்டிக்கிடந்தன குருதித்துளிகள். அதை நோக்கி தடம்தேடி அவன் விருத்திரனை

துரத்திச்சென்றான். அதன் மேல் அவன் விமானம் ஊர்ந்துசெல்ல செந்நிறக்கீற்றென வானில் விரிந்தது அப்பாதை.

விருத்திரன் மண்ணிலிறங்கி தன் புற்றிகபுரியை தேடிச்சென்றான். அங்கே நீலக்கடல் அலைகளே நிறைந்திருக்கக் கண்டான். அவனுடைய தொல்குடியினர் சிதறி அழிந்திருந்தனர். அவர்கள் வாழ்ந்த சுவடே எங்குமிருக்கவில்லை. தன் நகர் இருந்த நிலம் மேல் அவன் தவித்தலைந்தான். "மூதாதையரே, தந்தையரே, என் தோழர்களே" என்றுகூவினான். அலைகள் ஒன்றுமறியாத அமைதிகொண்டிருந்தன.

விருத்திரன் கடல்மேல் இறங்கி ஒற்றைச்சிறகை அடித்தபடி கூவினான் "என் குலமூத்தவரே, வருணரே, எனக்கு அடைக்கலமளியுங்கள். என் குலம்காக்க உதவுங்கள்!" வருணனின் ஓசை புயல்சுழலென எழுந்தது. "ஒரு குடியில் ஒருவரே மூத்தவனாக அமையமுடியும். மூடா, இனி நானே அசுரமுதல்வனும் தேவனும் ஆவேன். செல்க!" விருத்திரன் "நம் தொல்குடி வேதச்சொல்லெடுத்து ஆணையிடுகிறேன். எனக்கு துணைநிற்க!" என்றான். "நம் தொல்குடி வேதம் மானுடரின் வேதமென்றாகிவிட்டது. இக்கணம் பல்லாயிரம் வேள்விக்குளங்களில் எனக்கென அவி பெய்யப்படுகிறது. அவிகொண்டு என் உடல் ஒளிபெற்றுக்கொண்டிருக்கிறது" என்றான் வருணன்.

விண்ணில் வண்டுமுரலும் ஒலிகேட்டு விருத்திரன் திரும்பிநோக்கினான். செங்குருதியால் நனைந்த வியோமயானம் ஒரு தெச்சிமலர் மொட்டு என தெரிந்தது. செங்கமலமென்றாகியது. செம்முகிலென விரிந்தது. அதன் ஒலிகேட்டு முகில்கணங்கள் பிளிறின. மலைச்சரிவுகள்

முழங்கின. ஒற்றைச்சிறகுடன் விருத்திரன் திரும்பி ஓடினான். நிலைசரிந்து விழுந்தும் எழுந்தும் விரைந்து காட்டுக்குள் புகுந்தான். அவன்மேல் கிளைகள் அமைத்த பச்சைக்கூரை விரிய அதற்கு அப்பால் இந்திரவிமானத்தின் ஓசை மணற்புயல் சருகுப்பரப்பில் பொழிந்ததுபோல் ஒலித்தது.

இந்திரன் மரங்கள் சிதறித்தெறிக்க மண்ணிலிறங்கினான். நுரைவாளைச் சுழற்றி மரங்களையும் மலைப்பாறைகளையும் வெட்டிச் சிதறடித்தபடி விருத்திரனை துரத்தினான். “நான் இறக்க விழைகிறேன். தவம்செய்து முழுமைகொள்ள என்னை விட்டுவிடு” என்று ஓடியபடியே விருத்திரன் கூவினான். “இனி பகை ஒருதுளியும் எஞ்சாது. இப்புவியளவு பழிகொண்டாலும் சரி, இனி நான் எண்ணுவதன்றி உனக்கு இருப்பில்லை” என்றான் இந்திரன்.

விருத்திரன் விழுந்தும் எழுந்தும் ஓடிச்சென்று ஒரு மலைமேல் ஏறியபோது திறந்தவாய் என ஒரு குகையைக் கண்டான். அதற்குள் புகுந்து இருளில் மறைந்தான். அதன் வாயிலில் வந்துநின்ற இந்திரன் வாளை பாறைமேல் ஓங்கியறைந்து “வெளிவருக, அசுரனே! வெளிவந்து உன் இறப்பை அடைக! ஊழ் முடிந்தது உனக்கு” என்று அறைகூவினான்.

உள்ளிருந்து உறுமலோசைகள் மட்டும் கேட்டன. மும்முறை அழைத்தபின் சினம் கொண்டு உறுமியபடி குகைக்குள் வாளுடன் புகுந்த இந்திரன் அதன் இருளுக்குள் விழியிழந்து தடுமாறினான். இருளுக்குள் அசுரனின் பெருங்குரல் எழுந்தது. “வளரும் பெருங்குகை இது. இதன் பெயர் விருத்திரம். இது என் உடல். இந்திரனே, நீ என் வாய்க்குள் நுழைந்திருக்கிறாய். எனக்கு உணவாவாய்!” குகையின் மேற்கூரைகள் தசைகளாகி இறுகி நெருங்கின.

அதன் வெம்மையும் மென்மையும் கொண்ட கௌவலில் சிக்கிக்கொண்ட இந்திரன் தன் வாளை நிலத்திட்டு கைவிரித்து "விருத்திரனே, நான் உன் உடலுக்குள் இருப்பதனால் உன் மைந்தன். என்னைக் கொன்றால் நீ மைந்தனைக் கொன்ற பழிக்கு ஆளாவாய்" என்று கூவினான். அசுரனின் பெருநகைப்பு நின்றது. குகை ரீங்கரித்தது. பின் பெருமூச்சு விட்டது. சுவர்கள் பிதுங்கி சேறென வந்து அவனை உந்தி வெளித்தள்ளின.

ஒரு சிறு குகைவாயினூடாக இந்திரன் உடலெங்கும் நிணச்சேற்றுடன் பிதுங்கி வெளிவந்து விழுந்தான். குகைக்குள்ளிருந்து முழங்கும் குரல் "நலம் சூழ்க, மைந்தா!" என்று ஒலித்தது. அவன் புரண்டு எழுந்து "கொன்று செல்க படைக்கலமே!" என தன் நுரைவாளை குகைக்குள் வீசினான். "அந்நெஞ்சிருப்பது எங்கென்று நீ அறிவாய். குருதிகொள்க!" என்று கூவினான்.



குகையிருளுக்குள் விருத்திரன் அலறல் எழுந்தது. அவன் வாழ்த்துக்குரலெழுந்த திசைநாடிச் சென்ற வாள் நெஞ்சில் பாய்ந்து வெட்டி உள்ளே சென்றது. “மைந்தா!” என்று அலறியபடி விருத்திரன் விழுந்து இருளுக்குள் சென்றுகொண்டே இருந்தான். அந்த ஒலி நெடுந்தொலைவுக்கு அப்பால் மேலும் அப்பால் என ஒலித்தது. ஓய்ந்தபின் குகை “ஆம் ஆம் ஆம்” என கார்வை மீட்டியது.

இந்திரன் மலையிலிருந்து இறங்கிவந்து திரும்பி நோக்கினான். நான்குமுகம் கொண்ட அம்மலையின் முகங்கள் அனைத்தும் ஊழ்கத்திலாழ்ந்திருந்தன. அவன் அதை நோக்கியபடி அங்கே நின்றிருந்தான். பெருமூச்சுடன் திரும்பும்போது அங்கே நாரதர் தோன்றினார். "மீண்டும் நீ வென்றாய். உன் நகரும் கொடியும் முடியும் இருள்மீண்டன. நீ வாழ்க!" என்றார். "ஆம்" என அவன் சோர்வுடன் சொன்னான்.

"உன் சோர்வை அறிகிறேன். ஆம், முறைப்படி நீ விருத்திரனின் மைந்தன் என்றானாய். மைந்தனாக ஆன பின்னர்தான் உன் அலைப்படைக்கலம் இலக்கடைந்தது" என்றார். அவன் தன் கைகளைத் தூக்கிப் பார்த்தான். "மெய், அவை தந்தையின் குருதிகொண்டுள்ளன. ஆனால் இது உன் கடன். எனவே இப்பழியும் உன் பொறுப்பே. அதை சுமந்தாகவேண்டும்" என்றார் நாரதர்.

மெய்தளர்ந்து குரலிழிந்து "நான் என்ன செய்யவேண்டும், நாரதரே?" என்றான் இந்திரன். "தாதைப்பழி தீர்க்கும் தூயநீர்ச்சுனைகளிலாடுக! மும்முறை அக்குருதியை நீ கழுவியாகவேண்டும். உன் எதிரியின் குருதியை ஒருமுறை. உன் தந்தையின் குருதியை மறுமுறை. மறைதேர்ந்த மெய்யறிவனின் குருதியை மூன்றாம் முறை" என்றார் நாரதர். "அதன்பின் உன் தந்தைக்கு ஆண்டுதோறும் நீர்க்கடன் செய்க! அவர் அருளும் நற்சொல் உன்னுடன் திகழும்."

நீராடி தூய்மை பெற்று நோன்பிருந்து உளமொழிந்து மீண்டும் அரசத் தோற்றத்தில் இந்திரன் அமராவதிக்கு மீண்டபோது அவன் விட்டுவந்த தோற்றத்தில் இந்திராணி காத்திருந்தாள். அணிகுலுங்க அவனை அணுகி கனிந்த விழிகளுடன் "வருக

அரசே, இந்நகர் தங்கள் காலடிகளுக்காக காத்திருக்கிறது" என்றாள். அவன் தன் செல்வங்களை மாளிகைகளை நகரை குடிகளை நோக்கினான். ஒருகணத்தில் சிறுதுளியில் அனைத்தும் எவருடையவோ கனவுதான் என்னும் உளமயக்கை அடைந்தான்.

முனிவர் வாழ்த்தி அரிமலர் சொரிய வேதமொலிக்க விண்நீர் பொழிந்து நெறிநின்றோர் அழைத்துச்சென்று இந்திரனை அரியணை அமர்த்தினர். இந்திராணி இடம் அமர அவன் அத்துலாமையத்தில் அமர்ந்தான். மண்ணில் வேள்விகள் பெருகின. அவிசொரிந்து தேவர்களைப் பெருக்கினர் மானுடர். மீண்டும் தேவபுரி பொலிவுகொண்டு எழுந்தது. அதன் மேல் இந்திரனின் மின்கொடி பறந்தது.

**[ 21 ]**

"விருத்திரன் உள்ளே சென்று மறைந்த குகைவாயில் அது என்று என்னிடம் கபாலர் சொன்னார்" என்றான் பிரசண்டன். "அவர் உள்ளே சென்று மறைந்தபின் அக்குகை நூற்றெட்டுநாட்கள் விம்மலோசை எழுப்பிக்கொண்டிருந்தது. அவ்வோசையை மலைக்காடுகளுக்குள் ஒளிந்துவாழ்ந்த அசுரகுடிகள் கேட்டன. அவர்கள் முழவுகளை முழக்கியபடி பூசகர் தலைமையில் அக்குகையை தேடிவந்தனர். குகைவாயிலில் இருந்து குருதிவழிந்து அரக்குபோல அலையலையாக இறங்கியிருப்பதைக் கண்டனர்."

"வெறியாட்டெழுந்த முதுபூசகர் அது விருத்திரன் மறைந்த படுகளம் என்று உரைத்தனர். அங்கே அவரை தெய்வமாக்கி வழிபட்டனர். பின் அவர்களில் ஒருசிலர் மேலே அக்குருதிப்பரப்பைக் கடந்துசென்று நோக்கியபோது

குகைமுகப்பில் பாறைச்செதுக்கு என தெரிந்த விருத்திரனின் முகத்தை கண்டடைந்தனர். மூதாதையைக் கண்ட முதற்பூசகன் கைகால்கள் இழுக்க விழுந்து வாய்நுரைகொள்ள துடித்தான். முழவுமீட்டி குரவையிட்டு அவன் காலடியில் தங்கள் குலமைந்தரை வைத்து வணங்கினர். மூதாதையின் குருதியைத் தொட்டு நெற்றியிலணிந்து வழிபட்டனர்."

"விருத்திரனின் குருதி அந்த மலையின் மூன்று குகைவழிகளினூடாக வழிந்து மலையடிவாரத்தில் இறங்கி அங்குள்ள மூன்று சுனைகளில் தேங்கியது. அங்கமலதம், மலஜம், கரூஷம் என அச்சுனைகள் அழைக்கப்பட்டன" என்று பிரசண்டன் சொன்னான். "நான் அச்சுனைகளுக்கு சென்று பார்த்திருக்கிறேன். விருத்திரனைக் கொன்ற பழிதீர இந்திரன் வந்து அந்தச் சுனைகளில் நீராடி தன்னை தூய்மைப்படுத்திக்கொண்டான் என்கிறார்கள் தொல்கதைசொல்லிகள். முன்பு ராகவராமன் காடேகியபோது விஸ்வாமித்திர முனிவருடன் அங்கே சென்று நீராடி குலப்பழி களைந்ததாக தொல்காவியம் சொல்கிறது."

"ஆம், நானும் அதை கேட்டிருக்கிறேன். இங்கிருந்து நான்கு நாட்கள் வழிநடைத் தொலைவிலுள்ளன அந்த சுனைகள்" என்று பிரசாந்தர் சொன்னார். "முதல் சுனையாகிய அங்கமலதம் மானுடர் நீராடுவது. கலங்கலான செந்நீர் அதில் தேங்கியிருக்கும். அதன் கரைச்சேறு செந்நிணம்போலிருக்கும். இரண்டாவது சுனையாகிய மலஜம் சற்று பெரியது. அது தேவர்களுக்குரியது. அதில் செந்நிற நிணம் மிதக்கும். அதன்சேற்றுக்கு குருதிமணம் உண்டு. அதற்கப்பாலுள்ள கரூஷம் கரியநிறமுடையது. கருநிறச்சதுப்பால் சூழப்பட்டது.

அந்நீரை கையில் அள்ளி நோக்கினால் குருதிபோல சிவந்திருக்கும். அது அசுரர்களுக்குரியது.”

இளவேனிற்காலத்தில் வேதியர் சிறு கூட்டங்களாக காட்டுக்குள் சென்று அங்கமலதத்தின் கரையில் மூதாதையான விருத்திரனுக்கு நீத்தார்கடனும் பழிநீங்கு பூசனைகளும் செய்கிறார்கள். அப்போது பித்ருவனம் என்னும் அந்தக் காடு முழுக்க அனைத்து மரங்களும் அனல்கொண்டதுபோல செந்நிற மலர்களால் நிறைந்திருக்கும். புதர்களும் சிறுசெடிகளும்கூட குருதிநிறப்பூக்களையே கொண்டிருக்கும். செங்காந்தள் மலர்களாலும் குங்கும செந்தூர செங்களப விழுதுக்கலவையாலும் விருத்திரனை பூசனை செய்வார்கள். இளங்கள்ளும் தேனும் கலந்து நெய்யுடன் அவியிலிடுவார்கள். கலைமான், இளம்பன்றி, வெள்ளாட்டு ஊன்களைக் கலந்து எரியூட்டுவர். பலிவிலங்கின் குருதிகலந்த சோறே அவிமிச்சமென அளிக்கப்படும்.

அந்த மகாஅபராதவேள்வி இரவும்பகலும் இடைவிடாது நிகழும். மழைவிழுந்து வேள்வித்தீ அணையுமென்றால்தான் அப்படையலை விருத்திரன் ஏற்றுக்கொண்டான் என்றுபொருள். அதுவரைக்கும் வேள்வியாளர்களும் வருகையாளர்களும் உணவோ நீரோ கொள்வதில்லை. ஒருபொழுது உண்டு ஏழுநாட்கள் நோன்பிருந்து பன்னிருநாட்கள் நடந்து அங்கு வந்துசேர்ந்தவர்கள் அவர்கள். நான் சென்ற அன்று ஏழாவது நாளாக வேள்வி நிகழ்ந்துகொண்டிருந்தது. நூற்றெட்டு அந்தணர் வேள்விகளைச் செய்ய ஆயிரம் பேருக்குமேல் அங்கே கூடியிருந்தனர். வேள்விப்புகை எழுந்து மேலே சென்று முகிலை தொட்டிருந்தது.

பலர் சோர்ந்து ஆங்காங்கே படுத்துவிட்டனர். அன்று உச்சிப்பொழுதில் காட்டின் வெப்பம் கூடிக்கூடி வந்தது. அனைத்து இலைகளும் வாடியவை போலிருந்தன. வாடிய இலைமணம்கொண்ட வறண்ட காற்று சுற்றிவந்தது. அவ்வப்போது அங்கே வந்து மக்களைக் கண்டு திகைத்து திரும்பி ஓடிய உடும்புகளின் கண்களில் வெப்பத்தின் துயரம் தெரிந்தது. பெருமூச்சு விட்டுக்கொண்டு வியர்வையை மீண்டும் மீண்டும் துடைத்தபடி காத்திருந்தோம். எப்போதாவது காட்டின் உயிர்ப்பு என மெல்லிய காற்று வந்து தொட்டபோது இனிய நினைவு ஒன்று எழுந்ததுபோல உடல்சிலிர்த்தது.

விடாய்கொண்டு உடல்சோர்ந்து நானும் ஒரு பாறைமேல் அமர்ந்துவிட்டேன். அப்போது குரல்கள் வெடித்தெழுந்தன. புலியோ யானையோ வந்துவிட்டதென்று உணர்ந்து எழுந்துநின்று நோக்கியபோது என் தோளில் ஒரு நீர்த்துளி விழுந்தது. அதிர்ந்து உடல் சிலிர்க்க நோக்குவதற்குள் மூக்கில் ஒன்று. இன்னொன்று மார்பில். கையால் தொட்டு நோக்கினேன். அவை செந்துளிகள். குருதிபோலவே விரல்கள்நடுவே பசையாக ஒட்டின. மேலே நோக்கியபோது மலைகளுக்கு அப்பாலிருந்து முகில்குவை ஒன்று வந்து அப்பகுதியை மூடியிருப்பதைக் கண்டேன். சுனைநீரில் முகிலின் முழுவடிவை காணமுடிந்தது. அது ஒரு முகமென நான் எண்ணிக்கொண்டேன்.

சற்றுநேரத்திலேயே மழைபொழிந்து வேள்வித்தீ முற்றணைந்தது. வேள்விக்கு அமர்ந்திருந்த வைதிகர்கள் அவிமிச்சத்தையும் சாம்பலையும் மலர்களையும் சிறுசுடுமண் கலங்களில் எடுத்துக்கொண்டு சுனையில் இறங்கி அதை நீரில்விட்டுவிட்டு மும்முறை மூழ்கி நீராடி எழுந்தனர். நீரின்

செவ்வலைகள் எழுந்து செஞ்சேற்றை நக்கியபடி வளைந்தன. கூடிநின்ற அனைவரும் "விருத்திரனே, விரிபவனே, மூத்தவனே, தந்தையே, வாழ்த்துக எங்களை!" என்று கூவியபடி நீரில் இறங்கி மூழ்கி நீராடினர். "பலர் அழுதுகொண்டிருப்பதை பார்த்தேன்" என்றார் பிரசாந்தர். "நானும் அன்று அழுதேன்."

"அது பசியாலும் விடாயாலும் வந்த அழுகையாகக்கூட இருக்கலாம்" என்றான் பிரசண்டன். பிரசாந்தர் தலையை மட்டும் அசைத்தார். "கரூஷத்தில் அசுரகுடிகளின் மாமத நீராட்டுக்கு நான் சென்றிருக்கிறேன்" என்றான் பிரசண்டன். "பெயல்பொழிந்து காடுமூடியிருக்கும் கார்காலத்தில் முதல்நிலவு அன்று தேவர்கள் வந்து இறங்கி மலஜம் என்னும் சுனையில் நீராடுவார்கள் என்று சொல்கிறார்கள். தொலைவில் மலையுச்சிகளில் நின்று நோக்கினால் தேவர்கள் நீராடும் அலைவளையங்களை அச்சுனைநீரில் காணமுடியும். குளிர்காலத்தில் கார்த்திகைக் கருநிலவில் அசுரர்கள் கரூஷமென்னும் சுனையில் நீராடுவார்கள்."

கார்த்திகை முழுக்க அவர்கள் குலங்களாகக் கிளம்பி காட்டுவழியில் நடந்து வந்து அச்சுனையருகே சிறுகுடில்கள் கட்டி தங்குவார்கள். அங்கேயே காயும் கனியும் ஊனும் தேனும் உண்டு வாழ்வார்கள். பகலும் இரவும் விருத்திரனின் புகழ்பாடும் தொல்பாடல்களை பாடிக்கொண்டிருப்பார்கள். இரவில் நெருப்பிட்டு அதைச் சூழ்ந்து அமர்ந்து பலியுணவைச் சுட்டு உண்டபடி கள்ளருந்தி நடனமிட்டபடி காத்திருப்பார்கள். அசுரகுலங்கள் வந்து பெருகிக்கொண்டே இருக்கும். நூற்றெட்டு தொல்குடியினர் அவர்கள். ஒரு குடியிலிருந்து ஒருவரேனும் வந்தாகவேண்டுமென்பது நெறி. ஆனால் ஒவ்வொருமுறையும் சில குலங்கள் மறைந்துவிட்டிருப்பதையே காண்பார்கள்.

ஒவ்வொரு குலமாக அணுக அணுக கூச்சலிட்டபடி ஓடிச்சென்று அள்ளித்தழுவி கண்ணீர் உகுப்பார்கள். அன்னையர் அள்ளி மடியிலமர்த்திக் கொள்ள தந்தையர் தலைதொட்டு வாழ்த்துவார்கள். குலங்கள் ஒன்றுசேரும் விழவுகளில் ஒன்று அது. கருநிலவுநாளன்று பொழுதுதிகைந்ததும் குலப்பூசகர் எழுந்துசென்று அங்கிருக்கும் காலமஸ்தகம் என்னும் பாறைமேல் ஏறிநின்று தன் இடையிலிருக்கும் கொம்பை எடுத்து மும்முறை பிளிறலோசை எழுப்புவார். அனைத்து அசுரர்களும் ஆண் பெண் மைந்தரென பிரிவின்றி நீரில் பாய்ந்து நீராடுவார்கள்.

அது ஒரு கட்டிலாக் களியாட்டு. சேற்றில் விழுந்து புரள்வார்கள். ஒருவரை ஒருவர் தள்ளிவிட்டும் தழுவியும் துள்ளிமறிவார்கள். தோள்பெருத்தோர் மல்லிடுவார்கள். சில தருணங்களில் அது போரென்றே ஆகும். சிரிப்பும் அழுகையும் பின்னர் காமமென ஆகும். உடலிணைந்து சேற்றுக்குள் திளைப்பார்கள். கரூஷத்தின் கரையில் அனைத்துப் பெண்களும் கருவுற்றாகவேண்டுமென்பது நெறி. அச்சுனையின் நீரின் ஒரு துளி உடலில் பட்டால்கூட விருத்திரனின் மைந்தர்கள் பெண்ணுக்குள் முளைவிடுவார்கள் என்று பாடல்கள் சொல்லின.

“அன்று நான் கரையமர்ந்து நோக்கியிருந்தேன். அவர்களில் ஒருவனல்ல நான் என்றே என்னை உணர்ந்தேன். என் மொழிமட்டும் அவர்களுக்கும் உரியது. எனவே அவர்கள் ஓய்ந்து களைத்து கரைநீந்தி வந்து காடுகளுக்குள் ஆங்காங்கே விழுந்து உறங்கத் தொடங்கியபோது ஒவ்வொரு முகமாக சென்று நோக்கினேன். மலர்ந்தவை, துயர்கொண்டு தணிந்தவை. பின் என் முழவை எடுத்து அவர்களைப் போற்றிப்

பாடலானேன்” என்றான் பிரசண்டன். “அந்தப் பாடலை பல்லாண்டுகாலம் நான் பாடிக்கொண்டிருந்தேன். அதை பிறரும் பாடலாயினர். பின்னர் குப்த சந்திரசூடரின் விருத்திரப்பிரபாவத்தில் சமாப்திப் பாடலாக அதை கேட்டேன்.”

பொய்யான தன்னிகழ்ச்சி கலந்த சிரிப்புடன் “அதைப் பாடிய குணதனிடம் சொன்னேன், அப்பாடலைப் பாடியவன் அழிவற்றவன், அவன் என்றுமுள்ள ஒன்றின் நாக்கு என. ஆம் என்று அவன் சொன்னான்” என்றான் பிரசண்டன். பிரசாந்தர் “அது உண்மை, சூதரே” என்றார். அவர்கள் மெல்ல புரண்டு மல்லாந்துபடுத்தனர். பிச்சாண்டவர் குனிந்து நீறெழுந்த குவையை குச்சியால் கிளறினார். “இவர் எதையாவது கேட்கிறாரா?” என்றார் பிரசாந்தர். “நான் பார்த்தது முதல் இப்படித்தான் இருக்கிறார். இவருக்குள் வேறு குரல்கள் ஒலிக்கின்றன போலும்” என்றான் பிரசண்டன். “நெருப்பு எஞ்சியிருக்கிறதா?’ என்று பிரசாந்தர் கேட்டார். “இல்லை, அணைந்துவிட்டதென்று நினைக்கிறேன்” என்றான் பிரசண்டன்.

ஆனால் நெருப்பு குகைக்குள் வந்த காற்றால் ஊதப்பட்டு மீண்டும் கண்விழித்தது. “எளிதில் அணைவதில்லை. இவை காட்டுவிறகுகள்” என்றார் பிரசாந்தர். பிரசண்டன் “அந்தணரே, அங்கே விருத்திரனை வழுத்தி அந்தணர் ஓதிய வேதம் எது? அசுரர்களின் வேதமா அன்றி அந்தணர் வேதமா?” என்றான். “வேதம் கங்கை போன்றது. அது ஊறிவரும் மலைகளை இதுவரை மானுடர் ஒருமுறையேனும் நோக்கியிருக்கமாட்டார். இனி என்றும் அதை முழுக்க நோக்கப்போவதுமில்லை” என்றார் பிரசாந்தர்.

இருமல்போல் ஓசைகேட்க இருவரும் திரும்பி பிச்சாண்டவரை நோக்கினர். “இவர் மூன்றாவது முகம்போலும்” என்றான்

பிரசண்டன் சிரித்தபடி. இருமல் அல்ல சிரிப்பு என்று பின்னர்தான் தெரிந்தது. அவர்கள் திகைப்புடன் நோக்கி சிலைத்திருக்க அவர் எண்ணி எண்ணி உவகைகொள்பவர் போல சிரித்தார். ஒற்றைக்கண்ணில் இருந்து நீர் வழிந்தது. இருவரையும் மாறிமாறி நோக்கி உடல்குலுங்கி அதிர கைகள் வலித்து நெகிழ சிரித்துச் சிரித்து மூச்சுவாங்கினார். அவர்கள் ஏதென்று அறியாமலேயே அச்சிரிப்பைக் கேட்டு நாணினர்.

பிரசண்டன் வெளியே பார்த்தான். மழை விட்டிருந்தது. விடிந்து இளநீலநிறமாக காற்று உள்ளொளி கொண்டிருந்தது. வெளியே சென்றாலென்ன என்னும் எண்ணம் எழுந்தது. பிரசாந்தரை நோக்க அவர் விழிகளும் அச்சத்துடன் வந்து பிரசண்டனின் விழிகளை தொட்டுச்சென்றன. சிரித்து தளர்ந்தவர் போல இருகைகளையும் பின்னால் ஊன்றி மல்லாந்தார் பிச்சாண்டவர். மேலிருந்து குளிர்ந்த நீர்த்துளி தன்மேல் விழுந்தபோது பிரசண்டன் திடுக்கிட்டான். பிரசாந்தர் “ஊற்று” என்றார். பிரசண்டன் தொட்டுநோக்கி “சேறு” என்றான்.

பிரசாந்தர் விரல்களை அசைத்து “குருதிபோல பிசுக்கு” என்றார். நீர்த்துளிகள் அவர்கள் மேல் தொடர்ந்து விழத்தொடங்கின. “குருதிமழை” என்றார் பிரசாந்தர். சிரிப்பொலி ஓய்ந்திருக்கக் கண்டு அவர்கள் பிச்சாண்டவரை நோக்கினர். அவர் அமைதியான முகத்துடன் கண்களை மூடி மழையை ஏற்றுக்கொண்டு மல்லாந்திருந்தார். சற்றுநேரத்தில் அவர்களை அக்குருதிமழை முழுமையாக மூடிக்கொண்டது. குகையின் ஆழத்தில் நீர் ஊறிவிழும் ஒலி கேட்டது. அது உறுமலென விம்மலென பொருள்கொண்டது. குருதி இளஞ்சூடாக ஊன்மணத்துடன் இருந்தது. எழுந்து விலகவேண்டும் என

எண்ணியபடி உடலை அசைக்கமுடியாதவர்களாக பிரசண்டனும் பிரசாந்தரும் அங்கே அமர்ந்திருந்தனர்.

முழவை மீட்டி நிறுத்தி சண்டன் சொன்னான். "வணிகர்களே, உங்கள் குலம் தழைப்பதாக! அழியா மூதாதையின் அருள் உங்கள் குருதிகளில் விதைகளாக நிறைவதாக! உங்கள் மங்கையர் அன்னையராகுக! உங்கள் மைந்தர் நிழல்மரங்களாகுக! உங்கள் கொடிவழி தளிர் நீட்டி எதிர்காலத்தைத் தொட்டு சுருண்டெழுக! ஆம், அவ்வாறே ஆகுக!" வணிகர்கள் "ஆம் ஆம் ஆம்" என வாழ்த்தினர். பைலனும் சுமந்துவும் மெல்ல உடலசைந்து இயல்புநிலைக்கு மீண்டனர். ஜைமினி நிறைவின்மையுடன் தலையை அசைத்தான்.

# கிராதம் - 47

**பகுதி ஆறு : மகாவஜ்ரம்**

**[ 1 ]**

தண்டகாரண்யத்தைக் கடந்து திருவிடத்தின் மேட்டுநிலத்தின் மீது சண்டனும் இளையோர் மூவரும் ஏறினர். பாறைகள் ஏட்டுச்சுவடிகளை அடுக்கி வைத்தவைபோலிருந்தன. எட்டுப்பெருக்குகளாக அப்பாறைகளிலிருந்து விழுந்த திரோத்காரம் என்னும் அருவி ஒன்று மேலும் மேலும் என பள்ளத்தில் சரிந்து நூற்றுக்கணக்கான சிற்றருவிகளாக ஆகி கீழே ஆறென ஒருங்கிணைந்தது. "அருவிகள் படைகொண்டு செல்கின்றன" என்றான் ஜைமினி. "வெண்ணிற காட்டுத்தீ என நான் நினைத்தேன்" என்றான் பைலன். "அன்னங்கள்" என்றான் சுமந்து.

“அவை ஏன் அருவிகளல்லாமலாகவேண்டும்?” என்று சண்டன் கேட்டான். “ஆம், ஏன் நாம் பார்க்கும் ஒவ்வொன்றையும் பிறிதொன்றாக்குகிறோம்?” என்று சுமந்து வியந்தான். “பிறிதொன்றாக்கவில்லை, பிறிதுபலவாக்குகிறோம். சொல்லிச்சொல்லி சலிக்கும்வரை சொல்லிக்கொண்டே இருக்கிறோம்” என்றான் பைலன். “நாம் ஒவ்வொன்றையும் அனைத்துடனும் இணைக்க விழைகிறோம். ஒன்றென ஆன ஒன்றை நோக்கி அனைத்தையும் கொண்டுசெல்கிறோம்” என்றான் ஜைமினி. “இது வெண்முகில். இது மலையின் பால். இது நிலமகளின் புன்னகை. இது ஒரு சாமரம். சரியும் வெண்பட்டு…”

சண்டன் சிரித்து “அருவி என்னும் சொல்லை உதிர்த்து அதன் கீழ் சற்றுநேரம் நின்றாலே போதும். அது தான் எதுவென நமக்கு காட்டும்” என்றான். பொழிந்துகொண்டிருந்த நீர்ப்பெருக்கை நோக்கி நின்றிருந்த பைலன் திரும்பி சண்டனிடம் “ஓயாது கழுவிக்கொண்டே இருக்கிறது” என்றான். சுமந்து “ஆம், நீரென்று ஒன்றைப் படைத்த கருணையை எண்ணிக்கொள்கிறேன். எதிலிருந்தும் கழுவி மீளமுடிகிறது” என்றான். ஜைமினி “நீங்கள் பின்னர் அக்குகையிலிருந்தவர்களை சந்தித்தீர்களா, சூதரே?” என்றான்.

சண்டன் நீர்ப்புகை படாமல் முழவை முதுகைநோக்கி தாழ்த்திக்கொண்டு சொன்னான் “ஆம், நான் தாதவனம் என்னும் ஊரில் பிரசாந்தரை சந்தித்தேன். அவர் தன்னந்தனியாகச் சென்று அங்கமலதம் எனும் சுனையில் நீராடி அந்த குருதிக்கறையை கழுவிக்கொண்டார். தாததோஷம் என்னும் பழிக்கு அவர் ஆளாகிவிட்டதாக நிமித்திகர் சொன்னதனால்

மீண்டும் மும்முறை வந்து அங்கே மகாஅபராதபூசனையை செய்தார்.”

“கரூஷம் என்னும் சுனையில் சென்று தன் நிணப்பூச்சை கழுவி மீண்டார் பிரசண்டர். அவருக்கும் தந்தைப்பழி இருந்தது. நூறுபாடல்களில் விருத்திரன் புகழ்பாடி அதை அகற்றிக்கொண்டார். ஆனால் பிச்சாண்டவர் அக்குருதியை கழுவவேயில்லை. குகையிலிருந்து தனித்துவந்த அதே நடையில் தனித்து விலகிச்சென்றார். மீண்டும் மூன்றாண்டுகள் கழித்து பிரசாந்தர் அவரைக் கண்டபோதும் சடைகளிலும் உடலிலும் அக்குருதிஉலர்ந்த செம்பொடி எஞ்சியிருந்தது.”

“பிரசண்டர் அவரைக் கண்டது மேலும் ஓராண்டுக்குப்பின் காசியின் இந்திரவிழவின்போது” என்றான் சண்டன். “நகர்மையத்தில் அமைந்த இந்திரகோட்டத்தில் கோயில்கொண்டிருந்த இந்திரனின் பொற்சிலையை மலர்களைந்து அணிகளைந்து பல்லக்கிலாக்கி அரசரும் படைத்தலைவரும் அமைச்சரும் குடித்தலைவரும் தோள்களில் சுமந்தபடி நீராட்டுக்கு கொண்டுசென்றனர். வேதமோதியபடி அந்தணர் முன்செல்ல புலவரும் குடிமூத்தாரும் பின் சென்றனர். அணிப்பரத்தையரும் இசைச்சூதரும் அந்நிரைக்கு முன்னால் மங்கலம் கொண்டுசென்றனர். காசியின் பதினெட்டு பெருங்குடிகள் முழுதணிக்கோலத்தில் தொடர்ந்தனர்.”

இந்திரனை வாழ்த்தும் கூவல்கள் எழுந்து பட்டுத்தோரணங்களாலும் மலர்மாலைகளாலும் அணிசெய்யப்பட்டிருந்த நகர்த்தெருக்களை நிறைத்தன. நகரமாளிகைகளின் உப்பரிகைகளில் நின்ற மங்கையர் வாழ்த்துக்கூவி அரிமலர் தூவினர். அந்தப் பொன்மழையில் நனைந்தபடி சென்ற அணியூர்வலம் கங்கைக்கரையை

அடைந்தது. படிக்கட்டில் இறங்கி கங்கையை அடைந்ததும் அந்தணர் நீரை அணைந்தனர். மலரிட்டு சுடர்நீட்டி வழிபட்டு கங்கையை வணங்கியபின் மூழ்கி எழுந்து கங்கைநீரை மும்முறை அள்ளிவீசி இந்திரனை வாழ்த்தினர். அரசர் தன் கையில் இந்திரனை எடுத்துக்கொண்டு நீரில் மூழ்கி எழுந்தார்.

காலைமுதலே கண்கூசும் ஒளியுடனிருந்த வானம் அவர்கள் கங்கையை அடையும்போதே இருட்டத்தொடங்கியது. அரசர் மூழ்கி எழுந்ததும் கருமுகில் ஒன்று வந்து வானில் நின்றது. அதில் மின்கதிர்கள் வெட்டின. இடியோசை களிறென ஒலியெழுப்பியது. ஐங்குடிப்பெருக்கும் இந்திரனை வாழ்த்தும் ஒலி உச்சம்கொண்டது. மழைத்துளிகள் சாய்வாக வந்து தைக்கலாயின. கைவீசி துள்ளி ஆர்ப்பரித்தனர் நகர்மாந்தர். ஆணும் பெண்ணும் களிவெறிகொண்டு நடனமிட்டனர்.

மழை மென்தூவல் பொழிவென அவர்களை மூடியது. உடல்கள்தோறும் பற்றி எழத்தொடங்கிய காமத்திற்கு பட்டுத்திரையாகியது. இந்திரனை மீண்டும் ஆலயத்திற்கு கொண்டுசெல்லும் வழியில் எங்கும் ஆணும்பெண்ணும் முறைமறந்து நெறிமறந்து குருதியொன்றே முன்செலுத்த கலவிகொண்டனர். அவர்கள் சூடிய களபமும் சந்தனமும் குங்குமமும் கரைந்தழிந்தன. ஆடைகள் தோலென்றாயின. நகர்மாளிகைகள் நனைந்து சிலிர்த்து நின்றன. பெருகுக பெருகுக பெருகுக என்று இந்திரனின் ஆலயமணி முழங்கிக்கொண்டிருந்தது. அத்திரள் நடுவே பிரசண்டர் அலைந்தார். காமம் எத்தனை சொற்களை கோருகிறதென்று அவர் எண்ணிக்கொண்டதுண்டு. எத்தனை விரைவாக சொற்களைத் துறக்கிறது என்று அப்போது உணர்ந்தார்.

அப்போதுதான் அவர் அந்தப் பிச்சாண்டவரை மீண்டும் கண்டார். தொலைவில் ஒரு கூரைக்கு அடியில் அவர் குந்தி அமர்ந்திருந்தார். தன் முன் பெருகிய உடற்கொந்தளிப்பை அவர் காணவில்லை என்று தோன்றியது. பின் எழுந்து அக்கூட்டத்தினூடாக நடந்தார். பிறர் விழிகாணமுடியாது ஊடே நடப்பவர்போல. மழைநீர் விழுந்ததும் அவர் உடலில் இருந்து அக்குருதிப்பொடி கரையலாயிற்று. சற்றுநேரத்தில் செங்குருதி மூடிய உடலுடன் அவர் அவர்கள் நடுவே நடந்துசென்றார்.

நூறு தலைமுறைகளுக்கு முன்பு ஒருமுறை இந்திரவிழவின் உச்சிப்பொழுதுப் பூசெய்கையின்போது ஒரு முதுபூசகரில் சன்னதம்கொண்டெழுந்த தொல்தெய்வம் ஒன்று சொன்னது "இந்திரன் தாதைக்கொலை செய்தவன். அவன் கையால் மைந்தர் மலர்கொள்ளலாகாது. அவன் நீரை கன்னியர் கொள்ளலாகாது. அவன் முன் அரசனின் செங்கோல் வைக்கப்படலாகாது." அங்கே துள்ளிக் கொந்தளித்த பெருந்திரள் அக்குரல் கேட்டு அமைதியடைந்தது. அரசன் கைகூப்பி "ஆம், ஆணை" என்றான்.

இந்திரனின் ஆலயத்திற்கு வெளியே நகரின் தெற்குமூலையில் ஒரு வளரும் சிதல்புற்றாக விருத்திரன் கோயில்கொண்டிருந்தான். ஓலைவேய்ந்த கொட்டகைக்குள் பன்னிரு முகடுகொண்டு நின்றிருந்த அந்தப் புற்றின்மேல் வெள்ளியாலான அவன் முகம் பதிக்கப்பட்டிருந்தது. மூதாதைதெய்வத்திற்கு அங்கே குருதிபலியும் கொடையும் பூசெய்கையும் நிகழ்ந்தன. ஐங்குலத்து அன்னையரும் அங்கேதான் மைந்தரை அவன் காலடியில் கிடத்தி அருள்கொண்டனர். இளமகளிர் மஞ்சள்நீர் கொண்டனர். அங்குள்ள ஒரு பேராலமரத்திலிருந்து செந்நிற

அரக்கு என வழிந்துகொண்டே இருந்தது விருத்திரனின் குருதி. அதைத்தொட்டு நெற்றியிலணிந்து அவன் அருள்பெற்றனர்.

“விருத்திரனின் குருதியுடன் மஞ்சள்பொடியும் அரிசிப்பொடியும் மலரும் கலந்து ஒரு கூடையில் எடுத்துச்சென்று இந்திரனுக்கு படைத்தனர். அதன்பின்னரே இந்திரனுக்குரிய பூசெய்கை தொடங்கியது. அங்கே காமம்கொண்ட இளையோரும் களம்புகும் மறவரும் மட்டுமே மலர்கொண்டு இந்திரனின் அருள்பெற்றனர்” என்றான் சண்டன். “இந்திரனின் ஆலயத்தில் இருந்து ஒவ்வொரு நாளும் மலர்கொண்டுவந்து விருத்திரனின் காலடியில் வைக்கப்பட்டு பூசைசெய்யப்பட்டது. தாதாபராதபூசை என அது அழைக்கப்பட்டடது.”

“வேள்விதோறும் அவிகொள்பவன் எந்தை இந்திரன். அவனை தந்தைக்கொலை செய்தவன் என்று நூலேதும் சொல்வதில்லை” என்றான் ஜைமினி. “சொல்லும் நூல்களும் உள்ளன” என்றான் சண்டன். ஜைமினி “வேதமுதல்வன் இந்திரனே. ஏனென்றால் அவன் விழைவுகளின் அரசன். இப்புவியிலுள்ள ஒவ்வொன்றும் விழைவுகொண்டுள்ளன, விழைவெனவே விண்ணிருப்புகள் உயிர்களை அறிகின்றன. சூதரே, உயிரென்பதே சலிக்காத, தேயாத விழைவுமட்டும்தான்” என்றான்.

“ஏழு விழைவுகள். மூலத்தின் காமம், சுவாதிட்டானத்தின் பசி, மணிபூரகத்தின் மூச்சு, அனாகதத்தின் இதயம், விசுத்தியின் சொல், ஆக்கினையின் எண்ணம், சகஸ்ரத்தின் முழுமைநாட்டம் அனைத்தும் ஒற்றை விழைவின் ஏழுபடிநிலைகள் மட்டுமே” என்று ஜைமினி சொன்னான். “ஆகவே வேட்டலே உயிர்களுக்குரிய செயல். இங்கு உயிர்களாற்றும் செயலனைத்தும் வேட்டல்தான். அதை சொல்லென்றும் செயலென்றும் அமைப்பென்றும் முறையென்றும்

வழக்கென்றும் முறைப்படுத்தியமைத்தனர் மூதாதையர். அதுவே வேள்வி.”

“வேள்வி என்பது மதலை அன்னையை நோக்கி அழுவது. அன்னை முலைகனிந்தாகவேண்டும். வேள்வி துலாவின் இப்பக்கத்தட்டு. மறுதட்டு நிகர்கொண்டாகவேண்டும். வேள்வி என்பது சொல். எல்லா சொல்லும் பொருள்குறித்தனவே” என்று ஜைமினி தொடர்ந்தான். “ஆம், தொல்வேதம் அசுரர்களிடமிருந்து வந்தது. ஆனால் மரப்பட்டை நூறாயிரம் முறை அறைவாங்கி நூறுநாள் நீரிலூறி சக்கை களைந்து ஒளிகொண்ட சரடென மட்டுமே எஞ்சும்போதுதான் அது மரவுரியாகிறது. வேள்விக்கு இனிய தேன் தேனீக்களின் மிச்சிலே. ஆனால் அது மலர்களில் ஊறியதென்பதே மெய்.”

“வேர்கள் உண்ணும் பொருட்களால் ஆனதே கனி. ஆனால் வேர்களுண்பனவற்றை எல்லாம் விலங்குகளும் உண்பதில்லை” என்று ஜைமினி தொடர்ந்தான். “இங்கு வந்த உயிர்களில் நெறிநின்றவை வாழ்ந்தன. தங்களை மேலேற்றிக்கொண்டவை வென்றன. வென்றதனால் வேதம் உருவானது. மீண்டும் வெற்றிக்கு அது நெறியென்றாகியது. வேதம் மாபெரும் அடர்களம் ஒன்றின் வெற்றிமுரசு” என்றான் ஜைமினி.

உணர்வெழுச்சியுடன் அவன் சொன்னான் “ஆம், அது குருதிபடிந்ததே. வேதமுரசு குருதிச்செந்நிறம் கொண்டது. தாதையர் குருதியா? ஆம். தனயரின் குருதியென்றாலும் ஆம். அயலவரின் குருதியென்று நீங்கள் சொல்லலாம். அதேயளவே நம்மவரின் குருதியும் ஆகும். ஆனால் இப்புவியில் அறமென ஒன்றை நிறுத்தி வாழ்வை வளர்ப்பதனாலேயே அது தேவர்களுக்கு இனியதாகிறது. ஓசைகளில் தூயதும் சொற்களில் அரியதும் எண்ணங்களில் முழுமைகொண்டதும்

என்றும் அழியாததும் ஆகிறது. அது வாழ்க!” கைகளைக் கூப்பி “ஓம் ஓம் ஓம்” என்று அவன் தொழுதான். பின்னர் முன்னால் நடந்து மறைந்தான்.

சண்டன் மறுத்தொரு சொல்லும் சொல்லாமல் தன் முழவுடன் தலைகுனிந்து நடந்தான். உடன்சென்ற சுமந்து “சொல்தேர்ந்திருக்கிறார் ஜைமின்யர்” என்றான். “அவர் தேடும் ஆசிரியர் அவருக்கு அமைக!” என்றான் பைலன். “மூன்று பாதைகள், மூன்று ஆசிரியர்கள்” என்று சுமந்து சொன்னான். “மாணவர்கள் முளைத்து அவர்களால் தேடப்படுவதாலேயே உரிய ஆசிரியன் எங்கோ திகைந்துவிட்டான் என்று பொருள் என என்னிடம் உஜ்ஜயினியில் ஒரு அந்தணன் சொன்னான்.” சுமந்து “மூன்றுமுகம் கொண்ட ஒருவரா?” என்றான். சண்டன் நகைத்தான்.

சற்றுதொலைவில் ஜைமினி நின்றிருப்பதை அவர்கள் கண்டனர். “அவர் சென்றுவிடமாட்டார் என நான் அறிவேன்” என்றான் பைலன். “அவர் நம்மால் மட்டுமே தன் இடைவெளிகளை நிறைவுசெய்யமுடியும்.” சுமந்து “அவர் நம்மை விரும்புகிறார் என்றே எனக்கும் தோன்றிக்கொண்டிருந்தது” என்றான். அவர்கள் அணுகியபோது ஜைமினி புன்னகையுடன் அவர்களை நோக்காது வேறுதிசை நோக்கி நின்றிருந்தான். சண்டன் அருகே வந்ததும் “செல்வோம், அந்தணரே” என்றான்.

“நான் என் நிலைமீறி சொல்லாடிவிட்டேனா, சண்டரே?” என்றான் ஜைமினி. “உங்களை வசைபாடினேன். உங்களை வெறுக்க நான் செய்த முயற்சி அது. உங்களை விட்டு விலகிச்செல்லும்போது எண்ணிக்கொண்டேன் இத்தனை அகன்றும் என்னுள் என்ன எஞ்சியிருக்கிறது என்று.

புழுதிபடிந்த உங்கள் கால்கள்தான் நினைவில் நின்றன. அவை சென்றுமீண்ட தொலைவுகளே உங்கள் சொற்களுக்கு பொருளாகின்றன. நான் இளையவன். என்னையறியாமலேயே எனக்கு அளிக்கப்பட்டவற்றால் ஆனவன். பிழைசொல்லிவிட்டேன் என்றால் பொறுத்தருள்க!"

சண்டன் சிரித்தபடி "விதையில் மணமென கனிப்பெருக்கு உள்ளது என ஒரு சூதர்பாடல் சொல்கிறது" என்றான். "நீங்கள் பற்றிக்கொண்டிருப்பவற்றால் முழுமையாக பற்றப்படுங்கள், அந்தணரே. அதைவிடப் பெரிய நல்லூழ் ஏதும் மானுடனுக்கில்லை." ஜைமினி பெருமூச்சு விட்டு "உங்கள் சொல் நிலைக்கட்டும், சூதரே" என்றான். எழ உன்னிய ஆழ்சொற்களின் விசையால் முகம் கொந்தளிக்க தலைகுனிந்து சண்டன் நடக்க அவர்கள் உடன் சென்றனர். அவர்களின் காலடிகள் மட்டும் ஒலித்தன.

சண்டன் ஒரு சொல் உந்தியெழுந்த அதிர்வில் கைகள் பதைக்க உடல்தவிக்க நின்றான். நடுங்கும் குரலில் "அந்தணரே, வேதமுரசு குறித்து நீங்கள் சொன்னது உண்மை. அன்றும் இன்றும் அது குருதியொழுகும் செம்முரசே. ஆனால் சொல்சென்று தொடும் அறியாத் தொலைவெளி ஒன்றில் தூயவெண்முரசு ஒலிப்பதை நான் கேட்கிறேன்" என்றான். தாளமுடியாத ஒன்றை சொல்வதுபோல அவன் கண்கள் கலங்கின. முகம் சிவந்து இதழ்கள் துடித்தன.

மறுகணமே தன்னை மீட்டுக்கொண்டு "ஓர் இனிய கனவு. அது துரத்தவில்லை என்றால் எப்படி இத்தனை தொலைவு நடக்கமுடியும்? நடக்காமல் அமர்ந்துவாழும் ஊழ் இப்பிறப்பில் இல்லை. என்ன செய்வது?" என்றான். தலைதூக்கி உரக்க நகைத்தபடி "இளையோருடன் இருப்பதன் பயனை இப்போது

அறிகிறேன். எத்தனை மூடக்கனவையும் இல்லாப்பொய்யையும் துணிந்து அவர்களிடம் சொல்லலாகும்” என்றான்.

ஆனால் அவர்கள் நீர்மைபடிந்த விழிகளுடன் அவனை நோக்கியபடி நடந்தனர். “பெண்களிடமும் கனவையும் பொய்யையும் சொல்லலாம். ஆனால் அவை அவர்களைப் பற்றியவையாக இருக்கவேண்டும். பிற கனவுகள் அவர்களுக்கு பிள்ளைவிளையாட்டென்றே படும்” என்றபின் சண்டன் மீண்டும் நகைத்தான். இளையவர் ஒருவரை ஒருவர் நோக்கிக்கொண்டனர். பைலன் அவனை வெளியே கொண்டுவர விரும்பி “தந்தைப்பழி கொண்டவன் இந்திரன் என்பதே அவனை வல்லமை மிக்கவனாக்குகிறது என்று ஒரு வரி காவியத்தில் வருகிறது, சூதரே” என்றான்.

“ஆம்” என்று சண்டன் சொன்னான். “தந்தைப்பழி கொள்ளாமல் தன்னைக் கடப்பவன் இல்லை.” அவர்கள் மேலும் சொல்லின்றி ஒவ்வொருவரும் தங்கள் தனிமையில் நடந்தனர். ஜைமினி தலைநிமிர்ந்து “சண்டரே, நான் நல்லாசிரியராகிய தங்கள் கால்களைத் தொட்டு வாழ்த்துபெற விழைகிறேன்” என்றான். சண்டன் எந்த முகமாற்றமும் இல்லாமல் “அவ்வாறே” என்றான். ஜைமினி அவன் கால்களைத்தொட்டு அப்புழுதியை சென்னி சூடினான். “நெறிகளென அறியப்படுவதே மீறலென்றும் அறியப்படுகிறது. அறியப்படும்வகையில் அது எழுக! ஆம், அவ்வாறே ஆகுக!” என்று சண்டன் சொன்னான்.

**[ 2 ]**

அந்திவெளிச்சம் சிவக்கத் தொடங்குகையில் அவர்கள் பாறை ஒன்றை வந்தணைந்தனர். “இது அடர்வற்ற காடு.

புலிகள் வேட்டையாடுவதற்கு ஏற்றது. இங்கு நாம் அனல்சூடியே இரவமைய முடியும்” என்றான் சண்டன். அந்தப் பாறைமேல் ஏறி அனல்மூட்டி அதைச் சூழ்ந்து அமர்ந்துகொண்டனர். இருள் விரைவிலேயே எழுந்து சூழ்ந்துகொண்டது. குளிரும் வந்து பொதிந்தது. சேர்த்துவந்த கிழங்குகளை தீயில் சுட்டு பாறையில் வைத்து உடைத்து அவர்கள் உண்டனர். தேன்தட்டுகளை மூங்கில்கூடையில் சேர்த்துக்கொண்டு வந்திருந்தான் சண்டன். கிழங்குடன் அதையும் சேர்த்து ஜைமினி உண்டான். “அடுமனை உணவை உண்ண நா வழங்காமலாகிவிடுவோம் என ஐயுறுகிறேன், சூதரே” என்றான்.

விண்ணில் மீன்கள் நிறைந்திருந்தன. புகையில் அவை நீர்ப்பாவைகள் போல அலைபாய்ந்தன. சண்டன் தன் முழவை மெல்ல மீட்டத்தொடங்கினான். அது வேழாம்பல்போல விம்மலோசை எழுப்பியது. பின் புரவித்தாளமாகியது. அவன் ஆழ்ந்தகுரல் எழுந்தது.

**“அனைத்தையும் தழுவும் என் பாடல்**

**இசைவுகொண்டு எழுந்து**

**இந்திரனை நாடுகின்றன**

**பெருமைக்குரிய அவனை**

**கணவனைத் தழுவும் இளம் மணமகள்போல**

**ஆரத்தழுவுகின்றன**

**அடைக்கலம் கோருகின்றன**

**இந்திரனே**, அழகனே**

**ஆண்களில் முதல்வனே**

**உன்னைப்பற்றும் என் உள்ளம்**

**வேறெங்கும் விலகுவதேயில்லை**

**உன்னில் நிலைக்கிறது என் காதல்**

**என் அரசனைப்போல் வந்தமர்க இந்த தர்ப்பையில்**

**அருந்துக என் இனிய சோமமதுவை!**

**என் விடாயை போக்குக**

**அனைத்துச் செல்வங்களுக்கும் தலைவனே**

**வெண்களிறுமேல் ஊர்பவனே**

**ஏழு ஆறுகளால் செழிப்புறுகின்றது என் நிலம்"**

ரிக் வேதப்பாடலின் ஒலி அந்த இருண்ட காட்டில் முதன்முறை அது ஒலித்த அந்த அறியாக்காட்டிலென அப்போதும் தூய்மைகொண்டிருந்தது. சண்டன் பாடி நிறுத்தி விரல்களால் தன் முழவை தடவிக்கொண்டிருந்தான். பின்னர் தாழ்ந்த குரலில் சொல்லத்தொடங்கினான் "விண்ணளாவியவனின் மைந்தன் பிரம்மன். பிரம்மனின் உடலில் தோன்றிய பிரஜாபதிகளில் முதல்வர் மரீசி. மரீசியின் மைந்தனும் குலங்களுக்கு விதையுமான கசியபரை வணங்குவோம். கசியபர் தட்சப்பிரஜாபதியின் மகளாகிய அதிதியில் ஈன்ற மைந்தர்கள் ஆதித்யர்கள். தாதா, ஆரியமா, மித்ரன், ருத்ரன்,

வருணன், சூரியன், பகன் விவஸ்வான், பூஷா, சவிதா, த்வஷ்டா, விஷ்ணு என்னும் பன்னிரு ஆதித்யர்களின் முதல்வன் அவனே. அவனை தேவர்களின் அரசன் என்றும் ஆதித்யர்களின் தலைவன் என்றும் வேதங்கள் வணங்குகின்றன.”

முற்காலத்தில் புவிமேல் மலைகளுக்கு சிறகுகள் இருந்தன. இரவுகளில் அவை ஓசையின்றி எழுந்து பெருங்கடல்களின்மேல் பறந்தலைந்தன. முகில்களுடன் கலந்து விளையாடின. நிலவுபரவிய இரவுகளில் எழுந்து வானை நோக்கியவர்கள் பறக்கும் மலைகளின் நிழல்கள் நிலத்தில் நீலத்திரைபோல, ஈரப்பரப்புபோல ஒழுகிச்செல்வதையே கண்டனர். அவற்றிலிருந்த பறவைகளின் ஒலிகள் கலைந்து அவர்களின் தலைக்குமேல் ஒழுகிச்சென்றன. அங்கே குடியிருந்த மலைமக்கள் நிலவொளியில் சுடர்கொண்டிருந்த முகில்களை கைகளால் அள்ளி அளைந்து களித்தனர்.



ஒருமுறை வைதிகர் ஒருவர் காட்டுக்குள் தர்ப்பை வெட்டும்பொருட்டு சென்றபோது அங்கே பொன்னிற மான் ஒன்றைக் கண்டார். வியந்து அருகணைந்தபோது அதைப் பிடிக்கவந்த மலைமகனாகிய சிறுவனின் உடலும் பொன்னிறமாக ஒளிவிடுவதைக் கண்டு திகைத்தார். அது எப்படி நிகழ்ந்தது என்று அவர் அவனிடம் நயந்து கேட்டார். அவன் அவர்களின் குடில்கள் அமைந்த மலை இரவில் எழுந்து வானில் பறப்பதாகவும் மண்ணிலிருந்து எழுந்த புகை

மலைகளை அடைந்து மரங்களின் நடுவே செறிந்து குடில்களை முகில்களென மூடியிருப்பதாகவும் சொன்னான். என்ன நிகழ்ந்தது என்று அவர் உய்த்தறிந்தார்.

அங்கு நிகழ்ந்துகொண்டிருந்த அதிராத்ர வேள்வியின் அவிகொண்டு விண்ணிலெழுந்த புகையை அதைக் கடந்துசென்ற அந்த மலையின் மக்கள் நுகர்ந்தனர். அதன் இனிமையை அறிந்ததும் நாளும் அங்குவந்து விண்ணில்நின்று வேள்விப்புகையை புசித்தனர். தேவர்களுக்கு அளிக்கப்பட்ட அவியே அவர்களை ஒளிகொள்ளச் செய்தது. அந்தணர் அதை தன் தோழர்களிடம் சொன்னார். அன்று இரவில் அவர்கள் வெளியே சென்று நோக்கியபோது பறக்கும் மாமலைகளுக்கு மேல் அம்மக்கள் நின்று புகைமாந்துவதைக் கண்டனர்.

அவர்கள் தேவர்க்கரசனை வேள்விக்களத்தில் எழுந்த அனலில் வரவழைத்து முறையிட்டனர். வேள்வித்தலைவரான புலஸ்தியர் ஆணையிட்டார் "இனி எங்கள் வேள்விப்புகையில் ஒருமிடறும் அவர்கள் அருந்தலாகாது. இனி அவர்களின் நிழல் எங்கள் தலைக்குமேல் படலாகாது!" ஆணையை பணிந்து ஏற்று இந்திரன் எழுந்தான். தன் வைரவாளை வீசியபடி இடிமுரசொலிக்க விண்ணிலெழுந்தான். வெள்ளையானை மேல் அமர்ந்து பறக்கும் மலைகளை வேட்டையாடினான். அவற்றின் சிறகுகளை அரிந்து வீழ்த்தினான். குருதி வழிய அவை சரிந்து மண்ணில் விழுந்தன. அந்த அதிர்வில் இல்லங்களுக்குள் துயின்றவர்கள் திகைத்து விழித்தெழுந்தார்கள். அவர்களின் முற்றத்து மரங்கள் இலையுதிர்த்து நிற்பதை காலையில் கண்டார்கள்.

விண்ணில் மிதந்த மலைகள் அனைத்தும் சிறகற்று சரிந்தும் கவிழ்ந்தும் மண்ணில் விழுந்து ஆழப்பதிந்தன. சில மலைகள்

வெடித்தன. சில மலைகள் உடைந்து பிளந்தன. சில சிதறிப்பரவின. மலைகளின் குருதி பாறைகள் மேல் சிவந்த வரிகளாக விழுந்தது. மலையடிவாரங்களில் மலைகளின் நிணம் செம்பாறைகளாக சிதறிக்கிடந்தது. மலைகளின் வலித்துடிப்பைக் கண்டு அவற்றின் களித்தோழர்களாகிய முகில்கள் கண்ணீர்விட்டன. அது இளமழையென மலைகளுக்கு மேல் பொழிந்தது.

மைனாகம் என்னும் இளைய மலைமட்டும் இந்திரனிடமிருந்து தப்பியது. அதன் சிறகுகள் கருநீல நிறம்கொண்டிருந்தன. எனவே அதை இந்திரன் பார்க்கவில்லை. மைனாகம் பறந்துசென்று வளியிறைவனிடம் தன்னை காக்கும்படி கோரியது. "நீ என்னை பலமுறை சிறகுவருடி வாழ்த்தியிருக்கிறாய். நான் உன் மைந்தன். என்னை காத்தருள்க!" என்று மன்றாடியது. வளியிறைவன் அதை அள்ளி எடுத்துக்கொண்டு சென்றான். அதைக் கண்ட இந்திரன் தன் வைரவாளுடன் துரத்திவந்தான். வளி அதை வருணனிடம் கொடுத்து "நீரிறையே, இவன் உன் மைந்தன் எனக்கொள்க!" என்றான்.

நீரிறைவன் அதை தன் ஆடைகளுக்குள் மறைத்துக்கொண்டான். அது சிறகுள்ள வெண்மலையென நீருக்குள் புகுந்து நீந்தியது. மைனாகத்தைத் தொடர்ந்து ஓடிவந்த இந்திரன் குருதிபடிந்த வாளுடன் நின்று அறைகூவினான் "அவனை வெளியே விடு... அவன் சிறகுகளை வெட்டியாகவேண்டும். இது என் வஞ்சினம்." வருணன் பெருங்குரலில் நகைத்து "விலகிச்செல், இந்திரனே! உன்னால் என் விரிவை வெல்லமுடியாது. இவன் என்றும் என் காவலிலேயே இருப்பான்" என்றான். "உன்னை ஒருநாள்

வெல்வேன். ஒருநாள் நீ அவனை காத்தமைக்காக வருந்துவாய்” என்றான் இந்திரன். வருணன் உரக்க நகைத்தான். சினத்துடன் இந்திரன் திரும்பினான்.

மைனாகம் வருணனின் ஆட்சியில் நீருக்குள் வாழ்ந்தது. அது ஒளியை காணவேயில்லை. அங்கே அது தனிமையை உணர்ந்தமையால் வருணன் அதன் நீர்ப்பாவையை ஒரு பெண்ணாக்கினான். அவர்கள் புணர்ந்து மீன்மலைகளைப் பெற்றனர். அவை மீன்களாயினும் நீருள் மூச்சுவிடும் கலையை கற்கவில்லை. பெருஞ்சிறகுகளை வீசியபடி உடல்வளைவுகளில் நீர்ப்பெருக்கு வழிந்திறங்க வெள்ளி ஒளி வீசி அவை நீருக்குமேல் எழுந்தன. அந்த அலையெழுந்து விரிந்து பெருங்கலங்களை தள்ளாடச்செய்தது. வாலசைவால் கலங்களைச் சிதறடிக்கும் பேருருவும் ஆற்றலும் கொண்டிருந்தன அவை.

அவற்றை காற்றரசன் தன் இளமைந்தர்களென எண்ணினான். வெள்ளி மரம்போல நீரைத் துப்பியபடி அவை பாய்ந்தெழுந்து காற்றின் மடியில் விழுந்து திளைத்தாடின. அமுதென காற்றை அள்ளி உண்டன. அவை காற்றுறிஞ்சும் சீறலோசை மரக்கலக்காரர்களை அஞ்சவைத்தது. அவை சீறும் ஒலி எரிமலை எழுவதுபோல கேட்டது. அவை நகைக்கும் ஒலி காற்றிலேறி நெடுந்தொலைவு சென்று நாவாய்களில் இருந்தவர்களை கைகளைக்கூப்பி “மைனாக மைந்தர்களே, அருள்க! நெடுங்கடலின் உரிமையாளர்களே, பெருங்காற்றுகளால் பேணப்படுபவர்களே, உங்களுக்கே அடைக்கலம்” என்று கூவச்செய்தது. மைனாகமைந்தர் மானுடர் மேல் கனிவுகொண்டவர்கள் என்று நூல்கள் வாழ்த்தின.

மண்மேல் ஒரு மலையைமட்டும் இந்திரன் சிறகுடன் விட்டுவைத்தான். அதை அவன் இந்திரகீலம் என்று அழைத்தான். அவன் மண்ணுக்கு வரும்போது அவன் ஊர்தியென்றாகி அவனைச் சுமந்து விண்ணில் பறந்தது அது. அதன் குளிர்ச்சோலைகளில் அவன் அரம்பையருடன் காதலாடினான். தேவர்களுடன் விளையாடினான். அது அமர்ந்துசென்ற இடங்களில் அதைப் பார்த்தவர்கள் அது அங்கிருப்பதாக நினைத்துக்கொண்டனர். ஆகவே நூற்றெட்டு இந்திரகீலங்கள் இருப்பதாக தொல்கதைகள் சொல்லின. ஆனால் உண்மையில் அது கிழக்கே சூரியக்கதிர் படியும் முதல் எல்லையில் இந்திரனால் நிறுத்தப்பட்டது.

“வேள்வியமுதை முதலில் பெறுபவன், வேதச்சொல்லால் ஆளப்படுபவன் இந்திரன். தன் இளையோனாகிய த்வஷ்டாவால் அமைக்கப்பட்ட மின்கதிர்படைக்கலம் சூடியவன். அகி, துஷ்ணன், சம்பரன், வலவன் போன்ற அசுரர்களை வென்றவன். சசியென்றும் புலோமசை என்றும் அழைக்கப்படும் இந்திராணியை மணந்தவன், கிழக்குதிசையை ஆள்பவன். இந்திரனால் புரக்கப்படுகிறது இப்புவியும் அவ்விண்ணும். அவன் வாழ்க!” என்றான் சண்டன்.

# கிராதம் - 48

**[ 3 ]**

“இது பிறிதொரு கதை” என்று சண்டன் சொன்னான். அவனுடன் பைலனும் சுமந்துவும் ஜைமினியும் நடந்தனர். “இக்கதையை காமரூபத்துப் பாணர் சொல்லக்கேட்டேன். அவர்களிடம் இக்கதையே மூன்று வெவ்வேறு பாணர்பாடலாகத் திகழ்கிறது.

இதில் அர்ஜுனனை அவர்கள் மேற்குப்பாலையில் கண்டெடுத்த கதை சொல்லப்படுகிறது.” பைலன் புன்னகைத்து “நூறு இளையபாண்டவர்கள் நூற்றுக்கணக்கான கதைகள்” என்றான். “மாமனிதர்களை மொழி ஆடிகள்போல சூழ்ந்திருக்கிறது. அவர்கள் முடிவிலாது பெருகிக்கொண்டிருப்பார்கள்” என்றான் ஜைமினி.

“அவரை வருணனின் ஏழு மயனீர்கள் வெள்ளாடுகளின் வடிவில் வந்து தங்கள் மேல் ஏற்றிக்கொண்டு பாலையில் வந்த காப்பிரி வணிகர்களிடம் அளித்ததாக ஒரு கதை சொல்கிறது. ஏழு பாலைநிலத்து ஓநாய்கள் அவை என இன்னொரு கதை. அவருக்கு மேல் இந்திரனின் முகிலொன்று குடைபிடித்தது என்றும் அதன்கீழ் அவர் அரசன் என வந்தார் என்றும் பிறிதொரு கதை.”

“எந்தக் கதையை நீங்கள் சொல்வீர்கள்?” என்றான் ஜைமினி. “அன்று நான் சொல்வதற்கு பொருந்திவரும் கதையை. எல்லாக் கதைகளும் நிகரான உண்மையும் பொய்யும்தான்” என்றான் சண்டன். “அவரை காப்பிரிகள் கண்டெடுத்தனர் என்பது மட்டும் மாறுவதில்லை. அதை நானும் மாற்றுவதில்லை.” பைலன் “சொல்க!” என்றான். சண்டன் அர்ஜுனன் மீண்டு வந்து கிழக்கை வென்ற கதையை சொல்லலானான். “ஆற்றுவதற்கு கடமைகள் கொண்ட உயிரை அணைத்துக் காக்கும் அன்னையாகிறது ஊழ். அதுவே பனியில் போர்வையும் கடலில் புணையும் பாலையில் நிழலுமென்றாகிறது.”

மேற்குப் பாலைநிலத்தில் சிறியகண் என்று அழைக்கப்பட்ட ஊற்றொன்றின் கரையிலமைந்த சிற்றூரின் மதுவிடுதியில் பெயரறியா பித்தன் என எட்டு மாதம்

இருந்தவன் அர்ஜுனன் என எவரும் அறிந்திருக்கவில்லை. அவன் உடலில் இருந்த அடையாளங்களைப் பார்த்து அறியும் எவரும் அவனை காணவில்லை. அவனை அங்கே கொண்டுசேர்த்தவர்கள் தெற்கே காப்பிரிநிலம் நோக்கி சென்றுகொண்டிருந்த வணிகர்குழு. அவர்கள் அவனை அங்கே விட்டுவிட்டுச் சென்றபோது அவர்களையும் அவன் அறியவில்லை.

இறந்தவர்களின் நிலத்தருகே உப்புவளையத்திற்கு வெளியே அவன் விழுந்துகிடந்ததை காப்பிரிவணிகர்கள் தொலைவிலேயே கண்டனர். சடலமென்று எண்ணி அருகே வந்தபோதுதான் மூச்சு ஓடிக்கொண்டிருப்பதை விலாவசைவு காட்டியது. அவனை எழுப்பி நீர் அளித்து உயிர்மீட்டனர். "இப்பாலையில் உயிருடன் ஒருவனை மீட்பது இதுவே முதல்முறை" என்றான் அவனைத் தூக்கிய ஏவலன். அவன் நாவில் நீரைத் தடவினர். துளித்துளியாக அவன் உள்நாக்கில் நீரை விட்டனர். ஒருதுளி வெல்லம் உள்ளே சென்றதும் அவன் உடலில் உயிர் பற்றிக்கொள்ள மெல்ல முனகினான்.

ஆனால் அவன் உளம் மீளவில்லை. சொல்கேட்டுப் பொருளுணரவோ விழிநோக்கி முகமறியவோ இயலாதவனாக இருந்தான். அவன் கைகளும் கால்களும் இழுத்துக்கொண்டிருந்தன. தலை ஆடியபடியே இருந்தது. நெடுநேரம் விழிகள் இமைப்பின்றி மீன்நோக்குடன் வெறித்தன. சட்டென்று உதைபட்டவன்போல உடல் அதிர அந்த அசைவின்மையிலிருந்து விடுபட்டபோது அவன் உள்ளூறுப்பில் வலிகொண்டவன்போல உடல்முறுக்கி மெல்ல முனகினான். அவன் உதடுகள் ஓசையின்றி எதையோ சொல்லிக்கொண்டே

இருந்தன. எவரோ அவனிடம் பேசிக்கொண்டே இருப்பதுபோல அவன் உடலெங்கும் செவிகள் கூர்ந்திருந்தன.

அவர்களிடம் நீர் சிறிதே இருந்தது. உணவு முற்றிலும் தீர்ந்துவிட்டது. எதிர்பாராத புழுதிப்புயலால் வழிதவறி நாற்பதுநாட்கள் அலைந்து மீண்டும் தடம்தேடி கண்டடைந்திருந்தார்கள். பொதிவிலங்குகளில் ஒன்று இறந்துவிட்டிருந்தது. இருவர் கடும் நோயிலிருந்தனர். ஆகவே அவனை விட்டுவிட்டுச் செல்லலாம் என்று காப்பிரிகளின் இளந்தலைவன் சொன்னான். "இவன் நம் அனைவரையும் கொல்லும்பொருட்டு பாலையின் தெய்வங்களால் அனுப்பப்பட்டவனாக இருக்கலாம். செம்புலத்து நாகங்கள் இவன் உரு கொண்டிருக்கக்கூடும்" என்றான். "நம் உறுதியை சீண்டிநோக்குகிறது இந்தத் தெய்வம். நாம் இறந்தபின் இங்கு எழுந்துநின்று நகைக்கும் இது."

அவன் முதிய தந்தை உடனிருந்தார். சுருக்கங்கள் மண்டிய கனிய முகம் காற்றிலாடும் சிலந்திவலையென நெளிய அர்ஜுனனை கூர்ந்து நோக்கினார். "மைந்தா, இறந்தவர்களின் கடல் இது. இவ்வழியே பலநாட்களாக வணிகக்குழுக்களேதும் சென்றதில்லை என்று காட்டுகின்றது பாதைக்குறிகள். இவன் எப்படி உயிர் வாழ்ந்தான்? எங்ஙனம் இந்த தனிமையைத் தாங்கிக்கடந்தான்? இந்த வறுநிலத்தை நூறுதலைமுறைகளாக அறிந்துள்ள நாம்கூட இங்கே இப்படி உயிருடன் எஞ்சுவது இயலாது" என்றார். "தெய்வங்கள் இவனை துணைத்துள்ளன" என்று மைந்தன் சொன்னான். "நம்மை பலிகொள்ள எண்ணும் தெய்வங்கள் அவை."

"இல்லை. இதுநாள்வரை நானறிந்த உண்மைகளில் முதன்மையானது ஒன்றே. பாலையில் தெரியும் கானல்நீர்

போன்றதே தெய்வங்களின் தோற்றமும்” என்றார் தந்தை. “ஒன்று மட்டும் உறுதி. குன்றா உளவல்லமைகொண்ட மாமனிதன் இவன். இவன் யாரென்று நாமறியோம். எவராயினும் வென்றுசெல்பவன். மண்ணில் உப்பென என்றுமிருப்பவன். இவன் நிறம் அங்கே கிழக்கே உலகின் மையமெனத் திகழும் பாரதவர்ஷத்தைச் சார்ந்தவன் என்று காட்டுகிறது. முனிவர்களும் அறிஞர்களும் வீரர்களும் செறிந்த நிலம் அது என்று கதைகளினூடாக நாம் அறிவோம்.”

அவன் உடலில் இருந்த அடையாளங்களை அவர் நோக்கினார். “மின்கதிர் இது. இது தாமரை. இது மதுக்கலமென நினைக்கிறேன். அரசகுடியினன் போலும். எளியவர்களுக்கு இக்குறிகள் பொறிக்கப்படுவதில்லை. இவனை நாம் மீட்டாகவேண்டும்.” மைந்தன் சினத்துடன் “தெய்வங்கள் நம்மை நோக்குகின்றன” என்றான். அவர் சிரித்து “ஆம், நாம் என்ன செய்கிறோம் என்று அவை நோக்குகின்றன போலும்” என்றார். “என் ஆணை இது, இவன் உடனிருப்பான்.” மைந்தன் தனக்குள் “நாம் இவனுடன் மடிவோம், அதுவே நிகழவிருக்கிறது” என்றான்.

அவர்கள் இரண்டு நாட்கள் மணல்வெளியில் நடந்தனர். நீரும் முழுமையாக தீர்ந்தது. தோல்பைகளும் குடுவைகளும் உலரலாகாது என்பதற்காக எஞ்சவைக்கப்பட்டிருந்த இறுதித்துளி நீரையும் நாவில் சொட்டிக்கொண்டனர். விடாய் தொண்டையிலிருந்து உடலுக்குப்பரவி உடலும் எரிந்தணைந்தபின் எண்ணமாக எஞ்சி பின் மெல்லிய புகைப்படலம்போல உள்ளம் உடலை உணரும் நிலை எழுந்தது. நிற்கிறோமா செல்கிறோமா என அவர்கள்

அறியவில்லை. கேட்கும் சொற்களும் எண்ணும் சொற்களும் இடைகலந்த மொழி ஒன்று ஓடிக்கொண்டிருந்தது.

“வழிக்குறிப்புகளின்படி ஓநாய்முகம்கொண்ட பாறை வருவது வரை நீரோ உணவோ இல்லை. அது நெடுந்தொலைவுக்கு கண்ணில்படவுமில்லை” என்றான் இளையவன். தந்தை ஒன்றும் சொல்லவில்லை. அவரது அமைதியால் சீண்டப்பட்டு “நாம் இன்று மாலைக்குள் நீரை கண்டடையவில்லை என்றால் இறப்போம். ஐயமே வேண்டியதில்லை” என்றான் மைந்தன். அதற்கும் அவர் ஒன்றும் சொல்லவில்லை. அக்குழுவிலிருந்த அனைவரும் பழுத்து சொல்மடிந்த விழிகளால் அர்ஜுனனை நோக்கிக்கொண்டிருந்தார்கள். அவனை அவர்கள் திரைமறைவுக்குள்தான் பார்த்தனர். சிலர் அவன் யார் என எண்ணினர். சிலர் மீண்டும் மீண்டும் அவனை கண்டுபிடித்தனர்.

ஒட்டகைகள்தான் அவர்களை கொண்டுசென்றன. அவற்றின் கால்களில் வாழ்ந்த தெய்வங்கள் பாலையை அறிந்திருந்தன. அவர்கள் பிளவுபட்டு நின்ற மணற்பாறை ஒன்றை அடைந்தபோது இடியோசை கேட்டது. “புயல்” என்றான் மைந்தன். “மணற்புயல்தான் அது.” தந்தை கைகளை விழிமேல் வைத்து நோக்கி “இடிபோல் ஒலிக்கிறது” என்றார். “இடியா?” என அவன் இகழ்ச்சியுடன் கேட்டான். மீண்டும் அவ்வொலி எழுந்தபோது அவன் “மலைப்பாறைகள் சரிகின்றன” என்றான். தந்தை “இப்பாதையில் பெரிய மலைகளென ஏதுமில்லை” என்றார். தென்கிழக்குச் சரிவில் அவர்கள் கரிய தீற்றலை கண்டார்கள். “அது மணற்பெருக்கே” என்றான் மைந்தன். “மணலெழுச்சி செந்நிறம் கொண்டிருக்கும்” என்றார் தந்தை. அந்நிழல் உறுமியது. அதன் சுருள்கள் தெரியத்தொடங்கின.

“என்ன சொல்கிறீர்கள்? முகில்கறுத்து மழையெழுகிறதென்றா?” என்றான் மைந்தன் சினத்துடன். தந்தை “ஏன் வரக்கூடாது? இப்பாலையில் இரண்டு நாட்கள் முகில்நின்று மழைபொழியக் கண்டிருக்கிறேன், எழுபத்திரண்டு ஆண்டுகளுக்கு முன்பு” என்றார். இடியோசை எழுந்தபோது அவர்கள் ஒட்டகைகளை இழுத்து நிறுத்திவிட்டு நோக்கினர். மின்னல் ஒன்று நெளிந்து அணைந்தது. மீண்டும் முகில் முழங்கியது. “மழையேதான்” என்றார் தந்தை. “ஆம்” என்றான் மைந்தன். சட்டென்று அவன் உடைந்த குரலில் “தெய்வங்களே” என்று கூவி அழத்தொடங்கினான்.



அனைவரும் கைகளை வானில்நீட்டி கதறி அழுதனர். முதியவர் திரும்பி பாலையில் கண்டெடுக்கப்பட்டவனை பார்த்தார். அவன் மிக அண்மையில் இருப்பவரிடம் பேசுபவன்போல ஏதோ சொல்லிக்கொண்டிருந்தான். குளிர்ந்த காற்று வந்து ஆடைகளை அசைத்தது. மண்வெந்த மணம் எழுந்தது. புழுதிக்காற்றில் நீராவியை உணரமுடிந்தது. நீராவிக்காக அவர்கள் ஓணான்களைப்போல நாநீட்டினர். திரையை இழுத்து கொண்டுவருவதுபோல காற்று

வான்முகில்பரப்பை தலைக்குமேல் கொண்டுவந்து நிறைத்தது. விழியிருட்ட பாலையின் அலைகளின் வளைவுகள் மட்டும் மீனின் தோல்பரப்பென மின்னின.

மின்னல்கள் வாள்வீச்சுகளெனச் சுழல இடி உறுமிக்கொண்டே இருந்தது. மிகத்தொலைவில் சருகுகள் நொறுங்குவது போன்ற ஒலி எழுந்தது. சிறிய மான்கூட்டம் ஒன்று அணுகுவது போல. “மழை!” என்று ஒருவன் கூவினான். “மழை!” என குரல்கள் எழுந்தன. கற்களைப்போல நீர்த்துளிகள் வந்து மேலே விழ இருவர் நிலைதடுமாறி கீழே விழுந்தனர். நீர்த்துளி விழுந்ததும் வறுகலம் என வெம்மைகொண்டிருந்த பாறைப்பரப்புகள் நாகக்கூட்டங்கள்போல சீறின.

மண்ணில் விழுந்த நீர்த்துளிகள் எண்ணையில் மாவுருளை விழுந்து அப்பமாவதுபோல சீறி சுருண்டு உருண்டு எழுந்தன. அவர்கள் முகத்தில் தோளில் தலையிலென விழுந்து சிலகணங்களில் முழுமையாக மூடிக்கொண்டது மழை. சுட்டுப்பழுத்த பாறைகள் மணியோசையுடன் வெடித்தன. கண்மயக்குபோல பாலையின் நிறம் மாறியது. துடிக்கும் தசைப்பரப்பாக அது ஆகியது.

அவர்கள் நீர்ப்புழுக்களைப்போல மழையில் உடலால் திளைத்தனர். கைகளை விரித்து நீரைப்பற்றி அள்ளிஅள்ளிக் குடித்தனர். பின்னர் தன்னிலை உணர்ந்து தோற்பரப்புகளை விரித்து மழைநீரை அதில் பிடித்து தொகுத்து அனைத்துக் குடுவைகளையும் நிறைத்துக்கொண்டனர். பொழிந்து குளிர்ந்து மெல்ல நீர்ப்பொழிவு நின்றது. காற்று பறக்கும் ஊசிகளென நீர்த்துளிகளை அள்ளிச் சாய்த்து கொண்டுசென்றது. பின் நீராவியும் வெந்த மண்ணின் மணமும் நிறைந்த குளிர்காற்று அவர்களை சிலிர்க்கச்செய்தது. நீர் முழுமையாக மண்ணுக்குள்

மறைய அப்பம் வெந்து பதமாவதுபோல அதில் குமிழிவெடித்த சிறிய துளைகள் வழியாக புகைபோல ஆவி எழுந்தது.

“இந்த மழை இவர் ஒருவருக்காக” என்றார் முதியவர். “ஆம்” என்றான் ஒரு ஏவலன். “அவர் மார்பில் இருந்த அதே மின்படையை நான் வானிலும் கண்டேன்.” இன்னொருவன் “இதோ, கலங்கள் நிறைந்துள்ளன நமக்கு” என்றான். இளையவன் தலைகுனிந்து அழுதுகொண்டே இருந்தான். பாறைகளிலிருந்து புகையென நீராவி எழுந்தது. வான் முகில்உடைந்து வெளித்து ஒளியெழுந்தபோது அது வெண்ணிற இறகுபோல தெரிந்தது. மழை பெற்ற சிறுகுருவிகள் சிறகுகளைக் குடைந்தபடி வானிலெழுந்து சுழன்று சுழன்றமைந்தன.

அனைத்தும் நோக்கியிருக்கவே மாறிவிட்டிருந்தது. புன்னகையுடன் ஒளிகொண்டிருந்தன காற்று கரைத்த பாறைகள். செம்பட்டு என மென்மைகொண்டிருந்தது மண். வானம் இனிய தேன்பரப்பாக மங்கித்தெரிந்தது. காற்றில் மழையின் நினைவு எஞ்சியிருந்தது. அவர்கள் அம்மழையைப்பற்றி தங்களுக்கு அணுக்கமானவர்களிடம் சொல்வதைப்பற்றி எண்ணினர். சொல்லத் தொடங்கினர். அவர்களுடன் அங்கிருந்தனர். மீண்டு வந்து கண்கலங்கி அழுதனர்.

தொலைவில் அவர்கள் புகைஎழுவதைக் கண்டனர். “ஏதோ எரிகிறது” என்றான் இளையவன். முதியவர் சிரிக்கத் தொடங்கினார். அவன் கூர்ந்து நோக்கி “மணற்காற்றா?” என்றான். அதற்குள் இன்னொருவன் கண்டுகொண்டான். “ஈசல்! ஈசல்” என்று கூவினான். அவர்கள் அதை நோக்கி ஓடினர். அவர்களைச் சூழ்ந்திருந்த நிலத்தில் திறந்த நூற்றுக்கணக்கான

துளைகளில் இருந்து ஈசல்கள் எழுந்து காற்றை நிறைத்தன. குற்றிலைச் சருகுகள் காற்றில் சுழன்றதுபோல. நீர்நிறம் மின்னும் திரைபோல. விரைவிலேயே அவர்கள் ஈசல்திரைக்குள் திசையழிந்து கூச்சலிட்டனர். முற்றாக வானையே மறைத்தது அது.

ஆடைகளை வீசி வீசி ஈசல்களின் சிறகுகளை உதிரச்செய்து மண்ணில் வீழ்த்தினர். விரித்த தோற்பரப்பில் விழுந்துகுவிந்த ஈசல்களை அள்ளி அப்படியே வாயிலிட்டு மென்று உண்டனர். “இதுதான் தெய்வங்களின் மாயம். இங்கு இதில் நின்றுவிட்டால் நாம் அழிந்தோம்” என்றார் முதியவர். “இவை வேறு உயிர்களுக்கான உணவு. நமக்கு போதுமான அளவு கிடைத்துவிட்டது. கிளம்புவோம்.” ஈசல்களைத் தேடி பறவைகள் வரத்தொடங்கின. வானிலிருந்து பிதுங்கி துளித்து மழையெனப் பெய்பவைபோல சிறுபறவைகள் வந்தன. காற்றில் தாவித்தாவி அவை ஈசல்களை உண்டன. ஈசல்கள் அவற்றுக்கு தங்களை உவந்தளிப்பதாகத் தோன்றியது.

ஈசல்களை வறுத்து உண்டபடி நான்கு நாட்கள் நடந்து அவர்கள் சிறியகண் என்று அழைக்கப்பட்ட விடுதி இருந்த சிற்றூரை அடைந்தனர். அங்கே இருநாட்கள் தங்கி இளைப்பாறி உணவும் நீரும் கொண்டபின் அவனை அங்கேயே விட்டுவிட்டு சென்றனர். “இவரது பாதை கிழக்கு நோக்கி. நாம் இவரை கொண்டுசெல்வது முறையல்ல. கிழக்கு வணிகர்கள் எவரேனும் இங்கு வரக்கூடும். இவர் உடலில் உள்ள அடையாளங்களை அறியக்கூடும்” என்றார் முதியவர். விடுதித்தலைவனிடம் “இடிமின்னல்களை ஆளும் தெய்வத்தின் அன்புக்குரியவர் இவர். இவர் இங்கிருக்கட்டும். உங்களுக்கு நல்லூழ் தொடரும்” என்றபின் அவர்கள் பிரிந்துசென்றனர்.

விடுதியில் ஒருவேளைமட்டும் உணவுண்டு பாலையிலும் முட்புதர்காட்டிலும் அலைந்து முற்றிலும் தனித்து அவன் தங்கியிருந்தான். அவன் வருவதற்கு முன் பெய்த மழையால் அவ்வூரே செழித்திருந்தது. கலங்கள் முழுக்க ஈசல் நிறைந்திருந்தது. மலைச்சரிவில் நின்றிருந்த ஈச்சைமரங்கள் சிலநாட்களிலேயே பாளை நீண்டு இன்மதுவை சுரக்கலாயின. அவர்கள் விதைத்து மறந்திருந்த மணிப்புற்கள் முளைவிட்டெழுந்தன. மேலுமொரு மழைபெய்து அவை மணிகொள்ளுமென உறுதி எழுந்தது. வரப்போகும் மணிகளின் நினைவே அவர்களை களிவெறியிலாழ்த்தியது. அவர்கள் இரவும் பகலும் பாடிக்கொண்டிருந்தனர்.

மழைமைந்தன் என அவர்கள் அவனுக்கு பெயரிட்டனர். அவனுக்கு ஊனுணவும் கள்ளும் மாறிமாறி கொண்டு கொடுத்தனர். அவனிடம் தங்கள் மொழியில் மாறிமாறி உரையாடினர். அவன் அவர்களின் உதடசைவுகளை நோக்கிக்கொண்டிருந்தான். அவர்களின் குழந்தைகளை நோக்கி சிரித்தான். ஏனென்றறியாமலேயே அங்குள்ள அனைத்து மகளிரும் அவனை விரும்பினர். அவர்கள் சமைத்த உணவில் முதல்பங்கை அவனுக்கென எடுத்துவைத்தனர். அவனுக்கு உணவளிக்க அவர்களிடையே எப்போதும் பூசல் இருந்தது. அவனுக்கு உணவு அளிக்க அவர்கள் முறைவகுத்தனர். உணவளித்த பெண்கள் எண்ணி எண்ணி சிரித்து முகம் சிவந்தனர்.

விரைவிலேயே அவன் தெய்வங்களுக்கு நிகரான வில்லவன் என அவர்கள் கண்டுகொண்டனர். புல்பறித்து வீசி பறக்கும் ஈயை வீழ்த்தும் ஒருவனை அவர்கள் கதைகளிலும் கண்டிருக்கவில்லை. வில்தேர்ந்தவனுக்கு கைகளே

வில்லென்றாகுமென்று அவர்கள் கண்டனர். பின்னர் அவனை அவர்கள் தெய்வமென வழிபடலாயினர். குலத்தலைவன் அவனுக்கு ஏழு பெண்களை பரிசளித்தான். துணையிழந்து வாழ்ந்த அப்பெண்கள் அம்மாதமே கருவுற்றனர். ஏழு வில்வீரர்களால் அக்குடி பெருகி நிலம் வென்று அரசென்று ஆகும் என்றார் அங்கு வந்து தங்கிச்சென்ற தொல்குடிப்பாடகர்.

அங்கே அடுத்த பீதர்குழு வந்தபோது அவர்களால் உடல்கொண்ட தெய்வமெனக் கருதப்பட்ட அவன் வில்திறனைப்பற்றி விடுதித்தலைவன் சொன்னான். அவர்கள் அதை வெறும்சொல்லென்றே முதலில் கொண்டனர். “அதோ, அந்த ஒட்டடையின் ஒரு சரடை மட்டும் அம்புவிட்டு அறுக்கச்சொல் உன் தெய்வத்திடம்” என்றான் பீதர்தலைவன். வெளியே இளமைந்தருடன் விளையாடிக்கொண்டிருந்த அர்ஜுனனிடம் சென்று மைந்தர் அதைச் சொல்லி அவன் ஆடையைப்பற்றி இழுத்துவந்தனர். பீடம் மீதிருந்த ஒரு மெல்லிய துரும்பை எடுத்து சுண்டி ஒட்டடையின் ஒரு சரடை மட்டும் அவன் அறுத்தான். மைந்தர் கைகொட்டி குதித்து மகிழ மேலும் சரடுகளை அறுத்தான். வலைவடிவு குலையாமல் அது மெல்லிய புகைக்கீற்றென விழுந்து உணவுமேடைமேல் படிந்தது. பீதர்கள் அஞ்சி எழுந்து வணங்கும் விழிகளுடன் நின்றனர்.

அந்தப் பீதர்குழுவுடன் அவன் அயிலம் என்னும் துறைநகரை சென்றடைந்தான். அச்சிற்றூர் மக்கள் கண்ணீருடன் அவனை தங்கள் பாலையின் எல்லைவரை வந்து வழியனுப்பினர். அவன் சென்றுவிடுவான் என அவர்கள் அறிந்திருந்தனர். ஆனால் செல்வதை எதிர்கொள்ள முடியவில்லை. அவன் கருவைச் சுமந்திருந்த ஏழு பெண்களும் தங்கள் குடில்களின்

இருளுக்குள் உடல்சுருட்டிப் படுத்திருந்தனர். வெளியே கேட்கும் ஒவ்வொரு ஒலிக்கும் அவர்கள் உடல் அதிர்ந்துகொண்டிருந்தது. குழந்தைகள் ஓடிவந்து அவன் செல்லும் செய்தியை சொல்லிக்கொண்டிருந்தனர். அவர்களைச் சூழ்ந்திருந்த இருட்டு மெல்ல நெளிந்தது.

ஒட்டகைகள் பொதிகட்டி எழுந்து காலுதற காவலர் படைக்கலங்களை எடுத்துக்கொள்ள ஏவலர் நீர்க்குடுவைகளை சீர்செய்ய அங்கிருந்து கிளம்பும் அன்று காலை அவனை பீதர்கள் தங்களுடன் அழைத்தபோது விழிவிரிய வெறுமனே நோக்கிக்கொண்டிருந்தான். “தொலைவில்... கிழக்கே செல்கிறோம். வருகிறீர்களா, வில்லவரே?” என்றான் பீதர் தலைவன். ஆம் என அவன் தலையசைத்தான். அவன் கிளம்பும் செய்தியறிந்ததும் ஊரே சோர்ந்து ஓசையழிந்தது. அவன் நடந்த பாதையில் அவர்கள் கால்வைக்காது அருகே சென்றனர். அவன் ஒருமுறைகூட திரும்பி நோக்கவில்லை. செந்நில மடிப்பில் அவன் வணிகர்குழுவுடன் மூழ்கி மறைந்தான். புழுதிமட்டும் வானில் மெல்ல கரைந்தது.

இருளறைகளிலிருந்து பெண்கள் எழுந்தோடி வந்து கைநீட்டி கதறினர். அவன் நடந்துசென்ற பாதையின் புழுதியை அள்ளி தங்கள் நெஞ்சிலும் முகத்திலும் பூசிக்கொண்டு கண்ணீர்விட்டனர். அவர்களை பிறர் தூக்கி வீடுகளுக்கு கொண்டுசென்றனர். மது அளித்து மயங்கச்செய்தனர். விழித்தெழுந்தபோதெல்லாம் அவர்கள் நினைவுகூர்ந்து அழுதுகொண்டிருந்தனர். நாட்கள் செல்லச்செல்ல அவ்வழுகை இறுகி ஆழ்ந்த அமைதியாகியது.

பின்னர் அவர்கள் ஒவ்வொருவராக ஏழு மைந்தர்களை பெற்றனர். கரிய உடல்கொண்டிருந்த மைந்தரின் கண்கள்

புதுச்சிப்பியின் ஒளிகொண்டிருந்தன. அவற்றை குனிந்து நோக்கியபோது அவர்கள் உடல்சிலிர்த்து அழுதனர். இறுக்கமெல்லாம் உருகி அழுகையாகப் பெருகியது. அம்மைந்தர்களை கைநீட்டித் தொடவும் அவர்கள் அஞ்சினர். அவர்களுக்கு இடிமழையின் ஏழு பெயர்கள் சூட்டப்பட்டன. அன்னையர் அப்பெயரைச் சொல்லி அழைக்க அஞ்சினர். கிழக்கின் மைந்தர்கள் என அவர்கள் அன்னையரால் அழைக்கப்பட்டனர்.

**[ 4 ]**

அர்ஜுனன் பீதர்களின் கலத்தில் மேற்குப் பாலைநிலத்தின் முனம்பிலிருந்த அயிலம் என்னும் துறைநகரிலிருந்து கிளம்பி எட்டுமாதங்கள் பயணம் செய்து பாரதவர்ஷத்தை குமரிமுனம்பு வழியாக சுற்றிக்கொண்டு கிழக்கே சென்று புவியில் இந்திரன் வந்திறங்கும் இடமென்று தொல்கதைகளில் சொல்லப்பட்டிருந்த இந்திரகீலம் என்னும் பறக்கும் மலையை சென்றடைந்தான். முற்றிலும் தன்னுடலுக்குள் தனித்து அடைபட்டவனாக இருந்தான். அடியிலிவரை ஆழம்கொண்ட சிறுதுளைகள் போலிருந்தன அவன் கண்கள். அவன் சொற்கள் மொழியென உருக்கொள்ளா ஒலிகளென்றிருந்தன.

யவன, காப்பிரி, சோனகக் கலங்களுக்கு நிகராக பீதர்நாட்டுக் கலங்கள் நின்றிருந்த அயிலம் என்னும் துறைமுகத்தின் பாலைநிலவிரிவு உயரமற்ற செம்மண் வீடுகளாலும் வீடுகளைவிடப் பெரிதாக தோலுறையால் பொதிந்து கட்டப்பட்ட பண்டப்பொதிகளாலும் நிறைந்திருந்தது. எட்டு நீள்சாலைகள் வந்து அவ்விரிவில் இணைந்தன. அவற்றில் நான்கில் பாலைவணிகர்களின் ஒட்டகைகளின் நிரை

பொதிகளுடன் வந்து சேர்ந்தன. அப்பொதிகளை துலாக்கள் தூக்கி நீருள் நின்றாடிய கலங்களில் ஏற்றின. மறுபக்கம் கலங்களிலிருந்து துலாக்கள் எடுத்துச் சுழற்றிவைத்த பொதிகள் நிலத்தில் புழுதியுடன் அமைந்தன.

பொதி ஏற்றப்பட்ட ஒட்டகைநிரை அங்கிருந்து கிளம்பி பாலைப்பாதையில் புழுதிச்சிறகு சூடிச் சென்றது. பொன்னிறப் புழுதியால் அங்கிருந்த அனைத்தும் மூடப்பட்டிருந்தன. கலங்கல்நீரில் மீன்கள்போல பலவண்ண ஆடையணிந்திருந்த வணிகரும் ஏவலரும் அதிலிருந்து தோன்றி அதில் மூழ்கி மறைந்தனர். கடலோசையும் சிறகுகுவித்து
அணையும் கலங்களும் சிறகு விரித்து அலைகளில் ஏறிக்கொள்ளும் கலங்களும் எழுப்பும் கொம்பொலியும் ஏவலரும் விலங்குகளும் எழுப்பும் ஓசைகளும் வணிகர்களின் ஆணைக்கூச்சல்களும் திரைக்கு அப்பால் தொடங்கவிருக்கும் நாடகம் ஒலிப்பதுபோல புழுதிக்குள் இருந்து எழுந்தன.

அங்கிருந்த சிறுமண்குடில் ஒன்றில் மேலும் எட்டு மாதம் அவன் தங்கியிருந்தான். அவன் வில்திறன் அதற்குள் அனைவராலும் அறியப்பட்டது. அவனைத் தங்கள் வணிகக்குழுவுடன் சேர்த்துக்கொள்ள அனைவரும் விரும்பினர். அதற்காக பீதர்நாட்டு வணிகர்களிடம் அவர்கள் பொருள் பேசினர். நாள்தோறும் விலையாடியும் அவன் மதிப்பு நிறுத்தப்படவில்லை. அலைகளை நோக்கியபடி துறைமேடையில் அசைவிலாது அமர்ந்திருந்தான். பாலையில் புழுதிக்காற்று சுருள்வதைக் கண்டும் இருந்த இடம்விட்டு நகராதிருந்தான். ஒரு சொல்லேனும் அவன் உரைக்கவில்லை. ஒருவேளை மட்டும் ஊனுணவு உண்டான்.

கடல்நாரைகளைப்போல பாறைகளிலும் கலங்களிலும் வடப்பின்னல்களிலும் தாவிச்செல்லும் உடல்கொண்டிருந்தான்.

அவன் உடலில் இருந்த குலக்குறிகளை நோக்க நாள்தோறும் வணிகர் வந்தனர். “அரசகுலத்தான், இடிமின்னலை ஆளும் தெய்வங்களின் மைந்தன்” என்று சொல்லிக்கொண்டனர். கீழ்த்திசையிலிருந்து வந்த பெருங்கலம் ஒன்றின் தலைவர் அவனை பார்க்க வந்தார். பாறைப்பாசி என தொங்கும் நரைத்த தாடியும் நீர்ப்பைபோல தூங்கிய இமைகளும் கொண்டவர். அவனை நோக்கியதுமே அருகே வந்து அவன் உடலில் உள்ள குலக்குறிகளை நோக்கினார். திரும்பி அருகே நின்ற பீதர்நாட்டு வணிகனிடம் “உனக்கு வேண்டியதென்ன? இவரை நான் அழைத்துச்செல்கிறேன்” என்றார்.

அவர் அரசகுலத்தவர் என அறிந்திருந்த வணிகன் மும்முறை வணங்கி அழைத்துவந்தபின் வணங்கிய தோற்றத்திலேயே நின்றிருந்தான். “தாங்கள் என்னிடம் பேசியதே என் நல்லூழ். அதற்குமேல் எதுவும் வேண்டேன்” என்றான். “நன்று, உன் பெயர் நினைவில்கொள்ளப்படும்” என்றபின் அவன் செல்லலாம் என்று கையசைத்தார். அவன் விலகிச் சென்றபின் அர்ஜுனனிடம் குனிந்து “இளைய பாண்டவருக்கு என் வணக்கம். என் நாவாய் தங்கள் காலடிகளுக்காக காத்திருக்கிறது” என்றார். அர்ஜுனன் விழிகளில் ஒரு சிறு அசைவு வந்து மறைந்தது.

“தங்கள் பயணம் கீழ்த்திசை நோக்கியே இருக்குமென எண்ணுகிறேன். நீங்கள் திசைவெல்ல மேற்கே வந்திருப்பதை கதைகள் வழியாக அறிந்திருந்தேன்” என்றார் முதிய வணிகர். “பீதர்நிலத்து தொன்மையான அரசகுலமான நூவா குடியைச்சேர்ந்த என் பெயர் வீ. உங்களுக்குப் பணிசெய்ய காத்திருக்கிறேன்.” அர்ஜுனன் “ஆம், நான் கிழக்கே

செல்லவேண்டும்” என்றான். “நீங்கள் நெறிவாழும் மேற்கை அறிந்துவிட்டீர்கள். மீறலின் கிழக்கை அறிந்தாகவேண்டும். என்னுடன் வருக! என் கலம் நாளைமறுநாள் கிளம்புகிறது” என்றார் வீ. அர்ஜுனன் எழுந்து “கிளம்புவோம்” என்றான். அங்கிருந்தே அதுவரை உடன்வந்த எவரையும் திரும்பிநோக்காமல் சென்று அக்கலத்தில் ஏறிக்கொண்டான்.

“எங்கள் மெய்மையின்படி நான்கு அசுரர்களால் பேணப்படுகின்றன திசைகள். செங்குருதிப் பறவை வடிவம் கொண்டது தெற்கின் தெய்வமாகிய அனல். வெள்ளைப் புலியாக மேற்கை ஆள்பவர் உலோகங்களின் தலைவர். கரிய ஆமை வடிவில் நீர்த்தெய்வம் வடக்கை ஆள்கிறது. பறக்கும் நாகத்தின் வடிவம்கொண்ட காடுகளின் தெய்வத்தால் ஆளப்படுவது கிழக்கு” என்றார் வீ. “கிழக்கின் தலைவனுக்குரியது என்று சொல்லப்படும் பொன்மலை ஒன்று அங்கே உள்ளது. அதற்குமேல் பறக்கும்மலை ஒன்றுள்ளது. நான் அதை கண்ணால் கண்டிருக்கிறேன். அதன்பெயர் இந்திரகீலம். அங்குதான் உங்கள் தெய்வமாகிய இந்திரன் வாழ்கிறான் என்கிறார்கள்.”

“வெண்முகில் சிறகுகளுடன் விண்ணில் நிலம்தொடாது பறந்துநிற்கும் மலை அது. அதிலிழிந்து பொழியும் அருவிகள் கீழே அலையடிக்கும் கடலில் வந்துவிழுகின்றன. அங்கே செல்ல பறவைகளாலும் பறக்கும் தெய்வங்களாலும் மட்டுமே முடியும். முகிலின் மேல் எப்போதும் மழைவில் வளைந்துநிற்கும் அம்மலையைப் பற்றி இளமையிலேயே கேள்விப்பட்டிருக்கிறேன். அதை எவரும் கண்டதில்லை. அங்கே கலங்கள் செல்லமுடியாது. நீருக்குள் இருந்து மலைவடிவ ஆமைகள் எழுந்துவந்து கலங்களைப் புரட்டி

மூழ்கடிக்கும். பாறைமுகடுகளாகத் தெரிபவை மூழ்கிக்கிடக்கும் கொலைமுதலைகளின் செதில்கள். கலங்கள் மிகத்தொலைவிலேயே திரும்பிவிடும்.”

“என் முதிரா இளமையில் எந்தையுடன் கடலோடலானேன். அந்நாளில் ஒருமுறை எங்கள் கலம் புயலால் அடித்துச்செல்லப்பட்டு அப்பாறைகள் மேல் மோதியது. சிம்புகளாகச் சிதறிய கலத்திலிருந்து நான் மட்டும் தூக்கிவீசப்பட்டேன். பாறை ஒன்றில் பற்றிக்கொண்டு அலைக்கொந்தளிப்பை கடந்தேன். என் கலத்தில் வந்தவர்களில் எவரும் உயிருடன் எஞ்சவில்லை. நான் மட்டும் பாறைகளைத் தொற்றி மேலேறிச் சென்றேன். மேலும் மேலுமென மலைகள் எழுந்துவந்தன. கருங்கற்பாறைகள் செறிந்த மலைகள் அல்ல. சுண்ணப்பாறையாலான மலைகள். பச்சைமரங்களும் செடிகளும் அடர்ந்து வெட்டிஎடுத்து வைக்கப்பட்ட காட்டின் துண்டு என்றே தோன்றுபவை.”

“அவற்றின்மேல் முகில்கூரை ஒழியாது நின்றிருந்தது. இளமழை எப்போதுமிருந்தது. அந்த மலைகளுக்கு நடுவே வெண்முகில் செறிந்திருக்கக் கண்டு அருகே சென்றேன். அதற்குள் பல அருவிகள் இழிந்து நீர்ப்பரப்பில் விழக்கண்டேன். கடல்நீர் அங்கே கொந்தளித்துக்கொண்டிருந்தது. அணுகி மேலே நோக்கியபோதுதான் வானில் பறந்து நின்றிருந்த மலையைக் கண்டேன்” என்றார் வீ.

“அங்கே நான் நான்குமாதம் வாழ்ந்தேன். பின்னர் கரையொதுங்கிய மரச்சிம்புகளைக் கொண்டு தெப்பம் ஒன்றைச்செய்து நீந்தி கலங்கள் செல்லும் பாதையை அடைந்தேன். அங்கே நாற்பத்தாறு நாட்கள் மிதந்துகிடந்தேன். தொடர்ந்து மழைபெய்து கொண்டிருந்தமையால்

நான் மீன்களை உண்டு அந்த சிறுதெப்பத்தில் வாழமுடிந்தது. என்னை என் குலத்தினரின் கலம் ஒன்று கண்டுபிடித்தது. அங்கிருந்த பாரதநிலத்துச் சூதன் ஒருவன் சொன்னான் நான் கண்டது இந்திரன் வாழும் பறக்கும் மலையாகிய இந்திரகீலத்தை என்று. நீரில் மூழ்கிக்கிடக்கும் மைனாகத்தின் இளையவள் அவள் என்று அவன் சொன்னான்.”

வீ சொன்னார் “உத்தமரே, நீங்கள் இந்திரனை தேடிச் செல்வதென்றால் இந்திரகீலத்திற்குத்தான் செல்லவேண்டும்.” அர்ஜுனன் ஆம் என தலையசைத்தான்.

# கிராதம் - 49

**[ 5 ]**

இந்திரகீலமலையை அர்ஜுனன் தன்னந்தனியாகவே சென்றடைந்தான். பீதர்நாட்டுக் கலங்கள் அவர்களின் கடற்பாதையிலேயே வழிபிரிந்தன. பாய்புடைத்து காற்றில் பறந்துசென்றுகொண்டிருந்த பெருங்கலங்களை கடலுக்குள் நிறுத்தமுடியாதென்பதனால் விரைவுகுறையாமலேயே கலவிலாவில் கட்டப்பட்டிருந்த மென்மரத்தாலான படகை கயிற்றை அவிழ்த்து கீழிறக்கினர். அர்ஜுனன் வீயிடம் விடைபெற்றுக்கொண்டு கயிற்றினூடாக அதில் இறங்கி அமர்ந்தான்.

கடலைக் கிழித்த கலத்தின் மூக்கு உருவாக்கிய பேரலையில் அவன் படகு எழுந்தமைந்தது. கயிறு அறுக்கப்பட்டதும் அர்ஜுனனின் படகு அலைமேல் ஏறி அமைந்து விலகிச்சென்றது. அவன் அதன் பாயை இழுத்து விரித்தான். சுக்கானைப்பற்றி பாயின் கோணத்தை திருப்பியதும்

கிளையிலிருந்து எழும் சிறுபறவைபோல அது கடல்விரிவில் சென்றது. சற்றுநேரத்திலேயே கலம் விலகிச்சென்றது. கலமுகப்பில் நின்ற வீ அவனை நோக்கிக்கொண்டிருந்தார்.

அலைகளில் அவன் படகு ஊசலாடியது. ஆனால் இருமுறை வடங்களைப்பற்றி அவன் இழுத்ததுமே அது தலைவனை அறிந்த கூர்மதிப் புரவி என பணிந்தது. வீ புன்னகையுடன் திரும்பி தன் அருகே வந்து நின்றிருந்த குலப்பாடகனிடம் "வீரர்களுக்கு இவ்வுலகு போதவில்லை பாடகரே, அவர்களுக்காகவே தெய்வங்கள் மேலும்மேலுமென உலகங்களை உருவாக்குகின்றன" என்றார். அவன் முழுமையாக நோக்கிலிருந்து மறைந்ததும் "அவர் வெல்வார் என்பதில் ஐயமில்லை. அவர்கள் வெல்வதற்காகவே தெய்வங்கள் காத்திருக்கின்றன" என்றார்.

அர்ஜுனன் இருநாட்கள் கடலலைமேல் சென்றபின் தொலைவில் எழுந்துதெரிந்த கரிய பாறைமுகடுகளைக் கண்டான். அவற்றில் அலைமோதி வெள்ளிதழ் மலர்களை விரியவைத்துக்கொண்டிருந்தது கடல். அணுகும்தோறும் அவை பெரிதாகி தலைக்குமேல் எழுந்தன. அவற்றின் மடம்புகளில் அலைநீர் பால்நுரையென வழிந்தது. பாறைகள் அவனை நோக்கி பல்காட்டி நகைத்தாடுவதுபோல தோன்றியது. ஏளனப் புன்னகை கொண்டிருப்பதுபோலத் தோன்றிய அவை அணுக அணுக வெறியுடன் சிரித்துச் சுழன்று வந்தன.

அவனை அள்ளி அள்ளிச் சுழற்றிய நீலப்பரப்பு பாறைகளிலிருந்து விலக்க முயல்வதுபோல் தோன்றியது. அவன் பாயைத் திருப்பி காற்றை நெறிப்படுத்தி கரைநோக்கியே செல்லக்கண்டு பொறுமையிழந்து அள்ளித்தூக்கி அருகிருந்த பெரும்பாறையில் ஓங்கி அறைய முயன்றது. பாயைத் திருப்பி

காற்றை அதன்மேல் ஏவி அவன் அப்பாறையை தவிர்த்தான். மேலும் மேலும் அவனை பாறைகளை நோக்கி வீசிய கடலை ஏமாற்றி இரு பாறைகள் நடுவே புகுந்தான்.

அதன்பின் அலைவீச்சு குறைந்தது. பாறைகளைத் தவிர்த்தும் ஒளிந்தும் அவன் முன்னேசென்று இறுதியாக எழுந்துவந்த பெரிய பாறை ஒன்றை அணுகினான். அவன் பாயைச் சுருக்குவதற்குள் வந்த பேரலை ஒன்று படகைத் தூக்கி அப்பாறைமேல் அறைந்தது. அவன் பாய்ந்து அலைமேல் குதித்து விலகினான். படகு சிம்புகளாகச் சிதறி நீரலைவில் மிதந்து ஆடியது. அவன் மீண்டுமெழுந்த அலையொன்றில் ஏறிச்சென்று பாறையின் நீள்மூக்கு நுனியை பற்றிக்கொண்டான்.



நீர் அவனை விட்டொழிந்த விசைக்கு கைகளை முறுகப்பற்றி அசையாமல் அமைந்து தப்பினான். அடுத்த அலை எழுவதற்குள் பாறைமுகப்பு மேல் தாவி ஏறிக்கொண்டான். அவன் கால்களை வந்து அறைந்து மீண்டது பேரலையின் நுரை. வெள்ளிக்கழலென நுரை வளைத்த கணுக்கால்களுடன் பாறைமேல் நடந்து சென்றான். பாறைகளாலான கடல்வளைவை தாவியும் நடுவே நீரில்பாய்ந்து நீந்தி பிறிதொரு பாறைமேல் பற்றி ஏறியும் கடந்துசென்றான்.

பின்னர் அவன் பச்சைக்குவைகளென எழுந்து நின்றிருந்த மலைகளைக் கண்டான். சுண்ணமலைகள் என பசுமைக்குள் தெரிந்த பாறைகள் காட்டின. தொங்கி வழிந்து சொட்டி நின்றது காடு. அவன் கரையை அடைந்து பாறைகளில் ஒட்டிநின்றிருந்த சிப்பிகளைப் பிடித்து பிளந்து வெறும் ஊனை உண்டான். மேலும் சிப்பிகளை அள்ளி தன் மேலாடையில் கட்டி எடுத்துக்கொண்டு அப்பசுமலைகளை நோக்கி நடந்தான். அவற்றிலிருந்து ஓடி கடல்நோக்கி வந்த சிற்றோடை ஒன்றின் நீர் தூயதாக இருந்தது. அதை அள்ளி அருந்திவிட்டு அந்த மலைநோக்கிச் சென்றான்.

மலைகளில் உண்ணத்தக்க கனிகளும் சிற்றுயிர்களும் நிறைந்திருந்தன. மானுடவிழியால் நோக்கப்படாத காடு என்று அதன் திமிர்ப்பே சுட்டியது. தொங்கும்காடுகளை கடந்துசென்றபோது மலைகள் சூழ்ந்த கடல்குடா ஒன்றை கண்டான். அதன் வட்டக்கரையில் அலை இதழிதழாக விரிந்து படிந்துகொண்டிருந்தது. அதன் மையம் முழுமையாகவே வெண்ணிற இருளால் மூடப்பட்டிருந்தது. அதற்குள் அருவிகள் கொட்டிக்கொண்டிருக்கும் ஒலியை கேட்டான். முகில்களுக்குமேல் பச்சைமுகிலென நின்றிருந்தது இந்திரகீலமலை.

அவன் குனிந்து கீழே கூர்ந்து நோக்கினான். அது மண்ணை தொட்டிருக்கவில்லை. நீர்ப்பொழிவுதான் கடல்மேல் கால்களை ஊன்றியிருந்தது. அக்காட்சியால் விழியும் சித்தமும் கட்டப்பட்டவனாக அவன் நோக்கிக்கொண்டு நின்றான். அவன் உடல் காய்ந்து உப்பரிக்கலாயிற்று. கடற்காற்றில் உலர்ந்த முடியும் தாடியும் பறந்து அலையடித்தன. இந்திரகீலம் பறந்து அகல்வதுபோல் தோன்றியது. அது விழிமயக்கா என அவன்

இமைகொட்டி மீண்டும் நோக்கினான். வான்வழியாக வெண்பறவைகள் வந்து அதில் செறிந்திருந்த மரங்களின் மேல் அமைந்தும் எழுந்து பறந்தும் வானில் சுழன்றமைய மலையில் இருந்து வெண்புகை எழுவதுபோல் தோன்றியது.

முகில்களுக்கு அப்பால் பின்காலைச்சூரியன் எழுந்ததும் அவை வெள்ளிச்சிறகுகளாக மாறின. அப்போதுதான் அவன் மலையின் மணிமுடி என வளைந்து நின்றிருந்த வான்வில்லை நோக்கினான். அது மழைவில் போல் கரையவில்லை. ஏழுவண்ண உலோகங்களால் கட்டப்பட்ட அணித்தோரணவளைவுபோல அவ்வண்ணமே நின்றது. அவன் அதை நோக்கியபடியே அருகிருந்த மலை ஒன்றின் மேல் மரங்களை பற்றிக்கொண்டு ஏறிச்சென்றான். மேலும் மேலுமெனச் சென்று உச்சியில் நின்றபோது முகில்களுக்கு அப்பால் மிதந்து நின்றிருந்தது இந்திரகீலம்.

அதை அணுகும் வழியென எதுவும் தென்படவில்லை. அவன் மலைவிளிம்பில் சென்று நின்று கையெட்டும் தொலைவுக்கு அப்பால் நின்றாடிய மலையை நோக்கிக்கொண்டிருந்தான். அதன் மரங்களனைத்தும் தளிர்கொண்டு தழைத்திருந்தன. இலைகள் ஒவ்வொன்றையும் தனித்தனியாக நோக்கமுடியும் அண்மை. ஆனால் கீழே நோக்கியபோது பாறைகள் செறிந்த கடல் அலைவிரிய நெளிந்துகொண்டிருப்பதைத்தான் பார்க்கமுடிந்தது. அவன் மீண்டும் அந்த மலையிலேயே சுற்றிவந்தான். களைத்துப்போய் உச்சிமலைப்பாறை ஒன்றில் படுத்து விழிமூடினான்.

இமைகள் வெயிலொளியில் குருதிப்பரப்பென தெரிந்தன. அவனுக்குள்ளும் ஒளிநிறைந்திருந்தது. அவன் குருதியொளியில் சென்றுகொண்டிருந்தான். எவரோ

அழைப்பதுபோலத் தோன்றி விழித்தெழுந்தான். மிக அண்மையில் நின்றிருந்தது இந்திரகீலம். விழிப்பெழுந்த மறுகணமே எம்பிப் பாய்ந்து அதன் மரச்செறிவின்மேல் சென்றுவிழுந்தான். அவன் தயங்குவான் என எண்ணி நின்றிருந்த மலை திகைத்துவிலகுவதற்குள் அவன் அதன் மரக்கிளைகளை பற்றிக்கொண்டான். மிரண்ட புரவிபோல இந்திரகீலம் அவனை உதற முயன்றது. காற்றில் கழுகுபோல சிறகடித்து துள்ளிச்சுழன்றது. மேலும் கீழும் ஆடியும் விரிந்து சுருங்கியும் அவனை வீழ்த்த முயன்று பின் மெல்ல அடங்கியது.

அவன் மரங்களினூடாக பாறை ஒன்றின் மேல் இறங்கினான். வெண்சுண்ணமலை. அதன் பாறைகள் பளிங்குபோல் ஒளிகொண்டிருந்தன. இளமழை அதன் இடுக்குகள் வழியாக நீரோடைகளை பாய்ந்து இழியச்செய்தது. இலைகள் அனைத்தும் ததும்பி சொட்டிக்கொண்டிருந்தன. நீரின் ஒளியால் காடு நிழலின்றி பொலிந்தது. அவன் பாறைகள் வழியாக மேலேறிச்சென்று மரங்களின் செறிவைக் கடந்து மென்புல்வெளி பரவிய மலைக்குவடுகளை அடைந்தான்.

சிலிர்த்த புரவியின் உடலென ஒளிகொண்டிருந்தது அந்நிலம். அதற்குமேல் பச்சைப்பாசிப்பரப்பு படிந்த பளிங்குப்பரப்பாலான முகடுகள் வந்தன. அவற்றின்மேல் எழுந்து வளைந்திருந்த வான்வில்லை கையால் தொட்டுவிடமுடியுமெனத் தோன்றியது. அங்கே மானுடர் எவரும் வந்திருக்கமுடியாதென்று அவன் அறிந்தான். தேவரோ தெய்வங்களோ அங்குள்ளனவா என்று விழிசெவிமெய்மூக்கு கூர்ந்தபடி நடந்தான்.

**[ 6 ]**

முதலில் அவன் அறிந்தது மணத்தை. மலர்மணமென தோன்றியது. மலருக்கு இல்லாத உயிரின் வீச்சு அதிலிருந்தது என்று பின்னர் உணர்ந்தான். புனுகா கஸ்தூரியா கோரோசனையா என்று பின்னர் ஐயுற்றான். அவையனைத்திலும் நுண்மையாகக் கலந்திருக்கும் குருதிமணம் அதில் இருக்கவில்லை. பின்னர் அவன் யாழொலியை கேட்டான். குழல் அதனுடன் கலந்ததை உணர்ந்தான். சலங்கைகளா சிறுமணியா? அவன் விழி அறிவதற்குள்ளாகவே உடல் அருகமைவை உணர்ந்தது. அவன் அவளை நோக்கியபோது மிக அருகே நின்றிருந்தாள். "எங்ஙனம் இங்கே வந்தீர், இளையவரே?" என்றாள். "இங்கே மானுடர் வர ஒப்புதலில்லை, அறியமாட்டீரா?"

அர்ஜுனன் அவளை நோக்கி விழிசலிக்காமல் நின்றான். ஒவ்வொரு கணுவிலும் மலர்மட்டுமே நிறைந்த மரக்கொம்புபோல அழகொன்றேயான உடல்கொண்டிருந்தாள். செம்மலர் நிற உடலில் மூச்சிலெழுந்த மாமுலைகள் மேல் மணிமாலை துவண்டது. அவன் நோக்கை அறிந்ததும் அவள் இதழ்களில் சிறுநகை வந்துசென்றது. தன் நோக்கைச் சரித்து மெல்ல முகம் சிவந்து "ஆனால் உங்களை இங்கு கண்டதில் நான் உவகையே கொள்கிறேன். இந்நிலத்தின் காவல்யட்சி நான். என் பெயர் வாமை. இக்கணம்வரை ஆண் என எவரையும் நோக்காதவள்" என்றாள்.

பின்னர் உதடுகளைக் கடித்து நாணம் கொண்டு மெல்ல உடல் துவண்டு "அழகு என்பது காமத்தின் உடல்வெளிப்பாடு. அணிகொள்ளுதலோ விழைவை கொண்டாடுதல். அழகுக்கு அணிகொண்டு ஆயிரமாண்டுகாலம் இங்கே காத்திருப்பதன் துயரை நான் சொல்லி புரியவைக்கமுடியாது" என்றாள்.

அவனை தன் சிவந்த விழிகளால் நோக்கி "நன்று, இதற்காகத்தான் அக்காத்திருப்பு என்றால் அது ஒரு தவமே. தவமுதிர்வே தவத்தை பொருள்கொண்டதாக்குகிறது" என்றாள்.

அர்ஜுனன் "நான் எந்தையை பார்க்கும்பொருட்டு இங்கே வந்தேன்" என்றான். "உங்களை அங்கே வழிகாட்டி அழைத்துச்செல்கிறேன். தேவர்களுக்கு அரசர் இங்கு எப்போதேனும்தான் வருவார். அவர் வருவதற்காக ஒவ்வொருநாளும் மலர்பூத்து மணம்கொண்டு காத்துநின்றிருக்கிறது இந்த மலை" என்றாள் யட்சி. அவன் முன்னால் செல்ல அவள் பின்னால் வந்தபடி "நாம் காதல்கொண்டாடும்பொருட்டே இது இவ்வண்ணம் நின்றுள்ளது என்றே எனக்குப்படுகிறது" என்றாள். "நீங்கள் என் அழகில் மயங்கியிருக்கிறீர்கள் என்று நான் அறிவேன். எப்பெண்ணும் உணர்ந்துகொள்வது ஆண்விழிகளின் காமம்."

அவன் "ஆம், நான் உன் அழகால் பித்தாகியிருக்கிறேன் என்பது உண்மை" என்றான். துயர்மிக்க மென்சிரிப்புடன் "ஆனால் உளம் பொருந்தாது உடல்பொருந்தும் காமம் என்பது தன்னிழிவை எஞ்சவைப்பது. உறவுக்குப்பின் ஆணை தனிமையில் உணரச்செய்வது. நிறையாக்காமம் பேரழகையும் உளம்கசப்பதாக ஆக்கிக்காட்டும்" என்றான் அர்ஜுனன். "மானுடனாகிய என் உளம் தேவர்தேவியாகிய உனக்குத் தெரியுமா என்று ஐயுறுகிறேன்" என்றான். "எவர் சொன்னது? ஆண்களின் உள்ளத்தை மலருக்குள் தேனை அறியும் வண்டென உணர்பவள் நான். உங்கள் உள்ளத்தின் அனைத்து அசைவுகளையும் இக்காட்டின் அசைவுகள்போல கண்டுகொண்டிருக்கிறேன்" என்றாள்.

“அவ்வண்ணமென்றால் சொல், என் உள்ளம் நிறைந்துள்ள பெண் வடிவு எது?” என்றான் அர்ஜுனன். “உன் உள்ளத்தை நான் அறியவும் அவ்விடை உதவும் என எண்ணுகிறேன்” என்று புன்னகையுடன் சொன்னான். அவள் “ஆணென்பது அணுதொறும் உடலில் நிறையும் பருவத்தில் உங்களை அறிபவள் நான். இளமைக்காதலி அறிந்த ஆணை எவருமறிவதில்லை” என்றாள். அவன் தலையசைத்து நீள்மூச்செறிந்து “எவரேனும் அறிந்துகொள்ளவேண்டும் என்றே எல்லா மந்தணங்களும் ஒளிந்து காத்துள்ளன” என்றான்.

அவள் புன்னகைத்து “ஐவரும் காதல்கொண்டுள்ள பெண், பாஞ்சாலத்து அரசி, திரௌபதி” என்றாள். “ஆம், அவள்மேல் நான் மாளாக்காதல் கொண்டவனே. ஆனால் அவளை விடவும் ஒருத்தி இருக்கிறாள்” என்றான் அர்ஜுனன் நடந்தபடி. “உங்கள் தோழரின் பிறவடிவள். யாதவ அரசி, சுபத்திரை” என்றாள் யட்சி பின்னால் வந்துகொண்டே.

“ஆம், அவள்மேல் நான் கொண்டுள்ளது காதலையும் கடந்த அன்பு” என்றான் அர்ஜுனன். “மூன்றாம் முறை நீ விடைசொல்லவில்லை என்றால் நின்றுவிடு!” அவள் தயங்கி நின்றாள். அவன் முன்னால் செல்ல இடைமணியும் சிலம்பும் கழுத்தணிந்த முத்தாரமும் ஒலிக்க அவன் பின்னால் ஓடிவந்தாள். மூச்சிரைக்க கன்னியருக்குரிய இன்மழலைமொழியில் “உங்கள் அன்னை குந்தி. ஆம், அவளாகவே இருக்கமுடியும். காதல்பெண்களில் அன்னையைத் தேடுவது ஆண்களின் இயல்பு” என்றாள். அவன் புன்னகையுடன் “இல்லை... இல்லையென்று இந்த மலர்மரம் சான்று” என்றான். ஆம் என்று மலர்மரம் கிளையசைத்தது.

அவன் கடந்துசெல்ல ஓங்கி எழுந்த யட்சி பதினெட்டு கைகளும் துறுவிழிகளும் திறந்த வாயுமாக நின்று நூறு சிம்மங்களின் குரலில் அலறினாள். மரங்களை அறைந்து குலுங்க வைத்தாள். கற்பாறைகளை காலால் மிதித்துப் பிளந்தாள். அவன் திரும்பிப்பார்க்கவில்லை. "திரும்பிப்பார்... ஒருகணம் திரும்பிப்பார்" என அவள் நெஞ்சில் அறைந்தபடி கூச்சலிட்டாள். அவன் அருகே நின்ற பாறைகளில் வெடிப்போசையுடன் அறைந்தாள். அவள் நிழலெழுந்து அவன் மேல் விழுந்தது.

திரும்பாமல் அவன் கடந்துசென்றபோது மெல்லிய விம்மலோசை கேட்டது. "நில்லுங்கள், என் விழைவு மெய்யானது. இனி அது நிறைவுறப்போவதே இல்லை" என்றாள் அவள். அவன் அவ்வெல்லை கடக்கையில் "நலமுணப்படாது துறக்கப்பட்டோர் சூடுநர் இட்ட பூவோரன்னர்" என்றாள். அழுகையொலி தேய்ந்து மறையும்வரை அவன் இறுகிய உடலசைவுகளுடன் நடந்து பின்பு மெல்ல எளிதானான்.

அவன் முன் கருநிற உடலும் அலைக்கும் நீள்குழலும் ஒளிரும் வாள்விழிகளுமாக இன்னொரு யட்சி தோன்றினாள். "அவள் சான்றவள் அல்ல. ஆணுள்ளம் அறியாப்பெண் அவனுடன் ஒருபோதும் முற்றிலும் கூடமுடியாது. ஒவ்வொரு கூடலுக்குப் பின்னரும் அவ்விடைவெளி வளர்கிறது. அத்தனை ஐயங்களும் கசப்புகளும் சினங்களும் அவ்விடைவெளியிலேயே தேங்குகின்றன" என்றபடி அவள் அவனருகே வந்தாள். அவள் உடலில் வியர்வையுடன் மதநீரின் ஊன்மணமும் கலந்து அவனை அடைந்தது.

"ஆனால் சொல்லொடு சொல்லென இணையும் பெண் ஆணை விடுதலை செய்கிறாள். ஆடைகளைதல் பெண்ணுக்கு எளிது.

ஆடையுடன் அவள் அனைத்தையும் களையலாகும். அகத்தின் ஆடைகளை ஆண்கள் எளிதில் களைவதில்லை” என அவனுக்குமட்டும் என எழுந்த சொற்களால் உரைத்தாள். “ஆம், சொல்லி அறியவைத்தல் இயலாததே ஆணின் அகம் பெண்ணுக்கு. உணராப்பெண்களுக்கு ஆண்களின் எச்சொல்லும் பொருளற்றதே. சொல்லச்சொல்ல அவள் உணராதவள் என்பதையே அவர்கள் உணர்கிறார்கள்” என்றான் அர்ஜுனன்.

“நான் மைந்தரை மடியிலேந்தி கணவனை அறியும் மனைவிபோன்றவள். விதைநோக்கி மரத்தை உணர்வதே உகந்தவழி” என்றாள். அர்ஜுனன் அவளை ஏறிட்டுநோக்கியபின் கடந்துசென்றபடி “நான் என்னுள் தனியன்” என்றான். “இளையவரே, தன் தனிமையை உடைக்காத பெண்ணை ஆணும் தன் ஆணவத்தை வெல்லாத ஆணை பெண்ணும் விரும்பமுடியாது” என்றபடி அவள் பின்னால் வந்தாள். “நில்லுங்கள்! உங்கள் உள்தனிமைவரை நிலத்தை ஊடுருவும் நீரென வந்தமையும் ஆற்றல்கொண்டவள் நான்” என்றாள்.

அவன் திரும்பாமல் நடந்துகொண்டிருந்தான். “ஒருகணநோக்கிலேயே என் உடலை முற்றிலும் நோக்கிவிட்டீர்கள். உடலில் காமம் எஞ்சுவதுவரை உள்ளத்திலும் காமம் எஞ்சுவதே ஆணின் இயல்பு” என்றபடி அவள் உடன்வந்தாள். வளையலோசை குலுங்க ஆடைதிருத்தினாள். “என் பெயர் தட்சிணை. உங்களுக்காகவே இங்கே காத்திருந்தேன். மலர்மென்மைகொண்டவள் மலைப்பாறைகளைப்போல காலம் கடந்து காத்து அமர்ந்திருப்பதன் பெருந்துயரை நீங்கள் அறிவீர்கள்…”

அர்ஜுனன் “ஆம்” என்றான். “நீ சொல், அவளிடம் நான் கேட்ட வினா இது. பிறிதொரு நிகரியின்றி என் நெஞ்சமர்ந்தது எவள்

உரு?” என்றான் அர்ஜுனன். அவள் ஒருகணம் எண்ணியபின் “ஆணவம் கொண்ட ஆணுள்ளத்தைக் கரைத்து ஆழத்தில் நின்றிருக்கும் எளியபெண் ஒருத்தி இருப்பாள். முட்பன்றி களிமண்ணில் பதிவதுபோல நீங்கள் பதிந்த இடம் அது. உலூபி” என்றாள். அவன் “ஆம், சற்றேனும் துயர்கொள்கையில் அவளையே நாடிச்செல்கிறது என் உள்ளம்” என்றான். “ஆனால் விஞ்சியிருப்பது பிறிதொரு முகம்.”

அவள் சீற்றத்துடன் பின்னால் வந்து “நில்லுங்கள். இம்முறை பிழைக்காது. இதோ, இந்த பொற்கொம்புக் கலைமான் சான்று” என்று கூவினாள். “கணமும் தயங்காது விட்டுச்செல்லும் உங்களை கணமும் தயங்காமல் விட்டுநின்றவள் ஒருத்தியே. சித்ராங்கதை. ஆணென நிறைந்தவன் பெண்ணென்றாகி அறிந்த ஆணுள்ளம் கொண்டவள். முடிவடையாத ஆடல் வழியாக ஈசனும் அறியாத பெண்ணின் அகத்தைக் காட்டியவள்.” அவன் முன்னால்சென்றபடி “இல்லை” என்றான். ஆம் என்று கலைமான் தலையசைத்தது. அவள் உறுமியபடி “இன்னும் ஒருமுறை. இன்னும் ஒரேமுறை” என்றாள். “ஆம்” என்றான் அவன்.

“அவள் பெயர் மாலினி. அன்னையென வந்தவள். அன்னை கொண்ட விலக்கம் சற்றுமில்லாத அன்னை” என்றாள். “இல்லை” என்றான் அர்ஜுனன். அவள் சினத்துடன் ஓங்கி தன் நெஞ்சை அறைந்தபடி நின்றாள். பிடியானைபோல் பிளிறியபடி அவனை நோக்கி ஓடிவந்தாள். அவன்மேல் குளிர்ந்த காற்றென மோதி நிலையழியச்செய்தாள். “நில்லுங்கள், விட்டுச்செல்லாதீர்கள். நில்லுங்கள்!” என்று கூவினாள். அவன்முன் உடல்தளர்ந்து முலைதூங்கி முகம்சுருங்கிய

முதுமகளாக வந்துநின்று வழிமறித்தாள். “இம்முதுமையில் நான் காலமுடிவுவரை இருப்பதா? சொல்லுங்கள்!” என்றாள்.

அவன் மெல்லிய புன்னகையுடன் அவளை கடந்துசென்றான். அவள் விம்மியழுவதை கேட்டான். ஊன்மட்கும் மணம் எழுந்தது. சிதைப்புகை எரிந்தது பின்னர். அவன் நீள்மூச்சுடன் கடந்துசென்றான். எதிரே மாந்தளிர் நிறத்தில் நீண்டகாதுகளில் குழைதொங்கி தோள்தொட்டாட தொய்யில் எழுதிய முலைகளும் தோள்விரிவில் பொன்னகைகளுமாக வந்தவள் அவனை நோக்கி புன்னகைசெய்து “நான் மத்யை. இடமும் வலமும் பொய்யே. முன்செல்பவனுக்கு திசையென்பது முகப்புமட்டுமே” என்றாள். “ஆம்” என்று அவன் சொன்னான்.

அவள் அவனுடன் வந்தபடி “உங்கள் உள்ளறிவதில் அவர்கள் பிழைசெய்தனர். இளைஞனாக உங்களை எண்ணியவள் வாமை. நடுவயதினனாகக் கண்டவள் தட்சிணை. நீங்கள் இன்று முதுமைக்குள் வந்துவிட்டவர். கடந்துவிட்டவர் நினைவில் எஞ்சுவதென்ன என்பதே வினா. அதை நான் அறிகிறேன்” என்றாள். அவன் புன்னகையுடன் “ஆம், முதிய மனைவியே ஆணை முழுதறிகிறாள் என்பார்கள். சொல்க, என் உளம்நின்ற முதன்மைப் பெண்முகம் எது?” என்றான்.

அவள் “முதல்பெண். அவளுக்குப் பெயரென்று உங்கள் உள்ளத்தில் ஏதுமில்லை” என்றாள். “கொழுத்த உடல்கொண்டவள். கரியவள். பரத்தைத்தெருவில் உங்களை வந்து அழைத்து தன் மடியிலெடுத்துக்கொண்டவள்.” சிரித்தபடி “பெண்மணம் பெண்வெம்மை பெண்ணொலி என உங்களுள் பதிந்த முதல்வள்” என்றாள். “உடலளித்தவள். ஒருபொழுதை மட்டுமே பகிர்ந்தவள். ஒருதுளியை மட்டுமே அளித்தவள். அளித்துப் பரந்து உடல்சூழ்ந்தபோதும் தன்னை உள்ளிழுத்து

முற்றிலும் ஒளிந்துகொண்டவள். ஒருபோதும் பிறகு எண்ணாதொழிந்தவள்.” அர்ஜுனன் “ஆம், ஒருநாளும் அவளை மறந்ததில்லை. ஆனால் அவளல்ல” என்றான்.

அவள் முகம் சிவந்து “அவ்வண்ணமென்றால் இன்னொருத்தி. சென்றடையும் மறுஎல்லையில் காத்திருப்பவள். எளியசேடி. ஒவ்வொரு கணமும் நினைத்திருப்பவள். உள்ளும் புறமும் எஞ்சுவதும் கடந்ததும் அளித்தவள். எஞ்சாமல் தன்னை உணர்பவள்” என்றாள். “ஆம், அவளும் என்றும் என் நெஞ்சிலிருக்கிறாள். அவளல்ல என இந்த மலை அறியும்.” மலை ஆம் ஆம் ஆம் என எதிரொலித்தது. அவள் முகம் சுருங்கியது. “நீங்கள் என்னை கடந்துசெல்ல முடியாது” என்றாள். “முதுமகள் அறியா ஆணுள்ளம் இருப்பதில்லை.”

“சொல், நான் கொண்ட அம்முகம் எவருடையது?” என்றான். அவள் மேலும் அருகணைந்து அவன் முகத்தை கூர்ந்து நோக்கி “ஆம்” என்றாள். உடனே அச்சத்துடன் விலகி “ஆம், ஆம்” என்றாள். “எம்முகம் அது? நானே அதை இன்னமும் அறிந்திருக்கவில்லை. ஒரே ஒருமுறை அதை கனவில் மட்டுமே கண்டுள்ளேன். அன்று எழுந்த உளப்பெருக்கை மட்டுமே நினைத்திருக்கிறேன்” என்றான் அர்ஜுனன். “அவர்... அவர்தான்” என்று அவள் சொன்னாள். “கானாடலின்போது ஒருநாள் நீரில் நீங்கள் கண்ட அம்முகம். அதை அலைகள் நெளியச்செய்தன. தேடிச்சலித்து ஓய்ந்தீர்கள். மூன்றாம்நாள் கனவில் அது குவிந்தது.”

அவன் படபடப்புடன் அவளையே நோக்கினான். அவள் முகம் மெல்ல நெகிழ்ந்தது. “கருமுகம். நீளவிழிகள். செவ்விதழ்களில் குறுநகை. அலைகுழலில் மயிற்பீலி சூடி மஞ்சள்பட்டாடை அணிந்து இதழில் குழல்சேர்த்து இசைத்தபடி

கடம்பமரத்தடியில் நின்றாள் அவள்.” அவன் நீள்மூச்சுடன் நெகிழ்ந்தான். “ஆம்” என்றான். “அவர்தான் பிறிதெவருமில்லை. இப்பிறவியில் வேறுமுகமென்று ஏதுமில்லை.” அவள் “நீங்கள் விழையும் அம்முகம் கொண்டு எழுந்து உங்களை வெல்லவேண்டுமென்பதே என் ஆணை. அம்முகம் இப்புவியிலெவரும் சூடமுடியாத முகம், இளையவரே” என்றாள். “நன்று, நான் செல்லவேண்டிய வழியேது என்று சொல்” என்றான்.

அவள் அவன் முன் ஆறுவயதுச் சிறுமியென்றாகி நின்றாள். “முதுமகளாகிய மனைவி தன் கணவனுக்கு காட்டவிழையும் தோற்றம் இது” என்றாள். “என்னை கையிலெடுத்துக் கொள்ளுங்கள். உங்கள் பெயர்மகள் நான்.” அவன் குனிந்து அவளை எடுத்துக்கொண்டான். “நீ கிருஷ்ணையின் முகம் கொண்டிருக்கிறாய்” என்றான் அர்ஜுனன். “ஆம், ஆனால் நான் பிறக்கவே போவதில்லை” என்று அவள் சொன்னாள். “செல்க, அந்த மலையுச்சிமேல் விண்ணகத்தேர் வந்திறங்கும் இடம் உள்ளது” என்று சுட்டிக்காட்டினாள்.

அவன் அவளை முத்தமிட்டான். “அளியவள்” என்றான். “கிருஷ்ணையைப்போல் துயர்கொண்டவள் எவருமில்லை. தன் பெண்முகம் முளைப்பதை அவள் காணப்போவதே இல்லை.” அவள் புன்னகைசெய்து “அரியணை அமர்தல்போல் தீயூழ் பிறிதில்லை, இளைய பாண்டவரே” என்றாள். முத்தமிட்டு முத்தமிட்டு அச்சிறுமியைக் கொஞ்சியபடி அவளுக்கு மலர்களையும் வண்ணத்துப்பூச்சிகளையும் சுட்டிக்காட்டி விளையாடியபடி அர்ஜுனன் மலைமேல் ஏறிச்சென்றான்.

# கிராதம் - 50

[ 7 ]

இந்திரகீலத்தின் உச்சிமலை ஏந்திய வெள்ளித்தாலமென முழுமைகொண்ட வட்டமாக இருந்தது. நாண்இழுத்த வில்லென வளைந்து தெரிந்த அதன் விளிம்பைக் கடந்தபோது அர்ஜுனன் கையிலிருந்த யட்சி நடைதிருந்தா, மொழியறியா பைதலென உருக்கொண்டிருந்தாள். வலக்கையின் விரலை வாய்க்குள் இட்டு மடிப்புகள் என தசைகொழுவிய கால்களை உதைத்து உடலை நெளித்து எம்பி ஆ ஆ என குரலெழுப்பி கீழிறங்க விரும்பினாள். “இறங்கிக்கொள்கிறாயா?” என்று அவன் மதலைமொழியில் கேட்டான். அவள் தலையசைத்து காட்டை சுட்டிக்காட்டினாள்.

அவன் இறக்கிவிட்டதும் அண்ணாந்து செவ்விதழ்களுக்குள் இருசிறுபற்கள் தெரிய புன்னகைத்தாள். மீண்டும் காட்டை சுட்டிக்காட்டினாள். அவன் குனிந்து அவள் புன்தலையில் கையால் வருடி “சென்று வருகிறேன், அன்னையே” என்றான். அவள் காட்டுக்குள் செல்கிறேன் என்று கையை காட்டிவிட்டு தளர்நடையிட்டுச் சென்று புதர்களுக்கிடையில் மறைந்தாள்.

மழைவிழுந்து கரைந்து மெழுக்கிட்டு கால்வழுக்கிய வெண்பளிங்குப்பரப்பில் நடந்து மையத்தை அடைந்தபோதுதான் அம்மாபெரும் வட்டத்தை அர்ஜுனன் நன்கு அறிந்தான். அண்ணாந்து வானை நோக்கியபோது மிக அருகிலெனத் தெரிந்தது எழுவண்ண வில். எம்பிக் குதித்து அதை பற்றிக்கொள்ள முடியும் என்பதைப்போல. அதற்கு இருபுறமும் மலையின் சிறகுகளென விரிந்து நீண்டிருந்த முகில்கள் வானொளி கொண்டிருந்தன. அவை மெல்ல நுனி அலைய அசைந்துகொண்டிருந்தன.

இந்திரகீலம் கடலுக்குமேல் பறப்பதை அவன் உணர்ந்தான். கீழே நோக்கியபோது மலைமுடிகளும் மரங்கள் செறிந்த தாழ்வரைகளும் கைவிடப்பட்ட வண்ண ஆடை என கீழிறங்கி மடிந்து நெளிந்து அகன்று கொண்டிருந்தன. நோக்கியிருக்கவே மலைமுடியொன்று கூரிய கல்ஊசி என்றாயிற்று. மரக்கிளைகள் பச்சை நிறக்குவியல்களின் பரப்பென மாறின. கடலின் அலைகள் எழுந்தமைவது பூனையின் கையில் வெண்ணிற உகிர்கள் எழுந்து மறைவதுபோல் தெரிந்தது.

இந்திரகீலத்தின் சிறகுகள் காற்றசையாது மெல்ல வீச, விழிநிறைக்கும் தூயஒளி நிறைந்திருந்த வானை நோக்கி அவன் எழுந்துகொண்டிருந்தான். மென்மழைத் தூறல் ஓய்ந்தது. நீர்த்துளிகள் ஒளித்துருவல்களாக சிதறி பின் மறைந்தன. வானுருகி பொழிவதுபோலிருந்தது ஒளி. சூரியன் கீழ்வானின் சரிவில் மிகப்பெரிய நீலவட்டமாக கதிர்வளையம் சூடி அதிர்ந்துகொண்டிருந்தது. இந்திரகீலம் மேலெழுவதன் விசையை தன் உடலுள் குலுங்கிய நீர்மையால் மட்டுமே அறிந்தான்.

வானிலெழுந்து சென்ற இந்திரகீலம் மெல்ல தயங்கி நின்றது. கீழே அலைத்தோடிய காற்றில் மெல்ல அது அசைந்தது. நடக்கும் யானை மேல் நின்றிருப்பது போல் அர்ஜுனன் உடல்ததும்பினான். சூரியனை நோக்கியபோது கண்கூசவே மேற்கே சரிந்த வானிழைவின் தூயநீலத்தை நோக்கினான். அவன் மேல் நிழலொன்று கடந்துசெல்ல வானை அண்ணாந்தபோது கீழைச்சூரியனிலிருந்து கிளம்பி வந்தது ஓர் அசைவு. அதன் நீள்நிழல்கற்றைகள் எழுந்து ஆழியின் ஆரங்களென சுழன்றன. விழிகூர்ந்தபோது ஏழு வெண்புரவிகள் இழுத்த பொற்தேரொன்று அணுகிவரக் கண்டான்.

தொலைவில் வெண்முகிலின் முனையில் அந்திச்செம்மையென அது விழிமயக்கு காட்டியது. அணுகும்தோறும் புரவிகளின் பிடரிகள் பறப்பதும் இழுவிசையில் கழுத்துகள் முன் நீண்டிருப்பதும் தூக்கப்பட்ட நீள்முகங்களும் தெளிவடைந்தன. சுழன்று பறந்த செந்நிறவால். முகில்கீற்றுகளை அளைந்தபடி பாய்ந்த மெல்லிய நீண்ட கால்கள். பொற்குளம்புகள். அவன் அவற்றின் வாயில் தொங்கிய மென்பஞ்சுநுரையைக்கூட கண்டுவிட்டான்.

பொன்னிறக் கடிவாளங்களால் அப்புரவிகளை பிணைத்துப் பற்றியபடி அதன் முன்தட்டில் நின்றிருந்த இந்திரனை அவன் கண்டான். ஏழடுக்கு வைரமுடி தொலைவிலேயே மின்னியது. பொன்னிற முகம் ஒளிரும் நீலவிழிகளுடன் புன்னகைத்தபடி அணுகி வந்தது. பொற்துளி ஒன்று விண்ணிலிருந்து கண்ணைநோக்கி உதிர்வதுபோல. நிழல் அவனைக் கடந்து சென்ற பின்னரே தேர் முகில்களினூடாக இறங்கி இந்திரகீலத்தின் பளிங்குத்தாலத்தில் வந்து அமைந்தது.

புரவிகளின் குளம்புகள் பாறைபரப்பைத் தொட்டதும் துடிதாளமிட்டன. விரல்தொட்டு மீட்டப்பட்ட கிணைப்பறையின் தோல் என ஆயிற்று இந்திரகீலத்தின் உச்சிவட்டம். அவனை அரைவட்டமென சுற்றி வந்து விசையழிந்து தேர் நின்றது. ஏழு கடிவாளங்களையும் இழுத்து புரவிகளை இந்திரன் நிறுத்தினான். கழுத்துகளை வளைத்தும் ஒசித்தும் அண்ணாந்தும் குனிந்தும் புரவிகள் விசையை தங்கள் உடலுக்குள் நிறுத்திக்கொண்டு அமைந்தன. குளம்புகளை பொய்யடி வைத்து முன்னும்பின்னும் ஊன்றி வால்சுழற்றி நிலை கொண்டன.

தேர்முகப்பிலிருந்து முழுக்கவச உடையுடன் ஒளிக்கற்றை சரிந்திறங்குவதுபோல படிகளில் கால்வைத்து இறங்கி வந்த இந்திரனைக் கண்டு அர்ஜுனன் தலைவணங்கி “எந்தையே, தங்கள் மைந்தன் பணிகிறேன்” என்றான். புன்னகையுடன் அருகே வந்து “நான் விண்ணவர்கோனின் தேர்ப்பாகனாகிய மாதலி” என்று அவன் சொன்னான். “உன்னை அழைத்து வரும்படி அரசரின் ஆணை” என்றான். அர்ஜுனன் கைகூப்பி “தேவசாரதிக்கு வணக்கம். உங்கள் கால் என் தலைமேல் அமைவதாக!” என்றான்.

மாதலி சிரித்தபடி “விண்ணரசர் என என்னை நீ மயங்கியது இயல்பே. நான் அவர் தோற்றம் கொண்டவன். அனலை அணுகியது அனலாவதுபோல அணுக்கன் அரசனைப்போல் ஆவதென்பது எங்குமுள்ளதே” என்றான். அர்ஜுனன் “தன்னை முழுதளித்த அணுக்கர் மாற்றுருக்கொண்ட அரசரே. நீங்கள் என் தந்தைக்கு நிகரானவர். ஊர்வலம் வரும் இறைப்படிமம் கருவறை அமர்ந்த முதல்தெய்வமே என்பது நம் கோயிலொழுகு அல்லவா?” என்றபின் குனிந்து மாதலியின் கால்களைத் தொட்டு சென்னி சூடினான்.

அவன் இரு தோள்களையும் கையால் பற்றி அள்ளி மார்போடணைத்து மாதலி சொன்னான் “இளமைந்தன் என நீ பிறந்த அன்று உன் தந்தையுடன் அஸ்தினபுரியின் முகில்கூட்டத்தின்மேல் நின்றிருந்தேன். வில் தொட்டெடுத்து நீ எய்த முதல் அம்பை விண்ணிலிருந்து பார்த்துக் களித்தேன். உன் வெற்றிகளிலும் தனிமைகளிலும் எப்போதும் உடனிருந்தேன். இன்றே உன் உடல்தொட்டு நெஞ்சோடணைக்க வாய்த்தது. தேவன் என்றே ஆயினும் மைந்தரின்பத்துக்கு நிகர் விண்ணிலும் இல்லை என்றே சொல்வேன்.”

“தங்கள் அருளால் என்றும் காக்கப்பட்டேன், தந்தையே. தங்களால் தழுவப்பட்டதும் என் உடல் நிறைவுகொண்டது” என்றான் அர்ஜுனன். “வருக!” என்று தோள் தொட்டு அணைத்து தேரை அணுகி “அப்பீடத்தில் அமர்க!” என்று சுட்டிக்காட்டினான் மாதலி. விண்மீன்களை அள்ளிச் செறித்ததுபோல் வைரப்பட்டை விளிம்புடன் செம்பட்டு மெத்தையுடன் சிம்மப்பிடிகளுடன் அமைந்திருந்த அரியணையை நோக்கி அர்ஜுனன் தயங்கினான்.

“எந்தையே, அது விண்முதல்வனின் அரியணை அல்லவா?” என்றான் அர்ஜுனன். “ஆம். இத்தேரை அவர் அனுப்பினார் என்றால் அதில் உன்னை அமர்த்தி அழைத்து வரவே விரும்பியிருப்பார்” என்றான் மாதலி. அர்ஜுனன் “மானுடனாகிய நான் அதில் அமரலாகாது. பொறுத்தருள்க!” என்றான். “அது உன் தந்தையின் ஆணை என்றால் அதை ஆற்றுவதே உன் கடமை” என்றபின் மாதலி பரிபீடத்தில் ஏறியமர்ந்தான்.

உள்மேடையில் சென்று இந்திரனின் அரியணையைத் தொட்டு வணங்கியபின் அதன் காலமரும் மெத்தைமேல் அர்ஜுனன் அமர்ந்துகொண்டான். “இதுவே எனக்கு உகந்ததென்று எண்ணுகிறேன், தந்தையே. எழுக தேர்!” என்றான்.

விண்ணகருக்கான பாதை வானில் ஒரு செந்நிறத் தீற்றல் என தொடுவான்வரை வளைந்து சென்றது. புரவிகள் அதன்மேல் குளம்பு தொட்டும் தொடாமலும் விரைய தேருக்குப் பின்புறம் அப்பாதை அக்கணமே கரைந்து மறைந்தது. அழகிய இடையில் அரைநாண் படிந்த வடுபோல என்று அர்ஜுனன் நினைத்தான். அவ்வெண்ணத்தை அவனே நோக்கி புன்னகைத்துக்கொண்டான். தொடத் தொட வளைந்தகன்றது தொடுவான் கோடு. முகில்குவைகள் வளைந்திறங்கி கீழே மறைந்தன. குனிந்து

நோக்கியபோது அவன் அறிந்த வானம் காலடியில் இருந்தது. நீலம் குடையென கவிந்த பிறிதொரு வானம் மேலே. சிறு துளியெனக் கூட எந்த மாசும் அற்றது. அதன் வழுக்கில் எம்மாசும் நிற்காதுபோலும்.

மேலும் மேலுமென கணந்தோறும் விரைவுகொண்டது தேர். அவன் ஆடைகள் எழுந்து படபடத்தன. தலைமயிர் உடலிலிருந்து பிடுங்கிக்கொண்டு பறக்க விழைவதுபோல் துடித்தது. விரைவின் ஒரு கணத்தில் ஆடைகள் விலகி அக்கணமே பின்கடந்த தொலைவில் மூழ்கி மறைந்தன. அவன் இரு கைகளையும் விரித்தான். அவன் கொண்ட கடலோடியின் இரும்பு அணிகள் உடைந்து தெறித்தன. பின் ஒரு கணத்தில் முற்றக்கனிந்த பழத்தின் விதையிலிருந்து மென்தசை வழிந்தகல்வதுபோல் அவன் உடல் பிரிந்து பறந்து பின்னால் அகன்றது.

எஞ்சிய அவன் உடல் வெறும் ஒளிவடிவெனத் தோன்றியது. கைகளைத் தூக்கிப் பார்த்தபோது நீர்ப்பாவை என அதனூடாக மறுபக்கம் தெரிந்தது. இருக்கிறேன், இதோ இதோ என சொல்லிக்கொண்டான். அவ்வுணர்வு உள்ளிருக்கையில் மட்டுமே இவ்வண்ணம் எஞ்சலாகும். கரைந்துகொண்டிருந்தது உடல். நிலவொளியில் பனிப்படலம்போல. நீரில் உப்பு போல. இருத்தலென்பது கணந்தோறும் வந்தமையும் இன்மையென்று உணர்ந்து அமையும் பதற்றத்தால் இருத்தலை மீண்டும் உணர்ந்தான்.

சித்தத்தால் சேர்த்துத் தொகுத்து தன் உருவை செறித்துக்கொண்டான். பனிச்சிலையென ஒளியை உள்வாங்கி கடக்கவிட்டான். ஒளிகடந்து செல்லும் அனைத்தும் வானே என்று உணர்ந்தான். பின்னர் அத்தேரும் அவ்வண்ணமே

உருவழிவதைக் கண்டான். அவனைப்போன்றே ஒரு உணர்தல் மட்டுமென அதுவும் மாறியது. செல்கை மட்டுமே எஞ்சியிருந்தது.

மென்கருமை படிந்த யட்சர்களின் உலகை அடைந்தனர் அவர்கள். ஒவ்வொன்றும் நிழல்மட்டுமென எஞ்சிய உலகில் அவர்களும் நிழல்களென்றே அலைந்தனர். விழைவு அவர்களை நீண்டு மடிந்து சுருங்கி மறைந்து தோன்றச்செய்தது. ஓசையற்ற உலகு. அசைவுகள் பின்னிப்படர்ந்து வலையென ஆகி ஒற்றை அசைவென்றே ஆன வெளி. நகக்கண்களிலும் நோக்குகொண்டிருந்தனர் யட்சர். முலைக்கண்களாலும் நோக்கினர் யட்சிகள்.

இளநீல ஒளி பரவிய கந்தர்வ உலகை அவர்கள் கடந்து சென்றனர். நீலச்சிறகுகள் புகைப்படலமென அசைய மணியொளி கொண்ட உடல்களும் அனல் சுடரும் விழிகளுமாக கந்தர்வர்கள் அங்கு நிறைந்திருந்தனர். வண்ண மலர்களால் ஆனவை அவர்களின் இல்லங்கள். மலரிதழ்படுக்கைகள். மலர்க்குடைகள். மலர்மொட்டு இருக்கைகள். மலர்முரசுகள். மலர்க்குழல் கொம்புகள். மலர்களன்றி பிறிதிலாத உலகு. மலர்நிழல்களும் வண்ணம்கொண்டு பிறிதொரு மலராக இருந்தன.

இளஞ்சிவப்பு நிறமான கின்னர உலகத்துக்குள் அவன் தேரில் நுழைந்தான். அனல்வடிவ உடல் கொண்டிருந்தனர் அவர்கள். எழுந்து பறந்து தொலைவுவரை அலையடித்த குழல்கள். கை முனைகளும் கால் முனைகளும் அனலலைகள்போல் நெளிந்தன. ஒருவரைஒருவர் தொட்டதுமே அவர்கள் உடல்கள் ஒன்றென ஆயின. விழைவால் நீண்டு நெடுங்கோடென்றாயினர். தனிமையால் தேங்கி வட்டமாயினர்.

தவத்தால் குவிந்து துளியாயினர். காதலால் சுருள்களாகி இன்னொருவரை வளைத்துச் சூழ்ந்தனர்.

இளம்பச்சை நிறம் கொண்ட கிம்புருட உலகத்தை கடந்தார்கள். ஒளி உண்டு உடல் சுடரும் பச்சைக்கற்களென உடல் கொண்டிருந்தனர் அவர்கள். நீண்ட உணர்கொம்புகள் மெல்ல அதிர இன்னிசை எழுப்பினர். அவ்விசையையே சரடென்று ஆக்கி அதில் தொற்றி ஆடிப்பறந்தனர். அனைத்தும் தளிரென்றே எஞ்சும் ஓர் உலகு. மான்களும் யானைகளும் குழவிகளென்றிருந்தன. பறவைகளனைத்தும் குஞ்சுகள். நீரெல்லாம் சிறு ஊற்றுகள். மலைகளும் தளிரென்றிருந்தன.

இசையென ஆகியவர்களைச் சூழ்ந்திருந்தது காலம். அவ்விசையின் மறுபக்கமாக பிணைந்திருந்தது வெளி. இசையே அங்கு ஒளியென்றும் இருந்தது. இசையெழுந்தமைந்தபோது ஒளியலையாகியது. வெளிமடிந்து அவர்களை ஊசலாட்டியது. அவர்களில் ஒருவரை தொடமுடிந்தால் பேரிசை ஒன்றை உடலெங்கும் நிரப்பிக்கொள்ளமுடியும். இசையென்றாகி இனித்தினித்து அங்கிருக்கமுடியும்.

வெண்பாலின் வண்ணம் கொண்டிருந்தது வித்யாதரர்களின் உலகு. வெண்நுரையென அவர்களின் உடல் இருந்தது. வெளியில் சற்றே உருவாகி அவ்விழைவழிந்ததுமே மீண்டும் கரைந்து மறைந்தனர். நீர்நுரை. பால்நுரை. தேன்நுரை. நெய்நுரை. நுரைகள் மட்டுமேயான உலகில் அனைத்தும் அலைபாய்ந்தன. பறவைகளின் நுரையே இறகு. விலங்குகளின் நுரை வெண்மயிர். மரங்களின் நுரை வெண்மலர்கள்.

ஒவ்வொன்றும் நுண்வடிவத்தில் இருந்த குஹ்யர்களின் உலகை தேர் கடந்துசென்றது. இருத்தலென்னும் உணர்வென்றே அங்குளோர் எஞ்சினர். அவர்களால் உணரப்படுகையிலேயே பொருள் உருக்கொண்டது. உணரப்படும் வடிவை அது சூடியது. உணர்வுக்கேற்ப உருமாறியது. மீண்டும் கருநிலைகொண்டது. நுண்ணணு வடிவ மாமலைகள். நுண்துளிக் கடல்கள். ஒளித்துளியென வானம். அங்கே ஒவ்வொன்றும் ஆயிரம்கோடிமடங்கு எடைகொண்டு கணத்திற்கு ஆயிரம் மடங்கென எடைபெருகின. எடைமிகுந்து அவை இன்மையென்றாகி அவ்வெல்லையில் சென்றுமுட்டி மீண்டும் எடை இழந்து மீண்டுவந்தன.

நுண்சொல் வடிவென அனைத்தும் இருந்த சித்தர்களின் உலகை இறுதியாகக் கடந்தனர். ஒலியையும் பொருளையும் உதறிய தூய சொல்அறியப்படாத பெருவெளியாகி அங்கு நிறைந்திருந்தது. அதில் கரைந்திருந்தனர் சித்தர். பொருள்கொண்டு ஒலிசூடி பிறந்து குமிழியென்றாகி ஒளிசூடி மீண்டும் அதில் மறைந்தனர். கடந்துசென்றபின் அவன் அறிந்தான் ஓங்காரமென்ற ஒற்றைச்சொல் அது என.

“இவை விண்ணவரின் உலகுக்கான பாதைநிலைகள்” என்றான் மாதலி. “சிறகெழுந்து பறக்கும் வண்ணத்துப்பூச்சி இங்கே முட்டைஎன புழுஎன கூடுஎன பதங்கமென தன்னை தான் வளர்த்துக்கொள்கிறது.” அவன் கைகளைக் கூப்பியபடி தேர்த்தட்டில் நின்றிருந்தான். “இருத்தலென்பதன் மாறாநெறிகளால் கட்டப்பட்ட மானுடவாழ்க்கைதான் எத்தனை எளியது!” என்றான். “மென்பஞ்சுத் துகள்கள் பெருங்காற்றில் முட்களில் குத்திக்கொள்கின்றன தங்களை” என்றான் மாதலி.

அமராவதியின் நுழைவாயிலை அர்ஜுனன் நெடுந்தொலைவிலேயே கண்டான். சிறுகணையாழி ஒன்று நீரோடையின் அலைநகர்வுக்குள் விழுந்து கிடப்பதுபோல் தோன்றியது. அவன் விழிகூர்ந்து நோக்கும்தோறும் அது அணுகிவருவதாகத் தெரிந்தது. இல்லை அங்குதான் நின்றுகொண்டிருக்கிறதென்று எண்ணியபோது அசைவிழந்தது.

அவர்கள் சென்ற பாதை அதை நோக்கி சென்று இணைவதை அதன்பின் அவன் கண்டான். அந்த மென்சரடால் இழுக்கப்பட்டதுபோல அது சீராக அணுகி, உருப்பெருகி வந்தது. அது ஒரு தோரணவளைவு என அவன் அறிந்தபோதே அதன் உயர்ந்த சிற்பவளை மிகமேலே எழுந்து சென்றுவிட்டிருந்தது. அதன் நடுவே பதிக்கப்பட்டிருந்த மும்முகனின் உவத்தல்முகம் அவனை நோக்கவில்லை. ஆனால் அதன் நோக்கை அவன் உணர்ந்தான்.

அமராவதி நகருக்குள் விண்ணிலிருந்து விழுபவன்போல அவன் சென்றடைந்தான். அதன் ஆழிவட்டத்தெருக்களும் அவற்றில் ஆரத்தில் பொற்காசுகளென பொற்செதுக்குகள் எனச் செறிந்திருந்த மாளிகைகளும் நடுவே எழுந்திருந்த இந்திரனின் அரண்மனையும் பொன்னிற இலைத்தளிர்கள் கொண்ட மரங்களும் அலையடித்த சுனைகளும் சிறகலைத்து வானை அளாவிய பறவைக்குழாம்களும் நகரெங்கும் பறந்தலைந்த தேவர்களின் கவச ஒளிகளும் அப்சரஸ்களின் உடைவண்ணங்களும் ஒரேகணத்தில் எழுந்துவந்து அவனை வாங்கிக்கொண்டன. மறுகணம் அவன் அவர்களின் நடுவே தன்னை உணர்ந்தான்.

அவர்களில் சிலர் இமையாவிழிப்பு கொண்ட கண்களில் கனவுடன் புகை காற்றில்பிரிவதுபோல மிதந்து அசைந்தனர்.

சிலர் கால்கொண்டு கைவீசி மண்ணில் நடந்தனர். சிலர் ஒளிக்கதிர்கள் போல எண்ணத்தின் விரைவிலேயே கடந்துசென்றனர். சிலர் காற்றென ஆகி மலர்களை அசைத்தனர். சிலர் மணற்பருவென்றாகி தெருவெங்கும் பரவியிருந்தனர். அறியும்தோறும் பெருகினர். எவரும் எவரையும் நோக்கவில்லை. எவரும் தனியுள்ளம் கொண்டிருக்கவில்லை. அங்கிருந்த வெளியென அவர்களின் அகங்களும் ஒன்றென்றே இருந்தன.

நோக்க நோக்க அவன் அமராவதிப் பெருநகர் சுவரோவியங்கள்மேல் வெள்ளைபூசி மேலும் மேலும் வரையப்பட்ட ஓவிய அடுக்குபோலிருப்பதை உணர்ந்தான். ஈசலிறகுகள் என ஒளிக்குள் ஓர் ஒளிநிழலென அசைந்தனர் தேவர்கள். ஒருவரை நோக்கி சித்தம்கூர்கையில் அவர் ஒன்றுள் ஒன்றெனச் செல்லும் பல்லாயிரவரின் பளிங்குமணிநிரை எனத் தோன்றியது. ஒவ்வொன்றும் ஆடிக்குள் ஆடியென, அணைவிலாப் பாதையின் தொடக்கமெனத் தெரிந்தது. ஒன்றன்மேல் ஒன்றென ஒளியை எத்தனை முறை அடுக்கமுடியும்? “எந்தையே, இங்கு நான் காண்பவை என் சித்தப்பெருக்குதானா?” என்று அவன் கேட்டான்.

“மண்ணுலகென்பது இடம், காலம், பரு என்னும் மூன்று இயல்புகளால் கட்டுண்டது. அவை மூன்றிலிருந்தும் விடுபட்டதே விண்ணுலகு. இங்கு ஒருவர் எங்குமிருக்கமுடியும். எப்போதுமிருக்கமுடியும். எவ்வடிவிலும் இருக்கமுடியும். இருத்தலும் இன்மையுமாக அமையவும் இயலும்” என்றான் மாதலி. “மைந்தா, நீ காணும் ஒவ்வொரு துளி காலஇடத்திலும் முடிவிலிவரை செல்லும் அடுக்குகளாக

தேவருலகங்கள் உள்ளன. உன் விழிபடும் ஒரு கோணம் கோடானுகோடி மண்ணுலகுக்கு நிகரானது.”

அர்ஜுனன் அந்தச் சொற்களின் விரிவை நோக்கி தன் உள்ளம் எழத் தயங்குவதை உணர்ந்தான். தன்னை கைவிடாமல் சென்றடையமுடியாத பொருள்வெளி. அதை உணர்ந்து பின்நகர்ந்து நீள்மூச்சுவிட்டான். “இங்குள்ள தேவர்கள் எங்கிருந்து வருகிறார்கள்? எந்தையே, மண்வாழ்பவர்கள் தங்கள் செயல்களால் தேவர்களாகிறார்கள் என்று நூல்கள் சொல்கின்றனவே?” என்றான்.

“ஆம், மண்ணிலிருந்தும் தேவர்கள் எழுகிறார்கள். புடவியின் பல்லாயிரம்கோடி உலகங்கள் அனைத்திலிருந்தும் கணம்கோடி தேவர்கள் இங்கு வந்துகொண்டே இருக்கிறார்கள்” என்றான் மாதலி. “நற்செயல்கள் வழியாக மானுடர் உருமாறி வந்தடையும் நிலை அல்ல தேவர் என்பது. தேவர்கள் மானுடனிலிருந்து கணத்திற்கு ஒருவரெனப் பெருகுபவர்கள். இன்னிசை ஒன்றின் உச்சியில் நீ நெஞ்சுருகும்போது ஒரு தேவன் உன்னிலிருந்து எழுகிறான். மைந்தனை எடுத்து நெஞ்சோடு அணைக்கையில் பிறிதொருவன். பொற்கணங்களனைத்தும் தேவர்களென்றாகின்றன.”

“வேள்விகள் தேவர்களை பெருக்குகின்றன என்று வேதங்கள் சொல்வது இதையே. வாழ்வே பெருவேள்வி என உணர்பவன் தன்னிலிருந்து தேவர்ப்பெருக்கை உருவாக்குகிறான்” என்றான் மாதலி. “ஒவ்வொரு வாழ்வாலும் கோடி தேவர்கள் உருவாக்கப்படுகிறார்கள். ஒவ்வொரு மானுடனைச் சூழ்ந்தும் தேவர்களின் உலகமொன்று உள்ளது. பிறிதொருமுறை அப்பொற்கணத்தை நீ அறியும்போது முன்னர் உன்னில் எழுந்த அந்தத் தேவனை அருகே உணர்கிறாய்.”

“மைந்தா, மானுடரைச் சூழ்ந்து நின்று அரியவை ஒவ்வொன்றையும் சுட்டி இதோ இதோ என தவித்துக்கொண்டிருக்கிறார்கள் அவன் படைத்த தேவர்கள்” என்றான் மாதலி. அர்ஜுனன் அவர்களை நோக்கிக்கொண்டே சென்றான். பின்னர் “முன்பொருமுறை எங்கள் அரசப்பேரவையின் தூண் ஒன்றின் மேலேறினேன். அங்கே குவைமுகட்டில் கீழே நிகழும் அவைக்கலைவோசை ஓங்காரமென உருக்கொண்டிருப்பதைக் கண்டேன்” என்றான். மாதலி சிரித்தான்.

அவர்கள் அமராவதியின் தெருக்களினூடாகச் சென்றபோது அர்ஜுனன் அந்த விந்தையை உணர்ந்தான். அவன் எண்ணுவதற்கேற்ப அந்நகர் மாறிக்கொண்டிருந்தது. ஒரு கணம் அவன் சிற்றிளமையில் மாலினியின் இடையிலமர்ந்து சென்றபோது நோக்கிய அஸ்தினபுரியின் அந்திச்செம்மை கொண்ட காட்சியாக இருந்தது. பிறிதொரு கணம் அவன் கனவிலெழுந்த அறியாப்பெருநகர். அடுத்த கணமே ஓவியத்தில் வரைந்து சூத்ராகி காட்டிய இந்திரப்பிரஸ்தம்.

“இது என் உள்ளமேதானா?” என்று அவன் தனக்குள் என கேட்டான். அங்கே சொல்வதும் எண்ணுவதும் ஒன்றே என மாதலி மறுமொழி உரைத்தபோது உணர்ந்தான். “ஆம், ஆனால் உன் சிற்றுடலுக்குள் இருப்பதல்ல உள்ளம். உன் ஆளுமையால் சுமக்கப்படுவதுமல்ல. உள்ளத்திற்குள் உடல் ஒரு சிறுதுளி. உள்ளத்தின் ஒரு கணநேரத் தன்னுணர்வே தான் என்பது” என்றான் மாதலி. “இது இப்பிரபஞ்சப்பெருக்கின் உள்ளம் என்பர் கவிஞர்.”

“இனிதென்றும் நன்றென்றும் அழகென்றும் இறையென்றும் ஆன அனைத்தாலும் உருவான ஒரு நகர்” என்று அர்ஜுனன்

சொன்னான். ஒவ்வொன்றையும் நோக்குவது இயலாதென்று உணர்ந்து ஒன்றையும் நோக்காமல் அனைத்திலும் முழுக்கக் கரைந்து இருக்க முயன்றான். மாதலி புன்னகைத்து “இல்லை, மைந்தா. நீ இங்கு அறிபவை அனைத்தும் இனிதென்றும் நன்றென்றும் அழகென்றும் இறையென்றும் ஆனவை. விண்ணுலகென்பது ஒரு விழிப்புத் தோற்றம் மட்டுமே” என்றான்.

அவன் விழியே இருப்பென நோக்கிக்கொண்டே சென்றான். நிழலற்ற ஒளி. எதிரொலியற்ற ஓசை. பொருட்களிலிருந்து எழாத நறுமணம். உடலே ஒரு நாவென அவ்வினிமையை சுவைத்தான். ஒவ்வொன்றிலும் இருந்து அவற்றின் உச்சங்களை மட்டுமே அள்ளிக்கொண்டுவந்து சமைக்கப்பட்ட உலகம். ஒவ்வொன்றும் மீளமுடியாத நிலையில் முழுமைகொண்டிருக்கும் வெளி. படைக்கலங்களின் கூர்மைகளை மட்டுமே கொண்டு ஒரு படையமைப்பதுபோல. “ஒரு கை ஓசை” என்று அவன் சொல்லிக்கொண்டான்.

ஆம் என அவன் புன்னகைத்தான். அவன் செய்ததன் பிழையென்ன என்று புரிந்தது. அவனென எஞ்சி அனைத்தையும் கடந்தமைவதை அறிய முயன்றான். அறிதலினூடாக அடையப்படுவதல்ல அது. ஆதலே அறிதலென்றாவது. அவன் சொன்னான் “எந்தையே, தேவன் என்றாகாமல் தேவருலகை அறியமுடியாது.” மாதலி உரக்க சிரித்தான். “ஒருமுறையேனும் தேவனென்றாகாத ஒரு மானுடன்கூட மண்ணில் வாழ்ந்ததில்லை” என்றான்.

# கிராதம் - 51

[ 9 ]

இந்திரபுரிக்கு நடுவே ஆயிரத்தெட்டு அடுக்குகளில் பன்னிரண்டாயிரம் உப்பரிகைகளும் நாற்பத்தெட்டாயிரம் சாளரங்களும் கொண்டு ஓங்கி நின்ற வைஜயந்தம் என்னும் அரண்மனைவாயிலில் விரிந்த மஹஸ் என்னும் பெருமுற்றத்தின் நடுவே இந்திரனின் வெண்கொற்றக்குடை தெரிந்தது. அதன்கீழே அணிவகுத்து நின்றிருந்த ஏழு வெள்ளை யானைகள் கடல்நுரையலை போல காதுகளை ஆட்டி துதியசைத்தன. பனிமலையடுக்குகளுக்குமேல் மேரு எழுந்ததுபோல ஐராவதம் அவற்றின் நடுவே நான்கு பொற்கொம்புகளுடன் நின்றிருந்தது.

அதனருகே பன்னிரு அணிப்புரவிகள் கொடிகளுடன் நிற்க நடுவே பொன்னிறக் காதுகளும் குளம்புகளும் கொண்ட உச்சைசிரவம் நின்றது. ரம்பை, ஊர்வசி, மேனகை என்னும் தேவமகளிர் தலைமையில் அப்சரப்பெண்கள் மங்கலத்தாலமேந்தி இருநிரைகளாக நின்றிருக்க அவர்களுக்குப் பின்னால் தும்புருவின் தலைமையில் இசைகந்தர்வர்கள் கொம்புகளும் குழல்களும் முரசுகளும் முழவுகளும் மணிகளும் சல்லரிகளுமாக நின்றனர். அணிபடாம்களும் கொடிகளும் ஏந்திய தேவர்நிரைகள் அவர்களுக்குப் பின்னால் நீண்டன.

குன்றா இளமைகொண்ட சனகர் சனந்தனர் சனாதனர் சனத்குமாரர் என்னும் முனிமைந்தர்கள் தலைமையில் அமைச்சர்கள் இருபக்கமும் சூழநிற்க நடுவே தன் துணைவியான இந்திராணியுடன் முழுக்கவச உடையணிந்து மணிமுடி சூடி இந்திரன் நின்றிருந்தான். அவனுக்கு முன்னால் அவன் மைந்தன் ஜயந்தன் உருவிய வாளுடன் நின்றான். அவன் பின்னால் உடைவாள் ஏந்தி பிறிதொரு மைந்தனாகிய

பாலி நின்றிருந்தான். அவனுக்குப் பின்னால் மெய்க்காவலர்களாகிய இருபத்தேழு மருத்தர்களும் இடிபடைகள் ஏந்தி நான்கு வரிசைகளாக நின்றனர்.

மாதலியின் தேர் அணுக அணுக அவர்களின் எதிரேற்புநிலை விரிதிரை ஓவியம்போல நுட்பங்களுடன் அணுகி வந்தது. அர்ஜுனன் “யாருக்காக காத்திருக்கிறார்கள்?” என்றான். “இங்கு விழவு கூடுகிறதா என்ன?” மாதலி திரும்பி சிரித்தபடி “உனக்காகவே” என்றான். “தன் மைந்தனைப் பார்க்க மாளிகை வாயிலுக்கே எழுந்தருளியிருக்கிறார் அரசர்.” அர்ஜுனன் உளஎழுச்சியுடன் “எனக்காகவா?” என்றான். “தந்தை உலகாளலாம், மைந்தர் தந்தையை ஆள்கிறார்கள்” என்றான் மாதலி.

“நீ அறிந்திருக்கமாட்டாய். உன்னை அவர் வந்து தொட்டுத்தழுவி வருவதுண்டு. உன் மஞ்சத்தில் பறந்து தழுவிச்செல்லும் சாளரத்திரைச்சீலையாக, காடுகளில் தோளுரசிச்செல்லும் மலர்க்கிளையாக, கன்னம் தொட்டு பறந்துவிடும் பறவையிறகாக அவர் உன்னை தொடுவார். உன்னை பிறர் பாராட்டும் தருணங்களிலெல்லாம் பொன்னொளிர் புன்னகையுடன் உன் மேல் நின்றிருப்பார். பாலையில் நடந்து களைத்த உன் கால்களை வந்து தடவிச்சென்ற சருகு அவரே. மயங்கிக்கிடந்த உன்மேல் மழையென விழுந்து நீரூட்டியதும் அவரே” என்றான் மாதலி.

கலுழும் நெஞ்சுடன் கைகளைக் கூப்பியபடி அர்ஜுனன் தேரில் அமர்ந்திருந்தான். தேர் சென்று முற்றத்தில் நின்றதும் மங்கலஇசை முழங்கியது. வாழ்த்தொலிகள் எழுந்தன. “இந்திரமைந்தன் வாழ்க! இளைய பாண்டவன் வாழ்க! வில்விஜயன் வாழ்க!” மூன்று நங்கையர் தலைமையில்

அப்ரசப்பெண்டிர் மங்கலத்தாலமேந்தி முன்னால் வந்து அர்ஜுனனை வரவேற்றனர். ஜயந்தன் ஏழு அடி எடுத்து முன்னால் வந்து உடைவாள் தாழ்த்தி “வருக, இளையவனே! இந்நகரும் அரசரும் உன் வரவில் மகிழ்கிறார்கள்” என்றான்.

அர்ஜுனன் கைகளைக் கூப்பியபடியே நடந்துசென்று முதலில் இந்திராணியின் கால்களைத் தொட்டு சென்னிசூடி வணங்கினான். இந்திரனை அவன் வணங்கப்போகும்போது அவன் தோள்களைத் தழுவி தூக்கி நெஞ்சோடு அணைத்துக்கொண்டான் விண்ணரசன். முனிவர்கள் அவர்களை மலரிட்டு வாழ்த்தினர். இந்திராணி “உன் தந்தையின் இல்லத்திற்கு வருக, மைந்தா!” என்றாள். இந்திரன் “நீ விழைவன அனைத்தும் இங்கு ஒருக்கப்பட்டுள்ளன. நீ எண்ணும் காலம் இங்கு வாழலாம். நீ விழையும் காலமென அதை மண்ணில் அமைத்துக்கொள்ளலாம்” என்றான்.

வாழ்த்தொலிகளும் இன்னிசையும் சூழ அவர்கள் அரண்மனையின் இடைநாழிகளினூடாக நடந்தனர். அர்ஜுனன் அதன் உருண்டு எழுந்த தூண்களையும் பொன்னூல்பின்னிய பட்டுப் பாவட்டாக்களையும் நோக்கியபடி நடந்தான். “எங்கோ பார்த்திருக்கிறேன் இவ்வரண்மனையை. என் கனவிலா?” என்றான். “ஆம், உன் கனவிலிருந்து எடுத்து உருவாக்கப்பட்டது இவ்வரண்மனை” என்றான் இந்திரன். அர்ஜுனன் நகைத்து “உங்கள் முகமும் அவ்வாறுதானா?” என்றான். “அல்ல, மாறாக என் கனவிலிருந்து எழுந்தது உன் முகம்” என்றான் இந்திரன்.

விழிகளை ஓட்டி அவ்வரண்மனையின் பொன்பட்டையிட்ட படிக்கட்டுகளையும் வளைந்த மேல்வளைவுகொண்ட மான்கண் சாளரங்களையும் பொற்குமிழ்கள் மின்னிய கதவுகளையும் நீர்நிழலென பாவை உடன்வந்த பளிங்குத்தரையையும்

நோக்கிக்கொண்டு நடந்தான். வியப்புடன் “என் உளமயக்காகவும் இருக்கலாம் எந்தையே, இந்திரப்பிரஸ்தத்தின் மாளிகை இதைப்போலுள்ளது” என்றான். “ஆம், இதைப்போன்றதே அதுவும்” என்றான் இந்திரன். “இதை தன் கனவில் அவள் இளவயதில் கண்டாள்.”

“எங்ஙனம்?” என்றான் அர்ஜுனன். “மானுடர்கள் மூன்று வலைகளால் சேர்த்து பின்னப்பட்டுள்ளனர், மைந்தா” என்றான் இந்திரன். “குருதியின் வலையால். ஊழின் பெருவலையால். கனவுகளின் முடிவிலா வலையால்.” அர்ஜுனன் அங்கிருந்த சேடியரை நோக்கி “இவர்களின் முகங்களும்கூட அங்குள்ளவையே” என்றான். “ஆம்” என்று இந்திரன் நகைத்தான். “வருக, அரசவை கூடியிருக்கிறது!” என தோள்தொட்டு அழைத்துச்சென்றான்.

நீள்வட்ட அரசவை பதினாறாயிரத்துஎட்டு பெருந்தூண்களுக்குமேல் பருவுருக்கொண்ட வெண்ணிற வானம் என அமைந்த குவைக்கூரையால் மூடப்பட்டிருந்தது. அதிலிருந்து ஒளிரும் அருமணிகளையே சுடர்களாகக்கொண்ட செண்டு விளக்குகள் தொங்கின. அவ்வொளியில் துலங்கிய அவைப்பரப்பில் வலப்பக்கம் முனிவரும் இடப்பக்கம் பெண்டிரும் அமரும் பீடங்கள் இருந்தன. முகப்பில் அலைவளைவுக்குள் வளைவென அமைந்த பீடங்களில் தேவர்களும் சித்தர்களும் குஹ்யர்களும் வித்யாதரர்களும் கிம்புருடர்களும் கின்னரரும் கந்தர்வர்களும் யட்சர்களும் அமர்ந்திருந்தனர்.

“இதுவும் இந்திரப்பிரஸ்தம் போன்றதே” என்றான் அர்ஜுனன். அவனருகே நின்றிருந்த பாலி “நான் இங்கு வந்தபோது கிஷ்கிந்தையின் அவையென இது தெரிந்தது. தெரிந்ததன்

வடிவிலேயே நீ இதைப் பார்க்கமுடியும், இளையோனே. தெரிந்தது உதிர்ந்து தெளிவது எழ நீ செல்லவேண்டிய தொலைவு சில உண்டு” என்றான். ஜயந்தன் “வருக இளையோனே, உனக்கென நிகர்பீடம் இடவேண்டுமென எந்தை ஆணையிட்டிருக்கிறார்” என்றான். “நிகர்பீடமா?” என்று அர்ஜுனன் திரும்பி நோக்க பாலி “தலைமேல் வைத்துக்கொள்ளவே தந்தை விழைவார். முறைமை நோக்கியே நிகர்பீடம்” என்றான்.

சனகரும் சனாதனரும் சனந்தனரும் சனத்குமாரரும் வந்து அர்ஜுனனை அழைத்துச்சென்று அரசமேடையில் இந்திரனின் அரியணைக்கு நிகராக போடப்பட்டிருந்த பிறிதொரு அரியணையில் அமர்த்தினர். வாழ்த்தொலிகள் சூழ அவன் அதில் அமர்ந்ததும் இந்திரன் எழுந்து வந்து தன் மணிமுடியை எடுத்து அவன் தலையில் சூட்டினான். முனிவர்கள் மலர்வீசி வாழ்த்த அவையமர்ந்தவர்கள் வாழ்த்தொலி எழுப்பினர். “உன் வருகையால் மீண்டும் மைந்தனைப் பெற்ற இளந்தந்தையின் உணர்வுநிலையை அடைந்தேன்” என்றான் இந்திரன்.

பின்னர் உணர்வுமிகுதியால் அவனை கைபற்றி இழுத்து தன் தொடைமேல் அமரச்செய்தான். அர்ஜுனன் நாணி எழமுயல அவன் தன் வலிய கைகளால் மைந்தனை இறுகப்பற்றி அமரச்செய்தான். அவையமர்ந்தவர்கள் உரக்க நகைத்தனர். இந்திராணி அவன் முகத்தை தன் கைகளால் வருடி “நாணும்போதே மைந்தர்கள் அழகர்” என்றாள்.

தும்புரு கைகாட்ட அவரது இளையோரான பகு முழவுடனும் ஹஹ யாழுடனும் ஹுஹு குழலுடனும் வந்து இசைமேடையில் அமர்ந்தனர். இசையெழத்தொடங்கியதும் தேவநடனமகளிரான ஊர்வசியும் ரம்பையும் திலோத்தமையும்

ஆடல்தோற்றத்தில் வந்து நின்றனர். தொடர்ந்து கிருதாசியும் பூர்வசித்தியும் ஸ்வயம்பிரபையும் வந்தனர். மிஸ்ரகேசியும் தண்டகௌரியும் வரூதினியும் பின்னர் வந்தனர். தொடர்ந்து கோபாலி, ஸகஜன்யை, கும்பயோனி, பிரஜாகரை, சித்ரலேகை ஆகியோர் வந்து பின்னின்றனர்.

இனிய குரலுள்ள ஸகை பாடத்தொடங்கியதும் அவர்கள் நடமிட்டனர். இசைவழி கைகள் செல்ல, கைவழி கண்கள் செல்ல, கால்வழி தாளம் எழுந்து உடலென்றாக, கண்வழி நோக்கும் இசையென்றாயினர் அம்மகளிர். மயில்கழுத்துகள் அன்னத்திரும்பல்கள் மான்விழிவெட்டுகள் கன்றுத்துள்ளல்கள் மலர்க்கிளையசைவுகள் கனிக்கொடி ஊசல்கள். பருவடிவு கொண்டவை அசைவிலேயே உயிர்கொள்கின்றன. ஆடலிலேயே அசைவு முழுமைகொள்கிறது.

ஆடுவதே அழகென்றாகிறது. இதோ கைநீட்டி அணுகுகிறது மதலை. துள்ளி ஓடி ஒளிந்து சிரிக்கிறது இளமை. இடையொசிய தயங்குகிறது கன்னிமை. முலைபெருத்து வளைகிறது தாய்மை. மகிழ்கிறது காதல். உள்ளம் நெகிழ்கிறது காமம். உள்ளுருகி வழிகிறது கனிவு. உடலில் நிகழ்கின்றன ஐம்பருவின் அசைவுகளனைத்தும். பாறையென உருள்கின்றன யானைகள். அனலென பாய்கின்றன புலிகள். காற்றெனச் சுழல்கின்றன பறவைகள். நீரென ஓடுகின்றன நாகங்கள். பெண்ணுடலில் நிகழ்கின்றன உடலென்றான அசைவுகள் அனைத்தும். இளயானைத் தளர்நடை. மயிலாடும் மெல்நடை. ஏறுநடை. சிம்மத்தின் எழுநடை. பாம்பு வழிதல். பருந்து எழுதல். நாரை அமைதல். மீன்கொத்தி விழுதல். சிட்டு நீந்தி நிற்றல்.

தலைக்கோலியாகிய ஊர்வசி கோலைத் தூக்க அனைத்து அசைவுகளும் அமைந்தன. ஊர்வசி “அவைக்கு வந்த மாவீரரே, முதிர்ந்த நுண்ணறிவுகொண்டவர் என்று உம்மைப் பற்றி சொன்னார்கள் இங்குள்ள முனிவர். ஆணென்றும் பெண்ணென்றும் காதலை அறிந்தவர் நீங்கள் என்றுரைத்தனர். இங்கே எங்கள் ஆடலில் ஒரு வினாவெழுகிறது. உங்கள் விடை எங்களுக்கு தெளிவு அளிக்கட்டும்” என்றாள். மேனகை “விடை எங்களுக்குத் தெரியும்” என நகைத்தாள்.

திலோத்தமை “பிழையான விடை என்றால் நீங்கள் காமத்தில் எங்களுக்கு பணிவிடை செய்யவேண்டும்” என்றாள். கிருதாசி “இல்லையேல் நாங்கள் உங்களுக்கு பணிவிடை செய்வோம்” என்றாள். அர்ஜுனன் நகைத்துக்கொண்டு பேசாமலிருக்க “என் மைந்தன் அவன். போர்க்களத்திலும் காமக்களத்திலும் அவனை விஞ்சுபவர் இல்லை. விடை சொல்வான்” என்றான் இந்திரன். அவை கலைந்து நகைத்தது. தண் என முழவொலிக்க ஊர்வசி தலைக்கோலை மீண்டும் தூக்கினாள். தாளம் நடைமாறியது. நடனம் தொடங்கியது.

**[ 10 ]**

காமநிறைவை கண்டடைவதற்கென்றே வாழ்ந்த அரசனொருவன் இருந்தான். அவனை பங்காஸ்வன் என்று அழைத்தனர். கடலோரச் சிறுநாடாகிய கமலத்வஜத்தின் தலைவன். தந்தை நிறைத்துச் சென்ற கருவூலம் கொண்டிருந்தான். மழை நெறிநின்றதாலும் நிலம் சுவைநிறைவு கொண்டிருந்ததாலும் கதிர்வழிப் பாதை நாட்டின் மேல் அமைந்திருந்ததாலும் எழுவகைக் காற்றுகள் சூழும் திசையில் மலைகள் திறந்திருந்ததாலும் அவன் நாட்டில் வளம் குன்றவே இல்லை. அலைகடலால் அரணிடப்பட்ட அவன்

நகருக்கு எதிரிகள் இருக்கவில்லை. எனவே இளமையிலேயே காமமன்றி பிறிதொரு நாட்டமில்லாதவனாக இருந்தான்.

உடலை உணர்ந்த முதல் நாளிலேயே அரண்மனை மகளிரால் காமம் கற்பிக்கப்பட்டான். பின்னர் உடல்களினூடாக, அசைவுகளினூடாக, உணர்வுகளினூடாக, கனவுகளினூடாக, காமத்தின் வண்ண மாறுதல்களை தொட்டுத் தொட்டு அறிந்தபடி நாள் என நாழிகை என கணமென காலத்தைக் கடந்தான். பருவத்திற்கு ஒரு மாளிகை கட்டினான். அதைச் சூழ்ந்து மலர்வனங்கள் எடுத்தான். சுனைகளும் அருவிகளும் இசைமண்டபங்களும் கொடிமண்டபங்களுமென காதலுக்கான அனைத்தும் அங்கு அமைந்தன.

பொற்கிழிகளுடன் அமைச்சர்களையும் ஒற்றர்களையும் பாரதவர்ஷமெங்கும் அனுப்பி அழகுமிக்க மகளிரை தன் அரண்மனைக்கு கொண்டுவந்தான். முறித்தமஞ்சள் என மின்னிய தோலும் நீர்த்துளிக் கண்களும் கொண்ட குருவிபோன்ற காமரூபத்துப் பெண்கள். சுண்ணப்பளிங்குச் சிலைபோன்ற ஓங்கிய உடல்கொண்ட காந்தாரநாட்டுப் பெண்கள். செஞ்சந்தன வண்ணம்கொண்ட திரிகர்த்தநாட்டவர். சுடுமண்சிலை நிறமும் சிற்றுடலும் கூர்முகமும் கொண்ட விதர்ப்பநாட்டுக் கன்னியர். அகன்ற மூக்கும் பெரிய உதடுகளுக்குள் பரந்த பற்களும் கொண்ட தண்டகாரண்யப் பெண்கள். கொழுவிய கன்னங்களும் கமுகுப்பாளை நிறமும் கொண்ட திருவிடத்துப் பெண்கள். கருங்கல்சில்லென நீர்மை மின்னிய நீண்ட விழிகளும் ஒளிரும் பற்களும் கருங்குருத்துத் தோலும் கொண்ட தமிழ்நிலத்துப் பெண்கள்.

பெண்கள் வந்துசேரும்தோறும் அழகென்பதன் இலக்கணம் மாறிக்கொண்டிருந்தது அவனுள். அழகை அறிந்த விழிகள்

ஒவ்வொரு அழகுக்குள்ளும் அழகின் நுண்வண்ணங்களை காணலாயின. யானைமுகப்படாம் என மெல்ல அசைந்து நடந்தனர் காந்தாரியர். விட்டிலெனத் தாவினர் காமரூபர். காற்று கொண்டுசெல்வதுபோல நடந்தனர் விதர்ப்பினியர். அலைகளிலெழுந்தாடும் மலர்மொட்டுபோல திருவிடர். மானெனத் தயங்கினர் தமிழ்க்கன்னியர். நடக்கையில் ஒருத்தி நிற்கையில் பிறிதொருத்தி. அஞ்சி ஆடைசீரமைக்கையில் முற்றிலும் புதிய ஒருத்தி. முடிதிருத்தி திரும்புகையில் எங்கிருந்தோ வந்தமரும் ஒருத்தி. கண்கனிந்து ஊழ்கத்திலாழ்பவள். அவர்களனைவரையும் கடந்த வேறொருத்தி. ஒரு பெண்ணில் கடந்துசெல்லும் ஓராயிரம் பெண்கள். தெய்வமென்பது ஒரு வாசல் மட்டுமே. தெய்வமென நிறைந்திருக்கும் பெருவெளி பீரிடும் மடை. பெண்ணென வந்த தெய்வம் புவி நிறைத்தாள்கிறது.

பட்டுச்சிறகடித்தன சில விழிகள். சில விழிகள் காற்றில் கனன்றன. சில நகைத்து ஒளிர்ந்தன. சில நாணி மயங்கின. சில ஓரக்கூர் கொண்டிருந்தன. நேர்நின்று நோக்கின சில. சிவந்துருகிச் சொட்டிய பொற்துளியென்றாயின அவை. நோக்கு கொள்ளமுடியுமா உடல்? விழியை அள்ளி உடலெங்கும் பூசி மயங்கும் பெண்கள். தொடுவதற்கு முன் தொடுகையறியும் தோல்பரப்பில் வந்து காத்து நின்றிருக்கும் நுண்மை. முல்லைச்சரப் புன்னகைகள். பொரிபொங்கும் சிரிப்புகள். உடல்குலுங்கும் அலைநுரைப்புகள். உள்ளே தேங்கி கன்னச்சிவப்பென கண்கசிவென உதட்டுச்சுழிப்பென மெல்லசைவென கசியும் மென்னகைகள்.

எழுந்தவை குழைந்தவை கரந்தவை கனிந்தவை. ததும்புகையில் குலுங்குகையில் தொட்டுச்சிவக்கையில்

அளித்து எஞ்சி அப்பால் நின்று அதுவல்ல நானென்று சொல்லி சிவந்தணைபவை. அழைப்பென்றே ஆன மென்மை. விலக்கி விழிசீறுகையில் அணைக்க விரிந்தன தோள்கள். எவையுறங்கும் வயிறு? எதுவென்றான சுழிப்பு? நெகிழ்ந்தவை இறுகுவதெப்போது? கனன்று சிவந்து உருகி பின் குளிர்ந்து ஈரம்பூத்து அவை அமையும்போது தொடுகையை விழையாது விலகுவது ஏன்? அறிந்தறிந்து ஆளலாகுமா? அறியாச்சுனைகளில் ஆழம் மிகுகிறது. இன்சொல். பெரும்பாறை விரிசலில் கசியும் ஒருதுளி. உள்ளூறைப் பேரமைதியின் ஒலி. ஒவ்வொருவருக்கும் ஓர் ஒலி. பொருளொன்றே ஆன சொற்களின் களஞ்சியம். பெண்ணென்பது விழைவு சென்றுபடியும் அருமணி. அழகென்பது அதில்பட்டு நூறுமேனி பெருகி மீளும் விழைவு.

பின்பு பெண்ணெல்லாம் அழகென்றாயினர். மானும் மயிலும் போலவே பன்றியும் காகமும் அழகெனத் தோன்றின. தசையால் அழகில்லாதவை அசைவால் அழகுகொண்டு நிகர் செய்தன. அசைவாலும் அழகுகொள்ளாதவை வேட்கையால் அழகென்றாயின. அனல்கொள்கையில் அனைத்து உலோகங்களும் அழகே. அழகென்று ஈர்ப்பது அழகென்றே எஞ்சி அழகெனச் சூழ்வது விழைவு. ஆயிரம் நா கொண்டது. பல்லாயிரம் கண் கொண்டது. லட்சம் செவி கொண்டது. கோடி மெய் கொண்டது. பூக்கும் மரம் அழகு. பூக்கவிருக்கும் மரம் உள்ளூறை அழகு. இலையுதிர்க்கையில் அதன் துயர் அழகு. காத்திருக்கும் அதன் தவம் அழகு. முதல்தளிர் கொள்கையில் அது கொள்ளும் மலர்வு பேரழகு.

நூறு மனைவியர் அவனுக்கிருந்தனர். ஆயிரம் காமமகளிர் உடனுறைந்தனர். ஒரு மலர்போல் பிறிதொன்றிலை என்றும்

மலரனைத்தும் ஒன்றே என்றும் மாயம் காட்டும் இயற்கையால் விழித்திருக்கும் கணமெல்லாம் அவன் அலைக்கழிக்கப்பட்டான். அறியுந்தோறும் பெருகும், பெருகுந்தோறும் விசை கொள்ளும், விசைகொள்ளும்தோறும் இனிமை கொள்ளும் பசி. ஈரத்திலெழும் எரி. அவனுடலை எரித்து அழித்துக்கொண்டிருந்தது அது. வெறியாட்டு கொண்ட பாணனின் கையில் அமைந்த முழவுத்தோலென நாளும் தளர்ந்தது அவன் நரம்பிழைப்பரப்பு. மீளமீள அதை முறுக்கி கட்டை சேர்த்து முடுக்கி நிறுத்தினர் அவை மருத்துவர். மீளமீளக் குறைவது அன்னம். மீண்டும் மீண்டுமென எழுவது அனல். அன்னத்தை உண்டு எழும் அனலுக்கு அன்னமே எல்லையென்றாகிறது.

மெல்ல அவர்களின் கைத்திறன் எல்லை கண்டது. தன்னுடலும் தளர்வு கொள்ளும் என்று ஒருநாள் உணர்ந்தபோது இறப்பை எதிர்கண்டவன் போல அஞ்சி எழுந்து உடல் நடுங்கினான். அவன் முன் விழித்து காத்துக்கிடந்தாள் அந்தப் பெண். “ஆம்” என்று அவன் அவளிடம் சொன்னான். “ஆம், இதுவும் உடலே. ஐம்பருப்பொருள் இணைந்து உயிரனலில் எரிவது.” அவள் விழிகளை கூர்ந்து நோக்கி “எழுந்து செல்க!” என்றான். அவற்றிலுள்ளது என்ன? பெண் ஆணை வெல்லவே விழைகிறாள். வென்று செல்கையில் ஏன் துயர்கொள்கிறாள்?

காமமென்பது கொள்வதல்ல என்றும், வெல்வதல்ல என்றும், பகிர்வதுமல்ல என்றும் அவன் உணர்ந்த இளமுதிர் அகவை அது. செவிப்பரப்பில் பால்நுரையென நரை வந்தமைந்திருந்தது. கண்ணிமைகளுக்குக் கீழே நிழல் தீற்றப்பட்டிருந்தது. காமமென்பது மூழ்குதலே என்றும் மீளாதிருத்தலே என்றும் முனைகொள்ளலே என்றும் அறிந்து முதலடி எடுத்துவைத்த

நாள் அது. முதல் வாயிலை தட்டினான். அப்பால் வந்து தாழ்மேல் வைக்கப்பட்ட கையை உணர்ந்தான். அங்கு எழும் மூச்சை கேட்டான். அங்கு நின்றிருந்தாள் காமக்கொடி, காமவிழியள், காமக்கன்னி, காமக்கடலி.

நெஞ்சுடைந்து நடைதளர இடைநாழியில் அவன் ஓடினான். காமினி, காமவல்லி, காமாக்ஷி, காமிகை, காமாம்பரை. அவன் நெஞ்சு கூவிய சொற்களை வாய் அரற்றியது. பித்தனைப்போல கைவிரித்துக் கூச்சலிட்டபடி அவை மருத்துவர்களின் மருத்துவசாலைக்குள் நுழைந்தான். “பூட்டுக என் நாணை... மருத்துவர்களே, மீட்டுக என் உடலை! என் நரம்புகளில் அனல் பாய்ச்சுக! என் குருதி மின் கொள்க!” என்றான். “இன்றே, இப்போதே... ஆம், இக்கணமே” என்று வீரிட்டான்.

மருத்துவர்கள் அஞ்சி பின்னடைந்தனர். தலைமை மருத்துவர் பிருங்கர் துணிந்து முன்னால் வந்து “அரசே, உள்ளமென்பது ஒரு நுண்மை. உடலோ பருண்மை. உடலில் மட்டுமே உள்ளம் நின்றாகவேண்டும் என்பதும் உள்ளத்தால் மட்டுமே உடல் அறியவும் ஆகவும் இயங்கவும் கொள்ளவும் முடியுமென்பதும் தெய்வங்கள் தங்களுக்கு தாங்களே இட்டுக்கொண்ட ஆணை. அதை நாங்கள் மீற இயலாது” என்றார். “மருத்துவர் முடிவில் தோல்வியடைந்தாக வேண்டிய ஊழ் கொண்டவர் என்பது மருத்துவத்தின் முதல்நெறி, அரசே” என்றார் முதுமருத்துவரான கிருபாகரர்.

“ஒவ்வொரு தோல்வியும் மருத்துவத்தை மேன்மைப்படுத்துகிறது. அது போரிடுவது எப்பெருவல்லமையுடன் எனக் காட்டுகிறது” என்றார் சங்கரர் என்னும் மருத்துவர். “மருந்தில் வாழும் நுண்மை உடலுள் அமைந்த நுண்மையுடன் உரையாடும் தருணமொன்று உண்டு,

அதை நோக்கியே மருத்துவம் இயங்குகிறது. அந்நுண்புள்ளி விலகிச்செல்லுமென்றால் மருந்துகள் பயனற்றவையே” என்றார் சூத்ரகர். “இங்குள்ள அனைத்து இறப்புகளும் மருந்துகளை வென்று நிகழ்பவையே” என்றார் சபரர். “சிதையில் எழுந்தாடும் அனலால் மருத்துவர்கள் வாழ்த்தப்படுகிறார்கள் என்கின்றன எங்கள் நூல்கள்” என்றார் சம்பவர் என்னும் இளமருத்துவர்.

அச்சொல் அனல் என வந்து சுட சீறி வாளை உருவி அவர்களை வெட்டச் சென்றான் பங்காஸ்வன். “மூடர்களே, துரத்தப்பட்ட எலிபோல ஆயிரம் சுவர்களில் முட்டி மோதி திசையுலைந்து நான் வாழ்க்கையை வீணடித்தேன். இன்றுதான் என் வழியை கண்டுகொண்டேன். இத்தருணத்தில் என் உடல் தளர்கிறது என்றால் அது ஊழ். அவ்வூழை வென்று மறுபக்கம் காணவே உங்களை இங்கு அழைத்திருக்கிறேன்” என்று அலறினான். நெஞ்சிலும் தோளிலும் அறைந்தபடி “நான் வென்றாகவேண்டும். என் உடல் எழுந்தாகவேண்டும். இல்லையேல் இக்கணமே உடல்துறப்பேன்” என்றான்.

“அரசே, உங்கள் உடலனலை மூட்டும் நூறு மருந்துகள் எங்களிடம் இருந்தன. நூறாவது மருந்தும் சென்ற ஒரு மண்டலத்துடன் முடிந்தது. இனி மருந்தென ஏதுமில்லை” என்றார் தலைமை மருத்துவர். நோக்கி சில கணங்கள் நின்று நாண் இழந்து தளர்ந்து தள்ளாடிப் பின்னடைந்து பீடத்தில் விழுந்து அமர்ந்து விம்மி அவ்விம்மலோசையால் உளமுருகப்பெற்று தலையை அறைந்துகொண்டு அவன் அழுதான். “வீணடித்துவிட்டேன். இதுவரை நானறிந்ததெல்லாம் காமமே அல்ல. இன்றே அறிந்து விழித்தேன். இனி காமத்தை அறியலாகாதென்றால் இலக்கெட்டாத அம்பென வீணில் விழுந்தவனாவேன்.”

இமைகளில் சிலிர்த்து நின்ற கண்ணீருடன் நிமிர்ந்து அவர்களை நோக்கி சொன்னான் “காமம் கரிய பேரன்னை ஒருத்தியின் சிறுவிரல் மோதிரம். மும்முறை புவியை சுழற்றிக்கட்டும் நாகம் அது. மருத்துவர்களே, அது நுகர்வல்ல, களியாட்டல்ல. தவம்! ஆணவம் கலந்திருக்கும்வரை தவமும் களியாட்டே. ஆணவம் அழிந்து திளைக்கையில் களியாட்டும் தவமே. நான் ஈடேறும் வழி இதுவே. இதற்கு என் உடல் ஒப்பவில்லை என்றால் இருந்து பயனில்லை.”

அழுது மெல்ல அமைந்தபோது அக்கணத்தில் விரிந்த வெறுமையின் எடைதாளாது உளம் பொங்க பாய்ந்து தன் உடைவாளை எடுத்து கழுத்தை வெட்டப்போனான். அரண்மனை வைதிகர் சலஃபர் பாய்ந்து அவன் கைகளை பற்றிக்கொண்டார். “அரசே, பொறுங்கள்! உடலை வெல்வதற்கு ஓர் எல்லையுண்டு. ஏனெனில் அது பருவடிவம் கொண்டது. உயிரென அமைந்ததற்கு எல்லையே இல்லை. ஏனெனில் அது விண்ணின் துளி. வேள்விகளால் வெல்லத்தக்கதே விண். இதற்கென வேள்வியொன்றுண்டா என்று வினவுவோம்.”

வாளை உதிர்த்து இமைமயிர் ஒட்டிய கன்னங்களுடன் இளமைந்தன் என விதும்பிய இதழ்களுடன் அரசன் கேட்டான் “இதற்கென்றொரு வேள்வியா? இருக்கிறதென்று நீர் அறிவீரா?” சலஃபர் “இல்லை. இதுவரை இதற்கென்று எவரும் வேட்டதில்லை. ஆனால் இப்புவியில் மானுடர் விழைவு தேடுவது எதற்கும் வேதத்தில் வழி உண்டென்றே என் முன்னோர் சொல்லியுள்ளனர். ஆயிரம் வேள்வி நிகழ்த்தி நூறு அகவை திகைந்து இல்லத்தில் அமர்ந்திருக்கிறார் முதுவைதிகரான எந்தை, அவரிடம் வினவுகிறேன்” என்றார்.

மறுநாள் சலஃபர் முகம்மலர்ந்து வந்து வணங்கி "அரசே, ஒரு நற்செய்தி உரைக்க வந்தேன். தங்கள் வினாவை தந்தையிடம் உரைத்தேன். முன்பு மாமன்னர் யயாதி இயற்றிய பெருவேள்வி ஒன்று உள்ளதென்றார். அதன் பெயர் இந்திரதுவஷ்டம். விழைவுக்கு இறைவனை வேட்டு வேள்விப் பந்தலில் நிலைமரத்தில் அவனை எழச்செய்து அவனிடம் அருட்சொல் பெறுவோம். விண்ணனைத்தையும் ஆள்பவன், மண்ணெல்லாம் முளைத்தெழும் முடிவிலா வீரியம் கொண்டவன், இந்திரனே, காமத்தின் தெய்வம்" என்றார். "அவ்வாறே ஆகுக!" என்று அரசன் ஆணையிட்டான்.

தலைக்கோலேந்தி வந்து ஆடிநின்ற ஊர்வசி இனிய குரலில் ஓங்கி சொன்னாள் "காமநிறைவுக்கென இந்திரதுவஷ்டமெனும் வேள்வியை எடுத்தான் அரசன். காமநிறைவே கொள்ளஇயலாதவனே காமத்தைக் காக்கவேண்டுமென எண்ணினான். மானுடர் தெய்வங்களை பகடைக்காய்களென வைத்தாடுகிறார்கள். தெய்வங்களுக்காக இரங்குக! தெய்வங்களை வாழ்த்துக!" இந்திரன் நகைத்து தன்தொடையில் தட்டினான். அவை முழுக்க சிரிப்பொலி பரவியது.

# கிராதம் - 52

**[ 11 ]**

இந்திரதுவஷ்டம் என்னும் வேள்வியை இயற்றும் முறையை இல்லத்தில் அமர்ந்திருந்த முதிய வைதிகர் தன் உடலுக்குள்ளாகவே மூச்சுடனும் நாடித்துடிப்புடனும் கலந்து ஒலித்த மென்குரலால் சொல்ல ஏழு வைதிகர் அதனை குறித்தெடுத்தனர். முற்றிலும் புதிய சடங்குகள் கொண்டதாக

அது இருந்தது. “தந்தையே, இவ்வேள்விச்சடங்குகள் பெரிதும் மாறுபட்டிருக்கின்றனவே?” என்றார் சல.்.பர். “இவை மாகேந்திரம் எனப்படும் தொன்மையான வேதமரபைச் சேர்ந்த சடங்குகள். வாருணமும் பிறவும் வந்துசேர்வதற்கும் முந்தையவை” என்றார் முதிய வைதிகர். “இடியோசையை தாளமெனக் கொண்டவை. விழைவையே பொருளென சூடியவை.”

“மாகேந்திரம் மெல்ல வழக்கொழிந்து மகாவஜ்ரமென்றாகியது. தேவசிற்பியான த்வஷ்டாவால் விண்ணவனுக்கு சமைத்து அளிக்கப்பட்டது மின்கதிர்ப்படை. வஜ்ரமேந்திய விண்ணவனை மானுடர் அதன்பின்னரே வழிபடலாயினர். வைரவாளின் வழி என்பது வென்றுசெல்வது. வருணனும் சோமனும் மித்ரனும் விஸ்வகர்மனும் துணைநிற்கும் இந்திரனின் சொல் அது. மின்னதிரும் நுண்தாளம் வேதத்திலமைந்தது அதன்பின்னரே” என்றார் முதுவைதிகர். “ஆயினும் இன்னமும் வடமேற்கே எஞ்சியிருக்கும் தொல்குடிகள் மாகேந்திரமுறையிலேயே வேதத்தை ஆள்கின்றனர். ரிக்வேதத்தின் கிருஷ்ணபக்ஷத்தில் அது சற்று எஞ்சியிருக்கிறது.”

அவர் சொன்னவற்றைத் தேடி நாடுமுழுக்க அலைந்தனர் அரசஏவலர். வேள்விக்குரிய நெய்யும் ஐவகை விறகும் ஒன்பது மணிகளால் ஆன அன்னமும் பாலும் தேனும் கொண்டுவந்து சேர்க்கப்பட்டன. ஏழு மலைகளிலிருந்து கஸ்தூரியும் கோரோசனையும் புனுகும் கொண்டுவரப்பட்டன. பன்னிரு மலைகளிலிருந்து குந்திரிக்கமும் சவ்வாதும் அகிலும் திரட்டப்பட்டன. பதினெட்டு மலைகளிலிருந்து தேனும் தினையும் கொம்பரக்கும் கொண்டுவரப்பட்டன. மூன்றுவகை

பொன்னும் ஐந்துவகை பட்டும் ஒளிவிடும் ஒன்பதுவகை அருமணிகளும் வேள்விக்களத்தில் கொண்டுவந்தமைக்கப்பட்டன.

அரண்மனை முற்றத்தில் அமைந்த ஆயிரங்கால் பந்தலில் மூவெரி மூண்டெழுந்து ஆடிய எரிகுளங்கள் அமைக்கப்பட்டன. வேதம் நிறைந்த வைதிகர் நூற்றொருவர் சூழ்ந்தமர்ந்து வேள்விக்காவல் தெய்வங்களை அழைத்து தர்ப்பைமேல் அமரச்செய்து வேள்வியை தொடங்கினர். நுரைவாள் சுழற்றி இந்திரன் விருத்திரனைக் கொன்றபோது விழுந்த குருதித்துளிகள் காந்தள் மலர்களாயின. செம்பவள மணிகளாயின. இந்திரகோபப் பூச்சிகளாக உயிர்கொண்டன. காந்தளும் செம்பவளமும் இந்திரனுக்கு அவியாக்கப்பட்டது.

இந்திரனால் பாதுகாக்கப்பட்டு மழைமாறாக் காடுகளின் புதர்களுக்குள் வாழும் குருதிப்பூச்சிகளைப் பிடித்து மூங்கில்குடத்தில் இட்டுக்கொண்டுவந்து வேள்விக்களத்தில் திறந்துவைத்து வேதம் முழக்கினர். அவை பறந்தெழுந்து அனலில் தங்களை அவியாக்கிக்கொண்டபோது வைதிகர் மாகேந்திரத்தின் தொன்மையான வேதவரிகளை முழங்கினர். அனல் சுருண்டு எழுந்து ஆம் ஆம் ஆம் என முழங்கியது. வெண்ணிற வேள்விப்புகை எழுந்து பந்தலுக்குமேல் முகிலென நின்றது.

பன்னிரு நாட்கள் அவ்வேள்வி நிகழ்ந்தது. அன்னம் உண்டு போடப்பட்ட இலைகளும் தொன்னைகளும் குன்றுகளென எழுந்தன. அவிகொண்டு மயங்கி சிறகுகள் எடைகொண்ட தேவர்கள் வெண்தாடிவிதைகளென தும்பிகளென தேன்சிட்டுகளென நகரெங்கும் விழுந்து சிறகு சரித்து மண் வருடிச் சுழன்றனர். அவிப்புகை உண்டு நனைந்த முகில்கள்

கன்று முட்டிய காராம்பசு என மழை சொரிந்தன. மழைச்சாரல் அணைக்க நெய்யூற்றி மேலும் மேலுமென வேள்வித் தீயை எழுப்பினர் அந்தணர்.

நாளும் இரவும் கணமொழியாது வேதம் அதிர்ந்த காற்றில் சருகுகள் காயத்ரியில் மிதந்தன. இலைகள் அனுஷ்டுப்பில் ஆடின. இளங்காற்றில் துணிகள் உஷ்ணிக்கில் நெளிந்தன. சுவர்கள் தொட்டு வேதம் எனும் அதிர்வை உணரமுடிந்தது. ஒவ்வொருவர் உள்ளச்சொல்லோட்டமும் வேதச்சந்தமென்றமைந்தது. சந்தமே வேதமென்பதால் அவை வேதச்சொல்லென்றாயின. வேதச்சொல் கொண்டு செய்யும் செயலெல்லாம் வேள்வியே என்பதனால் நகரம் மாபெரும் வேள்விக்கூடமாகியது. உண்ணுதல் அவியூட்டலாயிற்று. உழைத்தல் வேள்விமுத்திரைகளென்றாயிற்று. உறங்குதல் வேள்விக்குள் அமைதலென மாறியது. வேள்வியன்றி பிறிதேதும் நிகழாத அந்நகரில் தேவர்களாயினர் மானுடர். தங்களுக்குத் தாங்களே அருள்பொழிந்துகொண்டனர்.

பன்னிரண்டாவது நாள் முகில் இருண்டு திரண்டது. வானில் எழுந்தது ஐராவதம். மின்படை சுழன்று நகர்மேல் கடந்து சென்றது. ஒவ்வொரு கூழாங்கல்லிலும் தெய்வ விழிகள் மின்னி அணைந்தன. ஒவ்வொரு மாளிகையும் அமராவதியில் அமைந்திருக்கும் அதன் ஒளிவடிவின் தோற்றத்தைக் காட்டி அமைந்தது. வேள்விப்பந்தலின் கிழக்கு மூலை பற்றி எரியலாயிற்று. “இந்திரனே, வருக! தேவர்க்கரசே, வருக! விழைவுக்கிறைவனே, வருக! கண் ஆயிரம் கொண்ட காமத்தலைவனே, வருக!” என்று வைதிகர் குரல் எழுப்பினர்.

வேள்வி மரமென நின்றிருந்த வேர்ப்பலாவின் கிளை பற்றி இறங்கி கொழுந்துவிட்டு வெடித்து நின்றாடி இந்திரன்

கேட்டான் "வேட்பர்களே, உங்கள் விழைவென்ன? சொல்க!" கைதொழுது சலஃபர் சொன்னார் "விண்ணவர்க்கரசே, இவர் இவ்வேள்வியை ஆற்றும் அரசர். இவரது விழைவுக்கெனவே இங்கு நிகழ்கிறது இந்த மாகேந்திரப் பெருவேள்வி." அரசனை நோக்கி "சொல்க!" என்று இந்திரன் இடியோசையால் உரைத்தான். வேள்விக்காவலனின் பீடத்திலிருந்து எழுந்து கைகூப்பியபடி பங்காஸ்வன் "விசைகொள் உடல் கேட்டு உன்னை அழைத்தேன், விண்ணவர்க்கரசே" என்றான்.

"காமமுழுமைக்கென்று இப்புவியில் பிறந்தேன் என்று என்னை உணர்கிறேன். காமத்தினாலன்றி மெய்மையையும் அறிய என்னால் இயலாது. உடலென்றான காமத்தை இளமையில் அடைந்தேன். நடுவயதில் உள்ளமென்றான காமத்தில் திளைத்தேன். இன்று காமமென்றேயான காமத்தை அறியும் கனிந்த நிலையிலிருக்கிறேன். இறுதி வாயில் திறக்கும் தருணத்தில் என் உடல் தளர்ந்துவிட்டது. இசை பெருகும் சூதனின் கையில் தந்தி தளர்ந்த யாழ்போல் ஆனேன். உன் அருள்கொண்டு என் உடல் மீண்டு எழவேண்டும். காமத்தை முழுதறிந்து நிறைய என் உள்ளம் கொள்ளும் எழுச்சியை உடல் சூடவேண்டும்."

இந்திரன் தயங்கி சற்றுநேரம் அனலென கொழுந்தாடியபின் அரக்குவெடிக்கும் ஒலியில் சொன்னான் "முழுதறிய விழைகின்றாய், நன்று. மானுடனே, மூன்று மெய்நிலைகளை முழுதறிய இயலாதென்று அறிக! ஏனென்றால் அறிதல் வடிவிலேயே அவை இருப்புகொண்டுள்ளன." நீலச்சுடர்கொண்டு மேலெழுந்த இந்திரன் கூறினான் "பிரம்மத்தை மானுடரால் முழுதறிய முடியாது. பிரம்மமென்று ஆவதொன்றே அதன் வழி. ஊழையும் முற்றறிய மானுடனால் இயலாது.

பிரம்மத்தை அறிவதே அதன் வழி. அரசே, காமத்தை அறியவும் மானுடனால் இயலாது. காமத்தை அறிந்தவன் பிற இரண்டையும் அறிந்தவனாவான்."

கைகூப்பி நின்றாலும் உறுதிமாறாத பங்காஸ்வன் சொன்னான் "இதுவன்றி பிறிதொன்றுக்குமாக நான் இங்கு எழவில்லை. இது அமையாவிடில் உயிர் வாழ்வதில் பொருளில்லை." இந்திரன் கனிந்து "மாளா விழுச்செல்வம், முழுமைகொள் பெருவாழ்வு, சிறப்புறு மைந்தர், அழியாக் குடிநீட்சி, மானுடச் சொல்லில் வாழும் தகைமை இவை அனைத்தையும் அளிக்கிறேன். இவ்விழைவை விலக்குக!" என்றான். "இவ்வேள்வி இவ்விழைவுக்கென்றே ஆற்றபட்டது. இதை மறுத்து இறைவனாகிய நீ விண் திரும்புவாயென்றால் இவ்வேள்வி அனலில் விழுந்து உயிர் துறப்பதே எஞ்சும் வழியென்றிருக்கும் எனக்கு" என்றான் பங்காஸ்வன்.

இந்திரன் புன்னகைத்து "காமத்தை உணர்ந்தறிய ஆயிரம் குறி கொண்டிருந்தேன். அதன்பின் ஆயிரம் விழிகொண்டவனாகி அக்காமத்தை செறிவாக்கிக்கொண்டேன். இன்னமும் காமத்தை கடந்தவனில்லை. நான் எப்படி உனக்கு அச்சொல்லை அளிக்க முடியும்?" என்றான். பங்காஸ்வன் "காமத்தைக் கண்டு கடப்பது என் வழி. நான் விழைவது காமத்தில் தளராமல் இருக்கும் உடல்நிலை. அழிவின்மை அமுதென கரந்திருக்கும் அரண்மனையில் வாழும் உன்னால் அதை எனக்கு அளிக்க முடியும்" என்றான்.

சலஃபர் சொன்னார் "அரசே, வேள்வியில் அனல்உண்டு எழும் தெய்வம் அளிப்பது தன் சொல்லை அல்ல. கடலின் துமியென்றே அது இங்கு தோன்றுகிறது. அதன் உப்பும் குளிரும் கடலுக்குரியவையே ஆகும். இங்கு சொல்லளியுங்கள்,

அதை ஆற்றுவது பிரம்மமே.” இந்திரன் தலையசைத்து “அவ்வாறே ஆகுக! காமநிறைவு கொள்க! அதற்குரியன நிகழ்க!” என்று சொல்லுரைத்து விண்மீண்டான்.

வேள்விக்களத்திலிருந்து வைரம்போல் உடல் கொண்டு மீண்டான் பங்காஸ்வன். கணுதோறும் முளைக்கும் முள்முருங்கை என்று ஆயிற்று அவன் ஆகம். நூறாயிரம் முறை காமத்திலாடினான். நூறு மைந்தரை ஈன்றான். தான் பெருகுவதை காணக்காண ஆணவம் கொண்டான். ஆணவம் காமக்கனலுக்கு காற்று. கரைதழுவும் கடலலைபோல் ஒவ்வொரு கணமும் மகளிரை தழுவிக்கொண்டிருந்தான். பின்பு ஒருமுறை இளமகள் ஒருத்தியின் அருகிருந்து எழுந்தபோது உணர்ந்தான், காமம் முழுதமையவில்லை என. ஏன் என வியந்த மறுகணம் எக்காமமும் முழுதமையவில்லை என்று அறிந்தான். முழுதமையாத காமமென்பது முற்றிலும் அமையாத காமமே என்று தெளிந்தான்.

அக்கணமே மஞ்சத்தறைவிட்டு வெளியே வந்து அங்கே நின்ற அமைச்சனிடம் “என் முதல் மைந்தனுக்கு முடிசூட்டுக!” என்று மட்டும் சொல்லிவிட்டு மேலாடையை எடுத்து இடையில் சுற்றிக்கொண்டு குளிர்ந்த காற்று சுழன்றடித்த விரிந்த முற்றத்திலிறங்கி நடந்து மறைந்தான். அவன் செல்வதை அமைச்சன் நோக்கி நின்றான். அவன் அதை முன்னரே எதிர்பார்த்திருந்தான். மூன்று தலைமுறைகளுக்கு முன் உணவின்மேல் பெரும்பித்து கொண்டிருந்த பங்காஸ்வன் மூதாதை பீதாஸ்வன் அதேபோல இருளில் இறங்கி மூழ்கி மறைந்ததை அறிந்திருந்தான். அதற்கும் முன் ஏழு தலைமுறை மூதாதையாகிய ஸ்வேதாஸ்வன் காவியம் மீது

பெரும்பற்று கொண்டிருந்தான். அவனும் அதே இருளைத்தான் நாடினான்.

**[ 12 ]**

காட்டுக்குச் சென்ற பங்காஸ்வன் தன்னந்தனிமையில் நடந்தான். நாடி அடைந்த ஒவ்வொன்றையும் நினைவிலிருந்து உதிர்த்தான். அடிக்கு ஒரு நினைவு என அகற்றி அகற்றி பலநூறுகாதம் மண்தொடாது விண்ணில் நின்று துடிக்கும் அனலென விழைவு மட்டுமே அவனுள் எஞ்சியது. அவன் சென்றடைந்த காடு இந்திரகுப்தம் என்று அழைக்கப்பட்டது. தன் விழைவுக்கென இந்திரன் அமைத்தது அது. அவன் விழைவென அவனை மீறி வளர்ந்து பரவி அவனை ஒரு சிறுதுளியாக்கும் விரிவுகொண்டிருந்தது.

அக்காட்டுக்குள் செங்குருதிப்பெருக்கென சென்று கொண்டிருந்த ஆறொன்றைக் கண்டான் பங்காஸ்வன். அதன் கரையில் நின்று செந்நீரின் சுழிப்பை நோக்கிக்கொண்டிருந்தான். ஓடும்புரவியின் உடலென, காற்றில்பறக்கும் கொடியின் நெளிவென, நெளிந்தாடும் தழலென. அப்பெருக்கில் ஒழுகிச் சென்றுகொண்டிருந்தன காய்களும் இலைகளும் நெற்றுகளும் சருகுகளும் நுரைக்குமிழிப்படலங்களும். மேலும் விழிகூர்ந்தபோது அவையனைத்தும் முகங்களென உடல்களென உருக்கொண்டன. காமம்கொண்டு புணர்ந்து நெளிந்தன அவை. பல்லாயிரம் மானுடர், விலங்குகள், பறவைகள், நாகங்கள். உடல் பின்னி திளைத்துக் கொப்பளித்து குமிழியிட்டு சுழன்றமைந்து நீரென்றே ஆகியிருந்தன.

அவ்வாற்றுக்கு அப்பால் இளம்பச்சை ஒளி பரவிய நிலமொன்றை அவன் கண்டான். அங்கிருந்த மரங்கள்

அனைத்தும் முலைகளென காய்த்து கனிந்திருந்தன. தோல்கதுப்பென தளிர்கள். மென்தசை வளைவுகளென தண்டுகள். பாறைக்குவையில் மென்மணல் குழைவில் காமமே ததும்பியது. உடல்பிணைந்து ஒன்றென ஆகி துய்த்து திளைத்தாடின அடிமரங்கள். அதுவே தன் இடம் என்று அவன் உணர்ந்தான். மறுகணம் அது ஒரு மயல்நீரோ என்று அஞ்சினான். நீ இழப்பதற்கொன்றுமில்லை. மயல்நீரென்றாலும் அதை நோக்கிச் சென்று அழிவதே உன் ஊழென்றால் பிறிதொன்றை நீ தெரிவுசெய்ய இயலாதென்று சொன்னது அவன் நுண்ணறிவு.

மும்முறை தயங்கி, பின் துணிந்து அவ்வாற்றில் குதித்தான். பெருக்கு அவனை அள்ளிச் சுழற்றி ஆழத்திற்கு கொண்டுசென்றது. நீந்தி மேலெழும்போது அலையொன்று அவனை அறைந்து மீண்டும் உள்ளிழுத்தது.

பன்னிருமுறை அவனை சுழற்றியும் அலைத்தும் கொண்டுசென்ற அவ்வாற்றிலிருந்து அருகணைந்த உடல்புணை ஒன்றைத் தழுவி நீந்தி கரைசேர்ந்தான். எழுந்து கரையில் நின்று நீரை உதறி ஆடைதிருத்தியபோது அறிந்தான், அவன் உடல் பெண்ணாகியிருந்தது. முலைகள் பருத்து கருங்கண் கொண்டிருந்தன. தோள் மென்மையாகக் குழைய கைகள் கொடியென நெளிய இடைவளைந்து தொடைபெருத்து ஒற்றிச்செல்லும் சிற்றடி வைத்து நடந்தான்.

தன் உடலையே திகைப்புடன் மீண்டும் மீண்டும் பார்த்துக்கொண்டான். கொழுமுலைகளை மென்வயிற்றை தொட்டபோது உள்ளம் திடுக்கிட்டு கைகூச விலக்கிக்கொண்டான். இடைக்குக்கீழ் எண்ணியபோது அனல்கொண்டு எரிந்தது அவன் உடல். அவன் நினைவறிந்த

நாள்முதல் எண்ணி எண்ணி ஏங்கி தேடித்தேடி அடைந்து மேலும் மேலுமென விழைந்த அனைத்தையும் அவனே கொண்டிருந்தான். ஆனால் அவையனைத்தும் பிறனெனத் தோன்றி அருவருப்பூட்டின. பிறர் கொண்டிருக்கையில் ஆறாவிழைவூட்டியவை தான் கொண்டிருக்கையில் ஒவ்வாததென ஆகும் விந்தை என்ன?

விழைவுகொண்டது அவற்றின்மேல் அல்லவா? அவையென தன்னை வெளிப்படுத்திய பிறிதொன்றின்மேலா? அது பெண்மை. நாணமென காமமென கன்னிமையென அன்னைமையென அமுதென நஞ்சென தன்னை நிகழ்த்திக்கொண்டிருக்கும் ஆடல். தெய்வம் குடியேற்றப்படாத சிலை வெறும் கல். இம்முலைகள், இத்தொடைகள், இந்த அல்குலுக்குப்பின் ஒரு பெண் இல்லை. மீண்டும் மீண்டும் அவன் உடல் கூசிக்கொண்டிருந்தது. ஏதோ ஒரு கட்டத்தில் குமட்டலெடுத்து வாயுமிழ்ந்தான். எதை அருவருக்கிறேன்? என் அகம் அமைந்திருக்கும் இந்த உடலையா? இதுவும் உடலே. இது உண்டு உயிர்வளர்க்கும், குளிர்வெம்மை உணரும், துயின்று விழிக்கும். இதன் இன்பங்களை என் அகம் அறியும். அக்கணம் சென்றுதொட்ட ஓர் எண்ணம் தேள்கொடுக்கென கொட்ட அவன் மீண்டும் வயிறு எக்கி வாயுமிழ்ந்தான்.

ஆம், இவ்வுடல் என்னுடையது. ஆனால் இது என்னை சொல்லவில்லை. கனவிலோ களிமயக்கிலோ நான் சொன்ன சொல்போன்றது இது. என்னால் பொருளேற்றம் செய்யப்படாதது. இதில் வெளிப்படுவது நான் அல்ல. இது என் வாய்க்குள் பிறர் எச்சில் துப்பப்பட்டு நிறைந்திருப்பதுபோல. மீண்டும் குமட்டி உமிழ்ந்து அப்படியே சோர்ந்து படுத்துக்கொண்டான். பொருளில்லாச் சொல். ஆனால் எல்லாச்

சொல்லும் பொருள்குறித்தன. கனவிலும் களியிலும் சொன்ன சொற்களும் அவனுடையவை அல்லவா? ஒருவேளை அவனுள் உறையும் ஆழத்துக்குரியவை அல்லவா அவை?

நீள்மூச்சுடன் எழுந்து நின்று எங்கு செல்வதென்று எண்ணினான். அறியாநிலமெதற்காவது சென்றுவிடவேண்டும். அங்கே பெண்ணென்றேயாகி நடிக்கவேண்டும். ஆம், அதுவொன்றே செய்வதற்குரியது. ஆணென நோக்கும் விழிகள்முன் பெண்ணென்று நிற்றலாகாது. பெண்ணுக்கு அளிக்கப்படும் நோக்குகளை என் ஆண்விழி எதிர்கொள்ளலாகாது. பெண்ணென எனைச் சூழும் காமத்தை ஆணென என் உள்ளம் எதிர்கொள்வதே உயிருடன் இறத்தல். அவன் அங்கிருந்து கிளம்பி ஷீரப்பிரபை என்னும் நகரை சென்றடைந்தான்.

அங்கிருந்த சந்தையினூடாக அவன் நடந்தபோது விழிகளனைத்தும் அவனை நோக்கி திரும்பின. ஒருபோதும் தன்மேல் பிறர்நோக்கு அவ்வண்ணம் குவிவதை அவன் உணர்ந்ததில்லை. அணிகொண்டு முடிசூடி அரசயானைமேல் செங்கோலுடன் அமர்ந்து நகர்வலம் வரும்போதுகூட. இன்று ஒவ்வொரு கணமும் அணியூர்வலம் செல்கிறேன். ஒவ்வொரு இடத்திலும் அரியணையில் அமர்ந்திருக்கிறேன். ஒரு களிமகன் "பேரழகுப் பெண் நீ. ஆணொருவன் உன்னுள் புகுந்துவிட்டிருக்கிறான். கடப்பாரையை விழுங்கிய நாகமென தோன்றுகிறாய்" என்று சொல்லி வெடித்துச் சிரிக்க பல விழிகள் நகைப்பில் ஒளிகொண்டன.

என் உடலின் நெளிவை உள்ளம் கொள்ளவில்லை. உள்ளம் உடலில் அசைவாக வெளிப்படுகிறது. அவன் உடல்கொண்ட நெளிவை உள்ளத்தாலும் நடிக்கலானான். இடை வளைகையில்

அவன் உள்ளத்தமைந்த தன்னுணர் உடலின் இடையையும் அசைத்தான். முலை குலுங்குகையில் அகமும் குலுங்கினான். எதிர்வரும் விழிகளை நோக்குகையில் இமைசரித்து ஓரவிழி கூர்த்து ஒல்கி நடந்தான். அத்தனை விழிகளுக்கு முன் அப்படி செல்வதே உகந்ததென்று விரைவிலேயே கண்டுகொண்டான்.

கசன் என்னும் பெருவணிகனின் மனைவிக்கு சேடியென அவன் சென்று சேர்ந்தான். “பேரரசியருக்குரிய அழகுகொண்டவள் என் பணிப்பெண்” என அவள் உவகையுடன் தோழிகளிடம் சொன்னாள். “நோக்கு, அவள் அணங்கோ யட்சியோ, யாரறிவார்?” என்றனர் தோழியர். “நோக்கினேன், ஒவ்வொரு அடியிலும் அவள் உடலென்றிருக்கிறாள். மானுடப்பெண்ணேதான்” என்றாள் வணிகன் மனைவி. அவன் பெண்களுடன் அணியறையிலும் அடுமனையிலும் நீராட்டறையிலும் இருந்தான். அவர்கள் பேசுவதை சிரிப்பதை ஒசிவதை ஒல்குவதை கூர்ந்து நோக்கினான். நோக்க நோக்க அவை அவன் உடலிலும் கூடின. நடிக்கும்தோறும் உள்ளம் உருமாறியது. உள்ளமென்பது ஒரு நடிப்பே என்று அவன் உணர்ந்தபோது உள்ளும்புறமும் பெண்ணென்று ஆகிவிட்டிருந்தான்.

பெண்ணுடலை அவன் நாளும் நோக்கியும் தொட்டும் அறிந்துகொண்டிருந்தான். அவை வெறும் மென்தசைகள் என்றாயின. அவர்களை நீராட்டி, அகில்காட்டி, அணிபுனைந்து, சுண்ணமும் மையும் பூசி அழகூட்டினான். அவர்களுடன் நிலவிரவுகளில் தோட்டங்களில் அமர்ந்து இசை கேட்டான். அவர்கள் தங்கள் நெஞ்சின் ஆழத்து அறைகளைத் திறந்து ஒளியையும் இருளையும் வெளியே எடுத்தபோது கேட்டிருந்தான். அவன் காமம் கொள்ளவேயில்லை என்பதை

பிறகெப்போதோதான் அறிந்தான். அவ்வறிதல் அவனுக்கு உவகையையே அளித்தது.

பிறகொருநாள் தனிமையில் நீராடிவிட்டு அவன் நீராழிப் படிகளில் மேலேறும்போது மேல்படியில் வணிகனின் இளமகன் நின்றிருந்தான். அவன் விழிகளை நோக்கியபோது அவள் உடல் நாணி குளிர்கொண்டது. விழிதாழ்த்தி அவனை கடந்து சென்றபோது உடலெங்கும் அவன் நோக்கு வருடிச்செல்வதை உணர்ந்தாள். தோள்கள் வெம்மைகொள்வதை, உள்ளுருகி உடல்நனைவதை அறிந்தாள். வெறுந்தரையில் கால்வழுக்கி விழுந்துவிடுவோமென்று அஞ்சினாள். சுவர்பற்றி நிற்கவும் இறுகி கூர்கொண்டு நின்ற முலைக்குவைகளுக்கு அப்பால் செறிந்தமைந்த குளிர்மூச்சை ஊதி வெளிவிடவும் விழைந்தாள்.

திரும்பி நோக்கவேண்டுமென எண்ணி நோக்கலாகாதென்று முகத்தை இறுக்கி இதோ நோக்கிவிடுவோம் என அஞ்சி நோக்கு நோக்கென்று கெஞ்சிய அகத்தை வென்று உதிரும் நீர்த்துளி என விலகி ஓடினாள். தன் அறைக்குள் சென்று கொலைமதம் கொண்டெழுந்த மத்தகத்தைப்போல் விம்மிய முலைகளுக்குமேல் கைகளை வைத்து அழுத்தியபடி மூச்சடக்கினாள். மெல்ல நரம்புகள் விடுபட காதுமடல்களில் இளவெங்குருதி படர, கண்கள் நீர்கொள்ள, மூச்சு சீறித்தணிய அமைந்தாள். தன்னை உணர்ந்தபோது அவள் இடக்கால் நரம்பு இழுபட்டு அதிர்ந்துகொண்டிருந்தது.

செறுக்கச்செறுக்க மிகும் காமப்பெருக்கின் முன் புதுவெள்ளமெழுந்த நதியின் மணற்கரைபோல அவள் கணந்தோறும் தன்னை காத்துக்கொள்ளவே முயன்றாள். அனைத்து முயற்சிகளும் சிலந்திவலையில் துடிக்கும் பூச்சியின் சிறகுகள் சிக்கிக் கொள்வதுபோல அமிழவே

செய்தன. கணந்தோறும் அவனையே எண்ணிக்கொண்டிருந்தாள். அவள் செயல்கள் பிழைத்தன. கை சென்ற இடத்திற்கு கண் செல்லவில்லை. கண் அறிந்ததை கருத்து தொடவில்லை. அவன் முன் செல்லும் தருணத்தை நூறுநூறாயிரம் வகைகளில் நடித்துக்கொண்டாள். நடிப்புகள் சலித்து எழுந்து அவன் முன் சென்று நின்றுவிட எண்ணினாள். அந்நினைப்பே கூச தலையசைத்து முகம் சிவந்தாள்.

அந்நூறுக்கும் அப்பால் என அது நிகழ்ந்தபோது பதறி உடல்வியர்த்து முலைக்குவையிடையே சுடுவியர்வை எழுந்து பனித்து இதழ்கள் தடித்து விழிகள் தழைந்து தள்ளாடினாள். அவன் கேட்ட ஓரிரு சொல் வினாக்களுக்கு குழறி தழைந்த குரலில் மறுமொழி அளித்தபின் ஓடி தன் அறைமீண்டு அமர்ந்து நெஞ்சிடிப்பை கேட்டுக்கொண்டிருந்தாள். மூடப்பெண், அறிவிலாப்பேதை என தன்னையே சலித்துக்கொண்டாள். பிழைகளைந்து மீண்டுமொரு சந்திப்பை நிகழ்த்துவதைப்பற்றி கனவுகண்டபடி சேக்கையில் முலைபுதைத்து விழுந்துகிடந்தாள்.

கூர்கொண்ட கனவு. முள்முனைமேல் பனித்துளி என நின்று நடுங்கியது அது. ஏழுநிறம் மின்ன வான்சூடி நின்றது. ஒருவன் அவளுள் பகுந்து விரிந்தான். அவன் இவனைப்போல் தோள்பெருத்தவன் அல்ல. முழவேந்திய பாணன். கண்களில் களிமயக்கு கொண்டவன். அவனோ நீண்ட உடல்கொண்டவன். நீண்ட கைகளில் நரம்புகள் பின்னியவன். வில்லவன். இவன் புரவிக்கடிவாளத்தை பிடித்து இழுத்து நிறுத்தும் சூதன். கரிய உடலில் வியர்வை வழிய ஒளிர்பவன். கூர்மீசை கொண்டவன் அவன். மெல்லுதடு அதிரும் இளமகன் இவன். அவன் குரல் முழவு. இவன் குரல் மயிலகவு. எங்கு கண்டேன் இவர்களை?

எப்படி அள்ளிக்கொண்டேன்? ஏன் ஊறி எழுகிறார்கள் என் ஆழ்சுனையில்?

பின் குற்றவுணர்ச்சியுடன் புரண்டுபடுத்து அவர்களை இணைத்து ஒற்றைஉருவாக்கிக் கொண்டாள். நூறுமுகன். முகம்பெருகும் ஆண்மகன். முகம்பெருக்கி அவனை புணரும் முதலாற்றல் நான். மானென களிறென குயிலென எறும்பென உமையைப் புணர்ந்தான் சிவன் என்கின்றன காவியங்கள். நீரென நெருப்பென புணர்ந்தாலும் தீருமா? ஒன்றென உருகி இணைந்தபின்னரும் அணையுமா? வென்று கால்கீழிலிட்டு மார்மீது நின்றாடவேண்டும். கொன்று கிழித்துண்டு மண்டை மாலைசூடி கூத்தாடவேண்டும். நீறுபூசி நெருப்பென சிதைமேலெழவேண்டும்.

நெஞ்சிலும் தலையிலும் அறைந்துகொண்டு கதறவேண்டுமெனத் தோன்றியது. முட்டுவேன்கொல்! தாக்குவேன்கொல்!. இச்சுவர்களை இடிப்பேன். எழுகிறது என் மதம்கொண்ட மத்தகம். இந்நகரை தூள்தூளென்றாக்குவேன். புழுதிசூடி உறுமியபடி இங்கே சுழன்றலைவேன். குருதியாடியே வெறிதீரவேண்டும். என்னென்ன எண்ணங்கள்! எண்ணங்களில் வாழும் தெய்வம் கணம்தோறும் கோடியென பெருகும் வல்லமைகொண்டது. எண்ணம் பெருகி இரவாகிறது. இருளாகிறது. கங்குல்வெள்ளம் கரையிலாதது. காக்கும் புணையிலாதது கங்குல்வெள்ளம்.

கனவுகளில் அவன் வந்தபோதுதான் அவன் குறுமீசையை, மென்முடிபரவிய கன்னங்களை, விரிந்த தோள்களை, புயங்களிலோடிய நீலநரம்பை, மார்பில் படர்ந்த முடியை, வயிறு நோக்கி அது குவிந்திறங்கிய பொழிவை அத்தனை கூர்மையாக அவள் நோக்கியிருந்தது அவளுக்கே தெரிந்தது. அவன் கண்கள்

அவள் ஆயிரம் பிறவிகளில் அறிந்தவைபோல மிக அருகே வந்து இளநகை ஒளிசூடி நின்றன. விழித்தெழுந்ததும் ஏனென்றறியாமல் அவள் ஏங்கி அழுதாள். அழுதுகுளிர்ந்தபோது உள்ளம் தித்தித்தது. உடல் அவ்வினிமையை அள்ளி விரல்முனைவரை நிறைத்துக்கொண்டது.

அவன் கையில் அவள் சென்றமைவது முன்குறிக்கப்பட்ட கணமென அவள் அது நிகழ்ந்தபோது அறிந்தாள். அதுவரை ஒவ்வொரு கணத்தையும் ஒரு முழு வாழ்வென ஆக்கும்பொருட்டே அந்நாடகங்கள் அனைத்தும் நிகழ்ந்தன என்று உணர்ந்தாள். எத்தனையோ முறை கூடிக்களித்திருந்தாள். ஊடிப்பிரிந்து கலுழ்ந்து தனித்து மீண்டும் கண்டு தழுவியிருந்தாள். எவருமில்லா நிலங்களில் அவனுடன் வாழ்ந்தாள். மேடைமேல் ஏறிநின்று பெருந்திரளிடம் இவன் என்னவன் என அறிவித்தாள். மைந்தரைப்பெற்று முதுமகளாகி மறைந்தாள். இளமகளென உருக்கொண்டு அவன் கைவிரல்பற்றி துள்ளிக்குதித்து நடந்தாள். மதலையென அவன் மடியில் கிடந்தாள்.

அவன் அவள் கைகளைப் பற்றிய நாளில் வளையல்கள் உடைபட கையை இழுத்தபடி “வேண்டாம் வேண்டாம்” என்று மூச்சிரைத்தாள். அன்புமொழி சொன்னபடி அவளை இழுத்து அவன் தன் உடலுடன் இணைத்துக்கொண்டான். “விலகுக... வேண்டாம்” என அவள் மூச்சுவிட்டுக்கொண்டிருந்தாள். அச்சொற்கள் பொருளிலாதொலிக்க அவள் உடல் அவன் உடலுடன் ஒட்டிக்கொண்டது. ஒவ்வொரு உறுப்புக்கும் அவற்றுக்குரிய தனிக் காமம் இருந்தது. கருங்கூர் எழ விம்மின முலைகள். தளர்ந்து நிற்கவியலாதாயின கால்கள்.

நோக்கிழந்தன விழிகள். மூக்கு ஆயிரம் மணங்களை அள்ளிச்சேர்த்தது.

தேனில் திளைக்கும் புழுவென காமத்திலாடுவதை அவள் முன்பு அறிந்திருக்கவே இல்லை. இதற்குத்தான் அவ்வெழுச்சிகளா? விலகி எதிர்ஓடி எட்டுத்திசைகளையும் சுற்றி வந்தமைந்தால்தான் இது இத்தனை இனிக்குமா? அவன் கைகளால் உடல் மீட்டப்பட்டாள். பற்றி எரிந்தது அவள் புரம். நின்றெரிந்தன காவல்மாடங்கள். சரிந்து மண்ணறைந்து விழுந்தன கோட்டைச்சுவர்கள். கருவூலப்பொன் உருகிக் குழம்பாகியது. ஊற்றுகொண்டன அனைத்து நீராழிகளும். ஆறுகளனைத்தும் கரைமீறிப் பரவின. தன்னை காமத்திற்கு முற்றளித்தாள். காமத்திற்குள் பிறந்து இறந்து மீண்டும் பிறந்துகொண்டிருந்தாள். விரிந்து பரவி அவள் நிலமென்றானாள். அதில் சிறுகால்களை வைத்து துள்ளிக்குதித்து களித்துக்கொண்டிருந்த சிறுமைந்தனை உவகையுடன் நோக்கிக்கொண்டிருந்தாள்.

# கிராதம் - 53

**[ 13 ]**

முதற்காமத்திற்குப் பின் பங்காஸ்வன் தன்னை முழுதும் பெண்ணென்றே உணர்ந்தான். எங்கோ கனவின் ஆழத்தில் சிலகணங்கள் ஆணென உணர்கையில் அஞ்சி விழித்தெழுந்து நெஞ்சு துடிக்க அமர்ந்திருந்து நீர் அருந்தி மீள்வான். ஆனால் ஆணென்றிருந்த நினைவு அவன் புலன்களின் ஆழத்தில் இருந்தமையால் உடலறிந்து உள்ளம் அறியாது காமத்தில் ஆண்மை செல்லும் வழிகளிலெல்லாம் முன்னரே சென்று

காத்திருந்தது அவன் உடல். முற்பிறப்பு நினைவுகளால் செலுத்தப்படுபவன் கண்டடையும் வாழ்ந்த நிலமும் அறிந்த முகங்களும்போல.

பெண்ணென்றாகி அவனை நிறுத்தியது அப்பெண்ணுடல். அது அறிந்து அடைந்து திளைத்தவற்றை அவன் உள்ளுறைந்ததும் கொண்டது. வணிக இளைஞன் செல்வந்தர்குடியில் பிறந்த இளைஞர்களைப்போல உடலறிந்ததுமே காமத்தில் விழுந்தவன். பெண்களைக் கண்டு கடந்துகொண்டே இருந்தவன். அவன் அறிய அறிய கடக்கவியலாத விரிவாக அவள் இருந்தாள். "உள்ளே நுழைந்தவர்களை வெளியே விடாத புதிர்வழிக்கோட்டை அவள். அவளுக்குள் அறிந்துமுடிக்கமுடியாத ஏதோ ஒன்று உள்ளது" என்று அவன் நண்பர்களிடம் சொன்னான்.

"அது என்ன என்று ஒவ்வொருமுறையும் என் அகத்தை கூர்தீட்டி வைத்திருக்கிறேன். என் விழிப்பில் ஒன்று காமத்தில் திளைக்கையிலும் ஒன்று விலகி நோக்கியிருக்கிறது. மீண்டு வரும்போது விலகியிருப்பது பேசத்தொடங்குகிறது. அது கண்டவற்றை, தொட்டுத்தொட்டு சேர்த்தவற்றை. ஒவ்வொருமுறையும் ஒன்று" என்று அவன் சொன்னபோது அவர்கள் திகைப்புடன் நோக்கியிருந்தனர். "இன்று ஒன்று தோன்றியது. அவள் அறியாத ஆணின் ஆழம் என்பது இல்லை. உடலில் உள்ளத்தில் உள்ளம் கடந்த துரியத்தில். அவள் முன்னரே அங்கு சென்றுமீண்டிருக்கிறாள்."

"ஒருவேளை காமத்திலாடி சலித்த முதுபரத்தை அந்தத் தெளிவை அடையக்கூடும். ஆனால் அவள்கூட ஆண்காமத்தின் அடுக்குகளையே அறிந்திருப்பாள். நாம் சூதுக்களத்தில் பொற்கோளில் சொல்லாடலில் அடையும் நுண்மைகளை

அவள் எப்படி அடையக்கூடும்? இயல்வதே அல்ல அது” என்று அவன் சொன்னான். “அச்சமூட்டுகிறது அவள் நோக்கு. அங்கே நாம் ஆடையின்றி மட்டுமே நின்றிருக்கமுடியும்.” அவன் அணுக்கத்தோழன் சொன்னான் “அவ்வண்ணமெனில் அவளை விட்டு விலகுவதே உகந்தது. அவளுக்கு அறியாத்தெய்வங்களின் துணை உள்ளது.” அவன் சிரித்து “அச்சத்தைப்போல் பெரும் கவர்ச்சி பிறிதில்லை. இனி பிறிதொரு பெண்ணை என்னால் எண்ணவும் முடியாது. தோழனே, கூர்வாள் கொண்டு போர்க்களம் பயின்ற பின்னர் பயிற்சிக்குரிய மரவாளை கையிலெடுக்கவும் கூசுவோம்” என்றான்.

ஆனால் அவள் அவனை எளிதில் கடந்து மறுபக்கம் சென்றாள். அவன் பொருள் ஒழிந்து சலிக்கத்தொடங்கியதும் பற்றவைத்து இறுதியையும் கொள்ளமுயன்றாள். அதன்பொருட்டு சற்று விலக்கம் காட்டினாள். பெருகிய எழுச்சியுடன் அவன் மீண்டும் அருகணைந்தான். ஊடிச் சினந்தும் அருகணைந்து தழுவியும் அவனை பெருக்கிப்பெருக்கி துளிஎஞ்சாது துய்த்தாள். நழுவும்பொருளை அள்ளிப்பற்றும் பதற்றத்திலேயே அவனை வைத்திருந்தாள். பற்றப்பற்ற நழுவுமென்று அவனை அறியவைத்தாள். உச்சத்தில் முற்றிலும் ஒழிந்து அவன் நின்றபோது இரக்கமின்றி அவனை உதிர்த்துவிட்டுச் சென்றாள்.

அவனை உதிர்ப்பதைப்பற்றிய எண்ணம் அளித்த உவகையை அவளே திகைப்புடன் நோக்கினாள். ஒழிந்த கலத்தை வீசுவதில் புதுக்கலம் கொள்வதைவிட பேரின்பம் உண்டென்று பிறர் சொல்லியிருந்தால் ஏற்றிருக்கமாட்டாள். நூற்றுக்கணக்கான முறை வெவ்வேறு தருணங்களில் வெவ்வேறு உணர்ச்சிகளுடன் அவனை விடுத்தாள். சொற்களை

கூட்டிக்கூட்டி அப்போது சொல்லவேண்டியவற்றை யாத்து நினைவில் நிறுத்திக்கொண்டாள். ஒவ்வொரு சொற்கோவையையும் நுண்சொல் உரைக்கும் தவத்தான்போல சொல்லிக்கொண்டே இருந்தாள்.

ஆணவத்தின் உச்சத்தில் நின்று "நீ எளியோன். எனக்கு இணையானவனே அல்ல. உன் காமத்தின் உச்சத்தில் மட்டுமே நீ என்னுடன் ஓடமுடியும். புள் மேல் காதல்கொண்டால் தவளை தாவி அழியும்" என்றாள். தன்னிரக்கத்தின் கீழ்ப்படியில் நின்று "எளியவள், நீங்கள் செல்லும் தொலைவு மிகுதி. என்னுடன் இருந்தால் இழிவும் துயருமே மிஞ்சும். மறந்துவிடுங்கள். இனியொரு பிறவியில் அணுகுவோம். அன்று நானும் இணையானவளாக இருப்பேன். இன்று சொல்கிறேன், இப்பிறவியில் பெண்ணென உங்களால் நிறைந்தேன். இனியொரு எண்ணம் எனக்கில்லை" என்று கண்ணீர் வடித்தாள்.

வஞ்சம் கொண்டு சீறி "என்னை வெறும் உடலென்று நுகர்ந்தவர் நீர். சொன்ன சொற்களை நான் ஒருபோதும் மறந்ததில்லை. என்னுடன் சோலையில் இருக்கையில் உங்கள் குலமூத்தார் ஒருவரின் குரல்கேட்டு எழுந்து ஒளிந்தீர். அன்று நான் இழிந்தேன். அவ்விருளில் இருந்து வெளிவந்ததே இல்லை நான்" என்றாள். கனிந்து "இது வாழ்க்கையின் ஒரு கட்டம். இது இப்படியே கடந்துசெல்வதே முறை. தேர்க்கு அருகே சோலைமரம் ஒன்று எப்போதும் நின்றிருக்கவேண்டுமென்று விழைவது குழந்தையியல்பு. ஆணென்று நின்று கடந்துசெல்க!" என்றாள்.

அந்த அத்தனை நடிப்புகளிலும் முழுதும் ஈடுபட்டு உணர்வுநிலைகளின் உச்சங்களில் நின்று திளைத்தாள். அவள் முகம் ஒவ்வொரு தருணத்தில் ஓர் உணர்வின் உச்சத்தில்

நெளிந்துகொண்டிருப்பதைக்கண்டு தோழியர் அவளுக்கு அணங்கு கூடியிருக்கிறதென்று எண்ணினர். நடித்து நடித்து அத்தருணம் மழையொழுகிய மலைப்பாறைபோல தேய்ந்து கருக்கழிந்தபோது அதில் சலிப்புற்றாள். அவனை மிக எளிதாக வென்று கடந்தாள். நுரைத்துத் ததும்பி தன் உச்ச உறவொன்றிலிருந்து அவன் விலகியபோது உதட்டுச்சுழிப்புடன் முகடுநோக்கி பேசாமல் கிடந்தாள்.

அவன் அவள் புன்னகையைக் கண்டதுமே அதிர்ந்து நோக்கை விலக்கினான். பின்னர் "என்ன? என்ன?" என்று மீண்டும் மீண்டும் கேட்டான். அவள் மறுமொழி சொல்லாமல் எழுந்து ஆடை அணிந்தாள். "சொல், என்ன?" என்று அவன் கேட்டான். அவள் ஒன்றும் சொல்லாமல் திரும்பி விலகிச்சென்றாள். அவனை வென்றுகடந்துவிட்டோம் என்று அப்போது உணர்ந்தாள். உடம்பெங்கும் மதுக்களிபோல் ஒன்று ததும்பியது. கண்கள் மங்கலடைய கால்கள் தடுமாறின. எவரிடமாவது நகையாடவேண்டும்போல எவரையாவது தழுவவேண்டும் போலிருந்தது. காமத்தின் உச்சங்களுக்கு ஒருபடி மேல் அந்நிலை என்று உணர்ந்தாள். காற்றுபட்ட மலைச்சுனைபோல் சிலிர்த்துக்கொண்டே இருந்தாள். அடுமனைக்குச் சென்று அங்கிருந்த பெண்களிடம் நகையாடினாள். அவர்களை தழுவிச் சிரித்தாள். அவளுக்குள் பிறிதொரு அணங்கு குடிகொண்டுவிட்டதென்று அவர்கள் எண்ணினர்.

அவனை முற்றிலும் தவிர்க்கலானாள். அவனைத் தவிர்ப்பது அத்தனை எளிதென்று அப்போதுதான் உணர்ந்தாள். அவனை தன் அகம் முற்றாக முன்னரே தவிர்த்துவிட்டிருந்தது என்று அறிந்தாள். முதலில் அவன் கடும்சினம் கொண்டான். அவளை சந்தித்து மதவேழத்தின் உறுமலுடன் "ஏன் என்னை

தவிர்க்கிறாய்? என்ன ஆயிற்று உனக்கு?” என்றான். அந்த ஆற்றலுக்கு அடியிலிருந்த அச்சம் அக்குரலுக்குள் எங்கோ தெரிந்தது. காற்றுக்குள் மழை இருப்பதன் குளிர்போல. அது அவன் ஆண்மையின் நிமிர்வை மைந்தரின் தோரணையாக ஆக்கி அவளை புன்னகைக்க வைத்தது. “ஒன்றுமில்லை” என்று சொல்லி அவள் கடந்துசென்றாள்.

அவன் மேலும் மேலும் சினம்கொண்டான். அவளை அச்சினம் ஒன்றும் செய்யாதென்று உணர்ந்த ஒருகணத்தில் உடைந்து “என்னை தவிர்க்காதே. நான் உனக்கென உயிர்வாழ்பவன். உன் முகமன்றி பிறிதில்லை என் நெஞ்சில். நீ என்னை விடுத்தால் மண்ணில் விழுந்து மட்கி புழுதியாவேன்” என்றான். அவள் மெல்லிய இளிவரல் உள்ளுக்குள் ஒளிந்த கனிவுடன் “என்ன சொல்கிறீர்கள்? ஆண் என நின்று பேசவேண்டாமா? இச்சொற்கள் என்னை துன்புறுத்துகின்றன” என்றாள்.

அவன் உடைந்தழுது “என்னை கொன்றுவிடாதே” என்று கைகளை நீட்டினான். அக்கணத்தில் தன்னை அன்னையென விரித்து “ஏன் இப்படி பேசுகிறீர்கள்? உங்கள் நலனன்றி பிறிதொன்றும் நான் கருதவில்லை” என்றாள்.
கடந்துசென்றபோது அவள் கால்நகம் ஒன்று மட்டும் புன்னகைத்துக்கொண்டிருந்தது. அவன் அதைமட்டும் கண்டான். இடிவிழுந்து எரியும் பனைபோல அவன் அங்கே நின்றான். அத்தனை அன்னை தெய்வங்களாலும் இளிவரலுக்காளானவன். அத்தனை ஆண் தெய்வங்களாலும் கனிவுடன் குனிந்து நோக்கப்பட்டவன்.

அவன் மீண்டும் மீண்டும் அவளிடமே வந்தான். நோயுற்று உடல்மெலிந்து விழிகள் பழுத்து இதழ்கள் கருகி நடுங்கும் உடலுடன் அவள் செல்லும் பாதையில் காத்து நின்றான்.

கண்கள் இறைஞ்சின. பின் அவை வெறும் பொருளற்ற நோக்குகள் மட்டுமாயின. பின் நோக்கும் அழிந்து இரு வெண்சிப்பிகளென்றே எஞ்சின. அவள் அவனை கடந்துசெல்கையில் உடல்கொள்ளும் ஆழ்ந்த உவகையில் திளைத்தாள். குட்டியைக் கிழித்து உண்டபின் நாவால் குருதியை நக்கும் அன்னைப்பன்றியின் நிறைவு. அவள் உள்ளத்தில் எழும் பாதைகளில் எல்லாம் அவன் எங்கோ நின்றிருந்தான். அவன் நோக்கு பரவிய மண்ணையே அவள் மிதித்து நடந்தாள்.

அவன் அளித்த உவகைகளும் பொருளிழக்கலாயின. புத்தாடை கருக்கழிந்து வண்ணமிழப்பதுபோல. அவள் பெருவணிகனின் நண்பனின் மைந்தனுடன் காதல்கொண்டாள். அக்காதலை முதற்காதலன் காணவேண்டுமென்று விரும்பினாள். அவனுடன் இருக்கையில் முதற்காதலனின் நோக்கு கதவுக்குமிழ்களின், கதவுத்துளைகளின் ஒளித்துளிகளில் இருப்பதாக உணர்கையில் நரம்புகள் இழுபட்டு உடல்கூசி உள்ளம் கூர்ந்து உச்சம்கொண்டாள். காமப்புளைவின் தருணங்களில் சாளரக்கதவு முனகினால் திரைச்சீலை நெளிந்தால் உடல்கொள்ளும் மெய்ப்பும் விழிகசிய கால்வெள்ளை கூச எழும் விதிர்ப்பும் காமத்தின் அறியாச் சுவைகளென்றிருந்தன.

பின்னர் அவள் காதல்கள் ஒவ்வொன்றும் ஒன்றுக்கு எதிரான பிறிதொன்றென இருந்தன. உணர்ச்சிப்பெருக்குடன் ஒருவனை அடைந்தாள். தெய்வப்படையல் என தன் உள்ளத்தையும் உடலையும் அவனுக்களித்தாள். எஞ்சலாகாது எதுவுமென்று சூளுரைகொண்டாள். இதுவே இறுதியென்று எண்ணி உருகி அவனுடனிருந்தாள். அவளுக்குள் அந்தச் சிறுபல்லி அமர்ந்து நொடிப்பொலி எழுப்பியதை அவள் கேட்டுக்கொண்டுமிருந்தாள்.

அந்த மந்தண ஒலி அத்தருணத்தின் நெகிழ்வுக்கு மேலும் இனிமையை அளித்தது.

பின் கசந்து ஊடி பிரிந்தாள். அதற்கென்றே தருணங்களை அவளுள் அமர்ந்து தேடிக்கொண்டிருந்தது பிறிதொரு உள்ளம். அதைக் கண்டடைந்ததும் சேர்த்துவைத்த சொல்லனைத்தையும் அதன்மேல் பெய்தது. வளர்த்தெடுத்து அனலென்றாக்கியது. தன்னிரக்கமும் பகைவெறியும் கொண்டு கொதித்தாள். கூர்சொற்களால் குத்தி குருதிபெருக்கினாள். தன் குருதியை உடன்கலந்து குடித்து மயங்கினாள். பிரிதலின் பெருந்துன்பத்தின் மயக்கில் திளைத்தாள். அணிகளைந்து ஆடைகலைந்து சொல்குலைந்து துயர்சுமந்து பிச்சியென்றாகி அமர்ந்திருந்தாள். இறப்பின் கூர்விளிம்புகளில் கால்கட்டைவிரல் நகங்களை மட்டும் ஊன்றி நடந்தாள். இருண்டிருண்டு சென்ற அடியிலிகளில் முடிந்தவரை சென்றாள்.

எத்தனை தொலைவுக்கு இருண்டிருண்டு உள்வாங்குகிறாளோ அத்தனை விசையுடன் எரிந்தெழமுடியுமென்று அறிந்திருந்தாள். பிறிதொருவனைக் கண்டு அவனை பதினாறு கைகளால் தழுவி இறுக்கி அவன் மார்பில் முகம்பொத்தி தன்னை இரங்கி கலுழ்ந்து கண்ணீர்வார்ந்து குலுங்கி அதிர்ந்து ஓய்ந்தபோது எழும் தனிமைக்கு காமத்தைவிட நூறுமடங்கு சுவை இருந்தது. அவன் அளிக்கும் முத்தங்களை பெற்றுப்பெற்று மழைகொண்ட பாலைநிலமெனக் குளிர்ந்து மெய்ப்புகொண்டு தளிர்பரவி பரந்துகொள்ளும் காமப்புளைவென்பது தெய்வங்கள் திகைத்து விழித்துச் சூழ்ந்து நின்றுநோக்கும் வெறிகொண்டிருந்தது. முடிந்து உடல்கள் ஓய்ந்தபின்னரும் காற்றில் அவ்வசைவு எஞ்சியிருந்தது.

பின்னர் அந்நாடகங்களில் அவள் தேர்ந்த நடிகையென்றானாள். ஒவ்வொன்றும் பிசிறின்றி முழுமைகொண்டிருந்தன. அம்முழுமை சலித்தபோது அவள் அதன் விளிம்பை கலைத்தாள். அக்கலைவை சீர்செய்யும்போது பதைத்தாள். அடைந்தவற்றை இழந்து ஏங்கினாள். ஒருகணத்தில் பேதையென்றும் மறுகணத்தில் கலைதேர்ந்த பரத்தை என்றும் இக்கணத்தில் அன்னை என்றும் அக்கணத்தில் குருதிவிடாய்கொண்ட அணங்கு என்றும் மாயம் காட்டும் அவளை திருப்பத்திருப்ப ஒளிபெறும் வைரம் என்று உணர்ந்தனர் ஆண்கள்.

அவள் உறிஞ்சி உதிர்த்த ஆண்களின் நிரையை அனைவரும் அறிந்திருந்தனர். அதனாலேயே அவளை நோக்கி மேலும் ஈர்க்கப்பட்டனர். ஒவ்வொருவரின் ஆணவத்தையும் அவள் சீண்டினாள். தாங்கள் உதிர்க்கப்பட முடியாதவர்கள் என்ற அவர்களின் நம்பிக்கை அவர்களை அவளிடம் அழைத்துவந்தது. வெண்ணைக்கல் சிற்பம் செய்து தேர்ந்தபின் களிக்கல்லிலும் மாக்கல்லிலும் தேர்ந்து கருங்கல்லை வந்தடைவதுபோல அவள் மேலும் மேலும் இறுகிய ஆண்களை சந்தித்தாள். வென்று மேலே சென்று திரும்பிநோக்கியபோது தன் கரும்பனையின் அடியில் உதிர்ந்து கிடக்கும் மண்டையோடுகளைக் காணும் யட்சி என அவள் விழிகள் மின்னின.

நெஞ்சு ஏறியிறங்க “ஆம்” என்று அவள் சொல்லிக்கொண்டாள். அக்கணத்தில் திளைப்பதற்காக தன்னிரக்கத்தின் படிகளில் மெல்ல இறங்கினாள். “நிறைவடையாதவளின் தனிமை” என்றாள். “எளியவள். எப்போதும் தாக்கப்படுபவள். தெய்வங்களால் கைவிடப்பட்டவள். பிறிதொன்றை நான்

செய்யவியலாது. இச்செய்கைகளின் பழி சுமந்து என் உள்ளம் எடைகொள்கிறது.” அத்துயரை தன்குருதியை நக்கி உண்ணும் பெண்புலி என சுவைத்துச் சுவைத்து நிறைந்தபின் உள்ளெழுந்த ஆணவத்துடன் குகையதிர உறுமினாள். “ஆம், நான் பெண். பெண்ணென்பதனாலேயே இவையனைத்தையும் ஆற்றத்தக்கவள். தெய்வங்கள் அறிக!”

**[ 14 ]**

பல ஆண்டுகளுக்குப்பின் பெண்ணுருவில் பங்காஸ்வன் தன் அரண்மனையை வந்தடைந்தான். அரண்மனைக் கோட்டைக்குள் இயல்பாக நுழைந்த அவளைக் கண்டு காவலர் தடுத்தனர். “நான் உங்கள் அரசன். பெண்ணுருக்கொண்டவன்” என்று அவன் சொன்னான். தன் கைகளில் பொறிக்கப்பட்ட குலக்குறிகளைக் காட்டியும் அவர்கள் அவனை அறியவில்லை. துணைக்கழைத்த ஏவலரும் அடையாளம் கண்டு கொள்ளவில்லை. செய்தியறிந்து வந்த நூறு மைந்தருக்கும் அவனை அறியக்கூடவில்லை.

அமைச்சர் விபூதர் “மானுட உள்ளம் விழைவுகளும் ஐயங்களும் அச்சங்களும் கொண்டது. அம்மாசுபடாத உள்ளம் கொண்டவை விலங்குகள். அரசர் ஊர்ந்த புரவியாகிய பாண்டகம் இங்குள்ளது. பிற எவரையும் தன்மேல் ஏற அது ஒப்பியதில்லை. அது சொல்லட்டும்” என்றார். அவ்வெண்புரவி கொண்டுவரப்பட்டது. பாண்டகம் அவளைக் கண்டதுமே கனைத்தபடி ஓடிவந்து அருகணைந்து அவள் மேல் கழுத்தை உரசி நின்றது. அப்புரவியின் உளமறிந்த சூதன் “அரசே” என்று அழைத்து வணங்கினான். அவள் அதன்மேல் ஏறி அரண்மனைமுற்றம் நோக்கி சென்றாள்.

பெண்ணுருக்கொண்டு வந்தது அரசனே என்று அரண்மனை ஏற்றது. ஆகவே அவை ஒப்பியது. அதை அந்நகரும் நாடும் ஏற்றன. அரண்மனைச்சூதர் நாடுசெழிக்கும்பொருட்டு தவம்செய்து அரசர் பெண்ணுருப்பெற்று மீண்டிருப்பதாக பாடினர். அதை ஏற்று மக்கள் உவகைகொண்டு அரசியை வாழ்த்தினர். கமலத்வஜத்தின் அரசியென அமர்ந்து மீண்டும் கரையற்ற காமத்திலாடத்தொடங்கினான் பங்காஸ்வன்.

குளிர்விதை தொங்கும் காளையென மதமணம்கொண்ட இளையோர், தோள்திமிர்த்த மல்லர், நீள்கைகொண்ட வில்லவர், களம்நின்று பொருதும் வாள்வீரர் என வீரர்கள் அரண்மனைக்கு கொண்டுவரப்பட்டனர். நாவன்மைகொண்ட கவிஞர், இன்குரல் பாடகர், விழிமயங்கும் ஓவியர் என ஒவ்வொருநாளும் அழைத்துவரப்பட்டனர். நாளும் பதின்மருடன் அவள் காமத்திலாடினாள். பவளப்பேழைக்குள் அமைந்த சின்னஞ்சிறு இந்திரகோபம். சருகுக்குள் ஒளிந்த அனல்துளி. எரிந்தெரிந்து சுவை அறியும் சிறுநா. அனல்போல தான் பெருகுவது பிறிதில்லை. கொள்ளும்தோறும் பெருகும் களியாட்டென காமம் தழைத்தது.

நூறு மைந்தரை ஈன்றாள். நூறாவது மைந்தனுக்கு முலையூட்டி படுக்க வைத்து குனிந்து அம்முகத்தைப் பார்த்ததும் மீண்டும் அவள் முதுகிலொரு தொடுகையென எதையோ உணர்ந்தாள். அவ்வண்ணமே மேற்கு வாயில் திறந்து வெளியே சென்று பணிந்து நின்ற அமைச்சரிடம் “நகர்முடியை மீண்டும் மைந்தனுக்கு அளியுங்கள்” என்று சொல்லி நடந்து காடேகினாள்.

ஆணென்று அமைந்து பங்காஸ்வன் பெற்றெடுத்த நூறுமைந்தரும் பெண்ணென்று ஈன்ற நூறுமைந்தரும்

தங்களுக்குள் பகைமை கொண்டனர். பெண்ணின் மைந்தர் தங்கள் தந்தையரின் குலத்தையும் குடியையும் பொருளையுமே உரிமை கொண்டவர் என்றனர் தந்தையின் மைந்தர். அன்னையென வந்ததும் பங்காஸ்வனே என்பதனால் மணிமுடிக்கு தாங்களும் உரிமை கொண்டவரே என்றனர் பெண்ணீன்றவர். அவர்களுக்குள் எழுந்த பூசலைத் தீர்ப்பதற்கு முன்னறி நெறிகள் எவையும் சான்றோர் அறிந்திருக்கவில்லை. நிமித்திகர் வரைந்த பன்னிரு களங்களில் வந்தமைந்த தெய்வங்களுக்கும் விடை தெரிந்திருக்கவில்லை.

ஆண் பெற்ற மைந்தர் தங்களை அழித்துவிடக் கூடுமென்று அஞ்சி பெண் பெற்ற மைந்தர் தங்கள் தந்தையரை துணை கூட்டினர். அவர்களோ நாடுகளெங்குமிருந்து திரட்டப்பட்ட தகுதிமிக்க பெருவீரர்கள். அவர்கள் படைகொண்டு சென்று தந்தை பெற்ற நூறுமைந்தரை சூழ்ந்து போரிட்டு கொன்றொழித்தனர். அதன்பின் எஞ்சிய தாய் பெற்ற நூற்றுவருக்குள் பூசல் தொடங்கியது. நூறு மைந்தருக்கு பல்லாயிரம் தந்தையர் குருதியுரிமை கோரினர். மன்று வந்து சான்று சொல்ல அன்னை இருக்கவில்லை. பல்லாயிரம் தந்தையர் பலநூறு குடிகளைச் சேர்ந்தவர்கள். குலங்களெனத் திரண்டு ஒருவருக்கொருவர் போரிட்டனர். ஒருவருக்கொருவர் வெட்டி முற்றிலும் கொன்றொழித்து மைந்தரென எவருமில்லாதாகினர்.

காட்டில் தனித்து சென்ற பங்காஸ்வன் அவர்கள் போரிட்டு மறைந்ததை அறிந்திருக்கவில்லை. மீண்டும் அச்செந்நதிப்பெருக்கருகே வந்து நின்றபோது அங்கு குடில் அமைத்து தங்கியிருந்த பிருங்கர் என்னும் முனிவரைக் கண்டாள். அவர்முன் சென்று வணங்கி நின்றாள். “காமக்

கடும்புனல் கடந்து அப்பொன்னுலகை எய்துவதற்கென இங்கு வந்தேன். இந்நீரில் என் உடல் அமிழ மறுக்கிறது. எனவே இங்கு குடிலமைத்து தங்கியிருக்கிறேன்" என்று அவர் சொன்னார். "அதைக் கடக்கவே இங்கு வந்தேன் நானும்" என்று அவள் சொன்னாள்.

"நீ இங்கு வந்தது என் ஊழ் போலும். இன்று நான் ஒன்றை அறிந்தேன்" என்றார் பிருங்கர். "நான் ஆற்றில் நீராட இறங்குகையில் அங்கு இடையளவு நீரில் ஒரு இளம்பசு நின்றது. என்னைக் கண்டு அது கரையேறாது நீராடியது. அப்போது கரைமேல் வந்து நின்ற அன்னைப்பசு ஒன்று காமம் கரையாத ஆண்முன் கன்னியர் நின்றிருக்கலாகாது மகளே, கரையேறுக என்றது. அப்போது அறிந்தேன் நான் எங்கு தோற்றேன் என்று. கரைத்தழிப்பதை புதைத்தழிக்க இயலாது."

"ஆம், எனக்கும் அனலடங்கி உளம் மீளுமென்றால் நன்றே" என்றாள். அவருக்கு மனைவியாக அக்குடிலில் தங்கினாள். உதறிக்கடந்த காமமனைத்தும் உடலுக்குள் கரந்திருந்த முனிவர் அவளுடன் அக்குடிலில் கணந்தோறும் காமம்கொண்டு அறிந்தார். அவள் யாரென்று ஒருசொல்லும் அவர் கேட்கவில்லை. அக்கணத்திற்கு முந்தைய கணத்தில் அவள் இல்லையென்றே கொண்டிருந்தார். எனவே ஒவ்வொருகணமும் முழுமைகொள்ள அவள் முழுமையாக தழைத்தாள். அவர் முற்றிலும் ஒழிந்தார்.

ஒவ்வொரு உறவுக்குப் பின்னரும் அவர் உடல் எடை குறைந்து வந்தது. ஒருநாள் அவ்வாற்றங்கரையில் அவளுடன் உறவுகொண்டபின் எழுந்தபோது வீசிய மென்காற்று அவரை பஞ்சென பறக்கச்செய்து கொண்டுசென்று அப்பெருக்கில்விட்டது. அவர் நீர் மேல் நடந்து அவளை

திரும்பி நோக்காமல் சென்று மறுபக்கம் மறைந்தார். அவர் விட்டுச்சென்ற எடையனைத்தும் தான் கொண்டவளாக அவள் நீரை அணுகியதுமே கற்பாறையென ஆழத்தில் அமிழ்ந்தாள். நடந்து குடிலுக்குச் செல்லவே நெடுநேரமாகும் அளவுக்கு அவள் உடல் எடைகொண்டது. நின்ற இடத்தில் கற்பாறை குழிந்தது. சாய்ந்த மரம் இலையுதிர்த்துச் சரிந்தது.

ஒருநாள் அவள் வேர்ப்பலவின் அடியில் கனிகொய்து உண்டு தனித்திருக்கையில் அவளருகே வந்து நின்ற காகம் ஒன்றுக்கு ஒரு சுளை எடுத்து வீசினாள். பசித்திருந்தும் அதை உண்ணாது பறந்தெழுந்தமைந்தது காகம். ஏழுமுறை அது அவ்வண்ணம் செய்யவே அதன் விழிகளைக் கூர்ந்து “பறவையே சொல்க, இவ்வுணவு ஏன் உனக்கு ஒவ்வாதிருக்கிறது?” என்று கேட்டாள். “நான் விண்ணுலகில் வாழும் உன் மூதாதை. மைந்தரில்லா வெற்றுடல் கொண்டிருக்கிறாய். நீ அளிக்கும் உணவு பலியாகவே பொருள்கொள்கிறது. அதை நான் உண்ணலாகாது” என்றது.

“நான் நூறு மைந்தருக்கு அன்னையும் தந்தையுமல்லவா?” என்று அவள் சீறினாள். “நீ அறியமாட்டாய், உன் இருநூறு மைந்தரும் பூசலிட்டு மடிந்தனர். உன் நகரம் நாகம் ஏறி பறவைகள் கலைந்த மரம்போலுள்ளது. உன் அரண்மனையில் எருக்கு எழுந்துவிட்டது” என்றது காகம். நெஞ்சிலறைந்து அழுதபடி அவள் தன் நகர் மீண்டாள். மெல்ல சிற்றடி வைத்து நின்ற இடமெல்லாம் கதறி விழிநீர் உகுத்து அவள் சென்றடைந்தபோது ஒவ்வொரு அடிக்கும் என முதுமை கொண்டிருந்தாள். நகரை அடைந்தபோது உடல்பழுத்து முடிநரைத்து பல்லுதிர்ந்து நகங்கள் சுருண்டு அழுக்காடையும் சடைமுடிகளுமாக பிச்சியென்றே ஆகியிருந்தாள்.

நகர்த்தெருக்களில் எல்லாம் குடித்தலைவன் இறந்த வீட்டின் உணர்வே நிறைந்திருந்தது. இடிந்து சரிந்து முள்ளும் புழுதியும் மண்டிப் பாழடைந்திருந்த அரண்மனைக்குள் புகுந்து தன் மைந்தர் தவழ்ந்த திண்ணையை ஆடிய முற்றங்களை அவர்களை ஈன்ற ஈற்றறையை ஒவ்வொன்றாக தொட்டுத் தொட்டு சென்றாள். நெஞ்சில் அறைந்து அழுதபடி நகரெங்கும் அலைந்தாள். தன் மைந்தர் விழுந்திறந்த மண்ணில் விழுந்து தலையறைந்து கதறினாள். அவர்கள் எரிந்த சிதைச்சாம்பல் கலந்த மண்ணை முகத்தில் அள்ளிப் பூசினாள். அவர்களின் எலும்புகள் கரைக்கப்பட்ட ஆற்றின் கரைச்சேற்றில் புரண்டு கதறினாள்.

இரவும் பகலும் அவள் கதறல் ஒலித்தது. நகர்த்தெருக்களில் நெஞ்சில் அறைந்து அலறியும் கைவிரித்துக் கூவியும் ஓடி விழுந்து எழுந்து அழுத முதுமகளை அயலூர் பிச்சியென்றே அனைவரும் எண்ணினர். அழுது உடல் நீரனைத்தும் விழிவழியாக வெளியேற கோடைஉண்ட குளம்போல உடல் வற்றி தோல் வெடிப்புகொண்டு எடையற்ற நெற்றென ஆனாள். ஒருநாள் எவரும் அறியாது அந்நகரைவிட்டு நீங்கினாள். மீண்டும் காட்டுக்குத் திரும்பி அந்நதிக்கரையை அடைந்தாள்.

அவள் இறங்கியபோது ஆற்றுநீர் பளிங்கென இறுகி அவளை தாங்கிக்கொண்டது. அதன்மேல் காலடி வைத்து மறுபக்கம் சென்றாள். மறுநிலத்தைச் சென்றடைந்ததும் அவள் உருமீண்டு பங்காஸ்வன் என்றாகியது. அது மீண்டும் இளமை பெற்று ஒளிர்ந்திருக்கக் கண்டான். அவன் முன் மணிமுடியும் மின்கதிர் படையும் கொண்டெழுந்த இந்திரன் புன்னகையுடன் சொன்னான் “இது காமநிறைவுற்றோருக்கான பொன்வெளி. காமமே இங்கு மகிழ்வென்றும் தவமென்றும் ஆகும். நீ கடந்து

அடைந்துவிட்டாய். நீ அடைந்த அவ்வுலகு என்னால் இன்னமும் அடையப்படாதது. நீ வாழ்க!” அவனை கைகூப்பி வணங்கிய பங்காஸ்வனிடம் “உன்னை பெண்ணாக்கி ஆடியவன் நானே. நீ வென்றமைந்தாய். விழையும் ஒரு அருட்கொடையை கேள்!” என்றான் இந்திரன்.

இந்திரனின் அவைமுன் நடனமாடிச் சுழன்றவர்கள் மெல்ல தளர்ந்து மலர்க்காடென கை முத்திரைகொண்டு நின்றனர். இளங்காற்று கடந்துசென்ற மரங்கள் மலருதிர்க்க அசைந்தாடின. மேனகை பங்காஸ்வனாக கைகூப்பி நிற்க இந்திரனாக அருட்கை காட்டி நின்றாள் திலோத்தமை. தலைக்கோல் ஏந்திய ஊர்வசி அதைச் சுழற்றி முன்னால் வந்து விழிகளில் புன்னகை ஒளிவிட “சொல்லுங்கள், இளைய பாண்டவரே! பங்காஸ்வன் தேவர்க்கரசனிடம் கேட்ட அருட்சொல் எது?” என்றாள்.

அர்ஜுனன் புன்னகையுடன் தாடியை நீவியபடி “பெண்ணுரு மீண்டு பொன்னுலகுக்குள் செல்லவேண்டும் என்றுதான்” என்றான். ஊர்வசி அருகே வந்து “ஏன்? அவன் பெண்ணுடலில் வாழ்ந்தவன் என்றாலும் ஆணல்லவா?'' என்றாள். “பெண்ணென்றும் ஆணென்றும் அமைந்து காமத்தை அறிந்தவன் அவன். அவன் நாடும் மாற்றுலகிலும் இன்பமென ஊழ்கமென அவன் விழைவது காமத்தையே. பெண்ணென்று அறிந்த காமத்தை சிறுதுளியேனும் ஆணென்று அறிந்திருக்க மாட்டான்” என்றான் அர்ஜுனன்.

அவை கலைந்து நகையெழுப்பியது. முகம் சிவந்து விழி திருப்பிய ஊர்வசி கோல்சுழற்ற மேனகை வணங்கி இந்திரனிடம் அச்சொல்லை பெற்றாள். பெண்ணென்று நடந்து அந்தச் சோலைக்குள் மறைந்தாள். மரக்கிளைகள் என

கைகளை வீசி நடனமங்கையர் அவளைச் சூழ்ந்து அணைத்துக் கொண்டனர். பின்னர் வளையல்கள் குலுங்க கைகொட்டி நகைத்தபடி அனைவரும் கலைந்து விலகினர்.

# கிராதம் - 54

**[ 15 ]**

அவை நிகழ்வுகள் முடிந்ததும் அறிவிப்பு மேடையில் ஏறிய நிமித்திகன் வலம்புரிச் சங்கை மும்முறை முழக்கினான். வெளியே வெள்ளிப்பேரிகைகள் இயம்பின. கொம்புகள் பிளிறின. தேவபுரியெங்கும் இந்திரனை வாழ்த்தி பேரோசை எழுந்தது, அவை நிறைத்து அமர்ந்திருந்த முனிவர்கள் எழுந்து அரிமலர்வீசி இந்திரனை வாழ்த்தினர். சாமரங்கள் அமைந்தன. சேடிகள் பின்னகர்ந்தனர். கைகளைக்கூப்பி முனிவரையும் அவையினரையும் வணங்கியபின் வலம் திரும்பி அவன் வெளியே நடந்தான். இடம் கொண்டு இந்திராணி உடன் சென்றாள்.

தேவர்க்கிறைவனின் மின்படை பொறிக்கப்பட்ட கொடியுடன் ஏவல்தேவன் ஒருவன் முன்னால் சென்றான். அணிமங்கலங்கள் ஏந்தி அரம்பையர் நான்கு நிரை வகுத்து அவனுக்குப்பின் தொடர்ந்தனர். தும்புருவும் இளையோரும் மங்கல இசையுடன் அவர்களுக்குப்பின் நடந்தனர். இந்திரனின் உடைவாளுடன் ஜயந்தன் நடக்க அவனுக்குப்பின்னால் மருத்துக்கள் தங்கள் படைக்கலங்களுடன் சென்றனர். ஒவ்வொருநாளும் நிகழும் நாடகமென்றாலும் நாளவன் அணையும் இனிய துயர் கொண்டிருந்தது அக்காட்சி.

இந்திரன் அவைநீங்கியதும் நிமித்திகர் மீண்டும் அறிவிப்பு மேடை ஏறி சங்கொலி எழுப்பினார். ஆடையும் அணிகளும் ஒலிக்க மெல்லிய பேச்சொலிகளுடன் அவை கலைந்தது. கைகூப்பி நின்றிருந்த அர்ஜுனன் புன்னகையுடன் தோள்தளர்த்தி அரசமேடையிலிருந்து கீழிறங்கினான். அவையமர்ந்திருந்த முனிவர்கள் அனைவரும் அவனை சூழ்ந்துகொண்டனர். அவன் கைகளைப்பற்றியும் தோள்களைத் தழுவியும் இன்சொல்லாடினர். அனைவர் கால்களையும் தொட்டு சென்னி சூடி வணங்கினான். அவர்கள் வாழ்த்துக்கள் உரைத்தனர். நலம் உசாவினர். அவன் அழகையும் தோள்வல்லமையையும் பாராட்டினர்.

''உன் மூதாதை யயாதியின் அவையிலிருந்தேன்'' என்றார் கர்க்கர். "உன்னைப்போலவே விழைவால் அனல்கொண்டவர் அவர். வெற்றிகளால் மேலும் விழைவெழப்பெற்றவர். சுபகர் "நான் உன் மூதாதையாகிய குருவை நன்கறிந்தவன்'' என்றார். சுபாகு "உன் குல வேள்விகள் அனைத்தையும் தலைமைதாங்கினேன்'' என்றார். "அவர் அறிந்திருக்கவில்லை, அவர்குருதி அருகுபோல் வேரோடி பரவும் என்று. காலத்தின் முன் மானுடர் மிகச்சிறியவர்கள்." சௌரப்யர் "நான் பிரதீபரின் அவைகண்டவன். அவருக்காக பன்னிரு பெருவேள்விகளை இயற்றினேன்" என்றார்.

"நாரதர் உன் புகழ்பாடாமல் இங்கே வந்ததே இல்லை. மண்ணில் நீ கொள்ளும் வெற்றிகள் அனைத்தும் இங்கு விழவாகின்றன" என்றார் சப்தமர். "வெற்றியையும் புகழையும் அடைந்தவன் விண்ணுலகுக்கு ஏறும் படிகளை கட்டிக்கொண்டிருக்கிறான்" என்றார் குமரகர். சாந்தர் "வேள்விகளால் தேவர்கள் பெருகுவதுபோல மானுடர்

அடையும் வெற்றிகளால் இங்கு ஒளி பெருகுகிறது மைந்தா” என்றார். அவன் அச்சொற்களை கலைந்த ஒலிகளாகவே கேட்டான். ஒரே சமயம் நூறு அன்னையர் கைநீட்டி அழைக்க திகைத்துநிற்கும் இளமைந்தனைப்போல் ஆனான். ஒவ்வொருவரையாக நோக்கி புன்னகைத்து பணிவுச் சொல்லுரைத்து சுழல் காற்றில் அலைப்புறும் செடி போல் அவன் நடுவே நின்றான்.

தன் பெரிய கைகளை விரித்து அனைவரையும் விலக்கி அருகே வந்த பாலி அவன் கைகளை பற்றிக்கொண்டு ”இங்கு நெடுநாள் இருக்கப்போகிறார் இளைய பாண்டவர். இன்று அவர் என்னுடன் இருக்கட்டும். இளைப்பாறியபின் இன்னும் நிறைய சொற்களை சொல்வார். அவர் வணங்கவேண்டிய பாதங்கள் இங்கு பெருகியிருக்கின்றன” என முனிவர்களிடம் சொன்னபின் “வருக!” என்று அவனை அழைத்தான். அர்ஜுனன் முனிவர்களிடம் மீண்டும் மீண்டும் கைகூப்பி விடைபெற்றுக் கொண்டான். “இங்கு நீ களியாட சோலைகளும் நீராடச் சுனைகளும் சொல்மகிழ அவைகளும் உள்ளன, இளையோனே. வென்று செல்லத்தான் ஒன்றுமில்லை” என்றார் சித்பவர். அவன் புன்னகையுடன் “ஒவ்வொன்றினூடாகவும் என்னை வென்றுசெல்கிறேன்” என்றான்.

அவன் தோள்களைத் தழுவிய பாலியின் கை எடைமிக்கதாக இருந்தது. “வருக, இளையோனே!” என்று வாயிலை நோக்கி அழைத்துச் சென்றான். ”கதைகளின் உலகுக்குள் விழுந்துவிட்டது போல் உள்ளது, மூத்தவரே. இங்கு நான் கண்ட அனைவரையும் சொல்வடிவில் முன்னர் அறிந்திருக்கிறேன்” என்றான் அர்ஜுனன். “ஒவ்வொருவரும் எனக்கு ஒவ்வொரு

நூலைப்போல. ஒவ்வொருமுறை வாசிக்கையிலும் நயம் பெருகிக்கொண்டிருப்பவர்கள்.”

பாலி உரக்க நகைத்து ’’ஒரு சொல்லேனும் சென்று தொடாதவர்கள் இங்கு வருவதில்லை’’ என்றான். அர்ஜுனன் அதைக்கேட்டு “’சொல்லில் ஆடும் சூதர்களுக்கு பிறிதொரு விண்ணுலகு உள்ளது போலும்’’ என்றான். பாலி மேலும் நகைத்தான். ”’அதை அவர்கள் அங்கு மண்ணிலேயே உருவாக்கிக் கொள்கிறார்கள்.’’ அர்ஜுனன் “உண்மை, அவர்களுக்கு நேற்றும் நாளையும் இல்லை. எனவே விண்ணுலகும் கீழுலகும் இல்லை” என்றான்.

பாலி “நம்மை சொல்லில் பிணைக்கிறார்கள். சிலந்தி சிக்கா வலை அது” என்றபின் “முதற்பாவலராகிய புற்றுறைமுனிவரை நான் இங்கு வந்தபின் சந்தித்தேன். என்னை அவர் அடையாளம் காணவே இல்லை. நான் பாலி என்று அவரிடம் அறிமுகம் செய்துகொண்டேன். திகைப்புடன் நீங்களா என்றார். ஏன் என்றேன். நான் அறிந்த பாலி வேறு என்றார். அவனாகவும் நானே இருக்கிறேன் என்றேன். சிரித்துவிட்டார்.”

அவர்கள் இடைநாழியில் நடந்தனர். அவன் கைகளை பாலி தன் கைகளுக்குள்ளேயே வைத்திருந்தான். ஒவ்வொரு படியேறும்போதும் இளமைந்தனை துணைப்பது போல் அவன் தோள் வளைத்து “எப்போதும் உன்னை நோக்கிக் கொண்டிருந்தேன்’’ என்றான். ”அன்றிருந்தது போலவே இன்றும் ஒளிகொண்டிருக்கிறாய். அன்று இருந்த உன் முகம் இன்று வேண்டுமென்று எண்ணினேன். அதுவாக உன்னை இப்போது காண்கிறேன்.’’ அர்ஜுனனின் தாடியை வருடி “இனியவர்களின் உடல்தழுவுதல்போல் இன்பம் பிறிதில்லை” என்றான்.

“எங்கு பார்த்தீர்கள்? என்று அர்ஜுனன் வியப்புடன் திரும்பிப் பார்த்தான். ‘’இடும்ப வனத்தில்’’ என்று சொல்லி பாலி நகைத்தான். “சூர்ணன் என்னும் சிறு குரங்கை நினைவுறுகிறாயா?’’ அர்ஜுனன் முகம் மலர்ந்து “ஆம். நெல்லிப்பிஞ்சு போல உருளும் அவன் விழிகளை இன்னமும் நான் மறக்கவே இல்லை. அவன் ஒரு நாள் அக்காட்டை ஆள்வான் என்று மூத்தவர் சொன்னார்’’ என்றான். பின் உளஎழுச்சியுடன் பாலியின் கைகளை பற்றிக்கொண்டு “மூத்தவரே, அவன் தாங்களா?” என்றான்.

“அக்கணத்தில் ஆம்’’ என்றான் பாலி. “அவன் விழிகளில் நான் வந்தமைந்தேன். அவனில் நிகழ்ந்தேன்.” அர்ஜுனன் “அவன் குலம் பெருகியிருக்கும்” என்றான். “ஆம், அவன் பெயரன் இன்று அக்குலத்தையும் காட்டையும் ஆள்கிறான். அவனையும் தூளிகன் என்றே அழைக்கிறார்கள்” என்றான் பாலி. அர்ஜுனன் நெஞ்சு கனிய பாலியை அணைத்துக் கொண்டான். “அன்று ஏனோ என் நெஞ்சு நெகிழ்ந்தது. மூத்தவர்கள் இருவரும் சொல்லாடிக்கொண்டிருந்தபோது நான் அவன் புன்தலை மயிரையே நோக்கிக்கொண்டிருந்தேன். என்னை அவன் பார்க்கிறான் என்றும், என்னை அவனுக்குத்தெரியும் என்றும் தோன்றியது.”

அவர்கள் முன் அரண்மனையின் வெண்பளிங்குத் தூண்நிரைகள் பொற்பட்டையிடப்பட்டு சித்திரச்செதுக்குகளுடன் எழுந்தெழுந்து வந்தன. புதுமழைநீரின் செந்நுரைபோன்ற திரைச்சீலைகள் காற்றிலாடின. தலைக்குமேல் அலைவளைவெனத் தெரிந்த உட்கூரைக் குடைவில் வண்ணச்சித்திரங்கள் மலர்ப்படுகை என ஒன்றுடன் ஒன்று இணைந்து, ஒன்றையொன்று நிரப்பி நிறைந்திருந்தன.

“இவ்வரண்மனை உனக்கென முற்கணம் உருவாகி வருகிறது” என்று பாலி சொன்னான். ’’நீ கால் வைக்க கால் வைக்க விரிந்து தன்னை பெருக்கிச் சூழ்கிறது.”

“ஆம், இது இந்திரப்பிரஸ்தத்தின் அரண்மனையின் விராடவடிவம். இந்த அறைமுகப்பும் எனது அறை போலவே உள்ளது’’ என்றான். வாயிலில் நின்ற காவல்தேவன் தலைவணங்கி கதவைத் திறக்க இருவரும் உள்ளே நுழைந்தனர். உள்ளே நுழைந்ததும் இனிய இசையும் குளிர்காற்றும் எழுந்து அவர்களைச் சூழ்ந்தன. “விழியறியா மருத்துக்கள் இங்கே காற்றென நிறைந்திருக்கிறார்கள்” என்றான் பாலி. அங்கே அகல்களில் அருமணிகள் சுடர்களாக மின்னின. அலையடிக்காத ஒளியில் விழிதொடத்தொட துலங்குவதுபோல சுவர்கள் ஒளிகொண்டன. அவற்றில் இருந்த சித்திரங்கள் விழியும் நகையும் கொண்டன.

பொற்சித்திர செதுக்கு கொண்ட பீடங்களும் காற்றில் உலையும் செவ்வெழினியும் கொண்டிருந்தது அந்த அறை. நடுவே வெண்பட்டு விரித்த சேக்கையில் மலர்கள் விழுந்தவைபோல் கிடந்தன. பீடத்தில் அமர்ந்தபடி “அச்சாளரம் வழியாக நீ விழைந்தால் யமுனையைப் பார்க்கலாம்’’ என்று பாலி சொன்னான். ’’இல்லை கங்கையென அது ஒழுக வேண்டுமென்றால் அவ்வாறே’’ என்றான். “அங்கே மென்மணலும் நறுமலர்களும் அழகிய சிறுபறவைகளும் வண்ணத்துப்பூச்சிகளும் நிறைந்திருக்கும்.” அர்ஜுனன் “ஆனால் சேறும் புதர்களும் காகங்களும் கொசுக்களும் இல்லையேல் அது கங்கை அல்ல” என்றான். “இது விண்ணவரின் கங்கை” என்றான் பாலி.

அர்ஜுனன் புன்னகையுடன் அச்சாளரத்தை அணுகி பார்த்தான். பின்னர் திரும்பி பாலியிடம் ''நான் பார்ப்பது யமுனையை'' என்றான். பாலி "ஆம், எண்ணினேன்'' என்றான். அர்ஜுனன் "ஆனால் இந்திரப்பிரஸ்தத்தின் சாளரத்தினூடாக அல்ல. மதுராவில் என் இனிய தோழரின் அறைச்சாளரத்தினூடாக" என்றான். பாலியின் முகம் மாறுபட்டது. திரும்பி அருகிருந்த பீடத்தை இழுத்துப் போட்டு கால்களை நீட்டிக்கொண்டான். அவன் பெரிய தோள்கள் சற்று இறுகி பின் தொய்ந்தன, நிலைகொள்ளாத உள்ளம் கொண்டவன்போல கால்மேல் கால் வைத்து கைகளை மடிமேல் பொருத்தி சாய்ந்துகொண்டான்.




அவன் உடலசைவிலிருந்த மாறுதலை உணர்ந்த அர்ஜுனன் “தாங்கள் எப்போதேனும் அவரைப் பார்த்ததுண்டா, மூத்தவரே?” என்று கேட்டான். “ஆம் பார்த்தேன்” என்றான் பாலி அவனை நோக்காமல். ஆர்வத்துடன் அருகே வந்து “எப்போது?” என்றான் அர்ஜுனன். பாலி பேசாமலிருக்க அவன் முன் வந்து நின்று “சொல்க!” என்று அர்ஜுனன் கேட்டான். பாலி சொல்ல விழையாதவன் போல் விழிதிருப்பி அமர்ந்திருந்தான். “சொல்லுங்கள், மூத்தவரே! எங்கு பார்த்தீர்கள் அவரை?”

பாலி நிமிர்ந்து “பலமுறை” என்றான். மேலும் கேட்க அர்ஜுனன் காத்துநின்றான். “அவன் அங்கு நிகழ்ந்திருக்கிறான் என்று அறிந்தபோது கோகுலத்திற்கே சென்று பார்த்தேன். அவன் தாவிச்சென்ற மரக்கிளையில் சிறு குரங்குக் குட்டியென உடன் தாவி அணுகி நோக்கினேன். பின்னர் சாந்தீபனி குருநிலையில் பலமுறை. மதுராவில், யமுனைப்பெருக்கில், இமயக்காடுகளில் மீண்டும் மீண்டும் அவனை பார்த்துக்கொண்டிருக்கிறேன். பிறிதொருமுறை அவனைப் பார்க்கலாகாது என்று ஒவ்வொரு முறையும் எண்ணுவேன். ஆனால் அவனையே எண்ணிக்கொண்டிருக்கிறேன். அவ்வெண்ணமே அவனைப் பார்த்தாகவேண்டும் என ஆக்குகிறது.

“நாம் எண்ணிக்கொண்டிருக்கும் முகத்தை மீண்டும் மீண்டும் பார்த்தாக வேண்டும் என்ற விழைவு எழுவது இயல்பு. பார்க்காமலிருக்க முடியாது, இளையோனே. அவனிடம் இருந்து எனக்கு மீட்பில்லை” என்றான் பாலி. அர்ஜுனன் விழிகளைச் சுருக்கியபடி “ஏன்?” என்றான். “அவனுடன் நான் பிணைந்துள்ளேன்.” அர்ஜுனன் “அவர் வாழும் காலம் பிறிதல்லவா?'' என்றான். “ஆம், இளையோனே. ஆனால் காலத்திலென்ன?” என்றான் பாலி.

பெருமூச்சுடன் பாலி சொன்னான் “அவனை முதல்நோக்கு கண்டதும் திகைத்து கிறீச்சிட்டு அலறியபடி மரக்கிளையின் பிடிவிட்டு நான் கீழே விழுந்தேன். என் ஆழுளமென ஆன வால் நீண்டு பிறிதொரு கிளையைப்பற்றி என்னைக் காத்தது. அன்று நான் கண்ட முகம் பால்மணம் மாறாப் பைதலுக்குரியது ஆயினும் விழிகள் அவனுடையவை. நான் நன்கறிந்த விழிகள், இளையோனே. அவ்விழிகள் என்றும் புவியில் இருக்கும்.

ஏதேதோ நிலங்களில் வெவ்வேறு முகங்களில் அவை மானுடரை நோக்காத ஒரு கணம் அங்கு நிகழாது.”

அர்ஜுனன் “எவை?” என்றான். அதைக்கேளாதவன் போல பாலி “அவை நானறிந்த விழிகள்'' என்றான். அவன் என்ன சொல்கிறானென்று புரிந்தும் புரியாமலும் அர்ஜுனன் நோக்கிக் கொண்டிருந்தான். பாலியின் கைகள் விரல்பின்னி பிசைந்துகொண்டே இருந்தன. பலமுறை அவன் எழ எண்ணுவது உடலசைவில் தெரிந்தது. அதை அவன் உள்ளம் அறியவில்லை. அது பிறிதெங்கோ இருந்தது. “யார்?' என்றான் அர்ஜுனன்.

மேற்கொண்டு சொல்ல விழையாதவன் போல பாலி எழுந்து இரு கைகளையும் உரசிக் கொண்டு பெருமூச்சுவிட்டு “நன்று! இப்பொழுது இதைப்பற்றி பேச நிகழுமென்று நான் எண்ணவில்லை. இப்பேச்சு இந்த இனிய தருணத்தை தேவையற்ற எடை மிக்கதாக ஆக்கியிருக்கிறது” என்றான். உடனே எளிதாகி நகைத்து ''நாம் இதைப்பேசுவோம். இப்படி சுவர் சூழ்ந்த அறைக்குள் அமர்ந்தபடி அல்ல. அப்சரஸ்கள் அழகு சேர்க்கும் இனிய சோலை ஒன்றில் மீண்டும் சந்திக்கலாம்'' என்றான்.

அவன் திரும்புவதற்குள் அர்ஜுனன் “பொறுங்கள், மூத்தவரே!'' என்று அழைத்தான். “தாங்கள் கண்ட முகம் எது? அதை இப்போது உரைக்காது நீங்கள் போனால் இங்கு என்னால் இருக்க முடியாது.” பாலி அவனைத் திரும்பி நோக்கி “முகமல்ல விழிகள்' என்றான். “சொல்லுங்கள்! எவர் விழிகள்?” என்றான் அர்ஜுனன். பாலி தத்தளித்த விழிகளுடன் கையைத்தூக்கி ஏதோ சொல்லமுயன்று தவிர்த்து மீண்டும் சொல்லைப்பிடுங்கி எடுத்து பேசினான்.

“கிஷ்கிந்தையின் காடு. அறியாத எண்ணம் ஒன்று என்னுள் எழுந்த திகைப்பை உணர்ந்தேன். மல்லாந்து விழுந்தேன். என் இளையோன் கால்களை ஊன்றி என் மேல் எழுந்து நின்றான். அவனும் திகைத்திருந்தான்.” அவன் குரல் மிகத்தாழ்ந்திருந்தது. “என் நெஞ்சில் பாய்ந்த வாளியை உருவி எடுத்து அவன் பெயரை படித்தேன். திகைத்து விழிதூக்கினேன். தானும் திகைத்து அங்கு நின்றிருந்தான். அவனை நானறிந்த அக்கணமே என்னையும் அவன் அறிந்தான்.”

“ரகுகுல ராமன்…” என்றான் அர்ஜுனன். அவன் அதை முன்னரே உய்த்திருந்த போதிலும் அச்சொல்லை நாவால் சொல்லப் போவதில் நெஞ்சு படபடத்தது. “அவ்விழிகள் அவனுடையவை” என்றான் பாலி. “வில்லறம் துறந்து நின்றான். வேதச் சொல்லறம் பின்னால் மறைந்தது. தொல்திகழ் நல்லறம் அதற்கும் அப்பால் இருண்டது. அக்கணத்தில் அவன் கொண்ட அவ்விழிகளைச் சூடி இவன் எழுந்திருக்கிறான். இளையோனே, அத்தருணத்தை நீட்டி பிறிதொரு வாழ்வென்றாக்கி இவனென்றானான்.”

“வேதம் புதியதல்ல. வேதமென கூர்கொண்ட தொல்மெய்மையும் புதியதல்ல. இவனும் பல்லாயிரம் முறை புவியில் நிகழ்ந்தவன்” என்றான் பாலி. அர்ஜுனன் “நான் ரகுகுல ராமனின் நூறு ஓவியங்களையாவது பார்த்திருப்பேன். ஒன்றிலும் எந்த வகையான ஒற்றுமையையும் நான் பார்க்கவில்லை. அவர் இவரைபோல கரியோன் என்பது மட்டுமே பொதுமை. அவர் நெடியோன். பெருந்தோளன். என் தோழர் எளிய சிற்றுடல் கொண்டவர். ரகுகுல ராமன் இளமையிலேயே கனிந்தவர். இவரோ முதுமையிலும் இளையவர்” என்றான்.

பாலி மெல்ல நகைத்து "அணியறை புகுந்து ஆடையும் உருவும் மாற்றி மீண்டும் மீண்டும் வந்து கொண்டிருக்கிறார்கள். விழிகளை மட்டும் அவர்களால் மாற்ற முடியவில்லை. ஏனென்றால் அதுவே அவர்கள் தோன்றும்விதை" என்றான். "இங்கு ஏன் அதை நீங்கள் சொல்ல வந்தீர்கள்?'' என்றான் அர்ஜுனன். "நான் அவனை எண்ணிக்கொண்டேன்" என்றான் பாலி. "ஆம், ஆனால் அவரை எண்ணிக்கொண்டபோது உங்கள் உளம் மலரவில்லை. அதனால்தான் இதைக் கேட்கிறேன்" என்றான் அர்ஜுனன்.

பாலி "நான் இந்திரனின் மைந்தன், உன்னைப்போல" என்றான். அர்ஜுனன் அவன் சொல்லப்போவதென்ன என்பதுபோல் நோக்கினான். "இளையோனே, அவன் இந்திரனுக்கு எதிரி என்பதை நீ உணர்ந்ததில்லையா?" என்றான் பாலி. அர்ஜுனன் எளிதாகி புன்னகைத்து "இதுதானா? நானும் பெரிதாக அஞ்சினேன்" என்றான். "மூத்தவரே, இளவயதில் இந்திரனுக்கு அளித்த பலிக்கொடையையும் பூசனையையும் இளைய யாதவர் நிறுத்தினார் என நானும் அறிவேன். மாற்றாக மந்தர மலையையே வழிபடுபொருளாக அமைத்தார்."

"ஆம், யாதவர் குடில்களில் அணையாமல் எரிந்த இந்திரனின் சுடர் அவனால்தான் அகற்றப்பட்டது. யாதவரின் ஆலயங்களில் கிழக்கு மூலை சிறுதெய்வமென எந்தை அமரச்செய்யப்பட்டார். அது ஒரு கதையென யாதவர்களால் இன்றும் பாடப்படுகிறது'' என்றான் பாலி. "கதை என்றாகும்போது அதன் குருதி உலரத்தொடங்கிவிடுகிறது" என்று தொடர்ந்தான். "ஆயிரம் வருடங்களாக யாதவர் இல்லங்கள்தோறும் வழிபடப்பட்டு வந்த சுடர் அது. ஒவ்வொரு நாளும் யாதவமூத்தோர் ஒரு பிடி அன்னம் இந்திரனுக்கு அளிக்கப்படாமல் உண்டதில்லை. இன்று

அக்குலத்து இளையோர் நான்கு திசைதேவர்களுள் ஒருவனாக மட்டுமே எந்தையை அறிந்திருக்கிறார்கள்."

"ஏன் அவன் அதைச் செய்தான்? என்றாவது நீ அதை எண்ணியதுண்டா?" என்றான் பாலி. "அறியாத வயது அது. அன்றே நந்தை இந்திரன்மேல் அவன் கொண்ட சினத்திற்கு என்ன அடிப்படை?" அர்ஜுனன் "அன்னைப்பசுவைப் கொன்று பலிகொடுத்தது அவருக்கு உகக்கவில்லை என்பது யாதவர்களின் குலக்கதைக் கூற்று" என்றான். "அப்படியென்றால் அவன் பசுவை பலியிடுவதை மட்டும் நிறுத்தியிருக்கலாம். இந்திர வழிபாட்டை முழுமையாக ஏன் நிறுத்தினான்?" என்றான் பாலி. அவன் விழிகளையே அர்ஜுனன் நோக்கிக்கொண்டிருந்தான். "சொல், ஏன்?" என்று பாலி கேட்டான்.

அர்ஜுனன் கைகளை நெஞ்சில் கட்டியபடி "அறியேன்" என்றான். "அறிந்துகொள். இன்று இவ்விழி கொண்டு யாதவர் குலத்தில் எழுவதற்கு முன் அவன் அயோத்தியில் ரகுகுலத்தில் க்ஷத்திரியனாகப் பிறந்தான். அன்று இந்திர மைந்தனாகிய என்னை மறைந்திருந்து வீழ்த்தினான். இளையோனே, இந்திரனுக்கும் அவனுக்குமான பூசல் இன்று தொடங்கியதல்ல" என்றான் பாலி.

அர்ஜுனன் "இந்தப் பூசலின் கதை அங்கும் நூல்களில் பேசப்படுகிறது. அதன்பொருள் எனக்கு இன்றுவரை புரியவில்லை" என்றான். "அந்தக் காலத்தின் அரசியல். அன்றுள்ள சூழல். அதை இன்று தொல்காவியம் வழியாகவும் சூதர் சொல்வழியாகவும் மட்டுமே அறியமுடிகிறது." பாலி "அதன் பொருள் துலங்க இன்னும் நூறு தலைமுறைகளாகும்" என்றான். அவர்கள் சற்றுநேரம் சொல்லிழந்து அமர்ந்திருந்தனர்.

“நந்தை அப்பகையை கொண்டுள்ளாரா?” என்றான் அர்ஜுனன். பாலி ஆம் என தலையை அசைத்தான்.

“ராகவனாக வந்து என்னை வென்று எந்தையை சிறுமை செய்தான். பின் எந்தையின் இயல்புகள் அனைத்தையும் தானே கொண்டு மீண்டும் மண் நிகழ்ந்தான். இன்று தங்கள் காளைகள் வீரியம் கொள்ள யாதவர்கள் வழிபடுவது இந்திரனை அல்ல. தங்கள் நிலங்கள் கதிர் நிறைய உழவர்கள் அவனை வணங்கும் நாள் தொலைவிலும் இல்லை” என்று பாலி சொன்னான். பின்பு “நான் இவை எதையும் இங்கு பேச வரவில்லை, இளையவனே. நீ யார் என்று நீயே உணர்ந்திருப்பாய் என்று எண்ணினேன். அதை மீண்டும் நினைவுறுத்திச் செல்ல விரும்புகிறேன்” என்றபின் கதவைத் திறந்து வெளியே சென்று மறைந்தான்.

அர்ஜுனன் அவனிடம் மேலும் பேசவிழைந்தான். அவன் சென்றபின் மூடிய கதவை நோக்கியபடி சற்றுநேரம் அசையாமல் நின்றபின் சேக்கையில் படுத்து கண்களை மூடிக்கொண்டான். சதசிருங்கம் முதல் அஸ்தினபுரியினூடாக இந்திரப்பிரஸ்தத்தினூடாக காடுகளினூடாக பாலைகளினூடாக கடந்துவந்த வாழ்க்கை ஒரு துளிக்கனவெனத் தோன்றியது. இல்லை, இதுதான் கனவு என சொல்லிக்கொண்டான். ஆனால் நெஞ்சு எடைமிகுந்திருந்தது. உடலைப் புரட்டிப்புரட்டி அவ்வெடையை நிகர்செய்யவேண்டியிருந்தது.

அவன் விழிசரிந்து துயிலில் ஆழ்ந்தபோது அவனைச்சூழ்ந்திருந்த அறை மறைந்தது. அவன் காட்டில் ஒரு மரத்தடியில் தன்னந்தனிமையில் படுத்திருந்தான். ஒரு நாகம் அவனை அணுகி தலைதூக்கி நாபறக்க நின்றபின் வளைந்து சென்றது. புலி ஒன்று தொலைவில் வந்து விழியொளியுடன் அவனை நோக்கி நின்றபின் திரும்பிச்சென்றது. அவன்மேல்

சருகுகள் மெல்ல உதிர்ந்துகொண்டிருந்தன. அவன் அங்கு படுத்தபடி வேறெங்கோ ஒரு மென்சேக்கையில் துயில்வதாக கனவுகண்டுகொண்டிருந்தான்.

மிக அருகே அவனை எவரோ அணுகும் ஓசை. அவன் உடல் அதை அறிந்தது. அவனை நோக்கி குனிபவனை அவன் உள்ளுடல் நன்கறிந்திருந்தது. அவன் விழிதிறந்தபோது அந்த முகம் மிக அண்மையில் இருந்தது. விழிகளை அவன் தன் விழிகளுடன் கோத்துக்கொண்டான். அந்த விழிகள்தான். அவன் உடல்நடுங்க விழித்துக்கொண்டு சேக்கையில் தன்னை உணர்ந்தான். சாளரத்திரை அசைந்துகொண்டிருந்தது.

அந்த விழிகளை எங்கே பார்த்தேன்? அவை மதுராவிலும் யமுனையிலும் அவனுடன் ஆடிய இளைய யாதவனின் நகைக்கும் விழிகளல்ல. அவனுடன் அவையமர்ந்து சொல்லாடிய கனவுக்கண்களும் அல்ல. குளிர்விரல் ஒன்றின் தொடுகைபோல் அவன் உணர்ந்தான், அவை தன்னுடன் போரிட்டு வென்று அடக்கி மேலேறி கொல்ல ஓங்கிய கையுடன் தெரிந்த இளைய யாதவனின் அண்மைவிழிகள் என.

அவன் எழுந்து அமர்ந்து தன்னை அணையச்செய்தான். கண்களை மூடினால் அந்த விழிகள் தெரியுமென்பதனால் வெண்சுவரையே நோக்கிக்கொண்டிருந்தான். அந்த விழிகளிலிருந்த வஞ்சம் எத்தனை உண்மையானது என அவன் உள்ளம் அன்று அறிந்தது. அவனை அலைக்கழித்தது அதுதான். அவன் திசைத்தேவர்களின் படைக்கலம்தேடிச்சென்றது அதனால்தான். நான் நிகர்நிலை நிற்க விரும்பி படைக்கலம் தேடவில்லை. அவனை அஞ்சியே அலைகிறேன். அவனிடமிருந்து என்னை காத்துக்கொள்ளவே இவையனைத்தும்.

அவனை வெல்ல விழைகிறேனா? நானா, அவனை வெல்வதா? என்று அவன் எண்ணிக்கொண்டதுமே உள்ளாழத்தில் ஓர் எண்ணம் எழுந்தது. வெல்வதும் அவன் விழைவே என. அதை உணர்ந்ததும் வலியளித்த முள்ளை பிடுங்கி எடுத்ததுபோல ஆறுதல்நிறைந்த உளைச்சல் எஞ்சியது. அவன் மீண்டும் படுத்து கண்களை மூடிக்கொண்டான். அந்தக்கண்கள் மிக அருகே எனத் தெரிந்தன. அவற்றையே நோக்கிக்கொண்டிருந்தான்.

# கிராதம் - 55

**[ 16 ]**

இந்திர நகரியின் மலர்ச்சோலைகளிலிருந்து எழுந்து வந்த இளங்காற்று அர்ஜுனனைத் தொட்டு பற்றியிழுத்துச் சென்றது. அதிலிருந்த குளிரும் மணமும் ஒன்றென்றே ஆகிவிட்டிருந்தன. செல்லும்தோறும் பெருகிய நறுமணத்தால் முற்றிலும் சூழ்ந்து பிறிதொன்றிலாது ஆக்கப்பட்டான். மூக்கைத் தொட்டு எண்ணங்களை நிறைத்து நினைவுகளைப் பெருக்கி இனிமை என்றாகும் நறுமணங்களை அவன் மண்ணில் பலமுறை உணர்ந்ததுண்டு. இனிமை என்றே எழுந்து பிறிதொன்றிலாதாகி நிற்கும் நறுமணத்தை அங்கே அறிந்தான்.

சோலை அவனை கடலலை கரைப்பாறையை வந்து தழுவுவதுபோல் சூழ்ந்துகொண்டது. வண்ணங்களின் ஆயிரம் மாறுபாடுகளால் அமைந்த மலர்ப்பெருக்கு. மலர் கொள்வதற்கென்றே ஆன கிளைகள். மலர் சுமந்து இடை நெளிந்த அடிமரங்கள். மலர்களுக்கு நடுவே யாழுடனும் குழலுடனும் பறந்தலைந்தனர் தும்பிகளும் வண்டுகளும்

சிட்டுகளும் ஆன கந்தர்வர்கள். இனிமை நிறைந்து ஒரு துளி குறையாது ஒரு துளி மிகாது முற்றிலும் அசைவிழந்தது அவன் சித்தம். அசைவிழந்தபோது அது இன்மையென்றிருந்தது. அலைவுறும்போதே இனிமையை அறிய முடிந்தது.

முழுமையில் நிலைகொண்டு மேலும் அறியும்பொருட்டு பின்னகர்ந்தபோது தன்னை அறிந்தான். தானறியும் சோலையை அந்தத் தன்னுணர்வின் மீது படர்ந்த வண்ணமென உணர்ந்தான். உளம் நிறைந்து அங்கிருந்த காலம் கணங்களா யுகங்களா என்று மயங்கியது. அவ்வெளியில் இன்மையும் இருப்புமென இருநிலைகொண்டு அலைந்துகொண்டிருப்பதை கனவென விழிப்பென உள்ளம் ஆக்கிக்கொண்டது. விலகி மீண்டபோது பிரிவாற்றாது துடித்தவை போல் அத்தனை மரங்களும் கிளைநீட்டி வந்து சூழ்ந்துகொண்டன. பெருங்கடல் எழுந்து ஒற்றை அலையென ஆனதுபோல் வண்ணமும் மணமும் அவனை வந்தறைந்து அள்ளி எடுத்து ஆழத்தில் அமைத்துக்கொண்டன.

பின்னர் அந்நறுமணத்தின் ஒலிவடிவென அவன் அவள் குரலைக் கேட்டான். மலர்ச்செடிகளுக்கு அப்பால் தோழிகளுடன் சொல்லாடி சிரித்துக்கொண்டிருந்தாள் ஊர்வசி. அவள் குரலின் முதல் ஒலிமாத்திரையிலேயே அவளென அறிந்த தன்னுள் உறைந்த ஆண்நுண்மை ஒன்றை எண்ணி அவன் புன்னகைத்தான். அவன் தன்னை கேட்டுவிட்டதை அக்கணமே தன் பெண்நுண்மையால் அவள் உணர்ந்தாள். உடனே அவள் குரலின் ஒலி மாறுபட்டது. இயல்பாக எழுந்த சிரிப்பு மிகையாகப் பொங்கியது. குரல் எவரிடமோ அறைவதுபோல அழுத்தமாக ஓங்கி ஒலித்தது. அவ்வொலி மாறுபாடை அவன் உணர்ந்து மேலும் புன்னகைத்தான்.

அவர்களை அணுகி மலர்ச்செடிகளுக்கு நடுவே கைகளைக் கட்டியபடி அவளை நோக்கி நின்றான். அத்தனை பெண்களும் அவனை முன்னரே உணர்ந்துவிட்டிருந்தனர் என்றாலும் அப்போதுதான் உணர்வதுபோல சற்றுகழித்தே உடலசைவுகொண்டு ஆடை திருத்தினர். அவனை நோக்காமலேயே ஆடையை அழகமைத்து இடத்தொடை குவிந்தெழ வலக்கையை ஊன்றி உடல் ஒசித்து எழுந்து நின்றாள். சரிந்த குழலை கை தூக்கி முடிந்து தோளிலிட்டாள். முலைகள் மேல் அருவிநுரை செம்பாறைமேல் என மென்பட்டு சரிந்தது.

கைவளைகளின் ஒலி. காதிலாடியது குழைகளின் ஒளி. கட்டைவிரல் சிறுகிளியின் தலை என எழுந்து நிற்க புருவம் வளைத்து தோழிகளிடம் என்ன என்று வினவினாள். அவர்கள் கண்களை அசைத்து அவனை காட்டினர். அவள் மேலுதடில் மென்வியர்வை அரும்பியது. கன்னங்களில் குருதி அலை எழுந்தது. மூச்சில் முலைகள் எழுந்து அமைந்தன. கைவிரல்கள் ஆடைநுனி பற்றி சுற்றின. அவளைச் சூழ்ந்திருந்த அப்சரகன்னியர் சிரித்தபடி விழிகளால் அவளிடம் விடைபெற்றனர். அவர்கள் விலகிச்சென்ற பின்னர் அவள் உடலில் மெல்லிய அசைவாக இயல்புநிலை மீண்டது.

அவர்கள் விலகிச் செல்வதைக் கண்டதும் அர்ஜுனன் அருகணைந்து “என்ன நகைப்பு?” என்று கேட்டான். ஊதப்பட்ட கனல் என அச்சொல்பட்டே அவள் முகம் சிவந்தாள். கைகைளைத் தூக்கி நகங்களை நோக்கிவிட்டு விழிமுனையால் அவனைப் பார்த்து விலகிக்கொண்டாள். “என்னைப்பற்றியா?” என்றான். அவள் விழி தூக்கி அவன் கண்களைப் பார்த்தபின் தழைத்து “பெண்களுக்குரிய பேச்சுகள்” என்றாள். அவன்

விலகிச்செல்லும் அவர்கள் அங்கிருந்தே கைகாட்டுவதை நோக்கியபின் “ஏன் விலகிச்செல்கிறார்கள்?” என்றான். “ஆம், அதைத்தான் நானும் எண்ணுகிறேன். வேண்டுமென்றே செல்கிறார்கள்” என்றாள்.

அவன் “ஏதோ நினைக்கிறார்கள்” என்றான். “என்ன?” என்று கேட்டவள் “அய்யோ, நானும் செல்லவேண்டும்” என்று செல்வதுபோல் ஓர் அசைவை உடலில் நிகழ்த்தினாள். இரு கால்களும் தரையிலேயே பதிந்திருந்தன. அர்ஜுனன் அருகிலிருந்த சிறு மரப்பீடத்தில் அமர்ந்தபடி “என்னிடம் நீ ஏதேனும் பேச விரும்புகிறாயா?” என்றான். அவள் “இல்லை” என்றாள். அவன் “நன்று. அவ்வண்ணமெனில் நான் இங்கு சற்று நேரம் மலர் நோக்கி அமர்ந்திருக்கிறேன். நீ செல்லலாம்” என்று சொன்னான்.

அவள் உரக்க நகைத்து “பெண்களிடம் எப்படி பேசவேண்டும் என்று அறிந்திருக்கிறீர்கள்” என்றாள். அர்ஜுனன் “அப்படியா? அணிச்சொற்கள் எதையும் நான் இங்கு சொல்லவில்லையே” என்றான். “அணிச்சொற்கள் சலிப்பூட்டுபவை. ஆணுக்குரிய கூரிய நேர்ச்சொற்கள் மேலும் அழகியவை” என்றாள். “அப்படியா? நான் என் எண்ணத்தைத்தான் சொன்னேன்” என்றான். “பெண்ணின் உளமறிந்து சொல்லும் நேர்ச்சொற்கள் மேலும் இலக்கடைவன” என்றாள். “நான் உளம் அறிந்துவிட்டேனா?” என்றான். “என் நகைப்பைக் கேட்டதுமே இங்கு நோக்கித் திரும்பியது அதனால்தானே?” அவள் தாழ்ந்த மரக்கிளை ஒன்றில் தன் இடை பதித்து பிறிதொரு மரக்கிளையை கைகளால் பற்றியபடி கேட்டாள். “மேலும் நான் ஏதேனும் பேசவிழைந்தால் இங்கிருக்கலாம் என்றும் நீங்கள் சொன்னதற்கு பொருள்” என்றாள்.

“நேற்று அவையில் அந்த ஆடலை தெரிவு செய்தது யார்?” என்றான் அர்ஜுனன். “நான்தான். அந்நடனத்தை அமைத்ததும் நானே” என்றாள். “ஏன்?” என்று அர்ஜுனன் கேட்டான். “உங்களைப்பற்றி பல கதைகள் இங்கு வந்தன. மணிபூரகத்தில் சித்ராங்கதையின் பொருட்டு பெண்ணென்று ஆன கதை அதில் ஒன்று. அதை நான் பலமுறை கேட்டிருக்கிறேன். பெண்ணென்று ஆகி பெண்ணை அணுகுவது முதல் நோக்கில் மடமை. ஆனால் பிறிதொரு நோக்கில் அது மதிக்கூர்மை. பெண்ணென்று உடல்கொண்டிருந்தால் எத்தனை உள்ளறிந்திருந்தாலும் பெண்ணென்றே விழிசொல்ல உளம் நம்பும். பெண் கொண்டிருக்கும் நடிப்பரண்கள் மறையும். வேலியில்லாப் பயிர்.”

அர்ஜுனன் நகைத்து “ஆணை அணுகத்தானே பெண் விரும்புவாள்?” என்றான். “இளைய பாண்டவரே, பெண் விழையும் ஆண் அவள் வேண்டும்போது பெண்ணென்றும் ஆணென்றும் ஆகத்தக்கவன்” என்றாள். “எப்போதெல்லாம்?” என்று அர்ஜுனன் சிரித்தபடி கேட்டான். “களித்தோட்டத்தில், வம்புப்பேச்சுகளில், இனியபொருளின்மைகளை சலிக்காது பேசுகையில் பெண்ணென்றிருப்பவனே நல்ல காதலன்.” அர்ஜுனன் அவள் கணகளை நோக்கி “எப்போது ஆணென்றிருக்கவேண்டும்?” என்றான். “துயரில் அச்சத்தில் அடைக்கலம் கோருகையில். பிறபெண்கள் முன் இவன் என அவள் சுட்டிக்காட்டுகையில். பிற ஆண்களுக்கு முன் ஒருபடி மேலென்று நின்றிருக்கையில்.”

அர்ஜுனன் “படுக்கையில்?” என்றான். “அங்கு ஆணென்றும் பெண்ணென்றும் அவள் உள்ளம் மாறுவதற்கேற்ப மாறிக்கொண்டிருக்கவேண்டும். அவன் மாறிய பின்னர்

அதைக்கண்டே அவள் அம்மாற்றத்தை விழைந்தாள் என்று அவள் அறியவேண்டும்” என்றாள். அர்ஜுனன் “பெண்ணை அறிந்து கடப்பது எளிதல்ல போலும்” என்றான். “எதையுமே அறிந்து கடக்க முடியாது. அதுவாக ஆதலே கடத்தலின் வழி. காமமும் காதலும் அழியாது நின்றிருந்தால் போதும். அவையே நீர்வெளி. பெண் அலையும் நுரையும் மட்டுமே” என்றாள்.

“நான் அடைந்த பெண்களை வென்றேனா என்றே ஐயம் கொள்கிறேன்” என்றான். “நீங்கள் வென்ற பெண் உங்கள்மேல் மேலும் உரிமைகொள்வாள். உருமாறி உங்கள் அன்னையென்றாவாள். அதுவே அடையாளம்” என்றாள் ஊர்வசி. அர்ஜுனன் “விந்தையாக இருக்கிறது” என்றான். “வெல்லப்பட்டபின் அவனை தான் வென்று செல்வதற்குப்பின் பெண்ணுக்கு இருக்கும் ஒரே வழி அன்னையென்றாவதே. மெலிய அதட்டல்கள், கடுமைகள், நயத்தல்கள், வழிநடத்தல்கள். ஆணைச் சிறுமைந்தனென்று ஆக்கிக்கொண்ட பெண்ணைப்போல மகிழ்வுமிக்கவள் வேறில்லை” என அவள் நகைத்தாள். அர்ஜுனனும் உரக்க நகைத்தான் “ஆம், உண்மை” என்றான்.

“ஆகவேதான் அந்தக் கதையை தெரிவுசெய்தேன்” என்றாள் ஊர்வசி. “உங்களுக்கு பெண்ணை எத்தனை அணுக்கமாகத் தெரியும் என்று பார்ப்போமே என்று எண்ணினேன்” என்றாள். அர்ஜுனன் “அணுகும்தோறும் அறிதல் குறைகிறது” என்றான். அவள் விழிசுருக்கி “ஏன்?” என்றாள். “அகன்றிருக்கையில் அறிபடுபவை பெரியவை, பருவடிவானவை. அணுகும்தோறும் நுண்மைகள் பெருகுகின்றன. ஒரு வான்கடத்தலைவிட அணுதுளைத்தல் நெடுந்தொலைவு என்பார்கள்” என்றான். அவள்

நகைத்து "முற்றிலும் அறியாத சில எஞ்சும்வரைதான் புவி சுழலக்கூடும்" என்றாள்.

"பெண்ணென்றும் ஆணென்றும் ஆனதுதான் என்ன? இரு மானுடத்தோற்றங்கள். அன்னை வயிற்றில் பிறக்கும் இரு உயிர்கள்" என்றான் அர்ஜுனன். அவள் "ஒன்றை ஒன்று நிரப்பும் இரு நிகழ்வுகள். அவை முற்றிலும் நிரப்பினால் அங்கு முழுமை எழுகிறது. எந்த முழுமையும் பிரம்மமே என்பது வேதநிறைவுச் சொல்" என்றாள். "காமத்தினூடாக பிரம்மம்!" என்றான் அர்ஜுனன் கேலியாக. "நன்று! உங்களுக்கு உகந்த பாடம்தான்" என்று அவள் நகைத்தாள்.

"நான் காமத்தை ஒருபோதும் தேடிச்செல்லவில்லை. காமத்தினூடாக அலைவுற்றேன். கங்கையில் செல்லும் நெற்றுபோல. கங்கையை நோக்காது அதை காண்பவன் ஒரு நடனத்தை அல்லது போரைத்தான் காணமுடியும்" என்றான் அர்ஜுனன். அதுவரை பேசிவந்த உவகை ஏனென்றே தெரியாமல் அறுபட்டு அமைதி சூழ்ந்தது. பெண்களுடன் பேசுகையில் அந்த அமைதி ஏன் அவ்வப்போது உருவாகிறது என அர்ஜுனன் வியப்பதுண்டு. மெல்லிய இறகு ஒன்றை இருவரும் சேர்ந்து ஊதியூதி வானில் நிறுத்துவதுதான் அது. எங்கோ ஒரு புள்ளியில் அது அவர்களின் மூச்சுக்காற்றுக்கு அப்பால் சென்றுவிடுகிறது. அப்படியே மெல்ல மண்ணில் அமைகிறது.

"மண்வாழ்த்தும் பெருங்காதலனுக்கு பெண்ணை புரிந்துகொள்ள முடியவில்லை என்றால் வியப்புதான்" என்றாள் அவள். மேலும் அப்பேச்சை நீட்ட விரும்புகிறாள் என அவன் அறிந்தான். "நான் அல்ல, இளைய யாதவரே பெருங்காதலன் என சூதர்களால் பாடப்படுகிறார்" என்றான். அவள் "இல்லை, அவர் காதலரே

அல்ல" என்றாள். அவன் இளைய யாதவனைப் பற்றிய எண்ணம் முன்னரே வந்துவிட்டதென்றும் அதனால்தான் பேச்சு அமைதியாகியதென்றும் அப்போதுதான் உணர்ந்தான். "ஏன்?" என்றான். "அவர் பெண்களுடன் தன்னை பகிர்வதில்லை." அவன் மீண்டும் "ஏன்?" என்றான். "நதிகளிணைந்து ஒழுகுவது காதல். நதிகள் சென்று கடல்சேர்வது அல்ல" என்றாள் ஊர்வசி.

அவன் "ஆம்" என்றான். எழுந்து விலகிச்செல்ல விரும்பினான். அவள் அவனையே நோக்கிக்கொண்டிருந்தாள். அவன் உள்ளச்சரடை மிக அண்மையில் தொடர்ந்துகொண்டிருந்தாள். "சற்று நிலையழிந்திருக்கிறீர்கள்" என்றாள். "ஆம்" என்று அவன் சொன்னான். "அதனால்தான் ஒரு பெண்ணுடன் சொல்லாடலாம் என்று தோன்றியதோ?" என்றாள். "பெண்ணுக்காக இங்கு வரவில்லை" என்றான் அர்ஜுனன் சிறிய எரிச்சலுடன். "மலர்ச்சோலையில் பெண்கள் இருப்பார்களென்று அறியாதவர் அல்ல நீங்கள்" என்றாள் ஊர்வசி. அவன் உடனே விடுபட்டு புன்னகைத்து "உண்மை. இங்கு வருகையில் என்னுள் எங்கோ அவ்வெண்ணம் இருந்தது என்று இப்போது உணர்கிறேன். உன் குரல் கேட்ட அக்கணமே உன்னை எதிர்பார்த்திருந்ததை அறிந்தேன்" என்றான்.

அவள் கன்னத்தின் இருபுறங்களிலும் நீள்கோடென குழி விழ சிரித்தாள். சிரிப்பு முடிந்ததும் அக்குழி விழுந்த இடம் நீர்ச்சுழி மறைந்தபின் எஞ்சும் விழிமயக்குப் புள்ளிபோல தெரிந்தது. ஒவ்வொன்றும் முற்றிலும் அமைத்தெடுக்கப்பட்ட முகம். அவள் கொண்டுள்ளது பருவுடல் அல்ல. அவன் விழைவுகளை அவனிடமிருந்து திரட்டி அதற்கேற்ப உருவாக்கிக்கொண்ட முகம். அதில் அவன் மகிழ்ந்த அத்தனை முகங்களின் கூறுகளும் இருந்தன. மிக இளமையில் பெண்ணை

கனவுகாணும்போதுதான் அந்த முகம் அவனிடமிருந்தது. விழுந்துடைந்து நூறு முகங்களாக சிதறியது. மீண்டும் ஒரேமுகமென்றாகி முன்னால் அமர்ந்திருந்தது.

அசைந்தசைந்து சுருள்நிழல் வீழ்த்திய கருஞ்சுருள்கள் கன்னத்திலிருந்து கீழிறங்கின. பொற்பலாவின் சுளைபோன்ற காது. கருங்குருவி இறகுபோன்ற இமைப்பீலிகள். குழவியின் கொழுங்கன்னம். மென்பாளை வரிகள் கொண்ட கழுத்து. அவன் விழிகளை விலக்கிக்கொண்டு “சற்றுமுன் மூத்தவரிடம் சொல்லாடிக்கொண்டிருந்தேன்” என்றான். அவளிடம் கொள்ளும் மயக்கத்திலிருந்து தன்னை விலக்கிக்கொள்ளவே அப்பேச்சை எடுத்தானா? அல்லது அவனுள் இருக்கும் அந்தச் கசப்பை அவள் நீக்கமுடியுமென எண்ணினானா? உரையாடல்களில் எப்போதும் உள்ளிருந்து பிறிதொன்று எழுந்துவந்து தன்னை நிகழ்த்துகிறது.

அவள் “நீங்கள் இருவரும் தோள்பிணைத்துச் செல்வதை கண்டேன்” என்றாள். “நாங்கள் எதை பேசியிருப்போம் என்று உன்னால் கணிக்க முடிகிறதா?” என்றான். “இளைய யாதவரைப்பற்றி” என்றாள் அவள். அர்ஜுனன் சற்று வியந்து “எப்படி தோன்றியது?” என்றான். “உங்கள் நடுவே அது ஒன்றே எஞ்சமுடியும்” என்று அவள் சொன்னாள். “அதையன்றி பிறவற்றை பேசுவோம் என்றே அவர் அறைக்குள் வந்திருப்பார். அதைப்பற்றி மட்டுமே பேசமுடியும் என்று பேசி முடிந்தபின் அறிந்திருப்பார்.” அவன் அவளை நோக்கினான். அவள் அவ்வெண்ணங்களையும் தன்னுள் இருந்து அள்ளித் திரட்டிக்கொள்கிறாளா? ஆனால் காதல்கொண்ட பெண் ஆணிடமிருந்து அறியாத நுண்மைகள் சிலவே.

“இளைய யாதவர் ரகுகுல ராமனேதான் என்கிறார்” என்றான் அர்ஜுனன். “இங்கிருந்து அறியும் உண்மை அது. அங்கு அது உண்மையென்றாக வேண்டுமென்பதில்லை” என்றாள் ஊர்வசி. “உண்மை அப்படி உருமாறுமா?” என்றான். “நாம் சொல்லளாவிக் கொண்டிருக்கும் இந்தச் சோலையில் உங்கள் விழிதொடுவதற்கு ஒரு கணம் முன்னரே இவையனைத்தும் உருவாகின்றன. விழிதிரும்பியவுடன் மறைந்துவிடுகின்றன என்றால் மண்ணில் அதை எப்படி பொருள் கொள்வது?” என்று அவள் கேட்டாள். “உண்மைதான்” என்று அவன் சொன்னான்.

“இங்கிருந்து நோக்குகையில் புவி ஒரு சிறிய நீர்த்துளி. பெருமலைகள் அதில் வெறும் அதிர்வுகள். மானுடம் என்பது அதிலாடும் ஒளிநடனம்” என்று ஊர்வசி சொன்னாள். “நான் அதை எண்ணவே விழையவில்லை” என்றான் அர்ஜுனன். “மானுட உள்ளம் என்பது ஒரு கைப்பிடி நீர். அதை ஒரு முழம் பரப்பலாம். நூறு முழமும் பரப்பலாம். நூறு காதம் பரப்பினால் என்ன எஞ்சும்?” அவள் நகைத்து “நல்ல ஒப்புமை” என்றாள். “எங்கோ சூதர் பாடலில் கேட்டிருப்பேன்” என்று அவன் சிரித்தான்.

“இளைய யாதவராகி அங்கிருக்கும் அவருக்கும் எந்தைக்குமிடையேயான என்றுமிருக்கும் முரண்பாட்டைப்பற்றி மூத்தவர் சொன்னார்” என்றான் அர்ஜுனன். “அது இரு மானுடருக்கு இடையேயானதல்ல. இரு தெய்வங்களுக்கிடையேயான பூசலும் அல்ல. இரு திசைகளுக்கு நடுவே இருக்கும் இடைவெளி கொண்டது” என்று ஊர்வசி சொன்னாள். “ஏன்?” என்று அர்ஜுனன் கேட்டான். “இளைய பாண்டவரே, இந்திரன் பெருந்தெய்வமென அமைந்த வேதம் இருவகை. இன்றுளது மகாவஜ்ரம் என்றும்

முன்பிருந்தது மாகேந்திரம் என்றும் அழைக்கப்படுகிறது” என்றாள் ஊர்வசி. “வேதமெய்மை ஒன்றென்றால் ஏன் இந்த வேறுபாடு?” அர்ஜுனன் “அவை நோக்கும் திசைகள்” என்றான். “அதைத்தான் நானும் சொன்னேன்” என்றாள் அவள்.

“மாகேந்திரத்திற்கு முன் வாருணம் வேதமுறைமையாக சொல்லப்பட்டது. அதற்கு முன் ஆசுரமும் மாநாகமும் வேதங்களென அங்கே இருந்தன. வேதம் ஒன்றிலிருந்து ஒன்றென தன்னை எழுப்பி கூராக்கிக்கொள்கிறது. இளைய பாண்டவரே, அங்கு மாகேந்திரத்திலிருந்து எழுகிறது பிறிதொரு வேதம்” என்றாள் ஊர்வசி. “நீங்கள் அறிந்த ஒவ்வொரு முந்தைப்பெருவேதமும் பல தலைமுறைக்காலம் நிகழ்ந்த குருதிப்போருக்கும் சொற்களத்திற்கும் பின்னரே முழுதமைந்தன.”

மெல்ல அழகுரு அகன்று ஓர் அருஞ்சொற்பாவை என்றாகி ஊர்வசி சொன்னாள் “ஓர் அரசு உருமாறுவதற்கான போரில் நூறுமடங்கு ஆக்கமும் அழிவும் ஒரு குமுகம் மாறுவதற்கு தேவையாகிறது. ஒரு குமுகம் மாறுவதைவிட நூறுமடங்கு ஒரு பண்பாடு மாறுவதற்கு தேவையாகிறது. ஒரு பண்பாடு மாறுவதைவிட நூறுமடங்கு குருதியும் கண்ணீரும் சொல்லும் ஒரு தத்துவம் மாறுவதற்கு தேவையாகின்றன. இளைய பாண்டவரே, ஒரு தத்துவம் மாறுவதைவிட ஆயிரம்மடங்கு அனலெழுந்து அடங்கிய பின்னரே ஒரு தரிசனம் மாறுபடுகிறது.”

“அங்கு என்ன நிகழவிருக்கிறது?” என்று அர்ஜுனன் அச்சத்துடன் கேட்டான். “இருமுறை அவர்கள் நிகழ்ந்திருக்கிறார்கள். கரிய சான்றோன் என ஒருமுறை. களியாடும் கார்நிறத்தான் என

மறுமுறை. அவர்கள் அங்கு சமைக்க எண்ணுவது பிறிதொரு வேதம். அழித்து தொகுத்து ஆக்கி நிறுத்தி அவர் மீள்வார்." அர்ஜுனன் "குருதியும் கண்ணீரும்" என்றான். "ஆம், குருதியும் கண்ணீரும். வேரில் மட்காமல் கிளையில் பூக்காது என்பார்கள்." அர்ஜுனன் கண்களை மூடிக்கொண்டான். அலையலையாக அவன் முன் இளைய யாதவனின் முகம் எழுந்தணைந்தது. இறுதியாக அந்த வஞ்சப்பெருமுகம். அதன் எரியும் விழிச்செம்மைகள்.

"அவர் முகமொன்று எனக்குள் எஞ்சுகிறது. என்னை இங்குவரை செலுத்தியது அதுவே" என்றான் அர்ஜுனன். "நான் அதை அஞ்சுகிறேன். அதை எதிர்க்கவும் வெல்லவும் விழைகிறேன். அதன்முன் என்னை முற்றாகப் பணியவைத்து அமையவும் எண்ணுகிறேன்." ஊர்வசி "நீங்கள் அவருடன் போரிட்டபோது எழுந்த வஞ்சம்மிக்க கரியமுகம் அல்லவா?" என்றாள். "ஆம்" என்றான் அர்ஜுனன். "நீ அதை அறியமாட்டாய்." அவள் புன்னகைத்து "அறிவேன்" என்றாள். அவன் விழிதூக்கி நோக்கினான்.

"அங்கே மண்ணில் அவர் இருண்டு இருண்டு எடைகொண்டு குளிர்ந்து அமைந்திருக்கிறார். அவரை முற்றிலும் சூழ்ந்திருக்கிறாள் மூத்தவள். அத்தவத்தைக் கலைக்க இங்கிருந்து இசைஞரும் ஆட்டரும் கணிகையரும் என சென்றுகொண்டே இருக்கிறார்கள். நானும் சென்றேன்." அர்ஜுனன் "நீயா?" என்றான். "நானாக அல்ல. அவர் உள்ளம் விழைந்த பெண்களில் ஒருத்தியாக." அர்ஜுனன் பேசாமல் அவள் சொல்லப்போவதை எதிர்பார்த்துக் காத்திருந்தான். "அவரை அணுகமுடியவில்லை. மூத்தவளின் இருண்ட வளையத்தைக் கடந்து எவரும் செல்லமுடியாது."

“நான் சென்றது ஓர் இளைய கோபிகையாக” என்று ஊர்வசி சொன்னாள். “அவள் பெயர் ராதை.” அர்ஜுனன் சிரித்து “அவள் மூத்தவள்” என்றான். “அவளுக்கு என்றும் இளமைதான்” என்றாள் ஊர்வசி. “அவர் செல்லும் வழியில் பாற்குடம் சுமந்து ஆய்ச்சியெனச் சென்றேன். அவர் எதிரில் வந்தபோது என் கலம் ததும்பி விழுந்த பாற்துளி மலரென மண்ணில் விரிந்தது. அவர் விழிகள் என்னை நோக்கின. ஆனால் எதையும் அங்கு நான் காணவில்லை.”

“நான் புன்னகை செய்தேன். அப்புன்னகையை அவர் தன் இளமையில் ஒவ்வொருநாளும் கனவுகண்டிருந்தார். ஆனால் வெறும் விழிகளுடன் கடந்துசென்றார்” என்றாள். “நான் அவரைத் தொடர்ந்து செல்ல காலடி எடுத்து வைத்தபோது அவர் சென்றுமறைந்த சாலைவளைவில் இருந்து அந்த யாதவப்பெண்ணின் கணவனாகிய அபிமன்யூ வருவதைக் கண்டேன். அவன் என்னை நோக்கியதுமே என் மாயங்கள் அழிந்தன. தயங்கி பின்காலெடுத்து வைத்து புதருக்குள் ஒளிந்தேன்.”

“மீண்டுவந்தபின் அறிந்தேன், அது அவரேதான்” என்றாள். அவன் “ம்?” என்றான். “அவரிலிருந்து ஒரு மாய உருவை சமைத்திருக்கிறாள் மூத்தவள். ஒவ்வொருவருக்கும் உருமாற்றி அவரை அவளே காட்டுகிறாள். பல்வேறு பேயுருக்கள். அவர் அன்னையெனச் சென்றவள் மேனகை. அவள் முன் கம்சன் எனக் காட்டினாள்.”

“காதல், இசை, கவிதை, தத்துவம், மெய்மை அனைத்துமே இப்பால் நின்றிருக்கின்றன. அவரை அணுகுபவர்கள் அனைவரையும் அவள் அணைத்துக்கொள்கிறாள். கடுங்குளிர்ப் பனிக்கட்டி சூழ்ந்திருப்பவை அனைத்தையும் உறையச்செய்வது

போல அவர்கள் அனைவருமே இருண்டு இறுகிவிட்டனர். அவர் துணைவியர் அஞ்சி துவாரகையில் அமைந்திருக்கின்றனர். அவர் அமைச்சரும் தோழரும் மைந்தரும் அவரைப் பார்த்தே நெடுநாட்களாகின்றன."

"ஏன் அவ்விருள்?" என்றான் அர்ஜுனன். "வென்று செல்ல. இரக்கமில்லாமலிருக்க. எஞ்சவிடாது அழிக்க" என்றாள் அவள். "கருக்கிருட்டுக்குப் பின்னரே புலரி என்று அறிந்திருப்பீர்கள்." அர்ஜுனன் "பேரழிவு ஒன்று அமையவிருக்கிறது என நெடுநாட்களாகவே நிமித்திகர் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள்" என்றான். "அது முன்னரே தொடங்கிவிட்டது" என்று அவள் சொன்னாள். "அவர் பிறப்பதற்கு முன்னரே. ராகவன் பிறப்பதற்கு முன்னரே. அதை அவர்கள் முடிவுசெய்வதில்லை. நாம் அலைகளைத்தான் காண்கிறோம், ஆழ்கடல் பின்னாலிருக்கிறது."

அர்ஜுனன் நீள்மூச்சுடன் "துளியினும் துளியென உணர்வதன் விடுதலையை அறிகிறேன். நன்றி" என்றான். அவள் சிரித்து "காதற்சொல்லாட வந்தீர்கள். பேரழிவைப்பற்றி பேசிவிட்டேன்" என்றாள். "இல்லை, என்னுள் திகழ்ந்த கசப்பு ஒன்றை அகற்றிவிட்டாய்" என்றான்.

# கிராதம் - 56

**[ 17 ]**

"நெடுங்காலத்துக்கு முன் மண்ணில் வேதம் அசுரர் நாவிலும் நாகர் மொழியிலும் மட்டுமே வாழ்ந்தது என்பார்கள்" என்றார் சனகர். "ஏனென்றால் அன்று மண்ணில் அவர்கள் மட்டுமே இருந்தனர். அன்று புவியும் அவர்களுக்குரிய

இயல்புகொண்டிருந்தது. பார்த்தா, பருப்பொருள் அனைத்துக்குமே புடவிநெசவின் மாறா மூன்றியல்புகள் உண்டு என அறிந்திருப்பாய். நிலையியல்பு, செயலியல்பு, நிகர்நிலையியல்பு என்பவை ஒன்றை ஒன்று எதிர்த்து நிரப்பி நிலைகொண்டு பின் கலைந்து இவையனைத்தையும் செயல்நிலைகொள்ளச் செய்பவை" என்றார் சனாதனர்.

"பிரம்மத்தின் மூன்று நிலைகள் இவை. பிரம்மமே இவற்றினூடாகத்தான் இயக்கம்கொண்டு தன்னை தான் அறிகிறது. செயலென்னும் மாயையை நிகழ்த்துகிறது. அலைகளினூடாக ஆழம் தன்னை நிகழ்த்தி தானென்று அறிவதுபோல. எனவே அதை திரிகுண சமன்வயம் என்கின்றனர் சாங்கியர்" என்று சனந்தனர் சொன்னார். சனத்குமாரர் "முதல்நிலையில் மண் முற்றிலும் நிலையியல்பு கொண்டிருந்தது. அதை வெல்ல புவிநிகழ்ந்தவர்கள் அசுரர். தேவர்கள் மலர்சூடிய கிளைகள் என்றால் அசுரர் மண்ணிலாழ்ந்த வேர்கள். அவர்கள் ஒருவரின்றி ஒருவர் நிலைகொள்ள முடியாதவர்கள் என்றுணர்க!" என்றார்.

தேவருலகத்தின் தவச்சோலை ஒன்றில் என்றுமுள தொன்மை, எக்காலமும் அழிவின்மை, குன்றா இனிமை, வளரா இளமை என்னும் வேதத்தின் இயல்புகள் நான்கும் மைந்தர்களாக எழுந்த இளமுனிவர் அருகே கைகூப்பி அர்ஜுனன் அமர்ந்திருந்தான். அப்பால் கங்கை ஒளியுடனும் குளிருடனும் பெருகிச் சென்றுகொண்டிருந்தது. நான்கு முனிவர்களும் வாழ்ந்த சிறிய புற்குடில்களில் அணிகொண்ட குழலில் அகில்மணம் இருப்பதுபோல வேள்விப்புகை எஞ்சியிருந்தது. அங்கிருந்த மயில்கழுத்துகளின் வளைவில், மான்விழிகளின் மின்னில், கிளிகளின் சிறகுவண்ணங்களில், மரங்களின்

தளிர்மென்மையில் வேதம் திகழ்ந்தது. நால்வரும் கல்விச்சாலையிலிருந்து கரந்து ஓடி சோலையாடிக்கொண்டிருக்கும் இளமைந்தர் போலிருந்தனர். இளமைக்குரிய விழிச்சிரிப்பும் இளமையேயான உடற்துள்ளலும் கொண்டிருந்தனர். நால்வரும் ஆடிப்பாவைகள் என தெரிந்தனர். ஒருவர் சொல்லை பிறரும் விழிகளால் சொல்வதுபோலிருந்தது.

சனாதனர் சொன்னார் “நிலையியல்பு கொண்டதாகவே இவ்விசும்பு பல்லாயிரம் யுகங்கள் நீடித்தது. தன் நெறிகளின்படி அது தனக்குள் தான் நிறைந்து அமர்ந்திருந்தது. பின்னர் பிரம்மனின் உள்ளத்திலிருந்து மரீசி, அங்கிரஸ், அத்ரி, கிருது, புலஹர், புலஸ்தியர், கசியபர் என்னும் பிரஜாபதிகள் எழுந்தனர். அவர்களிடமிருந்து உருவாயின உலகுகள் அனைத்தையும் நிறைக்கும் விண்ணவரும் மண்ணவரும் ஆழுலகோருமான முடிவிலா இருப்புகள். மண்மேல் புழுக்களும் பூச்சிகளும் விலங்குகளும் பறவைகளும் உருவாயின. ஆயினும் மண்ணின் நிலையியல்பு மாறவில்லை. ஒரு கல்லை இடமாற்றுவதற்குக்கூட அவற்றால் இயலவில்லை. அதைக்கண்டு சீற்றம்கொண்ட கசியபரின் உள்ளத்தின் விசையிலிருந்து அசுரர் உருவாயினர்.”

“வெறிகொண்ட செயலூக்கமே அவர்களின் அடிப்படை இயல்பு. விடாய்மிக்கு நீர்தேடும் பாலைஓநாய்போல, பசிகொண்டு இரையைத் துரத்தும் சிம்மம்போல, மதம்கொண்டு பாறையில் தலைமோதும் களிறுபோல எப்போதும் இருப்பது அவர்களின் வழக்கம். கரைப்பாறைமேல் அலையலையென வந்து மோதி தலையுடைந்துச் சிதறி அழியும் அலைகளைப்போல அவர்கள் அசைவிலியாக

காலத்திலமைந்திருந்த முதலியற்கைமேல் முட்டினர். அர்ஜுனா, அங்கே ஒரு பாறை பிளக்கப்பட்டிருக்கிறது என்றால் அதன்பொருட்டு ஆயிரம் அசுரர் குருதி சிந்தியிருக்கிறார்கள் என்று பொருள். ஒரு குகைச்சித்திரம் செதுக்கப்பட்டிருக்கிறதென்றால் அதன்பொருட்டு நூறாண்டுகாலம் தவமியற்றப்பட்டிருக்கிறது என்று பொருள்" என்றார் சனாதனர்.

"விழைவே அசுரரின் முதலியல்பு. அவ்விழைவு மூன்று முகம் கொண்டது. சூழ்ந்திருக்கும் அனைத்தையும் வென்று தன் உடைமையென்றாக்கிக்கொள்ளும் *திருஷ்ணை*. தன்னை முடிவிலாது பெருக்கிக்கொள்ளும் *ஆஸக்தி*. அறிந்துகொள்வதற்கான *ஜிக்ஞாஸை*. மூன்று முனைகளில் அவர்கள் அதை பெருக்கிக்கொண்டனர். வீரத்தால், பாலின்பத்தால், தவத்தால் அவர்களில் எழுந்தனர் மண்ணையும் விண்ணையும் முழுதாண்ட பேரரசர்கள். ஒன்றுநூறெனப் பெருகும் பெருந்தந்தையர். ஒற்றைச்சொல்லில் பிரம்மத்தை திறந்தெடுத்த முனிவர். அவர்கள் தங்களை கூர்படுத்தி கூர்படுத்திச் சென்று வேதத்தை தொட்டனர்" என்றார் சனந்தனர்.

"வேதமென்பது புவியை தன் உள்ளங்கையில் ஏந்தி குனிந்து நின்றிருக்கும் நெடுவிசும்பின் எண்ணப்பெருக்கு. அண்ணாந்து நோக்கும் ஒரு சிறுபுழு தன் சித்தத்தை பெருக்கி நீட்டி கூர்ந்து குனிந்துநோக்கும் மானுடனின் விழியை சந்தித்து அவர்கள் புன்னகை பரிமாறிக்கொள்வது போன்றது அந்நிகழ்வு. அக்கணமே அது புழுவல்லாதாகிறது. வேதத்தை அறிந்த அசுரமுனிவர் உள்ளத்தில் மொழி உருவாகியது. மொழி உரையாடலாகியது. கல்லில் கனலென அவர்களுக்குள் இருந்த

வேதம் உரசிப்பொறியாகி எரிவடிவுகொண்டு எழுந்தது” என்று சனத்குமாரர் சொன்னார்.

“மரம்கனிந்த மலர்த்தேன்போல மொழி கனிந்து இனிக்கும் நுனியே வேதம் என்கின்றன காவியங்கள்” என்றான் அர்ஜுனன். சனகர் புன்னகைத்து “ஆம், அதுவும் மெய்யே. ஆனால் அது அனைத்தையும் மொழியென்றே அறியும் கவிஞர் உணர்ந்தது. மொழி உருவான பின் அதில் மெய்மை அமைந்து வேதம் பிறப்பதில்லை. வேதமே விதை. அது உள்ளமென்றாகி பிற உள்ளத்தை நாடுகையில் மொழியை உருவாக்கிக்கொள்கிறது. முளையாகி தளிராகி எழுந்த விதை கொடிச்சுருளை நீட்டி நீட்டித் தவித்து பற்றிக்கொள்வதுபோல. வேதம் அனல்துளிபோல. அது பரவ விரும்புகிறது. பற்றிக்கொண்டு எழ முனைகிறது. அதன் தவிப்பே மொழி என்க!” என்றார். சனாதனர் “மொழி என்பது ஒற்றைச் சொல்லே. அச்சொல்லின் முடிவில் நிறைவின்மையை உணர்ந்து எழுகிறது அடுத்த சொல். அதிலிருந்து அடுத்த சொல் என பெருகிப்பெருகி அது சொல்வெளியென்றாகிறது” என்றார்.

“ஆகவேதான் ஒரு சொல்லை விளக்குவதற்காக பிற அத்தனை சொற்களும் எழுந்து சூழ்கின்றன” என்றார் சனந்தனர். “இளைய பாண்டவனே, மொழி என்பதுதான் என்ன? உரைக்கவும் உணர்த்தவும் கொள்ளும் முடிவிலா தவிப்பு அல்லவா அது? ஒவ்வொரு கணமும் பொருள் வளர்வது சொல். ஒவ்வொரு முறையும் புதிதெனப் பிறப்பது. ஒருபோதும் சொல்லி நிறைவறியாதது. மொழிக்குள் அமைந்து ஒவ்வொரு சொல்லிலும் எழுந்து துள்ளி அலைத்து தவித்துக்கொண்டிருப்பது என்ன? தளிர்நுனிகளனைத்திலும் துடிப்பது, வேர்முனைகள் அனைத்திலும் நெளிவது

விதையினுள் எழுந்த விழைவே அல்லவா?” என்று சனத்குமாரர் கேட்டார்.

“மொழியென்றாகிய வேதம் கருவறை புகுந்த பார்த்திவப் பரமாணுபோல புவியில் விழுந்த உயிர்த்துளி. ‘நான் வளர்க! நான் பெருகுக! நானே ஆகுக!’ என்றே அதுவும் தவம்செய்கிறது. அந்தத் துளி அசுரர்களை ஒற்றைப்பேருடலாக்கியது. பல்லாயிரம் கைகளும் கால்களும் கொண்ட விராடவடிவன் ஆயிரக்கணக்கான புரவிகளை ஒன்றாக்கி அவற்றின் மேலேறி போர்க்களம் செல்வதுபோல அவர்களின் குலங்கள் மேல் அது நின்றது. அசுரர் என்று ஒரு திரள் இல்லை, ஆசுரம் என்னும் எழுச்சியே உள்ளது” என்று சனந்தனர் சொன்னார். “அசுரவேதம் அசுரரின் நாவுகளில் அமைந்து அவர்களின் குருதியை ஒன்றாக்கியது. அவர்களின் நோக்கிலெழுந்து முகில்களையும் மலைமுடிகளையும் ஆறுகளையும் நிலவிரிவையும் கடல்களையும் அள்ளத்துடித்தது. அவர்களின் படைக்கலங்களில் தோன்றி குருதிகொள்ளத் துடித்தது. அடங்காது திமிறிய புரவி அவர்களால் வென்று கடிவாளமிடப்பட்டது. நஞ்சும் அமுதுமெனக் கலந்து நின்றிருந்த அன்னம் அவர்களால்தான் சமைக்கப்பட்டது” என்றார் சனாதனர்.

“இளைய பாண்டவனே, படைப்பில் இருவிசைகளை அறிந்துகொள். ஒன்று தன்வாலை தான்விழுங்கி தன்னுள் சுருண்டு சுழன்றுகொண்டிருக்கும் அன்னம். இன்னொன்று அதில் ஊடுருவி அதன் சுருள்களைந்து எழச்செய்யும் அறிவு. அன்னமும் அறிவும் சக்தியும் சிவமும் கொள்ளும் இரு தோற்றங்களே. விண்ணிலும் மண்ணிலுமுள்ள இருப்புகள் அனைத்தும் முதன்மைப்பிரஜாபதியாகிய தட்சனில் இருந்து உருவானவை. மாநாக வடிவினனாகிய அவனே அன்னரூபன்.

அதிதி, திதி, தனு, அரிஷ்டிரை, சுரசை, கசை, சுரபி, வினதை, தாம்ரை, குரோதவஸை, இரா, கத்ரு, முனி என்னும் பதின்மூன்று நாகினியரில் இருந்தே அசுரரும் தேவரும் நாகரும் மானுடரும் விலங்குகளும் பறவைகளும் பூச்சிகளும் புழுக்களும் பிறந்து விண்ணையும் மண்ணையும் நிறைத்தனர். அம்மகளிரை மணந்த முதல் பிரஜாபதியாகிய கசியபரின் உள்ளே எண்ணமென எண்ணும் வாய்ப்பென உறைந்தவையே அவர்களில் அன்னம்சூடி உயிருருக்கொண்டு எழுந்தன" என்றார் சனகர்.

"அதிதியில் இருந்து ஆதித்யர்கள் பிறந்தனர். விஷ்ணு, சுக்ரன், ஆரியமா, தாதா, த்வஷ்டா, பூஷா, விவஸ்வான், சவிதா, மித்ரன், வருணன், அம்சன், பகன் என்னும் பன்னிரு ஆதித்யர்களில் இருந்து ஆதித்யகுலம் தொடங்கியது. அதிதியிலிருந்து எழுந்த இரண்டாவது பெருங்குலத்தோர் வசுக்கள் எனப்பட்டனர். அனலன், அனிலன், ஆபன், சோமன், தரன், துருவன், பிரத்தியூடன், பிரபாசன் என்னும் எட்டு வசுக்கள் விண்ணை ஆள்கின்றனர். திதியில் இருந்து தைத்யர்கள் பிறந்தனர். ஹிரண்யாக்ஷனும் ஹிரண்யகசிபுவும் பிறந்தது தைத்யகுலத்திலேயே. தனுவிலிருந்து தானவர்கள் பிறந்தனர். அவர்கள் விருத்திரனை முதல் தந்தையாகக் கொண்டவர்கள். சுரபியிலிருந்து பதினொரு ருத்ரர்கள் பிறந்தனர். வினதை கருடனைப் பெற்றாள். கத்ரு பெற்றவை பெருநாகங்கள்" என்றார் சனத்குமாரர்.

"ஒன்று அறிக, ஆதித்யர்களும் தைத்யர்களும் தானவர்களும் உடன்பிறந்தோர். முன்பு ஆதித்யர்களும் அசுரர்கள் என்றே அறியப்பட்டனர். ஏனென்றால் ஆசுரம் என்னும் முதலியல்பே அவர்களை இயக்கிய வல்லமை. இந்திரனும் வருணனும் மித்ரனும் அசுரர்களே" என்று சனகர் தொடர்ந்தார். "அசுரர்களின்

உள்ளத்தில் வேதம் எழுந்ததும் அது தன்னியல்பால் கனியலாயிற்று. மொழியை அது சமைத்தது. அதை ஊர்தியெனக்கொண்டு உள்ளங்கள் தோறும் விரிந்தது. வேதம் முனிவர்களை உருவாக்கியது. முனிவர்கள் வேதத்தைப் புரக்க வேள்விகளை இயற்றினர்" என்றார் சனந்தனர்.

"வேள்வியென மானுடர் இன்று இயற்றுபவை தன்னியல்பாக அன்று செய்யப்பட்ட நற்செயல்களின் சடங்கு வடிவங்களே" என்றார் சனாதனர். "ஒருபோதும் தோற்காமலிருத்தலுக்குரிய விக்ரமம், அனைத்தையும் அடைவதற்குரிய திருஷ்ணம், பெருகிக்கொண்டே இருப்பதற்குரிய கிராந்தம் என அசுர வேள்விகள் மூன்றே. அவற்றை இயற்றி அசுரர் வெற்றிகளையும் செல்வங்களையும் ஈட்டினர். குலம்பெருக்கினர்" என்றார் சனாதனர். சனத்குமாரர் "இன்று மண்ணில் அரசர்கள் இம்மூன்று மறவேள்விகளில் இருந்து எழுந்த வேள்விகள் பலவற்றை இயற்றுகிறார்கள். ராஜசூயமும் அஸ்வமேதமும் விக்ரமம் எனப்படுகின்றன. பொருள்நாடிச் செய்யும் பூதவேள்விகள் திருஷ்ணம் போன்றவை. புத்ரகாமேஷ்டி போன்றவை கிராந்தமரபைச் சேர்ந்தவை" என்றார்.

"வென்று வாழ்ந்து நிலைகொண்டபின்னரும் எஞ்சுவதென்ன என்று அவர்களின் முனிவர்கள் உளம்கூர்ந்தனர். அவர்கள் ஏழுவகை அறவேள்விகளை உருவாக்கினர். அனைவருக்கும் பகிர்ந்தளித்து உண்ணுதல் ஃபாஜனம், அளித்தவற்றுக்கு நன்றி சொல்லுதல் பிரதிநந்தனம், எடுத்தவை மேலும் வளரவிடுதல் அஃபிஜனனம், அளித்த விண்ணவர்க்கே திருப்பி அளித்தல் நிவேதனம், அறியாதவருக்கும் அன்னமளித்தல் அஃப்யாகதம், சிற்றுயிர்களையும் ஓம்புதல் உபகாரம்,

இங்கிருப்பவற்றின் ஒழுங்கு குலையாது நுகர்தல் ருதம். இந்த ஏழு தொல்வேள்விகளுக்கு அசுரர்களில் ஒருசாராரான ஆதித்யர்கள் கட்டுப்பட்டனர். ஆகவே அவர்கள் வேள்விக்குரியவர்களாயினர். தைத்யர்களும் தானவர்களும் அறவேள்வியை மீறிச்சென்றவர்கள். வேள்வியிலமர்ந்து அவிகொள்ளத் தொடங்கியதும் ஆதித்யர்கள் ஒளிகொண்டனர். அழிவின்மையை அடைந்தனர். விண்ணாளும் தேவர்களென்றானார்கள். தைத்யர்களும் தானவர்களும் தங்கள் ஆசுரத்தால் முழுக்கக் கட்டுண்டிருந்தனர். எனவே இருண்டு புவியை நிறைத்தனர்" சனகர் சொன்னார்.

"ஆதித்யர்களான அசுரர்களில் மூத்தவர் வருணன். தைத்யர்களும் தானவர்களுமான அசுரர்களில் முதல்வர் விருத்திரன். விருத்திரனை வென்றமையால் இந்திரன் தேவர்குடியில் மூத்தவனென்றானான்" என்றார் சனந்தனர். சனத்குமாரர் "ருதம் கொண்டமைந்த அசுரர்குடி மூத்தவராகிய வருணனே அசுரகுடியின் அறவேள்விகளில் முதல்வர். அவருக்கான வேதம் வாருணம் எனப்பட்டது. வேதமுதல்வனாக இந்திரன் எழுந்தபின் உருவான வேதமுறைமை மாகேந்திரம். குன்றாவிழைவும் வென்றுசெல்லும் வீரமும் அறம்நிற்கும் அமைதியும் கொண்டவனாகிய இந்திரனே அதன் முழுமுதல்தேவன் என அமைந்தான்" என்றார்.

"விருத்திரனின் அழிவுக்குப்பின் அசுரரும் தேவரும் கொண்ட பகைமை ஒவ்வொரு கணமும் என வளர்ந்தது. அசுரருக்கும் தேவருக்கும் உளம்பகுத்து அளித்தவர்களாகிய மானுடர் உருவாகி வந்தனர். மானுடரின் அறவேள்விகளால் தேவர் வளர்ந்தனர். தங்கள் அழியா விழைவின் ஆற்றலால் அசுரர்

நிகர்நின்றனர். இன்றுவரை நீளும் அப்போர் இனி என்றும் இவ்வண்ணமே நீடிக்கும் என்பதே நெறி” என்றார் சனத்குமாரர்.

**[ 18 ]**

“மைந்தரை வளர்க்கும் அன்னை மைந்தர் வளரும்தோறும் தான் மாறுபடுவதுபோல வேதம் மாறிக்கொண்டிருக்கிறது” என்றார் லோமசர். இந்திரனின் மலர்க்காட்டின் கொடிமண்டபத்தில் அவருடன் அர்ஜுனன் அமர்ந்திருந்தான். “இந்திரனை முதல் தெய்வமாகக் கொண்ட வேதம் மாகேந்திரம் எனப்பட்டது. அதற்கு முன்னாலிருந்த வாருணத்திலிருந்து வேள்விச்சடங்குகளை தான் எடுத்துக்கொண்டது. மாகேந்திர வேள்விகள் அனைத்திலும் முதல் அவி இந்திரனுக்கே அளிக்கப்பட்டது. மானுடர் மண்ணில் செய்த வேள்விகளின் அவி பெருநதிகளாக வந்து சூழ்ந்தமையால் இந்திரபுரி அணையாத ஒளியுடன் திகழ்ந்தது அன்று. இந்திரனுக்கு அப்பால் தெய்வங்களென எவருமிருக்கவில்லை அன்று” என்று லோமசர் சொன்னார்.

அந்நாளில் அசுரர் கோமான் ஹிரண்யன் அசுரப்பெருவேதத்தின் பன்னிரண்டாயிரம் பாதங்களை முழுதுணர்ந்து தெளிந்தான். அந்த வேதம் அவனுக்கு வெற்றியும் குலவிரிவும் புகழுமாகியது. தன்னை இறைவனென அவன் உணர்ந்தான். எனவே அவனை இறைவன் என எண்ணினர் அசுரகுடிகள். வேதமெய்மை படர்ந்த அவன் உடல் பொன்னென்றே ஆகியது. அவன் தேர்ந்தமைத்த பொன்மய வேதம் ஹிரண்யம் என அழைக்கப்பட்டது. தந்தையிடமிருந்தே வேதம் கற்றுத்தெளிந்தான் அவன் மைந்தனாகிய பிரஹலாதன். அதை முழுதும் ஓதி உணர்ந்து தெளிந்தபோது அது குறையுடையது என்று உணர்ந்தான். அக்குறை என்னவென்று அவனால்

அறியமுடியவில்லை. அசுரர்களின் ஆசிரியரான சுக்ரரும் அதை அறிந்திருக்கவில்லை. எனவே அதை அறிய நாரதரை தேடிச்சென்றான்.

நாரதர் சொன்னார் “அசுர இளவலே, உன் வேதம் சீறும், பாயும், போரிடும், வெல்லும். கண்மூடி வெறுமனே அமராது. எனவே அசுரர் வென்று அமைந்ததுமே அவர்களின் வேதம் அவர்களை கைவிடத் தொடங்குகிறது. செயலூக்கம் என்பது இயல்புநிலை அல்ல. செயலின்மை என்பதுபோல அதுவுமொரு குறைநிலையே. செய்தடங்குதலே நிறைநிலை. உன் தந்தை குன்றா விசைகொண்டு விண்ணை முட்டிக்கொண்டிருந்தார். அவருக்குரியதாக அமைந்தது அவ்வேதம். நிலைகொண்ட உள்ளத்துடன் உன்னை நோக்கி அமர்ந்த உனக்கு அது உதவாச் சொல்லென்று ஆகியது. செயல் ஒறுத்து நீ அமைதி கொள்கையிலும் தொடர்ந்துவரும் வேதமென்ன என்று உணர்க!”

அத்தகைய வேதம் என்ன என்று அறியும்பொருட்டு வேதமுணர்ந்த தன் தந்தையிடமும் தந்தையின் ஆசிரியரான சுக்ரரிடமும் சுக்ரரின் ஆசிரியரான பிரஹஸ்பதியிடமும் சென்றபின் மீண்டும் நாரதரிடமே வந்தான் பிரஹலாதன். “முனிவரே, உங்கள் வினாவுடன் நான் என் தந்தையிடம் சென்றேன். ஆடாத தீ என்று ஒன்றில்லை என்றார். சுக்ரர் சுழல்கையிலேயே காற்று மூச்சென்றாகிறது என்றார். பிரஹஸ்பதி அசையாத நாக்கு சொல்லெடுப்பதில்லை என்றார். நீங்கள் சொன்ன வேதம் என ஒன்றில்லை என்றே அவர்கள் கூறினர். எனவே உங்களையே அடைக்கலம் புகுகிறேன். அமைதிநிலையில் திகழும் வேதம் என்பது என்ன?” என்றான்.

நாரதர் "இளவலே, கேள்! வீரமும், காமமும், கொடையும் செயலென்று மட்டுமே திகழ்பவை. ஆற்றாவிட்டால் இல்லையென்றாகுபவை. ஆனால் அளியும் அறமும் அருளும் உணர்வென்றும் இயல்பென்றும்கூட உள்ளமைபவை. இயற்றாவிட்டாலும் இருப்பவை. எந்த வேதம் அப்பண்புகளை மட்டும் தான் எனக் கொண்டுள்ளதோ அதுவே நிறைநிலை வேதம்" என்றார். "அவ்வேதம் எங்குள்ளது?" என்றான் பிரஹலாதன். "நீ கற்றறிந்த வேதத்திற்குள்ளேயே அதுவும் அமைந்துள்ளது. மெய்யறிவால் அதைத் தொட்டு மீட்டெடுக்கவேண்டும்" என்றார் நாரதர்.

"முனிவரே, அதைத் திரட்டி எடுக்கும் வழியென்ன என்று சொல்க!" என்றான் பிரஹலாதன். "விழைவென்றும் செயலென்றும் அலை கொந்தளிக்கும் வேதவெளிக்கு அடியில் இருப்பென்றும் இன்மையென்றும் இல்லாது நிறைந்திருக்கும் அமைதி ஒன்றுள்ளது. அனைத்துமாகியும் அனைத்திற்கும் அப்பாற்பட்டும் இருக்கும் ஒன்று. அதைக் குறிக்கும் சொல் ஒன்று. அச்சொல்லைப் பற்றுக! ராணித்தேனீயை எடுத்துச்சென்றால் தேனீக்கூடே உடன் வருவதுபோல மெய்வேதம் அதைத் தொடர்ந்து உன்னுடன் வரும்."

தன் அருகே முழந்தாளிட்டு செவிகாட்டி அமர்ந்திருந்த பிரஹலாதனுக்கு கைகளால் இதழ்பொத்தி செவிகளில் அந்த முதற்சொல்லை நாரதர் சொன்னார் "நாராயணா". மும்முறை அதைச் சொல்லி தன் ஆழத்தில் நிறைத்துக்கொண்டான் பிரஹலாதன். "அசைவற்றது, முழுமைகொண்டது, அனைத்துமானது, நீரென நிறைவது, நிலைகொண்டது, காப்பது, விரிவது என்னும் ஏழு பொருள்கொண்டது இச்சொல்.

ஊழ்கத்தில் ஏழாயிரம் கோடி பொருள்கொண்டு விரிவது. இது உன்னுடன் இருக்கட்டும்” என நாரதர் வாழ்த்தினார்.

நாராயணா என்னும் ஒற்றைச் சொல்லால் ஹிரண்யவேதத்திலிருந்து பிரஹலாதன் திரட்டிய வேதமே மஹாநாராயணம் என்றும் வைஷ்ணவம் என்றும் அழைக்கப்படுகிறது. அவ்வேதத்தை ஓதி உணர்ந்து அவன் ஒளிகொண்டான். தந்தையின் ஒளியைவிட மைந்தனின் ஒளி மிகுந்தபோது அசுரர் அவனை நாடிவந்தனர். அவர்களுக்கு மகாநாராயண வேதத்தை பிரஹலாதன் கற்பித்தான். ஹிரண்யவேதமன்றி பிற வேதம் ஒலிக்கலாலாது தன் நாட்டில் என ஆணையிட்டிருந்தான் ஹிரண்யன். ஒருநாள் வேட்டைக்குச் சென்றபின் புலர்காலையில் காட்டிலிருந்து நகர்திரும்புகையில் காட்டுவிலங்குகள் நிரைநிரையென செல்வதைக் கண்டு வியந்து தேரை நிறுத்தினான். அவை செல்லும் வழியெங்கே என்று நோக்கிவர ஒற்றனை அனுப்பினான்.

ஒற்றன் திரும்பிவந்து நகருக்கு வெளியே ஆற்றங்கரைக் குடிலில் அவன் மைந்தன் பிரஹலாதன் வேதமோதுவதாகவும் அதைக் கேட்கும்பொருட்டே விலங்குகள் செல்வதாகவும் சொன்னான். வேதம் அசுரருக்குரியது, விலங்குகள் எவ்வண்ணம் வேதத்தை அறியமுடியும் என அவன் வியந்தான். தேரைத் திருப்பி மைந்தன் இருந்த குடிலுக்குச் சென்றான். அங்கே மானும் முயலும் புலியும் நரியும் புட்களும் கூடி அவ்வேதத்தைக் கேட்டு நிற்பதைக் கண்டான். மைந்தனிடம் “இது எந்த வேதம்? ஹிரண்யவேதம் அசுரருக்குரியது. அதை பிற உயிர்கள் அறியமுடியாது” என்றான். “வேதம் ஒன்றே. காட்டில் கனிகொய்வதுபோல அதில் இனிய பகுதி ஒன்றை

நான் தேர்ந்துகொண்டேன்” என்றான் மைந்தன்.
“பொய்யாமையும் கொல்லாமையும் விலகாமையும் கொண்ட வேதம் இது. தான் மட்டுமே இருந்தாலும் முழுநிலையிலமைவது.”

சினத்தை அடக்கி “அந்த வேதம் எது?” என்றான் ஹிரண்யன். “நாராயாணா என்னும் சொல்லுடன் வந்திணையும் சொற்களாலான வேதம்” என்றான் பிரஹலாதன். தந்தை சினம் கட்டுமீற ஒற்றை அடியில் அக்குடிலை உடைத்து வீசினான். “இனி அந்த வேதம் இங்கு ஒலிக்கலாகாது” என்றான். “அவ்வேதமே என் நாவில் ஒலிக்கும். மெய்யென்று ஒன்றை அறிந்தபின் பிறிதொன்றைச் சூட ஒருபோதும் ஒப்பேன்” என்றான் பிரஹலாதன். தந்தை மைந்தனை தன் கதையால் அடிக்கப்போனான். “என்னை கொல்லுங்கள். உங்கள் வேதத்தை நீங்களே தோற்கடியுங்கள்” என்றான் பிரஹலாதன். “அவை கூடட்டும். நம் இருவேதங்களும் அவையிலெழட்டும். மெய்மையின் துலா எங்கு சாய்கிறதென்று நோக்குவோம்” என்றான் ஹிரண்யன்.

நூற்றெட்டு அசுரமுனிவர்களும் ஆயிரத்தெட்டு அசுரகுலத்தலைவர்களும் கூடிய பேரவையில் பன்னிரு நாட்கள் அந்த மெய்யாடல் நிகழ்ந்தது. பெருங்கடல்களை துளித்துளியாக ஆராய்வதுபோல ஹிரண்யமும் மகாநாராயணமும் சொல்தோறும் உசாவப்பட்டன. இறுதியிலொரு சொல்லில் சென்று நின்றது அவ்வுரையாடல். அறிதலென அடைவன எல்லாம் அறிதல் மட்டுமே என்றது மகாநாராயணம். பெயரிட்டு பொருள்கொள்ளப்படும் பொருள் பெயரென பொருளென தன்னை நடிக்கிறது. “எப்படி அது நிகழலாகும்?” எனச் சீறி எழுந்தான் ஹிரண்யன். “சொல்லுக்கும்

பொருளுக்கும் அப்பால் காலத்தில்
இடத்தில் மாறாமுடிவிலியாக நின்றிருப்பதே பொருள். சொல்
அதன்மேல் விழும் ஒளி. இருளிலும் அது அங்குதான்
இருக்கும்” என்றான்.

“இருளில் அங்கிருப்பது பொருளென எவர் அறிவார்? எங்கோ
எவரோ கொள்ளும் விழியும் ஒளியும்தான் அதை
பொருளென்றாக்குகிறது” என்றான் பிரஹலாதன். “இதோ
நின்றுள்ளது கற்தூண். இதை சிம்மம் என நான்
பெயரிட்டழைத்தால் இது உறுமி உகிரும் எயிறும் கொண்டு
எழாது” என்றான் ஹிரண்யன். “தூணென பொருள்கொண்டு
சிம்மமென அழைத்தால் அவ்வாறே. உங்கள்
முழுஉள்ளத்தாலும் அதை சிம்மமெனக் கொண்டால் அது
சிம்மமேயாகும்” என்றான் பிரஹலாதன். “ஆம், இதோ இதை
சிம்மமெனக் கொள்கிறேன். எழுக, சிம்மமே!” என்று தன்
அசுரவிசைகொண்ட உள்ளத்தால் கூவியபடி கதை சுழற்றி
அதை நோக்கி சென்றான் ஹிரண்யன். கற்தூண்
சிம்மமென்றாகி எழுந்து உறுமி உகிர்நீட்டி அவனைப் பற்றி
குடல் கிழித்து மாலையாக்கிச் சூடியது.

அதன்பின்னர் மகாநாராயணமே வேதக்கூர் என்றாயிற்று.
ஆயிரம் வேள்விகளை நிகழ்த்தி பொன்னுடல்கொண்ட
பிரஹலாதன் இந்திரன் என உருக்கொண்டு விண்ணிலேறி
அமராவதியை வந்தடைந்து அரியணையில் அமர்ந்தான்.
ஹிரண்யனால் வெல்லப்பட்டு முடியிழந்தபின் மீண்டும்
அரியணையைப் பெற்று முடிசூடி கோல்கொண்டு அமர்ந்திருந்த
இந்திரன் விலகி ஓடினான். இலையுதிர்க்கும் நீர்த்துளியெனச்
சொட்டி அறியாத ஆழங்களுக்குள் சென்று மறைந்தான்.
ஆயிரமாண்டுகாலம் இருளில் உதிர்ந்த கரிய வைரம் என

எவருமறியாமல் கிடந்தான். பின் துயர்செறிந்து எடைமிகுந்து அவ்வெடையால் தன்னை உணர்ந்து எழுந்து மெய்யாசிரியராகிய பிரஹஸ்பதியை அணுகி தான் இழந்தது என்ன என்று கேட்டான். “நானறிந்திலேன். என் மாணவன் அசுரர்களின் ஆசிரியன். அவன் அறிந்திருக்கக்கூடும்” என்றார் பிரஹஸ்பதி.

சுக்ரரிடம் சென்று பணிந்து “அசுரர்களுக்கு ஆசிரியரே, அகத்திருளின் ஆராவிழைவால் நானும் அசுரனே. எனக்கு அருள்க! நான் வெல்வதெப்படி?” என்றான் இந்திரன். சுக்ரர் பிரஹலாதனின் வெற்றியால் சினம் கொண்டிருந்தார். எனவே நிகழ்ந்தது என்ன என அவர் இந்திரனுக்கு சொன்னார். “அசுரமைந்தனிடம் வேதம் விளைந்திருக்கிறது, அரசே. உங்களை அரியணையில் அமர்த்திய வேதம் மாகேந்திரம் எனப்படுகிறது. வான் நிறைக்கும் இடியின் சந்தம் கொண்டது அது. வென்று எழுந்து மூடும் விழைவு மட்டுமேயானது. தன்னை தான் பெருக்கிக் கொள்வது. உண்பது, பிறப்பது, வெல்வது, ஒருபோதும் ஓயாதது.”

“அரசே, ஆயிரம் யுகங்கள் வேள்விகளால் விண்நிறுத்தப்பட்டவர் என்றாலும் நீங்களும் ஆழத்தின் அடியிலியிருளில் ஓர் அசுரரே என உணர்ந்திருக்கிறீர். ஆம், உங்கள் வேதத்தில் ஆசுரம் ஒருபோதும் ஒழிவதில்லை. ஆசுரம் அமைந்த மாகேந்திரத்தை வென்றெழுந்தது தூய ஆசுரமான ஹிரண்யம். அதை தன் பெருக்கிலொரு சிறுதுளியென்றாக்கி எழுந்தது மகாநாராயணம் என்னும் வேதம்” என்றார் சுக்ரர். “பிரஹலாதனிடமிருந்து அதைப் பெறுக! அவ்வேதத்தை நீர் உமதென்றாக்குக! அதுவே வெல்லும் வழி.” இந்திரன் “ஆசிரியரே, நான் அவரை

வெல்லமுடியாது. அதற்குரிய படைக்கலங்கள் என்னிடமில்லை” என்றான்.

புன்னகைத்து “உம் படைக்கலம் எப்படியென்றாலும் வெல்லவேண்டுமெனும் முனைப்பே. அதைக் கொள்க!” என்றார் சுக்ரர். “அவன் கொண்டுள்ள மகாநாராயண வேதம் அளி, அறம், அருள் என்னும் முப்பண்புகளின் முழுநிலை. அதைக் கொண்டே அதை வெல்க!” இந்திரன் வணங்கி மீண்டான். ஒரு எளிய அந்தணச்சிறுவனாக மாறி பிரஹலாதன் தவம்செய்துகொண்டிருந்த சிறுகுடில் முன் சென்று நின்று வணங்கினான். “அறிவை கொடையளியுங்கள், ஆசிரியரே” என்றான். அந்தணச்சிறுவனின் எழில் கண்டு பிரஹலாதன் உளம் கனிந்தான். அவனை கூர்ந்தறியும்பொருட்டு “சொல்லுக்குப் பொருளென்றாவது எது?” என்று கேட்டான். “பிறிதொரு சொல்” என்றான் அந்தணச்சிறுவன். “மொழிக்குப் பொருளாவது எது?” என்றான் பிரஹலாதன். “அதன் முதற்சொல்” என்றான் அந்தணச்சிறுவன். “அருகணைக!” என அழைத்து தன் உடலுடன் சேர்த்துக்கொண்டு “நன்று, நீ வெல்க!” என்றான் பிரஹலாதன்.

பன்னிரண்டு ஆண்டுகாலம் பிரஹலாதனின் மாணவனாக அமைந்து மகாநாராயண வேதத்தை இந்திரன் முழுதும் கற்றான். அதன் இறுதிச்சொல்லையும் அவனுக்களித்த பின்னரும் அவன் வணங்கி நிற்கக்கண்டு “சொல்க, மைந்தா!” என்றான் பிரஹலாதன். “நான் முழுமை கொள்ளவேண்டும்” என்றான் இந்திரன். “நீ விழைவதை கேள்!” என்றான் பிரஹலாதன். “இவ்வேதத்தைப் பயின்று நீங்கள் அடைந்த நற்பேறையும் எனக்கே அருளவேண்டும்” என்றான் இந்திரன். அக்கணமே அது இந்திரன் என பிரஹலாதன் அறிந்தான்.

ஆனால் அவனமைந்த வேதமுழுமை “ஆம், அவ்வாறே ஆகுக!” என அளிக்கவே அவனைச் செலுத்தியது. அவன் உடலில் இருந்து பொன்னிற நிழல் ஒன்று எழுந்து இந்திரனை அடைந்தது. அவன் ஒளியுடன் எழுந்து “நானே இனி விண்முதல்வன்” என்று உரைத்து பேருருவம் கொண்டான்.

“அவ்வாறே ஆகுக!” என்று புன்னகையுடன் பிரஹலாதன் சொன்னான். “ஆனால் நீ எவ்வகையிலும் இவ்வேதத்தின் முதல்வனாக ஆகப்போவதில்லை. அளியும் அறமும் அருளும் நீ கொண்ட விழைவின் கறைகொண்டதாகவே உன்னில் திகழும். உன் உடல் பொன்னொளி கொண்டிருக்கும், உன் இடக்கால் கட்டைவிரல் கரியெனவே எஞ்சும்” என்றான். இந்திரன் “ஆகுக! நான் விண்ணவர்கோன் என்று மீண்டும் முடிகொள்வேன். எதன்பொருட்டும் என் கோலை கைவிடமாட்டேன். விண்ணவனாகிய நாராயணன்பொருட்டும்கூட” என்றான். பின்னர் இந்திரனின் அரியணையில் மீண்டும் அமர்ந்தான்.

“மீண்டும் அரியணை அமர்ந்த இந்திரனுக்கு முதலெதிரி என நின்றது மகாநாராயண வேள்வியே. அதில் தனக்கு அவிமுதன்மை கிடைத்தாகவேண்டும் என்று அவன் விழைந்தான். அதன்பொருட்டு அவன் கிழக்கின் இறைவனாகிய சூரியனை தன்னுடன் இணைத்துக்கொண்டான். பிற திசைத்தேவர்களும் அவனுடன் நின்றனர். எண்திசைத்தேவர்களும் தேவர்க்கிறைவனும் முதன்மைகொண்ட வேதமே மகாவஜ்ரம் என அழைக்கப்பட்டது. மின்னலின் மொழி அது” என்றார் லோமசர்.

# கிராதம் - 57

[ 19 ]

மாளிகைகள் செறிந்த அமராவதியின் அகன்ற வீதிகளின் வலைப்பின்னலில் இளங்காற்றில் அலைவுறும் கருநீலக் குருவியின் மெல்லிறகென அர்ஜுனன் திரிந்தான். ஒவ்வொரு மாளிகையும் முதற்கணம் விழிவிரிய நெஞ்சுகிளர வியப்பூட்டியது. ஒவ்வொரு தூணாக, உப்பரிகையாக, வாயிலாக, சாளரமாக விழிகள் தொட்டுச்சென்றபோது முன்பே அறிந்திருந்த அது முகம் தெளிந்தது. எங்கு எங்கு என நெஞ்சு தவித்து அடையாளம் கண்டுகொண்டு அவன் அகம் துள்ளியெழுந்தது. அவனறிந்தவை அனைத்தும் முழுக்க மலர்ந்திருந்தன அங்கு. இங்கிருக்கும் ஒவ்வொன்றும் அங்கு தன்னில் ஒரு அணுவைத்தான் சொட்டிவைத்துள்ளன என்று ஒருமுறையும் அங்குள்ளவை எல்லாம் இங்குள்ளவையென பெருகும் வாய்ப்புள்ளவை அல்லவா என்று மறுமுறையும் தோன்றிக்கொண்டிருந்தது.

அத்தனை மாளிகைகளும் அவனை அறிந்திருந்தன. புன்னகையுடன் இதழ் விரித்தவை, சொல்லெடுக்க சற்றே வாய் திறந்தவை, மகிழ்ந்து அழைக்கும்பொருட்டு வாய் குவிந்தவை, தன்னுள் ஆழ்ந்து கண் மயங்கியவை, கனவில் விழிமூடி புன்னகை கொண்டவை. பால்நுரையென வெண்மாளிகைகள், மலரிதழென இளஞ்சிவப்பு மாளிகைகள், மீன்கொத்தியின் இறகுப்பிசிறு என நீலமாளிகைகள். முகில்கீற்றென கருமை கொண்டவை, இளந்தளிரென பச்சை ஒளி கொண்டவை, காலைப்பனி என பொன்னிறம் கொண்டவை. அனைத்து வண்ணங்களும் ஒளியே என்று அங்கு உணர்ந்தான்.

மண்ணில் அவன் அறிந்த அனைத்து மாளிகைகளும் எடையென்றே தங்கள் இருப்பை காட்டியவை. அமராவதியின்

மாளிகைகள் அனைத்தும் அறியமுடியாத கையொன்றால் தாங்கப்பட்டவை என மிதந்து நின்றன. மூச்சுக்காற்றில் அவை மெல்ல அலைவுறுமென்றும் கைநீட்டி தொடச்சென்றால் புகைக்காட்சியென உருவழியுமென்றும் மயல் காட்டின.

நகரில் அனைத்து முகங்களும் பேருவகையொன்றின் உச்சியில் திளைத்து நிறைந்தமைந்த பாவனை கொண்டிருந்தன. நாவே உடலாகித் திளைக்கும் இன்சுவை, நெஞ்சு கவிந்தெழும் இசைத்தருணம், சித்தம் திகைக்கும் கவிப்பொருளவிழ்வு, தான் கரைந்து ஊழ்கவெளியில் அமைதல். இவர்களை இம்முனையில் நிறுத்துவதேது? இருப்பே தவமென்றான நிலையில் எய்துவதுதான் என்ன?

தேவர் முகங்களை கூர்ந்து நோக்கியபடி சென்றான். அவையனைத்தும் அவன் முன்பறிந்த முகங்கள். இதோ இவர் முகம்! காமரூபத்தின் கடைத்தெரு ஒன்றில் உடலெங்கும் சொறியுடன் தன் கடைமுன் வந்து நின்று வாலாட்டிய நாய்க்கு குனிந்து ஒரு அப்பத்தைப் போட்டு புன்னகைத்த சுமைவணிகன். அக்கணத்தில் சூடியிருந்த முகம் இது. காசியில் வேள்விச்சாலைவிட்டு வெளிவந்து கையிலிருந்த அவிப்பொருளை அங்கு நின்றிருந்த கரிய உடலும் புழுதி படிந்த கூந்தலும் கொண்டிருந்த பிச்சிக்கு தாமரை இலைபரப்பி நீர்தெளித்து வலக்கையால் அள்ளிவைத்து அன்னம் ஸ்வாகா என உரைத்து கைகூப்பி அளிக்கையில் முதிய அந்தணர் கொண்டிருந்த முகம் அது.

இந்த முகத்தை எங்கோ ஓர் இசைநிகழ்வின் திரளில் பார்த்திருக்கிறேன். அந்த முகம் மிக அப்பால் ஒலித்த ஆலயமணி ஓசையைக் கேட்டு அசைவிழந்து நின்று கைகூப்பியவர் மேல் கனிந்திருந்தது. அது இல்லத்திலிருந்து

நடை திருந்தா சிறுமகன் இரு கைகளை விரித்து ஓடிவரக்கண்டு குனிந்து கைவிரித்து கண்பனிக்க அணுகிய தந்தைக்குரியது. முலையூட்டி உடல்சிலிர்த்து இமைசரிந்து முற்றிலும் உளம் உருகிச்சொட்ட அமர்ந்திருந்த அன்னையல்லவா அது! இது நோயுற்றுக் கிடந்த இரவலன் அருகே துயிலாது விழித்திருந்து பணிவிடை செய்த பிறிதொரு இரவலனின் முகம். மாளவத்துப் பெருஞ்சாலையில் அவன் முகம் சோர்ந்திருந்தது. இங்கு அவ்விழிகளின் அளிமட்டும் விரிந்து எழுந்திருக்கிறது.

அந்தக் கணங்களின் முகங்கள். அவை எழுந்து திரண்டு அலை கொண்டிருந்தது அப்பெருவெளி. நடப்பது களைப்பை உருவாக்கவில்லை. எண்ணினால் எழுந்து பறக்க முடிந்தது. எண்ணுமிடத்திற்கு அக்கணமே செல்ல முடிந்தது. எண்ணம் எண்ணியாங்கு சென்றடையுமென்றால் இடமென்பதே ஓர் எண்ணம் மட்டும்தான். இடமிலாதானால் காலமும் மறைகிறது. காலமில்லாதபோது எங்கு நிகழ்கின்றன எண்ணங்கள்? அவை எண்ணங்களே அல்ல, எண்ணமென எழாத கருக்கள். இவையனைத்தும் ஒற்றைக்கணத்தில் நிகழ்ந்து மறையும் ஒரு கனவு.

குளிர்ச்சுனைகளில் நோக்கிய அவன் முகம் எப்போதோ ஊசிமுனையென கூர் கொண்டிருந்த இலக்கொன்றை தன் அம்பு சென்று அடைந்தபோது அவன் சூடியிருந்தது. அலை எழுந்த ஏரியில் அவனுடன் வந்த அவன் உருவம் இளைய யாதவரின் கை தன் தோள் மேல் அமர்ந்திருக்கையில் அவன் கொண்டிருந்தது. மாளிகைப் பரப்பொன்றில் அவன் கண்ட முகம் அபிமன்யூவை கையிலெடுத்தபோது அவனில் பூத்தது. அந்த முகம் எது?

அவன் நின்று அதை நோக்கினான். கைகள் ஏதுமில்லை என விரிந்திருக்க அவன் ஒரு மலைப்பாதையில் விழுந்து இறந்துகொண்டிருந்தான். அருகே எவருமில்லை. அவன் விழிகளில் வானம் நிறைந்துகொண்டிருந்தது. புன்னகையில்லாத மலர்வுகொண்டிருந்தது அம்முகம்.

தளிர்களும் மலர்களும் மட்டுமேயான சோலைகள். வண்ணம் மட்டுமே கொண்ட மலர்களுக்கு பருவுடலென ஒன்று உண்டா என்றே ஐயுற்றான். நிழல்களும் மெல்லிய ஒளி கொண்டிருந்தன. இசை சூடிச்சுழன்று பறந்த கந்தர்வ வண்டுகள் பொன்னென வெள்ளியென அனலென நீர்த்துளியென தங்களை ஒளி மாற்றிக்கொண்டன. இவ்வுலகு ஒவ்வொன்றிலிருந்தும் எடுத்த உச்சங்களால் ஆனது. வேதம் ஒன்றே மொழியென்றானது. புன்னகை ஒன்றே முகங்கள் என்றானது. புன்னகையே கண்ணீராகவும் இங்கு சொட்டமுடியும்.

தனிமை எப்போதும் அத்தனை முழுமை கொண்டிருந்ததில்லை என்றுணர்ந்தான். தான் என்னும் உணர்தல் ஒருபோதும் அத்தனை நிறைவளித்ததில்லை. சென்று சேர இலக்கின்றி வந்த வழியின் நினைவின்றி ஒருபோதும் கணங்களில் அப்படி பொருந்தியதில்லை. ஏனெனில் இப்பேருலகு உணரும் அக்கணத்தால் மட்டுமே ஆனது. கணமென்று மட்டுமே காலம் வெளிப்படும் வெளி. இதற்கு நீளமில்லை, அகலம் மட்டுமே என்று அவன் எண்ணிக்கொண்டான். உறைவிடமும் உணவும் உணவுக்கலமும் அன்னைமடியும் ஒன்றென்றே ஆன எளிய தேன்புழு. உலகென்று தேனன்றி பிறிதொன்றை உணராதது.

அலைகளில் தானும் உலைந்தாடும் நீர்ப்பாசியின் பொடிபோல அப்பேருலகின் நிகழ்வுகளில் அவனுமிருந்தான். ஆனால் அவன் நீர் அல்லாதுமிருந்தான். நீர் சூழ்ந்த வெளியில் அணுவெனச்

சிறுத்து, எவரும் நோக்காதிருந்தும் தானெனும் உணர்வுகொண்டு தனித்திருக்கும் உயிர்த்துளி.

அங்கு மிதந்தலைந்த முகங்கள் அவனை நோக்கி புன்னகைத்தன. விழிகள் அவன் விழிதொட்டு அன்பு காட்டி கடந்து சென்றன. இதழ்கள் குவிந்து விரிந்து இன்சொல் உரைத்தன. உள்ளங்கள் அவன் உள்ளத்தைத் தழுவி அகன்றன. ஆயினும் அவனுள் இருந்து கூர்கொண்டிருந்த முள்ளின் முனை ஒன்று தினவு கொண்டிருந்தது. முள்முனை அளவிற்கே அணுவளவுத் தினவு. சிறியதென்பதனாலேயே முழுச்சித்தத்தையும் அறைகூவுவது. இன்பம் மட்டுமே பெருகி நிறைந்திருக்கும் இப்பெருவெளியில் அது துழாவிக்கொண்டே இருக்கிறது. கூர்முனையின் கூர்மையென ஒரு துளி.

எங்கேனும் தொட்டு குருதி உண்ணத் தவிக்கிறது போலும் அந்த முள். ஏதேனும் விரல் வந்து தன்மேல் அமர விழைந்தது. வந்தமர்வது ஓர் அணுவென்றாலும். முள் அறியும் முள்முனை. முள் என்றுமிருந்தது. எப்பெருக்கிலும் தான் கரையாதிருந்தது. இங்கு அப்படியொன்று தன்னுள் இருப்பதை உணர்ந்த எவரேனும் இருக்கக்கூடுமா? இப்பேருலகம் முற்றிலும் அதற்கு அப்பாற்பட்டது. ஒவ்வொன்றும் மலரும் இங்கு முள்ளென்று ஒன்று மலர்த்தண்டில்கூட இருக்க வழியில்லை. முள்ளை உணர்வதில் விழிகளுக்கு தனித்திறனுள்ளது. ஏனென்றால் நோக்கு என்பது ஒரு முள்.

முள்ளை உணர்ந்த ஒரு விழியும் அங்கு தென்படவில்லை. விழி பார்த்துக்கொண்டிருந்தபோதே அவன் சித்தம் சென்று தொட்டது. நின்று ‘ஆம்’ என்று தனக்குள் சொல்லிக்கொண்டது. அவள் அம்முள்ளை முதல் நோக்கிலேயே தொட்டறிந்திருந்தாள். அவன் அவளை எண்ணியதுமே

மெல்லிய சிரிப்பொலி அவன் காதில் விழுந்தது. திரும்பிப் பார்க்கையில் கடந்து சென்ற யானை ஒன்றின்மேல் முழுதணிக் கோலத்தில் ஊர்வசி அமர்ந்திருந்தாள் அவளைச் சூழ்ந்து வெண்புரவிகளில் அப்சரகன்னிகைகள் அணிகுலுங்க ஆடைநலுங்க அசைந்து சென்றனர்.

**[ 20 ]**

புரவிகளை பின்னிருந்து காலவெளி உந்தி உந்தி முன்னோக்கி தத்திச் செல்ல செய்தது. யானையை அது கையிலெடுத்து பக்கவாட்டில் ஊசலாட்டியது. புரவி ஒரு சொட்டுதல். யானை ஒரு ததும்புதல். அவன் நின்று அவர்களை நோக்கினான். முன்னால் வந்த களிறு அவனைக் கண்டதும் துதி நீட்டி மணம் கொண்டது. தன் உடலுக்குள் தானே அசைவொன்று உருண்டு அமைய கால்மாற்றி நின்று மூச்சு சீறியது. நின்றுகூர்ந்த செவிகள் மீண்டும் அசையத் தொடங்கின. சிறிய விழிகளை கம்பிமயிர்கொண்ட இமைகள் மூடித் திறந்தன.

மேலிருந்து குனிந்து “இளைய பாண்டவரே, நகர் நோக்குகிறீர்கள் போலும்” என்றாள் ஊர்வசி. “ஆம்” என்று அவன் சொன்னான். வளையல்கள் அணிந்த கையை நீட்டி “வருக! யானை மேலிருந்து நோக்கலாமே?” என்று சொன்ன அவள் விழிகளில் இருந்த சிரிப்பை அவன் சந்தித்தான். “ஏன்?” என்று அவன் கேட்டான். “யானை மேலிருந்து நோக்கும் உலகம் பிறிதொன்று” என்று அவள் சொன்னாள். “கரியை காலாக்கியவன் என்று இந்திரனை ஏன் சொல்கிறார்கள் என்று அறிவீர்களா?”

அவன் அருகே சென்று யானையின் கால்களைத் தொட்டபடி தலைதூக்கி நோக்கி “நீயே சொல்!” என்றான். “பதறாத கால்கள்

கொண்டது யானை. ஏனென்றால் அது தன் கால்களை நோக்கமுடியாது. கரியூர்ந்தவன் பிறகொரு ஊர்தியிலும் தன்னை பெரிதென்று உணரமாட்டான்.” அர்ஜுனன் சிரித்தான். அவள் கைநீட்டி “ஏறிக்கொள்க! கரிகாலனின் யானை இது, அவர் மைந்தனை அது நன்கறியும்” என்றாள். “நன்று” என்றபடி அவன் யானையின் முன்கால் மடிப்பில் மெல்லத்தட்ட அது காலைத்தூக்கி படியென்றாக்கியது. அதில் மிதித்து கால் தூக்கிச்சுழற்றி ஏறி அவளுக்குப் பின் அமர்ந்துகொண்டான்.

“செல்க!” அவள் யானையின் மத்தகத்தை மெல்ல தட்டினாள். அது துதிநுனி நீட்டி மண்ணை முகர்ந்து அவ்வழியே காலெடுத்து வைத்து சென்றது. அலைபாயும் படகிலென அவளுடன் அவன் அமர்ந்திருந்தான். அவள் குழல்புரி ஒன்று பறந்து அவன் முகத்தின் மேல் பட்டது. அதை புன்னகையுடன் பற்றி காதருகே செருகிக்கொண்டாள். அது மீண்டும் பறந்து அவனை வருடியது. அவன் அதைப் பிடித்து சுட்டுவிரலில் சுழற்றி சுருளாக்கி கொண்டைக்குள் செருகினான். கழுத்தை நொடித்துத் திரும்பிநோக்கி அவள் புன்னகை செய்தாள்.

சாலையின் இருபுறமும் மாளிகைகள் மிதந்தமிழ்ந்து அலைகொண்டு கடந்து சென்றன. “அமராவதியை நோக்கி நிறைந்தவர் எவரும் இல்லை” என்றாள் ஊர்வசி. “ஏனென்றால் நோக்குபவரின் கற்பனை இது. கற்பனை என்பது ஆணவம். தான் எவரென்று தான் கண்டு முடித்தவர் எவர்?” அர்ஜுனன் “நோக்குகிறேன் என்றுணர்ந்து நோக்கும் எவரும் நிறைவடைவதில்லை” என்றான். “இங்கிருப்பவர் எவரும் இதை நோக்குவதில்லை என்பதைக் கண்டேன். அவர்கள் இதற்குள் இருக்கிறார்கள்.”

“இதற்குள் அமைய உங்களைத் தடுப்பது எது?” என்று அவள் கேட்டாள். அவள் கொண்டை அவன் மார்பைத் தொட்டு அசைந்தது. அவன் “ஒரு முள்” என்றான். “எங்குள்ளது?” என்று அவள் கேட்டாள். “நீ அதை அறிந்ததில்லையா?” என்று அவன் கேட்டான். அவள் சிரித்து “ஆம், அறிவேன்” என்றாள். “முதல் நோக்கிலேயே அதைத்தான் கண்டேன்.” பின்னர் மீண்டும் சிரித்து “முள்ளை முள்ளால்தான் அகற்ற முடியும். அறிவீரல்லவா?” என்றாள்.

“எப்படி?” என்று அவன் கேட்டான். அவள் தலைதூக்கி அவனை நோக்கி “காமத்தை காமத்தால் வெல்வதுபோல” என்றாள். அவள் விழிகளை அவன் விழிகள் சந்தித்தன. நோக்குணர்ந்ததும் மொட்டு விரிவதுபோல மிக மெல்லிய ஓசையுடன் அவள் இதழ்கள் பிரிந்தன. வெண்பற்களின் ஈரம் படிந்த ஒளிநிரை தெரிந்தது. மென் கழுத்து மலர்வரிகளுடன் விழிக்கு அண்மையில் இருந்தது. அப்பால் தோள்களின் தாமரைநூல் போன்ற வளையக்கோடுகள். பொற்சங்கிலி ஒன்றின் ஒளிமட்டும் விழுந்ததுபோல. கச்சின் வலுக்குள் இறுகிய இளமுலைகள் நடுவே மென்மையென்றும் இளமையென்றும் துடித்தது நெஞ்சு.

அவள் இடையை தன் கைகள் வளைத்திருப்பதை அவன் உணர்ந்தான். அதை பின்னிழுக்க விழைந்தான். ஆனால் உடனே அதைச் செய்தால் அவள் அவ்வச்சத்தை உணர்ந்துவிடக்கூடும் என எண்ணி தயங்கினான். அந்தத் தயக்கத்தை அவள் உணர்ந்துகொண்டு அவன் கைமேல் தன் கையை வைத்துக்கொண்டாள். விழிகளை திருப்பிக்கொண்டு “ஆம்” என்று அவன் சொன்னான். அவன் கையை அழுத்தியபடி “இருக்கிறேன் என்று. பின் நான் என்று. நானே

என்னும்போது ஒரு துளியேனும் குருதியின்றி அது அமைய முடியாது” என்று அவள் சொன்னாள்.

“நன்கு அறிந்திருக்கிறாய்” என்று அர்ஜுனன் மெல்லிய கசப்புடன் சொன்னான். “ஆண்களின் பொருட்டே உருவாகி வந்தவள் நான். என் உடல் ஆண்களின் காமத்தால் வடிவமைக்கப்பட்டது. என் உள்ளம் அவர்களின் ஆணவத்தால் சமைக்கப்பட்டது” என்றாள் ஊர்வசி. இடக்கு தெரியாத இயல்பான குரலில் “ஆணுக்கு முற்றிலும் இசைவதன் மூலம் அவனை மூடனாக்குவீர்கள். மூடனுடன் முற்றிலும் இசைய உங்களால் இயலும்” என்றான் அர்ஜுனன்.

அவள் அதைப் புரிந்துகொண்டு சிரித்து “ஆண்களிடம் குன்றா பெருவிழைவை உருவாக்கும் பெண் அவர்களுக்கு முற்றிலும் அடிபணியும் இயல்பு கொண்டவளல்ல. தன் அச்சை வாங்கி உருக்கொண்டு எதிர்நிற்கும் பெண்ணிடம் ஆண் முழுமையாக பொருந்தக்கூடும். ஆனால் அவளை அக்கணமே மறந்தும் விடுவான். அவனை ஒவ்வொரு கணமும் சீண்டி உயிர்ப்பிக்கும் ஆணவத்தின் துளியொன்றை தானும் கொண்டிருப்பவளே நீங்கா விருப்பை அவனில் உருவாக்குகிறாள். அவன் அவள் ஊரும் வன்புரவி. பசும்புல்வெளியென்றும் பின்தொடையில் எப்போதுமிருக்கும் சவுக்கின் தொடுகையென்றும் தன்னை உணரச்செய்பவள்” என்றாள்.

மறுகணமே விழிகளில் ஏளனம் வெளிப்பட முகவாய் தூக்கி உடல் குலுங்க நகைத்து “ஆனால் கொழுந்தாடுபவை விரைந்தணைய வேண்டுமென்பதே நெறி” என்றாள். “அனல் ஈரத்தை முற்றும் உண்டபின் விலகி வானில் எழுகிறது. பின்பு ஒருபோதும் எரிந்த கரியை அது திரும்பிப்பார்ப்பதில்லை.” அவளுடைய நேரடியான பேச்சால் சீண்டப்பட்ட அர்ஜுனனை

அந்த விளையாட்டுச்சிரிப்பு எளிதாக்கியது. அவள் இடையை அழுத்தி தன்னுடன் அவளை சேர்த்துக்கொண்டு “நீ எரியென படர்பவளா?” என்றான். அவன் விழிகளை சிறுகுழந்தையின் தெளிந்த நோக்குடன் ஏறிட்டு “ஆம், நான் அதற்கென்றே படைக்கப்பட்டவள்” என்றாள்.

அவன் நோக்கை விலக்காமல் “அதன்பொருட்டே என்னையும் அணுகுகிறாயா?” என்றான். “ஆம்” என்று அவள் சொன்னாள். “இங்கு நீங்கள் எழுந்தருளியபோது உங்கள் ஆழத்தில் கூர்ந்திருந்த அந்த முள்ளை உணர்ந்தவள் நான். முள்முனை உணரும் முள்முனை ஒன்றுண்டு.” அர்ஜுனன் முகத்திலிருந்த நகைப்பு அணைய “ஆம், உண்மை” என்றான். “இங்கு இப்பெருநகரின் வீதியில் மகிழ்ந்து திளைத்து நீங்கள் அலைந்து கொண்டிருப்பதாகவே இங்குள்ள பிறர் எண்ணக்கூடும். ஒவ்வொரு கணமும் அந்த முள் முனையில் நஞ்சு செறிவதை நான் உணர்கிறேன்” என்றாள்.

“நானும் அதை இப்போதுதான் உணர்ந்தேன்” என்று அர்ஜுனன் சொன்னான். “அந்நஞ்சு ஏன் என்றே என் உள்ளம் வியந்துகொள்கிறது.” அவள் “இவை அமுதென்பதனால் அது நஞ்சு, அவ்வளவுதான்” என்றாள். “இருக்கிறேன் என்றுணர்கையில் அது துளி, நானென்று எழுகையில் அது கூர்மை. எவர் என்று தேடுகையில் அது நஞ்சு. இளைய பாண்டவரென நீங்கள் இருக்கையில் ஆம் நீங்கள் இளைய பாண்டவரென சூழ்ந்திருக்கும் அனைத்தும் திருப்பிச் சொல்லியாக வேண்டும்.” அவள் அவன் கையைப்பற்றி “அவ்வண்ணம் திருப்பிச் சொல்ல இங்கிருப்பவள் நானொருத்தியே” என்றாள்.

“அந்நஞ்சு உன்னை அச்சுறுத்தவில்லையா?” என்றான் அர்ஜுனன். “ஆண்களின் அந்நச்சு முனையே பெண்களைக் கவர்கிறது” என்று அவள் விழிகளில் சிரிப்புடன் சொன்னாள். “நச்சுப்பல் கொண்ட நாகங்களையே நல்ல பாம்பாட்டிகள் விரும்புவார்கள்.” அர்ஜுனன் அச்சொற்களைக் கேட்காதவன் போல தன்னுள் ஆழ்ந்திருந்தான். “பெண்ணுக்குள் உள்ள முள்முனையால் அம்முள்முனையை தொட்டறிவதைப்போல காதலை நுண்மையாக்கும் பிறிதொன்றில்லை” என்று அவள் மீண்டும் சொன்னாள்.

“இது மேலும் தனிமையையே அளிக்கிறது” என்று அர்ஜுனன் சொன்னான். அவள் நகைத்து “அத்தனிமையை என்னுடன் பகிர்ந்து கொள்ளலாம்” என்றாள். அர்ஜுனன் “வேட்டையாடி காமம் கொண்டாடிய நாட்களிலிருந்து நான் நெடுந்தொலைவு விலகி வந்துவிட்டேன்” என்றபின் “உன்னுடன் நான் காமம் கொண்டால் அது என் ஆடிப்பாவையைப் புணர்வதுபோல பொருளற்றது. நீ கொண்டுள்ள இத்தோற்றம் இந்நகைப்பு இந்தச் சீண்டல் அனைத்துமே என் விழைவுகளிலிருந்து எழுந்து வெளியே திரண்டு நிற்பவை என்று நானறிவேன். எதிரொலியுடன் உரையாடுவதுபோல் அறிவின்மை பிறிதொன்றில்லை” என்றான்.

“ஆணவத்தின் உச்சத்தில் நிற்பவர்கள் காமம் கொள்வது தன்னுடன் மட்டுமேதான்” என்றாள் ஊர்வசி. அர்ஜுனன் “எனது ஆணவம் அத்தனை முதிரவில்லை போலும்” என்று சொல்லி புன்னகைத்தான். இயல்பாகவே அவர்களுக்குள் சொல்லாடல் அடங்கியது. இருபுறமும் நிரைவகுத்த மாளிகைகளின் நடுவே அவர்களின் களிறு முகில் பொதியென சென்றுகொண்டிருந்தது.

ஏன் உரையாடல் நிலைத்தது என அவன் எண்ணிக்கொண்டான். ஆணுக்கும் பெண்ணுக்கும் நடுவே உரையாடல் தேய்ந்திறுவது எதனால்? சொல்லித்தீர்வதல்ல காமம். காமத்தை முகமாக்கி அவர்கள் ஒருவரை ஒருவர் கண்காணிக்கிறார்கள். ஒருவரை ஒருவர் வகுத்துக்கொள்கிறார்கள். அவ்வரையறைமேல் ஐயம்கொண்டு அதன் எல்லைகளை சீண்டிக்கொண்டே இருக்கிறார்கள். எங்கோ ஓரிடத்தில் உள்ளிருக்கும் உண்மையைச் சென்று தொட்டுவிடுகிறார்கள். அது இருவரும் சேர்ந்து தொடும் உண்மை. ஆகவே இருவரும் சொல்லிழந்துவிடுகிறார்கள்.

அவள் "தங்களை இன்று அவையில் அரசர் சந்திக்கக்கூடும்" என்றாள். அவ்வாறு முற்றிலும் புதிய இடத்தில் அவள் தொடங்கியது அவன் எண்ணியது உண்மை என உணரச்செய்தது. "ஆம், எனக்கு செய்தி வந்தது" என்று அர்ஜுனன் சொன்னான். "அதற்குள் உங்களிடம் அவர் உரைக்கவேண்டிய அனைத்தையும் அவர்பொருட்டு பிறர் உரைத்திருப்பார்கள்" என்றாள் ஊர்வசி. இயல்பாக சந்தித்த நான்கு மைந்தர்களும் கணாதரும் பேசியவை அவன் நினைவில் எழுந்தன. அவை ஒரு திட்டத்துடன் சொல்லப்பட்டவை என்பதை அப்போதுதான் உணர்ந்து "ஆம்" என்றான்.

"உங்களை சந்திப்பதற்கு முன் நீங்கள் சிலவற்றை உணர்ந்திருக்க வேண்டுமென்று அவர் விழைகிறார்" என்றாள் ஊர்வசி. "நீயும் அதற்கென அனுப்பப்பட்டாயா?" என்று அர்ஜுனன் கேட்டான். "ஆமென்றே கொள்ளுங்கள்" என்று அவள் சொன்னாள். "சொல்" என்று அர்ஜுனன் சற்று எரிச்சலுடன் சொன்னான். "உங்களை நேற்று தோளணைத்து அழைத்துச்

சென்ற மூத்தவர் பிறந்ததெப்படி என்றொரு கதை உண்டு, அறிந்திருக்கிறீர்களா?" என்றாள் ஊர்வசி. அவ்வினாவின் பொருளென்ன என்று உணரமுடியாமல் விழிசுருக்கி அவன் நோக்கினான்.

"விண்ணவர்க்கரசர் ஒருமுறை கிழக்கே இந்திரகீலமலைமேல் தன் தேவமகளிருடன் சோலையாடச் சென்றிருந்தார். அவ்வழியாகச் சென்ற சூரியனின் மாற்றுருவான தேர்ப்பாகன் அருணன் அக்களியாடலைக் கண்டான். அவர்களுடன் சேர்ந்து கொள்ளும்பொருட்டு தன் மாயத்தால் பெண்ணுருவம்கொண்டு அருணி என்னும் பெயருடன் அம்மலையில் இறங்கினான். கன்னியருடன் ஆடிய முதல் தேவர் அவர்களில் அருணியே அழகு நிறைந்தவள் என்று கண்டார். அவள் உளம்கவர்ந்தார். மின்படையோனின் மாயத்தால் காதல்நிறைந்தவளாக மாறிய அருணியும் அவருடன் காமத்திலாடினாள். அவ்வுறவில் பிறந்தவரே கிஷ்கிந்தையின் அரசனென வந்த பாலி" என்று ஊர்வசி சொன்னாள்.

"தொல்கவியின் காவியத்தில் அச்செய்தி உள்ளது" என்றான் அர்ஜுனன். "அக்கதை சுட்டும் செய்தி என்ன என்று பாருங்கள்" என்று ஊர்வசி சொன்னாள். "மாகேந்திர வேதம் திகழ்ந்த நாளில் கிழக்கின் தலைவனெனத் திகழ்ந்தவர் சூரியன். மகாவஜ்ரவேதம் எழுந்தபோது அவிகொள்ளும் உரிமைகளை பகிர்ந்தளித்த பிரம்மன் திசைகளை தேவர்களுக்குரியதாக்கினார். தெற்கு எமனுக்கும் வடக்கு குபேரனுக்கும் மேற்கு வருணனுக்கும் வடகிழக்கு ஈசானருக்கும் தென்கிழக்கு அனலவனுக்கும் வடமேற்கு வளிதேவனுக்கும் தென்மேற்கு நிருதிக்கும் அளிக்கப்பட்டது. கிழக்குத்திசை இந்திரனுக்குரியதாகியது."

“கிழக்கின் தேவனாகிய சூரியனை அது சினம்கொள்ளச் செய்தது. இந்திரனுக்கும் சூரியனுக்கும் இடையே பூசல் எழுந்தது. திசை தேவன் எவன் என்பதில் தேவர்களும் முனிவர்களும் குழம்பினர். இந்திரனுக்கு அளிக்கும் அவி தனக்குரியது என்று சூரியன் எண்ணினார். சூரியனுக்கு அவியளிக்கலாகாதென்று இந்திரன் ஆணையிட்டார். ஆயிரமாண்டுகாலம் அப்பூசல் நிகழ்ந்தது” என்றாள் ஊர்வசி.

“மகாநாராயண வேதம் எழுந்தபோது எட்டுத்திசைகளும் அதன் மையமும் விஷ்ணுவுக்குரியதே என்று அது கூறியது. அவியனைத்தும் முதலில் விஷ்ணுவுக்குச் சென்று அவர் அளிக்கும் முறைமையிலேயே பிறருக்கு அளிக்கவேண்டுமென அவ்வேதவேள்வியில் வகுக்கப்பட்டது. அது இந்திரனையும் சூரியனையும் சினம்கொள்ளச் செய்தது. அச்சினம் அவர்கள் இருவரையும் ஒன்றென இணைத்தது” என்றாள் ஊர்வசி. “அவ்விணைப்பின் விளைவாக இந்திரகுலத்திற்கும் சூரியகுலத்திற்கும் இடையே உருவான உறவே பாலியை உருவாக்கியது.”

அவள் சொல்லவருவதென்ன என அவன் எதிர்நோக்கி அமர்ந்திருந்தான். “இளைய பாண்டவரே, இந்திரன் மைந்தர் நீங்கள். உங்கள் மூத்தவராகிய கர்ணன் சூரியனின் மைந்தர். நீங்கள் இருவரும் ஒன்றாகவேண்டும் என்று உங்கள் தந்தை விழைகிறார். அதுவே அவர் உங்களுக்கிடும் ஆணை என்றும் சொல்வேன்” என்றாள். அர்ஜுனன் பேசாமல் கூர்ந்த விழிகளுடன் நோக்கி அமர்ந்திருந்தான். “உங்கள் பொது எதிரி மகாநாராயண வேதமே. அதன் விழுப்பொருளாகத் திரண்டு வரும் மெய்மையையே இளைய யாதவர் முன்னிறுத்துகிறார்.”

அர்ஜுனன் மெல்லிய பொறுமையின்மையை உடலசைவில் காட்டினான். அவன் கைமேல் கையை வைத்து “ஆம், உங்களுக்கு அவருடன் இருக்கும் உறவை நான் அறிவேன். உங்கள் தந்தை மேலும் அறிவார்” என்றாள். “ஆனால் மைந்தருக்கு தந்தையுடனான கடன் என்பது ஊழால் வகுக்கப்பட்டது. பிரம்மத்தின் விழைவையே ஊழென்கிறோம். அக்கடனிலிருந்து நீங்கள் விலகமுடியாது.”

அர்ஜுனன் “களிறு நிற்கட்டும்” என்றான். “பொறுங்கள், நான் சொல்வதை கேளுங்கள்” என்றாள் ஊர்வசி. அர்ஜுனன் களிறின் பிடரியில் தட்ட அது நின்று முன்வலக்காலைத் தூக்கியது. “அங்கு நிகழ்வது வேதங்களின் போர். நீங்கள் நின்றிருக்கவேண்டிய இடம் உங்கள் தந்தையின் தரப்பே” என்று அவள் சொன்னாள். அவன் யானையின் கால்களினூடாக இறங்கி திரும்பி நோக்காமல் நடந்தான்.

# கிராதம் - 58

**[ 21 ]**

மாதலியே தன்னை இந்திரமாளிகைக்கு அழைத்துப்போக வந்திருப்பதை ஏவலன் வந்து சொன்னபோது அர்ஜுனன் திகைப்புடன் எழுந்துவிட்டான். “அவர் காத்து நின்றிருக்கிறாரா?” என்று கேட்டபடி அவன் அறையைவிட்டு வெளியே செல்ல உடன் வந்த கந்தர்வ சமையப்பெண்கள் “இளையவரே, இன்னும் அணிகள் முடியவில்லை” என்றனர். “போதும்” என்று அவன் சொன்னான். “இந்த மணிகள் மட்டும்” என்றாள் ஒருத்தி. “கால்நகங்களில் ஒன்றில் ஒளி குறைந்துள்ளது, சற்றுநேரம்...”

என்றாள் இன்னொருத்தி. “போதும்” என அவர்களை விலக்கியபின் அவன் வெளியே நடந்தான்.

படிகளில் இறங்கி முற்றத்தை அடைந்தபோது அங்கே உச்சிக்கதிரொளி பட்ட சுனைபோல இந்திரனின் ஒளிபரவும் தேர் வந்து நின்றிருப்பதை கண்டான். கூப்பிய கைகளுடன் அதை நோக்கி சென்றான். மாதலி தேர்த்தட்டிலிருந்து இறங்கி “வருக மைந்தா, உனக்காக அரசர் காத்திருக்கிறார்” என்றான். “தாங்களே வரவேண்டுமா, எந்தையே?” என்றான் அர்ஜுனன். “நானே வரவேண்டுமென்பது அரசரின் ஆணை. அவருக்கு இருக்கும் இடம் உனக்கும் அளிக்கப்பட்டாகவேண்டுமென்று சொன்னார்” என்றபின் மாதலி ஏறிக்கொண்டான். அர்ஜுனன் தேர்த்தட்டில் ஏறி அமராமல் நின்றுகொண்டான்.

தேர் அமராவதியின் தெருக்களினூடாகச் சென்றது. அர்ஜுனன் அதன் விரைவின் வழியாக படிப்படியாக இயல்பானான். “என்னிடம் ஏதேனும் சொல்லச் சொன்னாரா அரசர்?” என்றான் அர்ஜுனன். “ஆம், ஆனால் நான் அதை சொல்லப்போவதில்லை” என்றான் மாதலி. “ஏன்?” என்று அர்ஜுனன் கேட்டான். “நான் உணர்வதை சொல்லவேண்டும், எனக்கு ஆணையிடப்பட்டதை அல்ல. அதற்கான தருணம் அமையட்டும்” என்றான் மாதலி சிரித்தபடி. அர்ஜுனனும் பணிவுடன் சிரித்து “சொல்லுங்கள், காத்திருக்கிறேன்” என்றான்.

தேர் இந்திரனின் அரண்மனையின் தேர்முற்றத்தில் சென்று நின்றது. கந்தர்வ ஏவலர் ஓடிவந்து புரவிகளை பற்றிக்கொண்டனர். அர்ஜுனன் இறங்கியதும் மாதலி அருகே வந்து அவன் தோளில் கைவைத்து “வருக, மைந்தா” என்றபின் முன்னால் நடந்தான். படிகளில் ஏறி பெருந்தூண்கள் நிரைவகுத்த இடைநாழியினூடாக நடக்கையில் அர்ஜுனன்

அது அரசவைக்கூடத்திற்குச் செல்லும் வழிபோல இல்லை என எண்ணிக்கொண்டான். அவன் எண்ணத்தை உணர்ந்தவன்போல "நாம் அரசரின் மஞ்சத்தறைக்கு செல்கிறோம்" என்றான் மாதலி. "ஏன்?" என்றான் அர்ஜுனன். "அவர் உன்னிடம் பேசவிழைகிறார். இருவரும் இணைந்து அவைநுழையவேண்டுமென எண்ணுகிறார்."

அர்ஜுனன் அணிச்சொற்களுக்காக நெஞ்சைத் துழாவி அவை அமையாமல் நேரடியாக "அவர் என்னிடம் ஏதேனும் வாக்குறுதியை பெற விழைகிறாரா என்ன?" என்றான். மாதலி புன்னகைத்தான். "அவர் எனக்கு ஆணையிடலாம். ஆனால் என்னைக் கடந்தவற்றை ஆணையிட இயலாது" என்றான் அர்ஜுனன். மாதலி அதற்கும் புன்னகை புரிந்தான். இடைநாழியினூடாகச் சென்று சிற்றவைக்கூடத்திற்குள் நுழைந்தனர். "இந்திரமைந்தனின் வரவை அறிவி" என்று அங்கிருந்த கந்தர்வனிடம் மாதலி ஆணையிட்டான். அவன் சென்று அறிவித்து மீண்டுவந்து கதவை மெல்லத் திறந்து "அவர் அறைநுழையலாம்" என்றான்.

அர்ஜுனன் கைகூப்பியபடி திறந்த கதவினூடாக உள்ளே சென்றான். ஒளிகொண்ட வெண்முகில்கள்போல பளிங்குச்சுவர்கள் மின்னிக்கொண்டிருந்த அறையில் இடப்பட்ட நான்கு பீடங்களில் ஒன்றில் இந்திரனும் அருகே பாலியும் அமர்ந்திருந்தனர். சாளரத்தருகே இந்திராணி நின்றிருந்தாள். அர்ஜுனன் அருகணைந்து இந்திராணியின் கால்களைத் தொட்டு சென்னி சூடினான். அவள் "வெற்றியும் புகழும் திகழ்க! மெய்மை கைவருக!" என வாழ்த்தினாள். "நீ நகர்சுற்றி வருவதை இருமுறை கண்டேன். உன் விழிகள் இளமைந்தர் விழிகள் போலிருந்தமை கண்டு நகைத்தேன்" என்றாள்.

அர்ஜுனன் “இங்கு இளமை மட்டுமே உள்ளது, அன்னையே” என்றான்.

இந்திரன் தலைகுனிந்து அவனை நோக்காமல் அமர்ந்திருந்தான். அவன் அருகே சென்று கால்தொட்டு வணங்க அவன் தலையை மட்டும் தொட்டான். அவன் பாலியை வணங்கியபோது அவன் வாழ்த்தென ஏதோ சில சொற்களை முனகியபடி அவனை தலைதொட்டு வாழ்த்தினான். அவன் கைகட்டி அருகே நின்றுகொண்டான். “அமர்க!” என்றான் இந்திரன். “இல்லை” என்று அர்ஜுனன் சொல்லப்போக “இது அவை. இங்கு அமரலாம்” என்றான் பாலி. அர்ஜுனன் அமர்ந்தான்.

அவர்கள் எதற்காகவோ காத்திருந்தனர். காற்றிலாது அசைவிழந்த சுடர்கள்போல இருவரும் தோன்றினர். அர்ஜுனன் அவர்கள் சொல்கொள்வதற்காக காத்திருந்தான். பாலியின் உடலில் மெல்லிய அசைவு தோன்றியதும் ஆடிப்பாவையென இந்திரனும் அசைவுகொண்டான். பாலி “தந்தை உன்னிடம் நேரடியாகவே பேச விழைகிறார், இளையோனே” என்றான்.

“அவ்வாறே” என்றான் அர்ஜுனன். இந்திரன் விழிதூக்கி அர்ஜுனனை சிலகணங்கள் நோக்கியபின் “நீ என் மைந்தன் என்பதனால் இச்சொற்கள். நான் எவரிடமும் எதையும் வேண்டுவதில்லை” என்றான். “நீங்கள் ஆணையிடலாம், தந்தையே” என்றான் அர்ஜுனன். “நீ உன் தோழனை கைவிட்டாகவேண்டும். அதுவே என் ஆணை” என்றான் இந்திரன். சிலகணங்கள் அர்ஜுனன் சித்தமும் செயலற்றிருந்தது. பின்னர் கைகூப்பியபடி “அது என்னால் இயலாது, தந்தைப்பழிகொண்டவனின் நரகத்தில் முடிவிலாக்காலம் வரை உழன்றாலும்” என்றான்.

“நீ என்ன பேசுகிறாய் என்று தெரிகிறதா, மூடா?” என்று கூவியபடி பாலி எழுந்தான். “மைந்தா, அமர்க! அவர் சொல்லவேண்டியதை சொல்லட்டும். நாம் பேசுவதற்காகவே இங்கே அவனை அழைத்தோம்” என்றாள் இந்திராணி. பாலி அச்சொல்லுக்கு அடங்கி அமர்ந்தான். “மைந்தா, அவன் அங்கிருப்பது ஓர் எளிய யாதவனாக அல்ல. முடிவில்லாத ஒரு மணிமாலையின் ஒரு அருமணி அவன். அவன் மண்ணில் வாழும் அனைவரையும் தன் காய்களாகக் கொண்டு பெரும் பன்னிருகளம் ஒன்றை ஆடிக்கொண்டிருக்கிறான். அதை உன்னிடம் சொல்லவே முனிவர்களை அனுப்பினேன்” என்றான் இந்திரன். “ஆம், அவர்கள் என்னிடம் சொன்னார்கள்” என்று அர்ஜுனன் சொன்னான்.

“அதன் பின்னருமா இதை சொல்கிறாய்? நீ அறிவாயா மகாவஜ்ரமென்றால் என்னவென்று? போர்கொண்டெழுந்த இந்திரனின் வேதம். இந்திரன் எவருடன் கொண்ட போர் அது என அறிவாயா?” என்று பாலி கூவினான். தசைகள் நெளிய பெரிய கைகளை உரசியபடி “எதிர்நின்று அறைகூவுவது யார் தெரியுமா? அவர் பக்கம் நின்று நீ பேசுகிறாய். சொல், உன் தந்தையின் நெஞ்சுக்கு நேராகவா எழப்போகிறது உன் வாளி?” என்றான். இந்திராணி “மைந்தா, நீ அமர்க! உன் தந்தை அவர் சொற்களை சொல்லட்டும்” என்றாள். பாலி மீண்டும் அமர்ந்தான். இந்திரன் “அவன் சொல்வதைத்தான் நானும் சொல்லவிழைகிறேன், இளையவனே” என்றான். “நான் என் மின்படைக்கலத்தை ஏந்தியபடி போருக்கெழுந்து நின்றிருக்கும் தருணம் இது. எதிர்நிற்பவன் உன் தோழன்.”

பலமுறை கேட்டிருந்தபோதிலும் அவன் வாயால் அதை கேட்க அர்ஜுனன் உடல் சற்று சிலிர்த்தது. “மண்ணில் மாகேந்திரம்

தோற்கடிக்கப்பட்டது. எஞ்சி அங்கு தங்கும்பொருட்டு மகாவஜ்ரம் போராடிக்கொண்டிருக்கிறது. நீ அறியமாட்டாய், அங்கு எவ்வேள்வியிலும் இன்று எனக்கு முதல் அவி இல்லை. முதன்மை இடமும் இல்லை. அங்கிருந்து பெய்யும் அவியே இங்கு அமுதமென மழைக்கிறது என்று அறிந்திருப்பாய். இந்நகரம் சிறுத்துக்கொண்டிருக்கிறது. என் குடிகள் குறைந்துகொண்டிருக்கிறார்கள். ஒவ்வொரு நாளும் ஒளிமங்குகின்றன இங்குள்ள அனைத்தும்" என்றான் இந்திரன். சினம் அனல்கொள்ளச் செய்த முகத்துடன் "ஆனால் போராடிக்கொண்டே இருப்பவனுக்குரியது இந்திரநிலை. இதையும் போராடி வெல்வேன் என்பதில் ஐயமில்லை" என்றான்.

அர்ஜுனன் இந்திரன் சொல்லிமுடிப்பதற்காக காத்திருந்தான். "வேதப்பாற்கடல் கடைந்து அமுதெடுக்கப்போகிறான் அவன் என்கின்றனர் அவனைப் போற்றும் முனிவர். நஞ்செழாது அமுதில்லை என்றும் அவர்கள் அறிந்திருப்பார்கள். மைந்தா, அங்கு நிகழவிருப்பது பெரும் குருதிக்கொந்தளிப்பு. அங்கு திகழும் சொல்லை வெல்ல தன் மெய்யறிதலே போதும் என அவன் அறிந்திருப்பான். களம் நின்று வெல்ல உன் கைவில் வேண்டும் என்று உணர்ந்திருப்பதனால்தான் உன்னை தன் நண்பன் என கொண்டிருக்கிறான். நீ அவனுடனிருக்கையில் அவனே வெல்வான். அவன் சொல் அங்கு நிற்கும். அது மகாநாராயண வேதமென்று அங்கே வாழும்."

"அவன் சொல்வது வேதத்திற்கும் அப்பால் உள்ள மெய்மையை" என்றான் இந்திரன். அர்ஜுனன் அவன் விழிகளை நோக்காமல் "ஆம், வேண்டுவனவற்றை கெஞ்சியும் அடம்கொண்டும் தந்தையிடம் பெறுபவர் மைந்தர். அவர்

சித்தம் முதிர்ந்து தந்தையை அறிய முயல்வதும் இயல்பே என்று என்னிடம் சொன்னார்” என்றான். இந்திரன் உரத்த குரலில் “மூடா, ஒவ்வொரு கூழாங்கல்லிலும் உள்ளது முடிவின்மையே. முடிவிலியின் பாதையை திறப்பவனுக்கு இன்பங்களென்று ஏதுமில்லை. அவனுக்கு வாழ்வே இல்லை” என்றான். “ஆம், முடிவிலியை அறிந்தவன் தானே முடிவிலியென்றாகிறான்” என்றான் அர்ஜுனன்.

இந்திரன் தளர்ந்து கைகளை விரித்தான். பின்னர் நீள்மூச்சுடன் அசைந்தமர்ந்து “இளையவனே, வெயிலொளியை பளிங்குருளையால் குவிப்பதுபோல அவன் வேதவிரிவை ஒற்றை மெய்மையென்றாக்குகிறான். அது சுடர். எரித்தழிப்பதும் கூட. அவன் வென்றால் பாரதவர்ஷத்தில் ஊழிக்காலம் வரை அம்மெய்மையே நின்றிருக்கும். மைந்தா, அது கூர்வாள் என என் புகழை வெட்டிச்செல்லும்” என்றான். “ஏனென்றால் மாகேந்திரம் விழைவுகொண்டோரின் வேதம். மகாவஜ்ரம் வென்று எழுபவன் வேதம். அவன் சென்றடையும் வேதமெய்ப்பொருளோ அடைவதற்கும் இழப்பதற்கும் நடுவே, வெல்வதற்கும் வீழ்வதற்கும் அப்பால் விழித்திருக்கும் ஒரு நோக்கு மட்டுமே.”

“அவன் சிப்பியில் முத்தெடுப்பதுபோல அவ்வேதமெய்ப்பொருளை எடுக்கிறான்” என்றான் பாலி. “ஆண்டாண்டுகாலம் வேதத்தின் உள்நின்று உறுத்தியது. வேத உயிர்சூடி ஒளிகொண்டது. இளையோனே, அதை எடுத்தபின் வேதம் வெறுங்கலமே.” அர்ஜுனன் “கதிர் முதிர்ந்த பின்னரும் நிலம் வளத்துடன் எஞ்சுவதே வழக்கம், மூத்தவரே” என்றான். பாலி உரக்க “வீண் சொல் வேண்டாம்!” என்று கூவினான். அர்ஜுனன் முகத்தருகே தன் முகம் வர அணுகி சினத்தால்

சுளித்த முகம் அசைய, இரைக்கும் மூச்சு அவன் மேல் வெம்மையுடன் படர "திசைத்தேவர்களின் வேதமே மகாவஜ்ரம். நீ திசைத்தேவர்களை அணுகி படைக்கலம் கொண்டாய். அவர்கள் உன்னை எந்தையின் இளைய மைந்தன் என்றெண்ணியே அருள்புரிந்தனர். இன்று அப்படைக்கலங்களுடன் நீ எந்தைக்கு எதிராக கிளம்புகிறாய்" என்றான்.

அவனை அடங்கும்படி கையசைத்து விலக்கியபின் இந்திரன் சொன்னான் "மைந்தா, சூரியன் எங்கள் தோழன். மகாநாராயணம் மண்நிகழத் தொடங்கியதுமே விண்ணகத்தேவர்கள் ஒருங்கிணைந்துவிட்டோம். என் குலத்தான் இவன். சூரியனின் மைந்தன் இவன் இளையோன் சுக்ரீவன். அந்த யுகத்தில் இவர்கள் பிரிந்து போரிட்டு அழிந்தனர், அவன் வென்றான். இந்த யுகத்திலும் அது நிகழலாகாது. இன்று மண்ணில் உன்னுடன் இருக்கும் அவன் மைந்தன் உன் உடன்பிறந்தான். அவனையே உன் முதல்வன் எனக் கொள்க! அவனும் நீயும் இணைந்தால் உன் தோழன் என வந்தவன் வெல்ல முடியாது. அவன் எண்ணும் வேதமுடிவும் மண்நிலைக்க முடியாது."

இந்திரன் குரல் தழைந்தது. "மைந்தன் என்பதனால் உன்னிடம் நான் மன்றாடுவதும் பிழையல்ல. இத்தருணத்தில் இது ஒன்றே நான் உன்னிடம் கோருவது. இதை நீ ஏற்றால் மண்ணில் ஒரு பெரும்போர் தவிர்க்கப்படும். போரில் உனக்கு களமெதிர்நிற்கப் போகிறவர்கள் உன் உடன்பிறந்தார், உன் முதுதந்தையர், உன் ஆசிரியர்கள். நேற்றுவரை உன் சுற்றமென்றிருந்தவர், உன் கொடிசூடி உனக்குப் பின் படைநிரையென வந்தவர். அவர்களின் குருதிமேல் நடந்துசென்றே நீ வெல்ல முடியும்." அர்ஜுனன்

திகைத்து அமர்ந்திருந்தான். பாலி “பல்லாயிரம் கைம்பெண்கள், பல்லாயிரம் ஏதிலிமைந்தர், பல்லாண்டுகாலம் ஓயா விழிநீர். இளையவனே, அவை மட்டுமே எஞ்சும் உனக்கு” என்றான்.

அர்ஜுனன் தலைகுனிந்தான். அவன் உடல் மட்டும் விதிர்த்துக்கொண்டிருந்தது. “அழிவது அவர்கள் மட்டும் அல்ல. உன் குடியும்தான். இதோ சொல்கிறேன், உன் மைந்தர் களத்தில் நெஞ்சுபிளந்து விழுந்து துடித்து இறப்பார்கள். உன் நகரம் எரிஎழுந்து கரிமூடும்” என்று பாலி முழங்கும் குரலில் சொன்னான். “அனைத்துக்கும் அப்பால் உள்ளது ஒன்று. இளையோனே, போர்கொண்டு செல்லும் அரசனை தோல்விக்குப் பின் மூத்தவள் கையில் ஏந்திக்கொள்கிறாள். வென்றால் அவன் நெஞ்சில் இளையோள் குடிவருகிறாள். ஆனால் அவ்விளையோள் அறியாது உருமாறி மூத்தவளாக ஆவாள். நுனிக்கால் ஊன்றி நிற்க நிலமில்லாதாகும், வெறுமையே எஞ்சும்.”

கைசுட்டி பாலி சொன்னான் “உலராத உதிராத விழிநீருடன் நீ அந்நிலமெங்கும் அலைந்து திரிவாய். ஒவ்வொரு சொல்லும் பொருளழிந்து வெறும்கூடாகும். ஒவ்வொரு நம்பிக்கையும் பொய்யென்றாகும். ஒவ்வொரு உறவும் நடிப்பெனத் தெரியும். இளையவனே, அவ்வெறுமையில் இறந்தகாலம் எழுந்து வந்து நிறையும். இழப்புகள் பெருகும். துயர்கள் மேலும் இருளும். கணங்கள் எடைகொண்டபடியே செல்லும். மண்ணில் மானுடருக்கு அளிக்கப்படும் பெருநரகுகளில் அதுவே முதன்மையானது. உனக்கென அங்கே காத்திருப்பது அது.”

அர்ஜுனன் மீண்டும் உடல் விதிர்த்தான். பாலி இருகைகளையும் தட்டியபடி உரக்க “சொல், மூடா! விலகினேன் என்று சொல்! உன் கடன் மகாவஜ்ரத்துடன் மட்டுமே என்று

சொல்!” என்றான். அர்ஜுனன் அசையா விழியிமைகளுடன் உடல் ஒடுக்கி அமர்ந்திருந்தான். “நோக்கு... விழிகொண்டே நோக்கு. இதோ!” என்று பாலி கூவினான். “மைந்தா, இது நெறியல்ல” என்று சொல்லி இந்திரன் எழுந்தான். அதற்குள் விழிதூக்கிய அர்ஜுனன் தன்முன் பெரும்போர்க்களம் ஒன்றை கண்டான்.

வெட்டுண்டு சிதறிக்கிடந்த உடல்களை உதறி உதறிப் பிரிந்து மேலெழுந்த உயிர்களை அவன் கண்டான். ஊனுடல்கள் பொருள்வயின் பிரியும் தந்தையரை அள்ளிப்பற்றிக் கதறும் இளம்பைதல்கள் என அவ்வொளித்தோற்றங்களை நோக்கி எம்பியும் தாவியும் துள்ளின. உதறப்பட்டதுமே பொருளிழந்து குருதிநனைந்த மண்ணில் விழுந்து தவித்து மெல்ல அமைந்தன. அவற்றுக்குமேல் துயர்நிறைந்த விழிகளுடன் நின்ற உயிர்வடிவங்கள் கைகள் தவிக்க கால்கள் பதற அவ்வுடல்களையே சுற்றிவந்தன. குனிந்து அவற்றுக்குள் மீண்டும் நுழைய முயன்றன சில. அவ்வுடல்கள் மெல்லிய உதைபட்டதுபோலவோ உள்நாண் ஒன்று அறுபட்டதுபோலவோ விலுக்கிட்டன.

அவை இனி தங்களை உள்நுழையவிடாத வெறும் தசைக்கூடுகள் என உணர்ந்த உயிர்கள் தவித்தபடி மேலே எழுந்தன. கைகளால் அவ்வுடல்களை தழுவித்தழுவி ஏங்கின. எழுந்து பிறிதொரு உடலருகே சென்று அங்கு அவ்வுடலைத் தழுவி அமர்ந்திருந்த இன்னொரு உயிர்வடிவை தழுவிக்கொண்டது அதன் தந்தை என்று அர்ஜுனன் உணர்ந்தான். மைந்தரைத் தேடிப் பதைத்து அலைந்தன உயிர்கள். இன்னும் இறக்காது துடித்துக்கொண்டிருந்த உடல்களுக்குள் மைந்தரைக் கண்டு அவர்களைப் பற்றி

வெளியே இழுத்தன. தோழர்கள் இறந்துகொண்டிருக்க அருகே அமர்ந்து காத்திருந்தன சில உயிர்கள்.

காற்றை உதைத்து உதைத்து தளர்ந்த கால்கள் அசைவிழக்க உடல்களில் இருந்து விடுபட்டெழுந்த புரவிகள் கால்களை உதறி உதறி புதிய வெளியை புரிந்துகொண்டபின் சுழற்றப்படும் ஆடியின் ஒளியென ஓசையற்று சுழன்று விரைந்தன. களிறுகள் நீள்மூக்கின் நுனியைத் துழாவி மணம்பற்ற விழைந்தன. அவை அறிந்த புது மணத்தால் திகைத்து துதிக்கை சுருட்டி மத்தகம்மேல் அறைந்து ஓசையின்றிப் பிளிறின. ஓடி அமைந்த புரவிகள் இறகுக்கீற்றுகளாக காற்றில் மிதந்து உருப்பிரிந்தன. பெரிய துளிகளாக திரண்டு அசைவற்று நின்றன யானைகள்.

அந்தி அணைந்துகொண்டிருந்தது. பல்லாயிரம் பாடிவீடுகளில் வெட்டுண்டும் குத்துண்டும் புண்பட்டிருந்த வீரர்களை அள்ளி நிரையாக மண்ணில் கிடத்தியிருந்தனர். மாணவர்கள் மருந்துப்பேழைகளுடன் உடன்வர அவர்களை நோக்கிச் சென்ற மருத்துவர்களை நோக்கி கைகூப்பி கதறி மன்றாடினர். அவர்கள் சுண்ணக்குறியிட்ட வீரர்களை மட்டும் தூக்கி துணிமஞ்சலில் ஏற்றி ஆதுரசாலைகளுக்குள் கொண்டுசென்றனர் வீரர். எஞ்சியவர்கள் கதறினர். கண்ணீருடன் மன்றாடினர். இளமருத்துவர்கள் அவர்களின் புண்வாய்களைத் திறந்து நச்சுருளைகளை வைத்து மூடினர். நஞ்சு உடலில் பரவ அவர்களின் உடல்கள் ஒளியிழந்தன. விழிகள் பிதுங்கித்தெறிக்க துடித்து அசைவழிந்தன.

இதழ்களில் எஞ்சிய சொற்களுடன் சிலைத்துக்கிடந்த அவர்களை இழுத்துக்கொண்டுசென்று அங்கிருந்த வண்டிகளில் முன்னரே அடுக்கப்பட்டிருந்த பிணங்களுடன் ஏற்றினர். எடைகொண்டு உடலமுந்த அப்போதும் இறக்காதிருந்த ஒருவன்

முனகி அழுதான். பிணவண்டியில் ஏற்றப்படும்போது ஒருவன் ஏற்றும் வீரனொருவனின் ஆடையை இறுகப்பற்றிக்கொண்டு நடுங்கிய உடலுடன் இறுதிச்சொல்லை ஊழ்கநுண்சொல் என மீண்டும் மீண்டும் வெறிகொண்டு சொல்லிக்கொண்டிருந்தான்.

பிணங்கள் செறிந்த வண்டிகள் ஓடிய களமெங்கும் உடல்கள் விரிந்துகிடந்தன. நீண்ட ஈட்டிகளுடன் களம்புகுந்த வீரர்கள் சாவுப்புண்கொண்டு துடித்துக்கொண்டிருந்தவர்களை நெஞ்சில் குத்திக் கொன்றனர். அவர்களிடமிருந்து எழுந்த உயிருடல்கள் குத்துபவர்களைச் சூழ்ந்துகொண்டு சினந்து கைநீட்டி துள்ளின. அவர்களை அறைந்தும் கடித்தும் தாக்கின. அந்தக் குளிரை உணர்ந்து அவர்கள் உடல் சிலிர்த்தனர். தங்கள் ஆடைபற்றி இழுப்பது காற்று என எண்ணி கைகளால் இழுத்து உடலுடன் செருகிக்கொண்டனர்.

அவன் துரோணரைக் கண்டான். வெட்டி அகற்றப்பட்ட தலைகொண்ட வெற்றுடலுடன் தேருக்குக் கீழே கிடந்தார். அவர் மூச்சுக்குழாய் நீண்ட செந்நிறக்கொடி என கழுத்திலிருந்து நீண்டு மண்ணில் கிடந்தது. உடலெங்கும் அம்புகள் தைத்திருக்க வான்நோக்கிக் கிடந்த பீஷ்மரைக் கண்டான். புயல்கடந்த நிலத்தில் இளமரங்கள் என செத்துக்குவிந்திருந்த இளைய கௌரவர்களின் உடல்களைக் கண்டான். கௌரவ நூற்றுவரையும் கண்டுவிட்டான். நெஞ்சு பிளந்துகிடந்த துச்சாதனன் எழுந்து தன் உடலை நோக்கியபடி நின்றிருந்தான். தொடைசிதைந்து கிடந்த உடலைச்சுற்றி வந்து பெருஞ்சினத்துடன் கைகளை ஓங்கி ஓங்கி அறைந்துகொண்டான் துரியோதனன்.

அவன் கர்ணனைக் கண்டான். தேர்த்தட்டின் அடியில் புதைந்த சக்கரத்தில் சாய்ந்து இறந்து அமர்ந்திருந்த அவனுக்கு மேல்

ஒளிகொண்ட உயிருடல் கைகளைக் கட்டியபடி நோக்கி நின்றது. அவனை திரும்பி நோக்கியபோது அதன் விழிகள் ஒளிகொண்டன. புன்னகையுடன் கைநீட்டி "இளையோனே" என்று அவன் அழைத்தான். "மூத்தவரே, நீங்கள் அறிவீர்களா? என்னை அறிந்திருந்தீர்களா?" என அவன் நெஞ்சுடையும் ஒலியுடன் கேட்டான். "ஆம், நன்கறிந்திருந்தேன். நீ என் உளம் கனியச்செய்யும் இளையோன். உன்னைக் கொல்லாதொழிந்த என் வாளியை எண்ணி எண்ணி எத்தனை முறை மகிழ்ந்தேன்." அர்ஜுனன் "மூத்தவரே" என்று தேம்பினான். கர்ணன் கனிவுடன் நோக்கி "வருந்தாதே. இது வெறும் கனவு" என்றான்.

ஏதோ சொல்ல வாயெடுத்தவன் ஓர் உறுத்தலுணர்வை அடைந்து அது எண்ணமென்றானதும் திடுக்கிட்டு திரும்பிப் பார்த்தான். இரு கைகளையும் விரித்துக்கொண்டு ஓடி வீழ்ந்துகிடந்த அபிமன்யூவை நோக்கினான். தலை ஒரு குருதிக்குமிழியாக வெடித்துச் சிதறியிருக்க இரு கைகளையும் விரித்து மல்லாந்துகிடந்தான். அவன் இளங்கால்கள் இரு பக்கமும் விரிந்திருந்தன. கவசம் அகன்ற மார்பில் சரிந்து கிடந்தது மணியாரம். கங்கணங்களில் ஒன்று உதிர்ந்திருந்தது. அர்ஜுனன் நடுங்கிக்கொண்டிருந்தான்.

அவனருகே குளிரென ஓர் இருப்பை உணர்ந்து திடுக்கிட்டு திரும்பி நோக்கினான். அபிமன்யூவின் மூச்சுடல். "அங்கே இளையவர்களும் மூத்தவர்களும் எரிந்துகொண்டிருக்கிறார்கள், தந்தையே." அர்ஜுனன் இல்லை என்பதுபோல் தலையசைத்தான். "அழுதபடி அன்னையும் அரண்மனை மகளிரும் வந்துகொண்டிருக்கிறார்கள்…" அர்ஜுனன் "வேண்டாம்… நான் நோக்கமாட்டேன். நான் விழிதூக்கமாட்டேன்" என்றான். "முற்றழிவு… எஞ்சுவது

அதுமட்டுமே” என்றான் அபிமன்யூ. “அரண்மனையில் உத்தரையின் கருவுக்குள்ளும் புகுந்துவிட்டது நஞ்சு. என் மைந்தன் துடித்தணைவதை பார்த்துக்கொண்டிருக்கிறேன்.” அர்ஜுனன் “வேண்டாம், பார்க்கமாட்டேன்” என்று கூவினான்.

“இதுதான் நிகழவிருப்பது” என்றான் இந்திரன் ஆழ்ந்த குரலில். கண்ணீருடன் கூப்பி நெஞ்சில்பதித்த கைகள் நடுங்கிக்கொண்டிருக்க நின்றிருந்த அர்ஜுனன் கால் தளர்ந்து பீடத்தில் விழுந்து அமர்ந்தான். “இதற்காகத்தான்…” என்றான் இந்திரன். அர்ஜுனன் அறியாது விம்மிவிட்டான். “மைந்தா, இதை நீ தவிர்க்கமுடியும்” என்று இந்திரன் சொன்னான். “இக்கணம் நீ எடுக்கும் முடிவு இக்குருதியை தடுக்கும், அதற்கு நான் உறுதியளிக்கிறேன்.” அர்ஜுனன் “இவை எங்கு நிகழ்கின்றன?” என்றான். “எதிர்காலத்தில். அது ஒவ்வொரு கணமும் அணுகிவருகிறது” என்றான் பாலி. “மூத்தவரே, அவர் இதை அறிவாரா?” என்று அர்ஜுனன் கேட்டான். இந்திரன் “நன்கறிவான். அவன் மைந்தரும் குலமும் நகரும் இதைப்போலவே அழியும் என்பதையும் அறிவான்” என்றான். வலிகொண்டவன்போல அர்ஜுனன் மெல்ல முனகினான்.

“அவன் அனைத்தையும் கண்முன்னிலென பார்த்துக்கொண்டிருக்கிறான். அதன் இருளால் சூழப்பட்டிருக்கிறான்” என்றான் இந்திரன். “இங்கிருந்து மாயம் நிகழ்த்தும் கந்தர்வர்களையும் வருவதுரைக்கும் முனிவர்களையும் அனுப்பிக்கொண்டே இருக்கிறோம். ஒவ்வொரு கணமும் அச்சித்திரத்தை உயிர்ப்புடன் வைத்திருக்கிறோம். அவ்விருளை அவன் கடக்கலாகாதென்று விழைகிறோம். கடப்பான் என்றும் அதன்பொருட்டே எழுந்தருளியவன் அவன் என்றும் நன்கறிந்துமிருக்கிறோம்.”

அர்ஜுனன் அசைவில்லாது அமர்ந்திருந்தான். அவர்களும் அவன்மேலிருந்து விழிகளை விலக்கி தங்கள் அமைதிக்கு மீண்டனர். நெடுநேரத்திற்குப் பின் பாலி விழிதூக்கி அர்ஜுனனை நோக்கினான். அந்நோக்கை உணர்ந்து அவன் உடல் மெல்ல அசைந்ததும் இந்திரன் கலைந்தெழுந்தான். "மைந்தா, உன்னிடம் நான் கோருவது ஒன்றே. அவனிடம் செல், ஒற்றைச் சொற்றொடரில் சொல். உன் தந்தைக்கு கொண்ட கடனுக்கு நீ கட்டுப்பட்டவன் என்றுரை. அனைத்தும் அக்கணமே முடிவுக்கு வந்துவிடும்."

பாலி "உன் தமையனாகிய கர்ணன் அஸ்தினபுரியை ஆள்வான். அவன் வலப்பக்கம் இளையவனாகிய துரியோதனன் வாளுடன் காவல் நிற்பான். வலப்பக்கம் இளவல் யுதிஷ்டிரன் துணைநிற்பான். நூற்றைந்து தம்பியர் கொண்ட பேரரசன் பாரதமண்ணை முழுதாள்வான். அவன் பேரறத்தான். அவன் கோல்கொண்டிருக்கையில் கதிர்முறை மாறாது. நாளவன் அருளிருந்தால் எட்டுத்திசையர்களின் அருளுமிருக்கும். வளமும் செல்வமும் குன்றாது. புகழும் நிறைவும் தேடிவரும்" என்றான். அர்ஜுனன் சொல்லில்லாது அமர்ந்திருந்தான். "சொல், உன் உறுதியை தந்தைக்கு அளி" என்றான் பாலி.

அர்ஜுனன் மெல்ல அசைந்தான். அவன் உதடுகள் வெறுமனே பிரிந்தமைந்தன. பாலி "உன் சொல் ஒன்று போதும், தந்தை இதுகாறும் கொண்ட அத்தனை துயர்களையும் நீக்க. சென்ற யுகத்தில் நான் கொல்லப்பட்ட வஞ்சம் அவரை எரிக்கிறது, இளையோனே. ஒரு சொல்லால் அதை நீ அணைக்கமுடியும்" என்றான். அர்ஜுனன் பெருமூச்சுவிட்டு விழிகளை சாளரம் நோக்கி திருப்பிக்கொண்டான். "சொல்க!" என்றான் பாலி சற்றே

தளர்வடைந்த குரலில். அர்ஜுனன் மெல்ல கனைத்தான். பின்னர் எழுந்து கைகூப்பி வணங்கினான்.

“என்னை நீங்கள் தீச்சொல்லிட்டு இழிநரகுக்குள் தள்ளினால் அதையும் என் நல்லூழ் என்றே எண்ணுவேன், தந்தையே. ஆனால் எதன்பொருட்டும் நான் என் தோழரிடமிருந்து விலகமுடியாது. அவருக்காக என்னையும் என் குடியையும் சுற்றத்தையும் அழிக்கவேண்டுமென்பதே அவர் ஆணை என்றால் அதையும் இனிதே தலைக்கொள்வேன். பெரும்பழிகளே எஞ்சுமென்றால் அதையும் என் கடன் என்றே சென்னிசூடுவேன். நான் அவரன்றி பிறிதல்ல” என்றான். பாலி சினத்துடன் கைநீட்டி எழமுயல அவன் தொடைமேல் கைவைத்து அமரச்செய்தான் இந்திரன். அர்ஜுனன் மீண்டும் மூவரையும் தொழுதபின் வெளியே சென்றான்.

# கிராதம் - 59

**[ 22 ]**

அர்ஜுனன் வெளியே சென்றதுமே மாதலியை பார்த்தான். அவன் நடை தயங்கியது. மாதலி இயல்பாக அவனருகே வந்து “வருக!” என்றான். அவனிடம் தன் அறைக்கு மீள விரும்புவதாகச் சொல்ல எண்ணினான் அர்ஜுனன். ஆனால் அதை அவன் எப்படி புரிந்துகொள்வான் என்று தயங்கினான். அவன் “நீ சொன்னவற்றை நான் புரிந்துகொள்கிறேன். நீ பிறிதொன்றை சொல்லமுடியாது” என்றான். அவனை நோக்கி சொல்கொள்வதற்குள் சிரித்தபடி “இந்திரகீலத்திற்கு ஏறி வரும் வழியில் நீ சந்தித்த யட்சியும் நானே” என்றான் மாதலி.

அர்ஜுனன் திகைப்புடன் "நீங்கள்..." என்றதும் அவன் புன்னகைத்து "இங்குள்ளது ஒரே உள்ளம்" என்றான். அர்ஜுனன் பெருமூச்சுவிட்டு "என் உள்ளத்தை எண்ணி நான் வியந்துகொண்டிருக்கிறேன், தந்தையே. என்னால் என் தோழரை விலக்கி எண்ணவே முடியவில்லை. அவர் என்னில் ஒரு பகுதி. அதை நானே ஒவ்வொரு தருணத்திலும் வியப்புடன் அறிந்துகொண்டிருக்கையில் பிறரிடம் சொல்லிப் புரியவைப்பது எளிதல்ல. முக்காலமும் பதினான்குலகமும் அறிந்த தேவர்தலைவரிடம்கூட" என்றான்.

மாதலி நகைத்து "அவரும் அறிவார். ஆனாலும் அவர் சொல்லியாகவேண்டும் என விரும்புகிறார்" என்றான். மேலும் சிரித்து "மைந்தனுக்கு என ஓர் உள்ளமும் ஆளுமையும் இருக்கலாகும் என்பதைப்போல தந்தையரால் ஏற்கமுடியாதது பிறிதில்லை. வளர்ந்தெழும் மைந்தரைக் கண்டு தந்தையின் உள்ளம் தாவித்தழுவ முனைகிறது. மறுகணமே தயங்கி பின்னடைகிறது. ஏனென்றால் அவருக்குள் வாழும் அழியாத ஒன்று அவர் என்னும் அக்கூட்டை உதறி அக்கணமே புத்தம்புதிய கூண்டில் குடியேற விழைவதை அவர் அறிகிறார். அவரை அச்சுறுத்துவது அவ்விழைவுதான்" என்றான்.

அர்ஜுனன் "நான் என்னைப்பற்றியே எண்ணிக்கொண்டிருக்கிறேன், தந்தையே" என்றான். "ஏன் என்னால் இளைய யாதவரை விட்டு அகலமுடியவில்லை? அவருடைய ஆழம் எனக்கு தெரியும். ஒவ்வொருநாளும் கடலலைமேல் ஆடுபவர்கள் உள்ளூர ஆழியென்றால் என்னவென்றும் அறிந்திருப்பார்கள். முடிவிலியென அதை அறிந்திருப்பதே நுரைமட்டுமே என அலைகளை எண்ணி அவர்கள் மகிழ்வுகொண்டாடச் செய்கிறது. ஒவ்வொன்றிலும்

முடிவிலியை அறிந்து அவ்வறிதலை ஒத்திப்போட்டு அன்றாட கணங்களில் திளைப்பது மானுட உள்ளத்தின் விந்தைகளில் ஒன்று.” அவன் அந்த ஒப்புமை வழியாக தன் சொற்களை கண்டுகொண்டான். அதையே விரித்து கருத்துக்களாக ஆக்கினான்.

“முழுக்க அறிந்தபின்னரே மீன்கொள்ளவும் கடலோடவும் ஆழியிலிறங்க வேண்டுமென்று எவரும் எண்ணுவதில்லை. அதை துடுப்புகளால் கிளறவும் பாய்விரித்து அதன்மேல் தாவவும் தயங்குவதில்லை. அதன் அச்சுறுத்தும் ஆழம் அறியப்பட முடியாதென்பதனாலேயே கணம் கோடிமடங்கெனப் பெருகிக்கொண்டிருப்பது. ஆனால் ஒருமுறை கைகூப்பி வணங்கிவிட்டு அதன்மேல் பாய்கின்றனர் மானுடர். ஏனென்றால் அத்தனை பெரிய ஒன்று அது பெரியதென்பதனாலேயே எளியவர்கள்மேல் அளிகொண்டிருக்கவேண்டும், காத்தருளவேண்டும். அவ்வாறு நம்புவதன்றி மானுடருக்கு வேறு வழியில்லை.”

“தந்தையே, சற்றுமுன் நான் வரவிருக்கும் பேரழிவை கண்முன் கண்டேன். என் உள்ளுறைந்த அனைத்தும் பதறி எழுந்தன. இறந்திறந்து எழுந்தேன். இனி நான் அடைவதற்கொன்றுமில்லை. ஆம், பேரழிவு. ஆறாத்துயர். அழியாப்பழி. இறுதியில் மாற்றிலாத வெறுமை. பிறிதொன்றுமில்லை. ஆனால் மறுகணம் என் உள்ளம் எண்ணியது, அதை அவர் அறியமாட்டாரா? தான் ஓட்டும் பசு அடுத்தகணம் வைக்கப்போகும் காலடியை முன்பே அறிபவர் அவர் என்கிறார்கள். இதை அறிந்தே ஆற்றுகிறார் என்றால் அவருக்கு அதற்குரிய நோக்கங்கள் உள்ளன. அதை நான் எப்படி அறியமுடியும்?”

“அவரளவே ஆகாமல் அவர் அறிந்ததை நான் முற்றறிய இயலாது. எறும்பும் பருந்தும் உலகைப்பற்றி உரையாடிக்கொள்ள முடியுமா என்ன?” என்றான் அர்ஜுனன். “அவர் என் அரசன். அரசனின் எண்ணங்களை ஆராயும் பொறுப்பு படைவீரனுக்கில்லை. வில்லேந்தி செருகளம் சென்று கொன்று நின்று மடிவதொன்றே அவன் கடன். அதை மட்டுமே நான் செய்யவிருக்கிறேன்.”

சொல்லச்சொல்ல அவன் இயல்பானான். முகம் தெளிய குரல் நேர்பட “சென்று என் தந்தையிடம் சொல்லுங்கள். அவர் காலடிகளை என் சித்தத்தில் சூடியிருக்கிறேன். ஆனால் இளைய யாதவருக்குரியது இப்பிறவி. அதை இளைய யாதவரே மறுத்தால்கூட நான் மாறமுடியாது” என்றான். மாதலி புன்னகை புரிந்தான். அதைக்கண்டு அர்ஜுனனும் புன்னகைகொண்டான். “ஆம், முதுசெவிலியர் கூற்று ஒன்றுண்டு. ஆடை என்றால் அகலலாம். தோளில் எழுதிய தொய்யில் என்றால் அழியலாம். பச்சை குத்தப்பட்ட ஓவியம் சிதையில் தானும் எரியும்.”

மீண்டும் விழிகள் கூர்மைகொள்ள “தந்தையே, சற்று முன் ஒன்றை உணர்ந்தேன். ஒரு பொருந்தா எண்ணத்திவலையென வந்துசென்றது அது. உண்மைகள் அவ்வண்ணமே நம்மை எண்ணியிராப்பொழுதில் ஏதென அறியாது தொட்டுச்செல்லும் போலும். அவரை நான் ஒருநிலையிலும் பிரியமுடியாதென்று என் ஆழம் முதலில் உணர்ந்தது நான் அவருடன் போரிட்டபோது” என்றான் அர்ஜுனன். “அப்போரை நான் எனக்குள் நிகழ்த்துவது என்றே என் அகம் உணர்ந்தது. என்னருகே எழுந்த அவர் விழிகள் என் விழிகளென்று திடுக்கிட்டேன். அவர் எழுந்தகன்றபோது அர்ஜுனன்

விழுந்துகிடப்பதை இளைய யாதவர் என நின்று நான் கண்டேன்.”

மாதலி “நீங்கள் ஒன்றே” என்றான். “உன் தந்தைக்கு நீ எதையும் உரைக்கவேண்டியதில்லை. அவர் அறியாத எதையும் நீ எப்போதுமே எண்ணியதில்லை.” அர்ஜுனன் அவனை நோக்கி “ஆனால் அவரிடமும் என் மூத்தவரிடமும் சொல்ல என்னிடம் ஒரு சொல்லும் இல்லை” என்றான். “நீ அவைபுகுந்து உணர்ந்ததை சொல்லலாம், மைந்தா” என்றான் மாதலி. “இல்லை, அவையில் நான் அவரை எதிர்த்தேன் என்றாகக்கூடாது” என்ற அர்ஜுனன் “என்னை என் அரண்மனைக்கே கொண்டுசெல்லுங்கள், தந்தையே” என்றான்.

மாதலி “இத்தருணத்தில் அவையை நீ மறுப்பதே மேலும் மீறலென பொருள் கொள்ளப்படும்” என்றான். “இல்லை, நான் அவையை சந்திக்க விழையவில்லை. என்னிடம் ஒரு சொல்லும் எஞ்சியிருக்கவில்லை” என்று அர்ஜுனன் சொன்னான். “என்னிடம் இப்போது சொன்ன இதே சொற்களை அவர் அவையில் சொல்வாரென்றால் நான் நேர்நின்று எதிர்ச்சொல் எடுக்க நேரும். நான் இப்படியே பழிகொண்ட மைந்தனாக புவிமீள்கிறேன். அதுவே என் ஊழென்றால் அவ்வண்ணமே ஆகுக!”

மாதலி “மைந்தர் ஏதேனும் ஒரு தருணத்தில் தந்தையை எதிர்த்து நின்றாகவேண்டும். அக்கணத்தில் இருவரும் ஒருவரை ஒருவர் முழுமையாக கண்டடைகிறார்கள். அது இந்த அவையில் நிகழட்டும். நீ எடுக்கும் சொல்லென்ன என்பதும் அவர் வைக்கும் எதிர்ச்சொல் என்ன என்பதும் அத்தருணத்திலேயே இருவருக்குள் இருந்தும் உருவாகி எழுந்துவரும். அதற்கு முந்தைய கணம் வரை எத்தனை

எண்ணினாலும் அவற்றை அறியமுடியாது. அது நிகழ்ந்தபின் இருவருமே விடுதலை அடைவீர்கள்” என்றான்.

ஒருகணம் அர்ஜுனன் உடல் தத்தளிக்க நின்றான். பின்னர் தேர்த்தட்டில் ஏறி அமர்ந்து “என்னை அழைத்துச்செல்லுங்கள், தந்தையே” என்றான். மாதலி மாறாபுன்னகையுடன் “நன்று” என்றபின் தேர்த்தட்டில் ஏறிக்கொண்டான். புரவிகள் உயிர்ப்படைந்து குளம்புகள் நீந்த அமராவதியின் தெருக்களினூடாக பாய்ந்தோடின. அவன் ஒழுகும் மாளிகைகளை நோக்கி விழிவிரித்து உடல்தளர்ந்து அமர்ந்திருந்தான். மாதலி அதன்மேல் ஒரு சொல்லும் சொல்லவில்லை.

மாளிகை வந்ததும் மாதலி கடிவாளங்களை இழுத்தான். புரவிகள் செருக்கடித்து உடல் நெளித்து நின்றன. அர்ஜுனன் இறங்கி “விடை, தந்தையே” என்றான். “நன்று” என்றான் மாதலி. “நான் உடனே கிளம்புகிறேன். இனி ஒருகணமும் இங்கிருக்க விழையவில்லை. தந்தையிடம் சொல்லிவிடுங்கள்” என்றபின் அவன் மாளிகைக்குள் நடந்தான்.

**[ 23 ]**

அர்ஜுனன் மாளிகையைவிட்டு வெளியே வந்ததும் முகமுற்றத்தில் மயிலிருக்கை கொண்ட பொற்தேர் வந்து நிற்பதைக் கண்டான். முதல்படியிலேயே தயங்கி நின்றான். பீடத்தில் அமர்ந்திருந்த ஊர்வசி எழுந்து அவனை நோக்கி புன்னகை செய்தபடி ஆடையை கையால் பற்றி ஒதுக்கி படிகளில் கால்வைத்து இறங்கினாள். குழலைத் தள்ளி பின்னாலிட்ட அசைவில் மயில் எனச் சொடுக்கி நிமிர்ந்த

தலையுடன் அவனை நோக்கி வந்தாள். விரித்திட்ட குழல்கற்றைகள் தோளில் அலையடித்தன.

பெருமூச்சுவிட்டபடி அவன் அவளை நோக்கி நின்றான். அவனை அணுகி “அவைக்களத்திற்கு செல்கிறீர்களா?” என்றபின் திரும்பி “தேர் எங்கே?” என்றாள். “வரச்சொன்னேன்” என்றான். அவன் கண்களைப் பார்த்ததுமே அவள் புரிந்துகொண்டாள். “கிளம்புகிறீர்களா?” என்றாள். அவன் “ஆம்” என்றான். “ஏன்?” என்றாள். முகம் ஏமாற்றத்தை காட்டியது. “இங்கு எந்தை அருள்கொள்ள வந்தேன். சந்தித்து வணங்கிவிட்டேன்.”

அவள் “இன்று உங்களுக்காக அவைகூடுவதாக அல்லவா அறிந்தேன்?” என்றாள். அவன் சீற்றத்துடன் “அறிந்தாய் அல்லவா? பிறகென்ன?” என்றான். அவள் அவன் கண்களை நோக்கிக்கொண்டிருந்தாள். அவன் நோக்கை விலக்கி “நான் கலந்துகொள்வதாக இல்லை. புவிமீள்கிறேன்” என்றான். அவள் “அது நன்றல்ல. உங்கள் தந்தையை நீங்கள் உதறக்கூடாது” என்றாள். “நீ அதைப்பற்றி பேசவேண்டியதில்லை” என்றான் அர்ஜுனன்.

“நன்று, நான் ஒன்றும் சொல்லவில்லை” என்றாள். கனிந்த புன்னகை விரிய “சற்றுநேரம் நான் தங்களுடன் பேசமுடியும் அல்லவா?” என்றாள். அர்ஜுனன் அவளுடைய அந்தச் சிரிப்பால் உளமடங்கினான். ஒரே கணத்தில் சிறுமியாகவும் அன்னையாகவும் மூதன்னையாகவும் ஆகும் வல்லமைகொண்டவர்கள் பெண்கள் என நினைத்துக்கொண்டான். புன்னகையுடன் “சற்றுநேரம்தான், நெடுநேரம் அல்ல” என்றான்.

அவள் சிறுமியென்றாகி “நான் உங்களிடம் ஒன்றை காட்டும்பொருட்டு வந்தேன்... அதை காட்டவேண்டும் என்று நேற்றுதான் தோன்றியது...” என்று சிரித்தாள். “காட்டட்டுமா?” என்று சொன்னபோது அவள் உடலில் எழுந்த துள்ளலைக்கண்டு மெல்லிய ஏளனத்துடன் “சரி” என்றான். “இங்கே காட்டமுடியாது. இது பிறர் பார்க்குமிடம். நாம் தனியறைக்கு செல்வோம்” என்றாள். அவன் கையைப்பற்றியபடி “வருக!” என்றாள். அவன் நடை தயங்க அவளே அவனை இழுத்துக்கொண்டு சென்றாள்.

அவர்கள் இடைநாழிக்குச் சென்றதும் அவள் “நாம் அங்கே செல்வோம்” என்று அவன் கையைப்பற்றி கூடம் நோக்கி சென்றாள். பின்னர் நின்று “வேண்டாம்... இங்கும் கந்தர்வர்களின் நோக்கு இருக்கும்... வருக!” என இழுத்துக்கொண்டு சிறிய அறைக்குள் சென்றாள். “அமருங்கள், இளைய பாண்டவரே” என அவள் தோளில் கையை வைத்து அழுத்தி பீடத்தில் அமரச்செய்தாள். அவள் மேலாடை நழுவி வாழையிலைக் குருத்தின் நடுஓடைபோன்ற மென்மையுடன் இளமுலைகளின் இடைவெளி தெரிந்தது.

அவள் ஆடைதிருத்தவில்லை. அவனருகே நெருங்கி அமர்ந்தபடி தன் உள்ளங்கையை விரித்தாள். அதில் ஒரு சிறிய கூழாங்கல் இருந்தது. “இது என்ன?” என்றாள். “கூழாங்கல்” என்றான். சிரித்து “இல்லை” என்றாள். அருகணையும்போது எப்போதும் பெண்ணின் தோல்மென்மைதான் ஆணின் சித்தத்தை நிறைக்கிறது. அகலே தெரியும் தோல் பட்டென தளிரென நீர்ப்பரப்பென மென்மையும் ஒளியும் கொண்ட ஒன்று. அருகணையும்போது மென்மயிர்ப்பரவலும் மெய்ப்புகொண்ட புள்ளிகளும் மச்சங்களும் தோல்வரிகளும் கொண்டு

மங்கலடைகிறது. ஆனால் அதுவே உயிர்விழைவை கிளர்த்துகிறது. அதன் மென்மணம், ஈரம், அசைவுகள். அனைத்தையும்விட முதன்மையாக அது உணர்வுகளை சொல்லும் முறை. தோல் தன் வண்ணங்களாலேயே நாணுகிறது, தயங்குகிறது, காமம் கொண்டு நெகிழ்கிறது, சிரிக்கிறது, சினக்கிறது.

அவள் "சொல்லுங்கள்!" என்றாள். அவன் மூச்சு வெம்மைகொள்ள "பாம்பின் முட்டை" என்றான். இல்லை என்று அவள் கையை இழுத்து மூடி மீண்டும் திறந்து "நன்றாக பாருங்கள்!" என்றாள். உதடுகள் அண்மைநோக்கில் நுண்சுருக்கங்கள் கொண்டவை. நனைந்த மலர்போல. நீரிலூறிய செம்பட்டுபோல. வெண்பற்களின் கீழ்நுனிகளின் ஈரம். கண்கள் அணிந்த மை சற்றே கரைந்து கீழிமைகளில் படர்ந்திருந்தது. விழிவெண்குமிழில் செந்நிறக்கோடுகள். எந்த மலரின் இதழ் இது?

"சொல்லுங்கள்!" என அவள் அவனுக்கு மட்டுமே என சொன்னாள். கழுத்தில் நீல நரம்பு ஒன்று கிளைகொண்டு இறங்கியது. தோள் எலும்பின்மேல் நீரலை என ஒரு வளைவு. கழுத்தின் கோடுகள் ஏன் மென்மை மென்மை என்கின்றன? "தெரியவில்லை" என்று அவன் சொன்னான். "நீங்கள் நன்கறிந்ததுதான்" என்றாள் அவள். உடல் உடல் உடல். உடலைப்போல முற்றறியமுடியாத ஆழம்கொண்டது பிறிதில்லை. உடலென்றான வடிவுக்குள் இருந்து அந்த ஆழம் தன்னை வெளிப்படுத்த தவித்துக்கொண்டிருக்கிறது. உடல்போல ஈர்ப்பதும் உணர்த்துவதும் பிறிதொன்றில்லை. ஒவ்வொரு அணுவும் பொருள்கொண்டது உடல். மானுடமொழி

சொல்லிச்சொல்லி கடந்து செல்லாது நின்றிருப்பவை இரண்டே. உடலும் இறையும்.

"என்ன பார்வை? இதைப் பார்த்து சொல்லுங்கள்!" என்றாள். சிணுங்கலாக உடலை உலைத்து "சொல்லுங்கள்!" என்றாள். மரங்களில் மலர் என உடல்களில் கன்னி. கன்னங்களில் மெல்ல இறங்கியிருக்கிறது பூனைமயிர். பின்கழுத்தில் பிசிறியிருக்கிறது. மேல்உதட்டில் நுரையென படர்ந்திருக்கிறது. புருவங்களென நிரைகொண்டிருக்கிறது. ஓவியங்களில் ஒருபோதும் பெண்ணுடலின் தன்னியல்பான கட்டிலாமை வெளிப்பட்டதில்லை. இந்த மயிர்ப்பரவலுக்கு என்ன ஒழுங்கு? இது இளங்கருமுகில். இது முதல்மழை மென்புல். ஓவியங்கள்தான் எத்தனை செயற்கையானவை. கட்டிலாமை. கட்டில்லாமையென்றால் எதன் கட்டு? விழிகளென்றாகி இவ்வுடல்தொட்டு பிறிதொன்றை வனைய நினைக்கும் என் எண்ணத்தின் எல்லை அது. ஏன் அது இத்தளிர்மையிலிருந்து ஓர் ஓவியத்தை அள்ளி எடுக்கிறது?

"இது ஒரு விழி" என்று அவள் சொன்னாள். "ஆம்" என்றான். அவள் கையில் அந்தக் கூழாங்கல் விழியென மின்னத் தொடங்கியது. "எவர் விழி?" என்று அவள் மீண்டும் கேட்டாள். ஓசையின்றி உள்ளங்களே உரையாடிக்கொள்கின்றனவா? தோல்பரப்புகள் விழிகளென்றாகி ஒன்றையொன்று நோக்கி வியந்தமைந்துள்ளனவா? "ம்?" என்றான். "சொல்லுங்கள், எவர் விழி?" விரிந்து சுருங்கின உதடுகள். ஆண் எவனும் பெண் உதடுகளிலிருந்து தப்பியதில்லை. ஏனென்றால் உதடுகள் உடலுக்கு வெளியே தெரியும் உள்ளுடல். பசுங்குருதித் தசை. முத்தமிடும் உதடுகள் இணையும்போது உடல்கள் உருகி ஒன்றாகின்றன. தவித்துத் தேடி கண்டுகொண்டு

தழுவிக்கொள்கின்றன நாக்குகள். உடலுக்குள் கரந்த ஒன்றின் ஆறாத்தவிப்பாகிறது நா. நாவும் உதடும் அதன் விடாய் எரியும் மலர்கள். நாகக்குழவிகளாகின்றன விரல்கள். உடலுக்கு அப்பாற்பட்ட ஒன்றை உடலில் தேடுகின்றன. உடலில் அன்றி அதை எங்கும் தேடவும் இயலாது. உடலென்று தன்னை வெளிப்படுத்தி உடலென்ற அரண்சூடி அமர்ந்திருக்கிறது போலும் அது. அரண்களெல்லாம் வெளிப்பாடுகள் அல்லவா? வெளிப்பாடுகள் அனைத்தும் அரண்களும் அல்லவா?

அவனுள்ளிருந்து அவன் இறங்கி அப்பால் நின்று அக்காட்சியை நோக்கி இருந்தான். இரு உடல்கள் ஒன்றை ஒன்று அணுகிக்கொண்டிருந்தன. இரு நீரோடைகள் என. “இது ஒரு சிறுவனின் விழி” என்றாள். “ம்” என்று அவன் சொன்னான். “அவனுக்கு ஒரு வயது… அவன் சொல் தெளிந்துகொண்டிருந்தது, விழிக்கூர் மின்னத்தொடங்கியிருந்தது.” அவன் “யார்?” என்றான். “அஸ்தினபுரியின் பாண்டுவின் இளையமகன். விழிச்சுடரோன் என அவனை அழைத்தனர். நோக்கிலேயே வெல்லும் விஜயன்.” அவன் அக்கணமே அவ்விழியை அடையாளம் கண்டான். குனிந்து அவ்விழிகளை முன்பு நோக்கியிருக்கிறேன். அப்போது எவராக இருந்தேன்?

“அவன் நீராடச்சென்றான்” என்று அவள் சொன்னாள். “சேடியரில் ஒருத்தி அவனை தன் இடையில் வைத்திருந்தாள். பெண்டிர் அப்படித்தான், . இளமைந்தரை இடைசூடுவது அவர்களுக்கு உவகையளிப்பது. அது காட்டெரியின் கனல்துளி என அவர்களின் ஆழம் அறியும். காடுண்ணும் பெரும்பசியை கையிலெடுக்க முடிவதன் உளக்கிளர்ச்சியே அவர்களை இயக்குகிறது. குழவியென்றும் காமனென்றும் ஆகும்

விழிகளின் முடிவின்மை உள்ளத்தை ஊசிமுனையாக்குகிறது.” அவன் அதை நோக்கிக்கொண்டிருந்தான். “ஆம், நான் அனைத்தையும் காண்கிறேன்” என்றான். அவ்விழிகளையும் அதை நோக்குபவனையும் அவன் நோக்கிக்கொண்டிருந்தான். எத்தருணம் இது? வாழ்தருணங்கள் ஓரிடத்தில் ஒருகாலத்தில்தான் நிகழ்கின்றன என்று எண்ணுவதுதான் மானுடனின் மாயையா?

சதசிருங்கத்தின் ஏரியின் நீர்மணம். அலையொளியை அணிந்த கரைமரங்கள் நடனமிட்டன. அவற்றின் நிழல்கள் சிதறிச்சிதறி கரைந்து உருவழிந்து மீண்டன. ஏவல் பெண்களும் முனிவர்மகளிரும் நீந்திச் சிரித்து களித்தாடிக்கொண்டிருந்தனர். உடலுடன் ஒட்டிய ஆடைகள் அவர்களின் அசைவுகளில் இழுபடும் ஒலி. நீர்க்கொப்புளங்கள் ஆடைகளுக்குள் எழுந்தன. வாழைத்தண்டுத் தோள்களில் வழிந்த நீர். முலையிடை மென்னோடைகளில் குவிந்திறங்கிய நீர். ஆடைக்குள் உந்திச்சுழி. “நான் உங்கள் அருகே வந்தேன்” என்றாள். “நீயா?” என்றான். “ஆம், அவளுடலை அப்போதுதான் சூடினேன்.” மென்மணம். தசைமணம். குருதிமணம். அந்த மணத்தை அறியும் ஆழ்விலங்கு. அதன் தனிமை.

“எப்போது?” என்றான். “உங்கள் நோக்கு வந்து அவளைத் தொட்ட அக்கணம்” என்றாள். “நான் உங்கள் அருகே வந்தேன். குனிந்து படிகளில் பித்தளைப்பேழையில் இருந்த ஈஞ்சைப்பட்டையை எடுத்து உடல்தேய்க்கலானேன். ஆடைநெகிழ அதை முலைகளுடன் அழுத்திப் பற்றிக்கொண்டேன். என் உடல் உங்கள் விழிகளால் தீட்டப்பட்ட ஓவியமாக விரிந்து ஒளிகொண்டது. அவ்வுடலை நானே தொட்டுத் தொட்டு அறிந்தேன். செங்குழம்பு பூசினேன். திரும்பி

நீரில் பாய்வதற்கு முன் ஒருகணம் உங்கள் விழிகளை நோக்கினேன். கூர்மீசையும் மாறா ஏளனப் புன்னகையும் கொண்ட வில்விஜயனை கண்டுவிட்டேன். நீர்ப்படலம் பிளந்து உள்ளே அமிழ்ந்தபோது என் உடல் விம்மிக்கொண்டிருந்தது. முலைக்கண்கள் கதவுக்குமிழ்களென குளிர்ந்து இறுகியிருந்தன."

"ஆம்" என்றான். "அவனை நான் இங்கிருந்தே காண்கிறேன். அவன் உடல் விதிர்ப்புகொள்கிறது. குளிர்கொண்டவன்போல ஒடுங்குகிறான். பின் விதும்பி அழத்தொடங்குகிறான். செவிலியன்னை மாலினி அருகே வந்து என்ன என்று கேட்கிறாள். நீர்ப்பரப்பைச் சுட்டிக்காட்டி அவன் அழுகிறான். மூழ்கிய அப்பெண்ணும் எழுந்து முகம் வழிந்த நீரை கூந்தலுடன் விலக்கி விந்தையாக நோக்குகிறாள். அன்னையால் அள்ளப்பட அவள் கொழுத்த தோள்களில் முகம்புதைத்து அவன் விம்மிக்கொண்டிருக்கிறான்." அவள் "ஆம், நான் அதைப் பார்த்தபடி அருகிருந்த கற்சிலையின் புன்னகையாக இருந்தேன்."

அவன் "நீரில்... நீரில்..." என்றான். செவிலியன்னை "நீரில் என்ன?" என்றாள். அவன் தோளைத் தட்டியபடி "நீரில் ஒன்றுமில்லை" என்றாள். அகில்சந்தனம் அரைத்த கையுடன் எழுந்து வந்த முதுசெவிலி ஒருத்தி "நீராடுமிடத்தில் கந்தர்வப்பெண்களும் அப்சரஸ்களும் வருவதுண்டு... எவரையாவது பார்த்திருப்பார்" என்றாள். "அதெல்லாமில்லை, யாரோ குதித்ததைக் கண்டு அஞ்சியிருப்பார் இளவரசர்" என்றாள் செவிலி. "கந்தர்வப்பெண்ணைக் காண்பது நன்று... விருந்து தொடங்கிவிட்டது" என்றாள் ஒரு பெண். "போடி" என அவளை செவிலி கண்டித்தாள்.

“நான் சூடியிருப்பது அவள் உடல்” என்றாள் ஊர்வசி. “இதுவா?” என்றான். “ஆம்” என்று அவள் சொன்னாள். “உங்கள் முதற்கணம். இதை வந்தடைந்தவர் மட்டுமே நிறைவுறுகிறார்.” அவன் அவளை நோக்கிக்கொண்டிருந்தான். “யாரவள்?” என்றான். “காற்று கங்கையில் பல்லாயிரம்கோடி குமிழிகளாகிறது. மீண்டும் காற்றாகிறது. அது எதுவானாலென்ன?” என்றாள் ஊர்வசி. “இது உங்கள் ஆழத்தில் பொத்தி வைக்கப்பட்டிருந்த உடல். இதுவே உச்சம். இங்கணைவதே முழுமை.” அவன் “ஆம்” என்றான். மூச்சால் விழியால் உடலசைவால் வெம்மையால் “ஆம்” என்றான்.

“நீ ஏன் அன்று என்னை வந்து நோக்கினாய்?” என்றான். அதை ஏன் கேட்கிறேன்? இப்பொருளற்ற வினா வழியாக அத்தருணத்தை நீட்டிக்கொள்கிறேன். வெம்மைமிக்க அடுமனைக்கலத்தில் நீர்விட்டு குளிர்விப்பதுபோல. அவள் “ஒவ்வொருவருக்கும் ஒருத்தி. உங்களுக்கு நான்” என்றாள். “ஏன்?” என்றான். “நான் தொடையிலிருந்து பிறந்தவள்” என்றாள். “மானுட உடலில் ஒவ்வொரு உறுப்புக்கும் பொருளுண்டு. தலை அறிதல். முகம் மகிழ்தல். கைகள் ஆற்றுதல். நெஞ்சு எதிர்கொள்ளல். தோள்கள் சுமத்தல். வயிறு எரிதல். தொடைகள் தாங்குதல். விழைவு தலையென்றாகிறது. ஆற்றல் தோளென்றாகிறது. இளவரசே, ஆணவமே தொடையென்றாகிறது.” அவன் “எவருடைய ஆணவம்?” என்றான். “எவருடையதென்றிலாது எங்கும் நிறைந்திருப்பவை உணர்வுகள். மானுடர்கள் அவற்றை எதிரொளிக்கமட்டுமே செய்கிறார்கள்.”

“ஆணவமா?” என்றான். “ஆம்” என்றாள். “என்ன ஆணவம்?” அவள் புன்னகைத்து “ஆணவத்தில் முதன்மையானது.

அனைத்து அறிவுதேடிகளுக்கும் உரியது” என்றாள். அவன் “சொல்” என்றான். “அறிந்துவிடமுடியும் என்னும் ஆணவம்.” அவன் நீள்மூச்செறிந்து “ஆம்” என்றான். “அறிவின் முன் முற்றிலும் தோற்பவன் அறியக்கூடுவனவற்றை முழுதறிந்துவிடுகிறான்” என்றாள். அவன் மீண்டும் பெருமூச்சுவிட்டான். “நீ அவ்வாணவத்தின் பெண்மையா?” என்றான். “ஏன், தேடலின் பெண்மையென்றாகக் கூடாதா?” என்றாள்.

அவன் கைமேல் அவள் தன் கையை வைத்தாள். முதன்முறையாக அவளைத் தொடுபவன்போல உணர்ந்து அவன் மெய்ப்பு கொண்டான். “நான் உங்களுக்குரியவள். இவ்வுருவும் இவ்வுளமும் முற்றிலும் உங்களுக்காக சமைக்கப்பட்டவை.” அவன் அவள் கைமேல் தன் கையை வைத்தான். அவை நடுங்கிக்கொண்டிருந்தன. “ஏன் அஞ்சுகிறீர்கள்?” என்றாள். “அச்சமில்லை” என்றான். “பின்?” என்றாள். “தெரியவில்லை. ஆனால் இந்த அனல் இன்பமளிக்கிறது.” அவன் தோள்மேல் அவள் மென்மையான கன்னம் படிந்தது. விழிதூக்கி அவன் விழிகளுக்குள் நோக்கி “என்னிடம் மட்டுமே நீங்கள் முழுமையான ஆண்” என்றாள்.

# கிராதம் - 60

**[ 24 ]**

மலைப்பாறைகளை கட்டித்தூக்கும் வல்லமைகொண்ட மென்பட்டுநூல். மெல்லியது வல்லமைகொண்டதாகும்போது வாளெனக் கூர்கொள்கிறது. யாழ்நரம்பென இசை எழுப்புகிறது. அவள் மூச்சு அவன் மார்பின்மேல் படர்ந்தது.

“ஏன்?” என்று அவன் காதுக்குள் கேட்டாள். “என்ன?” என்றான். “அஞ்சுகிறீர்களா?” என்றாள். “ஏன் அச்சம்?” என்றான். “பின்?” என்றாள். அவன் பொருளில்லாமல் “ம்” என்றான். அவன் கைகள் ஓய்ந்துகிடந்தன.

“விழைவின் உச்சியிலும் ஆண்கள் செயலிழப்பதுண்டு” என்றாள் அவள். அவன் “ம்” என்றான். அவள் மெல்ல சிரித்து “அப்படி இல்லையென்று தெரிகிறது” என்றாள். அதற்கும் அவன் “ம்” என்றான். காமத்தில் சொற்கள் ஆற்றுவதென்ன? காமத்தை கூர்தீட்டுகின்றனவா? இல்லை அவை இவ்வெரிதழல் உமிழும் சருகுக்கரிகள் மட்டுமே. பொருளின்றி சுழன்று அலைபாய்கின்றன. பொருளென்பது அவ்வெரிதலின் பதற்றம் மட்டுமே. விழிகூர்ந்து நாபறக்க இரைநோக்கிச் செல்லும் நாகங்கள்போல அவள் கைகள் அவன் தோளை வளைத்தன. அவை விரல்நுனிகளில் வியர்வையீரத்தால் குளிர்ந்திருந்தன. கைகள் வெம்மைகொண்டிருந்தன. அவள் முகத்தை அவன் தோள்களில் புதைத்து “என்ன?” என்றாள்.

சொற்கள் பொருளிழக்கையில் அச்சம் அளிக்கின்றன. அயல்நிலத்தில் அறியா விலங்குபோல. பொருளை அள்ளி அச்சொற்கள் மேல் பூசத் தவிக்கிறது நெஞ்சு. “என் மேல் சினமா?” ஆனால் கொதிக்கும் கலம் மீது மெழுகும் அரக்கும் என உருகி வழிகின்றன பொருள்கள். சொல் நின்று அனல்கிறது. “ஏன் சினம்?” சொல்லையே ஒரு காமஉறுப்பென மெல்ல சுண்டிக்கொண்டிருக்கலாம். சுட்டுவிரல்தொட்டுச் சுழற்றலாம். தொட்டுத்தொடாமலென நீவலாம். காமத்தில் மட்டும் மெல்லத் தொடும்தோறும் எழுகிறது அனல். “பின் ஏன்?” காமம் உயிர்கொண்டபின் உடலுறுப்புகள் ஆடைகளை

வெறுக்கின்றன. சொல் பொருளை தன்மீதிருந்து கிழித்துக்கிழித்து அகற்றுகிறது. “தெரியவில்லை.”

அவள் வாயிலிருந்து மென்மணம் எழுந்தது. வாய்நீரல்ல. அனல்கொண்ட குருதியின் மணம். உருகிச்சொட்டும் தசையின் மணம். உள்ளெங்கும் நொதிக்கிறதுபோலும் அமுது. கலத்தின் மூடி மெல்ல திறந்து ஆவி எழுகிறது. நுரையா இப்பறக்கள்? நொதிப்பவற்றுள் குடியேறும் தெய்வம் என்ன? நொதிக்கும்பொருள் பிறிதொன்றாகிறது. குமிழியிட்டு நுரைத்துப் பொங்கி எல்லைகளை கடக்கிறது. இருக்கும் கலங்களில் அமையும் இயல்பே நீர்மை. பொங்கி கரைகடத்தலே நொதிப்பு. நொதிப்பவை அனைத்திலும் பித்து உறைகிறது. நெஞ்சறைந்து கூவி தலைவிரித்தாடும் வெறியாட்டுவேலனின் விசை. கள்ளிலெழுவது தலைசுழற்றிப் புயலாடும் தென்னையின் களி. களியுறையா உயிர்கள் உண்டா என்ன?

எண்ணங்கள் தொட்டுத்தொடர்ந்தோடும் இவ்வெளியின் தொடக்கத்திலும் இறுதியிலும் நின்றிருக்கும் வைரம் ஒளிரும் விழிகொண்ட தெய்வங்கள் எவை? “என் மேல் அன்பில்லையா?” தெய்வங்களுக்குப் பிரியமான செயல் பொருட்கள் நிலையழிவதுதான்போலும். மலைவிட்டு இறங்கும் பாறையுடன் பாய்கின்றன. அலையெழும் கடல்மேல் களியாடுகின்றன. மதம்கொண்ட களிறு அவற்றுக்கு உகந்தது. சீறும் நாகமே அவற்றுக்கு அண்மையானது. “ஏன்?” அவள் வியர்வையில் உப்புமணம் அகன்றது. ஊன்சாறென துளிக்கும் பிறிதொரு வியர்வை. கழுத்தில் அதன் ஈரக்கோடுகள். தோளில் அதன் மென்னொளி. “அன்பிருந்தால் இப்படியா?”

வேறொரு மணம். கருவறைக்குள் சுருண்டிருக்கையிலேயே அறிந்தது. கருக்குழவிகளின் புன்தலையில் வீசுவது. “என்ன?”

ஊடுபவள் மேலும் அணுகலாகுமா என்ன? முலைக்கண்கள் விரல்களாகி தீண்டின. “அன்பா?” தொட்டு விலகுபவற்றை மேலும் தாவிப்பற்ற எழுவது எது? “அன்பென்றால் ஒன்றாவது.” மீண்டும் வந்து தொடுகையில் ஆயிரமாண்டுகாலம் அறிந்ததாக அது தெரிகிறது. “ஆம்.” தொட்டுத்தொட்டு விலகி விலகி இங்கு ஆடிக்கொண்டே இருக்கும் ஒரு விளையாட்டு.
“ஒன்றாகத்தான்.”

அவள் முலைகள் அவன் மார்பில் பதிந்தன. கழுத்தைச்சுற்றிய கைகள் தலையைப்பற்றி இழுத்து குனியச்செய்தன. நாகச்சுருளில் படம் எழுவதுபோல அவள் மேலுடல் விழுத்தொடைகளில் இருந்து விம்மி எழுந்தது. பிறந்த நாய்க்குட்டிபோல விழிசொக்கியிருந்தாள். உதடுகள் அறியாச்சொல் ஒன்றை உச்சரிப்பதுபோல அசைந்தன. என்ன சொல் அது? சொல்லேதான். ஆனால் மானுடச்சொல்லா? சொல்லென்றால் அதுவே புடவிப்பின்னலில் பிறந்த முதற்சொல். அது குறிப்பதே பிரம்மம் கொண்ட முதற்பொருள். மூச்சில் மூக்குச்சிமிழ்கள் விரிந்தசைந்தன. மேலுதடு பனித்திருந்தது. கன்னக்கொழுமைகளின் சிறியபருக்கள் செவ்வரும்புகள் என துடித்தன.

“நான் எதிர்நோக்கியிருந்தேன்.” எங்கோ நீர்த்துளிகளென சொட்டிக்கொண்டிருந்தன அச்சொற்கள். அவள் உதடுகள் சொன்னது அதுவல்ல. மேலுமேதோ சொல்ல வந்தாள். ஊடேபுகுந்தது குழல்கற்றை ஒன்று. பல்லியென ஓசையிட்டு அதை அள்ளி பின்னாலிட்டாள். கையில் தொட்ட செவிக்குழையை சுழற்றி எடுத்து வீசினாள். நெற்றிக்குங்குமம் ஈரத்தில் கரைந்திருந்தது. புருவம் மழைநனைந்த மென்புல்நிரை. இமைகள் தேனருந்தும் வண்ணத்துப்பூச்சியின்

இறகுகள் என சொக்கிச் சொக்கிச் சொக்கி அசைவழிந்தன. அவள் உடல்தளர்ந்ததுபோல பின்னால் வளைய தன் கைகள் அவள் இடையை பற்றியிருப்பதை அப்போதுதான் உணர்ந்தான். குலைவாழை ஒன்றை கையில் தூக்கும் நிகரின்மையின் தடுமாற்றம். அதை தோளோடு சேர்த்து உடல்வளைவுடன் இணைப்பதொன்றே வழி. "மெல்ல" என்றாள். "என்ன?" மேலும் மேலுமென மூச்சு. நெகிழ்ந்த கச்சு இறங்கி தெரிந்த வெண்மை. நீர்விளிம்பு பின்வாங்கிய பொற்சேற்றுக்கரையின் மென்கதுப்பு. மயிர்க்கால்களனைத்தும் புள்ளிகளாக சிலிர்த்து நின்றிருந்தன.

இது கணம். எது கரையென தடுக்கிறது? ஏதோ பின்விசை. இது நுரைக்கோட்டை. இது பனித்திரை. ஆயினும் அப்பாலிருக்கிறது அக்கணம். மலைப்பாறைகளை கட்டித்தூக்கும் வல்லமைகொண்ட மென்பட்டுநூல். அவள் உடல் மெல்ல அதிர்ந்துகொண்டே இருந்தது. கூட்டிலிருந்து விழுந்த குருவிக்குஞ்சின் நெஞ்சென. மென்மை மென்மை என. அவன் அசைவற்ற விழிகளுடன் அவளை நோக்கிக்கொண்டிருந்தான். ஒவ்வொரு கணமாக நழுவியது. அவள் இமைகள்மேல் ஒரு விதிர்ப்பு. கழுத்தில் ஒரு நரம்பின் மெல்லசைவு. விழிதிறந்து அவனைக் கண்டதுமே கூசியவள்போல மீண்டாள். அக்கணமே அவன் கைகளிலிருந்த அவள் உடலின் எடை மறைந்தது. காதோர மயிரை நீவி சீராக்கியபடி "நெடுநேரமாகிறது. நான் வந்த பணி ஒன்றுள்ளது" என்றாள்.

எதிர்பாராதபடி அந்த நாள்புழக்கச் சொற்கள் அவன் நாணைச் சுண்டி வில்லை உயிர்கொள்ளச் செய்தன. அவள் இடையை சுற்றி வளைத்து தன் உடலுடன் சேர்த்து இறுக்கி குனிந்து அவள் உதடுகளை தன் உதடுகளால் கவ்விக்கொண்டான். அவன் குழல்கற்றைகளை அவள் விரல்நுழைத்து அள்ளிப்பற்றி

இறுக்கினாள். தசை தசையை தொட்டுத்துழாவி உயிர் பிறிதொன்றை அறிந்தது. ஒரு முட்டைக்குள் தழுவிப் பிரிந்து சீறி மீண்டும் தழுவும் நாகக்குழவிகள். விழியிலாதோன் விரல்கள். சிற்பத்தை, கனிகளை, பொற்கலங்களை, அணிச்செதுக்குகளை, அம்பின் கூர்முனையை அறிந்தன. “என்ன சீற்றம்?” காதருகே எள்ளி நகைப்பது பிறிதொரு கன்னி. “மெல்ல, மெல்ல...” கொஞ்சி முத்தமிடுவது அறியாத அன்னை. “அய்யோ” என கூசிச்சிரிப்பது அறியாமைகொண்ட சிறுமி. மெல்ல முனகுவது அக்கணம் பிறந்த பைதல்.

முத்தங்களென்று உண்ணத்தலைப்படுகின்றது உடல். உண்டு உண்டு எஞ்சுவது உடல். வால்விழுங்கிய நாகம் உண்டு முடிப்பதே இல்லை. விரல் தொட்டுத்தொட்டு மென்மைகொண்ட முழவுத் தோற்பரப்பு. அதிர்ந்ததிர்ந்து நின்றிருக்கும் யாழ்த்தந்தி. இது புரி. இது குமிழ். இது குடம். இது உள்ளிருந்து ஊறும் பேரிசையின் கார்வை. அவன் கை அசைவிழந்தது. “ஏன்?” அவன் அவளை விட்டுவிட்டு எழுந்தான். அவள் பின்னால் சரிந்து தன் அவிழ்ந்த குழல்பரப்புமேல் விழுந்தாள். “ஏன்?” என்றாள். கைகளை நீட்டி “ஏன்?” என்றாள். களிமயக்கிலெனக் குழைந்தது குரல். “வேண்டாம்.” அவள் சிணுங்கலாக “ஏன்?” என்றாள். அவன் “நான் செல்கிறேன்” என்றான். “விளையாடாதீர்கள்!” அவன் தன் ஆடையை சீரமைத்தான். அவ்வசைவிலேயே அவனிடமிருந்து அனல் அகன்றுவிட்டதை அவள் உணர்ந்துகொண்டாள். கையூன்றி எழுந்து “ஏன்?” என்றாள். பெருமூச்சுடன் “வேண்டாம்” என்றான்.

அவள் முகம் சிவந்து சீற்றம்கொண்டது. எழுந்து நின்றபோது கனல்கொண்ட பொற்கலங்களெனச் சிவந்திருந்த இரு முலைகளும் கருங்குவளை மொக்குகளுடன் எழுந்தமைந்தன.

“என்ன ஆயிற்று, மூடா?” என்றாள். சினமும் உதடுகளை எரிந்துருகச் செய்யும். “நான் செல்கிறேன்” என்றான். “என்ன ஆயிற்று உனக்கு? அறிவிலியா நீ? இல்லை, உன் தந்தையைப்போல ஆணிலியா?” அவன் அச்சினச்சொற்களால் முழுமையாக நிலையமைந்தான். புன்னகையுடன் “அறியேன், ஆனால் இத்தருணத்தில் இது வேண்டியதில்லை என எண்ணுகிறேன்” என்றான். “சொல், ஏன்? அதை நான் அறிந்தாகவேண்டும்” என்றாள். “ஏனென்றால் இதற்குப்பின் எனக்கு எஞ்சுவதொன்றில்லை.”

அவள் விழிகள் சுருங்கின. அவன் “நீ என் காமத்தின் முழுமை. முழுமை என்பது இறப்பு” என்றான். அவள் புன்னகை செய்தாள். பல் தெரியாமல் இதழ்நீண்டு கன்னங்களில் குழிகள் எழ விழிகளில் கூர் ஒளிவிட. நஞ்சுமிழப் புன்னகைக்கும் கலையறியாத பெண்கள் உண்டா என்ன? “அஞ்சுகிறாயா?” அவன் அவள் விழிகளை நோக்கி “ஆம்” என்றான். “நீ மூடன். உன் உளம் அளிக்கும் மாயங்களை நம்புகிறாய் என்றால் எப்போதும் எதையும் நீ அறியப்போவதில்லை” என்றாள். “ஆம், ஆழுள்ளம் சொன்னதுதான்” என்றான். “என்ன?” அவன் அவளை விழிவிலக்காமல் நோக்கினான். நோக்கமுடியும்வரைதான் வெல்லமுடியுமென அவன் அறிந்திருந்தான். “இது அவருக்கு எதிரானது.”

அவள் அதை உணர்ந்திருந்தாள் என விழிகளில் வந்த வஞ்சம் காட்டியது. எனினும் “எவருக்கு?” என்றாள். “இளைய யாதவருக்கு.” அவள் இதழ்கள் மேலும் கேலியைக் காட்டி ஒருபக்கமாக வளைந்தன. “அப்படியா?” என்றாள். அதிலிருந்த நஞ்சின் கடலை முற்றறிந்தும் அவன் விழிகளை விலக்கவில்லை. “ஆம், காமத்திலாயினும் நான் தேடுவது

ஒன்றையே. அதை இங்கே முற்றறிந்துவிட்டேன் என்றால் அவர்முன் நீட்ட ஓர் ஒழிந்த கலம் எனக்கு எஞ்சியிருக்காது.” அவள் கழுத்திலொரு நரம்பு துடித்தது. “வீணன்... நீ ஒரு அடிமை” என்றாள். “ஆம்” என்றான் அவன். “மேலும் மேலும் அதை உணர்கிறேன். முற்றடிமை. பிறிதொன்றுமில்லை.”

“மூடா, நீ அறியக்கூடுவன அனைத்தையும் இங்கு இதனூடாக அறியலாம். நீ தேடுவன அனைத்தும் உன்னுள் இருந்து ஊறி எழுந்து உருக்கொண்டு உன் நானென நின்றிருக்கின்றது இதோ!” அவன் தன் விழிகள் அதுவரை இருந்த முயற்சியின் சலிப்பை இழந்து இயல்பாக அவளை நோக்குவதை உணர்ந்தான். “ஆம், ஆனால் நான் அதை அவரிடமிருந்தே பெறவிழைகிறேன்.” அவள் கண்கள் மீண்டும் கனிவுகொண்டன. “நான் சொல்வதை கேள். அவரிடம் இருந்து நீ அதை அறியப்போவதில்லை. உனக்கு அது சொல்லப்படும். அதை கேட்கும்பொருட்டு நீ இழப்பவை பெருகி உன்னை நிறைப்பதனால் இறுதிக்கணம் வரை நீ அதை உணரமாட்டாய்.”

அவன் பெருமூச்சுடன் விழிகளை விலக்கிக்கொண்டான். “ஆம், அவ்வாறே நிகழலாம். இறுதிக்கணம் வரை அது எனக்கு திறக்காமலாகலாம்.” அவள் உரக்க “திறக்காது. அப்பொற்கதவத்தை பார்ப்பாய். அதன் தாழைத் தொடுவாய். விலக்கி நுழைய தோள்வல்லமை இல்லாது இப்பக்கமே நின்றிருப்பாய். அது நஞ்சினூடாக அறிதல். இதோ, இது இனித்தினித்து அறிந்து அதுவாதல். இதைத் துறந்து சென்றால் நீ அடைவதேதென்று அறிவாயா? இழப்புகள்... இழப்புகளுக்குப் பின் மானுடன் இயல்புநிலை மீளவே முடியாது. மூடா மூடா மூடா... எப்போது இந்த இருள்வான்போல் வந்துசூழும் அறியாமையை அடைந்தாய்?” என்றாள்.

அவன் தலைதாழ்த்தியபடி “இழப்பின், துயரின் முற்றிருள்தான். அதை நான் முன்னரே கண்டுவிட்டேன்” என்றான். அவள் அருகே வந்து அவன் கைகளை பற்றிக்கொண்டாள். “சொல், வேறென்ன? வேறென்ன உனக்கு?” அவன் தாழ்ந்த குரலில் “அறியாமைதான். நான் அவர் முன் பிறந்துவிழுந்த பைதலின் வெற்றுள்ளத்துடன் நிற்க விழைகிறேன். சீம்பாலின் குருதிச்சுவையுடன் அவர் சொற்கள் எனக்கு அருளப்படவேண்டுமென எண்ணுகிறேன். முற்றறியாமை கொண்டு ஆசிரியனை அணுகாதவன் எதையும் அறிவதில்லை. தன் ஆணவத்தையே அவருடைய சொற்களென எண்ணி மயங்குவான். தன் குருதியை சுவைத்துச் சுவைத்து இறக்கும் புண்பட்ட ஊனுண்ணியென அழிவான்” என்றான்.

“அவன் ஆசிரியன், ஒப்புகிறேன்” என்று அவள் அவன் கைகளை எடுத்து தன் தோள்கள் மேல் வைத்துக்கொண்டாள். “ஆம், அவன் மெய்மையைச் சூடி நின்றிருக்கும் ஞானி. ஞானமென்றேயாகி தன்னைக் காட்டும் யோகி. மெய்மையென்று தன்னுடல் ஒளிர நின்றிருக்கும்பொருட்டு மண்ணில் துளித்துச் சொட்டிய பிரம்மம்.” அவன் விழிகளை நோக்கி “ஆனால் இங்குள்ளது உன் மேல் கனிந்த தந்தை. உன்னை அழைத்துச்செல்லும் காதலி. உனக்காகவே கனிந்த மெய்மை. எண்ணிப்பார், தெய்வங்களை விடவா ஆசிரியன் அணுக்கமானவன்? பிரம்மத்தைவிடவா அவன் முழுமையானவன்?” என்றாள்.

“ஆம்” என்று அர்ஜுனன் சொன்னான். “தெய்வங்களென இவற்றைச் சமைப்பது என் தன்னிலைதான். பிரம்மமோ தன்னை பிற ஒன்றென்றே காட்டும் தன்மைகொண்டது. ஆசிரியன் மட்டுமே பிறிதொன்றென முழுமைகொண்டு நின்று

நம்மை அவனிடம் இழுப்பவன். நானறிந்தது ஒன்றே, அனைத்தையும் உதறி ஆசிரியனை அணுகாதவனுக்கு சொல்திறப்பதில்லை.” அவள் மெல்ல தளர்ந்தாள். மென்தோள்களில் ஒன்று சரிய இடை ஒசிய தொடை ஒன்று மேலெழுந்தது. “என்ன சொல்கிறாய் என்றே தெரியவில்லை. மானுடர் இப்படி சொல்லக்கூடுமென்றே எண்ணமுடியவில்லை.” அவன் “நானும் இதை ஏன் சொல்கிறேன் என்று எண்ணி வியக்கிறேன். ஆனால் நான் பிறிதொன்றுமில்லை. நான் கலம். இதில் அமுது நிறையவேண்டுமென்றால் முற்றொழியவேண்டும். முழுத்தூய்மை கொள்ளவேண்டும். அதன்பொருட்டே இந்த அல்லல்களும் தேடல்களும். அது ஒன்றே தெளிந்து தெளிந்து வருகிறது” என்றான்.

அவன் கைகளின் எடையை அவள் உணர்ந்தாள். வலக்கையை எடுத்து தன் முலைமேல் வைத்தாள். அக்கணமே விசையெழுந்து முன்னால் பாய்ந்து அவனை முலைக்குவைகள் அழுந்த மூச்சு சீற கைவளைத்து பற்றிக்கொண்டாள். அவன் அவளை பிடித்துத்தள்ளினான். மல்லாந்து நிலத்தில் விழுந்தபோது அவள் இடைநெகிழச் சுற்றியிருந்த ஆடையும் விலகியது. இருகைகளையும் விரித்து “அளிகூர்க!” என்றாள். “பொறுத்தருள்க!” என்றபடி அவன் திரும்பினான். “செல்லாதே... விழைவறிவித்தபின் விலக்கப்பட்ட பெண்ணின் பெருந்துயரை நீ அறியமாட்டாய்” என்றாள். அவன் மேலும் ஓர் அடி எடுத்துவைத்தான். அவள் விசும்பும் ஒலி கேட்டது. எடைகொண்ட கால்களுடன் அவன் மேலும் நகர அவள் சீறலென ஒலி எழுப்பி அழுதாள்.

அவ்வழுகையை அவன் கேட்டுக்கொண்டே சென்றான். நெடுந்தூரம். ஐந்து காலடிகளால் ஆன முடிவிலி. அழுகையொலியைக் கடப்பது எளிதல்ல. மலைப்பாறைகளை கட்டித்தூக்கும் வல்லமைகொண்ட மென்பட்டுநூல். மேலுமொரு அடி. அவள் சீற்றத்துடன் எழும் ஒலியை கேட்கமுடிந்தது. நாகமொன்று படமெடுத்ததுபோல மூச்சு. “நில், மூடா நில்!” அவன் திரும்பாமல் நின்றான். அவள் அவனை நோக்கி வந்து அவன் தோளைப்பற்றி திருப்பினாள். நீர்மை அனலென எரிந்த விழிகளை கண்டான். வெறித்த முகத்தில் பற்கள் சினத்தின் ஒளிகொண்டிருந்தன. “நீ என்னை சிறுமைசெய்தாய்… திரிந்த காமம்போல் நஞ்சு பிறிதில்லை என நீ அறிவாய்.”

“தீச்சொல்லிடுகிறாய் என்றாலும் ஆகுக! நான் என் முழுமையை அவருக்கு படைத்துவிட்டேன்” என்றான். அச்சொற்களால் அவன் உள்ளம் உவகை கொண்டெழுந்தது. “அதை உணரும்தோறும் நான் மேலும் மேலும் விடுதலை கொள்கிறேன். அழகியே, நான் இன்னமும் பிறக்கவே இல்லை. கருவறைக்குள் தொப்புள்கொடியால் உணவும் உயிர்ப்பும் கொண்டு உள்ளே உறைகிறேன். என்னை அவர் சுமக்கிறார். அவருடைய குருதி. அவருடைய உயிர். அவரே என் உணர்வுகளும் எண்ணங்களும். நான் எதற்கும் பொறுப்பல்ல இனி.”

“பெண்ணென்றாகுக நீ!” என்று அவள் சொன்னாள். “பெண்ணாகி அறிக நான் இன்றறிந்த இழிவை. பெண்ணென்றாவதென்றால் என்னவென்றறிவாயா, பேடியே? நுரைத்துப் பெருகும் காமம்கொண்டாலும் தன்னிடம்கூட சொல்லமுடியாதவள். அளித்தாலன்றி அடையமுடியாதவள். இசைநிறைந்து ததும்பினாலும் விரல் நாடி காத்திருக்கவேண்டிய யாழின்

தவிப்பென்ன என்று முற்றறியவேண்டும் நீயும். செல், உருகி நின்றிரு! சிறுமைகொண்டு அழல்கொள்! சிறுத்து நிழலென நிலம் படி! எஞ்சும் ஆணவத்தை எரித்து எழு! அன்றறிவாய் நான் இக்கணம் யாரென்று."

அர்ஜுனன் கண்களை மூடி அசையாமல் நின்றான். அவன் உடல் விதிர்த்துக்கொண்டே இருந்தது. ஆடைகளை எடுத்துக்கொண்டு அவள் திரும்பிச்செல்வதன் ஓசை மட்டும் கேட்டது. அவன் விழிதிறந்து நோக்கியபோது பட்டுச்சேலையை தோளிலிட்டபடி அவள் குழல்அள்ளிச் சுழற்றி முடிவதை கண்டான். ஆடையை இடைசுற்றிவிட்டு திரும்பிநோக்காமல் சென்று மறைந்தாள். அவள் கழற்றி வீசிய குழை கீழே ஒரு துளிப் பொன் சொட்டியதென கிடந்தது. ஓர் உதிர்ந்த மலர். வான்பறவை ஒன்றின் இறகு.

அவன் குனிந்து அதை எடுக்கப்போனபோது தன் உடலை அள்ளிப்பற்றித் தொங்கிய முலைகளை உணர்ந்தான். கைவைத்தபோது அவற்றின் கரியமுனைகளை குழந்தையின் விரலென தொட்டான். இடை மெலிந்து பின்குவை பெருத்திருந்தது. கைகள் குழைந்தன. தொட்டபோது முகம் மென்மைகொண்டிருந்தது. நான் என ஒரு சொல். மறுகணம் பொருந்தா ஆடையை அணிந்திருப்பதுபோல அகம் கூசியது. அதைக் கழற்றி வீசிவிடவேண்டும். தசைகிழித்து நரம்புகளை உரித்து எறிந்துவிட்டு ஓடவேண்டும். ஒருமுறை விதிர்த்தான். வாயுமிழவேண்டுமெனத் தோன்றியது. குனிந்து தன் உடலை மீண்டும் நோக்கியதுமே நெஞ்சு அதிர்ந்து பின்னடைந்தது. கண்களை மூடி "இல்லை, இல்லை" என சொல்லிக்கொண்டான்.

பின்னர் மெல்ல தளர்வுடன் பின்னடைந்து மீண்டும் பீடத்தில் அமர்ந்துகொண்டான். அந்த அமர்கையிலேயே தன் உடலை

பிறிதென்று உணர்ந்தான். ஒசிந்து அமைந்திருந்தது இடை. தோள் தழைந்து கைகள் மடியிலிருந்தன. இது என் உடல். இது நான் நிறைந்த கலம். இவ்வுடலல்ல நான். இது நான் சூடிய உருவம். மாற்றுருவம் கொண்டவன் உள்ளே மாறுவதில்லை. ஆனால் என்னை எதிர்கொள்ளும் விழிகளில் நான் பெண். அவர்கள் என்னை நோக்குகையில் எனக்குள் ஒளிந்திருந்து திகைப்பதே நான். நான் என நான் எண்ணுவது அவர்கள் அறிவதை அல்லவென்றால் நான் என சொல்லும் சொல்லுக்கு என்ன பொருள்? இருமுனைகளில் இருபொருள்கொண்ட சொல் எப்படி துடிதுடிக்கும்!

தலை நரம்புகள் முறிந்த யாழ்த்தந்திகளென துடித்தன. ஆடியை நோக்கவேண்டும் போலிருந்தது. விடாயை எண்ணத்தால் வெல்லமுயல்வதுபோல அதை அடக்கி பின் விடாயே வெல்ல எழுந்து சென்று அறைமூலையில் ஒரு குளிர்ச்சுனை என ஒளியலை அணிந்து நின்றிருந்த சுவராடியில் தன்னை நோக்கினான். முதலில் அறியாப் பெண்ணொருத்தி திரைவிலக்கி வாயிலினூடாக அவனை நோக்கி திகைத்தபடி வருவதைப்போலவே தோன்றியது. யாரவள் என்று சித்தம் வினவியது. சரிந்த குழலைச் சீரமைத்த அசைவில்தான் அது தான் என உணர்ந்தான். திடுக்கிட்டு பின்னடைய அவள் அவனை நோக்கி திகைத்து தான் பின்னடைந்தாள். பின்னர் அச்சமும் ஐயமும் கொண்டு அவனை அணுகிவந்தாள். இருவரும் விழியொடு விழி தொட்டு அசைவிழந்து நின்றனர். பின் இருவருமே அஞ்சி விலகி ஓடினர்.

மூச்சிளைப்புடன் அவன் கண்களை மூடி பீடத்தில் அமர்ந்தான். அப்பால் நின்று அங்கே அமர்ந்திருக்கும் அவனை நோக்கினான். அவள் அழகி என தோன்றியது. அவள் எண்ணைக்

கருங்கற்சிலையென ஒளிகொண்டிருந்தாள். நெளிவென்றும் ஒசிவென்றும் வளைவென்றும் குழைவென்றும் குவையென்றும் கரவென்றும் உடல்நிறைந்திருந்தாள். அவன் தன் முலைகளை தொட்டான். இடைவரை கையை ஓட்டினான். மீண்டும் எழுந்து ஆடியை நோக்க விழைந்தான். இம்முறை உடனே எழமுடிந்தது. கால்கள் பின்ன இடை வளைய மெல்ல நடந்தபோது விம்மியமைந்தன முலைமேடுகள்.

ஆடிக்குள் இருந்து அச்சமும் தயக்கமும் ஆர்வமும் கொண்ட ஒரு பெண் எழுந்து வந்து நீள்விழிகளால் அவனை நோக்கினாள். விழிதொட்டபோது அவள் நோக்கின் கூர் கண்டு அவன் உள்ளம் எழுந்தது. மேலும் அருகணைந்து அவளை அன்றி பிறிதிலாத விழிசூடி நின்றான். மலர்களால் அழகுறும்கொடி என விழிகளால் அழகுகொண்டிருந்தாள். அவள் எவள்? அர்ஜுனை? விஜயை? அவன் ஃபால்குனையை எண்ணினான். அது மாற்றுரு. இது தன்னுரு. உருவே அகமென்றால் இதோ என் உள்ளூர பெண் ஊறி எழுந்துகொண்டிருக்கிறாள். அச்சில் உருக்கி ஊற்றப்படுகிறேன். உறைந்து உருக்கொண்டெழுவேன். அழகி. இந்த முகம், இந்தக் கன்னங்கள், இவ்வுதடுகள், இந்தக் கழுத்து. அழகி. இது நான். அழகுபொலிந்தெழுந்தவள் நான். அவள் முலைகள் விம்மித்தணிந்தன. விழியோரம் ஈரம் கொண்டது.

புன்னகையுடன் நடந்து மீண்டும் வந்து தன் பீடத்தில் அமர்ந்தாள். அழகி என்னும் சொல்லாக இருந்தது உள்ளம். அப்போது பிறர் தன்னை நோக்குவதை விழைந்தாள். விண்வில்லென ஏறிடும் விழிகள் நடுவே ஒளிகொண்டு எழவேண்டும். மீன்கோடிகளை சூடிய கங்கையென அவ்விழிகளை அணிந்து நெளிகொள்ளவேண்டும். நெஞ்சு படபடத்தது. சுவர்களிலெல்லாம் விழிகள் திறந்தன. நிழல்களெல்லாம் அவளை நோக்கி நின்றன. நோக்குக நோக்குக நோக்குக! என்னை நோக்குக உலகே! என்னை நோக்குக காலமே!

அவள் அகக்குரல் கேட்டு வந்ததுபோல வாயில் திறந்து உள்ளே வந்து பணிந்த கந்தர்வன் விழிகளில் எதையும் காட்டவில்லை. அர்ஜுனன் இனிய பெண்குரலில் “நான் தேவர்க்கரசரின் அவைக்கு செல்லவேண்டும்” என்றான். கந்தர்வன் “தேர் காத்திருக்கிறது” என்றான். “எப்படி தெரியும்?” என்றான் அர்ஜுனன். “தேவபாகர் வந்தார். அவர் வந்து காத்து நிற்பதாக உங்களிடம் சொல்லும்படி சொன்னார்.” சிலகணங்கள் அவன் கந்தர்வனை நோக்கியபடி விழிநிலைத்தான். பின் இமைசலித்து தன்னை எண்ணினான். “ஆம்” என்றபடி எழுந்துகொண்டான்.

# கிராதம் - 61

**[ 25 ]**

அர்ஜுனன் எழுந்து நின்று கிளம்பும்பொருட்டு இயல்பாக ஆடைதிருத்தியபோது திடுக்கிடலை உணர்ந்தான். ஆணின் ஆடையில் தானிருப்பதை உணர்ந்ததும் பதற்றத்துடன் ஓடிச்சென்று ஆடியில் நோக்கினான். பொருந்தா ஆடையுடன்

அங்கு தெரிந்த உருவத்தை அவனால் அரைக்கணம்கூட நோக்கமுடியவில்லை. “யாரங்கே?” என்று கூவினான். அப்பால் சிற்றறைக்கதவு திறந்து உள்ளே வந்த கந்தர்வ ஏவலர் பணிந்தனர். “எனக்குரிய ஆடைகளை எடுங்கள்… உடனே” என்றான். அவர்கள் தலைதாழ்த்தினர்.

அவனை ஏழு கந்தர்வமகளிர் அழைத்துச்சென்று பெண்டிருக்கான அணியறையில் தீட்டப்பட்ட வெள்ளியாலான பேராடிமுன் அமரச்செய்தனர். மலர்மரத்தில் சிட்டுக்குருவிகள் மொய்ப்பதுபோல அவர்களின் விரல்கள் அவன் மேல் தொட்டும் விலகியும் குவிந்தும் விரிந்தும் அணிசெய்யலாயின. அவன் ஆடியில் தன் உருவை நோக்கிக்கொண்டிருந்தான். ஆணின் ஆடை அகன்றதும் பெருஞ்சுமை ஒன்று அகன்றதென அவன் உடல் எளிதாகியது. அவர்கள் எடுத்துக்காட்டிய ஆடைகள் எதுவும் அவனுக்கு உகக்கவில்லை. எங்கோ தன்னை நோக்கியிருக்கும் விழிகளுக்காகவே அவன் தன் உருவை புனைய விழைந்தான்.

ஆடைகளை மாறிமாறி நோக்கி தலையை ஆட்டிக்கொண்டிருந்தவனை நோக்கி குனிந்த கந்தர்வப்பெண் “அரசி, ஓர் ஆடையை நீங்கள் ஏற்றே ஆகவேண்டும். ஆடைகள் எவையும் உள்ளம் கொண்ட கனவை அணுகாதென்றறிக! காலம் சென்றுகொண்டிருக்கிறது” என்றாள். இளநீலப்பட்டாடையை கையில் எடுத்துக்கொண்டு “இது அவ்விழிகளுக்கு உகக்குமா?” என அவன் எண்ணினான். எவ்விழிகள்? அவை நூறு ஆயிரம் பல்லாயிரமெனப் பெருகிய ஓரிணைவிழிகள் என அப்போது உணர்ந்தான். யார் அவன்? அவன் பெண்ணுள்ளத்தின் ஆழ்கனவிலிருந்து தன் உருத்திரட்டி

எழுபவன். இன்னமும் அவன் முழுதுருவாகவில்லை. விழியென்றே ஆகி எங்கோ நின்றிருப்பவன்.

நீள்மூச்சுடன் “இதுவே போதும்” என்றாள். ஆடையும் அணியும் புனைந்து முகச்சுண்ணமும் விழிக்கரியும் இதழ்ச்செம்மையும் தீட்டி கைகளிலும் கால்களிலும் செம்பஞ்சுக்குழம்பு பூசி மலர்ச்சாறும் கோரோசனையும் கஸ்தூரியும் என நறுமணம் கொண்டு எழுந்தபோது விழிகள் முழுமையாக மாறிவிட்டிருந்தன. தன் உருவை நோக்கியபடி நின்றபோது இளமூச்சில் முலைக்குவைகள் எழுந்தமைந்தன. கைகள் கழுத்தைத் தொட்டு விலகின. “கிளம்புக, அரசி!” என்றாள் கந்தர்வப்பெண். “ஆம்” என்றபடி அவள் ஆடிமுன்னால் அப்படியே நின்றாள். நூறு விழிகொண்டு தன்னை நோக்கிக்கொண்டிருந்தாள். நோக்கி நோக்கி தன்னை தீட்டினாள். அகன்றுநின்று ஆணென்றாகி மீண்டும் நோக்கினாள்.

“அரசி” என்றாள் கந்தர்வப்பெண். அவள் “செல்வோம்” என ஆடையை அள்ளிக்கொண்டு மெல்ல நடந்தாள். அணிகுலுங்கும் ஓசையும் ஆடைநலுங்கும் ஒலியும் மெல்லிய மந்தணச்சொற்களென அவளுடன் வந்தன. அவை அவள் ஒளிந்துகொள்ளும் மலர்க்காடு. அவள் அங்கிருந்தபடி நோக்கிக்கொண்டிருந்தாள். எவ்விழிகள் என் இறையே? எவர் முகத்தில் பூத்தவை? அவளைக் கண்ட அத்தனை ஆண்விழிகளும் மின் கொண்டு பின் அணைந்தன. அவள் படியிறங்கி கூடம் கடந்து வெளிமுற்றத்தை அடைந்தாள்.

மாதலி அவளைக் கண்டதும் எவ்வியப்பையும் காட்டவில்லை. “வருக!” என்றபின் தேர்ப்பீடம் மீது ஏறிக்கொண்டான். அவள் தேரிலேறி இந்திரபீடத்தில் அமர்ந்து தன் வலக்காலை இடக்கால் மேல் வைத்து ஆடையைத் திருத்தி குழல் சீர்படுத்தி

“செல்க!” என்றாள். தேர் குலுங்கிக் கிளம்பியது. “என்னிடம் ஊர்வசி சொன்னாள்” என்றான் மாதலி அவளை நோக்காமல். அவள் ஒன்றும் சொல்லவில்லை. “சினந்திருந்தாள். அவள் இட்ட தீச்சொல்லுக்காக வருந்தினாள்.” அவள் “அது நன்றே” என்றாள். மாதலி “எதுவும் நன்றே” என்றான். அவன் புன்னகைப்பது முதுகிலேயே தெரிந்தது.

“நான் இவ்வுருக்கொள்ளாமலிருந்தால் எந்தையை அவைநின்று எதிர்கொள்ளத் துணிந்திருக்க மாட்டேன்” என்றாள் விஜயை. “ஏன்?” என்று மாதலி கேட்டான். “அறியேன். இவ்வுடலில் இருக்கையில் இதுவரை அறியாத துணிவொன்றை அடைகிறேன்” என்றாள் விஜயை. “தந்தையை மீறும் துணிவா?” என்றான் மாதலி. “ஆம், உண்மை. நான் பிறந்த இடத்திற்குரியவள் அல்ல என்னும் உணர்வு. முற்றாக என்னை வெட்டிக்கொண்டு சென்றுவிடவேண்டுமென்னும் விழைவு” என்றாள். “நான் இங்குள்ள எவருக்கும் இதுவரையிலான எவற்றுக்கும் உரியவளல்ல என இயல்பாகவே என் அகம் உணர்கிறது, தந்தையே.”

மாதலி தோள்குலுங்க மெல்ல சிரித்து “அதை உணராத பெண் எவள்?” என்றான். “ஆம், நான் எவருக்குரியவளென அறியேன். ஆனால் எங்கோ எவரோ என்னை முற்றுரிமைகொள்ளவிருக்கிறார் என்பதை மட்டும் நன்குணர்ந்திருக்கிறேன்” என்றாள் விஜயை. மாதலி “நன்று மகளே, அவ்வண்ணமே ஆகுக! தன்னை முற்றளித்து முழுவுரிமைகொண்டு வெல்பவள் பெண் என்பது மூத்தோர் சொல்மரபு” என்றான். தேர் நகரின் தெருக்களினூடாகச் சென்றது. “எந்தை என் உருமாற்றத்தை அறிந்திருப்பாரா?” என்றாள் விஜயை. “ஆம், ஊர்வசி அவரிடம் சொல்லாமலிருக்க

முடியாது.” அவள் “நன்று, நான் அறிந்த விழிகள் முன்பு சென்று நிற்கவேண்டுமென்பது சற்றே எளிது” என்றாள்.

“அவையில் இருப்பவர் அனைவரும் அறிந்திருக்க வாய்ப்பில்லை” என்றான் மாதலி. “எவர் அறிந்தாலென்ன? நான் எந்தையையும் என் மூத்தவரையும் மட்டுமே எண்ணுகிறேன்” என்றாள் அவள். “விந்தைதான். இவ்வுருவில் என்னை எவர் எப்படி எதிர்கொள்ளப்போகிறார்கள் என உய்த்துணரவே இயலவில்லை.” மெல்ல சிரித்தபடி “எந்தை முன்னரே அறிந்து எதிர்நோக்கியிருந்தாலும் என் உருவம் கண்டதும் அதிர்ச்சியே கொள்வார் என நினைக்கிறேன். மூத்தவரும் என்னை ஏற்றுக்கொள்ள மறுப்பார்” என்றாள். மாதலி “உள்ளம் எவ்வண்ணம் செல்லுமென எவர் அறிவார்?” என்றான்.

“அன்னை அருவருப்பு கொள்வார். அருகணையவே மறுப்பார்” என்றாள் விஜயை. மாதலி ஒன்றும் சொல்லவில்லை. “ஆனால் எவர்கொள்ளும் உணர்வும் எனக்கு ஒரு பொருட்டல்ல என்று தோன்றுகிறது. நான் எனக்குரிய உடலில் இருக்கிறேன் என்று உணர்கிறேன்.” மாதலி அறியாமல் திரும்பி நோக்கினான். “உண்மை, தந்தையே. நான் இப்போதுதான் முற்றமைகிறேன். அவ்வுடலில் நான் அடைந்த தனிமை இதிலில்லை. அது கன்றுதேடும் தாய்முலைக்கண் போல எக்கணமும் உறுத்து தவித்துக்கொண்டிருந்தது. இது தன்னுள் நிறைந்துள்ளது.”

“அவ்வண்ணமென்றால் நன்று” என்றான் மாதலி. “ஆனால் இது தன்னை பிறிதொருவர் முன் படைக்க விழைகிறது. கோடிவிதைகள் புதைந்துகிடக்கும் நிலம்போல பெருக விழைகிறது” என்றாள் விஜயை. அவள் மேலும் சொல்ல வாயெடுத்ததுமே நாணம் கொண்டு தன்னை அடக்கிக்கொண்டாள். அவள் சொற்களுக்காகக் காத்த

மாதலியின் தோளிறுக்கம் சிலகணங்களுக்குப்பின் மெல்ல தளர்ந்தது. “ஆம், இதுவும் முழுமைகொண்டது அல்ல. ஆனால் இதன் தனிமையும் தவிப்பும்கூட தன்னளவிலேயே நிறைவானவை. பிறிதொன்றில்லாமலேயே தன்னிலிருந்து அனைத்தையும் உருவாக்கி நிறைய இதனால் முடியும்.”

அச்சொற்கள் ஓடிக்கொண்டிருக்கையிலேயே அவள் முழுதறிந்துவிட்டாள். மெய்ப்புகொண்டு இருகைகளாலும் முலைகளை பற்றிக்கொண்டாள். “இறையே, முழுமுதலே!” என மெல்ல கூவினாள். மூச்சிரைக்க அவள் உடல் தவித்தது. எழுந்து நிற்கப்போகிறவள்போல ஓர் அசைவு அவளில் எழுந்து அடங்கியது. மாதலி என்ன என்று கேட்க எழுந்த வினாவை அடக்குவது தெரிந்தது. அவன் உள்ளத் தயக்கத்தை கடிவாளம் வழியாக அறிந்த புரவிகள் மென்னடையிட்டன. அந்த சீர்தாளத்தில் அமைந்தது அத்தருணம்.

“தந்தையே, அது அவர்தான்” என்றாள் விஜயை. “எப்படி இதை எண்ணாமலிருந்தேன்? பிறிதெவர்?” அதை உணர்ந்ததும் மாதலி “ஆம்” என்றான். “நான் அவரை எண்ணி என்னை அமைத்துக்கொள்ள வேண்டியவள். அவரால் முழுமையாக நிறைக்கப்பட வேண்டியவள்” என்றாள். மாதலி பெருமூச்சுவிட்டான். “என் நல்லூழ் இது. அவரை முழுதுணரவே இப்பெண்ணுடலில் அமைந்தேன் போலும். உருகி விழிநீர் சிந்தி அவரை அறிவேன். முழுதும் படைத்து முற்றழிந்து அவரென்றாவேன்.” அவள் குரல் நனைந்து ஊறிய பட்டுபோல் மென்மைகொண்டிருந்தது. எவரிடமென்றில்லாமல் அவள் அகம் வீரிட்டது. “காணும் கேட்கும் சுவைக்கும் முகரும் உணரும் எண்ணும் அனைத்தும் அவரென்றே ஆகுக! தெய்வங்களே, இனி அவர் முகம்சூடியே என்னை அணுகுக!”

பிச்சியைப்போல அவள் இரு கைகளையும் கோத்து இறுக்கி அதில் முகம் புதைத்து அதிர்ந்தாள். பீலியும் குழலும் விழியொளியும் நகையொளியும் அன்றி இவ்விழிகளுக்கு பிறிதேதும் உவப்பல்ல. கரியவன் தோளும் நெஞ்சும் அன்றி நான் அமையுமிடம் ஏதுமில்லை. உணர்வெழுச்சியால் அவள் தோள்களை குறுக்கினாள். மெல்லிய விம்மலொன்று அவளிலிருந்து எழ மாதலி திரும்பிப்பார்த்தான். அவள் உடல்குலுங்க அழுதுகொண்டிருப்பதை நோக்கியபின் புரவிகளின் முதுகில் சவுக்கால் மெல்ல தொட்டான். அவை விரைவுகொண்டன.

**[ 26 ]**

இந்திர அவைக்குள் அவள் நுழைந்தபோது அனைத்து விழிகளும் திரும்பி அவளை நோக்கி உடனே திடுக்கிட்டு விலகிக்கொண்டன. அந்நோக்கே ஓர் சேர்ந்தொலியென எழுந்தமைந்தது. பின் ஆழ்ந்த அமைதியில் அவள் தன் ஆடையும் அணிகளும் ஒலிக்க மெல்ல நடந்தாள். அவளை மீண்டும் நோக்கியபின் இந்திரன் பெருமூச்சுவிட்டான். பாலி இருகைகளையும் கோத்து இறுக்க பெரும்புயங்கள் எழுந்தமைந்தன. உடலுக்குள் இருந்து இன்னொரு உடல் எழுந்து வெளியேறத் துடிப்பதென ஓர் அசைவு நிகழ்ந்தது. சனகரும் சனந்தனரும் சனாதனரும் சனத்குமாரரும் மட்டும் விழிகளில் நிறைந்த மைந்தர்களுக்குரிய ஆர்வத்தின் இளநகையுடன் அவளை நோக்கிக்கொண்டிருந்தனர்.

இந்திராணி இரு கனிவூறிய விழிகளுடன் அருகணைந்து அவள் கைகளை வளையல்களுடன் சேர்த்து பற்றிக்கொண்டாள். “வாடி” என்றாள். அவள் “அன்னையே, நிகழ்ந்ததை அறிந்திருப்பீர்கள்” என்றாள். “ஆம்” என்றாள் அவள்.

“அதனாலென்ன? நீ என் மகள்” என்று சொல்லி “வருக, உனக்கான பீடத்திலமர்க!” என அழைத்துச்சென்று அமர்த்தினாள். “நான் எவ்வகையிலும் துயருறவில்லை, அன்னையே. மாறாக உவகைதான் கொள்கிறேன்” என்றாள். “ஆம், அதையும் என்னால் புரிந்துகொள்ள முடிகிறது” என்றாள் இந்திராணி.

அவள் ஊர்வசியின் கண்களை சந்திக்க அவள் பதறி விலக்கிக்கொண்டாள். ரம்பையும் திலோத்தமையும் கிருதாசியும் பூர்வசித்தியும் ஸ்வயம்பிரபையும் அவளை நோக்கிக்கொண்டிருந்தனர். அவள் மிஸ்ரகேசியின் விழிகளை சந்தித்ததும் புன்னகைத்தாள். அவள் திகைத்து விழிவிலக்கி மீண்டும் நோக்கினாள். மிகமெல்லிய புன்னகை இதழ்களில் எழ தண்டகௌரியின் கைகளை தொட்டாள். அவளருகே அமர்ந்திருந்த வரூதினியும் கோபாலியும் “என்ன?” என மெல்ல கேட்க அவள் இதழ்மட்டும் அசைய ஏதோ சொன்னாள். அவர்கள் அவள் விழிகளை சந்திக்க அனைத்து முகங்களும் புன்னகையின் ஒளி சூடின.

பின்னால் நின்ற ஸகஜன்யையும் கும்பயோனியும் பிரஜாகரையும் அப்புன்னகையை அவர்களின் உடல்களிலேயே அசைவெனக் கண்டனர். சித்ரலேகை “என்ன?” என்றாள். எவரும் சொல்லாமலேயே அனைவரும் அவள் விழிகளை அறிந்தனர். ரம்பை புன்னகையுடன் அவளுக்கு மட்டுமே தெரியும்படி மெல்ல தலையசைத்தாள். திலோத்தமை அதை நோக்கியபின் குறும்புச்சிரிப்புடன் அவள் ஆரம் நன்றாக உள்ளது என கைவிரல் செய்கையால் காட்டினாள். அவள் அதைத் தொட்டு நோக்கியபின் சரி என தலையசைத்தாள். விழியுணரா சரடொன்று சிலந்திவலையென விரிந்து பின்னி அவர்களை

மட்டும் ஒரு தனியுலகில் ஒன்றாக்கியது. தேவமகளிர் ஒவ்வொருவராக அதில் வந்து இணைந்துகொண்டிருந்தனர்.

அவை நிகழ்வுகளை அவள் அறியவில்லை. முறைமைச்சொற்களும் வாழ்த்துகளும் அறிவிப்புகளும் முற்றிலும் பொருளிழந்து பிறிதொரு உலகிலென நிகழ்ந்துகொண்டிருந்தன. அங்கிருந்த அத்தனை பெண்களின் ஆடைகளையும் அவள் அறிந்துவிட்டிருந்தாள். அணிகளின் அத்தனை செதுக்குகளையும் நோக்கிவிட்டிருந்தாள். விழிகளும் இதழ்களும் விரல்நுனிகளும் உரைத்த ஒலியிலா மொழியில் அவர்கள் கருத்துக்களை சொன்னார்கள். பாராட்டுக்களை ஏற்றார்கள். கச்சபர் இந்திரனை வாழ்த்தி முழங்கும் சொற்களை எடுத்தபோது மேனகை மிகநுட்பமாக உதடுகளைச் சுழித்து பழிப்பு காட்டினாள். அத்தனைப் பெண்விழிகளும் சிரிப்புகளால் ஒளிவிட்டன.

நடுவே புகுந்த இந்திராணியின் விழி அவர்களை அதட்டியபோது அனைவரும் அதை அடக்கிக்கொண்டனர். லோமசர் தன் அழியா காமத்துறப்பு நோன்பைச் சொல்லி அவையை வாழ்த்தியபோது அப்படியா என பொய்வியப்பு காட்டினாள் விழிகளால் வியந்து கும்பயோனி. உண்மையாடி என்றாள் மேனகை. ஆம் எனக்குத்தெரியும் என்றாள் கிருதாசி. சீ என்றாள் மேனகை. என்ன அதில் என்றாள் பிரஜாகரை. போடி என மேனகை அதட்டினாள். சரிதான் என்று திலோத்தமை அவர்களை அடக்கினாள். மானுடர் நடுவே தேவர்களென அப்பாலெழுந்த வாய்ச்சொற்கள் நடுவே அவர்களின் நுண்மொழி உலவியது.

இந்திரனின் குரலை அவள் கேட்டுக்கொண்டிருந்தாள். பலமுறை ஏதோ சொல்லப்பட்டது. பின்புதான் அத்தனை

விழிகளும் தன்னை நோக்குவதை அவள் உணர்ந்தாள். இந்திராணி அவள் தொடையைத் தொட்டு "உன்னிடம்தான் சொல்லப்படுகிறது, இளையவளே" என்றாள். அவள் திடுக்கிட்டு விழித்து "என்ன?" என்றாள். "உன்னிடம் ஊர்வசியை அனுப்பியவன் நான். உன்மேல் விழுந்த தீச்சொல்லும் அவளுடையதே. மைந்தா, நீ அதை விட்டு விலகி எழமுடியும். அவளிடம் சொல்மீட்க ஆணையிடுகிறேன்" என்றான் இந்திரன். "தந்தையே, தாங்கள் என்னை மைந்தா என்றழைக்கும் சொல் என்னை கூசவைக்கிறது" என்றாள். இந்திரன் நாவெடுக்கும் முன் "நான் இவ்வுடலிலேயே இனிதமைந்துள்ளேன். பிறிதொன்றை வேண்டேன்" என்றாள்.

இந்திரன் சினம்கொண்டு கைநீட்டி ஏதோ சொல்லவந்தான். சுளித்த முகத்தில் பற்கள் இறுகியிருந்தன. பின் தன்னை எளிதாக்கிக்கொண்டு "நான் உன்னை புரிந்துகொள்கிறேன், மகளே. உள்ளம் என்பது நீர். கலத்தின் உருவே அதற்கும். ஆனால் இவ்வுடல் உன்னுடையதல்ல" என்றான். "இல்லை தந்தையே, பாறையென இறுகியிருந்தது நீர்பட்டு மென்சேறாகியிருக்கிறது, அவ்வளவே" என்றாள். "வீண் சொல் பேசாதே. இது அவளிட்ட தீச்சொல். அவள் இதை திருப்பி எடுக்கமுடியும்" என்றான் இந்திரன். "நான் அதை விழையவில்லை. சொல்மீட்சிக்கு நான் கோராமல் அவள் அருளமுடியாது" என்றாள் அவள். "என்னுள் இருந்த ஒரு முள்ளை இழந்து அமைந்திருக்கும் இதுவே என் பெருநிலை."

"அதை பின்னர் பார்ப்போம்" என்றார் வசிட்டர். "இவ்வவை கூடியிருப்பது தேவர்க்கரசர் தன் மைந்தரை அவைநிறுத்தி வாழ்த்தும்பொருட்டு. அது நிகழட்டும்." இந்திரன் சொல்லெடுப்பதற்குள் "மைந்தனென்றும் மகளென்றும் ஆனது

ஒன்றே. அதன் தோற்றங்களை நாம் கருத்தில் கொள்ளவேண்டியதில்லை" என்றார். இந்திரன் பெருமூச்சுடன் கைகளைக் கோத்து அதில் முகத்தை பதித்துக்கொண்டான். பாலி உரக்க "இளையவனே, நான் உன்னை அவ்வண்ணமே அழைப்பேன். தந்தை உன்னிடம் விழைவதென்ன என்று நீ நன்கறிவாய். அதை அவர் இந்த அவைமேடையில் அரசகோல்சூடி நின்று மீண்டும் கோருகிறார்" என்றான். அவன் அவள் விழிகளை அப்போதுதான் நோக்கினான். "இல்லை, ஆணையிடுகிறார்" என்றான்.

அவள் அவனை நேர்விழிகளால் நோக்கி "பொறுத்தருள்க, மூத்தவரே! தந்தையும் அன்னையும் இவ்வவையும் என்னை முனியலாகாது. நான் இங்குள்ளவள் அல்ல. உங்கள் எவருக்கும் உரிமைப்பட்டவளும் அல்ல. எச்சொல்லும் எவ்வுணர்வும் எந்நெறியும் என்னை கட்டுப்படுத்தாது" என்றாள். பாலி திகைத்து அவளை நோக்கி நின்றான். இதழ்கள் சிலமுறை சொற்களுக்காக அசைந்தன. பின்னர் திரும்பி இந்திரனை நோக்கிவிட்டு "நீ உன் தந்தையின் அவையிலமர்ந்துள்ளாய்" என்றான். "ஆம், அவர் என் தந்தை. அதை நான் மறுக்கவில்லை. ஆனால் நான் அவருக்குரியவளல்ல."

"பின் எவருக்குரியவள்?" என்று பாலி உரக்க கேட்டான். பெரிய கைகளை விரித்தபடி அவளை நோக்கி வந்தான். "அவருக்கு" என அவள் சொன்னாள். அக்கணமே அலையென அவளை அறைந்து மூழ்கடித்த நாணத்தால் தலைகவிழ்ந்து உடல் விதிர்த்து தோள்குறுக "அவர்தான்" என்றாள். அவள் இதழ்கள் நடுங்கின. இமைகள் அதிர்ந்தன. "யார்?" என்று அவன் கூவினான். "நீங்களனைவரும் அறிவீர்கள்" என்றாள் அவள்.

அவன் என்ன இது என்பதுபோல கைவிரித்தான். இந்திரன் தன் தலையை கையால் அறைந்துகொண்டான்.

“நீங்கள் ஆண்கள். உங்கள் உலகில் நின்றபடி இதை ஒருபோதும் புரிந்துகொள்ள முடியாது. நான் என்னை முற்றளித்துவிட்டவள்” என்றாள். “அப்படி முற்றளிக்க எவராலும் முடியாது. அறிவிலிபோல் சொல்லெடுக்காதே. உளம்கொண்டு உடல்கொண்ட எவரும் தனிமையின் ஒரு துளியேனும் உள்ளே எஞ்சவைத்தவர்களே” என்றான் இந்திரன். “இல்லை, காதல்கொண்ட பெண்ணின் இயல்பு அது. காதலின் பெருநிலையை வாழ்நாளெல்லாம் நீட்டித்துக்கொண்டவளுக்கு அது இயல்வதே” என்று அவள் சொன்னாள்.

இந்திரன் சலிப்புடன் தலையசைத்து “வீண் சொல்” என்றான். “தந்தையே, அவ்வண்ணம் கணம் முறியாது காதலில் வாழ்ந்தவள் ஒருத்தியேனும் இருந்தாள். அவள் பெயர் ராதை” என்றாள். அவை முழுக்க வியப்பின் கார்வை எழுந்தது. “நான் இக்கணம் எனக்கு அணுக்கமானவளாக உணர்வது அவளை மட்டுமே. என்னை அறியக்கூடுபவளும் அவள் ஒருத்தியே” என்றாள். பின்னர் எழுந்து “நன்று, இந்த அவையில் அதைச் சொல்லும்பொருட்டே இங்கு வந்தேன். முழுதுருக்கொண்டு பிரம்மம் எழுந்து வந்தாலும் என் உள்ளத்தை மாற்றமுடியாதென்று இனி நான் சொல்லவேண்டியதில்லை” என்றாள்.

அவை நோக்கி கைகூப்பி “என்னை வாழ்த்துக, முனிவர்களே! என்னுடன் இருங்கள், தேவர்களே. இனி நான் ராதை” என்றபின் அவைமேடை விட்டிறங்கினாள். அவள் படிகளில் கால்வைத்து கீழே சென்று அவைமுகப்பினூடாக நடக்கையில் இந்திரன் கை நீட்டி “விஜயை” என்றான். அவள் தயங்கிநின்றாள்.

“தந்தையைத் தேடிவந்து நீ வெறுங்கையுடன் மீளவேண்டியதில்லை. நீ விழைந்ததைக் கோருக!” என்றான். அவள் திரும்பி அவனை நோக்கி “தந்தையே, நான் படைக்கலம்கொள்ளவே வந்தேன். அப்படைக்கலம் அவருக்கு துணைநிற்பது. ஒருவேளை களத்தில் உங்களுக்கு எதிர்வருவது” என்றாள்.

“ஆம்” என்றபோது இந்திரனின் தோள்களில் தசைகள் மெல்ல தளர்ந்தன. “அவ்வாறென்றாலும் ஆகுக! நீ உன் படைக்கலத்தை கோரலாம்.” அவள் “உங்களாலும் வெல்லப்படமுடியாத படைக்கலம்” என்றாள். இந்திரன் விழிகள் அசைவற்றிருக்க நோக்கி அமர்ந்திருந்தான். பாலி “மகாவஜ்ரமா?” என்றான். “ஆம், அதுவன்றி வேறேதும் வேண்டியதில்லை” என்றாள். பாலி சினத்துடன் கையை தூக்கியபடி முன்னால் வர இந்திரன் அவன் தோளைத் தொட்டு தடுத்தான். எழுந்து “நன்று, ஈன்றோரில்லம் நீங்கும் எந்தப் பெண்ணும் விழைவது தந்தையை தன் கொழுநன் வெல்லவேண்டும் என்றே” என்றபோதே அவன் முகம் மலர்ந்தது. “ஆனால் அதை அவள் கேட்பதிலுள்ள தன்னலத்தின் கள்ளமில்லா அழகுக்கு முன் எந்தத் தந்தையும் தோற்றாகவேண்டும். கொள்க, மகளே!” என்றான்.

அவள் திரும்பிவந்து அவன் காலடியைத் தொட்டு சென்னிசூடினாள். அவள் தோள்பற்றி தன் மார்புடன் அணைத்து காதில் மகாவஜ்ர நுண்சொல்லை மும்முறை சொன்னான் இந்திரன். அவள் அதை மும்முறை திரும்பச் சொல்லி மீண்டும் வணங்கினாள். “சென்று வருக! உன்னுடன் என்றுமிருக்கட்டும் இப்படைக்கலம். இது உன்னை வெல்லமுடியாதவனாக

நிலைநிறுத்தட்டும்” என்றான். “தங்கள் வாழ்த்துக்களால் நிறைநிலைகொண்டேன், தந்தையே” என அவள் சொன்னாள்.

“மகாவஜ்ரத்தின் முதன்மை இங்கு முடிந்தது” என பாலி கசப்புடன் சொன்னான். “தந்தையே, இனி மகாநாராயணமே வேதமெனத் திகழும். அதை நீங்களே தொடங்கிவைத்துவிட்டீர்கள்.” இந்திரன் “ஆம்” என்றான். “சென்று அவனிடம் அதை சொல்லச்சொல்லுங்கள் இவளிடம். அவன் நெய்யும் வேதப்பெருவலையில் ஒரு திசைக்காவலனாக அமைவீர்கள். அவன் வேள்விச்சாலையில் அவிகொள்ள நிரையிலொருவராக நின்றிருப்பீர்கள்.” இந்திரன் பெருமூச்சுடன் “அவ்வண்ணமென்றால் அதுவே ஆகுக! நான் இத்தருணத்தை பிறிதொருவகையில் கடக்கவியலாது” என்றான். வசிட்டர் “அது அவ்வண்ணமே ஆகவேண்டுமென்பதே ஊழ், அரசே” என்றார். “அறமே வேதமென உருக்கொள்கிறது. அறம் வளர்வதே இறைநெறி. வளர்தலென்பது உதிர்தலும் முளைத்தலுமென நிகழும் முடிவிலா மாற்றம்.”

“சென்றுவருகிறேன், தந்தையே. நான் வந்த பணி முடிந்தது” என்றாள். இந்திராணியை அணுகி கால்தொட்டு வணங்கிவிட்டு பாலியின் அருகே வந்தாள். “வாழ்த்துக, மூத்தவரே!” என அவன் கால்களை தொடக்குனிந்தாள். “வெற்றி கொள்க!” என்று பாலி அவள் தலையைத் தொட்டு நற்சொல் உரைத்தான். அவள் நிமிர்ந்ததும் பொய்க்கடுமையை முகத்தில் நிறுத்தி “உன்னை இவ்வண்ணம் காண அவன் விழையமாட்டான். நீ படைக்கலங்களுடன் வந்து வில்விஜயன் என தன் போர்க்களங்களில் நிற்கவேண்டுமென்றே எண்ணுவான்” என்றான். அவள் திகைத்து இந்திரனை நோக்க “ஆம், மகளே.

அவன் உன்னை இங்கு அனுப்பியது அதன்பொருட்டே” என்றான்.

“அவர் என்னை அனுப்பவில்லை” என்றாள் அவள். “நீங்களிருவரும் கொண்ட அப்போர் நிகழ்ந்ததல்ல. நிகழ்த்தப்பட்டது” என்றான் பாலி. அவள் பெருமூச்சுவிட்டாள். “ஆனாலும்…” என சொல்லத் தொடங்கியதுமே இந்திரன் “நீ இவ்வுடலில் எழுந்தது ஆணென இருந்து அறியமுடியாத பெரும் பிரேமையை அடையும்பொருட்டே. அதை வென்று சூடி முழுமைகொண்டுவிட்டாய். இது உன்னுள் கனவின் விதையென என்றுமிருக்கும். உன் மெய்யறிதல்களை கனியவைக்கும்” என்றான். அவள் “ஆம்” என்றாள்.

“ஊர்வசியின் தீச்சொல் அழியவேண்டியதில்லை. அவள் ஆணையிடும் காலம் மட்டும் நீ பெண்ணென்று வாழ்ந்தால் போதும். அக்காலத்தை நீ விழையும்படி தெரிவுசெய்யலாம்” என்றான் இந்திரன். ஊர்வசி “ஆம் இளைய பாண்டவரே, அக்காலமொன்று வரும். அன்று என் தீச்சொல்லே நற்சொல்லென்று உங்களுக்கு துணையிருக்கும்” என்றாள். கைகூப்பி “அவ்வாறே ஆகுக!” என்றான் அர்ஜுனன். ஊர்வசி அருகே வந்து அவன் கைகளைப் பற்றியபடி “மீட்டு எடுத்த சொல் என் உடலில் ஒரு கரிய மச்சமென எப்போதும் இருக்கும். அக்குறையை ஓர் அருமணி என நான் சூடியிருப்பேன்” என்றாள்.



அவள் தொட்டதுமே அவன் முலைகரைந்து தோள்பெருத்து கைகள் இறுகி அர்ஜுனன் என்றானான். அவள் விழிகளை நோக்கியபடி “இன்று அறிகிறேன் உன் அகத்தை” என்றான். அவள் அவன் விழிகளை நோக்காமல் திரும்பிக்கொண்டு சிலம்புகள் ஒலிக்க வளையல்கள் குலுங்க ஆடை நெகிழ்ந்து நீண்டு தரையில் இழுபட்டுத் தொடர விரைந்தோடி உள்ளே சென்றாள். அர்ஜுனன் சுரமகளிர் விழிகளை நோக்கினான். அவை மீண்டும் அகன்று வேறொன்றாக விரிந்திருந்தன.

அவையை கைகூப்பி வணங்கிவிட்டு அவன் வெளியே நடந்தான்.

# கிராதம் - 62

**பகுதி ஏழு : பாசுபதம்**

**[ 1 ]**

பைலனும் ஜைமினியும் சுமந்துவும் தொடர திருவிட நிலத்திற்குள் நுழைந்தபோது சண்டன் அர்ஜுனனின் இந்திரபுரிபுகுகை குறித்த ஏழு வெவ்வேறு காவியங்களின் கதைகளை சொல்லிமுடித்திருந்தான். அவர்கள் கேட்ட ஐயங்கள் அனைத்திற்கும் பிறிதொரு கதையையே அவன் மறுமொழியாக சொன்னான். ஒரு கட்டத்தில் அவர்கள் முற்றிலும் வினாக்கள் அழிந்து கதைச்சுழலுக்குள் மூழ்கி செவியும் விழியும் மட்டுமேயென தொடர்ந்து வந்தனர்.

“விண்ணிலிருந்து மீண்டும் இந்திரகீலமலைக்கு வந்து விழுந்தான் இளைய பாண்டவன் என்கின்றன கதைகள். அங்கிருந்து அடர்காடுகளின் வழியாக அவன் இமயமலையடுக்குகள்வரை சென்றான். இமயத்தின் இடுக்குகள் வழியாக கடல்தேடி வரும் பீதர்நாட்டு வணிகர்களுடன் சேர்ந்து சென்றான். அவர்களைப் பிரிந்து கின்னரகுடியினருடன் இணைந்துகொண்டு மேற்கு நோக்கி சென்றான். பதினெட்டு மாதங்களில் அவன் கயிலைக்குச் செல்லும் மாவிரதர்களைக் கண்டு அவர்களுடன் இணைந்துகொண்டான். எங்கும் நில்லாதவன் என்பதனால் அவனை சலன் என அழைக்கின்றன நூல்கள்” என்றான் சண்டன்.

அவர்கள் பயோஷ்னி என்னும் சிற்றாற்றின் கரையை வந்தடைந்திருந்தனர். பாறைகள் செறிந்திருந்த மலைச்சரிவில் நுரைத்தும் சீறியும் சென்றுகொண்டிருந்தது நீர்ப்பெருக்கு. சண்டன் நாணல்களைப் பறித்து இணைத்துக்கட்டி நீள்கூம்புவடிவ மீன்கோரியை முடையத்தொடங்கினான். களைத்த கால்களுடன் இளையோர் அவனைச் சூழ்ந்து அமர்ந்தனர். ஜைமினி "அவன் அங்கே கற்ற வேதம் எது?" என்றான். "அவன் அங்கே கடந்தது இந்திரனை முதன்மையாக்கிய மகாவஜ்ரம்" என்றான் சண்டன்.

"அவ்வேதம் இன்றில்லையா?" என்றான் ஜைமினி. சண்டன் புன்னகைத்து "எந்த வேதமும் முற்றழிவதில்லை, அந்தணரே. அது மண்ணுக்குள் வேரென்று நீடிக்கும். ஒவ்வொரு சொல்லிலும் அதன் பொருளும் இணைந்திருக்கும்" என்றான். ஜைமினி பெருமூச்சுடன் "நான் கற்றதே வேறு" என்றான். "சொல்க!" என்றான் சண்டன். ஜைமினி தயங்க "சொல்க அந்தணரே, இக்காடே ஒரு கல்விநிலை அல்லவா?" என்றான் சண்டன். ஜைமினி "பிரம்மனின் நாவிலிருந்து எழுந்து ககனவெளியில் ஒலியலைகளாக நீடித்தவை வேதங்கள். மானுடரால் உருவாக்கப்பட்டவை அல்ல என்பதனால் அவை ஔபௌருஷேயங்கள். மானுடனுக்கு சொல்லப்பட்டவை என்பதனால் சுருதிகள்" என்றான்.

"வேதம் பெற்ற அனைவருமே முனிவர் என்றும் வேதச்சொல்லைத் தொகுத்த அனைவருமே வியாசர்கள் என்றும் முன்னோரால் அழைக்கப்பட்டனர். சொல்தேர்ந்து வேதம் தொகுத்த முதல் வியாசர் நூறாயிரம் நூல்களாக வேதங்களை வகுத்தமைத்தார். அவற்றை ரிக், யஜூர், சாமம், அதர்வமெனப் பகுத்தார். ரிக்கால் ஹௌத்ரத்தையும் யஜுஸால்

அத்வார்யவத்தையும் சாமத்தால் ஔஸ்காத்ரத்தையும் அதர்வத்தால் பிரம்மதத்துவத்தையும் அடையலாகுமென நிறுவினார். அழைப்பும் அளிப்பும் உசாவலும் பெறுதலுமாக வேதம் அமைந்தது.”

சண்டன் “எதனடிப்படையில் அந்த நூறாயிரம் நூல்கள் தொகுக்கப்பட்டன? எப்படி அவற்றில் இன்றிருப்பவை மட்டும் எஞ்சின?” என்றான். ஜைமினி “அது மானுடரின் வீழ்ச்சி. முன்பிருந்த மூதாதையர் வானென விரியும் உளம்கொண்டிருந்தனர். அவர்கள் வேதமன்றி பிறிதொன்றிலாது வாழ்ந்தனர். மானுடம் வளர்ந்ததும் விழைவுகள் பெருகின. வேதம் அறியமுடியாமைக்கு ஆற்றும் கடமைகளையே வேள்வியெனக் கொண்டது. விழைவுக்கு இலக்காகும் பொருளுக்கென ஆற்றப்படும் கடமைகளனைத்தும் வேதமறுப்பே. வேதமறுப்பு மானுட உள்ளத்தை குறுகச் செய்தது. அதற்கேற்ப வேதம் குறைந்து வந்தது. ஒவ்வொருநாளும் ஒரு பாடலென வேதம் மானுடரால் கைவிடப்படுகிறது” என்றான்.

சண்டன் “அந்தணரே, வேதமென இங்கு வந்த மெய்ச்சொல் வடக்கே எழுந்த பனிமலையடுக்குகளைப்போன்றது. ஒவ்வொரு காலகட்டத்திலும் அதன் ஒரு பகுதி முதன்மைகொள்கிறது. சில பகுதிகள் கண்டெடுக்கப்படுகின்றன. சில பகுதிகள் கைவிடப்படுகின்றன. பெரும்பகுதி எவராலும் காணப்படாமல் அங்கிருக்கிறது. அறிந்தவேதமே நாம் பேசும் வேதம். அறியாவேதத்தின் நுனியே அது என்று அறிக!” என்றான். “இமயமலையடுக்குகளுக்குள் பயணம் செய்பவர்கள் அங்கு அசுரரும் அரக்கரும் கின்னரரும் கந்தர்வரும் வாழ்ந்து விட்டுச்சென்ற பெருநகர்கள் ஒழிந்து கிடப்பதை காண்பார்கள்.

அவர்கள் எதை வென்றார்கள்? எதை இழந்தார்கள்?” என்று சண்டன் கேட்டான்.

“வேதங்களுக்குள் விடப்பட்ட வேதங்கள் புதைந்திருக்கின்றன என்று அறியாதவன் வேதங்களை பொருள்கொள்ள இயலாது” என்று அவன் தனக்குத்தானே என சொல்லிக்கொண்டான். பின்னர் கூடையை எடுத்தபடி மீன்கொள்ளும்பொருட்டு பாறைகளின் மேல் தாவிச்சென்றான். இருபாறைகளின் நடுவே பீரிட்டு வளைந்து விழுந்த நீர்ப்பெருக்கின் குறுக்காக அந்தக் கூடையை சற்றுநேரம் வைத்து நீர் வளைந்து தெறிக்கச் சுழற்றி வீசி எடுத்தான். அதில் வெள்ளியிலைகளென மீன்கள் துள்ளின. அவற்றை செவிள்கள் வழியாக நாணலில் கோத்து இடையிலணிந்துகொண்டான்.

“செல்வோம், நாமும் உணவு தேடி மீளவேண்டும். இருட்டிக்கொண்டிருக்கிறது” என்றான் சுமந்து. பைலன் “வெள்ளித் திறவுகோல்களை கொத்தாகக் கட்டி இடைசூடி நின்றிருக்கும் வாயிற்காவலன் போலிருக்கிறார்” என்று சண்டனை நோக்கி சொன்னான். “யார் அவர் என என் உள்ளம் வினவிக்கொண்டே இருக்கிறது. ஒரு வழிகாட்டி என உணர்கிறேன். எதன்பொருட்டு நம்மை அவரிடம் ஒப்படைத்துள்ளது ஊழ்? நாம் எங்கு சென்றுகொண்டிருக்கிறோம்?” என்றான் ஜைமினி. “நெடுந்தூரம் வந்துள்ளோம். இக்கொடும்பயணத்தை நமக்கு அமைத்த நெறி வீண்விளையாட்டை விரும்பாதென்றே கொள்வோம்” என்றான் பைலன்.

காட்டுக்குள் நுழைந்தபோது அவர்கள் அமைதிகொண்டிருந்தனர். முட்காடுகள் வழியாக வந்திருந்த அவர்களுக்கு பேரிலைச் செடிகள் கொண்ட பசுங்காடு

அறியாமலேயே உவகையை அளித்தது. சருகுமெத்தையில் அவர்கள் கால்கள் புதைந்தன. உடல்தொட்ட மரங்களிலிருந்து மலர்ப்பொடிகள் உதிர்ந்தன. புதர்களுக்குள் செம்போத்து ஊடுருவி ஓடியது. ஆர்வத்துடன் ஒரு குரங்கு இறங்கி வந்து அவர்களை நோக்கியது. அதன் தோழி கீழிறங்கி வர மேலே செல்லும்படி அதை எச்சரித்தது.

பைலன் அருகே நின்ற வாழையின் மடல்களைப் பிய்த்து வாயில் வைத்து தேனுண்ண உறிஞ்சினான். "இது அந்தி. வாழைத்தேன் காலையிலேயே இருக்கும்" என்றான் சுமந்து. "ஆசிரியரின் மெய்ச்சொற்களை புலரியிலேயே அடையவேண்டும், அவை மலர்த்தேனைப் போன்றவை என்று ஒரு நெறிநூல் உரைக்கிறது" என்றான் ஜைமினி. "இந்தக் காட்டில்கூட நாம் நூல்களிலிருந்து விடுதலை பெறமாட்டோமா என்ன?" என்றான் பைலன். "காடாகச் சூழ்ந்திருக்கின்றன நாம் கற்ற நூல்கள்" என்றான் சுமந்து. "இலக்கணமற்றது, ஏடென்றும் பாதமென்றும் பிரிக்கப்படாத நூல் இது."

"நாம் கனிகொள்ள வந்தோம், அதைச் செய்வோம்" என்று ஜைமினி எரிச்சலுடன் சொன்னான். "எதையும் தத்துவமாக ஆக்கவில்லை என்றால் உங்களுக்கு சொல் திகட்டுகிறதுபோலும். இதோ, இந்த மரங்களும் செடிகளும்கூட உவமைகளாக ஆகிவிடுவோமா என அஞ்சி நடுங்கி நிற்கின்றன." சுமந்து வெடித்துச் சிரித்துவிட்டான். பைலன் சிரித்தபடி "ஜைமின்யரே, நீங்கள்கூட வேடிக்கை பேசமுடியும் என இன்று அறிந்தேன்" என்றான்.

ஜைமினி கொடிகளைப் பற்றி இழுத்து வேர்புதைந்த இடத்தைச் சுட்ட பைலன் சிறு கூர்கழியால் அகழ்ந்து கிழங்குகளை வெளியே எடுத்தான். உச்சிக்கிளைகளில் இருந்த காய்களை

அக்கொடியிலேயே கவண் கட்டி வீசி எறிந்து பற்றி இழுத்து பறித்தனர். அக்கொடிகளைப் பின்னி கூடையாக்கி அவற்றில் காய்களையும் கிழங்குகளையும் சேர்த்து தூக்கிக்கொண்டனர். அச்செயலில் அவர்கள் மூழ்கியபோது சொல்லாடல் இயல்பாக நின்று அமைதி சூழ்ந்துகொண்டது.

"வேதம் பிரம்மனிலிருந்து பிறந்தது என்று அனைத்து நூல்களும் சொல்கின்றன" என்று எண்ணியிராத தருணத்தில் ஜைமினி தொடங்கினான். சுமந்துவும் பைலனும் அப்போது பிரம்மனைப்பற்றித்தான் எண்ணிக்கொண்டிருப்பதை உணர்ந்து சற்று திடுக்கிட்டனர். "ஆனால் ஒவ்வொரு நூலும் பிரம்மனின் தோற்றம் பற்றி ஒவ்வொரு கதையை சொல்கிறது." அவன் என்ன எண்ணிக்கொண்டிருக்கிறான் என்பதை நுட்பமாகத் தொடர்ந்தன இருவரின் உள்ளங்களும். "அவ்வாறென்றால் ஒவ்வொரு பிரம்மனும் படைத்த வேதங்களும் வேறுவேறா?" என்று அவன் கேட்டபோது அம்புவிடுபட்ட வில்லென அவர்களின் அகங்கள் நிலைமீண்டன.

"ஏனோ இத்தருணத்தில் முன்பு கற்ற அன்னைநெறியின் கதையே என் நெஞ்சில் முதன்மையென எழுகிறது" என்றான் ஜைமினி "யுகத்தொடக்கத்தில் விஷ்ணு ஒரு கைமகவாக ஆலிலையில் கிடந்தார். அவரில் தன்னுணர்வு எழுந்தது. அது அச்சமென்றாகியது. அந்த மகவு வீரிட்டழுதது. அப்போது விண்ணிலிருந்து மெல்லிய மூச்சு அதன்மேல் பட்டது. 'நான் யார்? எனையீன்றது எவர்? எதன்பொருட்டு?' என அவர் உள்ளம் வினவியது. விண்நிறையும் இடிமுழக்கமாக ஓர் ஒலியெழுந்தது. ***சர்வ கல்விதமேவாகம்******, நான்யாஸ்தி சனாதனம்***. இவையனைத்தும் நானே. நானன்றி தொடக்கமென ஏதுமில்லை."

விஷ்ணு நிமிர்ந்து நோக்கினார். நான்கு கைகளில் சங்கும் சக்கரமும் கதையும் மலரும் கொண்டு அன்னை அவர்முன் தோன்றினாள். அவள் நிழலும் வண்ணம்கொண்டிருந்தது. ரதி, ஃபூதி, புத்தி, மதி, கீர்த்தி, திருதி, ஸ்மிருதி, சிரத்தை, மேதை, ஸ்வதை, ஸ்வாகை, க்ஷுதை, நித்ரை, தயை, கதி, துஷ்டி, புஷ்டி, க்ஷமை, லஜ்ஜை, ஜ்ரும்பை, தந்த்ரி என்னும் அன்னையாற்றல்களாக அந்நிழல் பெருகிச் சூழ்ந்தது. அறியாமகவு அலகிலா அன்னையரைக் கொண்டதாக ஆகியது.

தன் கனிந்த விழிகளால் நோக்கி அன்னை சொன்னாள் "மைந்தா, நீ என் காலத்தின் ஒரு கணம். முடிவிலாது பிறந்து அழிந்து மீள்கிறாய். நீ வளர்க!" அவள் அதை எடுத்து தன் முலைகள்மேல் சேர்த்தாள். அமுதை உண்டு இளமைந்தன் கண்மயங்கலானான். அவன் செவிகளில் அன்னையின் சொல் எழுந்தது. "நீ பெருகுக! நீ சத்வகுணத்தான். பெருநிலை கொண்டமைந்தவன். மெய்மைக்கடல்மேல் அறிதுயில் கொள்க! உன் தொப்புளில் இருந்து ரஜோகுணத்தான் எழுக! செயல்நிலை கொண்ட அவனை பிரம்மன் என்று அழைக்கட்டும் முனிவர். பிரம்மன் புடவிப்பெருக்கை படைப்பான். அது வளர்ந்து தன் விசையால் மையம் கொள்கையில் அதிலெழுக தமோகுணத்தானாகிய மகாருத்ரன்! எதிர்நிலை கொண்ட அவனை அழிவிலா நஞ்சென்றும் அனல்வண்ணனென்றும் அழிப்போன் என்றும் ஆடவல்லான் என்றும் அறியட்டும் மெய்யுணர்ந்தோர்."

"அவ்வாறு பிறந்தனர் மூன்று தெய்வங்களும் முப்பத்துமுக்கோடி தேவர்களும் எண்ணிலாப் புடவிகளும் அவற்றை இணைத்தாடும் ஊழ்ப்பெருக்கும்" என்றான் ஜைமினி. "பிறிதொரு நூலில் உள்ள கதை சற்றே மாறுபடுகிறது.

காலத்தொடக்கத்தில் இங்கிருந்தது விண்நீர் மட்டுமே. அதன் அலைகளென தன்னை நிகழ்த்திக்கொண்டிருந்தவள் அன்னை. அவள் தானென்றும் தோழியரென்றும் உடல்கள் கொண்டு அதில் நீராடித் திளைத்தபோது அவள் அண்டத்துளி ஒன்று அந்நீர்ப்பரப்பில் விழுந்து பொற்துகளென சுடர்விட்டது. அன்னை அதைக் கண்டாள். நீ தவத்தான் படைப்பவனாகி எழுக என ஆணையிட்டாள். பின் தானே அதன் உயிரென புகுந்து எழுந்து வளர்ந்து புடவிகளை படைத்தெடுத்தாள்."

"முடிவிலாக் கதைகள்" என்று பைலன் சொன்னான். "பிரம்மனின் பிறப்பு குறித்த கதைகளை நாம் இங்கு பேசுவோம் என்றால் நம் அகவை முதிர்ந்து சிதைசேர்வதுவரை ஒருகணமும் ஒழியாது பேசிக்கொண்டிருக்கலாம். இங்குள்ள குலங்கள் அனைத்தும் பிரம்மனைப்பற்றி ஒரு கதையை வைத்துள்ளன. குடிகளுக்கு ஒரு கதை அப்பெருங்கதைக்குள் இருக்கும். நூல்களில் அக்கதைகள் நூறுமுகங்கள் கொண்டு வளரும்." ஜைமினி "அன்னையைப்பற்றி வேதங்கள் என்ன சொல்கின்றன என்று எண்ணிக்கொண்டேன்" என்றான். மூவரும் சிலகணங்கள் அமைதிகொண்டனர்.

"வாக்தேவி என்றும் அதிதி என்றும் அன்னையின் முகங்கள் உள்ளன. ராத்ரி, உஷை, சந்த்யை என அன்னை முகம் காட்டுகிறாள். ஆனால் வேள்விக்குரிய முதன்மைத்தெய்வமாகவோ தேவர்களை ஈன்ற பேரன்னையாகவோ அவளை வேதங்கள் உரைப்பதில்லை" என்றான் சுமந்து. ஜைமினி "உரைக்கும் வேதங்கள் எங்கேனும் உள்ளனவா?" என்றான். அவர்கள் மீண்டும் அமைதியானார்கள். "அறியாவேதங்கள் என சண்டர் சொல்வது அவற்றைத்தானா?"

அவர்கள் தங்கள் தனித்த எண்ண ஓட்டங்களில் மூழ்கியவர்களாக நடந்தனர்.

நீண்டநேரம் கழித்து மீண்டும் ஜைமினி சொன்னான் "அப்படியென்றால் திசைநான்கையும் வென்று அர்ஜுனன் அடைந்த வேதமெய்மையின் பொருள்தான் என்ன? வேதங்களை அறிந்து கடப்பது ஒருவனுக்கு இயல்வதாகுமா?" பைலன் "ஒவ்வொரு வேதமும் பிறிதொன்றை முழுமைப்படுத்துகிறது என்கின்றன நூல்கள்" என்றான். அவன் சொன்னதென்ன என்று அவர்களுக்கு புரியவில்லை. அவர்கள் அவனை திரும்பிப்பார்த்தனர். அவனும் தான் சொன்னதன் பொருளென்ன என்று உணராதவன்போல திகைத்து அவர்களை நோக்கினான். பின்னர் புன்னகைத்து "கற்றவை அனைத்தையும் முற்றிலும் கலைத்துவிட்டார் சூதர்" என்றான். அச்சொல்லில் எளிதாகி அவர்கள் நகைத்தனர்.

சுமந்து "கிழங்குகளின் வேதம் விதைகளுக்கில்லை. காய்களுடன் இணைந்து வேதமும் கனிகிறது" என்றபின் "அரிய சொல்லாட்சி... எனக்கே இதை எங்கேனும் எழுதவேண்டும் போலிருக்கிறது" என்றான். "மானின் வேதத்தை மானை உண்ணும் புலி தானும் அடைகிறது" என்றான் பைலன். "பைலரே, வேண்டாம். வேதமறுப்பும் வேதநகையாட்டும் பழி சேர்க்கும்" என்றான் ஜைமினி. "வேதப்பழி பிறிதொரு வேதமாகிறது" என்றான் பைலன். சுமந்து "ஆ, மெய்யாகவே அது ஓர் அரிய எண்ணம். நம் மெய்யாடலின் வரலாற்றை அதனூடாகச் சென்று அணுகியறியமுடியுமென்று தோன்றுகிறது" என்றான்.

"வேடிக்கை வேண்டாம்" என்றான் ஜைமினி சினத்துடன். "வேதங்களை நாம் கிளிகளுக்கு கற்பிப்போம்.

பாரதவர்ஷமெங்கும் அவை சென்று அத்தனை கிளிகளையும் வேதமொழி சொல்லப் பயிற்றும். வேதமொலிக்கும் காடுகளில் வேதம் கனிந்த கனிகள் எழும். அவற்றை உண்ட மானுடர் அவியுண்ட தேவர்களென்றாவார்கள்” என்றான் பைலன். “அக்கனிகள் அழுகி நிலத்தில் விழுந்தால் பாதாளநாகங்களால் உண்ணப்படும். அவை பொன்னுடல்கொண்டு நெளியும். வேதம் கீழுலகங்களை முற்றழிக்கும்” என்றான் சுமந்து. “வேண்டாம், இங்கேயே நிறுத்திக்கொள்வோம்” என்று ஜைமினி குரல் உடையச் சொன்னான்.

“உண்ணப்படும் கனிகளைவிட உதிரும் கனிகளே மிகுதி. அவியுண்ட அடியுலகோர் விண்ணவராவர். ஆழம் விண்ணென்றாகும். மணல்கடிகை திரும்புவதுபோல ஏழுலகும் தலைகீழாகும்” என்று பைலன் சொன்னான். “விஷ்ணு ஆழுலகில் பாற்கடலில் படுத்திருப்பார். வானெங்கும் நாகங்கள் நெளியும்.” ஜைமினி நின்று அழுகை கலந்த உரத்த குரலில் “வேண்டாம்! வேண்டாம்! போதும்!” என்று கூவினான். “சரி போதும்” என்று பைலன் சிரித்துக்கொண்டே சொன்னான். சுமந்து “வேதங்களைப்பற்றிய மெய்யறிதலை இனிமேல் நாம் இவரிடம் பகிர்ந்துகொள்ளவேண்டாம்” என்றான். “வேதங்களை இவர் அன்னை சொன்ன தந்தையின் பெயர் என நம்புகிறார்” என்றான் பைலன். “பைலரே” என ஜைமினி கூவ “சரி, இனி இல்லை” என்றான் பைலன்.

அவர்கள் திரும்பி ஆற்றங்கரையை அடைந்தபோது காட்டுக்குள் இருள் பரவி பறவைகள் சேக்கேறும் ஒலிகள் எழுந்துகொண்டிருந்தன. ஜைமினி தலைகுனிந்தவனாக நடந்தான். ஆற்றங்கரை மணலில் அவர்களின் கால்கள் புதையும் ஒலி எழுந்தது. ஜைமினி “நகையாடலாயினும்...”

என்றான். “என்ன?” என்றான் பைலன். “நகையாடலாயினும் எண்ணவேண்டிய சொற்களே” என்றான் அவன். பைலன் சிரித்து “நகையாட்டிலன்றி எவரும் கூரியவற்றை சொல்லமுடியாது, ஜைமின்யரே” என்றான்.

[ 2 ]

பயோஷ்னியின் நீரில் ஒளி கலங்கி அலையடித்துக்கொண்டிருந்தது. ஈரப்பாறைகளில் சிந்திய குங்குமம்போல செம்மை வழிந்தது. நாணல்களுக்கு அப்பால் பாறை ஒன்றின் பரப்பில் சண்டன் அனல் மூட்டி அதில் மீன்களை சுட்டுக்கொண்டிருந்தான். அவன் மீனைச் சுட்டு முடிப்பதற்காக அவர்கள் காத்திருந்தனர். சுட்ட மீன்களை இலையொன்றில் அடுக்கி வைத்துக்கொண்டிருந்த அவன் அவர்கள் வருவதைக் கண்டும் விழிதிருப்பவில்லை. சரியான பதத்தில் மீன் வெந்து நீலச்சுடர் எழுவதற்காக அவன் விழிகள் கூர்ந்திருந்தன.

மீன்களைச் சுட்டு முடிந்ததும் அவன் எழுந்துகொண்டு “நீங்கள் உங்கள் உணவை சுடலாம்” என்றான். ஜைமினி தன் கிழங்குக்கூடையுடன் முன்னால் அடிவைக்க “அனல் ஊனுண்டு செழித்திருக்கிறது, அந்தணரே” என்றான் சண்டன். அறியாது ஜைமினி தயங்க நகைத்து “தூய அனலைத் தேடுகிறீர் போலும்” என்றான்.

ஜைமினி திரும்பி தன் தோழர்களை நோக்கிவிட்டு முன்னால் சென்று கிழங்குகளை சுடத்தொடங்கினான். கண்களில் புன்னகையுடன் பிற இருவரும் வந்து அருகமைந்து கிழங்குகளை சுட்டனர். சண்டன் அப்பால் அமர்ந்து மீனை உண்டு முட்களை அருகிருந்த இலைமேல் வைத்தான்.

ஜைமினி திரும்பிப்பார்க்க “முன்பு மீன்கள் வானில் பறந்திருந்தன என்று சொல்கிறார்கள், அந்தணரே” என்றான். “மெய்யாகவா?” என்றான் சுமந்து. “ஆம், நான் இமயமலையின் உச்சிப்பாறை ஒன்றில் மீன்கள் பதிந்து உருவான முள்வடிவை கண்டிருக்கிறேன்” என்றான்.

“அவை எப்படி நீர்வாழ்வில் அமைந்தன?” என்றான் ஜைமினி அறியாமல். “அவற்றின் வேதம் சொல்மாறியிருக்கும்” என்றான் சண்டன். பைலனும் சுமந்துவும் சிரிக்க சுட்ட கிழங்குகளை எடுத்துக்கொண்டு ஜைமினி அப்பால் சென்று திரும்பி அமர்ந்து உண்ணத்தொடங்கினான். “சினம் கொள்கிறார்” என்றான் பைலன். “சினப்பது அவருக்கு நன்று. சினத்தினூடாகவே அவர் கற்றுக்கொள்கிறார்” என்றான் சண்டன்.

புதர்களுக்குள் ஓர் அசைவு கேட்க சண்டன் எட்டி அனலில் இருந்த கொள்ளிவிறகொன்றை கையிலெடுத்துக்கொண்டான். “மானா?” என்றான் பைலன். “அல்ல” என்ற சண்டன் “யார்?” என்றான். அங்கிருந்து “நீங்கள் யார்?” என குரல் கேட்டது. “இளையவர்” என்றான் சண்டன். பின்னர் உரக்க “நான் சூதன். மூன்று அந்தண இளையோரும் என்னுடனிருக்கிறார்கள்” என்றான். அங்கிருந்த குரல் “நான் அந்தணச் சிறுவன். என் பெயர் வைசம்பாயனன்” என்றது.

சண்டன் எழுந்து அந்தக் கொள்ளியை காற்றில் சுழற்றி அனலூட்டி கொழுந்தாடச்செய்தான். அந்த ஒளியில் தொலைவில் நின்ற இளையவனை காணமுடிந்தது. “வருக, அந்தணரே! நீங்கள் உரிய குழுவுடன் இணைந்துள்ளீர்கள்” என்றான் சண்டன். வைசம்பாயனன் ஆற்றின் பாறைகளை மெல்லக் கடந்து அருகே வந்தான். “முதலில் உண்ணுங்கள்” என்றான் சண்டன். “ஆம், நான் பசிகொண்டிருக்கிறேன்.

என்னிடம் சில கிழங்குகள் உள்ளன” என்றபடி அவன் அனலருகே அமர்ந்தான். “அவற்றை பின்னர் சுடுவோம். இப்போது சுட்டவற்றை உண்ணுக!” என்றான் சண்டன்.

அவன் உண்பதை அவர்கள் நோக்கி அமர்ந்திருந்தனர். உண்டு முடித்து கமுகுப்பாளைத் தொன்னையிலிருந்து நீரை அருந்திவிட்டு அவன் நிமிர்ந்து “கடும்பசி. வரும் வழி அடர்காடு. ஏதேனும் நீர்க்கரையில் இரவு தங்கவேண்டுமென்பதற்காக கடுநடையிட்டு வந்தேன்” என்றான். “அன்னம் அன்னத்தை அறியும் தருணத்தை நோக்கியிருப்பதுபோல நிறைவளிப்பது பிறிதொன்றில்லை” என்றான் சண்டன். “ஆம், இந்த நெடும்பாதையில் நான் மெய்யென்று முதலில் அறிந்தது பசியையே” என்றான் வைசம்பாயனன்.

அவன் வாயிலிருந்து ஏப்பம் ஒன்று எழுந்தது. “வேதநாதங்களில் முதன்மையானது உயிர்கள் கொள்ளும் ஏப்பம் என்று ஒரு சூதனின் சொல்லை வைசாலியில் கேட்டேன்” என்றான் வைசம்பாயனன். “ஜடரவேதம் என அதை அவர் சொன்னார்.” பின்னர் பைலனை நோக்கி தலைவணங்கி “விசும்ப குலத்தில் வந்தவன். என் பெயர் என வைசம்பாயனன் என்பதை கொண்டிருக்கிறேன்” என்றான். பைலனும் சுமந்துவும் ஜைமினியும் குலமும் குருமுறையும் பெயரும் சொல்லி தங்களை அறிமுகம் செய்துகொண்டார்கள்.

அவர்கள் வாழ்த்துரைத்து முடித்ததும் சண்டன் “நான் சூதனாகிய சண்டன்” என சுருக்கமாக தன்னை சொன்னான். “எங்கு செல்கிறீர்கள்?” என்று பைலன் கேட்டான். வைசம்பாயனன் “நொதித்த கள் கலம்விட்டு எழுவதைப்போல மாணவர்கள் குருநிலைகளிலிருந்து வெளியே செல்கிறார்கள்

என்று ஒரு சூதன் சில நாட்களுக்கு முன் பாடக்கேட்டேன்" என்றான். "எனக்கு மெய்மையை அறிவிக்கும் ஆசிரியர் ஒருவரை தேடிச்செல்கிறேன்." ஜைமினி "அந்த ஒப்புமை எனக்குப் புரியவில்லை" என்றான். வைசம்பாயனன் "அது ஒரு பகடி, ஜைமின்யரே. புளித்தெழும் நுரை ஆணவமே. வழிவதே நிகழ்கிறது, வெளியேற்றம் அல்ல" என்றான்.

ஜைமினி "அப்படி சொல்லமுடியுமா என்ன?" என்றான். பைலன் "அது பகடி. அதை அவரே சொல்லியும்விட்டார். பகடியை ஆராய்வதென்பது உடையை பஞ்சாக்கிப் பார்ப்பதுபோல" என்றான். ஜைமினி "வெளியேறாதவர்கள் எதை கண்டடைய முடியும்?" என்றான். "முற்றிலும் வெளியேறுபவர்களே கண்டடையமுடியும் என்று அதற்குப் பொருள்" என்றான் வைசம்பாயனன். "வெளியேறும்போதே முழுமையாகத்தானே கிளம்புகிறோம்?" என்றான் ஜைமினி. சுமந்து "பகடியையே வேதமெய்ப்பொருள் என ஆய்பவர் அவர், வைசம்பாயனரே" என்றான். "ஆம், அதை அவரைப் பார்த்ததுமே அறிந்துகொண்டேன்" என்றான் வைசம்பாயனன்.

சண்டன் சிரித்து "நன்று, நால்வரும் நிகரானவர்களே" என்றான். வைசம்பாயனன் "நானும் அதையே உணர்ந்தேன், சண்டரே" என்றான். "திசையானைகளைப்போல கிளம்பியிருக்கிறீர்கள்" என்றபின் சண்டன் உரக்க நகைத்து "அல்லது திசையாமைகளா?" என்றான். வைசம்பாயனன் "அது இலக்கு அமைந்திருக்கும் இடத்தைப் பொறுத்தது. செல்லுமிடம் எங்கிருக்கிறதென்று தெரியவில்லை என்றால் விரைவும் அமைவும் நிகர் அல்லவா?" என்றான்.

"வைசம்பாயனரே, உங்களிடம் ஒரு வினா. நாங்கள் சற்றுமுன் அதைப்பற்றித்தான் பேசிக்கொண்டிருந்தோம்" என்றான் பைலன்.

“இவர் அன்னைநெறிவந்த நூல்களில் பிரம்மனை முதலாற்றலாகிய பேரன்னை படைத்தமை குறித்து சொன்னார். அன்னை படைத்த பிரம்மனின் சொல்லில் எழுந்த வேதங்கள் ஏன் அன்னையைப் பாடவில்லை?” என்றான். சுமந்து “அல்லது பாடும் வேதங்கள் எங்கேனும் உள்ளனவா? நீர் அறிவீரா?” என்றான்.

“இருக்க வாய்ப்பில்லை” என்றான் வைசம்பாயனன். “வேதமென்றால் வேர்நீர் செடியை என தேவர்களை வளர்க்கவேண்டும். குன்றாது குறையாது என்றுமிருப்பவளை வேதம் வழுத்தவும் பெருக்கவும் வேண்டியதில்லை.” சற்றே முன்னகர்ந்து “இங்குள அனைத்தும் அவள் வடிவே என்றால் வேதமும் அவளே. வாக்கென வந்து வேதமென அமைந்தவள் அன்னை” என்றான்.

சண்டன் முகம் மாறியது. அனலை உந்தி செம்பொறி பறக்க விறகமைத்தபோது அவன் முகமும் அனலொளி கொண்டது. “நீர் கற்றவர், அந்தணரே” என்றான். “தொன்மையான பாடல் ஒன்று அவளை வேதமே உடலென்றானவள் என்கின்றது. சிக்ஷை அவள் குரல், சந்தம் அவள் நடை, வியாகரணம் அவள் ஆடை, நிருக்தம் அவள் காலடி, கல்பம் அவள் அருட்கை, ஜ்யோதிஷம் அவள் அளிக்கை. வேதமென்று இங்கு ஓதப்படும் அனைத்தும் அவளென்று அறிகின்றனர் அன்னைநெறி அமைந்த படிவர்.”

அனல்மேல் எடைமிக்க காட்டுவிறகுகளை ஒன்றன்மேல் ஒன்றென சாய்த்து அமர்த்தினான் சண்டன். அனல் மெல்ல அவற்றில் பரவி எழலாயிற்று. “அகலாது அணுகாது அறிக, இகல்வென்று நின்றாடும் அனலை!” என்றபின் அவன் தன் உடலை சுருட்டிக்கொண்டு கண்களை மூடிக்கொண்டான். பிற

நால்வரும் செந்தழலின் ஆடலை, உடனாடும் நிழல்வெளியின் பெரும்பித்தை நோக்கி அமர்ந்திருந்தனர்.

# கிராதம் - 63

[ 3 ]

திருவிடத்தின் காடுகள் மாறா இருள் நிறைந்தவை. மயன் அமைத்த அசுரர் மாளிகையின் பெருந்தூண்களென எழுந்த அடிமரங்களின் மேல் சினந்தெழுந்த கொம்புகள் எனத் திமிறிநின்ற கிளைகள்சூடிய பச்சை இலைத்தழைப்பு பிளவிடாக் கூரைவெளியென மூடியிருக்க நிழல்வரைவாகவும் விழியொளியாகவும் மூச்சொலியாகவும் காலரவமாகவுமே மான்களும் மிளாக்களும் காட்டெருதுகளும் அங்கே அறியப்படலாயின. செம்புக்கலம் சிலம்பும் ஒலியாக வால்துடிக்கும் அணில்களும் சிறுமுழவு மீட்டும் ஒலியாக குவிந்து துள்ளும் குழிமுயல்களும் இரும்புரசும் ஒலியாக காட்டு ஆடுகளும் இருள்மடிப்புகளுக்கு அப்பால் இருப்புணர்த்தின.

முதலைத் தோலென்றும் யானைக் காலென்றும் ஆமை ஓடென்றும் தோற்றம்கொண்ட செதில்செறிந்த அடிமரங்களின் வேர்க்கிளைகள் உருகிவழிந்து மண்ணிலூன்றிய கொம்பரக்கின் விழுதுகளெனப் பரவிய மண்ணில் சிற்றிலைப்புற்களும் பச்சிலைப்பூசணங்களும் பரவி மூடியிருந்தன. விழுந்து மண்ணில் பாதி உடல்புதைந்த தொல்மரங்களின் மேல் எழுந்த வெண்ணிறக் காளான் குடைகள் அப்பச்சையலை எழுப்பிய நுரை எனத் தெரிந்தன.

கூரிலை பசலைக்கொடிகளும் ஒட்டிப்பற்றி மேலேறும் இத்திள்களும் மட்டுமே அங்கு கை தொடும் இலைகளெனத் தெரிந்தன. இலைநுனிகள் அனைத்திலும் தளிர்ப்பச்சை உடல்கொண்ட சிறுதவளைகள் விழித்து அமர்ந்திருந்தன. காலடியோசையில் அவை தாவி எழுந்து இலைமாறி அமர்ந்து ஆடின. உடல்மேல் பட்ட சிறு தவளை நீர்த்துளியென்றே நடுக்கம் தோன்றச்செய்தது. காட்டுக்குள் மென்புகையென நீராவி நிறைந்திருந்தது. அடியிலைகளில் அது பனித்து நுனிக்கூம்புகளில் துளித்துச் சொட்டியது. சொட்டுமொலியில் காடு படிகமாலை உருட்டி ஊழ்கநுண்சொல் உரைத்து அமைந்திருப்பதெனத் தோன்றியது. துயிலும் மாடுகளின் காதுகள் போல் கவிழ்ந்தும் இளையோர் கைவிரித்ததுபோல் விரிந்தும் சூழ்ந்திருந்தன இலைகள்.

அவற்றுக்கிடையே சிறு கால்கள் வைத்து வாலை அசைத்து உடுக்குத்தோலை கையால் மீட்டும் ஒலியுடன் குழறியபடி செம்போத்துகள் ஊடுருவி ஓடி அலைந்தன. நுரைக்கொழுந்தென வால் சிலிர்த்த கீரிகள் தாவிச் சென்றன. மெல்ல இழுபட்டு வளைவால் ஒளியெழுப்பி நெளிவை விழியில் எஞ்சவிட்டுச் சென்றது நாகம். பெருமரங்கள் மேல் தொற்றி அமர்ந்து கொண்டை உலைத்து கொத்திய மரங்கொத்திகள் உளியோசை எழுப்பின. அது பல்லாயிரம் கற்தச்சர்களால் கட்டப்பட்டுக்கொண்டிருக்கும் மாளிகையென அக்காட்டை எண்ணச்செய்தது.

அவ்வடர்காட்டிலும் கால்புழக்கம் பதித்த வழியொன்று சென்றிருப்பதை சற்று விழி தெளிந்த பின்னரே காணமுடிந்தது. அது பசுமைக்குள் வேறொரு பசுந்தடமென கண்ணறிகிறதா கருத்துணர்கிறதா என்னும் மயல்கூட்டி தெரிந்தது. பின்னர்

அவ்வழி சென்ற உடல்களையும் அவ்வுடல்களை நாயின் நாக்கு நுனிகளென ஈரக்குளிருடன் நக்கி அசைந்த இலைநுனிகளையும் காண முடிந்தது. மொழியிலும் சித்தத்திலும் எவரெவரோ சென்ற தடங்கள் என பைலன் நினைத்துக்கொண்டான். அவ்வெண்ணம் எழுந்ததுமே கண்முன் விரியும் காட்டை அழுத்திச்சுருக்கி ஒரு ஒப்புமை மட்டுமே என்றாக்க விழைவதுதான் எது என அவன் சித்தம் வியந்தது.

அடர்காட்டின் முகப்பிலேயே நீண்ட கழிகளை வெட்டி முனை கூரச்செய்து அவர்களுக்கு அளித்திருந்தான் சண்டன். கூர்கழியுடன் வைசம்பாயனன் முன்னால் செல்ல பைலனும் ஜைமினியும் சுமந்துவும் பின்னால் சென்றனர். மூங்கில் வளைத்து காட்டுக்கொடி கட்டி இறுக்கிய வில்லை வலக்கையில் ஏந்தி மூங்கில் கூர்கொண்ட அம்புகளை தோள் தூளிகளில் நிறைத்து திசைகள்தோறும் விழி செலுத்தி இலைச்செறிவுகளுக்குள்ளும் மரங்களின் மறைவுக்கு அப்பாலும் கூர்நோக்கியபடி சண்டன் நடந்தான்.

அவர்களின் காலடியோசை பெருகி காட்டின் பசுமைவெளிக்கு உள்ளே எதிரொலித்து ஒரு படை நகர்வென செவிமயக்கு அளித்தது. கையெட்டும் தொலைவுக்கு அப்பால் விழியும் எட்டாதொரு பயணத்தை பைலன் முன்னர் எண்ணியிருக்கவே இல்லை. “இத்தனை தழைக்கக்கூடும் காடு என்று இதற்கு முன்னால் அறிந்ததே இல்லை, சண்டரே” என்றான். “இமயக்காடுகளை கண்டிருக்கிறேன். அவையும் இத்தனை தழைத்து பசுமை மட்டுமே என்றானதில்லை.” மூச்சிரைக்க அவன் நின்றான். மூச்செனநீராவி எழுவதை கண்டான். கொதிகலம் இவ்வுடல். ஆனால் வெளியே உருகுகையில் உள்ளே குளிர்ந்திருக்கிறது இது.

சுமந்து “ஆம், பசுமையை நீலமென்றும் கருமையென்றும் ஏன் சொல்கிறார்கள் என்று இன்றுதான் அறிந்தேன். இதுவே மலைநின்ற மாலின் வண்ணம்” என்றான். ஜைமினி “குளிர்நிறைந்த இமயக்காடு அஞ்சிய எருதின் உடலென சிலிர்த்திருக்கிறது. வறண்ட தண்டகாரண்யம் முட்பன்றியென சினந்திருக்கிறது. இக்காட்டின் ஒவ்வொரு இலையும் இளமைந்தர் கைகளைப்போல் தொட்டு அழைக்கின்றன. கிளைமுனைகள் அன்னையர் வாழ்த்து என தலைதொட்டுத் தழுவுகின்றன” என்றான்.

சண்டன் “தென்னகமே பெருங்காடுகளின் நிலம். இங்கு ஆண்டுக்கு மூன்று மழைக்காலம். இது வாயுவும் வருணனும் புரக்கும் அரசு. இதோ, அடிமரமென பெருத்து பசும்பெருக்கென இலை சூடி நிற்கும் இவை அனைத்தும் தென்கடலில் காற்று மொண்டு வந்த மழைநீரே” என்றான். “பாரதவர்ஷத்தை வேள்வியில் எழுந்த அனல் என்று உரைப்பதுண்டு நூலோர். அதன் கொழுந்து இமயம் என்றால் கரித்தழலே திருவிடம். பாரதம் அறத்தின் குளிர்ச்சுனை என்பர் கவிஞர். அதன் வெள்ளியலைகளே இமயம், குளிர்ந்திருண்ட ஆழமே திருவிடம்.”

“கரியதாகையால் இக்காடு காளிகவனம் என்று அழைக்கப்படுகிறது. இங்குள்ள மக்கள் காளிகர் எனப்படுகின்றனர். பாதாளத்தை ஆளும் வாசுகியின் வழிவந்த காளிகன் என்னும் கருநாகத்தின் நச்சில் இருந்து முளைத்தெழுந்த காளர்கள் என்னும் தொல்பிரஜாபதிகள் நூற்றெண்மரால் உருவாக்கப்பட்ட குலம் என அவர்கள் தங்களைப்பற்றி சொல்கிறார்கள். தொல்நாகர்குலங்களுக்கும் இவர்களுக்கும் அணுக்கம் மிகுதி. இவர்களை கருநாகர்கள்

என்றும் அப்பால் தாழ்வரைகளில் வாழ்பவர்களை பைநாகர்கள் என்றும் சொல்லும் மரபுண்டு.”

காட்டுப்பூனை ஒன்று மரக்கிளை ஒன்றின் தளிர்க்கொத்து சூடிய நுனி நோக்கி மெல்ல நடந்து வந்தது. அதன் மெல்லிய கால்வைப்புக்கேற்ப கிளை குரங்குவால்போல் வளைந்து தழைந்து இலைகள் குலுங்க அமைந்தது. இரு சுடர்மணிகளென விழிகொண்டு அவர்களை நோக்கி செவிமடித்து தலைதாழ்த்தி வால்தூக்கி அசைத்தது அனல்வரிகள் கொண்ட செம்பூனை. அனல்கொழுந்து என அதன் நாக்கு நீண்டு வளைந்து செல்ல ஆழ்ந்த குரலில் அகவியபின் அக்கிளையை உலைத்து மலர்பொழியத் தாவி எழுந்து பிறிதொரு கிளை பற்றி நிலைகொண்டு நீள்வாலைத் தூக்கியபடி நடந்து அப்பால் சென்று மறைந்தது.

“நிகரென எவருமில்லை என்றறிந்த நிமிர்வு” என்று ஜைமினி சொன்னான். “எளிய பூனை தன் எண்ணத்தால் புலியென்றாகி விட்டது.” பைலன் புன்னகைத்து “முழவுநடனத்தின் தாளம்!” என்றான். அது குரங்குகளின் ஒலி. அலையலையென எழுந்தமைந்து கேட்டது அது. ஆனால் அவை இலைத்தழைப்புக்கு மேல் எங்கோ இருந்தன. அங்கு ஒற்றை ஓசைப்பரப்பென அலைகொண்டு நிறைந்திருந்த பறவைக்குரல்களுடன் அவையும் கலந்து ஒலித்தன.

“இக்காட்டின் முதன்மை விலங்கு யானையே” என்றான் சண்டன். “இக்காடு போலவே கரியது. இதன் ஆழம்போல ஓசையற்றது. கிளை முறிபடும் ஒலியில் மட்டுமே இங்கு யானையை அறிய முடியும். பெருங்களிறுக்கூட்டம் ஒன்று மிக அருகே கடந்து செல்லும்போதுகூட அச்சிறு ஒலிகளை அன்றி நாம் எதையும்

கேட்க முடியாது. நம்மீது கருணைகொண்ட வழிகாட்டிப்பறவைகள் கூறும் மொழி கேட்க பழகிக்கொண்டால் ஒழிய இக்காட்டை எவரும் கடக்க இயலாது.”

“தென்னகத்தின் இப்பெருங்காடு கீழே கடல் சூழ்ந்திருக்கும் நீள்நிலம் சேர்த்து வைத்திருக்கும் செல்வக்குவைகளுக்கான காவலரண் என்கிறார்கள். செல்வம் உறையுமிடமென்பதனால் இது திருவிடம். இங்கு அமைந்துள்ளன நூற்றெட்டு அன்னையர் குடிகொள்ளும் ஆற்றல் மையங்கள். அதற்கப்பால் மும்முடியர்கள் ஆளும் தமிழ்த்தொல்நிலம். மாறாக்கன்னிமை கொண்ட முதல் தெய்வம் அமர்ந்திருக்கும் முக்கடல் முனம்பு. இப்பாரதவர்ஷம் அக்கன்னியின் தவத்தால் ஆளப்படுகிறது” என்றான் சண்டன்.

“சிற்றாடை கட்டி சிறுமியென அங்கிருப்பவள் பாரதவர்ஷமெங்கும் தேவியென, அன்னையென நூறாயிரம் முகம்கொண்டு நிறைந்திருக்கிறாள். பிடாரி என்றும் பேரருள் கொண்டவள் என்றும் உருக் காட்டுகிறாள்” என்று அவன் தொடர்ந்தான். “காளிகம் என்னும் இக்காடும் கன்னி அன்னையின் ஆலயம் என்கின்றன கதைகள். இதன் தென்கிழக்கு மூலையில் அமைந்துள்ளது கருங்குமரித் தெய்வம் கௌசிகையின் ஆலயம். அவளை குமரிமுனை அமர்ந்த கன்னியின் பிறிது வடிவம் என்று வழிபடுகிறார்கள் நூற்றெட்டு தொல்குலத்தோர். ஆண்டிற்கு மும்முறை சூழ்ந்துள்ள ஊர்களிலிருந்து காடுகளுக்குள் புகுந்து அவள் ஆலயத்தை வந்தடைந்து படையலும் பூசெய்கையும் முடித்து திரும்புகிறார்கள். இங்குள பாதைகள் அனைத்தும் அன்னை ஆலயத்திற்குச் செல்லும் மானுடரின் கால் பட்டுப் பிறந்தவையே.”

[ 4 ]

காளிகக்காட்டின் காலடிப்பாதையில் சண்டன் நான்கு பக்கமும் ஓடும் விழிகளுடன் காடெனச் சூழ்ந்துள்ள இலைகளையே செவிகளென எண்ணியவன்போல அன்னையின் கதையை சொல்லிக்கொண்டு வந்தான். இளையோர் நால்வரும் அவன் குரல் கேட்கும் பொருட்டு விரைவழிந்து சற்று உடல் நெருங்கிக்கொண்டார்கள். “மகாபைரவர் இயற்றிய பிரசண்ட புராணத்தின் கதை இது” என்று சண்டன் சொன்னான். “இமயமலையில் தாட்சாயணியாகப் பிறந்தவள் முதற்சிவத்தின் இடம் அமைந்த சிவை. அவளே தெற்கே திருவிடத்தின் காளிகப்பெருங்காட்டில் அழகிய குறமகளென வந்தாள். அது முதலன்னையும் தந்தையும் கொள்ளும் ஆடல். மானுடரில் விலங்குகளில் பறவைகளில் பூச்சிகளில் புழுக்களில் நுண்ணுயிர்களில் அவர்கள் காதல்கனிந்த இணைகளென பிறந்துகொண்டே இருக்கிறார்கள். அவர்களின் கூடலாலும் ஊடலாலும் இயக்கப்படுகின்றன உயிர்க்குலங்கள்.”

காளிகுலமே காராமணி நிறம் கொண்டது. அவர்கள் நடுவே கருமணி என அவள் ஒளிகொண்டிருந்தாள். அவளை காளி என்று அழைத்தனர் அவள் குலத்தோர். காளுதல் என்றால் இருளொளி கொள்ளல் என்று அவர்களின் மொழிப்பொருள். அவள் கன்னங்களின் வளைவில் வானொளி மின்னும் என்று சொல்கின்றன தொல்கதைகள். இருளில் இருக்கையில் அவள் உடல்கொண்ட ஒளியே அச்சூழலைத் துலக்கும் என்கின்றன. அவள் கூந்தலொளியை மேனிக்கருமையின் ஒளி மிஞ்சும் என்றும் மேனிக்கருமையை விழிக்கருமை அஞ்சச் செய்யும் என்றும் கூறுகின்றனர் கவிஞர். அவள் நகங்களும்

கருவண்ணம் கொண்டவை. அவை நோக்கு கொண்ட விழிகள் என ஒளிர்பவை.

தன் குலம் ஈன்ற அருமுத்தை நிகரற்ற ஒருவனுக்கே அளிக்க வேண்டுமென்று நோற்றிருந்தார் அவள் தந்தையாகிய கராளர். காளிகர் குடியின் தலைக்குடி அவருடையது. ஆயிரத்தெட்டு பேரன்னையர் பிறந்து பேற்றுத்தவமியற்றி நிறைந்து தெய்வமாகி நோன்பிருக்கும் மகளிரின் படையல்கொண்டு விண்ணமர்ந்திருக்கும் குருதிக்கொடிவழி அவருடையது. அவ்வன்னையரின் அருள் கொண்டு எழுந்த மகளை வேட்டு தன் இல்லம் வருபவர் எவராக இருப்பினும் காளிக குலத்தின் முதற்தெய்வமாக அமர்ந்திருக்கும் ஏழுதலை நாகமாகிய காளிகனின் ஆலயத்திற்குள் சென்று அவன் அருளாணை பெற்று வரவேண்டும் என்று அறிவித்திருந்தார்.

அவள் அழகை காட்டுப்பாடலில் கேட்டு உளம் மயங்கி அங்கு வந்த இளையோரில் பலர் அவ்வாணையைக் கேட்டதுமே அஞ்சி விலகினர். துணிந்தவர் அனைவரும் பெருநாகங்கள் செறிந்த புற்றுக்குவை அமைந்த அக்கோயிலுக்குள் சென்று அக்கணமே சீறிச் சொடுக்கும் இமைநோக்குள்ள நச்சு தீண்டி இறந்தனர். அந்நச்சு தொட்டதுமே அவர்களின் உடல்கள் காளிகர்போல் கருமைகொண்டன. முகத்தில் களியுவகை என சிரிப்பு ஒன்று எழுந்து உறைந்தது. கூப்பிய கைகளுடன் விரைத்துக்கிடந்த அவர்களின் உடல்களை மூங்கில் தெப்பத்தில் கட்டி பயோஷ்னியின் பெருக்கில் இட்டு திசைசேர்த்தனர் அக்குலத்தோர். ஒவ்வொரு நாளும் பயோஷ்னியில் ஒழுகும் ஒரு உடல் அவளை ஊருக்கு அறிவித்துச் சென்றது.

பின் அவள் வெல்லமுடியாதவள் என்றே அறியப்படலானாள். உச்சிப்பாறை முகட்டில் கனிந்த தேன்கூடு அவள் என்றனர் அயலூர்களின் அங்காடிப்பாடகர். அரியதேதும் இறைவனுக்கே என்றனர் காடுகளின் முதுகுலத்தோர். அவளையீன்ற அன்னை தன் மகள் கன்னியென்று நின்றுவிடுவாள் என்று அஞ்சி துயர்கொண்டு ஏங்கலானாள். "கன்னியென்று நின்றிருப்பதே அவள் ஊழென்றால் அவ்வண்ணமே ஆகுக!" என்று அவள் தந்தை சொன்னார். ஆனால் தன் ஆழுள்ளத்தில் அமைதியிழந்தமையால் அவளை நோக்குவதையே தவிர்த்தார். நாள்தோறும் ஒளிகொள்ளும் இவள் ஒருநாள் சுடரென்றாகி விண்புகுவாள் போலும் என்றனர் குடிப்பாணர். அவள் நோற்கும் கன்னிமை கனிந்து கணவன் வருவான் என்றார் குலப்பூசகர்.

அவளை மணப்பதற்கென்று அனல்வண்ணன் விந்தியஅடுக்கின் ஏழு மலையை படியென்றாக்கி இறங்கி வந்தான். செஞ்சடைச்சுருள் மகுடத்தில் அனலென காந்தள் மலர் சூடி, நெற்றியில் வெண்சாம்பல் பொடி பூசி, நாகக்குழை அணிந்து, வெள்விடை மேல் வந்தவன் காளிகக்குடி வாழும் ஊர் நடுவே மன்றுநின்று தன் உடுக்கை ஒலித்தான். எவெரெவெரெவரென ஒலித்தது குறுந்தோல் வட்டக் கொட்டு. குடில்களுக்குள் இருந்து எட்டிப்பார்த்தவர்கள் "யார் இவன்? எருக்குமாலை அணிந்திருக்கிறான். பன்றிப்பல் பிறை சூடிய செஞ்சடையன். முன்பு கண்டதில்லையே இவனை" என வியந்தனர். தன் மையக்குடில் விட்டு நாகபடம் செதுக்கிய மரக்கொந்தையும் கல்மணிமாலையும் அணிந்து வெளிவந்த கராளரை நோக்கி அவன் முழங்கும் குரலில் "குறவர்க்கரசே, உன் மகளை மணம்கொள்ள வந்துள்ளேன்" என்று உரைத்தான்.

இளிவரல் புன்னகையுடன் கராளர் “மகட்கொடை மறுத்தல் எங்கள் அன்றாட நிகழ்வாகி ஐந்தாண்டுகள் ஆகின்றன, செஞ்சடையரே. முடிகொண்ட மாமன்னர்கள் அனுப்பிய தூதர்கள் வந்து இங்கு நிரைகொண்டு நிற்காது ஒரு நாளும் கடந்து சென்றதில்லை. எங்கள் குலதெய்வமென அமர்ந்திருக்கும் கூர்நஞ்சின் தொடுகையேற்று இறந்தவர் நிரையோ அதனினும் பெரிது. மலைமகனெனத் தோன்றுகிறீர். விரைவிலா விடையேறி வந்திருக்கின்றீர். உமக்கும் அதுவே நெறி” என்றார்.

தன் முப்பிரி வேலை தோள்சாய்த்து இனிய புன்னகையுடன் எரிவண்ணன் சொன்னான் “நஞ்சு எனக்குப் புதியதல்ல. நான் உண்ணும் அமுதே அது. காட்டுக, உங்கள் குல தெய்வம் உறையும் புற்றுக்கோயிலை!” அவன் புன்னகையின் தெளிவு அவர்களை குழப்பியது. கராளர் ஒருமுறை தன் துணைவியை திரும்பி நோக்கியபின் “அவ்வண்ணமே ஆகுக!” என்றார். அவள் அவன் மேனிப்பொலிவை நோக்கி கைகூப்பி கண்ணீர்ப்படலம் ஒளிவிட நின்றிருந்தாள். “ஆனால் இது உன் தேர்வு என்றும் இவ்விறப்புப் பழிக்கு எங்கள் குடி பொறுப்பல்ல என்றும் நீரையோ நிலத்தையோ தொட்டு நீ ஆணையளிக்கவேண்டும்” என்றார் கராளர். அவன் நிலம் தொட்டு “ஆணை ஆணை ஆணை. இது என் முற்றுறுதி” என்றான்.

குறுமுழவு மீட்டி குலப்பூசகர் முன்னால் செல்ல குருத்தோலை முடிசூடி குடி மூத்தோர் எழுவர் அவனைச் சூழ்ந்து உடன்அழைத்துச் சென்றனர். விந்தை காண்பதற்காக இளையோரும் பெண்களுமென ஒரு பெருங்கூட்டம் அவர்களைத் தொடர்ந்து சென்றது. அவன் நடந்தபோது இடையணிந்திருந்த வெள்ளெலும்பு குடைந்து செய்த

மணிமாலைகள் மெல்ல குலுங்கின. அவன் காலடிபட்ட புற்கள் வணங்கி எழுந்தன. நோக்க நோக்க கிராத வடிவம் நெஞ்சள்ளும் பேரழகுகொள்வதன் மாயமென்ன என்று பெண்டிர் அகத்தே வியந்தனர். பெருமூச்சுவிட்டபடி அவனையன்றி பிறிது நோக்காது உடன் சென்றனர்.

நூற்றெட்டு மூங்கில் கால் நாட்டி எழுப்பிய தன் குடிலின் தெற்குச் சாளரத்தினூடாக விழிகளில் இளநகையொளிர காளி அவன் செல்வதை நோக்கியிருந்தாள். இருபுறமும் நின்ற அவள் தோழிகள் ஜயையும் விஜயையும் ஜயந்தியும் அபராஜிதையும் அவள் நிலைமாற்றம் கண்டு களியாடினர். "முத்து வயலை அறுவடை செய்யும் பாண்டியன் தோற்றுத் திரும்பியது உன் வாயில். நெல்மலை கொண்ட சோழன் இளிவரலுக்குள்ளானான். பெருங்களிறுகளை கால்களாகக் கொண்ட சேரன் மகள் மறுக்கப்பட்டான். நூறு காதுகளைக் கொண்ட திருவிட பெருமன்னன் இன்னமும் உன்னை நினைத்து ஏங்குகிறான். இவனோ நீற்றுப்பொடி பூசி புலித்தோல் ஆடையணிந்து வந்திருக்கும் மலைமகன். விழி கண்டால் பித்தனென்று தோன்றுகிறது" என்றாள் ஜயை.

"இவனுடன் சென்று நீ உச்சிமலைக் குகையில் பூதங்கள் ஏவல் செய்ய வாழப்போகிறாயா என்ன? அவனுக்கு புலித்தோல் எனில் உனக்கு மான்தோல். வெள்ளெலும்பில் அணிகள். உனக்கும் இருக்கும் முடிப்பிறைப் பல்லும் முப்பிரிவேலும். உன் இதழ்மேல் இதழ் பதித்து அவன் முத்தமிடுகையில் உன் நெற்றியிலும் எழும் ஒரு மூன்றாம் விழி. கரியவளே, காட்டிலிருந்து மேலும் அகக்காட்டுக்குச் செல்வதே உன் ஊழ் போலும்" என்றாள் விஜயை.

“பித்தன். அவனுக்கிணையாக நீயும் பிச்சியென்றாவாயா? அவன் ஆட்டும் உடுக்கொலிக்கு நீ ஆடிக்களிப்பாயா?” என்றாள் ஜயந்தி. “உடனாட அந்த உச்சிமலையில் பூதநிரைகளே எழும். நாதமென்று இந்தக் காளை திமிலசைக்கக்கூடும்” என்றாள் அபராஜிதை. “ஒருகையில் தழலும் மறுகையில் தாளமும் கொண்டிருப்பான். மான் தொடர மழுவேந்தி நின்ற மலைவேடன். அவன் துணைவியாகிய நீ கொள்ளும் ஊர்தி எது?” என்று ஜயை சிரித்தாள். “வெள்ளெருது அஞ்சும் சிம்மம்…” என்று விஜயை சொன்னாள்.

அவளோ அவ்விளிவரலை புகழ்மொழியாக ஏற்று மெய்சிலிர்த்துக்கொண்டிருந்தாள். தன் உடல் இனிய மயிர்ப்பு கொள்வது ஏன்? முலைக்குவைகள் குறுவியர்வையுடன் விம்மித் தணிவது ஏன்? தொண்டை வறள்கையில் இதழ் ஈரம் கொள்வது ஏன்? மூச்சு வெப்பம் கொள்கையில் கண்கள் பனிப்பது ஏன்? அதுவரை அறிந்திராத மெய்ப்பாடுகளால் தளர்ந்து சாளரக்கழிகளை இருகைகளாலும் பற்றிக்கொண்டு தலைசாய்த்து விழித்த கனவிலென அசைவிழந்திருந்தாள். பின் அறியா உள எழுச்சியால் அவள் கண்ணீர்விடலானாள்.

பெருநாகம் குடிகொண்ட ஆலய முகப்பை அடைந்து அதன் கதவென அமைந்த ஏழு மூங்கில்களை விலக்கி பூசகர் சொன்னார் “இதன் வாயிலுக்கு இப்பால் நின்று வழிபடுவதுதான் எங்கள் வழக்கம். நூற்றெட்டு முகடுகள் கொண்டதும் ஆயிரத்தொரு வாய்கள் கொண்டதுமான இந்தப் புற்றுக்குவை பல்லாயிரம் ஆண்டுகளாக இங்குள்ளது. இதன் பணிக்கென்று இக்காட்டில் பிறந்து வந்தவர்கள் நாங்கள். இங்கு இறப்பிலாது வாழும் எழுதலைப் பெருநாகமான காளிகன் நூற்றெட்டுமுறை கரிய மண்ணைக் கொத்தி எங்களை

முளைத்தெழ வைத்தது என்பது தொல்கதை. படையலும் பூசைகளும் வெளியிலிருக்கும் இந்த மூன்று பலிபீடங்களில் மட்டுமே நிகழ்வது வழக்கம்.”

அவன் மேல் நீறிட்டு வாழ்த்தி பூசகர் சொன்னார் “நீ எங்கள் குல மகளை கைக்கொள்ள வேண்டுமென்றால் இவ்வெல்லை தாண்டி செல்லவேண்டும். அப்புற்றுகளில் ஒன்றின் வாய்க்குள் கைவிட்டு மாநாகர்களே அருள்க, இக்குலக் கன்னியை எனக்கு நல்குக என்று கோரவேண்டும். அவர்கள் அருளினார்கள் என்றால் நீ உயிருடன் மீண்டு இப்படிக்கு இப்பால் வருவாய். எங்கள் குலம் உனக்குப் பணியும். எங்கள் குலமகள் உன் குடிக்குரியவளாவாள்.”

புன்னகையுடன் “நன்று, நான் அதை இயற்றுவேன்” என்றபின் தன் முப்பிரிவேலையும் அதில் கட்டிய உடுக்கையையும் அங்கே சாற்றிவைத்து எலும்புமணிக் கங்கணம் ஒலித்த கைகளை நீட்டி படிதொட்டு சென்னிசூடி வணங்கி அவன் வாயில் கடந்து உள்ளே சென்றான். அங்கிருந்த கன்னியர் அஞ்சி மூச்சிழுத்து நெஞ்சழுத்தி ஏங்கி “என்ன நிகழ்கிறது! தென்றிசையன்னையரே, நீங்களே சான்று” என்றனர். இளையோர் அவன் அசைவுகளை நோக்கி அவற்றுக்கேற்ப அறியாது அசையும் தசைகளுடன் இறுகிய நாணில் அம்பென நின்றனர்.

புற்றுக்குவையை அணுகி ஒருகணம் நோக்கிவிட்டு முதற்குவையில் கால் வைத்து இரண்டாம் முகடில் கைபற்றித் தொற்றி அவன் மேலேறினான். வெளியே நின்ற பூசகர் பதற்றத்துடன் “இளையோனே, அறியாது செய்கிறாய் நீ. இதன் நூற்றெட்டு வாய்களில் பாதாளப் பெருநாகங்களின் புவிமீள் வழிகள் அமைந்துள்ளன. அது கார்க்கோடகனின் முகடு. அப்பால் அதோ, அது திருதராஷ்டிரனுக்குரியது. இது

மணிகர்ணனின் முகடு. அதனருகே உள்ளது அஜமுகனின் வழி. இப்பால் வியாஹ்ரன். மேலே உச்சிவாய் திறந்திருப்பது வாசுகியின் மைந்தனும் எங்கள் குலதெய்வமுமான காளிகனின் குகைவாய். ஒருமுறை உமிழ்ந்தால் இப்புவியை முற்றெரித்து சாம்பலாக்கி பறக்கவிடும் வல்லமைகொண்ட அருநஞ்சு அவன் நாவில் உள்ளது" என்று கூவினார்.

"நீ அங்கு செல்லவேண்டியதில்லை. இப்புற்றிலுள்ள அனைத்து நாகங்களும் அவனே. ஏதேனுமொரு புற்றுவாயை அணுகி அதற்குள் கைவிட்டு நாகத்தின் அருள் கொண்டால் போதும்" என்றார் முதுகுலத்தார் ஒருவர். இல்லத்துச் சாளரத்தில் நின்றிருந்த அவளிடம் ஓடிவந்த ஜயை "புற்றுமுகம் பற்றி ஏறுகிறான். பெருநாகங்களை அறைகூவுகிறான்" என்றாள். விஜயை "அவன் சற்றும் அஞ்சவில்லை. இளமைந்தன் மணல்மேட்டிலாடுவதுபோல ஏறிச் செல்கிறான்" என்றாள். அவள் அதை வேறொரு விழியால் அண்மையிலென கண்டுகொண்டிருப்பவள் போலிருந்தாள்.

கூடி நின்றவர்களில் ஒருத்தி தன் நிறையழிந்து "வேண்டாம்! நச்சுப்பெருக்கு அப்புற்று. விலகிவிடுங்கள். இளையோனே, வீண் முயற்சி வேண்டாம்" என கூவினாள். அதிலெழுந்து அலைகொண்ட பெண்டிர் அத்தனைபேரும் அவனை நோக்கி கைநீட்டி "வேண்டாம்... மீள்க!" என்று கூவி அழுதனர். அவன் அச்சொற்களை கேட்கவில்லை. முதன்மைப்புற்றுமேல் ஏறி காளிகனின் பாதைக்குள் தன் கையை விட்டான். புற்று ஒரு பெருஞ்சங்கமென்றாகி உள்ளே கார்வை எழுந்தது. அனைத்து வாயில்களிலிருந்தும் கரிய நாகத்தலைகள் சீறி எழுந்தன.

விறகுக்குவையிலிருந்து எழுந்தாடும் கரிய தழல் நாக்குகள்போல அனைத்து புற்றுவாய்களிலிருந்தும் எழுந்த

நாகங்கள் சீறி நெளிந்தன. நீட்டிப் பறந்தன இருமுனை நாக்குகள். சிறுமணிக் கண்களில் அனற்துளி அசைந்தது. அணுகி நின்றிருந்த அனைவரும் அஞ்சி விலகி பின்னடைந்தனர். அலறல்களும் அழுகைகளும் கூக்குரல்களும் எழுந்து சூழ்ந்தன. அவற்றின் சீறல்கள் இணைந்து நீரலை ஒன்று எழுந்தணுகுவதுபோல ஒலித்தன.
மையப்பெருவாயிலிலிருந்து ஏழு தலைகளும் பறக்கும் செந்நாவும் செம்மணி விழிகளுமாக அள்ள எழுந்த ஏழுவிரல் கைபோல எழுந்து நின்றாடியது கருநாகமாகிய காளிகன்.



அதன் கழுத்தைப்பற்றி உருவி எடுத்து கையில் சுழற்றித் தூக்கி தன் கழுத்தில் அணிந்துகொண்டு அவன் இறங்கினான். கரிய கடலலை என எழுந்து பேருருக்கொண்டு எழுந்த அதன் படம் அவன் தொட்டதுமே சுருங்கி எடுத்ததுமே மேலும் சிறுத்து கழுத்தில் அணிந்ததும் கருமணிகோத்த ஆரமென ஆன விந்தையை அவர்கள் ஓசையடங்கி வாய்திறந்து விழிமலைத்த திகைப்புடன் பார்த்தனர். என்றும் அவன்

நெஞ்சிலேயே அமைந்திருந்தது அது என்று அவர்களுக்குத் தோன்றியது.

புன்னகையுடன் வெளியே வந்து அவன் “நீங்கள் சொன்னதை செய்துவிட்டேன். குலத்தோரே, உங்கள் குலமகளை கைபிடிக்க விழைகிறேன்” என்றான். ஆயிரம் குரல்கள் ஒரே கணத்தில் வெடித்து எழுந்தன. “அவ்வண்ணமே ஆகுக! இனி எங்கள் குலம்காக்கும் தெய்வமென நீங்களே நின்றருள்க! இங்கு அளிக்கப்படும் படையல் அனைத்திலும் உங்கள் சுவைதேர் நா வந்து படுக!”

பூசகர் குரல் நடுங்க கைகூப்பி “எந்தையே, துயர்கொள்கையில் எங்கள் குரல் உங்கள் செவிகளை வந்தடையட்டும். அஞ்சுகையில் எங்கள் குரலின்மையை நீங்கள் கேட்குமாறாகட்டும். எங்கள் கொடிவழிகளுக்கு காப்பென்று உங்கள் பேரையே என்றும் உரைப்போம்” என்றார். “ஆம், அவ்வாறே ஆகுக!” என்றான் அவன்.

ஜயையும் விஜயையும் ஓடிவந்து காளியின் இருதோள்களையும் பற்றிக்கொண்டு “வென்றானடி அப்பித்தன். இனி உன் கைபற்றுவான் அவன்” என்றனர். அவள் கண்ணீர் வழிய அசைவற்று தலைகுனிந்து அமர்ந்திருந்தாள். “வருந்துகிறாயா?” என்றாள் ஜயந்தி. “அவள் உடல் சொல்கிறது, அது உவகை” என்றாள் அபராஜிதை. அவள் அச்சொற்களுக்கெல்லாம் அப்பால் எங்கோ இருந்தாள்.

# கிராதம் - 64

[ 5 ]

காளிகக் காட்டின் பசுந்தடப் பாதையில் நடந்தபடி சண்டன் சொன்னான் “காளிகக்குடியின் பொதுமுற்றத்தில் அமைந்த நூற்றெட்டு கால் கொண்ட குருத்தோலைப் பந்தலில் காளிகப்பெருங்குலத்தின் பன்னிரு குடிமூத்தார் அவை அமர்ந்திருக்க குடிகளனைவரும் அரிமலரிட்டு வாழ்த்த தலைகுனிந்து அடியெண்ணி நடந்துவந்த காளியை தாய்மாமன் கைபற்றி கொண்டுவந்து மன்றுநிறுத்தினார். தந்தையும் தாயும் வாழ்த்த அவள் மலர்மாலை சூடி மணை அமர்ந்தாள். குரவையிட்டு வாழ்த்தினர் இளமகளிர். வாழ்த்தொலி எழுப்பினர் இளைஞர். முழவுகளும் கொம்புகளும் முழங்கின. உச்சிமரத்தின் முகட்டிலேறி அமர்ந்து முழவிசைத்து காட்டுக்கு செய்தியறிவித்தனர்.”

குடிமூத்தார் கேட்டபோது தன் பெயரை காளையன் என்றும் பைநாகப் பெருங்குலத்தான் என்றும் அவன் சொன்னான். காளி அவனுக்கு உகந்த இணையே என்றனர் பெண்கள். அவளருகே அவன் நின்றபோது அந்தியும் இரவுமெனத் தெரிந்தனர். கருமையும் செம்மையும் கூடிய அழகிய குனிமுத்து அவர்களின் இணைவு என குழந்தைகள் எண்ணின. கரியிலெழும் கனல் என்று எண்ணினர் குடிமூத்தோர்.

சிறுபறை அடித்து பாடி குலதெய்வங்களையும் நீத்தாரையும் வழுத்தி பூசகர் அவனை அக்குலத்திற்குள் எடுத்துக்கொண்டார். அவள் தந்தை கராளர் அவன் கையிலொரு கீறலிட்டு குருதிச்சொட்டு எடுத்து நீரில் கலந்து தங்கள் குடிகள்மேல் வீசினார். தான் அணிந்த எருக்கு மாலையை அவளுக்கு அவன் அணிவித்தான். அவள் காந்தள் மாலையை அவனுக்கு சூட்டினாள்.

தாய்மாமன் அவள் கைபற்றி அவனுக்களிக்க அரிமலர் பொழிந்த திரையில் மறைந்தது அக்காட்சி. விம்மியழுதபடி அன்னை தன் கணவன் தோளில் சாய்ந்துகொண்டாள். அவர்கள் கை தொட்டுக்கொண்டபோது தொலைவில் இடி முழங்கியது. மின் ஒன்று காட்டை ஒளிரச்செய்து கடந்து சென்றது. வானமொரு தூவலாக மாறி மெல்ல மண் படிந்தபோது இளமழை பெய்யலாயிற்று.

பன்னிரு நாட்கள் இல்லாள் குடியில் புதுமணம் ஆடிவிட்டு அவள் அன்னையும் தந்தையும் குடியும் சுற்றமும் கண்ணீருடன் சூழ்ந்து விடைகொடுக்க அவள் கைபற்றி அழைத்து காட்டுக்குச் சென்றான். அவள் கன்னம் தொட்டு வாழ்த்தி கைமுத்தினர் அன்னையர். அவள் கைதொட்டு நெஞ்சில் வைத்து ஏங்கினர் கன்னியர். தாள் பணிகையில் தலைதொட்டு வாழ்த்தினர் முதுதந்தையர்.

வலக்கால் எடுத்துவைத்து அவள் அக்குடியின் எல்லை கடந்தபோது அந்தி விழுந்ததுபோல் அங்கு இருள் சூழ்ந்தது. நெஞ்சு கலுழ்ந்தபடி அன்னை நிலத்தமைந்து விம்மி அழுதாள். அனைவரும் சோர்ந்து எடைகொண்ட உடல்சுமந்தவர்கள்போல் ஆங்காங்கே அமர்ந்தனர். அவர்கள் சென்றுமறைந்த சித்திரம் விழிகளில் எஞ்சியிருக்க அப்பாதையை நோக்கினர். அவன் அணிந்த எலும்புமணி மாலையும் அவள் சூடிய கல்மணி நகைகளும் ஒலிக்கும் கிலுக்கம் நெடுநேரம் கேட்டுக்கொண்டிருந்தது. பின்னர் அது எப்போதும் அக்காட்டில் இருந்தது.

நூறு வளைவுகொண்ட அலையென வடக்கே எழுந்த விந்தியமலையின் உச்சியில் அமைந்த மலைக்குகை முப்பிரிவேல்போல் மூன்று வழிகளாக இறங்கி

மண்ணுக்கடியில் சென்று பாதாள அனலை அள்ளிவந்தது. அவன் அக்குகையில் அவளுடன் வாழ்ந்தான். காலத்தை கணத்துளிகளாக்கி ஒவ்வொரு துளியையும் ஒரு முழுவாழ்வென்றாக்கி அவளுடன் அவன் காதலாடினான். பத்து விரல்நகங்களிலும் விழி கொண்டு அவள் உடலை அறிந்தான். முத்தங்களால் அவளை துளித்துளியாக உண்டு உண்டு மீட்டான். தேனில் பிறந்து தேனுண்டு தேன்திளைக்கும் தேன்புழுவென அவளில் இருந்தான்.

விழிகளை விழிகளுடன் கோத்து அவள் உள்ளத்தமைந்து சொற்களை எல்லாம் தான் உறிஞ்சிக்கொண்டான். சொல்லற்ற அமைதியில் இருவரும் ஒன்றென ஆனபோது சூழ்ந்திருந்த புவிப்பரப்பனைத்தும் செயல்கள் ஒருகணம் நிலைத்து இருண்டன. பின் ஆமென்று அவை நிலைமீண்டன. பறவைகள் எங்கோ வாழ் என்றும் ஈன்றவளே என்றும் கூவி உயிர்கொண்டன. அவள் அவனை செவ்விழிகளால் நோக்கி நாணியபோது வான் சிவந்தது. அவள் நாணம் கண்டு அவன் நகைத்தபோது வெயிலொளி பரவியது. அவர்களின் காதல் சொல் பொருள்கொண்டதுபோல் நீர் ஒளிகொண்டதுபோல் அனல் வெம்மை கொண்டதுபோல் மண்நிகழ்ந்தது என்கின்றது மகாபைரவரின் சொல்திகைந்த பிரசண்ட புராணம்.

இனிய காதல் ஓர் உறவல்ல, விளையாட்டு. ஆணும் பெண்ணும் ஆடத்தகுந்த விளையாட்டு ஒளிந்தாடலே. நாளும் இரவும் அவர்கள் ஆடியதும் அதுவே. ஒருவரை ஒருவர் ஒருகணமும் ஒழியாது நோக்குபவர் மட்டுமே ஒளிந்தாடலின் உச்ச உவகையை அறிய முடியும். இலைகளின் பசுமையில், நீரின் நீலத்தில் பாறைப்பிளவின் வாயிருளில் அவள் தன்னை ஒளித்துக்கொண்டாள். அவளை அறிந்த அவன்

புலன்கள் முட்பன்றியெனக் கூர அவள் கால்தடமும் ஒலித்தடமும் மென்மணமும் தேடி அவளை கண்டுகொண்டான். பறவைக்குரலும் நிழலாடலும் ஒளியசைவும் தேர்ந்து அவளை கண்டுபிடித்தான். அவளோ தன் அல்குலும் முலைகளும் இதழ்களும் அறிந்த நுண்மை ஒன்றால் நேராக அவன் ஒளிந்திருந்த இடம் நோக்கி வந்து தழுவிக்கொண்டாள்.

ஒவ்வொரு முறையும் புதிய ஒரு காளியை அவன் கண்டுபிடித்தான். ஒவ்வொரு முறையும் புத்தம் புது காளையனை அவள் பெற்றாள். கண்டடைதலின் தருணத்தில் புதிதெனப் பிறந்தெழுந்து கூவி நகைத்து நீர்வழிப்படுபவன் புணையை என அவள் கைகளாலும் கால்களாலும் தழுவிக்கொண்டாள். அவளை அள்ளி மலரென தன் தலையிலும் மார்பிலும் சூடிக்கொண்டான். ஒவ்வொரு கண்டடைதலுக்குப் பின்னரும் முதல்முறை என உறவுகொண்டனர். உருகி இழைந்து ஒன்றென்றாகி அப்பெருநிலையின் அசைவின்மை சலித்து பிரிந்து மீண்டும் ஒளிந்தாடினர்.

பனியின் திரையிலும் புகையின் செறிவிலும் அவன் ஒளிந்துகொண்டான். ஒளிந்திருக்கையில் கண்டடையப்பட வேண்டும் என்று அவன் விழைந்தான். கண்டடையப்பட்டு கை தழுவி கால் பிணைத்து உடல் இணைகையில் உள்ளே ஒரு பகுதி ஒளிந்தே இருந்தது. ஒருபோதும் தாங்கள் முற்றிலும் கண்டடையப் போவதில்லை என்றும் ஒரு துளியும் எஞ்சாது கண்டடையப்படவும் இயலாது என்றும் இருவரும் உணர்ந்தனர். எப்போதும் எஞ்சும் அவ்விடைவெளியிலேயே

இருவரென்றாகி அங்கு நடிக்கும் அது தன் ஆடலை நிகழ்த்துகிறதென்று அறிந்தனர்.

துயிலும் அவள் செவியில் குனிந்து “என்னை தேடுக, இளையவளே!” என்றுரைத்து எழுந்து காலைச் செவ்வொளியில் கரைந்து அவன் உடல் மறைத்துக்கொண்டான். கையூன்றி எழுந்து அவள் அவனைத் தேடினாள். நெளியும் செம்மை படர்ந்த நீரில் காட்டுநெருப்பின் திரையில் பூத்த செண்பகத்தின் மரச்செண்டில் அவனை அவள் தேடினாள். அவளைத் தொடர்ந்து வந்து அறியாது முத்தம் கொடுத்து திகைத்துத் திரும்புகையில் நகைத்து அவன் நகையாடினான். தேடிச் சலித்து முகம் சிவந்து “தோற்றேன். என் முன் வருக, இறைவ!” என்றாள். “எங்கேனும் நீ மறைக! நான் உன்னை கண்டுகொள்வேன். அங்கு மட்டுமே என் உருக் காட்டுவேன்” என்றான்.

அவள் ஓடி காட்டுக்குள் சென்று இலைகளுக்குள் செறிந்த நிழலில் ஒளிந்தாள். பின்னர் அங்கிருந்து மேலும் இருண்ட குகைக்குள் சென்றாள். அங்கிருந்து இரவின் கூரிருளுக்குள் முற்றிலும் உடல் மறைத்தாள். இருளென்றாகி அருவமானாள். சிரித்தபடி தேடிய அவன் தன் புலன்கள் ஊமையானதை உணர்ந்தான். தன் உள்ளம் திகைத்தமைவதை பின்பு கண்டான். உள்ளமைந்த அறியா நுண்புலனும் கைவிட்டபோது அஞ்சினான். எனினும் கைகளிலும் கால்களிலும் அமைந்த அசைவின் அறியா நெறியால் தேடித் துழாவினான். சலித்து மெல்ல சினம் கொண்டான். “எங்கிருக்கிறாய்? என் முன் வருக!” என்றான்.

அவன் காதருகே சிரித்து “கண்டுபிடிக்கிறேன் என்றீர்கள், காத்திருக்கிறேன்” என்றாள். மேலும் பொறுமையிழந்து

“எங்கிருக்கிறாய்? என் முன் வருக இப்போதே!” என்றான் முக்கண்ணன். “தோற்றேன் என சொல்லுங்கள், தோன்றுகிறேன்” என்றாள். “நான் எங்கும் தோற்பதில்லை” என்று அவன் சொன்னான். “தோற்றேன் என்று உரைக்காமல் உங்கள் முன் வரப்போவதில்லை” என்றாள். அக்கணத்தில் வந்து தைத்த கனலம்பு ஒன்று அவனை சீறச் செய்தது. “வரவேண்டியதில்லை. நீயிலாது முன்பு நானிருந்த நிலையே முழுமையானது. செல்க!” என்று சொல்லி திரும்பி நடந்து தன் குகை மீண்டான்.

அங்கு அவளிலாத இன்மையே ஒவ்வொரு பொருளிலும் துலங்குவதைக் கண்டான். உளம் விம்மி நீள்மூச்செறிந்தான். அறியாது விழிகலங்க “காளி, நகையாடாதே. இங்கு எழுக!” என்றான். அவன் துயர் அவளுக்கு அறியா உவகை ஒன்றை அளித்தது. ஒளிந்துகொள்வதனூடாகவே பெண் ஆணை எப்போதும் வெல்கிறாள் என அவள் அறிந்தாள். எப்போதும் தணிபவள் ஒருமுறை வெற்றிச்சுவையை அறிந்தபின் எளிதில் மீளமுடியாதென்றும் உணர்ந்தாள். “வென்ற தருக்கனைத்தையும் நிலத்திட்டு கை தொழுங்கள்” என்றாள்.

தளர்ந்த குரலில் “கைதொழுதேன், வா!” என்றுரைத்தான். அவள் மேலும் எழுந்து “என் கால் தொட்டு வருக என்றுரையுங்கள்” என்றாள். “கால் தொடுகிறேன், வா!” என்றான். அவள் உடல் சிலிர்த்து விழிநீர் கோத்தது. அவளில் கூடினர் இருளுருவாக தென்திசையில் அமைந்த அவள் குடியின் மூதன்னையர். “உங்கள் முடித்தலை என் காலடியில் வளையவேண்டும்” என்றாள். எரிந்தெழுந்த சினத்துடன் “வேண்டாம். நீயில்லாது நான் நிறையிலாதோன். ஆனால் வளைந்திறுவதைவிட இக்குறையுடனே வாழ்வதே மேல்” என்றான். “நானென்று

எஞ்சுவது அழிந்தபின் நான் கொள்வதும் வெல்வதும் எதை? விலகிச்செல்!” என்று கூவினான்.

அப்போதும் அவன் சினம் அவளுக்கு உறைக்கவில்லை. பின்னால் சென்று சிரித்து “தோற்பவர் கொள்ளும் சினம்தான் எத்தனை அழகு!” என்றாள். “விலகிச்செல்!” என்று அவன் கூவினான். முப்பிரி வேலை தலைமேல் தூக்கி “இக்கணம் என் முன் வந்தால் உன்னை கொன்றழிப்பேன். செல்… விலகு!” என்றான். “ஒளியில் மறைந்து என்னை ஆட்டிவைத்தீர்கள். இவ்விருளில் மறைந்து நான் ஆடுகிறேன். ஆணென்றால் வந்து என்னைத் தொடுங்கள் பார்ப்போம்” என்றாள். “இல்லை… இனி அந்த ஆடல் நம்மிடையே நிகழாது. இனி ஒருபோதும் உன்னை நான் தேடப்போவதும் இல்லை” என்றான்.

“அப்படியென்றால் நன்று. நான் செல்கிறேன்” என்று அவள் திரும்பிச்சென்றாள். அவன் தன் பின்னால் வருவான் என அவள் அப்போதும் எதிர்பார்த்தாள். கேட்கும் ஓசையெல்லாம் அவன் காலடி என்று மயங்கினாள். திரும்பிப்பார்க்காது சென்ற அவளுடலில் அமைந்து சித்தம் நொடிக்கொருமுறை திரும்பி நோக்கி ஏங்கியது. அவன் வரவில்லை என உணர்ந்ததும் முதலில் திகைத்து பின் சினந்தது. அது தன் பெண்மைக்கு அவமதிப்பென்று எண்ணினாள். எங்கு செல்லப்போகிறார் என்று இகழ்ச்சியுடன் எண்ணி அதை கடந்தாள். இருண்ட வேர்க்குவை ஒன்றுக்குள் சென்று உடலொடுக்கி அமைந்துகொண்டாள். அங்கிருக்கையில் முழுமையாக இன்மைகொள்ள இயல்வதை உணர்ந்தாள். அவ்விருளில் இருந்து அவன் விழிகளாலேயே தான் உருவென வரைந்தெடுக்கப்படுவதாக அறிந்தாள். களிமண்ணில் அவன் கைகள் தன்னை வனைந்தெடுத்து கலமென்றாக்கி அவன் கொண்ட அமுதை நிறைக்கின்றன.

அதை அவன் உண்கிறான். அவன் கைவிட்டால் மீண்டும் களிமண் நிலமென்றாகி விரிந்து அவன் காலடிகளை நெஞ்சில் தாங்கி அமைவதன்றி பிறிதொரு வழியில்லை அவளுக்கு.

அவன் ஒரு சொல் எடுத்தால், ஒரு நோக்கசைத்தால் தாவிச்சென்று அவன் காலடியில் விழும்பொருட்டு காத்திருந்தாள். அவனோ அவளை மீண்டும் விழியிலிருந்தும் சித்தத்திலிருந்தும் இழந்தான். மீண்டும் அவள் தன்னிடம் ஒளிந்தாடுவதாக எண்ணினான். எத்தனை ஒளிந்தாலும் ஆணை பெண் தன் நுண்மையின் ஒரு முனையால் பின்தொடர்ந்துவிடமுடியும். தன்னை முற்றொளித்துக்கொள்ளும் பெண்ணை தன் உச்சப் புலனொன்றின் கூரால் கூட ஆண் தொட்டறிந்துவிட முடியாது. அவள் செல்லும் ஆழங்கள் முடிவற்றவை. அங்கு அவளுடைய மூதன்னையர் புன்னகைக்கும் விழிகளுடன் அவளை இரு கைகள் விரித்து பெற்றுக்கொள்கிறார்கள்.

உண்மை சினம் கொள்ளவைக்கிறது. நம்மால் மாற்றமுடியாத உண்மையோ பெருஞ்சினம் கொள்ளவைக்கிறது. ஏனெனில் நாமும் ஒரு கண்ணியென்றிருக்கும் இப்புடவிநெசவின் இரக்கமற்ற விரிவை அவை நமக்கு காட்டுகின்றன. தெய்வங்களும் அதில் ஒரு கண்ணியே. சினம் நிலை அழியச்செய்கிறது. நிலையழிவோர் முதலில் பிறழ்வது சொல்லில். சொல்லென்பது சித்தம் ஒவ்வொரு கணமும் கொள்ளும் கயிற்று நடை. ஒருபக்கம் அகமெனும் முடிவிலியின் ஆழம். மறுபக்கம் புறமென்றாகி நின்றிருக்கும் தகவுகளின் வெளி. செவிகள் சொற்களை அள்ளி முடைந்து உருவாக்கிக்கொண்டிருக்கும் வானத்தில் வந்து விழுந்து

திகைக்கின்றன சொற்பொருட்கள். ஒருமுறை சித்தம் அடிபிழைத்தால் சொல் ஓராயிரம் முறை தவறுகிறது.

அவன் அவளை அழைத்தான் "காளி, எழுக! எழுக என் முன்! இது உன் கொண்டவனின் ஆணை!" அவள் அதை கேட்கவில்லை. சினத்தால் அல்ல, காதலாலேயே கருமையிலிருந்து திரட்டி எடுக்கப்படுபவள் அவள் என அவன் உணரவுமில்லை. "எழுக! இக்கணமே எழுக!" சினம் கொண்டு முப்பிரிவேலைச் சுழற்றி "இதோ ஆணையிடுகிறேன், நீ என்னை உளம் நிறுத்திய துணைவியென்றால் இத்தருணத்திலே வந்து என் முன் பணிக!" என்று முக்கண்ணன் கூவினான். அதிலிருந்த கரையற்ற பெருஞ்சினத்தைக்கூட காளி புரிந்துகொள்ளவில்லை. அவன் குரலைக் கேட்டதும் மீண்டும் அவள் முகம் புன்னகை சூடியது. அவன் ஒரு கனிந்த சொல்லை எடுக்கவேண்டுமென அவள் எண்ணினாள்.

"சினம் உங்களை மேலும் சிவக்க வைக்கிறது'' என்று இருளாகி நின்று மெல்ல சிரித்தபடி சொன்னாள். அவள் குரலில் இருந்த காதலை அவன் இளிவரலென்று எண்ணினான். முப்பிரிவேலை நிலத்தறைந்து "இத்தருணத்தில் இங்கு வா! இல்லையெனில் நான் பூட்டிய மங்கலநாண் அறுத்து இங்கு இட்டுவிட்டு விலகிச் செல்!" என்றான். அப்போதுதான் அவள் அவன் கொண்ட சினம் என்ன என்று உணர்ந்தாள். உளம் நடுங்கி ஓடி வந்து அவன் முன் நின்று "என்ன இது? தாங்கள் சொல்வதென்ன?" என்றாள்.

"நீ என்னை வென்று செல்கிறாய். உன் இருளைப் பயன்படுத்தி என்னை சிறுமைப்படுத்துகிறாய். சிறுமகளே, என் ஒளியுடலின் ஒரு சிறு மரு என்று மட்டுமே அமையும் தகுதிகொண்டவள் நீ. கரியவளாகிய உன்னை ஒளியுடல் கொண்ட நான் ஏற்றது என் கருணையினால் மட்டுமே" என்றான். காளி கொழுநன் சினம்

அறிந்த மனையாட்டியரின் இயல்புக்கிணங்க மேலும் தாழ்ந்து “பொறுத்தருள்க! இது ஒரு களியாட்டென்றே கருதினேன். தாங்கள் சினம் கொண்டிருப்பதை உணரவில்லை” என்றாள்.

“இல்லை, நீ உணர்ந்தாய். என் சினத்துடன் நீ விளையாடினாய். இருளென என்னைச் சூழ்ந்து இளிவரல் தொடுத்தாய்” என்றான். “இல்லை, நான் விளையாடுகையில் என் கட்டற்ற கன்னிநாட்களுக்கு திரும்பிவிடுகிறேன். மங்கலநாண் சூடி பிறிதொருவருடன் இணைந்ததை மறந்துவிடுகிறேன். என் இளமை உள்ளத்தால் செய்த பிழை இது. பொறுத்தருள வேண்டும்” என்றாள் காளி. அவன் பற்களைக் கடித்து நீர்மைகொண்ட விழிகளால் அவளை நோக்கி “நீ உன் மூதன்னையருடன் சென்று சேர்ந்தமைந்தாய். அவர்களின் பொருட்டே உன் காலடியில் என்னை விழும்படி கோரினாய். உன் குடிக்கு முன் நான் இழிவுசூடி நின்றிருந்தேன் என்றால் உன்னுள் வாழும் தொல்குடி அன்னை மகிழ்ந்திருப்பாள். அதை நான் அறிவேன்” என்றான்.

அவள் ஒருகணம் திகைத்தாள். அது உண்மைதானோ என உளம் மயங்கினாள். மெல்லிய குரலில் “இல்லை, அது வெறும் காதல் விளையாட்டு...” என்றாள். அவள் குரலிறங்கியமை அவனை மேலும் எழச்செய்தது. வெறுப்புடன் நகைத்து “இல்லை, உன் உளமறியும் அதை. யார் உன் மூதன்னையர்? காட்டுக்கிழங்கும் தேனும் தேடியலைந்த மலைக்குறத்தியர். மொழிதிருந்தாத மூடர். கற்பெனும் நெறியிலாது மைந்தரை ஈன்று பெருக்கிய வெறும் கருப்பைகள். அவர்கள் முன் நான் அடிபணியவேண்டுமா என்ன?” என்றான்.

அவள் அச்சொற்களால் அனைத்தையும் மறந்து சினந்தெழுந்தாள். “ஆம், நான் அவர்களில் ஒருத்தி. அவர்களைப்போன்ற அன்னையர் ஈன்று பெருக்கியமையால் உருவானதே மானுடப் பெருங்குலம். அன்னையரையும் நீரையும் நிலத்தையும் பழிப்பவன் தன்னை இழிவுபடுத்திக்கொள்ளும் வீணன்.” அவள் சொல்மீறியது அவனை மேலும் உவகையே கொள்ளச்செய்தது. “ஆம்! இதோ, உன் நாவிலிருந்து எழுந்துவிட்டது உன் உளம்கொண்ட எண்ணம். நான் வீணன். உனை நாடிவந்த அரசர் கொண்ட செல்வக்குவையும் அரியணையும் இல்லாத மலைமகன். பித்தன், வெறும்பேயன்... நீ என்னை உன் சிறுகுடிக்கு முன் பணியச்சொன்னது அதன்பொருட்டே.”

முற்றிலும் தளர்ந்து அவள் மெல்ல விம்மினாள். கண்ணீரை கைகளால் மூட விரல்மீறி வழிந்தன துளிகள். நெஞ்சுலைய விசும்பியபடி “நான் இனி ஒன்றும் சொல்வதற்கில்லை. நான் சொல்லும் சொல் எதுவும் உங்கள் நெஞ்சில் நஞ்சென்றே பொருள்கொள்கிறது” என்றாள். “ஏனென்றால் நீ உளம்கொண்ட நஞ்சு அது” என்றான் அவன். அவள் சூழலையும் அவனையும் மறந்து அழத்தொடங்கினாள். அழும் பெண் ஆணை வென்றவனாக உணரச்செய்கிறாள். உளமுருகவும் செய்கிறாள். அவன் மேலும் ஒரு சொல்லிடை வெற்றியை விரும்பினான். அதை கைக்கொண்டபின் அவளை அணைத்து முத்தமிட்டு மீட்டெடுக்கலாமென எண்ணினான்.

“உன் கருமை என் கண்ணை இருளச்செய்கிறது” என்றான். “உன் கீழ்க்குடிப்பிறப்பை அறிவித்துக்கொண்டே இருக்கிறது அது.” அவள் கைவிலக்கி கண்ணீர் அனல்கொள்ள நோக்கியபோது வென்றுவிட்டேன் என அவன் உள்ளம் உவகையில் துள்ளியது.

அங்கு நிறுத்துவதே நலம் என அவன் அறிந்திருந்தபோதிலும் ஆயனின் சீழ்க்கை கேட்ட பின்னரும் மேலுமிரு காலடிகள் வைக்கும் கன்றுபோல சொல் முந்திச்சென்றது. “உலகை ஒளியூட்டும் செந்நிறம் நான். ஒளியனைத்தும் சென்று அமையும் முற்றிருள் நீ. நாமிருவரும் இணைதல் இயல்வதல்ல, செல்க!” என்றான்.

அவள் ஆழ்ந்த குரலில் “ஆம், நான் இருள் நிறம்கொண்டவள். அது புடவியின் நெறி. ஆதித்யர்களும் கோளங்களும் அவ்விருளின் சிறு மின்னல் துளிகள் மட்டுமே” என்றாள். அவள் குரலில் ஒலித்த அறைகூவலால் சினம்கொண்டு அவள் விழிகளை நோக்கிய காளையன் அங்கு முழுமையான மாற்றம் நிகழ்ந்திருப்பதைக் கண்டு சற்றே அஞ்சினான். அதுவரை முற்றிலும் அடிபணிந்து நின்றிருந்த அவளுக்குள்ளிருந்து பெண்மையின் ஆணவம் பத்திவிரித்து எழுந்திருந்தது.

அதை உணர்ந்ததும் அவன் முழுமையாகவே பின்வாங்கிவிட்டான். அன்னையிடம் பாயும் அஞ்சிய மைந்தன் என அவளை நோக்கி கைவிரித்துச் செல்லவே உளமெழுந்தது. ஆயினும் அவன் நா “என் பொன்னிறம் உன்னில் ஒரு துளி மட்டுமே என்கிறாயா?” என்றது. “அனைத்து நிறங்களும் கருமையின் பரப்பில் அமைந்த சிற்றொளிகள் மட்டுமே” என்று அவள் சொன்னாள். இருவரும் சில கணங்கள் விழி கோத்தனர்.

இரு விசைகள் நிகர்கொண்ட உச்சதருணம். அது இருவரிலும் மானுடம்மீறிய உவகை ஒன்றை எழுப்பியது. போரிடும் உயிர்கள் கொலைத்தருணத்தில் அடையும் மெய்ப்பாடு அது. ஒவ்வொரு மயிர்க்காலும் உயிர்கொண்டு எழுந்து நின்றிருக்கும் கணம். அதையறிந்த உயிர் பின்வாங்குவதே இல்லை.

காளி “நான் என்றும் இருக்கும் நிலை. என்னில் நிகழும் அலையே நீங்கள். இத்தருணத்தில் அதை உணர்ந்தமையால் நீங்கள் அடையும் சினம் இது. இதைக் காட்டவேண்டிய இடம் நானல்ல. இவையனைத்துமாகி நின்றிருக்கும் பிரம்மம். அங்கு சென்று சீறுக!” என்றாள். பெருங்காதலும் பெருஞ்சினமும் மிகச்சரியான தந்தியைத் தொட்டு மீட்ட வல்லவை. எந்தப் புள்ளியில் தன் வலியை மூவிழியன் உணர்ந்துகொண்டிருந்தானோ அங்கு பட்டன அவள் சொற்கள்.

இடிகொண்டு அனலான மரமென தழல்விட்டு கைநீட்டி அவன் சொன்னான் “நீ முழுமையென்றால் உன்னில் எழவேண்டும் அனைத்தும். செல்! எனக்குரிய அழகு வடிவம் கொண்டு இங்கு வா! உன்னை முகம் சுளிக்காமல் நோக்கி மகிழ என்னால் இயலுமென்றால் ஏற்றுக்கொள்கிறேன்.” அவள் ஏளனத்துடன் இதழ்வளைத்து “இவ்வழகு வடிவத்தை தேடித்தான் நீங்கள் வந்தீர்கள்” என்றாள். அவன் “ஆம், அது காணும் பெண்ணையெல்லாம் வென்று செல்லவேண்டுமென்ற ஆண்மையின் ஆணவம் மட்டுமே. உன் தந்தை விடுத்த அறைகூவலின் பொருட்டே உன்னை வென்றேன். உன்னை உடனுறையச் செய்ய வேண்டுமென்று எண்ணவில்லை. உண்டு முடித்த கலம் நீ. இனி உனக்கு என் உள்ளத்தில் இடமில்லை. விலகு!” என்றான்.

அச்சொற்களில் அவள் ஒரு கணம் நடுங்கினாள். நலம் உண்டு துறக்கப்படுதல் என்பது பெண்மை என்றும் உள்ளூர அஞ்சும் கொடுநரகு, உலகாளும் அன்னை வடிவமே ஆயினும். தளர்ந்த குரலில் காளி “என்ன சொல்கிறீர்கள்?” என்றாள். “நான் மீண்டு வரவேண்டியதில்லையா? மெய்யாகவா சொல்கிறீர்கள்?” என்றாள். “செல்க, இனி ஒரு கணமும் உன்னை

எண்ணிப்பார்க்க மாட்டேனென்று இதோ ஆணையிடுகிறேன். இப்புவியெங்கும் பிறந்திருக்கிறார்கள் எனக்குரிய பெண்டிர். நீ அதில் ஒரு துளி. அது உதிர்ந்துவிட்டது.”

அழுகையென ஒலித்த குரலில் “என்ன சொல்கிறீர்கள்?” என்றாள். “இனி என் விழிகளுக்கு நீ அழகல்ல. உன் உள்ளம் இனியெனக்கு ஒரு பொருட்டும் அல்ல. அதை மட்டுமே சொன்னேன்” என்றான். “இத்தனை நாள் நீங்கள் கொண்ட காதல் பொய்யென்று உரைக்கிறீர்களா?” என்றாள். அதிலிருந்த மன்றாட்டைக் கண்டு அவள் அகமே கூசியது. அவன் அத்தணிவால் மேலேற்றப்பட்டு உச்சி ஒன்றில் நின்று சொன்னான் “பொய்யல்ல, அத்தருணத்திற்கு உரியவை அவை. அக்கணங்களைக் கடந்து இங்கு வந்து நின்றிருக்கிறேன். உன்னை அங்கு முற்றுதிர்த்துவிட்டிருக்கிறேன். காதலில் ஆண் சொல்லும் அத்தனை சொற்களும் மின்னல் போன்று மறுகணமற்றவை. செல்!”

அனைத்துப் படைக்கலங்களையும் இழந்து கைதளர்ந்து கண்ணீர் வழிய விம்மியழுதபடி தலைகுனிந்து அவள் நின்றாள். அவள் அழுகைக் குரல் கேட்டு வீம்புடன் அவன் திரும்பி நின்றான். அவளுடைய அழுகையொலி அவன் நெஞ்சை அறுத்தது. மறைமுக உவகையுடன் அவன் அவ்வலியில் திளைத்தாடினான். “நான் ஒரு சொல்லுக்கென்று கூட உங்களை மறுதலிக்க இயலாது. அதை நீங்கள் அறிவீர்கள்” என்றாள். அவன் உடலில் ஒரு சிறு அசைவு கடந்து சென்றது. “சொல்லுங்கள், நான் என்ன செய்ய வேண்டும்? எங்கு பணிய வேண்டும்? எவ்வளவு சிறுக்க வேண்டும்?”

அவன் வலியில் திளைப்பதன் சுவையை அறிந்துவிட்டிருந்தான். தன் கோட்டைகள் ஒவ்வொன்றையும்

அவனே இடித்துச் சரித்தான். தன் உடலை குருதிவழியக் கிழித்து வீசினான். ஏளனம் நிறைந்த முகத்துடன் “சென்று இவ்விழிந்த கரிய உடலை அகற்றி பொன்னுடல் சூடி இங்கு வா! உன்னை என் துணையெனக் கொள்கிறேன். இனி கருமையின் கீழ்மையைச் சூட என்னால் இயலாது” என்றான்.



அவள் உடல் தொய்ந்தபோது அணிகள் மெல்ல விழும் ஓசை எழுந்தது. முலைக்குவைகள் எழுந்தமைய நெடுமூச்சுவிட்டு "இதையே ஆணையெனக் கொள்கிறேன். பொன்னுடல் பூண்டு இங்கு மீள்கிறேன்" என்று சொல்லி திரும்பி நடந்தாள். அவன் அவள் செல்வதை முற்றிலும் தளர்ந்தவனாக நோக்கி நின்றான். ஒரு நாடகம் முடிந்துவிட்டதென அவன் அறிந்தான். ஆயிரம் முறை அவளை பின்னின்று அழைத்தான். அதை ஒலியாக்கும் ஆற்றல் அவன் உடலில் எஞ்சியிருக்கவில்லை.

# கிராதம் - 65

**[ 6 ]**

"காளி தன்னந்தனியளாக மீண்டும் இக்காளிக வனத்திற்கு வந்தாள்" என்றான் சண்டன். "அவள் தந்தை இரு கைகளையும் விரித்து ஓடிவந்து வழிமுகப்பிலேயே அவளை எதிர்கொண்டார். "என்ன ஆயிற்று? சொல் மகளே, என்ன ஆயிற்று?" என்று அவர் கூவினார். அன்னையும் தோழியரும் தொடர்ந்தோடி வந்தனர். அவள் குலம் அவளை சூழ்ந்துகொண்டது. "தந்தையே, எனக்கொரு தவக்குடில் அமையுங்கள். அங்கு கன்னிமை நோற்கிறேன்" என்று காளி சொன்னாள். தந்தை திகைப்புடன் "என்ன சொல்கிறாய்? உன் கொழுநன் எங்கே?" என்றார். அவள் அன்னை அதற்குள் புரிந்துகொண்டு அவளை அணைத்து "சின்னாள் நீ இங்கிரு" என்றாள். அவளை தன் இல்லத்திற்குள் கொண்டுசென்றாள்.

பெண்டிர் சூழ அவள் உள்ளறைக்குள் அமர்ந்தாள். அன்னை அளித்த நீரையும் உணவையும் உண்டாள். "என்னடி உன் எண்ணம்?" என்றாள் அன்னை. "கணவனிடம் பூசலிட்டாயா?

நோக்கு, உன் கால்தடம் கலைவதற்குள் அவர் இங்கு வருவார்.” பெண்கள் சிரித்தனர். அவள் “இல்லை அன்னையே, அவர் வரப்போவதில்லை” என்றாள். அன்னை முகம்கூர “நான் உரைத்தேனே, இங்கு கன்னியென திரும்பியிருக்கிறேன்” என்றாள். “என்னடி பேசுகிறாய்? மங்கலநாண் சூடி மறுகுடி சென்றவள் கன்னிமை நோன்பு ஏற்பது எப்படி?” என்று அன்னை கேட்டாள். “அன்னையே, ஒவ்வொன்றாக உதிர்த்து என் கன்னி நாட்களுக்கு திரும்பிச் செல்கிறேன். கன்னியழகை எனக்கு அளித்த தெய்வங்களை வரவழைக்கிறேன். அவர்களிடம் இக்கருமையழகை உதறி பொன்னழகை எனக்களிக்கும்படி கோருகிறேன்” என்றாள் காளி.

அன்னை “நீ சொல்வது பொருளற்றது, மகளே. கொழுநனை கைபிடிக்கும் கணத்திலேயே உன் கன்னியழகுகளை கடந்துவிட்டாய். அதன்பின் திதலையும் பசலையுமென உன்னுடல் உருமாறிக்கொண்டிருக்கிறது. அன்னை என்றானபின் கன்னிவாழ்க்கை ஒரு தொலைகனவு மட்டுமே. நீ அறியமாட்டாய், இங்குள்ள அத்தனை பெண்டிரும் அவர்கள் கைவிட்டு வந்த அக்கன்னி வாழ்க்கையையே எண்ணி தங்கள் அறையிருளுக்குள் பிறரறியாமல் நீள்மூச்செறிகிறார்கள். முதற்புலரியில் விழிப்பு வருகையில் அக்கன்னி வாழ்க்கையின் சில கணங்கள் கனவில் வந்து ஆடிச்சென்றதை எண்ணி கண்ணீர்விடாத பெண் இங்கெவரும் இல்லை” என்றாள்.

“தவம் என்பது நதி மலை மீளுவதுபோல, பறவை முட்டைக்குத் திரும்புதல்போல” என்றாள் காளி. “அரிதென்பதால்தான் அது தவம்.” அன்னை அதன்பின் சொல்சேர்க்கவில்லை. அவளை நோக்கி விழிநீருடன் அமர்ந்திருந்தாள். அவள் எழுந்து

வெளியே சென்று குடிமூத்தார் சூழ மன்றமர்ந்திருந்த கராளரிடம் “தந்தையே, நான் கேட்டவற்றை அளியுங்கள்” என்றாள். அவள் குலம் கொந்தளித்தது. “இங்கு வந்து என் மகள் கைபற்றிச் சென்ற அவன் இவள் இங்கு வந்திருக்கும் நிலைக்கு பொறுப்பானவன். எழுக, நம் குலம்! அவனிடம் சென்று அறம் உரைப்போம். அது அவனுக்குப் புரியவில்லையென்றால் மறம் என்னவென்று அவனுக்கு தெரியவைப்போம்” என்றார் அவள் தாய்மாமன். கராளர் “என் குலமலரை விழிநீர் சிந்தவைத்துவிட்டான்” என்றார். “அவனை இழுத்து வந்து நம் குடிமன்றில் நிறுத்துவோம்” என்றனர் இளையோர்.

கைநீட்டி உரத்த குரலில் கூவி காளி அவர்களை தடுத்தாள். “தந்தையே, இது அவருக்கும் எனக்குமான ஆடல் மட்டுமே. இங்கு நான் வந்தது எனக்கென அமைந்துள்ள பிடிநிலம் இங்குள்ளது என்பதனால்தான். அதிலுள்ளன என் இளமைநினைவுகள்.” கராளர் “நன்று, மகளே! உனக்கு உரியது செய்ய ஆணையிடுகிறேன்” என்றார். அவர் ஆணைப்படி அக்காட்டின் தென்கிழக்கு மூலையில் ஒரு சோலை தெரிவுசெய்யப்பட்டது. கன்னியராக மண்மறைந்த பெண்களை மண்ணளிக்கும் இடம் அது. நூற்றெட்டு கன்னியரின் கல்பதுக்கைகள் அங்கு இருந்தன.

அச்சோலையில் அமைந்த குடிலுக்கு தன் மகளை கைபற்றி அழைத்துச் செல்கையில் அன்னை சொன்னாள் “நீ இன்னும் சிறுமியைப்போல் எண்ணிக்கொண்டிருக்கிறாய், மகளே. ஒன்றறிக! மணம்முடித்து இல்லம்விட்டு கிளம்பிச்சென்ற எந்தப் பெண்ணும் மீண்டும் அந்த அன்னை இல்லத்துக்கு வந்ததில்லை. இங்கு நீ காணும் இந்தத் தூண்களும் சுவர்களும்

திண்ணையும் அடுமனையும் இங்குதான் உள்ளன. நீ வளர்ந்த இல்லம் இங்கில்லை. இப்புவியெங்கும் பெண்கள் தாங்கள் விட்டுவந்த இல்லம் நோக்கித் திரும்பி அது அங்கு இல்லையென்று அறிந்து விழிநீருடன் திரும்பிச்செல்கிறார்கள். நீ வந்திருக்கலாகாது.”

“நானும் ஓர் இல்லாளே. இல்லாடலென்றால் எப்பெண்ணையும்போல் நானும் அறிவேன். இவ்வாடலில் நானோ உந்தையோ இங்குள்ள உன் குலமோ ஒரு தரப்பே அல்ல. இது இருவாள்களின் கூர்கள் உரசி அறியும் ஒரு தருணம். பெருங்காதலின் களியாட்டுக்குப் பின் இது நிகழ்ந்தாகவேண்டும். உன்னை நீ அவருக்கு முற்றளிக்கப்போவதில்லை. அவரும் தன்னை உனக்கு முற்றளிக்கப்போவதில்லை. நீங்கள் எதை எதுவரை அளித்துக் கொள்ளப்போகிறீர்கள் என்று முடிவாவதன்பொருட்டு நிகழும் பூசல் இது. நீ அங்கு அவர் கண்முன் இருந்திருக்கவேண்டும். இங்கு வந்தாலும் நீ அங்குதான் குடியிருப்பாய்.”

“ஆம்” என்று அவள் சொன்னாள். “ஆனால் தவமென்று எண்ணியபோதே நான் உள்ளிய இடம் இதுவே. ஏனென்றால் கன்னியென்றும் சிறுமியென்றும் குழவியென்றும் இங்குதான் வளர்ந்திருக்கிறேன். அன்றிருந்த அந்நிலத்திற்கு நான் மீள முடியாது. ஆனால் அன்றிருந்த என்னைச் சூழ்ந்திருந்த நிலமும் காற்றும் நீரும் இங்குதான் உள்ளன. அவை என்னை அறியும். கன்னிமாடம் அங்கு அமையட்டும் என்று எண்ணியது அதனால்தான்.”

காளியின் தோழியர்களான ஜயையும் விஜயையும் ஜயந்தியும் அபராஜிதையும் அவளுடன் தங்கினர். ஆண்கள் எவரும் அவளை பார்க்கலாகாது என்று குலநெறி வகுக்கப்பட்டது.

அவள் வாழ்ந்த சோலை எல்லை வகுக்கப்பட்டு வேலியிடப்பட்டது. தந்தையும் அவளை பார்க்கவில்லை. பின்னர் பிற பெண்டிரும் அவளை பார்க்காதொழிந்தனர். நாளடைவில் அன்னையும் அணுகாதானாள். தோழியர் நால்வரால் புரக்கப்பட்டு தன் முழுத்தனிமையில் அவள் அங்கே இருந்தாள். தன்னுள் கருப்பை வடிவில் குடியிருந்த பிரம்மனின் பீடத்தை எண்ணி தவமிருந்தாள். முதற்புலரியின்போது எழுந்து படைப்பு முதல்வனை வணங்கி நோன்புணவை அருந்தி நாள் கடந்தாள். இரவில் தன்னைச் சூழ்ந்த அனைத்தையும் முற்றுதிர்த்து உள்ளம் என்றே அங்கிருந்தாள்.

அவள் உடல் மாறிவந்ததை தோழியர் அறிந்தனர். மணம்கொண்டபின் கூடிய மங்கலங்கள் அனைத்தும் அகன்றன. தோளும் இடையும் கன்னிபோல் மெலிந்தன. பின் சிறுமியென்றாகி ஒடுங்கின. யாழின் கார்வை கொண்டிருந்த குரல் நீர்த்து குழலின் மென்மை கொண்டது. நடையில் அமைதி குலைந்து சிறுதுள்ளல் வந்து கூடியது. ஓரவிழிப் பார்வை அகன்றது. அச்சமற்ற நேர்விழி நோக்கமைந்தது. சொல்லெண்ணிப் பேசும் சித்தம் மறைந்து வெள்ளிமணிக் கொலுசென சிரித்தாள். அச்சிரிப்பில் கலந்த சொற்களாக உரையாடினாள். விழிகளில் மான்கருமை அகன்று சிறு நாய்க்குட்டியின் பேதைமை வந்து படிந்தது.

வான் நோக்கி நிலவில் விழிநட்டு அமர்ந்திருக்கும் தனிமை அவளிடமிருந்து விலகி அருகிருக்கும் பொருளெதுவோ அதனால் விளையாடப்படுபவளானாள். கூழாங்கல் பொறுக்கி சோழியாடினாள். சிறு விதைகளை தெரிந்து கொண்டுவந்து செப்புகளில் சேர்த்தாள். காலை எழுந்ததுமே முற்றத்து மலர்களை நோக்குவதற்காக சிற்றாடை பறக்க துள்ளி

ஓடினாள். சாலையோரம் உதிர்ந்து கிடந்த ஒரு வண்ண இறகைக் கண்டதும் உவகை கொண்டு கூவி கைதட்டி ஆர்ப்பரித்து அதை எடுத்து கொண்டுவந்து தோழியரிடம் காட்டிச் சிரித்து துள்ளினாள். சுவைகளில் நாட்டம் கொண்டவளானாள். பின் அனைத்தும் சுவையே என்றாகியது. புளிக்காய்களும் துவர்க்கும் குருத்துகளும்கூட அவள் நாவுக்கு உகந்தன. கன்னம் கூர்கொண்டது. இதழ்கள் குமிழ் அகன்றன. கூந்தலிலும் கழுத்திலும் பளபளப்பு குறைந்து மென்வெளிறல் கூடியது.

சிறுமியென்றாகி சூழ்ந்திருந்த சோலை மட்டுமே அறியும் மந்தணங்கள் கொண்டு அவள் அங்கிருந்தாள். அவள் கருக்குருதி நின்றது. பல மாதங்களுக்குப் பின் ஒருநாள் அடிவயிற்றை கைகளால் பொத்தி முழந்தாள் மடித்து அமர்ந்து அழுதாள். மலர் கொய்துகொண்டிருந்தவள் எண்ணியிராது குடலையை வீசிவிட்டு அழும் ஒலி கேட்டு தோழியர் ஓடிச்சென்று நோக்கினர். “என்னடி? என்னடி?” என்றாள் ஜயை. “முள் பட்டுவிட்டதா விரலில்?” என்றாள் விஜயை. “எதையேனும் மிதித்துவிட்டாயா? இங்கு சிறு நாகக்குஞ்சுகள் உண்டே!” என்றாள் ஜயந்தி. அபராஜிதை அவள் முகம்பற்றி மேலேதூக்கி விழி நோக்கியதுமே அறிந்துகொண்ட புன்னகையுடன் “அதுதான்” என்றாள்.

அவர்கள் அதை எதிர்பார்த்திருந்தனர். அச்சொல்லிலேயே அனைத்தையும் உணர்ந்தனர். இரு கைகளாலும் அவளை அள்ளி மெல்ல கொண்டுசென்றனர். தென்கிழக்கு குடில் மூலையில் அவளை அமர்த்தினர். குறுக்கே உலக்கையை அரண் வைத்தனர். ஈச்சை ஓலை துடைப்பத்தை துணைக்கு அமைத்தனர். அருந்த நீரும் இன்மாவின் உருண்டைகளும்

கொண்டுவந்து அளித்தனர். "ஐந்து நாள் இங்கிரு. மீண்டும் ஒரு பெண்ணாக எழவிருக்கிறாய்" என்றாள் ஜயை. "அலையெனச் சுருண்டு பின் வாங்கிவிட்டாய். வளைந்து மீண்டும் எழவிருக்கிறாய்" என்றாள் விஜயை. "ஆம், ஆறு மலையடைந்துவிட்டது" என்றாள் ஜயந்தி. "முட்டைக்குள்ளிருந்து ஓடுடைத்து வெளிவரும் நாள் இனி" என்றாள் அபராஜிதை.

அன்று இரவில் வெளியே ஓர் உறுமல் கேட்டு அபராஜிதை திகைத்தெழுந்தாள். மெல்ல சென்று சாளரத்தைத் திறந்து வெளியே நோக்கி வியப்பொலி எழுப்பினாள். அன்று வளர்நிலவு பத்தாம் நாள். முற்றத்திற்கு அப்பால் நின்ற முல்லைக்கொடி படர்ந்த மஞ்சணத்தி மரத்திற்கு அடியில் பிடரிமயிர் பறக்க ஆண் சிம்மமொன்று நின்றிருப்பதை கண்டாள். அது ஓர் விழிமயக்கென்று முதலில் தோன்றியது. நாணல் எழுந்த சிறு மண்மேடு என எண்ணத்தலைப்பட்டது சித்தம். மீண்டும் ஒரு முறை உறுமி 'நான் சிம்மம்' என்றது அது. அதற்குள் அவள் தோழிகள் எழுந்து ஓடிவந்தனர். "சிம்மமா? இங்கு இப்படி ஓர் விலங்கை பார்த்ததே இல்லை" என்றாள் விஜயை. "அனலெழுந்து விலங்கானதுபோல் தெரிகிறது" என்றாள் ஜயந்தி. உகிர்க்கால்கள் மண்பொத்தி மெல்ல ஒலிக்க அசைவு ததும்பும் உடலுடன் முற்றத்திற்கு இறங்கிவந்து வாயில் முன் நின்று மீண்டும் உறுமியது சடைசிலிர்த்த சீயம். பின்னர் அங்கேயே வாயிலில் விழிபதித்து படுத்துக்கொண்டது.

"அது நம் இளவரசிக்குக் காவல்" என்றாள் ஜயை. "ஊனுண்ணி விலங்கு. ஆனால் அதன் கண்களில் அருள் உள்ளது" என்றாள் விஜயை. அவளிடம் சென்று அங்கு சிம்மம் ஒன்று வந்து

அவளுக்கு காவலமைத்திருப்பதை சொன்னார்கள். அவள் விழிகள் அறியாத்தெய்வத்தின் நோக்கு கொண்டிருந்தன. ஐந்து நாள் அஞ்சும் சிறுமியென அம்மூலையில் உடல் ஒடுக்கி அமர்ந்திருந்தாள். தோழியரால் மஞ்சள் நீராட்டப்பட்டாள். சந்தனமும் அகிலும் கொண்டு அவள் உடலையும் குழலையும் நறுமணமூட்டினர். இரவும் பகலும் துணையென முறைவைத்து விழித்திருந்தனர்.

ஐந்தாம்நாள் முழுநிலவு. மெல்லிய யாழிசை ஒன்றை தோழியர் நால்வரும் ஒருங்கே கேட்டனர். “வண்டு முரல்கிறது போலும்” என்றாள் ஐயை. “இரவில் முரலும் வண்டுகள் உண்டா?” என்றாள் விஜயை. ஜயந்தி “அது கந்தர்வர்களின் இசை” என்றாள். இசை மேலும் மேலும் வலுத்தது. “நூறு வண்டுகள்” என்றாள் ஜயை. “ஆயிரம் பல்லாயிரம் என அவை பெருகுகின்றன போலும்” என்றாள் விஜயை.

ஜயை ஓடிச்சென்று சாளரத்தினூடாக வெளியே பார்த்தாள். காவல் சிம்மம் எழுந்து தொலைவை நோக்கி மெல்ல உறுமி எச்சரிக்கையுடன் கால்களை மெல்ல எடுத்துவைத்து பாய்வதற்காக உடல் தாழ்த்தியது. பெருகிவந்த யாழிசையால் கொண்டுவரப்பட்டவர்கள் போல வெண்சிறகுகள் பறக்கும் ஏழு கந்தர்வப் பெண்கள் அவ்வில்லம் நோக்கி வந்தனர். நுரைச்சிறகை மடித்து சுருக்கி ஆடையின் முந்தானை என்றாக்கி மண்ணில் கால்வைத்து ஒளி வடிவென்றாகி இல்லத்திற்குள் நுழைந்தனர். கைகூப்பி நின்ற ஜயை “காளியின் கன்னிமாடத்திற்கு வருக!” என்றாள்.

முதலில் வந்தவள் “என் பெயர் தீக்ஷை. நான் இவளை கன்னியென்று ஆக்க வந்தேன். கொண்டவற்றில் முற்றுறுதியை அளிப்பவள் நான்” என்றாள். “நான் ஸ்வாதை. இவளை

மூதன்னையரின் நெறியில் நிறுத்துவேன்” என்றாள் இரண்டாவதாக வந்தவள். மூன்றாமவள் தன்னை த்ருதி என்றாள். “குன்றாத் துணிவை இவளுக்கு அளிப்பவள்” என்றாள். நான்காமவள் தன்னை தயை என்றாள். “கருணையால் இவளை அன்னையென்றாக்குவேன்” என்றாள். ஐந்தாம் தேவி தன்னை க்ரியை என்றாள். “செயலூக்கத்தின் தெய்வம் நான்” என்றாள். ஆறாம் தேவியாகிய புஷ்டி “நான் அவள் உடலை வளரச்செய்பவள்” என்றாள். ஏழாம் தேவியாகிய லஜ்ஜை “அவளில் நாணத்தை நிறைப்பதே என் பணி” என்றாள்.

காளி எழுந்து கைகூப்பி “நன்று கந்தர்வப் பெண்களே, இக்கன்னியழகனைத்தையும் நான் சூடுவதற்குமுன் என் உடல் பொன்னொளி கொள்ளவேண்டும். அதன்பொருட்டே தவம் மேற்கொண்டேன்” என்றாள். தீக்ஷை திகைத்து “அறியாது பேசுகிறாய், இளையவளே. உடல் போர்த்திய தோல்கொண்டது அல்ல நிறம். உன் உள்ளமைந்த ஆழத்தின் விழித்தோற்றம் அது. கடல் நீலமும் அனல் சிவப்பும் அவற்றின் உள்ளியல்பால் ஆனவை என்று அறிக!” என்றாள். “அவ்வண்ணமெனில் என் ஆழத்தை மாற்றுக!” என்றாள் காளி.

“நாங்கள் உன்னில் விழி அறியும் புறத்தோற்றத்தை மாற்றும் ஆற்றல் மட்டுமே கொண்டவர்கள். உன்னைப் படைத்த பிரம்மனே உன் ஆழத்தை அறிவார்” என்றாள் த்ருதி. “அவ்வண்ணமெனில் பிரம்மன் எழுக!” என்றாள் காளி. “எங்கள் பணி உன்னை கன்னியென்றாக்குதல் மட்டுமே. நாங்கள் படைப்பிறைவனின் பணியாட்கள். பல்லாயிரம் கோடியெனப் பெருகி நாங்கள் இப்புவியெங்கும் வாழும் மானுடரை விலங்குகளை பறவைகளை நாகங்களை பூச்சிகளை

புழுக்களை கன்னி எழிலூட்டுகிறோம். இதுவன்றி பிறிதறியாதவர்கள்” என்றாள் லஜ்ஜை.

“பிரம்மன் இங்கு எழுக!” என்று சொல்லி கைகூப்பி விழிமூடி ஒற்றைக்காலில் நின்று காளி தவம் செய்தாள். பதினான்கு நாட்கள் பிறிதொன்றிலாத சித்தத்துடன் நின்றிருந்தாள். அவளை நோக்கி விழியசைக்காது வாயிலில் நின்றிருந்தது செந்நிறச்சீயம். அவளைச் சூழ்ந்து காவல் நின்றனர் தோழியர். பதைத்தும் பொருளறியாது சுழன்றும் அங்கிருந்தனர் கந்தர்வப் பெண்கள்.

பதினான்காவது நாள் முற்றிருள் மூடிய கருநிலவின் இரவில் அவர்கள் மட்டுமே காணும் ஒரு முழுநிலவு ஒன்று வானில் எழுந்தது. அதன் ஒளி செம்பட்டுப் பாதையென நீண்டு அவள் குடில்வரை வந்தது. அதனூடாக நடந்து பொன்னுடல் கொண்ட அந்தணர் வடிவில் பிரம்மன் அவள் குடிலுக்கு எழுந்தருளினார். அவர் உள்ளே நுழைந்தபோது விளக்குகளின்றி அக்குடில் சுடர்விட்டது. அங்கிருந்த உயிர்களனைத்தும் விழிகொண்டு “எந்தையே!” என கைகூப்பின. தன் சுட்டுவிரலால் விழி மூடி தவத்தில்இருந்த காளியின் நெற்றிப்பொட்டில் தொட்டு “விழித்தெழுக, இளையவளே! உன் விழைவென்ன? சொல்க!” என்றார்.

தவம் பொலிந்து விழிதிறந்த காளி “என் உடல் பொன்மயமாகவேண்டும்” என்றாள். “உன் ஆழம் முடிவற்றது, அறிவாயா? அம்முடிவிலியின் நிறம் கொண்டவள் நீ. அதைத் துறந்து ஒளிரும் புறப்பூச்சை நீ அடைய விரும்புவது ஏன்?” என்றார். “என் கொழுநனின் விருப்பம் இது. அவர் முன் பொன்னுடல்கொண்டு சென்று நிற்க விழைகிறேன்” என்றாள் காளி. “நீ இழப்பது மீண்டும் அடையப்பட இயலாதது என்று

அறிக!” என்றார் பிரம்மன். “ஆம், அதை நன்கு அறிவேன்” என்றாள் காளி. “நான் அவருக்குரியவளாகவேண்டும். பிறிதெதையும் அதன்பொருட்டு இழப்பேன்.”

“பொன்னொளி பெறுக! பிறிதொருத்தியாகுக!” என்று வாழ்த்தினார் பிரம்மன். காளி உலையில் உருகி உருவழிந்து அச்சில் நிறைந்து மீளுருக்கொண்டு எழும் பொற்சிலை என மேனி கொண்டாள். திரும்பி நோக்கியபோது அருகே கரிய உடல்கொண்ட பிறிதொரு பெண் நிற்பதைக் கண்டாள். பிரம்மன் “உன் கரிய தோலிலிருந்து எழுந்தவள். கோசத்திலிருந்து பிறந்தமையால் அவள் கௌசிகை” என்றார். கரிய அன்னை புன்னகை செய்தாள். “தேவி, உன் இருள்வடிவு கொண்ட அழகனைத்தும் அவளிடமே எஞ்சும்” என்றார் பிரம்மன்.

திரும்பி நோக்கி “நன்று, அது நானிருந்த பீடம்” என்றபின் அன்னை பிரம்மனை வணங்கினாள். “நன்று சூழ்க!” என்று அவளை வாழ்த்தினார் பிரம்மன். வெளியே சென்று படிகளிலிறங்கி செந்தழலென பிடரி சிலிர்க்க நின்ற சிம்மத்தின் மேலேறி வடதிசை நோக்கிச் சென்று அவள் மறைந்தாள். கௌசிகை பிரம்மனை வணங்கி தென்கிழக்கு மூலையில் சென்று பீடம் கொண்டாள்.

அனற்சிம்மம் மீதேறி பொன்னுடல்கொண்டு தன்னை வந்தடைந்த காளியை முதலில் செஞ்சடையன் அடையாளம் காணவில்லை. ஏனெனில் அவள் சென்ற மறுகணம் முதல் அக்கரிய எழிலுருவையே தன் அகவிழியில் நிறைத்து தவம் செய்துகொண்டிருந்தான். அவன் உளம் உருகிய சொற்கள் நாண் தளர்ந்த வில்லின் அம்புகளென எழுந்து அவள் காலடியில் விழுந்துகொண்டே இருந்தன. தன் சொற்களேதும் அவளை

சென்றடையவில்லை என்பதை உணரும்தோறும் மேலும் தளர்ந்தான். காதலுடன் கொஞ்சியும் கண்ணீருடன் இறைஞ்சியும் சிறுமைந்தனென ஆகி பணிந்தும் அவன் அழைத்ததை அவள் அறியவில்லை. துறக்கப்பட்டவன் சிறுமைகொள்கிறான். இழக்கப்பட்டது பேருருக் கொள்கிறது. அவன் கரும்பாறை எழுந்த மலையடிவாரத்தில் சிறுநெருப்பென ஆடிக்கொண்டிருந்தான்.

தன் தவம் முடிந்ததென்று உணர்ந்து அவன் விழிதூக்கியபோது எதிரில் தோன்றியவளைக் கண்டு திகைத்தெழுந்து நின்றான். பின்னரே அவள் முகமும் சிரிப்பும் உணர்ந்து கைவிரித்து அருகே ஓடி அணுகி "தேவி, நீயா?" என்றான். "இதோ, நீங்கள் கோரிய பொன்னுடல்" என்று அவள் சொன்னாள். நெஞ்சுருக "என் ஆணவச்சொல் அது, தேவி. நான் விழைந்ததும் பெருங்காதல் கொண்டதும் உன் கரிய உடலை அல்லவா?" என்றான். "அதை நானும் அறிவேன். அது உங்கள் ஆழத்தால் நீங்கள் விழைந்தது. உங்கள் தகுதியால் நீங்கள் பெற்றது இது" என்று அவள் சொன்னாள்.

"இப்போது நீ பேரழகி. ஆனால் அக்கரியவளுக்கே நான் என்னை முழுதளிக்க முடியும். இங்கு அமர்ந்து தனிமையில் உணர்ந்தேன் அலகிலா கரிய நீர்வெளி நீ. அதில் சிற்றலை எழுப்பும் விசை மட்டுமே நான்" என்றான்
சடையன். விழிநீருடன் அவள் கைகளை பற்றிக்கொண்டான். "என் அருகமர்க, தேவி! என்னைவிட்டு நீங்காதிரு. இன்றுமுதல் நீ என் தேவி. நீ கொண்ட அக்கரிய தோற்றம் என் அன்னை. அக்கடலைக் கடந்து இவ்வமுதத்தை எடுத்திருக்கிறாய்." அவள் இடைசுற்றி தன் உடலுடன் சேர்த்து "என் இடமென ஆகுக! உடலென உடனிரு!" என்றான்.

புன்னகையுடன் அவள் அவனை தழுவிக்கொண்டாள். இருவரும் ஓருடல் ஆயினர். வெண்விடை வலமும் செஞ்சிங்கம் இடமும் நின்றிருக்க பொன்னிறமும் செந்நிறமும் கலந்த மாதொருபாகனாக மலைமுடி மேல் அங்கிருந்தனர்.

பின்னர் வெள்விடையும் உடுக்கும் வேலும் துறந்து அவன் காளிகம் என்னும் இக்காட்டுக்கு வந்தான். காளி தவம் செய்த அக்கன்னி மூலை கௌசிகவனம் என்னும் ஒரு சோலைக்கோயிலாக மாறியிருந்தது. அதில் பதினாறு கைகளும் வெறிவிழிகளும் கோரைப்பல் நகையும் கொண்டு கோயில் கொண்டிருந்தாள் கௌசிகை அன்னை. அவள் கரிய உடல் மிளிர அமர்ந்திருந்த கருவறைக்கு முன் செஞ்சடையும் நீறணிந்த மேனியும்கொண்டு மலை இறங்கி வந்த அயல்நிலத்துத் துறவியென நின்று அவன் கைகூப்பி வணங்கினான். “அன்னையே, உன் அடிபணிகிறேன். என் தலை மீது உன் கால் அமர்க! என் ஆணவம் பனித்து குளிர்ந்து சொட்டுக! இத்தென்னிலத்தை முற்றுரிமை கொண்டவள் நீ. உன் ஏவல் பணி செய்பவன் நான்” என்றான்.

“கௌசிகை அன்னையின் காலடிகளால் புரக்கப்படுவது திருவிடத்துப் பெருநிலம்” என்றான் சண்டன். “அன்னையும் கன்னியும் என்றன்றி இங்கு நிலம் வேறுமுகம் கொள்வதில்லை. பொன்றா பெருந்திருவென அன்னை கோயில்கொண்டிருப்பதனால்தான் இந்நிலம் திருவிடம் என்று அழைக்கப்படுகிறது என்கிறார் மகாபைரவர் தன் காவியத்தில்.” ஜைமினி “ஆம், பிடாரிக்கோலம் கொண்ட தாய்ப்பன்றியின் குட்டிகள் எனக் கொழுத்திருக்கின்றன இங்குள்ள அனைத்தும்” என்றான். சண்டன் நகைத்து “அதுவும் மகாபைரவரின் வரியே. வற்றாப்பெருமுலை சூடியிருப்பதனாலேயே அன்னை கொலைத்தேற்றையும் மதவிழிகளும் கொண்டிருக்கிறாள்” என்றான்.

# கிராதம் - 66

**[ 7 ]**

விழிதெரியா வலையிழுத்து அதன் நுனியில் இருக்கும் சிறுசிலந்தி போலிருந்தது சண்டகௌசிகையின் சிற்றாலயம். அவர்கள் புலரி நன்கு எழுந்து ஒளிக்குழாய்கள் சரிவுமீண்டு வரும் வேளையில் சென்று சேர்ந்தனர். மூன்று நாட்கள் அடர்காட்டில் விழித்தடம் மட்டுமே எனத் தெரிந்த பாதையில் ஒற்றை நிரையென உடல் கண்ணாக்கி, தங்கள் காலடியோசையையே கேட்டுக்கொண்டு நடந்தனர். மலைப்பாறைகளில் ஏறி அனல்மூட்டி அந்தி உறங்கினர். விடிவெள்ளி கண்டதுமே எழுந்து சுனைகளில் நீராடி முந்தைய நாள் எச்சம் வைத்திருந்த சுட்ட கிழங்குகளையும் காய்களையும் உண்டு நடக்கலாயினர். எங்கிருக்கிறோம் என்று

தெரியாததனால் அன்னையின் ஆலயம் அணுகிவருகிறதா என்றே அறியமுடியாமலிருந்தது.

ஓங்கிய இலுப்பை மரத்தின் அடித்தடியின் பட்டை கீறி எழுதப்பட்டிருந்த குழூஉக் குறிகளை விரல்தொட்டு வாசித்த சண்டன் “அருகில்தான் அன்னையின் ஆலயம்” என்றான். அச்சொல் அவர்களை முதலில் தளரச்செய்தது. பைலன் மூச்சிரைத்தபடி ஒரு வேர்க்குவையில் அமர்ந்தான். பிறரும் அவன் அமரக்கண்டதும் கால் தளர்ந்தனர். சண்டன் “அருகில்தான்… செல்வோம்” என்றான். “ஆலயங்களை காடுகளுக்குள் வைப்பதேன் என்று தெரியவில்லை” என ஜைமினி முணுமுணுத்தான். “மானுடர் காடுகளுக்குள் தங்கள் தெய்வங்களை விட்டுவிட்டு நிரைநிலங்களுக்கு இறங்கிச் சென்றுகொண்டே இருக்கிறார்கள்” என்றான் சண்டன்.

மலை என முகடு எழுந்து ஓர் ஆலயம் பச்சை இலைப்படப்பிற்கு அப்பால் தெரியும் என்று பைலன் எதிர்பார்த்தான். எனவே சண்டன் கை சுட்டி “அதோ!” என்று காட்டியபோது அவன் விழிகள் சற்று அண்ணாந்தே அலைந்தன. “அங்கு” என்று மீண்டும் சண்டன் சொன்னான். விழிதடுமாற “ஆலயமா?” என்று பைலன் கேட்டான். அதற்குள் ஜைமினி அதை பார்த்துவிட்டிருந்தான். “சிறிய ஆலயம்… இலைகளுக்குள் அதோ” என்றான். ஒழுங்கற்ற பாறைப்பாளங்களை நட்டு சுவரென்றாக்கி அதன் மேலே பாறைகளை அடுக்கி எழுப்பப்பட்ட அவ்வாலயம் ஓர் ஆள் உயரத்திற்கே அமைந்திருந்தது. அதன்மேல் காட்டுமரங்களின் இலைகளும் அவற்றின் நிழல்களும் பொதிந்திருந்தன.

அங்கு மானுடர் வந்து நெடுங்காலம் ஆகிவிட்டதனால் அதன் மேல் குற்றிலைக் கொடிகளும் கூம்பிலைப் பசலைகளும்

பதுப்பு பச்சைப்பாசியும் படர்ந்து மூடியிருக்க பச்சைக்குள் ஒரு பச்சை வடிவெனத் தெரிந்தது. “பசுந்தவளை இலையடர்வுக்குள் இருப்பதுபோல” என அக்கணமே ஜைமினி ஒப்புமை சொன்னான். அதன் நின்ற நீள்சதுர வடிவ வாயில் கரிய திரைத் தொங்கலெனத் தெரிந்ததைக் கொண்டே அது அங்கிருப்பதை முதலில் விழி அறிந்தது. “மிகத்தொன்மையான ஆலயம்” என்றான் சண்டன். “மானுடக் கைகள் உளியேந்தத் தொடங்குவதற்கு முன்பு கட்டப்பட்டது. மானுட மொழி இலக்கணம் கொள்வதற்கு முன்னரே வகுக்கப்பட்ட கதைகொண்டது.”

அவர்கள் உளக்கிளர்ச்சியுடன் அவ்வாலயத்தை நோக்கி நடக்க சுமந்து “இன்றும் இமயமலைச்சாரலில் சில பழங்குடிகள் இதைப்போன்ற ஆலயத்தைக் கட்டுவதை பார்த்திருக்கிறேன். இயல்பாகவே பிளவுபட்டிருக்கும் பாறைப்படிவங்களை கண்டடைகிறார்கள். அப்பிளவுகளுக்கு நடுவே உலர்ந்த மர ஆப்புகளை அடித்து அதன் மேல் நீரூற்றி ஊறவைக்கிறார்கள். ஆப்பு ஊறி உப்பும்போது மிக மெல்ல பாறை பிளந்து தனித்தெழும். நடுவே மரநெம்புகோல்களை செலுத்தி நெம்பி மெல்ல பிளந்தெடுக்கிறார்கள். பாறைத்தோல் உரிப்பதுபோலிருக்கும்.”

சண்டன் “கல்லில் உரித்த நார்” என்றான். “ஆம்” என்றான் சுமந்து. “உருளை மரங்களில் அப்பலகைகளை ஏற்றிக் கொண்டுவந்து சேர்க்கிறார்கள். கொடிகள் கட்டி பலநூறுபேர் நின்று எறும்புக்கூட்டம் இரை தூக்குவதுபோல எளிதாக எடுத்து அடுக்குகிறார்கள்.” அக்கோயிலை மேலும் அணுகி நோக்கியபடி “ஆனால் இத்தனை காலம் இச்சிற்றாலயம் இங்கிருப்பது வியப்புதான்” என்றான் வைசம்பாயனன். சண்டன் “நின்றிருக்கும்

கற்பாளங்கள் ஒவ்வொன்றும் இதே அளவுக்கு மண்ணுக்குள்ளும் சென்றிருக்கும். தொல்குடிகள் எதிர்காலம் என்பதை எட்டாமை என்று எண்ணப் பயின்றவர்கள். அவர்களின் பெரும் நடுகற்கள் நினைப்புக்கு அப்பாலுள்ள தொன்மை முதல் இங்கு நின்றிருக்கின்றன. அவை இம்மலைப்பாறைகளைப்போல காலம் இறந்தவை" என்றான் சண்டன்.

அவர்கள் அச்சிற்றாலயத்தின் முகப்பை அடைந்தனர். பல மாதங்களுக்கு முன்பு அங்கு வந்தவர்கள் அதன் முற்றத்தை அரைவட்டமாக கொடியும் செடியும் வெட்டி சீரமைத்திருந்தனர். அதற்குப்பின் எழுந்த புதர்களும் செடிகளும் மண்டி பச்சை இலைகளால் ஆன ஒரு முற்றம் அங்கு அமைந்திருந்தது. அதைக் கிழித்து கடந்து அவர்கள் ஆலய முகப்பை அடைந்தனர். அவர்களின் காலடிகேட்டு சிறுதவளைகள் எம்பிக்குதித்தன. ஒரு பச்சைப்பாம்பு உயிர்கொண்ட இலைத்தண்டென தலைமொட்டுடன் சுருண்டு வளைந்து நாநீட்டியது. தலைக்குமேல் ஆள்காட்டிப்பறவை கூவிக்கொண்டே சென்றது. அவர்களை அது புதருக்குள் இட்ட முட்டையிலிருந்து விலக்கும்பொருட்டு கூவியபடியே நிலத்தில் விழுந்து சிறகடித்துப்புரண்டு அவர்களின் நோக்கை தன்மேல் வாங்கிக்கொண்டு எழுந்து பறந்து அப்பால் சென்றது.

ஆலயத்தின் கருவறைக்குள் பெயர்த்தெடுத்த கருங்கல் பாளமொன்றின் மேல் ஆளுயர நிலைக்கல்லென சண்டகௌசிகையின் சிலை அமைந்திருந்தது. அதன் மேலும் பச்சைப் பாசி படிந்திருந்தமையால் அது ஒரு வெறும் கற்பாளம் என்றே தோன்றியது. அவர்கள் இருநிரையென கைகூப்பி

பணிந்து நிற்க சண்டன் இரு கைகளையும் தலைக்குமேல் கூப்பி அப்படியே முழந்தாளிட்டு விழுந்து கையும் தலையும் மார்பும் இடையும் காலும் நிலம் படிய அன்னையை வணங்கினான். “கரியவளே, மூத்தவளே, முழுத்தவளே, என்றும் இருப்பவளே, எங்கும் என்று ஆனவளே, என் சொல்லில் அமர்க! என் முழவில் ஒலி ஆகுக! என் எண்ணங்களில் ஒளியென்று நிறைக! என் உணர்வுகளில் அனலாகுக!” என்று வாழ்த்தினான். பின்பு சிற்றாலயத்தின் சிறு நடையைத் தொட்டு சென்னி சூடி உள்ளே நுழைந்தான்.

உள்ளே குவிந்திருந்த ஓநாயின் எச்சங்களையும் பாதி மட்கிய முடிகளையும் உண்டு எஞ்சிய எலும்புகளையும் கையால் அள்ளி வெளியே போட்டான். பின்னர் அருகிருந்த எண்ணை வற்றி மையென எஞ்சிய தேங்காயோட்டு அகல் ஒன்றை எடுத்து அதைக்கொண்டு அன்னையின் பாறை வடிவை மெல்ல சுரண்டினான். பசும்பரப்பாக படர்ந்துமூடியிருந்த பாசி அகன்றபோது மெல்லிய பதிவோவியச் சிற்பமாக அன்னையின் உருவம் விழிமுன் எழுந்தது. பைலன் அருகே குனிந்து நோக்கி “சிற்பமா? ஓவியமா?” என்றான். “உலோகங்கள் பழகாத காலத்தில் வரையப்பட்டது இது. கல்லில் பிறிதொரு கல்லால் அடித்து உருவாக்கப்பட்ட பள்ளத்தால் ஆன சிற்பம்” என்றான் சண்டன். “இதை பதிக்கை என்பது தென்மொழி வழக்கம்.”

விரல் தொட்டு “இது அன்னையின் முகம். இவை பதினாறு தடக்கைகள். இவை சிலம்பணிந்த கால்கள்” என்று அவன் சொன்ன அக்கணமே அனைவரும் அன்னையின் முழு உருவை பார்த்துவிட்டனர். கணம் கணமென அது தெளிவும் பொலிவும் கொண்டு எழுந்தது. கல் மறைந்து அங்கே அன்னை நின்றிருந்தாள். “வியப்புதான்” என்றான் சுமந்து. “இப்போது என்

முன் சண்டகௌசிகை உடல் கொண்டு நின்றிருப்பதாகவே தோன்றுகிறது.” சண்டன் புன்னகைத்து “சிற்பங்கள் அனைத்தும் மானுடக் கற்பனையின் கல்லிலேயே செதுக்கி எடுக்கப்படுகின்றன, அந்தணரே” என்றான். சற்றுநேரத்தில் அகவை முதிர்ந்த அன்னை ஒருத்தி அவர்கள்முன் விழிகூர்ந்து நோக்கி நின்றிருப்பதாகவே உணர்ந்தனர்.

“அன்னையை நீராட்டி மலர் சாத்தி படையலிட்டு பூசெய்கை முடித்து கிளம்புவோம்” என்றான் சண்டன். ஜைமினி தரையை நோக்கி “வலப்பக்கமாக சரிந்திறங்குகிறது நிலம். அங்கொரு ஓடை இருக்க வாய்ப்புண்டு” என்றான். பின்னர் கண்களை மூடி தலையை மெல்லத் திருப்பி “ஆம் அங்கு நீரொலியும் எழுகிறது” என்றான். “இருவர் சென்று நீருடன் வருக! இருவர் புதுமலரும் படையலுக்கு உணவும் கொண்டு மீள்க!” என்றான் சண்டன். அவர்கள் பிரிந்து காட்டிற்குள் சென்றனர்.

சண்டன் அன்னையின் உருவை வெளியே இருந்த அரப்புல்லை பறித்து உரசி நன்கு துலக்கினான். வெளிவந்து அங்கு நின்றிருந்த ஈச்ச மரக்கன்றொன்றின் இலைகளைப் பற்றி வெட்டி துடைப்பமாக்கி ஆலயத்தின் உட்பகுதியை தூய்மை செய்தான். ஜைமினியும் சுமந்துவும் கோட்டிய கமுகுப்பாளைத் தொன்னையில் நீருடன் வந்தனர். அதை அன்னை மேல் விட்டு முழுக்காட்டி கழுவினர். ஏழுமுறை அவர்கள் நீர் கொண்டு வந்தனர். இறுதி தொன்னை நீரை அன்னை முன் வைத்தார்கள்.

வலைக்குடலையில் காட்டுப்பூக்களும் பிடுங்கிய புதுக்கிழங்குகளுமாக வைசம்பாயனனும் பைலனும் வந்தனர். தன் தோல்பைக்குள் இருந்து அரணிக்கட்டையை எடுத்து உரசி நெருப்பூட்டி காய்ந்த புல்லை எரித்து சிறு அனல் குழிக்குள் குவித்த விறகை எழுப்பினான் சண்டன். அதில் கிழங்குகளைச்

சுட்டு அவை வெடித்து வெண்நகை கொண்டபோது எடுத்து கையால் உடைத்து புது வாழைத்தளிர் நாக்கில் படைத்து அன்னை முன் வைத்தான். வைசம்பாயனனும் பைலனும் மலர்களைத் தொடுத்து மாலையாக்கினர். செவ்வரளியும் செங்காந்தளும் செந்தெற்றியும் செண்பகமும் கலந்து அமைந்த மாலையை அன்னையின் கழுத்தில் மாட்டினான் சண்டன்.

பதினாறு பெருங்கைகளில் படைக்கலங்களும், பன்றித்தேற்றையும் தெறிவிழிகளும் கொண்டிருந்த அன்னை அச்செம்மையால் ஒளி கொண்டாள். எரியும் அனற்களத்திலிருந்து ஒரு விறகை எடுத்து அச்சுடரை மும்முறை சுழற்றி மும்முறை எதிர் சுழற்றி அன்னைக்கு அனலாட்டு காட்டினான் சண்டன். பின்னர் வெளிவந்து இடக்கால் மடித்து அமர்ந்து தன் உடுக்கை எடுத்து மீட்டி அன்னையின் ஆயிரம் பெயர்கள் அமைந்த தொல்பாடலைப் பாடினான். ஒவ்வொரு சொல்லாக அவன் சொல்லச் சொல்ல அச்சொற்கள் உதிர்ந்து அன்னை அவள் மட்டுமே என அங்கு நிற்பதுபோல பைலனுக்குத் தோன்றியது.

பூசனை முடித்து அவர்கள் முற்றத்தில் வளைந்தமர்ந்து அன்னைக்குப் படைத்த கிழங்கை பகிர்ந்துண்டு அவள் அடிகளில் படைத்த நீரை அருந்தினர். “அன்னையை இக்குலங்கள் கரிய மண்ணின் வடிவமென்று வழிபடுகின்றனர்” என்றான் சண்டன். “ஆடிப்பட்டம் அமைந்ததும் வயலொருக்கி வைத்துவிட்டு விதைகளுடன் இங்கு வருவார்கள். இந்நிலத்தில் இருந்து கரிய மண்ணை அள்ளி ஒரு தொன்னையில் நிரப்பி அதில் விதைகளிட்டு நீரூற்றி அன்னை முன் வைப்பார்கள். மூன்று நாட்கள் இங்கே சுற்றிலும் குடில் அமைத்து தங்குவார்கள். அவ்விதைகள் முளைத்து ஈரிலை

விட்டு எழுந்ததும் அன்னையை வணங்கி அவள் அருளிய கொடை என அதை கொண்டுசென்று தாங்கள் உழுது மரமோட்டி செம்மைப்படுத்தி வைத்திருக்கும் வயலில் நடுவார்கள்" என்றான் சண்டன்.

சண்டன் "எருவும் தழையுமிட்டு மும்முறை உழுது நீர்த்தேக்கிவிட்டு வந்த வயல் அப்போது செந்நிறத் தீற்றலென பாசி படிந்து இனிய ஊன் மணம் கொண்டு காத்திருக்கும். வயல் பூப்பது என்று அதை சொல்வார்கள். அது அன்னையின் கருக்குருதி என்று சொல்லக்கேட்டிருக்கிறேன். அன்னையின் அருள்கொண்ட செடிகள் ஒன்று நூறு மேனியென பெருகும் என்பது குலநம்பிக்கை. என்று இத்தெய்வம் இங்கமர்ந்ததென்று எவருமறியார். காட்டுக்குள் அன்னை அமர்ந்திருப்பது வரை ஊர்களில் கழனிகளில் அமுது விளையுமென்று தொல்பாடல்கள் சொல்கின்றன" என்றான்.

அன்னையின் அருளுணவை உண்டு ஒழிந்த இலையுடன் எழுந்த ஜைமினி இயல்பாகத் திரும்பி கருவறையை நோக்கிய உடனே வியப்பொலி எழுப்பி உடலதிர்ந்தான். "என்ன?" என்றான் சண்டன். "ஒருகணம் அன்னையின் கண்களை என் கண்கள் சந்தித்தன" என்றான் ஜைமினி. "ஆம், நான் கருவறை நுழைகையிலேயே அவளுடன் விழிதொட்டேன்" என்றான் சண்டன். அவர்களை மாறி மாறி நோக்கிய சுமந்து திரும்பி கருவறையை நோக்கியபின் "நோக்குந்தோறும் உயிர் கொண்டு எழுகிறாள்" என்றான். "ஆனால் நம் சித்தம் இது கல் என்று சொல்லிக்கொண்டிருக்கிறது. சித்தம் கரையும் ஓர் அறியாக்கணத்தில் கல்லை திரையெனச்சூடி உள் அமர்ந்திருக்கும் அன்னை எழுந்து வந்துவிடுகிறாள்" என்றான் சண்டன்.



வியப்புடன் அவர்கள் நால்வரும் கருவறையை நோக்கினர். “நோக்குகிறேன் எனும் உணர்வு வந்ததுமே அவள் கல்லுக்குள் சென்று நின்றுவிடுகிறாள்” என்றான் வைசம்பாயனன். “நாம் விழி விலக்கியதுமே அவள் எழுந்து நோக்கு கொள்கிறாள் போலும்” என்று சுமந்து சொன்னான். “செல்வோம்! இருளுக்குள் நாம் கௌசிகக்காட்டைவிட்டு விலகிச்சென்றுவிடவேண்டும்” என்றான் சண்டன். அவர்கள் கை கழுவி மீண்டு வந்து

அன்னையின் காலடிகளை விழுந்து வணங்கி புறம்காட்டாது நடந்து விலகி மீண்டும் காட்டுப்பாதையை அடைந்தனர்.

ஜைமினி "சிற்பநூல் முறைப்படி பீடமென்பது இவ்வுலகம். அதன் மேல் விண்ணுருக்கொண்டு அமர்ந்திருக்கின்றன தெய்வங்கள். யோகநூலின் கூற்றுக்களின்படி அப்பீடம் புறமும் அகமும் ஆன ஜாக்ரத். அதில் துரியாதீதமாக எழுந்தவையே தெய்வங்கள்" என்றான். "சண்டரே, தெய்வங்களை அப்பீடத்தில் நிலை நிறுத்துவது வேதம். இவ்வன்னையை பீடத்தில் நிலை நிறுத்தும் வேதம் எது?" சண்டன் "வேதமொன்று உள்ளது, இல்லையேல் அன்னை இங்கு அமர்ந்திருக்க வாய்ப்பில்லை. எங்கோ அது நாளும் உரைக்கப்படுகிறது. எவ்வனலிலோ அவியளிக்கவும் படுகிறது. அது நாமறியாத வேதம்" என்றான்.

"அந்தணர்களே, இப்புவி நம் நினைப்புக்கும் எட்டாது விரியும் வெளி. இதில் நாம் நடந்து நடந்து அறிவது பாரதவர்ஷம் என்னும் நிலம் ஒன்றே. நூறுநூறு நிலவர்ஷங்கள் அடங்கியது இப்புவி. பல்லாயிரம்கோடி புவிகள் அடங்கியது வான்வெளி. வானென்று சூழ்ந்தமைபவையே தெய்வங்கள். ஒற்றை ஒரு கணத்தில் ஓராயிரம்கோடிகோடி நாவுகள் வேதமோதி அன்னையை வாழ்த்துகின்றன என்று ஒரு கவிதைவரியுண்டு. பெருமழையின் ஒருதுளியே வேதமென்று நம் எளிய மொழியில் சிக்கியது. மொழி பலவாகி விரிந்துள்ள இங்கெங்கும் பரவி பெய்து கொண்டிருக்கிறது வேத மாமழை. ஒருவிதையையும் அது முளைக்காமல் எஞ்சவிடுவதில்லை என்கின்றனர் கவிஞர்."

ஜைமினி தன் உளச்சொற்களில் உழன்றபடி தலைகுனிந்து நடந்தான். "இரண்டு வேதங்கள்" என்று அவன் தனக்குள் என சொல்வதைக்கேட்டு சுமந்து "என்ன?" என்றான்.

“பொன்னுருக்கொண்ட ஹிரண்யம். மண்ணுருக்கொண்ட கிருஷ்ணம்” என்றான் ஜைமினி. “ஒவ்வொரு வேதத்திற்கும் கரிய கிளையொன்று உள்ளது. அதை ஏன் கிருஷ்ணசாகை என்கின்றனர் என இப்போது அறிகிறேன்.” அச்சொற்களை ஒவ்வொருவரும் தங்கள் எண்ணத்தில் விரித்துவிரித்து பொருள் கொண்டபடி நடந்தனர். அவர்களின் காலடியோசைகள் அவ்வெண்ணங்களுக்கு தாளம் அமைத்தன.

சண்டன் அக்காட்டை விழிகளால் துழாவியபடி தனக்குள் இயல்பாக எழுந்த வரியொன்றை முனகியபடி கடந்தான். அது என்ன வரி என்று பைலன் செவிகூர்ந்தான்.

***“சர்வ கல்விதமேவாகம் *நான்யாஸ்தி சனாதனம்**** !***

அவன் அதை உணர்ந்ததை விழிதிருப்பி நோக்கியதும் சண்டன் புன்னகைத்தான். “தொன்மையானது என பிறிதொன்றில்லை” என்றான் பைலன். மேலும் விரிந்த புன்னகையுடன் “அதுவே இவையனைத்தும்” என்றான் சண்டன்.

**[ 8 ]**

அவர்கள் காட்டின் விளிம்பைக் கடந்து விரிந்த மேய்ச்சல்வெளியொன்றை அடைந்தனர். தொலைவிலேயே கன்றுகளின் கழுத்துமணியோசையை பைலன் கேட்டான். “இனிய ஓசை” என்றான். “காட்டுக்குள் வரும் முதல் ஊரின் ஒலி கழுத்துமணிதான்” என்று சண்டன் சொன்னான். “வேறெந்த ஒலியும் காட்டிலும் எழ வாய்ப்புள்ளது. உலோகமணியை ஊரார் மட்டுமே எழுப்பமுடியும்.” நெருங்கநெருங்க அந்த ஓசை பெருகிவந்தது. “உலோகமணிகளின் மழை” என்றான் ஜைமினி. “இவர் எப்போதுமே காவியங்களுக்குள்தான் இருக்கிறார்.

காட்டையும் ஊரையும் அங்கே இழுத்துவைத்துக்கொள்கிறார்" என்றான் சுமந்து.

நூற்றுக்கணக்கான மாடுகள் அந்தியொளியில் நிழல்நீள புல்வெளியில் நின்று மேய்ந்துகொண்டிருந்தன. அவற்றின் வால்கள் சுழல மொய்த்த பூச்சிகள் செவ்வொளியில் சிறகுசுடரப் பறந்தன. ஜைமினி ஏதோ சொல்ல வாயெடுத்து அடக்கிக்கொண்டான. "சொல்லுங்கள், அந்தணரே! எவர் என்ன சொன்னாலும் குயில் பாடாமலிருக்கிறதா?" என்றான் சண்டன். "இது பகடி என்றாலும் உண்மை. நான் எண்ணுவதைச் சொல்வதனூடாக இருக்குமிடத்திலிருந்து ஒரு கணுவேனும் மேலேறுகிறேன்" என்றான் ஜைமினி. "என்ன எண்ணினீர்?" என்றான் பைலன். "அனலை வீசும்போது பொறிகிளம்புவதுபோல" என்றான் ஜைமினி. "நன்று" என்றான் சண்டன்.

அவர்கள் புல்வெளியில் காலெடுத்துவைத்தபோது அப்பால் ஒரு சிறிய ஒற்றைக்காளை மாட்டுவண்டி செல்வதைக் கண்டனர். "வணிகர்களா?" என்றான் ஜைமினி. "இல்லை, அவர்களும் சூதர்களே. பக்கத்தண்டில் முழவும் யாழும் மாட்டப்பட்டுள்ளது. உள்ளே விறலி அமர்ந்திருக்கிறாள்" என்றான் சண்டன்.. வண்டியின் நுகமுகப்பில் அமர்ந்திருந்தவன் தெரிந்தான். "நம்மைப்போலவே கிராத சூதன், நன்று" என்று சண்டன் சொன்னான். "எப்படி தெரியும்?" என்றான் பைலன். "குழலைக் கட்டி எலும்புகொண்டு கோத்திருக்கிறான். மானுட எலும்பு." அவர்கள் உடனே அதைக் கண்டனர். "ஆம், முழங்கை" என்றான் வைசம்பாயனன்.

புல்மேல் வண்டி மெதுவாகவே சென்றது. அவர்கள் வண்டியை அணுகினார்கள். உள்ளிருந்து ஒரு கன்னங்கரிய உடல்கொண்ட

சிறுவன் எட்டிப்பார்த்தான். மூன்றுவயதான குழந்தை. வலப்பக்கம் சாய்ந்த சிறிய குடுமியும் காதில் கல்லாலான கடுக்கனும் அணிந்திருந்தான். பால்பற்கள் தெரிய ”தந்தையே, ஒரு பாசுபத சூதர்” என்றான். “பேசாமலிரு, யார்?” என்று அவன் அன்னை அவனை பிடித்தாள். “என்ன?” என்றான் அவன் தந்தை. அவனைநோக்கி சண்டன் “பாசுபதன் என எப்படி அறிந்தாய்?” என வியப்புடன் கேட்டான். “உங்கள் கையின் பாம்புவிரலில் நாகக்கணையாழி உள்ளதே” என்றபடி சிறுவன் குதித்து கீழே இறங்கினான். “உக்ரா, என்ன செய்கிறாய்?” என்றாள் அவன் அன்னை. “அவனைப்பிடி, அறிவிலியே. அடிக்கொருதரம் வண்டியிலிருந்து குதிக்கிறான் மூடன்” என்று அவன் தந்தை சினந்தபடி கயிற்றை இழுத்து வண்டியை நிறுத்தினான்.

சிறுவன் கண்களை சுருக்கியபடி நால்வரையும் நோக்கி தனக்கே என கைசுட்டிக்கொண்டான். பின்னர் சண்டனிடம் “இவர்கள் அந்தணர்கள். இவர்களை நீங்கள் கொன்று உண்ணப்போகிறீர்களா?” என்று ஆர்வமாக கேட்டான். “ஆம், நான் தென்குமரி வரை செல்கிறேன். வழியில் உணவு இல்லாமலாகக்கூடாது அல்லவா? இவர்களில் எவரை முதலில் உண்ணலாம்?” என்றான் சண்டன். அவன் நால்வரையும் மாறி மாறி நோக்கியபின் வைசம்பாயனனை சுட்டிக்காட்டி “இவரை” என்றான். வெடித்துச்சிரித்து “ஏன்?” என்றான் சண்டன். ஜைமினியை சுட்டிக்காட்டி “இவர்தானே கொழுத்தவர்?” என்றான்.

சிறுவன் “ஆம், ஆனால் இவர் மட்டுமே உங்கள் மேல் ஐயம் கொண்டிருக்கிறார்” என்றான். சண்டன் வைசம்பாயனனை நோக்கிவிட்டு “ஆம், அதனால் அவரை உண்ணவேண்டுமா?” என்றான். “ஐயம் கொள்பவரின் ஐயத்தை

உண்மையாக்குவதுதானே சிறந்தது?” என்றான் சிறுவன். சண்டன் அவன் தலையை வருடியபடி “இவன் கருவறைக்குள் இருந்தே மொழியுடன் எழுந்திருக்கிறான் போலும்” என்றான். “நான் கருவறைக்குள் இருக்கும்போது என் அன்னை காவியம் படித்தாள், அவளே சொன்னாள்” என்றான் சிறுவன்.

வண்டியோட்டிய சூதன் இறங்கி வந்து வணங்கி “பொறுத்தருள்க, சூதரே! இவன் என் ஒரேமைந்தன். இன்னொரு குழந்தை அவன் அன்னை வயிற்றில் இருக்கிறது. இவன் சற்று துடுக்குமிக்கவன். பல இடங்களில் எனக்கு அடிவாங்கி தந்திருக்கிறான்” என்றான். “உண்மையில் கூர்மபிருங்கத்தில் ஒரு அந்தணர் இல்லத்துக் காவலர்களிடம் வாங்கிய அடி இன்னும் என் உடலில் வலிக்கிறது. அங்கிருந்து நேராக இங்கே வந்தேன். அடுத்தவேளை உணவை இனிமேல்தான் தேடவேண்டும். தேள் நினைக்கும் முன்னரே கொடுக்கு சென்று கொட்டிவிடும் என்பார்கள். இவன் என் தேள்கொடுக்கு” என்றான். “கொடுக்கு இருப்பதனால்தானே அதை தேள் என்கிறோம்?” என்று சிறுவன் கேட்டான்.

“நாங்கள் அயலூர் சூதர். என் பெயர் சண்டன். இவர்கள் வைதிகர்குலத்து இளையோர்” என்றான் சண்டன். சூதன் கைகூப்பி “பொறுத்தருள்க! நான் முதலில் என்னைப்பற்றி சொல்லியிருக்கவேண்டும். தொல்சூதர் மரபான மாயூரத்தில் சகரன் மைந்தனாகப்பிறந்த என்பெயர் கிருதன். குலமுறையாகவே மாவிரத நெறிகொண்டவன். வண்டிக்குள் இருப்பவள் என் மனையாள். மார்ஜாரகுலத்தவள். காட்டில் பிறந்துவளர்ந்தவள். காலகரின் மகளான அவள் பெயர் சுதை” என்றான். “இவன் என் துணைவிக்கு மலாலோமகுலத்து முனிவரான லோமஹர்ஷணரில் பிறந்த மைந்தன். இவன்

பிறந்தபோது பெருங்குரலெழுப்பியமையால் தந்தையால் உக்ரசிரவஸ் என்று பெயரிடப்பட்டான். உண்மையிலேயே இவன் தொண்டை மும்மடங்கு ஆற்றல்கொண்டது” என்றான்.

“சொல்லாற்றல் ஐந்து மடங்கு என நினைக்கிறேன்” என்றான் சண்டன். கிருதன் “உண்மையிலேயே இவனை எண்ணி நான் அஞ்சிக்கொண்டிருக்கிறேன், சண்டரே. ஏழுமாதங்களிலேயே நன்றாக பேசத்தொடங்கிவிட்டான். இரண்டுவயதுக்குள் ஆயிரம் பாடல்களை பாடம்கொண்டுவிட்டான். உலகநடைமுறையை அறியும்முன்னரே மொழியும்நூலும் கைவருவதன் அனைத்து இடர்களையும் அடைந்துகொண்டிருக்கிறான்” என்றான் கிருதன். “இவன் உலகமே அறிந்தோர் அறியாதோர் என இரண்டாகப் பிரிந்துவிட்டது. அறியாதோர் இழிந்தோர் என எண்ணுகிறான். இவ்வுலகில் அறியாதோரை அண்டியே அறிந்தோர் வாழவேண்டுமென்று இன்னமும் புரிந்துகொள்ளவில்லை” என்றான்.

“நீங்கள் அறிந்தோர்” என்று உக்ரன் கைசுட்டி சொன்னான். “எப்படி தெரியும்?” என்று பைலன் சிரித்துக்கொண்டே குனிந்து அவனிடம் கேட்டான். “அறிந்தோர் விழிகளில் ஒரு நகைப்பு உள்ளது. அறியாதோர் எவை கொண்டிருந்தாலும் எங்கிருந்தாலும் விழிகளில் உள்ளது ஒரு பதைப்பு மட்டுமே” என்றான் உக்ரன். ஜைமினி குனிந்து அவனைத் தூக்கி தன் தோளில் அமர்த்திக்கொண்டான். “எடையே இல்லாமலிருக்கிறான். ஒருவயதுக்குழந்தை அளவுக்கே உடல் உள்ளது” என்றான். சுதை எட்டிநோக்கி புன்னகைத்தபடி “அவன் எதையுமே உண்பதில்லை. துயிலும் நேரம் தவிர்த்து பிறபொழுதெல்லாம் பேச்சுதான். பேசத்திறந்த வாய்க்குள்

ஏமாற்றி உணவை ஊட்டவேண்டும். அதையும் துப்பிவிடுவான்” என்றாள்.

“அந்தணர்கள் சூதர்களை தூக்கலாமா?” என்று பைலன் கேட்டான். “இவன் கலைமகளின் மைந்தன்” என்றான் ஜைமினி. “இல்லை நான் சுதையின் மைந்தன். என்னை சௌதி என்றே சொல்லவேண்டும்” என்றான் மேலிருந்தபடி உக்ரன். “இது சிற்றூர். ஆனால் மலையடிவாரம் என்பதனால் சூதர்கள் அடிக்கடி வருவதில்லை என நினைக்கிறேன். ஆகவே நமக்கு அளிக்க இவர்களிடம் பொருளும் உளமும் இருக்கக்கூடும்” என்றான். “ஆம், இன்னும் காடு எஞ்சியிருக்கும் ஊர்” என்றான் சண்டன். அவர்கள் ஊரை நோக்கி சென்றனர்.

உக்ரன் “அந்தணரே, ஓர் ஊரார் வருபவர்களிடம் கேட்கவிழையும் முதற்செய்தி என்ன?” என்றான். ஜைமினி “நல்ல மழை, நல்லரசு, வெற்றிகள், வேள்விகள்” என்றான். “இல்லை, அனைவருமே கேட்பது அவர்கள் ஊரைப்பற்றி நாம் எப்படி அறிந்தோம் என்றே. நெடுந்தொலைவிலேயே அவ்வூரைப்பற்றி நம்மிடம் பலர் சொன்னார்கள் என்று நாம் சொன்னால் மகிழ்வார்கள். காட்டுக்குள் ஒளிந்து எவருமறியாது கிடக்கும் சிற்றூர்கூட கண்டடையபப்படவேண்டுமென்றே ஏங்குகிறது” என்றான். “ஆம், உண்மை” என்றான் சண்டன். “நான் எப்போதும் அதைத்தான் சொல்கிறேன்.” வைதிகர் நால்வரும் சிரித்தனர். பைலன் “நுண்மையாக உணர்ந்திருக்கிறான்” என்றான். “அந்த விழைவையே சரடெனக்கொண்டு அவர்களை தங்களை நோக்கி இழுத்துக்கொண்டிருக்கிறது நாடும் முடியும்” என்றான் வைசம்பாயனன்.

# கிராதம் - 67

[ 9 ]

காகவனம் என்று அழைக்கப்பட்ட அந்தச் சிற்றூர் முன்னூறு மூங்கில் இல்லங்களும் நடுவே வட்டவடிவமான மன்றுமுற்றமும் கொண்டிருந்தது. ஊரை வளைத்துச் சென்ற முள்மர வேலிக்கு நடுவே கன்றுகள் சென்று வருவதற்கான வலப்பக்க வாயிலும் மானுடரும் வண்டிகளும் செல்வதற்கான இடப்பக்க வாயிலும் இருந்தன. வலப்பக்க வாயிலில் புகுந்த காலடிப்பாதை வளைந்து சென்று ஊரின் பின்புறம் இருந்த குறுமரங்களால் ஆன சோலையை அடைந்தது. அதற்குள் கன்றுகளைக் கட்டும் தொழுவங்கள் அமைந்திருந்தன. இடப்பக்க வாயிலை அடைந்த வண்டிப்பாதை ஊரை வளைத்துச் சென்ற மூன்றாள் உயரமான அகழிக்கு மேல் போடப்பட்ட மரப்பாலத்தின் மேல் ஏறி உள்ளே சென்று முற்றமன்றில் முடிந்தது.

மன்று நடுவே நின்றிருந்த தொன்மையான அரசமரத்தினடியில் குலத்தலைவரும் குடிமூத்தாரும் அமர்ந்து நெறியுசாவும் மேடை அமைக்கப்பட்டிருந்தது. இல்லங்களுக்கு நடுவே பிறிதொரு சிறிய முள்வேலியால் காக்கப்பட்ட குலத்தலைவரின் மூன்றடுக்கு மூங்கில் இல்லம் அமைந்திருந்தது. அதன்மேல் அவர்களின் குடிமுத்திரையான ஆலிலை பொறிக்கப்பட்ட கொடி பறந்தது. ஓராள் உயரத்திற்கு மண்குவித்து மேலே மூன்றாள் உயரத்திற்கு முள்மரம் நட்டு அமைக்கப்பட்ட அவ்வேலியின் நான்கு மூலைகளிலும் தேக்குமரங்கள் நடப்பட்டு அவற்றின் உச்சியில் பரண் கட்டப்பட்டு காவல்மாடம் அமைக்கப்பட்டிருந்தது. அவற்றில் எந்நேரமும் காவலர் இருவர் தொலைதேரும் அம்புகளும் நீள்வில்லுமாக அமர்ந்திருந்தனர்.

புல்வெளியைக் கடந்து அவர்களின் வண்டி வருவதைக் கண்டதும் கிழக்கு வாயிலின் அருகே இருந்த காவல்மாடத்தின் உச்சியில் நின்றிருந்த வீரன் கொம்பை முழக்கினான். பிற மூன்று காவல்மாடங்களிலிருந்தும் கொம்புகள் எழுந்தன. வயலுக்கு வெளியே நான்கு குடிவீரர்கள் கையில் தோதகத்திமரம் செதுக்கிச் செய்த நீண்ட ஈட்டிகளுடன் தோன்றினர். அவர்களுக்குக் காவலாக சற்று பின்னால் நான்கு வில்லேந்திய வீரர்கள் வந்தனர். சண்டனும் கிருதனும் தங்கள் கையிலிருந்த முழவுகளை தலைக்கு மேல் தூக்கி விரல்களால் மீட்டி ஓசை எழுப்பினர்.

சூதர் வருகைக்குரிய குழூஉக்குறி அது. அந்த முழவோசை கேட்டதும் காவலர்கள் விரைவு தணிந்து உடல் இயல்புநிலை கொள்ள காத்து நின்றனர். உடலுக்கு இயல்புநிலை என்பது கோணல்நிலையா என பைலன் எண்ணிக்கொண்டான். அவர்கள் நேர்கொண்ட உடலுடன் சீரடிகளுடன் இரும்புப் பாவைகள்போல் அதுவரை வந்தனர். அது பயின்று உருவாக்கிய இறுக்கம். அவன் ஒவ்வொரு உடலாக நோக்கினான். ஒவ்வொன்றும் ஒவ்வொரு கோணல் கொண்டிருந்தன. அந்தக் கோணல் எங்குள்ளது? அவர்களின் இயல்பிலா? அவ்வாறென்றால் அவர்களின் உள்ளத்திலுள்ளதா அது? எண்ணங்களிலும் உணர்வுகளிலும் அது இருக்குமா?

அதோ அவன் இடையில் வலக்கை வைத்து சற்றே இடக்கால் வளைத்து நிற்கிறான். இன்னொருவன் அருகே மார்பில் கைகட்டி முதுகை வளைத்து நின்றிருக்கிறான். உடலில் எப்பகுதி கோணலாகிறதென்பதைக்கொண்டு அவர்கள் எவ்வகைப்பட்டவர்கள் எனச் சொல்லும் நிமித்திகமுறை உள்ளதா? உடல்நிமித்திகர் இதை அறிவார்களா என்ன?

மறுகணமே அவன் புன்னகையுடன் அக்கோணலைக்கொண்டு அவர்களுக்குரிய தெய்வமேதென்று சொல்லும் ஒரு மெய்யியல் உருவாகக்கூடுமா என எண்ணினான். நீ இடப்பக்கம் கோணல்கொண்டிருக்கிறாய், உனக்குரியது அதர்வம். வலப்பக்கம் கோணலாகிய உனக்கு யஜுர். நடுவளைந்த உனக்கு ரிக். அதிலும் உன் தோள் சரிந்துள்ளது, ஆகையால் உன்னுடையது கரியகிளை. எந்த வேதமும் இல்லாதவர் யார்? முற்றிலும் நிகர்நிலைகொண்டவர்களா?

அவன் புன்னகைப்பதைக்கண்டு “மலைப்பகுதியின் சிற்றூர்கள் சிறிய அரசுகள் போலவே இயங்குகின்றன” என்றான் கிருதன். “இங்கு வரி கொள்வதற்கு மட்டுமே அரசென்று ஒன்று வந்து தொடுகிறது” என்றான் சண்டன். கிருதன் “ஆம், அதுவும் நன்றே. அரசு அங்கு நிகழ்த்தும் வேள்வியில் இவர்களுடையதென ஒரு பிடி அரிசி சென்றாலும் அந்நலன் இவர்களுக்குரியதல்லவா? எத்தனை தனித்து காட்டுக்குள் வாழ்ந்தாலும் வான்மழை அனைவருக்குமாகவே பெய்கிறது. மழை கொணரும் வேதம் அனைவருக்கும் உரியதே” என்றான். சண்டன் புன்னகைத்தான்.

உக்ரன் “ஏன் அத்தனைபேரும் வளைந்து நிற்கிறார்கள்?” என்றான். பைலன் திடுக்கிட்டான். “காற்று வீசும்போதுதான் செடிகள் இப்படி வளையும்” என்று உக்ரன் சுட்டிக்காட்டினான். “அங்கே கண்ணுக்குத் தெரியாத காற்று வீசுகிறது.” பைலன் சிரித்தபடி “ஆளுக்கொரு காற்றா?” என்றான். “ஒரே காற்றுதான். அவர்களின் வேரும் கிளைகளும்தான் வேறுவேறு” என்றான் உக்ரன். கிருதன் “இப்படித்தான் வாயில்வந்ததை உளறுவான். அவன் யாரைச் சொல்கிறானோ அவர்களை நோக்கி கையை வேறு சுட்டுவான். இவனால்தான் நான் ஒருநாள் கழுவிலேறி அமரப்போகிறேன்” என்றான்.

வண்டிக்குள் இருந்த அவன் அன்னை சுதை “அவன் பொருளில்லாமல் சொல்வதில்லை. நமக்குத்தான் புரிவதில்லை” என்றாள். “உன்னைப்போன்ற கரிய காட்டுப்பெண்ணை அணைந்தபோது லோமஹர்ஷணருக்கு சற்றே கிறுக்கு பிடித்திருக்கவேண்டும். அந்தக் கிறுக்குதான் இப்படி தனியாகப் பிரிந்து வந்து பிறந்திருக்கிறது” என்றான் கிருதன். “தந்தையே, கிறுக்கு தொற்றக்கூடியதா?” என்றான் உக்ரன். “இல்லை, இருந்தால் எனக்கு தொற்றியிருக்குமே?” என கிருதன் பல்லைக்கடித்தபடி சொன்னான்.

அவர்கள் அவ்வூரின் வாயிலை அடைந்ததும் கிருதன் கைகளை தலைக்குமேல் தூக்கி “என் பெயர் கிருதன், தொல்சூதர் மரபான மாயூரத்தில் சகரன் மைந்தனாகப் பிறந்த பாடகன். வண்டிக்குள் என் மனையாட்டி இருக்கிறாள்” என்றான். “அவள் கருவுற்றிருப்பதனால் நடக்கமுடியவில்லை.” திரும்பி சண்டனை சுட்டிக்காட்டி “அவர் பாசுபத நெறிகொண்ட சூதர். அவர்கள் அயலூர் வைதிகர். கல்விதேடி நிலம்பெயர்பவர்” என்றான். சுதை தன் பெரிய வயிற்றுடன் மெல்ல இறங்கினாள்.

பைலனும் சுமந்துவும் வைசம்பாயனனும் ஜைமினியும் தங்களை அறிமுகம் செய்துகொண்டதும் ஊர்க்காவலர் முகங்கள் மாறின. அவர்களின் தலைவன் “நீங்கள் இங்கெழுந்தருளியது எங்கள் சிற்றூரை அருள் கொள்ளச்செய்கிறது, அந்தணர்களே” என்றான். திரும்பி அருகே நின்ற இன்னொருவனிடம் “அந்தணர்கள் என ஊர்த்தலைவரிடம் சொல்” என்று ஆணையிட அவன் உள்ளே ஓடினான்.

“வருக, தங்கள் கால்களால் எங்கள் ஊர் பொலிக!” என்று அவன் நால்வரிடமும் சொன்னான். ஆனால் ஐயத்துடன் அவன்

விழிகள் ஜைமினியின் தோள்மேல் இருந்த உக்ரனை பார்த்துக்கொண்டிருந்தன. பின்னர் "அவருக்கு இன்னமும் மெய்யணைவுச் சடங்கு செய்யப்படவில்லையா?" என்றான். ஜைமினி புரியாமல் "சூதர்களுக்கு பன்னிரு வயதில்தானே அணைநூல் அளிப்பார்கள்?" என்றான். அவன் மேலும் குழம்பி "வடபுலத்து அந்தணர் இத்தனை கரியநிறம் கொண்டிருப்பதில்லை" என்றான். "இவன் அந்தணன் அல்ல, சூதன்" என்றான் ஜைமினி புரிந்துகொண்டு.

கிருதன் பதறியபடி "ஆம், அவன் என் மைந்தன். என் மனைவிக்கு முனிவராகிய லோமஹர்ஷணரில் பிறந்தவன். உக்ரசிரவஸ் சௌதி என்பது அவன் பெயர்" என்றான். அவர்கள் ஒருகணம் சொல்லிழந்தவர்களாக நோக்கினர். "அந்தணர் மேல் அமர்ந்து பயணம் செய்யும் முதல் சூதனை பார்த்திருக்கிறார்கள். அவர்களின் உலகம் இடிந்து சரிந்து மீண்டும் எழுந்து அமைய சற்றுநேரமாகும்" என்றான் சண்டன் சிரித்தபடி. காவலர்முதல்வன் பெருமூச்சுவிட்டு "வருக!" என்றான். கிருதன் "கீழிறங்கு, கரியா. உன்னை இவ்வண்ணம் கண்டால் ஊர்த்தலைவர் என்ன சொல்வார் என்று அறியேன்" என்றான். ஜைமினி "அவன் தனக்குரிய ஊர்தியிலேயே செல்கிறான் சூதரே, அமைதிகொள்க!" என்றான்.

ஊர்த்தலைவர் உள்ளிருந்து மேலாடையை எடுத்து சுற்றிக்கொண்டு ஓடிவந்தார். அதை அவர் விரைந்து பெட்டியிலிருந்து எடுத்திருக்கவேண்டுமென அதில் வீசிய தாழம்பூப் பொடியின் மணமே காட்டியது. கைகூப்பியபடி "வருக வருக! அந்தணர் காலடிபடுவதனால் எங்களூரில் அறமும் கல்வியும் செழிக்கட்டும். சூதர் சொற்களினூடாக மாவீரரும் பத்தினியரும் தவமுனிவரும் தேவரும் தெய்வங்களும்

எங்களூரில் குடியேறட்டும்” என்றார். அவர் ஜைமினியின் மேல் அமர்ந்திருக்கும் உக்ரனை திட்டமிட்டு விழிதவிர்ப்பது தெரிந்தது. முன்னரே அவருக்கு சொல்லப்பட்டுவிட்டது என்று ஜைமினி உணர்ந்துகொண்டான்.

அக்குடியின் ஆண்களும் பெண்களும் அவருக்குப் பின் வந்து கூடினர். பெண்கள் குடங்களில் மஞ்சள் கரைத்த நீருடனும் குடலைகளில் மலர்களுடனும் வந்தனர். அவர் குடங்களில் இருந்த நீரை எடுத்து வைதிகர் மூவரின் கால்களையும் கழுவினார். ஜைமினி உக்ரனை இறக்கிவிட்டான். குலத்தலைவர் ஜைமினியின் கால்களில் மஞ்சள்நீரூற்றிவிட்டு விழிவிலக்கிக்கொண்டார். ஜைமினி ஊர்த்தலைவர் ஒரு பெண்ணிடம் திரும்பக்கொடுத்த சுரைக்குடுக்கையை தான் வாங்கி மஞ்சள்நீரை அள்ளி உக்ரனின் கால்களில் விட்டு தானே கழுவினான். ஊர்த்தலைவரின் கழுத்தில் தசைகள் இழுபடுவதை காணமுடிந்தது.

மூன்று பெண்கள் சுடர், நீர், அரிசி, மலர், பொன் என ஐந்து மங்கலங்களைக் காட்டி அவர்களை வரவேற்றனர். பிறர் அரிமலர் தூவி வாழ்த்துரைத்தனர். குரவையோசை சூழ்ந்து ஒலித்தது. அவர்கள் தங்களுடன் அழைத்துச்சென்றமையால் உக்ரனும் அந்த வாழ்த்துக்களுடன் உள்நுழைந்தான். கிருதனும் அவன் மனைவியும் தொடர்ந்துசென்றனர். இரு காவலர் அவர்களின் வண்டியை அப்பால் கொண்டுசெல்ல இறுதியாக சண்டன் தன் தோல்மூட்டையுடனும் முழவுடனும் நுழைந்தான்.

ஊர்த்தலைவர் அவர்களை அழைத்துச்சென்று மன்றுநடுவே நின்றார். “தாங்கள் தங்குவதற்காக குடில்கள் ஒருக்கப்படுகின்றன, அந்தணர்களே. அந்தணர் தங்கும்பொருட்டு

இங்கே குடில் ஒன்று உள்ளது. ஆனால் அந்தணர்கள் இங்கு வந்து பத்தாண்டுகளுக்கும் மேல் ஆகிறது. ஆகவே குடில் சற்று தூசடைந்துள்ளது. பெண்டிர் அதை சீரமைத்துக்கொண்டிருக்கிறார்கள். சற்றுநேரம் பொறுங்கள்" என்றார். திரும்பி சண்டனிடம் "சூதர்கள் தங்குவதற்கு அப்பால் குடில்கள் இரண்டு உள்ளன. அவை உழவுப்பொருட்கள் போட்டுவைக்க இப்போது பயன்படுத்தப்படுகின்றன. எடுத்து அகற்றிக்கொண்டிருக்கிறார்கள். இன்னும் சற்றுநேரத்தில் சித்தமாகிவிடும்" என்றார்.

"இவன் எங்களுடன் தங்குவான்" என்றான் ஜைமினி. ஊர்த்தலைவர் அதை கேட்காதவர் போலிருந்தார். "நாங்கள் உரிய ஆசிரியரைத் தேடிச்செல்லும் மாணவர்கள். இங்கு ஒருநாள் மட்டுமே தங்குவதாக உள்ளோம்" என்றான் பைலன். "இப்போது எங்கள் மெய்யாசிரியராக வழிகாட்டி அழைத்துச்செல்பவர் இவர்." ஊர்த்தலைவர் அதையும் கேட்டதாக காட்டிக்கொள்ளவில்லை. "அந்தணர்களே, இங்கு எங்கள் குலத்தின் சிறார் எண்ணும் எழுத்தும் பயில்கிறார்கள். அவர்களுக்கு சொல்முறை செய்ய அந்தணர் வேண்டும். பல்லாண்டுகாலமாக இங்கே அந்தணர்களை கொண்டுவர முயல்கிறோம். எவரும் இத்தனை தொலைவுக்கு வருவதில்லை. உங்கள் கையால் மெய்சொல் பெற்றால் அவர்களின் சித்தம் தெளியுமென நினைக்கிறேன்" என்றார். "ஆம், அது எங்கள் கடமை" என்றான் வைசம்பாயனன்.

**[ 10 ]**

காகவனத்தின் முற்றத்தில் நடுவே மன்றெரி மூட்டப்பட்டது. தழலெழுந்து இருளுக்குள் ஆட சூழ்ந்திருந்த இல்லங்கள் நிழல்திரையென ஆடின. ஊர்த்தலைவரும் குடிமூத்தாரும்

கரிய கம்பளியாடைகளை போர்த்தியபடி வந்து எரியருகே இடப்பட்ட மணைகளில் அமர்ந்தனர். ஊரார் ஒவ்வொருவராக கம்பளிகளும் மரவுரிகளும் கொண்டு உடல்மூடி வந்து அமர்ந்தனர். சற்றுநேரத்தில் அந்த முற்றமே முழுமையாக நிறைந்தது. குழந்தைகள் முதல் வளையமாகவும் ஆண்கள் அடுத்த வளையமாகவும் அமர்ந்திருக்க இடப்பக்கத்தில் பெண்கள் தனியாக அமர்ந்தனர். நான்குபேர் பெரிய மரக்குடுவையிலிருந்து அவர்களுக்கு கொதிக்கும் இன்சுக்குநீரை மூங்கில் குவளைகளில் அளித்தனர். அனைவருமே ஊனுடன் உணவுண்டு நிறைந்திருந்தனர். சிலர் அப்போதே மெல்லிய துயிலில் எடைகொண்ட தலையுடன் ஆடினர். குழந்தைகள் விழிசொக்கி அன்னை மடிகளில் தலைசாய்த்தன.

கிருதனும் சண்டனும் தங்கள் முழவுகளுடன் வந்தனர். அவர்கள் நெருப்பருகே வந்து குலத்தலைவரை வணங்கியதும் அவர் "அந்தணர்கள் எங்கே?" என்றார். "அவர்களின் சடங்குகள் சில முடியவில்லை. வந்துகொண்டிருக்கிறார்கள்" என்றான் சண்டன். அவர் உக்ரனைப்பற்றி பேச விரும்புகிறார் எனத் தெரிந்தது. ஆனால் அவரை ஏதோ ஒன்று தடுத்தது. அப்பால் அந்தணர்குடில்களின் அருகே பேச்சொலியும் சிரிப்பும் கேட்டது. "அங்கு அவர்களுக்கு குறையென ஏதுமில்லை அல்லவா?" என்றார் ஊர்த்தலைவர். "நன்று என்றனர்" என்றான் சண்டன். உக்ரனின் குரல் உரக்க கேட்டது. "உங்கள் மைந்தனுக்கு மிகக்கூரிய குரல்" என்றார் குலத்தலைவர். "ஆம், அதன்பொருட்டே அவனுக்கு அப்பெயர் இடப்பட்டது" என்றான் கிருதன். அவர் முகம் சுளித்து திரும்பிக்கொண்டார்.

நால்வரும் நடந்து வந்தனர். இம்முறை வைசம்பாயனனின் தோள்மேல் உக்ரன் இருப்பதை ஊர்த்தலைவர் கண்டார்.

அறியாமலேயே அவர் விழி திரும்பி சண்டனைப் பார்த்துவிட்டு விலகியது. கிருதன் தாழ்ந்த குரலில் “என்ன நிகழ்கிறதென்றே தெரியவில்லையே” என்றான். “என் மனைவி சொன்னால்தான் கொஞ்சம் கேட்பான். அவள் பயணக்களைப்பில் படுத்துவிட்டாள். எனக்கு உண்மையிலேயே அச்சமாக இருக்கிறது. சண்டரே, நீராவது அவனிடம் கொஞ்சம் சொல்லமுடியுமா?” என்றான். சண்டன் புன்னகைமட்டும் செய்தான். ஊர்த்தலைவர் வேறுபக்கம் நோக்கியவராக “மைந்தருக்கு உலகமுறை தெரியாது. கற்றுத்தருவது பெற்றோரின் கடன்” என்றார். கிருதன் “நான் கற்றுத்தர ஏதுமில்லை, தலைவரே. அவன் தேவைக்குமேல் கற்றுக்கொண்டவன். நாகக்குஞ்சுக்கு நஞ்சதிகம் என்று கேள்விப்பட்டிருப்பீர்கள்” என்றான்.

அவர்கள் அருகே வந்து ஊர்த்தலைவரை வணங்கிவிட்டு அமர்ந்தனர். உக்ரன் “நாம் இப்போது பாடப்போகிறோமா?” என்று ஆவலுடன் கிருதனிடம் கேட்டான். “நான் பாடப்போகிறேன். நீ சென்று அமர்க!” என்று எரிச்சலுடன் கிருதன் சொன்னான். “நானும் பாடுவேனே” என்றான் உக்ரன். ஊர்த்தலைவர் எரிச்சலுடன் “நாங்கள் இங்கு புராணமும் கதையும் கேட்டு மெய்யுணரும்பொருட்டு அமர்ந்திருக்கிறோம். குழவிச்சொல் கேட்டு மகிழ்வதற்காக அல்ல” என்றார். உக்ரன் “குழவிச்சொல்லில் மெய்யுணர முடியாதா உங்களுக்கு? நீங்கள் விரும்பும் கதையை சொல்லுங்கள். நான் சொல்கிறேன்” என்றான்.

“என்ன இது?” என்றார் ஊர்த்தலைவர். “அவனுக்கு எல்லா கதையும் உளப்பாடமாகத் தெரியும். அவன் நினைவுத்திறன் ஏதோ தீயதெய்வத்திற்குரியதென்றே நான் அஞ்சுவதுண்டு”

என்றான் கிருதன். ஊர்த்தலைவர் “ஆனால்...” என ஏதோ சொல்லமுயல கிருதன் “அவன் பல தருணங்களில் முற்றிலும் புதிய கதைகளையும் சொல்கிறான். அக்கதைகளை நூல்தேர்ந்தோர்கூட சொன்னதில்லை. ஆனால் அவற்றைக் கேட்டவர்கள் அவை நூலுக்குரிய கதைகள் என்றே சொல்கிறார்கள். சென்ற பிறப்பில் இவன் கதைகளை ஆண்ட மாமுனிவனாக இருக்கக்கூடும் என்று ஒரு அயலகச் சூதன் ஒருமுறை சொன்னான். ஒன்றுமட்டும் சொல்கிறேன் தலைவரே, இவன் சொல்லும் எச்சொல்லுக்கும் நான் பொறுப்பல்ல. நான் இவனுக்கு கற்பித்ததெல்லாம் மொழியை மட்டுமே” என்றான்.

ஊர்த்தலைவர் அவனையே நோக்கி சிலகணங்கள் இருந்தார். பின்னர் “இவ்வனல் எதன் வடிவம் என்று சொல்?” என்றார். “குலத்தலைவரே, முதன்மைப் பருப்பொருட்கள் மூன்றே. அனல், நீர், மண். வானம் என்பது பருப்பொருட்களின் இன்மைநிலை. அவ்வின்மையின் நீரோ நிலமோ அனலோ அமைக்கும் அசைவையே காற்று என்கிறோம்” என்றான் உக்ரன். “முப்பெரும் பருப்பொருட்களும் மூன்று முதலியல்புகளின் பருவெளிப்பாடுகள். மாறாநிலையியல்பு கொண்ட நிலம் தமஸ். அதை ஆளும் நீர் சத்வம். அதன்மேல் எரிந்தெழும் அனல் ராஜஸம்.” வைசம்பாயனன் “இதை நான் இதுவரை கேட்டதே இல்லை” என்றான்.

ஜைமினி “இது தொல்பிராமணங்களில் ஒன்றான கிருஷ்ணபதத்தில் வரும் ஒரு பாடலின் பொருள். நீ இதை எப்படி கற்றாய்?” என்றான். “நான் காட்டின் விளிம்பில் நின்றிருந்தபோது சிவந்த சிறகுகளும் கரிய தலையும் கொண்ட பறவை ஒன்றைக் கண்டேன். அது சென்றமர்ந்து எழுந்த

இடங்களில் எல்லாம் அனல் பற்றி எரிந்தது. அப்பறவையை கைநீட்டி அருகே வரவழைத்தேன். என் கைகளில் அது வந்தமர்ந்தது. என் நாவில் தன் வெண்ணிற அலகால் தொட்டது. அப்போது இவையனைத்தும் எனக்கு தெரியவந்தன” என்றான் உக்ரன்.

வியப்புடன் எழுந்து “அந்தப் பறவையின் பெயர் அனலை. அக்னிக்கு கிரௌஞ்சப்பறவை ஒன்றில் பிறந்தது அது. அக்கதை தேவலரின் புராணகதாகௌமுதியில் உள்ளது” என்றான் பைலன். “இக்கதைகளை இவனுக்கு எவர் கற்பித்தார்கள்?” கிருதன் அச்சத்துடன் “நான் ஒன்றும் அறியேன், அந்தணர்களே. இந்த மூடன் இப்படி பல கதைகளைச் சொல்லி எங்கு சென்றாலும் என் அன்னத்தில் மண்ணிடுகிறான். அடேய், வாயை மூடு! சென்று உன் அன்னையருகே படுத்து துயில்! போ...” என்றான். சண்டன் “மேலே சொல், மைந்தா” என்றான்.

“பொருளென்பது ஒரு வெளிப்பாடு மட்டுமே” என்றான் உக்ரன். “அப்பால் கருத்து என்றும் இப்பால் பொருளென்றும் அறிதலில் இயல்பென்றும் அறியமுடியாமையில் முடிவிலி என்றும் தன்னை வெளிப்படுத்தும் ஒன்றின் ஒரு முகம். நிலமென்று நின்ற நேர்நிலை பிரம்மன். அதில் செயலென்று எழுந்த அனலே சிவன். அமைந்த நீரின் தண்மையே விஷ்ணு. நிலத்திலும் நீரிலும் உறைகிறது அனல். தழல்தலென்றும் எரிதலென்றும் வெம்மையென்றும் ஒளியென்றும் இங்கு நின்றிருப்பதை ருத்ரம் என்றது தொல்வேதம். அனைத்தையும் உண்டழிக்கும் அதன் நாக்கு திகழும் சுடலையில் அதை ருத்ரனென்று அமர்த்தினர் முன்னோர். அறிக, செம்மையெல்லாம் ருத்ரம்! குருதி ஒரு ருத்ரன். செங்காந்தள் மலர் ஒரு ருத்ரன். செம்புலத்து மண் ஒரு ருத்ரன். பதினாறு

ருத்ரர்கள் ஆள்கிறார்கள் புவியை. அவையோரே, அலகிலாப் பெருவெளியை ஒரு சிதையென்றாக்கி நின்றெரிவது மகாருத்ரம். அறிக மானுடரே, எரிவதெல்லாம் சிவமே!”

சிவந்தெரிந்த தழலாட்டத்தில் அறியாத் தொல்தெய்வமொன்று வந்தமைந்த சிறு கருங்கற்சிலை என அவன் நின்றிருந்தான். அங்கிருந்த அனைவர் உணர்வுகளும் மாறிவிட்டிருந்தன. எரிகொள்ளும் கரி என அவன் சுடர்ந்துகொண்டே சென்றான். அவன் விழிகளில் ஆடிய செந்தழல் துளிகளை நோக்கி அவர்கள் அமர்ந்திருந்தனர். “அன்னமனைத்திலும் அனலுறைகிறது. வெளியெங்கும் ஒளியென அதுவே நிறைந்துள்ளது. சொல்லில் எண்ணத்தில் சித்தத்தில் துரியத்தில் அதுவே மெய்யென்று நின்றுள்ளது. ஆம், அவ்வாறே ஆகுக!” அவன் கைகூப்பினான்.

தீ எரியும் ஒலி மட்டும் அங்கு கேட்டுக்கொண்டிருந்தது. பின்னர் ஊர்த்தலைவர் “இவர் எங்ஙனம் இதையெல்லாம் கற்றார்? ஒலியணுகூட பிழைக்காத முழுமை இச்சொல்லில் எப்படி கைவந்தது?” என்றார். “நான் அறியேன், தலைவரே. இவனை நான் வளர்க்கவே இல்லை” என்றான் கிருதன். சண்டன் “வேளிரே, ஒன்றுணர்க! கற்றுத்தேரும் சொல் ஒருபோதும் மெய்மையை சென்றடைவதில்லை. அது ஓர் ஒப்பந்தம் மட்டுமே. கற்பித்தவர்களுக்கும் கற்றவர்களுக்கும் நடுவே ஒரு படைக்கலம் வைப்பு, ஒரு நிகர்நிலை ஒப்பு. அழியா மெய்ச்சொல் கல்லில் அனலென எழவேண்டும். அது கற்பதற்கேதுமில்லை. ஒலிகளையும் ஒப்புமைகளையும் மட்டுமே அது இங்கிருந்து பெற்றுக்கொள்கிறது” என்றான்.

“இவர் சொன்னவை முன்னரே மகாருத்ரபிரபாவம் என்னும் நூலில் உள்ளவை” என்றான் சுமந்து. “ஆனால் மேலும் கூரிய

சொற்களில் இவரிடமிருந்து அவை வெளிப்படுகின்றன. அந்நூலை கற்றுத் தேர்ந்து தன்சொல்லென ஆக்கி அளிக்கும் ஆசிரியர் போலிருக்கிறார்.” உக்ரன் “அந்தச் சிறிய குருவி தன் அலகால் தொட்டு பாறைகளை உருகச் செய்துவிடும்” என்றான். அவன் சொன்னதென்ன என்று அறியாமல் தலைவர் திகைப்புடன் திரும்பி நோக்கினார். “அதன் குரல் கூரியது. சிக்கிமுக்கிக் கல் உரசும் ஒலிகொண்டது” என்று அவன் கைகளை அசைத்தான். சிறுவர்களுக்குரிய வகையில் சிறுநெஞ்சு விம்ம கைகளை அசைத்து “சிவ் சிவ் சிவ் சிவ்!” என்றான். ஊர்த்தலைவர் பெருமூச்சுடன் “ஆம், நாம் அறிந்தது சற்றே” என்றார்.

குடிமூத்தவர் ஒருவர் “இளைய சூதர் முதற்சிவம் வெளியில் எழுந்த கதையை சொல்லட்டும். இன்றிரவு நாம் அனலுருக்கொண்டு எழுந்த அவன் காலடியில் அமர்ந்திருக்கிறோம்” என்றார். “ஆம், தன்னை இவர் சொல்லவேண்டுமென அதுவே முடிவுசெய்துள்ளது போலும்” என்றார் ஊர்த்தலைவர். கைகூப்பி பணிந்து “நான் வேண்டுமென்றால் சிவபுராணத்திலிருந்து அக்கதையை சொல்கிறேன். நான் அதை பல மேடைகளில் பாடியதுண்டு” என்றான் கிருதன். ஊர்த்தலைவர் திரும்பிப்பார்த்தபின் மறுமொழி ஏதும் சொல்லாமல் நோக்கை விலக்கிக்கொண்டார்.

சண்டன் குனிந்து உக்ரனைத் தூக்கி அங்கிருந்த மரத்தாலான சிறிய பீடத்தின்மேல் நிறுத்தினான். தன் முழவை எடுத்து அவன் கைகளில் கொடுத்தான். “எழுக சொல்!” என்றான். உக்ரன் அந்த முழவை திருப்பித் திருப்பி பார்த்தபின் “இது எனக்கா?” என்றான். “ஆம்” என்றான் சண்டன். “நானே வைத்துக்கொள்ளலாமா?” என்றான். “ஆம், வைத்துக்கொள்!”

என்றான் சண்டன் புன்னகையுடன். “கேட்டாலும் தரமாட்டேன்” என்று உக்ரன் தலையைச் சரித்து புருவம் சுளித்து சொன்னான். “உன்னுடையதேதான் இது, போதுமா?” அவன் அதன் தோற்பரப்பை கையால் வருடியபடி “மென்மையாக உள்ளது” என்றான். பின்பு நிமிர்ந்து “அழுதாலும் தரமாட்டேன்” என்றான். சண்டன் சிரித்து “வேண்டாம்” என்றான்.



“எந்தையின் முழவு இதைவிடப் பெரியது. ஆனால் அவர் அதை நான் தொடுவதற்கே விடமாட்டார். நான் அதை ஒருமுறை முள்வைத்து கிழித்துவிட்டேன்” என்று அவன் சொன்னான். “ஆனால் இதை கிழிக்கமாட்டேன்.” அவன் முகம் புன்னகையில் மலர்ந்தது. “ஏனென்றால் இது என்னுடையது. நான் எவரிடமும் இதை கொடுக்கமாட்டேன்.” அதன்மேல் கைகளால் வருடிக்கொண்டே இருந்தான். அவன் உள்ளம் அந்த அசைவில் தெரிந்தது. “முழவுமீட்டக் கற்றுள்ளாயா?” என்றான் பைலன். “இல்லை, ஆனால் நான் அனைத்துப் பொருட்களையும் தாளமாக்குவேன்” என்றான் அவன். அவன் கைகள் அசைய அசைய உடல் மயக்கு கொண்டது. விழியிமைகள் துயிலில் என தளர்ந்தன.

அவனுடையதா என்று ஐயுறச்செய்யும் குரலில் அவன் மெல்ல முனகினான். வண்டு முரல்வதுபோல. ஓநாய்க்குட்டியின் முனகலென அது ஆகியது. பின் புலிக்குருளையின் உறுமலைப்போல. அவன் மையச்சுருதியை பற்றிவிட்டான் என சண்டன் புரிந்துகொண்டான். சுட்டுவிரல் சீறிக்கொத்தும் நாகக்குழவி என முழவை தொட்டுச்சென்றது. அம்மெல்லிய ஒலிக்கேற்ப அவன் உடலே முழவுத்தோலென அசைந்தது. முழவென்று ஆகி ஒருவன் முழவுமீட்டுவதை அப்போதுதான் பார்க்கிறோம் என சண்டன் எண்ணிக்கொண்டான். “சிவமேயாம்!” என்று உக்ரன் சொன்னான். விரல் துடித்து எழ விசைகொண்ட தாளத்துடன் இசைந்து “சிவமேயாம்!” என்றான். மேலும் உரத்து வெடித்தெழுந்தது அச்சொல். “ஆம், சிவமேயாம்!”

# கிராதம் - 68

[ 11 ]

காகவனத்தின் ஊர்மன்றில் தன் கையிலிருந்த முழவை மீட்டியபடி உக்ரன் பாடினான். அவன் முன் கம்பளியும் மரவுரியும் போர்த்தி அமர்ந்திருந்தவர்களின் கண்களில் மன்றெரி அனல்முனைகொண்டிருந்தது. காற்று குடில்கூரைகளை சீறவைக்க தழல் எழுந்து ஆடி குவிந்து பரந்து மீண்டும் எழுந்தது. அப்பால் அவர்களின் தொழுவங்களில் கன்றுகள் காதடித்து குளம்புவைத்து இடம்மாறி நிற்கும் ஒலி கேட்டது. காட்டின் சீவிடு ஒலி சூழ்ந்து நின்றிருக்க அவன் குரல் அதன் ஒரு பகுதியே என ஒலித்தது.

“கல்பத்தின் தொடக்கத்தில் பிரம்மம் தன்னுள் பிறிதொன்று இருப்பதை உணர்ந்தது. அது விஷ்ணு என்றாகியது. விஷ்ணு தன்னுள் இருந்து பிரம்மனை கண்டெடுத்தார். பிரம்மன் தனக்குள் புடவிகள் இருப்பதை கண்டடைந்தார். அவற்றை அவர் விரித்துப்பரப்பி விசும்பை நிறைத்தபோது அவை தங்களுக்குள் அனலிருப்பதை அறிந்தன. அனல் தன்னை ருத்ரம் என்று அறிந்தது. ருத்ரம் தன்னை மகாருத்ரம் என்று கண்டடைந்தது. மகாருத்ரமே பிரம்மம் என அறிந்தது. அதில் ஒருதுளியென்று விஷ்ணு தன்னை அறிந்தார்” என்றான் உக்ரன். முழவை மீட்டியபடி அவன் பாடலானான்.

பிரம்மனிலிருந்து எழுந்த ருத்ரம் ஒரு நீலநிறமான உடல்கொண்ட சிறுவனாக இருந்தது. சீறிஎழுந்து நின்றாடி அவன் தன் தந்தையிடம் கேட்டான். “தந்தையே, என் பெயர் என்ன?” பிரம்மன் குனிந்து அச்சிறுவனை நோக்கி ஒருகணம் எண்ணி “எரிதலென்றே ஆன நீ ருத்ரன்” என்றார். “உனக்குரிய உறைவிடம் சூரியன்.” அவன் கோடி கைகளை விரித்து வெளியெங்கும் பரவினான். விண்பரவிய நீரில் விழுந்து

செந்நிற உடல்கொண்ட சிறுவன் எழுந்து “சொல்க தந்தையே, என் பெயர் என்ன?” என்றான். “நீ பவன்” என்றார் பிரம்மன். “நீர் உன் இருப்பிடமாகுக!”

பவன் தொட்ட அனைத்தும் வெம்மை உண்டு கனல்கொண்டன. உலோகங்கள் உருகின. பாறைகள் கனித்துண்டுகளாயின. செங்கனல் வடிவிலெழுந்த மூன்றாவது மைந்தன் கேட்டான் “தந்தையே, என் பெயரென்ன என்று சொல்க!” பிரம்மன் “நீ சர்வன்” என்றார். “நீ வாழுமிடம் மண். அன்னத்திலெழுந்து அன்னத்தை உண்டு அன்னத்தை வென்று வாழ்க!” காற்றை புரவியெனக்கொண்டு எழுந்து திசைதோறும் பரவிய புகைவண்ண மைந்தன் கேட்டான் “நான் யார்?” பிரம்மன் சொன்னார் “வடகிழக்கு மூலையில் என்றுமிருந்து மண்புரத்தல் உன் தொழில். உனக்குரியது காற்று. நீ மண்ணின் மூச்சில் வாழ்க! உன் பெயர் ஈசானன் என்றமைக!”

விண்ணளாவ எழுந்த அனல்வடிவாக நின்று இளமைந்தன் ஒருவன் கேட்டான் “எனக்கு பெயரிடுக, தந்தையே!” பிரம்மன் அவனை நோக்கி “பொன்னிறமான நீ பசுபதி. நீ மண்பொருட்டு விண்ணைச் சூடியவன். எரியென்று அடுமனைகளில் வாழ்க! வேள்விகளில் அவிகொள்ளும் நாவாகுக! அகல்களில் சுடர்மணியென்று ஒளிர்க!” கரியநிறமாக விண்ணில் பரந்து நிறைந்த இளமைந்தன் “தந்தையே, என்னை அறிக!” என்றான். “விண்ணில் வாழும் நீ பீமன். மின்னலென காணப்படுக! இடியென கேட்கப்படுக! உன்னை முனிவர் பர்ஜன்யன் என வணங்குக!” என்றார்.

தவழ்ந்து வந்து எழுந்து நின்ற மைந்தன் கேட்டான் “தந்தையே, நான்?” அவன் இளம்பச்சை நிறம்கொண்டிருந்தான். குனிந்து அவன் தலையை வருடி உளம்கனிந்து பிரம்மன் சொன்னார் “நீ

உக்ரன். மெய்யமைந்த சொல்லில் வாழ்க! இளந்தளிரில் மின்மினியில் உன் ஒளி திகழ்க!” வெம்மையின்றி ஒளிமட்டுமேயாகி வெண்ணிறத்தில் எழுந்த எட்டாவது மைந்தனை நோக்கி பிரம்மன் அருளினார் “நீ மகாதேவன். சந்திரனில் வாழ்வாய். உலகனைத்துக்கும் குளிராவாய், காதலில் பிரிந்தோரை மட்டும் காய்வாய். சுனைகளை கனவிலாழ்த்துவாய், கடல்களை கொந்தளிக்கச் செய்வாய். நீ வாழ்க!”

எட்டு ருத்ரர்களுக்கு அவர்களின் இடப்பக்கத்திலிருந்தே தேவியரை உருவாக்கினார் பிரம்மன். சூரியனில் அமர்ந்த ருத்ரன் சுவர்ச்சலையை மணந்தான். முதற்புலரியில் நீரில் எழும் பொன்னலையாகிய உஷையை பவன் மணந்தான். காற்றில் புழுதியென எழுந்த விகேசியை சர்வன் துணைகொண்டான். ஈசானன் தன்னுடலில் சிவையை சூடினான். அவிகொள்கையில் நாவெனக் கொழுந்தாடும் ஸ்வாகை பசுபதிக்கு மனைவியானாள். விண்வடிவனாகிய பீமன் திசைதேவிக்கு துணைவனானான். சொல்வடிவனாகிய உக்ரன் பற்றுறுதியாகிய தீக்ஷையை மணந்தான். குளிர்நிலவு வடிவம்கொண்ட மகாதேவனில் நிழலுருவாக ரோகிணி அமைந்தாள்.

தவத்திலமர்ந்து மெய்ச்சொல் அறிந்து முழுமைகொண்ட யோகி ஒருவன் தன் நாவை தழலாக்கினான். அதிலெழுந்தான் உக்ரன். உக்ரன் படர்ந்தேறிய அவன் மொழி அனல்கொண்டது. அவன் அகம் சுடராகியது. அவனறிந்த அனைத்தும் எரிந்தன. தழலுரு என எழுந்து வெளிவந்த அவன் கிழக்கே ருத்ரனையும் மேற்கே மகாதேவனையும் ஒருங்கே கண்டான். அவன் நின்ற மண்ணில் சர்வனும் அவன் மேல் கவிந்த வானில் பீமனும் அவன்

உள்ளங்கை அனலில் பசுபதியும் மூச்சு சூழ்ந்த காற்றில் ஈசானனும் அவன் குருதி நீரில் பவனும் எழுந்தனர்.

“எண்மரும் ஒன்றென்றாகி அவனில் நிறைந்தபோது அவன் தலை எழுந்து விண்முட்டி ஏழு மேலுலகுகளையும் கடந்து அலகிலா வெளியில் பரவிச்சென்றது. அவன் கால்கள் மண்ணிலிறங்கி இருளில் ஆழ்ந்து சென்றன. முடிவிலியென தன்னை உணர்ந்து அவன் சொன்னான், சிவமேயாம். அச்சொல் விசும்பெங்கும் பல்லாயிரம்கோடி இடிகளாக ஒலித்தபடியே சென்றது. ஆதித்யகோடிகள் எதிரொலித்தன, சிவமேயாம். காலம்படர்ந்த கடுவெளி முழங்கியது, சிவமேயாம். சிவம் சிவம் சிவம் என இன்மை ஒலியணிந்தது. இருநுனி முடிவிலி என சிவம் பிறந்து நின்றது.”

“ஆம், அவ்வாறே ஆகுக!” என்று உக்ரன் கைகூப்பி சொன்னான். “ஆம் ஆம் ஆம்” என கூட்டம் உடன் முழங்கியது. குலத்தலைவர் கைகூப்பி “இங்கு இவ்வண்ணம் நீங்கள் எழுந்தருளவேண்டுமென்பது முழுமுதலின் நெறிபோலும், நல்லாசிரியரே. எங்கள் சிற்றறிவால் அதை அறிய முடியவில்லை. சிறுமதியை பொறுத்தருளவேண்டும்” என்றார். “உங்கள் சொல் எங்கள் மைந்தர் நாவிலும் வளரவேண்டுமென்று அருள்க!” என்றார் குடிமூத்தார் ஒருவர். உக்ரன் அச்சொற்களை கேட்டதாகவே தெரியவில்லை. அவன் அனலை நோக்கியபடி அமர்ந்திருந்தான்.

**[ 12 ]**

காலை நீராட்டின்போது ஜைமினி “நான் அக்கதைகளை பயின்றிருக்கிறேன். சற்று மாறுபட்ட வடிவில் மகாருத்ரபுராணத்திலும் சூரியபுராணத்திலும் உள்ளது. ஆனால்

இவன் சொல்வது முற்றிலும் பிறிதொன்று” என்றான். சுமந்து “விஷ்ணுவை முதன்மைத்தெய்வமாகக் கொண்ட நூல்களில் உள்ள கதை பிறிதொன்று” என்றான். வைசம்பாயனன் அப்பால் சுனைநீரில் இடுப்பளவு ஆழத்தில் நின்று சுனைக்கு மறுகரையில் ஒரு நாணல்மேல் மீன்கொத்தி அமர்ந்திருப்பதை நோக்கிக்கொண்டிருந்தான்.

“இவன் எங்ஙனம் கற்றான் இக்கதைகளை?” என்றான் பைலன். சுமந்து “அவன் கற்றிருப்பதுபோல் தெரியவில்லை. கனவில் கண்டதுபோல் உள்ளது” என்றான். “கற்காமல் எப்படி இக்கதைகளை சொல்லமுடியும்?” என்றான் பைலன். “ஏன் முடியாது? நான் பிறந்தது அயோத்தியில். மலையென ஒன்றை நான் முதல்முறையாகக் கண்டது எந்தையுடன் கயிலை செல்லும்போது. முதல்முறை மலை என் முன் எழுந்தபோதே நான் உணர்ந்தேன், அதை நான் நன்கறிவேன் என்பதை” என்றான் ஜைமினி. “நாமும் மலையமைந்துள்ள இம்மண்ணில்தான் இருக்கிறோம். ஒரே உப்பு நாம். ஆகவே நாம் உள்ளறிந்திருக்கிறோம். கதைகள் காற்றுபோல, மூச்செஎன நம்முள் ஓடுவதுதான் உயிர்க்குலங்கள் அனைத்திலும் புகுந்து வெளிவந்துள்ளது. மானுடம் மூச்சாலும் கதைகளாலும் ஒன்றென கோக்கப்பட்டுள்ளது என்பார்கள்.”

பைலன் “விந்தைதான். இளவயதில் மெய்மையறிந்து நூலியற்றியவர்கள் என பல முனிவர்களைப்பற்றி நான் கேட்டிருக்கிறேன். சொல்திருந்தா இளமையில் இவ்வண்ணம் நிகழுமென்பதை எண்ணியும் பார்த்ததில்லை” என்றான். வைசம்பாயனன் நீரில் மூழ்கி எழுந்து குடுமியை அடித்து துளி களைந்தபடி கரை நோக்கி வந்தான். “நீங்கள் என்ன எண்ணுகிறீர்கள், வைசம்பாயனரே?” என்றான் ஜைமினி. “நீங்கள்

பேசுவதைக் கேட்டேன். மலையுச்சிப்பாறையில்கூட பாசி முளைத்திருப்பதைக் காணலாம். ஈரமிருந்தால் போதும். பாசியின் விதை காற்றில் உள்ளது. அவனுக்குள் சொல்லூற்று உள்ளது. வெளியே இருந்து ஓர் எண்ணத்தின் விதை சென்று விழுந்தால்போதும்." அவர்கள் அது மேலும் உகந்ததாக இருப்பதை உணர்ந்தனர்.

"அவன் சொன்ன கதை கிராதமதத்திற்கு மிக அண்மையானது" என்றான் பைலன். "சிவமேயாம் என்பது பொதுவான ஊழ்கச்சொல்" என்றான் சுமந்து. "ஆம், ஆனால் சிவம் ஒரு தவத்தோனின் சொல்லில் முளைத்து எழுந்து தன்னைத் தானுணர்ந்து பெருகியது என்பது அவர்களின் நோக்கே" என்றான் பைலன். "ஆம், அதை நானும் எண்ணினேன். விந்தைதான். கதைகளினூடாக எளிதில் சென்று தொடமுடிகிறது அனைத்தையும்" என்றான் வைசம்பாயனன். ஜைமினி "குரங்கு கைபற்றி முயன்றேறும் கிளைநுனியில் பூத்த மலரில் வண்ணத்துப்பூச்சி எளிதில் சென்றமைகிறது என்று ஒரு சூதர்சொல் உண்டு" என்றான். "அனைத்துக்கும் ஒப்புமை வைத்திருக்கிறார். அவருக்காக இந்தப் புவியே ஒன்றை ஒன்று ஒத்துப்போக முயல்கிறது" என்றான் பைலன். வைசம்பாயனன் நகைத்தான்.

சண்டன் வருவதை அவர்கள் கண்டனர். "பிந்தி எழுந்திருக்கிறார்" என்றான் சுமந்து. "ஆம், நேற்று நெடுநேரம் அவரும் குலத்தலைவரும் கிருதரும் அமர்ந்து பேசிக்கொண்டிருந்தனர்" என்றான் பைலன். "எதை?" என்றான் வைசம்பாயனன். "நான் கேட்டபோது கிருதர்தான் பேசிக்கொண்டிருந்தார். அஸ்தினபுரியில் நிகழ்வதை" என்றான் பைலன். "பாண்டவர்களைத் தேடி நாடெங்கும் ஒற்றர்களை

அனுப்பியிருக்கிறார் துரியோதனர்.” வைசம்பாயனன் “ஏன்?” என்றான். “அவர்கள் அரிய அம்புகளை தேடிச்சென்றிருப்பதாக சூதர் சொல்லிப்பரப்பும் கதைகளைக் கேட்டு அஞ்சியிருக்கலாம்” என்றான் பைலன்.

“ஏன் அஞ்சவேண்டும்? அவரிடம் அரசு இருக்கிறது. இந்திரப்பிரஸ்தத்திலும் அமுதகலசக்கொடியே பறக்கிறது. உஜ்ஜயினியில் நான் கேட்டது என்னவென்றால் பாரதவர்ஷத்தின் ஷத்ரியர்கள் அனைவருமே அவரைத்தான் தலைவராக ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். இன்று பாரதவர்ஷமெங்கும் எழுந்துவரும் அசுரர்களையும் நிஷாதர்களையும் சூத்திரர்களையும் வென்றொழிக்க அவரால்தான் இயலும் என நினைக்கிறார்கள்” என்றான் வைசம்பாயனன். “அரசர்களை அரியிட்டு அரியணை அமர்த்தியது நால்வேதம். அதை காக்கும் பொறுப்பு அரசர்களுக்குண்டு. இளைய யாதவர் வேதத்தை கடந்துசெல்ல முயல்கிறார் என்று சொல்கிறார்கள். அச்சொல்லே அத்தனை ஷத்ரியர்களையும் துரியோதனரிடம் சென்றுசேரச்செய்கிறது. இனி அவரை வெல்ல எவராலும் இயலாது.”

“ஆம், மறுபக்கம் துவாரகை அழிந்துகொண்டிருக்கிறது” என்றான் சுமந்து. “மூத்த யாதவர் சினம்கொண்டு பிரிந்துசென்று மதுராவில் இருக்கிறார். வசுதேவரும் அவருடன் இருக்கிறார். துவாரகை இருண்டுகிடக்கிறது. இளையவர் இன்னமும் தன் இருள்சூழ்ந்த தனிமையில்தான் இருந்துகொண்டிருக்கிறார்.” ஜைமினி “ஆம், இனி அவர்களை வெல்ல எதனாலும் இயலாது. பாண்டவர்கள் மாவீரர்கள் என்பதில் மாற்றுச்சொல் இல்லை. ஆனால் அரசும் படையும் குடியும் இன்றி அவர்கள் என்ன செய்யமுடியும்?” என்றான். சுமந்து “அதைத்தான்

செய்துகொண்டிருக்கிறார்கள். கதைகளுக்குள் புகுந்துகொள்கிறார்கள். அங்கே வாழ்வார்கள்” என்றான்.

அருகே வந்த சண்டன் “பாண்டவர்களைப்பற்றி பேசிக்கொண்டிருக்கிறீர்கள் போலும். என்னிடம் ஒரு தெய்வம் வந்து சொன்னது” என்றான். சிரித்தபடி பைலன் “நீங்கள் இதழசைவு நோக்குவதில் திறத்தோர் என அறிவேன்” என்றான். சுமந்து “ஆம், அனைத்து வல்லமைகளும் வாய்ப்புகளும் துரியோதனருக்கே என்றும் பாண்டவர் கதைகளிலும் இளைய யாதவர் தத்துவத்திலும் வாழ்வதொன்றே எஞ்சும் என்றும் சொல்லிக்கொண்டிருக்கிறோம்” என்றான். வைசம்பாயனன் “இனி பாண்டவர் வெல்வதென்றால் தற்செயல் என தெய்வமெழவேண்டும்” என்றான்.

“நேற்று நெடுநேரம் இதைப்பற்றித்தான் பேசிக்கொண்டிருந்தனர். கிருதர் நிறைய செய்திகளை வைத்திருக்கிறார். அதுவே அவருடைய வாழ்க்கை என்பதனால் சொல்லிச் சொல்லி நினைவில் வளர்த்திருக்கிறார். நிறைய சொல்லப்படுவது பிழையென்றாகிறது. எதிர்ச்சொல் எடுக்கப்படுகையில் பொய்யென தன்னை சமைத்துக்கொள்கிறது” என்றான் சண்டன். “ஆகவே, நான் பேசாமல் செவிமூடி சிவமூலி இழுத்தேன். அங்குள்ள சொற்களெல்லாம் மின்மினிகளாகி என்னைச் சூழ்ந்து பறந்தன. நான் கொண்ட சொற்கள் அனல்துளிகளாகி உடன் கலந்தன. தொலைவிலிருந்து ஒரு மணம் வந்து என்மேல் படிந்தது. உழுதவயலின் மணம். அது என்னை கொண்டுசென்றது” என்றான் சண்டன்.

“நீர் என்ன எண்ணுகிறீர், சூதரே?” என்றான் வைசம்பாயனன். “நீங்கள் சொல்வது முற்றிலும் உண்மை. அனைத்தும் துரியோதனருக்கு உகந்தவகையில் திரண்டுள்ளன” என்றான்

சண்டன். “ஆனால் ஒன்று உள்ளது, அது பாண்டவர்களுக்கு ஆதரவானது. அதை தவிர்க்கமுடியாமை என நான் சொல்வேன். ஊழ் என்று நீங்கள் சொல்லலாம். இறைநெறி என்று அவர் சொல்லலாம்.” அவர்கள் நீரில் எழுந்து நின்று அவன் சொல்வதை விழிநட்டு கேட்டனர். “மரம் எனில் அது வளரும் என்பதுதான் தவிர்க்கமுடியாமை. வளரும் மரத்தில் அணிவிக்கப்பட்ட சட்டம் இரும்பேயானாலும் உடைந்து விழும் என்பது அதன் அடுத்தகட்டம். இளையோரே, ஒரு தவிர்க்கமுடியாமை இன்னொரு தவிர்க்கமுடியாமையை நெறியாக்குகிறது. அவை ஒரு சரடென நீண்டு வாழ்க்கையையும் வரலாற்றையும் இயற்கையையும் கட்டியிருக்கின்றன.”

“எனவே இங்கு தற்செயலென ஒன்று இல்லை. தற்செயல் காண்பவன் தன் அறியாமையையே அறிகிறான்” என்று சண்டன் தொடர்ந்தான். “நேற்று கிருதர் சொல்லிக்கொண்டிருக்கையில் நான் குலத்தலைவரின் விழிகளை நோக்கிக்கொண்டிருந்தேன். கிருதரின் சொற்களில் அவர் தனக்குரிய ஒன்றை தேடிக்கொண்டிருந்தார். அவர் தேடியது பாண்டவர்களின் வெற்றியை. அஸ்தினபுரியின் படைவல்லமையை, கௌரவர்களின் வீரத்தை, ஆசிரியர்களும் பிதாமகர்களும் ஆதரிக்கும் தகைமையை, ஷத்ரியகுடிகளின் முழுத்துணைப்பை அவர் சொல்லிக்கொண்டிருந்தார்.”

வரலாறு எழுந்து வந்து துரியோதனரின் அரியணையை தாங்கிநின்றிருக்கும் காட்சியை காட்டினார். ஒரு துளியும் மிச்சமில்லை. ஒரு விரிசலுக்கும் வாய்ப்பில்லை. ஆனால் குலத்தலைவர் தவித்துத் தவித்து சொல்லிடைவெளி தேடிக்கொண்டிருந்தார். “அவர்களை தெய்வங்கள் கைவிடுமா

என்ன?” என்றார். “இந்திரனும் வாயுவும் தர்மனும் அவர்களை விட்டுவிலகிவிடுவார்களா?” என கேட்டார். நான் புன்னகையுடன் கிருதரை நோக்கிக்கொண்டே இருந்தேன். அவரால் அச்சொற்களை புரிந்துகொள்ளமுடியவில்லை. மேலும் ஊக்கத்துடன் “அஸ்தினபுரியின் அரசர் கலியின் வடிவம். நிமித்திகநூலின்படி கலியுகம் பிறந்துவிட்டது. எனவே அவர் ஆள்வதில் ஐயமே இல்லை” என்றார்.

குலத்தலைவர் “மூத்தவர் கந்தமாதனத்தை வென்றதாக சொல்லப்படுகிறதே?” என்றார். “இருக்கலாம். ஆனால் அவரால் படைக்கலம் ஏந்தமுடியுமா என்ன?” என்றார் கிருதர். “இளையவர் திசைத்தேவர்களை வென்று அம்புகளை வென்றிருக்கிறாராமே?” என்றார் குலத்தலைவர். “அவரை ஆளும் யாதவர்தான் இருண்டு அமைந்துவிட்டாரே?” என்றார் கிருதர். “இளைய யாதவர் எழுவார், அது விடியலுக்கான கருக்கிருட்டு என்கிறார்களே?” என்றார் குலத்தலைவர். “அது வீண்சொல், மூத்தவர் விலகியதுமே யாதவகுலம் அவரை கைவிட்டுவிட்டது. துவாரகைக்கு அவர் மீள்வதும் அரிதே” என்றார் கிருதர்.

கிருதர் ஏன் இன்னமும் செம்பு நாணயங்களுக்கு மேல் எதையும் கண்ணால் பார்க்காதவராக இருக்கிறார் என்பதை நான் உணர்ந்தேன். செய்தி என்பது நடந்தவை அல்ல, நாம் நினைப்பவையும் அல்ல, கேட்பவர்கள் நடுவே உருவாகும் நிகர்நிலைப்புள்ளிதான். அதை கண்டடைபவனே நல்ல சூதன். நான் புன்னகையுடன் “ஆனால் நிஷாத, அசுர, சூத்திரப்பேரரசுகளும் பெருகிவருகின்றனவே?” என்றேன். “தெற்கே திருவிடம் முதல் வடக்கே கின்னரநாடுவரை இன்று அவர்களின் அரசுகளே எண்ணிக்கையில் மிகுதி. அவர்களுக்கு

எதிராக திரண்டிருக்கும் ஷத்ரியர்களோ முற்றொருமைகொள்ளவுமில்லை. அனல்குலத்து ஷத்ரியர்களை இன்னமும் பிறர் ஏற்கவில்லை” என்றேன்.

குலத்தலைவர் முகம் தெளிந்தது. “ஆம், அதை நானும் அறிந்தேன். ஷத்ரியர் ஒன்றுதிரள்வதே பிறர் குடிவேறுபாட்டை மறந்து ஒருங்கிணைவதற்கான உந்துதலாக ஆகும். இனி தங்கள் தலைமேல் அந்த அனல்முடியைச் சூட நிஷாதரும் அசுரரும் சூத்திரரும் ஒப்பமாட்டார்கள்” என்றார். “ஆனால் ஷத்ரியர் புலிகள். இவர்கள் இன்றுதான் உகிரும் எயிறும் முளைத்த நரிகள்” என்றார் கிருதர். “ஆனால் ஷத்ரியர்கள் வாழ்வதெல்லாம் தொல்நதிக்கரைகளில். புதிய சூத்திரநாடுகள் அனைத்தும் கடற்கரைகளில் எழுந்து வருகின்றன. கலவணிகத்தால் பொன் குவித்துள்ளன. பீதர்நாட்டு எரிபடைகளை சேர்த்துவைத்துள்ளன. அவர்களுக்கு இப்போது தேவை ஒரு வெற்றி மட்டுமே” என்றேன்.

கிருதர் சொல்லிழந்துவிட்டார். என்னை வாய்திறந்து நோக்கிக்கொண்டிருந்தார். குலத்தலைவர் உரக்க “ஆம், இப்போது தேவை வெற்றி. இப்போது வெல்லாவிட்டால் இனியில்லை” என்றார். அப்போதுதான் கிருதருக்கு அனைத்தும் புரிந்தது. அதற்குள் காலம் கடந்துவிட்டது. “இறையருள் எங்குள்ளதோ அது வெல்லும்” என்றார். “தெய்வங்கள் எளியவருடன் மட்டுமே உள்ளன. சவுக்கடிபட்டவர்களை நோக்கி வருவதே உண்மையான தெய்வம்” என்றார் குலத்தலைவர். இறுதியாக கிருதர் “வேள்வியால் வளர்க்கப்பட்ட தேவர்கள் அவர்களுடன் இருப்பதாக சொல்லிக்கொள்கிறார்கள்” என்றார். மேலும் தாழ்ந்த குரலில் “வேதமே மாபெரும் படைக்கலம் என்று ஒரு கவிஞர்

பாடினார்” என்றதும் குலத்தலைவர் உரக்க “எங்களிடமும் வேதங்கள் உள்ளன. நாங்களும் அவியளித்து அன்னையரை போற்றுகிறோம். அவர்களின் தேவர்கள் எழட்டும், பிடாரிவடிவாக எங்கள் அன்னையர் அவர்களை களத்தில் சந்திப்பார்கள்” என்றார்.

அதன்பின் அப்படி வெளிப்பட்டுவிட்டதை எண்ணி அவரே சற்று நாணி “நாங்கள் எளிய மலைக்குடியினர். எங்களைக் காக்கும் அரசே எங்களுக்குரியது. எவர் வென்றாலும் நாங்கள் வரிகொடுத்து அடிபணியும் குடிகளே” என்றார். கிருதர் அச்சொல்லால் ஆறுதலடைந்து “ஆம், நாங்கள் சூதர். வென்றோர் எவரோ அவரே எங்கள் பாடலுக்குரியோர். தோற்றோரைப் பாடுபவை குலக்கதைகள் மட்டுமே” என்றார். “ஆனால் குலக்கதைகளை மீண்டும் நாம் பாடத் தொடங்குவோம் அல்லவா?” என்றேன். “ஆம், அதெல்லாம் சற்று கழித்துதானே?” என்றார் கிருதர். குலத்தலைவர் புன்னகை புரிந்தார்.

“இன்று காலை நான் வென்றதை கிருதர் புரிந்துகொண்டார். அவருக்கும் துணைவிக்கும் மரவுரி பரிசாகக் கிடைத்தது. எனக்கு கலிங்கத்து வெண்கூறை” என்று சண்டன் நகைத்தான். “குலத்தலைவரில் எழுந்த விசையையே தவிர்க்கமுடியாமை என்கிறேன். ஆலமரம் வேரை ஆறு காதத்திற்கு விரித்துவிட்டது. அடிமரம் பெருக்காமல் வழியே இல்லை. ஷத்ரியர்களின் கூட்டு அழியும், அதுவே வரலாற்றின் நெறி.”

“ஆனால் அது எப்படி?” என்றான் சுமந்து. “எப்படியேனும். நீர் தன் வழியை தன் முழு உடலாலும் கண்டடைகிறது” என்றான் சண்டன். “இது நிகழ்ந்தாகவேண்டும். பாரதவர்ஷம் தேங்கவேண்டுமா வளரவேண்டுமா என்பதே வினா.

தேங்குதலென்பது அழிவு.” ஜைமினி பெருமூச்சுவிட்டான். பின்னர் “அவ்வண்ணமென்றால் வேதம் அழியுமா?” என்றான். “வேதச்சொல் கூர்மைபெறும்” என்றான் சண்டன். “அது அனைவருக்கும் உரியதென ஆகும்.”

அவர்கள் அச்சொல்லால் அமைதியை நோக்கி செலுத்தப்பட்டனர். சண்டன் நீரில் இறங்கும் ஒலி கேட்டது. நீரில் “சிவமேயாம்” என கூவியபடி இறங்கி மூழ்கி எழுந்தான். வைசம்பாயனன் “நான் இங்கு ஒரு பிச்சாண்டவரால் ஆற்றுப்படுத்தப்பட்டேன், சண்டரே” என்றான். சண்டன் எழுந்து முகத்தில் வழிந்த நீரை வழித்தபடி நோக்கினான். “நான் சொல்வளர்க்கும் ஆசிரியர் ஒருவரை சந்திப்பேன் என்று அவர் சொன்னார். அது ஒருவேளை நீங்களோ என்னும் ஐயமே என்னை விலகி நின்று உங்களை நோக்கச் செய்தது” என்றான் வைசம்பாயனன். “நான் நோக்கி நின்றிருக்கிறேன் என்பதையே நேற்று உக்ரன் சொன்னபோதுதான் அறிந்தேன். இரவெல்லாம் நான் அதையே எண்ணிக்கொண்டிருந்தேன்.”

சண்டன் “நான் எவருக்கும் ஆசிரியன் அல்ல” என்றான். “ஆம், நீங்கள் சொல்சுருக்கிச் செல்லும் வழிகொண்டவர்” என்றான் வைசம்பாயனன். “சொல்லுங்கள், நான் என் ஆசிரியரை எப்படி கண்டடைவேன்?” சண்டன் “இவர்கள் மூவரும்கூட ஆசிரியரைத் தேடியே வந்துள்ளனர்” என்றான். “ஆம், நாங்கள் ஒவ்வொருவரும் தேடுவது ஒவ்வொரு சிறப்புள்ள ஆசிரியனை” என்றான் பைலன். “சொல்லில் மாறாநெறியமைக்கும் ஆசிரியனை ஜைமின்யர் தேடுகிறார். நான் சொல்லைக் கலைத்துவிளையாடும் ஒருவரைத் தேடுகிறேன். இவர் தேடுவது உலகென அமையும் ஒருவரை. அவரோ கனவுகளைச் சமைப்பவரை விழைகிறார்.”

“ஒருவரே நால்வராகவும் ஏன் இருக்கக்கூடாது?” என்றான் சண்டன். அவர்கள் திகைப்புடன் அவனை நோக்க “ஐந்தாவதாக ஒருவன் வந்திருக்கிறான். அவன் தேடுவது இந்நான்காகவும் ஆகி அப்பாலும் என அமைந்திருக்கும் ஒருவரை. அவன் கண்டடைபவரே உங்களுக்கும் ஆசிரியர்” என்றான். அவர்கள் சொல்லிலாது நிற்க ஜைமினி மட்டும் மெல்ல அசைந்தான். “நோக்குவிழிக்கேற்ப உருக்கொள்ளும் மலைபோன்ற ஒருவர். அள்ளும் கலத்திற்கேற்ப அமையும் ஆறுபோன்ற ஒருவர்” என்று சண்டன் சொன்னான். தலை காய்ந்துவிட்டதாக உணர்ந்து மீண்டும் நீரில் மூழ்கினான்.

அவன் எழுந்துவருவதற்காக அவர்கள் காத்து நின்றிருந்தனர். அவன் நீர் பிளந்தெழுந்து சடைக்கற்றைகளை அள்ளி தோளிலிட்டு வாயில் அள்ளிய நீரை உமிழ்ந்தான். ஜைமினி “அவரை எப்படி கண்டடைவது?” என்றான். சண்டன் சிரித்து “காட்டில் நீர் கண்டடைய ஒரு வழி செய்வதுண்டு. குரங்குக்கு உப்பு அள்ளி ஊட்டி விடாய் கொள்ளச்செய்வார்கள். அது செல்லும் வழியில் தாங்களும் சென்று சுனையையோ ஊற்றையோ அடைவார்கள்” என்றான். அவன் சொல்வதை உணர்ந்து பைலன் புன்னகைத்தான்.

“எண்ணிஎண்ணிச் சென்று நீங்கள் அடையப்போவதில்லை, அந்தணர்களே. ஐயம்கொண்ட எவரும் ஆசிரியர்களை அணுகியதில்லை. நீரோடை நதிசேர்வதுபோல தன் இயல்பால் இருப்பால் நுண்மையால் தன்போக்கில் அவரை நோக்கி செல்பவனே அடைகிறான். அவனுக்கு பிறிதொரு பாதை இருப்பதில்லை.” மீண்டும் மூழ்கி எழுந்து சண்டன் சொன்னான் “சிறியவனைத் தொடர்க! அவன் உங்களை கொண்டுசேர்ப்பான். அவனை முன்னரே என்றும் வாழும் சொல் தன் நாவென தெரிவுசெய்துவிட்டது.”

# கிராதம் - 69

**[ 13 ]**

சண்டன் நீராடி எழுந்து சடைத்திரிகளை தன் தோள்மேல் விரித்து கைகளால் ஒவ்வொரு சரடாக எடுத்து ஈரம் போக உதறி பின்னுக்கு எறிந்தபடி நடந்தான். அவனுடைய மரவுரி ஆடையைத் துவைத்து அழுத்திப் பிழிந்து கைகளில் எடுத்தபடி ஜைமினி பின்னால் சென்றான். சுமந்துவும் வைசம்பாயனனும் பைலனும் தங்கள் ஆடைகளைப் பிழிந்தபடி பின்தொடர்ந்தனர். ஒவ்வொருவரும் தங்கள் அகத்தே அவன் சொற்களையே மீண்டும் மீண்டும் கேட்டுக்கொண்டிருந்தனர்.

ஏதோ ஒரு கணத்தில் பைலன் இனி அங்கு ஒரு நாளும் தங்கியிருக்க முடியாதென்று உணர்ந்தான். அவ்வுணர்வு எழுந்ததுமே உள்ளம் பொங்கியெழுந்தது. அங்கிருந்து கிளம்பவேண்டுமென உடல் தவித்தது. அங்கு தங்கும் ஒவ்வொரு நாளும் சென்றடையும் இலக்கு அகன்று போகிறது. பின்னர் தோன்றியது, அக்கணம் வரை இலக்கென்று ஏதும்

இருக்கவே இல்லை என்று. அது பிறர் அறியாது தனிமையில் வருடி மகிழும் ஓர் இனிய கற்பனையாகவே இருந்தது. எங்கிருந்தோ ஒரு ஆசிரியன் எழுந்து வந்து அவன் தலையைத் தொட்டு வாழ்த்தி தன் சொல்வளையத்திற்குள் எடுத்துக்கொள்கிறான். வான்நிறைந்த நீராவி குளிர்கலத்தில் பனித்து சொட்டாவதுபோல மெய்மை திரண்டு எழும் ஒரு மனிதர்.

ஆனால் அது அவன் வாசித்து அறிந்த நூல்களில் இருந்தும் கேட்டறிந்த கதைகளில் இருந்தும் உருவான உளஓவியம் மட்டுமே. அவன் விழைவதென்ன என்று அவனுக்கு தெரிந்திருக்கவில்லை. இல்லத்திலிருந்து எழுந்து கதைகளுக்குள் சென்றுவிடவேண்டுமெனும் விழைவு. காலந்தோறும் அப்படி கிளம்பிக்கொண்டே இருக்கிறார்கள். அனைத்தையும் கலைத்து கடந்து செல்லும் ஓர் ஆசிரியன் என்றால் அவனுக்கு அனைத்து இலக்கணங்களும் தெரிந்திருக்கவேண்டும். இம்மண்ணை நோக்கி ஒன்றை சொல்லும் தகுதி உடையவனுக்கு பெரும்கனவுகள் இருக்கவேண்டும். கனவில் உலாவும் ஒருவன் வாழ்ந்து அறிந்திருக்கவேண்டும் அனைத்தையும். ஒன்றிலாது பிறிதொன்றிலை.

நான்கு முனைகளிலும் முழுமைகொண்ட ஒருவன் இருக்க முடியுமா என்ன? கவிஞனும் அறிஞனும் பித்தனும் பெருஞ்சூழ்ச்சியாளனுமான ஒருவன். எங்கோ அப்படி ஒருவன் இருந்தாகவேண்டும். ஏனெனில் அது சொல்லப்பட்டுவிட்டது. நினைவுக்கு எட்டிவிட்டது. சென்றடையும் தொலைவென்ன என்பதே வினா. சண்டன் சொன்ன அனைத்தும் மறுசொல் இலாத உண்மை என்று உறுதிகொண்டது உள்ளம்.

அழைத்துச்செல்பவன் அறியாச்சிறுவனே. ஏனெனில் உக்ரன் ஒவ்வொரு கணத்திலும் முழுவிசையுடன் இருந்தான். எய்யப்பட்டு இலக்கு நோக்கி செல்லும் அம்பிற்கு மட்டுமே அவ்விரைவு இயல்பு. அவன் வழி பிழைக்க வாய்ப்பே இல்லை.

அவர்கள் குடில்களுக்குச் சென்றபோது தெற்குமூலையில் இருந்த சூதர்குடிலில் இருந்து சுதையின் உரத்த குரல் கேட்டது. "அடித்து கொன்றேவிடுவேன். கொன்றேவிடுவேன்! பொய் சொல்லவில்லை, கொன்றேவிடுவேன். நில்!" மூங்கில் படல் கதவைத் திறந்து உக்ரன் வெளியே ஓடி வந்தான். வந்த விரைவில் வெளியே கால் பிழைக்க முழங்கால் ஊன்றி மண்ணில் விழுந்து புரண்டெழுந்து மீண்டும் ஓடி வந்தான். ஜைமினி ஓடிச்சென்று அவன் இரு கைகளையும் பற்றிக்கொண்டான். "ஓடாதே, நில்! நில், மூடா!" என அன்னையின் குரல் கேட்டது.

குடிலுக்குள்ளிருந்து இடையில் கைவைத்து வெளியே வந்த சுதை "பிடியுங்கள் அவனை! பிடித்து நிறுத்துங்கள்... இதோ வருகிறேன்" என்றாள். பைலன் "என்ன ஆயிற்று?" என்று கேட்டான். "உணவு ஊட்டிவிடவேண்டுமென்றான். வாய் திறந்தால் நூலும் நெறியுமாக பேசித்தள்ளுகிறானே, ஓரிடத்தில் அமர்ந்து சற்று உணவை அள்ளி உண்டாலென்ன கேடு இவனுக்கு? பருப்பும் நெய்யுமிட்டு அன்னத்தைப் பிசைந்து இலைமேல் வைத்துவிட்டு பால் எடுக்க அப்பால் சென்றேன். தரையில் இருந்து மண்ணை அள்ளி அன்னத்தில் கலந்து வைத்துவிட்டு அமர்ந்திருக்கிறான். அறிவுடையோன் செய்யும் செயலா இது? அன்னத்தில் மண் கலந்தால் தெய்வங்கள் எப்படி பொறுக்கும்?"

ஜைமினி குனிந்து “என்ன இது, சூதரே? தாங்கள் இதை செய்யலாகுமா? தாங்கள் அறியாததா?” என்றான். “அந்த அன்னம் எறும்புகளுக்குரியது. அவை என்னை வாழ்த்துவதை நான் முன்னரே கேட்டுவிட்டேன்” என்றான் உக்ரன். முதல் கணம் அவன் உண்மையாகவே ஏதோ சொல்கிறான் என்று ஜைமினி எண்ணினான். கண்களில் வந்து சென்ற சிரிப்பின் சிறு மிளிரைக் கண்டதும் தானும் சிரித்தான். இரு புயங்களிலும் அவனை பற்றித்தூக்கி தன் தோள்மேல் அமர்த்திக்கொண்டு முழங்காலில் மண் இருந்ததை கைகளால் தட்டியபடி “காலையில் நீராடுவதோ தெய்வங்களுக்கு பூசெய்கையோ உங்களுக்கு வழக்கமில்லையா, இளம்சூதரே?” என்றான்.

“நான் புலரிக்கு முன்னரே எழுந்து வெளியே சென்று காகங்களை பார்த்தேன்” என்றான் உக்ரன். “குருவிகளும்கூட இங்கு நிறைய இருக்கின்றன.” “காகங்களிடம் பேசினீரா?” என்றான் ஜைமினி. “இந்த ஊரே காகங்களுக்கு புகழ்பெற்றது” என்று சண்டன் சொன்னான். “ஆம், காகங்கள் அதை அறிந்திருக்கின்றன. பல காகங்கள் அடர்காட்டிலிருந்து இங்கு வருகின்றன. இங்குள்ள பெண்டிர் முதல் நாளிரவே காகங்களுக்கு உணவை அள்ளி வீசிவிட்டு படுக்கிறார்கள். காலையில் காகங்களின் குரல் கேட்டே நான் எழுந்தேன்” என்றான் உக்ரன். கையைத் தூக்கி “காகங்கள் இந்த ஊரை அன்னவயல் என அழைக்கின்றன” என்றான். அவன் நகையாடுகிறானா என பைலன் நோக்கினான். ஆனால் அவன் முகம் விசையுடனிருந்தது. “அவர்கள் இங்கே இந்த மனிதர்களை வரவழைத்திருக்கிறார்கள். இவர்களுக்கு அவர்கள் ஆணையிடுகிறார்கள்” என்றான் உக்ரன்.

“வருகிறேன்” என்று சொல்லி சண்டன் முன்னே சென்றான். “அவனை இறக்கிவிடுங்கள். அவன் ஏதாவது உண்ணவேண்டுமல்லவா? இந்த வயிற்றை வைத்துக்கொண்டு அவனை நான் எப்படி துரத்திப் பிடிப்பது?” என்றாள் சுதை. “நன்று விறலியே, நாங்களே இவனுக்கு ஏதாவது வேள்வி அன்னத்தை ஊட்டிவிடுகிறோம்” என்று வைசம்பாயனன் சொன்னான். “நீங்கள் ஓய்வெடுங்கள்” என்றான் சுமந்து. “இத்தனை சிறிய உடலை வைத்துக்கொண்டு இவ்வளவு சொற்களை எங்கிருந்து எடுக்கிறான் என்றே எனக்குப் புரியவில்லை. சொல்லெடுத்து சொல்லெடுத்தே உள் ஒழிந்து ஒரு நாள் சருகாக உதிர்வான் மூடன்” என்று முணுமுணுத்தபடி உள்ளே சென்றாள் சுதை.

“தாங்கள் உண்பதற்கென்ன, சூதரே?” என்று ஜைமினி கேட்டான். “உண்ணும்போது என் உள்ளோடும் சொற்பெருக்கு முறிவடைகிறது. ஐந்து கவளம் உணவென்றால் ஐந்து முறை இடைவெளி வருகிறது.” அவனை தோளில் வைத்து ஆட்டியபடி “கங்கையை கோடரியால் பிளக்க முடியுமா என்ன?” என்றான் ஜைமினி சிரித்தபடி. “முடியாது. ஆனால் அலை கிளப்ப முடியும்” என்றான் உக்ரன். “எதற்கும் மறுமொழி சொல்கிறான்” என்றான் சுமந்து. “ஆம், வாயிலேயே நான்கு அடிபோட்டால் ஒழுங்குக்கு வருவான். அதை அவன் தந்தை செய்வதில்லை” என்று குடிலுக்குள் சுதை சொன்னாள்.

அவர்கள் அந்தணர்களுக்குரிய குடில்களுக்குள் சென்றனர். ஜைமினி உக்ரனை இறக்கிவிட்டுவிட்டு “இது சூதஆசிரியரின் மரவுரி. நான் கொடியில் காயப்போட்டுவிட்டு வருகிறேன்” என்று வெளியே சென்றான். இடுப்பில் கைவைத்து குடிலில் நின்ற உக்ரன் “அழகிய குடில், அந்தணர்களுக்கு மட்டும் சிறந்த

குடில்களை அளித்திருக்கிறார்கள்" என்றான். "ஆம், அவர்கள் வேள்வி செய்து வேதம் புரப்பவர் அல்லவா?" என்றான் பைலன். "நன்று. வேதமும் அவர்களை நன்கு புரக்கிறது" என்றபடி உக்ரன் சுற்றுமுற்றும் பார்த்தான். அங்கிருந்த அரணிக்கட்டை அவன் நோக்கை கவர ஓடிச்சென்று அதை எடுத்து "அரணிக்கட்டை, நான் இதை உரசி அனல் எழுப்பப் போகிறேன்" என்றான்.

"அதை உரசுவதற்கு தோளில் ஆற்றல் தேவை" என்றான் வைசம்பாயனன் தன் மரவுரியை உதறி நீண்ட கழியில் மாட்டி மேலேயிருந்த மூங்கிலில் காயப்போட்டபடி. "சிறிய தோள்களுக்கு சிறிய அனல் வரும்" என்றான் உக்ரன். வைசம்பாயனன் "அனல் அந்த மரக்கட்டையின் ஆழத்தில் அமர்ந்திருக்கிறது. அதுவரைக்கும் உங்கள் விசை சென்றாலொழிய அது வெளியே வரவிரும்பாது" என்றான். விழிகள் சுருக்கி ஏறிட்டு "ஏன்?" என்றான் உக்ரன். "ஏனெனில் தன்னை எரித்தபடியேதான் அந்த அனல் வெளிவர முடியும்" என்றான் வைசம்பாயனன். சிறுவனின் கண்கள் மாறுபட்டன. "ஆம், பிறிதொரு அனல் வந்து அவ்வனலை எழுப்பவேண்டியிருக்கிறது" என்றான். அவன் சொல்வதென்ன என்று புரியாமல் அனைவரும் திரும்பிப்பார்த்தனர். அவன் அரணிக்கட்டையை ஒன்றோடொன்று தட்டிப்பார்த்தான்.

பைலன் "இளம்சூதரே, தாங்கள் ஏதேனும் ஆசிரியரை தேடிப்போவதைப்பற்றி எண்ணியிருக்கிறீர்களா?" என்றான். "ஆசிரியரா...?" என்று அவன் விழிதூக்கிப் பார்த்தான். "எனக்கா?" என்றான். "ஆம், தங்களுக்கு சொல் முழுமையையும் வேத மெய்மையையும் கற்பிக்கும் ஒருவர்." குனிந்து அரணிக்கட்டையை நோக்கி "எனக்குத்தான் எந்தை

கற்பித்துக்கொண்டிருக்கிறாரே?" என்றான் உக்ரன். "தாங்கள் கற்றதற்கு அப்பால் உள்ளவற்றை கற்பிப்பவர்" என்றான் சுமந்து. அவன் அதை தட்டியபடி மூக்கை உறிஞ்சினான். "ஆம், அப்படி ஒருவர் இருக்கலாம். ஆனால் நான் இதுவரை அவரைப்பற்றி எண்ணியதில்லை" என்றபின் "நான் சூதனல்லவா? எனக்கு சூதர்கள் பாடல்களை கற்பிப்பார்கள். ஆனால் அவர்கள் கற்பிக்கத் தொடங்கும்போதே அந்தப் பாடல் எனக்கு முன்னரே முழுமையாகத் தெரியும் என்பதை ஒவ்வொருமுறையும் உணர்கிறேன்" என்றான்.

"பாடலுக்கு அப்பால் செல்லும் ஒரு உள்ளம் கொண்டவர் நீங்கள். மெய்மையறிந்த நா கொண்டவர். நேற்று இவ்வூரே அதை உணர்ந்து நிற்கிறது" என்றான் சுமந்து. அவன் சொல்வதென்ன என்று புரியாதவன்போல உக்ரன் விழிதூக்கிப் பார்த்தான். பின்னர் "அரணிக்கட்டையில் காத்திருக்கும் அனலின் பெயரென்ன?" என்றான். உள்ளே வந்த ஜைமினி "சூதரே, எங்களிடம் இன்று சண்டர் ஒன்று சொன்னார். இவர்கள் கேட்பது அதைப்பற்றியே" என்றான். என்ன என்று வினவுவதுபோல அவர்களை நோக்கினான் உக்ரன்.

வைசம்பாயனன் "நாங்கள் நால்வரும் எங்கள் இயல்புக்கிசைந்த மெய்யாசிரியர் ஒருவரைத் தேடி இல்லம்விட்டிறங்கி வந்தோம். அந்நால்வரும் ஒருவராகவே எங்களை அணுகக்கூடும் என்றார் சண்டர். அவ்வொருவரை தேடிச்செல்லும் தகைமை கொண்டவர் தாங்களே என்றார்" என்றான். "எங்கள் நால்வரையும் நீங்களே வழிகாட்டி அழைத்துச் செல்லவேண்டும் என்றார் சண்டன்" என்றான் பைலன்.

"நானா...?" என்றபின் அவன் அரணிக்கட்டையை மேலே தூக்கி "இதை நான் பெரியவனான பிறகு கடைந்து நிறைய தீயை

எடுப்பேன். இந்தக் காடுகள் அனைத்தையுமே எரியூட்டுவேன்” என்றான். அவன் உள்ளம் முழுமையாக அதில் திரும்பவே அதை தரையில் வைத்து பிள்ளைக்கட்டையால் தாய்க்கட்டையின் புழைக்குள் செருகி கைகளால் உருட்டத் தொடங்கினான். ஜைமினி அருகே வந்து அவன் முகத்தைப்பற்றி மேலே தூக்கி “சூதரே, ஆசிரியர் என்று எவரையாவது தாங்கள் தேடிச் செல்கிறீர்களா? தங்கள் உள்ளத்தில் ஏதேனும் முகம் எழுகிறதா? கனவிலேனும் வழி தென்படுகிறதா? இன்று உங்களை நம்பியே நாங்களும் திசைதேர வேண்டியவர்களாயிருக்கிறோம்” என்றான்.

“நான் ஆசிரியர் என்று எவரையும் உணரவில்லையே” என்றான் உக்ரன். “ஆனால் இந்த அரணிக்கட்டையில் அனல் எடுக்க எனக்கு யாரோ கற்பிக்கப்போகிறார்கள் என்று இப்போது தோன்றுகிறது” என்றவன் எழுந்து நின்று “நான் சென்று குலத்தலைவரிடம் கேட்கிறேன், ஒருவேளை அவர் எனக்கு இதை கற்பிக்கக்கூடும்” என்றான். சற்று எரிச்சலுடன் அரணிக்கட்டையை வாங்கி அப்பால் வைத்துவிட்டு ஜைமினி சொன்னான் “இளம்சூதரே, தங்கள் உள்ளம் தாங்கள் எண்ணுவதைவிட பலநூறு மடங்கு ஆழம் கொண்டது. பாதாள கங்கை பெருகி மேலெழும் சிறு துளை போன்றவர் தாங்கள். சொல்க, உங்கள் உள்ளத்தில் ஒரு பெயரேனும் எழுகிறதா?”

உக்ரன் அவனை உதறி “ஆ, அது என்னுடைய அரணிக்கட்டை. இனி அதை நான்தான் வைத்திருப்பேன்” என்றான். கடுமையாக “சொல்லுங்கள்!” என்றான் ஜைமினி. “அது என்னுடையது... என்னுடையது...” என்று அவன் கூச்சலிட்டன். “அவனை விடுங்கள், ஜைமின்யரே” என்றான் பைலன். “ஒரு கணம் முதிராக்குழவியாகவும் மறுகணம் மெய்யுணர்ந்த

ஆசிரியனாகவும் மாறி ஏதோ ஒன்று இச்சிற்றுடலில் இருந்து நம்முடன் விளையாடுகிறது. அதை ஒருபோதும் நம்மால் முழுக்க புரிந்துகொள்ள முடியாது.” உக்ரன் “என்னுடைய அரணிக்கட்டை… என்னுடைய அரணிக்கட்டை… என்னுடைய அரணிக்கட்டை…” என்று கால்களை மாறி மாறி உதைத்தபடி வெறியுடன் வீறிட்டான். அவன் கழுத்தில் நரம்புகள் புடைத்தன.

“என்ன குரல்… காதுக்குள் கொண்டுவந்து கொம்பை ஊதியதுபோல் இருக்கிறது. அவனை வெளியே விடுங்கள்” என்றான் வைசம்பாயனன். ஜைமினி பிடியை விட்டதும் பாய்ந்து சென்று அரணிக்கட்டையை எடுத்து அதன் பிள்ளைக்குழவியையும் அப்பாலிருந்து தேடி எடுத்து அவற்றை இருகைகளிலும் வைத்தபடி உதடுகளைப் பிதுக்கி பகையுடன் கூர்ந்து பார்த்து “போடா” என்றான். பின்னர் பாய்ந்து வந்து ஜைமினியை அடிக்கத் தொடங்கினான். வேடிக்கையாக சிரித்தபடி அதைத் தடுத்த ஜைமினி சிறுவன் மேலும் மேலும் வெறிகொண்டு பற்களை கிட்டித்தபடி அடிப்பதை அறிந்து எப்படி தடுப்பது என்று தெரியாமல் பின்னடைந்தான். அவன் முழங்கையிலும் மணிக்கட்டிலும் பட்ட அடி நன்றாகவே வலித்தது.

பைலன் வந்து உக்ரனைப் பிடித்து இழுத்து அப்பால் தள்ளினான். நிலத்தில் விழுந்த அவன் மூச்சிரைக்க எழுந்து பற்கள் தெரிய சிறுநெஞ்சு உலைய கண்களில் நீர் நிறைந்திருக்க “கொல்வேன்… கொல்வேன்… உங்கள் அனைவரையும் கொல்வேன்” என்று கூச்சலிட்டான். “சரி” என்றான் பைலன். “நான் அரணிக்கட்டையை கொளுத்தக் கற்றுக்கொள்ளும்போது உங்கள் மரவுரியைத்தான் முதலில் கொளுத்துவேன்” என்றான். கைகளை உதறிக்கொண்டிருந்த

ஜைமினி அறியாமல் புன்னகைத்து “அதுவரைக்கும் நன்று” என்றான். “நீங்கள் நால்வருமே அறிவிலிகள்” என்றான் உக்ரன். “நான் உங்கள் தலைமயிரை கொளுத்துவேன்.”

“சரி, அதற்கென்ன?” என்றான் ஜைமினி. மேற்கொண்டு என்ன சொல்வது என்று தெரியாமல் தலையை சற்று சாய்த்தபடி “நான் மேலும் பெரியவனாகும்போது உங்கள் நால்வரையுமே கொளுத்துவேன்” என்றான். ஜைமினி “நன்று, அவ்வாறே ஆகுக!” என்று சிரிக்க பைலன் சேர்ந்துகொண்டான். உக்ரன் “இதை நான் கொண்டுசென்று குலத்தலைவரிடம் கொடுக்கிறேன். அவர் எனக்கு பால் தருவார். அதைக் குடித்ததும் எனக்கு தோளில் ஆற்றல் வரும். அதன் பிறகு நான் இதைக் கடைந்து அனலை எடுப்பேன். உங்களுக்கு தரமாட்டேன்” என்றபின் அதை மார்போடணைத்தபடி வெளியே சென்றான்.

சுமந்து “அவனிடம் எந்த நேர்வினாவும் எழுப்புவதில் பொருளில்லை” என்றான். அவர்கள் திரும்பிப் பார்த்தனர். “இதற்குள் நீங்கள் இதை உணராதது விந்தையே. கதை சொல்லும்போது மட்டுமே அவன் மெய்யறிவர் போலிருக்கிறான். பிற தருணங்களில் எல்லாம் சின்னஞ்சிறுவனாகவே தோன்றுகிறான்” என்றான். “உண்மை” என்றான் வைசம்பாயனன். “அவனை அழைத்து ஒரு கதை சொல்லும்படி கேளுங்கள், சொல்லமுடியாது. எதுவுமே நினைவுக்கு வராது. ஒரு வினா எழுப்புங்கள், விடை அவனுக்கு தெரிந்திருக்காது. அவனே தானாகவே சொல்லத் தொடங்கினால் விண்முனிவர் வந்து நாவிலமர்கிறார்கள். சூதமூதாதையர் வந்து விரல்களை எடுத்துக்கொள்கிறார்கள்” என்றான் சுமந்து.

“ஆம்” என்றான் பைலன். “அவனை பேசவைக்கலாம். இத்தருணத்தில் அவன் நாவில் தானாக எழும் கதை எதுவோ அதைக்கொண்டு நாம் புரிந்துகொள்ளவேண்டும்” என்று சுமந்து சொன்னான். “அவனை எப்படி சொல்ல வைப்பது?” என்றான் வைசம்பாயனன். “அவன் தன்னியல்பாக கதை சொல்ல வைக்க நம்மால் முடியும்” என்று சுமந்து சொன்னான் “அவனை மீட்டி சொல்பெருக வைப்பது ஒரு முதற்சொல்லே.” பைலன் “ஆம், நேற்று அவன் கதை சொன்னதைப் பார்த்தபோது நானும் அதையே எண்ணினேன்” என்றான்.

ஜைமினி “ஆம், அவன் உள்ளத்தில் ஒரு சொல் சென்று விழுகிறது. தேனுண்ட எடையால் நிலத்துதிர்ந்த தேனீபோல ரீங்கரித்தபடி தன்னைத் தானே அது சுற்றி வருகிறது. எங்கோ ஒரு புள்ளியில் தன் கொடுக்கை எடுத்து அது கொட்டுகிறது. அக்கணத்தில் அவனிடம் இருந்து அவன் கொண்டிருக்கும் அச்சிறுவனின் உடலும் உள்ளமும் மறைகின்றன. சொல்லென அவனுக்குள் குடியிருக்கும் தெய்வம் எழுகிறது. பிறகு அவன் சொல்வதெல்லாம் பிறிதொரு மொழி” என்றான். “அதைத்தான் நானும் உணர்கிறேன். அவனை ஊழ்கத்திலாழ்த்துவது நாம் பேசிக்கொண்டிருப்பதில் இருந்து எழும் ஒரு சொல். தற்செயலாகவே அது நிகழ்கிறது” என்று சுமந்து சொன்னான்.

“அச்சொல்லை எப்படி கண்டடைவது? எப்படி அவனிடம் அதை சேர்ப்பது?” என்றான் வைசம்பாயனன். “நாம் பேசுவது எதையும் அவன் விழிசெவி கொடுத்து கேட்பதில்லை. வேறு ஏதோ ஒன்றில் ஈடுபட்டு விளையாடிக்கொண்டல்லவா இருக்கிறான்?” என்றான் பைலன். “ஆம், அவனிடமென ஒரு சொல்லும் நாம் சொல்லலாகாது. ஆனால் அவன் காதில் அச்சொல் இயல்பாக விழவேண்டும். எச்சொல் அவனை மீட்டுகிறதெனக்

கண்டுகொண்டால் அதையே மீளமீளச் சொல்லவேண்டும். இது ஒரு முயற்சிதான், பார்ப்போம்” என்றபின் சுமந்து எழுந்து வாயிலை நோக்கினான். மார்போடு அரணிக்கட்டைகளை அணைத்தபடி உக்ரன் வருவது தெரிந்தது.

“இங்குதான் வருகிறான்” என்றான் சுமந்து. ஜைமினி “குலத்தலைவர் அரணிக்கட்டை பற்றவைக்க கற்றுக்கொடுக்கவில்லை போலும்” என்றான். முகம் தளர்ந்திருக்க குடில் வாயிலுக்குள் வந்த உக்ரன் “நான் இந்த சிற்றூரை தீச்சொல்லிட்டு எரிக்கப் போகிறேன்” என்றான். ஜைமினி சிரித்தபடி “ஏன்?” என்றான். அவன் சினத்துடன் புருவம் நெரிபட “நான் மிகச்சிறியவனென்று அவர் சொல்கிறார். அவர் கிழவர். நீர் நாளைக்கே செத்துப்போய்விடும் என்று அவரிடம் சொன்னேன். நான் தீச்சொல்லிட்டபோதுகூட அவரும் அவரது துணைவியும் மூன்று மகள்களும் சிரித்தனர்” என்றான்.

ஜைமினி சிரித்துவிட்டான். அதைக் கண்டு உக்ரனும் முகம் மலர்ந்து “அவர்களில் ஒருத்தி எனக்கு பால் கொண்டுவந்து தந்தாள். அவள் அழகி. அவளுக்கு ஏழு மைந்தர் பிறப்பார்கள்” என்றான். பைலன் “நீங்கள் அதை அருந்தினீர்களா?” என்றான். “ஆம், அது சூடான பாலாகையால் அதை அருந்தினேன். அதன் பிறகு அவர்கள் என் எதிரிகள் என்றாலும் நான் அரணிக்கட்டையை கடைந்தபின் அவர்களுக்கு தீச்சொல்லிடப்போவதில்லை என்றேன். ஏனென்றால் அவர்கள் குலத்தில் ஒன்பது வீரர்கள் பிறப்பார்கள்” என்றான். “அப்படியென்றால் எங்களை எரிக்க வந்தீர்களா?” என்றான் ஜைமினி.

உக்ரன் மிக இயல்பாக அரணிக்கட்டையை கீழே வைத்து அரைநழுவிய மரவுரியை ஏற்றி அணிந்தபடி “உங்களை

காலமும் எரிக்கமுடியாது. நீங்கள் நால்வரும் அழியாச்சொல் கொண்டவர்கள். ஒற்றைச்சொல்லின் நான்கு முகங்கள் நீங்கள்” என்றான். மீண்டும் அரணிக்கட்டையை கையில் எடுத்துக்கொண்டு மூக்கை உறிஞ்சியபடி “நான் உள்ளே வந்தால் இந்த அரணிக்கட்டையை நீங்கள் பிடுங்கிக்கொள்வீர்கள்” என்றான். ஜைமினி “ஆம், சில சமயம்” என்றான். உரத்த குரலில் “பிடுங்கிக்கொண்டால் நான் தீச்சொல்லிடுவேன்” என்று கூவினான்.

பைலன் “அந்த அரணிக்கட்டை தங்களுடையது, சூதரே, அதை தாங்களே வைத்துக்கொள்ளலாம்” என்றான். “அப்படியென்றால் இதை கொண்டுபோய் என் முழவின் பக்கம் வைத்துவிட்டு வருகிறேன். அது என் முழவு, அதை எவரும் எடுக்கக்கூடாது என்று அன்னையிடமும் தந்தையிடமும் மூன்று முறை சொன்னேன்” என்றான். “தந்தை உங்கள் ஆசிரியரா? அவரை நீங்கள் நன்கு அறிவீர்களா?” என்றான் வைசம்பாயனன். அவன் அதை கேட்டதாகத் தெரியவில்லை. “ஆசிரியரென்றால் அவரை அடிமுடி காணவேண்டுமல்லவா? அவ்வாறு நீங்கள் அவரை கடந்துவிட்டீர்களா?” என்று சுமந்து கேட்டான்.

ஆசிரியர் என்ற சொல் அவன் காதில் விழுந்ததா என ஒருவரை ஒருவர் விழிகளால் கேட்டுக்கொண்டனர். அவன் உள்ளே வந்து அரணிக்கட்டையை தரையில் வைத்து “எனக்கு இதைவிட பெரிய அரணிக்கட்டை வேண்டும். நான் அதன் மேல் ஏறி நின்று கடைவேன்” என்றான். மீண்டும் இடையில் மரவுரி நழுவியது. ஜைமினி முழந்தாளிட்டு அமர்ந்து அதை சரியாகக் கட்டினான். “ஆசிரியனை நல்ல மாணவன்தான் முற்றறிய முடியும்” என்றான் பைலன். “அவ்வளவு பெரிய அரணிக்கட்டை எனக்குத் தேவை. அதன் அடிமுடி நான்

காண்பேன்” என்றான் உக்ரன். “ஆனால் அரணிக்கட்டைகளை சிறுவர்களிடம் கொடுக்கக்கூடாது. நெருப்பு சிறுவர்களை நண்பர்களாக நினைத்துவிடும்” என்றான்.

ஜைமினி உடனே அவன் நெஞ்சில் விழுந்த சொல்லை அடையாளம் கண்டு கொண்டான். விழிகளால் பிறருக்கு குறிப்பு காட்டியபின் “அடிமுடி காண்பதற்குப் பெயர்தான் கற்றல். அடியிலிருந்து முடி வரை ஒன்றை அறிந்தபின்னர் நாம் அதன் பகுதியாகிறோம்” என்றான். “ஆசிரியனை அடிமுடி காண்பது மாணவருக்கு இயலுமா?” என்றான் பைலன். “இவ்வளவு பெரிய அரணிக்கட்டை... இதன் அடிமுடியை யார் காணமுடியும்?” என்று வைசம்பாயனன் சொன்னான். “ஏன்?” என்று உக்ரன் கேட்டான். “இதற்குள் அனலிருக்கிறதே. அனலின் அடிமுடி காண்பது எளிதா என்ன?” என்றான் பைலன்.

உக்ரனின் விழிகள் மாறுவதை நால்வரும் நோக்கினர். கண்கள் விரிந்து இதழ் ஒரு சொல்லை திரும்பத் திரும்ப சொல்லலாயிற்று. விழிகூர்ந்தபோது அடிமுடி என்னும் சொல் அவன் நாவில் திகழ்வதை காணமுடிந்தது. பைலனை நோக்கிவிட்டு “ஆசிரியனை அடிமுடி காணுதல்தான் கல்வி” என்றான் வைசம்பாயனன். “ஆனால் எவரேனும் மெய்யாசிரியனை அடிமுடி காணமுடியுமா?” என்றான் பைலன். “காணமுடியும், நாமும் அடிமுடி அறியா பேருருவர் ஆகி அருகே நின்றால்” என்றான் சுமந்து.

“அனற்பெருந்தூண்” என்று உக்ரன் சொன்னான். கைகளைத் தூக்கி விழிகள் தெறித்து நிற்க “அனலின் அடிமுடியின்மை” என்றான். “அனற்பெருந்தூண். இருபுறமும் விசும்பு சூடி நின்றிருந்தது அது” என்றான். அவனுக்குப் பின்னால் எவரோ

வந்து நிற்பதுபோல தோன்றி ஜைமினிக்கு மெய்சிலிர்த்தது. “அனல்நெடுந்தோற்றம். மகாருத்ரம்” என்றான் உக்ரன்.

# கிராதம் - 70

**[ 14 ]**

உக்ரனின் குரல் மிக மெல்லிய ஊழ்க நுண்சொல்போல் முதலில் எழுந்தது. “அடிமுடி.” அவன் அதையே சொல்லிக்கொண்டிருக்க பைலனின் உள்ளத்தில் அச்சொல் குழம்பிப்பரவியது. அடிதல், முடிதல். அடித்து அடித்து அடிமையெனப் பணிந்து அடிதொழுது முடிந்தமைந்த முடி. முடிந்த முடி, முதலென முடியென எழுதல். அடியென அமைவென விழுதல். சொல் எங்கெல்லாம் சென்று தொடுகிறது! நச்சுக்கொடுக்கு இல்லாத சொல்லென ஏதுமில்லை. அத்தனை சொற்களும் ஊழ்க நுண்சொற்களே. மொழி என்பது ஓர் ஊழ்கவெளி. மொழிப்படலம். அடிமுடி காணாத அனல்வெளி. மொழியாகி நின்றிருக்கும் இதில் எல்லா சொற்களும் அடிமுடியற்றவை.

உக்ரனின் சொற்கள் நஞ்சுண்டு மயங்கி காலிடறி நடக்கும் வெள்ளாட்டுநிரைகளென ஒன்றுடன் ஒன்று முட்டிக்கொண்டு ஒன்றை ஒன்று சார்ந்தும் சரித்தும் நிரைகொண்டன. நிரைகலைந்து மீண்டும் கண்டுகொண்டன. என்ன சொல்கின்றான்? அவன் விரல்கள் தவிப்பதை பைலன் கண்டான். வைசம்பாயனன் அவன் கையில் அரணிக்கட்டையை எடுத்து அளித்தான். அச்செயல் பைலனை மெல்லிய அதிர்வுக்குள்ளாக்கியது. அறியாப்பொருள்கொண்ட ஒரு செயல். மானுடர் கைகளை தெய்வங்கள் எடுத்துக்கொள்ளும் தருணம்.

எப்போதும் முள்முனைமேல் நிலைபிறழாதிருக்கிறான் இவ்விளையசூதன். சொல்லே அருளென்றாகுமா? சொல்லிலே விசும்பு வெளித்தெழலாகுமா?

அரணிக்கட்டையின் மென்மரப்பரப்பில் உக்ரனின் விரல்கள் ஓடலாயின. தொட்டுத்தொட்டு அவை தாவ மென்மரம் தோற்பரப்பென ஒலிகொண்டது. அறிதல்களுக்குரிய அடி. அடிதாளம். அறிந்தறிந்து செல்லும் முடி. முடிதாளம். "அவ்வண்ணம் எழுந்தான் அனலுருக்கொண்ட முதலோன்!" என்றான் உக்ரன். "அது அறியவொண்ணா அப்பழங்காலத்தில் நிகழ்ந்தது. ஒவ்வொரு நாளும் அவனை அழகுருவனாக தன் அருகே கண்டுகொண்டிருந்தாள் அன்னை. அருள்புரிக் கைகளுடன் அவனை தங்கள் தவத்திற்குப் பின் எழுப்பினார்கள் முனிவர்கள். ஆட்டன் என அவனை அறிந்துரைத்தனர் கவிஞர்."

ஆனால் அனைவரும் அறிந்திருந்தனர், அனலென்பது என்னவென்று. தங்கள் காதலை, தவத்தை, சொற்களைக் கடந்து அரைக்கணத்தின் ஆயிரத்தில் ஒரு மாத்திரையில் அடிமுடி அறியவொண்ணா அப்பெருங்கனலைக் கண்டு அஞ்சிப்பின்னடைந்து அறிந்தவற்றுள் மீண்டமைந்தனர். அறியவொண்ணாமையும் அறிதலுமாக நின்றிருந்தது அது. அதன் நிழலில் வாழ்ந்தது விசும்பு.

அந்நாளில் ஒருமுறை விண்ணுலாவியாகிய நாரதர் பிரம்மனின் அவைக்கு சென்றார். அங்கு தன் தேவியுடன் அமர்ந்து படைப்பிறைவன்
தாயம் விளையாடிக்கொண்டிருப்பதைக் கண்டார். ஒரு முகம் சிரிக்க இன்னொன்று கணிக்க மற்றொன்று வியந்து நோக்கியிருக்க பிறிதொன்று ஊழ்கத்திலமைந்திருக்க ஒரு கையில் தாமரையும் மறுகையில் மின்படையும் கொண்டு

கீழிருகைகளால் எண்களத்தில் பகடை உருட்டிய பிரம்மன் திரும்பி “வருக நாரதரே, இங்கு விசைமுற்றிய ஓர் ஆடல் நிகழ்ந்துகொண்டிருக்கிறது. வெற்றியும் தோல்வியும் வாள்முனை கொண்டுள்ளன” என்றார்.

“ஆம், இருவர் முகத்திலும் அதன் உவகை உள்ளது” என்றபடி அருகணைந்தார் நாரதர். பகடையை உருட்டிவிட்டு புன்னகையுடன் பின்சாய்ந்து “ஆம், ஆடுக!” என்றார் பிரம்மன். திரும்பி நாரதரிடம் கண்சிமிட்டி “ஒவ்வொரு பகடையும் ஒரு புதுப் படைப்பு. பகடை நின்றபின்னரே படைக்கப்பட்டது என்ன என நான் அறிவேன். காலம், இடம், பரு, பொருள் என நான்கு பக்கங்களின் ஆடல் மட்டுமே இப்பகடை” என்றார். உதடுகோட்டி பகடையின் எண்களை நோக்கிய கலைமகளைச் சுட்டி “என் படைப்புக்கு இவள் சொல்நிகர் வைக்கவேண்டும். அவள் சொல்லுக்கு நான் படைத்தளிக்கவேண்டும் என்பதே ஆடல்நெறி” என்றார்.

தேவி அக்களங்களை சுட்டுவிரலால் தொட்டு எண்ணி காய்களை கருதிக்கருதி நகர்த்திவைத்தாள். பின்னர் “ஆம்” என தலையசைத்து காய்நிரைத்து நிமிர்ந்து புன்னகைத்தாள். “நன்று” என்றார் நாரதர். குனிந்து நோக்கிய பிரம்மன் “ஆம், அது தன் பெயரைப் பெற்றுவிட்டது” என்றார். “சொல்சூடுவதுவரை பொருள் நின்று பதைக்கிறது. சொல் அதன் அடையாளம் ஆனதும் பிற அனைத்து அடையாளங்களையும் அதற்கேற்ப ஒடுக்கி அதற்குள் நுழைந்து ஒடுங்கிக்கொள்கிறது. விந்தைதான்!” என்றார் நாரதர். “சொல்லெனும் சரடால் பொருள்வெளியுடன் இணைந்து தானில்லாதாகிறது” என்றாள் கலைமகள்.

“இனி உன் ஆடல்” என்றார் பிரம்மன். பகடையை கையில் எடுத்து மெல்லிய சீண்டலுடன் நகைத்து கலைமகள் அதை உருட்டினாள். புரண்டு விழுந்த எண்களை நோக்கி பிரம்மன் குனிய நாரதரிடம் “ஒலி, வரி, பொருள், குறிப்பு என நான்கு பட்டைகளால் ஆன புதிய ஒரு சொல், அதற்குரிய பொருளைப் படைத்தமைப்பது அவர் ஆட்டம்” என்றாள். தலையில் மெல்ல சுட்டுவிரலால் தட்டியபடி இடக்கையால் காயொன்றை நகர்த்தி தயங்கி பின்னெடுத்து மீண்டும் தயங்கி மீண்டும் வைத்தார் நான்முகன். மீண்டும் நகர்த்தியபோது முகம் தெளிந்தது. “இதோ” என்றார்.

“ஆம், பொருள் பிறந்து சொல்லென்றாகிவிட்டது” என்றார் நாரதர். “விந்தை, பொருள் தனக்கு முன்னரே இருந்த சொல்லை நடிக்கிறது.” மீண்டுமொரு ஆடலுக்கென அன்னை பகடையை எடுத்தபோது “மொழி தொடாத பொருளொன்று புடவியில் இல்லை என்பார்கள். மொழியிலிருந்து பொருளுக்கோ பொருளிலிருந்து மொழிக்கோ சென்றுகொண்டிருக்கிறது நில்லாப்பெருநெசவு” என்று தனக்குத்தானே என சொன்னார். “சொற்பொருள் என விரியும் இதை தன் ஆடையென்றாக்கி அணிந்து நின்றாடுகிறான் ஒருவன். அவனுக்கு சிவம் என்று சொல். அச்சொல்லுக்கு ஆடல் என்று பொருள். அச்சொல்லுக்கும் பொருளுக்கும் அப்பால் அவனொரு அடிமுடியிலி மட்டுமே” என்றார்.

பிரம்மன் திரும்பி நோக்கி “அடிமுடி காணவொண்ணா ஒன்று என்றால் அது பிரம்மம் மட்டுமே. அதுவன்றி பிறிதேதும் ஆக்கப்பட்டதும் அழிவுடையதுமேயாகும்” என்றார். நாரதர் “ஆம், அதையே நானும் எண்ணினேன். தங்கள் படைப்பிலிருந்து எழுந்தது புடவி. புடவியிலிருந்து எழுந்தது சிவம் என்பது

தொல்கூற்று. அவ்வண்ணமெனில் அடியிலிருப்பது தங்கள் படைப்பே. அதன் சுழியத்தில் எழுந்த அனல் எப்படி அடியிலியாகும்?” என்றார். பிரம்மன் நகைத்து “ஆம், அதை நீர் சென்று கேளும்” என்றார். “சென்று கேட்கலாம், ஆனால் நான் விழைந்த வடிவில் அவன் வரும்போது அவ்வினாவுக்கு பொருளே இல்லை. அனைத்து உசாவல்களுக்கும் அப்பால் எழுந்து நிற்கும் அந்த அனற்பெருந்தூணிடமல்லவா அதை நாம் கேட்க வேண்டும்?” என்றார்.

கையில் பகடையுடன் புன்னகைத்து நின்ற தேவி “இவர் அறியாத ஒன்றுள்ளது, முனிவரே. படைப்பின் முன் படைத்தவன் மிகச்சிறியவன். தன்னை நிகழ்த்தி வளர்ந்தெழும் படைப்புக்கு வேரும் கிளையும் முடிவடைவதே இல்லை. எனவே அதற்கு மண்ணும் வானும் இல்லை” என்றாள். “அது நீ படைக்கும் சொல்லுக்கு. அது உளமயக்கு. நான் படைப்பவை காலமும் இடமும் கொண்ட இருப்புக்கள். அவை என் கைக்கு அடங்குபவை” என்றார். “நீங்கள் அதை அறியமுயல்கையிலேயே அது அறிபடுபொருள் என்றாகிவிடுகிறது. அறிவை மட்டுமே அறியமுடியும் என்பதனால் அனைத்து அறிபடுபொருட்களும் அறிவை அளித்து அறிவுக்கு அப்பால் நின்றிருப்பவை மட்டுமே” என்றாள் கலைமகள்.

அவள் சிரிப்பால் சீண்டப்பட்டு சினம்கொண்டு “அறிந்து வந்து உனக்கு அறிவென்பது பொருள் அளிக்கும் தோற்றம் மட்டுமே என்று காட்டுகிறேன்” என்றபடி பிரம்மன் எழுந்துகொண்டார். அவருடைய களிமுகம் சினத்தில் வெறித்தது. கணித்த முகம் தன்னுள் ஆழ்ந்தது. வியந்த முகம் பதைக்க ஊழ்கமுகம் விழித்தெழாதிருந்தது. “அளிகூர்ந்து அமருங்கள்,

படைப்பவரே! ஒரு சொல்லாடலின்பொருட்டு நான் சொன்னது இது. சென்று அம்முடிவிலியை அடி தேடுவதென்பது வீண் வேலை. அத்துடன்...” என்றார் நாரதர்.

“அத்துடன் எனில்? சொல்க!” என்றார் பிரம்மன். “ஒருவேளை அடி சென்று தொடமுடியாவிடில்...” என நாரதர் தயங்க “வீண்சொல்!” என்று பிரம்மன் சீறினார். “அடியென அமைந்திருக்கிறது என் படைப்பு. சொல் எத்தனை வளர்ந்தாலும் ஆணிவேரிலிருக்கிறது விதையின் முதல் துளி. சென்று அதைத் தொடுவதொன்றும் எனக்கு அரிதல்ல. வருக, சென்று தொட்டுக்காட்டுகிறேன்” என்றார். நாரதர் உடனெழுந்து “நான் இதை எண்ணவில்லை, தேவி” என்றார். கலைமகள் சிரித்து “நன்று, சிலவற்றை அவர் கற்கலுமாகும்” என்றாள். “வந்து நான் என்ன கற்றேன் என்று சொல்கிறேன். இங்கு படைத்தவன் நானே, எனவே மூவரில் முதல்வனும் நானே” என்றபின் நாரதரிடம் “வருக!” என்று சொல்லி பிரம்மன் நடந்தார்.

விண்வெளியில் பிரம்மனுடன் நடக்கையில் நாரதர் “தாங்கள் அடிதேடலாகும். அடிதொடுவதும் உறுதி. ஆனால் அதற்கு முடியுமில என்று சில நூல்கள் உரைக்கின்றன. விண்வடிவோன் அறியாத முடியென்று இருக்கலாகுமா என்ன?” என்றார். “ஆம், முடியென்று ஒன்றெழுந்தால் அவர் விண்வடிவப் பேருடலிலேயே அது சென்றமையலாகும்” என்றார் பிரம்மன். “அவரிடம் முடி சென்று தொடமுடியுமா என்று கேட்போம்” என்ற நாரதர் “ஒருவேளை தொடமுடியாமலானால் அதையும் தாங்களே தொட்டுக்காட்டலாம்” என்றார். நகைத்து “ஆம், அடியும் முடியும்

அறிந்தபின் அவன் எல்லையை நான் வகுப்பேன்” என்றார் பிரம்மன்.

அவர்கள் சென்றபோது நாரணனும் நங்கையும் பாற்கடலின் கரையில் கரந்தறிதலை விளையாடிக்கொண்டிருந்தனர். அவரை கண்மூடச்செய்துவிட்டு மணல்கூட்டி வைத்து தன் கையிலிருந்த அணி ஒன்றை திருமகள் ஒளித்துவைத்தாள். அவர் அவள் விழிநோக்கி சிரித்தபடி கைவைத்து அதை எடுத்தார். “எப்படி எடுத்தீர்கள்? கண்களை நீங்கள் மூடவில்லை” என்று அவள் சினந்தாள். “மூடிக்கொண்டுதான் இருந்தேன்...” என்றார் நாரணன். “மீண்டும்... இம்முறை நீங்கள் அறியவே இயலாது” என்றபடி அவள் தன் கணையாழியின் சிறிய அருமணி ஒன்றை மண்ணில் புதைத்தாள். “சரி, விழிதிறவுங்கள்... தேடுங்கள்” என்றாள்.

அவர் அவளை நோக்கி நகைத்தபின் அந்த மணல்மேல் கையை வைத்தார். “இல்லை” என அவள் கைகொட்டி நகைத்தாள். மீண்டும் ஓர் இடத்தில் கை வைத்தார். “இல்லை... இன்னும் ஒரே முறைதான்... ஒரேமுறை... தவறினால் நான் வென்றேன்” என்றாள். அவர் கையை வைத்ததும் முகம் கூம்பி “ஆம்” என்றாள். அவர் எடுப்பதற்கு முன் தானே மணலைக் கலைத்து அருமணியை எடுத்தபடி “ஏதோ பொய்யாடல் உள்ளது. எப்படி உடனே கண்டுபிடிக்கிறீர்கள்?” என்றாள். நாரணன் சிரித்தார். அவர்களை நோக்கி பிரம்மனும் நாரதரும் வருவதைக் கண்டு தேவி முகம் திருப்பிக்கொண்டாள்.

அருகணைந்த நாரதர் “தேவி சினந்திருக்கிறார்” என்றார். “ஆம், அவள் மறைத்துவைத்தவற்றை நான் எளிதில் கண்டுபிடிக்கிறேன் என வருந்துகிறாள்” என்றார் நாரணன். நாரதர் “தேவி, செல்வங்களை மண்ணிலன்றி எங்கும் ஒளித்து

வைக்கமுடியாது. அவரோ மண்மகளின் தலைவர்” என்றார். தேவி சினத்துடன் திரும்ப “அறிவிழிகொண்டவர் முன் எதை மறைக்கமுடியும் என சொல்லவந்தேன்” என்றார். பிரம்மன் “நாம் வந்ததை சொல்லும், முனிவரே” என்றார்.

“முழுமுதன்மைக்கு ஒரு அணு குறைவென்றே மும்மூர்த்திகளும் அமையமுடியுமென தாங்களும் அறிந்திருப்பீர்கள்” என்றார் நாரதர். “ஆனால் சிவப்படிவர் தங்கள் இறைவன் அடியும்முடியுமற்ற பெருநீட்சி என எழுந்தவர் என்கிறார்கள். அது ஆணவம் என அனைத்தையும் படைத்தவர் எண்ணுகிறார். அடி தேடிக் கண்டடைந்து இவ்வளவுதான் என அவரை வகுத்துரைக்க சென்றுகொண்டிருக்கிறார்.” நாரணன் “முடி தேடி நான் செல்லவேண்டியதில்லை. அது என் அடிவரை வந்து நின்றிருக்கும் என அறிவேன்” என்றார். “ஆம், அதை அறியாதோர் எவர்?” என்றார் நாரதர். “ஆனால் ஆற்றப்படாதவை அனைத்தும் விழைவுகளும் கூற்றுகளுமென்றே பொருள்படும் என்று நான் சொல்லவில்லை என்றாலும் நூலோர் பின்னர் சொல்லக்கூடும்.”

“அதை ஆற்றிவிடுகிறேன். அவன் முடிதொட்டு மீள்கிறேன்” என்று விஷ்ணு எழுந்தார். “நன்று, ஆனால் முன்னரே நீங்கள் மூன்றடியால் அளந்த விண் அது. அதை மீண்டும் அளப்பதில் விந்தை என்ன இருக்கிறது? அன்று அளக்காது எஞ்சியது அவுணன் சென்றமைந்த ஆழம். அதை அளந்து மீள்கையில்தான் உங்கள் மூன்றாம் அடியும் முழுதமைகிறது” என்றார் நாரதர். பிரம்மன் ஏதோ சொல்ல முயல அதை முந்தி “பருவுருக்கொண்டவை அனைத்தும் நான்முகன் படைப்பென்று அனைவரும் அறிவர். பரு அனைத்திலும் உறையும் விண்ணையும் படைத்தவர் முழுதளந்துவிட்டால் அதன்பின்

அவரை முனிவர்கள் முழுமுதலுக்கு நிகர் என்றே போற்றுவர்” என்றார் நாரதர்.

தேவி புன்னகையுடன் “இங்கு கைப்பிடி மண்ணை அகழ்ந்து மணி தேர்வதுபோல் அல்ல அது. அடியிலா ஆழம். அங்கே அனலென அகழ்ந்து ஆழ்ந்துசெல்கிறது அவர் அடி என்கிறார்கள்” என்றாள். சினத்துடன் திரும்பி “அளந்து மீள்கிறேன். அது நான் என்னையும் அறிந்துகொள்ளுதலே” என்றார் விஷ்ணு. “நன்று, இதோ நூலோர் நவின்று மகிழும் ஒரு நூலுக்கான கதை” என்று நாரதர் சொன்னார்.

அவர்கள் கயிலாய மலைக்குச் சென்றபோது அங்கே தன் இரு இளமைந்தருடன் ஆடிக்கொண்டிருந்தாள் அன்னை. “தேவி, உங்கள் கொழுநன் எங்கே?” என்று நாரதர் கேட்டார். “இங்கு இவர்களின் தந்தையென இருப்பவர் நினைத்தபோது எழுந்தருள்வார். அயனும் அரியும் சேர்ந்து தேடுபவர் எவரென நான் அறியேன். அவரை நீங்களே கண்டடைக!” என்றாள் தேவி. “திசையிலியின் மையத்தில் அடியிலியில் தொடங்கி முடியிலியில் ஓங்கி நின்றிருக்கும் அனலே அவர் என்றனர் நூலோர். அடிமுடி காண சென்றுகொண்டிருக்கிறார்கள் இவர்கள். அவர்கள் காண்பதைக் காண சென்றுகொண்டிருக்கிறேன் நான்” என்றார் நாரதர்.

“நானும் உடன்வருகிறேன்” என தன் வேலுடன் எழுந்தான் இளைய மைந்தன். “அது முறையல்ல, மைந்தா” என்றாள் அன்னை. “எந்தையென வந்தவரை நான் இன்றுவரை முழுதாகக் கண்டதில்லை.” தேவி அவனைத் தடுத்து “தனயர் தந்தையரை முழுதுறக் காணலாகாது, மைந்தா. அவர் அளிக்கும் முகமே உனக்குரியது” என்றாள். உணவுண்டுகொண்டிருந்த

மூத்த மைந்தன் “ஆம், அன்னை சொல்லியே தந்தைமுகம் வந்தமையவேண்டும்” என்றான்.

அவர்கள் செல்லும் வழியில் விண்கடல் கரையோரம் அமர்ந்து தன் சிறு கமண்டலத்தில் மணலை அள்ளி அப்பாலிட்ட அகத்தியரைக் கண்டனர். “என்ன செய்கிறீர்கள், குறுமுனியே?” என்றார் நாரதர். தலைதூக்கி நோக்கியபின் அதே கூருள்ளத்துடன் மணல் அள்ளிக் கொட்டியபடி “அளந்துகொண்டிருக்கிறேன்” என்றார் அகத்தியர். “கடல்மணலையா? நன்று” என நகைத்தார் பிரம்மன். “அதை அளந்து முடித்துவிட்டு கடலை அளப்பீர் அல்லவா?” என்றார் விஷ்ணு. “இல்லை, நான் அளந்துகொண்டிருப்பது என்னை. எனக்கு எப்போது சலிக்கிறதென்று பார்க்கிறேன்” என்றார் அகத்தியர். “சலிக்காத ஒன்றை அளக்கச் செல்கிறோம். உங்கள் கமண்டலத்துடன் வருக!” என்றார் நாரதர். அவர் ஆவலுடன் எழுந்து “செல்வோம்... நான் திரும்பிவந்து இதை அளக்கிறேன்” என்றார்.

**[ 15 ]**

ஆசிரியனை அளக்க நான்கு மாணவர்கள் கிளம்பிச்சென்றனர். ஒருவர் தன் ஆணவத்தால், பிறிதொருவர் தன் அறிவால், மூன்றாமவர் தன் ஆர்வத்தால் சென்றனர். நான்காமவர் சென்றது அளந்து விளையாடும்பொருட்டு. பதினான்கு வெளிகளை, இறத்தல், நிகழ்தல், வருதல், நுண்மை, இன்மை எனும் ஐந்து காலங்களை, காலம், நியதி, கலை, வித்தை, இராகம், புருஷன், மாயை, துரியம் என்னும் எட்டு தன்னிலைகளை அவர்கள் கடந்துசென்றனர். நால்வரும் அப்பால் அப்பாலெனச் சென்று அவர்கள் உற்றதெல்லாம் அகன்றபின் கடுவெளியின்

மையப்பெரும்பாழில் முழுமுதன்மை என எழுந்த அனல்பேருருவைக் கண்டு நின்றனர்.

“நான் சென்று அடியளந்து மீள்கிறேன்” என்றார் பெருமாள். தன் உருப் பெருக்கி கொடுந்தேற்றையும் மதவிழியும் கொண்டு பன்றி வடிவெடுத்தார். அவ்வுருக் கண்டதும் நீரென புகையென நெகிழ்ந்து அவரை தன்னுள் அணைத்துக்கொண்டாள் புவிமகள். “நான் விண்சென்று முடிதொட்டு மீள்கிறேன்” என்று எழுந்தார் பிரம்மன். “எங்கு செல்கிறார்கள்?” என்றார் அகத்தியர். “அளந்துவர” என்றார் நாரதர். “விளையாடும்பொருளை ஏன் அளக்கவேண்டும்? அளந்தால் ஆட்டம் முடிந்துவிடுமே?” என்றார் குறுமுனி.

காலமிலியில் இரு தெய்வங்களும் பறந்தும் அகழ்ந்தும் சென்றனர். மண்ணைக் கடந்து ஏழு ஆழுலகுகளைக் கடந்து மொழியின்மை, வடிவின்மை, ஒளியின்மை, விழியின்மை, அகமின்மை, நுண்மையின்மை, இன்மையின்மை எனும் ஏழு இருளுலகுகளையும் கடந்து சென்றுகொண்டே இருந்தார் விஷ்ணு. அங்கும் முடிவிலாது சென்றது அனலுருவின் அடி. மேலும் மேலுமென செல்லச்செல்ல அவர் உள்ளம் ஒடுங்கிக் கூம்பி குறுகி ஊசியென்றாகி நீண்டு மேலும் மேலும் கூர்ந்து இன்மையென்றாகியது. இன்மையென இருந்தது. அந்த முழு விடுதலையை அடைந்து மீண்டதும் அது என்ன என திகைத்தார். அப்பெருநிலை கலைய எழுந்த முதல் அதிர்வின் ஓசையையே அந்நிலைக்கான பெயரெனச் சூட்டினார். "தம!"

மேலெழுந்து சென்றுகொண்டே இருந்த பிரம்மன் செல்லுந்தோறும் விரிந்தார். ஒளியால் ஒலியால் திசையால் மையத்தால் இருப்பால் இன்மையால் நுண்மையால் ஆன வான்களைக் கடந்தார். வானென விரிந்து அகன்று பரவி மெலிந்து இலாதானார். பின் மீண்டபோது தான் கண்டடைந்தது என்ன என திகைத்தார். தன் படைப்புக்கற்பனை அனைத்தும் பெருக நான்கு கைகளாலும் வெளிதுழாவினார். "எழுதழலென எழுக ஒரு மலர்!" என்றார். அவர் முன் செம்மஞ்சள் ஒளியுடன் வந்து நின்றது செந்தாழை. அதன் ஒரு மடலை எடுத்துக்கொண்டு கீழிறங்கி வந்தார்.

அவர்களை நோக்கி ஓடிவந்த நாரதர் "திருமகள் தலைவனே, நீங்கள் அறிந்ததென்ன?" என்றார். "அறியவொண்ணாமையை அறிந்து ஓர் ஊழ்கநுண்சொல் என்றாக்கி கொண்டுவந்தேன்" என்றார் நாரணன். "அது தம என்னும் பொருள்பெருகும் ஒலி."

நாரதர் வணங்கி “ஆம், முடிவிலிக்கு ஒரு மந்திரம் நிகர். நீங்கள் அறிந்து மீண்டீர் என ஒப்புகிறேன்” என்றார்.

பிரம்மனிடம் திரும்பி “தாங்கள் அறிந்ததென்ன, கலைமகள் கொழுநரே?” என்றார் நாரதர். “கூறமுடியாமை கவிஞனிடம் அணியென்று மலர்கிறது. இது பெருந்தழலின் ஒரு கொழுந்து” என்று தாழைமலர் மடலைக் காட்டினார். “இது வெம்மையும் வீறும் இல்லாத தழல். அதன் அழகு மட்டுமே ஆகி என் கையில் அடங்குவது.” நாரதர் கைகூப்பி “ஆம், பொருந்தியெழும் ஒப்புமை ஒன்று பொருளுக்கு நிகர். முடியிலாதெழும் அனலே இம்மலர். நீங்களும் அறிந்துமீண்டீர்” என்றார்.

நாரதர் தலைநிமிர்ந்து நோக்கி “அலகிலியே, அறியமுடியாமை அறிந்து மீண்டுளார்கள் இருவரும். இவை மெய்யென்றால் அவ்வாறே ஆணையிடுக!” என்றார். இடியோசை எழுந்து “ஆம் ஆம் ஆம்” என முழங்கியது. “நாங்கள் அறியுமொரு உருக்கொண்டெழுந்து அருள்புரிக!” என்றார் நாரதர். இடியோசை நகைப்பென்று ஆகி மறைந்தது. அகத்தியரிடம் திரும்பி “நீங்கள் சென்று முயல்க!” என்றார் நாரதர். தன் கமண்டலத்துடன் சென்று எதிரே நின்றிருந்த எரியெழுகையை கமண்டலத்தில் அள்ளி வந்து அவர்களிடம் காட்டினார் குறுமுனி. ஓங்கி நிறைந்திருந்த அனல் அங்கே குளிர்ந்த சிற்றலைகளுடன் ஒளிகொண்டிருந்ததை அவர்கள் நால்வரும் கண்டனர்.

“காலநாகக் குழவி சுருண்டமைந்த தாழைமடலுக்கு வணக்கம். தன் வாலை தான் கவ்வி ஒலிக்கும் ஊழ்கநுண்சொல்லுக்கு வணக்கம். ஆம், அவ்வாறே ஆகுக!” என்று உக்ரன் சொல்லி முடித்தான். அவனைத் தாங்கி நின்றிருந்த உள்ளங்கை ஒன்று விலகியதுபோல மண்ணில் விழுந்து உடல்வளைத்து

கைத்தாளமென ஒலித்த அரணிக்கட்டைமேல் முகம் பதித்து அவன் கிடந்தான். மெல்லிய கரிய உடல் அப்போதுதான் முட்டையை உடைத்து வெளிவந்த குஞ்சுபோல ஈரத்துடன் மெல்ல விதிர்த்து உதறிக்கொண்டிருந்தது. ஜைமினி எழுந்துசென்று அவனைத் தொட்டபோதும் எம்பி விழுந்தது. அவன் உக்ரனை மெல்லத்தூக்கி எடுத்தான். அவன் கைகளும் கால்களும் விரைத்து இழுபட்டிருக்க வாயோரம் மென்னுரை வழிந்தது.

உக்ரனை தோளில் சாய்த்தபடி ஜைமினி வெளியே செல்வதை அவர்கள் நோக்கி அமர்ந்திருந்தனர். ஜைமினியின் தோளில் எச்சில் வழிந்தது. மெல்லிய குரலில் உக்ரன் ஏதோ சொன்னான். இருமுறை அவன் குழறிய பின்னரே அவன் சொல்வதென்ன என அவனுக்குப் புரிந்தது. உக்ரன் “தரமாட்டேன்” என்றான். மெல்ல நெளிந்தபடி மீண்டும் “யாருக்கும் தரமாட்டேன்” என்றான். “அது என் அரணிக்கட்டை”

ஜைமினி “ஆம், எவருக்கும் அதை அளிக்கவேண்டியதில்லை” என்றான். உக்ரன் விழித்துக்கொண்டு எழுந்து தலைதிருப்பி அவனை பார்த்தான். சிறிய சுட்டுவிரலைக் காட்டி “நான் அதில் தாளமிடுவேன்” என்றான். ஜைமினி “ஆம், நீங்கள் நெருப்பில் தாளமிடுபவர், மகாசூதரே” என்றான்.

# கிராதம் - 71

**[ 16 ]**

காகவனத்திலிருந்து சண்டனும் இளவைதிகர் நால்வரும் கிளம்பும்போது உக்ரன் கிளர்ச்சியுடன் அங்குமிங்கும் பாய்ந்துகொண்டிருந்தான். முடிச்சு போட்டுவைத்த

தோல்மூட்டையை அவன் பிரித்துக்கொண்டிருப்பதைக் கண்ட பைலன் “என்ன செய்கிறீர், சூதரே?” என்றான். பொதியிலிருந்த ஆடைகளை எடுத்து வெளியே போட்டபடி “என்னுடைய அரணிக்கட்டை, உள்ளே வைக்கிறேன்” என்றான் உக்ரன். “எங்கே அரணிக்கட்டை?” என்றான் பைலன்.

அரணிக்கட்டை தன் கையில் இல்லை என்பதை அப்போதுதான் உக்ரன் உணர்ந்தான். “என் அரணிக்கட்டை... என் அரணிக்கட்டை...” என்று கைகளை உதறியபடி அழத்தொடங்கினான். “அஞ்சவேண்டாம், இதோ எடுத்துத்தருகிறேன்” என்றான் ஜைமினி. “என் அரணிக்கட்டை எங்கே?” என்று உக்ரன் அழுதபடி கால்களால் தரையை உதைத்தான். அரணிக்கட்டையை குடிலெங்கும் தேடினார்கள். “நாய் தோண்டி வெளியே போடுவதுபோல மூட்டையை குதறிவிட்டார்” என்றான் ஜைமினி. “இதென்ன புதிய குழப்பம்? எங்கு வைத்தீர், சூதரே?” என்றான் சுமந்து.

“நீங்கள் என் அரணிக்கட்டையை திருடிவிட்டீர்கள்” என்று கண்ணீருடன் கைசுட்டி உக்ரன் சொன்னான். “நான் ஊர்த்தலைவரிடம் சொல்வேன்... அவர் உங்களை அடிப்பார்.” வைசம்பாயனன் “அவர் ஏதேனும் மூட்டைக்குள்தான் செருகியிருப்பார். அவிழ்த்துப்பாருங்கள்” என்றான். “மீண்டும் நான்கு மூட்டைகளையும் அவிழ்ப்பதா?” என சுமந்து சலித்துக்கொண்டான். “என் அரணிக்கட்டை!” என உக்ரன் வீரிட்டான். “செவி ரீங்கரிக்கிறது... ஏதாவது செய்யுங்கள். இனி இந்தக் குரலைக் கேட்டால் என் காது உடைந்துவிடும்” என்றான் வைசம்பாயனன். ஜைமினி ஒவ்வொரு மூட்டையாக பார்த்தபோது சுமந்துவின் மூட்டைக்குள் அது இருந்தது.

“நீ என் அரணிக்கட்டையை திருடினாய்... நீ கள்வன்” என்றான் உக்ரன். “சரி, இதோ வைத்துக்கொள்ளுங்கள்” என்றான் சுமந்து. அதை வாங்கி மார்போடணைத்தபடி இமைமயிர் ஒட்டியிருக்கும் கன்னங்களுடன் சுமந்துவை சீற்றத்துடன் நோக்கிய உக்ரன் அவன் கண்களை சந்தித்ததும் உதட்டைப்பிதுக்கி பழிப்பு காட்டினான். “அனைத்தையும் எடுத்துக்கொண்டுவிட்டீர்கள் அல்லவா?” என்றான் வைசம்பாயனன். அவன் போ என தலையசைத்தான். “அப்படியே விட்டுவிடுங்கள். அவரிடம் பேசவேண்டாம்...”

அவர்கள் மீண்டும் பணிகளில் விசைகொள்ள “வைதிகரே, இதை எங்கே வைப்பது?” என்று உக்ரன் மெல்லிய குரலில் கேட்டான். மறுமொழி சொல்லவேண்டாமென விழிகளால் பைலன் சொல்ல எவரும் அதை கேட்டதாக காட்டிக்கொள்ளவில்லை. அவர்கள் அங்குமிங்கும் செல்வதனூடாக நடந்த உக்ரன் “அந்தணரே, இதை எந்த மூட்டையில் வைப்பது?” என்றான். பைலனைத் தொட்டு “இதை உங்கள் மூட்டையில் வைக்கலாமே” என்றான். அவன் ஒன்றும் சொல்லாதது கண்டு வைசம்பாயனனிடம் “இதை உங்களுடன் வைத்துக்கொள்ளுங்கள், அந்தணரே” என கெஞ்சும் குரலில் சொன்னான்.

வைசம்பாயனன் சிரித்துவிட்டான். “கொடுங்கள்... ஆனால் நான் கொடுக்கும்வரை இதை கேட்கக்கூடாது” என்றான். “இல்லை, நான் முழவை மட்டும்... ஆ! என் முழவு! என் முழவு!” என உக்ரன் கூவினான். “என் முழவை காணவில்லை...” பைலன் “முழவு உங்கள் தந்தையிடமிருக்கும்... சென்று எடுத்துவாருங்கள்” என்றான். உக்ரன் “என் முழவு” என்றபடி வெளியே ஓடினான். அதை நோக்கிவிட்டு புன்னகையுடன்

திரும்பி “இவரையும் கூட்டிச்செல்லப் போகிறோமா என்ன?” என்றான் பைலன். “அப்படித்தான் நினைத்துக்கொண்டிருக்கிறார்” என்றான் சுமந்து. “அவர் நம்முடன் அவரது தந்தையும் தாயும் வருவதாக நினைத்துக்கொண்டிருக்கிறார்...” என்று ஜைமினி சொன்னான்.

முழவுடன் பாய்ந்து உள்ளே வந்த உக்ரன் மூச்சிரைத்தபடி “என் முழவு... இதில் காற்று இருக்கிறது” என்றான். “அரணிக்கட்டையில் அனல். இருபெரும் பூதங்களையும் இரு கைகளாக கொண்டிருக்கிறார்” என்றான் பைலன். அதை வாங்கி தன் மூட்டையில் வைத்த ஜைமினி “இனிமேல் கேட்கக்கூடாது... இது இங்கேதான் இருக்கும்” என்றான். “நான் எப்படி பாடுவது?” என்று உக்ரன் கேட்டான். “பாட்டு வரும்போது கேளுங்கள் சூதரே, எடுத்துத் தருகிறேன்.” உக்ரன் கவலையுடன் “எனக்கு இப்போது பாட்டு வருகிறதே” என்றான். “இவருக்கு சிறுநீரும் பாட்டும் ஒன்று. வந்துகொண்டே இருக்கும்” என்றான் பைலன்.

“பேசாமல் இரும், சூதரே... எங்களுக்கு பணிகள் உள்ளன” என்று ஜைமினி சொன்னான். உக்ரன் வைசம்பாயனனைத் தொட்டு “அந்தணரே, என்னுடைய அரணிக்கட்டையை எடுத்துக்கொடுங்கள்” என்றான். “பிடித்து வெளியே போட்டுவிடுவேன், தெரிகிறதா?” என வைசம்பாயனன் அதட்ட அவனை விழித்து நோக்கியபின் “நீ பன்றி” என்றான் உக்ரன். “நீர் எலிக்குஞ்சு...” என்றான் வைசம்பாயனன். “பிடித்து எலிவளைக்குள் போட்டுவிடுவேன்.” உக்ரன் ஆர்வம் கொண்டு “எலிவளைக்குள்ளா?” என்றான். நெருங்கிவந்து “உள்ளே என்ன இருக்கும்?” என்றான். “அய்யோ, ஜைமின்யரே இவரை கொஞ்சம்

அப்பால் கொண்டுசெல்லமுடியுமா?" என்றான் வைசம்பாயனன் தலையில் அடித்துக்கொண்டு.

"எலிவளைக்குள் பூனை நுழையுமா?" வைசம்பாயனன் "இதற்குமேல் என்னால் தாளமுடியாது" என்றான். "எலிவளைக்குள் நான் போவேன்." ஜைமினி "நான் உங்களை எலிவளைக்குள் கொண்டுசெல்கிறேன் சூதரே, வருக!" என்று தூக்கிக்கொண்டு சென்றான். "அப்பாடா... இது என்ன வார்ப்பு என்று எனக்கு பிடிகிடைக்கவே இல்லை" என்றான் வைசம்பாயனன். "கல்வி ஞானம் அனைத்தையும் தெய்வங்கள் இப்படி அவ்வப்போது கேலிசெய்வதுண்டு" என்றான் சுமந்து. "இது கொடுமையான கேலி. ஞானம் என்பது குரங்குக்கு வால் என கூடவே பிறந்து தன்விருப்பப்படி செயல்படும் என்றால்..." என்றான் பைலன்.

சண்டன் குடில்வாயிலில் வந்து நின்று "ஒருங்கிவிட்டீர்களா?" என்றான். "ஆம், கிளம்பிக்கொண்டிருக்கிறோம்" என்றான் பைலன். "ஜைமின்யர் எங்கே?" என்று சண்டன் கேட்டான். "அவர் சூதமைந்தரை கொண்டுவிட்டுவிட்டு வரச்சென்றிருக்கிறார். இங்கே அவரால் எதையுமே செய்யமுடியாத நிலைமை" என்று பைலன் சொன்னான். "அவரும் நம்முடன் வரவிருப்பதாக எண்ணுகிறார்" என்றான் சுமந்து. "அவனும் வரவேண்டியதுதானே? வேறெங்கே செல்வது?" என்றான் சண்டன்.

"அவரா?" என்று சுமந்து பைலனைப் பார்த்தான். "அவருடைய பெற்றோர் வருகிறார்களா?" சண்டன் "இல்லை, சுதைக்கு கரு தாழ்ந்துவிட்டது. பத்து நாட்களுக்குள் குழவியிறங்கலாம். இங்கேயே தங்கி மகவுக்கு விழி தெளிந்தபின் கிளம்புவதுதான் அவர்களின் எண்ணம்" என்றான். சுமந்து "அப்படியென்றால்...?"

என்றான். “நீங்கள் எண்ணுவது புரிகிறது, அந்தணர்களே. உக்ரன் நம்முடன் மட்டுமே வரமுடியும். அவன் தேடியடையவேண்டியது ஆசிரியரை. தந்தையுடன் இருக்கும் அகவை முடிந்துவிட்டது.”

வைசம்பாயனன் “ஐந்தாண்டுகள் வரை தந்தையே ஆசிரியன் என்பார்கள்” என்றான். “அது பிறருக்கு. இவன் அனலென்றே எழுந்தவன்” என்றான் சண்டன். சுமந்து “அது உண்மை. ஆனால் எப்போது அனல் எப்போது பைதல் என்று சொல்லமுடியவில்லை. அதுதான் சிக்கலே” என்றான். “பார்ப்போம்” என்று சொன்னபின் சண்டன் “நீங்கள் சொன்னபின்னர்தான் நினைவுகூர்கிறேன். அவன் மட்டும் நம்முடன் வருகிறான் என்பதை அவனிடம் நாம் இன்னமும் சொல்லவில்லை. நேற்றுமுன்னாளே அவன் பெற்றோரிடம் சொல்லிவிட்டேன்” என்றான்.

சுமந்து “அன்னைக்கு உவப்புதானா?” என்றான். “அன்னை அவன்மேல் கொண்டிருக்கும் விலக்கம் வியப்பூட்டுவது. சிம்மத்தைப் பெற்ற அன்னைமானின் மருட்சி அது. அவளால் அவனை புரிந்துகொள்ளவே முடியவில்லை. புரிந்துகொள்ள முடியாத எதையும்போல அவளுக்கு அவன் அச்சமூட்டுகிறான். அச்சம் விலக்கமாகி விலக்கம் வெறுப்பாகிவிட்டது.” சுமந்து “நாம் விலகிச்செல்லும் ஒவ்வொன்றின்மேலும் நாம் கொள்ளும் வெறுப்பு வியப்பூட்டுவது” என்றான். “வெறுப்பை உருவாக்கியே விலகிச்செல்கிறோம்” என்றான் பைலன்.

“அவள் நாம் அவனை எவ்வளவு முந்தி அழைத்துச்செல்கிறோமோ அவ்வளவு நன்று என நினைக்கிறாள். அவர்களின் சீர்வாழ்வொழுக்கில் அவன் பெரிய இடர். அவன் விலகிச் சென்றபின் அவள் அறிந்த

வாழ்க்கையின் இனிமைகளில் திளைக்க முடியும்” என்றான் சண்டன். ஜைமினி உள்ளே வந்து “ஒரே அழுகை… அவருடைய முழவு இங்குதான் இருக்கிறது. அதை எடுத்துக்கொண்டு நம்முடன் வருவேன் என்று சொல்கிறார்” என்றான். பின்னால் ஓடிவந்து குடிசைக்குள் புகுந்த உக்ரன் “நானும் வருவேன், நானும் வருவேன், நானும் வருவேன்” என உச்சகட்ட கீச்சுக்குரலில் கூவினான். “ஷுத்ரசிரவஸ் என்று பெயரிட்டிருக்கவேண்டும். என்ன ஒரு குரல்” என்றான் பைலன் செவிகளில் விரல் நுழைத்து.

உக்ரனிடம் கைசுட்டி “சத்தம் போடாதே! நீயும் வருகிறாய்” என்றான் சண்டன். “நானுமா?” என அவன் விழிவிரிய கேட்டான். “ஆம், உன் மூட்டையை எடுத்துக்கொள். நாம் கிளம்புகிறோம்.” அவன் மெல்ல ஐயம் கொண்டு “தந்தை?” என்றான். “அவர் வரவில்லை.” அவன் புருவம் சுருக்கி “அன்னை?” என்றான். “அவளும் வரமுடியாது.” அவன் தலைசரித்து சற்றுநேரம் சிந்தனை செய்தபின் “அன்னையின் உள்ளே இருக்கும் குழவி?” என்றான். “அதை எப்படி கொண்டுசெல்லமுடியும்?”

உக்ரன் பெருமூச்சுவிட்டான். பின்னர் பின்னகர்ந்து சுவருடன் முதுகைச் சேர்த்தபின் “நானும் வரமாட்டேன்” என்றான். “குருவைத் தேடி போகவேண்டாமா?” என்றான் ஜைமினி. “வேண்டாம்… நான் வரமாட்டேன்” என்று கூவியபடி அவன் திரும்பி வெளியே ஓடினான். “வருவான். தகுந்த தருணங்களில் அவனுள் இருந்து அந்த வரலாற்றுமானுடன் வெளியே எழுவான்… நாம் கிளம்புவோம்” என்றான் சண்டன்.

அவர்கள் மூட்டைகளுடன் வெளியே வந்தபோது ஊர்த்தலைவரும் குடிமூத்தவர்களும் பிறரும் வெளியே காத்து

நின்றிருந்தனர். ஊர்த்தலைவர் “எங்கள் சிறுகுடியில் இனி சொல்பெருகும், அந்தணர்களே. மகாசூதர் காலடிபட்ட நிலம் இது என எங்கள் குலங்கள் பெருமிதம்கொள்ளும்” என்றார். குடிமூத்தார் ஒருவர் “உங்கள் எழுத்தாணி தொட்ட எங்கள் மைந்தர்நாவுகளில் கலைமகள் வாழ்வாள். இந்த மலைக்குடி உங்களால் வாழ்த்தப்பட்டது” என்றார். பைலன் “எங்கள் உடலில் இந்த நிலத்தின் உப்பு கலந்துவிட்டது, குடியினரே. அது எப்போதும் அங்கிருக்கும்” என்றான்.

குடிப்பெண்டிர் அன்னம், நீர், மலர், விளக்கு, ஆடி எனும் ஐந்து மங்கலங்கள் கொண்ட தாலங்களுடன் இருநிரைகளாக நின்றிருந்தனர். குலத்தலைவர் குடுவைகளிலிருந்து மஞ்சள்நீரை எடுத்து அவர்களின் கால்களை கழுவினார். மலர், கனி, ஆடை, நறுமணம், பொன் என்னும் ஐந்து மங்கலங்கள் பரப்பிய தாலங்களை எடுத்து அந்தணர் நால்வருக்கும் அளித்தார். சண்டனுக்கு ஆடையும் நறுமணமும் பொன்னும் கொண்ட தாலத்தை அளித்து வணங்கினார். பெண்களின் குரவையோசையும் ஆண்களின் வாழ்த்தொலிகளும் சூழ எழுந்தன.

அவர்கள் கிளம்பிச் செல்லும்போது பைலன் திரும்பிப்பார்த்து “எங்கே சூதர்?” என்றான். “அம்மாவின் ஆடைக்குள் ஒளிந்துகொண்டிருக்கிறார்” என்றான் சுமந்து. கூட்டமாக அவர்களை குடியினர் ஊர்ச்சுற்றுக்கு அப்பால் கொண்டுசென்றனர். பைலன் திரும்பிப்பார்த்தான். அவன் விழிகளை சந்தித்ததும் சுதையின் சேலைக்குள் இருந்து நோக்கிக்கொண்டிருந்த உக்ரன் முகத்தை மூடிக்கொண்டான். அவன் புன்னகையுடன் “நாம் அழைக்கவேண்டுமென

எதிர்பார்க்கிறாரோ?” என்றான். “சண்டர் அழைப்பார் என நினைக்கிறார் போலும்” என்றான் சுமந்து.

அவர்கள் சற்றுதொலைவுக்குச் சென்றதும் “பெரிய தந்தையே” என்று அழைத்தபடி உக்ரன் ஓடி அவர்களுக்குப் பின்னால் வந்தான். அனைவரும் சிரித்தபடி திரும்பிப்பார்த்தனர். சண்டன் “வருக, மைந்தா!” என்றான். பாதி வழி வந்ததும் நின்று “என் முழவு...” என்றபடி திரும்ப ஓடினான். “முழவு இங்கே இருக்கிறது” என்றான் சண்டன். “அம்மா?” என்றான் உக்ரன். “நீ மட்டும்தான் வருகிறாய்” என்றான் சண்டன். “அம்மா வரவேண்டும்” என்றான் உக்ரன். சண்டன் “நீ மட்டும்தான் வருகிறாய்... வா!” என்றபடி திரும்ப நடந்தான்.

உக்ரன் விம்மி அழுதபடி “அம்மாவும் வரவேண்டும்” என்று முனகிக்கொண்டு வந்தான். அவர்களை நெருங்கியதும் ஜைமினி அவனை தோளில் தூக்கிக்கொண்டான். “அம்மா அம்மா” என உக்ரன் கைநீட்டி கூவி அழுதான். சுதை திரும்பி உள்ளே சென்றுவிட்டாள். “அம்மா அம்மா” என்று அவன் கைகளை உதறி அழுதான். “இறக்கிவிடுங்கள், ஜைமின்யரே” என்றான் சண்டன். ஜைமினி இறக்கிவிட்டதும் உக்ரன் சுதை சென்றவழியை நோக்கியபடி நின்றான். அவன் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தது. சிறியகரிய நெஞ்சு ஏறியமைந்தது.

“இளையவர். அவருக்கு இன்னமும் அன்னையைப் பிரியும் வயதாகவில்லை” என்றான் வைசம்பாயனன். “உறவுகளிலிருந்து வெட்டிக்கொள்ளாமல் அறிவுப்பயணம் இல்லை. அது எப்போதேனும் நிகழ்ந்தே ஆகவேண்டும்” என்றான் சண்டன். உக்ரன் அவர்களுக்குப் பின்னால் மெல்ல நடந்துவந்தான். புல்வெளியைக் கடந்து அவர்கள் மலைப்பாதையை அடைந்தனர். உக்ரன் “அந்தணரே, என்னை

தூக்கிக்கொள்ளுங்கள்” என்றான். ஜைமினி அவனை தூக்கிக்கொண்டான். அவன் தோளில் முகம்புதைத்து கண்ணீர்விட்டபடி உக்ரன் வந்தான்.

“மகாசூதரே” என்று ஜைமினி மெல்ல அழைத்தான். “வருந்துகிறீரா?” உக்ரன் “ஆம்” என்றான். “அன்னையிடம் திரும்ப விரும்புகிறீர்களா?” என்றான் ஜைமினி. “ஆம்” என்றான் உக்ரன். “நான் உங்களை நாளையே திரும்ப கொண்டுசென்று விட்டுவிடவா?” உக்ரன் மறுமொழி சொல்லவில்லை. “சொல்லுங்கள், செல்கிறீர்களா?” உக்ரன் பெருமூச்சுவிட்டான். “உங்கள் கண்ணீர் என்னை வருத்துகிறது, சூதரே.” உக்ரன் “நான் திரும்பிச் செல்லமுடியாது” என்றான். “ஏன்?” என்றான் ஜைமினி. “அன்னை என்னை வெறுக்கிறாள்” என்றான் உக்ரன்.

ஜைமினி சற்று அயர்ந்துபோனான். “ஏன் அப்படி சொல்கிறீர்கள்? அவர் உங்கள் அன்னையல்லவா?” என்றான். “ஆம், ஆனால் அன்னையானாலும் விருப்பும் வெறுப்பும் உண்டு.” இது யார் சொல்வது என ஜைமினி வியந்தான். குழந்தையின் முகத்தை பார்க்கவேண்டுமென விழைந்தான். “ஆனால் அவர் உங்கள் மேல் பெரும்பற்று கொண்டிருக்கவேண்டும் அல்லவா?” என்றான் ஜைமினி. மறுமொழிக்காக காத்தபோது அவன் நெஞ்சு அறைந்தது. “அறிவுடையோர் பாமரரை வெறுக்கிறார்கள்” என்று உக்ரன் சொன்னான். “ஆனால் பாமரர் அறிவுடையோரை மும்மடங்கு வெறுக்கிறார்கள்.”

ஜைமினி மெல்ல உடல்தளர்ந்தான். தோளிலிருந்த சிறுமைந்தனின் உடல் பலமடங்கு எடைகொண்டதுபோல் தோன்றியது. “ஏனென்றால், அறிவுடையோர் தங்கள் விருப்பப்படி பாமரர் வாழ்வை ஆட்டிவைக்கிறார்கள்” என்றான் உக்ரன். “அப்படியென்றால் ஏன் பாமரரை அறிவுடையோர்

அஞ்சுகிறார்கள்?” என்றான் ஜைமினி. “பெருந்திரளாக ஆகும்போது பாமரர் மாபெரும் வல்லமை கொண்டவர்கள். ஒற்றைநிலைபாடு கொள்கையில் அவர்கள் அறிவுடையோரை பேரலை சிறுதுரும்பை என அள்ளி அடித்துச்செல்கிறார்கள்.”

ஜைமினி பெருமூச்சுவிட்டான். “இதை எங்கே அறிந்தீர்கள்?” என்றான். “குருகுலோதயம் என்னும் சிறுநூலில் அரசு சூழ்தல் பற்றி வரும் பகுதிகளை ஒரு முதுசூதர் பாடினார். நான் அதை கேட்டபோது இப்படி எண்ணிக்கொண்டேன்” என்றான் உக்ரன். “அதை யாத்தவர் யார்?” என்றான் ஜைமினி. “அவர் குருகுலத்து மூத்தவரான கிருஷ்ணதுவைபாயன மகாவியாசர்” என்றான் உக்ரன். ஜைமினி “அவர் மறைந்துவிட்டார் என்கிறார்களே?” என்றான். “அவர் மறையமுடியாது. அவருக்காகவே இங்கே அரசரும் முனிவரும் அந்தணரும் வீரரும் மக்களும் இணைந்து இவையனைத்தையும் நடிக்கிறார்கள். அவர் தெய்வங்களின் ஆடலை பார்த்துக்கொண்டிருக்கிறார்.”

ஜைமினி “அவர் பெயரில் வந்துகொண்டிருக்கும் பாடல்கள் சூதர்களே பாடுபவை என்கிறார்கள்” என்றான். “இல்லை, அவற்றை பிறர் பாடமுடியாது” என்றான் உக்ரன். “நீங்கள் கூடவா?” என்றான் ஜைமினி. சிலகணங்களுக்குப்பின் “நான் பாடலாம்” என்றான் உக்ரன். ஜைமினி மீண்டும் பெருமூச்சுவிட்டு அவன் முதுகை கையால் வருடி “ஆம் மகாசூதரே, தாங்கள் மட்டுமே பாடமுடியும்” என்றான்.

**[ 17 ]**

அன்று உச்சிப்பொழுதில் அவர்கள் சுகவாணி என்னும் சிறிய சோலையை சென்றடைந்தனர். நெடுந்தொலைவிலேயே அங்கே ஒலித்த பறவைக்குரல்களை கேட்டார்கள்.

களைத்துப்போயிருந்த சுமந்து “நாம் அங்கே ஒரு நல்ல சோலையை காணமுடியுமென நினைக்கிறேன்” என்றான். “ஆம், அங்கே முன்னர் தண்டக முனிவரின் குருநிலை இருந்தது. இன்றும் அவருடைய மாணவர்கள் அங்கே வாழ்கிறார்கள். இனிய சுனை ஒன்றும் சுற்றும் அழகிய மலர்மரங்களும் உள்ளன” என்றான் சண்டன்.

பைலனின் தோளில் இருந்த உக்ரன் துயில்கொண்டிருந்தான். அவன் எச்சில் பைலனின் தோளில் வழிந்தது. “தூங்கிவிட்டாரா?” என்றான் ஜைமினி. “ஆம்” என்றான் பைலன். “நான் வைத்துக்கொள்ளவா?” என்றான் ஜைமினி. “வேண்டாம்... எடையே இல்லாமலிருக்கிறார்” என்றான் பைலன். சுமந்து “நாம் எவ்வளவு விரைவாக நீர் அருந்துகிறோமோ அவ்வளவு நன்று” என்றான். “ஏன்?” என்றான் வைசம்பாயனன். “எனக்கு நீர்விடாய் இருக்கிறது, அதனால்தான்” என்றான் சுமந்து. வைசம்பாயனன் சினந்துநோக்க பைலன் சிரித்தான்.

அவர்கள் சுகவாணிக்குள் நுழைந்தபோது சிறிய நீரோடை ஒன்று குறுக்காக கடக்கக் கண்டனர். தெளிந்த நீர் இன்மையின் ஒளி என அலைபாய ஓடிக்கொண்டிருந்தது. சுமந்து நீர் அள்ளி அருந்தினான். பிறரும் நீரிலிறங்க பைலன் மெல்ல உக்ரனை தரையில் படுக்கவைத்தான். விழித்துக்கொண்ட உக்ரன் “நான் நான்!” என்றான். “என்ன?” என்றான் பைலன். “நான்தான் தின்பேன்.” பைலன் சிரித்து “எதை?” என்றான். “பலாப்பழம்... மிகப்பெரியது.” பைலன் “சிறியவை கனவில்கூட வருவதே இல்லைபோலும்” என்றான்.

உக்ரன் எழுந்து இறங்கி நீரை அள்ளி தலைமேல் விட்டுக்கொண்டான். “குடுமியை நனைக்கவேண்டாம்” என்று சண்டன் கூரிய குரலில் சொல்ல அவன் “சரி” என கரையில்

ஏறி நின்றுகொண்டான். அப்பால் முருங்கைமரங்களாலான ஒரு காட்டுச்செறிவு தெரிந்தது. விழுந்து விழுந்து முளைத்து பசுந்தளிர்க்கற்றைகளாக அசைந்துகொண்டிருந்தது அத்தழைப்பு. “முருங்கை” என்று உக்ரன் சுட்டிக்காட்டினான். “ஆனால் காய்களே இல்லை.” சுமந்து “காய்கள் அதோ மேலே நிற்கின்றன” என்றான். “இங்கே எவரோ அன்றாடம் வந்து கீரை கொய்து செல்கிறார்கள். சேற்றுக்குள் காலடிகள் தெரிகின்றன” என்று சுமந்து சுட்டிக்காட்டினான்.

உக்ரன் “முருங்கை” என்றான். குனிந்து ஒரு சிறிய முசுக்கட்டைப் புழுவை நோக்கினான். அது சிலிர்த்த உடலுடன் மெல்ல சென்றுகொண்டிருந்தது. “அது சிறிய குட்டி... முருங்கையின் குழவி” என்றான். திரும்பி ஜைமினியிடம் “முருங்கைக்குழவி” என்றான். அவன் கண்களில் மெல்ல பாலாடையென ஓர் மங்கல் நிகழ்வதைக் கண்ட ஜைமினி மெல்ல “யார்?” என்றான். அதற்குள் அவன் சொல்வதைக் கேட்க பிறரும் அருகணைந்தனர். “முருங்கைக்குட்டி என்று ஒரு சிறுகுழவி இருந்தது முன்பு” என்றான் உக்ரன். “அது அன்னையின் கையில் பிறந்தது. விரலிடுக்குகளுக்குள் வளைந்து ஒடுங்கி வாழ்ந்தது.” அவன் கைகளை இடுக்கி அதேபோல அமர்ந்துகாட்டினான். “மிகச்சிறிய குட்டி அது.”

“அன்னை அந்தக் குட்டிக்கு பாலும் சோறும் ஊட்டி அணைத்து வைத்துக்கொள்வாள். அது அன்னையிடம் பேசிக்கொண்டே இருக்கும்.” கைகளை விரித்து “ஒருநாள் பெரிய வேடன் ஒருவன் வந்தான். அவன் கருமையாக இருந்தான். மிகப்பெரிய மீசை. அவன் கண்கள் களாப்பழம் போல சிவந்தவை. அவன் அந்த முருங்கையன்னையை ஓங்கி வெட்ட முருங்கையன்னை அப்படியே கீழே விழுந்தது. அதை அந்த வேடன் கூட்டிக்கொண்டுவந்த பெரிய எருமை மேய்ந்தது.” சண்டன் கூர்விழிகளுடன் அருகணைந்து “எருமையா?” என்றான். “ஆம், அது அந்த முருங்கையன்னையை மேய்ந்தது” என்றான்.

“அந்த வேடன் முருங்கையன்னையின் தடியை வெட்டி சிறுதுண்டுகளாக ஆக்கி கட்டி கையில் எடுத்துக்கொண்டு சென்றான். அதிலிருந்த முருங்கைக்குட்டி அப்படியே விதை போல மண்ணில் உதிர்ந்தது. அதற்கு எங்கே செல்வதென்றே தெரியவில்லை. அழுதுகொண்டே இருந்தது. அதன்பின்னர்

காற்றுசெல்லும் திசையிலேயே அதுவும் செல்ல ஆரம்பித்தது. அதற்கு யாருமே இல்லை அல்லவா?” என்றான் உக்ரன். “ஆம்” என்றான் ஜைமினி. “அந்த முருங்கைக்குட்டி அழுதுகொண்டே சென்றது. செல்லும் வழியில் இலைகளைத் தின்றது. தின்னும்போதும் அது அழுதது.”

“அது என்ன ஆயிற்று?” என்றான் ஜைமினி. “அந்த முருங்கைக்குட்டி காட்டிலேயே வாழ்ந்தது. ஒவ்வொருநாளும் இரவில் அது அன்னையை நினைத்து அழுதுகொண்டே இருந்தது. ஒருநாள் அது மேய்வதற்காக செல்லும்போது அன்னையின் மணம் வருவதை அறிந்தது. அன்னை அன்னை என்று கூவியபடி அது முடியைச் சிலிர்த்தபடி ஓடியது. ஓடி ஓடி...” அவன் கைகளை தரையில் ஊன்றி புழுபோல தவழ்ந்து காட்டினான். மூச்சிரைக்க எழுந்து “அது ஒரு பெரிய வயலை சென்றடைந்தது. அங்கே...” அவன் கைகளைத் தூக்கி சுட்டுவிரல் அசையாமலிருக்க கண்கள் செருக புன்னகைத்தான்.

ஜைமினி நெகிழ்ந்து அவனை அள்ளி தன் கையில் எடுத்துக்கொண்டான். “அங்கே அவன் என்ன கண்டான்?” என்றான் பைலன். “அந்த வேடன் முருங்கையன்னையை துண்டுதுண்டாக வெட்டி நட்டிருந்தான். அன்னை அத்தனை கணுக்களிலும் முளைத்து பல்லாயிரம் மரங்களாக வளர்ந்து ஒரு பெரிய காடாக ஆகிவிட்டிருந்தாள். முருங்கைக்குட்டி அந்தக் காட்டுக்குள் சென்று குடியேறியது.” அவன் கைகளை விரித்து “எங்கே பார்த்தாலும் அன்னை. நூறு ஆயிரம் இலக்கம் அன்னையர். அன்னைக்காடு... அது அன்னைக்காட்டில் மகிழ்ச்சியாக வாழ்ந்தது.”

அவன் பால்பற்கள் தெரிய சிரித்தான். ஜைமினி உளம் எழ அவனைத் தழுவி புன்மயிர் குடுமியை முத்தமிட்டான். “என்

அரணிக்கட்டை எங்கே?” என்றான் உக்ரன். “ஆரம்பித்துவிட்டார்” என்றான் பைலன். சுமந்து சிரித்தான். ஐயத்துடன் சுமந்துவை நோக்கி “இவர் என் அரணிக்கட்டையை எடுத்துவிட்டார்” என்றான் உக்ரன். “இல்லை இளஞ்சூதரே, உள்ளே இருக்கிறது” என்றான் ஜைமினி. “எங்கே?” என்றபடி அவன் சென்று இறக்கி வைக்கப்பட்ட மூட்டைகளை பிரிக்கத் தொடங்கினான்.

“இதென்ன தொடர்பே இல்லாமல் ஒரு குழந்தைக்கதை?” என்றான் வைசம்பாயனன். “அது இப்போது குழந்தையாக இருக்கிறது” என்றான் சண்டன். பைலன் “ஆனால் அக்கதையினூடாக வெளியே வந்துவிட்டார். இனிமேல் திரும்ப மாட்டார்” என்றான். “ஆம்” என்றான் சண்டன். “ஆனால்…” என்றபின் “சுதை, பாவம்” என்றான். “என்ன?” என்றான் ஜைமினி. “அவன் சொன்னதை கேட்டீர்கள் அல்லவா?” அவர்கள் அதை ஒரு குளிர்காற்றென ஒருங்கே உணர்ந்தனர். “ஈன்று மீளமாட்டாளா?” என்றான் பைலன். “அறியேன். ஆனால் அவன் உணர்கொம்புகள் கொண்ட உயிர்” என்றான் சண்டன்.

# கிராதம் - 72

**[ 18 ]**

தளிர்ப்பசுமை சூழ்ந்த சோலைக்குள் மரங்களின் அடிக்கவர்களின்மேல் கட்டப்பட்ட சிறுகுடில்கள் குருவிக்கூடுகள்போலிருந்தன. காற்றில் மரங்கள் ஆட அவை மெல்ல ஆடுவது தொட்டில்போலிருந்தது. மூங்கில் வேய்ந்த தரைமேல் ஈச்சையோலைகளைப் பரப்பி மெத்தென்றாக்கியிருந்தனர். வைதிகமுனிவரான காண்டவரின் மாணவர்களான சந்திரரும் சிகரரும் அங்கே தங்கள்

மாணவர்களுடன் இருபது குடில்களிலாக தங்கியிருந்தனர். விருந்தினர்களுக்கான பெரிய குடில் நடுவே நின்றிருந்த பிரமோதம் என்னும் இலுப்பைமரத்தின் மேல் அமைந்திருந்தது. அதில் அந்தணர் நால்வரும் தங்கவைக்கப்பட்டனர்.

அவர்கள் சுகவாணிச் சோலைக்குள் நுழைந்ததுமே சந்திரரும் சிகரரும் நேரில் வந்து வரவேற்று அழைத்துச்சென்றனர். அவர்கள் அளவைநோக்கு கொண்ட வைதிகர்கள் என்பதனால் ஜைமினி மிக அணுக்கமாக உணர்ந்தான். அவர்களும் மிக விரைவிலேயே அவனை தங்களவர் என கண்டுகொண்டனர். சூதமைந்தனை ஜைமினி தோளிலேற்றிக்கொண்டு வந்தமையால் முதலில் சந்திரர் அவனை நேர்கொண்டு நோக்குவதை தவிர்த்திருந்தார். அவன் தன் குருமரபைச் சொன்னபோது அவர் விழிகள் வியப்பில் சுருங்கி உக்ரனை ஒரு கணம் நோக்கி அகன்றன.

ஆனால் அதை காட்டிக்கொள்ளாமல் முறைச்சொல் உரைத்து அவர்களை அழைத்துச்சென்று குடில்களில் அமர்த்தினர். நீராடி வந்ததும் பால்கஞ்சியும் பழங்களும் அளித்து மன்று அமர்த்தினர். சூதர்கள் இருவருக்கும் மாணவர்களின் குடில்களுக்கு அப்பால் சிறிய குடிலொன்று அளிக்கப்பட்டது. நால்வரும் அவர்களின் அந்தி வேள்வியில் கலந்துகொண்டனர். வேள்விக்குப்பின் அங்குள்ள மாணவர்களின் வினாக்களுக்கு ஜைமினி அளித்த மறுமொழிகள் அவனை மகாவைதிகன் என அவர்கள் எண்ணும்படி செய்தன. அதுவரை இருந்த நோக்கும் நடப்பும் மாற அவர்கள் மூதாசிரியனிடமென அவனிடம் பேசலாயினர்.

இரவுணவுக்குப்பின் அந்தணர் நால்வரும் அமர்ந்திருந்த விருந்தினர் குடிலுக்கு நூலேணி வழியாக உக்ரன் ஏறிவந்தான்.

வாயிலில் நின்றபடி கைகளை விரித்து “எங்கள் குடில் சிறியது... அங்கே கரடி வந்து என்னை தூக்கிக்கொண்டு செல்லப்போகிறது... மூத்த தந்தையை கரடி சங்கைக்கடித்து கொல்லும்” என்றான். தன் கையை கடித்துக்காட்டி “கரடி குருதியைக் குடிக்கும். மூத்த தந்தை அழுவார்” என்றான். “ஏன் மூத்த தந்தைமேல் இத்தனை சினம்?” என்றான் சுமந்து. “வேறென்ன, ஆணைகளை இடுகிறார் அல்லவா?” என்றான் பைலன். “இவர் அவருடைய ஆணைகளுக்கு மட்டுமே கட்டுப்படுகிறார்” என்றான் சுமந்து. “விதையிலேயே மரத்தின் அனைத்து இயல்புகளும் இருக்கும் என்பார்கள். எத்தனை சரி என எண்ணிக்கொண்டிருக்கிறேன்” என்றான் வைசம்பாயனன்.

“எங்கள் குடிலில் இதேபோல மான்தோல் படுக்கை இல்லை” என்று உக்ரன் சொன்னான். “இதேபோல தொங்கும் விளக்கும் அங்கே இல்லை.” உள்ளே வந்து கொடியை சுட்டிக்காட்டி “இவ்வளவு பெரிய கொடி அங்கே இல்லை” என்றான். “நீங்கள் இங்கேயே இரவு தங்குங்கள், சூதரே” என்றான் ஜைமினி. “ஆம், நான் அவருடன் தங்கமாட்டேன். அவரை இருட்டில் கரடி பிடிக்கும்போது நான் அழவே மாட்டேன்” என்றான். உள்ளே வந்து மான்தோலிருக்கையில் அமர்ந்து பலமுறை எம்பி அந்த மென்மையை நுகர்ந்து மகிழ்ந்தபின் “ஆனால் அங்கே என்னிடம் நல்ல முழவு இருக்கிறது. பெரிய முழவு. அதை நீங்கள் கேட்டால் தரவே மாட்டேன்” என்றான்.

கீழே விளக்கொளி விழுந்துகிடந்த வட்டத்தில் சண்டன் வந்து நின்று “இங்கே இருக்கிறானா சுண்டெலி?” என்றான். “ஆம்” என்றான் ஜைமினி. “உங்களை கரடி பிடிக்கப்போவதாக சொல்கிறார்.” சண்டன் சிரித்தபடி “மேலே வரலாமா?” என்றான். “வருக... உங்கள் இடம் அல்லவா இது?” என்றான் ஜைமினி.

சண்டன் நூலேணி வழியாக மேலே வந்து “மைந்தரை வளர்ப்பது எளிதல்ல.பெற்றவர்களுக்கு மெய்யுசாவ நேரமிருப்பதில்லை என்பது ஏன் என்று புரிந்தது” என்றான். “காலைமுதல் இவன் பேச்சைக்கேட்டு என் தலைக்குள் எலிச்சத்தம் நிறைந்துவிட்டது. மைந்தன் என்ற சொல்லே உடலை நடுங்கச்செய்கிறது.”

ஜைமினி சிரித்து “அதிலும் இவர் மைந்தர்களாலான ஒரு படைக்கு நிகரானவர்” என்றான். சண்டன் களைப்புடன் அமர்ந்துகொண்டு “இனிய காடு…” என்று சுற்றிலும் பார்த்தான். “அழகாக இருக்கிறது. அனைத்தும் தளிர்விட்டிருக்கிறது” என்றான் சுமந்து. பைலன் “இக்காட்டின் அடியில் நீர் நிறைந்துள்ளது. எங்கெல்லாம் பள்ளங்கள் உள்ளனவோ அங்கெல்லாம் நீர் ஊறி எழுந்துள்ளது” என்றான். “ஆம், சுகவாணி என இதற்குப் பெயர் வந்ததே அதனால்தான். இங்கே கிளிகள் மிகுதி” என்று சண்டன் சொன்னான். உக்ரன் “அதில் ஒரு கிளியின் பெயர் சகனை. அது என்னிடம் இங்கே உள்ள வேதங்களை கேட்டுக்கேட்டு தங்கள் வேதங்களை மறந்துவிட்டதாக சொன்னது” என்றான்.

அவர்கள் அந்திப் பறவைகளின் ஒலியை கேட்டுக்கொண்டு அமர்ந்திருந்தனர். “என்ன ஓசை! கூடணைந்தபின்னர்தான் அவை பேசிக்கொள்ளவே தொடங்குகின்றன போலும்” என்றான் பைலன். சண்டன் பெருமூச்சுடன் அசைந்தமர்ந்தான். “இரவு இத்தனை வெம்மையுடன் சூழ்ந்துகொள்ளுமென எண்ணியதே இல்லை… ஏதோ பெருவிலங்கின் ஆவிமூச்சுபோல இருக்கிறது காற்று” என்றான் பைலன் மீண்டும்.

ஜைமினி “நாகங்கள் மரங்களின்மேல் சுற்றி ஏறும் பொழுது. அவற்றைக் கண்டபின்னர்தான் பறவைகள்

ஒலியெழுப்புகின்றன” என்றான். “நாகங்களுக்கான அச்சம் அவற்றின் ஆழத்திலேயே பொறிக்கப்பட்டுள்ளது. முன்பு ஒரு தெருவித்தையன் முட்டை ஒன்றை என் கையில் தந்தான். அதை படம்கொண்ட நாகத்தின் அருகே நீட்டும்படி சொன்னான். நாகம் மெல்ல அதைநோக்கி குனிந்தபோது என் கையிலிருந்த முட்டை மெல்ல அதிர்வதை உணர்ந்தேன்” என்றான் வைசம்பாயனன்.

பைலன் சண்டனை நோக்கி “தங்கள் உள்ளம் இங்கில்லைபோலும்” என்றான். சண்டன் விழித்து “என்ன?” என்றான். “எதை எண்ணிக்கொண்டிருக்கிறீர்கள்?” என்றான் சுமந்து. சண்டன் “காலபீதி என்னும் முனிவரைப்பற்றி” என்றான்.

அவர்கள் நோக்கி அமர்ந்திருக்க சண்டன் “மகாருத்ரபுராணத்தில் இக்கதை உள்ளது. அந்த முட்டையைப்பற்றி சொன்னபோது நினைவிலெழுந்தது” என்றான். “சொல்லுங்கள்” என்றான் வைசம்பாயனன். “நான் அந்தக் கதையை கேட்டதே இல்லை” என்று எழுந்து வந்து இடையில் கைவைத்து நின்றான் உக்ரன். “சென்று அமர்ந்துகொள்ளுங்கள். சூதர் சொல்வார்” என்றான் பைலன். அவன் திரும்பி நோக்கியபின் சென்று ஜைமினியின் மடியில் அமர்ந்தான். அவனை மெல்ல தழுவிக்கொண்டான் ஜைமினி. ஜைமினியின் மார்பில் தன் தலையை சாய்த்து கால்களை நீட்டிக்கொண்டு உக்ரன் அமர்ந்தான். சண்டன் சொல்லத் தொடங்கினான்.

**[ 19 ]**

மாம்டி என்னும் அந்தணன் பத்தாண்டுகாலம் மைந்தரில்லாமையால் பதினாறு ருத்ரர்களை பதினாறு மாதம் நோற்று தன் மனையாட்டியாகிய காலகேயியின் கருவில் ஒரு

குழவியை பெற்றான். கூரை கிழிய பொன்மழை விழுந்த கருமி என அவன் ஆனான். களஞ்சியம் நிறைந்த வேளாளன் என கைபெருகப்பெற்றான். அந்தணருக்கும் சூதருக்கும் அள்ளி வழங்கினான். அவன் தலைக்குமேல் கந்தர்வர்கள் இன்னிசையுடன் எப்போதுமிருந்தனர். அவன் செல்லுமிடமெல்லாம் கின்னரர்கள் நறுமணம் சூழச்செய்தனர். அவன் கேட்கும் சொல்லையெல்லாம் வித்யாதரர்கள் கவிதையென்றாக்கினர்.

ஒருநாள் விண்ணில் பறந்த இந்திரன் தன் நிழல் நீண்டு விழுவதை கண்டான். “என்ன இது, தேவர்களுக்கு நிழல் விழலாகாதே?” என்று அவன் மாதலியிடம் கேட்டான். “அரசே, தேவர்கள் தன்னொளி கொண்டவர்கள். ஆகவே அவர்களுக்கு நிழலில்லை. இன்று உங்களைவிட ஒளிகொண்ட ஒருவன் இதோ கீழே சென்றுகொண்டிருக்கிறான். அவன் உங்கள் உடலுக்கு நிழல் சமைக்கிறான்” என்றான் மாதலி. “யாரவன்?” என்றான் இந்திரன். “தவமிருந்து மைந்தனைப்பெற்ற மாம்டி என்னும் அந்தணன். அவன்மேல் விண்ணவர்கள் மலர்சொரிந்தபடியே உள்ளனர்” என்றான் மாதலி.

இந்திரன் அவனை கூர்ந்து நோக்கினான். “மாற்றிலாத இன்பத்தை மானுடர் உலகியலில் பெறமுடியாதே? எவ்வாறு இப்படி நிகழ்ந்தது?” என்றான். “அவன் தேவர்களை அறிந்தான். தேவருக்கும் தேவரான தென்றிசைத்தலைவனை இன்னும் அவன் அறியவில்லை” என்றான் மாதலி. இந்திரன் அன்றே சிறுகருவண்டாக மாறி பறந்துசென்று யமனை அடைந்தான். “மாம்டியின் மைந்தனின் ஊழ் என்ன? சொல்க, அறச்செல்வரே!” என்றான். “ஊழ்நெறியை முன்னால் அறியலாகாது, அரசே” என்றான் யமன். “அது புடவியை நெய்திருக்கும் ஊழின்

ஓட்டத்தை அழிப்பதாகும். அதைச் சொல்ல எனக்கு ஆணையில்லை.” இந்திரன் “அவன் எவ்வண்ணம் இறப்பான் என்பதை மட்டும் சொல்லுங்கள்” என்றான். “எவ்வண்ணம் இறப்பான் என்பது எவ்வண்ணம் வாழ்வான் என்பதைத்தான் சுட்டுகிறது. அதை நான் சொல்லமுடியாது” என்றான் யமன்.

பலவாறாகக் கேட்டும் யமன் இரங்காததனால் இந்திரன் யமன் அறியாமல் சித்திரபுத்திரனிடம் சென்று “அந்தணரே, நான் வேள்விகாக்கும் தேவர்தலைவன். ஒன்றை மட்டும் சொல்லுங்கள், ஊழ்முதிர்கையில் அவனை அழைத்துவரும் யமபுரியின் காவலன் யார்?” என்றான். “அதைச் சொல்ல எனக்கு ஆணையில்லை, அரசே” என்றார் சித்திரபுத்திரன். “உம்மால் பிறிதொருவரை அனுப்ப முடியுமா?” என்றான் இந்திரன். “இல்லை, அம்மைந்தன் கருக்கொள்கையிலேயே இங்கே இவனும் இருட்துளியாக ஊறிவிட்டிருப்பான். இருவரும் சேர்ந்தே பிறக்கிறார்கள். இங்குள்ள பெருங்கோட்டைவாயிலில் அவன் ஒரு சிறுபுள்ளியென தோன்றிவிட்டிருப்பான்” என்றார்.

இந்திரன் காலபுரியின் கோட்டைச்சுவர் வழியாக விழி ஆயிரம் கொண்ட வண்டாகப் பறந்தான். கோடானுகோடி கொலைவிழிகளையே கருங்கற்சில்லுகள் என அடுக்கிக் கட்டப்பட்டிருந்தது அக்கோட்டை. “மாம்டியின் மனைவியிலமைந்த கருவை கொல்லப்போகும் காலதேவன் எழுக! இது அரசாணை!” என்று கூவிக்கொண்டே சென்றான். கோட்டைச்சுவரில் ஒரு கண் அசைந்தது. “மாம்டியின் மைந்தன் நூறாண்டு வாழ்ந்தபின்னர் சென்று அழைக்கவேண்டும் என்பதல்லவா ஆணை?” என்றது அக்கண்களின் வாய். “நீ அதை எப்படி அறிவாய்?” என்றான் இந்திரன். “என் பெயர்

காலமார்க்கன். நானே அவனை அழைத்துவரவேண்டியவன். இங்கே கருத்தவத்தில் இருக்கிறேன்” என்றான் அவன்.

இந்திரன் “கரியவனே, நான் உன்னைத்தான் தேடிவந்தேன். எனக்கு ஓர் அருள் செய்க! மாம்டியின் மனைவி காலகேயியின் கருவிலிருக்கும் குழவிக்கு உன் முகத்தை மட்டும் காட்டி மீள்க!” என்றான். காலமார்க்கன் “அதற்கு எனக்கு ஆணையில்லை, அரசே” என்றான். “உன்னை அவன் அறிவானா என எப்போதேனும் எண்ணியிருக்கிறாயா?” என்றான் இந்திரன். “ஆம், அவ்வியப்பு எனக்கு உண்டு. நான் அவனை அறிவேன் என்பதனால் அவனும் என்னை அறிந்திருக்கவேண்டும்” என்றான் காலமார்க்கன். “அத்தனை குழவியரும் அவர்களின் காலனை கருவறைக்குள் அறிந்திருக்கின்றனர். அவனைநோக்கி கைகூப்பியபடியே மண்ணில் தோன்றுகின்றனர்” என்றான் இந்திரன்.

காலமார்க்கன் “ஆனால் அவனை கருவறைக்குள் சென்று நோக்க எனக்கு நெறியில்லையே?” என்றான். இந்திரன் “காலனே, அவனை நீ கொண்டுவருவதே ஊழ் என்றால் கருவில் விதையென இருக்கும் அவன் உன் முகத்தை நன்கறிந்திருப்பான்” என்றான். காலமார்க்கன் “ஆவல் என்னை அலைக்கழிக்கிறது. ஆனால் அவன் என்னை அறிந்துகொண்டால் பின்னர் என்னிடம் நெருங்கமாட்டான். இறப்பை மானுடன் தெரிவுசெய்து தேடிவந்து அணிகலன் என எடுத்து சூட்டிக்கொண்டாகவேண்டும். விரும்பாதவனை அணுகி உயிர்கவர எங்களுக்கு ஆணையில்லை” என்றான்.

“அவ்வாறு நிகழுமென்றால் அதுவே அவன் ஊழ் அல்லவா?” என்றான் இந்திரன். “அவன் ஊழ் அதுவென்றால் நாம் என்ன செய்தாலும் அது நிகழ்ந்தாகவேண்டும், காலமார்க்கனே” என

மீண்டும் சொன்னான். “ஆம், அதை ஆராய்ந்துநோக்கவே விழைகிறேன். ஆனால் என் உள்ளம் தயங்குகிறது” என்றான் காலமார்க்கன். “ஆவல் எழுந்தபின் எவரும் அமைந்ததே இல்லை. நீ சென்று அவனை நோக்குவாய்” என்றபின் புன்னகையுடன் விழைவுக்கிறைவன் தன் அரியணைக்கு மீண்டான்.

இந்திராணி உளச்சோர்வுடன் “தேவர்க்கரசே, அந்த அந்தணனின் இன்பத்தை அழிப்பதனால் நீங்கள் அடைவதென்ன?” என்றாள். “நான் எனக்கு பெருநெறி இட்ட ஆணைகளை நிறைவேற்றுபவன் மட்டுமே. மானுடன் மண்ணில் காலூன்றி நின்று விண்ணவனுக்குரிய இன்பங்களை அடையக்கூடாது. மானுடனின் சித்தத்தில் முட்டைக்கருவுக்குள் சிறகுகள்போல ஞானப்பேரார்வம் பொறிக்கப்பட்டிருக்கிறது. அதுவன்றி பிறிதை அவன் அழியா இன்பமென உணரலாகாது” என்றான்.

கருவுக்குள் புகுந்து அங்கே துரியத்தில் இருந்து துளித்து உருக்கொண்டு சுஷுப்தியில் சொக்கிச் சுருண்டிருந்த குழவியின் நெற்றிப்பொட்டில் தொட்டு எழுப்பினான் காலமார்க்கன். உடல் அதிர்ந்து விழித்து அசுரவடிவில் வந்த அந்த முகத்தை நோக்கி அஞ்சி குழவி ஓசையிலாது அழுதது. கால்களை உந்தி உந்தி கருநீரில் நீந்தி விலகமுயன்றது. சிரித்தபடி அணுகி “நான் உன் காலன். உன்னை அழைத்துச்செல்லவிருப்பவன்” என்றான் காலமார்க்கன். “நான் வரமாட்டேன்” என்று குழவி அஞ்சி நடுங்கியபடி சொன்னது. அதன் சொற்கள் குமிழிகளாயின. “எவரும் மறுக்கமுடியாத அழைப்பு என்னுடையது” என்றான் காலமார்க்கன்.

கருக்குழவி அழுதுநடுங்கிக்கொண்டு கருவறைக்குழிக்குள் ஒடுங்கியது. அன்னை தன் வயிற்றில் கொப்புளங்களையும் நடுக்கங்களையும் உணர்ந்தாள். மருத்துவர்கள் அவளை ஆய்ந்துநோக்கி அவள் வயிறு அருவியருகே அமைந்த பாறைபோல உள்நடுக்குகொண்டிருப்பதை உணர்ந்தனர். ஒன்பது மாதங்களானபோது கருவறை சுருங்கி கருவழி வாய் திறந்து குழவியை உமிழ்ந்து வெளித்தள்ள முயன்றது. மைந்தன் தன் இரு கால்களாலும் கருவழியை அழுத்தி மூடிக்கொண்டான். வலி தாளாமல் அன்னை துடித்தாள். குழவி வெளிவரவில்லை. கைதுழாவி நோக்கிய வயற்றாட்டியர் உள்ளே குழவியின் கால்கள்தான் தொடுபடுகின்றன என்றனர்.

பன்னிருமுறை அவ்வண்ணம் குழவி வந்து முட்டி மீண்டது. மூன்று மாதம் குழவி உள்ளேயே இருந்தது. தன் மனையாட்டியின் துடிப்பை தாளமுடியாமல் மாம்டி ருத்ரர்களை வேண்டினான். அவர்கள் மறுமொழி உரைக்காமை கண்டு பதினாறு கைகளுடன் காட்டாலயத்தில் அமர்ந்திருந்த காளியன்னையின் திருநடையில் சென்று நின்றான். “அன்னையே, என் மைந்தனை காத்தருள்க!” என்று கூவினான். பூசகனில் சன்னதமாக எழுந்த அன்னை “அவன் அஞ்சுகிறான். அவன் அச்சமென்ன என்று கேள்” என்றாள். “என் அகல்விளக்கு எண்ணையில் அவன் எழுக!” என ஆணையிட்டாள்.

அகல்விளக்கின் கரியநெய்யில் அச்சம்நிறைந்த கண்களுடன் மைந்தன் தோன்றினான். “தந்தையே, நான் காலமார்க்கன் என்னும் அசுரனால் கொல்லப்படுவேன். ஆகவே நான் வெளிவரவே அஞ்சுகிறேன்” என்றான் மைந்தன். “நீ நிறைவாழ்வுடையவன் என நிமித்திகர் சொல்கிறார்கள், மைந்தா” என்றான் மாம்டி. “நூறாண்டு வாழ்ந்தாலும் இறுதியில்

அந்த அசுரனால் கைப்பற்றப்படுவேன் அல்லவா? தந்தையே, நான் இங்கேயே இருந்துகொள்கிறேன்” என்றான் மைந்தன்.
“அது நீ வாழுமிடமல்ல, மைந்தா. அன்னையின் வயிற்றில் வாழ்வதற்கொரு காலமுள்ளது” என்றான் மாம்டி. “நான் வளராதொழிகிறேன். சிறுகருவாகிறேன். பார்த்திவப்பரமாணுவாக மாறுகிறேன். தந்தையே, இறப்பு என்னை அச்சுறுத்துகிறது” என்றான் மைந்தன்.



“மூடா, நீ அஞ்சுவது இறப்பை அல்ல, பிறப்பை” என்று மாம்டி சொன்னான். “நான் பிறக்கவே விரும்பவில்லை. மண்ணில் வரவேமாட்டேன்” என்று மைந்தன் கைகளால் தொப்புள்கொடியை பற்றிக்கொண்டான். “இங்கே அனைத்தும் இனிதாக உள்ளது. அன்னையின் குருதியால் சூழப்பட்டிருக்கிறேன். அதையே உண்டு உயிர்க்கிறேன். அவள் நெஞ்சத்தை கேட்டுக்கொண்டிருக்கிறேன். மேலும் இனிதாக அப்புவியில் என்ன இருக்கிறது?” என்றான். மாம்டி திகைத்து நோக்கிக்கொண்டு நின்றான். அக்கணம் உண்மையிலேயே புவியில் என்னதான் இருக்கிறதென்று அவனால் சொல்லமுடியவில்லை.

அக்கருக்குழவி காலபீதி என அழைக்கப்பட்டான். அவனைப்பற்றிய செய்திகளை அறிந்து முனிவரும் நூலறிந்த அந்தணரும் வந்து அவனை கண்டனர். “சொல்க, நான் புவிபிறப்பது ஏன்? அங்கிருப்பவற்றில் இங்கிருப்பவற்றைவிட இனியது எது?” என்றான் காலபீதி. “அங்குளோர் அனைவரும் தேடுவது அமுதை. நானோ அவ்வமுதில் திளைத்து இங்கே வாழ்பவன். நான் ஏன் மண்ணிறங்கவேண்டும்?”

அனைவரும் மறுமொழி இன்றி திரும்பிச்சென்றனர். மன்றுகளிலும் இல்லங்களிலும் அமர்ந்து சொல்லாடினர். இரவுகளில் தனித்திருந்து எண்ணி எண்ணி குழம்பினர். உண்பது, புணர்வது, விளையாடுவது, அடைவது, வெல்வது, கற்பது, எய்துவது என்னும் ஏழு மெய்யுவகைகளும் இருப்பது என்னும் ஒருநிலையின் மாற்றுருக்களே என்றும் இருத்தலென்பது இறத்தலுக்கெதிரானதென்னும் உவகையை மட்டுமே கொண்டது என்றும் உணர்ந்தனர். அவ்வறிதல் அவர்களை சோர்வுறச்செய்தது.

மாம்டி மீண்டும் பதினாறு ருத்ரர்களை எண்ணி தவம்செய்தான். ஒவ்வொருவரிடமாக அவன் கேட்டான் “என் மைந்தன் கேட்டதற்குரிய விடை என்ன?” அவர்கள் “பிறப்பு இறப்பால் நிகர்செய்யப்பட்டாகவேண்டும். பிறிதொரு விடையும் எங்களிடமில்லை” என்றனர். தாங்களும் குழம்பி “பிறப்பதனால் வாழ்வமைகிறது. வாழ்வமைவதனால் இறப்பு நிகழ்கிறது. பிறிதொரு விளக்கமும் இதற்கில்லை” என்றனர். பதினாறாவது ருத்ரன் “அந்தணனே, ஒரு மெய்வினாவுக்கு முழுமெய்மை மட்டுமே விடையென்றாகும். நீ கேட்கும் இவ்வினாவுக்கு பிரம்மஞானம் மட்டுமே விடை. அதை மகாருத்ரனிடம் கேள்” என்றார்.

மாம்டி மகாருத்ரனை எண்ணி தவம்செய்தான். அவன் ஏழு கருநிலவுக்காலம் தன்னை உதிர்த்து அருந்தவம் செய்து நிறைந்தபோது மின்னல்தொட்டு எரிந்தெழுந்த கரும்பனையாக மாருத்ரம் அவன் முன் எழுந்தது. “எனக்கு பிரம்மஞானம் அருள்க!” என்றான் மாம்டி. அவன் மேல் அனல் கவிந்தது. தலைமுடியும் இமைமயிர்களும் பொசுங்கின. எரிமணமென எழுந்தது மூச்சு. தன்னுள் அவன் “ஆம்” என்னும் ஒலியை கேட்டான். “சிவோகம்” என முழங்கியபடி அவன் எழுந்துகொண்டான்.

மாம்டி தன் மைந்தனிடம் மீண்டான். காளியின் அகலெண்ணையில் மைந்தனை வரவழைத்தான். கால்கட்டைவிரலை வாயிலிட்டு தன்னைத்தான் சுவைத்து மகிழ்ந்திருந்த காலபீதி “சொல்க தந்தையே, நான் ஏன் வெளிவரவேண்டும்?” என்றான். “ஏனென்றால் நீ சிவம். உருக்கொண்டு உருவழிந்து சிவம் ஆடும் நடனமே நீ கொள்ளும் வாழ்க்கை” என்றான் மாம்டி. “ஒவ்வொரு

உயிர்த்துளியும் ஒவ்வொரு பருப்பொடியும் அவ்வாடலை நிகழ்த்திக்கொண்டிருக்கின்றன. இது அழியாத தாளமென்றறிக! எழுக காலரூபனாக! காலத்துடன் நின்றாடுக!”

மனையாட்டியின் வயிற்றில் வாயை வைத்து அவன் முதன்மைச்சொல்லை மூன்றுமுறை சொன்னான். “சிவமேயாம்! சிவமேயாம்! சிவமேயாம்!” குழவி அச்சொல்லை தான் முழங்கியது. அன்னையின் உள்ளத்தில் எரிதழல்தூண் ஒன்று கனவென எழுந்தது. எரிந்து எழுவதுபோல மைந்தன் வெளியே வந்தான். அரைவிழி திருப்பியபோது தன் நிழலென உடன் எழுந்த காலமார்க்கனைக் கண்டான். புன்னகையுடன் கைகளை வீசி உடல்நெளித்து அதனுடன் ஆடினான்.

காலநிழலுடன் ஆடி வளர்ந்தவனை மகாகாலர் என்று வழுத்தினர் நூலோர். சொல்தேர்ந்த அறிஞனாகி சொல்கரைந்து யோகியாகி அமர்ந்தார் மகாகாலர். ஒவ்வொருமுறை அவர் வளரும்போதும் அவரைவிட வளர்ந்தான் காலமார்க்கன். அவர் ஆற்றும் செயல்களில் விளைவுகுறித்த அச்சமாக இருந்தான். அவர் கற்ற நூல்களில் ஐயமானான். அவர் கொண்ட உறவுகளில் ஆணவத்தின் இறுதிக் கசப்பானான். அவர் செய்த பூசனைகளில் பழக்கமெனும் பொருளின்மையானான். அவர் அமைந்த ஊழ்கங்களில் எஞ்சும் தன்னிலையானான்.

நூறாண்டு முதிர்ந்தபோது ஒருநாள் அவனை நோக்கித் திரும்பி அவர் கேட்டார் “உன்னை வென்ற மானுடர் எவரேனும் உளரா?” காலமார்க்கன் சொன்னான் “வெல்லலாகாதென்பதே புடவியின் முதல்நெறி.” மகாகாலர் “தேவர்களில் உன்னை வென்றவர் எவர்?” என்றார். “தேவர்கள் என்னால் வாழ்த்தப்படுபவர்கள் மட்டுமே” என்றது நிழல். “தெய்வங்களில் உன்னை வென்றவர் எவர்?” என்றார் மகாகாலர். “முக்கண்முதல்வனின் காலடியில்

அமைபவன் நான்” என்றான் காலமார்க்கன். “அவர் ஏந்திய பினாகமும் பாசுபதமும் என்னை ஆள்கின்றன.”

தன் இடையாடையை அவிழ்த்துவீசிவிட்டு தென்மேற்கு திசையில் வடக்கு நோக்கி அமர்ந்தார் மகாகாலர். ஊழ்கத்திலாழ்ந்து சென்றார். உடலுருகி சித்தம் அழிந்து தன்னிலையும் மறைந்தபோது அப்பால் எழுந்த அனல்துளியை கண்டார். “ஆம்” என்றபடி விழிதிறந்தார். அருகே நீண்டுகிடந்த கரிய நிழலைக்கண்டு புன்னகையுடன் கைகளை விரித்து “அருகே வா, காலமார்க்கனே!” என்று அழைத்தார்.

விண்தொடும் பேருருவுடன் அவர் முன் எழுந்தது கருநிழல். அது மான்மழுவும் நீர்மலிச்சடையும் முக்கண்ணும் முப்புரிவேலும் கொண்டிருந்தது. அதைநோக்கி விழிதூக்கி “யாமேநீ!” என்றார் மகாகாலர். “ஆம் யாமேநீ” என்றது நிழல்.

சண்டன் சொல்லி முடித்தபோது வைதிகர் நால்ரும் இருளை நோக்கிய விழிகளுடன் அமர்ந்திருந்தனர். இலைத்தழைப்பு வழியாக காற்று ஓடிக்கொண்டிருந்தது. இடைவெளியில் தெரிந்த ஒற்றை மீன் நடுங்கியது. நீண்டநேரம் கடந்து பைலன் பெருமூச்சுடன் விழித்துக்கொண்டான். அவ்வொலியில் பிறரும் நனவுமீண்டனர். ஜைமினி எழுந்துசென்று கருந்திரி எரிந்த அகலை தூண்டினான். ஒவ்வொருவரும் நிழல்பெற்றனர்.

உக்ரன் “பெரிய தந்தையே” என மெல்லிய குரலில் அழைத்தான். “சொல்க!” என்றான் சண்டன். “மகாகாலர் பெற்ற அந்த மெய்மையின் பெயர் என்ன?” சண்டன் “அதை பாசுபதம் என்கின்றனர் அறுநெறிச் சைவர்” என்றான். அவன் எழுந்து அருகே வந்து நின்று “எப்படிப்பட்டது அது?” என்றான். “அறியேன். யோகநூல்கள் உரைப்பவற்றை சொல்கிறேன்”

என்றான் சண்டன். “பிநாகம் பொன்னிறமான பெருநாகம். அது வடதிசையிலிருந்து தென்திசைவரை நிறைத்திருக்கும் முடிவிலா வளைவையே உடலெனக்கொண்டது.”

“அதற்கு ஏழு தலைகள். செந்நிறமான ஆணவம், அனல்நிறமான சினம், பொன்னிறமான விழைவு, பசும்நிறமான அறிவு, நீலநிறமான மொழி, கருநீலநிறமான ஊழ்கம் கருநீலச்செம்மைகொண்ட தன்னிலை என அதை வகுக்கின்றன நூல்கள். பாசுபதம் அதன் அம்பு. அது நீலநா பறக்கும் தழல்வடிவமான சிறுநாகம். நிழலற்றது அது” என்றான் சண்டன். “பாசுபதம் பெற்றவன் தானும் சிவமென்றாகிறான்.”

அனைவரும் எண்ணிக்கொண்டிருந்த சொல்லையே உக்ரன் கேட்டான் “பெரிய தந்தையே, அர்ஜுனன் பாசுபதம் பெற்றானா?” சண்டன் “பெற்றான் என்கின்றன சூதர்கதைகள். திசைவென்றவன் பின் வெல்வதற்கு எஞ்சுவது அதுவே. ஏனென்றால் அது திசைகளின் மையம்” என்றான்.

தன் உடலுறுப்பென தோளில் கிடந்த முழவை எடுத்து சண்டன் பாசுபதச் சொல்லை பாடலானான். தாளம் உறும சொல் உடனிணைந்து ஆடியது.

**ஓம்**! நமோ பகவதே மகா பாசுபதாய!**

**அதுலபலவீர்ய பராக்ரமாய! திரிபஞ்சனயனாய!**

**நானா ரூபாய! நானாபிரஹரணோத்யதாய!**

**சர்வாங்கரக்தாய! ஃபின்னாக்ஞனசயபிரக்யாய!**

**ஸ்மஸானவேதாளப்ரியாய…**

பைலன் ஒருசொல்லால் அறையப்பட்டான். அவன் விரல்கள் நடுங்கத் தொடங்கியபின்னரே அச்சொல்லை அவன் சித்தம் அறிந்தது. சர்வாங்க ரக்தாய! குருதியுடல். கருக்குழவியுடல். சர்வாங்க ரக்தாய! கொலைகளத்தில் குருதிசூடிக் கூத்தாடும் உடல். சர்வாங்க ரக்தாய! அனலுடல். அனலெனும் குருதிப்பேருடல். சர்வாங்க ரக்தாய! சர்வாங்க ரக்தாய! குருதியுடல் கொண்டெழுக! சர்வாங்க ரக்தாய! சர்வாங்க ரக்தாய! சர்வாங்க ரக்தாய! சிவாய!

# கிராதம் - 73

**[ 20 ]**

பீதர்நாட்டு வணிகர்களுடன் மகாநாகம் வந்து காமரூபம் வழியாக இமயமலையடுக்குகளுக்குமேல் ஏறிய அர்ஜுனன் அங்குதான் வெண்சுடர் கின்னரர்களின் உச்சிநிலம் குறித்து கேட்டறிந்தான். பீதவணிகர் ஆண்டுதோறும் கோடைகாலத்தின் தொடக்கத்திலேயே அத்திரிகள் சுமக்கும் வணிகப்பொருட்களுடன் மலையடுக்குகள்மேல் ஏறிச்சென்று இமயமலைச்சரிவுகளில் அமைந்த ஆயிரத்தெட்டு சிற்றூர்களில் வாழ்ந்த மலைமக்கள் வந்துகூடும் ஏழு அங்காடிகளை சென்றடைந்தனர். தவளம், சுஃப்ரம், பாண்டுரம், ஸ்வேதம், சுக்லம், அமலம், அனிலம் என்னும் ஏழு சந்தைகளும் ஆண்டுக்கொருமுறை கோடைப்பருவத்தின் இறுதி இரண்டு வாரங்களில் மட்டுமே கூடின. கோடை முழுதும் மலைக்குடிகளின் விழவுக்காலம்.

பீதவணிகர் உலோகப்பொருட்களையும் ஆடைகளையும் அணிகலன்களையும் விற்று நறுமணப்பொருட்களையும்

கவரிமான்மயிரையும் மலைக்காளைத்தோலையும் அருமணிக்கற்களையும் மாற்றாக வாங்கிக்கொண்டு மீண்டனர். அப்பொருட்களை காமரூபர்களுக்கும் நாகர்களுக்கும் விற்று பொன்னாக ஆக்கிக்கொண்டு கடலோரங்களில் அமைந்த தங்கள் வணிகச்சிற்றூர்களுக்கு
மீண்டனர். கின்னரர்களிடமிருந்து மலைமக்கள் பெற்று வணிகர்களுக்கு விற்கும் அருமணிகளுக்கு பன்னிரண்டாயிரம் மடங்கு விலை அளித்தனர் யவனர். "தெய்வங்களின் கண்கள்" என அவற்றை யவன மணிநோக்கிகள் சொன்னார்கள். அச்செல்வத்தால் பீதர்களின் கடற்கரைச்சிற்றூர்கள் செழித்துக்கொண்டிருந்தன.

"மழையெனப் பெய்வது விண்ணில் பரந்த நீர். மழையுடன் வெயிலெழ விண்வில் வளையும் பொழுதுகளில் வான்நிறையும் தேவர்கள் அப்பல்லாயிரம்கோடித் துளிகளில் சிலவற்றை மட்டும் கைகளால் தொட்டு எடுக்கிறார்கள். உருவிலிகளாகிய அவர்கள் மண்ணின் களியாட்டை நோக்கி மகிழும்பொருட்டு அவற்றை விழிகளென்றாக்கி சூடிக்கொள்கிறார்கள். வெண்பற்களென்று அணிந்து சிரிக்கிறார்கள். மணிகளென அள்ளி வீசி விளையாடுகிறார்கள். அவை ஆலங்கட்டிகளாக மண்ணில் விழுகின்றன" என்றான் பீதர்களுடன் சென்ற காமரூபத்துப் பாணன். அவர்களுடன் பொதிக்காவலனாக வில்லேந்தி அர்ஜுனன் சென்றான். செல்லும் வழியெங்கும் வெண்சுடர் கின்னரர்களைப்பற்றிய பேச்சே வணிகர்களிடம் தொடர்ந்தது.

"அவற்றில் சில தேவர்களின் ஆடைகளில் தங்கிவிடுகின்றன. அவர்கள் ஏழாம் வானை அடையும்போது அங்கிருக்கும் ஒளியை தாம் சூடிக்கொண்டு அவை சுடர்கொள்கின்றன.

விண்ணவர்நாட்டுக்குள் நுழைவதற்குமுன் தேவர்கள் அவற்றை உதறிவிடுகிறார்கள். அவை அருமணிகளாக ஒளியுடன் உதிர்ந்து பனியிலும் பாறையிடுக்கிலும் மின்னிக்கிடக்கின்றன. அவற்றையே கின்னரர்கள் தொட்டு எடுத்து சேர்க்கிறார்கள். மலையிறங்கி வந்து இம்மலைமக்களுக்கு அளிக்கிறார்கள்" என்றான் பாணன். "மலையுச்சியில் வாழும் மானுடர் அறியவொண்ணா கின்னரர்களின் வழித்தோன்றல்கள் என இம்மலைமக்கள் தங்களை எண்ணுகின்றனர். கின்னரஜன்யர் என்பதே பதினெட்டு பெருங்குலங்களும் நூற்றெட்டு குடிகளுமாகப் பிரிந்து உச்சிமலைச்சரிவுகளில் வாழும் இவர்களுக்குரிய பொதுவான பெயர்."

கின்னரர் அன்றி பிறருக்கு அம்மக்கள் வரியோ கப்பமோ கொடுப்பதில்லை. அவர்களின் சிற்றூர்மன்றுகளில் கின்னரமூத்தார்கள் வெண்புகைச் சிறகுகளுடன் பனிநுரைக் குஞ்சியுடன் முப்பிரிவேல் ஏந்தி வெள்ளெருதுமேல் ஏறி அருள்புரிந்து அமர்ந்திருந்தார்கள். அவர்களின் காலடியில் எட்டு கால்கைகளுடன் பெருவயிறமூந்த ஊர்ணநாபன் என்னும் அரக்கன் மல்லாந்து நோக்கி தொழுது
கிடந்தான். முழுநிலவுநாட்களில் கின்னரர்கள் நிலவொளியில் பறக்கும் வெண்பஞ்சுத்துகள்கள்போல வந்திறங்கி அவர்களின் கன்னியரை கனவுக்குள் புகுந்து உளம் மயக்கி புணர்ந்து மீண்டனர் என்றனர் குலப்பாடகர்.

கின்னரஜன்யரில் குழவி பிறக்கையில் முதல்வினா விழிநிறமென்ன என்பதாகவே இருந்தது. பச்சைமணிவிழி என வயற்றாட்டி சொன்னால் அக்கணமே அதன் தந்தை கைகளை விரித்து வடக்குமலையுச்சிகளை நோக்கி "தேவர்களே, கின்னரரே" என்று கூவி அழுவான். பிறர் அவனைச் சூழ்ந்து

கூச்சலிட்டு வாழ்த்தி கொண்டாடுவார்கள். அன்று அவன் ஒரு கொழுத்த கன்றை அறுத்தாகவேண்டும். பச்சைமணிவிழிகள் அமைந்தவர்கள் மட்டுமே அக்குலங்களில் உயர்ந்தோர் என்று கொள்ளப்பட்டனர். அவர்களுக்கே மன்றமைத்து சொல்லுசாவும் தகுதி இருந்தது. தாங்கள் கின்னரகுருதிகொண்டவர்கள் என்பதை காட்டும்பொருட்டு அவர்கள் அனைவரும் தங்கள் தலையணிக்குமேல் வெண்ணிற நாரையிறகொன்றை சூடியிருப்பார்கள். குடித்தலைவர்கள் கவரிமான்மயிர் குச்சத்தை அணிந்திருப்பார்கள்.

அவர்கள் அனைவரும் கடலோரத்தின் பறக்கும் மலைகளில்தான் முன்பு வாழ்ந்துவந்தனர் என்று அவர்களின் குலக்கதைகள் கூறின. ஊர்ணநாபன் என்னும் அரக்கனின் வழிவந்தவர்கள் அவர்கள். பெருவயிற்றிலிருந்து எழுந்த எட்டு கைகள் கொண்ட சிலந்தி வடிவன் அவன். வயிற்றில் விழிகொண்டவன். பறக்கும் மலைகளின் அரசியான மகாசிகையின் நடுவே இருந்த உக்ரஸ்தூபம் என்னும் குன்றின்மேல் அவன் வாழ்ந்தான். பறக்கும் மலைகளில் எங்கிருந்தாலும் அவனை காணமுடிந்தது. பறக்கும் மலைகளையும் அவற்றுக்குக் கீழே அலையடித்த கடலையும் அவன் தன் திசையறியும் பெருவிழிகளால் நோக்கிக்கொண்டிருந்தான். தன் உடலில் இருந்து பல்லாயிரம் வெள்ளிச் சரடுகளை நீட்டி மலைகள் அனைத்தையும் தன்னுடன் இணைத்துக்கொண்டிருந்தான்.

அடங்காப்பெரும்பசி கொண்டிருந்த அவன் தன்னை ஊட்டிப்புரக்கும் குடியொன்றை அமைக்கும்பொருட்டு மலைப்பாறைகளில் ஒட்டியிருந்த சிப்பிகளின் வாயைத்திறந்து அதற்குள் தன் விரல்நுனியில்

எழுந்த எச்சில்பசையை துளித்தான். அவை கருவுற்றுப் பிறந்த மைந்தர்கள் பெருகி அவன் குடியென்றாயினர். அவர்களுக்கு சூக்தர் என்று பெயர் அமைந்தது. அவர்கள் அனைவரையும் அவன் தன் நுண்வலையால் பிணைத்திருந்தான். அவர்கள் எங்கு சென்றாலும் எவருடனிருந்தாலும் அவனுடைய வலைநுனியில்தான் இருந்தனர். அவர்களின் அசைவுகளை அவன் அறிந்தான். அவர்களின் எண்ணங்களையும் அச்சரடினூடாக அவன் உணர்ந்துகொண்டிருந்தான். வலைச்சரடு அவர்களுக்கு ஆணையிட்டது, கண்காணித்தது, எல்லையமைத்தது.

சூக்தர் கடற்பாறைகளில் தொற்றிச் சென்று மீனும் சிப்பியும் பொறுக்கியும் மலையுச்சிகளில் தேனும் ஊனும் திரட்டியும் உணவு கொண்டுவந்து தங்கள் குடிமூதாதையான ஊர்ணநாபனுக்கு படைத்தனர். அவன் உண்டதுபோக மிச்சிலை தாங்கள் உண்டனர். எட்டு கைகளில் இரண்டு கைகளால் இடைவெளியில்லாமல் அவன் உண்டான். உணவு போதாமலானால் அவன் அவர்களையே பிடித்து உண்டான். அவனை தெய்வமென்றும் மூதாதை என்றும் கொடியபகை என்றும் அக்குடி எண்ணியது. அவர்களின் குடிமன்றுகளில் அவன் உருவை பாறையில் பொறித்து வழிபட்டனர். மைந்தர் பிறந்ததும் கொண்டுசென்று அவன் காலடியில் வைத்து வணங்கி மீண்டனர். கனவுகளில் அவன் பசைச்சரடை இழுத்து அவர்களை அருகணையச்செய்து தூக்கி உண்பதைக் கண்டு அலறி விழித்து உடல்நடுங்கினர்.

ஒருமுறை விண்ணில் ஒளிவடிவாகச் சென்ற தேர் ஒன்றை ஊர்ணநாபன் கண்டான். பசிகொண்டிருந்த அவனுக்கு ஏழு வெண்குதிரைகள் இழுக்க உருண்டு சென்ற அது ஒரு பெரும்

பூச்சி என்று தோன்றியது. அவன் தன் வெள்ளிச்சரடை வீசி அத்தேரைப்பற்றி இழுத்தான். அதிலிருந்தவன் அனல்வடிவ உடல்கொண்டிருந்தான். தேர்ச்சகடங்கள் அசைவிழக்க அவன் திரும்பி நோக்கி “யாரது?” என்றான். “நான் ஊர்ணநாபன். எனக்கு நீ இன்று இரை.” அவன் புன்னகைத்து “அரக்கனே, நான் விண்ணாளும் தேவன். இடிமின்னல்களை ஆள்பவன். நீ சிறியவன், என்னை விடு” என்றான்.

“பசியே எனக்கு விழி” என்றபடி ஊர்ணநாபன் அவனைப் பிடித்து இழுக்க அவன் சினந்து தன் வாளை உருவினான். மலைகள் அதிரும்படி இடி முழங்கியது. எட்டுநாக்குகளுடன் மின்னல் சுழன்றெழுந்தது. மின்வாளால் விண்ணரசன் ஊர்ணநாபனின் எட்டு கைகளையும் வெட்டினான். நீலக்குருதி பீரிட்டு வழிய அவன் மகாசிகையின் உச்சிப்பீடத்தில் விழுந்தான். தன் வலைச்சரடுகளை வீசி மலைமேல் தொற்றிக்கொண்டான். சினம் பெருக பெருங்குரலில் கூவியபடி அவன் பறக்கும் மலையை சிறகடித்தெழச்செய்து விண்ணரசன்மேல் போர்கொண்டு சென்றான். அவன் சரடால் பிணைக்கப்பட்ட அனைத்து மலைகளும் சிறகுவீசி அவனுக்குப் பின்னால் நிரைகொண்டு சென்றன.

“எதிரியை தாக்குங்கள்” என ஊர்ணநாபன் ஆணையிட்டான். அவன் வலைச்சரடுகளினூடாக அவ்வாணை அத்தனை சூக்தர்களையும் சென்றடைந்தது. அவர்கள் சிப்பிநஞ்சு பூசிய வாளிகளை எய்து விண்ணவனுடன் போரிட்டனர். ஊர்ணநாபன் தன் வயிற்றில் ஆறாப்பசியாகக் கொதித்த நஞ்சை விண்ணவன் மேல் உமிழ்ந்தான். விண்ணரசனின் ஏழு புரவிகளில் ஒன்று கருகி புகைந்து அலறிவிழுந்தது. அவன் தேர்ப்பாகனின் இடக்கரம் கரியாகியது. அதுவரை விளையாட்டு எண்ணம்

கொண்டிருந்த விண்கோ இடியோசை எழுந்து முகில்கணங்கள் அதிர ஊர்ணநாபன் அமர்ந்திருந்த மலைகளின் சிறகுகளை வெட்டினான். அவை அதிர்வோசையுடன் கடலில் விழுந்தன. நீர்சிதற அலைவிரிய மூழ்கி மறைந்தன.

மலைகளிலிருந்த ஊர்ணநாபனை வானரசன் எட்டு துண்டுகளாக வெட்டினான். எட்டுதிசைகளிலாக அவன் உடல் சிதறி கடலில் விழுந்தது. ஊர்ணநாபனின் உடலுடன் தங்களைப் பிணைத்திருந்த சரடுகள் அறுந்து சூக்தர்கள் கடலில் விழுந்தனர். வாழ்நாளெல்லாம் அறுபடாச் சரடால் ஆட்டுவிக்கப்பட்ட அவர்களால் அதன் தொடர்பில்லாமல் தனித்துச்செயல்பட இயலவில்லை. நீச்சலறிந்தவர்கள்கூட அலைகளில் மூழ்கித் தவித்தனர். அலைகளால் அள்ளி கரைகளில் ஒதுக்கப்பட்ட சூக்தர் ஒருவரை ஒருவர் நோக்கி கதறினர். ஒரு முதுசூக்தர் தன் மைந்தனின் உடலில் அறுபட்டு நீண்டிருந்த சரடுடன் தன் சரடை பிணைத்தார். அதைக்கண்ட பிற சூக்தர்கள் தங்கள் உடலில் எஞ்சியிருந்த சரடுகளை ஒன்றுடன் ஒன்று பிணைத்து மீண்டும் ஒரு வலையென்றாயினர். அவ்வலை அவர்களில் எவரும் தனியாக மூழ்காது செய்தது. கரையணைந்தவர்கள் பிறரை இழுத்து கரைசேர்த்தனர்.

தவளைமுட்டையென வெள்ளிச்சரடால் இணைக்கப்பட்ட சூக்தர்களின் திரள் எங்கு செல்வதென்றறியாமல் கரையில் நின்று ஒருவரோடொருவர் முட்டி தன்னுள் தானே ததும்பி அலைக்கழிந்தது. வான் நோக்கி கைகளை விரித்து “எந்தையே! எங்கள் அரசே!” என ஊர்ணநாபனை எண்ணி அலறி அழுதது. “எண்கரத்தோய், வயிற்றுவிழியுடையோய்! எழுக, எங்கள் தேவனே! உங்கள் குடிகாக்க எழுக, வேந்தே!” என்று கூவி

மன்றாடியது. அலைநக்கிய கரையிலும் பாறைகளிலும் நீலநிறப்பெருக்காக ஊர்ணநாபனின் நஞ்சு வழிந்துகிடப்பதைக் கண்டனர். மரங்களின் இலைகளில்இருந்து கொழுத்த துளிகளாக அது சொட்டியது. அவர்கள் அதை அள்ளி தங்கள் உடலெங்கும் பூசிக்கொண்டு கதறி அழுதனர். "எளியோருக்கு இனி எவர்? எங்கள் குடிகாக்கும் கோல் இனி எது?" என நெஞ்சிலறைந்து முறைகூட்டினர்.

அவர்கள் மேல் வானிறைவனின் சினம் இடியோசையாக இறங்கியது. மின்பட்டு பிளந்த பாறைகள் உருண்டுவந்து அவர்களை கொன்றன. இறந்தவர்களின் உடலில் இருந்து சரடுகளை அறுத்தெடுக்கையில் அவர்கள் துயர்மீதூற தலையில் அறைந்துகொண்டு விண்நோக்கி பழிகூவி அழுதனர். அறுபட்ட சரடின் நுனியை தங்கள் கைகளில் ஏந்தி அதை நோக்கி நோக்கி ஏங்கி கண்ணீர்விட்டபடி விலகிச்சென்றனர். பின்னர் அந்த அறுநுனிகளை பிற அறுநுனிகளுடன் பிணைத்துக்கொண்டு ஆறுதலடைந்தனர். அறுபடும்தோறும் பிணைக்கவே அவர்களின் சரடுகளின் முடிச்சுகள் மேலும் மேலும் பெருகின. ஆயிரம் கால்கள் கொண்ட ஒற்றைவிலங்கென அவர்கள் நடந்தனர்.

இந்திரனின் வஞ்சத்தை மீறி எஞ்சியவர்கள் வடக்கே சென்று புறக்குடிகள் வாழும் சிற்றூர்களை அடைந்தனர். சென்ற இடங்களில் எல்லாம் அவர்களின் உடலில் இருந்து சொட்டிய நஞ்சு ஊறி மக்களும் கால்நடைகளும் உயிர்துறந்தனர். அவர்களின் காலடிபட்ட செடிகள் கருகின. ஒற்றைத்திரளென வந்த அம்மக்களை கைகளும் கால்களும் தலைகளும் பெருகியிருக்க ஊர்ந்து வரும் கடல்வாழ்பெருவிலங்கு என்றே தொல்குடிகள் எண்ணின. நாகர்களும் காடவரும் அவர்களை

தங்கள் நிலங்களுக்குள் புகாமல் அம்புகளாலும் வேல்களாலும் கற்களாலும் துரத்தி அடித்தனர். அவர்கள் கடக்காதபடி ஆறுகளின் மேல் அமைந்த பாலங்களை அழித்தனர். அவர்கள் சென்ற காடுகளைச் சூழ்ந்து நெருப்பிட்டனர். அவர்கள் துயில்கையில் சூழ்ந்து வந்து அம்புகளால் வேட்டையாடினர்.

இறந்தவர்களை அறுத்திட்டுக்கொண்டு மேலும் முடிச்சிட்டு இறுகியவர்களாக சூக்தர்கள் தொடர்ந்து வடக்குமலை ஏறிச்சென்றனர். குளிரில் அவர்களின் முதியோரும் இளையோரும் இறந்தனர். மலைப்பாறை உருண்டும் காலிடறி ஆழத்தில் உதிர்ந்தும் ஒவ்வொருநாளும் இறப்பு நிகழ்ந்தது. ஆனால் வேறெங்கும் செல்ல திசை திறந்திருக்கவில்லை. சிப்பிகளையும் நத்தைகளையும் உண்ணும் வழக்கமிருந்தமையால் அவர்களுக்கு எப்போதும் உணவு கிடைத்தது. அவர்கள் மறைந்தும் மூழ்கியும் செல்ல சதுப்புநிலங்களும் மலைப்புதர்ச்சரிவுகளும் உதவின.

சூக்தர் ஒவ்வொருவரும் விழிகளை மூடி தங்கள் சரடின் மறுமுனையில் ஊர்ணநாபனே இருப்பதாக எண்ணிக்கொண்டனர். அவ்வெண்ணம் அவர்களின் அச்சத்தை அகற்றி ஊக்கமளித்தது. பின்னர் விழிதிறந்து அம்முனையில் தங்கள் குடித்தொகை இருப்பதைக் கண்டு ஏமாற்றம் கொண்டனர். நாளடைவில் அக்குடித்தொகையே ஊர்ணநாபன் எனத் தோன்றலாயிற்று. அச்சரடினூடாக அவர்கள் தங்கள் குடித்தொகையின் எண்ணங்களையும் உணர்வுகளையும் சொல்லின்றி அறிந்துகொண்டனர். எண்ணியிருக்கையில் எவரோ ஒருவர் “எந்தையே” என ஊர்ணநாபனை எண்ணி விழிநீர் சொட்டி அழுதபோது அக்குடியே விம்மலோசைத் தொகை எழ சேர்ந்து கலுழ்ந்தது.

பதினெட்டு மாதங்களுக்குப்பின் மலைநாகர்களால் துரத்தப்பட்டு தப்பிச்சென்று எஞ்சிய நாற்பத்தெட்டு ஆண்களும் முப்பத்தேழு பெண்களும் எழுபத்தொரு குழந்தைகளும் ஒரு பனிக்குகைக்குள் உடலோடு உடல் ஒட்டி ஒற்றைச்சரடால் பின்னப்பட்டு கூட்டுக்குள் பட்டுப்புழு என ஒண்டி படுத்திருந்தபோது கின்னரரை கண்டனர். அவர்கள் பலநாள் உணவுண்டிருக்கவில்லை. குளிரில் அவர்களின் உடல் நடுங்கி பின் அடங்கி அனல்போல் எரியலாயிற்று. உலர்ந்த உதடுகளும் ஒளிவறண்ட விழிகளுமாக வெட்டிக்குவித்திட்டு மட்கும் வாழைத்தண்டுகள்போல ஒற்றைத்தசைக்குவியலாக அவர்கள் கிடந்தனர். அப்போது ஒரு சிறுவன் அக்குகைவாயிலை சுட்டிக்காட்டினான். இன்னொருவன் திரும்பிநோக்கினான். வெண்ணிற ஒளியாக ஏழு கின்னரர்கள் மெல்ல அவர்களை நோக்கி வந்தனர்.

உடல் விதிர்க்க அவர்கள் அசைந்து விலக முயன்றனர். பின்னர் அறியாது கைகூப்பி கண்மூடினர். “எந்தையே எந்தையே” என ஊர்ணநாபனை எண்ணி உளம் கரைந்தனர். அந்த அச்சத்தின் விசை தாளமுடியாமல் அவர்களின் எஞ்சிய உயிர்விசையும் அழிந்தது. பின்னர் அவர்கள் விழிதிறந்தபோது கின்னர உலகில் இருந்தனர். வெண்ணிற ஒளியாலான சிறகுகளுடன் அவர்களைச் சூழ்ந்து பறந்த கின்னரர்கள் அன்னைமுலைப்பாலென இனித்த அமுதை அளித்தனர். கருக்குழி என வெம்மைகொண்ட ஆடைகளை போர்த்தினர். நீர்த்துளி நீரிலுதிரும் இசையில் இன்சொல் கூறினர். அவர்களின் கனிந்த விழிகள் விண்மீன்கள்போல அவர்களுக்குமேல் மின்னின. புன்னகைகள் மூழ்கிச்செல்லும் கடலாழத்தில் வளைந்து ஒளிகாட்டிச் செல்லும் மீன்களைப்போல எழுந்தமைந்தன.

அங்கே பன்னிருநாட்கள் வாழ்ந்தபின்னர் அவர்கள் மலைச்சரிவில் இருந்த இனியசோலை ஒன்றில் விழித்தெழுந்தனர். அங்கே வெம்மை ஊறும் ஏழு ஊற்றுகள் இருந்தன. அதைச் சூழ்ந்திருந்த மரங்களில் கனிகள் செறிந்திருந்தன. விழித்தெழுந்ததும் அவர்கள் தங்களிடம் என்ன நிகழ்ந்திருக்கிறதென எண்ணி வியந்தனர். சற்று கழித்தே தங்கள் உடலைப் பின்னிய சரடு முற்றிலும் அறுபட்டிருப்பதை உணர்ந்தனர். கனவில் கின்னரர்கள் தங்கள் சரடுகளை வெள்ளிக்கத்திகளால் வெட்டுவதைக் கண்டதை நினைவுகூர்ந்தனர். அஞ்சி நடுங்கி ஒருவரை ஒருவர் கைகளாலும் கால்களாலும் தழுவிக்கொண்டனர். அழுது அரற்றியபடி ஒற்றை உடற்திரளாக அங்கே கிடந்தனர்.

ஆனால் நெடுநேரம் அப்படி இருக்கமுடியவில்லை. பசிக்கையில் கைகளை விடுத்து அவர்கள் பிரிந்தாக வேண்டியிருந்தது. உணவுண்டபோது முதல்முறையாக ஓர் இளைஞன் அவ்வுணவும் தானும் மட்டுமே தனித்திருக்கும் உணர்வை அடைந்தான். அது அச்சமா திகைப்பா இன்பமா என்று அறியாமல் தவித்தான். அத்துடன் அந்த உணர்வையும் தான் மட்டுமே அடைவதை அறிந்தான். திரும்பி ஆங்காங்கே கனிகளைப் பறித்து உண்டுகொண்டிருந்த தன் குடியினரைக் கண்டபோது அவர்கள் எவருக்கும் அவ்வுணர்வுகள் தெரியவில்லை என்று அறிந்து ஒரு துடிப்பை அடைந்தான். இனி அந்த இன்பத்தை ஒருபோதும் தன்னால் விடமுடியாதென்று அப்போது உணர்ந்தான்.

அவர்கள் செய்யவேண்டியவை அனைத்தும் அவர்களின் குலமூத்தாரின் கனவில் சொல்லப்பட்டிருந்தன. அவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் உற்றாருடன் தனித்தனியாக தங்கவும்

தங்கள் உணவை தாங்களே தேடி உண்ணவும் விழைந்தனர். எனவே மென்பாறைகளைக் குடைந்து தனித்தனியாக சிறு இல்லங்களை அமைத்தனர். இல்லங்கள் இணைந்து அச்சுனைக்கரையில் சிற்றூர் ஒன்று எழுந்தது. அதுவே அவர்களின் முதற்குடி. அச்சிற்றூர் சூடகம் என அழைக்கப்பட்டது. அக்குடியிலிருந்து மேலும் மேலுமெனப்பெருகி ஆயிரத்தெட்டு ஊர்களாயின.

அவர்களின் உள்ளிருந்து சுனையாழத்து தலைப்பிரட்டைகள் என சொற்கள் வால்துடிக்க விழிதெறிக்க எழுந்து வந்தபடியே இருந்தன. முன்பு சொல்லாமல் உணர்ந்தவை அனைத்தையும் சொல்லி தெரிவிக்கவேண்டியிருந்தது. ஒரு சொல்லின் போதாமை பிறிதொரு சொல்லை உருவாக்கியது. சொல்பெருகி அவர்களின் மொழி செறிந்தது. சொல்லிச்சொல்லி நிறையாதபோது சொல்லலில் திறம்கொண்ட பாணர்கள் பிறந்துவந்தனர். சொல்கடந்து சொல்லும் பூசகர்கள் உருவாயினர்.

அவர்களின் கருவில் கின்னரர்களின் பச்சைவிழிகளும் பளிங்குநிறமும் கொண்ட குழவிகள் பிறந்தன. அவர்கள் தங்களை கின்னரஜன்யர் என்று சொல்லிக்கொண்டனர். அவர்களைத் தேடி ஒவ்வொரு கோடையிலும் கின்னரர்கள் மலையிறங்கி வந்தனர். கின்னரர்களுக்கும் மானுடர்களுக்கும் நடுவே தொடர்பாளர்கள் அவர்களே. கின்னரர்களிடம் பேசும் மொழி அவர்களிடம் மட்டுமே இருந்தது. தங்களை பிறர் பார்ப்பதை கின்னரர் விரும்பியதுமில்லை. கின்னரர் என எவருமில்லை என்றும் அது அக்குடிகளின் பாணர்களின் கதைகளில் வாழும் தேவர்களே என்றும் பீதவணிகர்களில் சிலர் எண்ணினர்.

அருமணிகள் கிடைக்கும் நிலத்தை பிறர் அறியாது காப்பதற்கு உருவாக்கப்பட்ட கதைகள் அவை என்றனர்.

[ 21 ]

கின்னரஜன்யரின் மலைச்சிற்றூர்கள் அனைத்தும் உச்சிப்பாறைமேல் கழுகுகள் கட்டிய கூடுகள்போல முகில்சூழ அமைந்திருந்தன. மலைப்பாறைகளை உருட்டி தங்கள் ஊர்களைச் சுற்றி காவலமைத்திருந்தனர். விரும்பாதவர்கள் மலையேறி வரக்கண்டால் அவர்களில் பத்துவயதான சிறுவர்களேகூட அந்தப் பாறைகளை உருட்டி கீழே செலுத்திவிடமுடியும். பன்னிருநாட்கள் பெருமழை என நில்லாது பொழியுமளவுக்கு அவர்களிடம் பாறைகள் இருந்தன. கோடைகாலத்தில் மலையாறுகளை வழிதிருப்பி படையென்றாக்கி செலுத்தவும் குளிர்காலத்தில் பனிப்பாளங்களைப் பிளந்து இறக்கவும் அவர்களால் இயன்றது.

ஆகவே அங்கே தொல்பழங்காலத்திற்குப்பின் எதிரிகள் என எவரும் அணுகியதே இல்லை. ஆயினும் அவர்கள் தெய்வச்சடங்குபோல ஒவ்வொரு ஆண்டும் காவல்பாறைகளை அமைத்து பூசனை செய்துவந்தனர். கோடைமுடிவில் பாறைகளை அரணமைக்கும் நாளில் உயிர்ப்பலி கொடுத்து இறுதிப்பாறையாக அமைவதற்கு குருதியாட்டு நிகழ்த்தி எடுத்துவைப்பார்கள். அப்போது குலப்பெண்டிர் குரவையிட வீரர்கள் தங்கள் வேல்களை வானுக்குத்தூக்கி போர்க்குரலெழுப்புவர். அதன்பின்னர் அடுத்தகோடைகாலம் வரை அவ்வரணுக்கு அப்பால் எவரும் செல்ல அவர்கள் ஒப்புவதில்லை. கோடையின் முதல் இரு நிலவுகள்வரை கின்னரர்கள் வந்திறங்கி மீளும் பொழுது. அப்போது

அம்மலைச்சரிவை அணுகும் எவரையும் நோக்கியதுமே கொல்ல அவர்கள் சித்தமாக இருப்பார்கள்.

கோடையின் மூன்றாவது நிலவுப்பொழுது தொடங்கும் அன்று மீண்டும் குருதியாட்டு நிகழ்த்தி அந்த இறுதிப்பாறையை முதலில் பெயர்த்தெடுப்பார்கள். குரவையும் போர்க்குரல்களும் ஒலிக்க வழிதிறந்து வாயிலில் உயரமான மரத்தின்மேல் மூங்கில் கட்டப்பட்டு இளஞ்செந்நிறக் கொடி ஏற்றப்படும். அங்கே கொடி ஏறுவதை நோக்கிச் சொல்ல கீழே பாறைகளின் மேல் பீதவணிகர்கள் ஏவலரை நிறுத்தியிருப்பார்கள். கொடி ஏறிய செய்தி முழவுகள் வழியாக அடிநிலத்துச் சிற்றூர்களில் பரவும். அங்கே பலநாட்களுக்கு முன்னரே வந்து அத்திரிகளை அவிழ்த்துக்கட்டிவிட்டு மூங்கில்தட்டி கூட்டியமைத்த பொதிக்குடில்களில் பொருட்களை சேர்த்துவைத்து சிறுகுடில்களில் தங்கி உண்டும் குடித்தும் பாட்டுகேட்டும் காத்திருக்கும் வணிகர்கள் வாழ்த்துக்கூச்சல்களும் சிரிப்புகளுமாக கிளம்புவார்கள்.

அத்திரிகள் பொதிகளின் எடை திரண்டமைந்த குளம்புகள் ஓசையுடன் உருண்டு இறங்கும் உருளைக்கற்கள் பரவிய மலைப்பாதையில் மிதிபட்டு ஒலியெழுப்ப எறும்புநிரை என வளைந்து மேலேறிச்சென்று அங்காடிகளை அடைந்தன. ஒவ்வொரு அங்காடிக்கும் வெவ்வேறு நிரைகள் சென்றன. கீழே சிற்றூர்களில் சிறுவர்கள் தங்கள் இல்லக்கூரைகளின் மேல் ஏறிநின்று அந்த நிரைகளை நோக்கி கூவி கைவீசினர். மலையேறுபவர்களுடன் சென்று கின்னரஜன்யரின் கதையைப் பாடிய சூதர்களின் முழவொலி அவ்வப்போது சரிவிறங்கிச் சுழலும் காற்றில் சிதர்களாக வந்து செவிதொட்டுச் சென்றது.

கின்னரஜன்யர்களின் ஏழு சிற்றூர்களின் நடுவே அமைந்திருந்தது தவளம் என்னும் சந்தை. அது குறும்பாறைகள் அமைந்த மலைச்சரிவு. அங்கே வளர்ந்திருந்த முட்புதர்களை வெட்டி அகற்றியிருந்தனர். ஈரப்புதுமண்ணில் மண்புழுக்கள் நெளிந்துகொண்டிருந்தன. அவர்கள் செல்லும்போதுகூட ஓர் எல்லையில் புதர்களை வெட்டி அகற்றும் வேலை நடந்துகொண்டிருந்தது. சந்தைமுற்றத்தின் வடபுலத்தில் வட்டமாக அமைந்திருந்த சோலைக்குள் மரங்களில் கட்டி இழுத்து அறையப்பட்ட தோல்கூடாரங்களில் சந்தைக்கென வந்த கின்னரகுடியின் வணிகர்கள் வந்து தங்கியிருந்தனர். தென்வளைவில் பீதவணிகர்களுக்கான இடம் ஒருக்கப்பட்டிருந்தது.

முதல்பீதர்குழு உள்ளே நுழைந்தபோது கின்னரஜன்யர்களின் பெண்களும் குழந்தைகளும் வெண்பனித்துருவல் போன்ற ஆடைகளையும் தலையணிகளையும் அணிந்து கழிகளில் செந்நிற மலர்க்கொத்துகளைக் கட்டியபடி கூடிநின்று கைவீசி இன்குரலெழுப்பி வரவேற்றனர். பூசகர்கள் மூங்கில்குழாய்களையும் காட்டுமாட்டுக் கொம்புகளையும் ஊதி முழவுகளை முழக்கி இசையெழுப்பினர். பீதவணிகர்கள் குழந்தைகளுக்காக இனிப்புகளையும் பெண்களுக்காக அணிப்பொருட்களையும் கொண்டுவந்திருந்தனர். முதியபீதர்கள் அவற்றை நீட்டியபடி சிலந்திவலையென முகம் சுருங்க சிரித்துக்கொண்டு அணுகினர்.

மூத்தகுடித்தலைவர் கையசைப்பதுவரை காத்து நின்ற குழந்தைகள் பாய்ந்துவந்து அவற்றை வாங்கிக்கொண்டு கூச்சலிட்டனர். பெண்கள் சிறுமிகளை உந்தி முன்னால் அனுப்பி பனையோலையால் செய்யப்பட்ட

தலைமலர்களையும் சிப்பிகளாலான காதணிகளையும் சங்குவளையல்களையும் பெற்றுக்கொண்டனர். கிளர்ச்சியுடன் அவற்றை எடுத்துக்கொண்டு ஓடி சூழ்ந்து நின்று வியப்பொலி எழுப்பி நோக்கி நோக்கி வியந்தனர். சிறுபூசல்களும் சிரிப்பொலிகளும் எழுந்தன. பனிக்காளையின் வெண்மயிரை முடியெனச் சூடிய முதுகுடித்தலைவர் வந்து தன் கைக்கோலைத் தூக்கி அவர்களை வாழ்த்தி வணிக ஒப்புதல் அளித்ததும் அவர்களின் முதல் அத்திரி எல்லைகடந்து அங்காடிமுற்றத்திற்குள் நுழைந்தது.

அத்திரிகளை தறியறைந்து நிறுத்தி பொதியவிழ்த்து அடுக்கி கோல்நாட்டி கூடாரங்களை எழுப்பினர் வணிகர். அர்ஜுனன் தன் வில்லை அருகே வைத்துவிட்டு பணியாட்களுடன் இணைந்து கூடாரங்களைக் கட்டினான். கோடையென்றாலும் நிலமாந்தருக்கு அங்கே கூதிர் காரென குளிர்ந்தது. விழிகூச வழிந்துகிடந்த வெயிலும்கூட குளிர்ந்து விரைத்திருந்தது. பாறைகள் குளிரில் உடல்சிலிர்ப்பவை போலிருந்தன. அருகே ஓடிய ஓடையிலிருந்து மரக்குடைவுக் கலத்தில் நீரள்ளிக் கொண்டுவந்து தொட்டியை நிறைத்தான். வணிகர்கள் நீர் அள்ளிக் குடித்துக்கொண்டிருந்தனர். ஏவலர் அத்திரிகளை நீர் அருந்த கொண்டுசென்றனர்.

அர்ஜுனன் அக்குடில்களில் ஒன்றை அணுகி அடுப்புமூட்ட அனல் கேட்டான். புதிய தலையணி அணிந்த இளம்பெண் ஒருத்தி உள்ளிருந்து சிறுகலத்தில் அனல்கொண்டுவந்து அவனிடம் தந்தாள். அவள் விழிகள் பச்சைமணிக்கல் போலிருந்தன. வெண்பனிபோன்ற நிறம். குருதிச்செம்மைகொண்ட இதழ்கள். அவனைக் கண்டதும் விழிகள் சுருங்க “உங்கள் உடலெங்கும் ஏன் இத்தனை

வடுக்கள்?" என்றாள். "அவை போரிலடைந்த புண்கள். நான் ஒரு வில்லவன்" என்றான்.

"ஆம், கதைகளில் கீழ்நிலத்தின் போர்வில்லவர்களைப்பற்றி கேட்டிருக்கிறேன்" என்று அவள் சொன்னாள். பின்னர் வாய்பொத்திச் சிரித்தாள். அவன் "என்ன?" என்றான். இல்லை என தலையசைத்தாள். "சொல்" என்றான் அர்ஜுனன். "இங்கே செல்குறி பதித்துச் செல்லும் சிலமரங்களுண்டு. அவைதான் இப்படி உடலெங்கும் வடுக்களுடன் இருக்கும்" என்றாள். "இவை செல்குறிகளே" என்றான் அர்ஜுனன் அனலுடன் திரும்பியபடி. "யார் பதித்த குறிகள்?" என்றாள். "பலர்..." என்றபின் அவன் புன்னகைத்து திரும்பி நடந்தான்.

அவன் கூடாரத்திற்குச் சென்று அடுமனைப் பீதனிடம் அனலை கொடுத்தான். அவனுக்குப் பின்னால் வந்த மூத்தபீதர் "வில்லவரே, பெண்களின் உள்ளம் எல்லைமீற விழைவது. ஏனென்றால் அது உயிரின் முதல்விழைவு. நீர்ப்பரப்பின் விளிம்பு போன்றது அவர்களின் காமம். விரிந்துபரவுவதே அதன் வழி. ஆனால் இம்மக்கள் நிலத்தோரை விரும்புவதில்லை. கின்னரர் அன்றி பிறர்குருதி இவர்களுக்குள் கலக்கலாகாதென்னும் நெறி கொண்டவர்கள்" என்றார்.

"நான் எல்லை மீறவில்லையே!" என்றான் அர்ஜுனன். "ஆம், ஆனால் அதற்கான வாய்ப்பு உண்டு என அவர்களில் எவருக்குத் தோன்றினாலும் நாம் எவரும் மலையிறங்க முடியாது" என்றார் பீதர். அர்ஜுனன் "நான் எதையும் பிழையாகக் காணவில்லை. அவள் கேட்டது ஆர்வம்கொள்ளும் சிறுமியின் வினாக்களையே" என்றான். "ஆம், ஆர்வமாகவே அது தொடங்கும். ஒரு பெண் எதன்பொருட்டு ஆணின் உடலை நோக்கினாலும் அது ஒன்றின்பொருட்டென்றே ஆகும்.

அவளிடமிருந்து விலகிக்கொள்ளுங்கள். இது என் ஆணை!” என்றார் பீதர்.

# கிராதம் - 74

[ 22 ]

பன்னிருநாட்கள் அர்ஜுனன் கின்னரஜன்யர்களின் மலைச்சிற்றூர்களில் தங்கினான். அவன் காவலனாக அமைந்த வணிகக்குழு ஏழாகப் பிரிந்து ஏழு அங்காடிகளுக்கும் சென்றது. கின்னரர் கொண்டுவந்து அளித்துவிட்டுப்போன அருமணிகளில் சிறந்தவற்றை தாங்களே கொள்ளவேண்டுமென்ற போட்டி வணிகர்களிடையே இருந்தது. ஆகவே அவர்கள் கிளைகளாகப் பிரிந்து அத்தனை அங்காடிகளையும் நிறைத்துக்கொண்டனர். அத்தனை அங்காடிகளிலிருந்தும் கிளம்பிவந்து ஓரிடத்தில் சந்தித்து செய்தி மாற்றிக்கொண்டனர்.

கின்னரஜன்யர்களுக்கு அவற்றின் இயல்போ மதிப்போ தெரிந்திருக்கவில்லை. ஒளிவிடும் கற்கள் அனைத்தையும் அவர்கள் கொண்டுவந்து நீட்டினர். அவற்றில் பெரும்பான்மையும் எளிய கற்கள். ஆனால் அவற்றை மதிப்பற்றவை என்று சொல்லி விலக்கினால் அவர்கள் அதைப்போன்றவைதான் என எண்ணி அருமணிகளையும் வீசிவிடக்கூடும் என்பதனால் எல்லா கற்களையும் ஒரே விலைக்கு அவர்களிடம் பெற்றுக்கொண்டனர் வணிகர். அவர்களின் ஈட்டல்கள் அருமணிகளில் மட்டுமே இருந்தன. ஒரு அருமணி நூறு எளியகற்களுக்கான இழப்பை ஈடுசெய்தது.

அருமணிகள் கிடைத்ததும் அவற்றை பாலில் இட்டு பால்நிறம் மாறுவதைக்கொண்டும், சிறுபேழைக்குள் இட்டு மூடி

துளைவழியாக நோக்கி உள்ளே ஒளி எஞ்சுவதைக்கொண்டும் ஒளியோட்டத்தை மதிப்பிட்டனர். சிறிய மரப்பெட்டிக்குள் அவற்றை வைத்து ஊசித்துளைவழியாகச் செல்லும் ஒற்றை ஒளிக்கீற்றை அதன்மேல் வீழ்த்தி பிறிதொரு துளைமேல் விழிகளை அழுத்திவைத்து நோக்கி அவற்றின் உள்நீரோட்டத்தை கணித்தனர். பூனைக்கண்போல எருமையின் உள்விழிபோல பனித்துளிபோல அனல்பொறிபோல உள்ளிருந்தும் வெளியிலிருந்தும் வண்ணங்கள் கொண்ட மணிகள்.

மலையேறிவந்த நூற்றுக்கும் மேற்பட்ட பீதர்குழுக்கள் அனைத்துக்குமே அருமணிகள் வாய்த்தன. ஆனால் சிலவற்றுக்கு மட்டுமே தெய்வவிழிகளைப்போன்ற மணிகள் அமைந்தன. "அருமணியின் மதிப்பு என்பது அதைப்போன்ற பிறிதொன்றில்லை என்பதனால் உருவாவதே. தெய்வத்தன்மை என்பது பிறிதொன்றிலாமை மட்டுமே" என்று பாணன் சொன்னான். "அரியசொல்போல" என்று முதியபீதர் சேர்த்துக்கொண்டார். "சொல்வதற்குரிய தருணத்தில் சொல்வதற்குரிய முறையில் சொல்லப்பட்ட சொல் முடிவின்மையை ஒளியென தன்னுள் சுருட்டிக்கொண்டது. அது கூழாங்கற்கள் நடுவே அருமணி."

சிறந்த கல் கிடைத்த பீதர்குழு அதை அறிவிக்கும்பொருட்டு தங்கள் சிறுகடைக்குமேல் அனலுமிழும் முதலைநாகத்தின் கொடி ஒன்றை பறக்கவிட்டது. அதைக்கண்டதும் வணிகக்குழுக்களில் பாராட்டொலிகள் எழுந்தன. சிறுவணிகர்கள் வந்து அந்த அருமணிகொண்டவனிடம் தங்களுக்கு அவன் அன்றைய உணவையும் குடியையும் அளிக்கவேண்டும் என கோரினர். அவனைச் சூழ்ந்துநின்று

அவன் குலத்தையும் வணிகக்குழுவையும் வாழ்த்தி கூவினர். பாணர் அந்த அருமணியைப்பற்றி அப்போதே கவிதை புனையத்தொடங்கினர். அதன் கதைகளை அவர்கள் காற்றினூடாக மொழியில் அள்ளி எடுத்து வைத்தனர்.

உச்சிப்பொழுது கடந்ததுமே மலைகளின்மேல் முகில்திரை சரிந்து இருண்டு மூடியது. குளிர்ந்த ஊசிகள் போன்ற நீர்த்துளிகள் காற்றில் வந்து அறைந்தன. கடைகளை மூடிவிட்டு தோல்கூடாரங்களுக்குள் அனல்சட்டிகளை வைத்துக்கொண்டு சூழ்ந்தமர்ந்து கிழங்குகளையும் ஊனையும் சுட்டுத்தின்றபடி தேறல் அருந்தினர். அதன்பின் அருமணிகளைப்பற்றியே பேசினர். அப்படியே விழுந்து துயின்று கனவுகண்டு எழுந்தமர்ந்து உளறி உடல்நடுங்கினர். "அருமணிகளுக்குக் காவலாக இரு தேவர்கள் உள்ளனர். பகற்காவலன் விழித்திருக்கையில் நமக்கு இனிய எண்ணங்களை அளிக்கிறான். இரவுக்காவலன் துயிலில்வந்து கொடுந்தோற்றம் காட்டி அச்சுறுத்துகிறான்" என்றனர் பாணர்.

அருமணிகளை கடல்வரை கொண்டுசென்று சேர்ப்பது பெரும்பாடு. அவர்களிடம் அருமணி இருக்குமென்பதை அனைவரும் அறிந்திருப்பர். வில்லவர்கள் சூழ சென்றாலும்கூட வழியெங்கிலும் கொள்ளையர்களை எதிர்கொள்ளவேண்டியிருக்கும். சரளமரத்தின் சிறுகொட்டையில் துளையிட்டு உள்ளே இருக்கும் பருப்பை அகற்றிவிட்டு அதில் அருமணிகளை இட்டு பசையிட்டு ஒட்டி பணியாட்களைக்கொண்டு விழுங்கச்செய்வார்கள். ஒவ்வொருநாளும் அவன் மலத்திலிருந்து அதை திரும்ப எடுத்து கழுவி இன்னொரு கொட்டைக்குள் இட்டு மீண்டும் விழுங்கச்செய்வார்கள்.

அருமணி எந்த ஏவலனின் குடலுக்குள் இருக்கிறதென அவ்வணிகக்குழுவிலேயே பிற ஏவலருக்கு தெரிந்திருக்காது. பிறரிடம் சொல்லாமலிருப்பதே அந்த ஏவலனின் உயிருக்கும் உறுதியளிப்பதென்பதனால் அவனும் பகிர்ந்துகொள்வதில்லை. வணிகக்குழுக்களைத் தாக்கும் கொள்ளையர் அவர்கள் அனைவரையும் கொன்று அத்தனைபேர் வயிற்றையும் கிழித்துப் பார்ப்பார்கள். அவ்வாறு பெருவாய் என வயிறு திறந்து கிடக்கும் பிணங்களை அவர்களனைவருமே செல்லும் வழிகளில் கண்டிருந்தனர்.

அவ்விதை எவ்விதமேனும் திறந்தால் தன் உடலுறுப்புகளை வைரக்கூர் வெட்டிச்செல்லுமென்றும் குருதிவார விழுந்து இறக்கவேண்டியிருக்குமென்றும் அதை விழுங்கியவன் அறிந்திருப்பான். தன்னை பாம்பு உறையும் புற்று என்றும் வாளிடப்பட்ட உறை என்றும் உணர்வான். அவன் விழிகள் மாறிவிட்டிருப்பதை காணமுடியும். அவன் சொல்லடங்கி தனித்திருப்பான். தன் உடலை எடைகொண்டதைப்போல கொண்டுசெல்வான். தன்னை ஓர் அரும்பொருளென ஒருகணமும் நச்சுத்துளியென மறுகணமும் உணர்ந்துகொண்டிருப்பான். கனவுகண்டு எழுந்தமர்வான். நடுங்கி அதிர்ந்து மெல்ல அமைந்தபின் இருளுக்குள் நெஞ்சைத்தொட்டு புன்னகை செய்வான்.

தன் உடலில் இருந்து அருமணி வெளியே சென்ற முதற்கணம் ஆறுதலடைவான். சற்றுநேரத்திலேயே தனிமைகொண்டு பதைக்கத் தொடங்குவான். அதை மீண்டும் விழுங்கும்வரை தன்மேல் சூழும் பொருளின்மையை அவனால் தாளமுடிவதில்லை. மீண்டும் அது தன் வயிற்றை அடைந்ததும் முகத்தில் நிறைவு தெரிய நீள்மூச்சுவிட்டு அமைவான். “சுடர்

ஏற்றப்படும்போதே அகல். திரியணைந்தபின் அகலில் குடியேறும் மூத்தவளின் வெறுமை” என்று அதை ஒரு பாணன் சொன்னான்.

அருமணி சுமப்பவர்களை முத்துச்சிப்பிகள் என்றழைத்தனர். சூக்திகர்களுக்கு வணிகக்குழுக்களில் பெருமதிப்பிருந்தது. மணியை கையளித்ததும் அவர்களுக்கு பரிசுகள் அளிக்கப்படும். ஆனால் கைநிறையப்பெற்ற பொற்காசுகளை பொருளற்ற ஓடுகளாகவே அவர்களால் காணமுடியும். அந்த ஆண்டுமுழுக்க அவர்கள் தாங்கள் சூக்திகர்களாக இருந்தோம் என்பதைத்தான் பேசிக்கொண்டிருப்பார்கள். அருமணி தங்களுக்குள் இருந்தபோது உயர்ந்த எண்ணங்களுக்கு ஆளானதாகவும் தெய்வங்களால் சூழப்பட்டிருந்ததாகவும் சொல்வார்கள். நாளடைவில் அதை அவர்களே நம்பத் தொடங்குவார்கள். உயர்ந்த எண்ணங்களால் உள்ளம்நிறையப்பெற்று மேலெழுவார்கள். ஓர் அருமணி இருந்த இடத்தை நிரப்ப எத்தனை அரியவை தேவை என எண்ணி வியப்பார்கள்.

ஆனால் கின்னரஜன்யர்களுக்கு அவை பொருளற்றவை என்றே தோன்றின. கின்னரர்களிடமிருந்து அவற்றைப்பெற்று சிறிய குலுக்கைகளில்போட்டு கூரைமேல் கட்டிவைத்தனர். அவை நஞ்சு என்றும் குழவியர் கையில் கிடைக்கலாகாதென்றும் அவர்கள் எண்ணியமையால் எப்போதும் இல்லங்களின் முகப்பில் உத்தரங்கள் எழுந்துசந்தித்த கூம்பின் உச்சியில் கணுமூங்கில் சாற்றிவைத்து ஏறிச்சென்று எடுக்கும் உயரத்திலேயே வைத்திருந்தனர். அவற்றை அவர்களுக்குள் எவரும் திருடுவதில்லை என்பதனால் கண்காணிப்பு இருப்பதுமில்லை. அர்ஜுனன் ஊரினூடாக தோளில் காவடியில் நீர்க்குடுவைகளை சுமந்து சென்றுகொண்டிருந்தபோது

அவனுக்கு அனல் அளித்த பெண் திண்ணையிலிருந்து எட்டிநோக்கி கைதட்டி அழைத்து “குறிமரமே, ஒருகணம் இங்கு வருக!” என்றாள்.

அவன் அருகே சென்றபோது அவள் பாறைமுகடுவளைவில் மலைத்தேன்கூடு என தொங்கிய உறியை சுட்டிக்காட்டி “அந்தக் குலுக்கையை எடுத்துத்தர இயலுமா?” என்றாள். அருகே இருந்த நீண்ட கணுமூங்கிலை சுட்டிக்காட்டி “இதனூடாகத்தான் ஏறிச்செல்லவேண்டும்... எங்கள் மைந்தர் எளிதாக ஏறுவார்கள்” என்றாள். அர்ஜுனன் சுற்றும் நோக்கியபின் அருகே சுவரில் ஆணியில் மாட்டப்பட்டிருந்த சிறுகோடரி ஒன்றை எடுத்து அதன் கட்டுக்கயிற்றை நோக்கி வீசினான். குலுக்கை அறுந்து கீழே விழுந்தபோது ஒற்றைக்கையால் அதை ஏந்தி பிடித்துக்கொண்டான். அவள் வியப்பொலி எழுப்பி நோக்க அதை நீட்டி “கொள்க!” என்றான்.



அவள் “எப்படி அத்தனை கூர்மையாக எறியமுடிந்தது?” என்றாள். “ஒருமை” என்றான் அர்ஜுனன். “எப்படி?” என அவள் மீண்டும் கேட்டாள். “படைக்கலங்கள் அனைத்தும் கூரியவை. கூர்மை என்பது ஒருமுனை நோக்கி ஒடுங்குதல்” என்றான் அர்ஜுனன். “விழிகளும் கைகளும் சித்தமும் ஒற்றைப்புள்ளியென்றாவது இது.” அவன் திரும்பிச்செல்ல முயன்றபோது அவள் அக்குலுக்கையை தரையில் கொட்டினாள். அதில் ஒளிவிடும் மலரிதழ்கள்போல நீலமும்

பச்சையும் சிவப்பும் நீர்மையுமாக வண்ணம் மின்னும் அருமணிகள் பரவின. அவள் அவற்றிலிருந்து கைப்பிடி அள்ளி “இதை வைத்துக்கொள்ளுங்கள்” என்றாள்.

“எனக்கா?” என்றான். “நான் செய்தது சிறிய பணி, இளையவளே.” அவள் கன்னங்கள் குழியச் சிரித்து “இவற்றின்பொருட்டு அல்லவா இத்தனை மலையேறி வருகிறீர்கள். உங்களுக்கு அளிக்கவேண்டுமென நினைத்தேன்” என்றாள். “நன்று, நான் இதை ஏற்கப்போவதில்லை. எனக்கு பொருட்களில் நாட்டமில்லை” என்று அர்ஜுனன் சொன்னான். “பொருளுக்கில்லை என்றால் ஏன் இங்கு வந்தீர்கள்?” என்று அவள் கேட்டாள். “ஓர் இடத்திற்கு நான் செல்வது முந்தைய இடத்திலிருந்து விலகும்பொருட்டு மட்டுமே” என்றான் அர்ஜுனன்.

அவள் ஒருகணம் கழித்து சிரித்து “மிகச்சரியான சொற்களை எடுக்கிறீர்கள்” என்றாள். மீண்டும் சிரித்து “எண்ணவே வியப்பாக இருக்கிறது, இப்படியன்றி வேறு எப்படியும் இதை சொல்லிவிடமுடியாது” என்றாள். அர்ஜுனன் “நான் சொல்வலன் என்று சொல்லமாட்டேன். ஆனால் எந்தப் படைக்கலத்தையும் முழுதுறக் கற்பவன் சித்தமும் சொல்லும் கூர்கொள்ளப்பெறுகிறான்” என்றான். “ஏன்?” என்றாள் அவள். அவனிடம் பேசமட்டுமே அவள் விழைகிறாள் என்பதை விழிகள் காட்டின. முகம் அவன் காதல்மொழி சொல்லக்கேட்பவள்போல மலர்ந்திருந்தது. கண்களில் சிரிப்பென தவிப்பென ஓர் ஒளி அலையடித்தது.

“புறப்பொருள் என்பது உள்ளமே” என்றான் அர்ஜுனன். “புறப்பொருளில் நாம் ஆற்றும் எதுவும் உள்ளத்தில் நிகழ்வதே. மரத்தை செதுக்குபவன் உள்ளத்தை செதுக்குகிறான். பாறையை

சீரமைப்பவன் உள்ளத்தையே சீரமைக்கிறான். படைக்கலத்தை பயில்பவன் உள்ளத்தையே பயில்கிறான். படைக்கலம் கைப்படுகையில் உள்ளமும் வெல்லப்படுவதை அவன் காண்பான்.” ஏன் அதை அவளிடம் சொல்லிக்கொண்டிருக்கிறோம் என அவன் வியந்தான். அறியா மலைமகள். அவளிடம் ஏன் மதிப்பை ஈட்ட விழைகிறேன்? இல்லை, இத்தருணத்தை திசைதிருப்ப விரும்புகிறேன். இச்சொற்கள் வழியாக இப்போது இருவர் நடுவே நுரைகொண்டெழும் விழைவை மூடிப்போர்த்திவிட முனைகிறேன்.

“ஆம், அதை நானும் உணர்ந்திருக்கிறேன்” என்று அவள் சொன்னாள். “வெண்ணை திரட்டுகையில் கலங்கி நுரைகொள்வது உள்ளம். திரண்டுவருவது உள்ளறிந்த ஒரு மெய்.” அவன் அவளை வியப்புடன் நோக்கினான். அவளை சற்றுமுன் எளிய மலைமகள் என அவன் கருதியதை எண்ணிக்கொண்டான். அப்படியல்ல என்று அவன் உள்ளூர அறிவான். இல்லையென்றால் அவன் அவள் முன் தன் திறனை காட்டியிருக்கமாட்டான். கணுமுளைமேல் ஏறி அக்குலுக்கையை எடுத்தளித்தபின் விலகிச்சென்றிருப்பான். அவள் அவனை அழைத்த குரலின் முதல்துளியிலேயே அவளை அறிந்திருக்கமாட்டான்.

“நன்று” என அவன் முழுமையாக தன்னை பின்னிழுத்துக்கொண்டான். “படைக்கலத்தேர்ச்சி என்பது உள்ளம் தேர்வதே. சொல்லோ அம்போ வெறும் கருவிதான்.” அவன் தலைவணங்கி தன் காவடியை தோளிலேற்றிக்கொண்டான். அவள் மேலும் பேசவிழைபவள்போல அவனுக்குப் பின்னால் வந்தாள். அவள்

கைகளின் விரல்கள் ஒன்றுடன் ஒன்று பின்னி விளையாடுவதைக் கண்டதும் அவன் நெஞ்சு மீட்டப்பட்டது. விழிகளை விலக்கி “வருகிறேன்” என்றான்.

“இந்தக் கற்களை இவர்கள் எதற்காக பெற்றுச்செல்கிறார்கள்?” என்றாள் அவனுடன் வந்தபடி. “இவற்றை யவனர் வாங்கிக்கொள்கிறார்கள்” என்றான் அர்ஜுனன் நடந்துகொண்டே. “ஏன்?” என்றாள். “இவை அணிகலன்கள்” என்றான். அவள் “எங்கள் பாணர் பிறிதொன்று சொன்னார். இவை தெய்வங்களின் விழிகள். இவற்றை அவர்கள் நெற்றியில் சூடும்போது பிறிதொரு நோக்கு கொள்கிறார்கள்” என்றாள். அர்ஜுனன் நகைத்து “ஆம், அவ்வாறும் சொல்லலாம்” என்றான். அவள் மேலும் தொடர்ந்தபடி “அவர்கள் அதன்பின் கின்னரரை காணமுடியும். அவர்களிடம் பேசமுடியும்” என்றாள்.

“ஏன், இந்த அருமணிகள் உங்களுக்கும் விழியாகலாமே?” என்றான் அர்ஜுனன். “நாங்கள் இப்போதே கின்னரர்களிடம் பேசமுடியுமே? எங்களுக்கு இவ்விழிகள் தேவையில்லை. எங்கள் விழிகள் இந்தக் கற்களைவிட அரியவை.” அவன் அறியாமல் அவளுடைய பச்சைநிறக் கண்களை நோக்கியபின் புன்னகையுடன் “ஆம்” என்றான். “உங்களுக்கும் இவ்விழிகள் தேவையில்லை. நான் உங்கள் விழிகளைத்தான் எண்ணிக்கொண்டிருந்தேன். அவை மற்றவர்களின் விழிகளைப்போன்றவை அல்ல. அவை பச்சைநீல வண்ணம் கொண்டிருக்கவில்லை. கன்னங்கரிய மணிக்கல் போலிருக்கின்றன. அவற்றின் ஒளி ஆழமானது.”

அவன் மெல்லிய திணறலொன்றை அடைந்தான். அவளை தவிர்த்துச்செல்ல விரும்பினான். அவள் மேலும் உடன்வந்தபடி “உங்கள் உடலெங்கும் இருக்கும் வடுக்களும் விழிகளைப்போல

ஒளிகொண்டிருக்கின்றன. அவற்றுக்கும் நோக்கு இருக்கிறது. நீங்கள் திரும்பிச்செல்லும்போதும் என்னை நோக்கிக் கொண்டிருக்கிறீர்கள்” என்றாள். அர்ஜுனன் விரைந்து காலடிகளை எடுத்துவைத்தான். அவள் அவனுடன் வந்தபடி “விண்ணவர்க்கரசன் உடலெங்கும் விழிகொண்டவன் என்கிறார்கள். அவரை எண்ணாமல் உங்களை நோக்கமுடியவில்லை” என்றாள். அவன் எவரேனும் நோக்குகிறார்களா என விழியோட்டினான். எங்கும் முகங்கள், ஆனால் எவையும் நோக்கவில்லை.

“கண்ணோட்டமில்லா கண்கள் புண்கள் என்கின்றனர். புண்கள் கண்களாகுமென்றால் நீங்கள் கனிந்திருக்கவேண்டும்” என்று அவள் சொன்னாள். அர்ஜுனன் “புண்களினூடாக மானுடரை நோக்க கற்றுக்கொண்டேன்” என்றான். “ஆம், அப்படித்தான் நானும் எண்ணினேன்” என அவள் உவகையுடன் மெல்ல குதித்தபடி சொன்னாள். அவள் அணிந்திருந்த கல்மணிமாலைகள் கூடவே ஒலித்து பிறிதொரு சிரிப்பொலியெனக் கேட்டன.

“நீங்கள் என் குடில் வழியாகச் செல்வதை நோக்குவேன். உங்கள் விழிகளெல்லாம் என்னை நோக்குவதைக் காண்பேன்” என்றாள். பின்னர் சிரித்தபடி “இங்குள்ள அத்தனை பெண்களும் உங்களைத்தான் நோக்குகிறார்கள் என்று அறிவீர்களா?” என்றாள். “பெண்களை நான் கடந்துவந்துவிட்டேன், இளையவளே” என்றபின் அர்ஜுனன் தன் கூடாரம் நோக்கி சென்றான். அவள் அங்கேயே நின்று அவனை நோக்கிக்கொண்டிருந்தாள். அந்நோக்கை அவன் தன் உடலால் கண்டான். மலைமகள்களுக்கு அச்சமும் நாணமும் மடமும் பயிற்றுவிக்கப்படவில்லை. அவையில்லாத இடத்தில்

வெற்றுடல்போல் வெறும்வேட்கையே எழுந்து நின்றது. ஆனால் அது உளவிலக்களிக்கவில்லை. தூயதென இயல்பானதெனத் தோன்றியது. அதன்முன் அணிச்சொற்களும் முறைமைகளும் பொருந்தா ஆடைகளெனப்பட்டன.

[ 23 ]

அர்ஜுனன் கூடாரத்திற்குள் வேட்டையாடிக் கொணர்ந்த பறவைகளை சிறகு களைந்துகொண்டிருந்தபோது முதியபீதர் உள்ளே வந்தார். சிறகுபோன்ற கைகள் கொண்ட ஆடையை அணைத்துக்கொண்டு அவனருகே அமர்ந்தார். அவன் அப்போதுதான் அவரைக்கண்டு வணங்கினான். அவர் அவனை சுருங்கிய கண்களால் நோக்கி “நீங்கள் பேசிக்கொண்டு வருவதை கண்டேன்” என்றார். அவர் சொல்வதென்ன என அவன் உடனே புரிந்துகொண்டான். பேசாமல் தலையசைத்தான்.

“நான் உன்னிடம் எச்சரித்தேன்” என்றார் அவர். “நான் அத்துமீறவில்லை” என்றான் அவன். “எல்லைகள் மீறப்பட்டுவிட்டன. அதை நெடுந்தொலைவிலேயே எவரும் காணமுடியும்” என்றார். “ஆண்கள்கூட மறைத்துக்கொள்ளமுடியும். பெண்களின் உடல் அனைத்தையும் காட்டுவது.” அர்ஜுனன் “அதற்கு நான் ஒன்றும் செய்வதற்கில்லை” என்றான். “இல்லை, இம்முறை தெளிவாகவே நீ யார் என அவளுக்குக் காட்டினாய்” என்று அவர் சொன்னார். அவன் புருவம்சுருங்க அவரை பார்த்தான். “உன் வில்திறனை நீ காட்டியதற்கு பிறிதேதும் நோக்கமில்லை. மயில் தோகைவிரிப்பதன்றி வேறல்ல அது.”

“இங்கு எவரும் நீ யாரென அறிந்திருக்கவில்லை, நான் அறிவேன். மும்முறை நான் கங்கையினூடாக பயணம்செய்திருக்கிறேன்” என்றார். அவன் பெருமூச்சுவிட்டான். “ஏன் இக்கோலத்தில் இருக்கிறாய் என நான் அறியேன். ஆனால் நீ எங்கும் உன்னை ஒளித்துக்கொள்ள முடியாது. விண்ணவனாகிய உன் தந்தையின் பெருவிழைவை உடல் முழுக்க கொண்டவன் நீ. உன் விழிகளைக் கண்ட பெண்கள் அக்கணமே அனல்கொள்வார்கள்” என்று அவர் சொன்னார். “ஒரு சொல்லும் இன்றியே அந்தப் பெண் அதை அறிந்துகொண்டிருப்பாள் என நான் உணர்ந்தேன்.”

“ஆம், அவள் கூரியவள்” என்றான் அர்ஜுனன். “இளையவனே, அக்குலத்திலேயே கூரியவள்தான் உன்னை நோக்கி வருவாள். வான்நாரைகளில் விசைமிக்கதே முதலில் பறக்கும்” என்று அவர் சொன்னார். “அவளில் எழுவது இக்குடியின் எல்லைகளை மீறவிரும்பும் ஒன்று. அது அவள் குருதியில் நுரைக்கிறது. அது மிகமெல்லிய விழைவாக தன்னை வெளிப்படுத்தினால் இனிய நகையாகவும் அழகிய சொல்லாகவும் எழலாம். ஆனால் உள்ளே இருப்பது காலப்பெருக்கை நிகழ்த்தும் விசை. அதையே ஆற்றலன்னை என வழிபடுகின்றனர். அவளுக்கு கை ஆயிரம். நா பல்லாயிரம். விழி பலப்பல ஆயிரம். பெருங்கடல் அலை என வந்து உன்னை அவள் இழுத்துச் சுருட்டிச் சென்றுவிடுவாள்.”

அர்ஜுனன் “ஆம், அவளுடைய விழைவை நான் உணர்கிறேன்” என்றான். “பெண்கள் அனைவரிலும் விழைவு இருக்கும். ஆனால் அவை அஞ்சி கட்டுக்குள் நின்றிருக்கும். அவர்களில் ஆற்றல்மிக்கவளே பெருவிழைவை அடைவாள். அவளை அக்கட்டுப்பாடுகள் எவ்வகையிலும் தடுக்கவும் முடியாது”

என்றார் பீதர். “மீறத்துணிபவள் மீறும் தகுதிகொண்டவள் என்பதை ஒவ்வொருமுறையும் காண்கிறேன், இளைய பாண்டவனே.”

அர்ஜுனன் பெருமூச்சுவிட்டு “நான் அதை விரும்பவில்லை” என்றான். “நாங்களும் விரும்பவில்லை” என்றார் அவர். “நீ அதை வென்றுசெல்லக்கூடும். அதைப்போன்ற பலவற்றைக் கண்டவனாக இருப்பாய். ஆனால் நாங்கள் இங்கே நெடுங்காலமாக அமைத்துள்ள இந்த வணிகவலை அறுபடும். மீண்டும் அதை நெய்து சீரமைக்க நெடுங்காலமாகும்.” அர்ஜுனன் “நான் என்ன செய்யவேண்டும்?” என்றான். “இன்றே கிளம்பிச்செல்க! கீழே சிற்றூர்களில் ஒன்றில் எங்களுக்காகக் காத்திரு. உடனே இங்கிருந்தே எழுந்து விலகு!” என்றார். “அவ்வண்ணமே” என்று அர்ஜுனன் எழுந்து தன் வில்லம்பை எடுத்துக்கொண்டான்.

அவன் கடைக்குச் சென்று தன் முதன்மை வணிகரிடம் ஏனென்று விளக்காமல் முதுபீதரின் ஆணையை மட்டும் சொல்லி விடைபெற்றுக்கொண்டான். தன் பொதியைக்கூட எடுத்துக்கொள்ளாமல் மலைப்பாறைகளின் அரணைக் கடந்து அப்பால் சென்றான். அவன் கிளம்பிச் செல்வதை வேறு எவரிடமும் சொல்லவில்லை. மூடுபனி எழத்தொடங்கியிருந்த பிற்பகல். கடைகளை மூடி பொருட்களை எடுத்து தொகுத்துக்கொண்டிருந்தனர் ஊழியர்கள். கூடாரங்களுக்குள் அனல்சட்டிகளை கொண்டுவைத்துக்கொண்டிருந்தனர் சிலர். அவன் பனித்திரைக்குள் மறைந்தபோது எவரும் நோக்கவில்லை. உருளைக்கற்கள் பரவிய சேற்றுச்சாலையில் அவன் தன் முன் தெரிந்த சில சில எட்டுகளை மட்டும் நோக்கியபடி நடந்தான்.

சாலை வளைவு ஒன்றைக் கடக்கையில் மிகமெல்லிய ஓசையிலேயே அவன் படைக்கலங்களை கேட்டுவிட்டான். உடல் அசைவற்று நிற்க இடக்கைமட்டும் வில்லை தூக்கியது. “அசையாதே” என ஓர் ஒலி பனிக்கு அப்பால் கேட்டது. பட்டுத்திரையில் ஓவியமென கின்னரஜன்யன் ஒருவன் எழுந்துவந்தான். அவன் விழிகளை அவன் சந்தித்தபின்னரே அவனை மானுடனாக எண்ண முடிந்தது. மேலும் நால்வர் சித்திரமெனத் தோன்றி சிலையென முப்புடைப்பு கொண்டனர். முன்னால் வந்தவன் வெறுப்பு நிறைந்த முகத்துடன் “மானுடனே, உன்னை முன்னரே எச்சரித்திருக்கவேண்டும். இங்கு வரும் எவரும் அறிந்தபின்னரே வருவார்கள் என எண்ணியிருந்தோம். பிழையாயிற்று” என்றான்.

அர்ஜுனனின் கண்களையே பிறர் நோக்கி நின்றனர். அவர்களின் கைகளில் கூர்முனை கொண்ட வேல்கள் பாயக்காத்து நின்றிருக்கும் நாகங்களென நீண்டு அசைவற்று நின்றன. “எங்கள் குலமகளிடம் நீ பேசிக்கொண்டிருப்பதை பலர் நோக்கினர். உன்னவர் பலர் வியந்துமிருப்பர். உன் பிணம் இங்கு கிடப்பது அவர்களுக்கு சிறந்த அறிவுறுத்தலென அமையும்” என்றபடி அவன் தன் வேலை தூக்கினான்.

அர்ஜுனனின் விழிகள் வலப்புறம் அசைய அவ்வசைவால் ஈர்க்கப்பட்டு அவன் தோழர்களின் நோக்கு வலப்புறமாக ஒருகணம் சென்று மீள்வதற்குள் அவன் வேல் முனையைப்பற்றி அதை பின்னால் உந்தி அவ்வீரர்தலைவனின் தோளுக்கு கீழிருந்த நரம்புமுடிச்சைத் தாக்கினான். அவன் வலிப்பு கொண்டு கீழே விழுவதை நோக்கி பிறர் கண்கள் சென்று மீள்வதற்குள் அவர்களின் உயிர்நாண் இணைவுகளில்

அவன் வேல் முனை பதிந்து மீண்டது. ஈரப்பொதி மண்ணில் பதியும் ஓசையுடன் அவர்கள் விழுந்தனர்.

வலிப்பு கொண்டு வாய்நுரை வழிய கைகால்கள் மண்ணிலிழுபட கிடந்தவர்களை அவர்களின் ஆடைகளாலேயே கைபிணைத்துக்கட்டி இழுத்துச்சென்று ஒரு மரத்தடியில் நீண்டுநின்றிருந்த பாறைக்கு அடியில் கிடத்தினான். அவர்களின் தலைவன் நினைவுமீண்டு “உன்னை விடமாட்டோம். உன் தலையை எங்கள் தெய்வங்களுக்கு முன் படைப்போம்” என்றான். பிறரும் நினைவுமீண்டனர். அவர்களின் விழிகள் அர்ஜுனனை நோக்கின. அவன் கைகளை கட்டிக்கொண்டு அவர்களை நோக்கி நின்றான். பின்னர் திரும்பி ஊர் நோக்கி சென்றான்.

அவர்கள் திகைத்து அவன் செல்வதை நோக்கிக்கிடந்தனர். தலைவன் கட்டுகளை அவிழ்த்து எழும்பொருட்டு உடலை உந்தி திமிறினான். அவன் எழக்கூடுமென்ற ஐயமே இல்லாதவனாக திரும்பி நோக்காமல் அர்ஜுனன் நடந்தான். அவன் முன் பாதை முழுமையாகவே பனியால் மூடப்பட்டிருந்தது. அவன் காலடியோசை அதில்பட்டு அவன்மேலேயே வந்து பெய்தது. ஊர் எல்லைக்குள் அவன் நுழைந்தபோது தோல்கூடாரங்கள் அந்திமுகில்கள் என உள்ளே எரிந்த அனல் தெரிய சிவந்திருந்தன. வெளியே எவருமிருக்கவில்லை.

அவன் அவள் இல்லத்தை அடைந்து சிலகணங்கள் நோக்கி நின்றான். பின்னர் வில்லின் நாணில் ஒரு கல்லைவைத்து அவள் மூடிய சாளரத்தின் கதவின் மேல் எய்தான். மூன்றுமுறை எய்தபோது அக்கதவு திறந்தது. புதரிலிருந்து மலர்க்கழி ஒன்றை அவன் ஒடித்து வைத்திருந்தான். அவள்

மார்பில் அந்த மலர்க்கணை சென்று விழுந்தது. திகைத்து பின்னடைந்து அதை எடுத்து நோக்கியபின் கதவைத் திறந்தபடி சற்றுநேரம் காத்திருந்தாள். பின்னர் கதவு மூடியது.

பின்கட்டின் கதவு திறக்கும் ஓசை கேட்டது. அர்ஜுனன் இல்லத்தின் பின்பக்கம் சென்று அவள் வெளியே வந்து சுற்றிலும் பார்ப்பதை கண்டான். பனியிலிருந்து எழுந்து அவள் முன் சென்று நின்றான். அவள் அவனை எளிதில் அடையாளம் கண்டுகொண்டாள். கன்னங்களில் குழிவிழ சிரித்தாள். செந்நிற ஒளியுடன் அவளுக்குப் பின்னால் திறந்திருந்த கதவு அவ்வில்லமும் சிரிப்பதைப்போல தோன்றவைத்தது.

அவன் அருகே சென்றபோது நாணம் கொள்ளவோ விழிகளை விலக்கிக்கொள்ளவோ செய்யவில்லை. அவன் அவளை அணுகி இடையை வளைத்து அவளைப் பற்றி தன் உடலுடன் சேர்த்து இறுக்கிக்கொண்டு அவள் இதழ்களை தன் இதழ்களால் கவ்வி முத்தமிட்டான். அவளை உண்ணவிழைபவன்போல அவளில் புகுந்து திளைப்பவன்போல அவளுடனான தொலைவை தவழ்ந்து தவழ்ந்து கடப்பவன் போல.

அவள் விடுவித்துக்கொண்டு “உள்ளே வருக!” என்றாள். “யார் இருக்கிறார்கள்?” என்று அவன் கேட்டான். “யார் இருந்தாலென்ன?” என்று அவள் அவன் காதில் அனல்படிந்த குரலில் சொன்னாள். உள்ளே அனல்சட்டியின் செவ்வொளி பரவியிருந்தது. சுவர்களிலும் கூரையிலும் பதிக்கப்பட்டிருந்த மென்மயிர்த் தோல்பரப்பு அவ்வொளியில் அனல்போலத் தெரிந்தது. அவள் அவனை தன் உடலால் வளைத்து கவ்விக்கொண்டாள். காமம் கொதித்த அவள் மூச்சை அவன் செவிகள் உணர்ந்தன. அவள் உருகும் மணத்தை மூக்கு அறிந்தது. மென்மயிர்த்தோல் பரப்பிய மஞ்சத்தில் அவளுடன்

அவன் அமர்ந்தான். உடல்களால் ஒருவரை ஒருவர் இறுதிக்கணத்திலென பற்றிக்கொண்டனர்.

பின்னர் நெடுநேரமென உணர்ந்து விழிப்புகொண்டு எழுந்தபோதுதான் அவன் அவள் பெயரை கேட்டான். “பார்வதி” என்று அவள் மறுமொழி சொன்னாள். அவன் மெல்லிய திடுக்கிடலுடன் அவள் விழிகளை நோக்கினான். அதிலிருந்த அனல் அணைந்து கனிவு நிறைந்திருந்தது. “நான் யார் என நீ கேட்கவில்லை” என்றான். “பெயரையும் குலத்தையும் மட்டும்தானே இனி அறியவேண்டியுள்ளது?” என்றாள் அவள்.

[வெண்முரசு விவாதங்கள்]

# கிராதம் - 75

**[ 24 ]**

காலையில் பார்வதி அர்ஜுனனைத் தொட்டு “புலர்கிறது, இங்கு மிக முன்னதாகவே காலையொளி எழுந்துவிடும்” என்றாள். அவன் திடுக்கிட்டு விழித்தெழுந்து உடல்நடுங்க காய்ச்சல் படர்ந்த விழிகளால் அவளை நோக்கினான். “என்ன?” என்றாள். “இல்லை” என அவன் தலையசைத்தான். அவன் உடல் நடுங்கிக்கொண்டிருந்தது. “என்ன?” என அவள் மீண்டும் கேட்டாள். அவன் தலையை அசைத்தபடி எழுந்து அமர்ந்தான். “கனவில் இருந்தீர்களா?” அவன் ஆம் என தலையை அசைத்தான். “என்ன கனவு?” என்றாள். அவன் தலையை அசைத்தபடி புரண்டு அமர்ந்து அவள் திறந்துவைத்திருந்த சாளரத்தினூடாக வெளியே வெண்ணிற வானம் தெரிவதை நோக்கினான்.

அவள் “நீங்கள் கிளம்பலாம். இன்னும் சற்றுநேரத்தில் எங்கள் ஊர் துயிலெழுந்துவிடும்” என்றாள். ஆடையணிந்து மென்மயிர் மேலுடையின் தோல்நாடாவை கட்டாமல் விட்டிருந்தாள். இருகைகளையும் தூக்கி கூந்தலை அள்ளிச் சுழற்றி முடிந்தபடி “இப்போது பனிமேல் ஒளி படர்ந்திருக்கிறது. வெண்திரை. எவரும் பாராமல் கிளம்பிச் சென்றுவிடமுடியும்” என்றாள். அவள் விழிகளை நோக்காமல் அவன் அந்தச் சாளரத்தையே நோக்கிக்கொண்டிருந்தான். அந்த அறை நீருக்குள் இருப்பதுபோல நெளிந்துகொண்டிருந்தது. காலையொளி சாளரத்தில் எழுந்தபின்னரும் பறவைகளின் ஒலியே இல்லாமலிருப்பது விந்தையாக இருந்தது.

“கிளம்புங்கள்” என்றாள். அர்ஜுனன் “உன் தந்தையும் தமையன்களும் எழட்டும்… அதன்பொருட்டே காத்திருக்கிறேன்” என்றான். ஒரு கணம் அவள் விழிகள் நிலைத்தன. பின்னர் புன்னகையுடன் “நன்று” என்றாள். அர்ஜுனன் “அவர்கள் எவரும் இறந்துவிடமாட்டார்கள்” என்றான். “தெரியும்” என்று அவள் புன்னகையுடன் சொன்னாள். அர்ஜுனன் “வேறென்ன தெரியும்?” என்றான். “நீங்கள் வெல்வீர்கள்” என்றாள். “எப்படி?” என்று கேட்டபடி அவன் கைகளை தலைக்குமேல் கோத்துக்கொண்டான். “நீங்கள் எப்போதும் வெல்பவர்.”

அர்ஜுனனின் விழிகள் சுருங்கின. அவள் “உங்கள் நடத்தையிலிருக்கும் நிமிர்வு அதைத்தான் காட்டுகிறது. சிலருக்கு ஊழ் அவ்வாறு அமைகிறது, அவர்கள் வெற்றியன்றி எதையும் அடைவதே இல்லை” என்றாள். அவனை அவள் அறிந்துகொள்ளவில்லை என உணர்ந்ததும் அவனுக்கு ஒளிந்திருக்கும் உவகை ஒன்று ஏற்பட்டது. “நேற்று நான் இங்கிருந்து கிளம்பிச்சென்றேன்” என்றான். அவள் “என்னை

விட்டுவிட்டா?” என்றாள். “ஆம்” என்றான் அர்ஜுனன். “என்னிடம் கிளம்பிச்செல்லும்படி அறிவுறுத்தினார் வணிகர்தலைவர். செல்லும் வழியில் சிலர் என்னை அச்சுறுத்தினர். அவர்களை வென்றுவிட்டு திரும்பிவந்தேன். ஏனென்றால் அச்சுறுத்தலுக்குப் பணிவது என் இயல்பல்ல.”

“என் தமையனாகத்தான் இருக்கவேண்டும்” என்று அவள் சொன்னாள். “அவர் இன்னமும் வீடுதிரும்பவில்லை.” அர்ஜுனன் “அஞ்சவேண்டியதில்லை, அப்பாதையில் முதல் நடமாட்டம் தொடங்கும்போது விடுவிக்கப்படுவார். குளிருக்கான ஆடைகளும் அவர்கள் உடலில் இருந்தன” என்றான். அவள் கண்களின் முனையிலிருந்த மெல்லிய நகைப்பு அவனை புன்னகைக்க வைத்தது. “உனக்கு அவரை நான் வென்றது உவகையூட்டுகிறதுபோலும்” என்றான். “இல்லை என்று சொல்வேன் என நினைக்கிறீர்களா?” என்றாள். அவன் நகைத்தான்.

“உண்மையிலேயே பிடித்திருக்கிறது. ஆண்மான்கள் கொம்புகோப்பதை பெண்மான்கள் நின்று விரும்பி நோக்குவதை கண்டிருக்கிறேன்” என்றாள் அவள். வெளியே குரல்கள் கேட்கத்தொடங்கின. “நன்று, முதற்புலரியிலேயே வணிகர்கள் அவ்வழி சென்றுவிட்டார்கள்” என்றபடி அர்ஜுனன் எழுந்தான். தன் ஆடையை அணிந்துகொண்டு வில்லை வலத்தோளிலிட்டு அம்புத்தூளியை இடத்தோளிலிட்டபடி கதவைத்திறந்து வெளியே சென்றான். அங்கிருந்த இரண்டு முதியபெண்கள் அலறியபடி எழுந்துகொண்டனர். அறைகள் தோலுறையிடப்பட்டவை என்பதனால் ஒலி வெளியே வருவதில்லை என எண்ணிக்கொண்டான். முகப்புக் கதவைத்திறந்து திண்ணையில் இறங்கினான்.

பெண்களின் அலறலோசை கேட்டு எழுந்து திரும்பியவர்கள் உள்ளிருந்து அவன் வருவதை கண்டார்கள். கூச்சல்களுடன் பலர் வேல்களைத் தூக்க அர்ஜுனன் அவர்களை நோக்கி விழிகளை திருப்பவில்லை, ஆனால் அவன் உடல்விழிகள் அவர்களை நோக்கிவிட்டன. முந்தையநாள் அவனிடம் தோல்வியடைந்த முதன்மை வீரன் கையசைத்து அவர்களை தடுத்தான். அர்ஜுனன் நிமிர்ந்த தலையும் இயல்பான நடையுமாக திண்ணை முனையில் சென்றுநின்றான். உரத்த குரலில் "குலத்தோரே, மூத்தவர்களே, நான் இந்த இல்லத்துப் பெண்ணை காந்தர்வமுறைப்படி மணம்கொண்டிருக்கிறேன். ஷத்ரிய குலத்தவனாகிய என் பெயர் அர்ஜுனன். அஸ்தினபுரியின் குருகுலத்து அரசனாகிய பாண்டுவின் மைந்தன்" என்றான்.

அங்கு நின்றிருந்த முதியவர்கள் வியப்பொலி எழுப்பினர். சிலர் அவனைப் பார்க்கும்பொருட்டு முண்டியடித்து முன்னால் வந்தனர். அறைகூவும் குரலில் அர்ஜுனன் சொன்னான் "செவிகூருங்கள்! நீங்கள் திரளாக என்னைத் தாக்கினால் இந்திரப்பிரஸ்தத்தின் அரசர் படைகொண்டுவந்து உங்கள் குடிகளை முற்றாக அழிப்பது முறை என்றாகிறது. நீங்கள் இங்கு அமைத்திருக்கும் இந்தப் பாறைக்காவல் எல்லாம் என் தமையன் படைகொண்டுவந்தால் ஒரு பொருட்டே அல்ல என்று உணருங்கள்." ஒவ்வொரு முகத்தையாக நோக்கியபடி "இல்லையேல் எனக்கு நிகரான ஒரு வீரன் எழுந்து வந்து என்னுடன் போர்புரியட்டும்" என்றான்.

அவர்கள் ஒருவரை ஒருவர் நோக்கினர். "இல்லை, உங்களில் இருவர் என்னிடம் போரிடட்டும்." அவர்களை நோக்கியபடி அவன் மீண்டும் சொன்னான் "அன்றி ஐவர் போரிடட்டும்."

மெல்லிய நகையமைந்த இதழ்களுடன் மீண்டும் நோக்கியபின் “உங்கள் வீரர் பதின்மர் ஒரே காலத்தில் என்னிடம் போரிடலாம். என் அறைகூவல் இது” என்றான். இளைஞன் ஒருவன் கைகளைத் தூக்கியபடி ஏதோ சொல்ல முன்னால் வந்தான். முதியவர் ஒருவர் அவனைத் தடுத்து “நீர் மாவில்லவராகிய பார்த்தன் என்றால் இங்குள்ள நூறுபேர்கூட உம்முடன் நிகர்நின்று போரிட இயலாது. எங்கள் இளையோரை நீர் கொல்லாமல் விட்டமைக்காக நன்றி சொல்கிறோம்” என்றார்.

கைகளைக் கூப்பியபடி அவர் அவனருகே வந்தார். “உங்கள் மூத்தவரைப்பற்றி கேள்விப்பட்டிருக்கிறோம். எங்கள் அரண்களெல்லாம் மானுடர்களுக்கு. காற்றின் மைந்தனுக்கல்ல. நாங்கள் எளியவர்கள், எங்கள் தனிநெறிகளுடன் இங்கு வாழ்கிறோம். அந்நெறிகளைப் பேணும்பொருட்டே மண்ணில் வாழும் மானுடர்களிடமிருந்து எங்களை முற்றிலும் அகற்றிக்கொண்டிருக்கிறோம். ஏனென்றால் முன்பு அம்மானுடரால் அகற்றப்பட்டவர்கள் நாங்கள். சிப்பியில் பிறந்தவர்கள் சிறகு பெற்றது இங்குதான். எங்கள் வாழ்க்கை இங்கு சிறுகச்சிறுக தழைத்துச் செறிந்துள்ளது. சிலந்திவலையை அறுத்துச்செல்லும் கருவண்டுபோல நீங்கள் உட்புகுந்திருக்கிறீர்கள். இது முறையா என்பதை நீங்களே முடிவுசெய்துகொள்க!” என்றார்.

“மூத்தவரே, உங்கள் குலமுறைமைகளையும் அறநெறிகளையும் இறையாணைகளையும் நான் போற்றுவேன். ஆனால் பெண்ணின் கருப்பைக்குமேல் எந்த நெறியும் முற்றாணை கொண்டதல்ல” என்று அர்ஜுனன் சொன்னான். “பெண்ணின் விழைவு என்பது நீர்தேடி மண்ணுக்குள் செல்லும்

வேர்போன்றது. அறியவொண்ணாதது. தன் வேட்கையையே விசையெனக் கொண்டு புதுவழி தேர்வது. கிளைகளை வெட்டலாம். அடிமரத்துக்கு கற்சுற்றமைக்கலாம். வேர்களை எவரும் மட்டுப்படுத்துவதில்லை. கட்டற்ற வேர்களே செழித்த மரத்தின் வல்லமை என்பதை உணருங்கள்.”

“உங்கள் பெண்ணைக் கவர நான் இங்கு வரவில்லை. ஆனால் என்னை தடுக்கும்பொருட்டு உங்கள் இளையோர் வந்து சூழ்ந்தபோது அவர்களின் அச்சத்தைக் கண்டேன். அவர்களை எளிதில் வெல்லமுடிந்தபோது அவர்களின் ஆற்றலின்மையைக் கண்டேன். உங்கள் மகளிர் இன்னமும் சிறைப்பட்டிருப்பார்களென்றால் உங்கள் குலம் பாறைமேல் மரமென வேரொடுங்கி தேம்பி அழியும் என்று எண்ணினேன். ஆகவேதான் இங்கே வந்தேன்” என்றான் அர்ஜுனன். “இவள் உங்கள் குலத்தின் அரசி. இவள் கருவில் உங்கள் குடிவழிகள் பாடிப்பரவும் மாவீரர்கள் எழுவார்கள்” என உள்ளே சுட்டிக்காட்டி சொன்னான்.

அங்கே நிகழ்வதை நோக்கி ஊரிலிருந்து ஒவ்வொருவராக வந்து கூடத்தொடங்கினர். குலத்தலைவரை அழைத்துவர சிலர் ஓடினர். “என்ன? என்ன நிகழ்கிறது?” என்றார்கள் சிலர். முதியவர் ஒருவர் அவர்களை கைதூக்கி அமைதிப்படுத்திவிட்டு அர்ஜுனனிடம் “நாங்கள் எங்களை கின்னரர்களுக்கு ஒப்புக்கொடுத்தவர்கள், ஷத்ரியரே” என்று உரைத்தார். “எங்களை இங்கு வாழச்செய்தவர்கள் அவர்கள். நீங்கள் மீறியது எங்கள் நெறிகளை அல்ல, அவர்களின் ஆணைகளை. உங்களை தண்டிக்கவேண்டியவர்கள் அவர்கள். நீங்கள் போரிடவேண்டியதும் அவர்களுடன்தான்.”

உடனே “ஆம், ஆம்” என்று குரல்கள் எழுந்தன. “கின்னரர்கள் வரட்டும்... அவர்கள் முடிவு சொல்லட்டும்” என்றனர் சிலர். குலத்தலைவர் “அவர்கள் இனிமேல் வரப்போவதில்லை என நாம் அறிவோம்” என்று கைகாட்டி அவர்களை அடக்கினார். “நாம் இவர்களை நம் பூசகமன்றுக்குக் கொண்டுசெல்வோம். நம் தெய்வங்களுடன் உரையாடுபவர் நமது முதுபூசகர் மட்டுமே. அவர் சொல்லட்டும்.” “ஆம், அதுவே முறை” என்று குரல்கள் எழுந்தன. “அவர் அனைத்துமறிவார். அவர்மேல் எழும் தெய்வங்களின் ஆணை வரட்டும்.”

நான்கு வேல்வீரர்களுடன் குலத்தலைவர் விரைந்து வந்தார். இருவர் ஓடிச்சென்று அவரிடம் நடந்தவற்றைச் சொன்னபடி உடன் வந்தனர். வந்ததுமே கைதூக்கி உரத்தகுரலில் “வீரரே, எங்களுடன் பூசகமன்றுக்கு வருக!” என்றார் குலத்தலைவர். “அவளும் வரட்டும்... அவள் ஊழையும் கின்னரரே முடிவு செய்யட்டும்” என்றாள் ஒரு முதுமகள். குலத்தலைவர் “மற்ற வணிகர்கள் அனைவரும் உடனே கூடாரங்களைக் கலைத்து மலையிறங்கட்டும்... நான் ஆணையிட்டேன் என உரை. நம் அரண்கள் பூசனையிட்டு மூடப்படட்டும். கின்னரர் நமக்கிடும் ஆணையை தலைசூடுவோம்” என்றார். நான்கு வீரர்கள் அவருக்குத் தலைவணங்கி ஈட்டிகளுடன் கிளம்பிச்சென்றார்கள்.

அர்ஜுனன் திரும்பி இல்லவாயிலை நோக்க அங்கே பார்வதி கவரிமானின் மென்மயிர்ப்பீலியை தலையணியாகச் சூடி வந்து நின்றிருப்பதைக் கண்டான். அவள் அவன் விழிகளை சந்தித்ததும் புன்னகை செய்தாள். அத்தகைய தருணங்களில் பெண்களில் எழும் உறுதியை அவன் பலமுறை அறிந்திருந்தாலும் எப்போதும் எழும் அவ்வியப்பையும் அடைந்தான். அவர்கள் ஆண்களை நம்பியிருப்பதாக

தோற்றமளிக்கிறார்கள். ஆனால் அந்தத் துணிவு ஆண்களைச் சார்ந்து உருவாவது அல்ல. எங்கிருந்து அது எழுகிறது என அவன் மீண்டும் தன்னிடமே கேட்டுக்கொண்டான்.

அத்தனை தோற்றநிமிர்வுக்கும் அடியில் அவன் சற்று அஞ்சிக்கொண்டிருந்தான். எதை அஞ்சுகிறோம் என்றே அறியாமலுமிருந்தான். அக்கணம் அவளுடைய அப்புன்னகையைத்தான் பற்றுறுதியாகக் கொண்டிருந்தான். எல்லா தருணங்களிலும் பெண்களின் துணிவை பற்றிக்கொண்டே என் எல்லைகளை கடந்திருக்கிறேன். எல்லைகளைக் கடக்கும்பொருட்டே அவர்களிடம் செல்கிறேன்.

**[ 25 ]**

முதுபாணன் ஒருவன் கைமுழவை முழக்கி அவர்களை பூசனைமன்றுக்கு இட்டுச்செல்லவிருப்பதை ஊருக்கு அறிவித்தான். அவர்கள் கைகளைத் தூக்கி குரலெழுப்பி அதை ஆதரித்தனர். “செல்க!” என்றார் குலத்தலைவர். அவர்கள் இருவரையும் நடுவே செல்லவிட்டு கின்னரஜன்யர் முன்னும்பின்னும் நிரைவகுத்தனர். முதலில் பாணன் சிறுமுழவை மீட்டியபடி சென்றான்.

அந்த மலைச்சரிவில் அத்தனை இல்லங்கள் இருப்பதை அர்ஜுனன் அப்போதுதான் உணர்ந்தான். தேனடைபோல பாறைகளைக் குடைந்து ஒன்றுக்குமேல் ஒன்றென குகையில்லங்களை அமைத்திருந்தனர். கற்களை அடுக்கி உள்ளே தோற்சுவரமைத்த உயரமற்ற இல்லங்கள் சரிவில் ஒன்றுக்குமேல் ஒன்றென எழுந்திருந்தன. தேனீக்கள்போல அவற்றிலிருந்து மக்கள் இறங்கி வந்து ரீங்கரித்தபடி அவர்களை சூழ்ந்தனர்.

அர்ஜுனன் அப்பெண்களின் விழிகளை நோக்கினான். அவை அவனை நோக்கியபின் அவளைச் சென்று சந்தித்து மீண்டன. கிளர்ச்சியும் ஆவலும் பதற்றமும் கொண்ட விழிகள். ஆனால் அவையனைத்திலுமே ஒரு களிப்பும் இருப்பதை சற்றுகழித்தே அவன் உணர்ந்தான். அவளை திரும்பிப்பார்க்கவேண்டுமென விழைந்து அதை கட்டுப்படுத்திக்கொண்டான். அவள் விழிகளின் களிப்பைத்தான் அவர்கள் பகிர்ந்துகொள்கிறார்கள். அவளுடன் தங்களை இணைத்துக்கொள்கிறார்கள். கண்முன் எழுந்த பலநூறு ஆடிகளில் அவள்தான் பெருகிச் சூழ்ந்திருக்கிறாள்.

அவள் முகம் அப்போது மலர்ந்திருக்கும் என அவன் உய்த்து அறிந்தான். அவள் உடலெங்கும் நடனமென ஒரு துள்ளல் இருப்பதை அணிகளின் ஓசையே காட்டியது. வென்றவளின் ஊரணிக்கோலம் என நடந்துகொண்டிருப்பாள். அவள் கால்கள் நிலம்படுகின்றனவா? அவள் விழிகளுக்கு முன் மானுடர் எப்படி தெரிகிறார்கள்?

அப்போது தோன்றியது அந்தத் துணிவு எங்கிருந்து வருகிறதென்று. ஆண்கள் இழப்பதற்கே அஞ்சுகிறார்கள். நிலத்தை, மரபை, குலத்தை, குடியை, பெயரை, இல்லத்தை. திரும்பிவரும் வழியை உறுதி செய்துகொள்ளாமல் செல்வது எப்போதுமே அவர்களுக்கு இயல்வதல்ல. பெண்கள் கூட்டுப்புழு சிறகு பெற்றதுபோல பெற்றவையும் கொண்டவையும் பூண்டவையுமான அனைத்திலிருந்தும் பறந்தெழுபவர்கள். திரும்பி நோக்காமல் சென்றுவிடும் வல்லமை கொண்டவர்கள். மலையிறங்கும் ஆறுகள். அவர்கள் சென்றடையும் இடம் மட்டுமே சித்தமென எஞ்சுகையில் இழப்பென ஏதுமில்லை.

அந்த எண்ணம் எழுந்ததுமே அவன் இயல்புநிலையை அடைந்தான். அதுவரை இருந்த சிறிய பதற்றம் முழுமையாக

விலகியது. ஒரு புதிய எண்ணம் எழுவதைப்போல இன்பமளிப்பது வேறேதுமில்லை. அது தன் கணு ஒன்று முளைப்பதைக் காணும் மரக்கிளையின் இன்பம்போலும். அவனுடைய நடை எளிதாகியது. விழிகளை ஓட்டி அச்சூழலை நோக்கியபடி நடந்தான். அவன் இயல்படைந்ததை அவளும் உணர்ந்ததை அவள் அணியோசை சற்று நிலைத்ததிலிருந்து அவன் உணர்ந்தான். விழிபடும் உணர்வை தோல் எப்படி அடைகிறது என்பது தீராவிந்தை என்று தோன்றியது.

எண்ணியிராத கணத்தில் அவனை ஓர் உணர்வு ஆட்கொண்டது, அப்பெண்ணுடன் அவன் அப்படி முன்னரும் நடந்திருப்பதாக. எங்கே எங்கே என தவித்தலைந்த உள்ளம் பின்பு உணர்ந்தது அவளை அவன் நன்கறிந்திருந்தான் என. ஒரே பெண். திரௌபதி, உலூபி, சித்ராங்கதை, சுபத்திரை, சுபகை... வெவ்வேறு உருவம்கொண்டெழுந்து ஆட்கொள்கிறார்கள். அவர்கள் என்றுமிருப்பவர்கள்.

எங்கோ சென்றலைந்த சித்தம் இயல்பாக நீண்டு தொட்ட ஓர் முனை அவனை சிலிர்க்கச்செய்தது. அவள் பெயர் பார்வதி என அவன் நினைத்துக்கொண்டான். மலைமகள். நிலமகளும் அலைமகளும் என்றானவள். திருமகளும் சொல்மகளும் அனல்மகளுமென உரு நிறைந்தவள். அவளை திரும்பி நோக்கினான். அவள் நிமிர்ந்த தலையுடன் புன்னகை நிலைத்த முகத்துடன் நடந்துகொண்டிருந்தாள். ஏதோ களிமயக்கிலென கண்கள் சிவந்திருந்தன.

அவர்கள் பூசனைமன்றுக்குச் சென்றுசேர்ந்தபோது பெருந்திரள் உடனிருந்தது. நான்கு ஊர்களுக்கு நடுவே இருந்த பெரிய பாறைச்சரிவு ஒன்றில் இருந்தது மேலே கூரையில்லாத இறைப்பதிட்டை. அணுகுந்தோறும் நீர்வரிகள் சூடி காட்டெருது

என நின்றிருந்த மையப்பாறை தெளிவுகொண்டது. ஆயிரம்பேர் நிற்பதற்கு ஏற்ற பெரிய பாறைப்பரப்பின் நடுவே ஆளுயரத்தில் நின்ற அதன்மேல் புடைப்புச்சிற்பமாக ஏழு கின்னரர்களின் உருவங்கள் செதுக்கப்பட்டிருந்தன. பலிபீடமாக போடப்பட்டிருந்த தட்டைக்கல் மேல் மலர்களும் காலையில் படைத்த அன்னமும் இருந்தன. அவற்றை சிறுகுருவிகள் எழுந்தமர்ந்து கொத்திக்கொண்டிருந்தன. முழவோசையில் அவை எழுந்து வளைந்து மிக அப்பாலென நின்றிருந்த தேவதாரு மரத்தின் இலைத்தழைப்பை அடைந்து புகுந்து மறைந்தன.

இறைபீடத்தின் அருகே கற்பாளங்களை அடுக்கிக் கட்டிய சிறிய இல்லமொன்றிருந்தது. அதனுள் இருந்து முதுபூசகர் எழுந்து வந்து அவர்களை நோக்கிநின்றார். அவர்கள் அருகணைந்ததும் அவர் கைகளை விரித்துக்காட்ட தொடர்ந்து வந்த அனைவரும் அகன்று நின்று பெரிய வட்டமொன்றை சமைத்தனர். குலத்தலைவரும் குடிமூத்தார் எழுவரும் மட்டும் அவர்கள் இருவரையும் அழைத்துக்கொண்டு அருகே சென்றனர். முழவோசை நின்றது. அதுவரை இருந்த அகஒழுங்கை அவ்வமைதி சிதறடிக்க மரம் முறிந்து விழுந்ததும் வானில் தவிக்கும் பறவைகளென நிலையழிந்தன எண்ணங்கள்.

பூசகர் வெண்ணிற மென்மயிர் ஆடை அணிந்து தலையில் வெண்கவரிமானின் பனிக்குச்ச வாலை இறகுபோல் அணிந்திருந்தார். கந்தக மஞ்சளோடிய சுண்ணத்தாலானதுபோன்ற முகம். உலர்ந்த சேற்றுக்குழிபோல் விரிசல்கள் சூழ்ந்த விழிப்பள்ளத்திற்குள் கண்மணிகள் மங்கிய சிப்பி போலிருந்தன. ஒன்றன்மேல் ஒன்றென அணிந்த மயிர்த்தோலாடைக்குள் அவர் உடல் வெறும்

எலும்பாலானதுபோல் தோன்றியது. மெல்லிய நடுக்கம் ஒன்று அவர் உடலில் ஓடிக்கொண்டிருந்தது. சிவந்த கீறல்போன்ற உதடுகள் உள்ளடங்கியிருந்தன. “வருக!” என அவர் சொன்னபோது பற்கள் கூழாங்கற்கள்போல் தெரிந்தன.

அவர் கைகாட்டி அவர்கள் இருவரையும் பலிபீடத்தருகே போடப்பட்டிருந்த கல்மணைகளில் அமரும்படி சொன்னார். அர்ஜுனன் அமர்ந்தபின்னர்தான் ஏழு கின்னரர்களின் காலடியில் மல்லாந்துகிடந்த ஊர்ணநாபனை கண்டான். அது அவன் சிலைதானா என மீண்டும் கூர்ந்து நோக்கினான். எட்டு கைகளும் பெருவயிற்றின்மேல் புடைத்த விழிகளும் பற்கள் செறிந்த வாயுமாக கிடந்த ஊர்ணநாபனின் அனைத்து விரல்களிலிருந்தும் எழுந்த சரடுகளை கின்னரர் பற்றிக்கொண்டிருப்பதை மெல்லிய கோடுகளாக செதுக்கியிருந்தனர். அவன் ஆணுறுப்பு வேர்போல மண்ணில் ஆழ்ந்திறங்கியிருந்தது.

பூசகர் அவனை நடுங்கும் தலையுடன் நோக்கிக்கொண்டிருந்தார். பின்னர் திரும்பி குலத்தலைவரையும் பிறரையும் விலகிச்செல்லும்படி கைகாட்டினார். அவர்கள் குழப்பத்துடன் ஒருவரை ஒருவர் நோக்கியபின் விலகிச்சென்றனர். அவனை சற்றுநேரம் நோக்கியபின் பூசகர் மெல்ல முனகினார். பின்னர் “நீர் இந்திரப்பிரஸ்தத்தின் இளவரசரான அர்ஜுனன் என அறிந்தேன்” என்றார். “ஆம்” என்று அவன் சொன்னான். “நீர் என் குடிப்பெண்ணை மணந்ததை முதுதந்தையாக நான் ஏற்கிறேன்” என்று அவர் சொன்னார். “இக்குடி பெருகவேண்டுமென்றால் இது மண்ணுக்கு இறங்கியாகவேண்டும். வேலிகளை உடைத்து இதன் வேர்கள் செல்லவேண்டும்…”

அவர் குரல் முனகல்போல ஒலித்தது. “ஏனென்றால் மேலே செல்ல இடமில்லை. மேலே அவர்கள் இருக்கிறார்கள். கின்னரர்கள். அவர்களின் வாழ்க்கை வேறு. அவர்கள் விழைவதை எல்லாம் வானமே அளிக்கும். அவர்களுக்கு மண்ணே தேவையில்லை.” அர்ஜுனன் அவர் உதடுகளையே நோக்கிக்கொண்டிருந்தான். அவர் உடலின் அனைத்து நரம்புகளும் விசையழிந்து தளர்ந்திருப்பதை உணரமுடிந்தது. “ஆனால் நாங்கள் இங்கு எங்கள் வாழ்க்கையை வாழவில்லை. கட்டுண்டிருக்கிறோம். நாங்கள் அடிமைகள். அவர்களால் வளர்க்கப்படும் விலங்குகள். எங்கள் உடல்களை அவர்கள் ஆளவில்லை. எண்ணங்களில் நிறைந்திருக்கிறார்கள்.”

அவருடைய விழிகள் ஒளிகொண்டபடியே வருவதை தன் உளமயக்கா என அவன் ஐயத்துடன் நோக்கினான். “அவர்கள் முடிவெடுக்கவேண்டும். அவர்கள் ஒப்பாமல் இங்கு எதுவும் நிகழமுடியாது.” அவர்தான் பேசுகிறாரா என அர்ஜுனன் ஐயுற்றான். அவருடைய விழிகள் நிலைகுத்தி நின்றன. இமைகள் அசையவில்லை. “அவர்களை வென்றுவருக... அவர்களை வென்றுவருக! இளவரசே, இக்குலத்தை விடுதலைசெய்க!” என்று அவர் சொன்னார். அவர் குரல் அவ்வுடலில் இருந்து எழவில்லை. சொற்களை அறியாமல் சிறிய இதழ்கள் நடுங்கிக்கொண்டிருந்தன. காற்றில் ஏதோ பசையை அளாவுவதுபோல அவர் விரல்கள் அசைந்தன.

அர்ஜுனன் “அவர்களின் படைகளேதும் இங்கில்லையே! ஆண்டுக்கு ஒருமுறைகூட அவர்கள் இங்கு வருவதுமில்லை” என்றான். “ஆம், அவர்கள் எவ்வகையிலும் இங்கில்லை. இளையவரே, இங்கு ஆண்டுதோறும் பொருட்களுடன் இறங்கி வருபவர்களும் அவர்களல்ல” என்றார் பூசகர். “அவர்கள் மேலே

இருக்கிறார்கள். நாம் அவர்களை நோக்கவும் முடியாது.” அவர் இல்லை இல்லை என்பதுபோல தலையை அசைத்தார். “அவர்களின் படைக்கலங்களை நாங்கள் அறிந்ததில்லை. அவர்களின் ஒரு சொல்லையேனும் நாங்கள் கேட்டதில்லை. ஆனால் இங்குள்ள ஒவ்வொரு உள்ளத்தையும் அவர்கள் ஆள்கிறார்கள். இங்குள்ள மரங்களையும் பாறைகளையும்கூட கையாள்வது அவர்களே.”

அர்ஜுனன் அவ்விரல்களையே நோக்கிக்கொண்டிருந்தான். அவை எதையோ நெய்கின்றன. “ஏனென்றால் அவர்கள் எங்கள் கனவுகளுக்குள் புகுந்திருக்கிறார்கள். இவையனைத்தையும் சமைக்கும் கனவை எங்களுக்குள் அவர்களே அமைக்கிறார்கள். கனவுவழியாக எதையும் மீறிச்செல்லலாம். இளையவரே, கனவை மீறிச்செல்வது எளிதல்ல மானுடனுக்கு... கனவுகளை அடிபணியச் செய்தவன் கருவுக்குள் நோய்கொண்ட குழவி... கனவுகளே மீறல். கனவுகளே கடத்தல். கனவுகளே ஆக்கல். இளையவரே, கனவுகளும் பிறருடையதென்றானவன் அடிமையென்றறியாமல் அடிமையென்றிருக்கும் இழிசினன்.”

அவர் விரல்களைவிட்டு அவன் விழிகள் முகத்துக்குச் சென்று இயல்பாக மீண்டபோது அவை மெல்லிய சிலந்திவலைச் சரடை பின்னிக்கொண்டிருப்பதை கண்டான். விழிகளை பலமுறை இமைத்து அதை நோக்குமயல் என தள்ளமுயன்றான். ஆனால் மேலும் மேலும் அவை தெளிவடைந்தன. அச்சரடுகள் தரையில் படர்ந்து நீண்டு பனிவெண்மைக்குள் புகுந்து மறைந்தன. அவர் குரல் எழுந்தது. பெரும்பன்றியின் உறுமல்போன்ற ஆழமும் கார்வையும் கொண்ட ஒலி. “இங்கு காத்திருக்கிறேன். இந்த மண்ணின்

அடியில்” என்றார் அவர். “சென்று வென்றுவருக… அவர்களை வென்று வருக!”

“நீங்கள் யார்?” என்றான் அர்ஜுனன். அவ்வினாவுடன் இயல்பாக அவன் விழிதிரும்பி ஊர்ணநாபனை நோக்கியது. “அடியிலிருப்பவன். தோற்கடிக்கப்பட்டவன்” என்று அவர் சொன்னார். “என் சரடுகள் அறுபடுவதில்லை…” அவர் முன்னும்பின்னும் உடலை ஊசலாட்டினார். கைகள் மேலே தூக்கி விரிந்தபோது அந்தச் சரடுகள் ஒளியாலானவை என தெரிந்தன. “செல்க… மலையேறிச் செல்க… வென்று மீள்க…” அர்ஜுனன் சித்தம் உறைந்திருக்க அவரை நோக்கிக்கொண்டிருந்தான். “நீ வெல்வாய்… நீ வென்றாகவேண்டும்!”

அவன் அப்போதுதான் அவள் இருப்பை உணர்ந்தான். திரும்பி நோக்கியபோது அவள் துயிலில் என விழிசொக்கி அவர் உடலின் ஆட்டத்திற்கிணைய மெல்ல ஆடிக்கொண்டிருப்பதை கண்டான். அவள் அவருடன் அச்சரடுகளால் பிணைக்கப்பட்டிருந்தவள் போலிருந்தாள். அப்படி எண்ணியதுமே அவன் அச்சரடுகளை பார்த்துவிட்டான். “ஆம்” என்று அவன் சொன்னான். “நான் சென்று வெல்கிறேன்.” அவர் தலை சொடுக்கிச் சொடுக்கி திரும்பியது. காற்றில் துழாவிய கைகள் எதையோ வனைந்தன. கலைத்து மீண்டும் அமைத்தன. “ஆம் ஆம் ஆம்” என்றார். “நீ வென்று வருவாய்… நீ வென்று வந்தாகவேண்டும்!”

மெல்ல அவர் வலப்பக்கமாக சரிந்து விழுந்தார். கால்கள் மெல்ல உதைத்துக்கொண்டு அமைந்தன. அவன் பெருமூச்சுடன் உடலை இயல்பாக்கிக்கொண்டான். அருகே பார்வதியும் பக்கவாட்டில் சரிந்து விழுந்திருந்தாள். அவன் அவளைப்பற்றி

சற்று உலுக்கினான். அவள் விழித்துக்கொண்டு “என்ன?” என்றபின் பூசகரை நோக்கி திகைப்புடன் “என்ன ஆயிற்று?” என்றாள். “விழித்துக்கொள்வார்” என்றான். “என்ன சொன்னார்?” என்றாள். “நான் இன்று காலை கண்ட கனவை விளக்கினார்” என்றான் அர்ஜுனன்.




அவள் விளங்காமையுடன் நோக்கினாள். “நீ ஒரு பெருஞ்சிலந்தியாக பதினாறு கைகள் விரித்திருந்தாய். உன்

கையிலிருந்து எழுந்த ஒளிச்சரடுகளில் நான் சிக்கியிருந்தேன். நீ வெறிகொண்டு நடனமிட நானும் அச்சரடுகளால் ஆட்டுவிக்கப்பட்டு ஆடிக்கொண்டிருந்தேன்” என்றான் அர்ஜுனன். அவள் அவன் சொற்களை உள்வாங்கிக்கொள்ளவில்லை. திரும்பி பூசகரை நோக்கி “என்ன சொன்னார்?” என்றாள். “நீ காலையில் இட்ட ஆணையைத்தான்” என்றான் அர்ஜுனன். “என்ன?” என்று அவள் அவனிடம் திரும்பி கேட்டாள். அவன் “நான் இன்றே கிளம்புகிறேன்” என்றான்.

வெண்முரசு விவாதங்கள்

# கிராதம் - 76

**[ 26 ]**

வெண்பனி ஒளிகொண்டு ஊரை மூடியிருந்த முதற்காலையில் அர்ஜுனன் தன் சிறுகுடிலில் இருந்து கதவைத்திறந்து மென்மயிர்த்தோலாடை உடல்மூடியிருக்க வெண்குஞ்சித் தலையணி காற்றில் பிசிற வெளியே வந்தான். தோளில் வில்லும் அம்புறையும் அமைந்திருந்தன. அவனைக் காத்து அவ்வூரின் அனைத்து இடங்களையும் நிறைத்தபடி கின்னரஜன்யர் நின்றிருந்தனர். அவனைக் கண்டதும் எழுந்த வியப்பொலி பெருமுரசொன்றின் உறுமலின் கார்வையுடன் பரவியது.

பல்லாயிரம் விழிகளுக்கு முன் எழுந்தபோதுதான் அவன் முதன்முறையாக நான் என முழுதுணர்ந்தான். எப்போதுமே விழிகளுக்கு முன்பு நிகழ்ந்துகொண்டிருந்தான் என அப்போது உணர்ந்தான். எவருமறியாத இடங்களின் முழுத்தனிமையில் சென்றுகொண்டிருக்கும்போதுகூட விழியறியா நோக்குகளால்

சூழப்பட்டிருந்தான் என்று அறிந்திருந்தான். அணிகொண்டு மேடையிலெழுந்த நடிகனின் தன்னிலை அவனில் நிறைந்தது. சூழ்ந்திருந்த விழிகள் பெருகி திசைவளைவு என்றாயின.

புன்னகையுடன் அனைவரையும் நோக்கி கைகூப்பினான். அவர்கள் அவனுக்கு வாழ்த்துரைக்கவோ வணங்கவோ செய்யவில்லை. விழிகள் திகைப்புடன் பதைப்புடன் நோக்கி அமைந்திருந்தன. அவர்கள் முந்தையநாளிரவே அங்கு வந்து கூடியிருந்தார்கள் என்பதை நனைந்து சொட்டிக்கொண்டிருந்த மென்மயிராடைகள் காட்டின. பலர் உடல்நடுங்கிக்கொண்டிருந்தனர். இரவில் அவர்கள் மூட்டிய அனல்பள்ளங்கள் அணைந்து புகைவிட்டுக்கொண்டிருந்தன. கடுங்குளிரில் அங்கே அவனுக்காக அவர்கள் காத்திருக்கையில் அவன் உள்ளே கம்பளியின் கனலுக்குள் உடல்சுருட்டி கருக்குழவி எனப் படுத்து துயின்றுகொண்டிருந்தான்.

கனவுக்குள் அவன் அப்பெருவலையில் ஆடிக்கொண்டிருந்தான். நடனமிடுகிறதா உயிர்தப்பத் துடிக்கிறதா அப்பூச்சி? அளியது, சிறியது. ஆனால் துடிநடனமிட்டு முடிவதுதான் எத்தனை சிறப்பானது! அகல்சுடரும் அவிநெருப்பும் கொண்டுள்ள பேறு அது. காலையில் முதற்சங்கின் ஒலி கேட்டபோது அவன் பிறைநிலவணிந்த புரிவேணி பறக்க அனலேந்திய ஒருகையும் வேலேந்திய மறுகையுமாக ஊழ்நடனமிட்டுக்கொண்டிருந்தான். ஊழியொலியெனச் சங்கு. நெருப்பொலியும் அறியாநகைப்பொலியும் எழுந்தமைந்த ஆழத்து இருள்.

எழுந்து அமர்ந்து தன்னை தொட்டுத்தொட்டு தொகுத்துக்கொண்டான். இரண்டு கின்னரஜன்யப் பெண்கள் அகன்ற மரக்குடைவுக் கலத்தில் கொதிக்கும் நீருடன் வந்தனர். அதில் மரவுரியை முக்கி ஆவியெழ உடலை

துடைத்துக்கொண்டான். அவர்கள் அளித்த ஆடைகளை ஒன்றன் மேல் ஒன்றென அணிந்துகொண்டான். உடல்கொண்ட அனலுக்கு அத்தனை காப்பு என எண்ணி புன்னகைத்தான். ஒரு பெண் சிரித்தபடி "உங்களை எண்ணி இங்கே அவள் காத்திருப்பதாக சொல்லச் சொன்னாள்" என்றாள். அர்ஜுனன் புன்னகைத்தான். "அவள் தவத்தால் நீங்கள் வெல்வீர்கள்" என்றாள் இன்னொருத்தி. "வெல்வது அவளே" என்றான் அர்ஜுனன்.

அவள் சிரித்தபோது இன்னொருத்தியும் இணைந்துகொண்டாள். அச்சிரிப்பையா கேட்டேன்? உடனொலித்த முழவு எது? வெளியே முழவொலிகள். மானுடக்குரலிணைந்த முழக்கம். "வெளியே யார்?" என்றான். "குலத்தார்... நீங்கள் செல்லவிருப்பதை அறிந்து வந்துகொண்டே இருக்கிறார்கள்."

முந்தையநாள் முதுபூசகர் எழுந்து வந்து அவன் கின்னரர்நாட்டுக்கு செல்லவிருப்பதைச் சொன்னபோது குலத்தலைவரும் குடிமூத்தாரும் முதலில் பொருள்கொள்ளவில்லை. "இவரை விட்டுவிடலாமென்கிறீர்களா, பூசகரே?" என்றார் குடிமூத்தார் ஒருவர்.

"இவர் சென்றுவிட்டாரென்றால் அவளை என்ன செய்வது? உடன் அனுப்புவதா?" என்றார் குலத்தலைவர். பூசகர் "இவர் மலையேறி கின்னரநாட்டுக்கு செல்கிறார். அங்கே அவர்களை நேர்கண்டு ஒப்புதல்பெற்று திரும்புகிறார்" என்றார். சிலகணங்களுக்குப் பின்னரே அவர்களுக்கு உளம்தெளிந்து "மேலேயா? மேலே செல்வதென்றால்..." என்றார் குலத்தலைவர். "இவர் செல்வார்" என்றார் பூசகர். சற்றுநேரம் நோக்கி நின்றபின் "அவ்வாறே ஆகுக!" என்றார் குலத்தலைவர். திரும்பி

நடக்கையில் மெல்ல அச்சொல் அனைவருக்கும் பரவி முழு அமைதி அவர்களை வளைத்து அழுத்திப்பிணைத்தது. அவர்களின் காலடியோசைகள்மட்டும் ஒலித்தன. அவளும் அவனும் மட்டுமே அந்நிரையில் இயல்பான முகமலர்வுடன் நடந்தனர்.

இல்லமுகப்பை அடைந்ததும் குலத்தலைவர் "பூசகரின் ஆணை அது என்றால் நாங்கள் ஒன்றும் செய்வதற்கில்லை, வீரரே. எங்களை ஆளும் கின்னரமூதாதையரின் சொற்களைக் கேட்கும் நேர்ச்செவி கொண்டவர் அவர் மட்டுமே" என்றார். "அவரிலெழுந்து கின்னரர் ஆணையிட்டிருக்கிறார்கள் என்றால் அவர்கள் உங்களை வரவழைக்க விழைகிறார்கள் என்றே பொருள். யாரறிவார்? அளிகொண்டிருக்கலாம், அருள்வதற்காக இருக்கலாம்" என்றார் இன்னொருவர். "தெய்வங்களை நாம் அளக்கவியலாது" என்றார் இன்னொருவர். அர்ஜுனன் "நான் நாளை காலையிலேயே கிளம்புகிறேன்" என்று சொல்லிவிட்டு அவளை திரும்பியும் நோக்காமல் குடிலுக்குள் சென்றான்.

கைகூப்பியபடி அவன் முற்றத்திலிறங்கியபோது அவர்கள் பிளந்து வழிவிட்டனர். அவன் நடக்கத் தொடங்கியபோது முணுமுணுப்புகளினாலான முழக்கம் அவனைச் சூழ்ந்திருந்தது. அவன் ஊரின் வடஎல்லையை அடைந்தபோது தன்னைத் தொடர்ந்து இளையவர் சிலர் வந்துகொண்டிருப்பதை செவிகளால் அறிந்தான். கின்னரஜன்யநாட்டின் எல்லை என குறிக்கப்பட்டிருந்த மலைப்பாறையில் பள்ளச்செதுக்கு ஓவியமாக கின்னரன் ஒருவன் கைவேலுடன் நின்றிருக்கும் சிலை இருந்தது. அவன் அதை அணுகி ஒரு கணம் நோக்கிவிட்டு கடந்துசென்றான்.

அப்பால் மலைச்சரிவில் கரியபாறைஎன மலைஎருது ஒன்று மேய்ந்துகொண்டிருந்தது. அவன் காலடிகளைக் கேட்டதும் அது தலைதூக்கி நோக்கியது. அதன் உடலெங்கும் தொங்கிய கரியமுடியில் பனிமணிகள் சிறிய காய்கள்போல தொங்கிக்கிடந்தன. அவன் அருகணையக் கண்டதும் அது தலையைத் தாழ்த்தி விழிகளை உருட்டி துருத்தி என மூச்சுவிட்டது. முன்காலால் ஈரமண்ணை கிளறியது. அர்ஜுனன் அதை நோக்கியபடி நடந்து அணுகியபோது அப்பெரிய உடலில் எதிர்பார்க்கமுடியாத விரைவுடன் திரும்பிப் பாய்ந்து மலைச்சரிவில் மேலேறிச் சென்றது. அதன் கால்பட்ட உருளைக்கற்கள் உருண்டு கீழே வந்தன. கிளறப்பட்ட மண் புண்போலத் தெரிந்தது. சேற்றின் புதுமணம் எழுந்தது.

அவன் தனக்குப் பின்னால் இளையவர் சிலர் ஓடிவருவதைக் கேட்டு நின்றான். மூச்சிரைக்க வந்து அவன் முன் நின்ற நால்வரில் முதல்வன் “நாங்களும் வருகிறோம், இளவரசே” என்றான். அர்ஜுனன் புன்னகைத்தான். “போதும் இந்த அடிமைவாழ்வு… அறுத்துக்கொண்டு சென்றாகவேண்டும் இந்த எல்லைகளை…” என்று இன்னொருவன் சொன்னான். “நீங்கள் போரிடச் செல்கிறீர்கள் என நாங்கள் அறிவோம்… நீங்கள் எங்களுக்காக தனிமையில் இறந்தால் அந்தப் பழியிலிருந்து நாங்கள் விடுபட முடியாது. உடன்வருகிறோம், உடன்மடியவும் சித்தமாக உள்ளோம்” என்றான் ஒருவன்.

“நான் போரிடச் செல்கிறேன் என எப்படி அறிந்தீர்கள்?” என்றான் அர்ஜுனன். “நேற்று என் கனவில் அப்போரை நான் கண்டேன்” என்றான் முதல்வன். “நான் அதை இவர்களிடம் சொன்னேன். இவர்களும் அக்கனவை வேறுவகையில் கண்டிருக்கிறார்கள்.” இன்னொருவன் “வேறுபலரும் அதே கனவை

கண்டிருக்கிறார்கள்” என்றான். “ஆம், அது என் போர்” என்றான் அர்ஜுனன். “இல்லை, அது எங்களுக்கான போர். அதுவும் எங்கள் கனவில் வந்தது…” என்றான் முதல்வன். “அவர்கள் உங்களுக்காக அங்கே காத்து நின்றிருப்பதைக் கண்டோம்…”

அர்ஜுனன் புன்னகையுடன் அவன் தோளில் கைகளை வைத்தான். “நன்று. நான் எனக்கிடப்பட்ட பணியை நிறைவேற்றுகிறேன். நீங்கள் எண்ணுவதுபோல நான் தோற்பவன் அல்ல. திசைவென்றவன், தேவர் அருள்கொண்டவன். வென்று மீள்கிறேன்.” ஒருவன் “மீளா அடிமைத்தனமென்றால் என்னவென்று இன்று அறிந்தோம்” என்றான். “முன்பு எப்போதோ உடல்பின்னி ஒன்றென வாழ்ந்தோம் என்கின்றன கதைகள். ஆனால் அன்று அனைவரும் ஒற்றைப்பெருந்திரளாக இருந்தோம். இன்று ஒவ்வொருவருக்கும் அகமென ஒன்று உருவாகியிருக்கிறது. அருமணியென ஒளிவிடும் பெருநஞ்சு. அதைச் சுமந்தலைகிறோம்.”

“இரக்கமற்ற தலைவனுக்குத் தேரோட்டும் பாகன் எங்கள் உள்ளம்” என்றான் இன்னொருவன். “உள்ளமும் உள்ளாழமும் முரண்படுவதன் பெரும்பதைப்பையே இங்கே வாழ்வென கொண்டிருக்கிறோம். இளமையில் திமிறித்துடித்து தவித்து இயலாமையை உணர்ந்து அடங்குவதையே இங்கே அமைதி என்று அறிகிறோம். இனியும் தாளமுடியாது. அதற்கெதிரான போரில் ஒரு துளிக் குருதியேனும் சிந்தினோம் என்றாகட்டும்” என்றான். “இது எனக்கிடப்பட்ட போர். இதில் நான் எவரையும் உடன்சேர்க்கவியலாது. அனைத்துப் போர்களும் கல்விகள்தான் எனக்கு. என் மெய்மையைத் தேடி சென்றுகொண்டிருக்கிறேன். மீண்டுவந்து பார்ப்போம்” என்றபின் அர்ஜுனன் நடந்தான்.

மலையடுக்குகள் மேலெழுந்து வந்து திசைமறைத்தபடியே இருந்தன. பின்னர் அவன் குவைமடிப்புகளில் வெண்பனி விழுந்து வேல்முனை வடிவில் நீண்டிருப்பதைக் கண்டான். விழுந்த மேலாடை என, வெண்ணிற ஆட்டின் முகம் என பனியின் வடிவுகள். வானில் கட்டிய வெண்பட்டுத் தோரணம் என பனிமுகடுகளின் நிரை தெரியலாயிற்று. குளிரை முதலில் காற்றென பின் நீரென பின் இரும்பென உணரலானான். குளிரில் சொற்களும் நடுங்கி உறைந்துவிடுவதை 'நாரை' என்னும் ஒற்றைச்சொல் நெடுநேரம் உள்ளே நின்றுகொண்டிருப்பதிலிருந்து உணர்ந்தான். நாரை என்று சொல்லிக்கொண்டபோது அச்சொல் அசைந்தது. பனிமலை என நகர்ந்து நாரை என்றே நின்றது. நாரை என எதை சொல்கிறேன்? வெண்ணிற நாரை. இந்த மலை ஒரு பெருநாரை. நாரைக்கூட்டம்.

நாரைகள் அவனைச் சூழ்ந்து சிறகுகோட்டி அமர்ந்து நோக்கிக்கொண்டிருந்தன. அவற்றின் கூரலகுகளின் முனையை மெல்லிய தன்னுணர்வாக அறியமுடிந்தது. ஒரு சிறு கலைவில் அவை சிறகுவிரித்து எழுந்து பறந்து வானை மூடிவிடக்கூடும். அவற்றின் குரல் உறையிலிருந்து வாளை உருவுவதுபோல, முரசுத்தோலை கோல்வருடிச்செல்வதுபோல செம்புக்கலம் இழுபடுவதுபோல செவிதுளைக்க ஒலிக்கக்கூடும். வெண்நாரைகள் குளிர்ந்திருந்தன. வெண்நாரைகள் நடுங்கிக்கொண்டிருந்தன. மெல்லிய உறுமல். ஓநாய். அல்லது யானை. இது வெள்ளை யானை. வயிறதிரும் உட்பிளிறல்.

அவன் கண்ணெதிரே பெரிய பனிமலை ஒன்றின் விலா அசைந்து ஆடையென மெல்ல நழுவி கீழிறங்கத் தொடங்கியது. அதன் கீழெல்லையில் வெண்நுரையலை

ஆடைநுனியென நெளிந்து வளைந்தெழுந்தது. ஒருகணம் உள்நடுங்கியபின்னரே அது மிக அப்பாலிருக்கிறதென்பதும் அதற்கும் தனக்கும் நடுவே பெரும்பள்ளமொன்று கீழிறங்கிச் செல்கிறதென்பதும் சித்தத்தை வந்தடைந்தன. வெண்ணிற அருவியென இறங்கியது பனிப்படுகை. கீழே எங்கோ காற்று அறைபட்டுப் பொங்கி மேலெழுந்து வந்து அவனை மூடி அதிரச்செய்து கடந்துசென்றது. மலைமுகடுகள் எங்கெங்கோ ஓலமிட்டுக்கொண்டிருந்தன.



அவன் நெடுநேரம் சென்றுகொண்டிருந்தான். அது ஒரு கணத்தின் உள்சுழல்விரிவுதான் என்றும் தோன்றியது. அமர்ந்து ஓய்வெடுத்தான். தன் ஆடைகளையே கூடாரமாகக் கொண்டு உள்ளே ஒடுங்கிக்கொண்டபோது நத்தை என உணர்ந்தான். முதற்சில நாட்கள் கையிலிருந்த சுடப்பட்ட உலர்ந்த ஊனையே மென்று உண்டான். பின்னர் வரையாடு ஒன்றை வீழ்த்தி அதை சுட்டு உண்டான். மீண்டும் மீண்டும் சென்றுகொண்டே இருந்தான். பதினேழு நாட்களுக்குப்பின் அவன் மலையுச்சியில் முதல் கின்னரனைக் கண்டான்.

அவன் அங்கே ஒரு சிறிய அசைவெனத் தோன்றினான். அங்கிருந்து வந்த முதல் அம்பை அர்ஜுனனின் உடல் இயல்பாகத் தவிர்த்தது. மேலும் மேலுமென வந்த அம்புகளை பாறையொன்றுக்குப்பின் மறைந்து தவிர்த்தான். மலைவிளிம்பில் மேலும் நான்கு கின்னரர் தோன்றினர். அவன் அம்புபட்டு ஒருவன் கீழே விழுந்தான். மேலும் ஒருவன் திரும்புவதற்குள் விழுந்தான். மீண்டும் ஒருவன் தலைதோன்றியதுமே விழுந்ததும் அவர்கள் புரிந்துகொண்டனர். பின்னர் நெடுநேரம் அங்கே அசைவு தெரியவில்லை.

பின்னர் முழவோசை எழத்தொடங்கியது. அதன் மொழியை அர்ஜுனன் புரிந்துகொண்டான். மூன்று அம்புகளை நேர்மேலே எழுப்பினான். அவற்றின் மொழியை அவர்கள் புரிந்துகொண்டதும் மலைவிளிம்பில் வெண்ணிறமான தலையணி அணிந்த கின்னர முதியவன் ஒருவன் தோன்றினான். கைகளை விரித்து ஆட்டி அவனை வரவேற்றான். அர்ஜுனன் எழுந்து மீட்டுக் கைவீசினான். அங்கிருந்து கின்னரர்கள் நீண்ட சரடு ஒன்றில் ஒருவர் பின் ஒருவராக இறங்கி அவனை நோக்கி வரலாயினர்.

அர்ஜுனனை அவர்கள் மலைப்பிளவு ஒன்றுக்குள் அழைத்துச்சென்றனர். அதன் முகப்பை பார்ப்பதுவரை நெடிதுயர்ந்த மலை விலா நோக்கி செல்வதாகவே அவன் எண்ணிக்கொண்டிருந்தான். ஒரு குன்றைச் சுற்றிக்கொண்டு அப்பால் சென்று அந்தத் திறந்த வாயைக் கண்டபோது அதைப்போல ஒரு கோட்டையை கண்டதே இல்லை என உணர்ந்தான். உள்ளே சென்றபோது குளிர் எண்ணியிராதபடி குறையத் தொடங்கியது. உலைமுகம் என நீராவி வந்து முகத்திலறைய மெல்லிய வியர்வை பொடித்தெழலாயிற்று.

வெண்ணிறக் கோட்டையெனச் சூழ்ந்திருந்த பனிமலைகளின் நடுவே பச்சைக் குறுமரங்கள் செறிந்த சோலை தெரிந்தது. அங்கிருந்து நுரைகிளம்புவதுபோல வெண்மயிராடை அணிந்த மக்கள் கிளம்பி அவர்களை நோக்கி வந்தனர். இடையிலிருந்த குழந்தைகளும் பருத்திப்பூக்கள்போல தெரிந்தன. சிறிய வட்டமுகங்களில் ஒட்டிவைக்கப்பட்ட பச்சைமணிக் கண்கள். மொட்டுபோன்ற உதடுகள். விழிகளிலெல்லாம் அச்சமும் வியப்பும்தான் இருந்தது. அவன் திரும்பி நோக்கியபோது குழந்தைகள் அலறியபடி அன்னையரை பற்றிக்கொண்டன. பெண்கள் மூச்சொலியுடன் பின்னால் சென்றனர். அவர்கள் அனைவரும் அவன் தோளுக்குக் கீழே நின்றிருக்கும் உயரம் கொண்டிருந்தனர். பெண்கள் அவன் இடையளவே இருந்தனர்.

அவனை அவர்களின் ஆலயமாகத் தெரிந்த குகை ஒன்றுக்கு அழைத்துச்சென்றனர். அதன் வாய்முகப்பில் அமைந்திருந்த பலிபீடத்தருகே கொண்டுசென்று நிறுத்தினர். அப்பால் கருங்கல்லால் ஆன மிகச்சிறிய இருக்கை. சோலைக்குள் அமைந்திருந்த உயரமற்ற கல்குடில்களிலிருந்து திரண்டு வந்த

மக்கள் அவர்களுக்குப் பின்னால் கூடிநின்று அவர்களை நோக்கிக்கொண்டிருந்தனர். முழவோசையும் மணியோசையும் தொலைவிலென கேட்டன. பின் நேர்முன்னாலிருந்த மலையின் மடிப்பிலிருந்து எழுந்தன. பின்னர் குகைக்குள் ஆழத்தில் அதன் மாற்றொலி எழுந்தது.

அவன் அப்பால் கின்னரர்களின் தலைவர் தன்னவர் சூழ வருவதைக் கண்டான். அவனுடன் வந்தவர்கள் மீட்டிய முழவும் எழுப்பிய மணியும் ஓசையிலா அசைவாக இருக்க சூழ்ந்த மலைகள் கார்வையுடன் அவ்வொலியை சுழற்றி நிறைத்துக்கொண்டிருந்தன. தலைவர் வெண்மயிராடை அணிந்து தலைக்குமேல் மூன்றடுக்காக உயர்ந்த வெண்மயிர் முடிசூடி கையில் வளைகோலுடன் வந்தார். அவருடைய தாடி இடைவரை வெண்ணிற அலைகளாகத் தொங்கியது. வெண்குழல்கள் தோளில் சரிந்திருந்தன. அணுகுந்தோறும் அவை அவர் அணிந்திருப்பவை எனத் தெரிந்தது. அவர்கள் ஒரு சடங்கென நடந்து அவன் நின்றிருந்த குகைமுகப்பை அடைந்தனர்.

அவர்கள் அணுகி வந்ததும் முன்னால் வந்த முதுமகன் ஒருவன் அர்ஜுனனிடம் “அரசரை வணங்குக!” என்றான். அச்சொல் அர்ஜுனனை திகைக்கச் செய்தது. அஸ்தினபுரியின் கிளைமொழி அது. அவன் விழிகளின் திகைப்பை நோக்கி புன்னகைத்தபடி அவன் “உன் உள்ளத்திலிருந்து அம்மொழியை எடுக்கிறேன்” என்றான். அவன் பேசுகிறானா விழிகளால் உணர்த்துகிறானா என அவனால் புரிந்துகொள்ளமுடியவில்லை. அவன் அரசனை முழந்தாளிட்டு வணங்கினான். அரசர் தன் கோல்சாய்த்து அவனுக்கு வாழ்த்தளித்தார்.

இருவர் சென்று அப்பால் நின்றிருந்த பட்டைக்கற்கள் இரண்டை விலக்கிச் சரித்தனர். அரசனுக்குரிய கல்பீடம் பச்சைநிற ஒளிகொள்ளத்தொடங்கியது. மழைக்காலச் சுனைநீரின் நிறம் மேலும் ஒளிகொண்டு உச்சிவெயில் பட்ட நீரென ஆயிற்று. அவர் அதில் ஏறி அமர்ந்தார். அவர் கையிலிருந்த கோலை ஒருவர் பெற்றுக்கொண்டார். அவருடைய சிறிய விழிகள் அவனை நோக்கி சற்றுநேரம் நிலைத்திருந்தன. அவன் எண்ணிய அனைத்துடனும் அவரும் உடனிருந்தாரென்று உணர்ந்தபோது உள்நடுக்குடன் தன்னை கட்டுப்படுத்தினான். அவர் புன்னகையுடன் "அந்தக் குகைதான்" என்றார்.

அவன் திரும்பி அதைப் பார்த்தான். "அது இங்கு எப்போதும் திறந்திருக்கிறது" என்று கின்னர குலத்து அரசர் சொன்னார். "அது எங்கள் மூதாதையர் வந்த வழி... இந்த மலையுச்சியில் இருந்து விண்ணுக்குச் செல்லும் பாதையும் அதுவே." அவர் அமர்ந்திருந்த பீடம் இளந்தளிர் என ஒளிகொண்டது. அதன்மேல் அவர் பச்சைப்புழுபோல உடல் மிளிர அமர்ந்திருந்தார். "மானுடனே, நாங்கள் அங்கே விண்ணுருவிலிருக்கிறோம். இது எங்கள் மானுடத்தோற்றம். நீ போரிடவேண்டியது அவர்களிடம்தான்."

அர்ஜுனன் அவருடைய விழிகளை நோக்கிக்கொண்டு நின்றான். கூர்ந்து நோக்க நோக்க அவை நோக்கு தொடாத தொலைவுக்கு அகன்றுகொண்டிருந்தன. "இங்கிருப்பவை தனிப்பொருட்கள். அவற்றை இணைத்திருக்கும் சரடு சொல் எனும் சொல்லால் சுட்டப்படுவதுமட்டுமே. சொல்பின்னி எழுகின்றது புவி" என்றார். "அங்கு மண்ணில் வாழ்பவர்களிடம் திகழ்வது அவர்களின் சொல். அது வேர்விட்டு முளைத்தெழுந்த அடியாழமே எங்கள்

சொல்வெளி. எங்கள் சொல் முளைத்தெழுந்த ஆழம் அக்குகைக்குள் வாழும் சொல்” என்றார்.

“சொல்வெளியை அள்ளி முடிச்சிட்டு அமைத்த மையமே வேதம்” என அவர் தொடர்ந்தார். “அது ஒரு பீடம். அங்கமைகின்றன தெய்வங்கள். அது ஒரு படைக்கலம். அதன் கூரே நெறிகள். வேதத்தை உறுதிசெய்பவர்கள் மொழியை கட்டுகிறார்கள். மொழியை ஆள்பவர்கள் புவியை வெல்கிறார்கள்” என்றார் அவர். அர்ஜுனன் அச்சொற்களை அவருடைய ஒவ்வொரு உதடசைவுடனும் இணைந்து கேட்டபடி நின்றான். “சென்று அதை வென்று வருக… எங்கள் வேதத்தின்மேல் ஒரு சொல் உன்னுடையது அமையும் என்றால்மட்டுமே நீ எங்களை வென்றாயென்று பொருள். சென்று மீள்க!”

அவர் கைகாட்ட அர்ஜுனனின் இருபக்கங்களிலும் நின்றவர்கள் “வருக!” என்றனர். அவன் எழுந்து தன் வில்லுடன் அவர்கள் இட்டுச்சென்ற வழியே நடந்தான். அவனைச் சூழ்ந்திருந்த முகங்கள் அலைநீரில் குமிழிகள் என அசைந்தன. ஒரு சொல்லும் இல்லாத நோக்குகள். அவன் அக்குகை வாயிலை அடைந்ததும் நின்றான். அவர்கள் “செல்க!” என்றபின் திரும்பிச்சென்றனர். எடைகொண்ட கால்களை சித்தத்தால் உந்தி அசைத்து முன்னெடுத்து அவன் உள்ளே நுழைந்தான்.

அக்குகை வெண்பனியாலானது. வெண்பனியாலான இருள் நிறைந்திருந்தது உள்ளே. அவன் காலடிகள் உள்ளிருந்து அவனை நோக்கி அணுகிவருவதைப்போல உணர்ந்தான். அவன் அங்கேயே நிற்க அவனிலிருந்து பிரிந்த பிறிதொன்றென அவன் முன்னால் சென்றான். அவனை ஆடிகள் என சூழ்ந்துகொண்டன பனிக்குகைச் சுவர்கள். முற்றிலும் ஓசையற்றிருந்தது

அவ்விடம் என உணர்ந்தபோது அறிந்தான் ஆடியென்றாலும் அவை அவன் பாவையை காட்டவில்லை.

முன்னரே அறிந்த இடம்போல் அது தோற்றம்காட்டுவது எதனால் என்று அவன் எண்ணிக்கொண்டான். ஒவ்வொரு அடிவைப்பையும் முன்னர் பலமுறை செய்திருந்தான். முன்னர் அறிந்த எண்ணங்களையே கொண்டிருந்தான். இந்தக் கணம் இப்படியே நிகழ்ந்திருக்கிறது. இப்படியே அடுத்த கணமென்றாகியிருக்கிறது. இந்த இடம் எது? எங்குள்ளது இந்த ஆழம்? அக்கணம் எதிரே முதல்முறையாக தன் ஆடிப்பாவையை கண்டான். திடுக்கிட்டு அசைவிழந்து நின்ற அவனை நோக்கி அது மெல்ல வந்துகொண்டே இருந்தது.

அது வெளியே அவன் கண்ட கின்னர குலத்தரசர் என அறிந்தான். வெண்ணிறத்தில் வெண்பாவை எனத் தெரிந்த அவ்வசைவை எப்படி நான் என உணர்ந்தேன் என அவன் வியந்தான். “போருக்கெழுக!” என்றது பெருங்குரல் ஒன்று. அவர் கையில் அந்த நீண்ட வளைதடி தோன்றியது. அது சுழன்று தன்மேல் விழுவதற்குள் அவன் காண்டீபத்தை எடுத்து வளைத்து அவர்மேல் அம்பெய்துவிட்டிருந்தான். மறுகணமே அவருடன் அவன் ஒரு போரில் ஈடுபட்டுவிட்டிருந்தான். அவன் செய்த அத்தனை போர்களிலும் வில்லுடன் முற்றிலும் இணைந்து நெளிந்து நடனமிட்ட அவன் உடலுக்குள் விலகி விழிமட்டுமேயாக நோக்கி நின்றிருந்த உள்ளம் அப்போரில் முற்றிலும் ஈடுபட்டு தன்னை அழித்துக்கொண்டிருந்தது.

முதலில் அவ்வுரு கரைந்து எழுந்த துரோணரின் உருவம் கண்டு அவன் திகைத்தான். மறுகணமே அவ்வுருவை யமனின் தண்டாயுதத்தால் அடித்து சிதறடித்தான். மறுகணமே இடப்பக்கம் பெருநகைப்புடன் எழுந்த பீஷ்மரை குபேரனின்

அந்தர்த்தானமென்னும் அம்பால் வீழ்த்தினான். அவர் நிலத்தமைவதற்கு முன்னரே பின்னால் ஜயத்ரதன் வில்லுடன் எழுந்தான். வருணனின் பாசவாளியால் அவனை அவன் கொன்றான். இடிபோல நாண் ஒலித்தபடி முன்னால் கர்ணன் தோன்றினான். அர்ஜுனன் வஜ்ரத்தை அம்பாக்கி அவனை உடைத்து வீழ்த்தினான்.

வெற்றிநகைப்புடன் அவன் முன்னால் செல்ல எதிரே வில்லுடன் எழுந்த இளைய யாதவனைக் கண்டு அவன் திகைத்து செயலிழந்தான். கரியவனின் வெறித்த விழிகள் அவனை அறியவில்லை. அம்முகத்திலெழுந்த பெருஞ்சினத்தைக் கண்டு அர்ஜுனன் பின்னடைந்தான். அவனை நோக்கி வந்த அம்பை தடுக்கும்பொருட்டு மண்ணில் விழுந்து புரண்டு எழுந்தான். “யாதவரே…” என்று அவன் கூவினான். “என் முன் நில்… இல்லையேல் தலைகொடுத்து விழு!” என்று கண்ணனின் குரல் ஆணையிட்டது. “இல்லை, இப்பிறப்பில் எவர் முன்னும் தோற்பதில்லை” என்றபடி அர்ஜுனன் அம்புகளை எய்தான்.

அவன் தொடுத்த அம்புகளெல்லாம் சென்று ஆடிப்பாவையிலென கரியோன் மேல் விழுந்து ஓசையுடன் தெறித்தன. போர் மட்டுமே அளிக்கும் பேருவகையுடன் அவன் வெறிகொண்டு நகைத்தபடி அம்புகளைப் பொழிந்தான். இக்கணம் இறப்பேன், இதோ பிறந்தெழுந்தேன். மீண்டும் ஓர் இறப்பு. கணமே வாழ்வென்றாகும் காலப்பெருக்கு. அம்புகளால் ஆன காலம். அம்புகள் சூழ்ந்த வெளி. அம்புகளால் இவனுடன் இணைக்கப்பட்டிருக்கிறேன். இந்த அம்புவலையில் சிக்கியிருப்பவன் நான், மறுபக்கம் அவன். அம்புத்தூளி ஒழிந்தது. அருகிருந்த கற்களைப் பெயர்த்து அம்புகளென

எய்தான். அவன் ஆடைகள் கிழிந்து அகன்றன. அணிகள் உடைந்தன. உடலெங்கும் தைத்த அம்புகளிலிருந்து குருதி தெறித்து குகைச் சுவர்கள் செந்நிறத் தசைப்பரப்பென்றாயின.

அவன் எதிரே நின்றுபோரிட்ட இளைய யாதவனின் முகம் இருள்நீரில் நீந்தும் மீனென வாய்பிளந்து பல்நிரை காட்டியது. அவன் அம்புகளை உடலெனும் கவசத்தால் ஏற்று ஆமையென குவிந்தெழுந்தது. அம்புகளைத் தொடுத்து பன்றியென உறுமியது. குருதிவெறிகொண்டு சிம்மம் என முழங்கியது. இவன் குறியோன். இவன் அனலோன். இவன் வில்லுடன் எழுந்த ராகவன். இவன் ஆழியிலமைந்தவன். இவன் இருளென சுருண்டு அவனை ஏந்தியவன். இவன் ஜயன், இவன் விஜயன். இருளெனப் பெருகி எண்ணிலாக் கைகளுடன் அவனைச் சூழ்ந்துகொண்டது விண்ணளந்த பேருருவம்.

அவன் போரிட்டபடியே பின்னகர்ந்தான். வில் உடைந்து தெறிக்க படைக்கலமேதுமில்லாமல் வெறுங்கையுடன் குருதிமூடிய வெற்றுடலுடன் நின்று தவித்தான். அவனை கரிய அலையென பெருகியணைந்தது யாதவனின் விண்ணுருவம். கொலைவிழிகள். குருதிச்சுவையூறிய வாயில் கொடுஞ்சிரிப்பு. அறியாத்தவிப்பில் அவன் பாய்ந்து பற்றி கிழிக்கமுற்பட்ட குகைச்சுவரில் ஓர் இடைவெளி விழுந்தது. அதனூடாக அவன் தலைகீழாக பிதுங்கி சிறுகுகைவழியில் வழிந்த சேற்றுநீரினூடாக விரைந்து சென்று எங்கோ விழுந்தான்.

குரல்கள் அவனை சூழ்ந்துகொண்டன. கூச்சல்கள். “விலகுங்கள்! விலகுங்கள்!” எனும் ஒலிகள். அவனுக்கு குளிர்ந்தது. கைகளை மார்புடன் சேர்த்து உடல்சுருட்டி குறுகிக்கொண்டான். விழிதிறக்கமுடியாமல் தலை எடைகொண்டிருந்தது.

மென்மையான சூடான குருதிச்சேற்றில் புதைந்துகிடக்க விழைந்தான். அச்சேறு அவன் எண்ணங்களையும் மூடி அவனை தன்னில் அழுந்தவைத்துக்கொண்டது.

[வெண்முரசு விவாதங்கள்]

# கிராதம் - 77

**[ 28 ]**

அர்ஜுனன் விழித்துக்கொண்டபோது கல்லால் ஆன சிற்றறைக்குள் வெம்மைமிக்க தசையென அணைத்திருந்த மென்மயிர்ப் போர்வைக்குள் இருந்தான். உள்ளே எரிந்த கனலின் ஒளியில் அச்சிற்றறை செங்குருதி என ஒளி நிறைந்திருந்தது. கைகளை ஊன்றி எழமுயன்றபோதுதான் உடலில் ஆழ்ந்த வலியை உணர்ந்தான். முனகியபடி படுத்துக்கொண்டபோது விழிகளுக்குள் அலையலையாக குருதியின் ஓட்டத்தை கண்டான். கீழே விழுந்துகொண்டே இருப்பதைப்போல் உணர்ந்தான். அவன் படுத்திருந்த மென்மயிர்ப் படுக்கை அலைபாயும் நீர்ப்பரப்பெனத் தோன்றியது.

அவனுடைய முனகலை அவனே கேட்டான். மெல்ல எழுந்து அவனருகே வந்து குனிந்த முகத்திலிருந்து பிறிதொரு முனகல் எழுந்தது. “யார்?” என்று அவன் அஞ்சிய குரலில் கேட்டான். “நான் பூசகன். அஞ்சவேண்டியதில்லை, இளைய பாண்டவனே” என்றார் பூசகர். “உன்னை நான் மீட்டு இங்கே கொண்டுவந்தேன்.” அர்ஜுனன் கண்களை மூடி எண்ணங்களால் காலங்களை தொட்டுவிட முயன்றான். சலித்து சோர்ந்து

பெருமூச்சுடன் ஓய்ந்தான். “எனக்கு ஒன்றும் தெரியவில்லை” என்றான்.

“உன்னை அவர்கள் கொண்டுவந்து இவ்வூர் எல்லையில் போட்டுவிட்டு சென்றிருந்தனர். கடும் காய்ச்சல் கண்டிருந்தது. உடலெங்கும் காயங்கள் சீழ்கொண்டிருந்தன” என்று அவர் சொன்னார். “புண்கள் ஆற இன்னும் நாட்களாகும். ஆனால் உயிர்பிழைத்துவிட்டாய்.” அர்ஜுனன் கண்களை மூடியபடி “ஆம், நான் எளிதில் சாகமாட்டேன்” என்றான். அவர் “நீ மீண்டு வருவாய் என நான் எண்ணவில்லை. உன்னை மேலே அனுப்பியபோதிருந்த நம்பிக்கை நீ சென்றகணமே முற்றிலும் அழிந்தது” என்றார்.

அர்ஜுனன் “நான் அவர்களை எதிர்கொள்ள முடியவில்லை” என்றான். “ஆம், அவர்களின் வேதம் வல்லமை மிக்கது. அது நம் சொற்கள்மேல் படர்ந்து அனைத்தையும் தான் இணைத்துக்கொண்டுவிடுகிறது. நம்முடன் நாமே போர்புரியும்படி செய்கிறது” என்றபடி அவர் அருகே பீடத்தில் அமர்ந்தார். “அதை மகாநாராயணம் என்கிறார்கள்.” அவன் திடுக்கிட்டு போர்வையை விலக்கிவிட்டு எழுந்தமர்ந்து “என்ன சொன்னீர்கள்?” என்றான். “அவர்களின் தெய்வம் ஏந்திய படைக்கலம் அது” என்றார் பூசகர். “உன்னை உளமயக்குக்கு ஆளாக்கினேன். நிகழ்ந்ததை எல்லாம் உன் சொற்களினூடாக அறிந்துகொண்டேன். நீ சென்ற அக்குகை சுக்லபிலம் எனப்படுகிறது. அதற்குள் உறையும் தெய்வத்தை நீ எதிர்கொண்டாய்.”

அவன் அச்சொல்லை வறண்ட உதடுகளால் உச்சரித்தபடி தலையைச் சாய்த்து கண்களை மூடிக்கொண்டான். அவன் விழியோரம் வழிந்த நீர் கன்னங்களில் இறங்கியது. மூக்கை

உறிஞ்சும் ஒலி கேட்டு அவர் மீண்டும் அருகே குனிந்தார். “நீ தோற்கவில்லை, இளையவனே. பெருந்தெய்வம் ஏந்திவந்த படைக்கலத்தின் முன்புகூட நிமிர்ந்து நின்றிருக்கிறாய். உன்னை ஆட்டுவிக்கும் ஊழ் பெரிது.” அர்ஜுனன் ஆம் என தலையசைத்தான். “நீ எஞ்சியிருப்பது எதனால் என நான் எண்ணி எண்ணி வியக்கிறேன். நானறியா பெருநோக்கம் ஒன்று இருக்கலாம்.”

அர்ஜுனன் தன் காய்ச்சலை காதுகளில் உணர்ந்துகொண்டு அசைவிலாது கிடந்தான். கைகால்களில் இனிய தளர்வும் கண்களில் அனல்பட்ட எரிதலும் இருந்தன. மூச்சு மூக்குத்துளைகளை வறளச்செய்தது. ஆனால் வாயில் எச்சில் கசந்தது. “நான் இங்கிருப்பதை அவள் அறிவாளா?” என்றான். அவர் “இல்லை, இவ்வூரில் எவரும் அறியவில்லை” என்றார். அவன் பெருமூச்சுடன் “நன்று” என்றான். “பால் அருந்துகிறாயா?” என்றார் பூசகர். “தேவையில்லை… என் நா சுவையிழந்துள்ளது” என்றான் அர்ஜுனன்.

“ஆம், ஆனால் தொண்டைக்கு பால் தேவையிருக்கும்” என்றபடி அவர் எலும்புகள் ஒலிக்க மூச்சால் உடலை உந்தி எழுந்துசென்று அருகிருந்த அனலில் சிறுசெம்புக்குடுவையை வைத்து வெம்மையூட்டி அதிலிருந்த பாலை மூங்கில்குவளையில் ஊற்றி எடுத்துவந்தார். “நேற்றுவரை உனக்கு சிறு குழாய் வழியாக உணவூட்டினேன். இது மூலிகைப்பால். உடலுறுப்புகள் அனைத்தையும் நனைத்து உயிரூட்டுவது” என்றார். அர்ஜுனன் கைகளை ஊன்றி விலா எலும்புகள்மேல் மிகக்கூரிய வலியை உணர்ந்தபடி எழுந்தமர்ந்து அதை வாங்கி அருந்தினான்.

நாவில் பால் பட்டதுமே உடல் குமட்டியது. ஒவ்வாத எதையோ வாயில் கொண்டதுபோல. ஆனால் தொண்டை இனிதாக அந்த எரிதலை பெற்றுக்கொண்டது. வயிற்றிலிருந்த அனல் அது சென்று படிந்ததும் அணைந்தது. சிலகணங்களில் குருதியெங்கும் இளவெம்மையாக அது ஓடிநிறைவதை உணரமுடிந்தது. “உப்பும் இனிப்பும் கலந்த பால்” என்று அவர் சொன்னார். “மறுபிறப்படைந்துவிட்டிருக்கிறாய். பாலே அமுது” என புன்னகைத்தபோது கூழாங்கற்பற்கள் தெரிந்தன. தலை ஆடியது. “நான் உன்னை மீட்டதை தெய்வங்களுக்கு சொன்ன மறுமொழி என்றே எடுத்துக்கொள்கிறேன்” என்றபடி குவளையை திரும்பக்கொண்டுசென்று வைத்தார்.

“நான் உயிர்வாழ விரும்பவில்லை” என்று அர்ஜுனன் சொன்னான். “திசைவென்று நான் அடைந்த படைக்கலங்களனைத்தும் பொருளற்றவை என இப்போது உணர்கிறேன்.” அவர் புன்னகைத்து “எப்போதும் ஒரு படைக்கலம் அப்பால் இருந்துகொண்டிருக்கும்” என்றார். “அதன் பொருளென்ன என்று எனக்குப் புரியவில்லை” என்றான். அவன் சொல்வதென்ன என்று அவர் உணர்ந்து புன்னகைத்து “அங்கிருந்துதானே இப்பயணம் தொடங்கியது?” என்றார். அவன் திகைப்புடன் அவரை நோக்கினான். “அவ்வண்ணமென்றால் நான் தேடுவதை இன்னமும் அடையவில்லை அல்லவா?” என்றான். அவர் “ஆம்” என்றார்.

அவன் பெருமூச்சுடன் உடலை தளர்த்தினான். அவனுள் எழுந்த எண்ணங்களைத் தொடர்ந்துசென்று சில சொற்களை எடுக்க முயன்றான். ஆனால் நழுவி நழுவிச் சென்றன அவை. அவற்றை தேடிச்செல்லும்தோறும் அவன் தன்னிலை அழிந்துகொண்டிருந்தது. தன் குறட்டையொலியை

கேட்டுக்கொண்டு அவன் விழித்தான். வாய் ஒழுகியிருந்தது. “துயின்றேனா?” என்றான். கணப்பருகே உடலைச் சுருட்டிப் படுத்திருந்த அவர் “ஆம், சற்றுநேரம்” என்றார். “உடல் இத்தனை சோர்வை அறிந்ததே இல்லை” என்றான். “இறந்துபிறக்காமல் மெய்யான எதையும் அறிந்துவிடமுடியாது, பாண்டவனே” என்றார் பூசகர்.

“நான் இருந்தாகவேண்டுமா?” என்றான். “ஆம், இல்லையேல் நீ எஞ்சியிருக்கமாட்டாய்” என்றார். “ஏன்?” என்றான். “நீ வெல்வாய்” என்றார். அவன் சிலகணங்களுக்குப்பின் “நான் இனி அறியவேண்டியதென்ன, பூசகரே?” என்றான். “அறியேன். இவை நமக்கு அப்பாற்பட்டவை. ஆனால் ஏதோ ஒன்று எஞ்சியிருக்கிறது” என்றார். “இல்லை, நாம் அவ்வாறு எண்ணிக்கொள்ளவேண்டியதில்லை” என்று அர்ஜுனன் சொன்னான். “மகாநாராயணம் இன்று இறுதியானது. நிகரான பிறிதொன்று நாளை எழலாம். இன்று இதுவே இவையனைத்தையும் ஆள்கிறது.”

“ஆம், இந்த யுகத்தின் வேதம் அது” என்றார் அவர். “ஆனால் அடிமுடியறியவொண்ணா ஒன்றின் ஓர் உருவம் மட்டுமே அது. ஒவ்வொன்றையும் தொட்டு நாம் சென்றறியும் பிறிதொன்று உள்ளது. அனைத்துமான ஒன்று.” அவன் அவரை நோக்கிக்கொண்டிருந்தான். “ஆழ்ந்து சென்றறியலாகும். அகன்றுசென்று தொட்டுவிடலுமாகும். அது அங்குள்ளது என்பதில் ஐயமே இல்லை” என்றார் பூசகர். “அதை எங்கு சென்று தேடுவது? எவ்வண்ணம் அறிவது?” என்றான் அர்ஜுனன்.

அவர் அவனை தன் வெண்பனித் திவலைபோன்ற விழிகளால் நோக்கிக்கொண்டிருந்தார். அவர் விரல்கள் அசையத் தொடங்குவதை அவன் கண்டான். அவை வலைபின்னும்

சிலந்தியின் கால்கள் போன்று நடுங்கி அதிர்ந்தன. அவற்றில் அந்த மென்சரடை காணமுடிந்தது. அவன் அவரை கூர்ந்து நோக்கியபடி படுத்திருந்தான். மூச்சில் எழுந்தமைந்த மார்புக்குள் காற்றின் அழுத்தம் வலியளித்தது. அவருடைய விரல்கள் விரிந்து நெளிய தன்னையும் இணைத்துக்கொண்டு அந்த வலை நெசவுகொள்வதை அறிந்தான். அவர் விழிகள் வெறித்து அசைவிழந்தன. உதடுகளின் நடுக்கத்திற்கு அப்பாலிருந்தென உறுமலொன்று எழுந்தது.

“சொல்க…” என்று அவர் எவரிடமோ கேட்டார். “சொல்க, என்ன செய்யவேண்டும்? இவன் செல்லவேண்டியது எங்கு? சொல்க! ஆழ்ந்தவரே, மறைந்தவரே, அங்கிருப்பவரே, அறிந்தவர் நீங்கள். சொல்க! எங்கள் வழியென்ன?” அக்குரல் மன்றாடியது. “சொல்க, முற்றிலும் வென்றவர்களுக்கும் முழுதாகத் தோற்றவர்களுக்கும் மெய்யறியும் வல்லமை உண்டு என்பர் மூத்தோர். சொல்க! எந்தையே, சொல்க!”

அறையை வெள்ளிவலைச்சரடுகள் முற்றிலுமாக மூடிவிட்டன என அவன் கண்டான். அசைவற்றவனாக அவன் நோக்கிக்கிடந்தான். அவன் எண்ணங்கள் அதிர்வுகளாக அந்த வலையை அடைந்தன. எண்ணங்களை பார்க்கமுடிந்தது. விரல் நீட்டினால் அவ்வெண்ணங்களை தொட்டறியமுடியும். எண்ணங்களை சீண்டி மீட்டமுடியும். சரடின் மறுமுனையில் அவன் பிறிதொன்றை அறிந்தான். பிற எண்ணம் ஒன்று. குரலல்ல, மொழியுமல்ல. எண்ணமென்றே அவனை அடைந்தது. உள்ளமென அவனுள் நிகழ்ந்தது, ஆனால் பிறிதாகவே இருந்தது.

“பேரனல்.” அவன் அவ்வெண்ணம் செந்நிறத்தில் எரிவதைக் கண்டான். நெருப்பாலான நீள்சரடு ஒன்றின் அதிர்வு. “அடியிலி,

முடியிலி.” அவன் வேறெங்கோ அதை நோக்கிக்கொண்டிருந்தான். பின்னர் மெல்லிய வலிப்பொன்று அவன்மேல் படர்ந்தது. தன் வலக்கால் துடிப்பதைத்தான் அவன் உணர்ந்தான். அதை அடக்கமுயல்கையிலேயே வாய் கோட்டிக்கொண்டது. வலக்கை இழுத்து வளைந்தது. பார்வை மங்கலாகி அனைத்தும் ஊசலாடின. நினைவின் இறுதிக்கரைவில் அவன் அனல் என்னும் சொல்லில் நின்றிருந்தான். மீண்டும் விழித்தபோது அனல் என்னும் சொல்லில் எழுந்திருந்தான். அவனுக்குமேல் பூசகர் குனிந்து நோக்கிக்கொண்டிருந்தார்.

“விடாய்” என்று அவன் சொன்னான். அவர் எழுந்துசென்று பாலைச் சூடாக்கி குவளையில் கொண்டுவந்து அவன் கடைவாயைத் திறந்து ஊட்டினார். அதைப் பற்ற அவன் கையை தூக்கமுயன்றபோதுதான் கை அருகே ஒரு அடிபட்ட நாகமெனக் கிடந்து நெளிவதைக் கண்டான். “கை கை” என்றபோது கடைவாயில் பால் வழிந்தது. “நரம்புகள் இழுபட்டுள்ளன, இளவரசே. சீராக சிலநாட்களாகும்” என்றார் அவர். அவன் தன் உடலே எண்ணங்களுக்குத் தொடர்பின்றி கிடப்பதை உணர்ந்தான். “ஆனால் உடல் துடிக்கிறது. அது நன்று. உள்ளத்தை உந்தி அதற்குள் செலுத்திக்கொண்டே இரு. அது உயிர்கொள்ளும்” என்றார் அவர்.

அர்ஜுனன் தலையை அசைத்து கண்களை மூடிக்கொண்டான். அவனில் கண்ணீர் வழியத் தொடங்கியது. “காய்ச்சல் நின்றிருக்கிறது. புண்கள் ஆறத் தொடங்குகின்றன என்று பொருள்” என்றார் பூசகர். “முன்பென என் கை செயல்கொள்ளுமா?” என்றான். “கை என்பது சித்தத்தின் கருவி” என்றார் பூசகர். அவன் மீண்டும் பெருமூச்சுவிட்டான். “நீ

ஆற்றவேண்டியவை பல உள்ளன, இளவரசே” என்று பூசகர் சொன்னார். “நேற்று நான் அறிந்தவை அனைத்தையும் உன்னிடம் சொல்லவேண்டும்.”

அர்ஜுனன் “நான் நேற்று கண்டது...” என தொடங்கினான். “அதுவே அங்கிருப்பது. என்றுமுள்ளது. ஆக்கமோ அழிவோ அற்றது. முழுமுதலானது. அதை அனலென்றால் சைவர். புனலென்றால் வைணவர். ஆற்றலென்றால் அன்னைநெறியர்” என்றார் பூசகர். அவன் அவர் சொற்களுக்காக காத்திருந்தான். “நான் பெற்றது ஒன்று. இப்போது சொல்வது அதை மொழியென்றாக்குவது” என்று பூசகர் சொன்னார். “இப்பகுப்புகளுக்கு என்ன பொருளென்று அறியேன். ஆனால் இப்பகுப்புகளினூடாக அன்றி நாம் எதையும் அறியமுடிவதில்லை. அலைகளாகவன்றி கடலை எவர் காணமுடியும்?”

“அழியா அனலை அறிய முயன்ற இருவரால் தோன்றியவை வேதங்கள் என்றறிக! தொல்வேதங்களனைத்தும் பிரம்மனிலிருந்து எழுந்தவை. நாகவேதமும் அசுரவேதமும் மற்றும் இம்மண்ணிலுள்ள அனைத்து நிஷாதவேதங்களும் பிரம்மனால் உருவாக்கப்பட்டவை. அவற்றைக் கறந்தெடுத்த சாறென்றமைந்த வாருணம், மகாருத்ரம், மாகேந்திரம், மகாவஜ்ரம் என்னும் பிற வேதங்களனைத்தும் பிரம்மஜன்யம் என்றே அழைக்கப்படுகின்றன” என்று பூசகர் சொன்னார். “விண்ணளாவ விரிந்தெழுந்து அறிந்தவை. முடிவின்மைக்கு நிகராக ஒரு சொல்லை வைத்தவை. அனலுக்கு மாற்றென மலரை வைத்தவை. அவற்றை கவிதைகள் என்கின்றனர் கற்றோர்.”

“இளையோனே, அவையனைத்தையும் தன்னுள் அடக்கி எழுந்தது மகாநாராயணவேதம். ஆழ்ந்து சென்று அறிந்த நுண்சொல் அது. முடிவின்மையை ஓர் ஒலியென்றாக்கிக்கொண்டது. அனலின் அடியிலிக்கு நிகரென நுண்சொல்லில் எழும் ஒலியின்மையை முன்வைத்தது” என்றார் பூசகர். “நீ மகாநாராயணத்தால் வெல்லப்பட்டாய். உன்னுள் இருந்து பெருகி எழுந்து உன்னைச் சூழ்ந்தது. உன் எதிரியென வந்து உன்னை வென்றது.”

அர்ஜுனன் “அதற்கும் அப்பால் அமைந்துள்ளது என்ன?” என்றான். “அது வேதம் கடந்தது” என்று அவர் சொன்னார். “வேதக்கனி அது என்கின்றனர். கனியென்று எழுவதே முன்பு அதன் விதையென்றும் இருந்தது. சென்று அதை அடைக! அதை அடையாமல் வேதமென எழுந்த எதையும் வென்று கடக்கவியலாது.” அர்ஜுனன் விழிகள் மட்டுமென்றாகி அவரை நோக்கிக்கொண்டிருந்தான். “அதை பாசுபதம் என்கின்றனர்” என்று அவர் சொன்னார்.

**[ 29 ]**

நாற்பத்தெட்டு நாட்களாயிற்று அர்ஜுனன் மீண்டும் தன் உடல் திரும்ப. அவன் கிடந்த அந்த கல்சிற்றறை உண்மையில் தன் சிறு கல்லில்லத்தின் அடியில் பல்லாண்டுகளாக பூசகரால் தோண்டி உருவாக்கப்பட்ட வளை. அது அங்கிருப்பதை அக்குடிகள் எவரும் அறிந்திருக்கவில்லை. அதனுள் கூட்டுப்புழு என அர்ஜுனன் வளர்ந்து உருமாறிக்கொண்டிருந்தான். அவர் அளித்த பச்சிலைச்சாறும் வேர்ப்பொடிகளும் அவன் உடலனலை ஓம்பின. புண்பட்ட பழைய உடல் உயிரிழந்து கருகி சருகுப்பரப்பாகி உரிந்து அகன்றது. உள்ளிருந்து புதிய தளிருடல் எழுந்து வந்தது.

ஒவ்வொருநாளும் அவன் ஆழ்ந்து சென்றுகொண்டிருந்தான். முதலில் இருந்த அச்சங்களும் ஐயங்களும் துயரும் மெல்ல அகன்றன. கொந்தளிப்புகள் அமைதிகொண்டன. பின்னர் நாளெல்லாம் ஒரு சொல்லும் நாவிலெழாமலானான். உள்ளே ஓடிக்கொண்டிருந்த சொற்பெருக்கும் தேய்ந்திற்று ஓய்ந்தது. அமைதி காலத்தை இல்லாமலாக்கியது. காலமென்பது உள்ளும் புறமும் ஓடும் சொற்களே என்றறிந்தபின் விழிப்பா துயிலா என்றறியாத நிலையில் இருப்புணர்வொன்றாக மட்டுமே எஞ்சி தனியறைச் சுடர் என அசைவிழந்து நின்றிருந்தான்.

அவன் உடல் தேறி எழுந்து உடலுக்கு நீர்விட்டு பூசகர் அளித்த ஆடையை அணிந்துகொண்டபோதுதான் மீண்டும் சொற்தளத்திற்கு வந்தான். முந்தையநாள் இரவு பூசகர் அவன் உடலில் நூறு நரம்புமுடிச்சுகளில் ஊசிகளால் மெல்ல குத்தி நோக்கியபின் "நரம்புகள் இறுக்கம்கொண்டுவிட்டன, பாண்டவனே. நீ மீண்டுவிட்டாய்" என்றார். "மீண்டும் எழும் உடல் பிறந்தெழுந்த குழவிக்குரியதென உயிர்நனைந்து துடித்திருக்கிறது. இன்று நீ இளைஞனைப்போல் சென்று களம்நிற்க முடியும்." அவன் சொற்களுக்கு அப்பாலிருந்தான். அவர் சொன்னதைக் கேட்ட உள்ளம் வேறெங்கோ இருந்தது.

மறுநாள் அவனை ஆடைகளைந்து அமரச்செய்து கொதிக்கும் மருந்திலை நீரைவிட்டு நீராட்டினார். அவன் எழுந்ததும் வேர்ச்சாறு கலந்த பாலை அருந்தும்படி நீட்டினார். அவன் முதல்முறையாக ஒரு சொல்லை அடைந்தான். "அனல்." அதை அவன் சொல்லியிருக்கவேண்டும். அவர் "ஆம், அனலெழுந்துள்ளது. நீ உடல்சிறந்துள்ளாய், பாண்டவனே" என்றார். அவன் "நான் கிளம்பியாகவேண்டும்" என்று சொன்னான். "ஆம், அனல்தேடிச் செல்லவேண்டும்

என்பதற்காகவே உயிர்கொண்டிருக்கிறாய். இன்றே கிளம்புக!” என்றார் பூசகர்.

மலைச்சிற்றூர்கள் முழுதடங்கிவிட்டிருந்தன. குனிந்து நோக்கினால் கால்கள் தெரியாதபடி வெண்பனி மூடியிருந்தமையால் முகிலில் நீந்திச்சென்றுகொண்டிருக்கும் உணர்வே எழுந்தது. அவன் ஊரைக்கடந்து வெளியே சென்றதை எவரும் பார்க்கவில்லை. பார்வதியின் இல்லத்தைக் கடந்துசென்றபோது அதன் மூடிய சாளரங்களுக்கு அப்பால் அவள் நோக்கு கூர்கொண்டிருப்பதான உணர்வை அவன் அடைந்தான். அவன் காலடிகள் பனிக்குள் நீரில் இலைவிழும் மெல்லொலியுடன் கேட்டன. மிக அப்பால் ஒரு கூரை சொட்டும் ஒலி கேட்டது. மலையிடுக்குகளில் காற்று ஊதிச்செல்லும் முழக்கம் எழுந்து அமைந்தது.

ஊரெல்லையில் அவன் மூச்சொலியை கேட்டான். பின்னர் பனிப்பரப்பில் ஒரு கரியதீற்றல் என அந்தக் காட்டெருதைக் கண்டான். மேலும் அணுகியபோது அதன் விழிகளை அருகிலெனக் கண்டான். அது மூச்சு சீறி தலைதாழ்த்தியது. கழுத்தின் மயிர்த்தோகைகள் நிலம் தொட்டு அசைந்தன. பெருந்திமில் தலையென எழுந்து நின்றது. அவன் அஞ்சாது நெருங்கிச்செல்ல அது மேலும் ஓர் அடி முன்னால் எடுத்துவைத்தது. அவன் அருகே சென்று அதன் நெற்றியில் கைவைத்தான். திமில் சிலிர்க்க காதுகள் தழைய அது மீண்டும் மூச்சொலித்தது. அவன் அதன் விலாவை வருடியபடி கடந்துசென்றான்.

அவனை நோக்கியபடி அது பின்னால் நின்றது. மெல்லிய குரலில் “க்ரம்?” என்று கேட்டது. அவன் திரும்பி நோக்கியபோது தலையை அசைத்தது. அவன் அதன் விழிகளை நோக்கியபடி

நின்றான். அது அவனருகே திமில் அசைய நடந்துவந்து காதுகள் உடுக்கின் சரடுமுழைபோல ஆடி அடித்துக்கொள்ள தலையை ஆட்டியபின் தும்மல்போல் ஓர் ஒலி எழுப்பியது. மீண்டும் முரசுத்தோலில் கோல் தொட்டதுபோல "க்ரம்?" என்றது. அவன் அதை நோக்கிக்கொண்டு நின்றான்.

கால்களை எளிதாக எடுத்துவைத்து எடைமிக்க உடலை மேலேற்றி அது சரிவில் சென்றது. அவன் அதைத் தொடர்ந்து சென்றான். அது அவன் தொடர்வதை அறிந்திருந்தது. அவன் களைப்புடன் நின்றபோது அப்பால் அதுவும் தயங்கி நின்றது. கீழே கிடந்த கற்களை எடுத்து வாய்க்குள் போட்டு பல்படாமல் குதப்பிவிட்டு உமிழ்ந்தது. மீண்டும் நடந்தபோது அவன் தொடர்கிறான் என்பதை உறுதிசெய்துகொண்டது.

அன்று மாலை அது சென்றடைந்த சிறிய மலைப்பொந்துக்குள் அவன் ஒடுங்கிக்கொண்டான். தன்னிடமிருந்த உலர் உணவை உண்டு அங்கே படிந்திருந்த பனிப்படலத்தை உடைத்து நீராக்கி அருந்தினான். அது மூன்றுகாலில் நின்றபடியே தலைதாழ்த்தி விழிசொக்கித் துயின்றது. துயிலிலும் அதன் செவிகள் ஓசைக்கேற்ப அசைந்துகொண்டிருந்தன உடல் சிலிர்ப்பும் விதிர்ப்பும் கொண்டது. மூச்சொலியுடன் விழித்து கால்மாற்றி நின்றது. காலையில் அதன் ஒலிகேட்டு அவன் விழித்துக்கொண்டான். அது கிளம்பியபோது உடன் கிளம்பினான்.

ஒரு வினாவும் இன்றி அந்த ஏற்பு நிகழ்ந்ததை அவன் எண்ணி வியப்பு கொள்வதற்கே மூன்று நாட்கள் கடந்துவிட்டிருந்தன. கிளம்பும்போது எங்கு செல்கிறோம் என அவன் திட்டமிட்டிருக்கவில்லை. மீண்டும் கின்னரர் உலகம் என்றே எண்ணியிருந்தான் என பின்னர்தான் உணர்ந்தான்.

எங்கிருந்தோ ஓர் அழைப்பு வரும் என அவன் உள்ளம் சொன்னது. “செல்க, அது உன்னை அழைத்துக்கொள்ளட்டும்” என்றுதான் பூசகரும் சொல்லியிருந்தார். ஆகவேதான் தெளிவான அவ்வழைப்பு வியப்பை அளிக்கவில்லை.

ஏழு நாட்கள் அவன் அவ்வெருதுடன் நடந்தான். அது களைப்படையவில்லை. பனித்துகள்களையும் குற்றிச்செடிகளின் சிறிய காய்களையும் அன்றி எதையும் உணவாகக் கொள்ளவில்லை. அவன் ஏழாம்நாள் தங்கியிருந்த பாறைப்பிளவுக்குள் மென்மணல்குழிக்குள் மலைக்கிழங்குபோல ஆழ்துயிலில் இருந்த பனிக்கீரி ஒன்றைப்பிடித்து கல்லுரசி நெருப்பிட்டு சுட்டு உண்டான். அவற்றைப் பிடிக்கும் முறையை அடைந்ததும் தயக்கமில்லாது சென்றுகொண்டே இருந்தான்.

எட்டாவது நாள் புலரியில் ஒரு பெரிய மலைப்பிளவை எருது சென்றடைந்தது. அங்கிருந்து உருளைக்கற்களுடன் மண் பொங்கி அருவியென வழிந்து பெரிய கூம்பாக நின்றது. அதன்மேல் எருது ஏறிச்சென்றபோது கற்கள் உருண்டுருண்டு விழுந்தன. அவன் ஏறியபோது அவனை முட்டித் தெறித்து கீழே சென்றன. அந்தக் கூம்பு ஏறத்தொடங்கியபின்னர்தான் எத்தனை பெரிதென்று தெரிந்தது. துணிக்குவியல்போல அது அவன் ஏறுந்தோறும் தழைந்து கீழே வந்தது. பின்னர் அந்த எருது கால்வைத்த இடங்களில் மட்டுமே தான் காலை வைக்கவேண்டும் என்று கண்டுகொண்டான்.

மேலேறிச்சென்று மலைப்பிளவினூடாக அப்பால் நோக்கியபோது திகைப்புடன் நெஞ்சுவிரிய மூச்சிழுத்துவிட்டான். அங்கே பசுமைதேங்கியதுபோல ஒரு சிறிய சோலை இருந்தது. உயரமில்லாத சோலைமரங்கள் பச்சை நுரைக்குமிழிகள்போல இலைக்குடை சூடி நின்றன.

நடுவே ஓடிய சிற்றோடைகளின் இருமருங்கிலும் நாணல்கள் அடர்ந்திருந்தன. சோலையின் மையமாக ஓடிய ஆறு அப்பால் பிறிதொரு மலைப்பிளவின் வழியாக ஊறிவந்து இரையெடுத்த மலைப்பாம்புபோல சற்று பெருத்து மீண்டும் ஒடுங்கி அவன் காலடியில் ஒரு பாறைவெடிப்புக்குள் புகுந்து மறைந்தது. நீர் விழும் ஒலியை கேட்கமுடியவில்லை. ஆனால் காலில் அந்த நீரோடையின் அதிர்வை அறியமுடிந்தது.

எருது கீழே இறங்கிச் சென்றுகொண்டிருந்தது. அவன் கால்களை எடுத்து வைத்து உடல்நிகர்செய்து மெல்ல கீழிறங்கினான். கீழிறங்குவது மேலும் கடினமாக இருந்தது. இருமுறை வழுக்கி விழுந்து கைகளை ஊன்றி அமர்ந்தான். மேலே நின்றபோது அத்தாழ்வரையின் நெடுந்தொலைவை நீள்விழிக்கோணத்தில் நோக்கியமையால் ஆழம் தெரியவில்லை. அவன் நோக்கிய மரக்கொண்டைகள் புல்பத்தைகள்போல மிகக்கீழே இருந்தவை. இறங்கி செல்லச்செல்ல வியர்வை வழியலாயிற்று.

அந்தச் சிற்றாறும் அதன் கிளையோடைகளும் வெம்மைகொண்டு கொதித்துக்கொண்டிருப்பதை காணமுடிந்தது. அதிலிருந்து நீராவி புகைபோல தயங்கி எழுந்து வெண்மைகொண்டு காற்றில் பட்டுச்சல்லா போல சுழன்றாடிக்கொண்டிருந்தது. அவன் நடுவே இருமுறை அமர்ந்து ஓய்வெடுத்துக்கொண்டு கீழிறங்கினான். அந்தியிருண்ட பின்னரே கீழே சென்று சேர்ந்தான். அங்கிருந்த பாறை ஒன்றில் இளைப்பாறினான். காலையில் எழுந்தபோது எருது அவன் அருகே இல்லை என்பதை அறிந்தான். அதன் குளம்புகளுக்காக தேடியபோது அப்பகுதியெங்கும் பலநூறு குளம்புத்தடங்களை கண்டான்.

எழுந்து நின்று அந்நிலத்தின்மேல் காலையொளி பரவுவதை நோக்கினான். நீள்வட்டமாக மலைகளால் சூழப்பட்டிருந்தது அத்தாழ்வரை. அங்கே கதிர் எழுவது பிந்தியும் அணைவது முந்தியும் நிகழுமெனத் தெரிந்தது. அங்கிருந்த வெந்நீர் ஆறு குளிரை மிகவும் குறைத்துவிட்டிருந்தது. அந்த மரங்களும் செடிகளும் அவ்வெப்பத்தை உண்டு அங்கு வாழ்பவை என்று தெரிந்தது. குனிந்து நிலத்தை நோக்கியபடி நடந்தான். மானுடக் காலடிகள் எவையும் தென்படவில்லை. செவிநிறைக்கும்படி பறவைக்குரல்களும் குரங்குகளின் ஓசைகளும் கேட்டுக்கொண்டிருந்தன.

ஆற்றுக்குச் செல்லும் ஓடையொன்றின் வெம்மையெழுந்த நீரை அள்ளி முகம் கழுவிவிட்டு அருந்தினான். கனிந்து நின்ற அத்திப்பழங்களை பறித்து உண்டான். அச்சோலையை சுற்றிவந்தான். மரநிழலிலும் புதர்களிலும் எருதுகள் கால்மடித்துக் கிடந்து கண்களைமூடி அசைபோட்டன. புதர்களுக்குள் செவிவிடைத்து விழி உருட்டி நின்றிருந்த மான்கள் அவன் காலடி அணுகியதும் வால் விரைத்து அசைய ஓசை ஒவ்வொன்றுக்கும் சிலிர்த்து ஒற்றை நாண் எய்த அம்புக்கூட்டமென பாய்ந்து மறைந்தன. புதர்களிலிருந்து ஓணான்களும் அரணைகளும் எழுந்து சருகோசையுடன் ஓடின. மரக்கிளைகள் முழுக்க சிறிய கிளிகளின் ஓசை நிறைந்து அவற்றை கிலுகிலுப்பைச் செண்டுகளென்றாக்கியது.

உயிர் நிறைந்திருந்த காடு. மானுடவாழ்வுக்கான ஒரு சிறு அடையாளம்கூட தெரியவில்லை. அவன் மரங்களிலோ பாறைகளிலோ குழூஉக்குறிகள் தெரிகின்றனவா என்று நோக்கினான். பின்னர் குனிந்து கூர்ந்து நோக்கி ஒரு கல்லை எடுத்துப்பார்த்தான். அது வேல்முனை போலிருந்தது. கைகளால்

செதுக்கப்பட்டதென்று தெரிந்தது. படைக்கலமாகும் கூர்கற்களை அவன் முன்னரும் கண்டிருந்தான். எச்சரிக்கையுடன் திரும்பி அந்தச் சோலையை விழிகளால் அளந்தான். அதற்குள் மானுடர் இருப்பதற்கு வாய்ப்பே இல்லை என உறுதிசெய்துகொண்டான்.

ஆற்றங்கரை வரை சென்றபோது அவன் உடல் மயிராடைக்குள் வியர்த்து வழியத் தொடங்கியது. ஆடைகளைக் கழற்றி அப்பால் வைத்துவிட்டு வெண்ணிறமான சேறுபடிந்த அதன் கரையில் கால்புதைய நடந்து நீரை அணுகினான். கைசுடும் அளவுக்கு கொதித்து குமிழியிட்டது ஆற்றுப்பெருக்கு. அதில் சென்றிணைந்த ஓடைகளின் நீரையே தொடமுடிந்தது. நீரை அள்ளி தலைமேல் விட்டுக்கொண்டு திரும்பியபோது அவன் பாதிமண்ணில் புதைந்ததாக ஒரு சிவக்குறியை கண்டான்.

இல்லை, விழிமயக்கு, அது மலையாறு உருட்டிவந்த மோழைக்கல் மட்டுமே என சொல்லிக்கொண்டான். ஆனால் அவன் விழிகள் உறுதிசெய்துவிட்டிருந்தன. அருகணைந்து குனிந்து சூழ்ந்திருந்த மண்ணை விலக்கி நோக்கினான். சிவக்குறி பதிந்திருந்த ஆவுடை தெரிந்தது. அதை பெயர்த்தெடுத்த பள்ளத்தில் மண்புழுக்கள் நெளிந்தன. நீர் ஊறி மேலெழுந்து அதை மூடியது. அவன் அதை எடுத்து அருகே நிறுத்தினான். அவன் கையளவே இருந்தது. ஆற்றில் வந்த உருளைக்கல்லை செதுக்கி அமைத்தது. ஆவுடை சீரற்ற வடிவுகொண்டிருந்தது. அதை கல்லால் அடித்தே செதுக்கியதுபோல.

அதை சேறு அகல ஓடைநீரில் கழுவி எடுத்துக்கொண்டுசென்று அங்கிருந்த பாறை ஒன்றன் மேல் வைத்தான். கைகளால் மும்முறை அள்ளி அதற்கு நீராட்டு செய்தான். நீலமும் சிவப்பும் மஞ்சளும் என சுற்றிலும் அலர்ந்து நின்றிருந்த

மலர்களைக் கொய்து அதன்மேல் இட்டு வணங்கினான். அவன் உள்ளம் பொருளற்ற ஏதோ சொற்களாக இருந்தது. ஒரு சொல்லில் தடுக்கி அவன் திகைத்தான். அனல். உடலுக்குள் ஒரு சொடுக்கலை உணர்ந்தான். தன் ஆடையை முழுமையாக கழற்றி வீசினான். இருகைகளையும் தலைக்குமேல் கூப்பியபடி அங்கே நின்று விழிமூடி தன்னுள் அந்த அனலுருவை காணலானான்.

# கிராதம் - 78

**[ 30 ]**

மலையில் நின்றது தனிமரம். காய்ந்த மலர்களும் சருகுகளும் உதிர்ந்து அதன் காலடியை மூடின. எடையிழந்து எழுந்தாடி காற்றைத் துழாவின கிளைகள். பின்னர் மலர்களையும் கனிகளையும் உதிர்த்து தனக்கே அடிபூசனை செய்தன. பின்னர் இலைகளையும் காய்களையும் உதிர்க்கத்தொடங்கியது மரம். மெல்ல பிஞ்சுகளும் தளிர்களும் உதிரலாயின. இறுதியில் வெறுமையை சூடிநின்ற கிளைகள் உதிர்ந்தபின் அடிமரம் வேர்மேல் உதிர்ந்தது. வேர் மண்ணில் பிடிவிட்டது. ஆணிவேரின் குவைக்குள் ஓர் உயிர்த்துளி மட்டும் அனன்றது.

புவியை உண்டு முன்னகர்ந்தது மண்புழு. உடலே நாவென சுவையறிந்தது. நாவே குடலென நெளிந்து செரித்தது. உண்ட மண்ணும் உமிழ்ந்த மண்ணும் நிகரென்றாக உப்பை மட்டும் எடுத்து உடல்நெளிவாக்கிக் கொண்டது. இன்மையைச் சென்றடைந்து திரும்பி நோக்கியபோது புவி ஒரு மண்குவியலென தன் பின்னால் எழுந்திருக்கக் கண்டது. தன் மூச்சை இழுத்து படம் கொண்டது. மேலும் பசித்து தன்

வால்நுனியின் அசைவைக் கண்டு வெருண்டெழுந்தது. மும்முறை நிலம் கொத்தியெழுந்தபின் பாய்ந்து அதைக் கவ்வி உண்டது.

தன் நிழல் கண்டு விழிவிரித்து உடல்சிலிர்த்து நின்றது மான். செவியசைந்தபோது நீருள் எதிரி ஒன்று செவியசைக்கக் கண்டு உடல் வெருண்டு அவ்வெருட்சியை தான் கண்டது. அலையின் ஆழத்திலிருந்து ஆடிய அதன் விழிகளின் அருகே விழியென மிதந்து சென்றது மீன். சிறகசைத்தன மூன்று மீன்கள். கோடி மான்விழிகள் ஒளிநோக்குடன் முகில் துழாவிச்சென்றன. உடலெங்கும் விழியாகும் ஒரு நீல விழியாகி வான்நோக்கிக் கிடந்தது சுனை. அதன்மேல் அலையலையலை என விழுந்துகொண்டிருந்தன மரம் உதிர்த்த பனித்துளிகள். ஒரே பனித்துளி. ஒன்றுபோல் ஒன்றென முடிவிலாது பனித்து உதிர்ந்தது விசும்பு.

குத்துவிளக்கிலிருந்து திரை வழியாக சுவடியடுக்கில் பற்றி ஏறியது அனல். நெறி நூல்களை உண்டது. இலக்கண நூல்களை உண்டது. காவியங்களை உண்டு எழுந்து வேதங்களை பற்றிக்கொண்டது. சுவடிகள் எரிந்து நெளிந்து துவண்டு கருகி சாம்பலாக அவை கொண்ட சொற்கள் எரிமேல் எழுந்து சிறகடித்து கூவிச் சுழன்று பறந்தன. பின்னர் அவையும் சிறகுகள் கருகி அனலிலேயே விழுந்து அனல்பற்றி எரிந்து கூவிச் சுழன்று மூழ்கி மறைந்தன. அனல் என்ற சொல்லாக அனல் மட்டும் எரிந்தது. அச்சொல் வெளியில் நின்று தவிக்க அனல் அணைந்தது. அச்சொல் எழுந்து வானில் பரவி மறைந்தது.

முட்டைவிட்டு எழுந்த கணமே தன்னை பறவை என்று அறிந்தது ஓர் உயிர். முதற்கிளைவிட்டு எழுந்து வானில்

சுழன்றதன் பேருவகையால் ஆட்டுவிக்கப்பட்டது. இரைதேட இணையறிய முட்டை மீறிய குஞ்சுகளுக்கு சிறகளிக்க பறந்துகொண்டே இருந்தது. முதிர்ந்து இறகுகள் உதிர்ந்து எடைமிகுந்து ஒரு சிறுகிளையில் அமர்ந்து குளிர்ந்துவரும் உடலை உணர்ந்தது. "என் வாழ்நாளின் பொருள்தான் என்ன?" என்று எண்ணியபோது வாழ்நாளெல்லாம் தான் பறந்த தடங்கள் அனைத்தையும் வானில் ஒரு வலை எனக் கண்டது. விழிதிருப்ப அருகே ஒரு சிலந்தி நெய்த வலையைக் கண்டு உளம்திகைத்து பின் புன்னகைத்தது.

கொந்தளித்த கடல் எழுந்து கார்முகிலென வான் நிறைத்தது. கோடிகோடி துளிகளென்றாகி மண்ணை அறைந்து மூடி பெருகிச் சுழித்து திரண்டு ஓடி கடலாகியது. துளியென்றாகாத நீரின் ஓர் அணு வானில் எஞ்சியது. அதன்மேல் விழுந்த விண்மீன்களின் ஒளியால் அதுவும் ஒரு விண்மீன் என்றாகியது. கீழ்வானில் நீலநிறம் கொண்டு மின்னிய அதை மீன்கணங்கள் கண்டுகொண்டு விழிதுளித்து நோக்கிநின்றன. விடாய்கொண்ட பறவைகள் அதை நோக்கி நா நுணைத்தன. விண்ணிலொரு கடலென்று அது நின்றது. மண்ணிலொரு துளியென கடல்.

ஏழாம் கடலென்பது வானமே. ஆறுகடல்களாக அலையடிப்பதன் அமைதி அது.

*

கரிய தேவன் ஒருவனால் ஓட்டப்பட்ட கரிய தேர் வந்து நின்றது மாளிகை முகப்பில். கதவிடுக்கின் வெள்ளிக்கோல் கரிய பட்டையென்றாகியது. திறந்து வெளிவந்து படிகளில் நின்றான். அவன் உடல் கனலாக ஆடைகள்

எரிந்துகொண்டிருந்தன. அத்தழலில் இருந்து மாளிகையின் கதவும் சுவரும் பற்றிக்கொண்டன. அவன் தசைகள் உருகிச் சொட்டி விழுந்த துளிகளும் புகையுடன் எரிந்தன. வாய் திறந்தபோது உள்ளிருந்து தீ பறந்தது. மூக்கினூடாகப் புகை எழுந்தது.

ஏழு குதிரைகளும் எண்ணை மின்னும் கருவண்ணம் கொண்டவை. அவற்றின் திறந்தவாய்களும் நாக்குகளும் பற்களும்கூட கரியவை. கருங்கல் குளம்புகள் கற்தரையில் முட்டும் ஓசை. கரிய இரும்பாலான தேரின் சகடவட்டமும் கரிய ஒளியே கொண்டிருந்தது. அதன் பீடத்தில் எழுந்த தேவனின் கண்விழிகளும் பற்களும் கைநகங்களும் கருஞ்சிப்பிபோல இருளொளி கொண்டிருந்தன. அவன் இரும்புக் குறடுகள் கல்லில் ஒலிக்க அணுகி பணிந்து "வருக!" என்றான்.

"ஏன்?" என அவன் கேட்டான். "வருக!" என்று அவன் மீண்டும் சொல்லி கைகாட்டினான். "நீ யார்?" என்றான். "நான் குரோதன். என் தலைவர் உன்னைத் தேடி வந்துள்ளார்." அவன் எரிந்துகொண்டே சென்றான். உள்ளே கரிய பட்டுத்திரை அசைந்தது. "யார்?" என்றான். "அவரை அதர்வன் என்கிறார்கள் தேவர்கள். அழிவற்ற ஆற்றலே அவர் என வழிபடுகின்றனர் முனிவர்."

அஞ்சியபடி அவன் நடந்து சென்று தேரிலேறி அத்திரையை விலக்கினான். உள்ளே புகைமூடிய அனல் என அமர்ந்திருந்தது எரியுடல் கொண்ட தெய்வம். கரிய முட்கள் என மயிர் சிலிர்த்த பன்றிமுகம். வெறிமயங்கிய கருமணிக்கண்கள். "வருக!" என அவனை கைநீட்டி அழைத்தது. எட்டு கைகளில் வாளும் வேலும் வில்லும் அம்பும் பாசமும் அங்குசமும் குளிர்மலரும் அமுதகலமும் கொண்டிருந்தது. அனல் அனலை

என அவன் அத்தெய்வத்தின் மடியில் அமர்ந்தான். சவுக்கு சொடுக்கப்படும் ஒலி கேட்டது. தேர் அசைந்து சகட ஒலியுடன் கிளம்பியது.

அவனுக்கு எதிர்வந்தது பிறிதொரு கரியவண்ணத் தேர். அதன் கொடி புகைச்சுருள் என பறந்தது. அதிலமர்ந்திருந்தவனின் எரிவிளிம்புகளை அவன் கண்டான். “அவன் உன் வெஞ்சினத்தின் இலக்கு. அவனை வென்றால் நீ முற்றடங்கி குளிர்வாய். பாண்டவனே, நீ சென்றடையத் தடையென எப்போதும் இறுதியில் எழுந்து நிற்பது இதுவே” என்றது தெய்வம். “யார் அவன்?” என்றான் அர்ஜுனன். “உன் உடன்பிறந்தோன். யுகமடிப்புகள்தோறும் நீங்கள் போரிட்டே வருகிறீர்கள்.”

அர்ஜுனன் விழிகூர நோக்கியதுமே அடையாளம் கண்டுகொண்டான். “என் படைக்கலங்களில் ஒன்றை எடுத்து அவனை எதிர்கொள்க!” என்றது பன்றிமுகத் தெய்வம். அவன் உடல் விம்மி பின் மெல்ல தணிந்து “அந்த மலர் என் படைக்கலமாகுக!” என்றான். அதர்வன் புன்னகையுடன் “அவ்வாறே ஆகுக!” என்றான். அர்ஜுனன் எடுத்து வீசிய அந்த மலர் பெருகி மாமழையென்றாகி அக்கரிய தேர்மேல் பொழிய அது குளிர்ந்து நீர்ப்புகையெழ நின்றது. அனல் அணைந்து அது அமைவதை அவனால் காணமுடிந்தது.

புன்னகையுடன் ஏதோ சொல்ல முயன்ற கணம் ‘ஆம்! ஆம்! ஆம்!’ என்னும் முழக்கத்தைக் கேட்டபடி அவன் உதிர்ந்து தேர்த்தட்டிலிருந்து கீழே விழுந்தான். அவன் எரிதல் அணைந்துவிட்டிருந்தது. எழுந்து நின்றபோது தன் உடலின் மென்மையையும் மணத்தையும் அறிந்தான். பூனைமயிர் படர்ந்த முகமும் நாண் இழுத்த கைவில்போன்று இறுகிய

இளைய உடலுமாக அவன் முதிராஇளைஞனாக மாறிவிட்டிருந்தான்.

பேரியாழின் நரம்புகளின் அதிர்வுபோன்ற ஒலியைக் கேட்டு அவன் நோக்கினான். இளஞ்செந்நிற தாமரைமலர் நீரலையில் எழுந்தமைந்து அணுகுவதுபோல வந்த தேர் ஒன்று தெரிந்தது. செந்தாமரையின் மலர்ந்த ஏழு இதழ்கள் போன்ற குதிரைகள் குளம்புகளை உதைத்து கழுத்து திமிறி கனைப்போசையுடன் நின்றன. அதை ஓட்டிவந்த பாகன் மலர்நடுப்புல்லி போலிருந்தான். இறங்கி தலைவணங்கி "நான் காமன்" என்றான். "இது என் தலைவனுடன் நீங்கள் செல்லும் தேர்."

அவன் அந்தத் தேர் மீட்டிமுடித்த யாழென இசை விம்மிக்கொண்டிருப்பதை தன் உடலால் உணர்ந்தான். அணுகியபோது அவ்விசையை உள்ளம் உணர்ந்தது. "என் தலைவரை சாமன் என்கிறார்கள். வானில் கார் நிறைப்பவர். மரங்களை மலர்கொள்ளச் செய்பவர். யானைத்துதிக்கைகளை குழையச் செய்பவர். மான்விழிகளில் ஒளியாகுபவர். மலைத்தேன்கூடுகளுக்குள் இனிமையை நிறைப்பவர்" என்றான் காமன். "ஷட்ஜன், ரிஷபன், காந்தாரன், மத்திமன், பஞ்சமன், தைவதன், நிஷாதன் எனும் ஏழு புரவிகளால் இழுக்கப்படும் இந்தத் தேர் சுநாதம் எனப்படுகிறது."

அவன் தேரைத் தொட்டதுமே தன் உடல் முழுக்க இசை நிறைவதை உணர்ந்தான். தேனில் துழாவிய நாக்கு என்றாகியது அவன் உடல். அவ்வினிமையை தாளமுடியாமல் அவன் விழிகசிந்தான். உடல்நடுங்கி அதிர தேருக்குள் ஏறி அங்கே முற்றிலும் மலர்ந்த தாமரை மலரென அமர்ந்திருந்த தெய்வத்தைக் கண்டான். புரவியின் தலை. விழிகள் நீல மலர்கள் போலிருந்தன. ஆறு கைகளில் வில்லும் அம்பும்

மலரும் மின்கதிரும் கொண்டு அஞ்சலும் அருளலுமென அமைந்திருந்தது. “வருக, மைந்தா!” என அவனை கைபற்றி தன் அருகமரச் செய்தது.

இசையின் அலைகளில் எழுந்தமைந்து அவன் சென்றுகொண்டிருந்தான். எதிரே இளஞ்செந்நிறத் தேர் ஒன்று மிதந்தணைவதைக் கண்டான். “உன் காமத்தின் நிறைவை அளிப்பவள் அவள். நீ இக்கணம்வரை சற்றும் அறியாதவள். இளையோனே, எதிர்ப்படும் அத்தனை முகங்களினூடாகவும் நீ தேடிக்கொண்டிருந்தது அவளையே. இதோ, உனக்கு அவளை அளிக்கிறேன். விழைவை ஆற்றலெனக் கொண்டு எழுக! அத்தனை புலன்களாலும் அவளை அடைக! இசைதலின் பேரின்பத்தை அறிந்து கடந்தெழுக!” என்றது அத்தெய்வம்.

ஒருகணம் எண்ணியபின் “அறிந்து அதைக் கடந்தவர் எவருமில்லை” என்றான். அக்கணமே அவன் ஒரு சிறுமைந்தனாக மாறி இடையில் கிண்கிணியும் கழுத்தில் ஐம்படைத்தாலியும் மட்டும் அணிந்து அத்தேரில் நின்றிருந்தான். அவனை அறியாமல் எதிர்த்தேர் கடந்து சென்றது. அவனை இரு கைகள் இறக்கி கீழேவிட்டன. கடந்து செல்வனவற்றை விழிமலர்ந்து புன்னகைத்து நோக்கியபடி அவன் அங்கே நின்றிருந்தான்.

பொற்குண்டலம் ஒன்று கீழ்த்திசையில் எழுவதைக் கண்டு கைகளை வீசி சிரித்தான். அது பெருகி அணுகியபோது பொன்னிறப் புரவிகள் இழுக்கும் ஒரு தேர் அது என்பதைக் கண்டான். பொன்னொளி தரையில் மஞ்சள் நீர் என பரவிக்கிடக்க அது வந்து அவனருகே நின்றது. பழுத்த வாழைப்பழச் சீப்பு என புரவிகள் நிலைகொள்ள பாகன் இறங்கி

வந்து அவனிடம் “நான் மோகன். எந்தை யஜுர்வனின் தேருக்கு வருக!” என்றான்.

அகிற்புகை மணக்கும் அத்தேரினுள்ளில் கலைமான் உருவில் அமர்ந்திருந்தது நான்கு கைகளில் மலரும் அமுதும் அஞ்சலும் அருளலும் கொண்ட தெய்வம். கவர்கொம்புகளில் மலரும் தளிரும் எழுந்திருந்தன. “வருக, குழந்தை!” என அவனை அள்ளி தன் மடியில் அமர்த்திக்கொண்டது. “இங்கு தெரியும் அனைத்தும் உன்னுடையதே. நீ விழைந்தவையும் அடையாதவையும் மட்டும் நிரைவகுக்கும் வெளி இது. நிறைக!” என்றது.

அவன் விழிவிரித்து வாயில் கையை விட்டுக்கொண்டு ஒவ்வொன்றையாக பார்த்தான். பின் சிணுங்கி அழுதபடி “அம்மா வேண்டும்” என்றான். “இவற்றில் எதை வைத்து விளையாட விழைகிறாய் நீ?” என்றது தெய்வம். “ஒன்றுமே வேண்டாம். அம்மாவிடம் செல்கிறேன். அம்மா மட்டும் போதும்” என்றான். “இதை நீ இனி அடைய முடியாது. இது மிகமிக அரியது” என அவனுக்கு ஒவ்வொன்றாக சுட்டிக்காட்டியது. “அம்மா! அம்மாவிடம் செல்கிறேன். அம்மா அம்மா” என அவன் அலறி கால்களையும் கைகளையும் உதைத்தபடி திமிறி அழத்தொடங்கினான்.

அழுது மூச்சு சிக்கிக்கொள்ள உடல் நீலம்பாரித்து அவன் துடித்தான். “அம்மா அம்மா” என்று உதடுகள் அசைந்துகொண்டே இருந்தன. அவனை இறக்கி படுக்கவைத்துவிட்டுச் சென்றது தேர். புழுதியில் அவன் கிடந்து நெளிந்து அழுதான். வெண்மை ஒளிரும் தேர் ஒன்று அவனருகே வந்து நின்றது. வெண்புரவிகள் காலோய்ந்து மூச்சு சீறின. அதிலிருந்து சாந்தன் எனும் பாகன் இறங்கினான்.

அம்மகவை இரு கைகளால் அள்ளி எடுத்து தேருக்குள் அமர்ந்திருந்த தெய்வத்திடம் அளித்தான்.

வெண்பசுவின் தலையும் அஞ்சலும் அருளலுமென மலர்ந்த இரு கைகளும் கொண்டிருந்தாள் ரிக் என்னும் அன்னை. யஜூர்வன், சாமன், அதர்வன் என்னும் மூன்று மைந்தர்களைப் பெற்றவள். அவள் அவனை தன் முலைகளுடன் அணைத்து அமுதுக்காம்புகளை அவன் வாயில் வைத்தாள். ஆவலுடன் சப்பி உறிஞ்சி உண்ண உண்ண அவன் சுருங்கி ஒரு மொட்டென்று ஆனான். அவனை தன் இடையில்லிக்குள் செலுத்தி கருவறைக்குள் வைத்துக்கொண்டாள். அங்கே அவன் கைகள் குவித்து உடல்சுருட்டி அமைந்தான்.

அவன் உடல் பொன்னாகியது. உருகிச்சொட்டும் பொற்துளி என அவள் கருவறைக்குள் இருந்து அவன் பிறந்தெழுந்தான், ஒன்பது சூரியன்கள் ஒளிவிட்ட பிறிதொரு உலகில். “ஹிரண்யகர்ப்பனே, வருக!” என்று ஓர் அறிந்த குரல் அவனை அழைத்தது.

*

எரிந்தது முதற்புரம். செந்தசைக்கோட்டை சூழ் பெருநகரம் அணுவெனக் குறுகியது. விதையுள் கருவென ஆகியது. இருப்பென்றும் இல்லையென்றும் ஆடும் ஓர் ஊஞ்சல். எரிந்தது மறுபுரம். வெள்ளிச் சிலந்தி பின்னிய வலைநகரம். ஒரு கண்ணி பிறிதொன்றை ஆக்கும் நெசவு. அவிழ்ப்பதே இறுக்குவதாக ஆகும் அவிழாச்சுழல். எரிந்தது பிறிதொரு புரம். பொன்னிறக் கருவறை. ஆடிகள் தங்களுள் நோக்கி அமைத்த மாநகரம். எதிர்ப்பவரை அள்ளி தன் குடிகளென்றாக்குவது. கோடிக் களம் கொண்ட ஆடல். கோடிக் காய்கள் நின்றிருக்கும்

களம். எரிந்தழிந்தது முப்புரம். செம்பு எரிந்தது. எரிந்தது வெள்ளி. உருகி அழிந்தது பொன். மூவிழி அனலில் தழல் மூண்டழிந்தது முப்புரம். கைப்பிடி நீறென்றாகியது. எஞ்சியது அது. நீறெனும் வெண்மை.

**[ 31 ]**

ஸ்ரவ்யம் என்னும் காட்டில் ஓர் ஆண்குயில் மஞ்சள் கொடி ஒன்று பறப்பதைக் கண்டு அருகணைந்தது. அது கொன்றைமரம் பூத்திருப்பது என்று அறிந்ததும் தன் உடல் விம்மி இறகுகள் எழுவதை உணர்ந்தது. சிறகுகளைச் சுழற்றியபடி மாதவிக்கொடி ஒன்றின் வளைவிலிருந்து ஊசலாடியபோது தன் அலகிலிருந்து அன்றுவரை அறிந்திராத இன்னிசை ஒன்று எழுவதைக் கேட்டது. அவ்விசையின் சுழலில் இன்னும் இன்னுமென தித்தித்துச் சென்றுகொண்டிருந்தது.

பின் அதை கேட்பவர் எவர் என உணர்ந்து விழிப்புகொண்டது. மிக அருகே வரிவரியென உடலிறகு கொண்டு அமைந்திருந்த பெண்குயிலை கண்டுகொண்டது. அதை நோக்கி தன் விடாயை பாடியது. விடை எழாமை கண்டு தன் தனிமையைச் சொன்னது. அதை துயரென்று மீட்டியது. அதன் விழிகளைக் கண்டதும் ஒலியடங்கியது. அவள் கொண்ட அமைதி தன் இசையின் உச்சமென உணர்ந்தது.

வீக்ஷம் என்னும் காட்டில் ஓர் ஆண்மான் குளிர்ச்சுனை ஒன்றில் குனிந்து நீர் அருந்தியபோது தன்னருகே நின்ற துணைமானை அங்கு கண்டது. நீரில் ஒளியென நடனமிட்ட அவ்வழகைக் கண்டு பெருங்காதல்கொண்டு முத்தமிட்டது. விடாய் மிகுந்து நாகுவித்து தன் துணைவியை அள்ளி அள்ளிக்

குடிக்கலாயிற்று. ஒரு துளியும் குறையாமல் தன் உடல் ஊறி நிறைந்துகொண்டிருப்பதை உணர்ந்து மயங்கி நின்றிருந்தாள் அவள்.

தம்சம் என்னும் காட்டில் இரு யானைகள் சேற்றுப் பரப்பொன்றில் இறங்கி தங்கள் உடல் எடையை இழந்தன. துதிக்கை தழுவியும் உடல் வழுக்கியும் இணைந்து பிளிறியும் காதல்கொண்டன. மதமெழுந்து கன்னம் நனைந்த களிறு கொம்புகளால் பிடியைத் தூக்கிச் சுழற்றி வீசியது. சினம்கொண்ட பிடி எழுந்து திரும்பி துதிக்கையால் களிற்றை அறைந்து தன் சிறு தந்தத்தால் அதன் விலாவை குத்தியது. காடதிர முழங்கியபடி களிறு பிடியைக் குத்தி தந்தத்தை இறக்க பிடி அலறிய ஒலியில் பறவைகள் வானிலெழுந்தன.

சினம்கொண்ட இரு பேருடல்களும் வெடிபடும் ஒலியுடன் மத்தகங்களால் முட்டிக்கொண்டன. துதிக்கைகளைப்பற்றி ஒன்றை ஒன்று உந்திச் சுழற்றின. மரங்கள் கடைபிழுது விழுந்தன. கிளைகள் ஒடிந்து சொரிந்தன. பாறைகள் சரிவில் உருண்டன. உழுத வயலென்றாகியது காடு. இருபெரும் அடிமரங்கள் நடுவே பிடி சிக்கிக்கொண்டது. களிறு அதை அடக்கி மேலேறி உடலிணைந்தது. இருவர் கொண்ட விசைகளும் எதிரெதிர் முட்டி அசைவிழந்தன. குருதி வழியும் புண்கள் இனிக்கத் தொடங்கின.

ரம்யம் என்னும் காட்டில் இரு தட்டாரப் பூச்சிகள் காற்றில் இணை கண்டுகொண்டன. ஆணும் பெண்ணும் தங்கள் சிறகுகளை இணையாக்கி உடலை ஒன்றாக்கி எழுந்தமைந்த இளங்காற்றில் சுழன்று பறந்தன. இரு சிறகுகளும் ஒற்றைவிசை கொண்டபோது ஒன்றுக்கொன்று முற்றிலும் எடையற்றவையென்றாகின. தொடுவுணர்வு மட்டுமே

அவற்றிடையே இருந்தது. சிறகுகள் முற்றிலும் பொருந்தியசைந்த கணத்தில் தங்கள் காதலால் மட்டுமே அவை தொட்டுக்கொண்டன.

தன்யம் என்னும் காட்டில் அரசித் தேனீயின் அரண்மனையை தேனால் நிரப்பின தேனீக்கள். காடெங்கும் மலர்ந்த பல்லாயிரம் மலர்களின் இனிமை. அவற்றை தேடிச் செல்லவைத்த மணம். அவற்றை உண்டு சுமந்து வருகையில் எழுந்த இசை. அவற்றை நிறைத்தபின் ஆடிய நடனம். விழிசொக்கி அமர்ந்திருந்த பெண்ணின் முன் ஒன்று நூறு ஆயிரமென பெருகியது ஆண். ஒன்று நூறு ஆயிரம் என விரிந்து அன்னையைச் சூழ்ந்தது தந்தை.

*

ஊழ்கத்திலமைந்திருந்த அம்மையப்பனின் உடலில் இருந்து தன் கருணையால் பிரிந்தெழுந்தாள் அன்னை. மெல்ல அவனைத் தொட்டு எழுப்பினாள். “அருந்தவம் முதிர்ந்துவிட்டது அவனுக்கு. இன்னமும் பிந்துதல் அழகல்ல” என்றாள். விழித்தெழுந்து புன்னகைத்து “முலை ஊறுகிறது போலும் உனக்கு” என்றார் ஐயன். “குழவியின் அழுகையை நெடுநேரம் பொறுத்தல் எந்த அன்னைக்கும் அரிது” என்றாள் அவள்.

குனிந்து கீழே ரிஷபவனம் என்னும் சோலையை பார்த்தார் பசுபதி. அங்கே அவன் அருகமைந்து தவம் செய்த கருங்கல் சிவக்குறி உயிர்கொண்டு விதையென்று ஆகிவிட்டிருந்தது. “ஆம், இது தருணம்” என்று அவர் சொன்னார். “குழவியின் உயிர்விசைபோல் அன்னையை மகிழ்விப்பது பிறிதொன்றில்லை” என்றாள் தேவி.

# கிராதம் - 79

[ 32 ]

வானில் எழுந்த கருமுகில் திரளிலிருந்து இடியோசையுடன் மின்னலொன்று இறங்கி அர்ஜுனனை தாக்கியது. விண்யானையின் துதிக்கையால் தூக்கி வீசப்பட்டு அவன் சென்று மல்லாந்து விழுந்தான். அவன் முடியும் தாடியும் பொசுங்கிய எரிமயிர் மணம் மூக்கை நிறைத்தது. கண்களுக்குள் அவன் ஆழ்ந்திருந்த 'பணிக சிவம்' என்னும் நுண்சொல் ஒளியலையாக கொந்தளித்தது. அவன் பற்கள் கிட்டித்திருந்தன. அவை உரசும் ஒலியை காதுகள் கேட்டன. அத்தனை தசைகளும் இழுபட்டு இறுக இழுத்து வளைக்கப்பட்ட முற்றிய மூங்கில்வில்லென கிடந்து துள்ளியது அவன் உடல்.

பின்னர் அறுபட்ட நாணொலியுடன் அவன் அகம் விடுபட்டது. இடக்கை மட்டும் இழுபட்டுத் துடித்தது. மூக்கில் தசைபொசுங்கும் வாடை. வாயில் குருதி நிறைந்திருந்தது. அவன் செங்கோழையைத் துப்பியபடி இடக்கையை ஊன்றி எழுந்தான். நெஞ்சில் உதைபட்டவன்போல பின்னால் சரிந்து விழுந்தான். கண்களை மூடி குருதியலைகளைக் கண்டபடி சற்றுநேரம் இருந்தான். அவை மெல்ல அடங்கியபின் மீண்டும் எழுந்தான். நிலம் சரிந்திருப்பதுபோலத் தோன்றியது. இருமுறை தள்ளாடி நிலைகொள்ள முயன்றபின் மீண்டும் விழுந்தான்.

மூன்றாம் முறை எழுந்து கைகளை சற்று விரித்து விழிகளை தொலைவில் இருந்த பாறை ஒன்றில் நட்டு தன்னை

நிலைப்படுத்திக்கொண்டான். ஒரு வலுவான சரடுபோல அந்நோக்கு அவனை நிலைநிறுத்தியது. கடிபட்ட நாக்கு அதற்குள் வீங்கத் தொடங்கியிருந்தது. தலைமுடி உச்சியில் கொத்தாக கருகிச் சுருண்டு புகைந்துகொண்டிருந்தது. தொட்டு நோக்கியபோது சுருண்ட முடி பிசின் என ஒட்டியது கையில். அந்தப் பொசுங்கல்வாடை உடல்குமட்டி அதிரச்செய்தது. மூச்சை இழுத்து விட்டுக்கொண்டான். மீண்டும் மீண்டும் நெஞ்சை நிரப்பி ஒழித்தான்.

சற்றே நிலைமீண்டபின்னர் காற்றை பற்றிக்கொள்பவன்போல தள்ளாடி நடந்து ஆற்றை அணுகி ஆவியெழ ஓடிக்கொண்டிருந்த சிற்றோடை ஒன்றில் குனிந்து நீர் அள்ளி குடித்தான். நீருக்கான தவிப்பே உடலுள் நிறைந்திருப்பதை அது செல்லும்போது உணரமுடிந்தது. நீர் உள்ளே சென்றதும் நனைந்தமைந்த உட்தசைகள் மீண்டும் தலைசுற்றச் செய்தன. கண்களை மூடி உள்ளோடிய செங்குமிழ்களின் சுழற்சியை நோக்கிக்கொண்டிருந்தான். விழித்து மீண்டும் நீரை அள்ளி முகத்தை கழுவிக்கொண்டான்.

எழுந்தபோது விழிதெளிந்திருந்தது. உடல் இயல்புமீண்டு கால்கள் மண்ணைக் கவ்வி நின்றன. பெருமூச்சுடன் விண்ணை நோக்கினான். அவனை குளவியெனக் கொட்டிவிட்டு அந்தக் கருமுகில் அகன்று சென்றிருந்தது. அதன் சிறகுகள் மெல்ல விரிந்திருந்தன. அதன் கருமைக்குள் இரு சிறுமின்னல்கள் சீறித்துடித்து அடங்கின. அவன் தன் அடிவயிற்று வலியென பசியை உணர்ந்தான். அது பசியென சித்தம் அறிந்ததுமே உடலெங்கும் பசி பரவியது. கைவிரல்கள் நடுங்கலாயின. சூழிடமெல்லாம் உணவுக்காகத் துழாவியது விழி. மணம்

கூர்ந்தது மூக்கு. ஒலி தேடியது செவி. நா ஊறி சுவைகொண்டது.

தன் வில்லையும் அம்புத்தூளியையும் எடுத்துக்கொண்டு மெல்லிய காலடிகளுடன் நடந்தான். நாலைந்து காலடிகளுக்குள்ளாகவே அவனுள் உறைந்த வேட்டைக்காரன் எழுந்தான். அடிமேல் அடி பூனைப்பாதமென பதிந்தது. அவனைத் தொட்ட இலைகள் ஓசையிலாது நிமிர்ந்தன. அவன் மூச்சு அவன் செவிக்கே கேளாதபடி ஒலித்தது. அவன் ஒரு பன்றியின் மணத்தை அடைந்தான். சிலகணங்கள் அசைவிலாது நின்று அந்த மணம் எங்கிருந்து வருகிறது என்று பார்த்தான். பின்னர் குனிந்து முற்றிலும் நாணல்புதருக்குள் உடல் மறைத்து நாணல்கள் உலையாமல் நீரோடை செல்வதுபோல மென்மையாகப்பிளந்து முன்னால் சென்றான்.

தொலைவில் பன்றியின் சூர் எழுந்தது. ஆண்பன்றி எனத் தெளிந்தான். தேற்றையால் மண்ணைக் கிளறி முன்னங்காலால் கிண்டி கிழங்குகளை உண்டுகொண்டிருந்தது. அவன் அருகே சென்று அம்புதொடும் தொலைவை அடைந்ததும் ஒரு நாணல்கதிர்கூட அசையாமல் அம்பை எடுத்தான். நாணொலி எழாது இழுத்து அம்பைச்செருகி குறிநோக்கி அதன் இடதுவிழியில் தொடுத்தான். அம்பு சென்று தைத்ததும் பன்றி முடிசிலிர்க்க ஒருகணம் அதிர்ந்து நின்றது. பின் உறுமல் ஒலியுடன் குழறியபடி திரும்பி அவனை நோக்கியே பாய்ந்து வந்தது.

அஞ்சி பின்காலெடுக்காமல் அதன் மேல் வைத்தவிழியசையாமல் அவன் அடுத்த அம்பை எய்ததும் அதையும் ஏற்றுக்கொண்டு விழுந்து வந்தவிசை முடியாமல் உருண்டு அணுகியது. அதன் மேல் மேலுமிரு அம்புகள்

இருப்பதை அவன் கண்டான். இன்னொரு அம்பை நாணேற்றி நிமிர்ந்தபோது உள்ளுணர்வால் தன்மேல் முன்னரே ஓர் அம்பு கூர்கொண்டிருப்பதை உணர்ந்தான். அவன் அம்புக்கு நேர் எதிரே ஒரு காட்டாளன் பன்றிக்கு மறுபக்கம் நாணல்களுக்குள் இருந்து எழுந்து நின்றிருந்தான். அவன் அம்பின் கூரிலிருந்த நீலம் அது நஞ்சென்பதைக் காட்டியது.

இருவரும் ஒருவரை ஒருவர் அம்புகளால் நோக்கியபடி அசைவற்று நின்றனர். அவர்களின் விழிகளும் ஒன்றோடொன்று தொட்டுநின்றன. இருவருக்கும் நடுவே இருந்த வெளி அஞ்சி சிலிர்த்து நிற்கும் முள்ளம்பன்றி போல அசைவற்றிருந்தது. அர்ஜுனனின் தோளில் ஒரு நாணல்பூ தொட்டுச்செல்ல அவன் அறியாது சற்று தோளசைத்தான். அவ்வசைவு காட்டாளனிலும் ஏற்பட்டது. கணங்களாக ஓடிச்சென்ற அத்தருணத்தின் ஒரு புள்ளியில் தன்னை அறுத்துக்கொண்டு தோள்தளர்ந்து அர்ஜுனன் தன் வில்லைத் தாழ்த்தி பெருமூச்சுவிட்டான். காட்டாளனும் வில்தாழ்த்திவிட்டு இயல்பானான்.

காட்டாளன் அர்ஜுனனைவிட அரைமடங்கு உயரமும் அதற்கேற்ப பருமனும் கொண்டிருந்தான். அர்ஜுனனின் தலையளவு இருந்தன அவன் தோள்தசை உருளைகள். வேங்கைத்தூர் என சேற்றில் புதைந்திருந்தன நரம்பு புடைத்த கால்கள். உடலெங்கும் சாம்பல் பூசி இடையில் புலித்தோல் அணிந்திருந்தான். செஞ்சடைக் கற்றைகளை சுருட்டிக் கட்டி அதில் பன்றித் தேற்றையை பிறைநிலவென அணிந்திருந்தான். நெற்றியில் மூன்றாம் நீள்விழி செந்தழல் எனத் தெரிந்தது.

“யார் நீ?” என இருவரும் ஒரே குரலில் கேட்டனர். குரல்கள் முட்டிக்கொண்டதை உணர்ந்து தயங்கி அர்ஜுனன் “யார் நீ?”

என்றான். அவன் புன்னகைத்து “நீ யார்? இது என் நிலம்” என்றான். “நான் அஸ்தினபுரியின் குருகுலத்துப் பாண்டுவின் மைந்தனாகிய அர்ஜுனன். இந்திரப்பிரஸ்தத்தின் அரசன் யுதிஷ்டிரனின் இளையோன்” என்றான். “நான் காட்டாளன். கரியவன் என்பதனால் காளன்” என்று அவன் சொன்னான். அகன்ற கரிய முகத்தில் வெண்பற்கள் மின்ன ஒரு புன்னகை வந்துசென்றது.

சற்றே எரிச்சலுடன் “என்னை நீ அறிந்திருக்கலாம். நான் வில்விஜயன். நூறு களம் கண்டவன். நூறு பரணிகளால் பாடப்பட்டவன். என்றுமிருக்கும் சூதர்மொழிகளின் பாட்டுடைத்தலைவன். இமையசைவதற்குள் தலையறுத்து வீழ்த்தும் வல்லமை கொண்டவன்” என்றான் அர்ஜுனன். “என்னை நீ அறிந்திருக்க வாய்ப்பில்லை. நான் என் மனைவியால் நன்கறியப்பட்டவன். பங்காளிகளால் வெறுக்கப்படுபவன். நீ எண்ணுவதை முன்னரே அறியும் திறன்கொண்டவன்” என்றான் காளன். அவன் முகத்தில் மீண்டும் அந்த வெண்சிரிப்பு விரிந்தது.

அவன் தன்னை கேலிசெய்வது அப்போதுதான் அர்ஜுனனுக்குப் புரிந்தது. காட்டாளர்கள் கேலிசெய்வார்கள் என்னும் எண்ணமே தன்னுள் ஏன் எழவில்லை என அவன் உள்ளம் ஓர் எல்லையில் விலகி நின்று வியக்க மறுஎல்லையில் பழுத்த உலோகத்தில் நீர் விழுந்ததுபோல சுரீலென சினம் மூண்டது. அவன் கை அம்பை நாடுவதற்குள் காட்டாளன் அம்புபூட்டி வில்தூக்கிவிட்டிருந்தான். அர்ஜுனனின் கை தழைந்தது. “நன்று, நீயும் கலையறிந்தவன் என ஏற்கிறேன்” என்றான். “இந்தப் பன்றி உணவின்பொருட்டு நான் வேட்டையாடியது. வேட்டைநெறிகளின்படி இது எனக்குரியது.”

காளன் புன்னகையுடன் “வேட்டைநெறிகளின்படி வேட்டைப்பொருள் ஷத்ரியருக்குரியது என்று உரைக்கிறாயா?” என்றான். மீண்டும் தலைக்கேறிய சினத்தை மெல்ல அடக்கி “இல்லை, இதன்மேல் முதலில் விழுந்த அம்பு என்னுடையது என்பதனால்” என்றான். “இளவரசே, இதன்மேல் முதலில் பதிந்த அம்பு என்னுடையது என்றே நான் சொல்கிறேன்” என்றான் காளன். கைசுட்டி “நோக்குக! இப்பன்றி என் அம்புபட்டு திகைத்துநின்று பின் உன்னை நோக்கிப்பாய்ந்தது” என்றான். அர்ஜுனன் பற்களைக் கடித்தபடி “என் அம்பு பாய்ந்தபோது உன் அம்பு அதனுடலில் இருக்கவில்லை” என்றான். “ஆம், அதையேதான் நான் சொல்வேன். என் அம்பு பாய்ந்தபோது உன் அம்பை நான் பார்க்கவில்லை” என்றான் காளன்.

அர்ஜுனன் “என் அம்புபட்டு பன்றி என்னை நோக்கி சினந்து வந்தது. தாக்குதல் வந்த திசைக்கே பாய்வது பன்றிகளின் இயல்பு” என்றான். காளன் தலையை அசைத்து “இல்லை, என் அம்புபட்டு அதன் வலக்கண் நோக்கிழந்தது. எனவேதான் இடக்கண் காட்டிய திசைநோக்கி அது பாய்ந்தது” என்றான். அர்ஜுனன் கையை வீசி அவனைத் தவிர்த்து “இச்சொல்லாடலுக்கு முடிவிருக்கப்போவதில்லை. பார், பன்றி என் திசைக்கு வந்துள்ளது” என்றான். “அதை அங்கே செலுத்தியவன் நான்” என்றான் காளன்.

அர்ஜுனன் சினத்தை அடக்க கையிலிருந்த அம்பை சிலமுறை உருட்டினான். அருகே சென்று அந்தப் பன்றியை நோக்கி குனிந்து அதன் முகத்தைப் பார்த்தான். அதன் இருவிழிகளிலும் அம்புகள் தைத்திருந்தன. இரு விலாக்களிலும் அம்புகள் ஒரே ஆழத்தில் இறங்கி நின்றிருந்தன. குருதி நிலைத்து உறுதிகொள்ளத் தொடங்கிவிட்டிருந்தது. அவன் அதை நன்கு

நோக்கியும் எந்த முடிவுக்கும் வரமுடியவில்லை. காளன் அதே இடத்தில் அசையாமல் நின்றிருந்தான். அந்த நிகழ்வே ஓர் பகடிநாடகமெனத் தோன்றியது ஒருகணம்.

பின்னர் தன்னை அடக்கிக்கொண்டு அர்ஜுனன் ஏறிட்டு நோக்கி "சரி, காட்டாளனே இதை நான் உனக்கு அளிக்கிறேன். இன்னொன்றை நான் வேட்டையாடிக்கொள்கிறேன். இதை நீர்தெளித்து நான் அளிக்க நீ கொடையென பெற்றுக்கொள்ளவேண்டும்" என்றான். காளன் சிரித்து "நன்று, நான் வென்றதை ஏன் கொடையெனப் பெறவேண்டும்? இளவரசே, இதை நான் தோளில் ஏற்றிக்கொண்டு வெற்றிக்குரலுடன் மட்டுமே என் குடிக்குச் செல்வேன்" என்றான். அர்ஜுனன் நெற்றிப்பொட்டு துடிப்பதை உணர்ந்தான். விழிகளைத் தாழ்த்தி மெல்லிய குரலில் "உனக்கு வேண்டியது என்ன, பன்றிதானே?" என்றான்.

"இல்லை, கொடைகொள்ளும் இடத்தில் நான் என்றுமிருந்ததில்லை. ஏற்பது என் வில்லுக்கும் குலத்திற்கும் இகழ்ச்சி" என்றான் காளன். அர்ஜுனன் ஏறிட்டு நோக்கியபோது பரிவுதோன்ற புன்னகைத்து "நீ பசித்திருக்கிறாய் என்றால் கூறு, இதை நான் உனக்கு கொடையென்று அளிக்கிறேன். பொழுதிருள்வதற்குள் நூறு பன்றிகளை வேட்டையாட என்னால் இயலும்" என்றான். அர்ஜுனன் முகம்சீறிச் சுளிக்க பற்களைக் கடித்தபடி "சேறுநாறும் காட்டாளனிடம் இரந்துண்டு வாழ்வேன் என நினைத்தாயா? நான் அரசமகன்" என்றான். "ஆம், அரசர்கள் சேறுநாறும் மக்களிடம் கொள்ளையடித்து உண்ணலாம் என்றே நெறியுள்ளது" என்றான் காளன்.

"இனி உன்னிடம் பேசிப்பயனில்லை" என்ற அர்ஜுனன் எதிர்பாராதபடி அம்பொன்றை அவன்மேல் எய்தான். அது

சென்று எய்தும் முன்னரே காளனின் அம்பால் இரண்டாக முறிக்கப்பட்டது. காளனின் அம்பு வந்து அர்ஜுனனின் தோளுரசிச் சென்றது. அவன் சினந்து எய்த அம்பை காளன் கிளம்பும்போதே முறித்தான். மீண்டும் எழுந்த அம்பை நாண் தொடும் முன்னரே தெறிக்கவைத்தான். அடுத்த அம்பை அவன் தொடுவதற்குள்ளே அது அம்பறாத்தூணியிலிருந்து பறந்தது. அவன் பின்னங்காலெடுத்துவைத்து நாணலுக்குள் அமிழ்ந்து ஒளிந்துகொண்டு மூச்சிரைத்தான்.

“சினம்” என சொல்லிக்கொண்டான். சினம் கைவிரல்களில் துடித்தது. உதடுகளில் நெளிந்தது. சினத்தை வெல். கடந்துசெல். இந்த ஆட்டத்தை பார்த்தனை ஆடவிட்டு நீ உள்ளே தனித்திரு. ஒவ்வொரு விரலையாக மெல்ல மெல்ல விடுவித்தான். மூச்சை இழுத்து சீராக விட்டான். அவன் அம்புகளுக்கு இலக்காகும் வெளியில் மிக இயல்பாக நின்று தன் தோளில் வந்தமைந்த கொசுவை அடித்தான். வில்லால் முதுகை சொறிந்துகொண்டான். குனிந்து பன்றியை நோக்கி அதன் விழியில் குத்தியிருந்த அம்பை மெல்ல அசைத்தான்.

அத்தனை தன்னம்பிக்கையுடனிருக்கிறான் என்றால் அவனால் இயலும். அவன் நோக்கிழந்திருக்கிறான் என எண்ணி அம்பெய்தால் அக்கணமே அவன் அதை வெல்வான். அச்செயல்வழி மீண்டும் தன்னை சீண்டுவான். இப்போது தேவை அவனை நிலைகுலையச் செய்யும் ஓர் அடி. ஒரு துளிக்குருதி. அவன் மீள்வதற்குள் அதை அளித்தாகவேண்டும். அவன் கை மெல்ல சென்று அம்பைத் தொட்டது. மீண்டுமொரு பாழ் அம்பா? இல்லை. இது வென்றபின் எளிய அம்புகளே போதும். முதல் அடி வென்றேயாகவேண்டும்.

அவன் அம்பைத் தொட்டு யமன் அளித்த அமுதச்சொல்லை மும்முறை சொன்னான். அந்நுண்சொல்லின் நெறிகளுக்கேற்ப அவன் கட்டைவிரல் வளைந்து சுட்டுவிரல் நீண்டது. தண்டபாசம் அவன் கையில் நெகிழ்ந்து உருக்கொள்வதை உணர்ந்தான். இரைகவ்வும் தவளையென எழுந்து அதே விரைவில் அதைத் தொடுத்தான். உறுமலுடன் பாய்ந்து நாகமென வளைந்து காளனை அணுகியது அது. அவன் உடல் குழைந்து வளைந்தெழ அவன் முன் வந்து நெஞ்சுநோக்கிச் சென்றது. பின்காலிட்டு விலகி தன் அம்பால் அதை முறித்து வீழ்த்தினான் காளன்.

அனைத்துக் கட்டுகளும் அகல பெருங்கூச்சலுடன் எழுந்து அந்தர்த்தானையின் நுண்சொல்லை உரைத்து அம்பை எய்தான். அவன் பற்களனைத்தும் ஒளிரும் சிரிப்புடன் சிறிய அம்பொன்றால் அதை முறித்தான். அவன் விடுத்த அம்பொன்று வந்து அர்ஜுனனின் தோளில் தைத்தது. அந்த விசையில் நிலையழிய பிறிதொரு அம்பு வந்து அவன் தொடையை துளைத்து நின்றாடியது. அவன் மல்லாந்து விழுந்து அதே விசையில் கால்களை உதைத்து புதர்களுக்குள் தன்னை முழுமையாக இழுத்துக்கொண்டான். அவன் உள்ளங்காலில் காளனின் அம்பு வந்து தொட்டது.

தான் அழுதுகொண்டிருப்பதை அவன் அப்போதுதான் உணர்ந்தான். பற்களைக் கிட்டித்து, முகம் இழுபட, விழிநீர் தாடிமயிர்தொகையில் வழிய விம்மினான். அவ்வொலி கேட்டதுமே தன்னிழிவுகொண்டு சினம் மிஞ்ச தலையை அசைத்தான். கைகள் பதைத்துக்கொண்டிருந்தன. உள்ளம் மலைப்புகொண்டிருந்தது. என்ன நிகழ்கிறது? இவன் யார்? புவியிலொருவன் இப்படி இருக்கக்கூடுமா? அங்கே நகரங்களில்

வில்வேதமென்று ஓதப்படுபவை, வாழ்நாளெல்லாம் படைத்து கற்கப்படுபவை அனைத்தும் வீணென்றாகும் ஒரு இடம் புவியிலிருக்கலாகுமா? வேதமுதன்மைகொண்ட தெய்வங்களின் நுண்சொல் அமைந்த வாளிகளும் விளையாட்டென்றாவது ஒரு காட்டாளனின் வில் முன்னரா?

வாருணவாளியை எடுத்தபோது அவனுக்கே நம்பிக்கை இருக்கவில்லை. கைகள் நடுங்குவதை உணர்ந்து தன் விழிகளை மூடி உள்விழியை நெற்றிக்குவியத்தில் நிறுத்தி ஒவ்வொரு கணமாக நுண்சொல்லை தன் உளம்வழியாக கடந்துசெல்லவிட்டான். இலைசெறிந்த மரத்திலிருந்து நீர் சொட்டுவதைப்போல அவனுள் அச்சொல் நிகழ்ந்துகொண்டிருந்தது. இலைமேல் இலைசொட்டி இலைகள் ஒளிர்ந்தசைய தன்னுள் அலைகளெழுந்து அறைவதை உணர்ந்தான். பேரலையொன்று வந்து பாறைகளை அறைந்து வெண்சிறகென எழுந்து சிதறி அமைந்தகணம் எழுந்து அவ்வாளியை ஏவினான்.

அலையென எழுந்து ஓசைபொங்கச் சென்று அவனை அடைந்த அதை அவன் அம்பு முறித்த அந்தக் கணத்தை ஆயிரம் மடங்கு நீட்டிப்பரப்பி அவன் நோக்கிக்கொண்டிருந்தான். அவன் கைசென்று அம்பெடுத்து நாணுக்களிக்க நாண் விம்மியமைந்து அதை ஏவ கிளையுதைத்தெழும் புள் என அம்பு காற்றிலெழுந்து சென்று வருணபாசத்தைக் கவ்வி சற்றே குதறி முறித்து தானும் சரிந்து புல்லில் விழுந்தது. அமைந்து மீண்டும் நிமிர்ந்த புல்லின் வெண்பூக்குலை சிலிர்த்தது.

அவன் எழுந்து ஒரு கையில் வில்லும் இன்னொரு கையில் அம்புமாக நின்றான். எதிரே காளன் கரும்பாறைமேல் சிறகுகோட்டி அமர்ந்த வெண்கொக்குநிரைபோல பற்கள்

தெரியும் சிரிப்பெழுந்த முகத்துடன் நின்றான். “நாம் போரிட்டுவிட்டோம் என எண்ணுகிறேன், இளவரசே. நீ மாபெரும் வில்லவன் என அறிந்துகொண்டேன். பன்றியை நான் எடுத்துச்செல்கிறேன். அன்றி நீ அதை விழைகிறாய் என்றால் உனக்கே கொடையளிக்கிறேன்” என்றான்.

அனைத்தையும் மறந்த பெருங்கூச்சலுடன் அர்ஜுனன் வஜ்ரத்தை எடுத்து அவன் மேல் ஏவினான். சிம்மத்தின் உறுமலென அது சென்ற ஒலி கேட்டது. காளனின் அம்பு அதை வழியிலேயே தடுத்தது. பிறிதொரு அம்பு அதை திசைதிருப்பியது. மூன்றாம் அம்பு அதைச் சுழற்றி நிறுத்த அவன் கையால் அதைப்பற்றி அதன் முனையை நோக்கினான். விழிதூக்கி அவனை நோக்கி “எளிய அம்புதான்... ஏன் இத்தனை ஆற்றல் இதற்கு?” என்றான். அதை வீசிநோக்கியபின் “அம்பில் ஏதுமில்லை... அதை ஏவுகையில் நீ சொல்லும் நுண்சொல்லில் உள்ளது இதன் விந்தை” என்றான்.

அர்ஜுனன் வில்லைத் தளரவிட்டு நின்றான். அனைத்தும் கனவென்றாகுமென அவனுள் இருந்த சிறுவன் விழைந்தான். காளன் மகாவஜ்ரத்தை தூக்கிப்போட்டு பிடித்து “எளிய மூங்கிலம்பு... அது எப்படி இத்தனை பேரொலி எழுப்பியது? இடியெழுகிறதென்றே எண்ணினேன். மின்னலை நோக்கினேன்” என்றான். “இதைச் சொல்கையில் உனது விரல் அதற்கேற்ப அறியாது வளைகிறதுபோலும்.” அதை கீழே போட்டுவிட்டு “நான் பன்றியுடன் செல்லப்போகிறேன்... நீ விரும்பினால் இப்போதுகூட இதை பெறமுடியும்” என்றான்.

அர்ஜுனன் பெருமூச்சுவிட்டு “நன்று, முடித்துவிட்டுப் போ” என்றான். காளன் புரியாமல் “போராடல் முடிந்துவிட்டதே” என்றான். “என்னை கொல். அதுவே போரின் முறை” என்றான்

அர்ஜுனன். “இல்லை ஷத்ரியனே, நான் உண்ணாத உயிரை கொன்றதே இல்லை” என்றான் கிராதன். கைவீசி “திரும்பிச் செல்க...” என்றபடி குனிந்து பன்றியின் காலைப் பற்றினான். நெஞ்சில் கையால் அறைந்தபடி “அடேய், நீ என்மேல் சிறிதளவேனும் மதிப்புகாட்ட விழைந்தால் என்னைக் கொல்” என்று அர்ஜுனன் கூவினான். “மதிப்புகாட்டும்பொருட்டு கொல்வதா? மண்ணவர் நெறிகளே எனக்கு விளங்கவில்லை” என்றான் காளன்.

“மூடா” என வீரிட்டபடி அர்ஜுனன் தன் வில்லை அவன் மேல் வீசினான். “கொல் என்னை... கொன்று செல் என்னை!” அவன் “என்ன சொல்கிறாய், ஷத்ரியனே? உன்னை நான் ஏன் கொல்லவேண்டும்? நீ என் உணவல்ல. என்னை கொல்லப்போகிறவனும் அல்ல” என்றான். “இழிமகனே, காடனே, கொல் என்னை... நீ ஆண்மகன் என்றால் என்னைக் கொல்” என்று கூவியபடி அர்ஜுனன் கீழே கிடந்த கற்களை எடுத்து அவன் மேல் எறிந்தான். புகைபோல உடல் வளைத்து அவன் அக்கற்களை ஒழிந்தான்.

மூச்சிரைக்க அர்ஜுனன் நின்றான். கண்ணீர் வழிய “சிறுமை செய்யாதே... நான் என் உயிரை பறித்துக்கொள்ளும்படி ஆக்காதே... கொல் என்னை” என்றான். “நான் இதுவரை மானுடரை கொன்றதில்லை, ஷத்ரியனே” என்றான் காளன். “உன்னுடன் விளையாடவே வந்தேன்... ஆடல் முடிந்துவிட்டது. நீ விழைந்தால் நாம் நெஞ்சுசேர தோள்தழுவுவோம்” என்று கைகளை விரித்தான். “தோள்தொடுவதா? உன்னிடமா? உன் இழிந்த கையால் இறந்தாலும் எனக்கு விண்ணுலகுண்டு. உன்னை நிகரென நினைத்துத் தழுவினால் நானே விண்ணுலகை விழையமாட்டேன்... நீ செய்யக்கூடுவதொன்றே.

கொல் என்னை....” என்று அர்ஜுனன் குனிந்து
தன் தொடையிலிருந்த அம்பை பிழுதெடுத்தான். “இப்போதே
என்னைக் கொல். இல்லையேல் என் கழுத்துநரம்பை அறுத்து
உன் முன் குருதிசோர விழுவேன்.”

குட்டைமரங்களின் இலைத்தொகை சலசலக்க அவன் திரும்பி
நோக்கினான். தழைப்புக்கு அப்பாலிருந்து கரியநிறமும்
செஞ்சாந்துப் பொட்டிட்ட பெரிய வட்டமுகமும் கொண்ட பெண்
ஒருத்தி இடையில் மலர்சூடிய குழல்முடித்து ஆடையின்றி
அமர்ந்திருந்த இளமைந்தனுடன் தோன்றினாள். அவள் அணிந்த
மான்தோலாடையைப் பற்றியபடி பெருவயிறனாகிய மூத்தவன்
கையில் பாதியுண்ட கனியொன்றுடன் நின்றான். இரு
சிறுவரும் ஆவலுடன் அர்ஜுனனை நோக்கினர்.
“இங்கிருக்கிறீரா? எத்தனை நேரம்?” என்றவள் அர்ஜுனனை
நோக்கி “யார் இவன்? முன்பு வந்த பீலிமுடியர்
போலிருக்கிறான்?” என்றாள். கணவன் அளவுக்கே அவளும்
உயரமிருந்தாள். பெருமுலைகளுக்குமேல் வெண்கல்மாலை
கரும்பாறைமேல் அருவியெனக் குழைந்தது.

கண்களில் புன்னகையுடன் “அவனுடன் நான் போரிட்டேன்”
என்றான் காளன். “அவனிடமா? உமக்கென்ன அறிவில்லையா?
இளமைந்தர்போல விழிகொண்டிருக்கிறான், அவனிடமா
போரிடுவீர்?” என்று அவள் சினந்தபின் அவனை நோக்கி
“பித்தர்... நீ பொருட்படுத்தவேண்டியதில்லை, மைந்தா” என்றாள்.
“அவன் அந்த அம்புக்கூரால் தன் கழுத்தை தானே
வெட்டிக்கொள்ளப்போவதாக சொல்கிறான். நான் அது கூடாது
என்றேன்” என்றான் காளன். “தன் கழுத்தையா? எதற்கு?”
என்றாள் அவள். “என்னிடம் தோற்றுவிட்டான்.
தோற்றபின் உயிர்துறப்பது அவன் குடியினரின் வழக்கமாம்.”

சீற்றம்கொண்டு திரும்பி “என்ன சொல்கிறாய்? அறிவே இல்லையா உனக்கு? போடு அதை கீழே” என்று கையை ஓங்கியபடி அதட்டிக்கொண்டு அவள் அர்ஜுனன் அருகே வந்தாள். அவன் “நான்...” என்று ஏதோ சொல்ல “போடச்சொன்னேன், கீழே போடு” என்றாள். அவன் கீழே போட்டுவிட்டு “நான் இவரிடம் போரில்...” என காளனைச் சுட்டி சொல்லவர “அவர் பித்தர். பித்தரிடம் எவராவது போரிடமுடியுமா? நீ அழகிய இளையவன்போலிருக்கிறாய்...” என்றபின் திரும்பி “வரவர என்ன செய்கிறீர் என்றே தெரியவில்லை உமக்கு” என்றாள். காளன் தலைதூக்கி வாய்திறந்து உரக்கச் சிரித்தபடி அர்ஜுனனிடம் “இவள் என் மனைவி. காளி என்று அழைப்பேன். சீற்றம் மிக்கவள்...” என்றான்.

காளி அர்ஜுனனிடம் “இளையவனே, எதற்காக போர்? உனக்கு என்ன வேண்டும்? இந்தப் பன்றியா? இதோ, எடுத்துக்கொள். வேண்டுமென்றால் இந்தக் காட்டிலுள்ள அத்தனை பன்றிகளையும் உனக்கு இவரை வேட்டையாடித் தரச்சொல்கிறேன். இதற்கா பூசல்?” என்றாள். “அதை நான் முன்னரே அவனுக்கு கொடுத்தேன். மறுத்துவிட்டான்” என்றான் காளன். அவள் அவனிடம் “நீர் வாயை மூடும்...” என சீறிவிட்டு “நான் கொடுக்கிறேன் உனக்கு. நீ கொண்டுசென்று உண்க, மைந்தா! இது என் கொடை” என்றாள். அவன் சிறுவன்போல சரி என தலையசைத்தான்.

அவள் குனிந்து ஒற்றைக்கையால் அந்தப் பன்றியைத் தூக்கி அர்ஜுனனை நோக்கி நீட்டினாள். அர்ஜுனன் இயல்பாகக் கைநீட்டி அந்தப் பன்றியை வாங்கினான். அவள் பிடிவிட்டதும் எடைதாளாமல் அவன் கையிலிருந்து நழுவி அது கீழே

விழுந்தது. “அவரால் தூக்கமுடியவில்லை” என்று மூத்த மைந்தன் சொன்னான். “நானே கொண்டு கொடுத்துவிட்டு வரவா?” காளி “அதெல்லாம் அவரே கொண்டுசெல்வார்… நீ பேசாமல் வா. அங்கேயும் சென்று பாதியைப் பிடுங்கி தின்றுவிட்டு வர நினைக்காதே” என அவன் தலையை தட்டினாள்.

அர்ஜுனன் அவள் முகத்தை நோக்கியபடி உளமழிந்து நின்றான். அவள் விழிகள் முலையூட்டும் அன்னைவிழியென கனிந்திருந்தன. சின்னஞ்சிறு குமிழுதடுகளில் எப்போதுமென ஒரு புன்னகை இருந்தது. அவிழ்ந்த நீள்குழலை அள்ளிச் சுழற்றிமுடிந்தபடி அவள் திரும்பியபோது அவன் அறியாமல் அவர்களை நோக்கி ஓர் அடி எடுத்துவைத்தான். அவள் திரும்பி “என்ன?” என்றாள். அவன் நெஞ்சு கலுழ விம்மி அழுதபடி “இனி நான் வாழ விரும்பவில்லை, அன்னையே” என்றான். அவள் அவனை நோக்கி புருவம் சுளித்து “ஏன்?” என்றாள். “நான் தோற்றுவிட்டேன்… தோல்விக்குப் பின் வாழ்வது என்னால் இயலாது” என்றபோது அவன் விழிகளிலிருந்து கண்ணீர் வழிந்து நெஞ்சில் சொட்டியது. உதடுகளை இறுக்கி அவன் தலைகுனிந்தான்.

அறிவிலியே என புன்னகையிலேயே செல்லமாக அழைத்து “தோற்றாய் என்றால் நீ அறியாத ஒன்றை சந்தித்திருக்கிறாய் என்றல்லவா பொருள்? அதைக் கற்கும் ஒரு வாய்ப்பு உனக்கு அமைந்திருக்கிறது என்றுதானே கொள்ளவேண்டும் நன்மாணவன்?” என்றாள். அவன் உள்ளம் சொடுக்க, விழிதூக்கி அவளை நோக்கினான். உதடுகள் சொல்லில்லாமல் அசைந்தன. இனிய மென்குரலில் “நீ கற்றிராததை இவரிடமிருந்து கற்றுக்கொள். கற்பிக்கும் இவர் உன் ஆசிரியர். ஆசிரியனிடம்

தோற்பதில் இழிவென ஏதுமில்லை. ஆசிரியன் முன்பு முற்றிலும் தோற்காதவன் எதையும் கற்கத்தொடங்குவதில்லை” என்றாள்.

அர்ஜுனன் பெருமூச்சுடன் “ஆம்” என்றான். ஒரு மூச்சிலேயே உளம்கொண்ட சுமையெல்லாம் அகன்று எடையிழந்துவிட்டிருப்பதை உணர்ந்தான். “அவர் காலடியை வணங்கி கல்வியை கேள்” என்றாள் அவள். அவன் காலை நொண்டியபடி எடுத்து முன்னால் வைத்து காளனின் அருகே சென்று வலியுடன் முழந்தாளிட்டு “காலவடிவரே, நான் எளியவன். ஆணவத்தால் ஆட்டிவைக்கப்படும் இழிந்தோன். உம்மிடமுள்ள அறிவையும் திறனையும் எனக்கும் கற்பித்தருளவேண்டும்” என்றான். காளன் உரக்க நகைத்து அவன் தலைமேல் கைவைத்து “எழுக... நான் அவள் ஆணைகளை மீறுவதில்லை...” என்றான்.

மார்பில் எச்சில்கோழை வழிய வாயில் இடக்கையை வளைத்து வைத்து கசக்கி சுவைத்துக்கொண்டிருந்த இளமைந்தன் கைகளை விரித்து “ந்தையே” என்று தாவ “ஆ! வா வா! என் அழகனல்லவா?” என்றபடி வாங்கிச் சுழற்றி தன் தோளில் வைத்துக்கொண்டான். தந்தையின் மார்பில் இரு கால்களையும் போட்டுக்கொண்டு எம்பி குதித்து “யானை... யானை! பெரீ யானை!” என்றான் இளையவன். மூத்தவன் வந்து அர்ஜுனனின் கைவிரலை இயல்பாக பற்றிக்கொண்டு “பெரிய பன்றி... நாம் அதைக் கொண்டுசெல்வோம்” என்றான். அவனை நோக்கி காளி புன்னகை செய்தாள்.

அர்ஜுனன் “நானே எடுத்துவருகிறேன்” என்றான். காளி “இல்லை, உன் கால்கள் புண்பட்டிருக்கின்றன. அவனே கொண்டுவரட்டும். உணவென்றால் அவன் யானை. எத்தனை

எடையையும் சுமப்பான்” என்றாள். “ஆம், பன்றி மிகச்சுவையானது” என்ற மூத்தவன் திரும்பி நோக்கி கைசுட்டி “சிரிக்கிறது” என்றான். அர்ஜுனன் திரும்பி நோக்க பற்கள் தெரிய கிடந்த பன்றி நகைப்பதைப்போல தெரியக்கண்டு தன்னை மீறி சிரித்துவிட்டான்.

# கிராதம் - 80

[ 33 ]

காளி தான் சேர்த்துவைத்திருந்த கிழங்குகள் கொண்ட கூடையை எடுத்துக்கொண்டாள். அர்ஜுனனுக்கு இன்சுவைக் கிழங்குகளை அளித்தாள். அவன் அவற்றை உண்டதும் மலைத்தேன் குடுவையை அளித்தாள். சுனைநீருண்டதும் அவன் உடலாற்றல் மீண்டான். அவன் உடலில் இருந்த அம்புகளை அகற்றி பச்சிலை சாறூற்றினாள். அனலென எரிந்து குளிர்ந்தணைந்தபோது புண் மூடிக்கொண்டுவிட்டதை அவன் அறிந்தான். நடந்தபோது வலியிருக்கவில்லை. வெந்நீர் ஓடிய சிற்றோடைகளையும் விழுந்து கிடந்த பெருமரங்களையும் கடந்து அவர்கள் சென்றனர்.

அவர்களுடன் செல்கையில் அந்தச் சிறுகாடு அவன் அப்போதுவரை அறியாத முகங்களை காட்டத்தொடங்கியது. மலைகளின் இடுக்கு ஒன்றை செறிந்த மரங்கள் மூடியிருந்தன. அதனூடாகச் சென்றபோது அந்த மறைவாயிலின் இரு பக்கங்களிலும் திமில்பெருத்து திமிரெழுந்த நோக்குடன் நின்றிருந்த காளைவடிவங்கள் செதுக்கப்பட்டிருப்பதை அர்ஜுனன் கண்டான். “அவை எங்கள் குலக்குறிகள். இவற்றுக்கு

அப்பால் எங்கள் வாழ்நிலம்” என்று பன்றியை தோளில் சுமந்துகொண்டு வந்த மூத்த மைந்தன் சொன்னான்.

“இங்கே காவல் என்று ஏதுமில்லையே?” என்றான் அர்ஜுனன். “காவலா? எதற்கு?” என்று காளி கேட்டாள். “இதற்குள் வரும் விலங்குகள் அனைத்தும் எங்கள் சொல்கேட்பவைதான்.” அர்ஜுனன் “எதிரிகள் வரக்கூடுமே?” என்றான். “எதிரிகள் என்றால்?” என்றான் மூத்த மைந்தன். அர்ஜுனன் “உங்களை தாக்குபவர்கள். வெல்பவர்கள். அடிமைப்படுத்தி திறைகொள்பவர்கள். கொள்ளையடித்துச் செல்பவர்கள்” என்றான். காளன் ஒரு கையால் தொடையை அறைந்து வெடித்துச்சிரிக்க காளி சினத்துடன் திரும்பி “அதென்ன எப்போதும் ஒரு மூடச்சிரிப்பு? செவி ரீங்கரிக்கிறது” என்றாள். காளன் சற்று குறுகி சிறுவன்போல “இவன் காலால் என் மார்பை வருடி கூச்சமளித்தான். அதனால்தான்” என்றான்.

காளி அர்ஜுனனிடம் “நாங்கள் இங்கிருப்பதை எவரும் அறியமாட்டார்கள். இந்த எல்லைக்கு அப்பால் சென்று பிறவுலகை அறிந்து வந்தவர்களே நானும் இவரும் மட்டும்தான். பிறருக்கு புறமென ஒன்று உண்டென்றே தெரியாது” என்றாள். “புறவுலகுக்கு நீங்கள் ஏன் சென்றீர்கள்?” என்றான் அர்ஜுனன். காளன் “எல்லா வகையான காதல்களையும் செய்து பார்ப்பதற்காகத்தான்” என்றான். “அய்யோ” என்றபடி காளி அவனை அறைந்தாள். அவன் விலகிக்கொண்டு உரக்க நகைத்தபடி “ஹை ஹை ஹை” என ஓசையிட்டு நடனமிட்டான். அவள் அவனை அடிக்கச்செல்ல அவன் நடனமிட்டபடி விலகினான். அவன்மேல் அமர்ந்த இளையவன் கைகளை வீசி எம்பி குதித்து பால்பற்கள் தெரிய சிரித்தான்.

மூத்தவன் அர்ஜுனனிடம் “நன்றாக ஆடுவார்... உள்ளே போனதுமே சிவப்புகை இழுப்பார். அதன்பின் இரவெல்லாம் ஆட்டம்தான்” என்றான். அர்ஜுனன் புன்னகையுடன் அவர்களைப் பார்த்தான். காளி மூச்சிரைக்க “உள்ளே வருக... பார்க்கிறேன்” என்றாள். மூத்தவன் “சில தருணங்களில் நானும் ஆடுவேன். எனக்கு களிமயக்கு எழவேண்டும்” என்றான். “சிவப்புகை எடுப்பாயா?” என்றான் அர்ஜுனன். “இல்லை, எனக்கு வயிறு முழுமையாக நிறைந்தாலே களியெழுந்துவிடும்” என்றான் மூத்தவன்.

அர்ஜுனன் சட்டென்று நின்று “ஆ!” என்றான். “என்ன?” என்று அவள் கேட்டாள். “நாகம் கொத்திவிட்டதா? அஞ்சாதே, எங்களிடம் நஞ்சுநீக்கும் பச்சிலைகள் பல உள்ளன.” அர்ஜுனன் “இல்லை அன்னையே, நீங்கள் அஸ்தினபுரிக்கு வந்திருந்தீர்களா?” என்றான். “நாங்கள் மண்ணிலுள்ள அனைத்து இடங்களுக்கும் சென்றோம்” என்றான் காளன். “ஆமாம், மண்முழுக்கச் செல்வது... அறிவில்லாமல் எதையாவது பேசுவது. கேட்டால் ஒரு கிறுக்குச் சிரிப்பு” என நொடித்தபின் “ஏன் கேட்கிறாய், மைந்தா?” என்றாள்.

“நீங்களெல்லாம் பேசுவது அஸ்தினபுரியின் தனிச்செம்மொழியை... அந்த உச்சரிப்புகூட அப்படியே அஸ்தினபுரியிலுள்ளது” என்றான். அவள் “அப்படியா?” என்றாள். “ஆம், மலைநோக்கி வருந்தோறும் மொழியில் பீதர்மொழியின் ங ஒலியிருக்கும். மேற்குநோக்கி சென்றால் யவனர்களின் ழ ஒலியிருக்கும். தெற்கே சென்றால் தென்மொழியின் குறுமுழவோசை கலக்கும்” என்றான் அர்ஜுனன். “அஸ்தினபுரியின் மொழி கங்கைக்கரை ஓசைகொண்டது.

வங்கம் முதல் பாஞ்சாலம் வரை புழங்கும் இம்மொழியில் யாழின் ஓசை கலந்திருக்கும்.”

“நாங்கள் இந்த மொழியை உன் உள்ளத்திலிருந்தே எடுத்துக்கொள்கிறோம்” என்றான் காளன். “உளம்புகு கலையா? நான் அதை கற்கமுடியுமா?” என்றான் அர்ஜுனன். “உளமழியும் கலை என்று சொல்லலாம். கற்பதற்கு உளமில்லாதாகும்போது வந்தடையும் கலை அது” என்று சொல்லி காளன் கண்சிமிட்டினான். “இவர் பேசுவதை புரிந்துகொள்ள முயலாதே. அது இவருக்கே தெரியாது. நீ உனக்கு வேண்டியதை மட்டும் கற்றுக்கொள்” என்றாள் காளி. “மறந்தும் இவரிடமிருந்து சிவப்புகையை பெற்றுக்கொள்ளாதே. பெற்ற தாய் மைந்தனுக்கு ஊட்டுவதுபோல கொஞ்சிக்கொஞ்சி நீட்டுவார். வாங்கி இழுக்கத் தொடங்கினால் அதன்பின் உனக்குள் ஒரு சொல்லும் இருக்காது. உறவும் கடமையும் மறக்கும். வெறும் முகில் மட்டுமே இருக்கும்.”

அர்ஜுனன் “இல்லை, அன்னையே” என்றான். அவனை நோக்கி காளன் மீண்டும் கண்சிமிட்டி புன்னகை செய்தான். மூத்தவன் மிக எளிதாக அந்தப் பெரிய பன்றியை தூக்கிவருவதை அர்ஜுனன் கண்டான். அவனுக்கு ஐந்து வயதுகூட இருக்காதென்று முகம் காட்டியது. ஆனால் அர்ஜுனனின் தோள் அளவுக்கு உயரமிருந்தான். “உன் பெயர் என்ன?” என்றான். “கொம்பன்” என்றான் அவன். அவ்வொலி அர்ஜுனனை சற்று திகைக்கச் செய்தது. “அதன் பொருள் என்ன?” என்றான். “களிற்றுயானை. பெருங்கொம்பு கொண்டது” என்றான் கொம்பன். “என் இளையோன் பெயர் குமரன்... சிறுவன் என்று அதற்குப் பொருள். தந்தை அவனை அழகன் என்று அழைப்பார்.”

அஞ்சிய முட்பன்றியென அர்ஜுனனுக்குள் அனைத்துப் புலன்களும் முள்கொண்டன. அவன் நின்றுவிட்டான். “ஏன்?” என்றான் கொம்பன். “இந்தப் பெயர்கள் தென்மொழியில் அமைந்தவை...” என்றான். “தென்மொழியா?” என்றபடி கொம்பன் அவனை ஏறிட்டு நோக்கினான். “பாரதவர்ஷத்தின் தென்முனம்பில் பேசப்படும் மொழி அது. தென்னவர் தொன்மையான கடலோடிகள். முத்துக்களை பணமாகக் கொண்டு உலகுடன் வணிகம் செய்பவர். இசை தேர்ந்தவர்கள். ஏழுவகை யாழ்கொண்டவர்கள். அவர்களின் மொழியிலமைந்த பெயர்கள் இவை.”

அர்ஜுனன் அந்தப் பெயர்களை மீண்டும் சொல்லி “கொம்பன் என்ற பெயரிலேயே தென்னகப்பாணன் ஒருவன் அஸ்தினபுரிக்கு வந்திருக்கிறான். அவன் முகத்தைக்கூட நினைவுறுகிறேன்” என்றான். கொம்பன் “அவன் என்னைப்போலவே சிறந்த வீரனா?” என்றான். “அவன் பாணன்” என்றான் அர்ஜுனன். “அவனால் முழுப்பன்றியை உண்ணமுடியுமா?” என்றான் கொம்பன். அர்ஜுனன் சிரித்துவிட்டான்.

அப்பால் காளியும் காளனும் தங்களுக்குள் ஏதோ பேசியபடி வந்தனர். தலைக்குமேல் குமரன் விழுந்து துயின்றுகொண்டிருந்தான். “அவன் மேலே ஏறினாலே துயின்றுவிடுவான். என்னை அவர் அப்படி ஏற்றிக்கொள்வதில்லை” என்றான் கொம்பன். “நான் எடை மிகுதி. மேலும் செல்லும்வழியெல்லாம் கனிகொய்து உண்பதனால் அவரால் நடக்கவும் முடியாது.” அர்ஜுனன் “என்ன பேசிக்கொள்கிறார்கள்?” என்றான். “அவர்கள் அப்படித்தான் பேசிக்கொண்டே இருப்பார்கள். சண்டைபோடுவதற்காக

பேசுவார்கள். மீண்டும் பேசுவதற்காக சண்டைபோடுவார்கள்” என்றான் கொம்பன்.

அவர்கள் சென்றடைந்த நிலம் தென்னகம்போலவே இருந்தது. ஓங்கிய தென்னைமரங்கள் உடல்வளைத்து நடமிடும் பாணர்களும் விறலியரும்போல இலைவிரித்து நின்றிருந்தன. கொடிமரங்களின் செறிவென கமுகுகள், கிழிந்த பேரிலையை யானைச்செவிபோல அசைத்தபடி வாழைகள், கருங்கால்வேங்கைகள், விழுதுபரப்பிய ஆல்கள், இலைச்சிமிட்டல்கள் அடர்ந்த அரசுகள், பொன்னணிந்த கொன்றைகள், இலுப்பைகள், இலை சிலிர்த்த வேம்பு, புதுத்தளிர்விட்ட புங்கம். இளவேனில் எழுந்திருந்தது அங்கு. பறவைகளின் ஓசை தலைக்குமேல் பெருகிநிறைந்திருந்தது. இலைகள்மேல் காற்றோடும் ஓசை அருவியை அணுகுவதுபோல எண்ணச்செய்தது.

விழிவிரிய சுற்றிலும் நோக்கியபடி “தென்னகநிலம்!” என்றான் அர்ஜுனன். காளன் அதைக் கேட்டு அருகணைந்து “ஆம், தெற்கே இதைப்போலொரு நிலமிருப்பதாக சொல்லப்பட்டுள்ளது எங்கள் பாடல்களில்” என்றான். பசும்பரப்பின் ஊடாகச்சென்ற கால்தடப் பாதையில் அவர்கள் சென்றனர். பசுமைக்குள் தெரிந்த மலைப்பாறைகள் அனைத்துமே முகங்களாக செதுக்கப்பட்டிருந்தன. ஊழ்கத்தில் மூழ்கிய முகங்கள் சில. விழி உறுத்து கேளாச்சொல்லொன்றைச் சொல்லி அமைந்தவை. கனிந்து புன்னகைக்கும் அன்னையர் முகங்கள். தந்தையருக்குக் கீழே எருதுகளும் யானைகளும் செதுக்கப்பட்டிருந்தன. அன்னையருக்கு கலைமான்களும் சிம்மங்களும். அவர்கள்

அனைவருமே சடைத்திரிக் கூந்தல் கொண்டிருந்தனர். அவை வழிந்து விழுதுகளென நிலம்தொட்டு விரிந்திருந்தன.

"அவர் எங்கள் குலமூதாதையர்" என்றான் காளன். "உங்கள் குலப்பெயர் என்ன?" என்று அர்ஜுனன் கேட்டான். "காலர்" என்று காளன் சொன்னான். "கால் எனில் காற்று. அலையலையென எழுந்துவரும் முடிவிலா காற்றென்றே காலம் எங்கள் மூதாதையரால் அறியப்பட்டது. பருவங்களைச் சமைப்பது அதுவே. மலர்களை முகிழவிழச் செய்கிறது. மகரந்தங்களால் சூலுறச்செய்கிறது. காயும் கனியும் ஆக்குகிறது. விலங்குகளிலும் பறவைகளிலும் காமத்தை எழுப்புகிறது. மழையையும் பனியையும் சுமந்து வருகிறது. வெயிலை குளிரவைத்து அளிக்கிறது."

"காற்றே மூச்சு என உடலில் ஓடுகிறது. காலமென்றாகி நெஞ்சில் துடிக்கிறது. எண்ணங்களாகி அகத்தை நிறைக்கிறது. காற்று அகலும்போது அன்னம் மீண்டும் அன்னமென்றாகிறது" என்று காளன் தொடர்ந்தான். "அன்ன எனில் போல என்று பொருள். அன்னதே அன்னமென்றாகியது. பொருளை பிறிதொன்றுடன் ஒப்பிடாமல் அறியமுடியாது. ஒப்பிடப்பட்ட முதற்பொருளின் முன்பாக அனைத்துடனும் ஒப்பிடப்படும் முழுப்பொருள் நின்றிருந்தது" என்றான். "அது அன்னத்தைப் பொருளென்றாக்குகிறது. சொல்லில் பொருளென குடிகொள்கிறது."

சிவந்தவரிகள் ஓடிய அவன் விழிகள் சிப்பியின் உட்தசைபோலிருந்தன. கருவிழிகளுக்கு நடுவே நோக்கிலாதவைபோல வெறித்தன இரு உள்விழிகள். "குடி என்றால் வாழ்வது. கூடுதல் என்றால் இணைவது, மிகுவது. கூடுவதே குடி. குடியை கூடு என்றும் நாங்கள் சொல்வதுண்டு.

வழிதலென்பது வழியென்றானது. வழியே வாழ்வென்றானது. வாழ்வே வழுத்துதல் என்க! வழுவும் அதுவே.” அருகே நின்ற பேரிலைக்கதலியை கையால் தட்டி “வாழ்வதென்பதனால் இது வாழை. குளிர்ந்தது, கனிவது, வேர்முளைப்பது, முழுமைகொண்டழிவது” என்றான்.

“தென்மொழியேதான்... ஐயமே இல்லை. அத்தனை சொற்களும் அம்மொழியே” என்றான் அர்ஜுனன் வியப்புடன். “நன்று, அதை நானறியேன். அவர்கள் இங்கிருந்து மொழியை கொண்டுசென்றிருக்கக்கூடும். இதுவே ஊற்றுமுகம். இங்கு எழுந்த அனலே எங்கும் பற்றிக்கொண்டது” என்று காளன் சொன்னான். “முழுமுதற் சொல்லை பெற்றுக்கொண்ட மூத்தகுடியென்பதனால் நாங்கள் இங்கு மலைசூழ்ந்து காக்க அதில் திளைத்துவாழ்கிறோம்.” அவன் தலையைத் தொட்டு “வருக!” என அவன் முன்சென்றான்.

“அந்த முதற்சொல் வாட்கருக்கு கொண்ட வைரம். அருநஞ்சும் ஆராவமுதும் ஒன்றென்றானது. அதை எங்களுக்கு உகந்த முறையில் மெருக்கிக்கொண்டோம். எங்கள் தலைமுறைச்சரடின் காலப்பெருக்கில் உருண்டு உருண்டு மொழுத்தமையால் அதை மொழி என்கிறோம்” என்றான் காளன். “எங்கள் மொழியை அறிக! எங்கள் தொல்மூதாதையர் கண்ட முழுமுதன்மை ஆயிரம் நாவுகளில் அமைந்ததே எங்கள் மொழி. சொல்தொட்டு பொருள்பெற்று பின்னகர்ந்து சென்றமைக! அதுவே இங்குள்ள ஊழ்கம்.”

அவன் அர்ஜுனனின் தோளில் தன் வேங்கைமரக்கிளைபோன்ற பெருங்கையை வைத்தான். “அந்த முதற்சொல்லே பாசுபதம் என சொல்லப்படுகிறது.” அர்ஜுனன் மின்தொட்ட மரம் என

சுடர்ந்து நின்றான். பின்னர் மெல்ல எரிந்தணைந்தான். நீள்மூச்சுடன் “ஆம், அதன்பொருட்டே வந்தேன்” என்றான்.

அவர்களை நோக்கி அங்குள்ள சோலைக்குள் இருந்து இளையோர் கூச்சலிட்டபடி ஓடிவந்தனர். கரிய முகத்தின் வெண்பல்நகைகளும் இடையணிந்த வெண்கல்நகைகளும் மட்டும் முந்தித்தெரிவதுபோலத் தோன்றியது. அவர்களின் குரல்கேட்டு தந்தையின் தோளிலிருந்த இளையவன் எழுந்து கூச்சலிட்டபடி எம்பிக்குதித்தான். “இறக்கு இறக்கு” என்று கூவினான். அவனை இறக்கிவிட்டதும் கைவிரித்துக்கொண்டு ஓடி அவர்களுடன் இணைந்துகொண்டான். அவர்கள் அவனிடம் பேசியபடியே உள்ளே ஓடினர்.

உள்ளிருந்து கல்நகைகளும் மான்தோல் ஆடையும் அணிந்த கரிய பெண்கள் இலைப்பசுமைக்குள் இருந்து தோன்றினர். அர்ஜுனனை வியப்புடன் நோக்கி “மீண்டும் வந்திருக்கிறாரா?” என்றாள் ஒரு முதுமகள். “அவர் வேறு ஒருவர். இவர் அவருடைய நண்பர்” என்றான் காளன். “யார்?” என்று அர்ஜுனன் கேட்டான். உடனே பீலிமுடியன் என காளி சொன்னது நினைவிலெழுந்தது. “அவரா? இங்கு வந்துள்ளாரா?” என்றான். “ஆம், அவனுடைய முதிரா இளமையில்... உன்னுடன் என நான் அவனுடன் போரிட்டேன்” என்றான் காளன்.

அர்ஜுனன் “அதன்பின்?” என்றான். “அவன் ஆழியைப் பற்றி இங்கே கொண்டுவந்துவிட்டேன். என் பின்னால் அவனே வந்தான். இங்கு சிலநாட்கள் தங்கிச்சென்றான். அதன்பின் இங்கு வருபவன் நீ மட்டுமே” என்றான் காளன். மேலும் மேலும் பெண்கள் வந்து அவர்களைச் சூழ்ந்தனர். அனைவரும் அர்ஜுனனை ஆர்வத்துடன் நோக்கி உடன் நடந்தனர். அவன் விழி அவர்களை சந்தித்ததும் புன்னகைத்தனர். வெண்பரல்நிரை

கரியநீரிலெழுந்ததுபோன்ற சிரிப்புகள். நீர்த்தண்மை நிறைந்த விழிகள்.

“முன்பு எவர் வந்திருக்கிறார்கள்?” என்றான் அர்ஜுனன். “குறுமுனிவன் ஒருவன் வந்தான். என் முழங்காலளவே உயரமானவன். பெருவயிறன். தாள்தோய்ச் சடையன்” என்றான் காளன். “அகத்தியர்” என்றான் அர்ஜுனன். “இப்போது தெரிகிறது, தென்மொழி இம்மொழிபோன்று எழுந்தது எவ்வாறென்று” என்றான். வியப்புடன் தலையை அசைத்தபடி “இங்கிருந்து சென்ற அனலா?” என தனக்குள் சொல்லிக்கொண்டான்.

**[ 34 ]**

அந்த மலையுச்சித் தாழ்வரையின் பெயர் கைலை. அதன் நடுவே விண்முட்ட எழுந்து நின்ற களிறுவடிவ மலையே கைமா என்றழைக்கப்பட்டது. கைமாமலை மருவி கைலையென்றாகி அத்தாழ்வரையே அப்பெயர் சூடிக்கொண்டது. கைமா மீது எப்போதும் அனல்முகில் அமர்ந்திருந்தது. அதற்கப்பாலிருந்த பன்னிரு அனல்மலைகளின் வெம்மையால் கோடைவெம்மைகொண்டிருந்த அந்நிலத்தில் கதிர்விரியும் பகுதிகளுக்குரிய மரங்களும் செடிகளும் புட்களும் பூச்சிகளும் பிறந்துபெருகி ஒரு தனியுலகை அமைத்திருந்தன.

பச்சைப்பாசி படிந்த கருங்கற்பாளங்களை சுவரென்றும் கூரையென்றும் அமைத்துக் கட்டப்பட்ட தாழ்ந்த இல்லங்களின்மேல் பீர்க்கும் சுரையும் இலைவிரித்துப் படர்ந்தேறியிருந்தன. மூங்கில்வேலிக்குமேல் பூசணிக்கொடிகள் பூக்கள் விரிய நீர் உண்ட செழிப்புடன் பேரிலை விரித்து நின்றிருந்தன. அத்தனை இல்லங்களிலும் முகப்பில் மரத்திலோ மண்ணிலோ செய்யப்பட்ட எருதுச்சிலை வைக்கப்பட்டிருந்தது.

சாய்ந்த பின்காலைவெயில் படிந்த சிறுமுற்றங்களில் மூங்கில்பாய்களில் கம்பும் தினையும் சாமையும் வரகும் காயப்போடப்பட்டிருக்க காகங்கள் சூழ்ந்தெழுந்து பறந்தன. கையில் இலைச்செண்டுகொண்ட நீண்ட கழியுடன் அமர்ந்திருந்த மூதன்னையர் பாடல்போலக் கூவி கோல்வீசி காகங்களைத் துரத்தும் அகவலோசைக்கு மரங்கொத்திகளும் அணில்களும் எழுப்பிய கொத்தொலிகளும் செதுக்கொலிகளும் தாளமாயின.

கிளைகளின் ஊடாக இறங்கி புற்பரப்பில் பதிந்து இளம்பச்சை வட்டங்களாக ஆன வெயில்பட்டைகளில் சிறுபூச்சிகளும் சருகுத்திவலைகளும் ஒளிகொண்டு மிதந்தன. அதன் ஒலிவடிவம் என எங்கோ குழலோசை ஒன்று சுழன்று சுழன்று காற்றில் கரைந்து மீண்டும் உருக்கொண்டது. பச்சையின் அழுத்தமாறுபாடுகளால் ஆன சோலைகள். தளிர்ப்பச்சையை வெட்டி அமைத்த சிறுபாத்திகளில் பசும்பயிரின் அலைகள். அவற்றின்மேல் நீராவியென எழுந்து அமைந்த சிறுபூச்சித்தொகையின் ஒளிர்வுகள். காலடிகள் படிந்த செம்மண் தரையில் முந்தைய மழையின் ஈரம் எஞ்சியிருந்தது. கொன்றைகளுக்குக் கீழே கால்குழித் தடங்களில் பொன்பொடி என மகரந்தம் உதிர்ந்து கிடந்தது.

அத்தனை இல்லங்களிலிருந்தும் சிறுவர்கள் இறங்கிவந்து இளையோனுடன் விளையாடலாயினர். அவர்களின் கூச்சல்கள் செவிதுளைக்க முகம் சுளித்த காளி “உண்பதெல்லாம் குரலென்றே வீணாகிறது...” என்றாள். “நான் குரலெழுப்புவதே இல்லை, அன்னையே” என்றான் கொம்பன். “நீ சற்று குரலெழுப்பி உடல்கரைத்தால் நன்று” என்று அவள் சொன்னாள். கொம்பன் அர்ஜுனனிடம் “நாம் இதை மன்றுக்குக்

கொண்டுசென்று சேர்ப்போம். அடுமடையர்கள் இதைச் சுடுவார்கள். இஞ்சியும் மிளகும் மலையுப்புடன் சேர்த்துப்பூசி சுட்டால் பன்றியின் ஊன்நெய் உருகி அதிலிணைகையில் அமுதென்றிருக்கும்” என்றான். “செல்க, உண்பதற்கு அவனிடம்தான் கற்கவேண்டும்” என்றாள் காளி.

வெண்ணிறக் கல்லில் செதுக்கப்பட்ட எருதுச்சிலை எழுந்த அவர்களின் இல்லத்தை அடைந்ததும் காளன் “நீ மன்றுக்குச் செல்க, இளவரசே! நாங்கள் அங்கு வந்துவிடுகிறோம்” என்றான். அவன் இல்லத்திற்குமேல் தோகைசரிய மயில் ஒன்று அமர்ந்திருந்தது. காலடியோசை கேட்டு நீள்கழுத்து ஒளிமழுங்க அது திரும்பி நோக்கியது. தோகை தொங்கி அசைய சிறகோசையுடன் பறந்து அருகே நின்ற மகிழமரத்தின்மேல் சென்று அமர்ந்து கழுத்தைச் சொடுக்கி அகவியது. அவர்கள் பசுங்குடிலென ஒளிகொண்டிருந்த அந்த இல்லத்திற்குள் நுழைய உள்ளிருந்து கன்றுக்குட்டி ஒன்று வெளியே பாயந்தது. காளி உரக்க நகைத்து அதன் முதுகில் தட்டினாள்.

அவர்கள் இருவரும் இல்லத்திற்குள் செல்ல கொம்பன் அர்ஜுனனிடம் “அங்கே சென்றதுமே சண்டைபோடுவார்கள்” என்றான். “எப்படி தெரியும்?” என்று அர்ஜுனன் கேட்டான். “அவர்களில் யார் உயர்ந்தவர் என்பது இன்னும் முடிவாகவில்லை” என்ற கொம்பன் “நாம் செல்வோம். பன்றி உடல்வெம்மையை இழந்தபடியே செல்கிறது. சுவைகுன்றிவிடும்” என்றான். “ஆம், இது எனக்கு அன்னை அளித்த கொடை” என்றான் அர்ஜுனன். கொம்பன் ஐயத்துடன் நோக்கி “அப்படியா? நம்மிருவருக்கும் உரியது என்றல்லவா சொன்னார்?” என்றான். அர்ஜுனன் சிரித்துக்கொண்டு “ஆம், நான் மறந்துவிட்டேன்” என்றான்.

மன்றுமுற்றத்தில் மையமாக ஒரு பெரிய பீடம் இருந்தது. அதன் நடுவே செங்குத்தாக எழுந்த பெரிய சிவக்குறியை அர்ஜுனன் கண்டான். தீட்டப்பட்ட கரியகல்லில் சூழ்ந்திருந்த மரங்களின் பாவைகள் ஆடின. அதன்முன் இருந்த பலிபீடத்தில் காலையில் படைக்கப்பட்ட மலரும் பொரியும் இருந்தன. சிறுகுருவிகள் எழுந்தமைந்து பொரியை உண்டுகொண்டிருந்தன. மன்றில் மூன்று முதியவர்கள் சிறிய கல்பீடத்தில் அமர்ந்து சுருங்கிய விழிகளுடன் ஒருவரோடொருவர் பேசிக்கொண்டிருந்தனர். அவனைக் கண்டதும் திரும்பி நெற்றியில் கைவைத்து நோக்கினர். ஒருவரின் தாடை மெல்ல விழ வாய் சிறுதுளையெனத் தெரிந்தது. உள்ளே நாக்கு பதைத்தது.

அவர்கள் மூவருமே செஞ்சடையை மகுடமெனச் சுற்றிவைத்து நெற்றியில் மூவிழி வரைந்து உடலெங்கும் நீறுபூசியிருந்தனர். இடையில் புலித்தோல், கழுத்தில் கருவிழிமணிமாலை. ஒருவர் கையில் முப்பிரிவேல் இருந்தது. அர்ஜுனன் அவர்களை அணுகியதும் கை தலை மார்பு வயிறு கால்கள் நிலம்படிய விழுந்து வணங்கினான். அவர்களில் முதியவர் முப்பிரிவேலை நீட்டி அவன் தலையைத் தொட்டு "எழுக!" என்றார். அவன் எழுந்ததும் "அஸ்தினபுரியின் இளவரசருக்கு நல்லூழ் அமைக!" என்றார். அர்ஜுனன் மீண்டும் கைகூப்பினான்.

கொம்பன் அந்தப் பன்றியை கால்பிணைத்து தூக்கி முக்கால் நடுவே தலைகீழாகக் கட்டினான். "அடுமடையர்கள் எங்கே?" என்றான். "பொறு மைந்தா... பிறரும் வரட்டும்" என்றார் முதியவர். அர்ஜுனன் அந்த முழுவட்டத் தாழ்வரையைச் சூழ்ந்திருந்த நீலமலையடுக்குகளை நோக்கினான். அவற்றின் அடிவளைவில் இருந்து பசியகாடு எழுந்து வந்து அவ்வூரைச்

சூழ்ந்திருந்தது. அங்கிருந்து குரங்குகளின் ஒலி கேட்டுக்கொண்டிருந்தது. காட்டின் மீது வெண்முகில்கள் சிதறி மெல்ல காற்றில் பிரிந்துகொண்டிருந்தன. முதியவர் "அமர்க!" என்று கையை காட்டினார்.

அர்ஜுனன் அவர்களின் காலடியில் அமர்ந்துகொண்டான். "என் பெயர் சடையன்" என்று முதல் முதியவர் சொன்னார். "நெடுந்தொலைவு வந்துள்ளாய். நீடுதவம்செய்து உடலுருகியிருக்கிறாய்..." இன்னொருவர் "என் பெயர் பேயன்" என்றார். "நீ உகந்த வழிகளினூடாகவே இங்கு வந்துள்ளாய் என உன் விழிநோக்கி அறிகிறேன்" என்றார். அர்ஜுனன் அவரை வணங்கி "அவ்வாறன்றி இங்கு வர இயலாதென்று அறிவேன், எந்தையே" என்றான். அவர் நகைத்து "ஆம்" என்றார். மூன்றாமவர் "என்னை எரியன் என அழைக்கிறார்கள். உன்னைக் கண்டதும் நான் மகிழ்ந்தேன், மைந்தா" என்றார். "அது எந்தையரிடமிருந்து நான் பெற்ற நல்லூழ்" என்றான் அர்ஜுனன்.

"சொல்க, நீ எங்களிடமிருந்து விழைவது என்ன?" என்றார் சடையன். பிற இருவரும் கண்களில் புன்னகையுடன் அவனை கூர்ந்து நோக்கினர். "நான் பாசுபதம் பெறுவதற்காக இங்கு வந்தேன்" என்றான் அர்ஜுனன். சடையன் நகைத்து "நன்று, அதைக்கொண்டு நீ செய்யப்போவது என்ன?" என்றார். அர்ஜுனன் என்ன சொல்வதென்றறியாமல் அவர்களை முன்னும்பின்னும் நோக்கினான். "மைந்தா, எந்த அறிதலும் படைக்கலமாகும். பாசுபதம் முழுமுதல் அறிதலென்பதனால் அதுவே நிகரில்லா கொலைக்கருவி. நீ வெல்ல விழைவது எது?" என்றார் பேயன்.

அர்ஜுனன் இடையில் கைவைத்து திகைத்த உள்ளத்துடன் நின்றான். பின்னர் "நிகரற்ற படைக்கலத்தால்

வென்றடையப்படுவதென இங்குள்ளது என்ன? நிகரற்ற ஒன்றை நோக்கி அல்லவா அதை செலுத்தவேண்டும்?" என்றான். "ஆம், நீ வெல்லப்போவது எதை?" என்றார் எரியன். அர்ஜுனன் "இம்மண்ணில் எதையும் அல்ல" என்றான். சடையன் உரக்க நகைத்து "சொல்லெண்ணுக! மானுடர் எய்தற்கரிய பெரும்படைக்கலம் உன்னிடமிருக்கும். நீ காணும் கொலைப்போர்க்களங்களில் உன்னைவிட ஆற்றலுள்ளோர் உனக்கு எதிர்வருவர். உன் உற்றார் அவர்களின் படைக்கலம் முன் நிற்பர். உன் அரசும் குடியும் புகழும் உன் வில் ஒன்றையே சார்ந்திருக்கும். ஆனால் அனைத்தையும் வெல்லும் பெரும்படைக்கலத்தை நீ எடுக்க முடியாது" என்றார்.

"ஆம், எடுக்கமாட்டேன்" என்று அர்ஜுனன் சொன்னான். "சொல்க, உன் மைந்தர் சிரமறுந்து விழும் களத்திலும் அதை கைக்கொள்ளமாட்டாயா?" அர்ஜுனன் "இல்லை, அத்தனை பெரிய படைக்கலத்தை ஏந்தியவன் வான் தொட தலை எழுந்த விராடன். அவன் எளிய மானுடர்மேல் கருணையுடன் மட்டுமே இருந்தாகவேண்டும்" என்றான். "நன்று" என்றார் சடையன். "பாசுபதம் பெறும் தகுதிகொண்டவனே நீ, நன்று!" என்று பேயன் நகைத்தார். "தந்தையரே, பாசுபதம் பெற நான் செய்யவேண்டியதென்ன?" என்றான் அர்ஜுனன். "குனிந்து இம்மண்ணிலுள்ள ஒரு கூழாங்கல்லை எடு" என்றார் சடையன். அர்ஜுனன் குனிந்து ஒரு சிறுகல்லை எடுத்துக்கொண்டான். "இளையவனே, இதுவே பாசுபதம்" என்றார் சடையன்.

# கிராதம் - 81

**[ 35 ]**

அர்ஜுனன் கைலையின் மண்ணில் எடுத்த அந்தக் கூழாங்கல்லை நோக்கிக்கொண்டிருந்தான். அதன் பொருளென்ன என்று அவனுக்குப் புரியவில்லை. ஆனால் அவர்கள் அதை கேலிக்கென சொல்லவில்லை என்பதை அவர்களின் முகக்குறி காட்டியது. கொம்பன் அவனிடம் “நீங்கள் அடுகலை கற்றவரா?” என்றான். “உங்கள் அடுமுறை நானறியாதது” என்றான் அர்ஜுனன். “எதுவானாலும் அடுமுறை நன்றே. அட்ட உணவு அமுது” என்றான் கொம்பன். அர்ஜுனன் “அடாத உணவு?” என்றான். அவன் சற்று எண்ணிநோக்கி “அதுவும் அமுதே” என்றான்.

எண்ணியிரா கணத்தில் நூறு சிறுவர்கள் மன்றுக்குள் நுழைந்தனர். பெருங்கூச்சலுடன் மன்றை நிறைத்து சுழன்று கைவீசி துள்ளி விரிந்தோடினர். ஒரு சிறுவன் சடையனின் தோள்மேல் தாவி அப்பால் விழுந்து எழுந்து ஓடினான். ஒருவனின் தோளில் குமரன் இருப்பதை அர்ஜுனன் கண்டான். அவன் “ஓடு ஓடு ஓடு” என துள்ளிக்கொண்டிருந்தான். “இச்சிறுவர்களை வெறிகொள்ளச் செய்பவன் அவனே” என்றார் எரியன். “ஆம், அவனைச் சுற்றியே எப்போதும் இவர்கள் அனைவரும் இருக்கிறார்கள்” என்றார் பேயன்.

“என் இளையோன்” என்றான் கொம்பன் பெருமிதத்துடன். “நானும் இதைப்போல அவனை தூக்கிக் கொள்வேன்.” சடையன் “அவர்களுடன் சென்று விளையாடுவதுதானே?” என்றார். “ஏன்?” என்றான் அவன் புரியாதவனாக. “சிறுவர் என்றால் விளையாடவேண்டுமே?” என்றார் பேயன். “ஏன்?” என்று அவன் மீண்டும் கேட்டான். “விளையாடாவிட்டால் எப்படி உடல் உறுதிகொள்ளும்?” என்று பேயன் கேட்டார். “நான் நிறைய உண்பேன். என் உடல் உறுதியாகும்” என்றான் கொம்பன்.

“நன்று, அவனுக்குரியதை அவன் செய்கிறான்” என்று எரியன் நகைத்தார்.

இல்லத்திலிருந்து காளன் வருவதை அர்ஜுனன் கண்டான். அவனுக்குப் பின்னால் காளி ஒரு பெரிய மரக்குடைவுக் கொப்பரையுடன் வந்தாள். கொம்பன் முகம் மலர்ந்து “அது இன்கடுங்கள். இங்குள்ள நெடும்பனைகளில் ஊறிய தேன்” என்றான். “பனைகள் எங்குள்ளன?” என்றான் அர்ஜுனன். “அங்கே மேற்குச்சரிவில். அங்குதான் வெம்மையும் மிகுதி. மழையும் குறைவு” என்றபின் அவன் “இன்கடுங்கள்ளில் மூதாதையர் பாடல்கள் உறைகின்றன என்று எந்தை சொன்னார்” என்றான். “இளையோர் கள்ளருந்தலாமா?” என்றான் அர்ஜுனன். “இளையோர் எதையும் அருந்தலாம்” என இயல்பாக சொல்லிவிட்டு அவன் தந்தையை நோக்கி ஆவலுடன் சென்றான்.

காளன் சிரித்தபடியே அணுகினான். கொம்பன் அன்னையிடமிருந்து கொப்பரையை வாங்க முயல அவள் அவனை வெருட்டி விலக்கியபடி வந்தாள். காளன் அர்ஜுனன் அருகே வந்ததும் “இவர்கள் காலகுடியின் மூத்தவர்கள். இவர்களின் அருள் பெற்றுவிட்டாயா?” என்றான். “ஆம்” என்றான் அர்ஜுனன். அவன் கையிலிருந்த கூழாங்கல்லை நோக்கியபின் சிரித்து “பாசுபதம் அளித்துவிட்டார்களா?” என்றான் காளன். அர்ஜுனன் மெல்ல புன்னகைத்து “ஆம், ஆனால் அது இத்தனை எளிதென்று நான் அறிந்திருக்கவில்லை” என்றான்.

“அரியவை, அடைதற்கரியவை என்பது எளியமானுடரின் எண்ணம்” என்றான் காளன். “ஆனால் மெய்நோக்கினால் அரியதொன்றை உணர்ந்த ஒருவன் அதை சென்றடையாமல் ஓய்வதில்லை. அவ்வுணர்வை அடைவதே அரிது” என்றபடி

அங்கிருந்த உருளைக்கல் ஒன்றில் அமர்ந்தான். காளி அருகே வந்து கொப்பரையை நடுவே வைத்து அதிலிருந்து மூங்கில் குவளையில் நுரையெழும் கள்ளை ஊற்றி அர்ஜுனனுக்கு அளித்தாள். "அவர் மிகுதியாக அருந்தினால் நோயுறுவார்" என்றான் கொம்பன். "வாயை மூடு... விலகிச்செல்" என்றாள் காளி.

கள் இனிப்பும் புளிப்பும் கலந்த மணத்துடன் இருந்தது. "அருந்துக!" என்றாள் காளி. அர்ஜுனன் பிறரும் குவளைகளை வாங்குவதற்காக காத்தான். "தந்தை இரவில்தானே அருந்துவார்?" என்றான் கொம்பன். "அப்பால் செல்லும்படி சொன்னேனா இல்லையா?" என்று அவள் கையை ஓங்க அவன் அதை பொருட்படுத்தவே இல்லை. காளன் கையில் குவளையை வாங்கியதுமே குடித்துவிட்டு புறங்கையால் வாயை துடைத்துக்கொண்டு மீண்டும் நீட்டினான். "போதும் போதும்" என்று கொம்பன் சொன்னான்.

காளன் இன்னொரு குவளையை வாங்கி அதே விரைவில் மாந்திவிட்டு "நன்கள்... பனைவேர் அறிந்த அனல் ஊறியிருக்கிறது அதில்" என்றான். முதியவர்கள் குவளைகளை பெற்றுக்கொண்டதும் "முதியவர்களுக்கு ஒரு குவளைக்குமேல் அளிக்கலாகாது" என்றான் கொம்பன். "சும்மா இருக்கப்போகிறாயா இல்லையா?" என்றாள் காளி. அர்ஜுனன் அந்தக் கள்ளின் துவர்ப்பை முதலிலும் புளிப்பை பிறகும் உணர்ந்தான். உடல் உலுக்கிக்கொண்டது. பின் அடிநா இனிப்பு கொண்டது. காளன் மீண்டுமொரு குவளை கள் பெற்றுக்கொண்டான். "போதும், தந்தையே" என்றான் கொம்பன்.

"இவன் குடிக்கவிடமாட்டான்" என்றாள் காளி. "போதும், அவனே அருந்தட்டும்" என்றான் காளன். அச்சொல் முடிவதற்குள்

கொம்பன் கொப்பரையை தூக்கிக்கொண்டு அப்பால் சென்றான். "அதை முழுக்க அவர் அருந்துவாரா?" என்றான் அர்ஜுனன் வியப்புடன். "அருந்துவான். ஆனால் மயக்கு கொள்வதில்லை" என்றாள் காளி திரும்பி நோக்கி சிரித்தபடி. "ஏன்?" என்றான் அர்ஜுனன். "மயக்கெழுந்தால் உணவருந்த முடியாதே" என்றாள். அர்ஜுனன் புன்னகையுடன் கையிலிருந்த குவளையை உருட்டியபடி முதியவர்களை பார்த்தான். அவர்கள் குவளைகளை கைகளில் வைத்தபடி பழுத்த விழிகளில் சிரிப்புடன் கொம்பனை பார்த்தனர்.

சடையன் "மீண்டும் மீண்டும் இவர்கள் இங்கு பிறந்தபடியே இருக்கிறார்கள். அழகனும் ஆனையனும்" என்றார். "இங்குள்ளவர்கள் இறப்பதே இல்லை" என்றார் எரியன். "தளிர்வந்து இலையாகி பழுத்துச் சருகாகி உதிர மரம் மாறா இளமையுடன் நின்றிருக்கிறது." காளன் "காளி, பாசுபதம் அளிக்கப்பட்டுவிட்டது" என்றான். காளி "எப்போது?" என்றாள். அர்ஜுனன் "சற்றுமுன்" என்று நாணச்சிரிப்புடன் சொன்னான். "பாசுபதம் பெற்றவர்கள் மாகாலர்கள் என்றழைக்கப்படுவார்கள். இனி நீயும் காலனே" என்றான் காளன்.

உதட்டைச் சுழித்து நொடித்தபடி "இதெல்லாம் வீண்பேச்சு. அது எதற்கு உனக்கு? வீசிவிட்டு உன் அன்னையிடம் திரும்பு" என்றாள் காளி. அர்ஜுனன் பணிவுடன் "அன்னையே, நான் இதற்கென்றே அருந்தவம் இயற்றி இங்கே வந்தேன்" என்றான். அவள் முகவாயைத் தூக்கி "வந்து எதை அடைந்தாய்? இச்சிறுகல்லையா?" என்றாள். "இதைக்கொண்டு என்ன செய்யப்போகிறாய்?" அர்ஜுனன் அவள் விழிகளை நோக்கினான். "அங்கே உங்களுக்கென வேதங்கள் உள்ளனவே! ஏன் வேதங்களிலிருந்து வேதங்களென முளைக்கச் செய்கிறீர்கள்?

ஏன் வேதவேர் தேடி ஆழ்ந்திறங்குகிறீர்கள்? அடைந்த வேதத்தை முற்றறிந்துவிட்டீர்களா என்ன?”

“ஏன் தொடுவானில் ஏதோ கனிந்திருக்கிறதென்று எண்ணி சென்றுகொண்டே இருக்கிறீர்கள்? இருந்த இடத்தில் நிறைந்து கனிவதற்கு உங்களைத் தடுப்பது எது?” என்று அவள் கேட்டாள். அவன் புன்னகையுடன் “தெரியவில்லை” என்றான். “ஏன் உன்குலத்துப் பெண்டிர் காடேகி தவமியற்றி கொடைகொள்ளவில்லை?” என்று கேட்டாள். “அவர்கள் அமர்ந்து முழுமைகொள்ள நீங்கள் மட்டும் ஏன் அலைந்து சிதைவுறுகிறீர்கள்?”

அர்ஜுனன் கைகூப்பி “நான் இதை எண்ணிப்பார்த்ததே இல்லை, அன்னையே” என்றான். காளன் எழுந்து அர்ஜுனனின் தோளைப்பற்றித் திருப்பி “நான் சொல்கிறேன், ஏனென்றால் நீயும் நானும் இங்குள்ள ஆண்கள் அனைவரும் இவர்களின் கருவறையிலிருந்து கிளம்பியிருக்கிறோம். இவர்களிடமில்லாத ஒன்று நம்மில் எழ வாய்ப்பில்லை. மண்ணிலில்லாதது மரத்தில் மணக்காது…” என்றான்.

திரும்பி கொம்பனைச் சுட்டி அவன் சொன்னான் “இதோ இவனுடைய தீராப்பசியும் இளையவனின் இனியஅழகும் இரண்டும் இவளுக்குள் இருப்பதை நான் கண்டிருக்கிறேன். இளையவனே, நீ உன் அன்னையின் அகம் தேடித்தவிக்கும் தொலைதிசைகளிலேயே அலைந்துகொண்டிருக்கிறாய்.” காளி சினத்துடன் “எதற்கும் இறுதியில் பெண்ணைப் பழி சொல்வதே வழக்கமாகக் கொள்க… வேறென்ன தெரியும் உங்களுக்கு?” என்றாள். “நீங்கள்தானே பெற்றீர்கள்?” என்றான் காளன். “நாங்கள் என்ன வெறுமனே பெற்றோமா? நீங்கள்தானே தொடக்கம்?” என்று அவள் கேட்டாள்.

காளன் எழுந்து கைகளைத் தட்டியபடி "இப்போது சொல்லிவிட்டாய் அல்லவா? நான்தான் தொடக்கம்... போதுமா? முடிந்துவிட்டதா?" என்றான். நடனமிட்டபடி "சொல்! தோற்றாய் என்று சொல்..." என்றான். அவள் முகம்சீற "சொல்மாற்றவேண்டாம். அது வேறு பேச்சு" என்று கூவினாள். "எல்லாம் ஒரே பேச்சுதான்... சொல்வதெல்லாம் இங்குதான் காற்றில் இருக்கும். அந்தக் காற்றுதான் இதுவும்" என்றான் காளன். "அப்படியா? சொல் மாறாதா? அப்படியென்றால் நேற்று பேசிய பேச்சு ஒன்றை சொல்கிறேன்" என்று அவள் கைநீட்டி கூவ "கையை நீட்டிப்பேசாதே..." என்று அவன் கூவினான்.

இருவர் நடுவே இயல்பாக புகுந்து இப்பால் வந்த கொம்பன் "கடுங்கள்ளின் அடிமண்டி சிறந்தது..." என்றான். "எங்கே?" என்றான் அர்ஜுனன். "முழுக்க முடிந்துவிட்டது. ஆனால் குடிலுக்குள் மேலே ஓர் உறியில் இருக்கிறது கள். நாம் சென்றால் எடுத்து குடிக்கலாம்" என்றான். சடையன் "அதாவது அவன் முழுக்கொப்பரையையும் குடித்ததுபோக அடிமண்டியை உனக்குத் தருவான், இளையோனே" என்றார். காளி சொல் நிறுத்தி திரும்பி "அங்கே என்ன செய்கிறாய்? போய் விளையாடு" என்றாள். "பன்றி ஆறிக்கொண்டிருக்கிறது" என்றான் கொம்பன். "அதை சுடும்போது அழைப்போம். சுடுவதற்குள் தின்றாகவேண்டுமா என்ன? போ" என்றாள். அவன் தயங்கியபடி நின்று பன்றியை காதலுடன் நோக்கிவிட்டு அப்பால் சென்றான்.

அவள் அர்ஜுனனிடம் "இதோ பார் இளையோனே, இந்த பாசுபதமெல்லாம் உனக்கெதற்கு? எளியவனாக இரு. ஒவ்வொரு உயிருக்கும் அளிக்கவேண்டியதென்ன என்று உலகாளும் அன்னைக்குத் தெரியும்... போ!" என்றாள். "நில், பெண்சொல்லைக் கேட்டால் அடுக்களைக்குள் இருக்கவேண்டியிருக்கும். பெற்றுப்

புறந்தருவார்கள். எஞ்சிய வாழ்நாளெல்லாம் திரும்ப கருவறைக்குள் இழுக்க முயல்வார்கள்” என்றான் காளன். “நான் உங்களிடம் பேசவில்லை. பித்தர்களிடம் பேச நான் பிச்சி இல்லை” என்று காளி சொன்னாள்.

“நீதான் பிச்சி, பேய்ச்சி” என்று காளன் கூச்சலிட்டபடி அவளை நோக்கி சென்றான். அமர்ந்திருந்த சடையன் ஒரு கல்லை எடுத்து காளன்மேல் எறிந்து “நில், இதோ இவரிடம் சொல், பாசுபதம் என்றால் என்ன என்று” என்றார். “பாசுபதம் என்றால்…” என அவன் சொல்லெடுக்க முனைந்து சொல் தகையாமல் குழம்பி மூவரையும் நோக்கிவிட்டு “அது பெரிய ஒரு…” என்றபின் “அதாவது அது பாசுபதம் என்னும்…” என்றபின் காளியிடம் “என்னடி அது?” என்றான். “எனக்குத் தெரியாது” என்று அவள் சொன்னாள். “என் கண் அல்லவா? என் கரியோள் அல்லவா? நான் உனக்கு நீ கேட்ட வெள்ளைச் செண்பகப்பூவை நாளை கொண்டுவந்து தருவேன்” என்றான் காளன்.

“எனக்குத் தெரியாதென்று சொன்னேனே?” என்றாள் காளி. “நான் உனக்கு எரிமுகடேறிச்சென்று அருமணி கொண்டுவந்து தருவேன். சொல்!” என்றான் காளன். அவள் கண்களில் சிரிப்புடன் சிறிய உதடுகளை அழுத்தியபடி “என்னவென்று தெரியாமல்தான் இத்தனை தொலைவுக்கு அழைத்துவந்தீரா?” என்றாள். “நான் எங்கே அழைத்துவந்தேன்? அவனை நீதான் வரச்சொன்னாய்.” அவள் சிரித்துவிட்டாள். “அப்படியென்றால் எதை எண்ணி தலைதொட்டு வாழ்த்தினீர்?” அவன் “அது எல்லோரும் வாழ்த்துவதுதானே? மேலும் நான் முதியவன்” என்றான்.

“முதியவனா? நேற்று அப்படி சொன்னதற்குத்தானே முப்பிரிவேலை எடுக்கப்போனீர்?” என்று அவள் சொல்ல “அதை

பிறகு பேசுவோம். பாசுபதம் என்றால் என்ன? சொல், அதை எப்படி சொல்வது?” என்றான். அவள் “அந்த கரிக்குழாயை எடுத்து புகையை இழுப்பதுதானே? வந்துகொட்டுமே சொல்லும் ஆட்டமும்… எனக்கு வேலை இருக்கிறது” என எழுந்தாள். அவன் பாய்ந்து அவள் கையைப்பிடித்து “சொல்லிவிட்டுச் செல்… என் செல்லம் அல்லவா?” என்றான்.

“என்னிடம் இனிமேல் சண்டை போடக்கூடாது” என்றாள். “இல்லை, மெய்யாகவே இல்லை” என்றான். “நான் சொல்வதை எல்லாம் ஒப்புக்கொள்ளவேண்டும்” என அவள் கையை நீட்டினாள். அதைப்பற்றி அவன் “நான் என்றைக்கு மீறினேன்?” என்றான். “இப்போது சொல்லுங்கள், இன்னும் சற்றுநேரத்தில் அங்கே வந்து மல்லுக்கு நிற்பீர்… சிறியவனை வேறு காணவில்லை. எந்த மரக்கிளையில் இருக்கிறான் என்றே தெரியவில்லை.” அவன் அவள் தாடையைப்பிடித்து “எத்தனைமுறை கேட்டுவிட்டேன்! சொல்லடி!” என்றான்.

அவள் “இளையவனே, ஓர் அனல்கொழுந்தின் முடியை காணமுடியுமா?” என்றாள். அர்ஜுனன் அவ்வினாவால் ஒரு கணம் திகைத்து பின் “கண்ணுக்குத் தெரியும் நுனி…” என்றபின் “ஆம்! அது முடிவிலாது சென்றுகொண்டிருக்கிறது. அது வானமேயாகிறது” என்றான். “அதன் அடியை?” என்றாள். அவன் தலையசைத்து “இன்மையிலிருந்து எழுந்து ஒளியென்றாவதையே காணமுடியும். அது விறகில் அந்த மரம்நின்ற மண்ணில் மண்ணென்றான பொருளில் இருக்கிறது. முடிவிலாதது” என்றான்.

“அனலின் அடிமுடியை காண்பதெப்படி?” என்று அவள் கேட்டாள். “எப்படி?” என்று காளன் அவளிடம் ஆவலாக கேட்டான். “ஆமாம், நீங்களே கேளுங்கள்! உங்களிடம் கற்கவந்த

இவன் முன்னால் வைத்தே கேட்டு இழிவுகொள்ளும்” என கைநீட்டி காளனை திட்டியபின் “இளையோனே, அனலை அறிவதற்கு ஒரே வழி அனலென்றாவதே. அனலென்பது அனைத்தையும் தானென்றாக்கும் பெருவிழைவின் வெளிச்சம். அனலுடன் இணைக, அனலாகுக!” என்று சொன்னாள். “அதுவே பாசுபதம் எனப்படுகிறது.”

அர்ஜுனன் கைகூப்பினான். “நான் உனக்கு இனிமேல் விளக்குகிறேன். மிகமிக எளியது. அதாவது நாம் அனலை ஒரு சிறு மண்குழாயில் எடுத்துக்கொள்கிறோம். அதில்...” என காளன் தொடங்க “இதோ பார்! வரும்போதே சொன்னேன் உன்னிடம், இந்த புகையாட்டெல்லாம் உனக்கு வேண்டியதில்லை. இவரிடம் நீ கற்கவேண்டியது ஒன்றே. இருநிலையழிந்து ஒன்றென்றாதல்” என்று அவள் சொன்னாள். “அதை அவரிடம் கேட்காதே. சிவப்புகையை உன் மூச்சில் திணிப்பார். அவருடன் இருந்து அவரென்றானதை அறி!”

அவள் எழுந்து செல்வதை அர்ஜுனன் நோக்கிநின்றான். காளன் “அவளுக்கு எல்லாமே தெரியும்” என்றான். அர்ஜுனன் “எனில் ஏன் ஓயாது பூசலிடுகிறீர்கள்?” என்றான். “பூசலா? நாங்களா?” என காளன் திகைத்தான். “ஆம், நானே பலமுறை கண்டேனே!” என்றான் அர்ஜுனன். “அதுவா பூசல் என்பது? அவளை நான் வேறு எப்படித்தான் அணுகுவது?” என்று காளன் சொன்னான். “அவளை சற்றுநேரம் தனித்துவிட்டுவிட்டால் பனியிலுறையும் ஏரி என அமைதிகொண்டுவிடுவாள். அதன்பின் எரிமலை எழுந்தாலொழிய சொல்மீளமாட்டாள்.”

அர்ஜுனன் “ஆம், அவ்வாறே நானும் எண்ணினேன். அன்னை எண்ணுவதும் பேசுவதும் இயங்குவதும் பிறர் பொருட்டே” என்றான். அவன் சொன்னதை செவிகொள்ளாத காளன்

எழுந்து தன் புலித்தோலை இடையில் சீரமைத்து “அவள் அங்கே தனித்திருக்கிறாள். நான் அவளிடம் சென்று பாசுபதம் பற்றிய இந்தக் கதையை அவள் எங்கே தெரிந்துகொண்டாள் என்று கேட்டுவருகிறேன். பெரும்பாலும் நானே சிவப்புகை வெறிப்பில் சொன்னதாக இருக்கும். அதை இங்கே சொல்லி என்னை அறிவிலி என்று காட்டிவிட்டுச் செல்கிறாள்” என்றபடி நடந்தான்.

**[ 36 ]**

அவன் செல்வதை நோக்கி சிரித்த எரியன் “இக்குடியின் ஆண்களும் பெண்களும் இப்படித்தான் எப்போதுமிருக்கிறார்கள்” என்றார். சடையன் திரும்பி பாறைகளாக பெருமுகம் கொண்டிருந்த அன்னையரையும் தந்தையரையும் சுட்டி “அவர்களும் இப்படித்தான் இருந்திருப்பார்கள். அன்னையரின் புன்னகைக்கு வேறொரு ஏது இருக்க வாய்ப்பில்லை” என்று நகைத்தார்.

“அன்னை சொன்னவற்றுக்கு என்ன பொருள், சடையரே?” என்றான் அர்ஜுனன். சடையன் “இளையோனே, கீழே மண்ணில் வாழும் உங்களை ஆள்வது இருமை. அன்னமும் எண்ணமும் என, உள்ளமும் உடலும் என, சொல்லும் பொருளும் என, துரியமும் சித்தமும் என அனைத்தும் இரண்டெனப் பிரிந்துள்ளன அங்கு. உங்கள் வாழ்வின் துயரென்பது அப்பிளவு அளிக்கும் துன்பமே. நீங்கள் அடையும் இன்பமென்பது அவ்விருநிலை அகன்று அமையும் சிலகணங்கள் மட்டுமே. உணவில் உறவில் காமத்தில் கலையில் அறிதலில் ஊழ்கத்தில் அதை அறிகிறீர்கள்” என்றார்.

“ஊன்சுவை கண்டபின் கூண்டிலடைபட்டிருக்கும் சிம்மக்குருளை போன்றிருக்கிறீர்கள் நீங்கள். அறிந்த ஒன்றை அடைவதற்கான தவிப்பு. தவமென்பது என்ன? இரண்டழியும் முழுநிலை. இருத்தல்நிறைவு. இன்மையென்றாதல்” என சடையன் தொடர்ந்தார். “காளனை நீ ஏன் போரில் வெல்லவில்லை என்றறிக! உன் வாழ்நாளெல்லாம் நீ கற்ற விற்கல்வி என்பது உளமென உடலை ஆக்கும் பயணமே. உன் உடல் உள்ளமென்றே ஆகிவிட்டமையால்தான் நீ இருநிலை வில்லவன் எனப்படுகிறாய்.”

“ஆனால் அந்நிலையிலும்கூட உன் உளம்வேறு உடல்வேறுதான். உளம் உடலுக்கு அப்பால் வியந்தபடி தனித்திருக்கிறது. எங்கள் குலத்துக் காளனின் உடல் அவன் உள்ளமேயாகும். அவன் உடலுள்ளம் அம்புகளைத் தவிர்க்க விழைந்தாலே போதும். ஆற்றுவதல்ல அவன் செயல், ஆவதேயாகும்” என்றார் பேயன். “அதைத்தான் நீ கற்பதற்கு வந்தாய். அறியக்கற்பது கல்வி. ஆவதற்கான வழியே பாசுபதம்.”

“இளையோனே, இந்நிலம் என்றும் இவ்வண்ணமே இருந்தது. மண்ணின் அல்குல்குழி இது என்று சொல்கின்றன எங்கள் கதைகள். விண்நீர் முதலில் விழுந்த இடம். உயிர்த்துளி முதலில் முளைத்த நிலம். எங்கள் குலமுதல்வனை என்றோ யாரோ சிவப்பன் என்றனர். பின் வந்தோர் அச்சொல்லை சிவம் என்றாக்கினர். அவன் ஆளும் இந்நிலத்தை சிவநிலம் என்றுரைத்தனர்” என்றார் எரியன்.

“இங்கு வாழ்ந்திருந்தார் அவர். அவர் இடம் அமைந்த துணையை சிவை என்கின்றன கதைகள். அவர்களின் முகமென்ன என்றறியோம். அன்றி, இந்நிலத்தைச் சூழ்ந்தமைந்த

பாறைகள் அனைத்திலும் செதுக்கப்பட்டிருக்கும் அத்தனை முகங்களும் அவர்களுடையனவே என்று சொல்வோம்” என சடையன் சொன்னார். “திமிலெழுந்த வெண்காளை ஒன்று அவருக்குத் துணையென்றிருந்தது. அதனால் அவர் பெயர் பசுபதி எனப்பட்டது. மழு அவர் படைக்கலம். உடுக்கு அவர் காலம். மான் அவர் கொடி. பைநாகம் அவர் கழுத்தணிந்த ஆரம். கதைகள்சொல்லி வரைந்ததெடுத்த ஓவியமே இன்று அவர்.”

“வாழ்வாங்கு வாழ்ந்து நிறைந்தவர் அவர்” என்று சடையன் சொன்னார். “விண்ணுடன் நேர்த்தொடர்பு கொண்டிருந்தார். ஒளியணையாத சொல் வகுத்தார். பித்தர், எருக்குமாலை சூடும் பேயர், ஆட்டர், ஆராக்காதலர். ஒருமுறை இந்நிலத்தைச் சூழ்ந்திருந்த மலைகள் நகைக்கத்தொடங்கின. வானில் பெருமரங்கள்போல முகில்கள் எழுந்து நின்றன. அதன் பொருள் அறிய தன் வெள்விடை ஏறி தனித்து மலையேறிச் சென்றார். மீள்கையில் அவர் நுதலில் ஒரு செவ்விழி திறந்திருந்தது. ஊன்விழி கடந்து கண்டமைக்கு சான்று அது.”

“இங்கு பிறந்திறந்த பல்லாயிரவரில் அவர் மட்டும் தன் முதிர்ந்த துணைவியுடன் வெள்ளெருது ஊர்ந்து அந்த முடிமலைமீது ஏறிச்சென்று மறைந்தார் என்கின்றன மூதாதைச் சொற்கள். குடியினர் கூடிநின்று கைதொழுது அவர்கள் செல்வதை நோக்கி நின்றனர். மேலேறிச்சென்றவர் ஏழாவது நாள் விசும்புகடந்து செல்லும் அனலுருவாக மலைமேல் எழுந்து நின்றார். பதினெட்டு நாட்கள் அத்தழல்பேருரு வானை ஏந்தியிருந்தது. பின் அது குளிர்ந்து செம்முகிலென ஆனபோது கூனலிளம்பிறையொன்றைச் சூடியிருந்தது. பிறைக்குளிர்கொண்டு அதன் பித்து அணைந்தது.”

“செந்தழலென எழுந்தவரை சிவப்பர் என அழைக்கலாயினர் எங்கள் குடிகள். அவர் கொண்ட மூவிழியையும் பிறையையும் தாங்களும் அணிந்துகொண்டனர்” என்று சடையர் சொன்னார். மன்றில் இருந்த சிவக்குறியைச் சுட்டி “நீத்தோருக்கு கல்லமைத்து வணங்குதல் எங்கள் குடிவழக்கம். கிடைக்கல்லாக அன்னையரும் நிலைக்கல்லாக தந்தையரும் நின்று மலரும் கள்ளும் ஊனும் படையல்கொண்டு அருள்புரிவார்கள். மலையேறிச் சென்று அனலென எழுந்த அன்னையையும் தந்தையையும் வழிபட கிடைக்கல்மேல் நிலைக்கல் நாட்டி ஒன்றென வழிபடலானோம். அதுவே எங்கள் மன்றுகளில் இன்று சிவக்குறி என அமைந்துள்ளது.”

“பாசுபதம் எங்கள் வேதம்” என்று எரியன் சொன்னார். “எரியென எழுந்த மூதாதையின் ஒலிகளிலிருந்து எங்கள் குடிமூத்தோர் எடுத்தமைத்தது அது. இளையோனே, உங்கள் வேதங்கள் மானுடர் எரியிடம் உரைப்பவை. எங்கள் வேதம் எரி மானுடரிடம் உரைப்பது. எரியென்றானவர்களுக்குரிய மொழி அது. மானுடப் பொருள்தொடாத் தூய்மை உடையது.”

“அது முந்நூறாயிரம் நுண்சொற்கள் கொண்டது. நூறாயிரம் நுண்சொற்கள் எண்ணங்களாகவே உள்ளன. நூறாயிரம் நுண்சொற்கள் மூச்சென அமைந்துள்ளன. நூறாயிரம் நுண்சொற்கள் ஒலியென்றாகின்றன. இறுதிச் சொல் ஒன்று மட்டுமே மொழியென்று வருகிறது. அதை நாங்கள் ஓம் என்று உரைக்கிறோம். அதுவரையிலான அத்தனை நுண்சொற்களையும் ஏற்று மெய்யென்று சான்றுகூறுகிறது அவ்வொரு மொழிச்சொல்” என்றார் சடையன்.

“அச்சொற்களும் அதனுடன் இணைந்த ஆயிரத்தெட்டு விரல்குறிகளும் இணைந்ததே பாசுபதவேதம். வேதமென மண் அறிந்த முதல்வேதம் அதுவே” என்றார் எரியன். அர்ஜுனன் நீள்மூச்சுடன் மெல்ல நெகிழ்ந்தமைந்தான். “மூத்தோரே, ஓம் எனும் அம்மொழிச் சொல்லை முதலென்றாக்கி ஒலிக்கத் தொடங்கியவையே எங்கள் வேதங்கள் அனைத்தும்” என்றான். “அசுரரும் நாகரும் நிஷாதரும் கொண்ட வேதங்கள் எல்லாம். நால்வேதமென்றான வாருணம், மகாருத்ரம், மாகேந்திரம், மகாவஜ்ரம் அனைத்தும்.”

பேயன் “ஆம், அவை எங்கள் வேதத்தின் நீர்ப்பாவைகள்” என்றார். “இன்று இந்த மண்ணின் துளியொன்றைப் பெற்று எங்களுள் ஒருவனாக ஆனாய். பாசுபதத்திற்குள் நுழைந்து

முழுமைகொள்க!” என்று சடையன் அர்ஜுனனை வாழ்த்தினார். அர்ஜுனன் கைகூப்பினான்.

# கிராதம் - 82

**[ 37 ]**

கைலைமலைத் தாழ்வரையில் உச்சிவெயில் எழுந்ததுமே பொழுது இறங்கத்தொடங்கிவிட்டது. பறவைகளின் ஒலிகள் சுதிமாறி, காற்றில் குளிர் கலந்தது. கதிர் சரிந்துகொண்டிருக்கும்போதே வேட்டைவிளைகளுடன் காலர்கள் வரலாயினர். மான்கள், பன்றிகள், காட்டுஆடுகள், மிளாக்கள் குருதியுறைந்து விழிவெறித்து நாசரிய வாய்திறந்து மூங்கில்கழிகளில் தொங்கியபடி வந்தன. பெண்கள் கிழங்குகளையும் காய்களையும் கனிகளையும் கொண்டுவந்து நிரத்தினர். அனைத்து உணவும் மன்றிலேயே கொண்டு சேர்க்கப்பட்டன.

மூத்தோர் மூவரும் அங்கே இருந்து ஆணைகொடுக்க அடுமடையர்கள் பன்னிருவர் வந்து தாங்கள் கைத்தேர்ச்சிகொண்டிருந்த செம்புக்கத்திகளால் விலங்குகளின் தோலில் மெல்லிய கோடிழுத்து உள்ளே விரல்செலுத்தி இளங்கமுகுப்பாளைபோல் வெளுத்த உட்தோலை மடித்துப்புரட்டி சுருட்டி எடுத்து அகற்றி குடலும் நுரைக்குலைகளும் விலக்கி கீற்றுகளாக ஊன்கிழித்து உள்ளே உப்புமிளகுஇஞ்சிச் சாந்தை பூசி முக்காலிகளில் தொங்கவிட்டு கீழே அனல்மூட்டி சுடத்தொடங்கினர். வேகும் ஊனின் இனிய மணம் ஊரைச் சூழ்ந்தது.

உருகிச் சொட்டிய ஊன்நெய் எரிபட்டு அனலாகிச் சுடர்ந்து துளிகளாக விழுந்து விறகுக்குவைமேல் எழுந்த தழல்நாவுகளை துள்ளித் தழைந்து எழுந்து ஆடச்செய்தது. பொசுங்கி நெய்யூறி சிவந்து அருகி கருகி விரிசல் படர்ந்து உணவென ஆயிற்று ஊன். காய் ஒன்று கனிவதுபோலிருந்தது அது.

சூழ்ந்து அமர்ந்து அனலை நோக்கிக்கொண்டிருந்தனர் காலர்கள். அர்ஜுனன் அவர்கள் நடுவே சிறு கல்லொன்றில் கால் மடித்து அமர்ந்திருந்தான். அனலன்றி பிற ஒளியேதும் அங்கிருக்கவில்லை. விண்ணை முகில் மூடி இருந்ததனால்போலும், மீன்களென ஏதும் வானில் எழவில்லை. சீர்வட்டமென சுற்றியிருந்த மலைநிரை அலைகள் வானின் மங்கிய ஒளிப்பரப்பின் பகைப்புலத்தில் இருளுக்குள் நிழல்செறிந்த வடிவுகளெனத் தெரிந்தன.

தொலைவிலிருந்து காட்டின் இரவொலிகள் எழுந்து வந்து ஊரையும் காடென்றே எண்ணவைத்தன. அறுபடாத சீவிடுகளின் ஓசையின் சரடில் கோக்கப்பட்ட காட்டுஆடுகளின் கனைப்பு, கூகைக் குழறல், தொலைவில் வேங்கையொன்றின் உறுமல், அதைக் கேட்டெழுந்த களிறுகளின் ஓசைத்தொடர். மிக அருகே மான்கூட்டம் ஒன்று புதர்களில் சுள்ளிகள் ஒடிய நடந்தது. அனலிருப்பதனால் வேங்கை அணுகாதென்று அறிந்த மான்கூட்டங்கள் புதர்களுக்குள் சீறலோசை எழுப்பியபடி நின்று அவர்களை நோக்கின. விழிதிருப்பி வருகையில் ஒரு மானின் அனல் மின்னும் விழிகளை அவன் நோக்கினான்.

சேறுபூசி அருகமைத்த குழிசிக்குள் விறகுகள் எரிகொண்டு வெடித்து செம்பொறி சிதறின. அவற்றில் ஊறிய அரக்கு எரிந்தபடி பின்னால் வந்தது. அதைத் துரத்தியபடி செந்தழல்

உடன் வழிந்தது. சூழ்ந்திருந்தோர் எத்தனை பேரென்று அவ்விருளில் அறியக்கூடவில்லை. சிற்றில்களில் இருந்து மேலும் மேலும் என வந்து ஓசையின்றி பின்னால் அமர்ந்துகொண்டனர். கல்லணிகலன்கள் குலுங்கியதாலும் அமரும் மூச்சொலிகளாலுமே அவர்கள் வந்தமர்வதை உணரமுடிந்தது. ஒளியில் தெரிந்த முகங்களனைத்தும் ஒற்றை உணர்வுகொண்டிருந்தன. சடைத்திரிக் குழல் கொண்ட அன்னையர். வலக்கொண்டை சரிந்த கன்னியர். பிடரியில் சடைக்கற்றை பரவிய இளையோர். அனல்படர்ந்த தாடியுடன் முதியோர். அனைத்து விழிகளிலும் நெருப்பு தெரிந்தது.

நெருப்பை அன்றி பிற எதையும் எவரும் நோக்கவில்லை என்று அவன் உணர்ந்தான். அருமணிக்குவை நோக்கும் கருமியின் மெய்மறந்த நிலைபோலும், பேரழகுப் பாவையொருத்தி மேடையேறி நின்றாடுவதை நோக்கும் காமுகனின் உவகைபோலும், கொலைக்கலம் ஏந்தி எழுந்த அறியா தெய்வம் ஒன்றைக்கண்டு அஞ்சிச் சொல்லழிந்ததுபோலும் நோக்கிச் சமைந்த விழிகள். நெருப்பு சீறிச்சுழன்று நாபறக்க துள்ளி அமைந்து எழுந்து தழைந்தாடியது. கழுகென இறகு விரித்தது. அரவென கழுத்து நீட்டியது. பசுவென நா துழாவியது.

திறந்த குங்குமச்சிமிழ்போல் அனல் அள்ளி நிறைத்து திறந்திருந்த விழிகளை மாறி மாறி நோக்கிச் சுழன்ற அவன் பார்வை குடிமூத்தார் மூவரில் அமைந்தது. சடையன் இரு கைகளையும் நெஞ்சில் கோத்தபடி அமர்ந்து அனலை நோக்கிக் கொண்டிருந்தார். பிசிறி நின்ற சடையின் உதிரி முடிகள் அனல் எனத் தெரிந்தன. பேயன் இருகைகளிலும் தலையை தாங்கியிருக்க முழங்கால்மடிப்பில் முகம் வைத்து

அமர்ந்திருந்தார் எரியன். நாளும் எரியோம்புபவர்கள்போலத் தோன்றவில்லை அவர்களின் முகம். அன்று முதல்முறையாக பொன்னொளி கொண்டெழுந்த தேவனை நோக்குபவர்கள் எனத் தெரிந்தனர்.

காளன் நெருப்புக்கு வலப்பக்கம் கால் மடித்து முழங்கால்கள்மேல் கைவைத்து அமர்ந்திருந்தான். அவனருகே கொம்பன் அமர்ந்திருக்க இடப்பக்கம் காளி தன் மடியில் குமரனுடன் அமர்ந்திருந்தாள். கொம்பன் இரு கைகளையும் நிலத்தில் ஊன்றி முகத்தை முன்னால் நீட்டி கனிந்த ஊனை மூக்கால் தொடவிழைபவன் போலிருந்தான். இளையவன் இருகைகளையும் வாய்க்குள் விட்டு அடிநிரம்பாச் சிறுபாதங்கள் சுருங்க கட்டைவிரலை சுழித்துக் கொண்டிருந்தான்.

ஊன் வெந்து சுவைமணம் எழுந்ததும் அறிந்த தெய்வம் ஒன்று அறியாவெளியிலிருந்து பெருகி நேரில் தோன்றியதென அர்ஜுனன் உணர்ந்தான். அடுமடையர் சேர்ந்து வெந்த ஊன் விலங்குகளை கணுக்கொழுவால் பற்றி அனலில் இருந்து விலக்கி எடுத்து தூக்கி இயல்பாகச் சுழற்றி தரையில் பரப்பப்பட்டிருந்த பாக்குமட்டைப் பாய்களில் வைத்தனர். வன்பால் நிலத்தில் முதல்மழை என வெம்மைஎழுந்த ஊனில் கொதிக்கும்நெய் சிறுகுமிழியுடன் வற்றிக்கொண்டிருந்தது. சொட்டிய ஊன்நெய் பாளைவரிகளில் தயங்கி வழிந்தது.

ஊன் அனைத்தும் இறக்கப்பட்டதும் கிழங்குகளையும் காய்களையும் பச்சைநாணலில் இறுக்கமாகக் கோத்து அனலில் காட்டி, சுழற்றிச் சுட்டு எடுத்து வாழை இலைமேல் பரப்பினர். காய்ச்சில் பெருங்கிழங்குகள் வெந்து வெண்புன்னகையென வெடித்திருந்தன. கருணைக்கிழங்கு கறைமணம் எழ தோல் வழண்டிருந்தது. முக்கிழங்கும் நனைகிழங்கும்

கொடிக்கிழங்கும் வள்ளிக்கிழங்கும் கலந்து ஒன்றென மணத்தன. ஒவ்வொரு காயும் ஒரு வகையில் வெந்து சுருங்கியது. வழுதுணங்காய் பசுந்தோல் வழண்டது. மாங்காயின் கடுந்தோல் அதுங்கியிருந்தது. கோவைக்காய் கருகியிருந்தது.

இலைகளிலும் பாய்களிலும் உணவைப் பரப்பியதும் அடுமடையன் சென்று சடையன் முன் நின்று தலைவணங்கி “அன்னம் ஒருங்கிவிட்டது, மூத்தவரே” என்றான். அவர் தன் முப்பிரிவேலை அவன் தலைமேல் தொட்டு வாழ்த்தினார். சடையன் காளனை நோக்கி கைகாட்ட அவன் எழுந்து அனலை மும்முறை வணங்கிவிட்டு தன் கையிலிருந்த கத்தியால் வெந்து விரிந்திருந்த பன்றியின் தொடையொன்றை வெட்டி தனித்தெடுத்தான். அதை மூன்றாகப் பங்கிட்டு குடிமூத்தார் மூவர் முன் வாழையிலையில் படைத்தான். பின்னர் காளி எழுந்து ஊனையும் கிழங்குகளையும் அவர்கள் அனைவருக்கும் பகிர்ந்தளித்தாள்.

நீரிலிட்ட பொரி பரவுவதுபோல அன்னம் அத்திரளில் பிரித்து பகிரப்பட்டு ஓசையின்றி விரிவதை அர்ஜுனன் கண்டான். எவரும் கேட்கவில்லை. எவரும் விலக்கவுமில்லை. கிழங்கும் காய்களும் ஊனும் அவர்கள் முன் வாழை இலையில் படைக்கப்பட்டு முடிந்ததும் சடையன் முதல் பிடி ஊனை எடுத்து “மூதாதையரே, உங்களுக்கு” என்றுரைத்து அனலில் இட்டார். பேயன் “வாழ்பவர்களே, உங்களுக்கு” என்றுரைத்து அனலில் அன்னம் இட்டார். எரியன் “என்றுமிருப்பவர்களே, உங்களுக்கு” என்று கூறியபடி அனலூட்டினார்.

அங்கிருந்த அனைவரும் “ஆம். அன்னையரே, உங்களுக்கு. தந்தையரே, உங்களுக்கு” என்று உரைத்தபடி ஒரு சிறு

உணவுத்துண்டை எடுத்து அனலில் இட்டனர். அனைவரும் சடையனையே நோக்கிக்கொண்டிருந்தனர். அவர் உண்ணத் தொடங்கியதும் தாங்களும் உண்ணலாயினர்.

மழைத்துளி சேற்றில் விழும் ஓசைபோல் உணவு மெல்லப்படும் மெல்லிய ஓசை மட்டும் அர்ஜுனனை சூழ்ந்திருந்தது. அவ்வப்போது சில மூச்சுகள், சில உதடோசைகள். சில குழவிகள் சிணுங்கின. சில மைந்தர் மென்குரலில் அன்னையிடம் ஏதோ சொல்லினர். கொம்பன் இருகைகளாலும் பன்றித்தொடையை எடுத்து ஓநாய்க்குட்டியென மிகுவிரைவுடன் உண்பதை அர்ஜுனன் ஆர்வத்துடன் நோக்கினான். விழிதிருப்பியபோது காளியின் விழிகளைக் கண்டு புன்னகைத்தான். உண்டு முடித்ததுமே முழந்தாளிட்டு கை நீட்டி இன்னொரு மான் தொடையை கொம்பன் அவனே எடுத்துக்கொண்டு அர்ஜுனனை நோக்கி நாணப்புன்னகை செய்தான்.

உண்ணுதல் ஒரு வேள்வியென அங்கு நிகழ்வதாக அர்ஜுனன் எண்ணிக்கொண்டான். அனவருக்கும் உணவளித்த நிறைவுடன் நடுவே மெல்ல ஆடி நின்றிருந்தது அனல். உண்ணும் ஒலிகள் மெல்ல விரைவழிந்து ஓயும் மழையின் இறுதிச் சொட்டுகளென ஒலிக்கலாயின. இங்கொன்றும் அங்கொன்றுமாக சிறு மூச்சொலிகள் கேட்டன. பின்னர் ஒலிகள் அனைத்தும் அமைய ஒரு சிறு குழந்தை ஏப்பம்விட்ட ஒலி இனிய பறவையின் குரலென இருளில் ஒலித்தது. அர்ஜுனன் திரும்பி அக்குழவியை நோக்க விழி சுழற்றினான். மீண்டும் ஓர் ஏப்பம் ஒலித்தது. முதிய அன்னையொருத்தியின் நிறைவு அது. பின்னர் ஏப்ப ஒலிகள் இருளுக்குள் தொடர்ந்து எழுந்தன.

காளன் ஒரு சிறு மண்குழாயை அனலூட்டி வாய்பொருத்தி ஆழ்ந்து இழுத்தான். மூக்கினூடாக வந்த நீலப்புகை தாடியில் ஊடுருவிப் பரவியது. அவ்வனலை வாங்கி பிறிதொருவன் இழுத்தான். சுழன்றுவந்த அனல் மீண்டும் அவனிடமே வந்தது. இழுக்கையில் முன்னால் குனிந்து புகைவிடுகையில் அண்ணாந்து மீண்டும் குனிந்து என ஒரு தாளம் அவ்வசைவுகளுக்கு இருந்தது. புகை எடைமிக்க சேறுபோல அவர்களை அழுத்தி மூடி ஓசையற்றவர்களாக ஆக்கியது. விழிகள் மட்டும் அதிர்ந்தபடி இருந்தன.

கைகளை ஒன்றுடன் ஒன்று உரசித் துடைத்துக்கொண்டு உடலொடு உடல் தொட்டு பெரிய வட்டமாக அனலைச் சுற்றி அமர்ந்திருந்தனர் காலகுலத்தோர். அவர்களின் தோள்களும் மெல்ல அசைவதை அர்ஜுனன் கண்டான். ஒற்றைச் சரடில் கோக்கப்பட்ட மணிகளென அவை முற்றிலும் ஒத்திசைவு கொண்டிருந்தன. பின் கைகள் நெளிந்தும் குழைந்தும் குவிந்து நீண்டும் வளைந்தமைந்தும் விரல்கள் மலர்ந்தும் கூம்பியும் விழிச்சொற்களாயின.

பலநூறு முறை பயின்ற நடனம் என நிகழ்ந்தது அவ்வசைவு. பழுதற்ற பொறிபோல. அவர்களை ஆட்டுவிப்பது எது என அவன் எண்ணியதும் தன்னுடல் அப்பெருக்கில் இணையாததை உணர்ந்தான். அவ்விலக்கம் மூலமே அவ்வசைவை அவன் பார்ப்பதையும் அறிந்தான்.

தன் இடையில் சுருட்டி வைக்கப்பட்டிருந்த அக்கூழாங்கல்லை எடுத்து வலக்கையில் வைத்து பொத்திக்கொண்டான். அதை நெஞ்சோடு சேர்த்து விழிகளை மூடியபடி மெல்ல தன் உடலை அசைக்கலானான். இருபுறமும் தோள்கள் அவனை முட்டின. பின் அத்தொடுகையின் தாளத்தை அவன் உடல் அறிந்தது.

அத்தாளம் மட்டுமே அவன் உடலில் அசைவென்றாகியது. அந்தக் கல் எடைகொண்டு அவனைத் தன் ஊசலென ஆக்குவது போலிருந்தது. அவன் மூச்சும் நெஞ்சும் அத்தாளத்தில் அமைந்தன.

காளன் “ஹாம்!” என்று ஒலித்தான். “ஹாம்!” எனும் நுண்சொல் மலையிடுக்கில் காற்றுநுழையும் ஒலியென எழுந்தது. எரிசுழல்வதுபோல் மாறியது. அவர்களின் உதடுகள் அவற்றை உச்சரிக்கவில்லை. அவர்கள் எவரும் அதை அறியவுமில்லை. அச்சொல் திரளென மட்டுமே இருந்த அவர்களிடமிருந்து இயல்பாக எழுந்தது. மீளமீள. முடிவிலாதென எழும் ஓர் ஒலி சித்தத்தை நிறுத்திவிடுகிறது. “ஹூம்!” என்னும் அடுத்த நுண்சொல். மீண்டும் மீண்டும். ஊசல். முடிவிலாச் சுழல்.

தன்னைத் தான் சுற்றும் மையத்தின் அசைவிலா அசைவு. “ஹம்!” அனல் முழக்கம். அனல் ரீங்காரம். அனல் வெடிப்பு. “ஹௌம்!” அனைத்தையும் அறைந்து மூடித்தழுவும் அலை. “ஹௌ!” அனைத்தின் மேலும் பொழியுமொரு பெருமழை. “ஹ்ரீம்!” அனைத்தையும் வளைத்தெழும் பசி. அனைத்தையும் நொறுக்கும் “ஸ்ரீம்!” கொஞ்சல் என “ப்ரீம்!” அழைப்பு என “ரீம்!” ஆழ்ந்த அமைதிகொண்ட “க்ரீம்!” சீறி எழும் “ஸௌம்!” அனைத்தையும் மூடிநின்றிருக்கும் “ஹோம்!” ஒலிகளின் நீள்பெருக்கு.

“ஆ” என்னும் ஒலியுடன் காளன் எழுந்தான். அவன் கைகள் நாகபடங்கள் என சீறி எழுந்தன. கால்கள் நிலத்தை உதைத்து உதைத்து துடித்தன. உடன் காலர்கள் இருவர் உடுக்கோசையுடன் எழுந்தனர். துடிதுடித்துப் பற்றிப் படர்ந்தேறிய அவ்வொலியில் துள்ளும் தசைகளுடன் காளன் பாய்ந்து கல்பீடம் மீதேறினான். பெருந்துடி தாளத்துடன்

இயைந்து அவனைச் சூழ்ந்து நடனமிட்டனர் பன்னிரு காலர். நடுவே அவன் கணமொரு தோற்றம் கொண்டு கண்விரைவை முந்தி நின்றாடினான்.

கையொன்று சொல்ல கால் அதைத் துள்ள கண் அதற்கப்பால் எனச் சுட்ட சொல்தொடா சித்தம்தொடா விசையில் நிகழ்ந்தது ஆடல். இளநகை கொண்டது இதழ். மான் என்றது கை. சினம்கொண்டு சீறியது முகம். மழு என்றது கை. மலர் என்றது. மின்படை என்றது. அமுதென்றது. ஊழித்தீ என்றது. நஞ்சுண்டது. அமுதளித்தது. ஆக்கியது ஒரு கை. அனலேந்தி காத்துநின்றது மறுகை. அருளியது ஒரு கை. அடி பணிக என்று ஆணையிட்டது மறுகை. அங்கு அத்தனை கைகளும் உடல்களும் உரைத்த விழிச்சொற்கள் அனைத்தும் அவன் கைகளில் உடலில் நிகழ்ந்தன.

இடக்கால் எடுத்து சுழற்றி வலக்கால் சுட்டுவிரல் நுனியில் நின்று சுழன்றாட பறந்தது புலித்தோல். சிறகென எழுந்து சுழன்றது சடைத்திரள். தூக்கிய கால் குத்தென எழுந்து தலைக்குமேல் ஒரு மையத்தில் நிலைக்க சுழன்று சுழன்று வெறும் சுழிப்பென ஆகி அவன் விழியிலிருந்து மறைந்தான்.

அர்ஜுனன் அச்சுழலில் தான் கரைவதை உணர்ந்தான். இதோ, இக்கணம், மறுகணம், இது, இக்கணம் என உணர்ந்து சென்று பின்பு அனலைச்சுற்றி மாபெரும் சுழியாகச் சுழன்றுகொண்டிருந்தான். விசைகொண்டெழுந்து அவ்வனலென்றானான். விசும்பின்மேல் வெளிசூடி நின்றான்.

**[ 38 ]**

“ஏழு முழுநிலவுகளை கைலைத் தாழ்வரையில் வாழ்ந்து கண்டு பாசுபதம் பெற்று பார்த்தன் திரும்பி வந்தான்” என்றான் சண்டன். திருவிடத்தின் தென்னெல்லையாக ஒழுகிய கோதை நீர்ப்பெருக்கின் கரையில் ஒரு நாணல்மேட்டில் அந்தணர் நால்வரும் இளஞ்சூதனும் அவனைச் சூழ்ந்து அமர்ந்திருந்தனர். “முத்துவிளைந்த சிப்பி மேலெழுந்து வருவதுபோல் அவன் வந்தான் என்கின்றது அயோத்தியின் பெருங்கவிஞர் கௌண்டின்யர் அர்ஜுனேந்திரத்தை தொடர்ந்து எழுதிய காவியமான பாசுபதார்ஜுனியம்.”

வெண்தாமரை மலரிதழ் அடுக்குகள் என அவனைச் சூழ்ந்திருந்த பனிமலை முடிகள் மெல்ல கூம்பி அவனை வெளியேற்றின. சிறு கருவண்டென அகன்று பின் திரும்பிநின்று அவை இளவெயிலில் வெளிறி மறைவதை நோக்கினான். அங்கு பெற்றவை அனைத்தும் முன்பு எப்போதோ அறிந்திருந்தவை என்று தோன்றும் விந்தையை எண்ணிக்கொண்டான். ஒவ்வொரு அறிதலுக்குப் பின்னரும் அவன் உணர்வது அது, அறிதலெல்லாம் நினைவுகூர்தல் மட்டுமே.

அவன் கண்முன் அந்தி எழுந்துகொண்டிருந்தது. மீண்டும் நின்று திரும்பி வெண்புகை நடுவே அனல் என எழுந்த

கைலைமலைமுடியை அவன் நோக்கினான். அதைவிட்டு விழியகற்ற இயலாதவனாக நெடுநேரம் உறைந்திருந்தான். பின் எண்ணம் மின்ன தன் இடையில் இருந்து பாசுபதத்தை எடுத்து நோக்கினான். அவன் கையிலிருந்தது கைலைமுடி.

“இங்கு மட்டுமே இது இருத்தல் தகும். பிறிதெங்கும் அமைய ஒண்ணாது” என எண்ணினான். நீள்மூச்சுடன் புன்னகைத்து “நன்று, முழுமுதன்மை இவ்வண்ணம் எனக்கு வாய்த்தது” என்று தனக்கே உரைத்தபின் அதை வெண்பல்நிரை என எழுந்து ஒரு வான்நகைப்புபோலத் தெரிந்த இமயம் நோக்கி வீசினான். திரும்பாமல் நடந்து மீண்டான்.

மலையடுக்குகள் கடந்து சரிவிறங்கி வருகையில் வெள்ளி நாகமென ஓர் ஆறு வளைந்தோடி நுழைந்து மறைந்த பிலமொன்றைக் கண்டான். அதன் வழுக்கும் பாறைகளுக்குள் நுழைந்து இருண்டு குளிர்ந்த வாய்க்குள் புகுந்து நடந்தான். நூறு வளைவுகளுக்குப் பின் வில்லும் அம்பும் தூளியும் கொண்டு அவன் எழுந்தது கின்னரர்களின் தெய்வக்குகை முகப்பில்.

அது இளம்புலரிவெயில் எழுந்து சிறகுவிரித்து நின்ற நேரம். தங்கள் தெய்வங்களுக்கு பூசனை இட மலரும் நீரும் அன்னமும் கொண்டு அங்கு நின்றிருந்தனர் கின்னரர். காலைச் செவ்வொளியில் கைவில்லுடன் எழுந்து வந்த அவனைக் கண்டதும் குலத்தலைவர் தலைமேல் கைகூப்பி “எந்தையே, தெய்வங்களே!” என்று கூவினார். பூசகரும் பிறரும் அவனை வாழ்த்தி குரலெழுப்பினர். புன்னகையுடன் அவர்களை நோக்கி அருள்மொழி உரைத்தபின் அவன் நடந்து கீழே வந்தான்.

கின்னரஜன்யர்களின் சிற்றூரில் பார்வதி அவனுக்காக நோற்றிருந்தாள். அவன் மீளப்போவதில்லை என்றனர் அவள் குடியினர். தோழியரும் அவனை மறப்பதுவே அவளுக்கு உகந்தது என்றனர். அவள் "முயன்று மறப்பதென்று ஒன்றுண்டா என்ன? மறக்க இயலாதது அவ்வண்ணமே தன்னை நிறுவிக்கொள்கிறது, தோழியரே" என்றாள். "இது என் உடலுக்குள் அமைந்த உள்ளம் என, நான் என்றாகிய பிறிதொன்று. தானின்றி என்னை இருக்க விடாது. இது இவ்வண்ணமே திகழட்டும்" என்றாள்.

இளவேனிலின் முதல்நிலவு நாளில் கின்னரஜன்யர் மலையிறங்கிவரும் தங்கள் தெய்வங்களுக்காக படையல்கள் கொண்டு மலைச்சரிவின் எல்லையென அமைந்த கின்னரப்பாறையருகே கூடிநின்றிருந்தபோது தொலைவில் வெண்பனிமேல் படர்ந்த கதிரொளியில் ஓர் உடல்நிழல் அசைவதைக் கண்டனர். கின்னரர் என்று குலத்தலைவர் கூவினார். கின்னரஜன்யர்களின் குடிநிரைகள் வாழ்த்தொலி எழுப்பினர். பூசகர் மட்டும் இரு கைகளையும் கூப்பியபடி, சுருங்கிய முகமும் நடுங்கும் தலையுமாக காத்திருந்தார்.

"ஒருவன் மட்டுமே வருகிறான்" என்று ஒருவர் சொன்னபோது தலைதூக்கி முகம் விரிய நோக்கினார். "வில்லேந்தியவன்" என்றான் ஒருவன். "கின்னரரல்ல. இங்கிருந்து சென்ற இளையவர்" என்று ஓர் இளையோன் கூவினான். "அவர் வருவார் என்று நான் அறிவேன். அவர் வரவில்லை என்றால் தெய்வங்களும் பொருளிழந்துவிடும்." அவர்கள் அனைவரும் கூர்ந்து நோக்கியபடி முண்டியடித்தனர். "அவரா?" என்று பிறிதொரு குரல் வியந்தது. "அவர்தான்" என்று நூறு குரல்கள் எழுந்தன.

பின்னர் வியப்பு எழுந்தமைந்த அவர்கள் குரல் அழிந்து நோக்கி நின்றனர். மலைச்சரிவில் கரிய எருதொன்று துணைவர அவன் இறங்கி வந்தான். ஊரெல்லைக்கப்பால் எருது நின்று காதுகளை அடித்துக்கொண்டு தலை குலுக்கி முன்காலால் சுரைமாந்தி நின்றது. அவன் புன்னகையுடன் வந்து அவர்கள் முன் நின்றான். குலத்தலைவர் எழுந்த உணர்வுப்பெருக்குடன் இரு கைகளையும் தலைக்கு மேல் கூப்பி "வருக, வீரரே! எங்கள் குடி தழைக்கட்டும்! மாவீரர் இங்கு பிறக்கட்டும்!" என்றார்.

அர்ஜுனன் பூசகரை அணுகி அவர் கால்களைத்தொட்டு சென்னி சூடினான். அவன் தோள்களை அள்ளி வளைத்து தன் நெஞ்சோடு சேர்த்து "வென்று மீள்வாய் என்று நான் நன்கறிந்திருந்தேன்" என கண்ணீர் விட்டார். எவரோ ஒருவர் தன் தலையணியைக் கழற்றி வானில் வீசி "இளைய பாண்டவர் வாழ்க! வில்கொள் விஜயன் வாழ்க!" என்று கூவினார். அப்பெருந்திரள் வாழ்த்தொலியால் கொந்தளித்தது.

பூசகரும் குலத்தலைவரும் இருபுறமும் அழைத்துச்செல்ல அர்ஜுனன் அச்சிற்றூருக்குள் புகுந்தான். ஊர்மன்றில் சென்றமர்ந்து அவனைச் சூழ்ந்து நின்ற இளையோரிடம் சொன்னான் "இவ்வூரைச் சூழ்ந்த அனைத்து கோட்டைகளும் அகற்றப்படுவதாக! படைக்கலம் கொள்ளுங்கள், அஞ்சி ஒளியாதிருங்கள். சார்ந்திருங்கள், பணியாதெழுங்கள். வென்று செல்லுங்கள், பழி கொள்ளாதீர்கள். என்றும் இவ்வூரின் நெறியென்று இது அமைக!" இளைஞர்கள் கைதூக்கி "ஆம்! ஆம்! ஆம்!" என்று முழங்கினர்.

"கின்னரர், ஊர்ணநாபர் இருவருமே உங்கள் தெய்வங்களென்று அமைக! உங்கள் விண்ணை கின்னரர் ஆள்க! உங்கள் மண்ணை ஊர்ணநாபர் ஆள்க! கிளைகள் தனித்து அசையட்டும். வேர்கள்

பின்னி ஒன்றாக இருக்கட்டும். சிறப்புறுக!” என்று அர்ஜுனன் அவர்களை வாழ்த்தினான். “வாழ்க! வாழ்க!” என முதியோர் மலரிட்டு அவன் சொற்களை ஏற்றனர்.

மறுநாள் ஊர்மன்றில் குடிமூத்தார் எழுவர் கூடி பார்வதியை அவனுக்கு கடிமணம் செய்து கையளித்தனர். அவள் கைபற்றி ஏழு அடி வைத்து அனல் முன் நின்று “இவள் என் துணைவியாகுக!” என்று அர்ஜுனன் சொன்னான். “இவளைப் போற்றிய தேவர், காத்த கந்தர்வர், அருளிய தெய்வங்கள் அனைவரும் அறிக, இனிமுதல் இவள் என்னவள். இவளுக்கு தேவரும் கந்தர்வரும் தெய்வங்களும் ஆக நான் திகழ்வேன். ஆம், அவ்வாறே ஆகுக!” என்றான்.

அவன் கைபற்றி தலைகுனிந்து நின்ற பார்வதி புன்னகைத்தாள். அவளுக்கு இருபுறமும் நின்ற தோழியர் அவள் உடல் மயிர்ப்புகொண்டு புள்ளிகளாவதைக் கண்டனர். மணம் முடிந்து அவளை தனித்தழைத்துச் செல்கையில் “வென்றுவிட்டாய்” என்றாள் ஒரு தோழி. அவள் “நான் தோற்றதே இல்லை” என்றாள்.

அன்றிரவு மணவறை மென்சேக்கையில் இளவெம்மையுடன் போர்த்தியிருந்த மயிர்த்தோல் போர்வைக்குள் அவளுடன் மெய்தழுவிப் படுத்திருக்கையில் அர்ஜுனன் சொன்னான் “இங்கிருந்து நான் சிலநாட்களில் கிளம்பிச் செல்லப்போகிறேன், இளையோளே. எனக்கு குடிக்கடனும் அரசகடனும் உள்ளன. மீண்டு வருதல் என் கையில் இல்லை. ஆனால் ஊர்ணநாபனின் குலத்திலிருந்து ஒரு சரடு என்றும் என்னுடன் இருக்கும் என அறிவேன்.”

இரு கன்னங்களும் புன்னகையில் குழிய “ஆம், உங்கள் குருதி இங்கு வாழும்” என்றாள் பார்வதி. அவன் தோளை வளைத்து முகத்தருகே தன் முகம் கொண்டு அவள் கேட்டாள் “ஒன்று கேட்பேன், அக்குகைக்குள் ஏன் நுழைந்தீர்கள்?” அர்ஜுனன் சொன்னான் “அதை நான் முன்பு அறிந்திருந்தேன். நூறுமுறை என் கனவில் நான் நுழைந்த வழி அது.” விழிகளில் வினாவுடன் அவள் நோக்கினாள். “உள்ளே சென்று நின்று நான் சொன்னேன் எழுக இளைய யாதவரே. இங்குளேன் நான்!”

அவள் விழிகள் மாறின. “அவரா?” என்றாள். “ஆம், படையெதிர் நின்று என்னை வென்றவர். அவரை போருக்கு அறைகூவினேன். முதலில் அவர் விழிகளில் திகைப்பைக் கண்டேன். அது ஏன் என அக்குகைச்சுவரின் ஈரத்தில் என் உருவம் தெரிந்தபோது அறிந்தேன். நான் சடைமுடித்திரளில் பிறைசூடி முக்கண் முகத்துடன் சிவமென நின்றிருந்தேன். அவர் புன்னகையுடன் இது நிகர்ப்போர். எனவே முடிவிலாதது. இருவரும் தோள்தழுவுதலே உகந்தது என கைகளை விரித்தார்.”

“இருவரும் தழுவி நின்றோம். பின்னர் வெடித்துச் சிரிக்கலானோம். இளமைந்தராக அன்று அஸ்தினபுரியில் கண்ட நாட்களில் ஒருவர் மேல் ஒருவர் கங்கைக்கரைச் சேற்றை வாரி வீசிவிட்டு ஓடிச்சென்று நீரில் பாய்கையில் சிரித்ததுபோல மீண்டும் சிரித்தோம்” என்று அர்ஜுனன் சொன்னான். அவள் அவனைத் தழுவினாள். “ஆம், நீங்கள் சிவம், ஏனென்றால் நான் மலைமகள்” என்றாள். அவன் முகத்தருகே மீண்டும் முகமெழுந்து “அவர் எத்தோற்றத்தில் இருந்தார்?” என்றாள். “பெருகும் முகம் கொண்ட விருத்திரனின் உருவில்” என்றான் அர்ஜுனன்.

# கிராதம் - 83

**[ 39 ]**

வேங்கடத்திற்கு வழிபடுநடை செல்லும் விண்ணடியார் எழுப்பிய இசை முதலில் தொலைவில் ஏதோ சிற்றூர் இருப்பதைப்போல எண்ணச் செய்தது. பின்னர் காற்றில் அது வலுத்து செவிதொட்டு அகன்றது. “அங்கு ஓர் ஆலயம் உள்ளது” என்றான் உக்ரன். அருகே புதர்களுக்கு அப்பால் அவர்களின் இசை எழுந்ததுமே சண்டன் “விண்ணிறைவழியினர்” என்றான். “யார் அவர்கள்?” என்றான் வைசம்பாயனன். “இசைச்சூதர்கள் போலிருக்கிறார்கள்” என்றான் சுமந்து. ஜைமினியின் தோளில் இருந்த உக்ரன் “பாடி ஆடுகிறார்கள். பாட்டில் ஒலியிலேயே ஆட்டத்தின் அலை உள்ளது” என்றான்.

“விண்ணளந்தோனை முழுமுதல்தெய்வமென வழிபடுபவர்கள். ஒவ்வொரு நிலத்திலும் ஒவ்வொரு முறையில் விரிந்துகொண்டிருக்கிறது இவ்வழிபாடு. வடக்கே பசும்புல்வெளிகளின் தலைவனாக அவனை வழிபடுகிறார்கள். விரிந்த நிலத்தின் நடுவே அவன் ஆலயங்கள் அமைந்துள்ளன. அங்கே அவன் முப்பிரிப் பேரரவு மேல் அறிதுயில்கொண்டிருக்கிறான். ஆய்ச்சியரும் ஆயரும் நோன்பிருந்து தாமரைமலர்க் குடலைகளுடன் பாற்குடம் சுமந்துவந்து அவனுக்குப் படைத்து வழிபடுகிறார்கள். இங்கே திருவிடத்திலும் தமிழ்நிலத்திலும் மலைநின்ற நெடுமாலாக அவனை வணங்குகிறார்கள். அவனை வழிபட இசையே வழி என்று சொல்கிறார்கள்” என்றான் சண்டன்.

விண்ணடியார் அணுகும்தோறும் மரக்கிளைகளில் இருந்து பறவைகள் எழுந்து பறந்தன. தண்ணுமையின் ஒலி செவியை கூர்மையாக தொட்டது. “தாளமென்றால் இதுதான்… காலம்போலவே பிழையற்றது” என்றான் ஜைமினி. “ஆம், தென்னிலமே இசையாலும் தாளத்தாலும் ஆனது. ஆயிரத்துக்கும் மேற்பட்ட தாளக்கருவிகள் இங்குள்ளன. செல்லும்தோறும் ஊருக்கொரு முழவுவகையை நீங்கள் காணமுடியும். தொழில்சூழ்கையிலும் ஓய்வுகொள்கையிலும் வழிபடுகையிலும் பாடிக்கொண்டே இருப்பது அவர்களின் வழக்கம். அவர்களின் ஊர்களில் குழலோ யாழோ முழவோ ஒலிக்காத பொழுதென ஏதுமில்லை” என்றான் சண்டன்.

“அவர்கள் இசையை நூற்றிமூன்று பண்களென வகுத்துள்ளனர். அத்தனை பொழுதுகளுக்கும் உரிய பண்கள் அவர்களிடம் உள்ளன. முதுகுருகு முதுநாரை என நூற்றெட்டு இசைநூல்கள் அவர்களிடமுள்ளன. குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என ஏழு இசைநிலைகளை வகுத்துள்ளனர். மயிலகவு, பசுவின் குரல், ஆட்டின் சினைப்பு, அன்னத்தின் விளி, கூகைக்குமுறல், குதிரைக்கனைப்பு, யானைப்பிளிறல் என ஏழு உயிரொலிகளில் இருந்து எழுந்தவை இசைநிலைகள் என்பது அவர்களின் கூற்று” என்று சண்டன் சொன்னான்.

விண்ணடியார் உருவங்கள் தெரியத்தொடங்கின. அனைவருமே மஞ்சளாடை அணிந்து மஞ்சள் தலைப்பாகையுடன் விண்ணிறைவனின் காலடிகளை நெற்றியில் வரைந்துகொண்டு கைகளில் இசைக்கருவிகளை ஏந்தி மீட்டியபடியும் பாடி ஆடியபடியும் வந்தனர். அவர்கள் வணங்கியபடி நின்றிருக்க அருகணைந்த பின்னரும் அவர்களால் இசையிலிருந்து இறங்க முடியவில்லை. முதலில் வந்தவர் முழவை நிறுத்திவிட்டு

வணங்கியபின்னரும் பிறர் இசையை தொடர்ந்தனர். மெல்ல இசை ஓய்ந்த பின்னரும் அவர்களின் உடல்களில் இசை ததும்பிக்கொண்டிருந்தது. சிவந்து கலங்கி புறநோக்கிழந்து பித்தர்விழிகள் போலிருந்தன கண்கள்.

அவர்களின் முதல்வர் கண்ணீர் வழிய கைகளைக் கூப்பியபடி மிகுவுணர்ச்சியுடன் "விண்ணவன் புகழ் இனிதாகுக! விண்ணவன் பெயர் இனிதாகுக! விண்ணவன் பொழுது இனிதாகுக!" என்றார். சண்டன் "சிவமேயாம்!" என்று மறுவாழ்த்து உரைத்தான். "வணங்குகிறேன், அந்தணர்களே. உங்களைக் கண்டது எங்கள் இன்பேறு" என்றார் முதல்விண்ணடியார். நால்வரும் அவரை முறைப்படி வணங்கினர். ஜைமினி "தாங்கள் எவரென்று நாங்கள் அறியலாமா?" என்றான். "நாங்கள் தென்னிலத்திலிருந்து வேங்கடம் செல்லும் விண்ணடியார். ஒவ்வொருவரும் ஒருவகை தொழில் செய்வோர். இவர்கள் இருவரும் உழவர்கள். அவர்கள் மூவரும் கம்மாளர். பிறிதொருவர் வணிகர். நான் அந்தணன்" என்றார் முதல் விண்ணடியார்.

"மழைவிழும் ஆறுமாதகாலம் எங்கள் ஊர்களில் தொழில்செய்து பொருளீட்டுவோம். அதன்பின் இல்லம் துறந்து விண்ணளந்தோன் நினைவொன்றே நெஞ்சில் நிறைந்திருக்க ஊர்கள்தோறும் செல்வோம். அங்கே எங்கள் இறைவனின் புகழ்பாடி அம்மக்கள் அளிக்கும் உணவை உண்டு சாவடிகளில் தங்கி மறுநாள் கிளம்புவோம். எவ்வூரிலும் ஒருநாள் இரவுக்குமேல் தங்குவதில்லை. தென்னிலத்தின் மாலிருஞ்சோலையில் தொடங்கி வடபுலத்து வேங்கடம் வரை வந்து திரும்பிச்செல்வோம். ஊர்துறந்து கிளம்பியபின்

எங்களுக்குப் பெயர்கள் இல்லை. அனைவருமே விண்ணடியார் என்றே அழைக்கப்படுவோம்.”

“அனைவருமே இசையறிந்திருக்கிறீர்கள்” என்றான் சுமந்து. “இசையினூடாக மட்டுமே அவனை அறியமுடியுமென்பதனால் இசையை அறிந்தோம். நோக்குக இளையோரே, இதோ வசந்தம் எழுந்துள்ளது. இப்புவியின் பல்லாயிரம் கோடி மலர்களில் மணமென எழுந்து தேன் என ஊறிக்கொண்டிருப்பவன் அவனே. சற்று சித்தம் திறந்தால் இந்த மரத்தில் அந்தப் பாறையில் அப்பால் மலைகளில் அனைத்திலிருந்தும் அவன் மணமும் இனிமையும் எழுந்துகொண்டிருப்பதை உணர்வீர்கள். இனிது இப்புவி, ஏனென்றால் இது அவனை தன்னுள் கரந்திருக்கிறது. இவ்வினிமையில் கணமும் வீணாகாமல் திளைப்பதற்கென்றே மானுடப்பிறவியை அவன் அளித்துள்ளான்” என்றார் விண்ணடியார்.

“அறிக, கனிந்து தன் முட்டைகளை தேனிலேயே இடும் அன்னைத்தேனீ அவன். தேனில் வளர்ந்து தேனே சிறகாகி எழுந்து தேன் தேடி அலைந்து தேனை உணவாக்கி வாழ்ந்து மறைவதொன்றே நம் கடன்” என்றார் இன்னொரு விண்ணடியார். “ஆகவே, நாங்கள் அவன் புகழன்றி வேறேதும் பேசுவதில்லை. அவன் இசையன்றி ஏதும் பாடுவதில்லை. அவன் அழகை மட்டுமே எங்கள் விழிகள் நோக்கும். அவன் மணம் மட்டுமே எங்கள் மூக்குகள் அறியும். அவனைப்போல் இனிக்கும் அன்னம் மட்டுமே எங்கள் உணவு. எங்கள் குரல் தித்திப்பதை நீங்கள் உணர்வீர்கள், ஏனென்றால் எங்கள் உடல் தித்திக்கிறது. உள்ளம் திகட்டாது தித்திக்கிறது. இளையோரே, அவன் பள்ளிகொண்ட பாற்கடலே எங்கள் இறுதியினிமை” என்றார்.

சண்டன் “ஆம், அவ்வாறே ஆகுக!” என்றான். “நன்று சூழ்க!” என முதல் விண்ணடியார் வாழ்த்தினார். “இன்று காலையிலேயே எங்கள் நெஞ்சு மேலும் மேலுமென இனிக்கத் தொடங்கிவிட்டிருந்தது. கூசக்கூச இனிமை. என்னவனே, பெருமாளே, போதும் இது என உளத்துள் கூவினேன். ஏன் என எனக்கு நானே கேட்டுக்கொண்டேன். உங்களை நோக்கியதுமே அது ஏன் என அறிந்தேன். இதோ, விண்ணளந்தோன் புகழ் வளர்க்கும் ஐவரை கண்முன் காண்கிறேன். சாம்பல்பூசிய மாவிரதச்சைவர் அவர்களை அழைத்துவருவதும் அவன் ஆடலே” என்றார்.

இன்னொருவர் “ஆம், கண்டதுமே என் நெஞ்சு இனித்து விழிகள் நிறைந்துவிட்டன. நான்கு திசைகளென நால்வர். அந்நான்கையும் அணைக்கும் விண் என ஒருவர். இளஞ்சூதரே, தாங்கள் எங்கள் மால்வண்ணன் என கண்முன் எழுந்து இந்நாளை பெருகவைத்தீர். தங்கள் பாதங்களை சென்னிசூடும் நல்லூழ் வாய்த்தது எங்களுக்கு” என்றார். அவர்கள் எழுவரும் வந்து அந்தணர் நால்வரின் கால்களையும் தொட்டு வணங்கினர். உக்ரனின் கால்களை எடுத்து சென்னிசூடி விழிகளில் ஒற்றிக்கொண்டனர். “எந்தையே, எம்பெருமானே, விண்ணளந்தோனே, உன்சொல் பெருக நீயே முகம்கொண்டெழுகிறாய் போலும்” என்றார் ஒருவர்.

அவர்களின் விழிநீரும் விம்மலும் நால்வரையும் வியப்புகொள்ளச் செய்தன. ஒருவரை ஒருவர் விழியசைவுகளால் நோக்கிக்கொண்டனர். அவர்கள் வணங்கிக்கொண்டிருக்கையிலேயே முதல்வர் முழவை மீட்டி “ஒரு கால் தூக்கி உலகேழும் அளந்தவனே, திருமால் என தென்மலை மீது எழுந்தவனே, கருமாமணியே, கன்னலின்

சுவையே, கரியோனே, பெருமாளே, பழவடியார் சொல்லில் இனிப்பவனே” என கூவ இன்னொரு விண்ணடியார் “பைம்பால் ஆழி அலை நடுவே அமைந்தவனே, ஐம்பால் இனமும் அடிபணியும் அருளோனே” என ஏற்றுப்பாடினார். அவர்கள் அக்கணமே பிறிதுருக்கொண்டவர்களென இசைக்குள் மூழ்கினர். இசை அவர்களின் அசைவென்றாகியது. விழியறியாத நீரலை என அவர்களை எற்றி அலைக்கழித்து எடுத்துச்சென்றது.

“விந்தையானவர்கள்” என்று உக்ரன் சொன்னான். “பனித்துளிகள் சொட்டி நிற்கும் காலைச்செடி போலிருக்கிறார்கள்” என்றான் ஜைமினி. பிறர் ஒன்றும் சொல்லாமல் தங்களுக்குள் மூழ்கியவர்களாக நடந்துவந்தனர். ஜைமினி அவர்களைப்பற்றி பேசவிரும்பினான். “அவர்கள் எதைக் கண்டார்கள்? நம்மில் எழும் எந்தச் சொற்பெருக்கை அவர்கள் சொல்கிறார்கள்?” என்றான். உக்ரன் “நீங்கள் இயற்றப்போகும் நூல்களை” என்றான். “நானா?” என்றான் ஜைமினி. ஆனால் அவன் முகம் மலர்ந்துவிட்டிருந்தது. “ஆம், நீங்கள் நால்வருமே நூல்களை எழுதுவீர்கள் என்றார்கள் அவர்கள்” என்றான் உக்ரன்.

“சரி, அப்படியென்றால் நீர்?” என்று ஜைமினி கேட்டான். “நான் நான்கையும் ஒன்றாக்குவேன் என்றார்கள்” என்று உக்ரன் சொன்னான். “நான் அனைத்தையும் பாடலாக ஆக்குவேன். பாடியபடி…” காலை உதைத்து எம்பி கைகளை விரித்து “விண்ணில் பறப்பேன்… பறவைபோல பறப்பேன்” என்றான். நிலையழிந்து ஜைமினி தள்ளாடி நின்று சிரித்துக்கொண்டு “விழப்போகிறீர்” என்றான். “நான் விழமாட்டேன்… நான் இப்போது பறந்துகொண்டிருக்கிறேன்… வண்டுபோல. கந்தர்வர்களின் இசையை கேட்கிறேன்” என்று உக்ரன் சொன்னான்.

பிறமூவரும் பேசப்போவதில்லை என்று தெரிந்ததும் அவர்களுக்குள்ளேயே பேசத்தொடங்கினர். “நீர் நான் எழுதுவதை எப்படி பாடுவீர்?” என்றான் ஜைமினி. “முழவு…” என்றபின் உக்ரன் “என் முழவு… என் முழவு எங்கே?” என்றான். “தொடங்கிவிட்டீரா? அதை பிறகு எடுத்துத் தருகிறேன்.” உக்ரன் “என் முழவு… என் முழவு” என்று சிணுங்கியபடி துள்ளினான். “சரியான…” என்று சலித்துக்கொண்ட ஜைமினி “இரும்…” என அவனை இறக்கி தன் மூட்டையைப் பிரித்து முழவை எடுத்து அவனிடம் அளித்தான். “என் அரணிக்கட்டை…” என்று உக்ரன் சுட்டிக்காட்டினான். “அது எதற்கு உமக்கு?” என்றான் ஜைமினி. “எனக்கு வேண்டும் அது.”

ஜைமினி அதை எடுத்துத்தர ஒரு கையில் முழவும் இன்னொரு கையில் அரணிக்கட்டையுமாக அவன் “என்னை தூக்கு” என்றான். மூட்டையைக் கட்டியபடி ஜைமினி “இரும்” என்றான். “நான் கூட்டிச்செல்லமாட்டேன்” என்றான் உக்ரன். “விட்டுவிட்டுப்போய்விடுவேன்.” சண்டன் திரும்பிப்பார்த்தான். நோக்கு எங்கோ உட்திரும்பியிருக்க அவை சிலைவிழிகள் போலிருந்தன. “அவர் கண்கள் திரும்பியிருக்கின்றன…” என்றான் உக்ரன். “ஓவியத்துணியின் பின்னால் நின்று பார்ப்பதுபோல தெரிகிறார்.” ஜைமினி சிரித்தபடி திரும்பிப்பார்த்தான். சண்டன் தாடியை நீவியபடி முன்னால் சென்றான்.

ஜைமினி உக்ரனைத் தூக்கிக்கொண்டு உடன்சென்றான். அன்று பகலில் அவர்கள் உணவுண்ணவில்லை. அந்தியில் அவர்கள் சென்றிறங்கிய மலைச்சரிவில் பாதை இரண்டாகப் பிரிந்தது. சண்டன் நின்று “அந்தணர்களே, நான் இவ்வழியே செல்கிறேன். இது உங்களுக்குரியதல்ல” என்றான். ஜைமினி திகைப்புடன் “ஏன்?” ஏன்றான். “நான் செல்லுமிடத்திற்கு கரியானை என்று

தென்மொழியில் பெயர். செம்மொழியில் காளஹஸ்தி. அங்கே சுவர்ணமுகி நதிக்கரையில் மலைக்குகைக்குள் நிறுவப்பட்ட சிவக்குறியை வழிபட்டு பிறவிமுழுமையை அடைய நான் சென்றுகொண்டிருக்கிறேன். நீங்கள் வந்தடையவேண்டிய இடம் அதுவல்ல.”

ஜைமினி ஏதோ சொல்ல வாயெடுக்க வைசம்பாயனன் விழிகளால் வேண்டாம் என்றான். “நீங்கள் செல்லுமிடமும் நோக்கமும் எனக்கு நன்றெனத் தெரிகிறது. நான் உங்களை இதுவரை அழைத்துவந்ததும் ஏன் என அவர்களின் சொல்வழி தெரிந்துகொண்டேன். நன்று, அப்பணி நிறைவுற்றது. நலம் சூழ்க!” என்றான் சண்டன். பின்னர் அவர்களிடம் விடைபெறாமல் நடந்து மலைச்சரிவில் இறங்கிச்சென்றான். அவர்கள் அவன் விட்டிலென தாவிச்செல்வதை நோக்கி நின்றனர்.

கீழே குறுங்காட்டுக்குள் முழவோசை கேட்டது. இருண்டகாடு பனித்துத் துளித்ததுபோல பிச்சாண்டவர் ஒருவர் கையில் முப்பிரி வேலுடன் சடைமகுடம் சூடி நீறணிந்த வெறும்மேனியுடன் எழுந்து வந்தார். தொடர்ந்து காளாமுகர்களின் ஒரு குழு நடனமிட்டபடி தோன்றி அப்பால் வளைந்து சென்றது. அவர்களுடன் சென்ற முதியபாணன் ஒருவன் முழவை மீட்டியபடி பாடினான். சண்டன் இயல்பாகச் சென்று அவர்களுடன் சேர்ந்துகொண்டான். அவர்கள் புதர்களுக்குள் மறைய பாடல் மட்டும் கேட்டுக்கொண்டிருந்தது.

எரிமருள் காந்தள் செம்மலர் சூடி
எரிசிதைச் சாரம் மேனியிற் பொலிய
கரியுரி இருட்தோல் கைக்கோள் ஆக
விரிசடை அண்ணல் ஆடிய கொட்டி
நிலைபிறழ் வடவை நிமிர்ந்தெழு சூலொடு
கலைஇய வேங்கை கடுந்துடி உடுக்கை.

**[ 40 ]**

உக்ரனுடன் அவர்கள் இருளெழுந்த பின்னர்தான் அருகிலிருந்த சிற்றூருக்குச் சென்று சேர்ந்தனர். ஊர்வாயிலில் தொலைபயணிகள் அறிந்து வரும்பொருட்டு உயர்ந்த கற்றூண் மேல் அகல் விளக்கேற்றப்பட்டிருந்தது. அவர்கள் அணுகியதும் நாய்க்குரைப்போசை கேட்டு ஊர்த்தலைவர் அகல்சுடருடன் வந்து வணங்கினார். “வருக அந்தணர்களே, தங்கள் கால்களால் எங்கள் ஊர் தூய்மைகொண்டது” என முகமன் உரைத்தார். அவர்களை கால்கழுவச்செய்து ஊருக்குள் அழைத்துச்சென்றார். அவர்களுக்குரிய மாற்றாடையும் குடிநீருமாக அவர் துணைவி அருகே வந்து நின்றாள். இருவரும் தொழுது அழைத்துச்சென்றனர்.

அவர்களுக்குரிய குடிலுக்குச் சென்றதும் ஜைமினி "தமிழ்நிலத்தில்தான் துணைவியும் வந்து விருந்தினரை வரவேற்கிறார்" என்றான். சுமந்து "ஆம், அதை நான் பயின்றறிந்துள்ளேன்" என்றான். அவர்கள் அருகிருந்த சுனையில் நீராடி வந்ததும் உணவு வெம்மையுடன் சித்தமாக இருந்தது. ஊர்த்தலைவரும் ஊரார் மூவரும் தங்கள் துணைவியருடன் வந்து அவர்களுக்கு அன்னம் பரிமாறினர். "துயின்றெழுக, அந்தணர்களே! நாளை புலரியில் எங்கள் ஊர்ச்சிறார்களுக்கு சொல்லளிக்கவேண்டும் தாங்கள்" என்றார் ஊர்த்தலைவர். அவர்கள் சென்றதும் ஐவரும் குடிலின் முன் அமர்ந்துகொண்டனர்.

வானில் விண்மீன்கள் இறைந்து கிடந்தன. ஜைமினி அவற்றை நோக்கிக்கொண்டிருந்தான். சுமந்து "விண்மீன்களைக் கொண்டே மண்ணில் என்ன நிகழவிருக்கிறதென்று சொல்லும் கலை ஒன்றுண்டு வடமேற்கே" என்றான். "விண் ஒரு பெருநூல். அனைத்தும் எழுதப்பட்டுள்ளது அதில் என அந்தக் கலையறிந்த நிமித்திகர் சொன்னார்." வைசம்பாயனன் "விண்ணுக்கு நிகரான ஒரு காவியத்தை மண்ணில் எழுதவேண்டும் ஒருவர்" என்றான்.

"எந்தக் காவியமும் ஒருவரால் எழுதப்படுவதில்லை. ஆறுபோல அது ஊறித்தொடங்கி பெருகி துணைகளை இணைத்துக்கொண்டு செல்கிறது" என்றான் பைலன். ஜைமினியின் மடியில் ஒரு கையில் முழவும் மறுகையில் அரணிக்கட்டையுமாக உக்ரன் துயில்கொள்ளத் தொடங்கினான். "மிக மெலிந்திருக்கிறார்" என்று அவன் கையையும் தோளையும் வருடியபடி சுமந்து சொன்னான். "இனி இவரே நம் வழிகாட்டி என்றார் சண்டர்" என்றான் ஜைமினி குனிந்து உக்ரனின்

தலையை வருடியபடி. “இவர் நீரல்ல, நெருப்பு. எதையும் இணைத்துக்கொள்வதில்லை, உண்டு தான் தழலாகிறார்.”

குழந்தை ஒன்று சிணுங்கியது. அன்னை “லோ லோ லோ” என மென்மையாக பாடினாள். இரவுப்பறவை ஒன்றின் குரலென அது ஒலித்தது. குழந்தை மேலும் சிணுங்கிவிட்டு அழத்தொடங்கியது. அவள் அதை இழுத்து தன் முலைக்காம்பை வாயில் செருகினாள். குழந்தை வாய் அதுங்கும் ஓசை. பின்னர் எழுந்த மிக இனிய ஓசையின்மை. அவள் ம்ம் என வண்டுபோல ரீங்கரித்தபின் பாடலானாள்.

“இவன் என் மைந்தன்! அரசியே கேள், இவன் வில்விஜயன்
கார்த்தவீரியனுக்கு நிகரானவன், சிவனுக்கு அணுக்கமானவன்
இந்திரவஜ்ரத்தை படைக்கலமாகக்கொண்டவன்
அதிதிக்கு விஷ்ணு எப்படி மகிழ்வளித்தானோ
அப்படி உனை நிறைக்கப்போகும் இளையவன் இவன்
குந்தியே கேள் இவன் பாண்டவரில் பெருவீரன்”

“மகாவியாசரின் வரிகள். அவருடைய அர்ஜுனோதயம் என்னும் நீள்பாடல்” என்று ஜைமினி சொன்னான். உக்ரன் எழுந்து அமர்ந்து மழுங்கலாக “அவர் பாடினார்!” என்றான். “யார்?” என்றான் ஜைமினி. “அவர்… நீண்ட தாடி… அன்னையைப்போன்ற கண்கள். முதியவர்…” சுமந்து “கனவு கண்டீரா?” என்றான்.

“இவன் வெல்வான் எங்கும் பணியமாட்டான்
எதையும் கொள்ளமாட்டான் எப்போதும் தனித்திருப்பான்
மெய்யறிந்திருப்பான் மெய்கடந்து முழுமையடைவான்
ஃபால்குனன் பார்த்தன் விஜயன் பாரதன் ஜிஷ்ணு
தனஞ்சயன் கிருஷ்ணன் ஸவ்யசாசி கிரீடி”

என அப்பெண்ணின் குரல் தொடர்ந்து கேட்டது. “அவர்தான் பாடுகிறார்” என்று உக்ரன் சொன்னான். அரையிருளில் அவன் புன்னகை வெண்மையாகத் தெரிந்தது. “அழகானவர். என்னை நோக்கி சிரித்தார்.” வைசம்பாயனன் “என்ன சொன்னார்?” என்றான். “என்னை அவர் அழைத்தார்... வா என்று கைகாட்டி... இதோ இப்படி” என்றான் உக்ரன்.

அவன் விழிகள் மீண்டும் சரிந்தன. படுத்துக்கொண்டு புன்னகையில் கன்னங்களில் குழி இருக்க அப்படியே நீள்மூச்சு எழ துயில்கொள்ளலானான். “ஓடி வருவேன்” என்றான். பின்னர் மெல்ல அசைந்து வாயை சப்புக்கொட்டி “என்னிடம் அரணிக்கட்டை இருக்கிறதே, உங்களிடம் இருக்கிறதா?” என்றான். வைசம்பாயனன் அருகே வந்து “மகாசூதரே” என்றான். “ம்?” என்றான் உக்ரன். “எப்படி செல்வீர்கள் அங்கே?” என்றான் வைசம்பாயனன். “ம்?” என்றான் அவன். “எப்படி அங்கே செல்வீர்கள்?” அவன் சொல்லாமல் மூச்சுவிட்டுக்கொண்டிருந்தான். “சொல்லுங்கள் மகாசூதரே, எப்படி அங்கே செல்வது?”

உக்ரன் “பாட்டு வழியாக” என்றான். “எப்படி?” என்றான் வைசம்பாயனன். உக்ரன் துயில்மூச்சு விட்டுக்கொண்டிருந்தான். வைசம்பாயனன் “அனைத்தும் நிமித்தங்களாக ஒலிக்கின்றன, ஜைமின்யரே. நாம் ஐவருமே ஒருவரிடம்தான் செல்லப்போகிறோம். அனல்பெருந்தூணை அறியச்சென்ற தெய்வங்களைப்போல” என்றான். ஜைமினி “ஆம்” என்றான். “மகாநாராயணவேதம் அவர் சொற்களில் முழுமைகொள்ளப்போகிறது” என்றான் பைலன். ஜைமினி உள எழுச்சியுடன் பெருமூச்சுவிட்டான்.

குழந்தை துயில்கொண்டுவிட்டதுபோலும், அந்தப் பெண் பாட்டை முடித்துவிட்டாள். உடலசைத்துப் படுக்கும்போது அவள் மூச்சுவிடும் ஒலி மிக அருகே என கேட்டது. “மாவிண்ணவச் சொல் கோக்கும் முனிவரே, மண்ணளக்கும் வியாசரே, தென்குமரி மகேந்திரமலையமர்ந்தவரே காப்பு” என்று சொல்லி விரல்சொடுக்கி கோட்டுவாய் இட்டாள். திரும்பிப்படுக்கும் ஒலியும் மீண்டும் ஒரு கோட்டுவாயும் கேட்டன. “ஓம் ஓம் ஓம்” என்று அவள் சொன்னாள்.

“அன்னை வாக்கு” என்று ஜைமினி கைகூப்பினான். சுமந்துவும் பைலனும் வைசம்பாயனனும் கைகூப்பி “ஓம் ஓம் ஓம்” என்றனர்.

**[கிராதம் முழுமை]**

வெண்முரசு விவாதங்கள்